

அக்னிவேசரின்

# சரக ஸம்ஹிதை

## மூன்றாம் பகுதி

தமிழாக்கம்

எஸ்.என். ஸ்ரீராம தேசிகன்
கவுரவத் தனி அலுவலர்
ஆயுர்வேத மொழிபெயர்ப்புப்பிரிவு
இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்

வெளியீடு

இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்
அண்ணா மருத்துவமனை, சென்னை-106

அக்னிவேசரின்

# சரக ஸம்ஹிதை

## மூன்றாம் பகுதி

தமிழாக்கம்

**எஸ். என். ஸ்ரீராமதேசிகன்**

கவுரவத் தனி அலுவலர்

மொழிபெயர்ப்பு (ஆயுர்வேதப் பிரிவு)

இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநரகம்




வெளியீடு :

இந்திய மருத்துவம்

மற்றும்

ஓமியோபதி இயக்குநரகம்

அண்ணா மருத்துவமனை, சென்னை - 600 106

1989

முதற் பதிப்பு—ஆகஸ்ட், 1989.
2000 பிரதிகள்

பி. ஏ. எம். எஸ்.

ஆயுர்வேதப் பட்டப் படிப்பின்

ஐந்தாம் ஆண்டு பாட நூல்

விலை ரூ. 390-00

அச்சிட்டோர் :
டான்சி பிரஸ்,
தொழிற்பேட்டை,
கிண்டி, சென்னை - 32.

புத்தகம் கிடைக்குமிடம் :
விற்பனைப் பிரிவு,
இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்,
அண்ணா மருத்துவமனை வளாகம்,
சென்னை - 600 106.

இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்
ஆயுர்வேத மொழிபெயர்ப்புத்துறை வெளியீடு

**மலர் நான்கு**

இதுவரை வெளிவந்த நூல்கள் :

1. **அஷ்டாங்க சங்கிரகம் (ஸூத்ரஸ்தானம்) தமிழ் மொழிபெயர்ப்பு விலை : ரூ. 71**

2. **சரகஸம்ஹிதை (முதற்பகுதி) தமிழாக்கம் விலை : ரூ. 105-30**

3. **சரகஸம்ஹிதை (இரண்டாம் பகுதி) தமிழாக்கம்**
*(175 மூலிகைகளின் வண்ணப்படங்களுடன் கூடியது)*
**விலை : ரூ. 253-65**

இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்
ஆயுர்வேத மொழிபெயர்ப்புத்துறை வெளியீடு

**மலர் நான்கு**

*இதுவரை வெளிவந்த நூல்கள் :*

**1. அஷ்டாங்க சங்கிரகம் (ஸூத்ரஸ்தானம்)**
**தமிழ் மொழிபெயர்ப்பு விலை : ரூ. 71**

**2. சரகஸம்ஹிதை (முதற்பகுதி) தமிழாக்கம்**
**விலை : ரூ. 105-30**

**3. சரகஸம்ஹிதை (இரண்டாம் பகுதி) தமிழாக்கம்**
*(175 மூலிகைகளின் வண்ணப்படங்களுடன் கூடியது)*
**விலை : ரூ. 253-65**

# உள்ளுறை

# முன்னுரை

## 1. ஆயுர்வேதத்தின் சிறப்பு

ஆயுளைப்பற்றியும் நீண்ட பிணியற்ற ஆயுளைப்பற்றியும் விளக்குவதால் இதற்கு ஆயுர்வேதமெனப் பெயர் வந்தது. பிணியைப் போக்குதல் ஆரோக்கிய நிலையில் உள்ளவர்களின் ஆரோக்கியத்தைக் காத்தல் எனும்இவை ஆயுர்வேதத்தின் முக்கிய குறிக்கோளாகும். அதர்வவேதத்துடன் ஆயுர்வேதத்திற்கு நெருங்கிய தொடர்பு இருப்பதால் இதை அதர்வவேதத்தின் துணை வேதமெனச் சரகர் ஸுச்ருதர் முதலிய ஆயுர்வேத ஆசாரியர்கள் கூறுகிறார்கள்.

காச்யபஸம்ஹிதையிலும் பிரம்மவைவர்த்த புராணத்திலும் ஆயுர்வேதம் ஐந்தாவது வேதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. வேதம் என்ற சொல்லுக்கே ஆயுர்வேதம் என்பதுதான் பொருள் என்ற அளவிற்கு ஆயுர்வேதத்தை உயர்த்துகிறார் ஓர் இடத்தில் ஸுச்ருதர். மந்திரம், தந்திரம், வேள்வி, தேவ பூஜை முதலிய சடங்குகளால் பிணிகளைத் தீர்த்த செய்தி வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதாக இதுவரை அறிந்துள்ளோம். ஆனால் அதர்வ வேதத்தில் பிணி, அதைப் போக்கும் மூலிகை அதைப் பயன் படுத்தும் முறை ஆகிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளதைப் பார்க்கும் போது மூலிகை மருந்துகளால் பிணிகளைப் போக்கும் ஆயுர்வேத மருத்துவ முறை வேதகாலத்திலேயே ஆரம்பமாகி விட்டது என்பதை நம்மால் நன்கு உணர முடிகிறது. அதர்வ வேதத்தில் மட்டுமின்றி எல்லா வேதங்களிலும் 'ஆயுர்வேதத்தின் செல்வாக்கு மலிந்து கிடப்பதை ஆராய்ச்சியாளர் நன்கு உணர் வர்.

## 2. நான்கு வேதங்களிலும் ஆயுர்வேதச் செல்வாக்கு

### (அ) ரிக்வேதம்

வேதங்களில் அச்வினிகுமாரர்கள் தேவ மருத்துவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். ரிக் வேதத்தில் இவர்கள் ததீசி என் பவரின் தலையை வெட்டி அதற்குப் பதில் குதிரைத் தலையை ஒட்டி மறுபடியும் அதையும் நீக்கிப் பழைய தலையையே

வைத்ததாகவும், ராஜ கன்னிகையின் ஒடிந்த காலுக்குப்பதில் இரும்புக்காலை இணைத்துச் சரிசெய்ததாகவும், கட்கவான் என்ப வருக்குக் குருட்டுத் தன்மையையும் செவிட்டுத்தன்மையையும் போக்கியதாகவும், பூஷா என்பவரின் உடைந்த பல்லை நீக்கிப் புதிதாகப் பல்லைக் கட்டிச்சரிசெய்ததாகவும், ச்யவனமகரிஷியின் முதுமையை நீக்கி இளமையையும் நீண்ட ஆயுளையும் அளித்த தாகவும், வத்ரிமதி என்பவருக்கு மலட்டுத் தன்மையை நீக்கி மகப்பேற்றை அளித்ததாகவும் வரலாறு காணப்படுகிறது. அதே ரிக்வேதத்தில் அபாலா என்பவரின் தோல் வியாதியையும், ஸ்ரோணா என்பவருடைய நொண்டித் தன்மையையும், பராவ ராஜா என்பவருடைய கண்பிணியையும் இந்திரன் போக்கிய தாகச் செய்தி உள்ளது. இவை யாவும் மந்திர தந்திர பலன் களின்றி மருத்துவ முறையைக் கையாண்டு இச்சாதனைகளைப் புரிந்ததாகத்தான் நன்கு தெரியவருகிறது. ஏனெனில் பிணியைக் கூறி அதைப் போக்கும் மருந்தைக் கூறியிருப்பதால் மருத்துவம் செய்துதான் பிணியைத் தீர்த்தார்கள் அருளால் அன்று என்பது நன்கு விளங்கவில்லையா? அவ்விடங்களில் தங்கள் தவவலிமை யால் இப்பிணிகளைப் போக்கியதாகக் காணவில்லை. இருந்தால் மற்ற இடங்களைப் போல் இங்கும் குறிப்பிடப்பட்டிருக்கும் அல்லவா? தவிர பிற பிராணிகளின் உறுப்புகளைச் சேர்த்துப் பிணியைப் போக்கும் பிளாஸ்டிக் சர்ஜரி என்ற விஞ்ஞானக் காலத்தில் செய்து வரும் மருத்துவம் ரிக்வேத காலத்தில் அச்வினி குமாரர்களால் முன்பே துவக்கி வைக்கப்பட்டது என்பதை அறி யும் போது நவீன மருத்துவத்திற்கும் வேதம் தான் வழிகாட்டி. என்று திட்டவட்டமாகக் கூறலாம்.

ரிக்வேதம் வாத பித்த கபம் எனப்படும் அடிப்படையான மூன்று தோஷங்களை ''திரிதாது'' என்ற சொல்லால் விளக்கு வதைக் காணலாம். இந்த மூன்று தோஷம் என்ற முறை ஆயுர்வேதத்திற்கே உரியது. ஆகையால் இங்கு ''திரிதாது'' என்ற சொல் ஆயுர்வேதத்தைதான் குறிக்கிறது என்று உறுதி யாகச் சொல்லலாம்.

## (ஆ) சுக்லயஜுர்வேதம்

சுக்லயஜுர் (ஐத்ரேய ஸம்ஹிதா) வேதத்திலும் சில மருந்து களைப் பயன் படுத்திக் குஷ்டம் இருதயரோகம் எனும் இவற்றைப் போக்குவதைக் குறிப்பிடுவதோடு பைத்தியம் காசம் போன்ற பிணிகளையும் மூன்று தோஷங்களையும் குறிப்பிடும் மந்திரங் களும் ஏராளமாக இருக்கின்றன.

### (இ) அதர்வ வேதம்

இதுதான் ஆயுர்வேத மருத்துவ முறை ஆரம்பமாவதற்கு மூலகாரணம். இங்கு ஆயிரக்கணக்கான மந்திரங்கள் இதைப் பறைசாற்றுகின்றன. இதில் பிணி, பிணியைப் போக்கும் மருந்துகள் மூலிகைகள், த்ரிதோஷ சித்தாந்தம், பிணிகளின் பெயர்கள், அவைகளின் உட்பிரிவுகள், அவைகளைப் போக்கும் மருந்துகள், உடல் உறுப்புக்கள் எட்டுவிதமான ஆயுர்வேதத்திற்கே தனித் தன்மையாக விளங்கும் மருத்துவ முறை ஆகியவைகள் வெகு விஸ்தாரமாக விளக்கப்பட்டுள்ளன. சுருங்கச் சொன்னால் இவ் வேதம் ஆயுர்வேத மருத்துவ முறையை விளக்குவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்கலாம் என்று சொல்லத் தோன்று கிறது.

## 3, வெளிநாடுகளில் ஆயுர்வேதம்

**கிரீஸ் (Greece) :**

பல ஆயிரமாண்டுகளுக்கு முன்பே ஆயுர்வேத மருத்துவ முறை வெளிநாடுகளுக்குச் சென்று அங்கு அவர்களால் மதிக்கப் பட்டும் கையாளப்பட்டும் வருகிறது என்பது காணக் கிடைக் கின்றது. சம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றை இயற்றிய கெய்த் **(Keith)** என்ற மேல்நாட்டவர் நம்நாட்டு ஆயுர்வேத முறைக்கும், அந்நாட்டில் இருந்த மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமையை வெகுவாகக் குறிப்பிட்டிருக்கிறார். ஹிபோகிரிடிஸ் (**Hippocrates**) என்ற கிரீஸ் நாட்டு மருத்துவர் எழுதிய மருத்துவ நூலைப் படித்தால் இரு நாட்டின் மருத்துவ முறையிலுள்ள ஒற்றுமை நன்கு புலனாகும். மூன்று தோஷம் பிணி அதன் தோற்றம் அதற்குச் செய்யும் மருத்துவம் என இவைகளிலே இரு நாட்டு மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமை நன்கு அங்கு விளக்கப் பட்டிருக்கிறது. ஸுச்ருதஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானம் 21-8ல் கூறப்பட்ட 'சந்திரன் கபத்திற்கும் சூரியன் பித்தத்திற்கும் வாயு வாதத்திற்கும் அதிபதிகள். இம்மூன்றினால் ஆக்கப்பட்டது தான் உடல்' என்ற கருத்தை கிரேக்க மருத்துவ நூலில்அப்படியே காணலாம். சரகர் சாரீரஸ்தானம் 2-31ல் மகாபூதங்கள் நான்கு என்கிறார். ஸுச்ருதர் சாரீரஸ்தானம் 1-47ல் மகாபூதங்கள் ஐந்து என்கிறார். இந்த பூதங்களைப் பற்றிய கருத்து வேற்றுமையை கிரீஸ் நாட்டு மருத்துவரும் அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளார்.

(1) வாதபித்த கபங்களின் சரியான நிலைதான் ஆரோக்கியம். மாறுபட்ட நிலைதான் பிணி (2) மருந்து என்று 'ஆரோக்கியத்

திற்காக மதுவைச் சிறிது அருந்தலாம். (3) பல் வியாதிக்கும் பித்தம்தான் காரணம் (4) பருவக்காலத்திற்கு ஏற்றவாறு பிணி களின் ஏற்றத் தாழ்வு (5) கண் அறுவை சிகிச்சை செய்யும் பொழுது வலக் கண்ணை இடக் கையாலும் இடக் கண்ணை வலக் கையாலும் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும். இது போன்ற 36 விதமான மருத்துவ முறைகளில் ஆயுர்வேதத்திற்கும் கிரீஸ் நாட்டு வைத்தியத்திற்கும் உள்ள ஒற்றுமையை ஹிபோகி ரிடிஸ் என்பவர் விளக்கமாகக் கூறியுள்ளார்.

**சீனா (China) :**

வேத காலம் தொடங்கி கலாசாரம் மருத்துவம் வாணிபம் இவற்றில் சீனநாட்டிற்கும் நமக்கும் ஒற்றுமை இருந்து வருவது சரித்திரம் அறிந்த உண்மை. பௌத்த மதப் பிரசாரத்திற்காக நம்மவர் சீனநாட்டிற்குச் சென்றது, நம் நாட்டுப் பல நூல்கள் அந்நாட்டில் பிரசாரத்தில் இருந்து வருவது போன்ற உண்மை களைச் சரித்திரம் பேசுகிறது. மகா பாரதத்தில் பட்டுத் துணி சீனாம்சுகம் (சீனப்பட்டு) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கௌடில் யரின் அர்த்தசாத்திரத்தில் சீன நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வரும் பொருள்களுக்கு வரிவிதிக்கும் முறை குறிப்பிடப் பட்டுள்ளது. இப்படிப் பல துறைகளில் அந்நாட்டுடன் ஒற்றுமை இருப்பது போல் மருத்துவ முறையிலும் ஒற்றுமை இருக்கிறது. ஆயிரக்கணக்கான ஜ்வரங்கள் நாடீபரிட்சை பிணிகள் மஞ்சள் நெல்லிக்காய் சில மர இலைகள் என இவைகளைக் குறிப் பிடும் சீன நாட்டுப்பழமையான நூலைப்பார்க்கும் போது இது நன்குதெரியவருகிறது. அத்துடன்சீனநாட்டிற்குச் செல்லும் பாதை யில் காராசர் என்ற இடத்தில் கூர்ச்சபாஷா என்பது அங்குள்ள வர்களால் பேசப்பட்டு வருகிறது. ஆயுர்வேதச் சொற்களுக்கும் அம்மொழியிலுள்ள சொற்களுக்கும் நூறு சதவிகிதம் உள்ள ஒற்றுமையைக் காணும்பொழுது அவ்வழியாகத்தான் ஆயுர் வேதம் சீனா சென்றிருக்க வேண்டும் என்று சொல்லத் தோன்று கிறது.

**ஈரான் (Iran) :**

ஈரான் நாட்டில் ஜண்டவெஸ்தா (Zendavesta) என்ற நான்கு பாகங்கள் கொண்ட மிகப் பழமையான நூலில் ஒரு பகுதி மருத்துவத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. அதில் 'சரமாவசியம் என்ற ஒரு மருத்துவன் பிணி தீர தேவதையை வணங்கி சோம என்றொரு (தனது ஒளியால் ஆயிரக்கணக்கான மூலிகைகளைத் தரவல்ல) மூலிகையைப் பெற்றான். அது மூலி

கைக்கு அரசன் என்று அங்குப் பேசப்பட்டுள்ளது. அதேபோல் சரகஸம்ஹிதை சிகிச்சாஸ்தானம் அத்தியாயம் ஒன்றில் ''சோமம் என்ற மூலிகை மூலிகைகளுக்கெல்லாம் அரசன். இது சந்திர ஒளியால் வளர்வதும் அது இல்லாத போது குறைவதும் வழக்கம்'' என ஒரு பகுதி காணப்படுகிறது. இதனால் இரண்டு மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமை நன்கு புலனாகிறது. அக்னி வழிபாடு வேள்வி சோமம் என்ற மூலிகையைப்புகழ்தல் அதை மூலிகைக்கு அரசன் எனக் கூறுவது வேள்வியில் மூலிகைகளைப் பயன்படுத்துதல் போன்ற பாரதீய மருத்துவப்பண்பாடு ஈரான் நாட்டு நூல்களிலும் அப்படியே பேசப்பட்டிருப்பதைக் காணலாம்.

## தென் கிழக்கு ஆசியா (South East Asia) :

கம்போடியா, மலேஷியா, இந்தோனீஷியா, தாய்லாந்து, ஜாவா, சுமத்ரா முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பல ஆயுர்வேத நூல்கள் அங்குள்ள வட்டார மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு அச்சாகி வழக்கில் இருந்து வருகின்றன. அதே போல் பதினெட்டாவது நூற்றாண்டில் பர்மா பாஷையில் பழம் பெரும் ஆயுர்வேத முதல் நூலாகிய ஸுச்ருதம் மொழி பெயர்க்கப் பட்டு இம்மருத்துவ முறை அங்குள்ள மக்களைக் கவர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இந்தியாவுடன் பல துறைகளில் தொடர்பு கொண்ட பர்மா ஆயுர்வேத மருத்துவத்துறையிலும் தொடர்பு கொண்டிருப்பது தனிப்பெரும் சிறப்பு ஆகும். சுருங்கச் சொன்னால் நம்நாட்டைவிட அங்குதான் மக்கள் ஆதரவும் முன்னேற்றமும் ஆயுர்வேதத்திற்கு இருந்து வருவது தெரியவருகிறது. நம் நாட்டில் இந்நூல் தமிழில் வெளிவருவதற்கு இதுவே முதல் முயற்சியாகும்.

## இலங்கை (Sri Lanka) :

பௌத்தவிஹாரங்களில் ஆயுர்வேதம் தழைத்து ஓங்குவதோடு அங்குள்ள புத்தபிக்ஷுகள் ஆயுர்வேத மருத்துவர்களாகவும் இருந்து வருகிறார்கள். இந்திய மருத்துவக் கல்லூரி கொழும்புவில் அமைக்கப்பட்டு ஆயுர்வேதம், யூனானி, சித்தம் இவை கற்பிக்கப்பட்டு வருகின்றன. ஒரு அரசாங்கமே ஆயுர்வேதக் கல்லூரியை நடத்தி வருவதோடு பண்டாரநாயகா நினைவு ஆயுர்வேத ஆராய்ச்சிக் கூடம் ஒன்று அமைக்கப்பட்டிருப்பது அந்நாட்டில் அதற்குள்ள பெருமையையும் மக்களுடைய ஆதரவையும் எடுத்துக் காட்டுகிறது.

**நேபாளம் (Nepal) :**

காட்மாண்டுவில் அரசாங்க ஆயுர்வேதக் கல்லூரி ஒன்றை அரசாங்கம் நிறுவி ஆயுர்வேதத்தை வளர்க்க முன்வந்துள்ளது. குருபரம்பரையாக அங்கு ஆயுர்வேதம் கற்பிக்கப்படுவதுடன் அங்குள்ள மருத்துவர்கள் நமது நாட்டிலுள்ள மருத்துவர்களோடு தொடர்பு கொண்டு இம்முறையை வளர்த்து வருகிறார்கள்.

**திபெத்து (Tibet) :**

இந்நாட்டில் கேஞ்ஜூர், தேஞ்ஜூர் என்ற இடங்களில் அந்நாட்டு மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட ஆயுர்வேத நூல்களில் அஷ்டாங்க ஹ்ருதயம் என்ற ஆயுர்வேத நூலில் வைடூரியம் என்ற உரையும் ஒன்றாகும். இங்கு நாகார்ஜூனன் எழுதிய பல ஆயுர்வேத நூல்கள் கிடைத்ததோடு இங்குள்ள மாணவர்கள் வாராணசிக்கு வந்து கல்லூரியில் சேர்ந்து படித்து வருவதன் மூலம் இந்நாட்டு மருத்துவம் அங்குச் செல்ல ஒரு வாய்ப்பு ஏற்பட்டு இருக்கிறதாகத் தெரிகிறது.

## 4. புத்தர் காலத்தில் புத்தர் கையாண்ட (பஞ்ச கர்ம) ஆயுர்வேத முறை

வாந்திக்கும் பேதிக்கும் மருந்து உட்கொள்வது மூக்கில் மருந்திடுதல் ஆசனவாய் வழியாக எண்ணெய் கஷாயங்களை உள்ளே செலுத்துதல் உடலிலுள்ள கெட்ட இரத்தத்தைக்கீறியோ அல்லது அட்டையைக் கொண்டோ எடுத்தல் என ஐவகைச் செயல்களால் வயிறு தலை உடலிலுள்ள எல்லா பகுதிகளிலிருந்தும் இருக்கும் மலங்களை வெளிப்படுத்தித் தூய்மையாக்கும் (பஞ்சகர்மா) என்ற இம்மருத்துவ முறை ஆயுர்வேதத்தில் மிகமிக முக்கியமானது. வமனம், விரேசனம், நஸ்யம், வஸ்தி, ரக்தமோக்ஷணம் என்ற இந்த ஐவகையான முக்கியமான பஞ்ச கர்மாக்களைப் பயன்படுத்துவதற்கு முன் உடலில் பல வழிகளால் வியர்வை வரவழைத்தல், உடலில் எண்ணெய் பூசி எண்ணெய்ப்பசை உண்டாக்குதல் (ஸ்வேதம், ஸ்நேகம்) எனும் இரு துணைச் செயல்களையும் முன் கூட்டிச் செய்விக்க வேண்டும். இதன் பின் பஞ்சகர்ம முறை செய்வது வழக்கம். இவைகளைப் பயன்படுத்தி மருந்தின்றியே எல்லாப் பிணிகளையும் போக்கிவிடலாம் என்பது ஆயுர்வேதத்தின் அடிப்படையான சித்தாந்தம். எல்லா ஆயுர்வேத நூல்களும் இதையே பறை சாற்றுகின்றன. மற்றவர்களை விட சரகர் என்பவர் இதை விஸ்தாரமாக வெகு விரிவாக

விளக்கி இதன் பல முறைகளையும் பல யுக்திகளையும் தமது நூலில் அலசி ஆராய்ந்திருக்கிறார்.

புத்தர் காலத்தில் இந்த பஞ்சகர்ம முறையால் புத்த பகவான், மற்றவர் பிணிபோக்க அவர்களுக்கு இதை எடுத்துரைத்ததோடு தானும் இம்முறையைக் கையாண்டு பிணி நீங்கிப்பயன் பெற்றார் என ''வினயபிடகா'' என்னும் பௌத்த நூலால் அறிய வருகிறது. இந்நூலில் வாத நோயால் துன்புறும் விளிந்த வாசன் என்பவருக்கு வியர்வையை உண்டாக்கும் சிகிச்சையைக் கூறி அவருடைய பிணியைத் தீர்த்து வைத்ததாக ஒரு கதையுள்ளது. இதே நூலில் வியர்வை உண்டாக்கும் ஸ்வேதகர்மா நான்கு விதமாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளது.

1. பூமியில் பள்ளம் தோண்டி அதில் நெருப்பினால் சூடாக்கித் தணலை நீக்கியபின் மணல் தழை ஆகியவற்றால் நிரப்பி எண்ணெய் பூசிய நோயாளியை இருக்கச் செய்து வியர்வையை வரவழைத்தல்.

2. வியர்வை வரவழைக்கக்கூடிய இலைகளில் நோயாளியைப் படுக்க வைத்தல்.

3. வெந்நீர்த் தொட்டியில் நோயாளியைக் குளிக்கச் செய்து வியர்வையை வரவழைத்தல்.

4. இலைக்கஷாயம் செய்து வியர்வை வரவழைத்தல் என புகை நிறைந்த ஒரு அறையில் நோயாளியை இருக்கச் செய்து அதன் மூலம் வியர்வை வரவழைப்பதைக் கூறும் ஜேந்தாகஸ் வேதம் என்ற ஐந்தாவது வியர்வை முறையும் இங்கு கூறப்பட்டுள்ளது. இதை ஜேந்தாகஸ்வேதம் என்ற பெயரில் சரகர் தனது நூலில் கையாண்டிருக்கிறார். வாதரத்த நோயினால் துன்புறும் விளிந்தவாசனுக்கு புத்தபகவான் கொம்பின்உதவியால் உடலிலிருந்து ரத்தத்தைக் கீறி வெளியேற்றும் ரக்தமோட்சணம் என்ற செயலை உபதேசித்த செய்தி ஒன்று இதே நூலில் காணப்படுகிறது. புத்தர் காலத்தில் நடந்த பல கதைகளைக் கூறும் ''வைத்திய ஜீவகன்'' என்ற நூலில் சாகேத நகரில் வாழ்ந்த செட்டியின் மனைவியின் தலைவலியை மூக்கில் நெய்யை மருந்தாக ஏற்றும் நஸ்யம் என்ற செயலால் போக்கினான் என்றும், ப்ரத்தியோதன் என்ற உஜ்ஜயினி அரசனுக்கு நெய்யைப் பருகக் கொடுத்து வாந்தி எடுக்கச் செய்ததாகவும், அதேபோல் மன்னனுடைய வேலைக்காரனுக்கு மருந்துபொருள்களால் தயாரித்த

கஷாயத்தைக் கொடுத்து வாந்தியெடுக்கச் செய்ததாகவும் இம் மாதிரி பற்பல கதைகள் கூறப்பட்டுள்ளன. தலையிலுள்ள தோஷங்களை வெளிக்கொணர புத்தபகவானுக்கு ஜீவகன் என்ப வன் மூக்கு வழியாக மருந்தைச் செலுத்தி வலியைப் போக்கிய தாக இதே நூலில் உள்ளது. எனவே அக்காலத்தில் புத்தபகவான் இந்தப் பஞ்சகர்ம என்னும் ஆயுர்வேத முறையைப் பிணி தீரத் தானும் கையாண்டு மற்றவருக்கும் எடுத்துரைத்தார் என்று புலனாகிறது. ஆயுர்வேத வைத்தியம் புத்தரையே கவர்ந்து விட்டது. புத்தர்காலத்தில் பிரபலமாயிருந்த ஜீவகன் கதைகள் பிறகு சில காலம் மக்களிடையே நிலவி வந்திருக்கின்றன.

## 5. ஆயுர்வேதம் தோன்றிய முறை

பிரம்மா லக்ஷம் சுலோகங்களைக் கொண்ட ஆயுர்வேத சாத்திரத்தை முதலில் இயற்றி தக்ஷப்பிரஜாபதிக்கு உபதேசித் தார். அவர் அசுவனிகுமாரர்களுக்கும் அவர்கள் இந்திரனுக்கும் உபதேசித்தனர். முறையே தேவலோகத்தில் விளங்கி வந்த ஆயுர்வேத சாத்திரத்தை பூலோக மக்களிடையேயும் பரப்பி அதன் மூலம் பிணியைப் போக்க வேண்டும் என்ற கருத்தோடு வசிஷ்டாதி முனிவர்கள் ஒன்று கூடி சிந்திக்கலாயினர். அதே சமயம் இந்திரனும் பூலோகத்திலுள்ள மக்களுக்கு இதைக் கிடைக்குமாறு செய்து உதவ எண்ணினான். அவ்வாறு எண்ணிக் கொண்ட இந்திரனிடம் அதே எண்ணத்தோடு வசிஷ்டாதி முனி வர்கள் பரத்வாஜர் என்பவரை அச்சாத்திரத்தைக் கற்றுவர அனுப்பினார்கள். தன்னை அணுகிய அம்முனிவருக்கு இந்திரன் பிணிக்குக் காரணம், பிணியின் இலக்கணம், பிணி தீர்க்க மருத் துவம் என்ற மூன்று பிரிவுகளைக் கொண்ட ஆயுர்வேத சாத்தி ரத்தைக் கற்பித்தார். கற்ற பரத்வாஜர் பூவுலகுக்கு வந்து ஆத்திரேய ஆங்கிரஸாதி முனிவர்களுக்கு உபதேசித்தருளினார். அதைக் கற்றவர்களுள் ஒருவரான ஆத்திரேய புனர்வசு என்பவர் அக்னிவேசர் முதலான ஆறு மாணாக்கர்களுக்குக் கற்பிக்க அதைக் கற்ற அக்னிவேசர் என்பவர் சுதந்திரமாக மருந்துமூலம் பிணியைப் போக்கும் உடல் மருத்துவத்தை முக்கியமாக எடுத்துக் கூறும் ஒரு சிறந்த நூலை ''அக்னிவேசஸம்ஹிதை'' என்ற பெயரில் எட்டு ஸ்தானங்கள் கொண்டதாகச் செய்து முடித்தார். பின் னால் வந்த சரகர் என்பவர் இந்நூலிலிருந்து சிலவற்றை நீக்கியும் சிலவற்றைப்புகுத்தியும் புதுப்பித்த பிறகு இந்நூல் சரகஸம்ஹிதை என அவர் பெயராலேயே வழங்கப்பட்டு வருகிறது. சிகிச்சா ஸ்தானத்தில் 17 அத்தியாயங்களும் இறுதியான கல்பம் ஸித்தி என்ற இரண்டு ஸ்தானங்களும் காலவெள்ளத்தில் காணாமல்

போக, பிற்காலத்தில் த்ருடபலர் என்பவர் அப்பகுதிகளை (காணாமற்போனவற்றை) இயற்றி இந்தச் சரகஸம்ஹிதை என்ற நூலுக்கு நிறைவு தந்து அதற்குப் பூரண உருவத்தை வடித்துத் தந்தார். பரத்வாஜர், ஆத்ரேயபுனர்வசு, அக்னிவேசர், சரகர், த்ருடபலர் என முறையே இவர்கள் ஐவருக்கும் இந்நூலில் பங்கு உண்டு. இந்த ஐவரின் கூட்டுமுயற்சியால் உருவாக்கப் பட்ட பொக்கிஷம் இது.

## 6. ஆசிரியர்களின் காலம்

பரத்வாஜர் பிரம்மாவினுடைய கொள்பேரன். பிரம்மா வினுடைய மானஸபுத்திரராகிய அத்ரியின் மகன் ஆத்ரேயர் என்பவர் என வரலாறு கூறுகிறது. புனர்வசு நக்ஷத்திரத்தில் தோன்றியபடியால் அவருடைய பெயர் ஆத்ரேய புனர்வசு என ஆயிற்று. வடமொழி இலக்கணக்கர்த்தாவாகிய பாணினியி னுடைய அஷ்டாத்யாயிகணபாடங்களில் அக்னிவேசருடைய பெயர் காணப்படுவதால் பாணினி வாழ்ந்த கிறிஸ்துவுக்கு முன் 7-வது நூற்றாண்டு இவருடைய காலமாக இருக்கலாம் என் பது சிலருடைய கருத்து. சதபதப் பிராம்மணத்தில் இவருடைய பெயர் வருகிறது. அதேபோல் மகாபாரதத்தில் இவர் துரோ ணாசாரியருடைய குருவாகவும் பரத்வாஜருடைய சிஷ்யராக வும் பேசப்பட்டுள்ளார். இதனால் இவரை மகாபாரதத்திற்கு முன்பிருந்தவர் என்று சொல்ல வாய்ப்பிருக்கின்றது.

## 7. சரகர்

மேனாட்டு மருத்துவ முறையை வகுத்த ஹிபோகிரிடிஸ் என்பவர் சரகருடைய மருத்துவ முறையைப் பின்பற்றிப் பல சித்தாந்தங்களை வகுத்து இருக்கிறார் என ஆராய்ச்சியாளர் கள் கூறுகிறார்கள். அதனால் கி.மு 6-வது நூற்றாண்டில் வாழ்ந்தவர் இவர் எனத் தெரியவருகிறது. குஷான வம்சத்தில் தோன்றி பாஞ்சால நாட்டில் கபிஸ்தலம் என்கிற ஊரில் இவர் பிறந்தவர் என ஒரு குறிப்பு உள்ளது. கனிஷ்கருடைய ராஜ சபை யில் ராஜ வைத்தியராக இவர் இருந்து வந்ததாக சீன பாஷையி லுள்ள திரிபிடகம் என்ற பௌத்த நூலின் உரையில் பேசப் பட்டுள்ளது. கனிஷ்கருடைய காலமாகிய கி.பி. 1-2 நூற் றாண்டில் சரகரும் இருந்திருக்க வேண்டும் எனக் கூற வாய்ப் புள்ளது. கனிஷ்கர் என்பவர் பௌத்த மதத்தைச் சார்ந்தவர். சரகர் வைதிக மதத்தினைச் சார்ந்தவர். மகாபாஷ்யமியற்றிய பதஞ்சலியும் சரகரும் ஒருவரே என ஒரு வாதம் உள்ளது.

ஆனால் ஆராய்ச்சியாளர்களால் இதில் ஒரு முடிவிற்கும் வரமுடிய வில்லை. கபிலபலருடைய புதல்வராகிய 'த்ருடபலர்' பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்தவர். இவர் வாக்படருடைய பல வாக்கி யங்களை உதாரணமாக எடுத்துக் காட்டுவதால் கி.பி. 3-4 நூற்றாண்டில் வாழ்ந்த வாக்படருடைய சமகாலத்திலேயோ பிற்காலத்திலேயோ கி.பி. 5-6ம் நூற்றாண்டில் வாழ்ந்தவராக ருக்கலாம்.

## 8. சரகசம்ஹிதை

பல சம்ஹிதைகளுள் சரகஸம்ஹிதை ஸுச்ருதஸம்ஹிதை இரண்டும் முக்கியமானவைகள். உடற் சிகிச்சையை விளக்கு வதில் இதுதான் முதன் முதலில் தோன்றிய நூலாகும். பிற் காலத்தில் இதைப்பின்பற்றி இதிலுள்ள கருத்தை ஆதாரமாகக் கொண்டுதான் உடல் மருத்துவத்தைப் பற்றி ஏராளமான நூல்கள் வெளிவந்துள்ளன. பிணியின் காரணங்களை அறிவ தற்கு மாதவ நிதானமும் சிகிச்சையின் சிறப்பை விளக்குவதற்கு சரகரின் சிகிச்சாஸ்தானமும் சூத்ரஸ்தானத்தின் பெருமையை அறிவதற்கு அஷ்டாங்க ஸங்கிரகமும் உடற்கூற்றை அறிவதற்கு ஸுச்ருதத்தில் சாரீரஸ்தானமும் சிறந்தது என ஒரு பழமொழி கூறுகிறது. அதன்படி சரகருடைய திறமையையெல்லாம் அவரு டைய சிகிச்சாஸ்தானத்தில் காண வாய்ப்புள்ளது.

1. உடற்சிகிச்சை 2. குழந்தை மருத்துவம் 3. கிரகக் கோளாறினால் வரும் நோய்களுக்குச் சாந்தி முறை. 4. காது கண் மூக்கு மருத்துவம் 5. அறுவை சிகிச்சை 6. விஷ வைத்தியம் 7. முதுமை தோன்றாமைக்காகச் செய்யும் மருத்துவம் 8. சிற்றின் பத்தில் வலிமையை வளர்க்கச் செய்யும் முறை என ஆயுர் வேதசாஸ்திரத்திற்குரிய எட்டுவிதமான உறுப்புகளின் விளக்கத்தை ங்கு விரிவாகக் காணலாம்.

ஆயுர்வேத மூல சித்தாந்தங்களை ஆராய்ச்சி முறையில் வாதத்திற்கேற்ப காரணங்களோடு முதலில் எடுத்துக் கூறியவர் சரகர். விஞ்ஞான முறையில் ஆயுர்வேத ஆராய்ச்சியைத் தோற்றுவித்தவர் இவர். நிலப்பாகுபாட்டையும் அதன் குணங் களையும் நோய்க்குக் காரணமாக எடுத்துக் காட்டியவர்இவரே. மூட நம்பிக்கையைத் துறந்து பௌதிகநோக்கோடு நோய்களைக் குணமாக்கும் முறையைக் காணவேண்டும் என்பதிலே இவர் அக்கறை கொண்டவர். ஞானம் விளங்க பல அறிஞர்களைக் குழுக்களாகச் சேர்த்து ஆராய்ச்சி முறையில் தங்கள் கருத்துகளைச்

சொல்வதற்கு அவர்களுக்கு வாய்ப்பளித்துக் கடைசியில் ஒரு நேர் மையான (மூடநம்பிக்கையை விட்டு) முடிவைச் செய்ய வேண்டும் என்பதை ஆயுர்வேத சாஸ்திரத்தில் முதல் முதலாகக் கூறிய பெருமை இவரையே சாரும். அதையொட்டி புனர்வசு ஆத்தி ரேயர் புலவர் குழுவுக்கு தலைமை தாங்கி ஆராய்ச்சி முறையில் பல முனிவர்களின் வாதங்களைக் கேட்டு அவர் தீர்ப்பு அளித்து சரகசம்ஹிதையில் பல இடங்களில் மருத்துவ நுணுக்கங்களைத் தீர்மானித்திருப்பதைக் காணலாம். ஒரு முனிவர் சொன்னார் என்பதை மாத்திரம் கொள்ளாமல் அதையும் ஆராய்ச்சி முறை யில் காணும் முறை அக்காலத்திலேயே இருந்து வந்தது என்பது காணப்படுகிறது. பல மருத்துவர்களைக் கொண்ட ஒரு குழுவை அமைத்து அவர்களுடைய ஏகோபித்த திரண்ட கருத்தை வைத்து ஒரு பிரபுவிற்கு மருத்துவம் செய்யும் முறையை இன்று நாம் பார்க்கின்றோம். இது சரகர் காலத்தை நினைவூட்டுவது போல் அமைந்துள்ளது. நோய்களை நிர்ணயம் செய்வதற்கு மனிதனின் உடல் நிலையோடு அவனுடைய மனநிலையையும் ஆராயவேண்டுமென்பது இவருடைய கருத்து. நீண்டகாலம் வாழ மக்களுக்கு அன்றே இவர் பலயுக்திகளைக் கூறியிருக்கிறார். மருத்துவ முறையில் இயற்கைக்கு முதலிடம் தரவேண்டும் என்று அன்றே உறுதியாகக் கூறியவர் சரகர். இப்படிப் பல சிறப்புகளைக் கொண்ட இந்நூல் தற்கால மருத்துவ முறைக்கும் அக்கால மருத்துவ முறைக்கும் ஒரு ஒற்றுமைப்பாலமாக அமைந்துள்ளது.

**சரகஸம்ஹிதை எட்டு ஸ்தானங்களைக் கொண்டது**

1. சூத்ரஸ்தானம் 2. நிதானஸ்தானம் 3. விமானஸ் தானம் 4. சாரீரஸ்தானம் 5. இந்திரியஸ்தானம் 6. சிகிச்சா ஸ்தானம் 7. கல்பஸ்தானம் 8. ஸித்திஸ்தானம் என 10,000 சுலோகங்கள் கொண்டது இந்நூல்.

சக்ரபாணிதத்தர், ஹிந்துஸ்ரீகாந்த்தத்தர், சிவதர்சசேனர் போன்றவர்கள் இந்நூலுக்கு சம்ஸ்கிருதத்தில் உரை எழுதியுள் ளார்கள். இவற்றுள் சக்ரபாணிதத்தர் உரைதான் சிறந்ததென எல்லோரும் பின்பற்றி வருகின்றனர். வெகுவாக இந்தியமொழி அனைத்திலும் இந்நூல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. புரொ பஸர் வில்சன் (Wilson) என்பவர் அரபி பாலிதின் மொழிகளில் கி.பி. எட்டாம் நூற்றாண்டிலேயே இந்நூல் மொழிபெயர்க்கப் பட்டுள்ளதைக் குறிப்பிட்டிருக்கிறார்.

## 9. நூலின் சாரம்

பாண்டு இருமல் வயிற்றுப்போக்கு அக்கி நஞ்சுநோய் மதுவெறி விரணம் வாதநோய் கருஉறுப்பு நோய் போன்ற நோய்களின் இலக்கணம் அவை தோன்றக் காரணம் தன்மை அவற்றின் முற்குறிகள் அதன் பிரிவுகள் வாதபித்த கபங் களுக்கேற்பத் தோன்றும் பிணிகளின் வகை இவற்றை அறிந்து அவற்றிற்கேற்ற மூலிகைகளைச் சேகரித்துத் தயாரித்த மருந்து களை உபயோகித்தல் ஆகியவற்றை ஆசிரியர் சிகித்ஸாஸ்தானம் 16 முதல் 30வது அத்தியாயம் வரை விளக்கியுள்ளார்.

கிருதம், லேகியம், சூரணம், தைலம், மாத்திரை, கஷாயம், ஆசவம், அரிஷ்டம் போன்ற மருந்துகள் தயாரிக்கும் முறை, அவற்றின் தன்மை, பயன், அவற்றால் தீரும் நோய்கள் ஆகியவற்றை இங்கு விரிவாகக் காணலாம்.

## 10. தமிழாக்கத்தின் நோக்கம்

மூல சமஸ்கிருத நூலைத் தெளிவாய் எளிய நடையில் தமிழில் மொழி பெயர்த்துப் பத்திவாரியாகப் பிரித்து அவை களுக்கேற்பத் தலைப்புகளைத் தந்து அச்சிட்டிருப்பதால் பகுதி பகுதியாக நூலின் கருத்தை அறிய வாய்ப்புள்ளது. மூல சுலோகங் களின் எண்களைப் பின்பற்றி அதே வரிசையில் தமிழாக்கத்திலும் சுலோக எண்கள் தரப்பட்டுள்ளன. இங்கும் சந்தர்ப்பத்திற் கேற்பப் பகுதி பகுதியாகப் பிரித்து எண்கள் தரப்பட்டிருப்பதால் குறிப்பிட்ட மூலத்தின் கருத்தை அறிய வாய்ப்பு உள்ளது.

சம்ஸ்கிருத சொற்களில் உள்ள மருந்து மூலிகைகளின் பெயர்களுக்குத் தகுந்த பொருத்தமான தமிழ்ப் பெயர்களை நன்கு ஆராய்ந்து தேடிப்பிடித்து இதில் பயன்படுத்தியுள்ளேன். பல ஆயுர்வேத வல்லுநர்கள், ஆயுர்வேத மருந்து தயாரிக்கும் கூடங்கள், பல நூலகங்கள், அகராதிகள், மரபு வைத்தியர்கள் என இவர்களை அணுகி மூலிகைகளின் தமிழ்ப்பெயர்களைக் கூடுமான வரை சரியான முறையில் உணர்ந்து இதில் பயன் படுத்தப் பெரு முயற்சி மேற்கொண்டுள்ளேன். இனி வரும் காலத்தில் சம்ஸ்கிருத வல்லுநர்களிடம் சென்று சம்ஸ்கிருதத்தில் உள்ள மருந்துகளின் பெயர்களைத் தெரிந்து கொள்ள கஷ்டப் படாமல் எளிதில் இந்நூலின் வாயிலாக நேரிடையாக மருந்து மூலிகைகளின் பெயர்களை அறிந்து தமிழர்கள்அனைவரும் மருத் துவம் செய்யவும், மருந்து செய்யவும் ஒரு வாய்ப்பு கிடைத் துள்ளது.

## 11. தமிழாக்கத்தின் பயன்

பி.ஏ., எம்.எஸ். பட்டப்படிப்பு நான்காவது ஆண்டு பாட நூலாகிய ஐந்து ஸ்தானங்கள் கொண்ட முதற்பகுதியும் சிகித்ஸாஸ்தானம் 15 அத்தியாயங்கள் கல்ப ஸ்தானம் ஸித்தி ஸ்தானம் என இம் மூன்று ஸ்தானங்களையும் கொண்ட ஐந்தாவது ஆண்டுப்பாட நூலாகிய இரண்டாம் பகுதியும் தமிழாக்கம் செய்யப்பட்டு அச்சாகி ஏற்கனவே விற்பனையாகி வருகின்றன. ஐந்தாவது ஆண்டு பாடநூலில் தமிழாக்கம் செய்யாமல் விட்டுப் போன 16 முதல் 30 அத்தியாயங்கள் கொண்ட மூன்றாம் பகுதியின் தமிழாக்கமாகிய இந்நூலுடன் சரகஸம்ஹிதா முழுமையும் தமிழாக்கம் செய்யப்பட்டு வெளிவந்துள்ளது என மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இம்மூன்று பாகங்களும் முக்கியமான ஆயுர்வேத நூல்களில் ஒன்றாகவும் அமைந்திருப்பதால் இதன் தமிழாக்கம் ஆயுர்வேதக்கல்லூரி மாணவர்களுக்குப் பயன்படுவதோடு மருத்துவம் செய்யவும் மருந்து செய்யவும் ஆவலோடு காத்திருக்கும் தமிழக மக்கள் அனைவருக்கும் இது வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை. இந்நூல் தமிழில் முதன் முறையாக வெளிவருகிறது என்பதை மிக்க மகிழ்ச்சியோடுதெரிவித்துக்கொள்கிறேன்.

சில முக்கிய நோய்கள், சில மூலிகை மருந்துகள், பத்தியமும் அபத்தியமும் குறிப்புகள் பொருள்களின் தன்மைகள், உலோகங்களின் தன்மைகள், உப்பு வகைகளின் தன்மைகள் சில மருந்துப் பொருள்களின் ன்மைகள், மூலிகைகளில் உள்ள இரசாயனப் பொருள்கள் மூலிகைகளின் ரஸாயனப் பொருள்கள் பற்றிய ஆராய்ச்சிக் கூடங்களின் பெயர்ப் பட்டியல், சில மருந்துப் பொருள்களின் குணங்கள் மூலிகை குணங்கள் என்ற தலைப்புகளில் சில பகுதிகள் இந்நூலின் முதலில் சேர்க்கப்பட்டுள்ளன. மூலிகைகளின் குணம் என்ற இப்பகுதியானது மூலிகை தோன்றுமிடம் அதன் தன்மை அதனால் விலகும் பிணி அதன் அடையாளம் ஆகியவைகளை அறிய மருத்துவர்களுக்கு வரப்பிரஸாதமாக அமையும் என்பதில் ஐயமில்லை.

அண்ணா மருத்துவமனை ஆயுர்வேதத் துறையின் ஓய்வுபெற்ற தலைவர் திரு. ஆர். சௌரிராஜன், சென்னை வெங்கடரமணா ஆயுர்வேதக் கல்லூரி ஓய்வுபெற்ற முதல்வர் திரு. கே. எஸ். விசுவநாத சர்மா என்ற இரு ஆயுர்வேத வல்லுநர்களும் இத் தமிழாக்கம் முழுவதையும் படித்து 'ஆயுர்வேதமுறை தவறாமல் நல்ல முறையில் இம் மூலத்திற்கு ஒத்தாப்போல் இம்மொழி

பெயர்ப்பு அமைந்துள்ளது' என அளித்திருக்கும் நற்சான்று இந் நூலுக்கு மேலும் மெருகூட்டும் என எண்ணி மகிழ்கிறேன்.

## 12. மூலிகைகளின் படங்களும் அவற்றின் விளக்கமும்

வருங்கால மக்கள் மூலிகைகளின் படங்களைக் கொண்டே அவற்றை அடையாளம் கண்டு கொள்ள உதவியாக இருக்கு மென்ற நோக்கத்தோடு புனே உடுப்பி திருவனந்தபுரம் லக்னோ போன்ற இடங்களில் உள்ள மூலிகைப் பண்ணை களுக்குச் சென்று சுமார் இருநூற்று எழுபத்து ஐந்து மூலிகை களைப் புகைப் படமெடுத்து அவைகளை வண்ணப்படமாக்கி ஒவ்வொரு மூலிகையின்கீழே அவற்றின் பெயர், தன்மை, பயன் ஆகியவைகளை அச்சிட்டு, மருத்துவர்களின் பயன்கருதி இந்நூலில் ஒரு பகுதியாக இணைத்துள்ளோம். பாவப்பிரகாச நிகண்டு (பாவமிச்ரக்ருதம்) ஸாலக்ராமநிகண்டு, கவர்ன்மென்ட் இண்டியன் மெடிகல் ஸ்கூல் வெளியிட்ட பட்டியல், தன்வந்திரி நிகண்டை அனுசரித்துத் தமிழில் இயற்றப்பட்டுள்ள நிகண்டு ரத்னாகரம், இண்டியன் மெடீரியா மெடிகா (K. M. Nadkarni) வஸ்துகுணதீபிகா (Erra Venkataswamy) என்ற இந்நூல்களை ஆதாரமாக வைத்து மூலிகைகளின் தமிழ் ஆங்கிலம் ஸம்ஸ்கிருதப் பெயர்கள் இங்குத் தரப்பட்டுள்ளன. வெகுவாக இந்நூலில் வரும் மூலிகைகளின் படங்களே இங்கு இடம் பெற் றுள்ளன. இந்நூலில் வராத அதே சமயம் அதிகமாகப் பழக்கத் தில் மக்களால் பேசப்பட்டு வரும் ஒரு சில மூலிகைகளின் படங் களையும் அவற்றின் முக்கியத்துவம் கருதி இங்குச் சேர்த்துள் ளோம்.

## நன்றி நவிலல்

ஸம்ஸ்கிருதத்திலுள்ள ஆயுர்வேத நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து அதன் வாயிலாகத் தமிழக மக்கள் அனைவரும் ஆயுர்வேத முறையை அறிந்து மருத்துவம் செய்யும் மருந்து தயாரித்தும் பயன்பெற வேண்டுமென்கிற பரந்த நோக்கத்துடன் சென்னை இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி மருத்துவ இயக்குநரகத்தில் 3-2-83 முதல் மொழி பெயர்ப்புப் பிரிவைத் துவக்கி அதில் என்னை கௌரவத் தனி அலுவலராக நியமித்து எனக்குப் பணி செய்யும் வாய்ப்பளித்த தமிழக அரசுக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்மொழி பெயர்ப்புப் பணிக்கும் இது அச்சாவதற்கும் தேவையான உதவிகளை எல்லாம் உடனுக்குடன் செய்து தந்து இந்நூல் விரைவில் வெளிவர உதவிய நல்வாழ்வு, இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி மற்றும் குடும்பநலத்துறை சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலர் **திரு. கே. ஜே. எம். ஷெட்டி, இ.ஆ.ப.,** அவர்களுக்கும், இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி முன்னாள் இயக்குநர் **திரு. க. இளங்கோவன். இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றி உரித்தாகுக.

இம்மொழி பெயர்ப்புப் பணியில் தேவையான விவரங்களை எல்லாம் சேகரித்து உதவிய புலவர்கள் உதவி ஆசிரியர் டாக்டர் இவர்களுக்கும் விரைவிலேயே அச்சிட்டு நூல் கிடைக்க உதவிய **டான்ஸி** நிறுவனத்தாருக்கும் அழகான முகப்புப் படம் வரைந்து தந்த சித்திராசிரியர் **திரு. சித்திரலேகா நாராயணசாமி** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்களுடைய மருத்துவப் பண்ணையிலுள்ள மூலிகைகளை புகைப்படம் எடுக்க அனுமதி தந்துதவிய உடுப்பி ஆயுர்வேதக் கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், பூனா ஜவஹர்லால் நேரு ஆயுர்வேத மருந்து மூலிகைப் பண்ணையிலுள்ள மூலிகைகளை புகைப்படம் எடுக்க அனுமதித்ததுடன் சில மூலிகைகளின் படங்களைத் தந்தும் உதவிய சித்த ஆயுர்வேத ஆராய்ச்சி மையக் கழக இயக்குநர் **திரு. வி. என். பாண்டே** அவர்களுக்கும், திருவனந்தபுரம் டிராபிகல் பொட்டானிக்கல் கார்டன்ஸ் அண்ட்

ரிசர்ச் இன்ஸ்டிட்யூட் (பாலோடு) இயக்குநர் **பேராசிரியர் ஏ. என். நம்பூதிரி** அவர்களுக்கும், திருவனந்தபுரம் அரசு ஆயுர்வேத மருத்துவக் கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், லக்னோ சென்ட்ரல் இன்ஸ்டிட்யூட் ஆஃப் மெடிசினல் அண்ட் ஆரோமெடிக் இயக்குநர் அவர்களுக்கும், லக்னோ நேஷனல் பொட்டானிக்கல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட் இயக்குநர் அவர்களுக்கும், குன்றத்தூர் டாக்டர் ராமமூர்த்தி அவர்களுக்கும் சில மூலிகைப்படங்களைத் தந்து உதவியதோடு நாங்கள் எடுத்து வந்த மூலிகைப் புகைப் படங்களை அவற்றிற்குரிய பெயர்களோடு ஒப்பிட்டுப் பார்த்து அடையாளம் காட்டிச் சரிசெய்துகொடுத்த சென்னையில் உள்ள சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையத்தின் மூலிகை ஆராய்ச்சி அலுவலர் **திரு. த. நாராயணப்பா** அவர்களுக்கும் என் உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்திய மருத்துவம்
மற்றும் ஓமியோபதி
இயக்குநரகம்.
சென்னை - 600 106.
தேதி : 16 – 8 – 1989

**எஸ். என். ஸ்ரீராமதேசிகன்**
கவுரவத் தனி அலுவலர்.

## எஸ். என். ஸ்ரீராமதேசிகனின்

# இலக்கியத் தொண்டு

68 வயது நிரம்பிய எஸ். என். ஸ்ரீராம தேசிகன் அவர்கள் திருப்பதி சம்ஸ்கிருதக் கல்லூரியில் பயின்று சம்ஸ்கிருதத்தில் சிரோமணி பட்டம் பெற்று அங்குள்ள வெங்கடேஸ்வரா கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சியாளராகவும், இந்திய அரசாங்கத்தின் ஆதரவில் சென்னை பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சிப் புலவராகவும் பணியாற்றி இருக்கிறார். கிண்டி இன்ஜினீயரிங் கல்லூரியில் அடிப்படை ஆராய்ச்சிப் பிரிவில் பகுதி நேர விரிவுரையாளராகவும் பணியாற்றி விஞ்ஞான முறையில் தர்க்கம் போன்ற சாஸ்திரங்களைக் கல்லூரி ஆசிரியர்களுக்கு போதித்து அதைப்பற்றி ஆராய்ச்சிக் கட்டுரையும் எழுதியிருக்கிறார். திருப்பதியிலுள்ள ஒரு மத்திய அரசாங்க நிறுவனமாகிய கேந்திரிய சம்ஸ்கிருதவித்தியாபீடத்தில் ஆராய்ச்சி அலுவலராகப் பணியாற்றி சங்ககாலம் தொடங்கி தமிழ் வடமொழிகளுக்கிடையே ஒப்பாய்வு செய்து விரிவானதொரு ஆராய்ச்சி நூலை எழுதியிருக்கிறார். ஆழ்ந்த சம்ஸ்கிருதப் புலமைக்காக ஜனாதிபதியினுடைய பாராட்டைப் பெற்றவர் இவர்.

திருக்குறள் நாலடியார் கம்பராமாயணம் சிலப்பதிகாரம் பத்துப்பாட்டு எட்டுத்தொகை சுப்ரமண்ய பாரதியாரின் கவிதைகள், ஔவையார் நீதி நூல்கள் ஆகிய தமிழ் நூல்களை சம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டுப் பல அறிஞர்களின் பாராட்டைப் பெற்றதோடு தமிழிலும் பல ஆராய்ச்சி நூல்களை ஆக்கியுள்ளார். இதுவரை 50-க்கு மேலான நூல்கள் இவர் பெயரில் வெளிவந்துள்ளன. நாற்பதாண்டு காலமாக தமிழ் ஆங்கில தினசரி வாரப் பத்திரிகைகளில் ஆராய்ச்சிக்

கட்டுரைகள் மதிப்புரைகள் எழுதி சிறந்த எழுத்தாளராக விளங்குகிறார். தமிழ் எழுத்தாளர் சங்கம் பொற்பதக்கத்தையும் பாரதியார் சங்கம் கேடயத்தையும் காரைக்குடி கம்பர் கழகம் பொன்னாடையும் தமிழக அரசு பொன்னாடையையும் அளித்து இவரை கௌரவித்திருக்கிறது.

வருடைய ஔவையார் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலைச் சிறந்த நூலாகத் தேர்ந்தெடுத்து உத்திர பிரதேச அரசாங்கம் இவருக்கு ரொக்கப் பரிசு அளித்திருக்கிறது. தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் லைப்ரரியில் கௌரவ ஆசிரியராகவும் தென்னிந்திய சம்ஸ்கிருத சங்கத்தின் ஸ்தாபகச் செயலாளராகவும் பணிபுரிந்து வருகிறார். தமிழ் சம்ஸ்கிருதம் மற்றும் பிறமொழி ஆராய்ச்சி நிறுவனத்தில் கௌரவச் செயலாளராக இருந்து கம்ப ராமாயண வால்மீகி ராமாயணத்திற்கிடையே ஒப்பாய்வு செய்து நூலை இயற்றியுள்ளார். இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குனரகத்தில் ஆயுர்வேத மொழி பெயர்ப்புப் பிரிவில் 1983ம் ஆண்டு தமிழக அரசினரால் கௌரவத் தனி அலுவலராக நியமிக்கப்பட்டு சரகஸம்ஹிதை, அஷ்டாங்க சங்கிரகம் போன்ற ஆயுர்வேத நூல்களைத் தமிழாக்கம் செய்து மூன்று பகுதிகளாக வெளியிட்டு இன்றுவரை ஆயுர்வேத மருத்துவத்துறைக்கு பணிபுரிந்து வருகிறார். பலமொழிகளில் இவருக்குப் புலமை உண்டு. சென்னையிலுள்ள அரசுக் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகத்தின் கௌரவ ஆலோசகராகவும் இவர் பணியாற்றியுள்ளார்.

# மூலிகைகளின் இரசாயனப் பொருள்கள் - ஆராய்ச்சிக் கூடங்களின் பெயர்ப்பட்டியல்

[நம் நாட்டு மூலிகைகளைப் பல நாடுகளிலும், நம் நாட்டிலும் உள்ள ஆராய்ச்சி நிறுவனங்கள் பல பரிசோதனைகள் செய்து அவற்றில் அடங்கியுள்ள இரசாயனப்பொருள்களைப் பற்றிய விளக்கங்களை அவ்வப்பொழுது வெளியிட்டுள்ளன. அவ் வெளியீடுகளில் அடங்கியுள்ள இரசாயன விளக்கங்கள் இங்குத் தொகுக்கப்பட்டுள்ளன. அந்தந்த மூலிகைகளைப் பற்றி ஆராய்ந்து விளக்கம் தந்துள்ள ஆராய்ச்சி நிறுவனங்கள் மற்றும் வெளியீடுகளின் பட்டியலைக் கீழே காணலாம்.]

1. அகில்:—Indian Forest Leaflet, Dehra Dun.

2. அக்கராகாரம்—(1) Bulletin. Societe chimique de France, Paris, (2) Proceedings of the Indian Acadamy of Science, Bangalore.

3. அக்ரோடு—(1) Compte rendu hebdomadaire des seances de l' Academie des Sciences, Paris. (2) பாவபிரகாசநிகண்டு உரை.

4. அசோகம்—(1) பாவபிரகாசநிகண்டுஉரை (2) Indian Medical Record, Calcutta.

5. அதிவிடயம்—(1) Journal of the Chemical Society, London. (2) Compte rendu hebdomadaire des seances de l' Academie des sciences, Paris. (3) பாவபிரகாசநிகண்டு உரை.

6. அதிமதுரம்—(1) Archive der pharmazie, Berlin. (2) Journal of the Pharmaceutical Society of Japan, Tokyo. (3) பாவபிரகாசநிகண்டுஉரை.

7. அத்தி—பாவபிரகாசநிகண்டுஉரை.

8. அமுக்கிராக்கிழங்கு—(1) Journal de Pharmacie et de chimie, Paris.

9. அம்மாம் பச்சரிசி—(1) Journal of the American, Pharma ceutical Association, Columbus. (2) பாவப்பிரகாசநிகண்டு உரை.

10. அயப்பனை—Bericht von Schimmel u. Co., Leipzig, uber aotherische oele, Richstoffe, usw. Leipzig.

11. அரசு—பாவப்பிரகாசநிகண்டுஉரை.

12. அரத்தை—(1) Indian Journal of Medical Research, Calcutta. (2) பாவப்பிரகாசநிகண்டுஉரை.

13. அரநெல்லி—Pharmaceutisch weekblad voor Nederland, Amsterdam.

14. அரளி—(1) பாவப்பிரகாசநிகண்டுஉரை.

15. அரிசி—(1) Biochemische Zeitschrift, Berlin. (2) Bulletin of the Agricultural Chemical Society of Japan, Tokyo. (3) பாவப்பிரகாசநிகண்டுஉரை.

16. ஆடாதொடை—(1) Journal of the Indian Chemical Society, Calcutta. (2) Bericht der Deutschen Chemischen Gesellschaft, Berlin.

17. ஆமணக்கு—(1) பாவப்பிரகாசநிகண்டுஉரை. (2) Archiv der Pharmazie, Berlin.

18. ஆம்பல்—Biologisches Zentral blatt, Leipzig.

19. ஆலமரம்—பாவப்பிரகாசநிகண்டுஉரை.

20. ஆளிவிதை—Archiv der Pharmazie, Berlin.

21. ஆவாரை—Chemical Abstracts, Easton, Pa.

22. இஞ்சி—பாவப்பிரகாசநிகண்டு உரை. (2) Curtent Science, Bangalore, (3) Chemical Abstracts, Easton, Pa. (4) Indian Pharmaceutical Codex.

23. இரேவல்சின்னி—(1) Archiv der Pharmazie, Berlin. (2) Journal of the Chemical Society, London.

24. இரோஜா—Bericht von Schimmel u. Co. Leipzig, uber aetherische Oele, Ricchstoffe, usw, Leipzeg.

25. இலவங்கம்—(1) Analyst, London. (2) Bericht von Schimmel u. Co Leipzig, uber aetherische Oele, Ricchstoffe, usw, Leipzig.

26. இலவம்—(1) Chemical Abstracts, Easton, Pa, (2) Bulletin of the Imperial Institute, London.

27. இலுப்பை—(1) Bericht der Deutschen Pharmazeutischen Gesellschaft, Berlin. (2) Indian Soap Journal, Calcutta.

28. ஈ சுவரி—Journal of the Indian Chemical Society, Calcutta.

29. உவகை—பாவபிரகாசநிகண்டுஉரை.

30. ஊமத்தை—(1) Archiv der Pharmazie, Berlin. (2) Journal of the American Pharmaceutical Association, Columbus. (3) Chemical Abstracts, Easton, Pa. (4) Revista quimico-farmaceutica, Santiago de Chile.

31. எட்டி—(1) Quarterly Journal of Pharmacy and Allied Sciences, London. (2) Helvetica chimica acta. Basel, Genf. (3) Wehmer, C—Die Pflanzenstoffe. II Vol. (4) பாவபிரகாசநிகண்டு உரை.

32. எருக்கு—(1) Merck's Index. (2) Journal of Pharmacology and Experimental Therapeutics, Baltimore. (3) Proceedings of the Indian Academy of Science, Bangalore.

33. எருமைக் கோட்டான் (ஆகாசவல்லி)—(1) Mededeelingen-uit's Lands Plantentuin, Batavia. (2) Wehmer, Suppl-43, (3) Burkill I.

34. எலுமிச்சை—(1) Winton, A.L. Winton K.B.—The structure and composition of Foods, II. Vol. (2) Thorpe—Thorpe's

Dictionary of Applied Chemistry-VII Vol. (3) Chemical Abstracts, Easton—Pa. (4) Parry E.J.-The Chemistry of Essential oils and Artificial Perfumes, 1 Vol. (5) Journal of the Indian Chemical Society, Calcutta.

35. ஏலம்—பாவபிரகாசநிகண்டுஉரை.

36. ஏழிலைப்பாலை—(1) பாவபிரகாசநிகண்டுஉரை. (2) Journal of the Chemical Society, London.

37. ஓமம்—Bericht von Schimmel u.Co., Leipzig, uber aetherische Oele, Riechstoffe, usw, Leipzig.

38. கஞ்சா—(1) Archiv fur experimentelle Pathologie u Pharmakologie, Leipzig (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

39. கடலை—(1) Gazetta Chimica italiana, Roma. (2) Journal of the Indian Institute of Science, Bangalore. (3) Transactions of the Bose Research Institute, Calcutta. (4) பாவ பிரகாசநிகண்டுஉரை.

40. கடுகரோகிணி—(1) Dymock, Warden and Hooper-Pharmacographis Indica. (2) Indian Journal of Medical Research, Calcutta. (3) பாவபிரகாசநிகண்டுஉரை. (4) Journal of Scientific and Industrial Research, Delhi.

41. கடுக்காய்—(1) Bericht der Deutschen Chemichen Gesellschaft, Berlin. (2) Indian Pharmaceutical Codex. (3) The United States Dispensatory.

42. கண்டங்கத்திரி—(1) Proceedings of the Indian Academy of Science, Bangalore. (2) Journal of the Mysore University, Mysore. (3) Journal of the American Chemical Society, Easton, Pa.

43. கரிசலாங்கண்ணி—(1) Dymock, Warden & Hooper—Pharmacographis, Indica. (2) Journal of the Indian Chemical Society, Calcutta.

44. கருவேலம்—(1) Archiv der Pharmazie, Berlin. (2) Bulletin of the Imperial Institute, London. (3) பாவபிரகாச நிகண்டுஉரை.

45. கருங்காலி—(1) Proceedings of the Chemical Society, London. (2) Journal of the Indian Chemical Society, Calcutta. (3) Journal of Scientific and Industrial Research, Delhi.

46. கருஞ்சீரகம்—(1) Journal of the Chemical Society, London. (2) The United States Dispensatory. (3) பாவபிரகாச நிகண்டுஉரை.

47. கரும்பு—Compte renduhebdomadaire des seances de l' Academie des Sciences, Paris.

48. கடுகு —(1) Proceedings of the National Institute of Sciences of India, Calcutta, Delhi. (2) பாவபிரகாச நிகண்டுஉரை.

49. களாக்காய்—Dymock, Warden & Hooper, Pharmacographis Indica. II Vol.

50. கர்க்கடகசிருங்கி—(1) Wehmer, C. Die Pflanzenstoffe II Vol. (2) Bericht der Deutschen Chemischen Gesellschaft Berlin. (3) The United States Dispensatory. (4) பாவபிரகாச நிகண்டுஉரை.

51. கல்யாணமுருங்கை—(1) Bericht der Deutschen Chemischen Gesellschaft, Berlin. (2) Journal of the Annamalai University, Annamalai Nagar. (3) Philippine Journal of Science, Manila. 4) Indian Journal of Medical Research, Calcutta.

52. கழற்சி—(1) Journal de Pharmacie et de chimie, Paris. (2) Journal of the Indian Chemical Society, Calcutta. (3) பாவபிரகாசநிகண்டுஉரை

53. கல்பாசி —Indian Journal of Pharmacy, Benares.

54. கள்ளி—(1) Archiv der Pharmazie, Berlin. (2) Journal of Scientific and Industrial Research, Delhi.

55. கற்றாழை —Archiv der Pharmazie, Berlin.

56. கர்ப்பூரம் —Journal of the Society of Chemical Industry, London.

57. கஸ்தூரிமஞ்சள் —(1) Journal of the Chemical Society, London. (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

58. கறிவேப்பிலை —Journal and Proceedings of the Royal Society of New South Wales, Sydney.

59. காக்கட்டான் —(1) Indian Journal of Pharmacy, Benares.

60. காசினி —Chemisches Zentralblatt, Berlin.

61. காஞ்சொரி—பாவபிரகாசநிகண்டுஉரை.

62. காட்டுச்சீரகம்—Indian Journal of Pharmacy, Benares.

63. காட்டுநிலாவாரை —Bulletin des Sciences Pharmacologiquies, Paris.

64. கார்போகஅரிசி —(1) Journal of the Indian Chemical Society, Calcutta. (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

65. காமச்சிப்புல் —(1) Bulletin of the Imperial Institute, London. (2) Soap (and Sanitary Chemicals), New York.

66. காட்டிலுப்பை —(1) Bulletin de l'Institut Botanique de Buitenzorg. Buitenzorg. (2) Journal of the Society of Chemical Industry, London. (3) Journal of the Chemical Society, London.

67. கிரந்திதகரம் —(1) Pharmaceutical Journal and Pharmacist, London. (2) Iodian Pharmaceutical Codex. (3) பாவ பிரகாசநிகண்டுஉரை.

68. கீரைப்பாலை—(1) Indian Journal of Medical Research, Calcutta. (2) Archiv der Pharmazie, Berlin. (3) Proceedings of the Indian Acadamy of Science, Bangalore.

69. கீழ்க்காய்நெல்லி—(1) Bericht der Deutschen Pharmaceutischen. Gasellschaft, Berlin. (2) Proceedings of the Indian Academy of Science, Bangalore.

70. குங்கிலியம்—Indian Soap Journal.

71. குப்பைமேனி—(1) Dymock Warden & Hooper—Pharmacographis, Indica. (2) Onderstepoort Journal of Veterinary Science and Animal Industry, Onderstepoort, Pretoria.

72. குராஸானிஓமம்—(1) Liebigs Annalen der Chemie, Leipzig. (2) Archiv der Pharmazie, Berlin.

73. குன்றிமணி—(1) Bericht der Deutschen Chemischen Gesellschaft, Berlin. (2) Journal of the Indian Chemical Society, Calcutta. (3) Seman medica, Buenos Aires. (4) Bulletin of the Tokyo Institute of Technology, Tokyo. (5) Dymock, Warden & Hooper—Pharmacographis, Indica.

74. கொட்டைக்கரந்தை—(1) Dymock, Warden & Hooper—Pharmacographis, Indica. (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

75. கொத்துமல்லி—(1) Bericht von Schimmel u. Co. Leipzig. uber aetherische Oele, Riechstoffe, usw. Leipzig. (2) Chemisches Zentralblatt, Berlin. (3) Chinese Journal of Physiology, Peking. (4) Agriculture and Live-Stock in India, Delhi. (5) Chemical Abstracts, Easton, Pa,

76. கொழிஞ்சில்—(1) Journal of the Chemical Society, London. (2) Proceedings of the Chemical Society, London.

77. கோஷ்டம்—(1) Bericht von Schimmel u. Co., Leipzig, uber aetherische Oele, Riechstoffe, usw., Leipzig. (2) Bulletin de la Societe Chimique de Paris. (3) Manufactur-

ing Chemist, London. (4) Journal of Scientific and Industrial Rsearch, Delhi.

78. சக்கரவர்த்திக்கீரை—(1) Archiv der Pharmazie, Berlin. (2) Wehmer, C. Die Planzenstoffe. (3) Chemical Abstracts, Easton, Pa.

79. சங்கபுஷ்பி—Chopra, R.N.—Indigenous Drugs of India.

80. சதகுப்பை—(1) பாவபிரகாசநிகண்டுஉரை. (2) Journal of the Indian Institute of Science, Bangalore. (2) Journal of the American Chemical Society, Easton, Pa. (4) Proceedings of the Indian Academy of Science, Bangalore.

81. சதுரக்கள்ளி—பாவபிரகாசநிகண்டுஉரை.

82. சந்தனம்—(1) Journal of the Indian Institute of Science, Bangalore. (2) Journal of the American Pharmaceutical Association, Columbus. (3) பாவபிரகாசநிகண்டுஉரை.

83. சாரடை—Indian Medical Gazette, Calcutta.

84. சிம்சிபா—பாவபிரகாசநிகண்டுஉரை.

85. சிறுதேக்கு—பாவபிரகாசநிகண்டு உரை.

86. சிறுநாகப்பூ—Bulletin de l' Institut botanique de Buitenzorg Buitenzorg.

87. சிற்றாமுட்டி—பாவபிரகாசநிகண்டுஉரை

88. சிற்றீச்சை – பாவபிரகாசநிகண்டுஉரை.

89. சிகைக்காய்—பாவபிரகாசநிகண்டுஉரை

90. சடாமாஞ்சி—பாவபிரகாசநிகண்டுஉரை.

91. சிவதை—பாவபிரகாசநிகண்டுஉரை.

92. சிறுகுறிஞ்சை—(1) Pharmazeutische Zeitung, Berlin. (2) Indian Journal of medical Research, Calcutta.

93. சீந்தில்கொடி—பாவபிரகாசநிகண்டுஉரை

94. சீரகம்—பாவபிரகாசநிகண்டுஉரை.

95. சூரியகாந்தி—Chemisches Zentralblatt, Berlin.

96. சேராங்கொட்டை—(1) Liebigs Annalen der Chemie, Leipzig. (2) Journal of the Indian Institute of Science. Bangalore. (3) பாவபிரகாசநிகண்டுஉரை.

97. சோம்பு—பாவபிரகாசநிகண்டுஉரை

98. ஞாழல்—பாவபிரகாசநிகண்டுஉரை.

99. தகரம்—Pharmaceutical Journal and Pharmacist, London.

100. தண்ணீர்விட்டான்கிழங்கு—பாவபிரகாசநிகண்டுஉரை.

101. தாமரை—(1) Biologisches Zentralblatt, Leipzig. (2) Compte rendu hebdomadaire des seances de 1, Academie-des sciences, Paris. (3) பாவபிரகாசநிகண்டுஉரை.

102. தாளிசபத்திரி—(1) Bericht von Schimmel u Co., Leipzig, uber aetherische Oele, Richstoffe, usw, Leipzig. (2) Chopra R.N.—Indigenou Drugs of India.

103. தான்றி—(1) Journal of the American Pharmaceutical Association,Columbus. (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

104. தாழை—(1) Journal of the Indian Chemical Society, Calcutta. (2) Deutsche Parfumerizeitung, Berlin.

105. திராட்சை—பாவபிரகாசநிகண்டுஉரை.

106. திப்பிலி—பாவபிரகாசநிகண்டுஉரை.

107. தும்பை—பாவபிரகாசநிகண்டுஉரை.

108. துரிஞ்சி—பாவபிரகாசநிகண்டுஉரை.

109. தென்னை—பாவபிரகாசநிகண்டுஉரை.

110. தேக்கு—(1) Wehmer, C. Die Pflanzenstoffe II Vol. (2) Bulletin of the Chemical Society of Japan, Tokyo.

111. தேற்றா—Archiv der Pharmazie, Berlin.

112. தேவதாரு—Chemical Abstracts, Easton, Pa.

113. நன்னாரி—Archiv der Pharmazie, Berlin.

114. நாயுருவி— பாவபிரகாசநிகண்டுஉரை

115. நாரத்தை—(1) Wealth of India Vol. II. (2) Journal of the Indian Institute of Science, Bangalore. (3) Thorpe's Dictionary of Applied Chemistry, VIII Vol., (4) Chemical Abstracts Easton—Pa.

116. நாவல்—Pharmaceutical Journal and Pharmacist, London.

117. நிலப்பனை—பாவபிரகாசநிகண்டுஉரை.

118. நிலவேம்பு—பாவபிரகாசநிகண்டுஉரை.

119. நிலாவாரை—(1) பாவபிரகாசநிகண்டுஉரை. (2) Wehmer, C. Die Pflamzenstoffe. I Vol. (3) Proceedings of the Indian Academy of Science,Bangalore.

120. நீர்த்திப்பிலி—பாவபிரகாசநிகண்டுஉரை.

121. நீர்முள்ளி—(1) Journal of the Indian Chemical Society. Calcutta. (2) Oil and Soap, Chicago. (3) Journal of the University of Bombay. (4) Chemical Abstracts, Easton, Pa. (5) Quarterly Journal (and year book) of Pharmacy and Allied Sciences (and Pharmacology), London.

122. நெல்லி—(1) பாவபிரகாசநிகண்டுஉரை (2) Journal of Scientific and Industrial Rexarch, Delhi. (3) Indian Forest Leaflet, Dehra Dun.

123. நெருஞ்சி—பாவபிரகாசநிகண்டுஉரை

124. நேபாளதனியா. (1) பாவபிரகாசநிகண்டுஉரை. (2) Indian Forest Records, Dehra Dun. (3) Annals of Biochemistry and Experimental Medicine, Calcutta.

125. நேர்வாளம்—(1) Helvetica Chimica acta, Basel, Genf. (2) Wealth of India. (3) Thorpe—Thorp's Dictionary of Applied Chemistry II Vol.

126. நொச்சி—(1) பாவபிரகாசநிகண்டுஉரை. (2) Indian Journal of Pharmacy, Benares.

127. பசலைக்கீரை—பாவபிரகாசநிகண்டுஉரை.

128. பச்சை அலரி—(1) Pharmaceutical Journal and Phaimacist, London. (2) Bulletin of the Academy of Sciences of the United Provinces of Agra and Oudh, Allhabad. (3) Jourral of Biological Chemistry, Baltimore. (4) Compte renduheldomadaire des seances de 1, Academie des sciences Paris.

129. பருத்தி—பாவபிரகாசநிகண்டுஉரை.

130. பர்ப்பாடகம்—(1) பாவபிரகாசநிகண்டுஉரை. (2) Dymock, Warden & Hooper—Pharmacographis, Indica II Vol.

131. பதிமுகம்—(1) Science & Culture, Calcutta. (2) Journal of the Indian Chemical Society, Calcutta.

132. பலா—(1) பாவபிரகாசநிகண்டுஉரை. (2) Wehmer. C—Die Pflanzenstoffe I Vol.

133. பனை—(1) பாவபிரகாசநிகண்டுஉரை.

134. பாகல்—(1) Puerto Rico Journal of Public Health, San Juan. (2) American Journal of Pharmacy, Philadelphia. (3) பாவபிரகாசநிகண்டுஉரை.

135. பாக்கு—(1) Hoppe—Seyler's Zeitcshrift fur physiologische Chemie. Strassburg. (2) Bericht der Deutschen

Pharmazeuts chen Gasellschaft, Berlin. (3) Bulletin of the Agricultural Chemical Society of Japan, Tokyo. (4) Bulletin des sciences Pharmacologiques, Paris.

136. பாச்சோத்தி—(1) Bericht der Deutschen Botarnishen Gesellschaft, Berlin. (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

137. பாதிரி—Mededeelingen uit'slands Plantentuin Batavia.

138. பிரண்டை—பாவபிரகாசநிகண்டுஉரை.

139. புங்கன்—பாவபிரகாசநிகண்டுஉரை.

140. புளி—பாவபிரகாசநிகண்டுஉரை.

141. புளியாரை—Chopra, R.N. Indigenous Drugs of India.

142. புளிவஞ்சி—பாவபிரகாசநிகண்டுஉரை.

143. புளிப்பு மாதுளை—(1) Archiv der Pharmazie, Berlin. (2) Henry, T.A. The Plant Alkaloids, 1949. (3) பாவபிரகாச நிகண்டுஉரை

144. புஷ்கரமூலம்—பாவபிரகாசநிகண்டுஉரை.

145. பூசனி—பாவபிரகாசநிகண்டுஉரை.

146. பூண்டு—பாவபிரகாசநிகண்டுஉரை.

147. பூனைக்காலி—(1) Indian Journal of Pharmacy, Benares. (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

148. பெருங்காயம்—பாவபிரகாசநிகண்டுஉரை.

149. பெருங்குமிழ்—பாவபிரகாசநிகண்டுஉரை.

150. பெருங்குரும்பை—(1) Indian Journal of Medical Research Calcutta (2) American Journal of Pharmacy, Philadelphia.

151. பெருவாகை—(1) Journal of the Chemical Society, London. (2) Proceedings of the Chemical Society, London.

152. பேய்ச்சுரை—Archiv der Pharmazie, Berlin.

153. பேய்த்துமட்டி—(1) American Journal of Pharmacy, Philadelphia. (2) Current Science, Bangalore. (3) Journal of the Indian Chemical Society, Calcutta. (4) The British Pharmaceutical Codex. (5) பாவபிரகாசநிகண்டுஉரை.

154. பேரீச்சை—பாவபிரகாசநிகண்டுஉரை.

155. பேய்ப்புடல்—Patna University Journal, Patna.

156. பொன்னாங்கண்ணி—Health Bulletin, Delhi.

157. மகிழம்—(1) Journal of the Society of Chemical Industry, London. (2) பாவபிரகாசநிகண்டுஉரை.

158. மக்காச்சோளம்—Journal of the American Chemical Society, Easton, Pa.

159. மஞ்சள்—பாவபிரகாசநிகண்டுஉரை.

160. மஞ்சிஷ்டி—பாவபிரகாசநிகண்டுஉரை.

161. மணித்தக்காளி—Archiv der Pharmazie, Berlin.

162. மந்தாரை—Journal of the Indian Chemical Society, Calcutta.

163. மரமஞ்சள்—(1) Journal of the Chemical Society, London. (2) Chemical Abstracts, Easton, Pa.

164. மருக்காரை—பாவபிரகாசநிகண்டுஉரை.

165. மருது—Proceedings of the Academy of Sciences of the United Provinces of Agra and Oudh, Allahabad.

166. மருதோன்றி—(1) Wehmer, C. Die Pflanzenstoffe II Vol. (2) Pharmaceutical Journal and Phamacist, London. (3) Druggist's Circular, New York. (4) Journal of the Indian Chemical Society, Calcutta.

167. மலைச்சுண்டை—Wehmer, C. Die Pflanzenstoffe II Vol.

168. மலைவேம்பு—(1) Journal of the Elisha Mitchell Scientific Society, Chape Hill, N.C. (2) Revista da la Asociacion medica argentina Buenos Aires. (3) Journal of Scientific and Industrial Research, Delhi. (4) Druggist's Circular, New York.

169. மல்லிகை—பாவபிரகாசநிகண்டுஉரை

170. மா—Biochemical Journal, Cambridge.

171. மாசிபத்திரி—(1) Bericht von Schimmel u.Co. Leipzig, uber aetherische Oele Riechstoffe, usw, Leipzig. (2) Journal of the Pharmaceutical Society of Japan, Tokyo. (3) Wehmer, C. Die Pflanzenstoffe, II Vol.

172. மாவிலங்கை—Wehmer, C. Die Pflanzenstoffe Vol. I.

173. மிளகு—(1) The United States Dispensatory. (2) Helvetica chimica acta, Basel. Gnf. (3) Journal of the Chemical Society, London. (4) பாவபிரகாசநிகண்டுஉரை.

174. முதியார்கூந்தல்—பாவபிரகாசநிகண்டுஉரை.

175. முந்திரி—(1) Bericht der Deutschen Chemischen Gasellschaft, Berlin. (2) Biochemical Journal, Cambridge. (3) Recueil des travanx chimiques des Pays., Bas et de la Belgique, Leyde.

176. முருங்கை—Compte rendu hebdomadaire des seances de l' Academie des Sciences, Paris. (2) Indian Journal of Medical Research, Calcutta. (3) Current Science, Bangalore. (4)பாவபிரகாசநிகண்டுஉரை

177. முள்ளங்கி—(1) Compte rendu h ebdoma daire des seances de I' Academic des Sciences, Paris. (2) Biochemische Zeitschrift, Berlin.

178. முன்னை—Journal of the American Pharmaceutical Association, Columbus.

179. மூங்கில்—(1) Hoppe—Seyler's Zeitschrift fur physiologische Chemic. Strassburg.(2) Biedermanns Zentralblatt fur Agrikulturehemic und rationellen Landwirtschafts betrieb, Leipzig. (3) Indian Medical Gazette, Calcutta. (4) Chemisches Zentralblatt. (5) Archiv der Pharmazie, Berlin.

180. யானைத்திப்பிலி—(1) Dymock, Warder & Hooper—Pharmacographis Indica, III Vol. (2) பாவபிரகாச நிகண்டுஉரை.

181. லக்ஷ்மணா—(1) Pharmaceutical Journal and Pharmacist, London, (2) Bericht der Dentschen Chemischen Gesellschaft, Berlin. (3)Journal fur praktische Chemie, Leipzig.

182. வங்கம்—(1) Journal of the Chemical Society, London. (2) Proceedings of the Chemical Society, London. (3) Journal of the Chemical Society, London.

183. வசம்பு—பாவபிரகாசநிகண்டுஉரை.

184. வத்஼நாபி—Indian Journal of Medical Research, Calcutta.

185. வட்டத்திருப்பி—American Journal of Pharmacy, Philadelphia.

186. வல்லாரை—(1) Journal de pharmacre, Anvers. (2) Bulletin des Sciences pharmacologiques., Paris. (3) Proceedings of the Indian Academy of Science, Bangalore. (4) Chemical Abstracts, Easton, Pa. (5) பாவபிரகாசநிகண்டு உரை.

187. வாகை—Wehmer, C. Die Pflanzenstoffe. 1 Vol.

**138. பிரண்டை**—Sissus Quadrangularis

பிரண்டையில் கால்ஷியம் ஆக்ஸலேட் (Calciumoxalate) 100 கிராம் பச்சைப் பிரண்டையில் 267 மி.கி. கரோடென் (Carotene) 100 கிராம் இளம் தண்டில் 398 மி.கி. அஸ்கோர்பிக் ஆஸிட் (Ascorbic Acid) இருக்கின்றன. (பாவ.நி.உரை.)

**139. புங்கன்**—Pongamia Glabra

இதன் விதைகளில் 36.4% ஒருவகைக் கசப்புச் சுவையுள்ள பழுப்புநிறமுள்ள நறுமணமுள்ள எண்ணெய் உள்ளது. இது பொன்கேமால் (Pongamal) அல்லது ஹோங்கே எண்ணெய் (Hongayoil) எனப்படுகிறது. இந்த எண்ணெயில் கரன்ஜீன் (Karanjin) $S_{18} H_{12} O_4$) எனப்படும் கனப்பொருள் கிடைக்கிறது. விதைகளில் சிறிதளவு காற்றில் ஆவியாகும் எண்ணெய் உள்ளது. இதன் பட்டையில் ஒருவகை அமிலத்தன்மையுள்ள பழுப்பு நிறமுள்ள க்ஷாரப் பொருள் ஒன்றுள்ளது. (பாவ.நி.உரை.)

**140. புளி**—Tamarindus Indica Linn

இதில் சைட்ரிக் ஆஸிட் (Citric Acid) டார்டரிக் ஆஸிட் (Tartaric Acid) பொடாஷியம் பைடார்டரேட் (Potassium Bitartrate) மற்றும் சர்க்கரை முதலிய பொருள்கள் இருக்கின்றன. (பாவ.நி.உரை.)

**141. புளியாரை**—Oxalis Corniculata

இதில் ஆஸிட்பொடாஷியம் ஆக்ஸலேட் உள்ளது. (Chopra 512)

**142. புளிவஞ்சி**—Rumex Acetosella Linn

இதில் பொடாஷியம் ஆக்ஸலேட் (Potassium Oxalate) டார்டாரிக் ஆஸிட் (Tartaric Acid) இருக்கின்றன. (பாவ.நி. உரை.)

**143. புளிப்பு மாதுளை**—Punicagaranatum

மாதுளம் பட்டையில் ஆல்கஹால், பெல்லெடியரின் (Pelle tierine) முதலியவை உள்ளன. (Arch. Pharm. Berl. 1917) வேரின் பட்டையில் ஸூடோ – பெல்லெடியரீன் (Pseudo Pelletierine) பெல்லெடியரின் (Pelletierine) ஐஸெபைல்லெடியெரைன் (Isopelletierine), மெதில்பெல்லெடியரின் (Methylpelletierine) எனும் நான்கு வகை ஆல்கஹால்கள் இருக்கின்றன·

(Henry, 1949), பழத்தின் தோலில் மஞ்சள்நிறம் தரும் சாயப் பொருள், கௌாடெனிக் அமிலம் (Gallotannic Acid 28%) உள்ளன. வேரின் பட்டை மற்றும் தண்டின் பட்டையில் 0.5% க்ஷாரப்பொருள் உள்ளது. அதில் பெலெடிராயின் முக்கியமானது. ல் கெலோடெனிக் அமிலம் 22% உள்ளது. (பாவ.நி.உரை.).

**144 புஷ்கரமூலம்**—Iris Germonica

புஷ்கரமூலத்தில் காற்றில் ஆவியாகும் எண்ணெய், இரிடின் (Iridin) குளூகோஸைட், மாவுப்பண்டம், சர்க்கரை, பிசின், டேனின், கால்ஷியம் முதலியன உள்ளன. (பாவ.நி.உரை.)

**145. பூசனி**—Benincasa Cerifera

இதன் பழத்தில் 100 கிராம் அளவில் நீர்ப்பகுதி 96, புரோடின் 0.4, எண்ணெய் 0.1, கார்போஹைட்ரேட் 3.2, உலோகசத்து 0.3 வைடமின் பி, ஆகியவை உள்ளன. (பாவ. நி. உரை)

**146. பூண்டு**—Allium Sativum

பூண்டில் வாதுமைநிறமுள்ள ஒருவகை எண்ணெய் காற்றில் ஆவியாகக் கூடியது 0.1–0.3% உள்ளது. இந்த எண்ணெயில் சிறப்பாக ஆலில் டயிஸல்பயிட் (Allyl Disulphide $C_6H_{10}S_2$) ஆலில் பிராபில் டைபிஸல்பாயிட் (Allyl-Propyldisulphide) உயர்ந்த வகையைச் சேர்ந்த பாலிஸல்பைட்ஸ் (Polysulphides) சிறிதளவும் உள்ளன. மற்றும் பூண்டில் மதுசாரத்தின் சத்து போன்ற ஒருவகை அல்லீஸின் (Allicin $C_6H_{10}S_2O$) என்ற பெயர் கொண்ட பாக்டீரியாவை எதிர்க்கும் தன்மை கொண்ட (Antibiotics) பொருள் உள்ளது. அத்துடன் அல்லிசேசன் 1 அல்லிசேசன் 2 (Allicetion I Allicetion II) என்னும் நுண்ணிய கிருமிகளைப் போக்கும் (Antibiotics). இருவகைப் பொருள்களும் உள்ளன. இவை ஈதரில் கரைந்துவிடக் கூடியவை. நீரில் கரையாது (பாவ.நி.உரை.)

**147. பூனைக்காலி**—Muguna Prurita

பூனைக்காலி விதைகளில் 4% சிவப்புநிறமுள்ள விஸ்கௌஸ் (Viscousoil) எண்ணெய், ஆல்கஹால் முகுனென் (Alks. Mucunine) முகுனடைன் (Mucunadine) (Indian J. Pharm. 1944) இதில் பிசின், டேனின், மாங்கனீஸ் உள்ளன. காய்களின் தோலில் மிகுந்த அளவு மாங்கனீஸ் (Manganese) உள்ளது.(பாவ.நி.உரை.)

**148. பெருங்காயம்**—Ferula Narthex

ில் கந்தகச் சத்து உள்ளது. பூண்டில் உள்ளது போன்ற காற்றில் கரையும் எண்ணெய் 6–17% உள்ளது. இந்த எண்ணெயில் டர்பென்ஸ் (Terpenes) டைஸல்பாயிட்ஸ் (Disul phides, $C_7H_{14}S_2$ மற்றும் $C_{11}H_{20}S_2$) மற்றும் நீலநிறமுள்ள இளகிய பொருள் ($C_{10}H_{16}O$) இருக்கின்றன. இதில் கனப் பொருள் உள்ளது அதில் அஸாரெஸி டேனால் (Asaresino tannol) ஆஸாரெஸினோல் பெரூலிக் ஆஸிட் ஈஸ்டர் (Asaresinol Ferulic Acid Ester), ப்ரீ பெரூலிக் ஆஸிட் (Free ferulic Acid) 1·3% உள்ளன. இவற்றுடன் பெருங்காயத்தில் 25% பிசின் உள்ளது. தூய பெருங்காயத்தில் 65–75% மதுவில் கரையும் பொருள் உள்ளது. 3–5% சாம்பல் சத்தும் உள்ளது. இதன் பிசினை Dry Distillation செய்தால் அம்பெலிபெரோன் (Umbelliferone) என்பது கிடைக்கும். (பாவ.நி.உரை.)

**149. பெருங்குமிழ்**—Gmelina Arbora

பெருங்குமிழ் வேரில் மஞ்சள் நிறமுள்ள திடமான எண்ணெய் க்ஷாரப் பொருள், மிகக் குறைந்த அளவில் பென்ஜோயிக் ஆஸிட், சாம்பல்சத்து ஆகியவை இருக்கின்றன. இதன் பழத்தில் ப்யூடிரிக் (Butyric) டார்டாரிக் (Tartaric) அமிலம், க்ஷாரப் பொருள் சர்க்கரை போன்ற பொருள் மிகக் குறைந்த அளவில் டேனின் ஆகியவை இருக்கின்றன. (பாவ.நி.உரை.)

**150. பெருங்குரும்பை**—Sansevieria Zeylanica

ஆல்கஹால் ஸென்ஸெர்வியரின் (Sanservierine) (Dymock, Warden & Hooper III-495) (Indian J. med. Res. 1934) இலைகளின் சாற்றில் அகோநிடிக் ஆஸிட் (Aconitic Acid) உலர்ந்த வேரில் ஆல்கஹால், பிசின் ஆகியவை இருக்கின்றன. (Amer. J. Pharm. 1947)

**151. பெருவாகை**—Oroxylum Indicum

ல் கசப்புச் சுவையுள்ள ஒரோக்ஸிலின் (Oroxylin ஆல்கஹால் (J. Chem. Soc. 1901) குளுகோஸைட் கசப்புப் பொருள் (Dragen Dorff—Heilpflanzen 609) (Proc. Chem. Soc. London 1901) ீதைகளில் பைகலைன் (Baicalein) உள்ளது. (J. Chem. Soc. 1936)

**152. பேய்ச்சுரை**—Lagenaria Siceraria

பேய்ச்சுரையில் சபோனின் (Saponin), கொழுப்புச்சத்துள்ள எண்ணெய் உள்ளன. (Arch. Pharm. Berl. 1886)

**153. பேய்த்துமட்டி**—Citrullus Colocynthis

பேய்த்துமட்டியில் கசப்புச் சுவையுள்ள பொருள், கொலொஸிந்தின் (Colocynthin), கொலொஸிந்தடின் (Colocyn thetin) (Amer. J. Pharm. 1893), இதன் வேரில் எக்ஸ்-எலோடெரின், (X-Elaterin) ஹென்டிரியா கொண்டேன் (Hentria-Contane) சபோனின் (Saponin) உள்ளன. (Curr. Sci. 1934) விதைகளில் திடமான எண்ணெய், ஒருவகை பைஸோ ஸ்டெ ரோலின் (Phytosterolin) 2 ஸபோனின் (2 Saponin) 2 ஹைட் ரோ கார்பன்கள் (2 Hydrocarbons) ஒரு சபோனின் (Saponin) ஆல்கஹால், குளுகோஸைட் (Glucoside) டேனின் (Tannin) (J. Indian Chem.Soc. 1949) இதன் கோதில் எக்ஸ் எலோடெரின் (X-Elaterin) ஹென்டிரியா கொன்டேன் (Hentriacontane) ஒருவகை பைபோஸ்டெரோல் (Phytosterol) மற்றும் கொழுப்புச் சத்துள்ள அமிலங்களின் கலவை ஆகியவை உள்ளன. (B.P.C. 1934) தோல் நீக்கியபின் விதைகளின் அளவு 75% ஆகும். இவ் விதைகளில் 15% எண்ணெய், மிகக் குறைந்த அளவில் க்ஷாரம், ஒருவகை என்ஜைம் (Enzyme) மற்றும் பைடோஸ்டைரால் (Phytosterol) உள்ளன. (பாவ.நி. உரை.)

**154. பேரீச்சை**—Phoemix doctylifer Linn

ன் பழங்களில் ஏ.பி.டி. விடமின்களும், ஸ்கர்வி (Scurvy) எனும் விடமினும் உள்ளன. (பாவ.நி.உரை.)

**155. பேய்ப்புடல்**—Trichosanthes Diolca

பேய்ப்புடல் வேரில் ஒரு வகை அமோர்ப்-ஸபோனின் (Amorph. Saponin) ஹென்டிரியா கொன்டேன் (Hentria-contane), ஒரு பைடோஸ்டெரால் (a phytosterol) ஒருவகைக் கசப்புச் சுவையுள்ள பொருள், மிகச் சிறிய அளவில் பயன்தரும் எண்ணெய், சிறிதளவு திடமான எண்ணெய், டேனின் இருக்கின்றன. (Patna Univ. J. 1945).

**156. பொன்னாங்கண்ணி**—Alternanthera Sessilis

இளங்கீரை உடலுக்குத் தேவையான சத்துக்களைக் கொண்டது. புரோடீன் 5% 10 கி. கீரையில் இரும்புச்சத்து 16.7 மி. கிராமும் உள்ளன. (Hlth Bull No. 23.1941)

**157. மகிழம்**—Mimusops Elengi

விதைகளில் ஸபோனின் (Saponin)உள்ளது. (J. Soc. Chem. Ind. London 1910) கொட்டைகளில் ஒருவகை எண்ணெய் உள்ளது.

**158. மக்காச்சோளம்**—Zeamays

100 கிராம் தானியத்தில் 30 கிராம் உடலைச் செழிக்கச் செய்யும் சத்துக்கள் உள்ளன. (C. R. Acad. Sci. Paris 1914) ஆக்ஸாலிக் ஆஸிட் உள்ளது. (J. American Chem. Soc. 1931)

**159. மஞ்சள்**—Curcuma Longa Linn

'தில் கர்க்யூமின் (Curcumin $C_{21} H_{20} O_6$) என்னும் மஞ்சள் நிறம் தரும் பொருள் உள்ளது. அது மதுவில் முழுதும் கரையும். இக்கரைசலில் க்ஷாரம் சேர்த்தால் வாதுமைச் சிவப்பு நிறம் தோன்றும். மற்றும் மஞ்சளில் 5–6% காற்றில் கலக்கும் எண்ணெய் உள்ளது. அது கர்ப்பூரம் போன்ற மணம் கொண்டதாகும். இந்த எண்ணெயில் கர்க்யூமென் (Curcumen) என்னும் டர்பைன் (Terpene) உள்ளது. இது எண்ணெய்ப்பசையுள்ள கொழுப்புச்சத்தை (Cholesterol) கரைக்கக் கூடியது. மேலும் மஞ்சளில் மாவுப்பண்டம் (Starch) 24% அல்ப்யூமினாயிட்ஸ் (Albuminoids) 30% உள்ளன. (பாவ.நி.உரை.)

**160. மஞ்சிஷ்டி**—Rubia Cordifolia

இதன் வேரில் பிசின் மாவுப்பொருள், சர்க்கரை, சுண்ணாம்புச் சத்து, நிறம்தரும் பொருள் ஆகியவை இருக்கின்றன. நிறம்தரும் பொருள்களில் சிவப்பு பர்புயூரின் (Purpurin) மஞ்சள் நிறமுள்ள குளுகோஸைய்ட் மஞ்சிஷ்டின்,

கேரின்ஸின் (Manjistin & Garancin) ஆரெஞ்சு நிறமுள்ள அலிஜேரின் (Alizarin) மற்றும் மஞ்சள் நிறமுள்ள ஸெந்தயின் (Xanthine) ஆகியவை உள்ளன. (பாவ.நி.உரை.)

**161. மணத்தக்காளி**—Solanum Nigrum

மணத்தக்காளியில் ஆல்கஹால் ஸொலானின் (Aik. Solanine) ஸபோனின் (Saponin) ஆகியவை உள்ளன. (Arch. Pharm. Berl. 1981) இதில் நச்சுப்பொருள் மிகச் சிறிதளவே உள்ளது.

**162. மந்தாரை**—Bauhinia Variegata

இம்மரம் பிசின் உள்ளது. பட்டையில் டேனின் (Tannin) (Pharm. J. 1892), விதைகளில் கொழுப்புச் சத்துள்ள எண்ணெய் (Fatty oil) உள்ளன. (J. Indian Chem. Soc. 1940).

**163. மரமஞ்சள்**—Coscimum Fenestratum

மரமஞ்சளில் பெர்பெரின் (Berberine) ஸபோனின் (Saponin) (J. Chem. Soc. 1867) இதன் தண்டில் பெர்பெரின் 3.5% அளவும், செரில் ஆல்கொஹால் (Ceryl Alcohol), ஹென்டிரியா கொன்டேன் (Hentria Containe) ஸிடோஸ்டெரோல் (Sitosterol) பால்மடிக் மற்றும் ஆலிக் அமிலங்கள் (Palmitic and Oleic Acids) ஸிடொஸ்டெரால் குளுகோஸைட் ஸெபோனின் (Saponin) மற்றும் பிசின் ஆகியவை இருக்கின்றன. (Chem. Abstr. 1930).

**164. மருக்காரை**—Randia Dumetorum

இதன் காய்களில் ஸபோனின் (Saponin) வெலேரியானிக் ஆஸிட் (Velerianic Acid) மெழுகு, மாவுப்பண்டம், நிறம் தரும் ஒரு வகைப் பொருள் ஆகியவை உள்ளன. (பாவ.நி.உரை.)

**165. மருது**—Terminalia Arjuna

மருதமரப்பட்டையில் அர்ஜுனைன் (Arjunine) ஒருவகை லாக்டோன் (Lactone) அர்ஜுனெடின் (Arjunetin) பயன்தரும் எண்ணெய், டேனின் (Tannin) ஒருவகை நிறம் தரும்பொருள், சர்க்கரை ஆகியவை இருக்கின்றன. (Proc. Acad. Sci. Unit. Prov., 1935)

**166. மருதோன்றி**—Lawsonia Inermis

மருதோன்றி இலைகளில் குளுகோஸைட், நிறம் தரும் பொருள் (Wehmer II 816. Pharm. J. 1908) ஹென்னோடெனிக் ஆஸிட் (Hennotannic Acid) (Drugg-circ. 1921) நிறம் தரும் பொருளாகிய லாஸோன் (Lawsone) 2-ஹைட்ரோகஸி நாப்தோகுவினோன் (2.Hydroxy - Naphthoxquinone) போன்ற தாகும். (J. Indian Chem. Soc. 1933).

**167. மலைச்சுண்டை**—Solanum Verbascifolium

மலைச்சுண்டையில் ஆல்கஹால் ஸோலனைன் (Alk-Solanine) ஸபோனின் (Saponin) இருக்கின்றன. (Wehmer II 1092) (J. Chem. Med. 1825).

**168. மலைவேம்பு**—Melia Azedarach

மலைவேப்பம் பழங்களில் ஒருவகை நச்சுப்பொருள் (J. Elisha mitchell Sci. Soc. 1935) ஆல்கஹால் அஜாரிடைன் (Alk. Azaridine), ஒருவகைப் பிசின் (resin) டேனின் (Tannin) மெலியோடேனிக் ஆஸிட் (Melliotannic Acid) பென்ஜோயிக் ஆஸிட் (Benzoic Acid) (Rev. Asoc. Med. argent 1939) பழங் களில் பகாயனின் (Bakayanin) ஸ்டெரோல் (Sterol) (J. Sci. Industr. Res. 1948) மார்கோஸைன் (Margosine) எனும் கசப்புப்பொருள் (Chem. & Drugg. 1919) கந்தகத்துடன் கூடிய ஒருவகை திடமான எண்ணெய் (Drug Circ. 1929).

**169. மல்லிகை**—Jasminum Grandiflorum

மல்லிகை மலர்களில் காற்றில் ஆவியாகும் எண்ணெய், இலைகளில் க்ஷாரப்பொருள், ஸெலிஸிலிக் அமிலம் ஆகியவை இருக்கின்றன. (பாவ.நி.உரை.)

**170. மா**—Mangifera Indica

மாம்பழத்தில் விடமின் ஏ.பி.சி.டி. ஆகியவை இருக் கின்றன. (Biochem. J. 1933) மற்றும் ஸயிட்ரிக் ஆஸிட், காலிக் ஆஸிட் ஆகியவையும் உள்ளன. (பாவ.நி.உரை.)

**171. மாசிபத்திரி**—Artemisia Vulgaris

பயன்தரும் எண்ணெய் (Ber. Schimmel U. Co. Lpz 1904) அடெனின் (Adenin) (J. Pharm. Soc. Japan 1933) செடியில் 0.2% எண்ணெய் (Wehmer II) உள்ளது.

**172. மாவிலங்கை**—Crataeva Nurvala

மாவிலங்கைப் பட்டையில் ஸபோனின் (Saponin) மற்றும் டேனின் (Tannin) உள்ளன. (Wehmer - I 392)

**173. மிளகு**—Pipernigrum

மிளகில் ஆல்கஹால் சாவிஸின் (Chavicine) பிபரைன் (Piperine) பிபரிடைன் (Piperidine) பயன் தரும் எண்ணெய் (U.S.D. 1546) (Helv. chim. acta 1927) பழங்களில் பிபரிடைன் உள்ளது. (J. Chem. Soc. 1950) மிளகில் காற்றில் கலக்கும் எண்ணெய் பைபரீனி எனும் க்ஷாரம் 5–9% பைபரீடின் 5% சவிஸீன் எனும் கசப்புச் சுவையுள்ள பொருள், பச்சை நிறமுள்ள மற்றொரு கார்ப்புச் சுவை கொண்ட பொருள் 6% காற்றில் கலக்கும் எண்ணெய் 1–2.5%, மாவுப்பண்டம் 30%, ஈதரில் கலக்கக்கூடிய பொருள் 6% புரோடோட் 7% மற்றும் லிகனின் பிசின் ஆகியவை உள்ளன. (பாவ.நி.உரை.)

**174. முதியார் கூந்தல்**—Paederia Foetida

ில் காற்றில் கலக்கும் எண்ணெய், மற்றும் ஒருவகை க்ஷாரப் பொருள் உள்ளன. (பாவ.நி.உரை.)

**175. முந்திரி**—Anacardium Occidentale

முந்திரியில் கார்டோல் (Cardol) அனார்காடிக் ஆஸிட் (Anacardic Acid) (Ber. Disch. Chem. Ges. 1887) அனகார்டென் (Anacardein) (Biochem. J. 1936) முந்திரிப் பழங்களில் அனாகார்டிக் ஆஸிட் (Anacardic Acid) ஒருவகை பெனோல் கார்டோல் (Phenol Cardol (Rec. Trav. chim. Pays. – Bas 1941).

**176. முருங்கை**—Moringa Pterygosperma Gaerten

ஆல்கஹால், பிசின் (C. R. Acad. Sci. Paris 1900) வேர்ப் பட்டையில் ஆல்கலாயிட்ஸ் மோரின்ஜின், மோரின்ஜினைன் (Alkaloids moringine, moringinine) (Indian J. Med. Res. 1932) மலர்களில் அமரர்ப்பஸ் base (Cur. Sci. 1946). பெட்ரிகோஸ்பெர்மின் (Pterygospermin) உள்ளது. முருங்கை விதைகளில் 36% மணமற்ற தூய எண்ணெய் உள்ளது. இது நுண்ணிய யந்திரப்பகுதிகளில் எண்ணெய்ப் பசை உண்டாக்கப் பயன்படுத்தப்படுகிறது, ஆப்பரிக்காவில் வளரும் இம்முருங்கை வகையைச் சார்ந்த எம். அப்டெரா (Aptera) என்னும் மரத்தின்

விதைகளிலிருந்து பென்ஆயில் (Benoil) எடுக்கப்படுகிறது. நறுமணப்பொருள் தயார் செய்வதிலும் இது பயன்படுத்தப்படுகிறது. நிலையற்ற மணமும் இதில் நிலைபெறுகிறது. இதன் வேரில் ஸ்பைரோசின் (Spirochin) என்னும் மிக்க பயனுள்ள க்ஷாரப்பொருள், ஜீவசக்தியை எதிர்க்கும் ப்டெரிகோஸ்பர்மின் (Pterygospermin) உள்ளன.) இதில் மிக்கநெடியுள்ள எண்ணெயும் உள்ளது. (பாவ. நி. உரை.)

**177. முள்ளங்கி**—Raphanus Sativus

100.கி. முள்ளங்கி கிழங்குகளில் பயனுள்ள எண்ணெய் 0.01 மி.கி.உள்ளது.(C. R. Acad. Sci Paris–1912)கிழங்குகளில் குளூகோஸைட், (Glucd.) என்ஜைம் (Enzyme) மெதைல். மெர்காப்டன் (Methyl Mercaptan) (Biochemz. 1926).

**178. முன்னை**—Premna Integrifolia

முன்னைப் பட்டையில் ஆல்கஹால், பிரெம்னைன் (Alk Premnine) ஆல்கஹால் கனியாரைன் (J. Amer. Pharm. Ass. 1947) உள்ளன.

**179. மூங்கில்**—Bambusa Bambos.

கோலின் (Cholin) பெடெயின் (Betain) (Hoppe. Seyl. Z 1909) நியூகிலீஸ் (Nuclease) யுரேஸ் (Urease) புரோடியோ லைடிக் என்ஜைம் (Proteolytic Enzyme) சுவையற்ற ஒருவகை என்ஜைம் (Enzyme) (Hoppe-Seyl. Z.1911) வம்சலோசன், தபாஷிர் (Bangsalochan, Tabashir) (Biederm. Zbl. 1887) இளம் குருத்துக்களில் ஒருவகை ஸைநோகெனெடிக் குளூகோஸைட் (Cyanogenetic Gluid); நச்சுப்பொருள் (Indian Med. Gaz. 1943) ஆக்ஸாலிக் ஆஸிட் (Oxalic Acid) (Chem. Zbl 1931) இளங் குருத்துகளில் 0.03% HCN 0.23% பென்ஜோயிக் ஆஸிட் (Benzoic Acid) 2.5% சர்க்கரை, பிசின், மெழுகு முளைகளின் சாற்றில் 0.027 HCN 0.16% பென்ஜாயிக் ஆஸிட் (Benzoic Acid) பச்சை இலைகளில் HCN மற்றும் பென்ஜோயிக் ஆஸிட் இல்லை. (Arch. Pharm. Berl. 1938).

**180. யானைத்திப்பிலி**—Scindapsus Officinalis.

யானைத்திப்பிலியில் ஆல்கஹால் (Dymock, Warden & Hooper III 544) இதில் 1% காற்றில் கலக்கும் எண்ணெய் உள்ளது. அந்த எண்ணெயில் 5–6.4%வரை பவுபரீன்,

பவுப்ராடீன் ஒருவகைக் கார்ப்புச் சுவையுள்ள பொருள், மாவுப் பண்டம், எண்ணெய்ப்பசை ஆகியவை இருக்கின்றன. (பாவ.நி.உரை.)

**181. லக்ஷ்மணா**—Mandragora Officinarum

ஆல்கஹால், அட்ரோபைனைப் போன்ற தனித்தன்மை கொண்ட மாண்ட்ர கோரைன் (Mandragorine isolated with properties similar to Atropine) (Pharm. J. 1885) மாண்ட்ர கோரைன் என்பது ஹையோஸ்கைமைன் மற்றும் ஸ்கோ போலமைன் கூட்டுப் பொருளாகும். (Mandragorine stated to be a mixture of Hyoscyamine & Scopolamine) (Ber- disch. chem. Ges. 1901) மற்றும் மாண்டகோரின் எனப்பெயர் கொண்ட மற்றொரு பொருளும் இதில் காணப்படுகிறது. (J. Prakt. Chem. 1901).

**182. வங்கம்**—Oroxylum Indicum

ஆரோக்ஸைலின் என்னும் கசப்புப்பொருள் (Oroxylin) ஆல்கஹால் (J. Chem. Soc. 1901) குளூகோஸைட், ஒரு வகைக்கசப்புப் பொருள் (Dragendorff-Heilpflanze 609) (Proc. Chem. Soc. London 1901) பட்டையிலும் விதையிலும் ஒரோக் ஸைலின், (Oroxylin) உள்ளது. பட்டையில் பைகாலைன் (Baicalein) என்பதும் உள்ளது. (J. Chem. Soc. 1936).

**183. வசம்பு**—Acorus Calamus

வசம்பில் ஒருவகை மணமுள்ள காற்றில் கலக்கக்கூடிய மஞ்சள் நிறமுள்ள எண்ணெய் 1.5—3.5%, எகோரின் (Acorin) என்னும் மதுவைப் போன்ற கசப்புச் சுவையும், நறுமணமும் கொண்ட குளூகோஸைட், எசோரெடின் (Acoretin) எனும் பெயர் கொண்ட பிசினைப் போன்ற பொருள், கேலோமென் (Galamene) என்னும் க்ஷாரப்பொருள், மற்றும் மாவுப்பண்டம், பிசின், டெனின், கால்ஷியம் ஆக்ஸலைட் (Calcium Oxalate) முதலியவை உள்ளன. காற்றில் கலக்கக்கூடிய இதிலுள்ள எண்ணெயில் அஸாரீல் அல்டிஹாயிட் (Asaryl- Aldehyde), ஆல்பாபினைன் (A. Pinene) கைம்பீன் (Camphene) ஆகியவை உள்ளன. (பாவ.நி.உரை.)

**184. வத்ஸநாபி**—Aconitumferox

மிக்க துன்பம் விளைவிக்கும் நச்சுப் பொருள் ஆல்கஹால் ஸூடோகோநிடைன் (Pseudaconitine) உள்ளது. (Indian J. Med. Res. 1928)

**185. வட்டத்திருப்பி**—Cissampelos Pareira

ஆல்கஹால், ஸபீரைன் (Alk. Sepeerine) பெபீரைன் (Bebeerine) ஸிஸ்ஸெப் பிலைன் (Cissampeline) (Amer. J. Pharm. 1870).

**186. வல்லாரை**—Centella Asiatica

கசப்புச் சுவையுள்ள பொருள் (J. Pharm. Anvers, 1855) புதிய இலைகளில் ஒருவகை குளுகோஸைட் அஸியாடிகோஸைட் (Asie tico side 0.07-0.12%( Bull. Sci. Pharm. 1941) பயனுள்ள எண்ணெய், கொழுப்புச்சத்துள்ள எண்ணெய், ஸிடோஸ்டெரால் (Sitosterol) டேனின் (Tannin) பிசின், (Proc. Indian Acad. Sci. Vol. 1937) ஆல்கஹால், ஹைட்ரோகோடிலைன் (Hydrocotylin) கசப்புச் சுவையுள்ள பொருள், வெல்லாரைன் (Vellarine) இலைகளிலும் வேரிலும் செடியிலும் அஸ்கோர்பிக் ஆஸிட் (Asscorbicacid) (Chem. Abstr. 1941) ஆகியவை உள்ளன. வல்லாரையில் க்ஷாரப் பொருளாகிய ஹைட்ரோகோடிலின் (Hydrocotylin $C_{22}H_{33}NO_8$) சிறிதளவு காற்றில் கலக்கும் எண்ணெய் திடமான எண்ணெய், பெக்டிக் ஆஸிட் (Pecticacid) மற்றும் விடமின்-சி உள்ளன. உலர்ந்த செடியில் ஸென்டெலிக் ஆஸிட் (Centellic Acid, $C_{30}H_4I_6$) உள்ளன. (பாவ.நி.உரை.)

**187. வாகை**—Albizzia Lebbeck

வாகையில் பிசின், சபோனின் (Saponin) டேனின் (Tannin) ஆகியவை இருக்கின்றன. (Wehmer, 1–485).

**188. வாசனைப்புல்**—Cymbopogon Citratus

பயனுள்ள எண்ணெய் (Pharm. J. 1923) அவ்வெண்ணெயில் உள்ள முக்கியப்பொருள் சிட்ரால் (Citral) 18-24 மாதங்கள் வளர்ந்த புல்லில் சிட்ரால் (Citral) உள்ள எண்ணெய் 71.75% உள்ளது. (Parfum. mod. 1937), புதிய வாசனைப்புல்லில் எண்ணெய் 0.26-0.52% உள்ளது. அதில் சிட்ரால் 78–85.5% உள்ளது. (Rep. P.R. Agric. Exp. Sta. 1940) உலர்ந்த புல்லில் 0.4% எண்ணெயும், அதில் ஸிட்ரால் 72.3% உள்ளன. (Rev. Fac. cien. quim. La Plata 1946).

**189. வாதுமை**—Prunus Amygdalus

கசப்புவாதுமையில் மிக்க நச்சுத் தன்மை கொண்ட ஹைட்ரோஸெனிக் ஆஸிட் உள்ளது. இது இதன் காற்றில் ஆவியாகும்

தன்மையுள்ள எண்ணெயில் உள்ளது. இனிப்புச் சுவை கொண்ட வாதுமையில் திடமான எண்ணெய் 61%உள்ளது.

(பாவ.நி.உரை).

**190. வாயு விளங்கம்**—Embelia Ribes

வாயுவிளங்கத்தில் எம்பெலிக் ஆஸிட் (Embelic Acid) (Arch. Pharm. Berl. 1900) எம்பெலின் (Embelin 2.5-3% காயர்கிடோல் (Quercitols) 1.0 கொழுப்புச்சத்துள்ள 5.2% ஒருவகை ஆல்கஹால், கிரிஸ்டெம்பைன் (Christembine) ஒரு வகை ரெஸினாயிட் (Resinoid) (U.S.D. 1441) உள்ளன.

**191. வாலுளுவை**—Celastrus Paniculatus

ஆல்கஹால் குளுகோஸைட், நிறம் தரும் பொருள் (Bull. Inst. bot. Buitenz 1902) விதைகளில் பழுப்பு நிறமுள்ள எண்ணெய் 52.2% உள்ளது. இது அருவருப்பைத்தரும் சுவை கொண்டது (J. Indian Chem. Soc. 1936). விதைகளிலும் கொட்டைத்தோல் களிலும் உள்ள கொழுப்புச்சத்தில் போர்மிக் (Formic) அஸெடிக் (Acetic) பென்ஜாயிக் (Benzoic) அமிலங்கள் உள்ளன. (Chem. Abstr 1939) விதைகளில் ஆல்கஹால் செலாஸ்ட்ரைன் (Celastrine) 0.0015% மற்றும் வேறு ஒருவகை ஆல்கஹால் பானிகுலேடைன் (Paniculatine) உள்ளன (J. Amer. Pharm. Ass. 1946).

**192. வால்மிளகு**—Piper Cubeba

பயன் தரும் எண்ணெய், குயூபெபின் (Cubebin) (J. Soc. Chem. Ind. London. 1928) உள்ளன.

**193. வாழை**—Musa Sapientum

வாழைக்கிழங்கு, பட்டை, மலர், காய், இலைகளின் கனப்பொருளில் பொடாசியம் உள்ளது. பச்சையாக இருக்கும் போது இதில் டேனின் உள்ளது. பழுத்த பழத்தில் சர்க்கரை, விடமின் சி, சிறிதளவு விடமின் பி, உலோகசத்துக்கள் ஆகியவை உள்ளன. (பாவ.நி.உரை.)

**194. வில்வம்**—Aegle Marmelos

வில்வப் பழங்களில் மார்மலோசின் (Marmalosin) (J. Indian Chem. Soc. 1930) இம்பெராடெரின் (Imperatorin) என்பதைப் போன்ற மார்மலோஸின் (Ber. disch. Chem. Ges. 1937) இளம்மரப்பட்டையில் கௌமாரின் (Coumarin) 0.03%ஆல்கஹால் 0.003%, அம்பெல்லிபெரோன் (Umbelliferone). நன்கு முதிர்ந்த

மரப்பட்டையில் அம்பெல்லிபெரோன் மற்றும் கௌமாரின் 0.6%: பீஹாரில் நன்கு முதிர்ந்த மரப்பட்டையில் ஆல்கஹால் 0.3%, ஆல்கஹால் எகிலெனைன் (Alk. aegelenine), (J. Indian Chem. Soc. 1944) இலைகளில் பயன் தரும் எண்ணெய், அவ் வெண்ணெயில் a, b பெலான்ட்ரென் (a and b Phallandrene) C.J. Indian Chemical Soc. 1949) நன்றாக முற்றிய மரப்பட்டையில் ஒய்பிராக்ரின் (y Fragrine 0.3% அம் பெல்லிபெரேன் (Umbellife-rone) 0.6% மற்றும் மார்மஸின் (Marmesin) 0.6% உள்ளன (J. Amer. Chem. Soc. 1949).

**195. விளாமரம்**—Feronialimonia

விளாமரத்திலையில் பயன்தரும் எண்ணெய் 0.73% உள்ளது. (J. Indian Chem. Soc. 1949)

**196. விளாமிச்சை**—Vetiveria Zizanioides

விளாமிச்சை வேரில் பயன் தரும் எண்ணெய் (Chem. & Drugg. 1914)பயன்தரும் எண்ணெய் 1.1–1.7% (Bull Imp. inst. London 1930) வேரில் பயன் தரும் எண்ணெய் 0.403% (Amer. Perfum. 1939) வெட்டி வேரில் காற்றில் கலக்கும் எண்ணெய், நிறம் தரும் பொருள், அமிலம், சுண்ணாம்புச் சத்து, உலோகச்சத்து ஆகியவை உள்ளன. (பாவ.நி.உரை.)

**197. வெங்காயம்**—Allium Cepa

பயன் தரும் எண்ணெய், ஸல்பைடுகள் (Sulphidies) (Pharm. Ztg. Berl. 1903) இதன் இலைகளில் கொடகோல் (Cate-chol) புரோடோகாடசுயிக் ஆஸிட் (Protocatechuic Acid) (J. Biol. Chem. 1933) பயன் தரும் எண்ணெய் 0.05% (Perfums de Fr. 1937).

**198. வெற்றிலை**—Piper Betle

பயன் தருப் எண்ணெய், சவிகால் (Chavicol) என்ஜைப் ஸ் (Enzymes) (Ber. disch. Chem. Ges. 1889) வெற்றிலையில் நறுமணமுள்ள சாற்றில் ஆவியாகக்கூடிய எண்ணெய் (0.2–1.0%) மாவுப்பண்டப், சர்க்கரை, டெனின், டயாஸ்டெஸ் (Diastase 0.8-1.87%) உள்ளன. இதன் எண்ணெய் இலேசாக மஞ்சள் நிறமும் மணமும் சுவையும் தீக்ஷ்ணமும் எரிச்சலூட்டும் குணமும் கொண்டதாகுட. இந்த எண்ணெயில் சவிகால் (Chavicol) கடேனின் (Cadenene) சவிபெடால் (Chavibetol)

யூஜெனால், ஸெஸ்கிடர்பேன் (Sesquiterpene) ஜாவா, மணிலாவில் விளையும் வெற்றிலையின் எண்ணெயில் பெனால் (Phanols) அதிக அளவில் (55%) உள்ளது. வாடிய இலையிலிருப்பதை விட புதிய இலையின் எண்ணெயில் டாயாஸ்டேஸ் மற்றும் சர்க்கரை அளவில் அதிகமுள்ளன. (பாவ.நி.உரை.)

**199 வேம்பு**—Azadirachta Indica

கசப்புச் சுவையுள்ள எண்ணெய் (J. Soc. Chem. Ind. London 1923) மார்கோஸிக் ஆஸிட் (Margosic Acid) (J. Indian Chem. Soc. 1931) விதைகளின் எண்ணெயில் கசப்புச் சுவையுள்ள இருவகைப் பொருள்கள் இருக்கின்றன. (Indian J. Pharm. 1940) விதைகளில் எண்ணெய் 45% வரை உள்ளது. (Proc. Indian Acad. Sci. 1942) எண்ணெயிலுள்ள கசப்புப் பொருள்கள் - நிப்பின் (Nimbin) நிம்பினின் (Nimbinin) நிம்பிடின் (Nimbidin) ஆகியவை. நிம்பிடினில் கந்தகம் (Sulphur உள்ளது. (Curr Sci. 1942) வேப்பமலர்களில் ஒருவகை குளூகோஸைட், நிம்போஸ்டெரின் (Ninbosterin 0–005%) மற்றும் நெடியுடன் கூடிய எண்ணெய் 0.5% நிம்பொஸ்டெரால் (Nimbosterol) நிம்பெஸெடின் (Nimbecetin) மற்றும் கொழுப்புச் சத்துள்ள அமிலங்கள் (J. Sci. industr. Res. 1947) மலர்களில் ஒருவகைக் கசப்புப் பொருளும் வெறுப்பூட்டும் ஒருவகை கசப்புச் சுவையுள்ள எண்ணெயும் உள்ளன. (Curr. Sci. 1947) பழங்களில் கசப்புப் பொருள், பகாயனின் (Bakayanin) உள்ளன. (J. Sci. Indus. Res. 1948) மரப்பட்டையில் 0.04 நிம்பின் (Nimbin), 0.001 நிம்பினின் (Nimbinin), 0.4 நிம்பிடின், (Nimbidin) பயன் தரும் எண்ணெய் 0.02% உள்ளன. (J. Sci. Industr. Res. 1949) வேப்பெண்ணெயில் ஓலிக் ஆஸிட் (Oleic acid) 49–61–9% லிநோலிக் ஆஸிட் (Linoleic Acid) 2.12–15%) பாமிடிக் ஆஸிட் (Palmitic Acid) 12.62–15% ஸ்டியரிக் ஆஸிட் (Steraic Acid) 14.4-21.3% ஆரிசிடிக் ஆஸிட் (Archidic Acid 1.3–1.8%) மற்றும் லிக்னோஸெரிக் ஆஸிட் (Lignoceric Acid 0.74%) உள்ளன. இதன் எண்ணெயில் 0.427% கந்தகம் உள்ளது. இதன் எண்ணெயிலிருந்து மிக்க கசப்புள்ள நீரில் கரையக் கூடிய ஸோடியம் மார்கொஸேட் (Sodium Margosate B.C.P.W.) என்னும் பெயர்கொண்ட உப்பு தயார் செய்யப்படுகிறது. (பாவ.நி.உரை.)

**200. ஜாதிக்காய்**—Myristica Frgrans

பயன்தரும் எண்ணெய், சபோனின் (Saponin) (Pharm. Week bl. 1909) உலர்ந்த விதைகளில் 5 லிருந்து 15% வரை

வோலடைல் எண்ணெய் (Volatileoil) மற்றும் 25 முதல் 40% திடமான எண்ணெய் (U.S.D. 726) உலர்ந்த இலைகளில் பயனுள்ள எண்ணெய் 1.56% உள்ளது. அதில் 80% பினென் (Xpinene) 10% மைரிஸ்டிஸின் (Myristicin) உள்ளன. (Ingen Ned. Ind. No. 1-1941) ஜாதிக்காயில் 5—15% இலேசான மஞ்சள் நிறமுள்ள காற்றில் ஆவியாகக் கூடிய எண்ணெய் உள்ளது. இதில் 24—40% திடமான எண்ணெய் உள்ளது. இதிலிருந்து எண்ணெய்ப் பசையுள்ள சோப்புக்கட்டியைப் போன்ற பொருள் தயார் செய்யப்படுகிறது. இது நட்மேக்படர் (Nutmegbutter) எனப்படுகிறது. இதன் எண்ணெய்ப் பசையுள்ள அமிலத்தில் முக்கியமாக 61% மைரிஸ்டிக் அமிலம் (Myristic Acid) உள்ளது. மற்றும் ஜாதிக்காயில் மாவுப்பண்டம் பிசின், நறுமணமுள்ள பொருள் உள்ளன. காற்றில் ஆவியாகும் இதன் எண்ணெயில் சிறப்பாக யூஜெனால் (Eugenol) ஐஸோ யூஜெனால் (ISO-Eugenol) உள்ளன. (பாவ.நி.உரை.)

**201. ஜாதிப்பத்திரி**—Myristica Fragrans Houtt

இதில் ஜாதிக்காயில் உள்ளது போன்ற காற்றில் ஆவியாகும் எண்ணெய் 8—17% உள்ளது. மற்றும் திடமான எண்ணெய், மாவுப் பண்டம், பிசின், வசை, சர்க்கரை முதலியவை உள்ளன. (பாவ.நி.உரை.)

# மொழி பெயர்ப்புப் பணிக்கு உதவிய பேரறிஞர்கள்

**டாக்டர் எஸ். வெங்கடராமன்**
*ஆயுர்வேத சிரோமணி,*
*வைத்யவிசாரத, ஆயுர்வேத*
*ஆசார்யா*

**என். எஸ். தியாகராஜசர்மா,**
*வித்வான், சிரோமணி,* **P.O.L.**

*வித்வான்*
*நடாதூர்* **விஜயராகவாசாரியார்,**
*(பன்மொழிப்புலவர், பரம்பரை*
*முறையில் ஆயுர் வேதம் கற்றவர்)*

*பழவேரி சக்கரவர்த்*
**ஸ்ரீநிவாசன்**
*வித்வான், சிரோமணி*

*பதிப்பிற்கு உதவியவர்கள்*

**என். ஆர். விஜயராகவன்**
*வித்வான்*

**பி. ஆர். பத்மநாபன், B.A.,**
*உதவி ஆசிரியர்*

*மதிப்பீடு செய்த வல்லுநர்கள்*

*டாக்டர்* **கே. எஸ். விசுவநாத சர்மா**
*ஓய்வு பெற்ற முதல்வர், வேங்கடரமணா ஆயுர்வேதக் கல்லூரி,*
*மயிலாப்பூர், சென்னை - 600 004*

*டாக்டர்* **ஆர். சௌரிராஜன்,**
*ஓய்வு பெற்ற ஆயுர்வேதத் துறைத் தலைவர்,*
*அண்ணா மருத்துவமனை, சென்னை - 600 106*

# முக்கிய நோய்கள்

# சில மூலிகை மருந்துகள்

# ந்நூலில் வரும் கிருதம், லேகியம், சூரணம், இரசாயனம், தைலம், மாத்திரை, க்ஷீரம் முதலியன

## கிருதம் (நெய் மருந்து)

## லேகியம்



## சூரணம்

## இரசாயனம்



## தைலம்

## வடகம் (மாத்திரை, குளிகை)



## கஷாயம்

பக்கம்



## க்ஷீரம் (பால் முறை)



## ஸ்வரஸம்



## க்ஷாரம் (கார மருந்து)



## அஞ்சனம்



## அரிஷ்டம்

## நசியம் (மூக்கிலிடும் மருந்து)



## லேபம் (மேல்பூச்சு மருந்து)

## புகை பிடித்தல், புகைபோடுதல்

# 1. பத்தியமும்-அபத்தியமும்

## (நன்மைபயக்கக் கூடியவை-தீமைவிளைவிப்பவை)

மருத்துவன் நோய்களுக்குத் தோற்றம் கண்டு, நோயின் நிலையை அறிந்து, தக்க மருந்தைத் தரும் பொழுது, நோயாளி நோயைத் தணிக்கும் உணவுவகைகளையுண்பதும், தக்க செயல்களைப் புரிவதும் 'பத்தியம்' எனப்படும். இதற்கு மாறாக நோயை வளர்க்கக்கூடிய தன்மை கொண்ட பொருட்களையுண்பதும், தகாத செயல்களைப் புரிவதும், 'அபத்தியம்' எனப்படும். மருந்து வலிமை கொண்டதாயினும் பத்தியமாக இல்லாவிடில் அது பயனற்றதாகிவிடும். எனவே மருத்துவர், பத்திய முறையை நோயாளி சரிவர கடைப்பிடிக்குமாறு செய்வது அவசியமாகும். ஆகவே இங்கு அந்தந்த நோய்களுக்குரிய பத்திய முறைகளும், அபத்தியவகைகளும் விளக்கப்படுகின்றன.

### 1. அக்கி

### (அ) பத்தியம். (நன்மைபயக்கக்கூடியவை)

பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல், பற்று போடுதல், பட்டினி கிடத்தல் இரத்தம் வெளியேறச் செய்தல், பழைய யவதானியம், கோதுமை, தினை அறுபதாங்குறுவை, பயறு சிறுகடலை, கடலை, துவரை காட்டுப்பகுதிகளில் வாழும் விலங்கினங்களின் இறைச்சி, வெண்ணெய், நெய், திராட்சைப் பழம், பாகற்காய் பிரம்பன் துளிர் பேய்ப்புடல் நெல்லிக்காய், கருங்காலி சிறுநாகப்பூ குருவேர் கோரைக்கிழங்கு கசப்புச் சுவையுள்ள பொருள்கள் என்பன அக்கிநோயாளர்க்குரிய பத்தியமுறைகளாகும்.

### (ஆ) அபத்தியம் (தீமைபயக்கக்கூடியவை)

உடற்பயிற்சி செய்தல், பகல்தூக்கம், கலவி, காற்றில் வெகு நேரம் இருத்தல், சினம், வாந்தியைத்தடுத்தல், உடல் வியர்க்கச் செய்தல், எரிச்சலைத் தோற்றுவிக்கும் பொருள்கள், உவர்ப்பு புளிப்பு கார்ப்புச் சுவைகளுள்ள பொருள்கள், கீரை வகைகள், ஒன்றற்கொன்று மாறான தன்மை கொண்டவற்றைக் கலந்து பயன்படுத்துதல், அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள், வெங்காயம், கொள்ளு உளுந்து எள், கள் வெயில் என்பன அக்கி நோய் கொண்டவர்களுக்குக் கூடாதவை.

## 2. அதிஸார நோய்

### (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல், பழைய சம்பா அரிசி அல்லது அறுபது நாள்குறுவை அரிசியைப்பயன்படுத்துவது, அரிசியைவிட நான்கு மடங்கு நீர் மிகுந்துள்ள விலேபி எனப்படும் கஞ்சி, 'லாஜமண்டம்' எனப்படும் பொரிக்குப் பதிநான்கு மடங்கு நீர் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சி, சிறுகடலை துவரை இவற்றின் கஷாயம், புலால் வகையில் முயல் மான் என்பவற்றின் புலால், சிருங்கி திண்டிசம் மதுராளிகா எனப்படும் மீன் வகைகள், பசு நெய் பசும்பால், எண்ணெய், தயிர், மோர், வெண்ணெய் ஆட்டு நெய் ஆட்டுப்பால், தயிர், வெண்ணெய் வகைகள், வாழைப் பழம், வாழைப்பூ நாவற்பழம், புளிப்புவிளாம்பழம், வில்வப் பழம், பனம்பழம் புளிப்புமாதுளை, இனிப்புமாதுளை, தாமரைக் கிழங்கு புடலங்காய் புளியஇலை, இஞ்சி, ஜாதிக்காய், சீரகம் வெப்பாலைவிதை, கொத்துமல்லிவிதை, பெரியவேம்பு, துவர்ப்புச் சுவைகொண்ட பொருள்கள், அசீரணத்தைப் போக்கிச் சடராக்னியை வளர்க்கக்கூடிய உணவு, குடிநீர் முதலியன பத்தியங்களாகும். பத்தில் ஒரு பங்காக அல்லது பதினாறில் ஒருபங்காக மிகுந்திருக்கும் படி நீரைக்காய்ச்சிப் பருகுவதும் பத்தியமாகும் நல்லதூக்கமும் இந்நோயாளிக்கு நலம் தரும்.

### (ஆ) அபத்தியம்

புதிய அரிசிச்சோறு புளியஞ்சோறு பழையசோறு கோதுமையாலும், உளுந்தாலும் செய்யப்பட்ட தின்பண்டங்கள் மணித் தக்காளி மாம்பழம் திராட்சை புளியம்பழம் முருங்கைக்காய் பூசுணை சுரைக்காய் கத்தரிக்காய் கருணைக்கிழங்கு, உருளைக் கிழங்கு பூண்டு வெங்காயம் வெற்றிலை கரும்பு வெல்லம் கள் தயிர்த்தெளிவு தேங்காய் புளிப்பு உவர்ப்பு கார்ப்புச் சுவைகளுள்ள பொருள்கள், பால், பால் சேர்ந்த உணவுப்பண்டம், எண்ணெய்ப் பசையுள்ள உணவுப்பொருள்கள் தூங்காமல் விழித்திருத்தல் மலம் சிறுநீர் இவற்றைத் தடுத்தல் என்பன கூடாதவையாகும். (அதாவது தீமை பயக்கக்கூடியவையாகும்.)

## 3. அசீரணம்

### (அ) பத்தியம்

கபத்தினால் தோன்றிய அசீரணமாயின் முதலில் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். பித்தத்தினால் தோன்றியதாயின், மென்மையான மருந்துகளால் பேதியாகச் செய்து, குடலைத்

தூய்மைப்படுத்த வேண்டும். வாதத்தினால் தோன்றியதாயின், ஆவி பிடித்தலால் வியர்க்கச் செய்தல் நல்லது. மற்றும், பல வகையான உடற்பயிற்சிகள் செய்தல் செரிமானத்தை உண்டாக்கக் கூடிய பொருள்களை உண்பதும் நலம். மிக்கபழமையான பயறு சிவப்புச்சம்பாஅரிசி விலேபி என்னும் சோற்றுப்பருக்கைகள் மிகுந்துள்ள கஞ்சி, பொரியைக் கஞ்சியாக்கிப் பிசைந்து வடி கட்டிய லாஜமண்டம் என்னும் கஞ்சி, பயற்றின்தெளிவு மான் மயில் முயல் லாவகப்புள் இவற்றின் இறைச்சி சக்ரவர்த்திக் கீரை இளம் முள்ளங்கி வெங்காயம் பூசுணை, வாழை, முருங்கை, புடலை கத்தரி வெள்ளரி பாகல் இவற்றின் காய்கள், வெட்டி வேர்நீர், மணித்தக்காளி இலை, புளிச்சைக்கீரை, நெல்லி ஆரஞ்சுப்பழம் மாதுளம் பழம் குறிஞ்சிப்பழம் எலுமிச்சை, யவ தானியம் பர்ப்பாடகம் தேன் நெய் வெண்ணெய் மோர் ஸௌவீர கம் எனும் கஞ்சி, அரிசி கழுவியநீர், புளித்தகஞ்சி கடுகெண்ணெய் பெருங்காயம் உப்பு சுக்கு ஓமம் மிளகு வெந்தயம் கொத்துமல்லி விதை சீரகம் தயிர் வெற்றிலை வெந்நீர் கார்ப்பும் கசப்புமான சுவையுள்ள பொருள்கள் ஆகியவை பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

பேதியாக மருந்து உட்கொள்வது, சிறுநீர் மலம் இவற்றின் வேகங்களைத் தடுப்பது, அபானவாயுவைத் தடுப்பது ஆளவுக்கு விஞ்சிய உணவு வேளைதவறி உண்பது சீரணமாகாதபோது எதையேனும் உண்பது இரவில் கண்விழித்தல் ஏற்றத்தாழ்வாக (குறைந்த அளவிலோ மிதமிஞ்சியோ இருக்கும் உணவு)உண்பது இரத்தம் வெளியேறும்படி செய்துகொள்வது துவரை பட்டாணி முதலியவற்றை உண்பது மீன் புலால் உண்பது மிகுதி யாக நீரைப்பருகுவது மலத்தைக் கட்டும் பொருள்களை உண்பது நாவற்பழம் தாமரை முதலியவற்றின் கிழங்குகள் பாலில் சம அளவு தயிரோ மோரோ கலந்து பருகுவது கன்றை ஈன்ற ஏழு நாட்களுக்குள்ளான பசுவின்பால், கட்டியாகிய பால் (கோவா) பானகம் பனைநுங்கு எண்ணெய்க்குளியல் வெயிலில் சூடேறிய நீரைப்பருகுவது முதலியன விலக்கத்தக்கவை.

## 4. அதி மூத்திரம் (சிறுநீர் வெகுவாகக்கழிதல்)

### (அ) பத்தியம்

பழைய அரிசி பச்சைப்பயறு பழையதுவரை சிறுகடலை வற்றின் பருப்புகளால் தயார் செய்த தெளிவு கோழி மான் ஆடு முதலியவற்றின் இறைச்சி, புடலை பீர்க்கு அத்தி வாழை

வற்றின் காய்கள், முருங்கைஇலை எலிச்செவி இலை வெந்தயக் கீரை புளிச்சைக்கீரை ஆவாரமலர் வாழைப்பூ இவற்றின் பொரியல், வாழை எலுமிச்சை திராட்சை விளாம்பழம் நாவல் இவற்றின் பழங்கள், குதிரைசாவரி உடற்பயிற்சி செய்தல், கோதுமை அல்லது பார்லி மாவினாலான ரொட்டி, நன்குசூடேறிகுளிர்ந்த நீரில் குளித்தல் முதலியன பத்தியமானவை.

## (ஆ) அபத்தியம்

அசீரணத்தையுண்டாக்கும் உணவுப் பொருள்கள், தாமதமாகச் செரிமானமாகக் கூடிய உணவுப் பொருள்கள், கபத்தை வளர்க்கும் பொருள்கள், நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்கினங்களின் இறைச்சிகள், சாராயம், வெல்லம், சர்க்கரை, தயிர், பால், நெய், எண்ணெய், புளிப்புச் சுவையுள்ள பொருள்கள், கடுகு. பூசுணை எள், வெள்ளைப்பூண்டு, கீரை வகைகள், மாவினால் தயார்செய்யப்பட்ட உணவுப்பண்டங்கள், உவர்ப்பு காரம் மிகுந்துள்ளவை, கிழங்கு வகைகள், பலாப்பழம் முதலிய அசீரணத்தைத் தோற்றுவிக்கக்கூடிய பழங்கள், மிகக் குடித்தல், மிக்க நித்திரை, இரவில் கண்விழித்தல், கலவி. மிகுதியாக உடற்பயிற்சி செய்தல் நெடுந்தூரம் வழிநடத்தல் பசியைஅடக்குதல், வெயிலில் அலைதல், சோம்பி இருத்தல் என்பன தீமை பயக்கக் கூடியவை.

## 5. அண்டவிருத்தி (விதைவீக்கம்)

## (அ) பத்தியம்

பழைய அரிசி, ஆட்டிறைச்சி, நீர் இல்லாத காடு முதலியவற்றில் வாழும் விலங்குகள் இவற்றின் இறைச்சி பீர்க்கு புடலை சிறுபாகல் இவற்றின் காய்கள், கீரைவகைகள், சாரணை நெருஞ்சில் முருங்கையிலை நெல்லியிலை இவற்றின் பொரியல், பயறு துவரை இவற்றின் தெளிவு, பூண்டு, வெங்காயம், பசுமோர், பசுநெய், தேன், வெந்நீர், வெந்நீரில் குளித்தல் கலவி, தாம்பூலம் இவை பத்தியமானவை. ஆமணக்கு, ஏழிலம்பாலை, புன்னை கழற்சி இவற்றின் இலை, ஆட்டின் சிறுநீர் இவை குடல் வாதத்தையும் விதை வீக்கத்தையும் நீக்கும்.

## (ஆ) அபத்தியம்

புளிப்புச்சுவையுள்ள பொருட்கள், புதுஅரிசி பழையசோறு புளிச்சைக்கீரை சுரைக்காய், வெள்ளரி, மீன், நீரில்வாழும் பறவைகளின் றைச்சி, உளுந்து அசீரணத்தைத் தோற்றுவிக்கும் உணவுப்

பொருள்கள், மலம் சிறுநீர் இவற்றைத் தடுத்தல், அளவுக்கு மீறி உண்பது, பட்டினி கிடத்தல் மிகுதியான கலவி நெடுந் தூரம் நடத்தல், குதிரை முதலியவற்றின் மீது அமர்ந்துசவாரி செய்தல், சோர்வு தரும் வேலைகளைச் செய்தல் முதலியன கூடாதவை.

## 6, அருசி (சுவையின்மை)

### (அ) பத்தியம்

நோயாளியின் வலிமையுணர்ந்து, தக்கபடி வஸ்தி முறையைப் பயன்படுத்தல், பேதியாகச்செய்தல், புகை பிடிக்கச்செய்தல், சுவையின்மையை நீக்கும் மூலிகைகளின் கஷாயம் பருகச்செய்தல் அல்லது அத்தகைய கஷாயத்தால் வாய்கொப்பளித்தல், கசப்புச் சுவையுள்ள வேம்பு முதலியவற்றால் பல் துலக்கச்செய்தல், உடலுக்கு இதமான உணவு நீர் வகைகளைப் பயன்படுத்தச் செய்தல், பயறு துவரை கோதுமை சம்பா அரிசி-பன்றிஆடுமுயல் மீன் சிறுமீன் முதலியவற்றின் இறைச்சி கத்தரி முருங்கை புடலை வாழை முதலியவற்றின் காய்கள், முள்ளங்கி கருணைக்கிழங்கு வெள்ளைப்பூண்டு விளாம்பழம் இலந்தம்பழம் இனிப்புமாம்பழம் திராட்சை பனம்பழம் வாழைப்பழம் நெய் பால் தயிர் கலந்த பொரி, மோர் இஞ்சி சர்க்கரை பச்சைக்கர்ப்பூரம், ஓமம் மிளகு கடுக்காய் பெருங்காயம் கள் இனிப்பு புளிப்பு கசப்புச் சுவை களுள்ள பொருள்கள், குளியல் முதலியன சுவையின்மை கொண்ட வனுக்கு நன்மை தருவன.

### (ஆ) அபத்தியம்

நாவறட்சி பசி ஏப்பம் இவற்றை அடக்குதல், மனத்திற்கு விருப்பமில்லாத உணவு நீர்வகைகளைக் கொள்ளுதல், உடலி லிருந்து இரத்தம் வெளியேறச்செய்தல், சினம் அச்சம் கவலை வருத்தம் பொறாமை முதலியவை கொண்டிருத்தல், கெட்ட நாற்றமுடைய பொருள்களை முகர்தல் முதலியன தீமை பயக்கக் கூடியவை.

## 7. அச்மரி (மூத்திரப்பையில் கல்)

### (அ) பத்தியம்

வஸ்தி முறை, பேதியாகச்செய்தல், வாந்தி எடுக்கச் செய் தல், பட்டினி கிடக்கச்செய்தல் வாதத்தைப் போக்கும் மூலிகை களைக் கஷாயமாகக் காய்ச்சித் தொட்டியிலிட்டு, அதில் நோயாளியை அமிழ்ந்திருக்கச்செய்து, உடல் வியர்க்கச்செய்தல்,

நீரை மிகுதியாகப் பருகச்செய்தல், பழைய அரிசி யவதானியம் கொள்ளு பாலைவனப்பகுதியில் அல்லது மணற்பாங்கான இடங்களில் வாழும் விலங்குகளின் இறைச்சி, கள், நெருஞ்சில், பழைய பூசுணைக்காய் இஞ்சி, பாஷாணபேதி, யவக்ஷாரம், சீந்தில் கொடியிலை பொரியல் அல்லது கஷாயம் என்பன நன்மை தருவனவாகும்.

## (ஆ) அபத்தியம்

மலம் சிறுநீர் இவற்றின் வேகத்தைத் தடுத்தல், புளிப்புச் சுவையுள்ள பொருள்களை மிகுதியாக உண்பது மலச்சிக்கலைத் தோற்றுவிக்கும் அல்லது வறட்சியைத் தோற்றுவிக்கும் பொருள்களையும், அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்களையும், ஒன்றுக்கொன்று மாறான தன்மையுள்ளவற்றையும் கலந்து உண்ணுதல், முதலியன இந்நோய் கொண்டவனுக்குத் தீங்கு விளைவிப்பனவாகும்.

## 8. ஆகந்துகசுரம் (திடீரெனப் புறக்காரணங்களால் தோன்றும் காய்ச்சல்)

## (அ) பத்தியம்

பட்டினிகிடத்தல், நெய்யைப்பயன்படுத்தல், நெய்யைப் பூசிக்கொண்டு குளித்தல், நரம்பைக்கீறி இரத்தத்தை வெளியேற்றுதல், கள் இறைச்சிச் சாற்றுடன் உணவு கொள்ளுதல் இவை பத்தியமானவை.

## (ஆ) அபத்தியம்

காய்ச்சலுக்கு (எண் 23ல்) கூறியவையே இதற்கும் பொருந்தும்.

## 9. ஆமவாத நோய் (சீரணப்பையில் உணவு சீரணமாகி அப்படியே ரசமாக இருக்கும் நிலை, இதன் விளைவாக ஏற்படும் நோய்)

## (அ) பத்தியம்

முதலில் வறட்சித்தன்மை கொண்ட பொருள்களால், உடல் வியர்க்கச்செய்தல் பட்டினிகிடத்தல் எண்ணெய் பருகச்செய்தல், வஸ்தி முறையைப்பயன்படுத்தல், பற்றுப் போடுதல், பேதியாகச் செய்தல் வத்தியை ஆஸனவாயில் செலுத்துதல் என்பனவற்றை பயன்படுத்த வேண்டும்.

ஓராண்டுக்கு மேல் பழையதான அரிசி, கொள்ளு பழமையான கள், காட்டு விலங்குகளின் இறைச்சி, வாதத்தையும் கபத்தையும் போக்கும் பொருள்கள், பொன்னாங்கண்ணி நெருஞ்சில் தேவதாரு சாரணை இவற்றின் இலைகளின் பொரியல், பூண்டு பாகல் கத்தரி புடலை இவற்றின் காய்கள், மோர் ஆமணக்கு வெந்நீர் இஞ்சி பசுவின் சிறுநீர் முந்திரிப்பருப்பு கார்ப்பு கசப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்கள், சடராக்கினியை வளர்க்கக் கூடிய பொருள்கள் பத்தியமானவை.

## (ஆ) அபத்தியம்

தயிர் மீன் வெல்லம் பால் உளுந்தால் செய்யப்பட்ட உணவுப் பண்டங்கள், புளிச்சைக் கீரை அசீரணத்தைத் தோற்றுவிக்கக்கூடிய பொருள்கள், கிழக்குக்காற்று ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து உண்ணுதல், மலம் சிறுநீர் இவற்றின் வேகங்களைத் தடுத்தல், இரவில்கண் விழித்தல், ஏற்றத்தாழ்வாக உணவு கொள்ளுதல் நெகிழ்ச்சியை உண்டாக்கும் பொருள்கள் தீமை பயக்கக்கூடியவை.

# 10. இதயநோய்

## (அ) பத்தியம்

பழைய அரிசி, சிவப்பு அரிசி, ஆடு காட்டுப் பறவைகள் காட்டுவிலங்குகள் இவற்றின் இறைச்சி, துவரை பயறு கொள்ளு இவற்றின் கஞ்சித்தெளிவு, புடலங்காய் இளம் வாழைக்காய், பழைய பூசுணைக்காய் மாம்பழம் மாதுளம்பழம் ஆட்டுப்பாலின் மோர், பழைய வெல்லம் வெள்ளைப்பூண்டு இஞ்சி நல்லதேன் பசுநெய் என்பன பத்தியமானவை.

## (ஆ) அபத்தியம்

புதுஅரிசி ஆட்டுப்பால் புளி தயிர் கஷாயம் நாவறட்சி வாந்தி மலம் சிறுநீர் இருமல் ஏப்பம் இவற்றைத் தடுத்தல் குச்சிகளால் பல் துலக்குதல் புகை பிடித்தல் கள் வெற்றிலை இவை கூடாதவை.

# 11. இழுப்பு

## (அ) பத்தியம்

பேதியாகச்செய்தல் உடல் வியர்க்கச் செய்தல் புகை பிடிக்கச்செய்தல் வாந்தியாகச் செய்தல் பகலில் உறங்குதல் பழைய அறுபதாங்குறுவைஅரிசி, சிவப்புச் சம்பாஅரிசி,

கொள்ளு கோதுமை யவதானியம், முயல் மயில் தித்திரிப்புள் கோழி கிளி இவற்றினுடையவும், காடுகளில் வாழும் விலங்குகள் பறவைகள் முதலியவைகளினுடையவும் இறைச்சி வகைகள், பழைய நெய் ஆட்டுப்பால், ஆட்டு நெய் கள் மது புடலங்காய் கத்தரிக்காய் வெள்ளைப்பூண்டு கோவை எலுமிச்சை சிறுகீரை சக்கரவர்த்திக்கீரை திராட்சை சிறுஏலஅரிசி புஷ்கரமூலம் வெந்நீர் திரிகடுகம் பசுவின் சிறுநீர் கபவாதங்களைப் போக்கும் உணவு குடிநீர் வகைகள் பத்தியமாகும்.

### (ஆ) அபத்தியம்

சிறுநீர் ஏப்பம் வாந்தி நாவறட்சி காமம் கலவியில் விருப்பம் இவற்றை அடக்குதல், மூக்கில் மருந்திடுதல், வஸ்தி முறை உடலுக்குச் சோர்வு தோற்றுவிக்கும் வேலைகளைச் செய்தல், வழி நடத்தல் பளுசுமத்தல், மூக்குத்துளை முதலியவற்றில் தூசி புகுதல் வெயிலில் இருத்தல், மலத்தைக்கட்டும் பொருள்களை உண்ணுதல், நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் விலங்குகளின் இறைச்சி, எண்ணெயில் பக்குவம் செய்யப்பட்ட தின்பண்டங்கள் காராமணி கபத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள், உளுந்து இரத்தத்தைப்பெருகச் செய்தல் கிழக்கிலிருந்து வரும் காற்றில் இருத்தல், மிகுதியாக நீர் பருகுதல், செம்மறியாட்டு நெய், செம்மறியாட்டுப்பால், மாவால் செய்யப்பட்ட தின்பண்டங்கள், மீன் கிழங்கு வகைகள், கடுகு வறட்சியும் குளுமையும் தரும் பொருள்கள், அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள் இவை யனைத்தும் இழுப்புநோய் கொண்டவர்களுக்குக் கூடாதவை.

## 12. இருமல்

### (அ) பத்தியம்

முதலில் உடல் வியர்க்கச் செய்தல் பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச்செய்தல் புகைபிடிக்கச்செய்தல் ஆகியவை நன்மை தரும். பழைய சம்பாஅரிசி கோதுமை சாமை யவதானியம் பூனைக்காலி விதைகள், உளுந்து பயறு கொள்ளு கற்கண்டு வெல்லம் இவற்றின் கஞ்சித் தெளிவு, கிராமங்களில் வளர்க்கப் படும் ஆடு முதலியவற்றின் இறைச்சி, நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்குகள் பறவைகள் இவற்றின் இறைச்சி பழைய நெய் பசும்பால் ஆட்டின்பால் மோர் ஏலஅரிசி கடுக்காய் திரி கடுகம். வெந்நீர் தேன் பொரி திராட்சை கோவை குறிஞ்சிப் பழங்கள் முந்திரி, முந்திரிப்பழம், பீர்க்கங்காய் கத்தரிக்காய் கருநிறமுள்ள சுரைக்காய் புடலங்காய் இவற்றின் பொரியல்,

சக்கரவர்த்திக்கீரை மணித்தக்காளிக்கீரை புளிய இலை தொட்டால்சுருங்கிஇலை சிறுகீரை, இளம் முள்ளங்கி வெங்காயம் பூண்டு ஆடாதொடை பசுவின் சிறுநீர் எளிதில் செரிமானமாகக் கூடிய உணவுப் பொருள்கள், பகலில் தூங்குதல் என்பன நன்மை தருவன.

### (ஆ) அபத்தியம்

வஸ்திமுறை மூக்கில் மருந்திடுதல் இரத்தத்தை வெளியேற்றுதல் உடலுக்குச் சோர்வுதரும் வேலைகளைச் செய்தல் வெயிலிலும் கெட்ட நாற்றமுள்ள இடத்திலும் சுற்றுதல் தூசி நிறைந்த பகுதியில் நடமாடுதல் வழிநடத்தல் மலத்தைக்கட்டும் பொருள்களையும், எரிச்சலைத் தோற்றுவிக்கும் பொருள்களையும் பயன்படுத்துதல், மலம் சிறுநீர் ஏப்பம் இருமல் வாந்தி முதலியவற்றை அடக்குதல் மீன் கருணைக்கிழங்கு கடுகு புளிச்சைக்கீரை பயறு காராமணி உளுந்து முதலியபருப்பு வகைகள், பசும்பால், எருமைப்பால் தயிர் எண்ணெய்ப்பொருள்கள் குளுமையையும் கபத்தையும் தோற்றுவிக்கும் பண்டங்கள், தர்பூசுணைப்பழம், பாயசம் கலவி குளிர்ந்தநீரில் குளித்தல், எண்ணெய் தேய்த்துக் கொண்டு குளித்தல் பனியில் தூங்குதல் அல்லது திரிதல், அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள் என்னும் இவை இருமல் நோய் கொண்டவர்களுக்குக் கூடாதவை.

## 13. உதாவர்த்தம் (மேல் நோக்கிச் செல்லும் வாயுவால் தோன்றும் துன்பங்கள்)

### (அ) பத்தியம்

எண்ணெய் மருந்துகளைப் பருகச் செய்தல், உடல் வியர்க்கச் செய்தல், வஸ்தி பலவர்த்தி எண்ணெய்க் குளியல் என்பன இந்நோய் கொண்டவர்களுக்கு முதலில் கையாளத் தக்கவை. யவதானியம், மலக்கட்டையும் சிறுநீர்த் தடுப்பையும் போக்கும் பொருள்கள், கிராமங்களிலும் நீர்ப்பாங்கான இடங்களிலும் வாழும் விலங்குகளின் இறைச்சி, ஆமணக்கு எண்ணெய் இளம் முள்ளங்கி சரக்கொன்றைப்பட்டை வெண் சிவதை கள்ளியிலை இஞ்சி எள் திராட்சை குறிஞ்சிப்பழம் கடுக்காய்ப்பிஞ்சு இலவங்கம் பெருங்காயம் யவக்ஷாரம் கள் பசுவின் சிறுநீர் உப்பு வகைகள் என்பன பத்தியங்களாகும்.

### (ஆ) அபத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல் மலம் சிறுநீர் இவற்றின் வேகங்களைத் தடுத்தல், உளுந்து பயறு முதலிய பருப்பு

வகைகள், தாமரைக்கிழங்கு உருளைக்கிழங்கு வெள்ளரிக் காய் நாவற்பழம் மூங்கில்குருத்து மாவினால் செய்யப்பட்ட தின்பண்டங்கள், மலத்தையும் சிறுநீரையும் கட்டும் பொருகள், ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்டவற்றைக் கலந்து பயன்படுத்துதல், துவர்ப்புச் சுவை கொண்ட பொருள்கள் அசீ ரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள் முதலியவை மேல் நோக்கிச்செல்லும் வாத நோய்க்குத் தீங்கு பயப்பனவாகும்.

(ஏலஅரிசி தருப்பைப்புல் காப்பி கறிவேப்பிலை இளநீர் தாய்ப்பால் தாளிசபத்திரி சிறுநாகப்பூ கீழாநெல்லி புகையிலை கலியாணப்பூசணை ஆட்டுநெய் கண்டங்கத்தரி முதலியவை உதா வர்த்தம் என்னும் நோயைப் போக்கும் தன்மை கொண்டவை.)

## 14. உபதம்சம் (உடலுறுப்பைத் தின்றுவிடும் 'ஸிப்லிஸ்', முதலிய நோய்கள்

### (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் ஆண்குறியில் நடுவிலும் நரம்புகளிலும் கீறி இரத்தத்தை வெளியேற்றுதல், அட்டைப்பூச்சியைக் கடிக்கச் செய்து, இரத்தத்தை வெளியேற்றுதல் கஷாயம் முதலியவற்றால் நனைத் தல் பற்றுப்போடுதல் சம்பா அரிசி யவதானியம் காட்டு விலங்கு களின் இறைச்சி பீர்க்கங்காய் சிறுபாகல் கல்யாணப்பூசணி பாகல் புடலை முருங்கை முள்ளங்கி வாழைக்காய் வாழைப்பூ, மூங்கில் குருத்து, பசும்பால், பசுமோர் கசப்பு துவர்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்கள், தேன் நெய் எண்ணெய் கிணற்றுநீர் ஆட்டுப்பால் முதலியவை பத்தியமானவை. நோயின் வலிமைக் கேற்ப இவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

### (ஆ) அபத்தியம்

அசீரணத்தைத் தோற்றுவிக்கும் உணவு நீர் வகைகள் புளிப்புச்சுவையுள்ளவை புளித்த மோர் வெல்லம் மலம் சிறுநீர் இவற்றைத் தடுத்தல் கலவி பகலில் தூக்கம் உடற்பயிற்சி உட லுக்குச் சோர்வு தரும் வேலை என்பனவற்றை நீக்க வேண்டும்.

## 15. உன்மாதம் (பைத்தியம்)

### (அ) பத்தியம்

. பழையநெல்லரிசி சிவப்புஅரிசி பயத்தம் பருப்பு கஞ்சி கோதுமை அப்பொழுது கறந்த (இயற்கை

சூடுள்ள) பசும்பால் நூறு முறை திருப்பித் திருப்பி காய்ச்சப் பட்ட நெய், அப்பொழுது காய்ச்சிய நெய் மிக்க பழைய நெய் ஆமை இறைச்சி, துவரம்பருப்பு நெல்லி புடலை முற்றிய பூசணைக்காய் சிறுகீரை சக்கரவர்த்திக்கீரை விளாம்பழம் மாதுளம்பழம் திராட்சைப்பழம் பலாப்பழம் பித்தத்தைப் போக்குவனவும் உடலுக்கு லேசான தன்மையைத்தருவனவும் ஆனபொருள்கள் குளிர்ந்த நீர் தலை மேல் தாரையாக விழும் படிகுளித்தல் பசு நெய்யுடன் காலைஉணவு உண்ட உடனே, தூங்குதல், முதலியன பத்தியமாகும். (நன்மை பயப்பன வாகும்.)

### (ஆ) அபத்தியம்

ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட உணவு நீர்வகைகளைப் பயன்படுத்துதல், சூட்டையும் பித்தத்தையும் கிளப்பிவிடும் தன்மை கொண்ட பொருள்கள், கசப்பு கார்ப்புச்சுவையுள்ள பொருள்கள் கள் முதலிய போதைப் பொருள்கள், பசி தூக்கம் தும்மல் மலம் சிறுநீர் இவற்றைத் தடுத்தல், அதிகமாகப் பேசுதல் முதலியன தீங்கானவை.

## 16. உப்புசம்

### (அ) பத்தியம்

பழைய அரிசி நன்கு சுடப்பட்ட கோதுமை ரொட்டி புடலை சிறுகீரை முள்ளி மணித்தக்காளி அரைக்கீரை துவரம்பருப்பு, அதன் சாறு, பசு ஆடு இவற்றின் இறைச்சி, பால் வெந்நீர் தேன் புறாவின் இறைச்சி என்பன பத்தியமாகும்.

### (ஆ) அபத்தியம்

புது அரிசி குளிர்ந்த உணவுப்பண்டங்கள் மோர் தயிர் புளிப்புச்சுவையுள்ள காய் வகைகள் பயறு உளுந்து காராமணி மொச்சை கொத்தவரைக்காய் அவரைக்காய் கத்தரிக்காய் மீன் எள் மாவால் செய்யப்பட்ட உணவுப்பண்டங் கள் கீரைவகைகள் கிழங்குகள் எலுமிச்சை கடாரங்காய் மாங் காய் கத்தரிக்காய் பாகற்காய் ஆரஞ்சுப்பழம் கள் ஜலதோஷத்தை தோற்றுவிக்கும் பொருள்கள் கலவி நீரை மிகுதியாகக் குடித்தல் எண்ணெய்க் குளியல் முதலியன தீமை பயக்கக்கூடியவை.

## 17. கண்நோய்

### (அ) பத்தியம்

கண்களைத் திறக்கச்செய்து இரண்டு அங்குல உயரத்திலிருந்து மருந்தைக் கண்களில் சொட்டாக விடும்

அச்யோதன சிகிச்சை முறைகள், பட்டினி கிடக்கச் செய்தல், உடல் வியர்க்கச் செய்தல், மருந்தால் மையிடுதல், பேதியாகச் செய்தல், கண்களில் மருந்துகள் முதலியவற்றை வைத்துத் தூய்மைபடுத்தும் பிரதிஸாரண சிகிச்சை முறைகள், கண்களில் தக்க மருந்துகளை நிரப்புதல், மூக்கில் மருந்திடும் முறை அறுவை சிகிச்சை மருந்து விழுதுகளைப் பற்றாகப்போடுதல், மருந்துநீர் வகைகளால் கண்களை அடிக்கடி நனைத்துக் கொண்டிருத்தல் மனத்திற்கு கவலையில்லாமல் செய்தல், கால்களில் பிடித்து விடுதல் போன்ற தக்கபணிவிடை செய்தல் என்பன கண்களுக்கு நன்மை பயப்பவையாகும்.

மற்றும் பழைய அரிசி கோதுமை யவதானியம் சிவப்பு அரிசி பச்சைப்பயறு காட்டுக்கொள்ளு இவற்றின் கஞ்சித்தெளிவு, மயில் காட்டுக் கோழி ஆமை ஊர்க்குருவி சாதகப்புள் இவற்றின் இறைச்சி, கரிசலாங்கண்ணி பொன்னாங்கண்ணி சாரடை மணித் தக்காளி கற்றாழை இவற்றின் இலைக்கறி, வாழை புடல் கத்தரி வெள்ளரி இவற்றின் காய்கள்; எளிதில் செரிமானமாகக்கூடிய கஞ்சி வகைகள், கசப்புச் சுவைகொண்ட பொருள்கள், பசும்பால் நெய் உலர்ந்த புளிய இலையால் செய்த ரஸம், பசுமோர் நெய்யில் வதக்கிய எளிதில் செரிமானமாகக் கூடிய காய்கறி வகைகள் முதலியவை பத்தியமாகும். (நன்மை பயக்கக்கூடியவை)

## (ஆ) அபத்தியம்

மிகவும் சினம் துக்கம் முதலியவை கொள்ளுதல் கலவியிலீடுபடுதல் கண்ணீர் விடுதல் அபானம் மலம் சிறுநீர் வாந்தி தூக்கம் கண்ணீர் முதலியவற்றைத் தடுத்தல் கண்களுக்குப் புலனாகாத மிகவும் சிறிய பொருள்களையும் எழுத்தையும் உற்றுநோக்குதல், குச்சியால் பல் துலக்குதல், குளியல் வெயிலில் சுற்றுதல், மிகுதியாகப் பேசுதல், இரவில் உண்ணுதல் வலிந்து வாந்தி எடுத்தல், மிக்க நீர் பருகுதல், பழைய சோறு புது அரிசிச்சோறு புளிச் சாதம் இலுப்பைப்பூ கீரைவகைகள் பிண்ணாக்கு முளைத் தானியங்கள், தயிர் கள் இறைச்சி மீன் பெருங்காயம் உப்பு மாவினால் செய்த தின்பண்டங்கள் வெற்றிலை போடுதல், வற்றல் காய்களைச் சமைத்த பொரியல், மிகுதியாகப்புசித்தல் மிக்க நடை உவர்ப்பு புளிப்புச்சுவைகளைக்கொண்ட பொருள்கள், எரிச்சலூட்டுவனவும் தீக்ஷ்ணத்தன்மையும் கார்ப்பும் மிகச் சூடும் கொண்டுள்ள பொருள்கள், அசீரணத்தைத் தோற்றுவிக்கும் உணவு வகைகள், சூடும் மிக்க வெளிச்சமும் கொண்டுள்ளவற்றைப்பார்த்தல் முதலியவை கூடாதவை.

## 18. கண்டமாலை (கழுத்தைச்சுற்றித் தோன்றும் கட்டிகள்)

### (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் மூக்கில் மருந்திடுதல் உடல் வியர்க்கச் செய்தல் புகை பிடிக்கச் செய்தல் நரம்பைக்கீறி இரத்தத்தை வெளியேற்றுதல் நெருப்பால் சுடுதல் காரமருந்துகளைப் பயன்படுத்தல், பற்றுப் போடுதல் பட்டினி கிடக்கச் செய்தல் பழையநெய் பழைய சிவப்புச் சம்பா அரிசி பயறு புடலை பாகல் சிவப்புமுருங்கைக் காய் பிரப்பந்துளிர் குங்கிலியம் சிலாசத்து கார்ப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் உஷ்ணத்தன்மையும் கொண்ட பொருள்கள் நாக்கின் கீழ்ப்பகுதியிலுள்ள நரம்பில் அறுவை சிகிச்சை செய்தல் முதலியவை பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

பால் கரும்பு சர்க்கரை வெல்லம் முதலியவை புளிப்பு இனிப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள் அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள் துவாரங்களில் நீர் ஒழுகச் செய்யக்கூடிய உணவு வகைகள் முதலியவை தீமை பயக்கக்கூடியவை.

## 19. கபம் சீற்றமடைதல்

### (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல் கண்களில் மருந்தை மைபோல் இடுதல் பட்டினி கிடக்கச்செய்தல் கலவியில் ஈடு படச் செய்தல் மருந்துப் பொருள்களை உடல் மேல் தேய்த்தல் கவலை கொள்ளுதல் கண் விழித்தல் உடலை வருத்தி வேலை செய்தல் அதிகமாக நடத்தல் நாவறட்சியையும் வாயுவேகத்தை யும் அடக்குதல், மருந்துப் பொருள்களாலான நீரைக் கொப் பளித்தல், விழுது சூரணம் போன்ற மருந்துகளை உடல் மேலே பூசுதல் மூக்கில் மருந்திடுதல் யானை குதிரை போன்ற ஊர்தி களின் மேல் ஏறி சவாரி செய்தல், புகை பிடித்தல் பழைய சம்பா அரிசி அறுபதுநாள் குறுவை, புல்லரிசி கடலை பயறு கொள்ளு யவதானியம் காரப்பொருள்கள் காட்டுப்பகுதியில் வாழும் விலங்குகளின் இறைச்சி, கடுகு எண்ணெய் வென்னீர் பாகல் கத்தரி அத்தி வெள்ளரி வாழை புடலை முதலியவற்றின் காய் கள், வெள்ளைப்பூண்டு வாழைப்பூ கருணைக்கிழங்கு முள்ளங்கி வேம்பு வெண்சிவதை கடுகரோகிணி திரிகடுகம் திரிபலை தேன் வெற்றிலை பழைமையான கள் பொரி வறுத்த அரிசிச் சோறு

கசப்பு துவர்ப்புச் சுவையுள்ள பொருள்கள் முதலியவை பத்திய மானவை.

### (ஆ) அபத்தியம்

எண்ணெய்க்குளியல் எப்பொழுதும் உட்கார்ந்திருத்தல் பகலில் தூங்குதல் வெகுநேரக் குளியல் ஒன்றுக்கொன்றுமாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து உண்ணுதல், புதிய அரிசிச்சோறு, புதுநீர் மீன் இறைச்சி பாலால் செய்யப்பட்ட உணவுப் பண்டங்கள், கரும்பு திரவப் பொருள்கள், பனைநுங்கு பலாக்காய், பலாப்பழம், கொத்துமல்லி கர்ஜூரக்காய் ஈச்சம் பழம் பனம்பழம் இளநீர் பாயசான்னம் அசீரணத்தைத் தோற்று விக்கும் பொருள்கள், பனிநீர் முதலியன கூடாதவை.

(காலை வேளை கூதிர்ப்பருவம், இளவேனில் பருவம் இரவில் முதல் மூன்று மணி நேரம், இளம் வயது உணவு கொள்வதற்கு முன் உள்ள காலம் இவை கபத்தை வளர்க்கக்கூடியவை)

**20. கருவுற்றவர்கள் (கருவுறுதல் நோயல்ல, ஆயினும் கரு நன்கு வளர்வதற்கான பத்திய முறைகளில் கவனம் மிக அவசியமென்பதால் கருவுற்ற நங்கைகளுக்கு இதமானவையும், கூடாதவையும் இங்கு விளக்கப்படுகின்றன.)**

### (அ) பத்தியம்

சம்பா அரிசி அறுபதாங்குறுவை அரிசி கோதுமை பயறு துவரை கடலை இவற்றின் கஞ்சித் தெளிவு, பொரிமாவு பால் தயிர் நெய் வெண்ணெய் தேன் சர்க்கரை வாழைப்பழம் வாழைக்காய் நெல்லிக்காய் எள் மாதுளம்பழம் வறுத்த முந்திரிப்பருப்பு வேர்க்கடலைப்பருப்பு புளியம் பிஞ்சு புளியந்துளிர் ஆரஞ்சு முதலிய புளிப்புச் சுவை கொண்ட பழங்கள் நறுமணம் கமழும் மலர்கள் பூமாலைகள் சந்தனம் முதலிய உடற்பூச்சுவகைகள் பச்சைக்கர்பூரம் குளிர்ந்த தன்மை கொண்ட பொருள்கள், கஸ்தூரி குங்குமப்பூ நிலவில் சுற்றுதல், நல்ல காற்று மெத்தென்றிருக்கும் படுக்கை, உடலுக்கும் மனத்திற்குக் களிப்பைத் தரும் பொருள்கள் முதலியன நன்மை பயக்கக் கூடியவை.

### (ஆ) அப யம்

வாந்தி எடுக்கச் செய்தல் உடல் வியர்க்கச் செய்தல் காரப்பொருள்கள் மனத்திற்கு வருத்தம் தரும்

செய்கைகள், சண்டை காலம்தவறியஉணவு ஏற்றத் தாழ்வான உணவு (குறைந்த அளவிலோ மிதமிஞ்சியோஇருக்கும் உணவு) இரவில் நடை மனத்திற்குப் பிடித்தமில்லாதவற்றைப் பார்த்தல் மிதமிஞ்சிய கலவி பளு சுமத்தல் உடலுக்குச்சோர்வு தரும் வேலைகள், காலமற்ற காலத்தில் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளுதல், பகலில் தூங்குதல் கடினத்தன்மையுள்ள இருக்கைகளில் அமர்ந்திருத்தல், வருத்தம் பயம் முதலியவற்றை அடக்குதல், தீக்ஷ்ணகுணமும் மிக்க சூடும் கொண்டவையும், அசீரணத்தைத் தோற்றுவிப்பனவும் மலத்தைக்கட்டும் தன்மை கொண்டவையுமான உணவுப் பொருள்கள், பசியை அடக்குதல் போதைப் பொருள்கள் மாதவிடாய் கொண்ட நங்கைகளைத் தீண்டுதல், இறைச்சி ஆழமுள்ள கிணறுகளைப்பார்த்தல் மல்லாந்துபடுத்தல் வாதத்தையும் பித்தத்தையும் வளர்க்கும் பொருள்களைப் புசித்தல் மிக்க புளிப்பு கசப்புச் சுவை கொண்டவற்றைப் புசித்தல் முதலியவை கூடாதவை.

## 21. காதுநோய்

### (அ) பத்தியம்

உடலை வியர்க்கச் செய்யும் முறைகள், வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் மூக்கில் மருந்திடுதல் புகை பிடிக்கச் செய்தல் நரம்பைக் கீறி இரத்தத்தை வெளியேற்றல் யவதானியம் கோதுமை சம்பாஅரிசி பயறு முதலிய பருப்பு வகைகள், மயிர் மான் தித்திரி காட்டுக்கோழி முதலியவற்றின் இறைச்சி, முருங்கை பாகல் கத்தரி புடலை முதலிய காய் வகைகள், நெய் இரசாயனப் பொருள்கள் பசுமோர் பசும்பால் கலவியைவிலக்குதல் பேசாமல் இருத்தல் முதலியன பத்தியங்களாகும். ஓமம் வெள்ளை ஆரஞ்சு நீர்த்திப்பிலி வெள்ளைப் பூண்டு எலிச்செவிஇலை முதலியன காது நோய்களைப் போக்கும் தன்மை கொண்டவை.

### (ஆ) அபத்தியம்

ஒன்றுக்கொன்று மாறானதன்மையுள்ள பொருள்களைக் கலந்து உண்பது, மலம் சிறுநீர் முதலியவற்றின் வேகங்களைத் தடுப்பது மிகுதியாகப் பேசுதல், குச்சி முதலியவற்றால் பல் துலக்குதல் தலைக்குநீர் விட்டுக் கொண்டு குளித்தல், கபத்தையும் அசீரணத்தையும் தோற்றுவிக்கும் பொருள்களையுண்பது, கலவி காதைச் சொறிதல் தேய்த்தல் அல்லது காதுக்குள் குடைதல் பழைய சோறு பனியில் இருத்தல் மிக்க நடை நிலவில் படுத்தல் முதலியன கூடாதவை.

## 22. காயம்படுதல்

### (அ) பத்தியம்

பழமையான அரிசி கோதுமை கோழி ஆடு இவற்றின் இறைச்சி, மது பீர்க்கு புடலை இவற்றின் காய்கள், அரைக்கீரை முருங்கைஇலை நெய் கருணைக்கிழங்கு பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

புது அரிசி பழையசோறு பால் கடலை துவரை பயறு முதலியவற்றின் பருப்புகள், மோர் தயிர் புளிப்புச்சுவையும் குளிர்ந்ததன்மையும் கொண்ட பொருள்கள் காற்று பனி நிலா சினம் எண்ணெய்க்குளியல் குளியல் கலவி கிரிணிப் பழம் தர்பூசணிப்பழம் முதலிவை கூடாதவை.

## 23. காய்ச்சல்

### (அ) பத்தியம்

பழைய அரிசி பழமையான அரிசியை வறுத்துச் சமைத்த சோறு கோதுமைரொட்டி பழைய அரிசி மாவால் செய்த பண்டம், இளம் முள்ளங்கி சிறுகீரை சக்கர வர்த்திக் கீரை அரைக்கீரை தொட்டால் சுருங்கிஇலை சீந்தில் கொடியின்துளிர், சுண்டைக்காய்இலை வேப்பம்பூ கறிவேப் பிலை தேவதாருஇலை, மணித்தக்காளிஇலை, சிறுபாகல் சுண்டை புடலை என்பனவற்றின் காய்கள் சிறுகடலை பயறு கொள்ளு காட்டுப்பயறு என்பனவற்றின் கஞ்சி முதலியன நன்மைதரும்.

காய்ச்சல் தோன்றியதும் முதலில் வாந்தி எடுக்கச்செய்தல் பட்டினி கிடத்தல் இலேசான கஞ்சி கார்ப்பு கசப்புச்சுவைகள் கொண்ட பொருள்கள் நலம் தரும். நடுத்தரகாய்ச்சலுக்கு பழையசம்பா அரிசி கத்தரிக்காய் முருங்கை புடலை கக்கரி )ளம் முள்ளங்கி சிறுகடலை பயறு கொள்ளு காட்டுப்பயறு )வற்றின் கஞ்சி, சக்ரவர்த்திக்கீரை சிறுகீரை மணித்தக்காளிக் கீரை திராட்சை விளாம்பழம் மாதுளம்பழம் முதலியவை பத்தி யங்கள்.

நாள்பட்ட காய்ச்சலுக்குப் பேதியாகச் செய்தல் மருந்தைக் கண்களில் மைபோல் இடுதல் புகை பிடிக்கச் செய்தல் மூக்கில் மருந்திடுதல், அநுவாஸன வஸ்தி கலவி சிட்டுக்குருவி மான்

மயில் தித்திரி முயல் கோழி சகோரப்புள் முதலியவற்றின் இறைச்சி, பசுநெய் ஆட்டு நெய் கடுக்காய்ப்பிஞ்சு சந்தனம் அருவிநீர் ஆமணக்கு எண்ணெய் முதலியன நலம் தரும்.

ஸந்நிபாதசுரத்திற்கு : வாந்தி எடுக்கச் செய்தல் ஆம தோஷத்தைப் போக்கும்பொருள்கள் கபத்தைப் போக்கும் பொருள்கள், கண்களில் மருந்தை மைபோல் இடுதல் மூக்கில் மருந்திடுதல் மருந்துநீரைக்கொப்பளிக்கச்செய்தல் உடல் வியர்க்கச் செய்தல் முதலியன பத்தியமானவை.

காய்ச்சல் தணிந்த பின் பழையபுளி எலுமிச்சம்பழம் நெல்லிக்காய் விளாம்பழம் பச்சைதிராட்சை சாத்துக்குடிப்பழம் சபோடாபழம் முதலியன நலம் தரும்.

## (ஆ) அபத்தியம்

சாதாரணக்காய்ச்சலுக்கு மயில் தித்திரி கோழி இவற்றின் இறைச்சி, புதியஅரிசி பால் நெய் புளிப்புச்சுவை கொண்ட பொருள்கள். மோர் தயிர் எண்ணெய் வெற்றிலைகள் பலாப்பழம் ஆரஞ்சுபழம் கிரிணிப்பழம் (முலாம்பழம்) மாவால் செய்த தின்பண்டங்கள், குளிர்ச்சியை யும் உடல் செழிப்பையும் குளுமையையும் எரிச்சலையும் அசி ரணத்தையும் தோற்றுவிக்கும் பொருள்கள், சினங்கொள்ளுதல் உடலுக்குச் சோர்வுதரும் வேலை, குச்சியால் பல் துலக்குதல் எண்ணெய்க்குளியல், குளியல் பகல்தூக்கம் சிவப்பு நிறமுள்ள மலர்களும் ஆடைகளும், வாந்தியைத் தடுத்தல் கார்ப்பு புளிப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள் முதலியன கூடாதவை.

## 24. கிரகணி

## (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல் பட்டினி கிடக்கச் செய்தல் நன்றாகத் தூங்கச்செய்தல் அறுபதுநாள் சம்பாஅரிசிப் பொரியுடன் பதினைந்து மடங்கு நீர்விட்டுக் காய்ச்சிய கஞ்சி, துவரை சிறுகடலை பயறு இவற்றால் செய்த கஞ்சித் தெளிவு, நெய்ப்பகுதி மட்டும் மிகுந்து இருக்கக் காய்ச்சிய பாலால் செய்த தயிர் பசும்பால் ஆட்டுப்பால் வெண்ணெய் எண்ணெய் இளம் வாழைப்பூ தாமரைக்கிழங்கு சிறுகீரை சீரகம் கீரை வகைகள் வெட்பாலை அரிசி மோர் கல்யாணப்பூசணி பாச் சோத்தி ஜாதிக்காய் மஞ்சிஷ்டி கொத்துமல்லிவிதை மாதுளம் பழம் நாவற்பழம் வாழைப்பழம் விளாம்பழம், திராட்சைப்பழம்

வில்வப்பழம், குயில் தித்திரி முயல் மான் ஆடு நண்டு முதலிய வற்றின் இறைச்சி, துவர்ப்புச் சுவை கொண்ட பொருள்கள், வெந்நீர் முதலியன பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

கண்விழித்தல் குளியல் இரத்தம் வெளியேற்றல் கலவி மூக்கில் மருந்திடுதல் கண்களில் மருந்திடுதல் சிறுநீர் மலம் இவற்றைத் தடுத்தல், புகை பிடித்தல் ஒன்றுக் கொன்று மாறான தன்மை கொண்ட பொருட்களைப் ஒன் றாகப் பயன்படுத்தல், உடற்பயிற்சி பால் மீன் புளிப்புச் சுவை கொண்ட பொருள்கள் வெயில் புதிய அரிசி கோதுமை யவதானி யம் பட்டாணி உளுந்து காராமணி இஞ்சி கொத்துமல்லி சக்ர வர்த்திக்கீரை மணித்தக்காளிக் கீரை பூசுணி சிவப்புமுருங்கை கருணைக் கிழங்கு கரும்பு பாக்கு வெள்ளைப்பூண்டு பால் வெல்லம் தயிர்த்தெளிவு, தேங்காய் மூங்கில் அரிசி, கஸ்தூரி, க்ஷாரமருந்துகள் இலந்தை இனிப்பு மாம்பழம் முலாம்பழம் பனம் பழம் ஆரஞ்சுப்பழம் குளிர்ந்தநீர் உப்பு புளிப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள் பேதியாகச் செய்யும் பொருள்கள், அசீரணத்தை விளைவிக்கும் பொருள்கள், மாவினால் செய்த தின்பண்டங்கள் முதலியன அபத்தியமானவை.

## 25. கிருமிநோய்

### (அ) பத்தியம்

ஆஸ்தாபனவஸ்தி பேதியாகச் செய்தல் தலையில் மருந்தைத் தேக்கி வைக்கும். முறையாகிய சிரோ விரேசனம் செய்வித்தல், புகை பிடிக்கச் செய்தல் கபத்தைப் போக்கும் பொருட்களைப் பயன்படுத்தல், உடலைப் தூய்மைப் படுத்தும் முறைகளைக் கையாளுதல், பழைய அரிசி சிவப்புச் சம்பா அரிசி கோதுமை யவதானியம் எள் கடுகு, கடுகெண்ணெய் இளவாழை பிரப்பந்துளிர் வெள்ளைப்பூண்டு எலிச்செவியிலை சக்கரவர்த்திக்கீரை வேப்பிலை வாயு விளங்கம் தாளிசபத்திரி வெள்ளைப்பூண்டு பெருங்காயம் அகில் ஓமம் கருஞ்சீரகம் கஸ்தூரி கழுநீர் பால் முந்திரிப்பழம் எலுமிச்சம்பழம் கருங்காலிப் பழம் வெட்பாலைப்பழம், கசப்பு துவர்ப்பு கார்ப்புச் சுவை களைக் கொண்ட பொருள்கள் பத்திமானவை.

### (ஆ) அபத்தியம்

வாந்தியைத் தடுத்தல் அல்லது வலிந்து வாந்தி எடுத்தல் பகல்தூக்கம் நீர்த்தன்மையுள்ள பொருள்கள்

மாவுப்பண்டங்கள் அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள், உளுந்து நெய் தயிர் வெல்லம் கீரைவகைகள் இறைச்சி புளிப்பு இனிப்புச்சுவைகளைக் கொண்ட பொருள்கள் போதைப் பொருள்கள் செரிமானத்தைக் குறைக்கும் பொருள்கள் கூடா தவை.

## 26. குட்டம்

### (அ) பத்தியம்

மூன்று நாட்கள் பதினைந்து நாட்கள் ஆறுமாதங்களுக்கு ஒரு முறை உடலிலுள்ள இரத்தத்தை வெளியேற்றுதல், எப் பொழுதும் நெய்யை உடலின் மேல் தடவிக் கொண்டிருத்தல், பழைய யவதானியம் கோதுமை பயறு உளுந்து சிறுகடலை பழைய அரிசி தினை சாமை காட்டு விலங்குகளின் இறைச்சி புடலை சுண்டை மணித்தக்காளி பீர்க்கு இவற்றின் காய்கள், மணித்தக்காளிஇலை வெங்காயஇலை சாரடைஇலை பிரப்பந் துளிர் வேப்பிலை தகரைஇலை கீரைத்தண்டு, முந்திரிப்பழம் பனம்பழம், கருங்காலி தேன் திரிபலை ஜாதிக்காய் சிறுநாகப்பூ குங்குமப்பூ, சிவதை தேவதாருஅகில் முதலியவற்றின் கஷாயங்கள் புங்கஎண்ணெய் கடுகு எண்ணெய் வேப்ப எண்ணெய் எள் எண்ணெய் ,கழுதை குதிரை எருமை இவற்றின் சிறுநீர் கஸ்தூரி சந்தனம் கசப்பு உவர்ப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள் பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

புளிப்பு கார்ப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள் தயிர் பால் வெல்லம் கள் பானகம் கருப்பஞ்சாறு மீன் நீர்பாங்கான இடங்களில் வாழும் விலங்குகளின் இறைச்சி வளர்ப்புப்பறவை களின் இறைச்சி, குருத்தன்மை கொண்ட பொருள்கள், புது அரிசி நீருள்ள பொருள்கள் நாவறட்சியைத் தோற்றுவிப்பவையும் மலத்தைக் கட்டுப்வையுமான பொருள்கள் செய்நன்றி மறத்தல் கொடியவினை பகலில் தூங்குதல் வெயிலில் அலைதல் ஒன்றுக் கொன்றுமாறான தன்மை கொண்ட பொருள்களைச் சேர்த்து உண்ணுதல் காலமற்ற காலத்தில் உண்ணல் கலவி வாந்தியைத் தடுத்தல் உடற்பயிற்சி செய்தல் முதலியன கூடாதவை.

## 27. குரல் மாறுபாடு

### (அ) பத்தியம்

பழைய சம்பா அரிசி சிவப்புச்சம்பா அரிசி, யவதானியம் துவரம்பருப்பு மயில் காட்டுக்கோழி இவற்றி

றின் இறைச்சி, நெருஞ்சில்இலை மணித்தக்காளிஇலை இளம் முள்ளங்கி வெள்ளைப்பூண்டு இஞ்சி உப்பு வெற்றிலை திராட்சை தேன் பசுநெய் வெந்நீர் முதலியன நன்மை பயக்கக் கூடியவை.

### (ஆ) அபத்தியம்

புதுஅரிசி பழைய சோறு பயத்தம்பருப்பு மோர் தயிர் கழுநீர் காடி குளிர்ந்த நீர் மாம்பழம் ஆரஞ்சுப்பழம் விளாம்பழம் நாவற்பழம் பகல்தூக்கம் மிகப் பேசுதல் காற்று பனி இவற்றில் அலைதல் முதலியன கூடாதவை.

## 28. குன்மம் (கட்டி)

### (அ) பத்தியம்

எண்ணெய் முறை உடலை வியர்க்கச் செய்தல், பேதியாகச் செய்தல், வஸ்தி முறை, கைகளில்நரம்பை கீறி இரத்தத்தை வெளியேற்றுதல், பட்டினி கிடக்கச் செய்தல் எண்ணெய்க்குளியல் செய்வித்தல், வர்த்திகளைப் பயன்படுத்து தல், ஓராண்டு பழமையான சம்பாஅரிசி, சிவப்புச்சம்பாஅரிசி கொள்ளுத் தெளிவு, ஆடு காட்டு விலங்குகள் இவற்றின் பாலும் இறைச்சியும், பசும்பால் நெய் துறிஞ்சிப்பழம் திராட்சை பேரீச் சங்காய் சீற்றீச்சம்பழம் மாதுளம்பழம் ஆரஞ்சுப்பழம், நெல்லிக் காய் வெள்ளைப்பூண்டு வெங்காயம் இளம்முள்ளங்கி பொன்னாங் கண்ணிக்கீரை, சக்கரவர்த்திக்கீரை முருங்கைக்காய் கடுக்காய்ப் பிஞ்சு ஆமணக்குஎண்ணெய் மோர் பெருங்காயம் திரிகடுகம் பசுவின் சிறுநீர் உடற்செழிப்பையும் சூட்டையும் எண்ணெய்ப் பசையையும்தோற்றுவிக்கும் பொருள்கள், சடராக்னியை வளர்க் கும் பொருள்கள், முதலியவை மிகவும் நன்மைதருவனவாகும்.

### (ஆ) அபத்தியம்

காய்களில் விதைகளாகத் தோன்றும் கொள்ளைத் தவிர்த்து, மற்ற உளுந்து பயறு முதலிய பருப்பு வகைகள், கோதுமை முதலிய நுனியில் முள் உள்ள தானியங் கள், வாதத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள் உலர்ந்த வற்றல் முதலிய உணவுப் பண்டங்கள் மலத்தைக்கட்டும் பொருள்கள், அபானம் மலம் சிறுநீர் முதலியவற்றை அடக்குதல், வாந்தி எடுத்தல் பட்டினிகிடத்தல் நீரை மிகுதியாகப் பருகுதல் புதிய அரிசி தயிர் முள்ளங்கி கருணைக்கிழங்கு முதலியவை கூடாதவை.

## 29. கொப்புளம்

### (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் பூச்சு மருந்து பட்டினி கிடக்கச் செய்தல் பழைய அறுபதுநாள் சம்பா அரிசி பயறு சிறுகடலை காட்டுப்பயறு கடுக்காய் பிரப்பந்தளிர் காட்டு விலங்குகளின் புலால், பசுநெய் புடலங்காய் வாலுளுவை வேப்பஇலை சந்தனத்தைலம் பச்சைக் கர்ப்பூரம், எள்ளை அரைத்துப்பூசுதல் வெட்டிவேர் முதலியன நன்மை பயக்கக் கூடியவை.

### (ஆ) அபத்தியம்

உடல் வியர்க்கச் செய்தல் கலவி, உடலுக்குச் சோர்வு தரும் வேலைகளைச் செய்தல், சினம் அசீ ரணத்தைத் தோற்றுவிக்கும் உணவு, வெயிலில் அலைதல் வாந்தியைத் தடுத்தல் கீரை வகைகள் காற்று மிகுதியாக வீசும் இடம், பகல் தூக்கம் நீர்ப்பாங்கான இடத்தில் வசித்தல், அத் தகைய இடத்தில் வாழும் விலங்குகளின் இறைச்சி, எள் கொள்ளு உளுந்து உவர்ப்பு கார்ப்பு புளிப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள் எரிச்சலைத் தோற்றுவிக்கும் பொருள்கள் வறட்சித் தன்மை கொண்ட பொருள்கள் உஷ்ணத்தன்மை கொண்ட பொருள்கள் முதலியவற்றை விலக்கவேண்டும்.

## 30. க்ஷயம் (எலும்புருக்கிநோய்)

### (அ) பத்தியம்

கோதுமை கடலை பயறு பழைய சம்பா அரிசி ஆட்டு இறைச்சி பால் நெய் வெண்ணெய் காட்டு விலங்கு களின் இறைச்சி இனிப்புச் சுவையுள்ள சாறுகள் பலா மா வாழை நெல்லி பேரீச்சங்காய் சாரைப்பருப்பு தேங்காய் பச்சை திராட்சை, கற்கண்டு திராட்சை ஆஸவம் முதலியன நன்மை தரும்.

### (ஆ) அபத்தியம்

புது அரிசி, பழைய சோறு தர்பூசணிப் பழம் பம்பளீஸ் நாரத்தம்பழம் ஆரஞ்சுப்பழம் (குளிர்ச்சி தரும்பழ வகைகள்) செம்மறியாட்டு இறைச்சி, வெள்ளைப்பூண்டு மூங்கில்குருத்து புளி கார்ப்புச்சுவை தயிர் கீரைவகைகள், கோவைக்காய் வெண்டைக்காய் மிதமிஞ்சிய உணவு சிறுநீர்

மலம் இவற்றைத் தடுத்தல், கண்விழித்தல் சோர்வு தரும் வேலைகளைச் செய்தல், வெற்றிலை முதலியன தீங்கு விளைவிப்பவை.

## 31. சீதபித்தம் (குளுமையும் பித்த மிகுதியும் கலந்துள்ள நோய்)

### (அ) பத்தியம்

நல்ல பழமையான அரிசி துவரை பயறு இவற்றின் பருப்புகள் அல்லது அவற்றாலான கஞ்சித் தெளிவு, சுண்டைக்காய் பீர்க்கு புடலை சிறுபாகல் மூங்கில்குருத்து வெந்நீர் பசுமோர் நெய் ஆட்டிறைச்சி இவை நன்மை தரக்கூடியனவாகும்.

### (ஆ) அபத்தியம்

புது அரிசி பால் தயிர் புளி எண்ணெய் மீன் கடுகு பூசுணைக்காய் குளியல் வெயிலில் அலைதல்.

## 32. சூலை நோய் (வயிற்றிலோ விலாக்களிலோ திடீரெனத் தோன்றும் கொடிய வலி)

### (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் உடல் வியர்க்கச் செய்தல், பட்டினி கிடத்தல், ஆஸன வாய் வழியே மருந்தில் தோய்ந்த திரியைச் செலுத்துதல், வஸ்தி முறை பகலில்தூங்குதல் உணவைச் செரிமானமடையச் செய்யும் பொருள்கள், ஓராண்டு பழமையான சம்பா அரிசி யவதானியக் கஞ்சி நன்கு காய்ச்சிய பால் காட்டில் வாழும் விலங்குகளின் புலால், முருங்கை பாகல் புடலை கத்தரி முதலியவற்றின் காய்கள் திராட்சை விளாம்பழம் இந்துப்பு சாரைப்பருப்பு கீரைவகைகள், பெருங்காயம் சுக்கு வாயுவிளங்கம் தண்ணீர்விட்டான் கிழங்கு, வெங்காயம் இலவங்கம் ஆமணக்குஎண்ணெய் பசுவின் சிறுநீர் எலுமிச்சம்பழச்சாறு கோஷ்டம், விரைவில் செரிமானமாகக் கூடிய உணவுப் பொருள்கள், காரவகைகள் இவையனைத்தும் சூல நோய்க்குப் பத்தியங்களாகும்.

### (ஆ) அபத்தியம்

ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து உண்ணுதல், இரவில் கண்விழித்தல், ஏற்றத்தாழ்வாக உண்ணுதல், கசப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்ட வறட்சித்தன்மையுள்ள பொருள்களையும், குளிர்ச்சித் தன்மை-

யுள்ளவையும் அசீரணத்தைத் தோற்றுவிப்பவையுமான பொருள் களையும் உண்ணுதல், கலவி மிக்க உடற்பயிற்சி கள் துவரை கடலை முதலிய பருப்பு வகைகள், எள் உப்பு சிறுநீர் மலம் இவற்றின் வேகங்களைத் தடுத்தல் மிக்க சினங்கொள்ளுதல் வருத்தம் முதலியவை கூடாதவை.

### 33. பகந்தரம் (ஆசன வாய்க்கும் விதைகளுக்கும் இடையே உள்ள பகுதியில் கட்டிபோல் தோன்றிச் சீழ் கொண்டு உடைந்து விரணமாகும் நோய், 'பகந்திர பவுத்திர நோய்'எனவும் வழங்கப் படும்)

#### (அ) பத்தியம்

நோய் முற்றாத நிலையில் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் மேல்பூச்சு பட்டினி கிடத்தல் இரத்தத்தை வெளியேற்றுதல் முதலிய சிகிச்சைகள், அறுவைச் சிகிச்சை காரமருந்துகள், நெருப்பில் காய்ச்சிய கம்பியால் நோய் கண்ட பகுதியைச் சுடுதல், கடுகு பயறு காட்டு விலங்குகளின் இறைச்சி, முருங்கை புடலை இவற்றின் காய்கள் பிரப்பந்துளிர் பொன்னாங்கண்ணிக்கீரை முள்ளங்கி, எண்ணெய் நெய் தேன் கசப்புச் சுவையுள்ள பொருள்கள் நன்மை தரக்கூடியவை.

#### (ஆ) அபத்தியம்

ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட வற்றைக் கலந்து உண்ணுதல், குறைவாகவோ மிகுதி யாகவோ உண்ணுதல், வெயிலில் அலைதல் உடற்பயிற்சி கலவி ஊர்திகளின் மேலேறி சவாரிசெய்தல், அசீரணத்தைத் தோற்று விக்கக் கூடிய பொருள்கள், கோழி மீன் இவற்றின் புலால் கத்தரி பூசுணை வெள்ளரி முதலியவற்றின் காய்கள், குருத் தன்மை கொண்ட பொருள்கள், துவரை கொள்ளு முதலிய பருப்பு வகைகள், கஞ்சி வகைகள், சாறுகள் இவை தீங்கு தரக் கூடியவை.

### 34. பகுமூத்திரம் (சிறுநீர் பல முறை வெளியேறுதல்)

#### (அ) பத்தியம்

பழைய அரிசி பச்சைப்பயறு சிறுகடலை, கடலை இவற்றின் பருப்புகள், அவற்றாலான கஞ்சி, மான் கோழி முதலியவற்றின் இறைச்சி, அத்தி வாழை பீர்க்கு புடல் இவற்றின் காய்கள், முருங்கைஇலை எலிச்செவி இலை வெந்தயக் கீரை புளிப்புக்கீரை நிலாவாரம்பூ நெல்லி நாவல் எலுமிச்சை

ாழை விளாம் திராட்சை இவற்றின் பழங்கள், குதிரைசவாரி கோதுமை அல்லது பார்லியால் செய்த ரொட்டி, காய்ச்சியபின் குளிர்ந்த நீரில் குளித்தல், அத்தகைய நீரைப்பருகுதல் என்பன நன்மை தரக்கூடியவை.

### (ஆ) அபத்தியம்

தாமதமாகச் செரிமானமடையக்கூடிய பொருள்கள், கபத்தை வளர்ப்பவை, நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்குகள் பறவைகள் இவற்றின் இறைச்சி, மீன் கள் போன்ற போதைப்பொருள், புளி பெருங்காயம் நெய் வெள்ளைப் பூண்டு எண்ணெய் பூசுணை மாவால் செய்த தின்பண்டங்கள், கீரைவகைகள், கார்ப்பு உவர்ப்புச் சுவைகளுள்ளவை, உஷ்ணத்தை வளர்க்கும் பொருள்கள், கருணை முதலிய கிழங்குவகைகள், பலாப்பழம் மிக்க நீர் பருகுதல், பகலில் தூங்குதல், இரவில் கண்விழித்தல் மிக்க தூக்கம் ,கலவி, சோர்வுதரும் வேலைகளைச் செய்தல், வெயிலில் அலைதல், வழிநடை, பசியைத்தடுத்தல் முதலியன கூடாதவை.

## 35. பல்நோய்

### (அ) பத்தியம்

பழைய அரிசி கோதுமை இவற்றின் கஞ்சி, துவரை, கொள்ளு இவற்றின் பருப்புகளாலான கஞ்சித்தெளிவு, உஷ்ணத்தை வளர்க்கும் வெள்ளைப்பூண்டு முதலிய பொருள் கள், ஆட்டிறைச்சி முருங்கை புடலை பீர்க்கு இவற்றின் காய் கள், குளிக்கவும் பருகவும் சுடுநீரைப் பயன்படுத்துதல், சூடுள்ள பால் சாராயத்தால் வாய் கொப்பளித்தல் என்பன பத்தியங் களாகும்.

### (ஆ) அபத்தியம்

புது அரிசி புளிப்புச் சுவை கொண்டபழங்கள் பழையசோறு, பால் தயிர் புளித்த கஞ்சி கிழங்கு வகைகள், குளுமையைத் தோற்றுவிப்பனவும் வாதத்தை வளர்ப் பனவுமான பொருள்கள், பயறு கடலை வெள்ளரி கத்திரி பூசுணை சுரைக்காய் புலால் உணவு குளிர்ந்தநீரில் நீராடுதல், குளிர்ந்தநீரைப் பருகுதல் வேப்பங்குச்சி முதலியமரக்குச்சியால் பல் துலக்குதல் முதலியன கூடாதவை.

## 36. பாண்டுநோய் (சோகை-இரத்தம் குறைந்து உடல் வெளிறி முகம் கண்ணிமைகள் பாதங்கள், குறிப்பகுதி முதலியவை வீக்கம் கொள்ளுதல்)

### (அ) பத்தியம்

வாந்தியாகச் செய்தல் பேதியாகச் செய்தல் கால்மணிக்கட்டு தொப்புளுக்கு இரண்டு அங்குலம் கீழ்ப் பகுதி, அக்குளுக்கும் மார்புக்கும் நடுப்பகுதி ஆகிய இடங்களில் சூடுள்ள கம்பியால் சூடுபோடுதல், சம்பா அரிசி, பழைய அரிசி கோதுமை யவதானியம் துவரை பயறு சிறுகடலை இவற்றின் பருப்புகள், இவற்றாலான கஞ்சி வகைகள், காட்டில் வாழும் விலங்குகள், பறவைகளின் இறைச்சி, வாழை கத்தரி பூசுணை புடலை நெல்லி கோவை முதலியவற்றின் காய்கள், கடுக்காய் நெருஞ்சில் பொன்னாங்கண்ணி சீந்தில், சிறுகீரை சாரணை வெள்ளைப்பூண்டு வெங்காயம் இவற்றின் இலைகள், மோர் நெய் வெண்ணெய் புளித்த கழுநீர், மஞ்சள் எண்ணெய் சிறு நாகப்பூ யவக்ஷாரம் சந்தனம் உலோகபற்பம் குங்குமப்பூ வெந்நீர் துவர்ப்புச் சுவை கொண்ட பொருள்கள் நன்மை தரக் கூடியவை.

### (ஆ) அபத்தியம்

இரத்தத்தை வெளியேற்றுதல், புகை பிடித்தல் வாந்தியைத் தடுத்தல், உடல் வியர்க்கச் செய்தல், கலவி கடலை பட்டாணி புதுஅரிசி கடுகு உளுந்து கள் மீன் பிண்ணாக்கு பெருங்காயம் வெற்றிலை, புளி மாம்பழம் முதலிய புளிப்புச் சுவை கொண்ட பொருள்கள், ஒன்றுக்கொன்றுமாறான தன்மை உள்ள உணவுப் பொருள்களைக் கலந்து பயன்படுத்துதல், பகலில் தூங்குதல், செரிமானமாகுமுன் எதையேனும் உண்ணு தல், அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள், கார்ப்பு உவர்ப்புச் சுவைகளுள்ள பொருட்கள் எரிச்சலைத் தோற்று விக்கும் பொருள்கள், மலம் சிறுநீர் இவற்றைத் தடுத்தல் மிகுந்த நீரைப் பருகுதல் முதலியன தீங்கு விளைவிக்கக் கூடியவை.

## 37. பிரத்னம் (தொடை இடுக்குகளில் தோன்றும் கட்டிகளைப் போன்ற வீக்கம்)

### (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச்செய்தல், பேதியாகச் செய்தல், வஸ்தி முறைகள், சூடுபோடுதல் இரத்தத்தை வெளி யேற்றுதல், அறுவைமுறை உடல் வியர்க்கச் செய்தல் மேல்பூச்சு

முறைகள் சிறந்தவை. சிவப்புச்சம்பா அரிசி புடலை கத்தரி முருங்கை இவற்றின் காய்கள், சாரடை நெருஞ்சில் சிவதை வெங்காயம் இவற்றின் இலைகள், கடுக்காய்ப்பிஞ்சு தேன் ஆமணக்குஎண்ணெய், தேன் பூசியபானையில் வைக்கப்பட்ட நெய், பசுவின் சிறுநீர் மோர் ஆமவாதத்தைப் போக்கும் பொருள்கள், சடராக்னியை வளர்க்கக்கூடிய பொருள்கள், பழயை கள் முதலியன பத்தியங்களாகும். குளிக்கவும் பருகவும் வெந்நீரையே பயன்படுத்த வேண்டும்.

## (ஆ) அபத்தியம்

ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து, பயன் படுத்துதல், உடலுக்குப் பழக்கமில்லாதவை, வாதம் முதலிய தோஷங்களை வளர்க்கக் கூடியவை, உணர்ச்சியை மிகுதியாக்கும் பொருள்கள், யானை முதலிய ஊர்திகளின் மேல் அமர்ந்து சவாரி செய்தல், நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்குகளின் இறைச்சி, பால் தயிர் மாவால் செய்யப்பட்ட தின்பண்டங்கள், உளுந்து புளிச்சைக் கீரை, அசீரணத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள், விந்துவை தடுத்தல் என்பன கூடாதவை.

## 38. பீநசம் (நாள்பட்டச

## (அ) பத்தியம்

பழையஅரிசி சூடான சோறு புடலை பீர்க்கு இவற்றின் காய்கள், இஞ்சி வெல்லம் பால் கடலைப்பருப்பு கொள்ளின் பருப்பு இவற்றாலான கஞ்சித்தெளிவு, ஆடு ஊர்க் குருவி இவற்றின் புலால், பசுநெய் பசுவின்பால் இளம்முள்ளங்கி என்பன நன்மை பயக்கக்கூடியவை.

## (ஆ) அபத்தியம்

புதுஅரிசி பழைய சோறு அசீரணத்தையும் குருத் தன்மையையும் உண்டாக்கும் பொருள்கள், மோர் தயிர் நெய் கள் மீன் கத்தரி சுரை முருங்கை வெள்ளரி இவற்றின் காய்கள், வாதத்தையும் குளுமையையும் தோற்றுவிக்கும் பொருள்கள், குளிர்ந்த நீரில் குளித்தல் முதலியன கூடாதவை இங்கு, மூக்குநோய்களுக்குக் கூறப்பட்ட பத்தியம்-அபத்தியம் பீநசத்திற்கும் பொருந்தும்.

**39. பிள்ளைப்பேறு (பிள்ளைப்பேறு, நோய் அல்லாவிடினும், அவ்வ மயத்தில் உடல் நலத்தைப்பாதுகாத்துக் கொள்வது மிகவும் அவசியமாதலால் அவர்களுக்கு உரிய பத்திய அபத்திய முறைகள் இங்குக் கூறப்படுகின்றன).**

**(அ) பத்தியம்**

பட்டினி கிடத்தல் இலேசாக உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க்குளியல், எண்ணெய்மருந்து, கார்ப்பு கசப்புச்சுவையுள்ளவையும், சூடுள்ளவையுமான உணவு வகைகள், சடராக்னியை வளர்க்கக் கூடியவையும், அசீரணத்தைப் போக்குவனவுமான பொருள்கள், மது, சம்பா அரிசிகொள்ளு வெள்ளைப்பூண்டு முருங்கைக்காய் கத்தரிக்காய் புடலங்காய் இளம் முள்ளங்கி துறிஞ்சிப்பழம் புளிப்புமாதுளை, இனிப்பு மாதுளை வெற்றிலை கபத்தையும் வாதத்தையும் போக்கும் பொருள்கள், பழைய அரிசி பழைய வெல்லம் முருங்கை இலை, துவரைக்கஞ்சித் தெளிவு, மீன் இரும்பைக்காய்ச்சித் தோய்த் தெடுத்தநீர் முதலியன பத்தியமானவை.

**(ஆ) அபத்தியம்**

உடலுக்குச் சோர்வு தரும் வேலைகளைச் செய்தல், மூக்கிலிடும் மருந்து இரத்தத்தை வெளியேற்றுதல், கலவி, மிகுதியாக அல்லது குறைவாக உண்ணுதல் மலத்தையும் சிறுநீரையும் தடுத்தல், ஒன்றுக்கொன்றுமாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து பயன்படுத்துதல், பகல் தூக்கம் மலத்தைக்கட்டுவதும் அசீரணத்தைத் தோற்றுவிப்பதுமான உணவுப்பொருள், புது அரிசி பழையசோறு அப்பொழுது பிடித்தமீன், புளிப்புச் சுவை முதலிய குளுமையைத் தோற்றுவிக்கும் பொருள்கள், காற்றிலும் ஈரத்திலும் உலாவுதல், குளிர்ந்த பொருள்களைப்பயன்படுத்தல் ஈரமுள்ள ஆடையணிதல் குளிர்ந்த நீரில் நீராடுதல், குளிர்ந்த நீரைப்பருகுதல் முதலியன கூடாதவை.

**40. பெண்களுக்குத் தோன்றும் பெரும்பாடு முதலிய நோய்களுக்குப் பத்தியம், அபத்தியம்**

இரத்தபித்த நோய்க்குக் கூறப்பட்ட பத்திய முறைகள் அனைத்தும் பெரும்பாடு நோய்க்கும் ஏற்றவை. மற்றும் வாத நோய்க்குப் பத்தியமாகக் கூறப்பட்டவையும்இதமானவை. அந்த நோய்களுக்குக் கூடாதவையாகக் கூறப்பட்டவை அனைத்தும், பெரும்பாடு நோய்க்கும், பெண்குறியில் தோன்றும் மற்ற நோய்களுக்கும் தீங்கு பயக்கக் கூடியவை என அறிக.

## 41. மசூரிகா-அம்மை

### (அ) பத்தியம்

பட்டினி கிடத்தல், பேதியாகச் செய்தல் நரம்பைக்கீறி இரத்தத்தை வெளியேற்றுதல் பழைய வெள்ளைச் சம்பா அரிசி, சிவப்புச்சம்பா, பயறு கடலை யவதானியம் சிறு கடலை, சிட்டுக்குருவி புறா சகோரப்புள் குயில் இவற்றின் இறைச்சி, வாழை முருங்கை வெள்ளரி இலந்தை மாதுளை திராட்சை நெய் எண்ணெய் பிண்ணாக்கு ஆட்டிறைச்சி காட்டில் வாழும் விலங்கு பறவை இனங்களின் புலால், பச்சைக்கர்ப்பூரம் கலந்த நீரையோ, முத்துச்சிப்பியின் நீரையோ காட்டு கோதுமை தேன் கலந்த குளிர்ந்த நீரையோ கண்களில் விடுதல், புகை பிடித்தல் சாம்பலைப்பூசுதல் முதலியன பத்தியங்களாகும்.

### (ஆ) அபத்தியம்

கலவி உடலை வியர்க்கச் செய்தல், சுற்றுதல் எண்ணெய், சினம் கொள்ளுதல், வெயிலில் சுற்றுதல் கார்ப்புப் புளிப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்கள், மலத்தையும் சிறுநீரையும் அடக்குதல், புது அரிசி கோதுமை துவரை மோர் தயிர், கோழி மயில் இவற்றின் இறைச்சி, குளுமையைத் தரும் பொருள்கள், உடற்பயிற்சி உடலுக்குச் சோர்வு தரும் வேலைகளைச் செய்தல், காற்றில் அலைதல் முதலியன கூடாதவை.

## 42. முகநோய்கள் (வாயில் தோன்றும் நோய்கள்)

### (அ) பத்தியம்

உடல் வியர்க்கச் செய்தல் பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல், மருந்துப் பொருளைக் கொண்டு வாய் கொப் பளிக்கச் செய்தல், வாயில் மருந்துப் பொருளை அடக்கி வைத்துக் கொள்ளுதல், இரத்தத்தை வெளியேற்றுதல் மூக்கில் மருந் திடுதல் புகை பிடிக்கச் செய்தல், அறுவைச் சிகிச்சை, நெருப் பினால் சுடுதல் முதலிய சிகிச்சை முறைகள் பழைய அரிசிச் சோறு வரகு முதலிய புல்லரிசி வகைகள், யவதானியம் பயறு கொள்ளு மூங்கில்அரிசி காட்டில் வாழும் விலங்கினங்களின் இறைச்சி பெரிய மீன்கள் இளம் முள்ளங்கி பாகல் புடலை வெற்றிலை பச்சைக்கர்ப்பூர நீர் வெந்நீர், நெய் கருங்காலி முதலிய கசப்பும் கார்ப்புமான சுவைகள் கொண்ட பொருள்கள் பசுமோர் நெய் ஆட்டு இறைச்சி முதலியன நன்மைபயக்கக்கூடியவை.

### (ஆ) அபத்தியம்

குளியல் புளிப்புச் சுவை கொண்ட பொருள்கள் நீர்ப் பாங்கான இடத்தில் வாழும் விலங்குகளின் இறைச்சி, பால் தயிர் வெல்லம் உளுந்து வறட்சித்தன்மை கொண்ட உணவு நீர்வகை கள், கடினமான பொருள்களை உண்ணல் குப்புறப்படுத்தல், அசீரணத்தையும் சடராக்னிக் குறைவையும் உண்டாக்கும் பொருள்கள், எள் பழைய சோறு மீன் பகலில் தூங்குதல் முதலியன கூடாதவை.

## 43. மூத்திரகிருச்சிரம் (நீர்ச்சுருக்கு)

### (அ) பத்தியம்

*(1)* வாதத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்குக்கு எண்ணெய் கஷாய வஸ்திகள், உத்தரவஸ்தி, எண்ணெய்க்குளியல் முதலிய சிகிச்சைகளும் *(2)* பித்தத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்குக்கு மருந்து கலந்த நீரில் மூழ்கி இருத்தல், குளுமைத்தன்மை கொண்ட பொருள்களை உடல் மேல் பூசுதல், வஸ்தி முறை பேதியாகச் செய்தலும் *(3)* கபத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்குக்கு உடல் வியர்க்கச் செய்தல், பேதியாகச் செய்தல், வஸ்திமுறை, கார்ப்பும் தீக்ஷ்ணமும் உஷ்ணமும் கொண்ட பொருள்கள். யவ தானியம் முதலியவையும் நன்மை தரக்கூடியவை. மற்றுப் பழைய சிவப்புச்சம்பா அரிசி பசுவின்பால் தயிர் நெய் மோர் பயறு கொள்ளு இவற்றின் கஞ்சித் தெளிவு, இஞ்சி சர்க்கரை மது புடலை பூசுணை பேரிச்சங்காய் முதலியவற்றின் குருத்துகள் கடுக்காய்ப்பிஞ்சு நெருஞ்சில் சிறுகீரை கீரைத்தண்டு, குளுமைத் தன்மை கொண்ட உணவு நீர்வகைகள் பச்சைக்கர்பூரம் என்பன பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

கள் உடற்பயிற்சி கலவி ஊர்திகளின் மேல் அமர்ந்து சவாரி செய்தல், ஒன்றுக்கொன்றுமாறான தன்மை கொண்ட பொருள் களைக் கலந்து பயன்படுத்துதல், பழைய சோறு வெற்றிலை எண்ணெய், எண்ணெய் கலந்த மாவுப்பண்டங்களால் செய்த தின்பண்டங்கள், உப்பு பிண்ணாக்கு புளிப்புச்சுவை கொண்ட பொருள்கள், எள் கடுகு பெருங்காயம் உளுந்து மாங்காய் வெள்ளைப்பூண்டு சூட்டையும் நாவறட்சியையும் மலக்கட்டை யும் தோற்றுவிக்கும் பொருள்கள், பன்றியின் இறைச்சி வழி நடத்தல் மலத்தையும் சிறுநீரையும் தடுத்தல் முதலியன தீங்கு விளைவிக்கக் கூடியவை.

**44. மூத்ராகாதம் (சிறுநீர்த் தடை)**

**45. மூத்ராச்மரி (சிறுநீர்ப்பையில் தோன்றும் கல்) என்னும் நோய்ருக்குக்கூறியபத்தியமுறைகளையே கொள்க.**

**46. மூர்ச்சை-நினைவிழத்தல்**

**(அ) பத்தியம்**

உடலின் மேல் குளிர்ந்த நீரைத் தெளித்தல், குளிக்கச் செய்தல், மணிமாலைகளை அணிவித்தல், குளிர்ச்சி தரும் சந்தனம்பூசுதல்விசிறி கொண்டு வீசுதல், நறுமணமுள்ள நீரைக் குளியலுக்கும் பருகவும் பயன்படுத்தல், நிலவில் சுற்றுதல் புகை பிடித்தல் கண்களில் மையிடுதல் மூக்கில் மருந்திடுதல் இரத்தத்தை வெளியேற்றுதல் இரும்புக்கம்பியைக் காய்ச்சிச் சூடுபோடுதல், ஊசியால் குத்துதல், நினைவிழக்கும் போது தலைமுடியைப் பிடித்து இழுத்தல், கிள்ளுதல் கடித்தல் மூக்குத் துளைகளையும், வாயையும் அழுத்திப் பிடித்தல், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் பட்டினி கிடத்தல், சினமும் அச்சமும் தோற்றுவித்தல், உடலுக்கு துன்பம் தரும் படுக்கையில் படுக்கச் செய்தல், மனத்திற்கு இனிய கதைகளைக் கேட்கச் செய்தல், மழைநீரை பருகச்செய்தல், நூறுமுறை நீரில் அலசி தூய்மை யாக்கப்பட்ட நெய்யைப்பருகச் செய்தல், குளிர்ச்சிதரும்நிழலி லிருக்கச் செய்தல், மென்மையும் தீக்ஷ்ணமும் கொண்ட உணவுப் பொருள்கள், பொரியால் செய்த கஞ்சி, பழைய யவதானியம் பானையில் பழகிய நெய், பயத்தம் கஞ்சி காட்டு விலங்குகளின் இறைச்சி பசுவின்பால் சர்க்கரை வாழை புடலைபீர்க்கு 'முற்றிய பூசுணை கடுக்காய் தேங்காய் மாதுளம்பழம் இலுப்பைப்பூ, சிறுகீரை ஆற்றின் வெள்ள நீர், வெண்சந்தனம் பச்சைக்கர்ப்பூரம் மகிழ்ச்சி தரும் ஆடல் பாடல், உடற்பயிற்சி பழைய நிகழ்ச்சி களை நினைவு கூர்தல், வேதாந்த சிந்தனை, அசீரணத்தையும் சடராக்னிக் குறைவையும் நீக்கும் பொருள்கள், நாட்டியம் நாடகம் முதலியவற்றைப் பார்த்தல் முதலியன பத்தியமானவை.

**(ஆ) அபத்தியம்**

புது அரிசி 'வெற்றிலை கீரை வகைகள், பழைய சோறு எண்ணெய்ப்பசை கொண்ட சோறு வெயில் ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட உணவுப் பொருள்களைக் கலந்து உண்ணுதல், கவலை தூக்கம் அச்சம் கொள்ளுதல், மீன் மது வகைகள் எண்ணெய் கத்தரிக்காய், மோர் கோவை உளுந்து துவரை மலம் சிறுநீர் இவற்றைத் தடுத்தல், பசியையும் தூக்கத்தையும் நாவறட்சியையும் அடக்குதல், கலவி உடல்

வியர்க்கச் செய்தல் கார்ப்புச் சுவைகொண்ட பொருள்கள் முதலியன தீமை விளைவிக்கக்கூடியவை.

## 47. மூத்திரகாதம் (சிறுநீர் எளிதில் வெளிப்படாமல் தடைபடுதல்)

### (அ) பத்தியம்

எண்ணெய்க்குளியல் எண்ணெய் வஸ்தி பேதியாகச் செய்தல் உத்தரவஸ்தி நீரில் மூழ்கி இருக்கச் செய்தல் பழையநெல் காட்டு விலங்குகளின் இறைச்சிகள் மோர் பால் தயிர் பூசுணை புடலை கடுக்காய்ப்பிஞ்சு இளநீர் பாக்கு பேரீச்சை தென்னங் குருத்து உளுத்தம்பருப்புக்கஞ்சித்தெளிவு என்பன பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

ஒன்றுக்கொன்று எதிர்மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து பயன்படுத்துதல், உலாவுதல் வழி நடத்தல் எரிச்சலைத் தோற்றுவிப்பனவும், வறட்சியைத் தோற்றுவிப்பனவுமான பொருள்கள், மலத்தைக்கட்டும் பொருள்கள், கலவி மலத்தையும் சிறுநீரையும் அடக்குதல், வாந்தி எடுத்தல் என்பன கூடாதவை.

## 48. மூலநோய்

### (அ) பத்தியம்

பழைய அரிசி நெல்லிக்காய் புடலை சிறுகீரை சாரடை பசும்மோர் நெய் வெண்ணெய் பெருங்காயம் இந்துப்பு இளம்மாம்பிஞ்சு வெந்நீர் பயத்தங்கஞ்சித் தெளிவு, கருணைக்கிழங்கு இவை நன்மை பயக்கக்கூடியவை.

### (ஆ) அபத்தியம்

உளுந்து சுரைக்காய் கத்தரி புளிப்புக்கீரை மாவால் செய்த தின்பண்டங்கள், குளுமை தரும் பொருள்கள், பிண்ணாக்கு புலால் பருப்பு வகைகள், கடினத்தன்மை கொண்ட பொருள்கள், குதிரை முதலிய ஊர்திகளின் மேல் சவாரி செய்தல், தயிர் மீன் என்பன கூடாதவை.

## 49. மேதோ நோய் கொழுப்பு உடலில் மிகுதியானதால் தோன்றும் நோய்கள்)

### (அ) பத்தியம்

உடற்பயிற்சி இரவில் விழித்திருத்தல் கலவி உடல் மேல் பூச்சு வகைகள், பட்டினி கிடத்தல் வெயிலில் அலைதல் யானை

குதிரை முதலிய ஊர்திகளின் மேல் சவாரி செய்தல், கவலை, வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் உடலை இளைக்கச் செய்யும் உணவுநீர் முதலியவை, பழைய சம்பா அரிசி மூங்கில்அரிசி வரகு முதலிய புல்லரிசி வகைகள், தினை சோளம் யவதானியம் கொள்ளு கடலை சிறு கடலை பயறு துவரை தேன் பொரிமாவு கார்ப்பும் கசப்பும் துவர்ப்புமான சுவைகள் கொண்ட பொருள்கள், மோர் மீன் சள் பழுத்த கத்தரி கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் குங்கிலியம் உலோகபற்பம் வாகைப்பழம் பாச்சோத்திமலர் சுக்கு மிளகு திப்பிலி கடுகு, கடுகெண்ணெய் ஏலஅரிசி வறட்சிதன்மையுள்ள பொருள்கள், எள்ளெண்ணெய் கீரை வகைகள், குளிக்கவும் பருகவும் பயன்படுத்தும் வெந்நீர் சிலாசத்து அகிற்பூச்சு பாயசம் முதலியன நன்மை தரக்கூடியவை.

## (ஆ) அபத்தியம்

ரஸாயனப் பொருள்கள் சம்பா அரிசி, புதுஅரிசி, கோதுமை பால் கருப்பஞ்சாறு சர்க்கரை வெல்லம் புலால் மீன் உளுந்து இனிப்புச்சுவை கொண்ட உணவு, உடலைச் செழிப்புறச் செய்யும் உணவு, நீரை மிகுதியாகப் பருகுதல், அதிகமாக வாந்தி எடுத்தல் உடலுக்கு மிக்க சுகம் அளிக்கும் செயல்கள், பகலில் தூங்குதல் சந்தனப்பூச்சு மலர்மாலை முதலியன தீமை பயக்கச் கூடியவை.

## 50. மேகநோய் (நீரிழிவு)

## (அ) பத்தியம்

வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், கபத்தையும் கொழுப்பையும் போக்கும் பொருள்களைக் கொண்டு உடல் மேல் பூசிக்கொள்ளுதல், செரிமான சக்தியை வளர்க்கும் மருந்துகள், காடுகளில் தாமே முளைத்த புல்லரிசி வகைகள் தினை யவதானியம் மூங்கிலரிசி வரகு சாமை சோளம் பழைய கொள்ளு பயறு கடலை துவரை இவற்றின் கஞ்சித் தெளிவு முதலியவை, எள் பொரி பழையசள் தேன் மோர், எருமை கழுதை இவற்றின் சிறுநீர், முயல் தித்தரி பயில் புறா சிட்டுக் குருவி புலி மான் கிளி முதலிய காட்டு விலங்கு பறவை இனங்களின் இறைச்சி, அத்தி நெல்லிபேய்ப்புடல் சிறு பாகல் கக்கரி முருங்கை வெட்பாலை வாழை முதலிய காய்கள், எலிச்செவி பொன்னாங்கண்ணி நெருஞ்சில் வெந்தயம் தண்டுக் கீரை முதலிய இலை வகைகள், தாமரை ஆம்பல் இவற்றின் கிழங்குகள், தேங்காய் விளாங்கனி பேரீச்சை பனம்பழம் சுக்கு

மிளகு திப்பிலி கசப்பும் கார்ப்புமான சுவை கொண்ட பொருள்கள், யானை, குதிரை, முதலியவற்றின் மீது சவாரி செய்தல், வெயிலில் அலைதல், உடற்பயிற்சி நடை குளியல் எண்ணெய்க் குளியல் முதலியன பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

மலத்தையும் சிறுநீரையும் தடுத்தல், உடல் வியர்க்கச் செய்தல் புகை பிடிக்கச் செய்தல் இரத்தத்தை வெளியேற்றுதல் எப்பொழுதும் ஓரிடத்தில் உட்கார்ந்திருத்தல், பகல் தூக்கம் புது அரிசி, தயிர் வெல்லம் பெருங்காயம் உப்பு வெள்ளைப்பூண்டு எள் எண்ணெய் மீன் கடுகு மாவுப்பண்டங்கள், நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்குகளின் இறைச்சி, கலவிகள் பால் நெய் சுரைக்காய் பூசுணை கரும்பு இனிப்பு புளிப்பு உவர்ப்புச்சுவைகள் கொண்ட பொருள்கள், பித்தத்தைத் தோற்றுவிக்கும் பொருள்கள், பலாப்பழம் கிழங்கு வகைகள், கண்விழித்தல் முதலியன கூடாதவை.

அதிமூத்திரம் நீரிழிவு சர்க்கரைநீரிழிவு இவை அனைத்திற்கும் பத்திய முறைகள் ஒன்றே. எனவே மூன்றிற்கும் உரியவற்றைக் கவனித்து பயன்படுத்துதல் நலம்.

## 51. மேகவாத நோய்

### (அ) பத்தியம்

பழைய அரிசி பயறு துவரை இவற்றின் கஞ்சித் தெளிவு, பசும்பால் வெண்ணெய் நெய் உளுத்தம் பருப்பால் செய்த கொழுக்கட்டை, புடலை பீர்க்கு கீரைத்தண்டு வெந்தயக் கீரை முள்ளங்கி முதலியன பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

இறைச்சி மீன் தயிர் கடுகு கடுகுஎண்ணெய் கத்தரிக்காய் முருங்கைக்காய் பூசுணை கடலை சிறு கடலை கொள்ளு தயிர் புளிசேர்த்துச்சமைத்தகறிகாய்கள் முதலியன. சூடு மற்றும் பித்தத்தை வளர்க்கும் பொருள்கள் கூடாதவை.

## 52. யானைக்கால்

### (அ) பத்தியம்

வாதத்தினால் தோன்றிய யானைக்கால் நோயில் கால் மணிக்கட்டுக்கு மேல், நான்கு அங்குலம் விட்டும்

பித்தத்தினால் தோன்றியதாயின் கால்மணிக்கட்டிலும், கபத்தினால் தோன்றியதாயின் கால் கட்டை விரலிலும், நரம்பைக் கீறி தோஷத்தை வெளியேற்ற வேண்டும். மற்றும் வாந்தியாகச் செய்தல் வியர்க்கச் செய்தல் இரத்தத்தை வெளியேற்றுதல் பட்டினி கிடத்தல் பேதியாகச் செய்தல் பற்றுப் போடுதல், பழைய அறுபது நாள் சம்பா அரிசி யவதானியம் கொள்ளு வெள்ளைப்பூண்டு கத்தரிக்காய் புடலங்காய் பாகற்காய் முருங்கைக்காய் இளம் முள்ளங்கி சாரடை விளக்கெண்ணெய் பசுவின் சிறுநீர் கார்ப்பு கசப்புச் சுவை கொண்ட பொருள்கள் சடராக்னியை வளர்க்கக் கூடிய பொருள்கள் நன்மை பயக்கக்கூடியவை.

## (ஆ) அபத்தியம்

மாவால் செய்த பண்டங்கள், பாலால் செய்த பண்டங்கள், வெல்லம் நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்குகளின் அல்லது பறவைகளின் இறைச்சி, இனிப்பு புளிப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள் கொழகொழப்பையும் அசீரணத்தையும் தோற்றுவிப்பவை உடலிலுள்ள துவாரங்களின் வழியே நீரைப்பெருகச் செய்யக்கூடியவை ஆகியவை யானைக் கால் நோய்க்குத் தீங்கு விளைவிக்கக்கூடியவை.

## 53. வாந்

## (அ) பத்தியம்

பேதியாகச் செய்தல் பட்டினிகிடத்தல் குளியல் பொரியால் செய்த கஞ்சி பழைய சம்பா அரிசி பயறு பட்டாணி கோதுமை யவதானியம் தேன் காட்டு விலங்குகளின் அல்லது காட்டுப்பறவைகளின் இறைச்சி கொத்துமல்லிவிதை தேங்காய் எலுமிச்சை நெல்லி இலந்தை திராட்சை விளாம்பழம் மாதுளம்பழம் நறிஞ்சிப்பழம் கடுக்காய்ப்பிஞ்சு ஜாதிக்காய் வெட்டிவேர் வேப்பந்துளிர் ஆடாதொடை சர்க்கரை முதுக்கன் கிழங்கு சிறுநாகப்பூ மனத்திற்கினிய உணவு வகைகள் குளிர்ந்த நீர் கஸ்தூரி சந்தனம் நிலா பானகம் ஆடல் பாடல் முதலியவை பத்தியமானவை.

## (ஆ) அபத்தியம்

மூக்கில் மருந்திடுதல் வஸ்திமுறை உடல் வியர்க்கச் செய்தல் எண்ணெய் முறை இரத்தத்தை வெளியேற்றுதல் வேப்பங்குச்சி போன்ற மரக்குச்சியால் பல்துலக்குதல் திரவ உணவு அச்சம் கவலை துயரம் எண்ணெய்ப்பசையும்

சூடும் கொண்ட உணவுகள் வாழை பீர்க்கு கோவை ஏல அரிசி கடுகு உடற்பயிற்சி முதலியன தீங்கு விளைவிக்கக் கூடியவை.

## 54. வாத

### (அ) பத்தியம்

தோலையும் மாமிசத்தையும் சார்ந்துள்ள உத்தானம் என்னும் வாதநோய்க்கு எண்ணெய்க்குளியல் மருந்து கலந்த நீரை உடல் மேல் தெளித்தல் பற்றுப் போடுதல் மருந்தை வைத்துக் கட்டுப் போடுதல்.

எலும்பையும், எலும்புக்குள்ளிருக்கும் சோற்றையும் சார்ந்து தோன்றிய கம்பீரம் எனும் வாத நோய்க்கு, எண்ணெய் மருந்தைப் பருகச் செய்தல், ஆஸ்தாபனவஸ்திமுறை பேதியயாகச் செய்தல் தக்கதாகும்.

மற்றும் வாத இரத்தத்திற்கு ஊசியால் குத்துதல், அட்டையைக் கொண்டு கெட்ட இரத்தத்தை உறியச் செய்தல், பீச்சாங்குழாய் மூலம் மருந்தைப் பீச்சுதல், சுரைக்காய் முதலியவற்றைக் கொண்டு கெட்ட இரத்தத்தை வெளியேற்றுதல், நூறுமுறை தூய்மையாக்கப்பட்ட நெய்யைப்பூசி குளிக்கச் செய்தல், செம்மறியாட்டுப்பாலைக் கொண்டு உடலை நனைத்தல் முதலியன சிகிச்சை முறைகளாகும்.

மற்றும் பழைய சம்பா அரிசி, சிவப்புச்சம்பா அரிசி கடலை சிறுகடலை காட்டுப்பயறு, பயறு துவரை மயில் தித்தரி கோழி முதலிய (காலால் நிலத்தைக் கீறி உணவு கொள்ளும்) பறவைகளின், மற்றும் கிளி சிட்டுக்குருவி புறா முதலிய அலகால் உணவைப் பொறுக்கித்தின்னும் பறவைகளின் இறைச்சி, புளிச்சைக்கீரை பிரப்பங்கீரை சக்கரவர்த்திக்கீரை பாகற்காய் திராட்சை வெள்ளைச்சர்க்கரை, வெண்ணெய் சீந்தில்கொடி, கஸ்தூரி வெண்சந்தனம் அகில் கசப்புச் சுவையுள்ள பொருள்கள், சரளமரத்தின் எண்ணெயை உடலின் மேல் தேய்த்தல் முதலியன பத்தியங்களாகும்.

### (ஆ) அபத்தியம்

பகலில் தூங்குதல், நெருப்பினருகில் இருத்தல், உடற்பயிற்சி வெயிலில் சுற்றுதல், கலவி உளுந்து கொள்ளு பட்டாணி க்ஷார வகைகள், நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்கு மற்றும் பறவைகளின் இறைச்சி ஒன்றுக்கொன்று

மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து பயன் படுத்துதல், தயிர் கள் பிண்ணாக்கு புளிப்பும், கார்ப்பும் உஷ்ணத் தன்மையும் உள்ளவையுமான பொருள்கள், சடராக்னியைக் குறைக்கும் தன்மை கொண்டவை, அசீரணத்தையும் தோற்று விக்கும் பொருள்கள், உப்பு வகைகள், பொரிமாவு முதலியவை அபத்தியங்களாகும்.

## 55. வாதநோய்கள்

### (அ) பத்தியம்

வாதத்தைப்போக்கும் மருந்துகளைக் கொண்டு எண்ணெய்க்குளியல் உடல்மேல் தேய்த்தல், வஸ்தி முறை எண்ணெய் முறை மருந்துகலந்தநீரில் மூழ்கியிருக்கச் செய்தல், கீழக்காற்றுபடாமலிருத்தல், நெருப்பால் சுடுதல் வாதத்தைப் போக்கும் மருந்துகளைக் கொண்டு பற்றுப்போடுதல் தரையில் படுக்கச் செய்தல், மருந்து கலந்த எண்ணெய் நிரம்பிய தொட்டியில் மூழ்கியிருக்கச் செய்தல், தலைமேல் மருந்து எண்ணெயைத்தேக்கி வைக்கும் முறை மூக்கில் மருந்திடுதல் வெயிலில் சுற்றுதல் நெய் எண்ணெய் புளிப்பு இனிப்பு உவர்ப்புச் சுவைகள் கொண்ட பொருள்கள், புதியஎள் கோதுமை உளுந்து ஓராண்டுக்குமேல் பழமையான சம்பாஅரிசி கொள்ளின் தெளிவு கிராமங்களிலும் நீர்ப்பாங்கான இடங்களிலும் வாழும் விலங்கு மற்றும் பறவை இனங்களின் இறைச்சி, பொந்தில் வாழும் உயிரினங்களின் புலால் காட்டுப்பறவைகளின் இறைச்சி முருங்கை புடலை கத்தரி முதலிய காய்கள், வெள்ளைப்பூண்டு மா சிற்றீச்சை எலுமிச்சை இலந்தை திராட்சை ஆரஞ்சு இலுப்பை புளி தேங்காய் எண்ணெய்ப் பசையும் உஷ்ணத்தன்மையும் கொண்ட பொருள்கள் நன்மை பயக்கக்கூடியவை.

### (ஆ) அபத் யம்

கவலை கண்விழித்தல் மலம் சிறுநீர் இவற்றின் வேகங்களைத்தடுத்தல் வாந்தி எடுத்தல் உடற்பயிற்சி பட்டினி கிடத்தல் கடலை காட்டுப்பயறு புல் அரிசி வகைகள் தினை சாமை மூங்கில்அரிசி சோளம் காராமணி பயறு வெல்லம் அகில் தாமரைமலர் பாக்கு மொச்சை காய்களில் விதை களாகத் தோன்றும் உளுந்து முதலிய தானியங்கள், கீரைவகை கள் அத்திக்காய் பனிநீர் குளிர்ந்த நீர் ஆற்று நீர் நாவற்பழம் கழுதைப்பால், ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து பயன்படுத்துதல், க்ஷாரப்பொருள்கள்

உலர்ந்த இறைச்சி தேன் கலவி கசப்பு கார்ப்பு துவர்ப்புச் சுவைகொண்ட பொருள்கள் யானை குதிரை முதலிய ஊர்தி களின் மேல் சவாரி, இடைவிடாமல் அலைதல், எப்பொழுதும் படுத்திருத்தல் இரத்தத்தை வெளியேற்றும் சிகிச்சை முதலியன கூடாதவை.

## 56. விக்கல்

### (அ) பத்தியம்

உடல் வியர்க்கச் செய்தல் வாந்தியாகச் செய்தல் மூக்கில் மருந்திடுதல் புகை பிடிக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் தூங்கச் செய்தல் எண்ணெய்ப்பசையும் மென்மை யும் உவர்ப்புச் சுவையும் கொண்ட உணவு உண்ணுதல், பழைய கொள்ளு கோதுமை சம்பாஅரிசி அறுபதுநாள் குறுவை அரிசி யவதானியம் காட்டில் வாழும் மான் தித்திரிப்புள் முதலிய வற்றின் இறைச்சி, வெந்நீர், துறிஞ்சிப்பழம் தேன் பசுவின் சிறுநீர் விளாம்பழம் வெள்ளைப்பூண்டு புடலை இளம் முள்ளங்கி கருந்துளசி வெட்டிவேர் கலந்தநீர், வாதத்தையும் கபத்தையும் போக்கும் உணவு, நீர் வகைகள் அச்சம் சினம் வியப்பு முதலிய வற்றைத் தோற்றுவித்தல் மிக்க மகிழ்ச்சியை உண்டாக்குதல் விருப்பமும் மனத்திற்குச் சஞ்சலமும் தோற்றுவிக்கும் செய்கை களைப்புரிதல், மூச்சை அடக்குதல், மண்கட்டியை நெருப்பில் சுட்டு நீரைத் தெளித்து முகர்தல், கண்ணிமைகளின் நடுவில் தாரையாக நீரை ஊற்றுதல் தொப்புளுக்கு மேற்பகுதியைக் கசக்குதல் மஞ்சளை விளக்கில் காய்ச்சி அதைக் கொண்டு, பாதங் களுக்கு இரண்டங்குலம் மேலுள்ள பகுதியில் அல்லது தொப் புளுக்கு மேற் பகுதியில் சூடுபோடுதல் முதலியன விக்கல்நோய் தோன்றியபோது நன்மை பயக்கக்கூடியவையாகும்.

### (ஆ) அபத்தியம்

அபானம் சிறுநீர் மலம் ஏப்பம் இருமல் என்பனவற்றை அடக்குதல், தூசியுடன் கூடிய காற்றைச் சுவாசித்தல், வெயிலில் சுற்றுதல் உடற்பயிற்சி அல்லது சோர்வு தரும் வேலைகளைச் செய்தல் ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து பயன்படுத்தல், உண்ட உணவு செரிமானமடையும் முன் உண்பது, மலத்தைக் கட்டுபவையும் எரிச்சலையும் வறட்சியையும் கபத்தையும் தோற்றுவிப்பனவும் ஆன பொருள்களைப் பயன்படுத்தல் மொச்சை உளுந்து பிண் ணாக்கு நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் விலங்குகளின்

இறைச்சி, செம்மறியாட்டுப்பால் வஸ்திமுறை மீன் கடுகு சுரைக்காய் கருணைக் கிழங்கு எண்ணெயில் வறுத்த பண்டங்கள், அசீரணத்தைத் தோற்றுவிப்பவை குளிர்ந்த தன்மை கொண்டவை புளிப்புச் சுவையுண்டயவை முதலியவை விக்கல் நோய்க்குத் தீங்கு இழைப்பவையாகும்.

## 57. விரணம் வீக்கம் முதலியன

### (அ) பத்தியம்

பற்றுப்போட்டு வீக்கத்தைக் கரையச் செய்தல் மாவைச் கிளறிக்கட்டுதல் நரம்பைக்கீறி இரத்தத்தை வெளியேற்றுதல், விரணத்தை ஆற்றும் மருந்துகளைப் பயன்படுத்தல், நெருப்பால் சுடுதல் கம்பிகளைக் கொண்டு விரணத்தில் உள்ள சீழ் வெளியாகும்படிச் செய்தல் வியர்க்கச்செய்தல் மருந்து வைத்துக் கட்டுப்போடுதல், விரணத்தின்மேல் மருந்துத்தூளைத் தெளித்தல் புகை பிடித்தல் விரணத்தை ஆற்றும் இலைகளை மேல் வைத்துக் கட்டுதல், சந்தனம் பூசுதல் எள்ளை அறைத்துப் பூசுதல் குளிர்ந்த நீரால் கழுவுதல், பழைய சம்பா அரிசி யவதானியம் அறுபதுநாள் குறுவை கோதுமை காட்டு விலங்குகள் மற்றும் பறவைகளின் இறைச்சி பொரிக்கஞ்சிகடுகெண்ணெய் எள்எண்ணெய் தேன் சிறுகடலை துவரை பயறு இவற்றின் கஞ்சித் தெளிவு சர்க்கரை கத்தரி கக்கரி பாகல் புடலை இளம் முள்ளங்கி சக்கரவர்த்திக்கீரை சிறுகீரை கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் பலாக்காய் பூலாங்கிழங்கு மாதுளம்பழம் இந்துப்பு திராட்சை இனிப்பு கசப்புச் சுவை கொண்ட பொருள்கள் எண்ணெய்ப்பசையும் உஷ்ணத்தன்மையும் கொண்ட திரவப் பகுதி மிகுந்துள்ள உணவு வகைகள் முதலியன பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

புதிய தானியங்கள் எள் பட்டாணி உளுந்து கொள்ளு பனிநீர் பால் அல்லது கருப்பஞ்சாறு கொண்டு பக்குவம் செய்தவை, புளிப்புச் சுவையுள்ளவை நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் விலங்குகளின் இறைச்சி, கீரைவகைகள் உடலுக்குப் பழக்கமில்லாத உணவுப் பொருள், எரிச்சலையும் மலக் கட்டையும் அசீரணத்தையும் தோற்றுவிப்பவை கார்ப்பும் குளுமைத்தன்மையும் உவர்ப்புச் சுவையும் கொண்டவை கலவி உடற்பயிற்சி உரக்கப் பேசுதல், மனத்திற்சினிய நங்கைகளைப் பார்த்தல் பகல் தூக்கம் இரவில் கண்விழித்தல் மிக அலைதல் குறைவாக உண்ணுதல் விரணங்களில் தோஷங்கள் முழுதும் வெளியேறாமல் தங்கியிருக்கும் போது, விரணத்தை ஆற்றும்

சிகிச்சை புரிதல் மூக்கிலிடும் மருந்து, வெற்றிலை, மிகுந்த காற்று, வெயில் புகை மழை தூசி படும் இடங்களில் தங்குதல், அச்சம் சினம் வாந்தி மகிழ்ச்சி வருத்தம் தீக்ஷ்ணமும் உஷ்ணத் தன்மையும் வறட்சியும் கொண்ட பொருள்கள், நகத்தால் கீறுதல் பட்டினி கிடத்தல் முதலியன தீங்கானவை.

## 58. வித்ரதி (வயிற்றினுள் தோன்றி தொப்புளில் வெளிக்கிளம்பும் ஒரு வகைக்கட்டி)

### (அ) பத்தியம்

பக்குவம் அடையாதபோது பேதியாகச் செய்தல், மேல்பூச்சு இரத்தத்தை வெளியேற்றுதல், வியர்க்கச் செய்தல் பழையசாமை கொள்ளு வெள்ளைப்பூண்டு சிவப்பு முருங்கை வாழை புடலை பாகல் பூசணி சாரடை கொடிவேலி தேன் வீக்க நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சைகள் நலம் தரும். பக்குவம் அடைந்த பிறகு அறுவை சிகிச்சை செய்தல் பழைய நெய், சிவப்புநெல் எண்ணெய் நெய் பயத்தங்கஞ்சி, காட்டு விலங்குகளின் இறைச்சிச்சாறு பச்சைக் கர்ப்பூரம், சந்தனம் காய்ச்சிக் குளிர்ந்த நீர், விரண ரோகத்திற்கு உரியவை அனைத்தும் நன்மை பயக்கக்கூடியவை.

### (ஆ) அபத்தியம்

பக்குவமடையாத நிலையில் வீக்க நோய்க்குக் கூடாதனவும், பக்குவமான பின் வீரணங்களுக்குக் கூடாதனவும் இந்த நோய்க்கும் கூடாதவையாதலால் தீங்கு விளையும் என அறிக.

## 59. விஷநோய்

### (அ) பத்தியம்

மந்திரம், ரக்ஷைகட்டுதல், பேதியாகச் செய்தல் வாந்தி எடுக்கச் செய்தல், கண்விழிக்கச் செய்தல் இரத்தத்தை வெளியேற்றுதல், நீரால் நனைத்தல், குளிக்கச் செய்தல் மூக்கில் மருந்திடுதல் கண்களில் மருந்தை மைபோல் இடுதல், மருந்தை மேல் தேய்த்தல் நெருப்பால் சுடுதல், ஒரு நஞ்சைப் போக்கக்கூடிய மற்றொரு நஞ்சைப்பயன்படுத்துதல், புகைபோடுதல் அறுபது நாளில் விளையும் குறுவை அரிசி, தினை பயறு அரேணுகம் புத்துருக்கு நெய், மயில் தித்திப்புள், மான் எலி முள்ளம்பன்றி அணில் இவற்றின் இறைச்சி, புடலை நெல்லி கத்தரி சிறுகீரை மொச்சை வல்லாரை சக்கரவர்த்திக்

கீரை கறிவேப்பிலை வெள்ளைப்பூண்டு மாதுளை புளிப்புச் சுவையுள்ள விளாங்கனி கடுக்காய் சிறுநாகப்பூ பசுவின் ஆடுகளின் அல்லது மனிதனின் சிறுநீர், மோர் குளிர்ந்த நீர் சர்க்கரை எரிச்சலைத் தோற்றுவிக்காத பொருள், இந்துப்பு குங்குமப்பூ மேற்கு அல்லது வடக்கிலிருந்து வீசும் காற்று, மஞ்சள் வெண் சந்தனம் கோரைக்கிழங்கு வாகை கஸ்தூரி இனிப்பு கசப்பு சுவைகளைக் கொண்ட பொருள்கள், தங்கபற்பம் என்பன விஷ நோய் கொண்டவருக்கு நன்மை அளிக்கக்கூடியவையாகும்.

### (ஆ) அபத்தியம்

ஒன்றுக் கொன்றுமாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து பயன்படுத்துதல், சினம், உண்டதும் மறுபடி எதையேனும் உண்ணுதல், உடலுக்குச் சோர்வு தரும் வேலை, கலவி, மிகுந்த காற்றில் சுற்றுதல் புளிப்பு உவர்ப்புச சுவைகளுள்ள பொருள்கள், உடல் வியர்க்கச் செய்யும் சிகிச்சை வெற்றிலை தூக்கம் அச்சம் புகைபிடித்தல் தும்முதல் முதலியன விஷநோய் கொண்டவனுக்குக் கூடாதவை.

## 60. கனோரியா என்னும் பால்வினை நோய்

### (அ) பத்தியம்

பழைய அரிசி துவரை பயறு இவற்றின் பருப்புகள், பசுமோர் பசுநெய் கீரைத்தண்டு புடலை பீர்க்கு வெங்காயம் முள்ளங்கி இவற்றின் இலைகள், சர்க்கரை கற்கண்டு, பனங்கற்கண்டு பனைநுங்கு பனைவெல்லம் ஆட்டிறைச்சி ஆகியவை நனமை தரக்கூடியவை.

### (ஆ) அபத்தியம்

புது அரிசி கொள்ளு அரைக்கீரை கடுகு எண்ணெய் பூசணி கோழி வாத்து பன்றி இவற்றின் இறைச்சி, பாகல் மா இவற்றின் காய்கள், கிணற்றுநீர் பித்தத்தையும் சூட்டையும் வளர்க்கும் பொருள்கள், தீங்கு விளைவிக்கக் கூடியவை.

## 61: ஸிப்லிஸ் என்னும் பால் வினை நோய்

### (அ) பத்தியம்

பழைய அரிசி துவரம்பருப்பு பசுமோர் பசுநெய் வெந்நீர் புடலை பீர்க்கு ஆட்டு இறைச்சி நன்மை தரக்கூடியவை.

### (ஆ) அபத்தியம்

புது அரிசி கொள்ளு புளிப்புச்சுவை மீன் பழைய சோறு கோழி வாத்து பன்றி இவற்றின் இறைச்சி, கடுகு எண்ணெய் பூசணி மாங்காய் கலவி காற்று குளிர்ந்த நீரைப் பயன்படுத்தல் என்பன தீங்கு விளைவிக்கக்கூடியவை.

## பருவங்களுக்குத் தக்க பத்திய அபத்தியங்கள்

உடல் நலம் கொண்டவர்கள், அந்தந்தப் பருவத்திற்கேற்ற பத்தியமான உணவை உட்கொண்டால், உடல் நலம் நன்கு வளரும். பருவத்திற்குத் தகாத உணவு வகைகளை உட்கொண்டால் நோய்கள் தோன்றலாம். எனவே பருவத்திற்கேற்ற பத்திய முறை இங்கு விளக்கப்படுகிறது.

### 1. இளவேனில் (சித்திரை-வைகாசி)

### (அ) பத்தியம்

வாந்தியாகச் செய்தல் பேதியாகச் செய்தல் மூக்கில் மருந்திடுதல் என்னும் முறைகளால் உடலைத் தூய்மைப் படுத்துதல் உடற்பயிற்சி கலவியில் ஈடுபடுதல் குங்குமப்பூ கருஅகில் சந்தனம் இவற்றை அரைத்து உடல் மேல் பூசிக் கொள்ளுதல் மஞ்சள் ஆடாதொடை கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் சுக்கு மிளகு திப்பிலி அமுக்கிராங்கிழங்கு ஓமம் சீரகம் இஞ்சி தேனில் ஊறவைத்த திப்பிலி, தேனில் ஊற வைத்த கடுக்காய் இவைகளைப் பயன்படுத்தல், காற்றடர்ந்த காடுகளில் வாழும் விலங்கினங்களின் இறைச்சி சம்பா அரிசி கடலை காட்டுப் பயறு கடுகு பயறு பட்டாணி யவதானியம் துவரை வரகு முதலிய புல் அரிசி வகைகள், சோளம் பூசணி சுரை கக்கரி புடலை பீர்க்கு முருங்கை பாகல் கத்தரி சாரடை சக்கரவர்த்திக்கீரை சிறுகீரை, கீரைத்தண்டு கருணை முந்திரி தேன் பழையமது கார வகைகள் சூடான பசும்பால் பொரி கோதுமை உடலுக்குச் சோர்வுதரும் வேலைகளில் ஈடுபடுதல், கண்விழித்தல் மோர்பருகுதல் முயல் மான் ஆடு தித்திரி சிட்டுக் குருவி மயில் சிறுமீன் இவற்றின் இறைச்சி வகைகள் பூங்காவில் உலாவுதல் முதலியன இந்தப் பருவத்திற்கு நலம் தரக்கூடியவை.

### (ஆ) அபத்தியம்

பீர்க்கு உளுந்து முள்ளங்கி தயிர் கரும்பு காராமணி பயறு முதலியவற்றின் காய்களைச் செடியுடன் சுட்டு, அந்தப்

பருப்பு வகைகளை உண்பது கோழி செம்மறியாடு ஆகியவற்றின் இறைச்சி, அவல் கரும்புச்சாறு வெல்லம் சர்க்கரை வெங்காயம் புளிப்பும் எண்ணெய்ப்பசையும் கொண்ட பொருள்கள், பகல் தூக்கம் முதலியவை அபத்தியமானவை எனவே அவற்றைக் கூடியவரை விலக்குவதால் உடல் நலத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

## 2. முதுவேனில் (ஆனி - ஆடி)

### (அ) பத்தியம்

வெள்ளைச்சம்பா அரிசி பழைய யவதானியம் கோதுமை காட்டுவிலங்குகளின் இறைச்சி, சர்க்கரை பானகம் பச்சைக் கர்ப்பூரம் கலந்த பால், பசு எருமை இவற்றின் பால், நெய் திராட்சை பலா மா வாழை முதலியவற்றின் பழங்கள், குளுமையைத் தரும் உணவு நீர் வகைகள், குளுமைதரும் இல்லங்களிலும் தோட்டங்களிலும் வசித்தல், ஆற்று நீர் மல்லிகை மலர்கள் பகலில் தூங்குதல் ஆடல் பாடல் முதலியவைகளில் ஈடுபடுதல் முதலியன நன்மை பயக்கக் கூடியவை.

### (ஆ) அபத்தியம்

உடற்பயிற்சி வெயிலில் சுற்றுதல் கார்ப்பு புளிப்பு உவர்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்களைப் பயன்படுத்தல், மிக்க கலவி, உஷ்ணத்தன்மை கொண்டவையும் வறட்சியைத தோற்றுவிப்பனவுமான பொருள்களைப் பயன்படுத்தல் என்பன கூடாதவை.

## 3. கார்ப்பருவம் (ஆவணி - புரட்டாசி)

### (அ) பத்தியம்

பருவத்துவக்கத்தில் வாந்தியாகச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய முறைகளால் குடலைத் தூய்மை படுத்துதல், பழைய சம்பா அரிசி, கோதுமை அரிஷ்டம் என்னும் திரவ மருந்துகள் யூஷம் முதலியகஞ்சி வகைகள், காட்டு விலங்குகளின் இறைச்சி சடராக்னியை வளர்க்கக் கூடிய பொருள்கள் எண்ணெய்ப்பசையும் சூடும் கொண்ட உணவு வகைகள், சௌவர்சலஉப்பு கலந்த தயிர்த்தெளிவு, மழைநீர் குளத்துநீர் காய்ச்சி குளிரவைத்த நீர், இனிப்பு புளிப்பு உவர்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்கள், சந்தனம் பனி சூடு முதலியவைகளால் தாக்கப்படாத இல்லத்தில் வசித்தல் என்பன நன்மைபயக்கக் கூடியவை.

### (ஆ) அபத்தியம்

உடலுக்கு சோர்வு தரும் வேலை வெயிலில் இருத்தல் பொரிமாவு கலந்த நீர் ஆற்றுநீர் பகலில் தூங்குதல் கலவி குளிர்காற்று வறட்சித்தன்மை கொண்ட பொருள்கள், தீக்ஷ்ணகுணமுள்ள பொருள்கள் குளுமை தரும் பொருள்கள் குளிர்ந்த நீரைப்பயன்படுத்துதல் என்பன கூடாதவை.

## 4. கூதிர்ப் பருவம் (ஐப்பசி-கார்த்திகை)

### (அ) பத்தியம்

ஆற்றுநீர் நெய் பேதி முறையால் தோஷங்களை வெளியேற்றுதல், வெள்ளைச்சம்பா அரிசி, கோதுமை காட்டு விலங்குகளின் இறைச்சி யவதானியம் பயறு தேன் பால் நெல்லிக்காய் புடலை எளிதாகச் செரிமானமாகும் உணவு, துவர்ப்பு கசப்பு இனிப்பு சுவைகளுள்ள பொருள்கள், சர்க்கரை பித்தத்தைத் தணிக்கும் பொருள்கள், கரும்பு பச்சைக் கர்ப்பூரம் குளத்து நீர் குளிர்ந்த நீர் சந்தனம் மிக மெல்லிய ஆடைகள், மலர்மாலைகள் அணிதல் முத்து மாலையணிதல் வறட்சியும் குளுமையும் தரும் பொருள்கள் முதலியன பத்தியமானவை.

### (ஆ) அபத்தியம்

வயிறு நிரம்ப உண்பது, தயிர் எண்ணெய் வெயிலில் சுற்றுவது கீழ்க்காற்று கிணற்றுநீர் பனிநீர் காரவகைகள் உளுந்து எள் நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் விலங்குகளின் இறைச்சி பகல்தூக்கம் தீக்ஷ்ணமும் வறட்சியும் கொண்ட பொருள்கள் இவை கூதிர்ப்பருவத்தில் தீங்கு ஏற்படுத்தக்கூடியவை என்று உணர்க.

## 5. முன்பனி, பின்பனி பருவங்கள் (மார்கழி தை மாசி பங்குனி)

### (அ) பத்தியம்

வாதத்தைப்போக்கும் பொருள்கள் நறுமணமுள்ள எண்ணெயை உடல் மேல் பூசிக் குளித்தல், அத்தகைய எண்ணெயைத் தலையில் தேக்கி வைத்துக் கொள்ளுதல் (சிரோவிரேசனமுறை) இலேசான சூடுதரும் ஆடைகளை அணிதல், அகிற்புகை குங்குமப்பூ கஸ்தூரி முதலியவற்றைப் பூசிக் கொள்ளுதல், புதியசோறு இனிப்பு புளிப்பு உவர்ப்புச் சுவைகளைக் கொண்ட உணவுப் பொருள்கள், வெயில் உடல் வியர்க்கச் செய்யும் முறை இளஞ்சூடுள்ள நீர் உளுந்து கோதுமை இவற்றால் செய்யப்பட்ட உணவுப் பண்டங்கள், கருப்பஞ்சாறு

பால் இவற்றாலான உணவு வகைகள், எண்ணெய் நீர்ப்பாங் கான இடங்களிலும் பொந்துகளிலும் வாழும் விலங்குகளின் இறைச்சி, எண்ணெய்ப்பசையும் சூடும் கொண்ட உணவு, இரவில் சிறிது சூடு தரும் இல்லத்தில் வசித்தல் மெத்தையுடன் கூடிய படுக்கை, மனத்திற்கினிய நங்கையுடன் கலவி கம்பளி தோல் பட்டு இவற்றாலான ஆடைகள் முதலியன நன்மை தரக்கூடியவை.

## (ஆ) அபத்தியம்

பனிநீர் மிக்க காற்று நிறைவாக உண்ணுதல் துவர்ப்பு கசப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்கள் பட்டினி கிடத்தல் வாதத்தை வளர்க்கக் கூடிய பொருள்கள் குளுமைத் தன்மையும் வறட்சியும் கொண்ட பொருள்கள் என இவற்றை விடவேண்டும்.

### காய்கறி கீரை வகைகளை விலக்க வேண்டியவர்கள்

வயிற்றுவலி குன்மம் பெருவயிறு மண்ணீரல்வீக்கம் கிருமி நோய் குட்டம் அதிஸாரபேதி மூலநோய் கிரகணி உப்புசம் மேகவாதம் கண் நோய் சடராக்னி குறைவு உள்ளவர்கள், பொது வாக காய்கறிகளையும் கீரை வகைகளையும் தவிர்க்க வேண்டும்.

### ஆமணக்கெண்ணெயை விலக்க வேண்டியவர்கள்

சுவையின்மை அதிஸாரம் நீரிழிவு அபஸ்மாரம் வாந்தி மூர்ச்சை விஷ தோஷம் கொடிய காய்ச்சல் பைத்தியம் காலரா இரத்தபித்தம் என்னும் நோய்களைக் கொண்டவர்கள் ஆமணக்கு எண்ணெயைப் பருகக் கூடாது.

### கடுக்காயைப் பயன்படுத்தக் கூடாதவர்கள்

எரிச்சல் தொண்டை உலர்ந்து போதல் தாடைப்பிடிப்பு தொண்டைப் பிடிப்பு புதிதாகத் தோன்றிய காய்ச்சல் உடல் இளைப்பு வழிநடந்த களைப்பு விந்து குறைவு பட்டினி கிடந் தவர் பித்த நோயாளர் கருவுற்றவள் இரத்தப் போக்கு உள்ள வர்கள் கடுக்காயைப் பயன்படுத்தக்கூடாது.

### இளநீரைப்பருகக்கூடாதவர்கள்

அதிஸாரபேதி கிரஹணி சடராக்னிக்குறைவு சோகை உப்புசம் வாதம் காய்ச்சல் அசீரணம் இருமல் இழுப்பு எனும் நோய்களைக் கொண்டவர்கள் இளநீரைப் பருகக்கூடாது.

மற்றும் காலையில் வெறும் வயிற்றுடன் இருக்கும் போதும் இரவில் வயிறு நிறைந்துள்ளபோதும் இளநீரைப்பருகக்கூடாது.

**குளிர்ந்த நீரைப்பருகக் கூடாதவர்கள்**

விலாவலி பீநசம் சளி வாதம் கழுத்துநோய் வயிற்று உப்புசம் குட்டம் அப்பொழுது தோன்றியவாந்தி காய்ச்சலின் துவக்கம், இருமல் இழுப்பு வாதக்காய்ச்சல் உள்ளவர்களும், பேதியாக மருந்து உட்கொண்டவர்களும் உடல்மேல் எண்ணெய்ப் பசையைத் தோற்றுவிக்கும் பித்த நோய் கொண்டவர்களும் குளிர்ந்த நீரைப்பயன்படுத்தக்கூடாது.

**மோர் பருகக்கூடாதவர்கள்**

கபம் வாதம் மிகுந்துள்ளவர்கள் பல் நோய் உப்புசம் கப வாத நோய்கள் கொண்டவர்கள், குழந்தை பெற்றுள்ளமகளிர், இரத்தம் குறைந்துள்ளவர்கள் இரத்தம் வெளியேற்றப்பட்டவர்கள், அடி காயம் பட்டுள்ளவர்கள் மூர்ச்சை தலைச் சுற்றல் எரிச்சல் அழற்சி புதிய காய்ச்சல் இரத்தபித்த சோர்வு, உடலிளைப்பு உடையவர்கள், வாதகபக் காய்ச்சல்களைக் கொண்டவர்கள் அடிக்கடி மோரைப் பருகக் கூடாது.

**கரும்பைப்பயன்படுத்தக் கூடாதவர்கள்**

குட்டம் நீரிழிவு சடராக்னிக்குறைவு பெருவயிறு பீநசம் கபம் தாடைவலி வயிற்றில் பூச்சிகள் சுவையின்மை குன்மம் காய்ச்சல் உப்புசம் பகந்தரம் கபச்சீற்றம் கொண்டுள்ளவர்கள் கரும்பைப் பயன்படுத்தக்கூடாது.

**வெற்றிலையை விலக்க வேண்டியவர்கள்**

குட்டம் நீரிழிவு சிறுநீரைச் சார்ந்த நோய்கள், கண் நோய் க்ஷயம் காய்ச்சல் வீக்கம் நீர்ச்சுருக்கு பிரதரம் எனும் பெரும்பாடு சோகை உடல்சுற்றுதல் புத்திமாறாட்டம் சோகை (சோர்வு) மூர்ச்சை இழுப்பு இதயநோய் வாந்தி இரத்தபித்தம் உடலில் அழற்சி அக்கி முதலிய தோல் நோய்கள் கால்கை வலி கிரஹணி அதிசாரம் உடல் உலர்ந்து போதல் மிகுந்த நாவறட்சி சாயம் படுதல் பாம்புக்கடி முதலிய நஞ்சு நோய்கள் கொண்டவர்கள் வெற்றிலை போடுதலை விலக்க வேண்டும்.

**பகலில் தூங்கத்தகுந்தவர்கள்**

வழி நடந்தவர் கலவியில் ஈடுபட்டவர் குதிரை சவாரி செய்தவர் அதிஸாரம் வலி இழுப்பு எரிச்சல் விக்கல் எனும்

நோய்களைக் கொண்டவர்கள், உடலிளைத்தவர் கபம் குறைந்துள்ளவர் மயக்கம் கொண்டவர் அசீரணமுள்ளவர் பட்டினி கிடப்பவர் குறைவாக உண்டவர் குழந்தைகள், இரவில் கண் விழித்தவர்கள் பகலில் தூங்கலாம்.

### பகலில் தூங்கக்கூடாதவர்கள்

காய்ச்சல் க்ஷயம் சோகை வீக்கம் வாதம் சடராக்னிக் குறைவு எனும் நோய்களைக் கொண்டவர்கள் பகல் தூக்கத்தை விலக்க வேண்டும்.

### பாலைப் பருகத் தகாதவர்கள்

காய்ச்சல் விரணம் குட்டம் கபம் நீரிழிவு பகந்தரம் அதிஸாரம் காலரா கிரஹணி அசீரணம் இரத்தபேதி கபநோய் பித்த நோய் தொண்டைநோய் ஆகியவை கொண்டவர்கள் பாலைப்பருகக்கூடாது.

### தயிர் பயன்படுத்தக்கூடாதவர்கள்

வீக்கம் இருமல் க்ஷயம் நீரிழிவு சடராக்னிக்குறைவு விரணம் ஆமக்காய்ச்சல் குட்டம் கப நோய் கொண்டவர்கள் தயிரைப் பயன்படுத்தக்கூடாது.

### கள்ளை விலக்க வேண்டியவர்கள்

குட்டம் நீரிழிவு விஷநோய் இரத்தபித்தம் காய்ச்சல் எனும் நோய்கள் கொண்டவர், வெயிலால் துன்பமடைந்தவர், பித்த நோய் கொண்டவர் மிகுதியாக உணவும் நீரும் உட்கொண்டதால் வயிறு வீங்கியவர், அசீரணம் உள்ளவர் இதய நோய் கொண்டவர் ஆகியோர் மதுவை விலக்க வேண்டும்.

### தேனைப்பயன் படுத்தக் கூடாதவர்கள்

புதுக்காய்ச்சல் சூடு பித்த மேகநோயால் தோன்றிய வாந்தி எரிச்சல் மூளைக்கோளாறு தலைநோய் கொண்டவர்கள் தேனைப்பயன்படுத்தக்கூடாது.

### நெய் பயன்படுத்தக்கூடாதவர்கள்

புதுக்காய்ச்சல் இழுப்பு பெருவயிறு கபசீற்றம் சடராக்னிக் குறைவு குட்டம் பகந்தரம் பிரதரம் என்னும் பெரும்பாடு ஆகிய நோய் கொண்டவர்கள் நெய்யைப்பயன்படுத்தக்கூடாது.

**இறைச்சியை விலக்க வேண்டியவர்கள்**

புதுக்காய்ச்சல் வயிற்று நோய் குட்டம் பசிக்குறைவு காலரா மிகப் பருத்தஉடல் அசீரணம் வயிற்று உப்புசம் கிரஹணி அதிஸாரம் எனும் நோய்களைக் கொண்டவர்கள் புலால் உணவை விலக்க வேண்டும்.

**மாங்காயை விலக்க வேண்டியவர்கள்**

மூலநோய் அக்கி கிரஹணி இழுப்பு இருமல் கண்நோய் பித்த நோய் வாதநோய் இரத்தபித்தம் இரசம் கலந்த மருந்துகளை உண்டவர்கள் மாங்காயை விலக்க வேண்டும்.

**வெண்ணெயைப் பயன் படுத்தக் கூடாதவர்கள்**

கபநோய் குட்டம் பெருவயிறு மூர்ச்சை வாந்தி தலை நோய் உப்புசம் காய்ச்சல் பாண்டுநோய் கொண்டவர்கள் வெண்ணெயைப் பயன்படுத்தக்கூடாது.

**வெந்நீர் பயன்படுத்தத் தகாதவர்கள்**

பித்தநோய் குட்டம் விரணம் கண்டமாலை காமாலை கண்நோய் மூலநோய் நஞ்சு ஆஸன வாயில் புண் தோற்றுவிக்கும் நோய் ஆண்குறியில் புண் தோற்றுவிக்கும் நோய், வாய்ப்புண் ஆகியநோய்களைக் கொண்டவர்களும் வயதானவர்களும் கரு உற்றவர்களும் மயக்கம் கொண்டுள்ளவர்களும் வெந்நீரை அடிக் கடிப்பருகக் கூடாது.

**குளியலைத் தவிர்க்க வேண்டியவர்கள்**

அசீரணம் வயிற்று உப்புசம் கிரஹணி அதிஸாரம் வயிற்று வலி பேதி விரணம் மூர்ச்சை க்ஷயம் பீநசம் கண் காது வாய் தலை நோய்கள், வாதநோய்கள் சோர்வு காய்ச்சல் கபச்சீற்றம் உப்புசம் எனும் நோய்களைக் கொண்டவர்கள் எண்ணெய்க் குளியலையும் தலை முழுகலையும் விலக்க வேண்டும்.

## 2. முறிப்புகள்

சில பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்துவதால் துன்பங்கள் பல தோன்றும். அவற்றிற்கு மாறான தன்மை கொண்ட பொருள்களைப் பயன்படுத்துவதால் துன்பம் தணியும். அத்தகைய முறிப்புகள் இங்கு விளக்கப்படுகின்றன.

## 1. அக்ரோடு

இயற்கையாக உடலில் சூடு மிகுந்துள்ளவர்கள், ன் பருப்பை மிகுதியாகப் பயன்படுத்தினால் அது மேலும் சூட்டை வளர்க்கும். நாக்கில் புண்களைத் தோற்று விக்கும். இதற்குப் புளிப்புமாதுளைவிதைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு உப்பு முறிப்புகளாகும். இவற்றில் ஒன்றைப் பயன் படுத்துக.

## அடை

உளுந்து சேர்த்துச் செய்த அடையை மிகுதியாக உண்பதால் பேதியாகும், கபம் சீற்றமுறும். இதற்கு முறிப்பாக தேனையோ, ஓமத்தையும் உப்பையும் சுடுநீருடன் கலந்தோ பயன்படுத்துக.

## 3. அதிரசம்

அரிசியும் வெல்லமும் சேர்ந்த தின்பண்டமாகும். குருத் தன்மையையும் சீத பைத்தியத்தையும் வயிற்று வலியையும் தோற்றுவிக்கும். இதற்கு ஓமத்தையோ கண்டந் திப்பிலியையோ தூளாக்கி வெந்நீருடன் கலந்து உட்கொள்ளச் செய்வது முறிப்பாகும்.

## 4. அப்பம்

பித்தத்தை வளர்க்கும். குருத்தன்மையைத் தோற்று விக்கும். இதற்கு முறிப்பாக வெந்நீர் சிறிது உப்புகலந்த இளஞ் சூடுள்ள கஞ்சி, நெய் என்பனவற்றில் ஒன்றைப்பயன்படுத்துக..

## 5. அப்பளம்

பித்தத்தையும் கபத்தையும் வளர்க்கும். இதற்குச் சுக்குத் தூளையோ முருங்கை விதைத் தூளையோ வெந்நீருடன் கலந்து உட் கொள்ளச் செய்வது முறிப்பாகும்.

## 6. அவரை

மலக்கட்டு, குருத்தன்மை அசீரணம் வயிற்றுவலி, வயிற்றில் வாதம் எரிச்சல் சோர்வு என்பனவற்றைத் தோற்றுவிக்கும். கபத்தையும் பித்தத்தையும் வளர்க்கும். இதற்கு ஓமம் சுக்கு கடுக்காய் வெள்ளை நாயுருவியை எரித்துச் செய்த க்ஷாரம் என்பன முறிப்புகளாகும்.

## 7. அவல்

வயிற்றுவலி மலக்கட்டு கபம் சடராக்னிக்குறைவு முதலிய வற்றைத் தோற்றுவிக்கும். இதற்கு ஓமமும் உப்பும் கலந்தோ, ஓமமும் இந்துப்பும் கலந்தோ உட்கொண்டு வெந்நீரைப் பருகச் செய்தால் துன்பம் தணியும்.

## 8. அரளி

பேதியாகச் செய்ய அரளிப்பாலைப் பயன்படுத்துவதுண்டு. அது மிகுதியாகச் செயல்பட்டால் கடுக்காய் கஷாயத்தையோ, கற்கண்டுத்தூளைத் தயிரில் கலந்தோ, எருக்கங்கட்டைத்தூளை ஏருமைப்பாலில் கலந்தோ பயன்படுத்துக.

## 9. அரிசி

பச்சையாக அரிசியைத் தின்பதால் சோகை செரிமானக் குறைவு முதலிய துன்பங்கள் தோன்றும். தயிர், நீர்கலந்த பால் என்பன முறிப்பாகும். அரிசியால் செய்யப்பட்ட அடை வாதத்தையும் வயிற்று வலியையும் தோற்றுவிக்கும். அதற்கு புதினாஇலை சீரகம் முறிப்புகளாகும்.

## 10. அரிதாரம்

அரிதாரத்தை முறைப்படித் தூய்மை செய்து பற்பமாக்கிப் பயன்படுத்தினால் பல நோய்களைப் போக்கும். ஆனால் முறையாகத் தூய்மைபடுத்தாவிடின் வாத பித்த நோய்களையும் குட்டம் முடத்தன்மை போன்றவற்றையும் தோற்றுவிக்கும், இதற்கு அரிசி கழுவிய நீரையோ, சீரகத்தையும் சர்க்கரையும் சமமாகக் கலந்தோ, மாதுளம்பழச்சாறு கண்டங்கத்திரியையும் நிலவேம்பையும் சேர்த்துச் செய்த கஷாயத்தையோ முறிப்பாகப் பயன்படுத்தவேண்டும்.

## 11. இங்கிலிகம்

முறையாகச் செய்யப்பட்ட இதன் பற்பம் பல நோய் களைப் போக்கும். முறையாகச் செய்யாவிட்டால் மூட்டுகளில் வலி முதலிய பல நோய்களைத் தோற்றுவிக்கும். இதற்கு முறிப்பு தாய்ப்பால் நன்னாரி கஷாயம் மிளகுத்தூள் கலந்த நெய் இவற்றைப் பன்னிரண்டு நாட்கள் வரை உட்கொள்ளச் செய்க.

## 12. இஞ்சி

இஞ்சி இஞ்சிச்சாறு இஞ்சி முரபா என்பனவற்றை மிகுதி யாக உட்கொள்வதால் குரல் கம்மிப்போகும். இதற்குத் தேனையோ சந்தனத்தையோ பயன்படுத்துக. உடலில் இயற்கையாகச் சூடு மிகுந்துள்ளவர்களுக்கு வாதுமை எண்ணெயை யும், வாதம் மிகுந்துள்ளவர்களுக்குப் பாலையும் பயன்படுத்துக.

## 13. இலுப்பை]

இலுப்பை மலர் வாதபித்தம் தலைவலி எரிச்சல் என்பன வற்றைத் தோற்றுவிக்கும். இலுப்பம்பழத்திற்கு வேப்பவிதை யும் நெய்யும், இலுப்பமலருக்கு வெந்நீரும் வேப்ப விதைக் கஷாயமும் இலுப்பை மதுவுக்குக் கொத்தமல்லி வேப்பவிதை களும் முறிப்புகளாகும்.

## 14. இலந்தை

இலந்தைப்பழம் மலத்தைக்கட்டும். குரலைக்கம்மச் செய் யும். கபம் பித்தம் குருத்தன்மையைத் தோற்றுவிக்கும். வாழைப்பழம் சுடுநீர் குல்கந்து தேன் சர்க்கரை என்பன இதற்கு முறிப்புகளாகும்.

## 15. இலவங்கம்

இதை மிகுதியாகப் பயன்படுத்தினால் விந்து நீற்றுப் போகும். சிறு நீரகத்திற்குத் தீங்கு விளையும். இதற்கு வேலம் பிசின் முறிப்பாகும்.

## 16. இனிப்புப்பண்டங்கள்

இனிப்புப் பண்டங்களை மிகுதியாக உண்பதால் எரிச்சல் மலக்கட்டு சடராக்னிக் குறைதல் என்பன தோன்றும். இதற்கு, வேப்ப விதைகளின் சாறு, இலவங்கம் கடுக்காய் அல்லது இவற்றின் கஷாயம் முறிப்புகளாகும்.

## 17. ஈச்சை

ஈச்சங்கள் வாதத்தைச் சீற்றமுறச் செய்யும். ஈச்சம்பழம் வயிற்றில் வாதத்தைத் தடுத்து நிறுத்தும். ஈச்சங்குருத்து வாதத்தை வளர்த்து மூட்டுகளை வலிவிழக்கச் செய்யும். கள் ளுக்கு, எலுமிச்சம்பழச்சாறும், பழத்திற்குச், சீரகமும் சாராயத் திற்கு நீர்கலந்த தேன் வசம்புக் கஷாயமும் முறிப்புகளாகும்.

## 18. உப்பு

உப்பையோ உப்பு கலந்த பண்டங்களையோ மிகுதியாகப் பயன்படுத்துவதால் இவை எலும்பு விந்து இவற்றின் வலிமையைக் குறைத்துவிடும். இதற்கு நெய் குளுமை தரும் பொருட்கள், அரிசி கழுவியநீர், தாழம்பூச்சாறு எலுமிச்சஞ்சாறு மோர் என்பன முறிப்புகளாகும்.

## 19. உருளைக்கிழங்கு

இதை மிகுதியாகப் பயன்படுத்தினால் வாதத்தைத் தோற்றுவிக்கும். நெஞ்சு வயிறு இவற்றைக் கெடுக்கும். வயிற்று உப்புசத்தையும் அசீரணத்தையும் தோற்றுவிக்கும். அரிசி கழுவிய நீர் இதற்கு முறிப்பாகும்.

## 20. உளுந்து

இது கபத்தையும் மேகவாதத்தையும் வளர்க்கும். வயிற்றில் வாதத்தைத் தடுத்து நிறுத்தும். தாமதமாகச் செரிமானமாகும். நெய் பெருங்காயம் இஞ்சி கற்கண்டு பிடாலவணம் வெள்ளை நாயுருவிச் செடியை எரித்துச் செய்த க்ஷாரம் பழைய சோற்றுக்காடி எலுமிச்சை வேரின் சாறு என்பன இதற்கு முறிப்புகளாகும்.

## 21. ஊமத்தை

இதன் இலைச்சாறு அல்லது விதைகளைத் தின்றால் புத்தி மாறாட்டம் தோன்றும். இதற்கு எலுமிச்சம்பழச்சாறு நாவல் பட்டைச்சாறு தாமரை விதைத்தூள் சீரகம் தாமரை இலைச்சாறு சர்க்கரை கலந்த பசும்பால் பருத்திமலரும் கற்கண்டும் சேர்த்து நீருடன் அரைத்து எடுத்த சாறு என்பன முறிப்புகளாகும்.

## 22. எரிமா

மலைப்பகுதியில் காடுகளில் கொத்துக் கொத்தாகச் சிறியவையாகக் காய்க்கும் புளிப்பு மிகுந்துள்ள மாங்காய். இதை மிகுதியாகப் பயன் படுத்தினால் கபத்தைச் சீற்றமுறச்செய்யும். குருத்தன்மையை வளர்க்கும். பழைய நீரில் சுக்குத் தூளைக் கலந்து பயன்படுத்துவது இதற்கு முறிப்பாகும்.

## 23. எருக்கன்

பல நோய்களைப் போக்கும். பாம்பு கடித்ததும் ண்டு மூன்று எருக்கன் இலைகளை மென்றுதின்றாலும் இதன் வேரைச் சந்தனம் போல் அரைத்துப் பாம்பு கடித்த இடத்தில் பூசி கண்களுக்கு மருந்தாக இட்டு ஒரு பலம் எடை உட்கொள்ளச் செய்தாலும் நஞ்சு நீங்கும். இதன் பால் பேதியாகச்செய்யும். மிகுதியாக பேதியானால் முறிப்பாக அவுரிச்சாறு, குளிர்ந்த நீரில் கற்கண்டை இட்டுச் செய்த பானகம், நீருடன் புளிய இலையை அரைத்து எடுத்த சாறு, என்பனவற்றை முறிப்பாகப் பயன்படுத்த வேண்டும்.

## 24. எருமைப்பால்

சடராக்னியையும் அறிவாற்றலையும் குறைக்கும். அசீரணம் சீதபித்தம் கபம் வயிற்று வலி சீறுநீரகத்தில் கல் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். தேன் சர்க்கரை இந்துப்பு மோர் எலுமிச்சம்பழச்சாறு வறுத்த மீன் இறைச்சி பயற்றின் கஷாயம் என்பன இதற்கு முறிப்புகளாகும்.

## 25. எலுமிச்சை

இருமல் வாதசிலேத்துமதத்துவம் பாண்டு நோய் உள்ள வர்களுக்குத் தீங்கு விளைவிக்கும். இதை மிகுதியாகப் பயன் படுத்தினால் தலை இதயத்திலுள்ள நரம்புகள் குடல் என்னு மிவற்றிற்குக் கெடுதல் விளைவிக்கும். இதற்குத் தேன் சர்க்கரை உப்பு நாவற்பட்டை பேரீச்சம்பழச் சாறு முருங்கைப்பட்டைச் சாறு என்பன முறிப்புகளாகும்.

## 26. எள்

இதை மிகுதியாகப் பயன்படுத்துவதால் கபத்தையும் பித்தத்தையும் வளர்க்கும். தாமதமாகச் செரிமானமாகும். இதற்கு தயிர் உப்பு காடி கலந்த தேன், தேன் என்பன முறிப்பு களாகும். எள்ளை வறுத்துப் பயன்படுத்தினால் தீங்குவிளை விக்காது.

## 27. ஏலம்

ஏலக்காயை மிகுதியாகப் பயன்படுத்தினால் விந்துவைக் குளிரச் செய்து ஆண்மையைக் குறைக்கும். கற்கண்டு வாதுமைப்பிசின் இதற்கு முறிப்புகளாகும்.

### 28. ஓமம்

ஓமம் பல நோய்களைப் போக்கும் சிறந்த மருந்துப் பொருள். ஆயினும், இயற்கையாக உடலில் சூடு மிகுந்துள்ளவர்கள் இதைப் பயன்படுத்தினால், தலைவலி பித்தசீற்றம் கண்களில் ஒளி குறைதல் முதலியவற்றைத் தோற்றுவிக்கும். இதற்குத் தாய்ப் பால் அல்லது கொத்துமல்லி முறிப்பாகும்.

### 29. கக்கரி

கக்கரியை மிகுதியாகப் பயன் படுத்தினால் வாதம் அசீரணம் கபம் வயிற்றுவலி குளுமை என்பனவற்றைத் தோற்றுவிக்கும். சுக்கு சோம்பு (பெருஞ்சீரகம்) உப்பு தேன் காய்ச்சிய புங்கங் காய்ச்சாறு துமட்டிவேர்ச்சாறு மிளகுத்தூள் என்பன இதற்கு முறிப்புகளாகும்.

### 30. கஞ்சி

கஞ்சியை அளவுக்கு விஞ்சிப் பயன்படுத்தினால், வாதத்தைச் சீற்றமடையச் செய்யும், குருத்தன்மையை உண்டாக்கும். புதினாஇலையும் குல்கந்தும் (ரோஜா இதழும் தேனும் கலந்த இலேகியம்) இதற்கு முறிப்புகளாகும்.

### 31. கடலை

உலராமல் பச்சையாக இருக்கும் கடலை, வாதத்தையும் சிறு நீர்க்குழாயில் புண்ணையும் தோற்றுவிக்கும். இதற்கு முறிப்பு கசகசாத்தூள். உலர்ந்தகடலை வயிற்றில் வாதத்தைச் சீற்ற முறச் செய்யும். பளுத்தன்மையைத் தோற்றுவிக்கும். முள் ளங்கி, வெள்ளை நாயுருவியை எரித்துச் செய்த க்ஷாரம், குல் கந்து உஷ்ணத்தைத் தரும் பொருள்கள் இதற்கு முறிப்புகளாகும்.

### 32. கடுகரோகிணி

கடுகரோகிணியை அளவிற்கு மிஞ்சிப் பயன்படுத்தினால், நடுக்கம் தலைபளு மூர்ச்சை முதலியவற்றைத் தோற்றுவிக்கும். இதற்கு வாதுமைப் பிசினும், வாதுமை எண்ணெயும் முறிப்பு களாகும்.

### 33. கடுக்காய்

எரிச்சல், தொண்டை உலர்ந்து போதல் தாடைப்பிடிப்பு உடலிளைப்பு வழி நடத்தலால் சோர்வு, விந்துக் குறைவு பித்த நோய்கள் கொண்டவர்களும், இரத்தப்பெருக்கு உள்ளவர்களும்,

கருவுற்ற பெண்களும் கடுக்காயைப் பயன்படுத்தக் கூடாது. கடுக்காயைப் பயன்படுத்துவதால் தோன்றும் துன்பங்களுக்கு வாதுமைப் பருப்பு, நெய் முதலிய எண்ணெய்ப் பசைகொண்ட பொருள்கள் முறிப்புகளாகும்.

## 34. கத்தரி

கத்தரி, சீதபித்தம் கபம் அரிப்பு கிருமி ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். விலாவில் வலியை உண்டாக்கும். மண்ணீரலுக்குத் துன்பம் தரும். உடல் நிறத்தை மாசு படுத்தும். நெய் இறைச்சி கடுகுத்தூள் இனிப்புச் சுவையுள்ள பொருள் என்பன இதற்கு முறிப்புகளாகும்.

## 35. கந்தகம்

எட்டு முறை தூய்மையாக்கப்பட்ட கந்தகம், பல நோய்களைத் தீர்க்க வல்லதாகும். முறையாகத் தூய்மைப்படுத்தாத கந்தகத்தைப் பயன்படுத்துவதால், பல துன்பங்கள் விளையும். இதற்கு, நெய் கலந்த பசும்பால், அறுகம்புல் கஷாயம், வசம்பு அல்லது இலவங்கத்தூள் என்பன முறிப்புகளாகும்.

## 36. கருணைக்கிழங்கு

கருணை, அரிப்பு பளுத்தன்மையைத் தோற்றுவிக்கும். நீரிழிவு நோயை வலிமை கொள்ளச் செய்யும். இதற்கு நெய் புளி வெல்லம் கள் வெற்றிலை என்பன முறிப்புகளாகும்.

## 37. கர்ப்பூரம்

மிக்க கவனத்துடன் கர்ப்பூரத்தைப் பயன்படுத்தினால், பல நோய்களைத்தீர்க்கும், முறைதவறி பயன்படுத்தினால், சூட்டைக் கிளப்பும். மலத்தைக் கட்டும். பித்தத்தைச் சீற்றமுறச் செய்யும். இதற்குக் கஸ்தூரி, கடல்நுரை பச்சைக் கர்ப்பூரம் ஆகியவை முறிப்புகளாகும்.

## 38. கழுதைப்பால்

குழந்தைகளுக்கு வரும், இருமல் உப்புசம் முதலிய நோய்களைப் போக்க கழுதைப்பாலை புகட்டுவதுண்டு. குடலுக்கும் சிறுநீரகத்திற்கும் வலிமையூட்டும். குட்டம் பைத்தியம் குழந்தைகளுக்குத் தோன்றும் கரப்பான் புண் முதலியவற்றையும் தீர்க்கும். இயற்கையாக வாதம் உள்ளவர்களுக்கு உடல் சோர்வைத்தரும். இதற்கு முறிப்பு சர்க்கரை பானசம் பன்னீர்,

## 39. காட்டுப்பன்றி இறைச்சி

காட்டுப்பன்றி இறைச்சி, எண்ணெய்ப்பசையும், சுவையும் கொண்டது. உடலுக்கு வலிமை ஒளி தரும். க்ஷயம் பைத்தியம் என்பனவற்றைப் போக்கும். விந்துவை வளர்க்கும். ஆனால் கெட்ட விரணங்களைத் தோற்றுவிக்கும். மூர்ச்சை நோய் உள்ளவர்களுக்கு அபத்தியமானது. குருத்தன்மையையும் சடராக்னிக்குறைவையும் தோற்றுவிக்கும். இதற்கு யவக்ஷாரம் மோர் புளித்த பழைய சோற்று நீர் என்பன முறிப்புகளாகும்.

## 40. காட்டு விலங்குகளின் இறைச்சி

இவ்விறைச்சி மலத்தைக்கட்டும். கபத்தை வளர்க்கும். இதற்கு சீரகம் புளித்தகள் கடுகுத்தூள் முறிப்புகளாகும்.

## 41. காப்பி

காப்பி மலத்தைக் கட்டும். பித்தத்தையும் சூட்டையும் வளர்க்கும். விந்துவை வலிமையிழக்கச் செய்யும். இதயத்திற்குக் கேடு விளைவிக்கும். நெஞ்சை உலர்த்தும். சிறுநீரைப் பெருக்கும். ஆண்மையைக் குறைக்கும். பால் சர்க்கரை ஆகியவை இதற்கு முறிப்புகளாகும்.

## 42. காராமணி

காராமணி அறிவை மழுங்கச் செய்யும். அபானத்தை வளர்க்கும். இரத்தபித்தம் கபபித்தம் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். இரத்தத்தைக் கெடுக்கும். மலத்தைப் பெருக்கும். புளிப்பு இலவங்கப்பட்டை, சுக்கு சீரகம் உப்பு, செரிமானத்தை வளர்க்கும் மருந்துகள் என்பன இதற்கு முறிப்புகளாகும்.

## 43. கீரை வகைகள்

சக்ரவர்த்திக்கீரை பொன்னாங்கண்ணி, சாரடை சிறுகீரை கீரைப்பாலை என்பன, பொதுவாக உடலுக்குநன்மை தரும். பத்தியமானவை. ஏனைய கீரைகளை மிகுதியாக உண்பதால் சில துன்பங்களும் உண்டாகும். கண்களுக்கும் விந்துவிற்கும் கெடுதலைச் செய்யும். வாதத்தையும் கபத்தையும் வளர்க்கும். தாமதமாக செரிமானமாகும். பொதுவாக வயிற்றுவலி குன்மம் பெருவயிறு மண்ணீரல்வீக்கம் கிருமி குட்டம் அதிசாரம் மூலநோய் கிரஹணி உப்புசம் மேகவாதம் கண் நோய்கள் காய்ச்சல் சடராக்னிக் குறைவு உள்ளவர்கள் கீரையை விலக்குவது நல்லது.

தற்குப் புளி கடுகெண்ணெய் உலர்ந்த மிளகாய் பச்சைமிளகாய் கருங்காலிக்கட்டைத்தூள், எள்ளுச் செடியை எரித்துத்தயார் செய்த க்ஷாரம் என்பன முறிப்புகளாகும்.

## 44. குங்கிலியம்

குங்கிலியம் பல நோய்களைப் போக்குவதாகும். ஆனால் மண்ணீரலுக்குத் தீங்கு விளைவிக்கும். இதற்கு ஜாதிபத்திரி முறிப்பாகும்.

## 45. குங்குமப்பூ

குங்குமப்பூ, பல நோய்களைப் போக்குவதாயினும், மிகுதியாகப் பயன்படுத்தினால், அறிவை மழுங்கச் செய்யும். இரத்தத்தை நீராகச் செய்யும். சூட்டை வளர்க்கும் . சோர்வைத் தோற்றுவிக்கும். மூளை நரம்புகளுக்குத் தீங்கு விளைவிக்கும். கருவிலுள்ள குழந்தையின் உறுப்புகளைக் கோணலாக்கும். தலைவலியை உண்டாக்கும். பசியைக் குறைக்கும். மண்ணீரலுக்குக் கேடு விளைவிக்கும். கடல் நுரை புளித்த கள் காடியில் சர்க்கரை சேர்த்துப் பருகுதல் இதற்கு முறிப்பாகும்.

## 46. குன்றிமணி

மூன்று குன்றி மணிகளின் தூள் மனிதன் உயிரைப் போக்குமளவுக்கு நஞ்சு கொண்டதாகும். ஆனால் மிக்க கவனத்துடன் பயன்படுத்தினால் நோய்களைப் போக்கும். இதன் விதைகளை அரைத்துப் பற்றாகப் பூசினால் வாதத்தினால் கண்சிவத்தல் வலி தலைவலி முதலியன நீங்கும். ஒருவகைப் பூச்சியால் தலைமுடி உதிர்வதைப் இவ்விதைகளின் எண்ணெய் போக்கும். மற்றும் இந்த எண்ணெயைப் பூசினால் ஆண்குறி வலிமைபெறும். இதற்குப்பசும்பால் அல்லது தேன் திராட்சை புளி மாதுளம் பழம் பெரிய ஈச்சம்பழம் நெல்லிக்காய்ச்சாறு இவற்றைக் கலந்து பயன்படுத்துதல் அல்லது சிறுகீரை சாற்றில் சர்க்கரை கலந்து பயன்படுத்துதல் என்பன முறிப்புகளாகும்.

## 47. கொத்துமல்லி

கொத்துமல்லியின் பச்சை லை, பித்தத்தையும் வயிற்றில் எரிச்சலையும் அழற்சியையும் போக்கும். இதற்கு வறுத்த கோழி முட்டை முறிப்பாகும். கொத்துமல்லி விதையை மிகுதியாகப் பயன்படுத்தினால், விந்துவை மிகுதியாக வெளியேறச் செய்யும். உப்புசத்தை தோற்றுவிக்கும். அறிவை மழுங்கச்

செய்யும். சிறுநீரை மிகுதியாக்கும். இதற்கு இலவங்கப் பட்டை, வறுத்த கோழி முட்டை தேன், இலவங்கம் கோழி இறைச்சி முறிப்புகளாகும்.

## 48. கொழுக்கட்டை

கொழுக்கட்டை, கபத்தையும் வாதத்தையும் வளர்க்கும். சடராக்கினியின் வலிமையைக் குறைக்கும். இதற்கு வெந்நீர் உப்பு கலந்த காடி, சீரகம் புதினாஇலை என்பன முறிப்பு களாகும்.

## 49. கொள்ளு

கொள்ளை மிகுதியாகப் பயன்படுத்தினால், எரிச்சல் இரத்த பித்தம் என்பன தோன்றும். மண்ணீரலுக்குக் கெடுதலை விளைவிக்கும். இதற்கு எண்ணெய் நெய் புளிப்புக்காடி நீர் தேன் என்பன முறிப்புகளாகும்.

## 50. கோதுமை

கோதுமை, இயற்கையாக சூடு மிகுந்துள்ள உடல் கொண்ட வர்களுக்கும், அசீரணமுள்ளவர்களுக்கும், கிரஹணி வயிற்று உப்புசம் சடராக்னி குறைவு, அசீரணம் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். இதற்குக் கக்கரி வெள்ளை நாயுருவியை எரித்துச் செய்த க்ஷாரம், கல்யாணபூசணிக்காய்ச்சாறு புளியங் கொட்டை வெல்லம் சர்க்கரை குல்கந்து என்பன முறிப்புகளாகும்.

## 51. சர்க்கரை

சர்க்கரையை மிகுதியாகப் பயன்படுத்துவதால் அசீரணம் முதலிய துன்பங்கள் தோன்றும். இதற்கு வாதுமைப்பருப்பு பச்சைப்பால் புளிப்புச்சுவையுள்ள பொருள்கள், கோரைக்கிழங்கு முறிப்புகளாகும். சர்க்கரையைத் தின்றதும் நீரைப் பருகினால், சளி வாதம் கபம் காய்ச்சல் சடராக்னிக்குறைவு முதலியன தோன்றும்.

## 52. சாரைப்பருப்பு

சாரைப்பருப்பு பித்தத்தை வளர்க்கும். இதற்குக் கடுக் காய்க்கஷாயம், எள்எண்ணெய் முறிப்புகளாகும்.

## 53. சிறுகீரை

இது உஷ்ணத்தை வளர்க்கும். இதற்கு புளிப்புக்காடி தயிர் கருங்காலிக்கட்டைத்தூள் பனங்கள் முறிப்புகளாகும்.

## 54. சிட்டுக்குருவி

சிட்டுக் குருவியின் இறைச்சி, கபத்தை வளர்க்கும். சடராக்னியைத் தணிக்கும். அபத்தியமானது. இதற்குக் காடி வேலம் பட்டைக் கஷாயம், யவக்ஷாரம மோர் புளித்த பழைய சோற்றுநீர் என்பன முறிப்புகளாகும்.

## 55. சீரகம்

சீரகத்தை மிகுதியாகப் பயன்படுத்தினால். கல்லீரல் மண்ணீரல்களுக்குத் துன்பம் விளையும் . இதைச் சிறிது வறுத்த பின் பயன்படுத்தினால், துன்பம் தராது. வாதுமைப் பிசின் இதற்கு முறிப்பாகும்.

## 56. சுடுநீர்

எப்பொழுதும் வெந்நீரைப் பருகுவதால் உடலில் சூடு மிகும். வேறு சில துன்பங்களும் தோன்றும். இதற்குச் சோம்பு முறிப் பாகும்.

## 57. சுண்ணாம்பு

சுண்ணாம்பு, வெற்றிலையுடன் உட்கொள்ளத்தக்கது. அளவுக்கு விஞ்சிப் பயன்படுத்தினால் ஆஸனவாயில் வலியைத் தோற்றுவிக்கும். வாய் வெந்து போகும். விந்துவை நீராக்கி விடும். இதற்குச் சீந்தில் கொடி குன்றிமணிஇலைச்சாறு வெந் நீர், இலவங்கம் மஞ்சள், தேங்காய், தேங்காய்எண்ணெய் எள் எண்ணெய் நெய், விலங்குகளின் கொழுப்பு முறிப்புகளாகும். கண்களில் சுண்ணாம்பு பட்டால் நல்லெண்ணெயைப் பயன் படுத்துக.

## 58. சுண்டை

சுண்டை, பேதியாகச் செய்யும். நீர் கலந்த தேன் இத, முறிப்பாகும்.

## 59. சுரை

சுரை, கபத்தையும் வாதத்தையும் வளர்க்கும். அபத்திய மானது. மலத்தைக் கட்டும். புளிக்காடி, புளி கடுகுத்தூள் புரசக்ஷாரம் உப்பு கலந்த நீர், தேன் சீரகம் சுக்கு என்பன தற்கு முறிப்புகளாகும்.

## 60. சோறு

சோற்றை அளவுக்கு மிஞ்சி உண்பதால் தோன்றும் அசீரணத்திற்கு, முறிப்புகள் பசுமோர் கடுகுத்தூள், ஓமம் மிளகுக்கஷாயம் சுக்கு என்பன.

## 61. கொய்யாப்பழம்

கொய்யாப்பழம் இயற்கையாகச் சூடு மிகுந்துள்ள உடல் கொண்டவர்களின் இதயத்திற்கும், வயிற்றிற்கும் வலிமையைத் தோற்றுவிக்கும். இயற்கையாக வாதம் மிகுந்த உடல் கொண்டவர்களுக்கு வயிற்றிலும் தலையிலும் வலியையுண்டாக்கும். வாதத்தை வளர்க்கும். மூக்கிலிருந்து நீர் ஒழுகச் செய்யும். வயிற்றுப் பிடிப்பு காய்ச்சல் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். இதற்கு மொச்சையும், சோம்பும் முறிப்புகளாகும்.

## 62. தயிர்

தயிர், கபபித்தங்களைப் போக்கும். சடராக்னியையும் விந்துவையும் வலிமை கொள்ளச் செய்யும். இரத்தபித்தம் கண் நோய்கள் வயிற்றில் தோன்றும் அழற்சி என்பனவற்றைப் போக்கும். ஆயினும் அதிகமாகப் பயன்படுத்துவதால் குளிர் காய்ச்சல் போன்ற துன்பங்களைத் தோற்றுவிக்கும். மலத்தைக் கட்டும். இதற்கு வெந்நீர் சீரகம் உப்பு சுக்கு வெல்லம் இந்துப்பு சங்கபற்பம் மற்றும், ஏலஅரிசி இலவங்கம் இலவங்கப் பட்டை கொத்துமல்லி விதை முதலியவற்றைச் சேர்த்து செய்த தூள் முறிப்புகளாகும்.

## 63. தர்பூசணி

தர்பூசணி என்பது வெள்ளரியைப் போன்ற ஒரு வகைப் பழம். பச்சையாகத் தடித்த ஓட்டுடன், உள்ளே சிவப்புநிறக் கோதும், கல்யாணப்பூசணி விதையைப்போன்ற விதைகளும் கொண்டிருக்கும். கோடையில் சென்னைப் பகுதியிலும், தெலுங்கு நாட்டிலும் மிகுதியாகப் பயன்படுத்தப்படுவதாகும். குளுமையைத்தருவது. உடலுக்கு வளர்ச்சியையும், வலிமையையும் தருவதாகும். இரத்தத்தைத் தூய்மைப்படுத்தும். சிறுநீர்ப்பையில் கல், பாண்டு முதலியவற்றைப் போக்கும். எக்ஸிமா எனப்படும் ஒரு வகை ஆறாத புண் கொண்டவர்கள், இப்பழத்தையோ அல்லது விதைகளின் தூளையோ பயன்படுத்தினால் நோய் நீங்கும். ஆயினும், உடலில் இயற்கையாக பித்தமும். )ரத்தமும் மிகுந்துள்ளவர்களுக்கு கெடுதலை விளைவிக்கும்,

கல்லீரலுக்குக் கெடுதலைச் செய்யும். இதற்கு மிளகுத்தூள் சர்க்கரை புளிப்புமாதுளம்பழம், பால் தேன் குல்கந்து என்பன முறிப்புகளாகும்.

## 64. திராட்சை

திராட்சை, பல நன்மைகளை விளைவிப்பதாயினும், மிகுதியாகப் பயன்படுத்தினால், வாதத்தை வளர்க்கும். இதயத்திற்குத் துன்பமும், வயிற்று வலியையும் தோற்றுவிக்கும். இயற்கையாக வாதம் மிகுந்துள்ளவர்களுக்கு நல்லதன்று. சோம்பு கோரைக்கிழங்கு இதற்கு முறிப்புகளாகும்.

## 65. தினை

தினை, உடைந்த உடற்பகுதியைச் சேர்க்கும். காய்ச்சலையும் கபத்தையும் போக்கும். வாதத்தையும் சடராக்னியையும், இரத்தத்தையும் வளர்க்கும். இடுப்புக்கு வலிமை தரும். இதற்குச் சர்க்கரை நெய் முறிப்புகள்.

## 66. துவரை

துவரை, உடலுக்கு வலிமையூட்டும். இரத்தத்தைத் தூய்மையாக்கும். ஆயினும் அளவுக்கு மிஞ்சிப் பயன்படுத்தினால் பித்தம் சூடு கபவாதம் முதலியவற்றை வளர்க்கும். மலத்தைக் கட்டும். இதற்கு நெய் ஓமம் திப்பிலி புளி மற்றும் சுக்கு கடுக்காய் உப்பு இவற்றின் தூள் என்பன முறிப்புகளாகும்.

## 67. தேங்காய்

தேங்காயை மிகுதியாகப் பயன்படுத்தினால், இதயத்திற்குத் தீங்கு விளையும். இது பித்தத்தையும் கபத்தையும் வளர்க்கும். இருமலைத் தோற்றுவிக்கும். இதற்கு அரிசி சர்க்கரை கழுநீர் கடல்நுரை எலுமிச்சம்பழம் தர்பூசணிப்பழம் ஆகியவை முறிப்புகளாகும்.

## 68. தேநீர்

தேநீர் மிகுதியாகப் பருகுவதால், கைகால்களில் நடுக்கம், விஷக்காய்ச்சல் பெருவயிறு பாண்டு உப்புசம் முதலிய நோய்கள் தோன்றும். தேநீர் சீரண வலிமையையும் ஆண்மையையும் குறைக்கும். இயற்கையாக சூடு மிகுந்துள்ள உடல் கொண்டவர்களுக்கு நல்லதன்று. இதற்குப்பால் சர்க்கரை சோம்பு முறிப்புகள்.

## 69. தேன்

தேன், இயற்கையாக உடலில் சூடு மிகுந்துள்ளவர்களுக்குத் தலைவலியையும் காய்ச்சலையையும் தோற்றுவிக்கும். சூட்டை கும். இதற்கு நீர் மாதுளை நெய் எலுமிச்சை கொத்துமல்லி விதை என்பன முறிப்புகளாகும்.

## 70. நீர்

மிகுதியாக நீரைப்பருகுவதால் தோன்றும் துன்பங்களுக்கு முறிப்புகள், நெல்லிக்காய் திரிபலாகஷாயம் திரிகடுகசூரணம், உஷ்ணத்தை வளர்க்கும் மருந்துகள்.

## 71. நாபி

மிக்க கவனத்துடன் நாபியைப் பயன்படுத்தினால், குட்டம் முதலிய கொடிய நோய்களைப் போக்கும். நச்சுத்தன்மை கொண்டது. முறை தவறினால் பித்தம் சோர்வு வாந்தி எரிச்சல் முதலிய துன்பங்களைத் தோற்றுவிக்கும். நாக்கை உள்ளுக்கு இழுத்துவிடும். உயிரையும் போக்கவல்லதாகும். சிறு கீரைவேர்ச்சாறு கருஞ்சீரகம் அமுக்கராக்கிழங்கைப் பகவின் சிறு நீருடன் அரைத்து எடுத்த சாறு, பருத்திச் செடியின் இலைமலர் காய் இவற்றின் சாறுகள் இதற்கு முறிப்புகளாகும்.

## 72. நாவல்

நாவற்பழத்தை மிகுதியாக உண்பதால், வயிற்றில் வாதம் கட்டுப்படும். தொண்டைக்கும் நெஞ்சுக்கும் தீங்கு விளை விக்கும். கருவுற்றவளுக்கு நோயைத் தோற்றுவிக்கும். உப்பு மிளகுத்தூள் சுக்குத்தூள் நெல்லிக்காய் பருப்பு என்பன இதற்கு முறிப்புகளாகும்.

## 73. நெல்லி

நெல்லிக்காய் பல நோய்களை நீக்கவல்லது. ஆயினும் மிகுதியாகப் பயன்படுத்தினால், கல்லீரல் மண்ணீரல்களுக்குத் துன்பம் விளைவிக்கும். வயிற்றில் வலியைத் தோற்றுவிக்கும். இதற்கு முறிப்புகள் தேன் வாதுமைஎண்ணெய் கடுகு என்பன வாகும்.

## 74. நெய்

நெய்யை மிகுதியாக உட்கொண்டால் அசீரணத்தைத் தோற்றுவிக்கும். இதற்கு வெந்நீர் எலுமிச்சம்பழச்சாறு மிளகு

புளிப்புமோர் ஆரஞ்சுப் பழம் தேற்றாங்கொட்டையை அரைத்து எடுத்த விழுதுசிறிது கலந்த மோர் ஆகியவை முறிப்புகளாகும்.

## 75. நேர்வாளம்

நேர்வாளம் பல மருந்துகளில் சேர்க்கப்படுகிறது. இதை மிக்க கவனத்துடன் பயன்படுத்த வேண்டும். முறை தவறிப் பயன்படுத்தினால், பித்தம் சூடு இவைகளை வளர்க்கும். வாந்தி யாகச் செய்யும். உயிரையும் போக்கவல்லதாம். நெய் மஞ்சள் ஆவாரந்துளிர் வேலம்பட்டைச்சாறு கருங்காலிப்பட்டைச்சாறு முருங்கைப்பட்டைச்சாறு கொத்துமல்லி விதை வசம்பைச் சுட்ட கரி கற்கண்டை அரைத்துத் தயிரில் கலந்து பருகுதல முதலியன இதற்கு முறிப்புகளாகும்.

## 76. பசும்பால்

பசும்பால் நன்மை தருவதாயினும் சிறுநீர்ப்பையில் கல் நீர்ச்சுருக்கு நோய் கொண்டவர்களின் மண்ணீரலுக்குத் தீங்கு ஆகியவற்றை விளைவிக்கும். இயற்கையாக உடலில் சூடு மிகுந் துள்ளவர்களுக்குக் காய்ச்சலையும் கட்டி சிரங்கு முதலியவற்றை யும் தோற்றுவிக்கும். தேன் சர்க்கரை மோர் எலுமிச்சம்பழச் சாறு வறுத்த மீன் என்பன இதற்கு முறிப்புகளாகும்.

## 77. பச்சைக்கர்ப்பூரம்

பச்சைக்கர்ப்பூரம் குளுமையைத்தரும். சளியைத் தோற்று விக்கும். முறைதவறிப் பயன்படுத்தினால் உடலுறுப்புகளை மரத்துப் போகச் செய்யும்.

கஸ்தூரி கடல்நுரை இதற்கு முறிப்புகள்.

## 78. பட்டாணி

பட்டாணி, கபம் வாதம் பித்தம் ஆகிய மூன்றையும் வளர்க்கும். வயிற்றுக்குக் கெடுதலைத் தோற்றுவிக்கும். இதற்கு வெள்ளைநாயுருவிக்ஷாரம் சுக்கு எள் எண்ணெய் என்பன முறிப்புகள்

## 79. பயறு

பயறு மலத்தைக்கட்டும். யற்கையாகக் குளுமைத் தன்மை கொண்ட உடலுள்ளவர்களுக்கு சிறுநீரகத்தில் வாயுவைத தோற்றுவிக்கும். தலைவலியை உண்டாக்கும். விந்துவுக்குச்

கேடுவிளைவிக்கும். சர்க்கரை தேன் காடி வெள்ளைநாயுருவி க்ஷாரம் இஞ்சி எள்எண்ணெய் சூட்டை வளர்க்கக் கூடிய பொருள்கள் இதற்கு முறிப்புகளாகும்.

**79. பலாப்பழம்**

பலாப்பழம் மிகுதியாகப் பயன்படுத்தினால், அசீரணம் விதைவீக்கம் சடராக்னிக்குறைவு வயிற்றுவலி சீதபித்தம் அழற்சி என்பனவற்றைத் தோற்றுவிக்கும். நெய்யில் வறுத்த பலாக் கொட்டை வாழைப்பழம் மாங்கொட்டையினுள் இருக்கும் பருப்பு எண்ணெய் என்பன இதற்கு முறிப்புகளாகும்.

**80. பனங்கள்**

ஆண்பனையின் கள்ளை, ஆதவன் உதிக்கும் முன் நாற்பது நாட்கள் உட்கொண்டால், பாண்டு சடராக்னிக் குறைவு உடலிளைப்பு என்பன நீங்கும். காய் தோன்றும் பனைமரத் தின் கள் நல்லதன்று. வாதத்தையும் கபத்தையும் வளர்க்கும். புதிய கள் சளி கபம் வாதம் இருமல் வலி என்பனவற்றைத் தோற்றுவிக்கும். இதற்குக் காடி எலுமிச்சம்பழம் முறிப்புகள். பனம்பழம், சடராக்னியின் வலிமையைக் குறைக்கும். சிறுநீர் பெருக்கம் சோம்பல் கண்நோய் முதலியவற்றைத் தோற்றுவிக்கும். இதற்கு அரிசி மிளகு கழுநீர் என்பன முறிப்புகளாகும். பன நுங்கை மிகுதியாக உண்டால், வயிற்று உப்புசத்தைத் தோற்று விக்கும். இதற்கு மாங்காய் சூடான கஞ்சி என்பன முறிப்பு களாகும்.

**81. பன்**

புளித்தகாடி மோர் யவக்ஷாரம் என்பன இதற்கு முறிப்பு களாகும்.

**82. பாகல்**

இயற்கையாகச் சூடு மிகுந்துள்ள உடலுடையவர்களுக்குப் பாகல் கெடுதலை விளைவிக்கும். இதற்குப் புளி நெய் கடுகுத் தூள் புரசின் க்ஷாரம், துமட்டிவேர்க் கஷாயம் முறிப்புகளாகும்.

**83. பாக்கு**

வெற்றுப்பாக்கை மெல்லுவதால் இரத்தம் கெடும். பாண்டு நோய் (சோகை) தோன்றும். வயிற்றில் வாதத்தைத் தடுத்து

நிறுத்தும். நெஞ்சுப்பிடிப்பையும் விந்துக்குறைவையும் தோற்றுவிக்கும். வாதுமைப்பிசின் கடல்நுரை புங்கன் விதைச் சாறு துமட்டிவேர்கஷாயம் தேன்கலந்த சர்க்கரை புளி என்பன இதற்கு முறிப்புகளாகும.

## 84. பீர்க்கு

இது சிறிது சூட்டைக் கிளப்பும். இயற்கையாக வாதம் மிகுந்துள்ள உடல் கொண்டவர்களுக்குக் கபத்தை வளர்க்கும். றைச்சி நெய் ற்கு முறிப்புகளாகும்.

## 85. புளி

புதிய புளி கபத்தை வளர்க்கும். கண்களுக்கு நல்லதல்ல. அபத்தியமானது. இதற்கு எள்ளெண்ணெய் மஞ்சள் தயிர்த் தெளிவு சுண்ணாம்பு இலந்தைப்பழங்கள் முறிப்புகளாகும்.

பழைய புளியை மிகுதியாகப் பயன்படுத்தினால் இருமலைத் தோற்றுவிக்கும். மண்ணீரலுக்கும் நெஞ்சுக்கும் கெடுதலை விளைவிக்கும். அசீரணமுள்ளவர்களுக்கு அபத்தியமானது. இதற்கு வாதுமைப்பிசின் கசகசா சர்க்கரை கற்கண்டு தேன் என்பன முறிப்புகளாகும்.

## 86. பூசணி

பூசணி, வாதத்தை வளர்க்கும், கெட்ட இரத்தத்தைத் தோற்றுவிக்கும். தாமதமாகச் செரிமானமாகும். இதற்கு சுக்கு உஷ்ணத்தை வளர்க்கும் மருந்துகள் புங்கன் விதை அல்லது அதன் வேரின் கஷாயம் என்பன முறிப்புகளாகும்.

## 87. பூண்டு

பூண்டு பல நோய்களைப் போக்கவல்லது. ஆயினும், மிகுதியாகப் பயன்படுத்தினால் சூட்டை வளர்க்கும். இரத்த பித்தம் தலைவலி இவற்றைத் தோற்றுவிக்கும். ஆண்மையைக் குறைக்கும். இரத்தத்தை எரித்து விடும். கண் மண்ணீரல் குடல் எனும் உறுப்புகளில் துன்பம் விளைவிக்கும். கருவுற்றவர் களின் கருவிற்குத் தீங்கு விளைவிக்கும். மூலம் கிரஹணி இரத்தபேதி இரத்தவாந்தி பித்தம் இருமல் என்பவற்றை வளர்க் கும். இரத்த ஓட்டத்தை விரைவு படுத்தும். உடலை இளைக்கச் செய்யும். எரிச்சலையும் நாவறட்சியையும் தோற்று விக்கும். இதற்கு மாதுளங்காய்ச் சாறு புளி பால் வாதுமை

எண்ணெய் நெய் உப்பு கலந்த நீருடன் பக்குவம் செய்தல் என்பன முறிப்புகளாகும்.

## 88. பெருங்காயம்

பெருங்காயத்தை மிகுதியாகப் பயன்டுபடுத்தினால் கபத்தையும் பித்தத்தையும் வளர்க்கும். கருவிற்குக் கெடுதலை விளைவிக்கும். இதற்கு சந்தனம் வாதுமைப்பிசின் மாதுளங்காய் என்பன முறிப்புகளாகும்.

## 89. பேரிச்சங்காய்

பேரீச்சங்காய், இயற்கையாகச் சூடான உடல் கொண்டவர்களுக்குக் கல்லீரலிலும் மண்ணீரலிலும் கட்டிகளைத் தோற்றுவிக்கும். இரத்தத்தைச் சுண்டச் செய்யும். கண்களுக்கும் பற்களுக்கும் தீங்கு விளைவிக்கும். கபத்தை வளர்க்கும். இதற்கு கசகசா எண்ணெய் வாதுமைப்பருப்பு உலர்ந்த மிளகாய் மாதுளங்காய்ச்சாறு புளித்தகாடி தேன் என்பன முறிப்புகள். பேரிச்சம்பழத்திற்கும் இத்தகைய குணங்கள் உண்டு. இதற்கு கசகசா எண்ணெய் நெய் வேப்பவிதை உலர்ந்தமிளகாய் கோரைக்கிழங்கின்தூள் எள்ளின் தூள் வாதுமைப்பருப்பு என்பன முறிப்புகளாகும்.

## 90. மயில்துத்தம்

மயில்துத்தம் முறையாகப் பயன்படுத்தினால் பல நோய்களைப் போக்கும். அளவு மிகுந்தால் உயிரையும் போக்கும். வாந்தி முதலிய பல துன்பங்களைத் தோற்றுவிக்கும். புளித்த மோர் எலுமிச்சம்பழச்சாறு பொரியை நீரிட்டுப்பிசைந்தெடுத்த நீர் என்பன முறிப்புகளாகும்.

## 91. மயில் இறைச்சி

இதன் இறைச்சியில் தேங்காய் சேர்த்துப் பக்குவம் செய்தால் நஞ்சாகிவிடும். ஆனி ஆடி ஐப்பசி கார்த்திகை மாதங்களில் இதன் இறைச்சி அபத்தியமாகும். பாம்மைத்தின்னும் பழக்கமுள்ளதால் ஆவணி புரட்டாசி மாதங்களில் கூட பத்தியமாகும். பொதுவாக மார்கழி முதல் சித்திரை முடிய இதன் இறைச்சி பத்தியமாகும். பூசணி வேரும் சௌவர்ச்ச உப்பும் சேர்த்துச் செய்த சூரணம், சுக்கு கலந்த எலுமிச்சம் பழச்சாறு, உப்புடன்கூடிய கடுக்காய்ப்பிஞ்சின்துகள் பயத்தம் பருப்பு இதற்கு முறிப்புகளாகும்.

## 92. மாங்காய்

மாங்காய், உடல் வலி சோர்வு எனும் இவற்றைத் தோற்று விக்கும். கபத்தை வளர்க்கும். மலத்தைக் கட்டும். இரத்த பித்தத்தைத் தோற்றுவிக்கும். இதற்கு மோரும் உப்பும் முறிப்பு களாகும். மாங்காய்ப்பால் உடலில் பட்டால் புண்ணாகும். அதற்குத் தென்னை ஓலைச்சாறு தேங்காய் ஓட்டைச் சந்தனம் போல் அரைத்தெடுத்த விழுது ஆகிய இவற்றில் ஒன்றைப் பூச வேண்டும். மாம்பழம் சூட்டையும் பித்தத்தையும் வளர்க் கும். வாத பித்தம் காமாலை சோகை கபம் சீற்றமடைதல் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். இயற்கையாக வாதம் அல்லது கபம் மிகுந்துள்ள உடல் கொண்டவர்களுக்குத் தீங்கு விளைவிக்கும். இதற்கு நெய் நெற்பயிர்வேர்கஷாயம், பால் சுக்கு திரிகடுகசூரணம் உப்பு சௌவர்ச்சலவணம் இந்துப்பு மோர் என்பன முறிப்புகளாகும்.

## 93. மாதுளை

மாதுளை, காய்ச்சலுள்ளவர்களுக்கு நோயை வளர்க்கும். இதை மிகுதியாகப் பயன்படுத்தினால் வாதநோயைத் தோற்று விக்கும். எரிச்சலை உண்டாக்கும். செரிமான வலிமையைக் குறைக்கும். இதற்குப் பவழம் பழமும் சூடான உடல் கொண்ட வர்களுக்கு இனிப்புச்சாறுள்ள பழமாயின் புளிப்புச் சுவையுள்ள பழமும் குளுமையான உடல் உடையவர்களுக்கு இஞ்சி முரப் பாவும் முறிப்புகளாகும். புளிப்பு மாதுளை இதயத்திற்குக் கெடுதலை தோற்றுவிக்கும். இயற்கையாகவே சூடான உடல் கொண்டவர்களுக்கு அதே நன்மை பயக்கும். குளுமையான உடல் உடையவர்களுக்கு அசீரணம் ஆண்குறியில் வலி மலக்கட்டு சிறிது விந்து நட்டமும் உண்டாக்கும். இதற்குப் பவழம்பழம் சுக்குத்தூள் கலந்த இனிப்பு மாதுளைச்சாறு இவை முறிப்பு களாகும்.

## 94. மான் இறைச்சி

மான்இறைச்சி மலத்தையும் சிறுநீரையும் கட்டும். இதற்குப் புளிப்புக்கூட்டி புளியையும் கொத்துமல்லி விதையையும் கடுகை யும் சேர்த்துப் பக்குவம் செய்த இதன் இறைச்சியும் முறிப்பு களாகும்.

## 95. மிளகாய்

உலர்ந்த மிளகாய் இயற்கையாகச் சூடான உடல் கொண்ட வர்களுக்குக் கெடுதலை விளைவிக்கும். பித்தத்தையும் கபத்தை

யும் வளர்க்கும். விந்துவை வெளியேற்றும். இதற்கு நெய் புளித்தகாடி புளி மிளகு ஆகியவை முறிப்புகளாகும். பச்சை மிளகாய் பித்தத்தையும் கபத்தையும் வளர்க்கும். மிகுதியாக உண்டால் விந்துவைக்கெடுக்கும். காய்கறிகளின் குளுமைத் தன்மையைப் போக்கும். இதற்கு நெய் காடி என்பன முறிப்பு களாகும்.

### 96. மிளகு

மிளகு பல நோய்களைத் தீர்க்கும் மருந்துப் பொருளாகும். ஆயினும் உடலில் இரத்தம் குறைந்துள்ளவர்களுக்கும் 'கனோரியா' என்னும் பால் வினை நோய் கொண்டவர்களுக்கும் இயற்கையில் சூடான உடல் கொண்டவர்களுக்கும் கெடுதலைச் செய்யும். தலைநோவைத் தோற்றுவிக்கும். தொண்டை இதயம் கல்லீரல் எனும் உறுப்புகளுக்குத் தீங்கு விளைவிக்கும். இதற்கு நெய் புளி தேன் ஆட்டுக் கொழுப்பு என இவை முறிப்புகளாகும்.

### 97. மீன்

மீன் வாதத்தையும் கபத்தையும் வளர்க்கும். தாமத மாகச் செரிமானமடையும். இருமலைத் தோற்றுவிக்கும். இதற்கு நெய் வாதுமைஎண்ணெய் தேன் பிரண்டை மாம்பழம் எள்எண்ணெய் புளிக்காடி தயிர்த்தெளிவு இஞ்சிமுரப்பா குல்கந்து முதலியவை முறிப்புகள்.

### 98. முந்திரி

முந்திரிப்பழத்திற்கு வாதுமைப்பருப்பு வெந்நீர் வேப்பவிதை கள் முறிப்புகள். முந்திரிப்பருப்பை மிகுதியாக உண்டால் பித்தத்தை வளர்க்கும். இதற்கு வெந்நீர் வெல்லம் நெய்யில் வறுத்தல் என்பன முறிப்புகளாகும்.

### 99. முருங்கை

முருங்கைக்கு காடி தயிர் கருங்காலிக் கட்டைக் கஷாயம் பனங்கள் முறிப்புகளாகும். முற்றிய இதன் காய் கபத்தையும் வாதத்தையும் வளர்க்கும். இளசான முருங்கைக் காய்கள் பல நோய்களைப் போக்கும். பத்தியமானது. முருங்கைக் காய்க்கு வெல்லம் நெய் கடுகுத்தூள் முறிப்புகளாகும்.

### 100. முறுக்கு

முறுக்கு மிகுதியாக உண்டால் மலத்தைக்கட்டும். பசியைப் போக்கும். சோர்வைத் தோற்றுவிக்கும். கபவாதங்களை

வளர்க்கும். தோல் நோய்களைத் தோற்றுவிக்கும், கண்களுக்கும் தீங்கு விளைவிக்கும். இதற்குச் சுக்குத் தூள் முறிப்பாகும்.

## 101. முள்ளங்கி

வயிற்றில் நீர் சேர்ந்துள்ளவர்களுக்குக் கெடுதலை விளைவிக்கும். இரத்தத்தைக் கெடுக்கும். தொண்டைக்கும் தலைக்கும் தீங்கை உண்டாக்கும். இதற்கு சீரகம் உப்பு கடுகுத்தூள் தேன் முறிப்புகளாகும்.

## 102. மொச்சை

மொச்சை, காய்ச்சல் இரத்தபித்தம் எரிச்சல் கபவாதம் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். விந்துவைக் கெடுக்கும். இதற்குச் சர்க்கரை சந்தனம் காடிநீர் சூடுதரும் பொருள்களோடு கலந்து உண்ணுதல் முறிப்புகளாகும்.

## 103. மோர்

இயற்கையாகக் குளுமைத்தன்மை, மிக்க வாதம் கொண்டவர்கள் இரத்தம் குறைந்துள்ளவர்கள் குழந்தை பெற்ற மங்கை மோரை மிகக் குறைவாகப் பயன்படுத்த வேண்டும். சிலருக்கு மோர், காய்ச்சல் தலைச்சுற்றல் அசீரணம் போன்ற துன்பங்களைத் தோற்றுவிக்கும். இதற்கு உஷ்ணம் தரும் மருந்துகள் சுக்கு இந்துப்பு உப்பு சங்கபற்பம் இஞ்சிமுரபா என்பன முறிப்புகள்.

## 104. யவதானியம்

யவதானியம் மிகுதியாகப் பயன்படுத்தினால் சிறுநீரகத்திற்குக் கெடுதலை விளைவிக்கும். இதற்கு நெய் சர்க்கரை வெள்ளைநாயுருவி க்ஷாரம் எள்ளெண்ணெய் என்பன முறிப்புகளாகும். பொரிமாவு நெய் வெல்லம் மாதுளம்பழச்சாறு ஆகியவற்றைக் கலந்து செய்த மந்தம் எனும் கஞ்சியும் முறிப்பாகும்.

## 105. உளுந்து வடை

இதை மிகுதியாகப் பயன்படுத்தினால் கபத்தையும் இருமலையும் தோற்றுவக்கும். இதற்கு வெள்ளை நாயுருவி க்ஷாரம் பெருங்காயம் இஞ்சி எலுமிச்சைவேர் கற்கண்டு பிடாலவணம் என்பன முறிப்புகளாகும்.

## 106. வாதுமை

வாதுமைப்பருப்பு பித்தத்தை வளர்க்கும். வயிற்றுக்குச் சோர்வை உண்டாக்கும். இதற்கு ரூமிமஸ்தகி அத்திப்பழம் சர்க்கரை என்பன முறிப்புகள். இதை நெய்யில் வறுத்தால் இதன் தோஷம் நீங்கும்.

## 107. வாழை

பெரிய விதைகள் உள்ள காய் மலத்தைக்கட்டும். குருத் தன்மையை உண்டாக்கும். இதற்கு நெய் எள்ளுச் செடியின் க்ஷாரம் முறிப்புகள்.

வாழைப்பழம் இயற்கையாக வாத சிலேத்தும தத்துவம் கொண்டவர்களுக்கு கண்நோயையும், விதை வீக்கம் உள்ளவர் களுக்கு நோயின் பெருக்கத்தையும் தோற்றுவிக்கும். வெற்று வயிற்றில் உண்டு நீரைப்பருகினால் கிரஹணி நோயைத் தோற்று விக்கும். இதற்கு இப்பழத்தின் தோல் சர்க்கரை கற்கண்டு ஏலஅரிசி மிளகு கஷாயம் நெய் தேன் உப்பு இஞ்சி என்பன முறிப்புகளாகும்.

## 108. வில்வப் பழம்

வில்வப்பழம் பித்தத்தை வளர்க்கும். குருத்தன்மையைத் தோற்றுவிக்கும். இதற்குச் சுக்குத்தூள் வேப்பவிதை என்பன முறிப்புகளாகும்.

## 109: விளாங்கனி

விளாங்காய் வயிற்றுப் பிடிப்பையும் தொண்டை நோய் களையும் கிருமிகளையும் தோற்றுவிக்கும். குரலைக் கெடுக்கும். மூன்று தோஷங்களையும் சீற்றமுறச் செய்யும். இதற்கு உஷ்ணத்தை வளர்க்கும் பொருள்களும் தேனும் முறிப்புகளாகும்.

விளாம்பழம் பத்தியமானது, விதைகளை நீக்கிப் பயன்படுத்த வேண்டும். இதன் விதைகள் இதயம் தொண்டை என்பன வற்றிற்குக் கேடு விளைவிக்கும். வலியைத் தோற்றுவிக்கும். இதற்கு சோம்பு வேப்பவிதை சர்க்கரை ஆகியவை முறிப்பு களாகும்.

## 110. வெங்காயம்

வெங்காயத்தை யாகப் பயன்படுத்தினால் அறி வாற்றலைக் குறைக்கும். அசீரணம் கபம் வாதம் வயிற்றில் வீக்கம் இரத்தபித்தம் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். இயல்பிலே சூடான உடல் கொண்டவர்களுக்குத் தலைவலி விலா வலி கிருமி மூலநோய் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். இதற்குப் புளியுடன் பக்குவம் செய்தல் நெய்யில் வறுத்தல் காடியில் பக்குவம் செய்தல் உப்பு கலந்த நீரால் கழுவிப்பயன் படுத்தல் என்பன முறிப்புகளாகும்.

## 111. வெண்டை

வெண்டை, உந்தியில் குளுமையையும் வயிற்றுவலியையும் தோற்றுவிக்கும். இயற்கையாக உஷ்ணத்தன்மை கொண்டவர் களுக்கு நன்மைதரும். வாதம் மிகுந்துள்ளவர்களுக்கு வயிற்றில் துன்பம் விளைவிக்கும். இதற்குச் சீரகம் புளிப்புமோர் என்ப வற்றை நீரில் கொதிக்க வைத்து நீரை வெளியேற்றி விட்டுப் பக்குவம் செய்தல் முறிப்புகளாகும்.

## 112. வெந்தயம்

வெந்தயக்கீரையை மிகுதியாக உண்டால் தலைவலியை உண்டாக்கும். இதற்குப் புளிப்புச் சுவையுள்ள பொருள்கள் முறிப்புகளாகும். வெந்தயத்தை மிகுதியாகப் பயன்படுத்தினால் பித்தத்தை வளர்க்கும். தலைவலியைத் தோற்றுவிக்கும். இதற்குப்புளி புளிப்புமாதுளை ஆட்டின் வயிற்றிலுள்ள குட்டி யின் இறைச்சி முறிப்புகளாகும்.

## 113. வெல்லம்

வெல்லத்தினால் தோன்றும் அசீரணத்திற்குச் சுக்கு கல்யாணப்பூசணிச்சாறு என்பன முறிப்புகளாகும்.

## 114. வள்ளிக்கிழங்கு

வள்ளிக்கிழங்கு வயிற்றில் வாதத்தைத் தடுத்து நிறுத்தும். வாதம் பித்தம் கபம் ஆகியவற்றைச் சீற்றமுறச் செய்யும். சர்க்கரை பால் புரசப்பட்டைச்சாறு உப்பு என்பன இதற்கு முறிப்புகளாகும்.

### 115. வெற்றிலை

வெற்றிலையை மிகுதியாக உட்கொண்டால் சிலருக்கு மனக் கலக்கம் தோன்றும். குளிர்ந்த நீர் புளிப்புச் சுவையுள்ள பொருள்கள் தயிர் பானங்கள் என்பன இதற்கு முறிப்புகளாகும்.

### 116. வேர்க்கடலை

கபம் பித்தம் கபவாதம் என்பனவற்றை வளர்க்கும். மலத்தைக்கட்டும். இதற்கு வெல்லம் சர்க்கரை நெய்யில் வறுத்தல் என்பன முறிப்புகளாகும்.

### 117. ஜாதிக்காய்

ஜாதிக்காய் இயற்கையாகச் சூடு மிகுந்துள்ளவர்களுக்குத் தலைவலியைத் தோற்றுவிக்கும். சூட்டைக் கிளப்பும். மயக்கத்தை உண்டாக்கும். இதற்குக் கொத்துமல்லி தேன் ரோஜாமலர் கடல் நுரை என்பன முறிப்புகளாகும்.

### 118. ஜாதிபத்திரி

ஜாதிபத்திரியை மிகுதியாகப் பயன்படுத்தினால் நெஞ்சு கல்லீரல்களுக்குக் கேடு விளைவிக்கும். இதற்கு வேலம் பிசின் ரோஜாமலர் கடல்நுரை பன்னீர் என்பன முறிப்புகளாகும்.

### 119. ஜிலேபி

ஜிலேபி மிகுதியாக உண்டால் சீதபித்தத்தைத் தோற்று விக்கும். இதற்கு மாதுளம்பழம் வேப்பவிதைச்சாறு இலவங்க கஷாயம் முறிப்புகளாகும்.

# 3. பொருட்களின் தன்மைகள்

**அசீரணபேதியைப் போக்குபவை**

அகில் இஞ்சி ஓமம் மலைஈர்க்குப்புல் முத்துபற்பம்.

**அசீரண வலியைப் போக்குபவை**

பெருங்காயம் வாசனைப்புல் சாமந்திப்பூ வெள்ளைப்பூண்டு.

**அசீரணத்தைப் போக்கக்கூடியவை**

வாழைக்காய் கடுகு பெருங்காயம் புளிவஞ்சி இஞ்சி நாயுருவி ஓமம் ஓமஎண்ணெய் கஸ்தூரி இஞ்சி ஜாதிக்காய்

எண்ணெய் சீரகம் சடாமாஞ்சி வெற்றிலை கருஞ்சீரகம் வெண்டை வெங்காயம் எள்ளுச்செடி நாவற்செடி புதினாஇலை ஆலமரம் உலர்ந்தமிளகாய் முள்ளங்கி இலவங்கம் இலவங்கத் தைலம் வெள்ளைப்பூண்டு சுக்கு வசம்பு சர்ஜக்ஷாரம் கருந்துளசி காட்டுத் துளசி முருங்கை இலை.

## அதிமூத்திரத்தைக் குறைப்பவை

அன்னபேதி அபிரகபற்பம் சிவப்புச்சாரடை எலிச்செவி இலை காஞ்சொரி புங்கன் கருந்துளசி நிலாவாரைப்பூ நிலாவாரைப் பிசின் சீந்தில் கொடி வெள்ளைச்சாரடை தேன் கக்கரி திராட்சை நாவல்மரம் கீழாநெல்லி பவளபற்பம் பச்சைக்கர்ப்பூரம் பூசணிக் காய் இலவமரம் இலவங்கம் வெள்ளைப்பூண்டு வேப்பம்பழம் வேப்பம் பிசின் சித்தரத்தை சுண்ணாம்பு என்பவை அதிமூத் திரத்தைக் குறைக்கும் பொருள்கள்.

## அதிசாரத்தைப் போக்குபவை

அக்ரோடு காட்டுமா அகில் வாழை வாழைப்பூ இங்கிலிகம் இங்கிலீகபற்பம் சிவப்பு ஆம்பல்கிழங்கு நெல்லி ஏழிலைப்பாலை ஓமம் கறிவேப்பிலை கடுக்காய் துவரை கர்க்கடகசிருங்கி சர்ப் பூரம் குடசப்பாலை கருஅகில் பேரீச்சங்காய் யானைத்திப்பிலி கிரந்திதகரம் செவ்வியம் சீரகம் சடாமாஞ்சி ஜாதிக்காய் ஜாதி பத்திரி மூங்கில்உப்பு தாமிரபற்பம் கோரைக்கிழங்கு தேன் மாது ளஞ்சாறு நாவல்மரம் தண்ணீர்விட்டான்கிழங்கு ஞாழல் இலவம் பிசின் பெருங்கோரைக்கிழங்கு ஆலமரம் முத்துப்பற்பம் மாமரம் ஆட்டுநெய் அத்திமரம் நிலத்தாமரை இலந்தை உரேணுகம் சிவப்புச்சந்தனம் அரசந்துளிர் பாச்சோத்தி வெட்டிவேர் வட்டத் திருப்பி விளாமரத்திலைச்சாறு வேப்பம்பிசின் தங்கபற்பம்சீனா கற்கண்டு பெருங்காஞ்சொரி ஆகியவை அதிசாரத்தை நீக்கும் பொருள்கள்.

## அந்தர்கதசுரத்தைப் போக்குபவை

இரும்பு எஃகு கரிசாலங்கண்ணி வசம்பு ஜாதிபத்திரி ரஸஸிந் தூரம் என்பவை அந்தர்கதசுரத்தைப் போக்கும் பொருள் களாகும்.

## அபஸ்மாரத்தைப் போக்குபவை (கால்கை வலி)

ஓமம் கர்ப்பூரம் குங்குமம் சடாமாஞ்சி எருக்கம்பூ வெற்றிலை டர்பன்டைன் கோவை உவர்மண் கழுதை மற்றும் மனிதனின்

சிறுநீர் நவாச்சாரம் மஞ்சள் பழையநெய் புதினாஇலை மாசி பத்திரி முருங்கைவேர் எட்டிவிதை நிலத்தாமரை வெங்காரம் வசம்பு வேப்பிலை ஸர்ஜக்ஷாரம் சாம்பிராணிமரம் சீமைமரு தோன்றிவிதை என்பவை அபஸ்மாரத்தைப் போக்கும்பொருள் களாம்.

**அபிகாதசுரத்தை போக்குபவை (காயம் படுதலால் தோன்றும் காய்ச்சலைப் போக்குபவை)**

காட்டுச்சீரகம் வெள்ளைஎருக்கன் தாய்ப்பால் காட்டுக் கோவை புளி எருக்கஞ்செடி முருங்கை வேர் ஆகியவை அபிகாத சுரத்தைப் போக்கும் பொருள்கள்.

**அருசியைப் போக்குபவை (சுவையறியாமை)**

காட்டுத் துறிஞ்சிப் பழம், அதிவிடயம் இஞ்சி ஆடா தொடை, காட்டுமுல்லை அகத்தி சுண்டைக்காய் சிவப்புச்சாரடை சிவப்புநொச்சி ஏலக்காய்த் தைலம் ஏலஅரிசி கடுகரோகிணி கடுக்காய் கர்காடகச்சிருங்கி தாய்ப்பால் சாமந்திமலர் சாமந்தி மலர்எண்ணெய், ஜாதிக்காய் தக்கோலம் கசப்புப்புடலை தாளிச பத்திரி வெள்ளைச்சாரடை மாதுளம்பழச்சாறு திராட்சை கொத்தமல்லிவிதை கருநொச்சி எலுமிச்சை நன்னாரி புஷ்கர மூலம் சந்தனம் முத்துச்சிப்பிபறபம் இலவங்கம் பாச்சோத்தி உலோகபறபம் வெள்ளைப்பூண்டு சுக்குசீயக்காய்ச் செடி என் பவை அருசியைப்போக்குபவை.

**அடிவயிற்றில் நோயைப் போக்குபவை**

ஆமணக்கு புளிவஞ்சி ஏலஅரிசி நாணல் இளநீர் கறிவேப் பிலை தாய்ப்பால் தாளிசபத்திரி சிறுநாகப்பூ கீழ்க்காய் நெல்லி கல்யாணப்பூசணி முள்கத்திரி ஆட்டுநெய் கண்டங்கத்தரி சதகுப்பை எனும் பொருள்கள் அடிவயிற்று நோயைப் போக்கவல்லவை.

**அழற்சியைப் போக்குபவை**

ஆடாதொடை வாழைக்காய் வாழைமரம் இஞ்சி பித்தளை பற்பம் சிவப்புப்பர்பாடகம் செவ்வாம்பல்கிழங்கு பூலாங்கிழங்கு வாசனைப்புல் கர்ப்பூரம் நாணல் கொத்துமல்லி இளநீர் அருகம்புல்வேர் கோரைக்கிழங்கு தேன் தேள்கொடுக்குச்செடி வெள்ளைமருது தேநீர் மாதுளைச்சாறு கொத்துமல்லிவிதை நில வேம்பு மஞ்சள் சந்தனம் பற்பாடகம் கல்யாணப்பூசணி மூவிலை

முள்மருதோன்றி வெந்தயக்கீரை முள்கத்தரி இலவங்கம் வெட்டி வேர் மூங்கில் சிறுகடுகு இந்துப்பு என்பவை அழற்சியை நீக்கும் பொருள்கள்.

**அழுகிய விரணத்தைப் போக்குபவை**

அன்னபேதி உப்புநீர் நெல்லி கர்ப்பூரம் காடி புங்கன் கந்தகதிராவகம் சீனாகற்கண்டு சாமந்திமலர் கல்ஆலைப்பால் நவாச்சாரம் மாசிபத்திரி வேப்பஎண்ணெய் வேப்பஇலை தோன்றி விதை சுரேகாரதிராவகம் ஆகியவை அழுகிய விரணத்தை ஆற்றுபவை.

**ஆண்மையை வளர்ப்பவை**

அக்ரோடு வாழைப்பழம் இந்திரகோபம் என்னும் வண்டு (மழைக் காலத்தில் தோட்டங்களில் காணப்படும் பட்டு போன்ற வண்டு) சிட்டுக்குருவி ஓமம் தென்னங்கள் கோழிமுட்டை பேரீச் சங்காய் குங்குலியம் மாதுளம்பழம் இலவங்கப்பட்டை நாவற் பழம் நிலாவாரை முதுக்கன் கிழங்கு தண்ணீர்விட்டான் கிழங்கு அமுக்கராக்கிழங்கு சிலாசத்து இரஸபற்பம் வெள்ளிபற்பம் ரஸ கர்ப்பூரம் உலோகபற்பம் அயக்காந்தபற்பம் வசம்பு தங்கபற்பம் எனும் இவை ஆண்மையை வளர்க்கும் பொருள்கள்.

**ஆமசூலையைப் போக்குபவை**

காயபலக்கட்டை

**ஆமவாதத்தினால் தோன்றும் வலியை தீர்ப்பவை (அசீரணத்தால் தோன்றும் வாதம்)**

அகில் அயக்காந்த பற்பம் ஈசுவரிசெடி கர்ப்பூரம் கஸ்தூரி குப்பைமேனி குடசப்பாலை கருஅகில் கந்தகம் கருங்காலி எருக்கஞ் செடி தகரைச்செடி சீந்தில்கொடி வெள்ளைமருது சரளதேவதாரு நிலவேம்பு சிறுகாஞ்சொறி திப்பிலி கண்டந்திப்பிலி மிளகு உலர்ந்த மிளகாய் முருங்கை எண்ணெய் எட்டிவிதை உலோக பற்பம் மண்டூரபற்பம் துமட்டி வெள்ளைப்பூண்டு சுக்கு சம் பங்கி மரம் ஆகியவை ஆமவாதத்தினால் தோன்றும் வலியைத் தீர்க்கும் பொருள்களாகும்.

**ஆமவிகாரத்தைத் தீர்ப்பவை**

காட்டுத்துளசி சுண்டைக்காய் சுண்டைச்செடி எலிச்செவி செடி முள்ளம்பன்றி ஓமம், கம்பில்லம் குரோசானிஓமம் கருங்

காலிதாய்ப்பால் சக்கரவர்த்திக்கீரை வெண்கடுகு, தேவதாருசெடி பாசிக்கொடி வட்டத்திருப்பி பிடாலவணம் முள்ளங்கி சிலாசத்து இலவங்கம் கண்டங்கத்தரி பெருங்காயஇலை எனுமிவை ஆம விகாரத்தைத் தீர்ப்பவை.

## ஆயுளை வளர்ப்பவை

அக்ரோட்டு அபிரகபற்பம் காட்டுப்பூண்டு பசும்பால் பசு வெண்ணெய் பசுநெய், இங்கிலிகம் இரும்பு எஃகு எனும் இவற்றின் பற்பங்கள், நெல்லிக்காய் சிவப்புச்சாரடை கடுக்காய் கர்ப்பூரசிலாசத்து குங்குமப்பூ கந்தகம் கரிசலாங்கண்ணி தகர பற்பம் சீந்தில்கொடி தாரமாக்ஷிகம் வெள்ளைச்சாரடை வெள்ளைமிளகு கருஞ்சாரடை பிரண்டை எலுமிச்சம்பழம் புஷ்பராகபற்பம் வல்லாரை முத்துப்பற்பம் வெள்ளிபற்பம் வெள்ளைப்பூண்டு சங்கங்குப்பி தங்கபற்பம் என்பவை ஆயுளை வளர்க்கும் பொருள்களாகும்.

## இதயத்தில் வலியைப் போக்குபவை

உப்பு ஓமம் கடுகரோகிணி கழற்சி சிவப்புமுள்ளங்கி தேன் நிலாவாரை பருத்திவிதை சிலாசத்து சிவப்புச்சந்தனம், அரக்கு வசம்பு வாதநாராயணஇலை, சுண்ணாம்பு இனிப்புமாதுளம் பழம், சோம்பு வட்டத்திருப்பி (சிலேஷ்மந்தக) கல்லூர்வஞ்சி (பாஷாணபேத).

## இதய நோயைத் தீர்ப்பவை

குங்குமப்பூ குங்கிலியம் பிரங்கி சாம்பிராணி காட்டு கோதுமை அதிவிடயம் புளிவஞ்சி ஆமணக்கு பெருங்காயம் வாசனைப்புல் கடுக்காய் சிவப்புமுள்ளங்கி செவியம் புளி நெருஞ்சில் வெண்மருது ஜாதிபத்திரி கோரைக்கிழங்கு கொத்துமல்லி விதை கருஞ்சாரடை சிறுநாகப்பூ நாவல்பழம் கல்லூர்வஞ்சி கண்டந்திப்பிலி பிடாலவணம் இலவமரம் சிலாசத்து மிளகு வெந்தயக் கீரை வசம்பு நொச்சி வாயுவிளங்கம் மூங்கில் வெள்ளைப்பூண்டு ஸர்ஜக்ஷாரம் சோம்பு க்ஷீரகாகோலி என்பவை இதயநோயைத் தீர்க்கும் பொருள்கள்.

## இதயத்திற்கு வலிமை தருபவை

அம்பர் அக்ரோட்டு நெல்லிக்காய் ஏலஅரிசி கஸ்தூரி குங்குமப்பூ தேங்காய் மணித்தக்காளி கோழிமுட்டை புளி சடா மாஞ்சி ஜாதிக்காய் தேன் இலவங்கப்பட்டை திராட்சைச்சாறு

இனிப்புமாதுளை நிலப்பனை பவழபற்பம் மஞ்சள் சிறுசதகுப்பை வாதுமை எண்ணெய் முத்துபற்பம் சிலாசத்து மந்தாரைமலர் இலவங்கம் வசம்பு மூங்கில் நொச்சிச்செடி ஆகியவை இதயத்திற்கு வலிமை தரும் பொருள்களாம்.

**இதயத்தை மென்மைபடுத்துபவை**

வாழைப்பழம் சீனாகற்கண்டு, வாதுமைப்பருப்பு காராமணி.

**இதயத்தை தூய்மைப்படுத்துபவை**

அக்கராகாரம் ஏலஅரிசி ஓமம் கோழிமுட்டை கசகசா குங்கிலியம் சிறுகீரை சீனாகற்கண்டு சிறுநெருஞ்சில் இலவங்கப் பட்டை நிலாவாரை புதினா வாதுமைப்பருப்பு வெந்தயம்சிலா சத்து வெண்ணெய் சோம்பு.

**இந்திரலுப்தத்தைப் போக்குபவை (தலையில் உரோமம் திட்டுத் திட்டாக உதிர்ந்து காணப்படும் ஒரு வகை நோய்)**

குன்றிமணி மந்தாரைமலர் கசப்புப்புடலை பப்பாளி.

**;மலைப் போக்குபவை**

சீமைஅத்திப்பழம் (உலர்ந்தது) அக்கராகாரம் காட்டுச் சீரகம், காட்டுக்கடலைச்செடி, மொச்சை அதிவிடயம் அன்னபேதி அகத்திவிதை ஆடாதொடை, ஆமணக்கு பசுவெண்ணெய் நெல்லிக்காய் நாயுருவி சுண்டை செவ்வாம்பல் பூலாங்கிழங்கு, கஸ்தூரி வாசனைப்புல் குங்குமப்பூ திராட்சை குப்பைமேனி குரோசானிஓமம் கருந்துளசி, பேரீச்சங்காய் கேரட் கரிசலாங் கண்ணி குங்கிலியம் குன்றிமணி கருங்காலிச்செடி, ஜாதிபத்திரி எருக்கஞ்செடி வெற்றிலை மூங்கில்உப்பு பனங்கற்கண்டு, தாமிர பற்பம் துளசி, தேன் தேள்கொடுக்குச்செடி மாதுளை(இனிப்பு) இலவங்கப்பட்டை, சாரடை பிரண்டை வெங்காயம் நிலவேம்பு பவழபற்பம் பர்ப்பாடகம் மஞ்சள் சதகுப்பை திப்பிலி பெருங் காஞ்சொரி அமுக்கராக்கிழங்கு சூரியகாந்திச்செடி வாதுமை எண்ணெய், வாதுமைப்பருப்பு மிளகு வெந்தயம் முள்முருங்கைதோன்றி ஆட்டுச்சிறுநீர் அரேணுகம் இலவங்கதைலம் இலவங்கம் வசம்பு வட்டத்திருப்பி நொச்சி வேப்பஎண்ணெய் சங்கங்குப்பி சுக்கு சோம்பு க்ஷீரகாகோலி எனுமிவை இந்திரலுப்தநோயைத் தீர்க்கும்.

### இரத்தகாசத்தைத் தீர்ப்பவை

வாழைக்காய் நெல்லிக்காய் கர்ப்பூரம் தாய்ப்பால் முல்லைச்செடி வாகை நிலவேம்பு இலவமரம் முள்ளங்கி சந்தனம் ஆகியவை இரத்த காசத்தைத் தீர்ப்பவை.

### இரத்தத்தில் உள்ள சூட்டைத் தணிப்பவை

நெல்லிக்காய் காப்பி புளி சீரகம் தர்பூசணிப்பழம் தேநீர் எலுமிச்சை நாவல் சூராகாரம் ஆகியவை இரத்த சூட்டைத் தணிக்கும்.

### இரத்தத்தைத் தூய்மைப்படுத்துபவை

காட்டுதிராட்சை அன்னபேதி அயபற்பம், தர்பூசணிப்பழம் கர்கடகச் சிருங்கி, குங்கிலியம் கரிசலாங்கண்ணி, புளி சீனா கற்கண்டு சடாமாஞ்சி தாமரைமலர் திராட்சை இனிப்பு மாதுளை நிலவேம்பு மஞ்சள் பாலைக்கீரை, ஞாழல் மிளகு முஞ்சைப்புல் முள்ளங்கி மண்டூரம் வசம்பு வேப்பமரம் சிலாசத்து சந்தனம் ஆகியவை இரத்தத்தைத் தூய்மையாக்கும் பொருள்கள்.

### இரத்த தோஷத்தைப் போக்குபவை

அயக்காந்தபற்பம் சிவப்புச் சாரடை ஏழிலைப்பாலை கடம்பமரம் நாணல், கடுகரோகிணி புளி அறுகம்புல்வேர் குங்கிலியம் தேன்அடை கறுப்புக்கருங்காலி, ஞாழல் மல்லிச்செடி சிவப்புச்சந்தனம் இலந்தை வெங்காயம் கோரைக்கிழங்கு நிலப் பனை என்பன இரத்த தோஷத்தை நீக்கும் பொருள்கள்.

### இரத்தபித்தத்தை (வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் இரத்தம் வெளி வருதலைத் தடுப்பவை)

காட்டுமுல்லை காட்டுக்கடலை ஆடாதொடைமலர் ஆடாதொடை காட்டுக்குருவி புலால், அயக்காந்தபற்பம் அகில் தைலம் வாழைக்காய், வாழைமரம், வாழைப்பூ அகத்திச்செடி பசும்பால், இலுப்பைமரம் சிட்டுக்குருவி ஏலஅரிசித்தைலம் கறி வேப்பிலைப்பழம், புங்கன்செடி, குங்குமப்பூ, குன்றிமணிச்செடி, குருவேர் கொத்துமல்லி கர்ப்பூரம் தேங்காய்ப்பூ, பேரீச்சங்காய், குங்கிலியம் குதிரைச்சாணம் கிரந்திதகரம் தாய்ப்பால், சிறுகீரை சாமந்திமலர், திராவகம், சடாமாஞ்சி, சணல்செடி காவிக்கல், சீரகம் தேக்குமரம் தாமரைவிதை, தாமரைமலர் தேன் கோரைக்

கிழங்கு வெள்ளைவெட்டிவேர், தருப்பை மாதுளை திராட்சை கருநெய்தற்கிழங்கு, மயில்இறைச்சி குசுமன்செடி பச்சைக்கர்ப் பூரம் பச்சைப்பாக்கு, பதுமகம் பன்னீர் கீரைப்பாலை, புனுகு புஷ்கரமூலம், பெருகாஞ்சொரி பால்முதுக்கன் கிழங்கு அமுக்கராக் கிழங்கு புண்டரீகம் ஞாழல் மஞ்சள் சந்தனம் பெருங்கோரைக் கிழங்கு முருங்கைவிதை வெந்தயக்கீரை மேதா மகாமேதா மண்டூரம் ரஸாஞ்சனம் அரக்கு உலோகபற்பம் வேப்பமரம் வேப்பம்பழம் கடலை கடுகு ஸஹதேவி

**இரத்தப்பெருக்கைத் தணிப்பவை**

வாழைமரம் குருவேர் நெய்தற்கிழங்கு கந்தகதிராவகம் புளியங்கொட்டை சணல்செடி துவர்ப்பு மண் தருப்பை கரு நெய்தற்கிழங்கு சப்பாத்திக்கள்ளி கீழாநெல்லி படிகாரம் மாங் கொட்டை முத்து அத்திச்செடி பப்பரளிப்பழம்.

**இருது ரத்தப் பெருக்கைத் தணிப்பவை**

வாழைப்பூ அல்லிச்செடி அசோகமரம் நெல்லிக்காய் செவ் வாம்பல்கிழங்கு தேங்காய்ப்பூ பேரிச்சமலர் மந்தாரைமலர் மாங்கொட்டை அத்திமரம் சுராகாரம்.

**இருது சூலையைப் போக்குபவை**

காட்டுமல்லி துலுக்கவேப்பமரம் கற்சுண்ணாம்பு சீமைமரு தோன்றிவிதை.

**இருது ஆவதைக் கிரமப்படுத்துபவை**

கொள்ளு சீரகம் கோரைக்கிழங்கு வெங்காயம்.

**இருது ரத்தத்தைத் தூய்மைப்படுத்துபவை**

அசோகமரம் இலவங்கப்பட்டை காராமணி வெள்ளைப் பூண்டு.

**இருது ரத்தத்தை நன்கு வெளியேற்றுபவை**

அன்னபேதி அகத்திவிதை அசோகமலர் அக்கராகாரம் ஆமணக்கு, காட்டுக்கருணை கொள்ளு ஓமம் கடுகரோகிணி கழற்சித்தளிர் கழற்சிச்செடி, குங்கிலியம் நாய்துளசி எருக்கஞ் செடி, சடாமாஞ்சி வெள்ளைச்சாரடை வெள்ளைமருது இல வங்கப்பட்டை நீர்நொச்சி, எள், எள்எண்ணெய் வெங்காயம்

சிறுகாஞ்சொறி புதினா யானைநெருஞ்சில் பருத்திச்செடி மஞ்சிட்டி பப்பாளி வெந்தயக் கீரை, வெந்தயம் வல்லாரை மூங்கில், வசம்பு துமட்டி வெள்ளைப்பூண்டு சம்பங்கிச்செடி சதகுப்பை சோம்பு சீமைமருதோன்றிவிதை.

**இரத்தபேதியைத் தணிப்பவை**

ஆகாசகருடி வாழைக்கன்று நெல்லிக்காய் தேங்காய்ப்பூ பேரீச்சம்பூ புளியங்கொட்டை பருத்திவிதை இலவமரம் வாயுவிளங்கம்.

**இரத்த மூலத்தைத் தணிப்பவை**

காட்டுக்கருணை நாயுருவி நெல்லிக்காய் சிவப்புக்குன்றிமணி விதைச் செடி புங்கன்செடி முயல்இறைச்சி வெட்பாலைச் செடி கோழிமுட்டை துத்தநாகம் பப்பாளிப்பழம் தருப்பை மாதுளைச்சாறு பவழபற்பம் மாங்கொட்டை.

**இரத்தவாந்தியைப் போக்குபவை**

வாழை மரம், வாழைக்காய் ஆடாதொடை உப்பு நாயுருவி நெல்லிக்காய் கசப்புக் கோவை, கோழிமுட்டை கந்தகதிராவகம் வெண்கருங்காலிக் கட்டை, தர்ப்பை இலவங்கப்பட்டை படிகாரம் கீரைப்பாலை புளிச்சக்கீரை பப்பாளிக்காய் ஆலம்பழம் மாம்பட்டை, சிலாசத்து, வெட்டிவேர் சுராகாரம்.

**இரத்த வாதத்தைப் போக்குபவை**

காட்டுப்பயறு காட்டுமஞ்சள் வாசனைப்புல் கஸ்தூரி குன்றிமணி சீந்தில்கொடி வேப்பம்பழம் மேதை மகாமேதை முள்மருதோன்றி வெட்டிவேர் புலிநகப்பூண்டு ஸர்ஜக்ஷாரம் அரிதாரம்.

**இரத்த வளர்ச்சிக்கு ஏற்றவை**

சீமைஅத்திப்பழம் அபிரகபற்பம் பசுநெய் ஓமம் தினை கோழிமுட்டை ஜாதிக்காய் இனிப்புமாதுளை திராட்சை எள்.

**உடல் இளைத்தலைப் போக்குபவை**

காட்டுச் சதகுப்பை அபிரகபற்பம் அயகாந்தபற்பம் கஸ்தூரி தேங்காய்எண்ணெய் மீன்எண்ணெய் தர்பூசணிப்பழம் கோரைக்கிழங்கு குமிழன் தண்ணீர்விட்டான்கிழங்கு அமுக்கராக்கிழங்கு

பெருங்கோரைக்கிழங்கு வாதுமைப்பருப்பு பண்ட்ரம் வெள்ளி பற்பம் வெண்ணெய்.

**உடலுக்குப் பொலிவு தருபவை**

இஞ்சி பசுவெண்ணெய் எஃகுபற்பம் சிவப்புக்குன்றிமணி, ஓமம் கறிவேப்பிலை கர்ப்பூரத்தைலம் கர்ப்பூரம் கஸ்தூரி குங்குமப்பூ, குங்கிலியம் கோரோசனம் புளியம்பூ ஜாதிக்காய் ஆவாரம்பூ தகரைச்செடி தகரவிதை கோரைக்கிழங்கு, இனிப்பு மாதுளை பிரண்டை எலுமிச்சை வெங்காயம் நிலாவாரை, நிலப் பனங்கிழங்கு, புனுகு, அமுக்கராக்கிழங்கு, ஞாழல் நெருஞ்சில் சந்தனம் முத்துச்சுண்ணாம்பு முருங்கைமலர் வெந்தயக்கீரை வெள்ளிபற்பம் ரஸகர்ப்பூரம் வெண்ணெய் வெள்ளைப்பூண்டு சங்கங்குப்பி சங்கபற்பம் சுக்கு க்ஷீரகாகோலி.

**உடலின் சூட்டைத் தணிப்பவை**

கருணைக்கிழங்கு கறிவேப்பிலை கஸ்தூரி தேங்காய் தினை பசுவின்சிறுநீர் ஜாதிக்காய், சீரகம் பனங்கள்ளு தாளிசபத்திரி வெங்காயம் வெந்தயக்கீரை கடலை சங்கசூர்ணம்.

**உடலைச் செழிப்புறச் செய்பவை**

அகில் காட்டுதுரிஞ்சிப்பழம் இஞ்சி நாயுருவி, நெல்லிக்காய் காகோலி, தேங்காய் தேங்காய்ப்பால், கோஷ்டம் தாய்ப்பால் சிற்றாமணக்கு மீன்எண்ணெய் முந்திரிப்பழம் கற்கண்டு இனிப்பு மாதுளை திராக்ஷாஸவம் பால்முதுக்கன்கிழங்கு குமிழன் அமுக் கராக்கிழங்கு வாதுமைப்பருப்பு இலவமரம் கீரைப்பாலை முத்து பற்பம் வெள்ளிபற்பம் அரசமரம்.

**ல்Іவலிமையை வளர்ப்பவை**

சீமை அத்திப்பழம் அபிரகபற்பம் வாழைப்பழம் பசும்பால் கர்ப்பூரசிலாசத்து முயல் உடும்பு என்பவற்றின் இறைச்சி தேங் காய்எண்ணெய் கோழிமுட்டை, கோழிஇறைச்சி கருஅகில் கசகசா கருணைக்கிழங்கு வெங்காயம் எள், எள்எண்ணெய் நிலப்பனங் கிழங்கு பவளபற்பம் பச்சைக்கர்ப்பூரம் கல்யாணப்பூசணி, கடலை வெந்தயக்கீரை வெண்ணெய் வேப்பிலை, அக்ரோடு காட்டுப்பன்றிநெய் காட்டுக் கருணை, காட்டுப்புறாஇறைச்சி, அன்னபேதி அயகாந்தபற்டம், அசத்தி அசத்திஎண்ணெய் இரும்பு,இரும்புபற்பம், நெல்லிச்சாய் சண்டை, பன்றியிறைச்சி சிவப்புக் குன்றிமணி, ஏலஅரிசி ஏழிலைப்பாலை, ஓமம் பூலாங்

கிழங்கு, கஸ்தூரி குடசப்பாலை பெருங்காஞ்சொரி காரட், தினை வால்மிளகு சாமந்திமலர் புளிவிதை செவியம் கசப்புப் பீர்க்கு பேய்ப்புடல் ஜாதிக்காய் சடாமாஞ்சி தேன், சீந்தில் கொடி இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, மயில்இறைச்சி நிலா வாரை, நிலவேம்பு திப்பிலி யானைநெருஞ்சில் ஞாழல் சந்தனம் ஆலம்பழம் மிளகு வில்வப்பழம், ஆட்டுநெய், அதிமதுரம், ரஸ பற்பம் ரஸஸிந்தூரம் இலந்தை புளிவஞ்சி உலோகபற்பம் வெள்ளைப்பூண்டு. சுக்கு சங்கங்குப்பி சதபுஷ்பி.

**உடலிலுள்ள நீரைப்போக்குபவை**

அக்ரோட்டு கரிசாலங்கண்ணி முந்திரிப்பழம் எள்எண்ணெய் வெல்லம் பப்பாளிப்பழம் மிளகு முருங்கையிலை சாம்பிராணி.

**.லிலுள்ள மலங்களையும் கெட்ட நீரையும் போக்குபவை**

ஆகாசகருடி இலைக்கள்ளி ஆமணக்கு ஈசுவரிச்செடி பூலாங் கிழங்கு குங்குமப்பூ, கழற்சிச்செடித்துளிர், கரிசலாங்கண்ணி, சிறுநெருஞ்சில், எருக்கன், சடாமாஞ்சி வெற்றிலை சீந்தில்கொடி, வெள்ளைமருது, தேன், இலவங்கப்பட்டை, கீழாநெல்லி, அமுக் கராக்கிழங்கு, மாசிக்காய். மிளகு மெழுகு ரஸகர்ப்பூரம் ரஸ பற்பம் சோம்பு.

**உடற்பருமனைக் குறைப்பவை (உடலில் சேர்ந்துள்ள கொழுப்பைப் போக்குபவை)**

அகில் தைலம் காட்டுக்கொள்ளு சுண்டைக்காய் கருணை கர்ப்பூரத்தைலம் குங்கிலியம் சிறுகீரை புரசமலர் முருங்கைத்துளிர் மகிஸாக்ஷி வேப்பிலை அயக்காந்தபற்பம் திரிகடுகம் மண்டூரம் உலோகபற்பம்.

**உன்மாதம் (பைத்தியம்)**

பசுநெய் பழையநெய், கடுக்காய் குரோசானி ஓமம் தேங் காய்த்தூள், கடுகரோகிணி கஸ்தூரி குப்பைமேனி குரங்குப்பால் கழுதைப்பால் கழுதையின் சிறுநீர், குங்கிலியம் கிரந்திதகரம் சீரகம் கற்கண்டு மனிதனின் சிறுநீர் கருஊமத்தை எலுமிச்சை, சந்தனம், வல்லாரை, எட்டிவிதை, சிலாசத்து, சிவப்புச்சந்தனம் ரஸகர்ப்பூரம் ரஸபற்பம் சுவிகாரம் சம்பங்கிச் செடி சாம்பிராணிச்செடி தங்கபற்பம்.

**உப்புசத்தைப் போக்குபவை**

அந்தரதாமரை காட்டுக்கருணை ஆடாதொடை பெருங் காயம் நாயுருவி ஊமத்தை சிவப்புச்சாரடை குப்பைமேனி சூரோ

ஸானி ஓமம் பேரீச்சங்காய் கர்கடகசிருங்கி கர்ப்பூரம் கழற்சிக் காய் கழுதைப்பால் ஜாதிபத்திரி எருக்கன்பூ வெண்சாரணை நேர்வாளம் நிலப்பனை அவுரி அமுக்கராக்கிழங்கு மாங் கொட்டைப்பருப்பு வில்வம் தாழம்பூ ரஸஸிந்தூரம் அரசம்பழம் இலவங்கம் விஷ்ணுகரந்தை வெள்ளைப்பூண்டு வேப்பஎண்ணெய் சாம்பிராணி சீமைமருதோன்றிவிதை சோம்பு.

[illegible]

சீமை அத்திப்பழம் அக்கராகாரம் காட்டுப்பன்றிஇறைச்சி காமஞ்சிப்புல் கோழிஇறைச்சி கருந்துளசி கண்டுபாரங்கி கந்தகம் குங்கிலியம் கோரோசனம் சிறுகாஞ்சொரி தக்கோலம் கோரைக் கிழங்கு கொத்துமல்லிவிதை நவாச்சாரம் பர்ப்பாடகம் பரங்கிப் பட்டை பாரிசாதச்செடி பால்நன்னாரிச்செடி மருக்காரக்காய் சந்தனம் மரமஞ்சள் வெட்டிவேர் வெள்ளைப்பூண்டு வசம்பு சங்கபுஷ்பி சுராசாரம் ஸஹதேவி சுண்ணாம்பு.

## உடல் வியர்த்தலைத் தடுப்பவை

அகில் செம்மறியாட்டுப்பிழுக்கை ஜவ்வாது கருமருது பச்சைக்கர்ப்பூரம் பன்னீர் ஞாழல் ஸர்ஜரஸம் கந்தகதிராவகம்.

## எரிச்சலைப் போக்குபவை

காட்டுப்பயறு ஆடாதொடை வாழை பசுவெண்ணெய் செவ்வாம்பல் ஏழிலைப்பாலை, கர்ப்பூரம் அன்னபேதி குருவேர் காகோலி குரங்குப்பால் பேரீச்சங்காய் அறுகம்புல்வேர் எருமைச்சாணம் கோரோசனம் கிரந்திதகரம் தாய்ப்பால் சீனா கற்கண்டு தாமரைவிதை தாமரைமலர் தாளகபற்பம் சீந்தில் கொடி கொத்துமல்லிவிதை அவுரிச்செடி பச்சைக் கர்ப்பூரம் பன்னீர் சிறுகாஞ்சொரி புண்டரீகம் குமிழம் யானைநெருஞ்சில், சந்தனம் இலவமரம் வெல்லம் கீரைப்பாலை முத்துபற்பம் முள் கக்கரி மூவிலை முள்மருதோன்றி மேதை மகாமேதை ரித்தி நாணல் கடல்நுரை ஸரஸதேவதாரு க்ஷீரகாகோலி.

## எலி விஷத்தைப் போக்குபவை

எலிச்செவிகீரை கடுகரோகிணி வாகை புஷ்பாஞ்சனம் ஸர் பாக்ஷிசெடி வந்த்யாகர்க்கோடகி.

## ஏப்பத்தைத் தடுப்பவை

ஓமம் காமஞ்சப்புல் தென்னைமரம் புதினா ரூமிமஸ்தகி இலவங்கம்.

அரளி ஓமம் தொட்டால்சுருங்கி குன்றிமணிச்செடி ஜாதிபத்திரி கொடிஎலுமிச்சை நிலாவாரை மராட்டிமொட்டு இலவங்கபுஷ்பம் முருங்கைவிதை புரசமலர் இலந்தைச் செடி.

**விந்துவை வளர்ப்பவை**

சீமை அத்திப்பழம் அம்பர் எரிமா அக்கராகாரம் அக்ரோட்டு ஓமம் காட்டுப்பன்றிநெய் வாழைமரம் காட்டுச்சீரகம் காட்டுப் பயறு காட்டுச்சதகுப்பை அபிரகபற்பம் இஞ்சி காட்டுப்பன்றி இறைச்சி காட்டுப்புறா காட்டுக்குருவி இவைகளின் இறைச்சி வாழைப்பழம் கடுகு பசுநெய் பசு வெண்ணெய் இந்திரகோபம் எனும் வண்டு சுரைவிதை பசும்பால் இங்கிலீகம் பெருங்காயம் இரும்பு உப்பு சுண்டைக்காய் நெல்லிக்காய் உடும்பு இறைச்சி சிட்டுக்குருவிஇறைச்சி ஏல அரிசி பூலாங்கிழங்கு கற்றாழை கஸ்தூரி கஸ்தூரிமஞ்சள் குங்குமப்பூ குருவேர் தேங்காய் இளநீர் தேங்காய்ப்பால் கோஷ்டம் கோழிமுட்டை காரட் முயல் இறைச்சி கோழிஇறைச்சி பேரீச்சங்காய் கசகசா குன்றிமணிச் செடி கோரோசனம் குதிரைப்பால் புளி நெருஞ்சில் மீன்எண்ணெய் சணல்செடி ஜாதிக்காய் ஜாதிபத்திரி ஜீவநீயாதிகணம் ஆவாரை தகரபற்பம் தான்றிக்காய் தாமரைவிதை திரிபலை தாளிச பத்திரி கோரைக்கிழங்கு ஆமைஇறைச்சி நாகப்பாம்பின் இறைச்சி பேரரத்தை திராட்சைப்பழம், தொட்டாற்சுருங்கி, வெங்காயம், எள், எள்எண்ணெய் மயில்இறைச்சி கீழாநெல்லி நேர்வாளம் நாவற்பழம் நிலப்பனை பவழபற்பம் பச்சைக்கர்ப்பூரம் பாதரஸம் திப்பிலி புத்ரஜீவிச்செடி புஷ்பராகபற்பம் சதகுப்பை நெருஞ்சில் பால்முதுக்கன்கிழங்கு அமுக்கராக்கிழங்கு வாதுமை பருப்பு சந்தனம் ஆலம்பழம் ஆலம்பால் ஆலம்விழுது மல்லிச் செடி மிளகு முத்துபற்பம் முருங்கைக்கீரை முருங்கைவிதை வெந்தயக்கீரை அத்திமரம் சிலாசத்து மேதா மகாமேதா தேன் மெழுகு புரசமரம் அதிமதுரம் வெள்ளிபற்பம் ரஸசிந்தூரம் அரசவிதை அரசமரம் ரித்தி இலவங்கம் இலவங்க எண்ணெய் புலிநகப்பூண்டு வெண்ணெய் வெள்ளைப்பூண்டு சுக்கு சந்தனம் ஸம்பங்கிச்செடி சதகுப்பை சித்தரத்தை ஸஹதேவி சாம்பிராணிச் செடி சாரைப்பருப்பு சீமைமருதோன்றிவிதை ஸாலாமிச்ரி சுனா முகி இந்துப்பு தங்கபற்பம் சோம்பு ஹேமமாக்ஷிகம் க்ஷீரகா கோலி.

**விதைகளில் வீக்கம், வலி முதலியவற்றைப் போக்குபவை**

ஆமணக்குஎண்ணெய் ஏழிலைப்பாலை கழற்சித்துளிர் சேராங்கொட்டை காஞ்சொரி ஆட்டின் சிறுநீர்.

**வீக்கத்தைப் போக்குபவை**

காட்டுக்கருணை அகத்திவிதை ஆமணக்குஎண்ணெய் கடுகு எண்ணெய் இலுப்பைஎண்ணெய் அரளி கொடிக்கள்ளி குன்றி மணிச்செடி கருங்காலி முந்தரிச்செடி தாமிரபற்பம் குளவிக் கூட்டுமண் வாகை தேவதாரு தைலம் நீர்த்திப்பிலி நீர்நொச்சி அவுரி சிறுபாகல் எட்டிவிதை வெள்ளிபற்பம் மூங்கில் வசம்பு குங்கிலியம்.

**வெண்குட்டத்தைப் போக்குபவை**

சீமைஅத்திப்பழம் அயக்காந்தபற்பம் ஈசுவரிச்செடி எஃகு பற்பம் கம்பில்லம் அன்னபேதி குங்குமப்பூ கருங்காலிச்செடி வாகைமரம் மஞ்சள் சிலாசத்து சிவப்புச் சந்தனம் உலோகபற்பம் உலோகசிந்தூரம்.

**சர்ப்பவிஷத்தைப் போக்குபவை**

ஆகாசகருடன் இந்திரகோபம் எனும் வண்டு, நெல்லி கந்தகம் அயக்காந்தபற்பம் அகத்திச்செடி ஈசுவரிச்செடி எஃகு பற்பம் நாயுருவி கஸ்தூரிமஞ்சள் கோரோசனம் கசப்புப்பீர்க்கு சிறுகீரைவேர், நெருஞ்சில் எருக்கஞ்செடி சீந்தில்கொடி தேள் கொடுக்குச்செடி வாகை தேவதாளிமரம் அவுரி வெங்காயம் நில வேம்பு திப்பிலி வில்வமரம், தேன்மெழுகு புரசமரம் எட்டிவிதை ஆட்டின்இறைச்சி ரஸகர்ப்பூரம் உலோகபற்பம் வட்டத்திருப்பி கருவேலமரம்.

**சிப்லிஸ் என்னும் பால்வினை நோயைப் போக்குபவை**

இங்கிலீகம், இங்கிலீகபற்பம் நாயுருவி குப்பைமேனி கந்தகம் பூசணிக்கொடி எருக்கஞ்செடி எருக்கம்பால் எருக்கமலர் தருப்பை கருஊமத்தை நன்னாரி பாதரஸம் கல்யாணப்பூசணிக் காய் வல்லாரை முருங்கைப்பிசின் எட்டிவிதை ரஸகர்ப்பூரம் ரஸபற்பம்.

**நோய்கள் அனைத்தையும் போக்குபவை**

சாமந்திமலர் திரிபலை கரிசலாங்கண்ணி பிரண்டை சிறு நாகப்பூ நிலாவாரை பாதரசம் நிலத்தாமரை சிலாசத்து வெள்ளி பற்பம் சுவேதாபிரகம் ஈயபற்பம் சுனாமுகி அரிதாரம்.

**ஆயரோகயைப் போக்குபவை**

சீமையகத்தி காட்டுக்கடலை காட்டுச் சதகுப்பை ஆடாதொடை அன்னபேதி இஞ்சி அயக்காந்தபற்பம் அகத்திவிதை நெல்லி கந்தகம் காட்டுப்பன்றிஇறைச்சி காட்டுப்புறா இறைச்சி பசும்பால் பசுவெண்ணெய் உடும்புஇறைச்சி சிட்டுக்குருவிஇறைச்சி சுண்டைக்காய் சாரடை கர்கடகசிருங்கி கர்ப்பூரசிலாசத்து தேங்காய்எண்ணெய் காகோலி குப்பைமேனி பேரீச்சங்காய் கந்தகம் கசகசா மீன்எண்ணெய் சணல்செடி ஜாதிபத்திரி ஜீவகம் எருக்கஞ்செடி எருக்கமலர் தாமிரபற்பம் தாளிசபத்திரி கோவை முதுக்கன்கிழங்கு பவழபற்பம் திப்பிலி அமுக்கராக்கிழங்கு சூரியகாந்திச்செடி வாதுமைஎண்ணெய் வாதுமைப்பருப்பு கல்யாணப் பூசணி, சிறுபாகல் இலவமரம் சந்தனம் மண்டூரம் மயில்துத்தம் முத்துபற்பம் முள்ளங்கி மேதா மகாமேதா ஆட்டுநெய் அதிமதுரம் வெள்ளிபற்பம் ரஸகர்ப்பூரம் ரஸபற்பம் ரஸசிந்தூரம் நாணல் இலவங்கம் இலவங்கத்தைலம் உலோகபற்பம் உலோகசிந்தூரம் வெட்டிவேர் வெள்ளைப்பூண்டு சந்தனம் சதகுப்பை சாலாமிச்ரி சுனாமுகி தங்கபற்பம் ஹேமமாக்ஷிகம் தாரமாக்ஷிகம் க்ஷீரகாகோலி ஜீவகம் முதலியன.

# 4. உலோகங்களின் தன்மைகள்

## 1. அபிரகம்

**(ஸம்) அப்ரக**
**தோற்றம்**

முன்பு விருத்திரன் என்னும் அரக்கனைக் கொல்ல இந்திரன் தன் வஜ்ராயுதத்தைத் தூக்கினான். அப்பொழுது அதில் தோன்றிய ஒளி வானத்தில் பரவி, மேகத்தைப் போல் முழங்கிக் கொண்டு மலைகளின் உச்சியில் விழுந்தது. அதுதான் அபிரகம் என்னும் உலோகம் தோன்றக் காரணமாகியது.

அபிரகம் வெண்மை சிவப்பு மஞ்சள் கறுப்பு என்னும் நிறங்களால் நான்கு வகைப்படும். வெள்ளி முதலியவை தயார் செய்வதற்கு வெள்ளை அபிரகமும், இரசாயனத்திற்குச் சிவப்பும், தங்கம் செய்வதற்கு மஞ்சள் அபிரகமும், மருத்துக்குக் கரு நிறமுள்ள அபிரகமும் பயன்படும்.

கருநிறமுள்ள அபிரகம், பிநாகம் தர்துரம் நாகம் வஜ்ரம் என நான்கு வகைப்படும்.

நெருப்பில் இட்டதும் மெல்லிய தகடு போன்ற நிலை விட்டுப் போகும் அபிரகம் 'பிநாகம்' எனப்படும். அறியாமல் இதை உட்கொண்டால் கொடிய குட்ட நோய் தோன்றும், நெருப்பில் இட்டதும் தவளையின் ஒலியைப்போல்எழச்செய்வது தர்துரம் எனப்படும். இது உடலில் பல கட்டிகளை உண்டு பண்ணுவதுடன் உயிரையும் போக்கும். நெருப்பில் இட்டதும் நாகப்பாம்பின் சீறுதலைப் போல ஒலியுண்டாக்கும் அபிரகம் நாகம் எனப்படும். அறியாமையால் இதை உட்கொண்டால் பகந்தரம் என்னும் நோய் தோன்றும். நெருப்பில் இட்டதும் எத்தகைய மாறுதலும் அடையாமல் வஜ்ரம் போல் இருக்கும் அபிரகம் வஜ்ரம் எனப்படும். இது மிகவும் உத்தமமானது. நோய்களையும் முதுமையையும் மட்டுமின்றி மரணத்தையே போக்கவல்லது.

**விளைநிலம்**

நம்நாட்டின் வடக்குப்பகுதியிலுள்ள மலைகளில் கிடைக்கும் அபிரகம் சிறந்தது. தென்பகுதியிலுள்ள மலைகளில் கிடைப்பது வலிமை குறைந்தது.

**சுத்தி**

பாதரஸமும் இரும்பும் கலந்து தோன்றியதுதான் அபிரகம். எனவே இதை இருநூறு முறை புடம் போட்டுப் பக்குவப்படுத்தினால் ரஸம் அழிந்து இரும்பு மட்டும் மிகுந்திருக்கும்.

**பயன்**

அபிரகபற்பத்தை முறையாக உட்கொண்டால் நோய்கள் நீங்கும், உடல் திடப்படும். விந்து வளர்ச்சி பெறும். எப்பொழுதும் உடலில் வாலிப பருவம் நிலைத்திருக்கும். பலமாதர்களுடன் கலவி புரியும் வலிமை உண்டாகும். நீண்ட ஆயுளும் சிங்கத்தைப் போன்ற வலிமையும் உள்ள மகன்களைப் பெறும் தன்மையுண்டாகும். மரணத்தையும் வெல்லக்கூடிய வலிமை ஏற்படும். வேறு வேறு நோய்களுக்குத் தக்க துணை மருந்துடன் உட்கொண்டால் கிரகணி க்ஷயம் நீரிழிவு மூலநோய் அதிமூத்திரம் இழுப்பு இருமல் விஷம் குட்டம் வாதநோய்கள் பித்த நோய்கள் உடல் இளைப்பு பாண்டுநோய் காமாலை குன்மம் முதலிய நோய்களைப் போக்கும்.

## 2. அயக்காந்தம்

**(ஸம்). காந்தலோஹ**

**தன்மை**

எந்த உலோகப்பாத்திரத்தில் கடுநீரை நிரப்பி அதில் எண்ணெயைவிட்டால் பரவாமலும் பெருங்காயத்தை வைத்தால் அதன் மணம் அழிந்தும் வேப்பம் பட்டை தன் கசப்புத் தன்மையை விடுத்தும், பாலைவிட்டுச் சுட வைத்தால், பால் பொங்கித் தரையில் விழாமலும் கடலையைப் போட்டு வறுத்தால் அது கருநிறம் கொண்டும் இருக்குமோ, அந்தப் பாத்திரம் காந்தலோகத்தால் செய்யப்பட்டது என்று அறிக.

**பயன்**

காந்தததைப பறபமாக்கிப் பயன்படுத்தினால் உடல் வலிமை விந்து வளர்ச்சி உடற்செழிப்பு முதலியன உண்டாகும். சீரண வலிமை மிகும். குன்மம் வயிற்று நோய்கள் ஆமாசீரணம் ஆமவாதம் பகந்தரம் காமாலை குட்டம் வீக்கம் க்ஷயம் மண்ணீரல்வீக்கம் தலைநோய்கள் முதலியன நீங்கும். தங்கபற்பத்திற்கு மாறாக இதைப் பயன்படுத்தலாம். விந்துவை வளர்க்கும். உடலைச் செழிப்புறச் செய்யும். சடராக்னியைத்தூண்டும்

## 3. அரிதாரம்

**(ஸம்). ஹரிதாலம்**

**தோற்றம்**

அரிதாரம் தங்கத்தைப் போல மின்னும். பளுவானது, எண்ணெய்ப்பசை கொண்டது. இது இரு வகைப்படும். ஒன்று, இலையைப் போல் மெல்லியதாகக் கடுகளவு பிரிக்கக்கூடியது. இதற்கு ‘பத்ரா’ என்று பெயர். இது வலிமை மிக்கது. மற்றொரு வகை கட்டியாக இருப்பது. இதற்குப் பிண்ட அரிதாரம் என்று பெயர். இது வலிமை குறைந்தது. ஒரு வகை நச்சுப் பொருள் இரண்டு பங்கும், கந்தகம் மூன்று பங்கும் கலப்பதால் ஏற்படுவது அரிதாரம் ஆகும். கந்தகமும் நச்சுப் பொருளும் பல நாட்கள் நிலத்தடியில் தங்கி இருத்தலால் இவை தாமாகவே கலந்து விடும். இவ்விரண்டையும் செயற்கையாகவும் கலந்து அரிதாரம் தயார் செய்யலாம்.

**பயன்**

அரிதாரத்தைச் சுத்தம் செய்து பற்பமாக்கிப் பயன்படுத்தினால் கபம் இரத்தவாதம் குட்டம் நஞ்சு விஷக்காய்ச்சல்

எண்பது வகை வாத நோய்கள் கபபித்த நோய்கள் நீரிழிவு மூலநோய் வீரணம் என்பவை நீங்கும். இது கருவைச் சிதைக்கும்.

## 4. இங்கிலிகம்

**(ஸம்). ஹிங்குலம்**

**தோற்றம்**

பாதரசம் கிடைக்கும் இடங்களில் இது கிடைக்கும். சுடுநீர் சுனைகளுக்கு அருகிலும் கிடைக்கும். கடையில் விற்கப்படும் இங்கிலிகம் செயற்கையானது. இச்செயற்கை இங்கிலிகம் இரு வகைப்படும். ஒன்று முர்ஷிதாபாத் என்னும் இடத்தில் செய்யப்படுவதாகும். மேலும் இங்கிலாந்து ஜெர்மனி ஆகிய நாடுகளிலும் செய்யப்படுவது.

மற்றொன்று, சூரத்தில் செய்யப்படுவதாகும். இது நிறத்தால் வெண்மை மஞ்சள் சிவப்பு என மூன்று வகைகளாகும்.

வெண்மை நிறமுள்ளது சர்மார் என்றும், மஞ்சள் நிறமுள்ளது சுகதுண்டகம் என்றும், சிவப்பு நிறமுள்ளது ஹம்ஸ பாதம் என்றும் கூறப்படும், முறையே இவை வலிமை மிக்கவையாகும். இங்கிலிகம் கசப்பு துவர்ப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண்டது.

**பயன்**

இதில் கலந்துள்ள பாதரசத்தை 'டமரு' என்னும் இயந்திரத்தின் மூலம் தனிப்படுத்தினால் தூய்மைபெறும்.

இதை பற்பாமாக்கிப் பயன்படுத்தினால் கண்நோய்கள், கபபித்தம், குட்டம் காய்ச்சல் காமாலை மண்ணீரல்வீக்கம், ஆமவாதம் நஞ்சு முதலியன நீங்கும். கபவாதங்களைப் போக்கும். குன்மம் அதிசாரம் பிள்ளைப் பேற்றில் தோன்றும் வாதம், பால்வினை நோய் நீங்கும். நன்கு தூய்மை படுத்தப் படாத மருந்தை உட்கொண்டால் மூட்டுகளில் வலி முதலியன தோன்றும். இதை உட்கொள்ளும் பொழுது கடுமையான பத்தியமுறையைப் பின்பற்ற வேண்டும். தவறினால் கால் கைகளில் வீக்கம் அல்லது செயலற்றுப் போதல் முதலியன உண்டாகும்.

## 5. இரும்பு

**(ஸம்.) லோஹம், ஆயஸம்**

**தோற்றம்**

முன்பு தேவர்களால் கொல்லப்பட்ட லோமின் எனப்படும் அரக்கனின் உடலிலிருந்து பலவகை இரும்புகள் தோன்றின.

பளுவாக இருத்தல், திடமாக இருத்தல் சோர்வைத் தோற்றுவித்தல், மூர்ச்சை, மற்றும் எரிச்சலைத் தோற்றுவித்தல், கல்லைப்போல் ஆகுதல் கெட்டநாற்றம் கொண்டிருத்தல் என்பன ஏழும் இரும்பின் குற்றங்கள் ஆகும்.

**தன்மை**

இரும்பு, கசப்பு இனிப்பு துவர்ப்புச் சுவைகளைக் கொண்டது. குளுமைத்தன்மையுடையது. தீக்ஷ்ணமும் குருத்தன்மையையும் கொண்டது.

**பயன்**

நன்கு தூய்மைப்படுத்திப் பற்பமாக்கிப் பயன்படுத்தினால் ஆயுளையும் இரத்தத்தையும் வளர்க்கும். கண்களுக்கு நன்மை தரும். கபம் பித்தம் நஞ்சு வயிற்றுவலி சோகை வீக்கம் மண்ணீரல்வீக்கம் நீரிழிவு கிருமிநோய் குட்டம் என்பனவற்றைப் போக்கும். சடராக்னிக்குறைவு வயிற்றுஉப்புசம் என்பன வற்றையும் போக்கும். விந்துவை வளர்க்கும். தூய்மையற்ற இரும்பு பற்பத்தை உட்கொண்டால் சோகை குட்டம் இதயநோய் வயிற்றுவலி முதலிய பல நோய்கள் தோன்றும். இந்தப் பற்பத்தை உட்கொள்ளும் போது, வெள்ளைப்பூசணி நெய் நல்லெண்ணெய் உளுந்து கள் ஆட்டுப்புலால் முதலியவற்றை அறவே நீக்கவேண்டும்.

## 6. ஸாரலோகம்

**(ஸம்.) ஸாரலோகம்**

**தோற்றம்**

மலை உச்சியைப் போல், பெரியதான இரும்பின் மேல் புளியைத் தடவுவதால் அணுக்களாகத் தோன்றும் சிறு இரும்புத் தூள் ஸாரலோகம் எனப்படும்.

**பயன் :**

இதன்பற்பம், கிரகணி அதிஸாரம் ஸர்வாங்கவாதம் பரிணாமசூலை எனும் வயிற்றுவலி வாந்தி பீனசம் பித்தம் இழுப்பு இருமல் என்பனவற்றைப் போக்கும்.

## 7. மண்டூரம்

**(ஸம்.) மண்டூரம்**

**தோற்றம்**

இரும்பை நெருப்பிலிட்டுக் காய்ச்சும்போது வேறாகும் அசுத்தப்பொருள் 'மண்டூரம்' எனப்படும். இதைக் கிட்டம் என்றும் கூறுவர். இரும்பு, நிலத்தில் புதைந்து சூட்டினாலும் மழையினாலும் சிதைந்து, பல்லாண்டுகளுக்குப் பின் மண்டூரம் ஆகிறது. நூறாண்டுகளுக்கு மேற்பட்ட மண்டூரம் சிறந்த மருந்துப் பொருளாகக் கொள்ளப்படும்.

**பயன்**

தூய்மையாக்கப்பட்ட மண்டூரத்தைப் பற்பமாக்கிப் பயன் படுத்தினால், இரத்தத்தைத் தூய்மைப்படுத்தும். சோகை காமாலை உப்புசம் பெருவயிறு க்ஷயம் காய்ச்சல் கிருமிநோய் வாதம் பித்தம் மிதமிஞ்சிய உடற்பருமன், கிரகணி நீரிழிவு இருமல் இழுப்பு மூலநோய் இரத்தபித்தம் உடல்இளைப்பு ஆம வாதம் சுவையின்மை என்பனவற்றைப் போக்கும். கடுக்காய்த் தூளைத் தேன் கலந்து, ஐந்தாறுநாட்கள் உட்கொள்ளச் செய் தால், தூய்மையற்ற மண்டூரத்தை உட்கொண்டதால் தோன்றும் துன்பங்கள் நீங்கும்.

## 8. ஈயம்

**(ஸம்.) ஸீஸம்**

**தோற்றம்**

போகி என்னும் நாகத்தின் கன்னிகையான அழகியொருத் தியைக் கண்டபோது, வாசுகி என்னும் நாகத்தின் விந்து தானே வெளியாயிற்று. அதுதான் ஈயம் தோன்றக் காரணமானது.

**தன்மை**

ஈயம் மிக்க வலிமை கொண்டதாகும். நன்கு தூய்மை யாக்கப்பட்ட ஈயபற்மத்தைத் தொடர்ந்து உட்கொண்டால்,

நூறு யானைகளின் வலிமையுண்டாகும். பல நோய்களைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். ஆயுளை வளர்க்கும். விந்துவை மிகுதியாக வளர்க்கும். தக்க துணை மருந்துடன் உட்கொள்ளச்செய்தால், இருமல் கிரகணி பகந்தரம் எரிச்சல் சோகை கிருமிநோய் க்ஷயம் குன்மம் கபம் மூலநோய் வாதம் சடராக்னிக்குறைவு வயிற்றுவலி விந்துதானாக வெளியேறுதல், கொடிய நீரிழிவு போன்ற நோய் என்பனவற்றைப் போக்கும். தூய்மையற்ற இதன் பற்பத்தை உட்கொண்டால், கொடிய குட்டம் குன்மம் அரிப்பு நீரிழிவு வாதநோய் சடராக்னிக் குறைவு. பகந்தரம் போன்ற கொடிய நோய்களைத் தோற்றுவிக்கும்.

## 9. எஃகு

**(ஸம்.) தீக்ஷ்ணலோஹ**

**தன்மை**

இரத்தத்தைத் தூய்மையாக்கும். புது இரத்தத்தைத் தோற்றுவிக்கும். வயிற்றுக்கும் சடராக்னிக்கும் வலிமை தரும். சூட்டை வளர்க்கும்.

**பயன்**

நன்கு தூய்மையாக்கப்பட்ட எஃகின் பற்பத்தை உட்கொள்ளச்செய்தால், ஸர்பவிஷம் சோகை மூலநோய் கிரகணி காய்ச்சல் கபம் இருமல் இழுப்பு உப்புசம் நீரிழிவு குன்மம் மண்ணீரல்வீக்கம் உடல்இளைப்பு பித்த நோய்கள், அளவுக்கு மிஞ்சிய உடற்பருமன், முதுமை கண்நோய் ஆமவாதம் குட்டம் வெண்குட்டம் இரத்தவிகாரம் நரை முதலியன நீங்கும். ஆயுளையும் உடற்பொலிவையும் விந்துவையும் வளர்க்கும்.

இம்மருந்தை உட்கொள்ளும் போது, கலவி உடற்பயிற்சி வெயிலில் சுற்றுதல் கவலை சிந்தனை என்பனவற்றை விலக்க வேண்டும்.

## 10. கர்ப்பூரசிலாசத்து

**(ஸம்.) கர்ப்பூரசிலாஜது**

**தோற்றம்**

இது ஒரு வகைக்கல்லாகும். வெண்மை, சிறிது மஞ்சள் கலந்த வெண்மை என்னும் நிறங்களில் இருக்கும். இரண்டின் தன்மைகளும் ஒன்றே. கண்பார்வை உடல் வலிமை ஆயுள் எனும் இவற்றை வளர்க்கும்.

**பயன்**

இதன் பற்பம் மேக நோயைப் போக்கும். குளுமையைத் தரும். சிறுநீர் மலங்களை வெளியேற்றும். நீரிழிவு நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில்கல், உடலில் மிகுந்துள்ள வெப்பம் உப்புசம் சோகை மூலநோய் சடராக்னிக்குறைவு வயிற்றுவலி இரத்தக் கட்டி முதலியவற்றைப் போக்கும்.

## 11. கந்தகம்

**(ஸம்.) கந்தக**

**தோற்றம்**

முன்பு பார்வதி தேவி சுவேதத்வீபம் எனும் தீவில் வசித்து வந்தாள். மாதவிடாய்க் காலத்தில் பாற்கடலில் குளித்தாள். ஆடையில் உள்ள இருதுரத்தம் பரவி கந்தகம் தோன்றக் காரண மாகியது.

கந்தகத்தில், சிவப்பு மஞ்சள் வெண்மை கருமை என்னும் நிறங்களால் நான்கு வகைகள் உண்டு.

சிவப்புகந்தகம் தங்கம் செய்வதற்கும், வெண்மையானது விரணம் முதலியவற்றைப் போக்கவும், மஞ்சளும் வெண்மையும் இரசாயன முறைகளுக்கும், கருமையானது அனைத்திற்கும் பயன் படும். ஆனால் சிவப்பு கருநிறகந்தகங்கள் கிடைப்பது மிக அரிதாகும்.

**தன்மை**

தூயகந்தகம் கார்ப்பு கசப்பு துவர்ப்புச் சுவைகள் கொண் டது. உஷ்ணவீரியமுள்ளது. பேதியாகச் செய்யும். பித்தத்தை வளர்க்கும். கண்களுக்கு வலிமையையும் உடல்வலிமையையும் சடராக்னி வளர்ச்சியையும் தரும். தூய்மையற்ற கந்தகத்தைப் பயன்படுத்தினால், குட்டம் விஷக்காய்ச்சல் அரிப்பு வீக்கம்இரத்த தோஷம் முதலியன தோன்றும்.

**பயன்**

எட்டு முறை சுத்தம் செய்யப்பட்ட கந்தகம் தலைச்சுற்றல் எரிச்சல் உடல் உலர்ந்து போதல், பித்தம் ஆகியவற்றைப் போக்கும். மற்றும் குட்டம் வயிற்றுவலி கிருமிநோய் வாத பித்தம் பால்வினை நோய் சிரங்கு தோல்நோய்கள் க்ஷயம் கபம் எனும் இவற்றையும் போக்கும். திரிபலாசூரணத்துடன் சண்

நோய்களுக்கும், பசு நெய்யுடன் விரணங்களுக்கும், பசுநெய், தேன் இரண்டுடனும் கந்தகத்தைக் கலந்து கண்களில் இட்டால் கண்நோயும், மிளகுத்தூள் அல்லது திப்பிலித்தூளுடன் பசுநெய் கலந்து இருமலுக்கும், வெற்றிலைச்சாறுடன் கந்தகம் கலந்து விலாவலிக்கும், எலுமிச்சம் பழச்சாற்றுடன் காலராவுக்கும், வெல்லத்துடன் நீரிழிவுக்கும், நெல்லிப்பருப்புத்தூளுடன் அசீரணத்திற்கும் சுக்கும் தேனும் கலந்து அத்துடன் கிரகணிக்கும், வேப்பம்பட்டைஇலை மலர் காய் வேர் இவ்வைந்தின் தூளுடன் குட்டத்திற்கும், துளசிச் சாற்றுடன் நெய் கலந்து வாத நோய்க்கும் பசுநெய்யுடன் பித்த நோய்க்கும், சுக்கு வெல்லத்துடன் கப நோய்க்கும் உட்கொள்ளச் செய்யலாம். தூயகந்தகம் 10 பலம், கரிசலாங்கண்ணிச்சாறு 5 பலம் சேர்த்து அரைத்து, பாதி அளவு கடுக்காய்த்தூள் கலந்து, தேன் நெய் இவற்றைத் துணையாகக் கொண்டு இரண்டு மாதங்கள் உட்கொள்ளச் செய்தால் கிழத்தன்மை நீங்கி விந்து வெகுவாக வளர்ச்சிபெறும்.

## 12. காவிக்கல்

**(ஸம்.) கைரிக**

### தோற்றம்

கைரிகம் இருவகைப்படும். சிவப்பு நிறமுள்ளது ஒன்று. மிக்க சிவப்பு நிறம் கொண்ட சுவர்ண கைரிகம் என்பது மற்றொன்று.

### விளைநிலம்

விந்திய மலைக்கு வடக்கிலுள்ள மலைப்பகுதிகளிலும் விந்திய மலைத் தொடர் பகுதிகளிலும் கிடைக்கும்.

### தன்மை

இருவகை காவிக்கற்களும், எண்ணெய்ப்பசை இனிப்பு துவர்ப்புச் சுவைகள், குளுமைத் தன்மை கொண்டிருக்கும். கண்களுக்கு நன்மை செய்யும், மற்றும் எரிச்சல் பித்தம் இரத்த தோஷம் கபம் விக்கல் நஞ்சு வாந்தி பெரும்பாடு அக்கி இருமல் இழுப்பு என்பனவற்றைப் போக்கும். பசியைப் போக்கும். சில இடங்களில் ஏழை மக்கள் பசிக்கொடுமையால் இதைத் தின்பதுமுண்டு. மிகுதியாக இதை உட்கொண்டால் சடராக்னி வலிமை வெகுவாகக் குறையும். இதனால் தோன்றும் துன்பங்களுக்குக் கழுதைச் சாணத்தின்சாறு முறிப்பாகும்.

## 13. கோபிசந்தனம் (துவர்மண்)

**(ஸம்.) ஸௌராஷ்ட்ரமிருத்திகா**

**தோற்றம்**

இது 'சூரத்' என்னும் ஸௌராஷ்டிர நாட்டில் கிடைக்கும் மஞ்சள் நிறமுள்ள மண் ஆகும்.

**தன்மை**

துவர்ப்புச் சுவை கொண்டது. படிகாரத்தின் தன்மைகளும் கொண்டதாகும்.

**பயன்**

உடலுக்குள் உள்ள உறுப்புகளில் இரத்தப்பெருக்கைத் தடுக்கும். தொண்டை நோய் அரிப்பு குட்டம் அக்கி நரம்புச் சிலந்தி கெட்ட விரணங்கள், கண்ணில் தோன்றும் வாதம் என்னும் விரணம், கால்கை வலி, பெரும்பாடு நஞ்சு வாதபித்தம் என்னும் நோய்களைப் போக்கும். துளசிச்சாற்றுடன் உட்கொள்ளச் செய்தால் கருச்சிதைவைத் தடுக்கும். கருவில் பிண்டம் அசையாமல் இருக்கும் போது, இதை உட்கொள்ளச் செய்தால் அசைவு எற்படும்.

## 14. சங்கு

**(ஸம்.) சங்கம்**

**தோற்றம்**

சங்கு கடலில் தோன்றுவதாம்.

**தன்மை**

கண்களுக்கு நன்மை செய்யும். குளுமைத்தன்மை கொண்டது.

**பயன்**

தூய்மைப்படுத்திய பின் தயார் செய்யப்பட்ட சங்கு பற்பம், வயிற்றுவலி வாதம் உப்புசம் காய்ச்சல் கிருமிநோய் சோகை பரிணாமசூலை முதலியவற்றைப் போக்கும்.

## 15. சுண்ணாம்புக்கல்

**(ஸம்.) ஸுதா**

கல்லைச் சுட்டுச் சுண்ணாம்பு செய்து, பத்து நாட்கள் நீரில் ஊறவைத்து வடிகட்டப்பட்டது சிறந்ததாகும்.

**பயன்**

சுண்ணாம்பும் தயிரும் கலந்து பற்றாகப் போட்டால் இடுப்பு வலி, வாதத்தினால் தோன்றும் வலி மேகவாதம் முழங் கால் வலி நீங்கும். துணியில் சுண்ணாம்பைப்பூசி, அதன் மேல் கோழி முட்டைக்கருவைப்பூசி, வர்த்தியாகச் சுருட்டி மூக்கினுள் வைத்தால், மூக்கிலிருந்து இரத்தம் வெளிவருதல் நிற்கும். ஆமணக்கு எண்ணெயுடன் சுண்ணாம்பைக் குழைத்து சொறி சிரங்கு கட்டி காயம் வலி தலைவலி வீக்கம் முதலியவற்றிற்கு மேல் பூச்சாகப்பயன் படுத்தலாம். சுண்ணாம்பும் தேனும் கலந்து பூசி னால் மார்புவலி மேகவாதவலி எனுமிவை நீங்கும். சுண்ணாம்பு நீரில் சிறிது எண்ணெய் விட்டுக் கலக்கினால் வெண்ணெய் போல் திரண்டு வரும். இதைத் தீப்புண்களின் மேல் தடவி னால் புண் ஆறும். சுண்ணாம்புத் தெளிவில் எண்ணெய் சர்க்கரை கலந்து இரண்டு அவுன்ஸ் அளவு உட்கொள்ளச் செய் தால், கனோரியா என்னும் பால்வினை நோய் தீரும். சுண்டைக் காய் அளவு சுண்ணாம்பு, நெல்லிக்காய் அளவு வெண்ணெய் ஆகியவற்றைக் கலந்து புளி வெல்லம் ஆகியவற்றுள் ஒன்றுக்குள் வைத்து உட்கொள்ளச் செய்தால், ருதுசூலை (மாதவிடாயில் தோன்றும் வலி) நீங்கும். இரும்புப் பாத்திரத்தில் சுண்ணாம்பை வைத்து வெற்றிலைக்குத் தடவப்பயன்படுத்தினால் குளுமை தரும். பித்தத்தைப் போக்கும். வெள்ளிப்பாத்திரத்தில் வைத்துப்பயன்படுத்தினால், கபத்தையும் தங்கப்பாத்திரத்தில் வைத்துப் பயன்படுத்தினால், மூன்று தோஷங்களையும் மேக நோயையும் வெண்கலப்பாத்திரத்தில் வைத்துப் பயன்படுத் தினால், அழற்சியையும் தாமிரப்பாத்திரத்தில் வைத்துப் பயன் படுத்தினால் பித்தம் முதலிய தோஷங்களையும் போக்கும்.

## 16. சிலாசத்து

**(ஸம்.) சிலாஜது**

**தோற்றம்**

முதுவேனில் பருவத்தில் மலைக்கற்களில் கலந்துள்ள உலோகசத்துகள் உருகிப் பிசின்போல் வழியும். பசுவின் சிறு நீரின் மணம் கொண்டிருக்கும். அது சிலாசத்து எனப்படும். இது நான்கு வகைப்படும். *(1)* தங்கத்தினால் தோன்றியது *(2)* வெள்ளியால் தோன்றியது *(3)* இரும்பால் தோன்றியது *(4)* தாமிரத்தால் தோன்றியது என்பனவாகும்.

**தன்மை**

தங்கம் கலந்த கற்களில் தோன்றியது சிவப்பு நிறம் கொண்டிருக்கும். கார்ப்பு இனிப்புச்சுவைகள் உள்ளது. குளுமைத் தன்மை கொண்டதாம்.

வெள்ளிகலந்த கற்களில் தோன்றியது வெண்மை அல்லது மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். பக்குவம் அடையும் போது கார்ப்புச் சுவை கொள்ளும். குளுமைத்தன்மை கொண்டதாம்.

தாமிரம் கலந்த கற்களில் தோன்றியது மயில் கழுத்தைப் போல் நீலநிறம் கொண்டிருக்கும். தீக்ஷ்ண குணமுள்ளது. சூடானதாகும்.

இரும்பு கலந்த கற்களில் தோன்றியது கருஞ்சிவப்பாகக் கழுகின் இறக்கைநிறம் கொண்டிருக்கும். கசப்பு உவர்ப்புச் சுவைகள் கொண்டு பக்குவம் அடையும்போது, கார்ப்புச் சுவை கொள்ளும். குளுமைத்தன்மை கொண்டது. நான்கு வகையினுள் இதுவே சிறந்ததாகும்.

நேபால் நைநிதால் அல்மோரா என்னும் இமயமலைச்சாரலிலுள்ள இடங்களில் கிடைக்கிறது. பல்லாண்டுகளாக அங்கு சேர்ந்துள்ள சிலாசத்து பெரும் அளவில் வெட்டி எடுக்கப்படுகிறது. இருபத்தைந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இது இங்குச் சேர்ந்திருக்கும் எனக் கணக்கிடப்படுகிறது. எனவே குணத்தில் வலிமை குன்றியதாக உள்ளது. மருத்துவன் கவனித்துப் பெறவேண்டும்.

**பயன்**

தூய்மைபடுத்திய சிலாசத்து, வாதநோய்கள் மேகநோய் வலி வெட்டுக்காயம் படை கட்டி சளி சிறுநீர்ப்பையில் தோன்றும் கல், நீர்ச்சுருக்கு க்ஷயம் இருமல் சோகை பைத்தியம் வீக்கம் குட்டம் பெருவயிறு முதலியவற்றைப் போக்கும்.

## 17. சுரமாக்கல்

**(ஸம்.) ஸ்ரோதோஞ்சனம்**

**தோற்றம்**

இதில் கருநிறமுள்ளது சுரோதோஞ்சனம் **என்**றும், வெண்ணிறமுள்ளது ஸௌவீராஞ்சனம் என்றும் கூறப்படும். புற்றின் முனை

போன்ற தோற்றம் கொண்ட கல்லை உடைத்தால் உள்ளே மை போல் கருநிறமுள்ளது அஞ்சனக்கல். அதை உருக்கினால்காவிக்கல் போல் சிவப்பு நிறம் கொண்டது சுரோதோஞ்சனம் எனப்படும். வெண்ணிறமுள்ளதும் ஸ்ரோதோஞ்சனம் போலவே ஆனால் சற்று மஞ்சள் நிறம் கொண்டும் இருக்கும். இரண்டு வகையிலும் இது சிறந்தது.

**தன்மை**

இனிப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டது. எண்ணெய்ப் பசையுள்ளது. கண்களுக்கு நன்மை பயப்பது. மலத்தைக் கட்டும்.

**பயன்**

தூய்மை செய்யப்பட்ட சுரமாக்கல் விரணம் வாதபித்தம் விக்கல் கபம் பித்தம் வாந்தி நஞ்சு குட்டம் க்ஷயம் கிருமிநோய் ரக்தகிரகணி முதலியவற்றைப் போக்கும். மாதுளம் பழச்சாற்றுடன் அரைத்து உலர்த்தியோ சுட்டு தாய்ப்பாலில் முக்குவதை எட்டுமுறை செய்து அரைத்தோ, கண்களில் மை போல் இட்டால் கண் ஒளி மிகும். குளுமை தரும். கண்நோய்களைப் போக்கும்.

## 18. சீமை சுண்ணாம்பு

**தன்மை**

துவர்ப்புச் சுவையுள்ளது. பேதியைக்கட்டும்

**பயன்**

மற்ற மருந்துடன் கலந்து பயன்படுத்துவது. கிரகணி வயிற்றில் எரிச்சல் என்பனவற்றைப் போக்கும். 5 முதல் 10 அரிசி எடை வரை நீரில் கலந்து உட்கொள்ளச் செய்க.

## 19. கற்பு

**(ஸம்.) சிலாபுஷ்ப**

**தன்மை**

குளுமையானது. கைப்புச் சுவை கொண்டிருக்கும். இதயத்திற்கு நன்மை பயக்கும்.

**பயன்**

காய்ச்சல் சோகை நீரிழிவு குன்மம் வயிற்றில் கட்டி சடராக்னிக்குறைவு, மூலநோய் க்ஷயம் பித்தம் அரிப்பு குட்டம் விஷரத்தம் என்பனவற்றைப் போக்கும்.

## 20. தகரம்

**(ஸம்.) வங்க. ரங்க**

**தன்மை**

இலேசானது, பேதியாகச் செய்யும். வறட்சித் தன்மையும் உஷ்ணத்தன்மையும் கொண்டது. கண்களுக்கு நன்மை பயக்கும். சிறிது பித்தத்தை வளர்க்கும். உடலைச் செழிக்கச் செய்யும். விந்துவையும் சடராக்னியையும் ஆயுளையும் வளர்க்கும்.

**பயன்**

முறையாகத் தூய்மைபடுத்தப்பட்ட வங்க பற்பம் மேக நோய்களைப் போக்கும். பித்தத்தைத் தணிக்கும். விந்து நஷ்டம் நீரிழிவு கனோரியா என்னும் பால்வினை நோய் அழற்சி சோகை கிருமிநோய் கபம் க்ஷயம் இழுப்பு வயிற்றுவலி வாந்தி பெரும்பாடு என்னும் நோய்களைப் போக்கும். இதைப் பச்சைக்கர்ப்பூரத்துடன் உட்கொள்ளச் செய்தால் வாய் நாற்றம் நீங்கும். பசும் பாலுடனோ ஜாதிக்காயுடனோ உட்கொள்ளச் செய்தால் விந்துவை வளர்க்கும். நீரிழிவுக்குத் துளசிச் சாற்றுடனும் குன்மம் மண்ணீரல்வீக்கம் ஆகியவற்றிற்கு வெங்கார க்ஷாரத்துடனும், சோகைக்குப் பசு நெய்யுடனும் இரத்த பித்தம் மேல் மூச்சு வாங்குதல் என்பனவற்றிற்கு மஞ்சள் தூளுடனும், பித்தத்திற்குச் சர்க்கரையுடனும் உட்கொள்ளச் செய்க. தேனுடன் வலிமைக்கும் கஸ்தூரி அல்லது வெற்றிலை உடன் விந்துவைக் கட்டுவதற்கும் நெல்லி முள்ளியுடன் அசீரணத்திற்கும் பூண்டின்சாற்றுடன் எலும்பைச்சார்ந்துள்ள காய்ச்சலுக்கும் நொச்சி இலைச்சாற்றுடன் குட்டத்திற்கும் மோருடன் வாத குன்மத்திற்கும் நாயுருவிச் சாற்றுடன் தலையைச் சார்ந்த நோய்களுக்கும் ஜாதிக்காய் ஜாதிபத்திரி இலவங்கம் இம் மூன்றின் தூளுடன் விந்துவைச் சார்ந்த தோஷத்திற்கும் பயன்படுத்துக.

## 21. தங்கம்

**(ஸம்.) சுவர்ணம்**

**தோற்றம்**

மகரிஷிகளின் ஆசிரமத்திலுள்ள முனிவர்களின் மனைவிகளின் அழகில் அக்னிதேவன் மயங்கிய பொழுது அவனது விந்து வெளி

யாகி தரையில் விழுந்தது. அது தங்கமாகியது. பாதரஸத்தைக் கொண்டு செய்றகைத் தங்கம் தயார் செய்யப்படுகிறது. பிரா கிருதம் சகஜம் வன்னிசம்பூதம் (நெருப்பில் தோன்றியது) கனிசம் (சுரங்கத்தில் வெட்டி எடுக்கப்படுவது) கல்பிதம் எனத்தங்கம் ஐவகைப்படும்.

உருக்கும்போது சிவந்தும், வெட்டி எடுக்கும் போது வெண்மையாகவும், உறைத்துப் பார்க்கும்போது குங்கும நிறமும், வெள்ளி தாமிரம் முதலியவற்றின் கலப்பு இல்லாததும் எண் ணெய்ப்பசை கொண்டதும் மென்மையையும் பளுவும் கொண்ட தங்கம் சிறந்தது.

வெண்மை நிறமுள்ளது கடினமானது வறண்டது. தாமிரம் முதலிய உலோகக் கலப்பு உள்ளது. உருக்கும் போதும் வெட்டும் போதும் கருநிறமுள்ளதாகக் காணப்படுவது, உறை கல்லில் தேய்த்தால் வெண்மையாகக் காணப்படுவது இலேசானது அடிபட்டதும் உடைந்து போவதுமான தங்கம் பயனற்றது.

**தன்மை**

தங்கம் குளுமைத் தன்மையுள்ளது. விந்துவையும் வலிமை யையும் வளர்க்கும். பளுவுள்ளது. இரசாயனமானது. இனிப்பு கசப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டது. புனிதமானது, உடலைச் செழிப்புறச் செய்வது, அறிவையும் நினைவாற்றலையும் வளர்ப்பது, ஒளிதருவது, நஞ்சைப் போக்குவதுமாகும்.

**பயன்**

தூயதங்கத்தைக் கொண்டு செய்யப்பட்ட பற்பம் உடற் பொலிவு அறிவாற்றல் விந்து வளர்ச்சி உடல் நலம் காம வளர்ச்சி நினைவாற்றல் பேச்சுவன்மை தரக்கூடியதாம. காய்ச் சல் மேகநோய் க்ஷயம் முதுமை இருமல் இழுப்பு வாதம் விந்து நட்டம் பைத்தியம் அதிஸாரம் கிரகணி குட்டம் கால்கைவலி ஆகிய நோய்களைப் போக்கும்.

கரிசலாங்கண்ணிச் சாற்றுடன் கலவியில் திறனை வளர்க் கவும், பாலுடன், வலிமைக்கும் சாரடைச்சாற்றுடன் கண் நோய்களுக்கும், நெய்யுடன் முதுமை போக்கவும், வசம்புடன் அறிவாற்றலை வளர்க்கவும், கடுகரோகிணியுடன் அழற்சிக்கும், பா.லுடன் க்ஷயத்திற்கும், இலவங்கம் சுக்கு மிளகு இவற்றின் தூளுடன் பைத்தியத்திற்கும், தேனுடன் நஞ்சுக்கும் பயன்

படுத்துக. சங்கபுஷ்பிச்சாற்றுடன் உட்கொள்ளச் செய்தால் ஆயுளை வளர்க்கும். பால் முதுக்கன் கிழங்கின் சாற்றுடன் உட்கொள்ளச் செய்தால் மகப்பேறு உண்டாகும்.

## 22. தாமிரம்

**(ஸம்.) தாம்பரம்**

**தோற்றம்**

குமரக்கடவுளின் விந்து நிலத்தில் விழுந்ததால் தாமிரம் தோன்றியது எனப்புராணங்கள் கூறுகின்றன.

**தன்மை**

செம்பருத்திப்பூவைப் போல் சிவப்பு நிறம் எண்ணெப்பசை மென்மை அடிபட்டால் உடையாமை இரும்பு முதலிய வேறு உலோகங்களுடன் கலப்பின்மை எனும் தன்மைகளைக் கொண்ட தாமிரம் தூயது.

கருநிறம் வறட்சித்தன்மை மிக்க கடினம் வெண்மைநிறம் அடிபட்டால் உடையும் தன்மை இரும்பு முதலிய உலோகங்களின் கலப்பு உள்ளதுமான தாமிரம் மருந்து செய்யப்பயன் படாது. தாமிரம் இனிப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. வாதத்தைப் போக்கும். சூட்டை வளர்க்கும். வாந்தி எரிச்சல் பித்தம் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். கண் நோய்களையும் விரணங்களையும் போக்கும்.

**பயன்**

தூய்மைபடுத்தப்பட்ட தாமிரத்தை பற்பமாக்கிப் பயன் படுத்தினால் இருமல் வயிற்றுவலி குன்மம் சோகை பரிணாம சூலை கிருமிநோய் வயிற்றில் கட்டி பெருவயிறு விரணங்கள் கபம் வாதம் காய்ச்சல் வாந்தி மூலநோய் நீரிழிவு தலைநோய்கள் விக்கல் இழுப்பு இருமல் வீக்கம் சோம்பல் தலைச்சுற்றல் அதிசாரம் க்ஷயம் முதலிய நோய்கள் தீரும். தாமிர பற்பத்தை முதுவேனில் மற்றும் கூதிர்ப்பருவங்களில் பயன்படுத்தக்கூடாது.

## 23. தாரமாக்ஷிகம்

**(ஸம்.) தாரமாக்ஷிக**

**தோற்றம்**

ஹேமமாக்ஷிகம் வகையைச் சேர்ந்தது. இதில் சிறிதளவு வெள்ளி கலந்திருக்கும். ஆனால் வெள்ளியின் தன்மைகள்

ில் மிகவும் குறைந்த அளவில் காணப்படும். வேறு பொருள் களுடன் சேர்ந்து பயன்தரும்.

இரும்பு நிலக்கரி மற்றும் கந்தகம் கிடைக்கும் சுரங்கங் களில் நிலத்தடியில் உண்டாகும் காற்றழுத்தத்தால் ஸ்வர்ண மாக்ஷிகம் அல்லது வெள்ளி மாக்ஷிகம் உண்டாகிறது ல் இரும்புப்பகுதியும் கந்தகப் பகுதியும் அதிகமாகவோ குறை வாகவோ இருப்பதை ஒட்டித் தங்கமாகவோ வெள்ளியாகவோ காணப்படுகிறது. ஆனால் உண்மையில் இது இரும்பு மற்றும் தாமிரத்தின் துணைப்பொருளேயாகும். பலமுறை சுத்தப் படுத்துவதால் இரும்புத்தூள் கிடைக்கும். ஆனால் தங்கமும் வெள்ளியும் கிடைக்கமாட்டா.

இரும்பு ஒரு பகுதி, கந்தகம் இரண்டு பங்கு கலந்தது தூயது. தாமிரம் இரண்டு பங்கும் கந்தகம் ஒரு பங்கும் கலந்தது சுவர்ணமாக்ஷிகம். இது இரும்பு இரண்டு பகுதி கந்தகம் மூன்று பங்கு அல்லது தாமிரம் ஒன்று இரும்பு ஒன்று கந்தகம் இரண்டு என்ற அளவில் கலந்தும் ஏற்படும்.

**தன்மை**

இது கசப்புச் சுவை கொண்டது. தூயதான தாரமாக்ஷிகம் பக்குவமடையும் போது இனிப்புச் சுவை கொள்ளும். விந்துவை வளர்க்கும் ரஸாயனமாகும். கண்களுக்கு நன்மைதரும்.

**பயன்**

முறையாகத் தூய்மை செய்யப்பட்ட இதன் பற்பம் மூல நோய் கிருமிநோய் குட்டம் ஸந்நிபாதம் காய்ச்சல் உப்புசம் கபம் பித்தம் விரணம் மேகம் கண்நோய் தலைச்சுற்றல் இழுப்பு இருமல் சோகை வாந்தி நஞ்சு எனும் இவற்றைப் போக்கும்.

**விளைநிலம்**

கனோஜ் தபதிநதிக்கரை அஸன்ஸோல் என்னுமிடத்தில் உள்ள ஜரியா நிலக்கரிச் சுரங்கம் மற்றும் தமிழ்நாடு மைசூரி லுள்ள நிலக்கரிச்சுரங்கங்களில் கிடைக்கிறது.

## 24. திருமண்

**(ஸம்.) சுவேதமிருத்திகா**

**தன்மை**

உட்கொண்டால் உடற்பொலிவும் விந்து வளர்ச்சியும் தரும்.

அமிலபித்தம் மேகம் இரத்தபித்தம் வாந்தி இதயநோய் என்பனவற்றைப்போக்கும். தொப்புளைச் சுற்றிலும் இதை அரைத்துப் பற்றாகப் பூசினால் நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில் எரிச்சல் எனுமிவை நீங்கும்.

## 25. துத்தநாகம்

**(ஸம்.) ரங்க**

**பயன்**

ம் உலோக வகையைச் சேர்ந்ததே.

நன்கு தூய்மையாகச் செய்யப்பட்ட துத்துநாகத்தைப் பற்பம் செய்து பயன்படுத்தினால், மேகம் பித்தம் விந்துநட்டம் கனோரியா என்னும் பால்வினைநோய் மூர்ச்சை காக்கைவலி விஷக்காய்ச்சல் இரத்தமூலம் இருமல் பெரும்பாடு ஆகிய நோய்கள் தீரும். இதைத் துணியில் தடவி, கட்டி விரணங்களின் மேல் போட நோய் தீரும்.

## 26. பாதரஸம்

**(ஸம்.) பாரத**

**தோற்றம்**

சிவனுடைய விந்து நிலத்தில் விழுந்து, பாதரஸமாகியது. நிலத்தின் நிறமாறுபாட்டினால் இது நான்கு வகைப்படும்.

1. வெண்மை 2. சிவப்பு 3. மஞ்சள் 4. கறுப்பு இவற்றில் வெண்மை நிறமுள்ளது, நோய்களைப் போக்கும். சிவப்பு நிறமுள்ளது ரஸாயனமாகும். மஞ்சள் நிறமுள்ளது தாதுவாதம் அதாவது வேறு உலோகத்தைத் தங்கமாக மாற்றும் செயலுக்குப் பயன்படும். கருமை நிறமுள்ளது வானத்தில் பறக்கும் வலிமையைக் கொடுக்கும். சுரங்கங்களில் வேறு உலோகங்களுடன் கூடியது, திரவத்தன்மையுடையது என இருவகையாகக் கிடைக்கும்.

**பயன்**

தூயதாகச் செய்யப்பட்ட பாதரசம் வாதபித்தகபங்களால் தோன்றும் மூன்று தோஷங்களையும், வாத நோய்களையும் குட்டங்களையும், தாதுக்களைச் சார்ந்த நோய்களையும், நஞ்சையும் போக்கும். ஆமவிகாரம் கிருமிநோய் ஸிப்லிஸ் என்னும் பால்வினை நோய் ஆகியவற்றைப் போக்கும். ஆண்மையை வளர்க்கும். கண்களுக்கு ஒளி நினைவாற்றல் நல்லதோற்றம் வலிமை எனுமிவற்றைத் தரும் முதுமையைப் போக்கும். நீண்ட ஆயுளைத் தரும்.

பாதரசத்தில் மலம் நஞ்சு அக்னி கிரிதோஷம் சபலதை என்னும் குற்றங்கள் இருக்கும். தகரம் ஈயம் என்னும் இரண்டு உலோகங்களுடன் கூடியது சுரங்கங்களில் கிடைக்கும் ரசம். எனவே இந்த ஏழு குற்றங்களையும் தூய்மை படுத்தும் முறையால் நீக்கிய பின் இதைப்பயன்படுத்த வேண்டும். தூய்மையற்ற ரஸத்தைப் பயன்படுத்தினால் மல தோஷத்தால் மூர்ச்சை, நச்சுத்தன்மையால் மரணம், அக்னி தோஷத்தால் உடலுக்கும் மிகுந்த அழற்சி, கிரி தோஷத்தால் செயலற்றுப் போதல், சபலதை நிலையாக இல்லாமல் அசைந்து கொண்டிருக்கும் தன்மையால் விந்துநாசம், வங்கம் எனும் உலோகம் கலந்திருப்பதால் குட்டம், ஈயம் கலந்திருப்பதால் அலித்தன்மை என்னும் துன்பங்கள் தோன்றும். எனவே பாதரசத்தை நன்கு தூய்மைப்படுத்தி அறவே குற்றங்கள் நீங்கியபின் பயன்படுத்த வேண்டும்.

**தன்மை**

அறுசுவைகளும் கொண்டதாம். எண்ணெய்ப்பசையுள்ளது. மூன்று தோஷங்களையும் போக்கும். ரஸாயனமானது. சிறப்பாக குட்டத்தைப் போக்கும்.

**விளைநிலம்**

ஆஸ்திரேலியா ஆஸ்டிரியா ஹங்கேரி இதாலி ஸ்பெயின் மெக்ஸிகோ அமெரிக்கா ரஷியா நியூஜிலாந்து என்னும் நாடுகளில் கிடைக்கும்.

வேறு உலோகத்துடன் கலந்து பிரிட்டிஷ் போர்னியோ நம்நாட்டில் பஞ்சாப் அந்தமான் மற்றும் ஏடன் ஆப்கனிஸ்தான் பர்மா திபெத் ஆப்பிரிகா கனடா ஜெர்மனி பிரான்சு ஹங்கேரி

இத்தாலி போர்ச்சுகல் சீனா ஜப்பான் பாரசீகம் மெக்ஸிகோ முதலிய நாடுகளில் கிடைக்கிறது.

## 27. மயில்துத்தம்

**(ஸம்.) மயூரதுத்தம்**

**தோற்றம்**

தாமிரத்துடன் இணைந்துள்ள உலோகமாகும். இதில் தாமிரம் கலந்து இருப்பதால் தாமிரத்தின் தன்மையும் கலந்திருக்கும். தவிர இதற்குத் தனித்தன்மைகளும் உண்டு. சுரங்கத்தில் கிடைப்பதொன்று. செயற்கையாகச் செய்யப்படுவது மற்றொன்று என இது இருவகைப்படும்.

செயற்கையாக மயில் துத்தம் செய்யும் முறை: தாமிரம் ஒரு பகுதி கந்தக அமிலம் ஒரு பகுதி நீர் ஐந்து பகுதி சேர்த்துத் தீயில் பக்குவம் செய்வர். இது பச்சை நிறம் கொண்டிருக்கும். தாமிரம் ஒரு பகுதி கந்தக அமிலம் ஒரு பகுதி நீர் ஒரு பகுதி சேர்த்துக் காய்ச்சித் தயார் செய்வதும் உண்டு.

**விளைநிலம்**

அல்வர் பரத்பூர் ஜயப்பூர் உதயப்பூர் பூந்தி பிகானீர் என்னும் பகுதிகளில் இது கிடைக்கிறது.

**தன்மை**

இது கார்ப்பு உவர்ப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டிருக்கும். வாந்தியாகச் செய்யும். இலேசானது. குளுமைத்தன்மை கொண்டது. கண்களுக்கு நன்மை செய்யும்.

**பயன்**

தூய்மைப்படுத்திய பற்பத்தை உட்கொள்ளச் செய்தால் கபம் பித்தம் நஞ்சு குட்டம் அரிப்பு இழுப்பு இருமல் முதலியவற்றைப் போக்கும். வெண்ணெயில் கலந்து உட்கொள்ளச் செய்தால் அரிப்பு நஞ்சு குட்டம் நீங்கும். வாயு விளங்கத் தூளுடன் பயன்படுத்தினால் கிருமிநோய்களும் வெற்றிலைச் சாற்றுடன் பயன்படுத்தினால் கபநோய்களையும் போக்கும். தேனுடன் கலந்து கண்களில் மை போல் இட்டால் கண் நோய்கள் தீரும். உடலின் மேல் பூசின அழுகிய விரணங்கள், குட்டம் அரிப்பு சொறி சிரங்கு நீங்கும். க்ஷய நோய் துவக்கத்

திலும் அபினியை நஞ்சாக உட்கொண்ட போதும் உணவை மிகுதியாகக் கொண்டதால் மூச்சுவிட முடியாமல் ருத்ரவாதம் எனும் நோய் தோன்றும் அடையாளங்கள் காணப்பட்ட போதும் உட்கொள்ளச் செய்தால் உடனே வாந்தியாகும். பத்து முதல் பதினைந்து கோதுமை எடைவரை எட்டு துலாம் நீரில் கலந்து உட்கொள்ளச் செய்ய வேண்டும். அளவு மிஞ்சினால் உயிரைப் போக்கும். இதற்கு முறிப்புகள் (1) புளித்த மோர் (2) எலுமிச்சம் பழச்சாறு (3) நெற்பொரியை நீரில் பிசைந்து எடுத்த நீர்.

## 28. மனோசிலை

### (ஸம்.) மனஸ்சிலா

### தன்மை

இது குருத்தன்மை நல்லநிறம் கொடுக்கவல்லது. பேதியாகச் செய்வது உஷ்ணத்தை வளர்ப்பது எண்ணெய்ப்பசை கொண்டது. கார்ப்பு கசப்புச் சுவைகளைக் கொண்டது. இதனாலான தூய்மையற்ற மருந்தை உட்கொண்டால் மலத்தைத் தடுக்கும். நீர்ச் சுருக்கு அல்லது சிறுநீர்ப்பையில் மணல் போன்ற பொருளை உண்டாக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

தூய்மைப்படுத்திய மனோசிலையை பற்பம் ஆக்கிப் பயன்படுத்தினால் இழுப்பு இருமல் பூதத்தால் ஏற்படும் துன்பம் கபம் இரத்த தோஷம் எனுமிவை நீங்கும். நஞ்சு குட்டம் ஆகியவற்றைப் போக்கும். மேல்பூச்சாகப் பயன்படுத்தினால் சொறி சிரங்கு தோல்நோய் என்பனவற்றைப் போக்கும்.

## 29. செந்தூரம்

### (ஸம்.) ஸிந்தூரம் - ரக்தரேணு

### தோற்றம்

ஈயச் சுரங்கத்தில் அதனுடன் கிடைக்கும் துணை உலோகப்பொருளாகும். சுரங்கத்தில் கிடைப்பதல்லாமல் ஈயம் மனோசிலை க்ஷாரம் முதலியவற்றைக் கலப்பதால் செயற்கையாகவும் இது செய்யப்படுகிறது.

**தன்மை**

ஈயத்தின் தன்மைகளல்லாது வேறு பொருள்களின் சேர்க்கையால் வேறு தன்மைகளையும் உடையதாகும். சூட்டை உண்டாக்கும். எலும்புகளைச் சேர்க்கும் தன்மைகொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

நஞ்சு விரணம் அக்கி குட்டம் உப்புசம் கிருமிநோய் முதலியவற்றைப் போக்கும். கெட்ட மாமிச வளர்ச்சியைப் போக்கும். வெண்ணெய் முதலியவற்றுடன் கலந்து மேல் பூச்சாகப் பயன் படுத்தினால் விரணங்களை ஆற்றும். சீழ் பிடிக்காமல் செய்யும்.

## 30. நவரத்தினங்கள்—வைரம்

**(ஸம்.) வஜ்ரம்**

வைரம் வைடூரியம் பதுமராகம் (மாணிக்கம்) புஷ்பராகம் முத்து பவழம் பச்சை கோமேதகம் நீலம் என்பன நவரத்தினங்களாகும்.

**தோற்றம்**

வைரம் நான்கு வகைப்படும். வெண்மை நிறமுள்ளது, அந்தணசாதி சிவப்புநிறமுள்ளது. க்ஷத்திரியசாதி மஞ்சள் நிறமுள்ளது வைசியசாதி மற்றும் கருநிறமுள்ளது மற்றைய வகுப்பைச் சார்ந்ததெனக்கூறப்பட்டுள்ளது.

வெண்மைநிறமுள்ளது சித்திகள் அனைத்தையும் தரும். சிவந்தது கிழத்தன்மையையும் மரணத்தையும் போக்கவல்லது. மஞ்சள் நிறமுள்ளது மிக்க செல்வத்தைத்தரும். கருநிறமுள்ளது நோய்களைப் போக்கி நல்ல உடற்கட்டைத் தந்து பருவத்தை நிலைநாட்டவல்லது. ஆண் பெண் அலி என இரத்தினம் மூன்று வகைப்படும். உருண்டை வடிவமும் நல்ல ஒளியும் கொண்டு மிகவும் பெரியதான கோடுகளோ புள்ளிகளோ அற்றதாகி இருக்கும் ரத்தினம் ஆண் இனத்தைச் சேர்ந்தது. புள்ளிகளுடன் ஆறுபக்கங்களைக் கொண்டது பெண் இனத்தைச் சேர்ந்தது. முக்கோண வடிவமும் சற்று நீண்டும் உள்ளது அலி இனத்தைச் சேர்ந்தது. ஆண் இனத்தைச் சேர்ந்தது மிகவும் சிறந்தது பாதரஸத்தைக் கட்டக் கூடியது. பெண் இனத்தைச் சேர்ந்தது உடல் பொலிவைத்தரும். பெண்களுக்கு நன்மை செய்யும். அலிதன்மையுள்ளது வலிமையற்றது. சுகத்தைக் கெடுப்பதுமாகும்.

**தன்மை**

தூய்மை படுத்தப்பட்ட இரத்தினத்தைப் பற்பமாக்கிப் பயன்படுத்தினால் ஆயுளையும் (அநேகமாக எல்லா நோய்களையும் போக்கும்) உடல் வலிமையையும் விந்துவையும் வளர்க்கும். உடலுக்கு நல்ல பொலிவைத் தரும். சுகத்தைத்தரும்.

## 31. கோமேதகம்

**(ஸம்.) பிதரத்னகம்**

இந்திர நீலமணியைப் போன்ற தன்மைகளையுடையது. சற்று மஞ்சள் கலந்த நிறமாகக் காணப்படும் ரத்னமாகும்.

## 32. பச்சை

**(ஸம்.) காருத்மதம்**

தூயபச்சைக் கல்லைப் பற்பமாக்கிப் பயன் படுத்தினால் பித்தத்தை வளர்க்கும். சிலேத்தும வாதம் க்ஷயம் எலும்புருக்கி சோகை மூலநோய் கபம் ஸன்னிபாதம் காய்ச்சல் உப்புசம் வாந்தி காய்ச்சல் என்பனவற்றைப் போக்கும்.

## 33. மாணிக்கம்

**(ஸம்.) பத்மராகம்**

தூயதான மாணிக்கத்தைப் பற்பமாக்கிப்பயன்படுத்தினால் பித்தத்தை வளர்க்கும். மேகநோய் வாதம் இருமல் கபம் வாத க்ஷயம் என்பனவற்றைப் போக்கும்.

## 34. புஷ்பராகம்

**(ஸம்.) புஷ்பராகம்**

தூய்மையான புஷ்பராகக்கல்லைப் பற்பமாக்கிப் பயன் படுத்தினால் வாதத்தைவெல்லும். சடராக்னியையும் ஆயுளையும் அறிவையும் விந்துவையும் வளர்க்கும்.

## 35. நீலக்கல்

**(ஸம்.) இந்திரநீலம்**

தூய்மையான நீலக்கல்லைப் பற்பமாக்கிப் பயன்படுத்தினால் உஷ்ணத்தையும் பித்தத்தையும் வளர்க்கும். சடராக்

னியைத் தூண்டிவிடும். வாதக்ஷயம் கபபித்தம் வாதம் சீத பித்தம் இருமல் என்பனவற்றைப் போக்கும்.

## 36. வைடூரியம்

**(ஸம்.) வைதூர்யம்**

தூய வைடூரியம் புளிப்புச் சுவையுள்ளது. சூட்டை வளர்க்கும். கபவாதம் குன்மம் வயிற்றுவலி என்பனவற்றைப் போக்கும். சுகம் தரும்.

## 37. முத்து

**(ஸம்.) மௌக்திகம்**

**தோற்றம்**

சிப்பி சங்கு யானை பன்றி நாகம் மீன் தவளை மூங்கில் இவற்றில் முத்து தோன்றும் எனக் கூறப்பட்டுள்ளது. ஆயினும் சிப்பியில் தோன்றும் முத்தே சிறந்தது.

**தன்மை**

குளுமையைத் தரும். விந்துவை வளர்க்கும். கண்களுக்கு நன்மை தரும். உடலை வளமுறச் செய்யும்.

**பயன்**

முறையாக செய்யப்பட்ட முத்துபற்பம் மேகநோய், பித்தம் இவற்றைத் தணிக்கும். வலி கிருமி காய்ச்சல் க்ஷயம் கபம் இவற்றைப் போக்கும். வீந்துவையும் ஆயுளையும் வளர்க்கும். பசியைத் தோற்றுவிக்கும். அசீரண பேதி நெஞ்சில் எரிச்சல் வயிற்றில் புண்ணைத் தோற்றுவிக்கும். காய்ச்சல் முதலியவற் வற்றைப் போக்கும். இதயத்திற்கு நன்மை தரும்.

தூய்மையற்ற பற்பத்தினால் தோன்றும் துன்பங்கள் நீங்க நெய் தேன் கற்கண்டு பசும்பால் இவற்றைச் சம அளவில் கலந்து உட்கொள்ளச் செய்க.

முத்துச் சுண்ணாம்பை வெற்றிலையுடன் பயன்படுத்தினால் மூன்று தோஷங்களையும் போக்கும். பித்தத்தால் தோன்றிய வயிற்றுவலி முதலிய வயிற்று நோய்களைப் போக்கும். கப பித்தங்களை தணிக்கும். கண்களுக்கும் தாதுக்களுக்கும் வலிமை தரும். விந்துவை வளர்க்கும். அழற்சி அதிசாரம்

மூர்ச்சை தலைச்சுற்றல் வெறி நஞ்சு இவற்றைப் போக்கும். முத்துச்சூரணம் கண்களுக்கு நன்மை தரும். நெஞ்சு படபடப்பு கைகால்களில் நரம்புக்கோளாறினால் தோன்றும் நடுக்கம் இரத்தப் பெருக்கு முதலியன நீங்கும். முத்துச்சிப்பியில் விழுந்த மழைநீர் கெட்டிப்படும் முன்பாக அதை எடுத்துப் பூசினால் குட்டம் நீங்கும்.

## 38. பவழம்

**(ஸம்.) பிரவாளம்**

**தோற்றம்**

கடலில் தோன்றுவதாகும். கோவைப்பழம் போன்ற நிறமும் உருண்டை வடிவமும் பருமனும் உள்ள பவழம் சிறந்தது.

**தன்மை**

பவழம் புளிப்புச்சுவையுள்ளது. வாதபித்தம் முதலிய தோஷங்களைப் போக்கும். விந்துவை வளர்க்கும். உடற் பொலிவை மிகுதியாக்கும். தேனில் அரைத்து நாக்கில் பூசினால் அங்குத் தோன்றிய தோஷங்கள் நீங்கும். பவழத்தை அணிவதால் ஆயுள் வளரும்.

## 39. இரத்தி பொதுத் தன்மைகள்

இனிமைச்சுவை பேதியாகச் செய்யும் தன்மை. கண்களுக்கு நன்மை தரும் தன்மை. குளுமை கொண்டவை. அணிவதால் நஞ்சைப் போக்குபவை. மனத்திற்கு இன்பம் தருபவை. கிரகங்களினால் தோன்றக்கூடிய தீமைகளைப் போக்கி மங்கலங் களை விளைவிக்கக் கூடியவை.

சூரியனுக்கு மாணிக்கமும் சந்திரனுக்குத் தூய முத்தும் செவ்வாய்க்குப் பவழமும் புதனுக்குப் பச்சைக் கல்லும் குருவிற்குப் புஷ்பராகமும் சுக்கிரனுக்கு வைரமும் சனிக்கு நீலக் கல்லும் இராகுவிற்குக் கோமேதகமும் கேதுவிற்கு வைடூரியமும் உரியவை. தீங்கு விளைவிக்கக் கூடிய கிரகத்திற்கு உரிய ரத்தனத்தை உடலில் அணிவதால் தோஷங்கள் நீங்கும்.

## 40. உபஇரத்தினங்கள்

முத்துச்சிப்பி சங்கு முதலியன உபரத்னஙங்கள் எனப்படு கின்றன. இவற்றில் இரத்தினங்களுக்கு உரிய தன்மைகள் மிகக் குறைந்த அளவில் காணப்படும்.

## 41. நஞ்சு

(ஸம்.) விஷம்

**விஷவகைகள்**

நாபிக்கிழங்கு ஹாரித்ரம் ஸக்துகம் பிரதீபனம் ஸௌராஷ்டிரிகம் சிருங்கிகம் காலகூடம் ஹாலாஹலம் பிரும்மபுத்ரம் என்று நஞ்சு ஒன்பது வகைப்படும்.

**நாபிக்கிழங்கு**

ஒரு வகைச்செடியின் கன்றின் தொப்புளைப் போன்ற தோற்றம் கொண்ட வேர்ப்பகுதியே நாபிக்கிழங்கு எனப்படும். ச்செடியின் அருகில் வேறு மரங்கள் எவையும் வளரா.

**ஹாரித்ரம்**

இது மஞ்சள் செடியின் வேரைப் போல் முடிச்சுகள் கொண்ட வேர் உடைய செடியாகும்.

**ஸக்துகம்**

இந்த வகையைச் சார்ந்த செடியின் முடிச்சுகளைப் போன்ற பகுதிக்குள் பொடித் தோற்றத்தில் நஞ்சு இருக்கும்.

**பிரதீபனம்**

இது சிவந்த நிறமும் நெருப்பைப் போல் அரிக்கும் தன்மையும் கொண்ட நஞ்சாகும்.

**ஸௌராஷ்டிரிகம்**

இது ஸௌராட்டிரம் எனும் நாட்டில் தோன்றும் நஞ்சாகும்.

**சிருங்கிகம்**

இதைப்பசுவின் கொம்பில் கட்டி வைத்தால் பால் சிவப்பு நிறம் கொள்ளும்.

**காலகூடம்**

தேவர்களுக்கும் அரக்கர்களுக்கும் தோன்றிய போரில் பிருது மாலி என்ற அரக்கன் கொல்லப்பட்டான். அவனுடைய இரத்தம் படிந்த இடத்தில் அரசமரத்தைப் போன்ற ஒரு வகை மரம் தோன்றியது. அம்மரத்தின் பிசின் காலகூட விஷம் எனப் பட்டது. இம்மரம் நாக்பூர் கொங்கண தேசம் மற்றும் மலயா சலப்பகுதிகளில் தோன்றுகின்றன.

**ஹாலாஹலம்**

இதன் பழங்கள் திராட்சைக் கொத்து போலவும், இலைகள் பனை ஓலைகளைப் போலவும் இருக்கும். அருகில் சென்றால் உடம்பில் தீ படுவது போன்ற எரிச்சலை உண்டாக்கும். இதன் அருகில் உள்ள மரங்கள் பட்டுப் போகும். இமயம் கிஷ்கிந்தை தென்கடற்கரை கொங்கண நாடு முதலிய இடங்களில் தோன்றும்.

**பிரமபுத்ரம்**

தங்கம் போன்ற நிறம் கொண் து. பேதியாகச் செய்யும் மலயாசலப் பகுதியில் விளையும்.

**நஞ்சின் தன்மைகள்**

உயிரைப் போக்கும். விரைவில் உடலுக்குள் முழுவதும் பரவும். உடலில் உள்ள தாதுக்களை உலர்த்தி முட்டுக்களைச் சிதைக்கும். நெருப்பால் சுடுவது போன்ற எரிச்சலைத் தோற்று விக்கும். நஞ்சைத் தூய்மைபடுத்தி மிக்க எச்சரிக்கையுடன் அள வாகப் பயன்படுத்தினால் ரஸாயனம் போல் உடலை வெகு காலம் திடமாக நிலைபெறச் செய்யும். மூன்று தோஷங் களைப் போக்கும். உடற்ச் செழிப்பையும் விந்து வளர்ச்சியையும் தோற்றுவிக்கும். முறையாக நஞ்சைத் தூய்மைபெறச் செய்வ தால் கேடு விளைவிக்கும் பகுதி சிதைந்துவிடும். அப்பொழுது மருந்தாகப் பயன்படுத்தத் தக்கதாகும்.

## 42. உபவிஷங்கள்

எருக்கம்பால் கள்ளிப்பால் கலப்பைக்கிழங்கு அரளி கஞ்சா அபினி ஊமத்தை எனும் இந்த ஏழும் உபவிஷங்கள் எனப்படும். இவற்றின் தன்மைகளை அந்தந்த மூலிகையைப்பற்றிய இடங் களில் காண்க.

# 5. உப்பு வகைகளின் தன்மைகள்

## 1. இந்துப்பு

**(ஸம்.) ஸைந்தலவணம்**

சுரங்கத்திலிருந்து வெட்டியெடுக்கப்படும் உப்பாகும். வெண்மை சிவப்பு நிறம் கொண்டிருக்கும். நல்லவெண்மை நிறம் கொண்டது சிறந்ததாகும்.

**தன்மை**

சுவையானது சடராக்னியை வளர்ப்பது. எளிதில் செரி மானமாக்குவது இலேசானது. எண்ணெய்ப்பசை குளுமைத் தன்மை கொண்டது. விந்துவை வளர்க்கக் கூடியது. கண் களுக்கு நன்மை பயக்கக் கூடியதாகும். மூன்று தோஷங்களை யும் போக்கும்.

மிகுதியாகப் பயன்படுத்தினால் பித்தத்தை வளர்க்கும். அதிஸாரத்தைத் தோற்றுவிக்கும். இதனால் தோன்றிய துன் பங்களுக்கு தாழம்பூவில் உள்ள பகுதியின் சாறு முறிப்பாகும்.

## 2. கடல் உப்பு

**(ஸம்.) ஸமுத்ரலவணம்**

**தன்மை**

உவர்ப்புச் சுவை கொண்டது. பக்குவமடையும் போது கசப்புடன் கூடிய இனிப்புச் சுவையடையும். உணவுப் பொருள் களுக்குச் சுவையூட்டுவது. சூடு இரத்தபித்தம் எரிச்சல் என்பன வற்றைத் தோற்றுவிக்கும். சடராக்னியை வளர்க்கும். மலத்தைப் பிளக்கும். கபத்தை வளர்க்கும்.

**பயன்**

கபவாதம் குன்மம் நஞ்சு இழுப்பு இருமல் வாதம் என்பன வற்றைப் போக்கும்.

## 3. கரியுப்பு

**(ஸம்.) ஸௌவர்சலலவணம்**

**தன்மை**

இலேசானது விந்துவுக்குச் சூடும் செழிப்பும் தோற்று விக்கும். சடராக்னியை வளர்க்கும். செரிமானமடையச்

செய்யும் உப்புகளில் சிறந்தது. எண்ணெய்ப்பசை கொண்டது.

**பயன்**

குன்மம் வயிற்றுவலி மலக்கட்டு கபம் என்பனவற்றைப் போக்கும்.

## 4. சவுட்டுப்பு

**(ஸம்.) ஔத்பிதம்**

**தோற்றம்**

உவர் நிலத்தில் தோன்றுவது. இந்த நிலத்தில் உள்ள மண்ணை நீரில் கரைத்து உப்பைத் தனியாகப் பிரித்து எடுப்பர்.

**தன்மை**

கசப்புச் சுவை எண்ணெய்ப்பசை குருத்தன்மை குளுமைத் தன்மை கொண்டது விரைவாக சடராக்னியைத் தூண்டும்.

**பயன்**

உப்புசம் குன்மம் வயிற்று நோய்கள் விஷவிரணங்கள் கபம் ஆகியவற்றைப் போக்கும்.

## 5. பிடாலவணம்

**(ஸம்.) பிடம்**

**தோற்றம்**

பிரசாரனி (பீநாறி)எனப்படும் கொடி காடுகளில் மரங்களைச் சார்ந்து படரும் கொடியாகும். இந்தக் கொடியைக் கசக்கிச் சாறு எடுத்தால் நாற்றம் வீசும். அதனால் இதற்கு வடமொழியில் 'பூதிகந்தா' என்ற பெயர் ஆயிற்று. இக் கொடியை எரித்து எடுத்த சாம்பல் 'பிடாலவணம' என்று சொல்லப்படுகிறது. இது செயற்கையானது. நிலத்தில் வெட்டி எடுக்கப்படும் வகை ஒன்று உண்டு.

**தன்மை**

கார்ப்புச்சுவை கொண்டது. கபத்தை மேல் நோக்கியும், வாதத்தைக் கீழ்நோக்கியும் செலுத்தி வெளியேற்றச் செய்யும். சடராக்னியை வளர்க்கும். இலேசு, தீக்ஷ்ணம் உஷ்ணம் வறட்சி கொண்டது.

**பயன்**

இதய நோய் வாதம் மலக்கட்டு வயிற்றுஉப்புசம் ஆமசூலை இழுப்பு இருமல் சுவையின்மை என்பனவற்றைப் போக்கும்.

## 6. நவாச்சாரம்

**(ஸம்.) நரஸார**

**தோற்றம்**

நவாச்சாரம் ஒட்டகத்தின் சாணத்தை எரித்து எடுத்த சாம்பலாகும். இது செயற்கையானது. நிலத்தில் வெட்டி எடுக்கப்படும் வகையும் உண்டு.

**தன்மை**

சிறிது கசப்புச் சுவை குளுமை கொண்டது.

**பயன்**

வயிற்றில் எரிச்சல், குன்மம் உப்புசம் மூலநோய் பெரு வயிறு மாதவிடாய்த்தடை கருப்பை வளர்ச்சி, இருமல் முதலியன நீங்கும். நவாச்சாரமும் சுண்ணாம்பும் கலந்து முகரச் செய்தால் நினைவு தவறுதல் உடற் சோர்வு கால் கை வலி தலைவலி முதலியன நீங்கும். தேள் கொட்டிய இடத்தில் சுண்ணாம்புடன் கலந்து பூசினால் நஞ்சு நீங்கும். நீரில் கலந்து பூசினால், நாள்பட்ட விரணங்களும் நீங்கும்.

## 7. படிகாரம்

**(ஸம்.) ஸ்படிகாரி**

**தன்மை**

புளிப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டது.

**பயன்**

நஞ்சு கண்நோய்கள் வாதபித்தநோய்கள் விரணங்கள் கட்டிகள் இவற்றைப்போக்கும். தொண்டை நோய்கள் நாவில் வெண்பூச்சுபடருதல் போன்றவற்றிற்குப் படிகாரம் கலந்த நீரால் கொப்பளித்தால் நன்மை தரும். தூய்மைபடுத்திப் பற்பமாக்கி உட்கொள்ளச் செய்தால் நீராகப் பேதியாகுதல் சிறுநீர்ப் பெருக்கு இரத்தவாந்தி ஆகியவற்றைப் போக்கும். படிகாரம் கலந்த நீரால் கொப்பளித்தால் வாய் மரத்துப் போகும். இதற்கு நெய் முறிப்பாகும்.

## 8. வெங்காரம்

**(ஸம்.) டங்கணக்ஷாரம்**

**தோற்றம்**

பூடான் எனும் நாட்டில் சுரங்கத்தில் வெட்டி எடுக்கப் படுகிறது. சிறுசிறு துண்டுகளாகக் கிடைக்கும். இதைப் பக்குவப்படுத்திப் பெரிய அளவில் கட்டிகளாகச் செய்கின்றனர்.

**ம**

வறட்சித்தன்மை கொண்டது. நெருப்பைத் தோற்று விக்கக்கூடியது. கபவாதபித்த நோய்களை போக்கும். நீரையும் உடலிலுள்ள மலங்களையும் வெளியேற்றும். கண நோய் பெருவயிறு நீர்ச்சுருக்கு முதலியவற்றைப் போக்கும்.

**பயன்**

வெங்காரத்தை தேனில் குழைத்து, நாவில் பூசினால் அங்குத் தோன்றிய புண்கள் தீரும். க்ஷயம் காய்ச்சல் முதலியவற்றால் நாவில் தோன்றிய வெடிப்புகளுக்கு ஒரு அவுன்சு தேனில் இரண்டு வராகன் எடை வெங்காரத்தின் தூளையும் கலந்து பூச குண மாகும். ஆண்குறி பெண்குறிகளில் தோன்றும் எரிச்சலுக்கு ஒரு துலாம் வெங்காரத்தை எட்டு மடங்கு நீரில் கலந்து பயன் படுத்துக. கருவுற்றவர்களுக்கு இதைப் பயன்படுத்தினால் கருச் சிதைவு உண்டாகும்.

## 9. யவக்ஷாரம்

**(ஸம்.) வக்ஷரா**

**தோற்றம்**

யவதானியப்பயிர் நன்கு வளர்ந்து செழித்துப் பச்சையாக இருக்கும்போது அதை வேருடன் பிடுங்கி வெயிலில் உலர்த்தி எரித்துச் சாம்பலைத் தண்ணீர்விட்டுப் பலமுறை கழுவித் தெளிவித்து எடுப்பர். அச்சாம்பலே யவக்ஷாரம் எனப்படும்.

**தன்மை**

உவர்ப்பு கார்ப்புச் சுவைகள் கொண்டதாகும். ராக்னியை வளர்க்கும்.

**பயன்**

வாதம் குன்மம் வயிற்றுவலி கபம் பித்தம் குட்டம் சோகை முதலிய நோய்களைப் போக்கும்.

## 10. ஸஜ்ஜக்ஷாரம்

**(ஸம்.) ஸ்வர்ஜிகா**

**தன்மை**

யவக்ஷாரத்தைவிட தன்மையில் குறைந்தது. சிறப்பாக வயிற்றுவலியையும் குன்மநோயையும் போக்கவல்லது.

**பயன்**

இரத்தவாதம் கிருமி குன்மம் வயிற்று நோய்கள் உப்புசம் இதயநோய் இருமல் இழுப்பு கால்கைவலி வயிற்றில் கட்டி எனுமிவற்றைப் போக்கும். புளிச்சஏப்பம் கண்டமாலை சுவையின்மை பித்தம் பித்தவாந்தி பித்தத்தினால் தோன்றும் வலி அசீரணம் முதலியவற்றைத் தணிக்கும்.

## 11. ஸோராகாரம்

**(ஸம்.) ஸோர்யக்ஷார, அர்க்கக்ஷார**

**தன்மை**

நீர்ச்சுருக்கு சிறுநீர்த்தடைகளைப் போக்கும் குளுமைத் தன்மையுடையது. உடலில் மிகுந்துள்ள சூட்டைத் தணிக்கும்.

**பயன்**

ஸோராகாரத்தை நீரில் கலந்தால் அதன் குளுமைத்தன்மை மிகும். சோறு வடித்த கஞ்சியில் சிறிது ஸோராகாரம் கலந்து சுவைக்காகத் தேன் அல்லது சர்க்கரை கலந்து உட்கொள்ளச் செய்தால் கடும் காய்ச்சல் இரத்தத்தில் மிகுந்துள்ள சூடு தணியும், சிறுநீரைப் பெருக்கும். அம்மை கடும் கபக் காய்ச்சல் போன்ற நோய்களைத் தணிக்கும்.

கல்லீரல் மண்ணீரல் கருப்பை முதலியவற்றிலிருந்து இரத்தம் வெளியேறுவதைத்தடுக்கும். கனேரியா எனும் பால்வினை நோய்ஒருகிராம் ஸோராகாரத்தை ஒருபைன்ட் சோற்றுக்கஞ்சியில் கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீர் குளுமையுடன் வெளியேறி துன்பத்தைத் தணிக்கும். ஸோராகாரம், 10 கோதுமை எடை, படிகாரம், 5 கோதுமை எடை நீரில் கலந்து மூன்று

வேளைகள் .ட்கொள்ளச் செய்தால் கடுமையான பெரும்பாடு நீங்கும்.

## 12. லப்புளிப்பு

**(ஸம்.) சணகாம்லம்**

**தோற்றம்**

நன்கு வளர்ந்த கடலைச் செடியின் மீது மெலிந்த தூய ஆடையை இரவில் பரப்பி வைப்பர். இரவில் பனியில் நனைந்துள்ள அந்த ஆடையை விடியற்காலையில் எடுத்துப் பிழிந்து கடலைப்புளிப்பு எனப்படும் திரவத்தை எடுப்பர். அத்திரவத்தை உலர்த்தி எடுக்கப்பட்ட பொருள் கடலைப்புளிப்பு எனப்படும்.

**தன்மை**

புளிப்புச் சுவை கொண்டது. மிக்க சூடும் செரிமானத்தைத் தூண்டுதலும் செய்யும். பற்களை கூசச்செய்யும்.

**பயன்**

வாதம் பித்தம் வயிற்றுவலி அசீரணம் மலக்கட்டு என்பன வற்றைப் போக்கும். சில மருந்துகளுக்குத் துணை மருந்தாகப் பயன்படும்.

## 13. சுக்ரம்

**(ஸம்.) ரஸாம்லம்**

மாதுளை எரிமா எலுமிச்சை புளி முதலிய புளிப்புச் சுவை கொண்டவற்றின் சாற்றை நிலத்தில் புதைத்து வைத்து எடுப்பதே சுக்ரமாகும்.

**தன்மை**

மிகவும் புளிப்புச் சுவை கொண்டது. .ஷ்ணத்தைக் கொடுப்பது. சடராக்னியை வளர்க்கும்.

**பயன்**

வயிற்றுவலி குன்மம் மலக்கட்டு ஆமவாதம் கபம் வாந்தி நாவறட்சி இதயவலி முதலியவற்றைத் தணிக்கும்.

# 6. மருந்துப் பொருள்களின் குணங்கள்

## (உயிரினங்களின் உடற்பகுதிகள், பால் முதலியவை)

### 1. அன்னம் (ஸம்) தார்த்தராஷ்ட்ர, ச்வேத

அன்னப்பறவை புலால், வாதத்தைப் போக்கும். உடற் பொலிவையும் வலிமையையும் வளர்க்கும். விந்துவுக்குப் பெருக் கமும் சூடும் தரும். குரலை நன்கு விளங்கச் செய்யும். குருத் தன்மை கொண்டதாம்.

### 2. (1) ஆட்டுக்கால்

ஆட்டுக்காலில் உள்ள புலால், தாதுக்களைச் சம நிலை பெறச் செய்யும். சூட்டை வளர்க்கும். உடலுக்கும் எலும்பு களுக்கும் நரம்புகளுக்கும் வலிமையைத் தரும். மார்புக்கும் தொண்டைக்கும் நன்மை செய்யும். இருமலையும் காங்கையை யும் த ணிக்கும். இதயத்தையும் வயிற்றையும் மென்மை பெறச் செய்யும். இதைக் கோதுமையுடன் பக்குவம் செய்து உண்பது நலம். விரைவில் செரிமானமடையும். பசியைத் தூண்டும். மிகுதியாக உண்பதால் மலக்கட்டைத் தோற்றுவிக்கும். குடலில் வாதத்தைத் தடுத்து நிறுத்தும். இதற்கு முறிப்புகள்: (1) தேன் (2) புளி (3) புளித்தகள் என்பன.

### (2) ஆட்டுக் கொம்பு

ஆட்டுக்கொம்பைச்சுட்டு, எண்ணெயுடன் கலந்து தலையில் பூசிக்கொண்டால் தலைமுடி கருமை நிறம்பெறும்.

### (3) ஆட்டுக்கொழுப்பு

ஆட்டுக்கொழுப்பைக் கொண்டு புண்களின் மேல் போடும் பிளாஸ்திரி தயார் செய்யப்படுகிறது. இந்தக் கொழுப்புடன் ஜாதிக்காய் வால்மிளகு கலந்து உட்கொள்ளச்செய்தால் இரத்த காசம் க்ஷயம் நீங்கும். உப்புசத்தையும் நீர்ச்சுருக்கையும் தணிக்கும்.

### (4) ஆட்டின் சிறுநீரகம்

குளுமை தரும். சிறுநீரகத்திற்கும் இடுப்புக்கும் வலிமை தரும். தாமதமாகச் செரிமானமாகும். அளவுக்குவிஞ்சிப் பயன்

படுத்தினால் சில துன்பங்களை விளைவிக்கும். ஆட்டின் உட லுறுப்புகளில் இது தீமையை விளைவிக்கக் கூடியதாகும். இதற்கு முறிப்புகள்: 1. புளிப்புக்காடி, 2. கற்கண்டு, 3. எண்ணெய், 4. உப்பு, 5. இலவங்கப்பட்டை என்பன.

### (5) ஆட்டின் சிறுநீர்

ஆட்டின் சிறுநீர் மூன்று தோஷங்களையும் போக்கும். சூட்டை மிகுதியாக்கும். இருமல் பெருமூச்சு குட்டம் கிருமி குன்மம் வயிற்று உப்புசம் மூச்சுப்பைகளில்வலி விரைவீக்கம் வயிற்றுநோய் விக்கல் சோகை மண்டலக்குட்டம் வாந்தி என்பன வற்றைப் போக்கும். இதைக்காதில் விட்டால் குத்தல் வலியைத் தணிக்கும்.

### (6) ஆட்டுப்பால்

இது சூட்டை விளைவிக்கும். பால் வகைகளில் சிறந்தது. மூன்று தோஷங்களையும் போக்கும். உடல் வலிமையை வளர்க் கும். வாதம் வயிற்றில் வலி நஞ்சு கிருமிகள் இருமல் மேல்மூச்சு வாங்குதல், க்ஷயம் சுரஅதிஸாரம் உப்புசம் சோகை காய்ச்சல் இரத்தபித்தம் என்பனவற்றைத் தணிக்கும். இரத்த காசம் மார்பில்புண் நாள்பட்ட காய்ச்சல் உள்ளவர்களுக்கு நன்மை செய்யும். கருவுற்றவர்களுக்கும் நோயினால் மண்ணீரல் இளைத்தவர்களுக்கும் தலைவலியுள்ளவர்களுக்கும் இது தீங்கு செய்யும், இதற்கு முறிப்புகள் (1) தேன் (2) கற்கண்டு (3) மோர் (4) எலுமிச்சம் பழச்சாறு (5) பயிற்றை இட்டுக் காய்ச்சிய நீர் (6) வறுத்த மீன் எனும் பொருள்கள். வெள்ளாட்டுப்பால் கபத்தை வளர்க்கும். வாதத்தைப் போக்கும். அபத்தியமானது.

### (7) ஆட்டு மோர்

இலேசானது. மூன்று தோஷங்களையும் போக்கும், சட ராக்னிக்கு வலிமையைத் தரும். குன்மம் மூலநோய் ஸங்கிரஹணி வீக்கம் சோகை பித்தமேகம் பெருவயிறு ஆகிய நோய்களைப் போக்கும்.

### (8) ஆட்டு நெய்

சுவை தரும். சடராக்னியைத் தூண்டும். இலேசானது கண்களுக்கு நன்மை தரும். அடிவயிற்றைத் தூய்மையாக்கும். உடல் வலிமையைத்தரும். கபத்தை வளர்க்கும். வாதம் இருமல் இழுப்பு க்ஷயம் வாதபித்தம் குன்மசூலை மூலநோய் சடராக்னிக்

குறைவு அதிஸாரக் காய்ச்சல் எனும் நோய்களைத் தணிக்கும். பத்தியமானது.

### 3. அ (பசு) (1) ஆவின் பால்

சமசீதோஷ்ணமானது. இனிப்பானது. விந்துவையும் உடல் வலிமையையும் வளர்க்கும். இருமல் இழுப்பு சோர்வு தலைச்சுற்றல் வெறி பசி தாகம் உப்புசம் வாதம் க்ஷயம் இரத்த பித்தம் வாதபித்தம் நாள்பட்ட காய்ச்சல் எனும் இவற்றைத் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும். உயிரை நிலைபெறச் செய்யும். ஆயுளைவளர்க்கும். உடலில் காயம் பட்டவர்களுக்கும் தாதுகுறைந்தவர்களுக்கும் நன்மை தரும். அறிவைத் தூண்டும். கபம்பித்தம் எனும் இவற்றை வளர்க்கும். குருத்தன்மை கொண்டதாம். சிறுநீர்ப்பையில்கல் நீர்ச்சுருக்குநோய் கொண்டவர்களின் மண்ணீரலுக்குத் தீங்கு செய்யும். இதற்கு முறிப்புகள் 1. தேன் 2. சர்க்கரை 3. சூடான பால் ஏடு 4. மோர் 5. எலுமிச்சம் பழச்சாறு 6. பயற்றை இட்டுக் காய்ச்சிய நீர் 7. வறுத்த மீன் எனும் பொருள்கள்.

கன்றை ஈன்ற 40 நாட்களுக்குப்பின் கறந்த பசும்பால் நன்மை தரக்கூடியதாகும்.

### (2) பால் பருகத்தக்க நேரம்

நண்பகலுக்குமுன் பாலை உட்கொண்டால் விந்துவையும் உடல் வலிமையையும் சடராக்னிக்குத் தூண்டுதலையும் அறிவு வளர்ச்சியையும் தரும். பகலில் உட்கொண்டால் வலிமையையும் விந்து வளர்ச்சியையும் தரும். கபம் நீரிழிவு சளி ஆகியவற்றைப் போக்கும். உடலுக்குச் சூடுதரும். இரவில் பாலைப் பருகினால் பல தோஷங்களைப் போக்கும். வலிமையையும் விந்துவையும் வளர்க்கும். அமுதத்திற்கு ஒப்பாகும். பாலை உட்கொண்டதும் தூங்கக் கூடாது.

### (3) பால் பருகத்தகாதவர்கள்

குட்டம் கபம் நீரிழிவு பகந்தரம் (பிஸ்டுலா) ஆமம் விரணம் காய்ச்சல் அதிஸாரம் காலரா கிரஹணி அசீரணம் இரத்தபேதி கபநோய் பித்தநோய் தொண்டை நோய் கொண்டவர்களுக்குப் பால் தீமையே செய்யும்.

### (4) பாலைத் தவறாமல் உட்கொள்ளவேண்டியவர்கள்

நோயால்இளைத்தவர் கருவுற்றவள் உடற்பயிற்சி செய்பவர் சிறுவர் முதியவர் அபினியைப் பழக்கமாக உட்கொள்பவர் எனு

மிவர்களுக்குப் பால் அமுது போல் பத்தியமானது. பால் வைக்கப் படும் பாத்திரத்தால் தோன்றும் தன்மைகள்: தாமிர பாத்திரத்தில் வைத்த பால் வாதத்தையும் தங்கப் பாத்திரத்தில் வைத்த பால் பித்தத்தையும் வெள்ளிப்பாத்திரத்தில் வைத்த பால் கபத்தையும் போக்கும். இலேசானது. இரத்தத்தை மிகுதியாக்கும். பாத ரஸ பாத்திரத்தில் வைத்த பால் விந்துவை வளர்க்கும். குட்டத்தைப் போக்கும். கந்தக பாத்திரத்தில் வைத்த பால் இருமல் இழுப்பு க்ஷயம் ஆகியவற்றைப் போக்கும். அயக்காந்த பாத்திரத்தில் வைத்த பால் பல மடங்கு நன்மை தரும். மூன்று தோஷங்களையும் போக்கும். இரத்தத்தைத் தூய்மையாக்கி மிகுதிப்படுத்தும்.

பாலை பச்சையாகப்பருகினால் சுவை குறைந்திருக்கும். குருத்தன்மை கொண்டது. ஆமவிகாரம் அசீரணம் வாதம் என்பனவற்றை வளர்க்கும். காய்ச்சியபால் தாபத்தையும் சளியையும் போக்கும். சடராக்னியையும் விந்துவையும் வலிமையையும் வளர்க்கும். காய்ச்சிக் குளிர்ந்த பால் பித்தத்தைப் போக்கும். பாலில் பாதி அளவு நீர் சேர்த்து நீர்ப் பகுதி சுண்டும் வரை காய்ச்சிப் பயன்படுத்துவது நலம். இலேசானதாகும். பச்சைப்பால் நான்கு மணி நேரத்திற்குப்பிறகும் காய்ச்சிய பால் எட்டு மணி நேரத்திற்குப் பிறகும் கெட்டு நஞ்சாகும்.

கருநிறப்பசுவின் பால் பித்தத்தையும் சிவப்பு நிறப்பசுவின் பால் கபத்தையும் காராம்பசுவின் பால் மூன்று தோஷங்களையும் போக்குவதுடன் கண்களுக்குக் குளுமையும்தரும். விந்துவை மிகுதியாக வளர்க்கும். நீண்ட கொம்புகளைக் கொண்ட பசுவின்பால் முதியவர்களுக்கும் தாதுக்கள் குறைந்தவர்களுக்கும் நலம் தரும். இதயத்திற்கு வலிமை தரும். கொம்பு இல்லாத பசுவின் பால் பீனசம் (நாள்பட்ட சளி) எனும் நோயைத் தோற்றுவிக்கும். வாதபித்தங்களைப் போக்கும். விந்துவை வளர்க்கும் பிண்ணாக்கைத் தின்ற பசுவின் பால் குருத்தன்மை கொண்டு கபத்தை வளர்க்கும். வயிற்று வலியைத் தோற்றுவிக்கும். பருத்திக் கொட்டை தின்ற பசுவின்பால் வாதத்தை வளர்க்கும், அபத்தியமானது. வைக்கோலைத்தின்ற பசுவின் பால் மூன்று தோஷங்களைப் போக்கும். பச்சைப்புல்லை மேய்ந்த பசுவின் பால் தோஷமற்றதாகும். கழுநீரைப்பருகிய பசுவின் பால் சளியைத் தோற்றுவிக்கும்.

**(5) பசுந்தயிர்**

இனிப்புத் தயிர் நீரிழிவையும் பித்தத்தையும் அழற்சியையும் தணிக்கும். சிறிது உடற்சூட்டை வளர்க்கும். உடலுக்குப் பொலிவையும் வலிமையையும் சடராக்னி வளர்ச்சியையும் தரும். வாதபித்தங்களைத் தணிக்கும், கபத்தையும் வளர்க்கும்.

**(6) பசுவெண்ணெய்**

பசுவெண்ணெய் ஆயுளையும் விந்துவையும் வளர்க்கும். தாதுக்களைச் செழிப்புறச் செய்யும். குளுமையானது மூன்று தோஷங்களையும் போக்கும். வாதபித்தங்களையும் கண்நோய்களையும் தணிக்கும்.

**(7) பசுமோர்**

பசுமோர், சிறிது துவர்ப்புச் சுவையுடன் கூடிய இனிப்புச் சுவை கொண்டிருக்கும். குளுமை தரும். மேகநோய் பித்தம் எனும் இவற்றைத் தணிக்கும். செரிமானத்தைத் தூண்டும். சுவையூட்டும். சடராக்னியை வளர்க்கும். ஆமாதிசாரம் உப்புசம் கிரஹணி சோகை நீரிழிவு குன்மம் பெருவயிறு மூலநோய் காமாலை பித்தம் நாள்பட்ட காய்ச்சல் சுவைஇன்மை இருமல் க்ஷயம் சீதபித்தம் முதலிய நோய் கொண்டவர்களுக்கு மிகவும் பத்தியமாகி எளிதில் செரிமானமாகும். மோர் எவ்வகை நோய் கொண்டவர்களுக்கும் பத்தியமாகும்.

**(8) பசுநெய்**

மூன்று தோஷங்களையும் போக்கும். தாதுக்களையும் சிறப்பாக இரத்தத்தையும் விந்துவையும் வளர்க்கும். வாதபித்தத்தைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். சிறுவர்களுக்கும் முதியவர்களுக்கும் மிகவும் நன்மை தரும். மலத்தை எளிதில் போக்கும். பைத்தியம் சோகை நஞ்சு வயிற்றுவலி அக்கி முதலிய நோய்களால் துன்பமடைந்தவர்களுக்கும் நெருப்புச்சூடுபட்ட உடலுடையவர்களுக்கும் உடலில் காயம் பட்டுள்ளவர்களுக்கும் மிகவும் பத்தியமானது. ஆயுளை வளர்க்கும். புத்துருக்குநெய் மிகவும் நன்மை தரும். நெய்யைப் பூசிக்குளித்தால் தலை கண் முதலிய உறுப்புகளுக்கு நன்மையுண்டாகும். உடல் நலமும் மிகும்.

**(9) பசுவின் சிறுநீர்**

உவர்ப்புச் சுவையும் நெடியும் கொண்டது. பித்தத்தை வளர்க்கும். கபத்தைப் போக்கும். பசியைத்தூண்டும். சட

ராக்னியை வளர்க்கும். குட்டம் உப்புசம் சோகை குன்மம் வயிற்றுவலி இருமல் இழுப்பு நீர்ச்சுருக்கு மூலநோய் காய்ச்சல் வாதம் கிருமி முதலிய நோய்களைப் போக்கும். பேதியாகச் செய்யும். உடலில் சூட்டைத் தங்கச் செய்யும். மலம் சிறுநீர் தடைபடுவதைப் போக்கும்.

## (10) பசுஞ்சாணம்

கெட்ட நாற்றத்தைப் போக்கும். பைத்திய நோயைத் தணிக்கும். நச்சுக் காற்றினால் தோன்றக் கூடிய கேடுகளை நீக்கும்.

## 4. உடும்பு

உடும்பின் புலால் இலேசானது. சுவையூட்டும். சோர்வு பித்தவாதம் வயிற்றுவலி கபம் ஆகியவற்றைப் போக்கும். உடலையும் விந்துவையும் வளர்க்கும். இடுப்புக்கு வலிமை தரும். நஞ்சுகளைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். உடலைத் திடமாக்கும். இரத்தத்தைத் தூயதாக்கும். பால்வினை நோய்களைப் போக்கும். உலர்ந்த உடும்பின் புலால் அல்லது நெய்யில் பக்குவம் செய்யப்பட்ட இதன் புலாலைக்கொண்டு தயார் செய்யப்பட்ட இலேகியம் க்ஷயநோயைப் போக்கும். உடும்பின் புலாலை மிகுதியாக உண்பதால் தோன்றும் அசீரணத்தைப் போக்கும் முறிப்பு பொருள் நல்லெண்ணெய் ஆகும்.

## 5. எருது

எருதின் புலால், பசுவின் புலாலைப் போன்ற தன்மைகளையே கொண்டது.

## 6. எருமை

## (1) எருமைப்பால்

சுவையானது. வலிமை உடற்செழிப்பு விந்து வளர்ச்சி தருவதுடன் விந்துவுக்குக் குளுமையும் தரும். பித்தம் மூர்ச்சை இரத்தபித்தம் ஆகியவற்றைப் போக்கும். நெருப்பின் சூட்டினால் துன்பமடைந்தவர்களுக்கும், மிகுதியாகத் தூக்கத்தை விரும்புவர்களுக்கும், கலவியால் உடல் களைத்தவர்களுக்கும், உடல் இளைத்தவர்களுக்கும் மிகவும் நன்மை தரும். சடராக்னியையும் அறிவாற்றலையும் குறைக்கும். அசீரணம் கபம் எனும் இவற்றை வளர்க்கும். வயிற்று வலியையும் சிறுநீர்ப்பையில் கற்களையும் தோற்றுவிக்கும். இதற்குத் தேன் சர்க்கரை

இந்துப்பு சங்கபஸ்பம் வறுத்த மீன் எலுமிச்சம்பழச்சாறு என்பன முறிப்புகளாகும்.

### (2) எருமைத்

மிகுதியாக எண்ணெய்ப்பசை கொண்டு சுவைமிகுந்திருக்கும். உடற்செழிப்புக்கும் விந்து வளர்ச்சிக்கும் ஏற்றது. காமாலை பெரும்பாடு என்னும் நோய்களைத் தணிக்கும். வாத பித்தங்களை வளர்க்கும். சடராக்னியின் வலிமையைக் குறைக்கும்.

### (3) எருமைச்சாணம்

குளுமை தரும், காமாலை நெருப்பால் சுட்ட எரிச்சல் மேகநோயால் தோன்றிய விரணங்கள் சொறிசிரங்கு எனும் இவற்றைப்போக்கும். எரிச்சலைத் தணிக்கும். காமாலை நோய்க்கு இதன் சாற்றை வடிகட்டித் தேன் கலந்து இரண்டு துலாம் எடை காலைவேளையில் ஐந்தாறு நாட்கள் உட்கொள்ளச் செய்தால் நோய் குணமாகும்.

### (4) எருமையின் சிறுநீர்

உடலில் சூட்டையும் பித்தத்தையும் வளர்க்கும். முளைகள் கொண்ட மூல நோய் வயிற்றுநோய் வயிற்றுவலி காமாலை குன்மம் சோகை கிருமி குட்டம் காலரா உப்புசம் எனும் நோய்களைப் போக்கும். காலைவேளையில் மட்டும் நான்கு முதல் பன்னிரண்டு துலாம் எடைவரை உட்கொள்ளச் செய்க.

## 7. ஒட்டகம்

### (1) ஒட்டகத்தின் புலால்

சூட்டை வளர்க்கும். கபம் வாதம் சிறுநீர்ப்பெருக்கு ஆகியவற்றைப் போக்கும்.

### (2) ஒட்டகத்தின் பால்

சடராக்னியை வளர்க்கும். கீழ்நோக்கிச் செல்லும் வாதம் உப்புசம் நஞ்சு கிருமி குட்டம் குன்மம் பெருவயிறு ஆகிய நோய்களைப் போக்கும்.

### (3) ஒட்டகத்தின் சிறுநீர்

கார்ப்புச்சுவை கொண்டது. சூட்டை மிகுதியாக்கும். மண்டலக் குட்டம் படை எனும் இவற்றைப் போக்கும்.

### (4) ஒட்டகச் சாணம்

இழுப்பு கால்கைகளில் பரவும் சாகாவாதம் எனும் வாத நோயைப் போக்கும்.

### (5) ஒட்டகத்தின் வெண்ணெய்

உப்புசம் வாதம் கபம் கிருமி அரிப்பு மலக்கட்டு சிறுநீர்த் தடை இருமல் மூச்சுப்பையில்வலி மூலநோய் ஆகியவற்றைப் போக்கும்.

## 8. ஓநாய்

ஓநாயின் இறைச்சி உப்புசம் சிறுநீர்த்தடை கிரஹணி எனும் நோய்களைத் தடுக்கும். வாதத்தையும் கபத்தையும் போக்கும். வலிமை தரும. சடராக்னியை வளர்க்கும் ஓநாயின் புலாலைத் தின்று இதன் கொழுப்பிலிருந்து எடுத்த எண்ணெயை உடல் மேல் தேய்த்தால் பக்கவாதம் நீங்கும். உடலில் சூட்டை மிகுதியாக்கும். இதன் புலாலை மிகுதியாக உண்பதால் தோன்றும் தீங்குக்கு முறிப்புப் பொருள் இலவங்கப்பிசின் அல்லது இலவமரத்து இலை.

## 9. கழுதை

### (1) கழுதைப்பால்

எளிதில் செரிமானமாகும். மிகவும் சூட்டைக் கிளப்பித் தணிக்கும். வாதத்தைப் போக்கும். குழந்தைகளுக்குத் தோன்றும் கரப்பான் என்னும் விரணம், விட்டு விட்டு வரும் காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும். இதற்குச் சர்க்கரைப் பானகம் பன்னீர் என்பன முறிப்புகளாகும்.

### (2) கழுதை இலை

சுவையற்றது சூட்டை மிகுதியாககும. பைத்தியம் கால் கைவலி பித்தநோய்கள் கு டம் கிருமி என்பனவற்றைப் போக்கும்.

### (3) கழுதைச்சாணம்

இதன் சாற்றைப் பருகச் செய்தால் குழந்தையைப் பெற்ற நங்கையின் கருப்பையில் தங்கிய கெட்ட ரத்தத்தை அது வெளியேற்றும். இநதச சாணத்தைச் சிறிது சூடாக்கி அடி வயிற்றின்மேல் வைத்துக்கட்டினாலும் பிள்ளை பெற்றவளின்

கருப்பையில் தங்கிய கெட்ட இரத்தம் வெளியேறும். அடி வயிற்றில் தோன்றும் வலியைப் போக்கும்.

## 10. கஸ்தூரி

)மயமலைப்பகுதியிலுள்ள ஒருவகை மானின் தொப்புளி லிருந்து எடுக்கப்படுவதாகும். இது மிருகநாபி என்று வடமொழி யில் கூறப்படுகிறது. கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. சூட்டை மிகுதியாக்கும். நறுமணம் கொண்டதாம். மூன்று தோஷங்களையும் போக்கும். உடல்வலிமை விந்துவளர்ச்சி உடற்பொலிவு ஆகியவற்றை மிகுதியாக்கும். அரிப்பு கபம் உறுப்புகள் உலர்ந்து போதல் சிலேத்துமரத்தம் வாதரத்தம் க்ஷயம் ஸர்வாங்கவாதம் உப்புசம் நஞ்சு இருமல் தோல்நோய்கள் விந்து குறைவு முதலியவற்றைப் போக்கும். வயிறு மண்ணீரல் கல்லீரல் மூளை ஆகிய உறுப்புகளுக்கு வலிமை தரும். பக்க வாதம் முதலிய பல வாத நோய்களைப் போக்கும். சட ராக்னியைத் தூண்டும். துணை மருந்தாகக் கொடுத்தால் மருந்தை விரைவில் செயல் படுத்தச் செய்யும். மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் சளி தலைவலி விலாவலி என்பன வற்றைப் போக்கும். பச்சைக் கர்ப்பூரம் குங்குமப்பூ என்பன வற்றுடன் சேர்த்துத் தலைக்குப் பற்றாகப் போட்டால் தலை வலி நீங்கும். மேலும் பல துன்பங்களைப் போக்கி நன்மை தரும். மிகுதியாகப் பயன்படுத்தினால் இரத்த பித்தம் கண் நோய் மலக்கட்டு முதலிய துன்பங்களை விளைவிக்கும். இதற்கு முறிப்புகள் (1) பச்சைக் கர்ப்பூரம் (2) மூங்கிலுப்பு (3) சந்தனம் (4) பன்னீர் (5) சர்க்கரை கலந்த பசுநெய் (6) நெல்லிக்காய்ச் சாறு என்பன.

## 11. காடை

இதன் புலால் சடராக்னியைத் தூண்டும். உடலில் பட்ட காயம் இழுப்பு இருமல் காய்ச்சல் இரணம் எனும் இவற்றைத் தீர்க்கும். இப்புலாலை மிகுதியாக உண்பதால் தோன்றும் அசீரணத்திற்குப் பூசணிவேர்த்தூள் ஸௌவர்ச்சலலவணம் கலந்த நீர் முறிப்புப் பொருள்களாகும்.

## 12. காண்டாமிருகம்

இதன் புலால் கபத்தையும் வாதத்தையும் போக்கும். உடல் நிலையைச் சீராக்கும். இதன் கொம்பினால் செய்த பாத்திரத்தில் வைத்த நஞ்சுகலந்த உணவை உண்டால் அந்நஞ்சு உடலில்

பரவாது. பித்தத்தைச் சற்று வளர்க்கும். ஆயுளை வளர்க்கும். சிறுநீர்த் தடையைப் போக்கும். இப்புலாலை நெய்யில் பக்குவம் செய்து அந்த நெய்யை உடலின் மேல் பூசினால் விஷக்காய்ச்சல் தணியும். இதன் கொம்பால் செய்த பாத்திரத்தால் நீரைப் பருகினால், மூலநோய் மற்றும் பல நோய்கள் தீரும். இதன் கொம்பைப்புகை போட்டால் மூலநோய் தணியும்.

## 13. கீரி

இதன் புலால் இருமல் இழுப்பு கிருமி நோய்களைத் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும். பித்தத்தையும் கபத்தையும் வளர்க்கும்.

## 14. குதிரை

### (1) குதிரைப்பால்

உவர்ப்பு புளிப்புச் சுவைகளைக் கொண்டது. சடராக்னியை வளர்க்கும் வாதத்தையும் மூச்சு விடுதலையும் அதிகப்படுத்தும். இலேசானது விந்துவை வளர்க்கும். சிறிது மயக்கத்தைத தரும. பன்னிரண்டு வயதுக்குக் குறைந்த சிறுவர்களுக்கு 5 அல்லது 6 நாட்கள் விடாது இதைப் பருகத்தந்தால் அம்மை நோய் வராது.

### (2) குதிரையின் புலால்

குருத்தன்மை கொண்டது. உடலுக்கு வலிமை தரும். கபத்தை வளர்க்கும். வாதபித்தநோய்கள் கொண்டவர்களுக்கு இதமானது; விந்துவை வளர்க்கும்.

இதன் தொடையில் உள்ள நுரை போன்ற கொழுப்பைப் பெண்களின் அக்குளில் பூசினால், அங்கு உரோமங்கள் வளரா. பெண் குதிரையின் குளம்புத்துகளைப் பெண் உறுப்பிற்குப் புகையாகப் பிடித்தால் கருப்பையில் இறந்த பிண்டம் வெளிவந்து விடும்.

### (3) குதிரைச்சாணம்

இதன் சாற்றுடன் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இழுப்பு இருமல் வயிற்றுவலி நீங்கும். குருத்தன்மை கொண்டது. மூக்குத் துளைகளில் இதைச் சொட்டாக விட்டால் இரத்தம் வெளியேறுவது நிற்கும். காயங்கள் வெட்டுக்காயங்கள்மேல்

தடவினால் அடையாளம் தெரியாமல் ஆறும். பிள்ளை பெற்றவுடன் பருகச் செய்தால் கெட்ட இரத்தம் நன்கு வெளியேறும்.

## 15. குருவி

இதன் புலால் பித்தத்தையும் க்ஷயத்தையும் காய்ச்சலையும் தணிக்கும். விந்துவை வளர்க்கும். சடராக்னியைத் தூண்டும். இதன் முட்டை உடல்சூட்டை வளர்க்கும். நரம்பு நோய்களையும் உப்புசத்தையும் பக்கவாதத்தையும் தணிக்கும். சூடு கொண்ட உடல் உள்ளவர்களுக்குத் தீங்கு விளைவிக்கும். இதற்கு முறிப்பு பொருள் புளியாகும்.

## 16. கோரோசனம்

பசுவின் பித்த கோசத்தில் கட்டியைப் போல் இருப்பது கோரோசனம் எனப்படும். பித்தத்தையும் சூட்டையும் வளர்க்கும். குளுமையால் தோன்றும் துன்பம் நஞ்சு, பித்தத்தால் தோன்றும் நினைவிழத்தல் கிருமி வாதம் கபபித்தம், பூதத்தின் செயலால் தோன்றும் காய்ச்சல் எனும் இவற்றைப் போக்கும். விந்துவை வளர்க்கும். குழந்தைகளின் அசீரணத்தைப் போக்கும். சடராக்னி குறைவைப் போக்கும். நரம்புகளுக்கு வலிமை தரும். உடலை வியர்க்கச் செய்யும். குழந்தைகளுக்குத் தாய்ப்பாலுடனோ சீரகச் சாற்றுடனோ பருகத்தந்தால் விஷக் காய்ச்சல் தீரும். பாம்பு தேள் கடிகளில் இதை அரைத்துப் பூசினால் நஞ்சு முறியும். மிளகுச் சாற்றுடன் பருகத்தந்தால் காலரா நீங்கும். பசு நெய்யுடனோ பசுவெண்ணெயுடனோ கோரோசனத்தை நன்கு அரைத்துக் கலந்து காலின்மேல் நன்கு தேய்த்தால் நரம்புகள் வலிமைபெற்று நடக்கும் வலிமையை உண்டாக்கும்.

## 17. கோழி

### (1) முட்டை

கோழி முட்டை சுவையானது. பித்தத்தைத் தணிக்கும். உடல் வலிமையையும் விந்து வளர்ச்சியையும் தரும். இரத்தத்தை வளர்க்கும். நோயினால் உடல் வலிமை குன்றியவர்களுக்கு இரத்தத்தை வளர்க்கும். குடல் மார்பு சிறுநீர்ப்பை எனும் இவற்றைத் தூய்மைப்படுத்தும். சிறுநீரகம், சிறுநீர்ப்பை எனும் இவற்றில் தோன்றும் இரணத்தைப் போக்கும். குரலைச் சீராக்கும். ஆண்மையை வளர்க்கும். மூங்கிலுப்புடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்த மூலம் பேதி எனுமிவை தணியும். நெருப்

பாலும் சுடு நீராலும் சுட்ட இடங்களில் தடவினால் எரிச்சல் தணியும். புண்ணும் ஆறும். இதை மிகுதியாகப் பயன்படுத்தினால் சிறுநீரகத்துள் கல் தோன்றும். உடற் பொலிவு கெடும். உடலின் மேல் வெள்ளைத் தழும்புகள் தோன்றும். பொதுவாகக் கோழியின் முட்டை வாதத்தையும் கபத்தையும் வளர்க்கும். கிரஹணி நோயைத் தோற்றுவிக்கும். வயிற்றில் நீர் தங்கியுள்ளவர்களுக்குக் கேடு விளைவிக்கும். *(1)* மிளகாய் *(2)* இலவங்கப்பட்டை *(3)* சூடான உடல் கொண்டவர்களுக்குப் புளிக்காடி *(4)* வாதம் மிகுந்த உடல் கொண்டவர்களுக்குக் கற்கண்டு ஆகியவை இதற்கு முறிப்பு பொருள்களாகும்.

## (2) சேவலின் புலால்

கூவும் வலிமை பெறாத சேவலின் புலால் நல்ல உணவாகும். தூயஇரத்தத்தைத் தோற்றுவிக்கும். வாதம் வயிற்றுவலி ஆகியவற்றைப் போக்கும். உடல் வலிமைகுன்றியவர்களுக்கு நன்மை தரும். இளம் பருவத்தில் உள்ள சேவலின் புலால் உடற்பொலிவையும் வலிமையையும் தரும். விந்துவை வளர்க்கும். முதிர்ந்த பருவத்தில் இருக்கும் சேவலின் புலால் சூட்டை மிகுதியாக்கும். பித்தத்தையும் கபத்தையும் வளர்க்கும். அபத்தியமானதாகும். இதற்குப்புளி புளிக்காடி எனுமிவை முறிப்புகளாகும்.

பெட்டைக்கோழியின் புலாலை நன்கு பக்குவம் செய்தால் எண்ணெய்பசை மிகுந்து சுவையாக இருக்கும். குருத்தன்மை கொண்டது. வாதத்தையும் கபத்தையும் தணிக்கும். கண்களுக்கு நன்மை செய்யும். விந்துவை வளர்க்கும். நல்ல இரத்தத்தைத் தோற்றுவிக்கும். மிகவும் முதுமையடைந்த பெட்டைக்கோழியின் புலால் வயிற்றை மென்மையாக்கும். வயிற்று வலியைப் போக்கும். கோழிக்குஞ்சின் புலால் நோயின் தாக்குதலால் வலிமைகுன்றியவர்களுக்கு நன்மை செய்யும்.

## 18. கௌதாரி

இதன் புலால் காடையின் புலாலைப் போன்றதே.

## 19. சக்ரவாகம்

இதன் புலால் சூட்டை மிகவும் வளர்க்கும். வாதத்தைப் போக்கும். சடராக்னியைத் தூண்டும்.

## 20. சகோரப்புள்

இதன் புலால் கொழுகொழுப்பை மிகுதியாகக் கொண்டிருக்கும். உடல்வலிமை செழிப்பு சூடு எனும் இவற்றை வளர்க்கும். வாதத்தைப் போக்கும்.

## 21. சபரி

பொதுவாக மீன்கள் உடல்வலிமை விந்து வளர்ச்சி என்பனவற்றையுண்டாக்கும். கப நோய்களையும் பித்தநோய்களையும் தீர்க்கும். சூட்டை வளர்க்கும். ஆறுகளில் தோன்றிய மீன்கள் வாதத்தைப் போக்கும். கிணற்று மீன்கள் விந்துவை வளர்க்கும். கப நோயையும் அஷ்டீலா எனும் வாதநோயையும் நீர்ச்சுருக்கு மலத்தடைகளையும் தோற்றுவிக்கும். ஏரியில் தோன்றிய மீன்கள் குருத்தன்மை கொண்டவை. குளுமையையும் விந்து வளர்ச்சியையும் தரும். வலிமையைத் தோற்றுவிக்கும். நீர்ச்சுருக்கைப் போக்கும். கடல் மீன்கள் பித்தத்தை மிகுதியாகத் தோற்றுவிக்காமல் வாதத்தைப் போக்கும். மலக்கட்டைத் தோற்றுவிக்கும்.

## 22. சிங்கம்

சிங்கத்தின் புலால் உப்புசம் மலக்கட்டு சிறுநீர்த்தடை மூலநோய் கிரஹணி எனும் இவற்றைப் போக்கும். இதன் தோலைப் புகை போடுவதால் ஒரு வகை மூர்ச்சை வாதம் குட்டம் அரிப்பு விரணம் உடற்பருத்தல் கழுத்து நோய்கள் எனுமிவை நீங்கும்.

## 23. செம்மறியாடு

### (1) செம்மறியாட்டின் புலால்

இதன்புலால் குருத்தன்மை கொண்டது. மூன்று தோஷங்களை வளர்க்கும். மூலநோய் கிரஹணி ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். உடலில் கொழுப்பை மிகுதியாக்கும். கபத்தையும் பித்தத்தையும் வளர்க்கும். விந்துவைக் கெடுக்கும். அபத்தியமானது. இதற்கு முறிப்புகள் (1) உப்பு (2) புளிக்காடி (3) கடுகுத்தூள் (4) மாங்காய்ப்பருப்பு (5) வெந்நீர் (6) ஜாதிக்காய் என்பன.

### (2) செம்மறியாட்டின் பால்

இதன்பால் சிறிது உவர்ப்புச் சுவையுடன் இனிப்புச் சுவை கொண்டிருக்கும். நன்கு காய்ச்சி உட்கொண்டால் உடலைச் செழிப்பாக்கும். விக்கல் வாதம் இழுப்பு ஆகியவற்றைப் போக்கும். விந்துவுக்குச் சூடு தரும். வாத நோய் கொண்டவர்களுக்கும் உடலில் இரத்தம் மிகுந்துள்ளவர்களுக்கும்

வெறிகொண்டவர்களுக்கும் நன்மை தரும். இதன் பாலைக் (பச்சையாக) காய்ச்சாமல் உட்கொண்டால் நோய்களைத் தோற்றுவிக்கும். தலைக்கும் நரம்புகளுக்கும் தீங்கு விளைவிக்கும். இதற்கு முறிப்புகள் (1) தேன் (2) சர்க்கரை (3) மோர் (4) எலுமிச்சம்பழச்சாறு (5) வறுத்த மீன் என்பன.

**(3) செம்மறியாட்டு நெய்**

வாதம் உப்புசம் கைகால்களில் நடுக்கம் கபவாதம் பெண்குறி நோய்கள் நஞ்சு முதலியவற்றைத் தணிக்கும். பித்தத்தையும் கபத்தையும் வளர்க்கும். முறிப்புகள் 1. சுடுநீர் 2. எலுமிச்சம்பழச்சாறு 3. மிளகு 4. புளிப்புமோர் 5. ஆரஞ்சுப்பழம் என்பன.

**(4) செம்மறியாட்டின் மோர் தயிர் வெண்ணெய்**

செம்மறியாட்டின் மோர் தயிர் வெண்ணெய் எனயாவும் பல நோய்களைத் தோற்றுவிக்கும் அபத்தியங்களாகும்.

**(5) செம்மறியாட்டின் சிறுநீர்**

கார்ப்புச்சுவை மிக்கது. கபவாதம் வயிற்றுவலி பெருவயிறு சிறுநீர்த்தடை மலக்கட்டு கிருமி அரிப்பு ஆகியவற்றைப் போக்கும். சூட்டை வளர்க்கும்.

**24. தித்திரிப்புள்**

இதன் புலால் வாதம் பித்தம் ஸந்நிபாதம் கிரஹணி நோய்களைப் போக்கும். சடராக்னியையும் விந்துவையும் வளர்க்கும், குருத்தன்மை கொண்டது.

**25. நரி**

இதன் புலால் மூன்று தோஷங்களையும் போக்கும். உடலை வளர்க்கும். உப்புசம் மலக்கட்டு சிறுநீர்த்தடை மூலநோய் கிரஹணி ஆகியவற்றைப் போக்கும். இதன் தோலைப் புகை போடுவதால் பிசாசுகளால் தோன்றும் துன்பம் நீங்கும். இதற்கு எள்எண்ணெய் முறிப்பாகும். நரியின் புலாலை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி அந்த எண்ணெயை இடுப்பில் தடவினால் இரத்தப்போக்குடன் கூடிய மூலநோய் நீங்கும்.

**26. பன்றி**

**(1) காட்டுப்பன்றி**

இதன் புலால் எளிதில் செரிமானமடையும். எண்ணெய்ப் பசை கொண்டு சுவை மிகுந்திருக்கும். குருத்தன்மை கொண்ட

த்ரம். உடல் பொலிவு வலிமை மிகச் செய்யும். க்ஷயம் பைத்தியம் என்பனவற்றைப் போக்கும். விந்துவை வளர்க்கும். உடலை வியர்க்கச் செய்யும். சிறுநீரைப் பெருக்கும். மிகுதியாக உண்பதால் கெட்ட வ்ரணத்தைத் தோற்றுவிக்கும். மூர்ச்சை நோயாளிகளுக்குத் தீங்குவிளைவிக்கும். இதற்கு முறிப்புகள்: யவக்ஷாரம் மோர் புளித்த பழையசோற்று நீர். காட்டுப் பன்றியின் மயிர்களைக் கொண்டு புகை போடுவதால் பிசாசுகளால் தோன்றும் துன்பம் நீங்கும்.

**(2) காட்டுப்பன்றி நெய்**

சுவையானது விந்து வளர்ச்சிக்கேற்றது. ஆண் குறிக்கு வலிமை தரக்கூடியது. உடைந்த உடலுறுப்புகளையும் இணைக்க வல்லது. குளுமையையும் வாதத்தையும் போக்கும். உடலின் மேல் தேய்ப்பதால் நரம்புகள் வலிமை பெறும்.

**(3) ஊர்ப்பன்றி**

இதன் புலால் எண்ணெய்ப்பசை கொண்டு சுவையாக இருக்கும். பேதியாகச் செய்யும். உடல் வலிமையை வளர்க்கும். பித்தத்தைத் தணிக்கும். குருத்தன்மையானது. சடராக்னியின் வலிமையைக் குறைக்கும். கபத்தை வளர்க்கும். அபத்தியமானது. இதற்கு முறிப்புகள்: புளிப்புக்காடி வேலம்பட்டைச் சாறு யவக்ஷாரம் பழைய சோற்றின் புளித்த நீர் மோர் ஆகியவையாம். இதன் கொழுப்பு விரணங்களின் மேல் போடும் பட்டை (பிளாஸ்திரி) தயார் செய்யப்பயன்படும். மூலநோயைத் தணிக்கும்.

**27. பிதாரிப்புள்**

இதன் புலால் சடராக்னியை வளர்க்கும். உடலில் பட்ட காயம் க்ஷயம் இழுப்பு இருமல் காய்ச்சல் விரணம் ஆகியவற்றைப் போக்கும். இதற்கு பூசணிவேர்த்தூள் ஸௌவர்ச்சலலவணம் வ்விரண்டும் கலந்த நீர் முறிப்பாகும்.

**28. புலி**

ன் புலால் உவர்ப்புச்சுவை மிக்கது. சூட்டையும் கபத்தையும் வளர்க்கும். அறிவைத் தெளிவுபடுத்தும். வாதம் பித்தம் மூலநோய் உப்புசம் மலக்கட்டு சிறுநீர்த்தடை கிரகணி ஆகியவற்றைப் போக்கும். இந்தப்புலாலைக் கடுகெண்ணெயில் பக்குவம் செய்து அந்த எண்ணெயை உடலிற் பூசினால் இரத்தமும்

மாமிசமும் சுண்டி இளைத்த உடல் மறுபடியும் இரத்த மாமிசங் களுடன் செழிப்பு அடையும்.

**புலிக் கொழுப்பு**

புலியின் கொழுப்பைப் பசுநெய் அல்லது ஆமணக்கு எண்ணெயுடன் கலந்து வாதத்தினாலும் மேகவாதத்தினாலும் அசைவற்றுப்போன காலுக்குப் பூசினால் கால் மறுபடியும் வலிமை பெறும். நடக்கும் திறனைப்பெறும்.

**29. புறா**

இதன் புலால் சுவையானது. சூட்டைவளர்த்துத் தணிக்கும் பித்தவாதம் இரத்த பித்தம் விஷக்காய்ச்சல் வயிற்றுவலி பக்க வாதம் உப்புசம் ஆகியவற்றைப் போக்கும். விந்துவை வளர்க்கும். ஆண்மையைத் தரும். இயற்கையாக உடற்சூடு மிகுந்துள்ளவர் களுக்குத் தலைவலியைத் தோற்றுவிக்கும். புளிக்காடி திராட்சைப் பழச்சாறு பூசணிவேர்த்துகளும் ஸௌவர்சலலவணமும் கலந்துள்ள நீர் ஆகியவை இதற்கு முறிப்புகள் ஆகும்.

இதன் எச்சத்தை உலர்த்தி சிறிதளவு தேனில் குழைத்து உட்கொள்ளச் செய்தால் பக்கவாதம் முகம் கோணுதல் ஆகியவை தணியும். மேற்படி நோய் கொண்ட உறுப்பின் மேல் இதன் இரத்தத்தைப் பூசுவதால் நல்ல பயன் விளையும்.

**30. பூனை**

**(1) பூனையின் புலால்**

பூனையின் புலால் நஞ்சு கிருமி ஆஸனவாய் நோய் ஆகியவற்றைப் போக்கும்.

**(2) பு**

இது ஒரு வகைப் பூனையின் உடலில் சுரக்கும் மதநீர் கெட்டிப்படுவதால் தோன்றியதாகும். நறுமணமுள்ளது. எழுச்சியைத் தோற்றுவிக்கும். இரத்தபித்தம் வாதநோய் கபம் குட்டம் அரிப்பு கிருமிநோய் நஞ்சு ஆகியவற்றைப் போக்கும். வலியைத் தணிக்கும்.

**31. மயில்**

மயிலின் புலால் எண்ணெய்ப்பசை கொண்டு சுவையாக இருக்கும். பித்தத்தையும் இரத்தபித்தத்தையும் தணிக்கும். நஞ்சைப் போக்கும். கண் காது மூளை சடராக்னி வலிமை

பொலிவு குரல் ஆயுள் ஆகியவைகளுக்கு நன்மை செய்யும். கால்கைகள் முடங்கிப்போகும்நோயைத் தணிக்கும். வாதத்தையும் பக்கவாதத்தையும் தணிக்கும். விந்துவை வளர்க்கும். இதற்கு முறிப்புகள்:- பூசணிவேர்த்தூளும் ஸௌவர்ச்சல இலவணமும் கலந்த நீர், எலுமிச்சம்பழச்சாறு கலந்த சுக்கு, கடுக்காய்ப் பிஞ்சுடன் உப்பைச் சேர்த்து உண்ணுதல். பாம்புகளை உண்ணும் பழக்கமுள்ள மயிலின் புலால் எல்லாப் பருவங்களிலும் ஏற்கத்தக்கது. ஏனைய மயிலின் புலால் கார்காலத்தில் ஆனி ஆடி புரட்டாசி ஐப்பசி மாதங்களில் விலக்கத் தக்கது. மயிலின் கொழுப்பைத் தேய்த்தால் மூட்டுகளின் பிடிப்பு தீரும். மயிற்றோகையால் செய்த விசிறி குளுமை தரும். கண்களுக்கு நன்மை செய்யும். அழற்சி வாதம் பித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 32. மான்

மானின் புலால் இலேசானது. சுவை கொண்டது. மூன்று தோஷங்களையும் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும். குளுமை தரும். மலக்கட்டு சிறுநீர்த்தடை ஆகியவற்றை உண்டாக்கும். இதற்கு முறிப்புகள்: காடி புளி. இதன் புலாலுடன் கடுகு கொத்துமல்லிவிதை கலந்து காய்ச்சிய கஷாயம் வாத இரத்தத்தைப் போக்கும்.

## 33. மீன்

சூட்டைத் தணிக்கும். பித்தத்தையும் வாதத்தையும் போக்கும். வலிமையையும் விந்துவையும் வளர்க்கும். இயற்கையாக உடலில் சூடு மிகுந்துள்ளவர்களுக்கும் மிக்க உடலுழைப்பு செய்பவர்களுக்கும் நன்மை தரும். தாதுக்களுக்கு வலிமையுண்டாக்கும். பெண்களுக்குத் தாய்ப்பாலை மிகுதியாக்கும். சிறுநீரகத்தின் மேல் கொழுப்பை மிகுதியாக்கும். ஆண்குறிக்கு வலிமை தரும். இதயத்தைத் தூய்மைபடுத்தும். மேகநோயால் தோன்றும் இளைப்பு உப்புசம் ஆகியவற்றைப் போக்கும். மீனைக் கழுவிய நீர் பாம்பின் நஞ்சையும் உணவில் கலந்துள்ள நஞ்சையும் போக்கும். நாள்தோறும் இந்த நீரை உட்கொள்ளும் பழக்கம் கொண்டவனுக்குப் பாம்பின் நஞ்சு அல்லது வெறிநாய்க்கடி தீங்கு செய்யாது. கால்கைகளின் மூட்டுகளில் தோன்றும் வலியைப் போக்கும். சளிவாதநோய் கொண்டவர் வயிற்றிலும் நரம்புகளிலும் வாதம் மிகுந்துள்ளவர் பெருவயிறு கொண்டவர் ஆகியவர்கள் மீனை விலக்க வேண்டும். இதற்கு முறிப்புகள் நெய் வாதுமை எண்ணெய் தேன் குல்கந்து மாம்பழம்

பிரண்டை எள்எண்ணெய் தயிரின் மேலுள்ள தெளிவு இஞ்சி முரப்பா புளிக்காடி ஆகியவையாகும். மீன்எண்ணெய் விந்துவை வளர்க்கும். உடலை செழிப்புறச் செய்யும். க்ஷயத்தால் தோன்றிய இருமல் இளைப்பு ஆகியவற்றைப் போக்கும். பித்தத்தையும் உடல் சூட்டையும் மிகுதியாக்கும்.

## 34. முயல்

இதன் புலால் மென்மையும் சுவையும் கொண்டிருக்கும். விந்துவையும் உடற் பொலிவையும் வலிமையையும் வளர்க்கும். சடராக்னியைத் தூண்டும். வாதத்தைச் சிறிது மிகச் செய்யும். காய்ச்சல் கபம் பித்தம் மேகநோய் சொட்டுச்சொட்டாக சிறுநீர் வெளியாதல் இரத்தப் போக்குடன் கூடிய மூலநோய் விரணம் நரம்புச்சிலந்தி கண்ணில் தோன்றும் வாதம் எனப்படும் விரணம் ஆகியவற்றைத் தணிக்கும். இதன் காதிலிருந்து பெருகும் இரத்தத்தால் மூர்ச்சைநோய் நீங்கும். இதன் உடலிலுள்ள உரோமங்களைக் கொண்டு புகை போடுவதால் கிரகங்களால் தோன்றும் துன்பம் நீங்கும். இயற்கையாகச் சூடு மிகுந்த உடல் கொண்டவர்களுக்குத் தீங்கு விளைவிக்கும். இதற்குப் புளிக்காடி கஞ்சி என்பன முறிப்புகளாகும்.

## 35. முள்ளம் பன்றி

இதன் புலால் சூட்டை வளர்க்கும். ஸந்நிபாதம் ஆமநோய் இருமல் இழுப்பு அசீரணம் மக்கட்பேற்றின் போது தோன்றும் வாதம் என்பனவற்றைப் போக்கும்.

## 36. முதலை

இதன் புலால் எண்ணெய்ப்பசை மிகுந்து சுவையாக இருக்கும். பித்தத்தை மிகுதியாக வளர்க்கும். உடல் இளைத்தவர்களுக்கு வலிமையூட்டும். விந்துவிற்குக் குளுமைதரும். உப்புசத்தைத் தணிக்கும். மூன்று தோஷங்களையும் வளர்க்கும். இதற்கு முறிப்புகள் உப்பு காடி கடுகுத்தூள் மாங்கொட்டையினுள் இருக்கும் பருப்பு வெந்நீர், ஜாதிக்காய் என்பனவாகும். முதலையின் பித்தம் சூட்டை மிகுதியாக்கும். வாதம் ஸந்நிபாதம் ஸர்வாங்கவாதம் முதலிய நோய்களைத் தணிக்கும்.

## 37. யானை

*(1)* யானையின் புலால் : விந்துவுக்குச் சூட்டையும் உடல் நிலையான வலிவு பெறுவதையும் செய்யும். கபத்தையும்

வாதத்தையும் வளர்க்கும். இதற்குக் காடி கடுகுத்தூள் முறிப்பு களாகும். யானைப்புலாலைக் கடுகெண்ணெயில் இட்டுக்காய்ச்சி அந்த எண்ணெயைத் தடவி வந்தால் யானைக்கால்நோய் தீரும்.

(2) யானையின் சிறுநீர் : கசப்பும் உவர்ப்புமான சுவை கொண்டிருக்கும். பேதியாகச் செய்யும். உடலுக்கு வலிமை தரும். கால்களில் வெடிப்பைத் தோற்றுவிக்கும். குட்டம் உப்புசம் வாதப்பிடிப்பு ஆகியவற்றைப் போக்கும். இதன் சிறுநீரினால் க்ஷாரம்செய்து பயன்படுத்தினால் மண்டலக் குட்டம் நீங்கும்.

(3) யானைப் பால் : உவர்ப்புச் சுவையும் குருத்தன்மையும் கொண்டது. விந்துவை வளர்க்கும். மேகவாதத்தையும் கபத்தையும் போக்கும். கண்களுக்குக் குளுமை தரும். கால் கைகளில் பரவும் வாதத்தைப் போக்கும்.

(4) யானை நெய் : கசப்பும் துவர்ப்புமான சுவை கொண்டிருக்கும். உடலுக்குச் செழிப்பைத் தரும். வாதத்தையும் பித்தத்தையும் தணிக்கும். கபத்தை வளர்க்கும் நஞ்சைத் தீர்க்கும். குட்டம் கிருமி நோய் ஆகியவற்றைப் போக்கும். மலத்தைக் கட்டும். சிறுநீரைத் தடுக்கும்.

# 7. சில மருந்துப் பொருள்களின் தன்மைகள்

## 1. அகில்

நறுமணமும் கசப்புச் சுவையும் கொண்டது. கடுமையான கபம் வாதம் நஞ்சு மேகநோய் உடல் நாற்றம் மிகுதியாக வியர்த்தல் கண் காது நோய்கள் குட்டம் அக்கி விரணம் சோர்வு கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும். இதயத்திற்கு மிக்க நன்மை செய்யும். பேதி அதிசாரம் வாந்தி உணவு செரிக்காமையால் தோன்றும் பேதி தலைப்பளு பக்கவாதம் என்பனவற்றைத் தணிக்கும். உடலுக்கும் நரம்புகளுக்கும் வலிமையூட்டும்.

## 2. அக்ரோட்டு

இது ஒரு வகை காயினுள் இருக்கும் பருப்பாகும். சூட்டைக் கிளப்பி உடலிலுள்ள நீரை வற்றச்செய்யும். தாதுக்களுக்கும் வயிற்றுக்கும் வலிமை தரும். விந்துவை வளர்க்கும். குடலில் தோன்றும் திமிர்ப்பூச்சி எனப்படும் நுண்ணிய பூச்சிகளை

அழிக்கும். வயிற்றுக் கலக்கத்தைத் தணிக்கும். நினைவாற்றலை வளர்க்கும். ஆண்மையை மிகுதிப்படுத்தும். சீரண வலிமையைத் தரும். இதயம் மூளை தலையிலுள்ள புலன்கள் ஆகியவற்றிற்கு மிக்க வலிமை தரும். வயது முதிர்ந்தவர்களுக்கும் வலிமை தரும். திரதுட்டை சீமைஅத்திப்பழம் ஆகியவற்றுடன் உட்கொண்டால் சோர்வு நீங்கும். வாதநோய் கொண்டவர்களுக்கு நன்மை தரும். இயற்கையாக உடலில் சூடு மிகுந்துள்ளவர்களுக்குச் சூட்டை மிகச் செய்து துன்பப்படுத்தும். இதற்கு முறிப்புகள் (1) புளிப்பு மாதுளை (2) கசகசாப்பொடி கலந்த எலுமிச்சம் பழச்சாறு (3) உப்பு என்பன.

## 3. அதிமதுரம்

அதிமதுரத்தின் துகள்கஷாயம் இனிப்பாக இருக்கும். குளுமை விந்து வளர்ச்சி வலிமை கண்களுக்குக் குளுமை ஆகிய வற்றைச் செய்யும். வாயில் உமிழ் நீர் ஊறும்படி செய்யும். பித்தம் இரத்தபித்தம் வாதரத்தம் எரிச்சல் க்ஷயம் உப்புசம் மேகநோய் நஞ்சு வாந்தி ஆகியவற்றைப் போக்கும். தாய்ப்பாலை மிகுதி யாக்கும். இருமலையும் பால்வினை நோயையும் தணிக்கும். பேதியாகச் செய்யும்.

## 4. அதிவிடயம்

அதிவிடயத்தின் துகள் அல்லது கஷாயம் கார்ப்பு கசப்புச் சுவைகளைக் கொண்டிருக்கும். கபபித்தங்கள் சுவையின்மை வாந்தி இருமல் ஆமாதிஸாரம் விஷக்காய்ச்சல் அரிப்பு இதயநோய் காமாலை கிரகணி முதலிய நோய்களைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். குழந்தைகளுக்கு பேதியைத் தணிக்கவும் காய்ச்சலைப் போக்கவும் இதைப் பயன்படுத்தலாம். சந்தனம் போல் இதை அரைத்துப் பூசினால் வீக்கம் தணியும்.

## 5. அரிசித்திப்பிலி

எண்ணெய்ப்பசை கார்ப்புச்சுவை கொண்டதாகும். சூட்டை வளர்க்கும். பித்தத்தை மிகுதியாக்கும். சடராக்னி விந்து வலிமை என்பனவற்றை வளர்க்கும். சளி வாதம் காய்ச்சல் பாம்பின் நஞ்சு இருமல் விக்கல் மேல் மூச்சு வாங்குதல் சளியுடன் கூடிய க்ஷயம் ஆகியவற்றைப் போக்கும். பக்கவாதம் அடிபடுதலால் தோன்றும் சன்னி பிள்ளைப்பேற்றினால் தோன்றும்வாதம் ஆகியவற்றைத் தணிக்கும். கருப்பையிலிருந்து கெட்ட இரத்தத்தை வெளியேற்றும். கருவுற்றவள் அரிசித்திப்பிலியைப் பயன்

படுத்தினால் கருச்சிதைவு உண்டாகும். இதைச் சிறிது படுத்திப் பயன்படுத்த வேண்டும். இதற்கு முறிப்பு சுக்குத் துகள்கலந்த பழைய நீர்.

### 6. அரிதாரம்

நன்கு தூய்மை படுத்தப்பட்ட அரிதாரத்தின் பஸ்பம் சளி இரத்த வாதம் குட்டம் வாதம் விஷக்காய்ச்சல் எண்பது வகை வாத நோய்கள் கபம் பித்த நோய்கள் மூலநோய் ஆகியவற்றைப் போக்கும். பிசாசுச் செய்கையால் தோன்றும் துன்பம் நீங்கும். கருச்சிதைவை விளைவிக்கும். நன்கு தூய்மைபடுத்தாத அரி தாரத்தைப் பயன்படுத்துவதால் வாத நோய்கள் பித்த நோய் கள் கால்கள் செயலற்றுப் போதல் குட்டம் என்பன தோன்றும். இதற்குக் கழுநீர், ஸர்பாக்ஷிச்சாற்றில் சமஎடை சர்க்கரை கலந்து பருகுதல், சீரகத்தையும் சர்க்கரையையும் சமஎடையில் கொண்டு பயன்படுத்துதல், மாதுளம்பழச் சாறு என்பன முறிப்புகளாகும்.

### 7. அரேணுகம்

வட்டமான இலைகளையும வட்ட வடிவமுள்ள மலா களையும் கொண்ட ஒரு வகை மரத்தின் விதையாகும். மிளகைப் போல் கார்ப்பும் கசப்புமான சுவைகளைக் கொண்டிருக்கும். சீத பித்தம் எரிச்சல் அரிப்பு இருமல் கபம் வாதம் அதிஸாரம் காய்ச் சல் பைத்தியம் ஆகிய நோய்களைப் போக்கும். அறிவையும் சடராக்னியையும் வளர்க்கும். கருவைச் சிதைக்கும்.

### 8. அன்னபேதி

அன்னபேதியை எலுமிச்சம்பழச்சாற்றில் ஊறவைத்துச் சுடு நீரால் கழுவினால் அது தூய்மைபெறும். இது துவர்ப்பு இரும்புச் சுவைகள் கொண்டதாகும். சடராக்னியை வளர்க்கும். வாதம் கபம் குட்டம் காய்ச்சல் க்ஷயம் பாண்டு என்பனவற்றைப் போக்கும். இரத்தத்தைத் தூய்மைபடுத்துவதுடன் நல்ல ரத்தத்தை மிகுதிப்படுத்தும். தலை முடிகளுக்கு வலிமை தரும். மாதவிடாய் தடைபடுதல் இருமல் சடராக்னி குறைவு கிருமி நோய் ஆகியவற்றைத் தணிக்கும். நாள்பட்ட கெட்ட விரணங் களைப் போக்கும். சதையைத் தின்று விடும். கடுமையான விரணத்தின் மேல் அன்னபேதி கலந்த நீரை ஊற்றினால் நோய் தீரும். வயிறு குடல் இவற்றில் நோய் கொண்டவர்கள் இதைப் பயன்படுத்தக்கூடாது. தூய்மையற்ற அன்ன பேதியைப் பயன் படுத்தியதால் தோன்றிய துன்பங்களுக்குக் கழுதைச் சாணத்தின் சாறு முறிப்பாகும்.

## 9. ஆவாரம் பூ

குளுமைத் தன்மை கொண்டது. மேகநோய் கபம் நீரிழிவு கிரஹணி என்பனவற்றைப் போக்கும். ற்பொலிவைத் தரும். சிறுநீர்ப் பெருக்கைத் தணிக்கும்.

### ஆவாரம் பிசின்

துவர்ப்புச் சுவை கொண்டதாம். கிரகணி நீரிழிவு சிறுநீர்ப் பெருக்கு என்பனவற்றைப் போக்கும்.

### ஆவார விதை

இதன் துகள் துவர்ப்புச் சுவை கொண்டது. மேகநோய் நீரிழிவு நஞ்சு இரத்த அதிஸாரம் ஆகியவற்றைப் போக்கும்.

### ஆவாரப் பட்டை

ஆவாரமரத்தின் வேர்ப்பட்டையை அரைத்துத் தயிருடன் உட்கொள்ளச் செய்தால் கிரஹணி நீங்கும். ஆவாரப்பட்டை மேகநோயையும் சிறுநீர்ப்பெருக்கத்தையும் தணிக்கும். விந்துவை வளர்க்கும்.

## 10. இஞ்சி

இது சூட்டைக் கிளப்பித் தணிக்கும். கார்ப்புச்சுவை கொண்டது. மூன்று தோஷங்களையும் சிறப்பாகப்பித்த நோய்களையும் ஸந்நிபாதத்தையும் போக்கும். சடராக்னியை வளர்க்கும். வலிமை விந்து வளர்ச்சி உடற்செழிப்பு பொலிவு ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். சுவையூட்டும். மேகநோய் சோகை உப்புசம் குன்மம் வயிற்றில் கட்டி வலி சோர்வு சுவையின்மை பீநசம் தொண்டையிலும் மூக்கிலும் தோன்றும் நோய்கள் யானைக்கால் அசீரணம் நீர்ச்சுருக்கு மலக்கட்டு சிறுநீர்த் தடை இருமல் இழுப்பு ஆகியநோய்களைத் தணிக்கும். நினைவாற்றலை வளர்க்கும். கல்லீரலுக்கு வலிமை தரும். வயிற்றிலுள்ள வாதத்தைப் போக்கும். குடலிலுள்ள தூய்மையற்ற பொருளை நீக்கும். கிருமிகளை அழிக்கும். கபத்தினால் தோன்றிய எரிச்சலைப் போக்கும். பாதி வெந்த கோழி முட்டையுடன் இதை உட்கொண்டால் விந்துவை மிகுதிப்படுத்தும். இஞ்சியும் வெல்லமும் சம அளவில் கலந்து உட்கொண்டால் நாக்கு உள்ளங்கை உள்ளங்கால்களில் தோல் உரிதலும் சிறிது சிறிதாக மலம்வெளியேறுதலும் நீங்கும். இதற்குச் சந்தனம் வாதசரீரம் உள்ளவர்களுக்குப்பால் இயற்கையான சூடு மிகுந்

துள்ள உடல் கொண்டவர்களுக்கு வாதுமை எண்ணெய் சர்க்கரை தேன் என்பன முறிப்புகளாகும்.

## 11. இலவங்கப் பட்டை

நறுமணம் துவர்ப்பு கார்ப்பு இனிப்புச் சுவைகள் கொண்டது. உடலில் சூட்டை கிளப்பித் தணிக்கும். வயிற்றிலுள்ள வாதத்தை வெளியேற்றும். அசீரணம் கபம் வாதம் பித்தம் வாந்தி குன்மம் வயிற்று வலி இருமல் கிரகணி பேதி முதலியவற்றைத் தணிக்கும். உடலைத் தூய்மைபடுத்தும். நஞ்சைப் போக்கும். தலை இதயம் கல்லீரல் இவற்றின் வலிமையைக் காக்கும். கண்களுக்குப் பொலிவு தரும். தலையிலுள்ள வாதம் உப்புசம் ஆகியவற்றைப் போக்கும். விந்துவை வளர்க்கும். மாதவிடாய் இரத்தத்தைத் தூய்மைபடுத்தும் . சளி தலைவலி நரம்புச்சம்பந்தமான தலைவலி ஆகியவற்றிற்குப் பற்றாகப் போடலாம்.

## 12. இலவங்கோந்து

இது துவர்ப்புச் சுவை கொண்டது. மலத்தைக் கட்டக் கூடியது. கிரகணி இரத்த கிரகணி அதிஸாரம் பெரும்பாடு ஆகியவற்றைத் தணிக்கும். விந்துவை வளர்க்கும். விந்துவைக் கட்டும். கருவை நிலைக்க வைக்கும். வாதம் இரத்த தோஷம் பித்தத்தினால் தோன்றிய எரிச்சல் ஆகியவற்றைப் போக்கும். ஒரு மாதகாலம் இதனை உட்கொண்டால் பாதரஸத்தால் தோன்றிய துன்பம் நீங்கும்.

## 13. உளுந்து

இனிப்புச்சுவையும் எண்ணெய்ப்பசையும் கொண்டது. உடலில் சூட்டைக் கிளப்பும் பித்தத்தை வளர்க்கும். உடலுக்கு வலிமை தரும். விந்து வளர்ச்சிக்கு ஏற்றது. பேதியாகச் செய்யும். கபத்தையும் மேகவாதத்தையும் வளர்க்கும். வயிற்றில் வாதத்தைத் தடுத்து நிறுத்தும். மிகவும் தாமதமாகச் செரிமானமடையும். உளுந்தை நீருடன் அரைத்து ஆண்குறி மேல் பூசினால் அது வலிமை பெறும். நீருடன் அரைத்துப் பற்றாக பூசினால் குட்டநோயில் தோன்றிய புண்கள் நீங்கும்.

## 14. ஊமத்தை

ஊமத்தங்காயை ஆவியில் பக்குவம் செய்து அரைத்துக் கட்டினால் விரணங்கள் நீங்கும். ஊமத்தைச் செடியை வேரு

டன் அரைத்துச் சாற்றை உடல் மேல் பூசினால் வாதம் தோல் நோய்கள் தணியும். இதன் விதைகள் காய்ச்சலைத் தணிக்கும். ஊமத்தைச்செடியின் வேரை உலர்த்தித் துகளாக்கிப் புகையாகப் பிடித்தால் உப்புசம் இழுப்பு இருமல் எனுமிவை நீங்கும். ஊமத்தை இலையின்மேல் ஆமணக்கு எண்ணெய் தடவி நெருப்பில் வாட்டி கட்டிகளின் மேல் வைத்துக் கட்டினால் அவை நீங்கும். அல்லது விரைவில் உடைந்து தோஷம் நீங்கும். இதற்கு முறிப்பு கள் எலுமிச்சம்பழச்சாறு நாவல்பட்டைச்சாறு கழுநீர் சீரகம் தாமரை விதைகளின்துகள் சர்க்கரைகலந்த பசும்பால் உப்பு கரைந்த நீர் ஆகியவையாம்.

## 15.

சூட்டை வளர்க்கும். வாதத்தையும் தோல் நோயையும் போக்கும். சிறுநீரைக் குறைக்கும். கொழுப்பை வளர்க்கும். உடலுக்குச் செழிப்பையும் வலிமையையும் தரும். விரணங் களைப் போக்கும். நல்ல உணவாகும். இரத்தத்தையும் விந்துவையும் மிகுதியாக்கும். குரலைச் சீராக்கும். மூலநோய் கொண்டவர்களுக்கு இதமானது. வயிற்றையும் மலதுவாரத்தை யும் மென்மையாக்கும். மாதவிடாயைச் சீராக்கும். கபத்தையும் பித்தத்தையும் வளர்க்கும். தாமதமாகச் செரிமானமடையும். இதற்குத் தயிர், உப்பு காடி தேன் ஆகியவை முறிப்புக ளாகும்.

## 16. ஏல அரிசி

இது சிறிது கார்ப்புகசப்புச் சுவைகள் கொண்டு நறுமணமுள்ள தாகும். மேக நோயைத் தணிக்கும். சுவையின்மை வாந்தி பித்தத்தினால் தோன்றும் விக்கல் விரணம் அடிவயிற்றில் தோன் றும் நோய் அழற்சி முகநோய் தலைநோய் வயிற்று வலி இரத்த அதிஸாரம் நீர்ச்சுருக்கு பெரும்பாடு காய்ச்சல் கபம் அரிப்பு குட்டம் இருமல் இழுப்பு மூலநோய் கண்நோய் எனும் இவற்றைப் போக்கும். வலிமையை வளர்க்கும். சிறுநீரை வெளியேற்றும். மனத்திற்கு மகிழ்ச்சியூட்டும். வயிற்றில் உள்ள வாதத்தைப் போக்கும். உணவைச் செரிமானமடையச் செய்யும். மார்பை யும் தொண்டையையும் தூய்மைபடுத்தும். மலத்தைக் கட்டும். விந்துவைக் குளுமைப்படுத்தி ஆண்மையைக்குறைக்கும். இதற்குக் கற்கண்டு, வாதுமைப்பிசின் ஆகியவை முறிப்புகளாகும்.

## 17. கங்குட்டம்

இது மூன்று வகையானது. 1. யானைக்குட்டி பிறந்ததும் இடும் சாணமும் குதிரைக்குட்டி பிறந்ததும் இடும் சாணமும் மிருகங்களால் தோன்றிய கங்குட்டம் எனப்படும். இது கசப்பு கார்ப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டதாம். பேதியாகச் செய்யும். சூட்டை வளர்க்கும். உடலுக்குப் பொலிவு தரும். குடலில் தோன்றும் பூச்சி வீக்கம் வயிற்று நோய் வயிற்று உப்புசம் குன்மம் மண்ணீரல்வீக்கம் மூலநோய் வயிற்றுவலி கபம் ஆகியவற்றைப் போக்கும்.

முரதாரசிங்கு என்பது கனிப்பொருளைச் சார்ந்த கங்குட்டம் ஆகும். கொடியவாத நோய்கள் பால் வினைநோய்கள்விரணங்கள் முதலியவற்றிற்கு மேல் பூச்சு மருந்தாகப் பயன்படும். ஸ்வர்ணதுக்தா என்ற பெயர் கொண்ட மஞ்சள் நிற மலர் பூக்கும் ஒரு வகை சிறுமுட்செடியாகும். இதன் மஞ்சள் நிறப்பால் கண் நோயைப் போக்கும். விரணம் பால்வினை நோயில் தோன்றும் விரணம் காயம் முதலியவற்றைப் போக்கும். இச்செடியின் பகுதிகள் அனைத்தும் மூர்ச்சை நோயைப் போக்கும். செடியின் பகுதிகள் அனைத்தையும் அரைத்துப்பூசினால் ஆறாத புண்களும் ஆறும். பச்சை வேரை அரைத்துப் பூசினால் தேள் விஷம் நீங்கும். இதன் விதைகளில் இருந்து எடுக்கப்பட்ட எண்ணெய் குட்ட நோய் முதலிய தோல் நோய்களைப் போக்கும். உட்கொள்ளச் செய்தால் பேதியாகச் செய்யும். இதன் எண்ணெயை உட்கொள்ளச் செய்தால் வயிற்று நோய்கள் விரைவில் குணமாகும். இச்செடியின் பகுதிகளனைத்தையும் கஷாயமாகக் காய்ச்சி உட்கொள்ளச் செய்தால் சிறுநீரை எளிதில் வெளியேற்றும். இச்செடியின் உலர்ந்த பால் உப்புசம் வயிற்று நோய் தோல் நோய்கள் ஆகியவற்றைப் போக்கும். இதன் விதைகளில் அபினியைப் போன்ற நச்சுப் பொருள் உண்டு.

## 18. கடுகரோகிணி

இது ஒரு செடியின் வேராகும். கருநிறமுள்ள கடுகரோகிணி கசப்புச்சுவை கொண்டு நாக்கை விறுவிறுக்கச் செய்யும். குழந்தைகளுக்குத் தோன்றும் காய்ச்சல் குளிர்க்காய்ச்சல் குன்மம் எலி தேள் என்பனவற்றின் நஞ்சு வாதம் இருமல் இழுப்பு சுவையின்மை வயிற்றுநோய் ஆகியவற்றைப் போக்கும். நன்கு பேதியாகச் செய்யும். பக்கவாதம் பைத்தியம் முதலிய மூளையைச் சார்ந்த நோய்களைத் தணிக்கும். மாதவிடாயைச் சீராக்கும்.

வெண்ணிறமுள்ள கடுக ரோகிணி தோற்றத்திலும் சுவை யிலும் கருநிறமுள்ளதைப் போலவே இருக்கும். ஆனால் அதை விட இது மிகுதியாகப் பேதியாகச் செய்யும். வாந்தியையும் தும்மலையும் தோற்றுவிக்கும். மிகச் சிறிய அளவில் உட் கொள்ளச் செய்தாலும் நடுக்கம் படபடப்பு தலைப்பளு மூர்ச்சை ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். மிக்க கவனத்துடன் பயன்படுத் தினால் பைத்தியம் மூர்ச்சை தலைச்சுற்றல் தோல்நோய் குட்டம் ஆகியவற்றைப் போக்கும். இதனால் தோன்றிய துன் பங்களுக்கு வாதுமைப்பிசின் வாதுமைஎண்ணெய் எனுமிவை முறிப்புகளாகும்.

## 19. கடுகு

இதில் வெண்மை கருமை சிவப்பு எனும் மூன்று வகைகள் உண்டு. கார்ப்பும் கசப்பும் கொண்டதாகும். சூட்டை வளர்க் கும். கபம் வாதம் இரவில் கண் தெரியாமை அசீரணம் இழுப்பு வயிற்றுவலி பீநசம் அரிப்பு அக்கி ஆகியவற்றைத் தணிக்கும். தாதுக்களுக்கு வலிமை தரும். தலையில் தோன் றும் கிருமிகளை அழிக்கும். மூளையில் சேரும் கெட்ட நீரை வெளியேற்றும். குட்டம் கிருமிநோய் பக்கவாதம் வயிற்று நோய் ஆகியவற்றைத் தணிக்கும். வயிற்றிலுள்ள வாதத்தை வெளியேற்றும். பேதியையும் வாந்தியையும் தோற்றுவிக்கும். பித்தத்தை வளர்க்கும். இரத்த பித்தத்தை உண்டாக்கும். இயற்கையாக சூடு மிகுந்தவர்களுக்கு அழற்சியைத் தோற்று விக்கும். இதற்கு நெய் காடி தயிர் கருங்காலிச்சாறு ஆகியவை முறிப்புப் பொருள்களாகும்.

## 20. கப்பலம்

பெரிய மரமாகும். இதன் இலை வெற்றிலையைப் போல் இருக்கும். மலர்கள் சிவப்பு நிறமுள்ளவை. ஜாதிக் காயைப் போன்ற காய்களும் அதன் மேல் ஜாதிபத்திரியைப் போன்ற சதைப்பகுதியும் காணப்படும். இந்த பத்ரியை ராம பத்திரி என்றும் சொல்வதுண்டு. இதை இரண்டாவது வகை ஜாதிபத்ரியாகப் பயன்படுத்துவதுண்டு. கார்ப்புச் சுவை கொண் டதாகும். சூட்டை வளர்க்கும். இதை உடல் மேல் பூசினால் சிவப்பு நிறம் தோன்றும். புண்ணாகும். இதன் துகள் தும் மலைத் தோற்றுவிக்கும். சுக்குடன் அரைத்துக் காலரா நோய் கொண்டவனின் உடல் மேல் பூசினால் உடல் சூடு பெறும். உட்கொள்ளச் செய்தால் வயிற்றுக்கு வலிமை தரும். வாதத்தை

வெளியேற்றும். இதன் துகள் அல்லது கஷாயம் கபவாதங்கள் குன்மம் மேகநோய் ஆமசூலை விஷக்காய்ச்சல் மூலநோய் கிரஹணி சோகை உப்புசம் ஆகிய நோய்களைப் போக்கும்.

## 21. கந்தமாம்ஸி

சடாமாஞ்சியில் இது ஒரு வகையாகும். இதன் துகள் அல்லது கஷாயம் கசப்பு கார்ப்புச்சுவைகளைக்கொண்டிருக்கும். விந்துவை சூடு பெறச் செய்யும். பிரமேகம் தோல்நோய்கள் நஞ்சின் வேகம் வாதம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 22. கண்டங்கத்தரி

இதன் காய் இளைசாக இருப்பது பத்தியமாகும். சூட்டைச் சிறிது மிகுதிப்படுத்தும். கண் நோய்களைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். மூன்று தோஷங்களையும் போக்கும். முற்றியகாய், கபம் இருமல் காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும். பித்தத்தை வளர்க்கும். இதன் பழம் வாதத்தையும் கபத்தையும் வளர்க்கும். இதற்கு துமட்டிவேர், பாகற்காய் ஆகியவை முறிப்புப் பொருள்களாகும். இதன் பழச் சாற்றைத் தடவினால் ஆண்குறி வலிமை கொள்ளும்.

## 23. கண்டந்திப்பிலி

இது திப்பிலியின் வேராகும். மோடி என்றும் சொல்லப் படும். கார்ப்புச்சுவை கொண்டது. பித்தத்தையும் சூட்டையும் மிகுதியாக்கும். சடராக்னியை வளர்க்கும். கபம் கிருமி நோய் வாதநோய்கள், கபவாதக் காய்ச்சல், இருமல், இழுப்பு, குன்மம், இதயநோய், சோகை, உப்புசம், விக்கல் வயிற்றுவலி ஆகியவற்றைப் போக்கும். பிள்ளைப் பேற்றில் கெட்டஇரத்தத்தை வெளியேற்றும். இதன் துகளை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் தலையில் தோன்றும் நோய்களைப் போக்கும். இதன் கஷாயத்தைக் கொப்பளிப்பதாலும், இதன் துகளைக் கொண்டு பல் விளக்குவதாலும் கபம், சளி, வாதம் எனுமிவை போகும். வயிற்றிலுள்ள வாதத்தை வெளியேற்றும். பக்கவாதம், ருத்ரவாதம், ஆமவாதம், இடுப்பு வலி ஆகியவற்றைத் தணிக்கும். இயற்கையாக உடலில் சூடு மிகுந்துள்ளவர்களுக்கு நோயைத் தோற்றுவிக்கும். விந்துவைக் குறைக்கும். திப்பிலியை விட இது தன்மையில் சிறிது குறைந்துள்ளதாகும்.

## 24. கருஞ்சீரகம்

கருநிறமும் நறுமணமும் கொண்டதாகும். உட்கொள்ளச் செய்தால் அசீரணம், வயிற்றுஉப்புசம், பேதி ஆகியவற்றைத் தணிக்கும். இதன் துகளை எண்ணெய் அல்லது நெய்யில் கலந்து அக்கி முதலிய விரணங்களின் மேல் பூசினால் நோய் தணியும்.

## 25. கர்கடகச்சிருங்கி

மரக்கிளைகளில் ஒரு வகைப் பூச்சியால் தோன்றுவதாகும். சிறுகொம்பு போல் பச்சைநிறம் கலந்த மண் நிறத்துடன் உட்பகுதியில் சிறிது சிவப்பு நிறமும் கொண்டிருக்கும். இதன் துகள் சடராக்னிக் குறைவு, இருமல், இழுப்பு, க்ஷயம், உப்புசம், காய்ச்சல், வாதம், பித்தம், கபபித்தம், விக்கல், வாந்தி, சுவையின்மை, அதிஸாரம், ரத்ததோஷம், நஞ்சு ஆகியவற்றைப் போக்கும். கபத்தை வெளியேற்றும்.

## 26. கர்ப்பூரம்

கசப்பு கடுப்பு நறுமணம் கொண்டிருக்கும். கண்களுக்குக் குளுமை தரும். வாந்தி அழற்சி, அரிப்பு கிருமிநோய், அதிசாரம், தொண்டை நோய்கள், நீர்ச்சுருக்கு, காய்ச்சல் நஞ்சு, இரத்த பித்தம் இரத்த இருமல், விஷக்காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும். நரம்புக்கு வலிமையூட்டும். இருதயத்திற்கு நன்மை செய்யும். ஆமவாத வலி, மேகவாதவலி, கால்கை வலி ஆகியவற்றைத் தணிக்கும். உப்புசத்துடன் தோன்றும் இருமலுக்கு 4 கோதுமை எடை கர்ப்பூரமும், சம அளவு பெருங்காயமும் கலந்து மாத்திரை செய்து 3 மணிக்கு ஒரு முறை கொடுத்தால், இருமலின் வேகம் தணியும். நோயாளியின் மார்பில் டர்பன்டைன் என்னும் எண்ணெயைத் தடவிக் கொண்டிருக்க வேண்டும். நான்கு கோதுமை அளவு கர்ப்பூரமும் அரை கோதுமை அளவு அபினியும் கலந்து மாத்திரை செய்து படுக்கப் போகும் போது உட்கொள்ளச் செய்தால் விந்து நஷ்டமாவது தணியும். இம்மருந்து கனோரியா என்னும் பால்வினை நோய்க்கும் சிறந்ததாகும். ஆனால், அதற்கு அபினியை ஒரு கோதுமை அளவில் சேர்க்க வேண்டும். ஆண்குறியடிப் பகுதியில் ஆசனவாய் வரை கர்ப்பூர தைலம் பூசினால் குறியில் தோன்றிய வலி குறையும். பெண் குறிவலிக்கு 5, 6 கோதுமை அளவுள்ள கர்ப்பூரத்தை ஒரு மாத்திரையாக்கி உட்கொள்ளச் செய்யலாம். காய்ச்சல் அம்மைநோய் கொண்டவர்களுக்குக் கோதுமை அளவு கர்ப்பூரத்துடன் சம அளவு பெருங்காயம்

கலந்து மாத்திரை செய்து கொடுக்க வேண்டும். கடுகை அரைத்து மார்பின் மேலும் உள்ளங்காலிலும் பற்றாகப் போட வேண்டும். தலைவலி தோன்றினால் பற்றை நீக்க வேண்டும். இம்முறையை மிக்க கவனத்துடன் கையாள வேண்டும். சொத்தைப் பல் துளையில் கர்ப்பூரத்தை வைத்தால் வலி குறையும். மேகவாத வலிக்கு கடுகெண்ணெயில் கர்ப்பூரமும் அபினியும் கலந்து உடல் மேல் தேய்த்தால் வலி நீங்கும். காலரா நோயாளிக்கு நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை 10 கோதுமை எடை கர்ப்பூரம் உட்கொள்ளச் செய்ய வேண்டும். இதற்கு (1) கஸ்தூரி (2) கடல்நுரை (3) பச்சைக்கர்ப்பூரம் முறிப்புப் பொருள்களாகும்.

## 27. கழற்சிக்காய்

இதன் பருப்பு மிகவும் கசப்புச் சுவை கொண்டதாகும். மார்புவலி, வயிற்றுவலி, காய்ச்சல், குளிர்க்காய்ச்சல், வயிற்றில் கட்டி, கிருமிநோய், உப்புசத்தால் தோன்றும் இருமல், மற்றும் அன்னபேதி, பாஷாணம், பித்தளை, தாமிரம் முதலிய உலோகங்களால் தோன்றிய நஞ்சு ஆகியவற்றைப் போக்கும். கழற்சிக்காய்த்துகளுக்குச் சம அளவு சுக்கு, திப்பிலி, மிளகுத்துகள் கலந்து பயன்படுத்த வேண்டும். கழற்சிக் காயினுள் உள்ள பருப்பை அரைத்துப் பூசினால் தேள் விஷம் நீங்கும். விரை வாதத்திற்கு ஆரம்ப நிலையில் இப் பருப்பை மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் நோய் தணியும். கழற்சிக்காயை எரித்த தன் சாம்பல், படிகாரம், பாக்கை எரித்த தன் சாம்பல் என்னும் இவற்றைச் சம அளவில் கலந்து பற்பொடியாகப் பயன்படுத்தினால் பல்வலி ஈறுகளில் தோன்றும் புண் சீழ், இரத்தம் பெருகுதல் ஆகியவை நீங்கும்.

## 28. குராஸானி ஓமம்

மெல்லிய சிறு விதைகளாக இருக்கும். பாரசீக ஓமம் எனவும் கூறப்படும். இதை உட்கொள்ளச்செய்தால் தூக்கம் வரும். வலி நரம்புநோய்கள் கவலையால் தோன்றும் பைத்தியம், தூக்கமின்மை, நரம்புகள் வலிமை இழத்தல் முதலியவை தணியும். பேதியாகச் செய்யும். வயிற்றில் உள்ள வாதத்தை வெளியேற்றும். வயிற்றுவலி, இருமல், உப்புசம், தொண்டையில் அடைபட்ட கபம் ஆகியவை நீங்கும். ஆண்குறி, சிறு நீர்ப்பை, ஆஸனவாய் இவற்றில் தோன்றிய எரிச்சல் வலி நீங்கும். குத்தல் வலியுடன் கூடிய விரணங்களுக்கு மேல் பூச்சாகப் பயன் படுத்தலாம். கண்நோய்க்கு இதன் சாற்றைக் கண்களில் இட

லாம். அளவுக்கு மிஞ்சிப் பயன்படுத்தினால் மூன்று தோஷங் களையும் சீற்றமடையச் செய்யும்.

## 29. குங்கிலியம்

குக்குலு எனப்படும் மரத்தின் பிசினாகும். நறு மணத்திற்காக இதைப் புகை போடுவதுண்டு. மென்மையாகவும் கசப்புச்சுவை கொண்டும் இருக்கும். சூட்டைத் தணிக்கும். உட்கொள்ளச் செய்தால் இரத்தத்தைத் தூய்மைபடுத்தும். உடல் வியர்க்கச் செய்யும். சிறுநீரை வெளியேற்றும். வயிற்று க்கு வலிமை தரும். உடலுக்குப் பொலிவு தரும். இரத்த பித்தம், கபம், கிருமி, பைத்தியம், மூலநோய், கெட்ட விரணங் கள், கண்டமாலை, பெருவயறு, வாதம், நஞ்சு ஆகியவற்றைப் போக்கும். கட்டி, நரம்புநோய், தொண்டைவலி கபத்தினால் தோன்றும் இருமல், மிக்க நடையால் தோன்றிய கால் வலி ஆகியவற்றைத் தணிக்கும்.

## 30. குன்றிமணி

குன்றிமணியில் சிவப்பு, வெளுப்பு, கறுப்பு எனும் மூன்று வகை நிறங்களைக் கொண்டவையுண்டு. வெண்மை நிறமுள்ளது சிறந்தது. இச்செடியின் வேர் கொடி இலைச்சாறு ஆகியவை இனிப்புச் சுவை கொண்டிருக்கும். சூட்டை மிகுதியாக்கும். அரிப்பு, குட்டம், விரணம், கிருமி நோய், இரத்தப் போக்குடன் கூடிய மூலநோய், வாதம், நஞ்சு, வாதரத்தம், பிரமேகம் எனும் நோய்களைப் போக்கும். உடலுக்கு வலிமையையும் பொலிவையும் தரும். இவ்விதைகளிலுள்ள பருப்பு விந்துவை வளர்ப்பதுடன் விரைவில் வெளியேற்றாமல் கட்டும். இதன் வேர் உலர்ந்தால் அதிமதுரத்தைப் போல் இனிப்பாக இருக்கும். விதைகளைச் சந்தனம் போல் அரைத்துக் கண்களைச் சுற்றிலும் பொட்டிலும் பற்றாகப் போட்டால் வாதத்தினால் தோன்றிய கண்சிவப்பு வலி தலைவலி நீங்கும். இதன் விதைகளிலிருந்து எடுத்த தைலம் இந்திரலுப்தம் என்று கூறப்படும். தலைமுடி உதிரும் நோயைப் போக்கும். இந்த எண்ணெயை ஆண்குறி மேல் தடவினால் அதற்கு வலிமையுண்டாகும். தனியாக மூன்று விதைகளின் தூள் மனிதனைக் கொல்லக் கூடியதாகும். இதற்கு 1. பசும்பால் 2. சர்க்கரை கலந்த சிறுகீரைச் சாறு, தேன் திராட்சை, மாதுளம்பழம், பெரிய ஈச்சம்பழம், நெல்லி, புளி இவற்றின் சாற்றைச் சம அளவில் கலந்து பருகுதல் ஆகியவை முறிப்புகளாகும். இலைச்சாற்றுடன் தேன் கலந்து பூசினால்

வீக்கம் தணியும், இலைத்துகளுடன் சம அளவு சர்க்கரை கலந்து உட்கொள்ளச் செய்தால் இருமல் நீங்கும்.

## 31. கேழ்வரகு

தலைமுடிக்கு வலிமை தரும். சிலருக்குப் பித்தத்தை வளர்க்கும். உடல் இளைக்கச் செய்யும். மேகநோய், பித்தத்தால் தோன்றும் வயிற்றுவலி ஆகியவற்றைப் போக்கும். வலிமையையும் தாது வளர்ச்சியையும் செய்யும். சிலருக்குத் தலைச் சுற்றலைத் தோற்றுவிக்கும்.

## 32. கொட்டைக்கரந்தை

இதில் வெண்மை நிறமுள்ளது சிறந்தது. இதன் விதைகளை நாள்தோறும் காலையில் சமஅளவு சர்க்கரையுடன் கலந்து, ஓராண்டுக் காலம் உட்கொள்ளச் செய்தால் ஆண்மையும் வாலிபமும் உண்டாகும். நரைத்த தலைமுடி கருக்கும். இதன் மலர்களை நிழலில் உலர்த்தித் தூள் செய்து, காலையில் கோதுமை மாவுடன் கலந்து ரொட்டி செய்து பசு நெய்யுடனும் சர்க்கரையுடனும் ஓராண்டுக்காலம் உட்கொள்ளச் செய்தாலும், இதன் வேர்களையும் கரிசிலாங்கண்ணி வேரையும் நிழலில் உலர்த்தித் தூளாக்கிச் சம அளவு சர்க்கரை கலந்து பசு நெய்யுடன் ஓராண்டுக் காலம் உட்கொள்ளச் செய்தாலும், நரைத்த முடி கறுப்பாகும். விந்து மிகுதியாக வளரும். வலிமையுண்டாகும். இதை உட்கொண்டவனுடன் சேர்ந்த நங்கை மிக்க இன்பமும் மகிழ்ச்சியும் கொள்வாள். இச்செடியின் வேர், இலை மலர் எனும் இவற்றின் சாறு அல்லது கஷாயம் கார்ப்புச் சுவை கொண்டதாகும். விந்துவை வளர்க்கும். காய்ச்சல், இரத்தவாதம், கீழ் நோக்கிப்பரவும் வாதம், பைத்தியம், விரை வீக்கம். மேகநோய், குட்டம், வயிற்றுவலி, கபம், இருமல், தொண்டை நோய், குன்மம், மூலநோய் ஆகியவை நீங்கும். யானைக்கால்நோய் தணியும். இதயம், மூளை, மண்ணீரல் ஆகியவற்றிற்கு வலிமை தரும். உடலில் சேர்ந்துள்ள கெட்ட நீரைப் போக்கும். காமாலை, நீர்ச்சுருக்கு ஆகியவை தணியும். விரணங்கள் நீங்கும். இதை வேருடன் நீரில் ஊறவைத்துக் காய்ச்சிச் சாராயம் போல் தயார் செய்தும் அல்லது வேருடன் நிழலில் உலர்த்திச்சமஅளவு சர்க்கரையுடனும் பயன்படுத்தலாம். வேருடன் இதை இடித்துச் சாறு பிழிந்து அதில் நான்கில் ஒரு பங்கு நல்லெண்ணெய் கலந்து எண்ணெய் பக்குவம் செய்து 40 நாட்கள் உட்கொண்டால் ஆண்மை மிகுதியாகும். இதை உட்

கொள்ளும் போது, புளி, மோர் முதலிய குளுமை தரும் பொருள்கள் மிகவும்குளிர்ந்த நீர் மிக்க சூடான நீர் மிகுதியாக உண்ணுதல் ஓடுதல், மிக்க உடற்பயிற்சி, சினம், தூக்கம், கலவி, குளியல் ஆகியவற்றைத் தவிர்க்க வேண்டும். இதன் வேரைத் தயிருடன் அரைத்து ஆஸன வாயில் வைத்துக் கட்டினால் மூல நோய் தணியும். இதன் இலையை அரைத்துப் பூசினால் பெண்களின் மார்பகத்தின் மேல் தோன்றும் விரணங்கள் தீரும்.

## 33. கொத்துமல்லி விதை

இது குளுமையைத் தோற்றுவித்துத் தணிக்கும். சுவையானது. இதன் துகள் அல்லது சாறு அல்லது கஷாயம் தலைச் சுற்றல், பித்தவிகாரம், வாந்தி, விக்கல், சுவையின்மை, கிருமி, எரிச்சல், நான்கு நாள்களுக்கு ஒரு முறை தோன்றும் காய்ச்சல், மேக நோய், அழற்சி ஆகியவற்றைப் போக்கும். உடலை வியர்க்கச் செய்யும். வயிற்றில் தங்கியுள்ள வாதத்தை மேல் நோக்கிச் செல்ல விடாது. பசியைத் தோற்றுவிக்கும். வயிற்றுக்கு வலிமை தரும். தூக்கத்தைத் தோற்றுவிக்கும். சிறுநீருடன் கலந்து விந்து வெளியேறுவதைத் தணிக்கும். கட்டிகளைப் பழுக்கச் செய்யும். அரைத்துப் பற்றாகப்பூசினால் உஷ்ணத்தால் தோன்றிய தலைவலி நீங்கும். வெற்று விதைகளை மிகுதியாக உட்கொண்டால் விந்துவுக்குக் கெடுதலைச் செய்யும். சிறுநீரைப்பெருக்கும். பச்சையான விதைகள் சுசப்பும் இனிப்பும் கலந்த சுவை கொண்டிருக்கும். சிறுநீரைப் பெருக்கும். பித்தத்தைத் தணிக்கும். இதற்கு (1)லவங்கப்பட்டை (2) வறுத்த கோழி முட்டை (3) தேன் (4) இலவங்கம் (5) கோழியின் புலால் எனுமிவை முறிப்புகளாகும்.

## 34. கொம்பரக்கு

இதன் துகள் அல்லது கஷாயம் கடுப்பாக இருக்கும். சூட்டை உண்டாக்கும். கிருமிநோய், இரத்தபித்தம், வாந்தி, விக்கல், கபத்தாலும் பித்தத்தாலும் தோன்றும் மேகநோய், காய்ச்சல், கால்கை வலி, நாள்பட்ட பேதி, நாள்பட்ட காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும். அரக்கை எண்ணெயில் இட்டுக் காய்ச்சித் தலையில் தடவினால் நாள்பட் காய்ச்சலால் தோன்றிய சோர்வு நீங்கும்.

## 35. கொள்ளு

இது சிவப்பு, வெளுப்பு, கறுப்பு என மூன்று வகையாக இருக்கும். கருநிற கொள்ளு சிறந்தது. பொதுவாக கொள்ளு

இனிப்புச் சுவை கொண்டதாகும். சூட்டைக் கிளப்பித் தணிக்கும். பித்தத்தை மிகுதியாக்கும். வாதம் பீநசம் எனும் நாள் பட்ட சளி இருமல் இழுப்பு மூலநோய் நீர்ச் சுருக்கு மலக்கட்டு ஆகியவற்றைப் போக்கும். கபத்தைக் கரைக்கும். பெரும்பாடு மற்றும் மாதவிடாயில் தோன்றும் தடைகளைப் போக்கும். பிள்ளைப் பேற்றின் போது கெட்ட இரத்தத்தை எளிதாக வெளியேற்றும். சிறுநீரகங்களில் தோன்றும் கற்களைக் கரைக்கும். பசியைத் தூண்டும். விக்கல் கண் நோய் ஆகியவற்றைத் தணிக்கும். முள்ளங்கி இலைச்சாற்றுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீரகத்தில் தோன்றும் கல் நீங்கும். இதற்கு 1. எண்ணெய் 2. நெய் 3. காடி 4. தேன் ஆகியவை முறிப்புப் பொருள்களாகும்.

## 36. கோதுமை

கோதுமைச் சோறு சூட்டைக் கிளப்பி பிறகு குளுமையைத் தரும். உடலை வளர்த்து வலிமையைத் தரும். சிறுநீர்ப் பெருக்கைத் தடுக்கும். உலர்ந்த மார்பு கொண்டவர்களுக்கும் இருமல் நோயாளிக்கும் நன்மை தரும். தாமதமாகச் செரிமானமடையும். மிகுதியான சிறுநீர்ப்போக்கு உள்ளவர்களுக்கு நன்மை தரும்.

## 37. கோவை

இனிப்புச் சுவை கொண்ட கோவை சுவையானது. குளுமை தரும். பித்த நோய் இரத்தப்பெருக்கு வாதநோய் சோகை கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும். கபத்தைத் தணிக்கும். வாந்தியாகச் செய்யும். இதற்கு முறிப்புகள் முருங்கைக்காய் துமட்டிச்செடிவேர், குல்கந்து, மற்றும் சூட்டைத்தரும் மருந்துகள்.

கோவைஇலைச்சாறு, பித்தம் உப்புசம் சோகை க்ஷயம் மூலநோய் ஆகியவற்றைப் போக்கும். இலையை அரைத்துக் கட்டினால் பூச்சிகளின்நஞ்சினால் தோன்றிய புண்கள், விரணங்கள் ஆறும்.

### கசப்புக் கோவை

இதன் பழத்தை மெத்தென்று அரைத்துத் தேங்காய் எண்ணெயுடன் கலந்து காய்ச்சிக் காதில் விட்டால் காதுக்குள் தோன்றிய கட்டி, புண் ஆகியவை தீரும். மூக்கில் மருந்தாக

ட்டால் பீநசம், மூக்கினுள் தோன்றும் புண்கள் தீரும். இப் பழங்களை அரைத்து நல்லெண்ணெய் அல்லது தேங்காய் எண் ணெயுடன் கலந்து காய்ச்சி தலையில் தடவிக் குளித்தால், பல நாட்களாக தீராத தலைவலி குத்தல் தலையில் தோன்றும் வாதம் தணியும். இதன் விதைகளிலுள்ள பருப்பு பித்தத்தைப் போக்கும். இதன் காய்களால் புகை பிடித்தால் இருமல் இழுப்பு தணியும். இதன் இலைச்சாறு அடிபடுதலால் தோன்றிய காய்ச் சல் சடராக்னிக்குறைவு மூலநோய் பித்தம் கால்கைவலி இரத்த வாந்தி பாம்பின் நஞ்சு ஆகியவற்றைப் போக்கும். பாம்பின் நஞ்சுக்கு 20 துலம் அளவு இரண்டு மூன்று முறை கொடுக்க வேண்டும். இதன் கிழங்கின் துகளைப் பச்சைப் பசும்பாலில் கலந்து மாதவிடாயின் போது நான்கு நாட்கள் வெற்றுவயிற்றில் உட்கொள்ளச் செய்து பருப்பு, நெய், பசும் பால் மட்டும் உணவாகக் கொண்டு இருந்தால் கரு நிலைக்கும்.

## 38. கோரைக்கிழங்கு

சூட்டைக்கிளப்பித் தணிக்கும் கசப்புச்சுவை நறுமணம் கொண்டதாகும். கபத்தைத் தணிக்கும். வியர்வையைத் தோற்றுவிக்கும். சடராக்னியை வளர்க்கும். உடல் இளைப்பு, இரத்தபித்தம் பித்தக்காய்ச்சல், அதிஸாரம், அழற்சி, கிருமி நோய் பல் நோய்கள் காய்ச்சல் உப்புசம் ஆகியவற்றைத் தணிக்கும். நன்கு சிறுநீரை வெளியேற்றும். பெண்களின் மாத விடாயைச் சீராக்கும். சிறுநீர்ப் பைகளில் தோன்றும் கற்களைப் போக்கும். கெட்ட நாற்றமுள்ள பொருள்களால் தோன்றும் நோய்களைத் தீர்க்கும். அறிவைத் தூண்டும். சளி தலைவலி பீநசம் மூலநோய் ஆகியவற்றைப் போக்கும். முகத்திற்கு பொலிவு தரும். இதயநோய் சோகை வீக்கம் வயிற்றுனுள் தோன்றும் கட்டி ஆகியவற்றைப் போக்கும். சடராக்னியைத் தூண்டும். இதற்கு முறிப்புப் பொருள் சர்க்கரையாகும்.

## 39. கோஷ்டம்.

இது ஒரு செடியின் வேர். இதன் துகள் அல்லது கஷாயம் கசப்புச்சுவை கடுப்பு நறுமணம் கொண்டிருக்கும். சூட்டைத் தோற்றுவிக்கும். மூன்று தோஷங்கள் மூல நோய் அக்கி நஞ்சு அரிப்பு குஷ்டம் காய்ச்சல் சந்நிபாதக் காய்ச்சல் விஷக்காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும். விந்துவை வளர்க்கும். உடலுக்குச் செழிப்பும் வயிற்றுக்கு வலிமையும் தரும். இதைச் சந்தனம் போல் அரைத்து நாக்கில் தடவினால் நாக்கில் தோன் றும் கோளாறுகள் நீங்கும்.

## 40. சந்தனம்

சந்தன மரத்தின் கட்டை அல்லது வேர்க்கட்டை பயன் படும். இதன் கட்டையின் துகள் அல்லது கஷாயம் கசப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண்டதாம். குளுமைதந்து சூட்டை யும் கிளப்பும். மனத்திற்கு இனிமையானது. நறுமணமுள்ளது. கண்களுக்குக் குளுமை தரும். கெட்ட இரத்தத்தைப் போக்கும். விந்துவை வளர்க்கும். பொலிவைத் தரும். இரத்தத்தைத் தூய்மைப்படுத்தும். உடல் வியர்க்கச் செய்யும். விந்துவுக்கு குளுமை தரும். பெரும்பாடு அழற்சி எரிச்சல் காய்ச்சல் கொடுமையான காய்ச்சல் கபம் சுவையின்மை மேகம் குட்டம் கிருமிநோய் சளி அரிப்பு அக்கி மதம் தலைச்சுற்றல் வைபத்தியம் க்ஷயம் இருமல் இழுப்பு பீநசம் பாண்டுநோய் வித்ரதி எனும் நாபியில் தோன்றும் புண் இரத்தத்துடன் கூடிய இருமல் வாதம் பித்தம் வாந்தி இவற்றைப் போக்கும். வலிமையைத் தரும். மிகுதியாகப் பயன்படுத்தினால் ஆண்மை குறையும். இதன் துகளைப் பசும்பாலுடன் கலந்து உட்கொள்ளச் செய்தாலும், இதன் எண்ணெயை நான்கு துளிகள் வாழைப்பழத்துடன் உட் கொள்ளச் செய்தாலும் கனோரியா என்னும் பால் வினைநோய் நீங்கும். சந்தனத்துடன் கர்ப்பூரம், பூலாங்கிழங்கு கற்றாழைச் சாறு கலந்து பற்றாகப் பூசினால் மேகவாதத்தினால் தோன்றிய வலி நீங்கும். சந்தனத்துடன் ரஸகர்ப்பூரம் கலந்து பூசினால் கட்டிகள் தீரும்.

## 41. சணல்

இதன் இலைகளின் சாறு அல்லது கஷாயம் கசப்பாக இருக்கும். வாந்தியையும் பித்தத்தையும் தணிக்கும். விந்துவை வளர்க்கும். இரத்தப் பெருக்கு, உப்புசம் கபம், இரத்தபித்தம், சோகை நோய் முதலியன நீங்கும்.

)தன் மலர்ச்சாறு அல்லது கஷாயம் கசப்புச் சுவையும கடுப்பும் கொண்டிருக்கும். பித்தத்தை வளர்க்கும். சட ராக்னியைத் தூண்டும். சுவையுண்டாக்கும். வாத அதி சாரத்தை போக்கும். கருவைச் சிதைக்கும். இதன் விதைகள் குளுமை குருத்தன்மை உடையவை. மலத்தைக் கட்டும்.

## 42. சித்தரத்தை

கசப்பு கார்ப்புச் சுவைகள் கொண்டதாகும், சூட்டை மிகுதியாக்கும். கபம் வாதம் இழுப்பு சளி நஞ்சு சட

ராக்னிக்குறைவு ஆகியவற்றைப் போக்கும். விந்துவைவளர்க்கும். வயிற்றுக்கு வலிமை தரும். சிறுநீர் மிகுதியாக வெளியேறு பவர்களுக்கு நலம் தரும். நரம்புகளுக்கு வலிமை தரும். சிறு குழந்தைகளுக்கு உட்கொள்ளக் கொடுத்தால் விரைவில் பேசும் திறமையுண்டாகும். சுக்குக்குப் பதிலாக இதைப் பயன்படுத்து வதுண்டு.

## 43. சிறுகடலை

லசானது. பித்தவிகாரத்தையும் கபத்தின் சீற்றத்தையும் தணிக்கும். வாதத்தை மிகுதியாக்கும். விந்துவுக்கு குளுமை தரும்.

## 44. சிறுதிராட்சை

இனிப்பு புளிப்புச் சுவைகள் கொண்டது. இரத்தபித்தம், காய்ச்சல் இழுப்பு அழற்சி வாதபித்தம் கபவாதம் சோர்வு ஆகியவற்றைப் போக்கும். வாந்தியைத் தணிக்கும். இரத் தத்தையும் விந்துவையும் வளர்க்கும். கண்களுக்கு நலம் தரும் மலத்தை வெளியேற்றும். சிறுநீர்த் தடையைப் போக்கும். வயிற்றை மென்மையாக்கும். இதயத்திற்கும் சிறுநீரகத்திற்கும் நன்மை தரும். இந்தப் பழத்தின் மேலுள்ள தோல் சிறுநீரகத் திற்கும் வாத உடல் கொண்டவர்களுக்கும் தீமை விளைவிக்கும். இதற்குச் சோம்பு கோரைக்கிழங்கு முறிப்புகளாகும்.

## 45. சிறுநாகப்பூ

இதன் சாறு அல்லது கஷாயம் கசப்புச்சுவை கொண்டது. மூன்று தோஷங்களையும் போக்கும். பாத ரஸத்தினால் தோன்றிய தீமை, சீதபித்தம் ஆண்குறி நோய்கள் பெரும்பாடு, இரத்தகுன்மம், அடிவயிற்றில் தோன்றும் நோய்கள், இதயநோய் அரிப்பு ஆகியவற்றைப் போக்கும். பெண்களுக்கு மலட்டுத் தன்மையைப் போக்கும்.

## 46. சுக்கு

கார்ப்பு இனிப்புச் சுவைகள் கொண்டதாகும். சூட்டை மிகுதியாக்கும். சுவையைத் தரும். சடராக்னியை வளர்க்கும். வலிமையையும் விந்து வளர்ச்சியையும் பொலிவையும் மன மகிழ்ச்சியையும் தரும். சுவையின்மை, வாந்தி கபம் எனுமிவற்றைப் போக்கும்.

# 8. மூலிகை குணங்கள்

## 1. அகத்தி

**ஸம். அதஸி** Sesbania Grandiflora

மலைகளில் நன்கு செழித்து வளரக்கூடியதும் வானத்தில் அகத்திய நட்சத்திரம் காணப்படும் காலம் வரை பூக்கக் கூடியது மாகையால் இதற்கு 'அகஸ்த்யம்' என்று பெயர் ஆயிற்று.

**தோற்றம்**

மிக உயர்ந்த செடியாக வளரக்கூடியது. இலைகள், நீண்ட காம்பும் இரு பக்கங்களிலும் வரிசையாகப் புளிய இலையைப்போல அதை விடப் பெரிய அளவில் சற்று நீண்டு தடித்து காணப்படும். இதன் காய்கள் மிகவும் நீண்டிருக்கும். மலர்கள் பிறைச் சந்திரனைப் போல் வளைந்து உருண்ட வடிவத்தில் ஏறக்குறைய எருக்கங்காயைப் போல காணப்படும். விதைகளின் நிறத்தைக் கொண்டு அகத்தி, வெண்மை நீலம் சிவப்பு மஞ்சள் என நான்கு வகையாகும். இதன் இலை உணவாகப் பயன்படுத்தப் படுகிறது. இளசான இலை உடல் நலத்தை வளர்க்கும். பழுத்த லை நஞ்சைப் போன்றது.

**தன்மை**

கார்ப்புச் சுவையும் கசப்பு இனிப்புமாகிய துணைச்சுவை களையும் கொண்டதாகும். இலைகள் குருத்தன்மையுடை யவை. சிறிது உஷ்ணத்தை வளர்க்கக்கூடியது. கபத்தைத் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும். விதைகள் கசப்புச் சுவையும் லகுகுணமும் பக்குவமடையும்போது இனிப்புச் சுவை யும் கொண்டிருக்கும். முற்றிய விதை வறட்சித்தன்மை கொண் டிருக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூன்று தோஷங்கள், மயக்கம், கபம், இருமல், நிறவேறு பாடு, பிசாசுகளால் தோன்றும் துன்பம், எரிச்சல், கிருமி, நாவறட்சி, பெண்களுக்குப் பால்உறுப்பில் தோன்றும் வலி ஆகியவற்றைப் போக்கும்.

மலர்கள், க்ஷயத்தில் தோன்றும் இருமலைப் போக்கும். விதைகள், மூன்று தோஷங்கள் சோகை நஞ்சு வீக்கம், குன்மம்,

மண்ணீரல்வீக்கம் இடுவிஷம் சோர்வு உடல் உலர்ந்து போதல் ஆகியவற்றைப் போக்கும். இரவில் கண்பார்வை தெரியாமலிருப்பதைப் போக்குவதில் இலைகள் சிறந்தவை.

**பயன்**

நெய்யை நன்றாகக் காய்ச்சி அதில் அகத்திஇலைகள் இட்டு நன்கு வெந்த பிறகு வடிகட்டிப் பருகச் செய்தால் இரவில் கண் தெரியாமை நீங்கும்.

அகத்தி இலைகளையும் மிளகையும் பசுவின்சிறுநீருடன் மைய அரைத்துச் சாற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் கால்கைவலி நீங்கும்.

அகத்தி இலைச் சாற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் நான்கு நாட்களுக்கு ஒருமுறை தோன்றும் காய்ச்சல் நீங்கும்.

அகத்திப் பட்டைக் கஷாயத்தில் இந்துப்பையும் பெருங்காயத்தையும் சேர்த்துப் பயன்படுத்தச் செய்தால் சூலை வலி நீங்கும்.

## 2. அகில்

**ஸம். அகரு** Aquilaria Agallocha

**தோற்றம்**

அகில் அறுபது அடிகள் வரை உயரமுள்ள பெரிய மரமாக காச்மீரப் பகுதியில் மிகுதியாக வளர்கிறது. மரத்தின் சுற்றளவு 5 முதல் 8 அடிவரை இருக்கும். அகிலுக்காக இருபது ஆண்டு வளர்ந்த மரத்தை வெட்டலாம் என்பது சிலர் கருத்து. ஆனால் 50 ஆண்டுகளானால்தான் நல்ல அகில் (பிசின்) கிடைக்கும் எனவும் சொல்லப்படுகிறது. எல்லா மரங்களிலும் அல்லாமல் ஒரு சில மரங்களில் தாம் அகில் கிடைக்கிறது. மரத்திற்கு நறுமணம் இல்லை. ஆனால் இலேசாக இருக்கும். சில மரங்களிலும் கிளைகளிலும் துண்டு துண்டாக 'அகில்' கிடைக்கிறது. கருநிறமாகவோ சாம்பல் நிறமாகவோ இருக்கும். கருநிறமுள்ளது சிறந்தது.

கிருஷ்ணாகரு, தாகாகரு, மாங்கல்யாகரு, காஷ்டாகரு, சுவாத்அகரு என அகில் ஐந்து வகைகளாகக் காணப்படுகிறது.

;ன் கட்டை, நெருப்புப் பட்டால் விளக்கைப் போல் எரியும். 'சுவாத்அகரு' என்பது இனிப்புச் சுவை கொண்டது. 'மாங்கல்யாகரு' இமயமலையில் கேதாரநாத் என்னும் புனிதஸ்தலத்தில் வளர்கிறது. 'காஷ்டாகரு' என்பது மஞ்சள் நிறம் கொண்டது.

**தன்மை**

அகில் எண்ணெய்ப்பசை கொண்டது. இனிப்புச் சுவையும் கார்ப்பும் கசப்பும் துணைச் சுவைகளாகும். புகை மணமும் கொண்டது. சுவையுண்டாக்கும். மேற்பூச்சாகப் பயன்படுத்தத் தக்கது. கிருஷ்ணாகரு சிறந்தது. சிறிது சூட்டை மிகச் செய்யும். ஆனால் மேல் பூச்சாகப் பயன்படுத்தும்போது, குளுமைத்தன்மை கொண்டதாகும். உட்கொள்ளச் செய்தால் பித்தத்தைத் தணிக்கும்.

தாகாகரு என்பது கார்ப்புச் சுவையும், உஷ்ணத்தன்மையும் கொண்டதாகும். தலைமுடியை வளர்க்கும். உடல்நிறத்தைப் பொலிவுறச் செய்யும்.

**காஷ்டாகரு**

கார்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் வறட்சித்தன்மையையுண்டாக்கும். கபத்தைத் தணிக்கும்.

**பயன்**

அகிற்கட்டைத்துகளைத் தேனுடன் உட்கொள்ளச் செய்தால், இருமலும் விக்கலும் தணியும்.

அகில் எண்ணெயைக் குளியலுக்குப் பயன்படுத்தினால் தத்ருகுட்டம் கிடிபகுட்டம் என்பன தணியும்.

அகில் விழுதை மேல் பூச்சாகப்பயன்படுத்தினால் வீக்கம் தணியும்.

அகிற்கட்டையின் விழுதைப் பாலுடன் உட்கொள்வது சிறந்த இரஸாயனமாகும்.

**(உடல் நலனையும் ஆயுளையும் வளர்க்கும் மருந்து 'ரஸாயனம்' எனப்படும்)**

'அகர்வாதிதைலம்' என்பது குளிர்காய்ச்சலைப் போக்கும். எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படும்.

நோயாளிக்கு அகிற்கட்டையை இட்டுக் காய்ச்சிய நீரைக் குளிப்பதற்குப் பயன்படுத்துவது நல்லது.

மூன்று தோஷங்களையும் போக்கவல்ல அணுதைலம் என்பதில் அகிற்கட்டையும் சந்தனமும் சேர்ந்துள்ளன.

## 3. அக்கராகாரம்

**ஸம். ஆகாரகரப** Ipomoca renifornis

**தோற்றம்**

இது சாமந்தி வகையைச் சார்ந்தது. புதராக வளரக்கூடிய சிறுசெடி.

வடக்கு ஆப்பிரிகாவிலும், மத்தியதரைக்கடலுக்குக் கிழக்கில் உள்ள நாடுகளிலும் பயிர் செய்யப்படும் ஒருவகைச் செடியின் வேரை இரண்டு மூன்று அங்குல நீளமுள்ள துண்டுகளாக்கி அக்கராகாரம் எனக்கடையில் விற்கின்றனர். இச்செடியின் வளர்ச்சியைப் பற்றி வேறு விளக்கம் எங்கும் கிடைக்கவில்லை.

கடைகளில் கிடைக்கும் அக்கராகாரம் ஒருவகை மணமும் கொண்டுள்ளது. வாயில் வைத்துக்கொண்டு சிறிது சிறிதாகச் சாற்றை உட்கொள்ளச் செய்தால், நாவறட்சி நீங்கும். ஆனால் வாயில் சிறிது நமைச்சலைத் தரும். எரிச்சலையும் தோற்றுவிக்கும். வெகுநேரம் வைத்துக் கொண்டால் புண்ணாகும்.

**பயன்**

தூய்மைப்படுத்திய பாதரசம் கருங்காலிச்சாறு 4 உளுந்து எடை, அக்கராகாரம் 8 உளுந்துஎடை கொண்டு, பின் இரண்டையும் துகளாக்கிக்கொண்டு, அத்துடன் தூய்மைபடுத்திய பாதரசம் 4 உளுந்தெடை கொண்டு, 12 உளுந்தெடை தேன் கலந்து 7 மாத்திரைகள் செய்க. காலையில் ஹம்ஸோதகத்தை அனுபானமாகக் கொண்டு ஒரு மாத்திரை வீதம் உட்கொள்ளச் செய்தால் ஸிப்லிஸ் என்னும் பால் வினை நோய் தீரும்.

ஆகாரகரபாதி சூரணம் என்னும் மருந்து விந்துவைக் கட்டவும், ஆண்மையை வளர்க்கவும் பயன்படுத்தப்படுகிறது.

# 4. அசோக மரம்

**ஸம். அசோகம்** **Guattaria Longifolia**

**தோற்றம்**

இது சீதாப்பழச் செடி வகையைச் சேர்ந்தது. அசோகமரத்தில் இருவகைகள் உண்டு. முதலாவது சிவப்பு நிறமலர்கள் கொண்டது. இதற்கு **Saraka Indika** எனும்பெயரும் காணப்படுகிறது. இரண்டாவது வகை **Polyalthia Longifolia** என்னும் பெயர் கொண்டது. இது ஏறக்குறைய 20 அடி உயரம் வரை வளரக் கூடியது. தெலுங்கு நாட்டில் கோதாவரி கிருஷ்ணா முதலிய வடக்குப் பகுதிகளிலும் மைசூரிலும் என்றும் பசுமை கொண்டு விளங்கும் காடுகளிலும் காணப்படுகிறது. இதன் இலைகள் 18,20 அங்குல நீளமும் 3 அங்குல அகலமும் கொண்டிருக்கும். இளந் துளிராக இருக்கும்போது சிவந்து காணப்படும். மலர்கள் கொத்துக் கொத்தாகப் பூக்கும். பூக்கும் போது ஆரஞ்சு நிறத்திலும் பிறகு நல்ல சிவப்பு நிறத்திலும் காணப்படும். இளவேனில் பருவத்தில் பூக்கும். இதன் காய் சற்று நீண்ட நாவற்பழம் போல் இருக்கும். பழுத்த பின் சிவந்து காணப்படும். இதன் பருப்பு துவர்ப்புச் சுவை கொண்டிருக்கும். இதில் தேவதாரு மரத்தைப் போன்ற ஒருவகையும் காணப்படுகிறது. மாவிலையைப் போன்ற இலை வெளிறிய மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இந்த வகை மரம் மிகவும் உயர்ந்து வளரும்.

**தன்மை**

கசப்புச்சுவையும் துவர்ப்புச்சுவையைத் துணைச்சுவையாகவும் சீதவீரியமும் கொண்டிருக்கும். இதயத்திற்கு நன்மை தரும். பித்தத்தைத் தணிக்கும். நாவறட்சி எரிச்சல் கிருமிநோய் நஞ்சு சோர்வு குன்மம் பெருவயிறு உப்புசம் ஆகியவற்றைப் போக்கும். எலும்பைச் சேர்க்கும். பெண்களின் நோய்களுக்கும், வலி விரணம் வீக்கம் காய்ச்சல் மூலநோய் ஆகியவற்றிற்கும் பயன்படுத்தத்தக்கது. விந்துவைக் கட்டும் ரஸாயனமாகும். கருவை நிலைக்கச் செய்யும். கரு உறுப்பைச் சேர்ந்த நோய்களைப் போக்கும்.

**பயன்**

அசோக விதைத்துகளை நீருடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் சிறுநீர்த்தடை ஆகியவை நீங்கும்.

'அசோககிருதம்' என இதனால் தயார் செய்யப்படும் மருந்து பெரும்பாடு, வயிற்றுவலி, இடுப்பு வலி, பெண்குறியில் தோன்றும் வலி, சடராக்னிக்குறைவு, சுவையின்மை, சோகை, உடல் இளைப்பு, இருமல், இழுப்பு, காமாலை ஆகிய நோய்களைத் தணிக்கும்.

**அசோகாரிஷ்டா**

காய்ச்சல் இரத்தபித்தம் மூலநோய் சடராக்னிக் குறைவு சுவையின்மை நீரிழிவு வீக்கம் ஆகிய நோய்களைப் போக்கும்.

மாதவிடாயில் இரத்தம் மிகுதியாக வெளியேறுவதைத் தணிக்க அசோகம் மிக்க பயன் தருவதாகும். சிவந்தமலர் கொண்டது, சிறந்த குணமுள்ளது.

## 5. அதிவிடயம்

**ஸம். அதிவிஷா** Acomitum Heterophyllum

**தோற்றம்**

அதிவிடயம் நாபி என்னும் விஷமூலிகை இனத்தைச் சார்ந்தது. இதுமிக்க குளுமையுள்ள நிலப்பகுதிகளில் வளர்கின்றது. இவ்வகைச் செடிகள் சிறுபுதர்களாக வளரும். அதிவிடயம் நாபி வகையைச் சேர்ந்ததாயினும் விஷமன்று. இமயமலைப்பகுதியில் அதிவிடயம் மிகுதியாகக்காணப்படுகிறது. இலை பாகல் இலையைப் போல இருக்கும். கிளை தட்டையாக இருக்கும். இலைக்காம்புப் பகுதியிலிருந்து மலர்கள் தோன்றும். மலர்க்காம்புகள் இலைக் காம்புகளை விட நீளமாக இருக்கும். மலர்ந்த பூ தொப்பியைப் போன்ற தோற்றம் கொண்டிருக்கும். இதில் கறுப்பு சிவப்பு வெளுப்பு என மூன்று வகைகள் காணப்படுகின்றன. ஆனால் கடைகளில் வெண்ணிறம் கொண்டதே கிடைக்கிறது.

**தன்மை**

கார்ப்புச் சுவையும் கசப்பைத் துணைச்சுவையாகவும் உஷ்ண வீரியமும் கொண்டது. ஆமரஸத்தைச் செரிமானமடையச் செய்யும். சடராக்னியை வளர்க்கும். கபபித்தங்களைத் தணிக்கும். கருமை நிறமுள்ள அதிவிடயம் பூச்சிகளின் நஞ்சைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். மூலிகைகளில் சிறந்தது.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல், மூன்றுதோஷங்கள், ஆமாதிஸாரம் நஞ்சு இருமல், வாந்தி. கிருமிகள் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

அதிவிடயத்துடன் செய்த பேயா என்னும் கஞ்சியைப் புளிப்புச் சுவையுள்ளசாறு, சுக்கு இவற்றுடன் கலந்து பயன் படுத்தினால் ஆமாதிஸாரம் நீங்கும்.

அதிவிடயத்தை விழுதாக்கித் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் எலிவிஷம் தீரும்.

பசும்பாலும் அதிவிடயமும் சேர்த்துச் செய்த நெய் முறையைப் பயன்படுத்தினால் நஞ்சு தணியும்.

அதிவிடயத்தை மட்டும் விழுதாகச் செய்து, சிறுவர்களுக்குத் தோன்றும் இருமல், வாந்தி, காய்ச்சல் ஆகியவற்றிற்குப் பயன் படுத்தலாம்.

## 6. அத்தி

**ஸம். உதும்பர Eicus Glomerata**

**தோற்றம்**

அத்தி அகன்று உயர்ந்து வளரும் மரமாகும். இது எல்லா இடங்களிலும் வளரும். அடித்தண்டு பருத்தும் மேல்பட்டை வெண்மையாகவும் பச்சை நிறத்துடனும் இருக்கும். வெட்டி னால் பால் சுரக்கும். இலைகள் சிறியவையாகவும் மென்மை யாகவும் இருக்கும். இதன் மலர்கள் காணப்படா. பூவும் காயும் ஒன்றாகவே உண்டாகும். காய் பச்சையாகவும், பழம் சிவப்பாகவும் இருக்கும். பழம் இனிப்பாக இருக்கும். பழத் தினுள் இறக்கையுடன் கூடிய சிறிய பூச்சிகள் மலிந்து காணப் படும். இதன்பால் முதலில் வெண்மையாகவும் காற்றுபட்டதும் சற்று மஞ்சள் நிறம் கொண்டும் காணப்படும்.

இதில் பெரியமரம், சிறிய மரம் என இருவகைகள் காணப் படுகின்றன. பெரிய மரத்தின் இலைகள் சிறியவையாகவும், சிறுமரத்தின் இலைகள் பெரியவையாக அகன்றும் இருக்கும்.

இதன் பாலை அடிவயிற்றில் தோன்றும் வலிக்குத் தொப்புளைச் சுற்றிப் பற்றாகப் பூசுவது வழக்கமாக உள்ளது. உடலில் சூடு மிகுந்துள்ளபோது இதன் காய்களைச் சமைத்து உண்பதுண்டு. கருச்சிதைவு முதலிய கருவுறுப்புகளைச் சார்ந்த நோய்களில் இதன் காய்கள் பயன்படுகின்றன. இதன்பட்டை விரணங்களைக் கழுவும் நீரில் சேர்க்கப்படுகிறது. இதன் கட்டை வங்கம் முதலிய உலோகங்ளைத் தூய்மை படுத்தப் பயன்படும்.

அத்தியில் காட்டத்தி அல்லது சீமை அத்தி என்ற வகை ஒன்றுண்டு. இதை வடமொழியில் காகோதும்பரிகா என் கின்றனர். இது கசப்பு துவர்ப்புச் சுவைகளும் குளுமைத் தன்மையும் கொண்டது. விந்துவைக் கட்டும். கபத்தையும் பித்தத்தையும் தணிக்கும்.

**தன்மை**

அத்திப்பிஞ்சு துவர்ப்புச்சுவை கொண்டிருக்கும். சட ராக்கினியை வளர்க்கும். சுவையைத் தோற்றுவிக்கும். மாமி சத்தை வளர்க்கும். இரத்த தோஷத்தைப் போக்கும். விந்துவைக் கட்டும். பித்த கபங்களைத் தணிக்கும். நாவறட் சியைப் போக்கும்.

காய் இனிப்புச் சுவையுடன் துவர்ப்புச் சுவையும் கொண்டு, குளுமைத் தன்மையுடையதாக இருக்கும். பித்தத்தைத் தணிக்கும். நாவறட்சியையும் வாந்தியையும் இரத்தப் போக்கையும் தணிக்கும்.

**பழுத்தபழம்**

பழுத்தபழம் இனிப்புச்சுவையும் குளுமைத்தன்மையும் கொண்டிருக்கும். வயிற்றில் பூச்சிகளைத் தோற்றுவிக்கும். இரத்தபித்தம் மூர்ச்சை எரிச்சல் நாவறட்சி ஆகியவற்றைப் போக்கும். பித்தத்தைத் தணிக்கும்.

**பட்டை**

பட்டை துவர்ப்புச் சுவையும் குளுமைத்தன்மையும் கொண் டிருக்கும். கருச்சிதைவைத் தணிக்கும். தாய்ப்பாலை மிகுதி யாக்கும். விரணங்களைத் தீர்க்கும்.

காட்டத்திப்பழம் இனிப்பு புளிப்புச் சுவைகளும், எண்ணெய்ப் பசையும் குருத்தன்மையும் கொண்டிருக்கும். மலத்தைக்

கட்டும். தோல்நோயையும் இரத்த பித்தத்தையும் போக்க வல்லது.

**காட்டத்திப்பிஞ்சு**

காட்டத்திப்பிஞ்சு இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் எண்ணெய்ப்பசையும் குருத்தன்மையும் கொண்டிருக்கும். பக்குவமாகும்போது இனிப்புச்சுவை கொள்ளும்.

மலத்தைக் கட்டும். விந்துவை வளர்க்கும். உடலைச் செழிக்கச் செய்யும். மூன்று தோஷங்களையும் க்ஷயம் எரிச்சல் நஞ்சு இரத்ததோஷம் ஆகியவற்றையும் போக்கும்.

**பயன்**

காட்டத்திச் சுரஸத்தை வெல்லம் கலந்து பருகச் செய்தால் வெண்குட்டம் தணியும்.

அத்திப்பாலில் எள்ளை ஆறு முறை பாவனை செய்து விழுதாக்கி, அத்திக்கட்டைக் கஷாயத்தையும் எள் எண்ணெயையும் முன்னதைப் போல் பாவனை செய்து ஒன்றாகக் கலந்து தைலப் பக்குவம் செய்து பெண்குறியில் பயன்படுத்தினால் அங்கு தோன்றிய நோய்கள் தீரும். அத்திக்கட்டை விழுதைத் தாய்ப் பாலுடன் சேர்த்துப் பயன்படுத்தினால் மிகுந்துள்ள சடராக்னி தணியும்.

அத்தித்தளிர் விழுதை உட்கொள்ளச் செய்தால் விந்து கட்டுப்படும். குளுமைத்தன்மை தரும். பித்தத்தைத் தணிக்கும்.

அத்திப் பழச் சாற்றைப் பருகினால் இரத்தபித்தம் தணியும்.

அத்திப் பழச்சாற்றில் சர்க்கரை கலந்து பயன்படுத்தினால் நாவறட்சி நீங்கும்.

அத்திக்காயைத் தாய்ப்பாலுடன் அரைத்து, இரும்புப் பாத்திரத்தினுள் பூசி, நெய்யில் நனைத்த வன்னி இலைகளை எரித்து தூபம் போட்டு அதைக் கண்களில் மை போல் இட்டால் எரிச்சல் வலி கண்ணீர் பெருகுதல் எனுமிவை தணியும்.

புரசின் காய் அத்திக்காய் எனும் இவற்றை மைய அரைத்து, எள் எண்ணெயையும், தேனையும் கலந்து பெண்குறியில் பூசிக் கொள்ளச் செய்தால் அப்பகுதி திடமாகும்.

சீமை அத்திவேரையும் ஊமத்தைக் காயையும், மைய அரைத்து, அரிசி கழுவிய நீருடன் பருகச் செய்தால் வெறிநாய் நஞ்சு நீங்கும்.

அத்திக் கட்டைக் கஷாயத்தில், சம்பாஅரிசி மாவையும், சர்க்கரையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் கருச்சிதைவால் தோன்றிய துன்பம் நீங்கும்.

சீமை அத்திப் பாலை மேல் பூச்சாகப் பயன்படுத்தி நெய்யை உட்கொண்டு வந்தால் மூலநோய் தணியும்.

அத்திச் செடியில் முளைத்த பதனிகை (காளானைப்போல் ஒரு மரத்தின் கிளைகளில் அதன் சாற்றையே உணவாகக் கொண்டு வளரும் சிறுசெடி)யை விழுதாக அரைத்து ஆட்டின் பாலில் கலந்து மாதவிடாய்க் காலத்தில் முதலில் குடலைத்தூய்மை படுத்திக்கொண்டு பருகச் செய்தால், மலடியும் பிள்ளைப் பேற்றை அடையக்கூடியவளாவாள்.

## 7. அமுக்கராக்கிழங்கு

**ஸம். அச்வகந்தா** Withamia Somnifora

**தோற்றம்**

சிறிய செடியாக 2½ முழம் உயரம் வரை வளரக் கூடியது. பல கிளைகளுடன் தோன்றும். இலை அடியில் அகன்று குறுகிக் கூர்மையுடன் காணப்படும். மலர் சிறியதாகவும் இதழ்களுடனும் காணப்படும். இதன் நிறம் மஞ்சள் கலந்த பச்சையாகும். கிண்ணம் போன்ற தோற்றத்துடன் காணப்படும். இதன் காய் பட்டாணியைப் போன்று சிறிய அளவில் சிவப்பு நிறத்துடன் காணப்படும். வேர் சிறுமுள்ளங்கியைப் போல காணப்படும். இந்தச் செடியின் பச்சைவேர் குதிரையின் சிறுநீரின் மணம் கொண்டிருக்கும். உலர்ந்தபின் மணம் இருக்காது அல்லது சிறிதளவே இருக்கும். வேர் கசப்புச் சுவை கொண்டிருக்கும்.

குதிரையின் மணம் கொண்டதால் 'அச்சுவகந்தா' என்றும் பன்றியின் காதுகளைப் போன்ற இலைகளை உடையதாகை யால் 'வாராகிகர்ணி' என்றும் வடமொழியில் பெயர்கள் ஆயின. சிறியது பெரியது என இரண்டு வகைகள் உண்டு. சிறியது மெலிந்த கிழங்குகள் உடையதாகும். மலைப்பாங்கான இடங் களிலும் காடுகளிலும் மிகுதியாக வளரும். விஷநாபி என்னும் கிழங்கின் நஞ்சுக்கு இது முறிப்பாகுமெனக் கூறப்படுகிறது.

**தன்மை**

கசப்புச் சுவையும், துணைச் சுவையாக துவர்ப்பும், உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும்.

தீர்க்கும் நோய்கள் : இருமல் இழுப்பு வெண்குட்டம் க்ஷயம் நஞ்சு விரணங்கள் கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும்.

அமுக்கராக்கிழங்கின் க்ஷாரத்தைத் தேன் நெய்களுடன் உட்கொள்ளச் செய்தால் இழுப்புநோய் நீங்கும்.

**பயன்**

அமுக்கராக்கிழங்கின் இலையை விழுதாக்கிக் கொதிக்க வைத்து, இளஞ்சூடாக இருக்கும்போது மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் கட்டிகள் நீங்கும்.

அமுக்கராக்கிழங்கு கடுகு புற்றுமண் ஆகியவற்றை மெத்தென்று அரைத்து, தேனுடன் கலந்து, அடர்த்தியாகப் பூசினால் ஊருஸ்தம்ப வாதம் நீங்கும்.

அமுக்கராக்கிழங்கின் கஷாயத்துடன் பால் சர்க்கரை கலந்து நாள்தோறும் காலையில் பருகச்செய்தால், உடல்உலர்ந்து போதல் நீங்கி வலிமை உண்டாகும்.

அமுக்கராக்கிழங்கின் கஷாயத்தை, அமுக்கராக்கிழங்கின் விழுதைச் சேர்த்து நான்கு மடங்கு பாலும், ஒரு மடங்கு நெய்யும் கலந்து, முறையாகப் பக்குவம் செய்து பயன்படுத்தினால் வாத நோய்கள் நீங்கும். விந்துவும் மாமிசமும் வளர்ச்சி பெறும்.

அமுக்கராக்கிழங்கின் துகளைப் பால் நெய் எண்ணெய் இவற்றுள் ஒன்றுடன் ஒன்றரை மாதம் பயன்படுத்தினால், குழந்தைகளுக்குத் தோன்றும் உடல் இளைப்பு நீங்கி வலிமையுண்டாகும்.

அமுக்கராக்கிழங்கின் துகளைப் பசுவின் சிறுநீருடன் அரைத்துப் பயன்படுத்தினால், மிகவும் முற்றிய பெருவயிறு கிருமிநோய் வீக்கம் ஆகியவை நீங்கும்.

அமுக்கராக்கிழங்கின் கஷாயத்தை இளஞ்சூட்டில் நெய்ப் பக்குவம் செய்து மாதவிடாய்க் காலத்தில் உட்கொள்ளச் செய் தால், மலடு நீங்கிப் பிள்ளைப் பேறு உண்டாகும்.

ஆயுர்வேத முறையில் விந்துவையும் ஆண்மையையும் வளர்க்கும் ரஸாயன மருந்துகளில், பெரும்பாலும் இது பயன் படுத்தப்படுகிறது. நோயால் இளைத்தவர்கள் நரம்பு வியாதி யால் தூக்கமின்மை, நாபி முதலியவற்றின் நஞ்சு உடலில் பரவு தல், பால்வினை நோய்களில் நஞ்சு உடம்பில் தங்கியிருத்தல் ஆகியவற்றில் அமுக்கராக்கிழங்கு லேகியம் முதலியவை மிகவும் பயன் தரும்.

## 8. அரசு

**ஸம். அச்வத்த** Ficus·.Religiosa

**தன்மை**

அரசு, நம் நாட்டினருக்குப் பூசனைக்கு உரிய மரமாகும். இதன் எல்லாப் பகுதிகளும் நமக்கு உடல் நலத்தை வளர்ப்பன வாக அமைந்துள்ளன. நிழல் தரும் மரங்களில் சிறந்தது. இதன் நிழல் குளுமையாக இருக்கும். இலைக் காம்புகள் நீளமாக இருக்கும். முக்கோண வடிவில் நீண்ட கூரிய முனைப் பகுதி யுடன் இலைகள் காணப்படும். இலைகள் எப்பொழுதும் அசைந்து கொண்டே இருக்கும். இலைக் காம்புகளைக் கிள்ளினால் வெண்மை நிறமுள்ள பால் சுரக்கும். இலைக் காம்புகளின் அருகில் உருண்டையான சிறு காய்கள் தோன்றும். இதன் இளங்கிளைகளை யானைகள் தின்னும்.

அரசில் க்ஷுத்ர அச்வத்தம், பாரிஷம் (பூவரசு) நந்தி விருக்ஷம் எனவேறு மூன்று வகைகள் இருக்கின்றன. சிறு இலை களைக் கொண்டது க்ஷுத்ர அச்வத்தம் எனப்படுகிறது. (அவை தனியாக விளக்கப்பட்டுள்ளன).

**தன்மை**

துவர்ப்புச் சுவையும் குருத்தன்மையும், வறட்சியும் சீதவீரிய மும் கொண்டது. எளிதில் செரிமானமாகாதது. நல்ல நிறத்தைத் தோற்றுவிக்கும். எரிச்சலைப் போக்கும். இதன் பழுத்த பழம் குளுமைத் தன்மை கொண்டது. இதயத்திற்கு நன்மை தர வல்லது.

**தீர்க்கும் நோய்கள்**

பித்தம் கபம் விரணம் இரத்தப்போக்கு எனும் இவற்றை நீக்க வல்லது. சிறப்பாகப் பெண்குறியில் தோன்றும் நோய்களைத் தீர்க்கவல்லது. இதன் பழம் இரத்தபித்தம் நஞ்சு எரிச்சல் வாந்தி சுவையின்மை ஆகியவற்றைப் போக்கவல்லது.

**பயன்**

அரசுக்கட்டை கஷாயத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாதரத்தம் நீங்கும்.

அரசு இலையை விரணங்களின்மேல் மூடிக்கட்டினால் விரைவில் ஆறும்.

மருதம்பட்டை அத்திப்பட்டை அரசப்பட்டை இவற்றின் துகளை விரணங்களின் மேல் தூவினால் விரைவில் புண் ஆறும்.

அரசுக்கட்டை கஷாயத்தைப் பருகச் செய்தால், நீலம் படரும், மேக நோய் நீங்கும்.

அரசுப்பழம் வேர் பட்டை விழுது எனும் இவற்றுடன் காய்ச்சிய பாலைச் சர்க்கரையும் தேனும் கலந்து பருகச் செய்தால் ஆண்மை மிகும்.

அரசு புரசு மருது எனும் இவற்றின் பட்டையை விரணங்களின் மேல் வைத்துக் கட்டினால் அவை விரைவில் ஆறும்.

அரசமரத்தின் மேல் முளைத்த (பதனிகை எனப்படும்) காளான் போன்ற சிறுசெடியைப் பாலில் இட்டுக் காய்ச்சி உட்கொள்ளச் செய்தால் கரு நிலைக்கும்.

உலர்ந்த அரசம்பட்டையை எரித்து, நீரில் கலக்கித் தெளிய வைத்து, மேலே தெளிந்த நீரை வடிகட்டிப் பருகச் செய்தால் கொடிய வாந்தி நீங்கும்.

உலர்ந்த அரசம்பட்டையை மைய அரைத்து, அத்துகளை நெருப்பால் சுட்ட விரணத்தின் மேல் தூவினால் புண் விரைவில் ஆறும்.

அரசுப்பட்டை கஷாயத்தைப் பருகச் செய்தால் கனேரியா என்னும் பால்வினை நோய் நீங்கும்.

அரசுத்துளிரைப் பாலில் இட்டுக் காய்ச்சிச் சர்க்கரை சேர்த்துப் பருகச் செய்தால் குளுமை தரும். உடலைச் செழிப் புறச் செய்யும்.

## 9. அடபதியங்கிழங்கு

**ஸம். ஜீவந்தி** Lcptadaniaraticulata

**தோற்றம்**

இது கொடியாக வளரும் கிழங்கு வகையைச் சார்ந்தது. இதன் கொடி சிவப்பு நிறம் கொண்டிருக்கும். இலை வெற் றிலையைப் போலச் சற்றுச் சிறிதாகவும், எளிதில் ஒடிக்கக் கூடியதாகவும் இருக்கும். இலையை ஒடித்தால் பால் சுரக்கும். மிக்க இனிப்புச் சுவை கொண்டதாகும். இதில் சிறியது பெரியது என இரண்டு வகை உண்டு. 'சுவர்ணஜீவந்தி' எனும் மற்றொரு வகையில் தங்க நிறப்பால் சுரப்பது உண்டு எனவும் தெரிய வருகிறது. அது இமயமலைச்சாரலில் தோன்றுவது என அறியப்படுகிறது. பெரிய ஜீவந்தி பாதரஸத்தைக் கட்டக் கூடியதாகும். கீரை வகைகளில் இது மிகச் சிறந்தது. தாதுக் களை நன்கு வளர்ப்பதாகும்.

**தன்மை**

இனிப்புச் சுவையும் சீத வீரியமும் கொண்டது. கண்களுக்கு இதமானது. உண்டதும் விந்துவைத் தோற்றுவிக்கக் கூடியது. வலிமையை வளர்ப்பது.

இதன் காய்கள் இனிப்புச் சுவையும், குருகுணமும் கூடிய தாகும். தாதுக்களை வளர்க்கும். (சிலர் இந்தக் கொடி காய்க் காது எனக் கூறுகின்றனர். ஆனால் நூல்களில் இதன் காய் களுக்கு குணங்கள் கூறப்பட்டுள்ளன.)

**தீர்க்கும்**

இரத்தபித்தம், எரிச்சல், வாதநோய்கள் என்பன.

**பயன்**

உலர்ந்த அல்லது பச்சையான கிழங்கைக் கொண்டு தயிர் மாதுளம்பழச்சாறு இவற்றுடன் கலந்து, பக்குவம் செய்து மிகுதியாக நெய் கலந்து உணவாகக் கொண்டால் அதிஸாரம் தணியும்.

சிறுகீரை, அடபதியன்கீரை ஆகியவற்றைச் சமைத்து உண்டால் நஞ்சு நீங்கும்.

இதன் இளம் தளிர்களை நெய்யில் வதக்கி, உட்கொண்டால் இரவில் கண் தெரியாமை நீங்கும்.

இதன் கிழங்கை மெத்தென்று அரைத்துச் சாறு பிழிந்து அதைத் தடவினால் விரணங்கள் குணமாகும்.

அடபதியன் வேரின் விழுதை எண்ணெயுடன் உட்கொண்டால், ஒரு பக்கம் தோன்றும் ஒற்றைத் தலைவலி நீங்கும்.

## 10. அதிமதுரம்

**ஸம். யஷ்டிமது** Glycrrhizaglabra

**தோற்றம்**

யஷ்டிமது மற்றும் கிலீதநகம் என்று இது இருவகைப்படும். இவற்றில் கிலீதநகம் என்பது நீர்ப்பாங்கான இடங்களில் தோன்றுவது, ஏனைய பகுதிகளில் தோன்றுவது என இருவகைப்படும் என்று சரகர் கூறியுள்ளார். ஆனால், நீர்ப்பாங்கான இடங்களில் தோன்றுவது அதிமதுரம் என்றும், நீர் குறைவாக உள்ள பகுதிகளில் தோன்றுவது கிலீதநகம் என்றும் ஒரு கருத்து நிலவி வருகிறது. இவற்றில் கிலீதநகம் இனிப்புச் சுவையை மிகுதியாகக் கொண்டதாகும். யஷ்டிமது இனிப்பும் சிறிது கசப்புச் சுவையும் கொண்டிருக்கும். கிலீதநகம் இனிப்புச் சுவையே கொண்டிருக்கும் என்று சில நூல்கள் கூறுகின்றன. இது சிறு செடி வகையைச் சேர்ந்தது. இலைகள் சிறியவையும் வட்டமான தோற்றமும் கொண்டிருக்கும். காய்கள் மெல்லியவையாகவும், சிறியவையாகவும் இருக்கும். மலர் சிவந்த நிறம் கொண்டிருக்கும். இச்செடியின் அடித்தண்டு இனிப்பாக இருக்கும். கிலீதநகம் நீர்ப்பாங்கான இடத்தில் கொடியைப் போல் படரும். இது அலித்தன்மையைப் போக்கவல்லது. ஆகையால் இதற்கு 'கிலீதநகம்' என்ற பெயர் வழங்கலாயிற்று.

**விளைநிலம்**

அரேபியா போன்ற மணற்பாங்கான இடங்களிலும், பஞ்சாப் சிந்து பிரதேசங்களிலும் மிகுதியாக விளைகிறது.

**தன்மை**

இனிப்புச் சுவையும் எண்ணெய்ப்பசையும் குருத்தன்மையும் கூடியது. கண்களுக்கு நன்மை தரவல்லது. உடலுக்கு வலிமை

யையும் நல்ல நிறத்தையும் தோற்றுவிக்கும். விந்துவையும் தலை முடியையும் வளர்க்கும். குரலைச் செம்மைப் படுத்தும். பித்தத்தைத் தணிக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

வாதரத்தம், விரணம், வீக்கம், நஞ்சு, வாந்தி, நாவறட்சி, சோர்வு, க்ஷயம் ஆகியவற்றைத் தீர்க்கும். அதிமதுரத்துகளைப் பாலுடன் உட்கொள்ளச் செய்தால் இரஸாயனமாகும்.

அதிமதுரம் சுக்கு இவற்றைக் கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால், அடிபடுதலால் உண்டாகிய இளைப்பு நீங்கும்.

அதிமதுரம் கடுகரோகிணி எனும் இவற்றின் விழுதைச் சர்க்கரை கலந்துள்ள நீருடன் பருகச் செய்தால் இதய நோய் தீரும்.

கரு சுருங்கியபோதும், குழந்தை இளைத்த போதும், குமிழம் வேர் அதிமதுரம் சேர்த்துக் காய்ச்சிய பாலில் சர்க்கரை கலந்து பருகச் செய்க.

அதிமதுரக் கஷாயத்தைத் தேன் கலந்து மூக்கில் இடு மருந்தாகப் பயன்படுத்தினால், ஒரு பக்கத் தலைவலி நீங்கும். அதிமதுரச் சூரணம் அல்லது கஷாயத்தைச் சமஅளவு தேன் கலந்து பயன்படுத்தினால், சோகைநோயைத் தணிக்கும். அதிமதுரம், சந்தனம் இவற்றைப் பால் விட்டு, அரைத்து விழுதாக்கிப் பாலில் கலந்து குடிக்கச் செய்தால் இரத்த வாந்தி நிற்கும்.

திராட்சை அதிமதுரம் இவற்றின் கஷாயத்துடன், காய்ச்சிய பாலைப் பருகச்செய்தால், சிறுநீர்த்தடையால் தோன்றிய வயிற்று உப்புசம் நீங்கும்.

அதிமதுரத்துகள் ஒரு உளுந்து எடை, நாபிக் கிழங்குத் துகள் நாலில் ஒரு பங்கு, இவற்றிற்குச் சமஅளவு கடுகுத் தூளை நன்றாகக் கலந்து, மூக்கில் இடு மருந்தாகப் பயன்படுத்தினால், எல்லா வகையான தலை நோய்களும் தீரும்.

அதிமதுரத்தைக் கல்யாண பூசுணிச்சாற்றுடன் அரைத்து, விழுதாக்கி மூன்று நாட்கள் பயன்படுத்தினால், கால்கைவலி நீங்கும்..

அதிமதுரத்துகள் ஒரு தோலா எடை நெய் தேன் கலந்து உட்கொண்டு பாலைப் பருகி வந்தால் காற்றைப் போல் வேகமுள்ளவன் ஆவான்.

அதிமதுரத்தின் விழுதைப் பாலுடன் கலந்து சர்க்கரை சேர்த்துப் பருகச் செய்தால் தாய்ப்பால் வளரும்.

## 11. அரத்தை

**ஸம். ராஸ்னா** Vanda Raxburgh

**தோற்றம்**

இது கிழங்கு வகையைச் சேர்ந்தது. சிற்றரத்தை பேரரத்தை என இரண்டு வகைகள் உண்டு. இவற்றில் சிற்றரத்தை வேராகவும், புல்லைப் போலவும், இலையாகவும் இருக்கலாம் என்பது ஒரு நூலில் கூறப்பட்டுள்ளது. பேரரத்தையின் இலை கரிசலாங்கண்ணி இலையைப் போலவும், சிற்றரத்தை ஏலக் கொடி இலையைப் போன்ற இலையைக் கொண்டிருக்கும் என்றும் கூறப்படுகிறது. இரண்டின் சுவையும் மணமும் ஒன்றாகவே இருக்கும். ஆனால் தன்மைகள் சிறிது வேறுபட்டுக் காணப்படுகின்றன. சிற்றரத்தை இழுப்பு, இருமல், வாதநோய் முதலியவற்றைப் போக்கும். பேரரத்தை கிருமிநோய் தேள்விஷம் ஆகியவற்றைப் போக்கும்.

சிற்றரத்தைப் பெரும் பாறைகள் நிறைந்த இடங்களில் தோன்றுகிறது. பேரரத்தை மலைப்பாங்கான பகுதிகளில் தோன்றுகிறது. இதன் இலைகள் நறுமணம் கொண்டிருக்கும். சிற்றரத்தையில் கிழங்காகவும் இலையாகவும் இருப்பது சிறந்தது. புல்லைப் போல் இருப்பது நடுத்தரமானது.

**தன்மை**

கசப்புச் சுவையும் குருகுணமும் உஷ்ணவீர்யமும் கொண்டிருக்கும். ஆமத்தைப் (செரிமானமடையாத நிலையில் குடலில் தங்கியுள்ள உணவுச் சாறு) பக்குவம் செய்யும். கபவாதங்களைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வீக்கம், இழுப்பு, வாதபித்தம், வாதத்தால் தோன்றும் வலி, பெருவயிறு, இருமல், காய்ச்சல், நஞ்சு, எண்பத்து நான்கு வகை வாதவிகாரங்கள், விக்கல் ஆகிய நோய்களைத் தணிக்கும்.

**பயன்**

மூல நோயில் மிக்க வலி கொண்டபோது, எண்ணெய்க் குளியலுடன் அரத்தையின் விழுதைக் கொண்டு, மூலநோய் உள்ள இடத்தில் ஒற்றடம் கொடுத்து வியர்க்கச் செய்தால் வலி குறையும்.

சித்தரத்தை ஆயிரம் பலங்கள் கொண்டு கஷாயம் காய்ச்சி அதில் ஒரு துரோணம் அளவுள்ள எண்ணெயும், இமயமலையில் தோன்றிய ஏலம் முதலிய கூட்டுப் பொருள்களின் விழுதையும் கலந்து பக்குவம் செய்து பயன்படுத்தினால், வாத நோய்கள் தணியும்.

சித்தரத்தை ஒரு பலம், தூய்மைப்படுத்திய குக்குலு 5 கர்ஷம் கொண்டு, நெய்யில் மைய அரைத்து, மாத்திரைகளாக்கிப் பயன்படுத்தினால் கிருத்ரஸிவாதம் தணியும்.

சித்தரத்தையைப் பாலில் கொதிக்க வைத்து அதை வடி கட்டிச் சர்க்கரை கலந்து பயன்படுத்தினால், கபத்தையும், வாதத்தையும் தணிக்கும்.

## 12. அரேணுகம் (காட்டு மிளகு)

**ஸம். ரேணுகா** Piper Aurantiacum

**தோற்றம்**

இது மிளகைப் போன்ற கொடியாகப் படர்ந்து, மிளகைப் போல் உருண்டையான விதைகளைக் கொண்டது. இதைக் காட்டு மிளகு என்றும் கூறுவர். நறுமணப்பொருள்களில் இதுவும் ஒன்றாம். நறுமணமுள்ள எண்ணெய் முதலியவற்றைத் தயார் செய்ய இதுமிகவும் பயன்படுகிறது. ஆண்டிற்கு இருமுறை பலன் தருவது. வெண்மை நிறமுள்ள இலைகளைக் கொண்டது. நோய்களைப் போக்குவது ஆகையால் இதற்கு வடமொழியில் ஹரேணுகா, பாண்டுபத்ரீ, த்விஜா என்ற பெயர்கள் தோன்றின.

நொச்சியின் விதையைச் சிலர் அரேணுகம் என்று கூறுகின்றனர். இதுபெரிய மரமாகும் என்றும், வட்டமான வடிவமுள்ள இலைகளும் மலர்களும் கொண்டிருக்கும் என்றும் சிலர் கூறுகின்றனர். இதன் இலை துவரை இலையைப் போல் மென்மையாய் அடிப்பகுதி வெண்மையாகவும், மேற்பகுதி பச்சை நிறமும் கொண்டிருக்கும். இந்தச் செடியில் வேர்க்

கடலையைப் போன்ற நிறம் கொண்டு, தோன்றும் காய்கள் 'அரேணுகம்' எனப்படும்.

**தன்மை**

கசப்புச் சுவையும், கார்ப்புச் சுவையும் கொண்டது. பக்குவமடையும் போது கார்ப்புச் சுவைகொள்ளும். சடராக்னியை வளர்க்கும். அறிவை வளர்க்கும். பித்தத்தை வளர்க்கும். வாதகபங்களைத் தணிக்கும். கருச்சிதைவைத் தோற்றுவிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

நாவறட்சி, அரிப்பு, நஞ்சு, எரிச்சல், சோர்வு ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

அரேணுகத்தையும் திப்பிலியையும் சம அளவில் கொண்டு, தூளாக்கித் தயிருடன் உட்கொண்டால் இருமல் நீங்கும்.

மா நாவல் இவற்றின் மலர்களுடன் அரேணுகத்தைச் சேர்த்து மைய அரைத்து, அத்துடன் நெய்யும் தேனும் கலந்து, கண்களில் மை போல் இட்டால், கண் நோய்கள் நீங்கும்.

## 13. அரளி

**ஸம். கரவீர** Neriumoliander

**தோற்றம்**

அரளி நம் நாட்டில் எங்கும் கிடைப்பது. இதில் பல வகைகள் காணப்படுகின்றன. இது வெள்ளை, சிவப்பு, மஞ்சள் என மூன்று வகையான மலர்களைக் கொண்ட பூச்செடியாகும். நந்தவனங்களில் காணப்படும். மஞ்சள் நிற மலர், நீண்ட கிண்ணம் போன்ற தோற்றத்துடன் காணப்படும். சிவப்பு வெள்ளை நிறம் கொண்டவை. ரோஜா இதழ்களைப் போன்ற இதழ்களுடன் காணப்படும். பலஅடுக்குகள் கொண்ட இதழ்களுடன் கூடிய ஒரு வகையும் காணப்படுகிறது. மரக்கிளைகள் மிகவும் இலேசானவை. இலை மலர்களைப் பறித்தால் வெள்ளை நிறமுள்ள பால் சுரக்கும். சிவப்பு வெள்ளை கறுப்பு நிறங்களுடன் கூடிய காய்கள் தோன்றும். அவை 6, 7 அங்குல நீளமுள்ளவையாக இருக்கும். மஞ்சள் நிறமுள்ள மலர்கள் பூக்கும் செடியின் காய்கள் சதுரவடிவில் இருக்கும். அரளி விதைகள் மிகவும் நச்சுத் தன்மை கொண்டவை.

**தன்மை**

கசப்பு துவர்ப்பு கார்ப்பு என்னும் சுவைகளைக் கொண்டது. உஷ்ண வீரியமுள்ளது. உட்கொண்டால் நஞ்சாகிவிடும். மேல் பூச்சுக்குப் பயன்படுவதாகும். மற்றும் சிரோவிரேசனமருந் தாகவும் பயன்படும்.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் கிருமி அரிப்பு கண்நோய் குட்டம் என்பனவற்றைப் போக்கவல்லது. சரகர், இதைக் குட்டம் சிறுநீர்க்குழாயில் தோன்றும் கல் இவற்றை நீக்கப் பயன்படுத்தலாம் என்று கூறி யுள்ளார்.

**பயன்**

அரளிவேர் அல்லது மரப்பட்டையை அரைத்துக் கட்டினால் கட்டிகள் தீரும். இதன் மரக்கட்டை அல்லது வேர்க்கட்டை அல்லது இலைகளை அரைத்து எண்ணெயிலோ, நெய்யிலோ வதக்கிப் பூசினால், குட்டம், அரிப்பு, பூச்சிகளின் நஞ்சு என்பவை தீரும். இதன்பால், அதிக பேதியாகச் செய்யும். (சிறிதேனும் அளவுக்குமிஞ்சிப் பயன்படுத்தினால் கொன்றுவிடும்) இதற்குக் கற்கண்டுத்துகள் கலந்த தயிர், எருக்கன்வேர்த்துகள் கலந்த எருமைப்பால், கடுக்காய் கஷாயம் என்பன முறிப்புப் பொருள் களாகும்.

## 14. அழிஞ்சில்

**ஸம். அங்கோல** Alangium Lamarkii

**தோற்றம்**

நடுத்தர உயரமுள்ள மரமாகும். சிறு உரோமங்களைப் போன்றவை நிறைந்து காணப்படுவது. சிறு மரம் 20 அடிகள் உயரம் கொண்டிருக்கும். இலைகள் $1\frac{1}{2}-3$ அங்குலம் வரை நீளமுள்ளவை. நம் நாட்டின் தென் பகுதியில் மிகுதியாக வளர்கிறது. இதன் மலர்கள் வெண்மை நிறமும், பழங்கள் சிவப்பு நிறமும் கொண்டிருக்கும்.

**தன்மை**

கார்ப்பு துவர்ப்புச் சுவைகளும் தீக்ஷ்ணமும் எண்ணெய்ப் பசையும் கொண்டது. உஷ்ண வீரியமுள்ளது. மலத்தை வெளியேற்றும். கபபித்தங்களைத் தணிக்கும். கிருமி வலி ஆமவீக்கம் கிரகதோஷம் நஞ்சு அக்கி இரத்ததோஷம் ஆகிய வற்றைப் போக்கும்.

**பழம்**

அழிஞ்சிற்பழம் இனிப்புச் சுவையும் குருத்தன்மையும் கொண்டது. குளுமை தருவது. உடலுக்கு வலிமையூட்டும். மலத்தை வெளியேற்றும். மூன்றுதோஷங்களையும் அழற்சி க்ஷயம் இரத்ததோஷம் ஆகியவற்றையும் போக்கும். கபத்தை வளர்க்கும். சடராக்னியின் வலிமையைக் குறைக்கும்.

**விதை**

இனிப்புச் சுவை குருத்தன்மை எண்ணெய்ப்பசை கொண்டது, குளுமைத்தன்மை கொண்டது. பக்குவம் அடையும் போது இனிப்புச் சுவை கொள்ளும். தாதுக்களையும் விந்துவையும் வளர்க்கும். உடலுக்கு வலிமை தரும். சடராக்னியை மந்தமாக்கும். வாதபித்தங்களைத் தணிக்கும். அழற்சி க்ஷயம் இரத்ததோஷம் அக்கி ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

அழிஞ்சில்வேரை ஆட்டின் சிறுநீருடன் அரைத்துப் பருகவும் மேற்பூச்சாகவும் பயன்படுத்தினால் எலிக்கடி விஷம் நீங்கும். அழிஞ்சில் வேரைக் கழுநீருடன் அரைத்துப் பருகச் செய்தால் அதிஸாரமும் கிரகணி நோயும் தணியும்.

இதன் பட்டையைப் பாலுடன் அரைத்துப் பருகச் செய்தால் வெறி நாய்க்கடியால் தோன்றும் நஞ்சு நீங்கும்.

அழிஞ்சில் வேரின் கஷாயத்தைக் கெட்டியாகும் வரை காய்ச்சி அதில் தேனைச் சேர்த்து முதலில் எண்ணெய்க் குரியலாலும் உடல் வியர்க்கச் செய்தலாலும் தூய்மை பெற்றபின் உட்கொள்ளச் செய்தால் நஞ்சினால் தோன்றும் துன்பங்கள் தீரும்.

அழிஞ்சில்விதை எண்ணெயைத் தொப்புளில் பூசிக் கொண்டால் கலவியின்போது விந்து விரைவில் வெளியேறாது. இதன் பட்டையில் துகளுடன் சம அளவு வெல்லம் கலந்து கழற்சி அளவு மாத்திரைகளாகச் செய்து, 3 மாத்திரை அளவில் இடுவிஷத்தை நீக்க உட்கொள்ளச் செய்யலாம். இம் மாத்திரைகளை உட்கொள்ளும் போது தண்ணீரில் மூழ்கித் தொப்புள் அளவு வரை தண்ணீரில் நின்று கொண்டு உட்கொள்ள வேண்டும். வாந்தியாகலாம்.

# 15. அவுரி

**ஸம். நீலினி** Indigofera Tinstria

**தோற்றம்**

2½ அல்லது 3 கைகள் உயரம் வளரும் செடியாகும். இச்செடியில் உரோமங்களைப் போன்றவை நிறைந்திருக்கும். இலை இரண்டு முதல் ஆறு வரை சேர்ந்து முடிவில் ஓரடி நீளம் வரை இருக்கும். இலைக்காம்புகளின் அடியிலிருந்து மலர்க்காம்புகள் தோன்றுமாயின் சிறியவையாக இருக்கும். கோடையில் மழை பெய்ததும் நிலத்தை உழுது இதை விதைப்பார்கள். மூன்று மாதங்களுக்குப் பிறகு பூக்கும் இதன் மலர்களைப் பறித்து நீலச்சாயம் தயார்செய்யப்பயன்படுத்துவார்கள். இதில் சாதாரணநீலி, மகாநீலி என இருவகைகள் உண்டு. பெரிய இலைகளைக் கொண்டது பெரியநீலி. இது சிறந்தது எனக்கூறப் படுகிறது.

**விளைநிலம்**

மத்தியபிரதேசம், உத்திரபிரதேசம், பீஹார், வங்கம் எனும் பகுதிகளில் மிகுதியாக விளையும்.

**தன்மை**

கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. உஷ்ணவீரிய முள்ளது. தலைமுடிக்கு நன்மை தரும்.

**தீர்க்கும் நோய்கள்**

சூடு மயக்கம் தலைச்சுற்றல் வயிற்று நோய் பண்ணீரல் வீக்கம் வாதம் இரத்ததோஷம் கபம் ஆமவாதம் உதாவர்த்தம் வெறி கொடியநஞ்சு கிருமி இடுப்பில்சேர்ந்தவாதம் குன்மம் இருமல் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

அவுரிவேர் விழுதைப் பசும்பாலுடன் உட்கொண்டால் க்ஷயம் நீங்கும். அவுரி விதைத்துகளைத் தேன் கலந்து பயன் படுத்தினால் பக்குவாசயத்தில் சேர்ந்த நஞ்சு நீங்கும். நெல்லி அவுரி கள்ளி கோவை சுவர்ணக்ஷீரி இவற்றில் ஒன்றன் வேரைப் பல் துலக்கப் பயன்படுத்தினால், பற்களில் தோன்றிய கிருமிகள் நீங்கும்.

அவுரி வேரை ஆட்டுப்பாலுடன் அரைத்து உட்கொண்டால் நீர்ச்சுருக்கு தணியும். அவுரி வேரை அரிசிகழுவிய நீருடன் உட்கொண்டால் மண்டல விஷம் (ஜலமண்டலி என்னும் நச்சுப் பூச்சியின் விஷம்) நீங்கும்.

## 16. அக்ரோடு

**ஸம். அக்ஷோடம்** Aluriteis Triloba

**தோற்றம்**

இரண்டாயிரம் அடி உயரமுள்ள மலைப்பகுதிகளில் இது வளரும். இமயமலைச் சரிவில் உஷ்ணபிரதேசத்தில், சிறப்பாகக் காஷ்மிரப் பள்ளத்தாக்கில் மிகுதியாக வளரும் மரமாகும். வாதுமை இனத்தைச் சேர்ந்தது. இலைகள் நீண்ட வட்டமாகவும் தடிமனாகவுமிருக்கும். மலர்கள் வெள்ளை அல்லது வெளிரிய மஞ்சள் நிறத்தில் கொத்துக் கொத்தாகப் பூக்கும். காய்கள் உருண்டை வடிவம் கொண்டிருக்கும். உடைத்தால் உள்ளே உருண்டையாக, நான்கு கோடுகளுடன் கரடுமுரடான தோற்றத்துடன் பருப்பு காணப்படும். பருப்பை விண்டால் உட்பகுதி உயிரினங்களின் மூளையின் தோற்றம் கொண்டிருக்கும். இதில் பலவகைகள் உண்டு. அவற்றில் 'காகஜீய அக்ரோடு' என்பது சிறந்தது. இது சுவை மிக்கது. இதன் மேல்தோல் பல்துலக்குவதற்கும், உதடுசிவப்பதற்கும் பயன்படுத்தப்படுகிறது. தலைமுடி நிறங்கொள்வதற்கு இதன் பச்சைக் காயின் தோல் பயன்படுத்தப் படுகிறது.

**இரசாயனச் சேர்க்கை**

இதன் பருப்பில் எண்ணெய், 'எ', 'பி', 'சி', விடமின்கள், லெசிதின் மற்றும் பல உலோகச்சத்துகள் அடங்கியுள்ளன. குளுமைத் தன்மை கொண்டது. விந்துவை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதபித்தம், க்ஷயம், வாதம், இதயநோய், இரத்ததோஷம், எரிச்சல் என்பனவற்றைப் போக்கும்.

## 17. ஆகாசவல்லி

**ஸம். ஆகாசவல்லி** Cassytha Fyliformis

**தோற்றம்**

இதில் இரண்டுவகை உண்டு. அவை ஆகாசவல்லி அமரவல்லி எனப்படும். இவை இரண்டும் ஏதேனும் ஒரு மரத்தின்

மீது படர்ந்து வளரும். வேரில்லாமலேயே படர்ந்து வளரக் கூடியவை. ஒன்று பச்சை நிறமும், மற்றொன்று தங்கநிறமும் கொண்டவையாகும். இவற்றிற்கு இலைகள் இல்லை. இவற் றின் ஒரு பகுதியை வேறு எந்த மரத்தின் மீது படர விட்டாலும் படர்ந்து விடும். ஆகாசவல்லி இளவேனில் முதுவேனில் பருவங் களில் பெரும்பாலும் காணப்படும். குளிர்காலத்தில் மாண்டு விடும். மலர்கள் கொத்துக் கொத்தாய் அழகாகத் தொங்கிக் கொண்டிருக்கும். அவை நறுமணம் கொண்டிருக்கும். கூதிர் பருவத்தில் பூக்கத் துவங்கும்.

**தன்மை**

சிறிது துவர்ப்பும் கசப்பும் கொண்ட இனிப்புச்சுவை கொண்டிருக்கும். உஷ்ணவீரியம் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். இதயத்திற்கு நன்மை பயக்கும். விந்துவை வளர்க் கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இவற்றின் கஷாயம், பித்தம், கபம், ஆமாஜீரணம், கண் நோய் ஆகியவற்றைப் போக்கும். இவற்றை எரித்த சாம்பலு டன் இரண்டு மடங்கு புரதார்சிங் என்பதைச் சேர்த்து எருக்கம் பூசாற்றுடன் அரைத்துப் பூச பகந்தர விரணமும் மற்றுமுள்ள கடும் விரணங்களும் தீரும்.

## 18. ஆடாதொடை

**ஸம். அடருஷா,வாஸகா** Justiciaadhatoda Roxb

**தோற்றம்**

ஆடாதொடை நம நாட்டில எங்கும காணப்படுகிறது. இது சிறப்பாக உஷ்ணப்பிரதேசத்தில் நன்கு வளரும். சாதாரண மாக நாலடி முதல் எட்டு அடி உயரம் வரை வளரும். சிறப் பாக இருபது அடி உயரம் வரை வளருவதும் உண்டு. இதில் வெண்மை சிவப்பு நிறங்களைக் கொண்ட மலர்கள் காணப் படுகின்றன.

அடித்தண்டு நேராக நீண்டு கிளைகள் உருண்டை வடி வத்தில் சுருட்டிக் கொண்டிருக்கும். கிளைகளில் இலைகளை நீக்கினாலும் அவை இருந்த அடையாளங்கள் முடிச்சுகளைப் போல காணப்படும். இலைகள் சிறிது அகன்று நீளமாகக் குறுகிய காம்புகளுடன் முனை கூர்மையாகக் காணப்படும்.

வெண்ணிற மலர்களைவிட சிவந்த மலர்கள் மிகுந்து விளங்கும். கசப்புச் சுவையை மிகுதியாகக் கொண்டிருக்கும். ஆனால் வ்வகை அரிதாகவே கிடைக்கிறது.

**தன்மை**

கசப்பு துவர்ப்புச் சுவைகளும், லகுகுணமும், சீதவீரியமும் கொண்டது. குரலைச் செம்மையாக்கும். இதயத்திற்கு நன்மை தரும். வாதத்தை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்தபித்தம் நாவறட்சி இருமல் இழுப்பு காய்ச்சல் வாந்தி நீரிழிவு குட்டம் ஈளைக்காசநோய் முதலியவற்றைப் போக்கும்.

ஆடாதொடையை வேருடன் கொண்டு கஷாயம் காய்ச்சி, இதன் மலரின் விழுதையும் நெய்யையும் சேர்த்துப் பக்குவம் செய்து தேன் கலந்து பயன்படுத்தினால் இரத்தபித்தம் தணியும்.

**ஆடாதொடைவேர்**

ஆடாதொடைவேர் நூறு பலம் கொண்டு கஷாயம் காய்ச்சி எண்ணெய் சேர்த்துப் பக்குவம் செய்க. இவ்வாறு ஆயிரம் முறைகள் கஷாயம் சேர்த்துப் பக்குவம் செய்து பயன் படுத்தினால், அறிவாற்றலும் ஆயுளும் வளரும். இதன் வேரைக் கருவுற்றவள் இடுப்பில் வைத்துக் கட்டினாலும் அல்லது வேரைச் சந்தனம் போல் அரைத்துத் தொப்புள் அடிவயிறு ஆகியவற்றில் பூசினாலும் எளிதில் பிள்ளைப் பேறு உண்டாகும்.

## 19. ஆடுதீண்டாப்பாளை

**ஸம். மேஷசிருங்கி** Helicteris Isora

**தோற்றம்**

இது மிக உயரமாக வளரக் கூடிய மரமாகும். ஆடு தீண்டாப்பாளையின் காய்கள் ஆட்டுக் கொம்பைப் போல் அடிப் பகுதியில் முறுக்கிக் கொண்டு நுனிப்பகுதி சக்கரம் போல் சுற்றிக் கொண்டிருக்கும் என்றும் அக்காய்களில் முட்கள் இருக்கு மென்றும் தெரிகிறது. இக்காய்களிலும் இலைகளிலும் பால் இருக்கும். புரசஇலையைப் போன்ற இலையும், சிவந்த மலரும் கொண்டு மலைப்பாங்கான இடத்தில் மிகுதியாக வளரும் என்று

கூறப்பட்டுள்ளது. ஆனால் மேஷவல்லி என்ற பெயரால் கொடியாக இருக்கலாமோ என்றும் தோன்றுகிறது.

**தன்மை**

கசப்புச் சுவையும், இனிப்பு துவர்ப்புச் சுவைகளை இணைச் சுவைகளாகவும் பக்குவமடையும்போது கார்ப்புச் சுவையையும் கொள்ளும். வாதத்தை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும். கண்களுக்கு நன்மை பயக்கும். இரஸாயனமானது. மலத்தை பிளக்கும். காய் கார்ப்பும் புளிப்பும் உவர்ப்புமான சுவைகளைக் கொண்டிருக்கும், உஷ்ண வீரியமுள்ளது. சுவையூட்டும்.

**தீர்க்கும் நோய்கள்**

குட்டம் நீரிழிவு இருமல் கிருமி விரணம் நஞ்சு எரிச்சல் இரத்ததோஷம் மூலம் வயிற்றுவலி இதயநோய் வீக்கம் ஆகிய வற்றைப் போக்கும்.

**பயன்**

ஆடுதீண்டாப்பாளைக் கட்டையின் சாற்றைக் கண்களில் மைபோல் இட்டால் நஞ்சு கலந்த மைப்பொருள்களால் கண்களில் தோன்றிய துன்பங்கள் நீங்கும். இதன் சாற்றை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்தினால் தலை நோய்கள் தணியும்.

## 20. ஆமணக்கு

**ஸம். ஏரண்ட** Ricinus Communis

ஆமணக்கில் வெண்மை சிவப்பு என்னும் ரண்டு வகையுண்டு. இரண்டிற்கும் தன்மையில் வேற்றுமை இல்லை. அகன்று ஐந்து விரல்களைப் போல விரிவுகளைக் கொண்ட இலைகளைக் கொண்டது. புலிவாலைப் போன்ற காய்களின் கொத்து உடையது. மேல் நோக்கி உயர்ந்திருக்கும் இலைகளைக் கொண்டது.

**தன்மை**

இனிப்பு கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. உஷ்ண வீரியமுள்ளது. பேதியாகச் செய்யும். வாதபித்தங்களைத் தணிக்கும். இலை பித்த இரத்தத்தைச் சீற்றமுறச் செய்யும். வாதகபங்களைத் தணிக்கும். கிருமியையும் நீர்ச்சுருக்கையும் தணிக்கும்.

**துளிர்**

கப வாதங்களைத் தணிக்கும். மலர், வாதகபங்களைத் தணிக்கும். காய், கார்ப்புச் சுவையும் மிகுந்த உஷ்ணத் தன்மையும் கொண்டதாகும். மலத்தை வெளியேற்றும்.

**எண்ணெய்**

இனிப்பு கசப்பு துவர்ப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண்டது. மிக்க எண்ணெய்ப் பசையுள்ளது. தீக்ஷ்ணமும் உஷ்ண வீரியமுமுள்ளது. பக்குவம் அடையும் போது இனிப்புச் சுவை கொள்ளும். சடராக்னியைத் தூண்டும். விந்துவை வளர்க்கும். உடலின் மேல்தோலுக்கு இதமானது, இரஸாயனமாகும். கொழுப்பையும் உடற்பொலிவையும் வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும். கபத்தை வளர்க்கும். பெண்குறியைத் தூய்மைப் படுத்தும்.

**வெள்ளை ஆமணக்கு வேர்**

சடராக்னியையும் விந்துவையும் வளர்க்கும். பித்தத்தைச் சீற்றமுறச் செய்யும். வாதகபங்களைத் தணிக்கும். வலியையும் ஆமவாதத்தையும் போக்கும்.

**பயன்**

ஆமணக்கு வேரை இட்டுக் காய்ச்சிய பாலைப்பருகினால் காய்ச்சல் தணியும். ஆமணக்கு இலையின் க்ஷாரத்துடன் வெல்லம் சேர்த்துப் பயன்படுத்தினால் இருமல் நீங்கும்.

ஆமணக்கு எண்ணெயைப்பாலுடனோ திரிபலைச் சாற்றுடனோ பசுவின் சிறுநீருடனோ உட்கொள்ளச் செய்தால் உதாவர்த்தம் என்னும் நோய் தணியும்.

ஆமணக்குக்காயைப் பாலுடன் அரைத்து மேல்பூச்சாகப் பயன்படுத்தினால், வாத ரத்த நோயில் தோன்றும் வயிற்றுவலி நீங்கும்.

ஆமணக்கு எண்ணெயை ஒன்றரை மாதம் உட்கொள்ளச் செய்தால் வாதத்தினால் தோன்றும் வீக்கம் தணியும்.

ஆமணக்கு இலையின் கஷாயத்தால் நனைத்துக் கொண்டிருந்தால் மூல நோயில் தோன்றிய வலி நீங்கும்.

ஆமணக்குத் துளிரை உட்கொள்ளச்செய்தால் இரவில் கண் தெரியாமை என்னும் நோய் நீங்கும்.

சுக்கும் ஆமணக்குவேரும் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி அதில் பெருங்காயமும் சௌவர்ச்சல உப்புத்தூளும் கலந்து பருகச் செய்தால் வயிற்று வலி உடனே நீங்கும். ஆமணக்கு எண்ணெயைப் பசுவின் சிறுநீருடன் கலந்து ஒரு மாதம் பருகச் செய்தால், வாதத்தினால் தோன்றும் யானைக்கால் நோய் நீங்கும்.

ஆமணக்கு வேர்த்துகளைத் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் காமாலை தணியும். ஆமணக்குஎண்ணெயில் பஞ்சை நனைத்துப் பெண்குறியில் வைத்துக் கொள்ளச் செய்தால் வலி தணியும்.

ஆமணக்கு எண்ணெயைப் பாலில் கலந்து ஒரு மாதம் பயன்படுத்தச் செய்தால் குடல் வாதம் நீங்கும்.

ஆமணக்கினால் தயார் செய்யப்பட்ட கந்தர்வ ஹஸ்தாதி தைலத்தைப் பயன்படுத்தினால் குடல்வாதம் தணியும்.

ஏரண்டக்வாதம் கருவுற்றவர்களுக்குத் தோன்றும் கிரஹணியைத் தணிக்கும். ஏரண்டத்வாதசக்வாதம் வயிற்று வலியை நீக்கும்.

## 21. ஆலமரம்

**ஸம். வடவிருக்ஷ** Ficus Indicus

**தோற்றம்**

இது நம் நாட்டில் எங்கும் காணப்படுகிறது. நிழல் தரும் பெரிய மரமாக வளரும். இதன் கிளைகளிலிருந்து விழுதுகள் கீழ் நோக்கி வளர்ந்து சென்று தரையில் பதிந்து தனிமரம் போல வேர் விட்டு வளரும். ஆல் மிகவும் அகன்று பரவக் கூடிய மரமாகும். இலைகள் தடித்துச் சாம்பல் பூசியதைப் போன்ற அடிப்பகுதியும் பச்சையாக எண்ணெய்ப்பசை கொண்டதைப் போன்ற மேற்பகுதியும் காணப்படும். இளவேனிற் பருவத்தில் இம்மரம் பூத்து கார்காலத்தில் காய்க்கும். இம் மரத்திற்கு மலர்கள் இல்லை என்பது சிலர் கருத்து. ஆனால் மலர் இல்லாமல் காய் தோன்றாது. சிறு பிஞ்சுகளுடனே மலரின் பகுதியும் தோன்றும் என்பதே உண்மை. இதற்கு

பால் உண்டு. இதன் நிழல் கோடையில் குளிர்ந்தும் குளிர் காலத்தில் சூட்டுடனும் இருக்கும். நம்நாட்டில் உள்ள புனிதத் தன்மை வாய்ந்த மரங்களுள் இது ஒன்றாகக் கருதப்படுகிறது. இதன் பால் கெட்டியாக இருக்கும். இந்தப்பால் பாதரசத்தைக் கட்டுவதற்கு பயன்படும் என்று சொல்லப்படுகிறது. அடி வயிற்றில் வலி தோன்றியபோது இதன் பாலைத் தொப்புளைச் சுற்றிப் பூசுவதுண்டு. இம்மரத்தின் கீழ் செய்யப்படும். யக்ஞம் தவம் முதலியவை சிறந்த பலனளிக்கும். ஆற்றங்கரையில் வளரும் மரம் நதீவடம் என்று கூறப்படுகிறது.

**தன்மை**

வறட்சி துவர்ப்பு இனிப்புச்சுவைகள் கொண்டது. நதீ வடம் துவர்ப்பு இனிப்புச் சுவைகளும் குளுமைத் தன்மையும் கொண்டது. ஆலம்பழம் இனிப்புச் சுவை கொண்டது. எளிதில் செரிமானம் ஆகாது. வாதபித்தங்களைப் போக்கும். இம்மரத் தின் பட்டை, விழுது பால் விதை பழம் ஆகியவை மருந்துக்குப் பயன்படுகின்றன. ஆலம் விழுது அல்லது ஆலம்துளிர் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகச் செய்தால் கீழ்நோக்கிச் செல்லும் ரத்தபித்தநோய் தீரும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம், பித்தம், அக்கி, எரிச்சல், பெண்குறிநோய் முதலியன வாகும்.

**பயன்**

ஆலம் அத்தி அரசு மரங்களின் துளிர் இலைகளை காய்ச்சிய தண்ணீரில் ஓர் இரவும் பகலும் ஊறவைத்து அதில் நெய் சேர்த்துப் பக்குவம் செய்து பாதி அளவு சர்க்கரையும் நான்கில் ஒரு பகுதி தேனும் சேர்த்துப் பயன்படுத்தினால் இரத் தாதிசாரம் தணியும். ஆலம்பட்டை கஷாயத்தில் பாச்சோத்தியின் விழுதைச் சேர்த்துப் பயன்படுத்தினால் பெரும் பாடு தணியும்.

## 22. ஆளிவிதை

**ஸம். அதஸி** Linisemina

நம் நாட்டில் ஆளி எல்லா இடங்களிலும் விளையும். இது சிறுசெடியாக ஒன்று அல்லது ஒன்றரை அடி உயரமாக வளரும். இலைகள் மெல்லியவையாக ஓரங்குலம் நீளம் உள்ளவையாக இருக்கும். மலர் நீலநிறம் கொண்டிருக்கும். காய் உருண்டை

யாக இருக்கும். அதற்குள் தட்டையான விதைகள் பல இருக்கும். பட்டை கசப்புச்சுவை கொண்டிருக்கும்.

**மை**

இனிப்பு கசப்புச்சுவைகளைக் கொண்டது. செரிமானம் ஆகும் போது கார்ப்புச்சுவை கொள்ளும். எண்ணெய்ப்பசை கொண்டது.

இதன் விதை, எண்ணெயுடன் தீக்ஷ்ண குணமுள்ளதாக க்கும். கபத்தையும் பித்தத்தையும் வளர்க்கும்.

**பயன்**

பட்டை விதை எண்ணெய் மலர்கள் ஆகியவை மருந்தாகப் பயன்படும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் கிருமிநோய் பித்தம் காய்ச்சல் விதைகள்வீக்கம் விரணம் அதிசாரம் இருமல் ஈளைகாசநோய் இரத்தபேதி நீர்ச்சுருக்கு சிறுநீர்த்தடை மாதவிடாய்தடை ஆகியவற்றைப் போக்கும்.

ஆளி மலர்ச்சாறு, பித்தம் வாதம் இருமல் இரவில் கண் பார்வையின்மை ஆகியவற்றைப் போக்கும்.

## 23. ஆனைவணங்கி

**ஸம். ஸல்லகி** Boswellia Serrata

**தோற்றம்**

ஆனைவணங்கி என்பது வேப்பிலை போன்ற இலைகளுடன் மிக உயரமாக வளரக்கூடிய மரமாகும். இதன் இலைகளை யானைகள் மிகவும் விரும்பி உண்ணும். இலைகள் சற்று மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இதன்காய்கள் மூன்று பக்கங்களைக் கொண்டிருக்கும். இம்மரத்தில் ஒருவகை பிசின் வடிந்து கொண்டிருக்கும். இந்தப்பிசின் நறுமணம் கொண்டு புகைபோடும் பொருள்களில் ஒன்றாகக் கொள்ளப்படுகிறது. இதன் பிசினுக்கு குந்துருஸ்கம் என்று பெயர்.

**தன்மை**

துவர்ப்புச்சுவை குளுமைத் தன்மை கொண்டது. தாதுக் களை வளர்க்கும். பித்த கபங்களைத் தணிக்கும். குந்துருஸ்

கம் எனப்படும் இதன் பிசின் இனிப்பு கசப்பு கார்ப்புச் சுவை களைக் கொண்டிருக்கும். தீக்ஷ்ணகுணம் உள்ளது. மேல் தோலுக்கு நன்மை தரும். வாதகபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

அதிசாரம் இரத்தபித்தம் விரணம் ஆகியவற்றைப் போக்கும். இதன் பிசின், காய்ச்சல் மிக்கவியர்வை கிரகதோஷ நோய் முகநோய் ஆகியவற்றைப் போக்கும். இதன் காய் மூல நோய் குட்டம் சுவையின்மை ஆகியவற்றைப் போக்கும்.

## 24. இஞ்சி

**ஸம். ஆர்த்ரகம்** Zingiber Officinale

**தோற்றம்**

இஞ்சி நம் நாட்டில் எல்லா இடங்களிலும் பயிர் செய்யப் படுகிறது. சிவப்பு மண் நிலத்தில் நன்றாக வளரும். கார்காலத் தில் நிலத்தை உழுது சிறுசிறு குழிகள் தோண்டி அவற்றில் சாணமிட்டு இஞ்சித் துண்டுகளை நடுவர். பிறகு நிலத்தை இலைகளால் மூடிவைப்பர். செடிகள் வளருமுன் மழைபெய்து தண்ணீர் நிலத்தில் நின்றால் பயிர் அழுகிப்போய்விடும். ஆகை யால் நிலத்தில் நீர்தங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ஏழு எட்டு மாதங்கள் சென்றபின் கிழங்குகள் வெட்டியெடுக்கப் படும். இஞ்சியை உலர்த்தியே சுக்கு தயார் செய்வார்கள்.

**தன்மை**

இஞ்சி கார்ப்புச் சுவையும் குருத்தன்மையும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டது. செரிமானமாகும் போது இனிப்புச் சுவை கொள்ளும். ருசியைத் தோற்றுவிக்கும். அஜீரணத்தைப் போக்கும். குரலைத் தெளிவாக்கும். தொண்டை நாக்கு இவற்றைத் தூய்மைப் படுத்தும், வாதகபங் களைத் தணிக்கும். இந்துப்புடன் சேர்த்து உணவிற்கு முன் உட்கொண்டால் சடராக்னியை வளர்க்கும். குட்டம் சோகை நீர்ச்சுருக்கு இரத்தப்பித்தம் விரணம் காய்ச்சல் அழற்சி எனும் நோய்கள் தோன்றிய போதும் முதுவேனிற் கூதிர் பருவங்களிலும் )யைப் பயன்படுத்தக் கூடாது.

**தீர்க்கும் நோய்கள்**

ஆமவாதம் வாந்தி இழுப்பு இருமல் வயிற்றுவலி இதய நோய் யானைக்கால் வீக்கம் மூலம் பெருவயிறு வாதநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

பய

சுக்கு இஞ்சி இவற்றின் சாற்றைச் சமஅளவு பாலுடன் சேர்த்து பருகினாலும் மேற்படி சாறுகளை நல்லெண்ணெயின் அளவிற்கு பத்து மடங்காகச் சேர்த்துப் பக்குவம் செய்து பயன் படுத்தினாலும் வயிற்று நோய் நீங்கும்.

நெல்லிப் பருப்பைத் தண்ணீருடன் மைய அரைத்து அதிசார நோய் கொண்டவனின் தொப்புளைச் சுற்றிப் பாத்திபோல் கட்டி அதில் இஞ்சிச் சாற்றை ஊற்றினால் மிகக்கொடிய அதிசாரம் நீங்கும். இஞ்சிச்சாறும் தேனும் கலந்து உட்கொள்ளச் செய் தால் விதைவாதம் நீங்கும். நாள்தோறும் காலையில் இஞ்சி யும் வெல்லமும் கலந்து ஏழு நாட்கள் உட்கொள்ளச் செய்தால் மூர்ச்சை வெறிநோய் காமாலை பைத்தியம் என்பவை நீங்கும்.

சுக்கைப் போட்டுக் காய்ச்சிய பாலில் சர்க்கரை கலந்து பருகச்செய்தால் சிறுநீர்ப்பையில் இரத்தம் வெளியேறுவது நிற்கும்.

சுக்கும் வெல்லமும் கலந்து பயன்படுத்தினால் காமாலை நீங்கும். சுக்கு, நெருஞ்சில் ஆகியவற்றின் கஷாயத்தை நாள் தோறும் காலையில் உட்கொள்ளச் செய்தால் ஆமவாதமும் கடிவாதமும் தீரும். சுக்கின் விழுதைப் பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச்செய்தால் யானைக்கால் நோய் தணியும்.

சுக்கைத் தண்ணீரில் அரைத்து மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் தேள்விஷம் தணியும்.

## 25. இத்தி

**ஸம். ப்லக்ஷம்** Ficus Virance

**தோற்றம்**

இதில் பெரியது சிறியது என இரண்டு வகைகள் இருப்பதாக நூல்கள் கூறுகின்றன. ஆனால் இதன் தன்மைகளில் இரண் டிற்கும் வேற்றுமை இல்லை. பாலுடைய மரங்களில் இது ஒன்றாகும். இலைகள் தடித்து சற்று அகன்று கோழி முட்டைத் தோற்றத்தில் இருக்கும். மலர்கள் கண்களுக்குப் புலப்படா. பழங்கள் வெண்ணிறம் கொண்டிருக்கும். காய்கள் பச்சை நிறம் கொண்டிருக்கும். காக்கைகள் விழுங்கி எச்சம் இடும்

இடத்தில் விதைகள் நிலத்தில் பதிந்து முளைக்கும். முதுவேனிற் பருவத்தில் காய்க்கும். கிளைகளை நட்டாலும் துளிர்த்து வளரும். இலைகளில் நடுவிலிருந்து நீளமாக வளர்ந்த காம்பில் கொத்துக்கொத்தாக உருண்டைவடிவமுள்ள காய்கள்தோன்றும். இம்மரத்தின் பட்டை மஞ்சள் நிறம் கொண்டிருக்கும்.

**தன்மை**

கார்ப்புச்சுவையும் துவர்ப்புச்சுவையும் கொண்டது. பட்டை, காய்கள் மருந்தாகப் பயன்படுகின்றன.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் எரிச்சல் பித்தம் கபம் இரத்தவிகாரம் வீக்கம் இரத்தப்பித்தம் பெண்குறியில் தோன்றும்நோய்கள் முதலியவை.

**பயன்**

இத்தி அரசு இவற்றின் துளிர் இலையை மைய அரைத்து நெய் சேர்த்துப் பூசினால் அக்கி நோய் தணியும்.

இத்தி வஞ்சி எனும் இவற்றின் பட்டைகளின் கஷாயத்தால் விரணங்களைக் கழுவினால் அவை விரைவில் ஆறும்.

இத்தி வஞ்சி இவற்றின் இலைகளைப் பக்குவம் செய்து உண்ணச் செய்தால் இரத்தப்பித்தம் தணியும்.

_ த்திப்பட்டையின் தூளை தேன் கலந்து விழுதாக்கிப் பெண்குறியில் வைத்துக் கொள்ளச் செய்தால் இரத்தப்பெருக்கு நிற்கும்.

## 26. இலந்தை

**ஸம். பதரீ** Zizyphus Jajuba

**தோற்றம்**

இலந்தை நம் நாட்டில் எங்கும் காணப்படுகிறது. மெல்லிய நுனிவளைந்த முள் நிரம்பியுள்ள மரமாகும். இலைகள் வட்டமாகவும் நடுப்பகுதி பச்சையாகவும் காம்புப்பகுதி வெண்மையாகவும் இருக்கும். காய்கள் பச்சை நிறமும் பழம் மஞ்சள் அல்லது சிவப்புநிறமும் கொண்டிருக்கும். குளிர்காலத்

திற்குமுன் பூக்கும். கூதிர் பருவத்தில் மற்றும் பங்குனி சித்திரை மாதங்களில் காய்க்கும். இதில் பலவகைகள் உண்டு. பதரம் முஷ்டிப்பிரமாணபதரம் விகம்கதம் கர்மர்தம் என நான்கு வகைகளாகவும் முதலாவது, பதரம் இராஜபதரம் ஹஸ்தி பதரம் கத்ரபதரம் பூபதரம் வரிபதரம் என ஆறுவகைகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளன.

இலந்தையில் பெரிய மரமாகவும் சிறு புதராகவும், கொடியாகவும் வளரக்கூடிய வகைகள் உண்டு.

**தன்மை**

இலந்தையில் சிலவகை புளிப்புச் சுவையும், சில இனிப்புச் சுவையும்கொண்டிருக்கும்.மலத்தை இளகச்செய்யும். எண்ணெய்ப் பசை கொண்டிருக்கும். குருத்தன்மை கொண்டிருக்கும். விந்து வளர்ச்சிக்கு ஏற்றவை. உலர்ந்த இலந்தைப்பழம் மலத்தைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். நாவறட்சி சோர்வு என்பனவற்றைப் போக்கும். பழம் வேர் பட்டை இலைகள் எனுமிவை மருந்தாகப் பயன்படும்.

**தீர்க்கும் நோய்கள்**

பித்தம் எரிச்சல் இரத்ததோஷம் க்ஷயம் நாவறட்சி மூல நோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

இலந்தைப் பழக் கஷாயத்தை இளம் சூடாக உள்ளபோது மூலநோய் கொண்டவனை அவகாஹ ஸ்வேதமுறையாகப் பயன் படுத்தினால் வலி நீங்கும்.

இலந்தைப்பழம் தயிர் மாதுளம்பழச்சாறு எனும் இவை மூன்றையும் கஞ்சிபோல் செய்து மிகுதியாக எண்ணெய் சேர்த்துப் பயன்படுத்தினால் அதிசாரம் நீங்கும். இலந்தை இலைகளை மைய அரைத்து எண்ணெய் சேர்த்து மண்ணீரல்வீக்கத்தின் மேல் வைத்து உபநாஹஸ்வேதமாகப் பயன்படுத்தி பிறகு அவ் வீக்கத்தை உலக்கை வைத்து அழுத்த வேண்டும்.

இலந்தைப் பழத் தூளை வெல்லம் கலந்து உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு நீங்கும்.

# 27. இலவம்

**ஸம். சால்மலி BomBax Mala Baricum**

**தோற்றம்**

இது மிகவும் உயர்ந்து பருத்து வளரும் மரமாகும். மரத்தண்டில் முட்கள் உண்டு. வழவழப்புடன் நீளமாக ஒரு காம்பில் 3 அல்லது 5 இலைகள் ஒட்டிக் கொண்டிருக்கும். முதுவேனில் பருவத்தில் மலரும். மலர்கள் சிவப்பாகவும் பெரியவையாகவும் வழவழப்புடனுமிருக்கும். முதுவேனிற் பருவ முடிவில் காய்க்கும். காய்கள் ஒருசாண் வரை நீண்டிருக்கும். அவை பழுத்ததும் வெடித்து அதனுள் இருக்கும் பஞ்சு காற்றில் பறந்துவிடும். பஞ்சுடன் மிளகைப் போன்ற விதைகள் ஒட்டிக் கொண்டிருக்கும். வெண்ணிறப்பூ உடையது, சிவப்பு நிறப்பூ உடையது என இலவமரம் இருவகைப்படும். வெண்ணிறப் பூக்கள் உள்ள மரத்தில் முட்கள் குறைந்திருக்கும். இலவமரம் அறுபதாயிரம் ஆண்டுகள் கூட உயிர்த்திருக்குமென நூல்கள் கூறுகின்றன. இதன் பிசின் வெகுவாக மருத்துவத்தில் பயன் படுத்தப்படுகிறது.

**தன்மை**

எண்ணெய்ப் பசையும் துவர்ப்புச் சுவையும் கொண்டது. மலர்களை நெய் இந்துப்பு என்பனவற்றுடன் பக்குவம் செய்தால் இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் குருகுணமும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். பக்குவம் அடையும்போது இனிப்புச் சுவைகொள்ளும். மலத்தைக்கட்டும். வாதத்தை வளர்க்கும். இதன் பிசின் வலிமை தரும். விந்துவை வளர்க்கும். அறிவாற்றலையும் ஆயுளையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்தப்பெருக்கை நிறுத்துவதில் இது சிறந்தது. ஆகையால் இரத்தப்பெருக்குடன் கூடிய நோய்களில் பெரும்பாடு முதலியவற்றில் மிகவும் பயன்படுத்தப்படுகிறது.

**பயன்**

இலவம்பட்டையையும் சிற்றாமுட்டிவேரையும் மைய அரைத்துப் பூசினால் விரணங்கள் நீங்கும்.

இலவம்பட்டை பால்முதுக்கன்கிழங்கு இவ்விரண்டையும் தூளாக்கித் தேனுடனும் சர்க்கரையுடனும் கலந்து உட்கொண்

டால் விந்து வளரும். இலவம் பஞ்சு நீரின் அடியில் உள்ள மணல் இவ்விரண்டையும் மைய அரைத்துப்பூசினால் நெருப்பினால் சுடப்பட்ட விரணம் தணியும்.

இலவம் முட்களைப் பாலுடன் மைய அரைத்து முகத்தில் பூசிக் கொண்டால் முகத்தில் தோன்றும் வங்கு நீங்கி முகம் தாமரையைப்போல் பொலிவு கொள்ளும்.

இலவமலர்க்காம்புகள் அதிமதுரம் இரண்டையும் நசுக்கிக் குளிர்ந்த நீரில் ஊறவைத்து வடிகட்டித் தேன் கலந்து பயன் படுத்தினால் வயிற்றுவலி இரத்தபித்தத்துடன் கூடிய அதி ஸாரம் முதலியவை தீரும். உட்கொண்டபின் நாவறட்சி தோன்றினால் பாலைப்பருகச் செய்யவும்.

இலவம் பிசினை 10 அல்லது 15 நெல் அளவு நெய் சர்க்கரை தேன் இவற்றில் ஒன்றுடன் உட்கொண்டால் விந்து வளர்ச்சி பெறும். விரைவில் விந்து வெளியேறாமல் கட்டுப்படும்.

## 28. இலவங்கம்

**ஸம். லவங்கம்** Caryophyllus Aromaticus

இலவங்கம் பச்சை நிறம் கொண்ட மரமாகும். நறுமணம் கொண்டிருக்கும். இலவங்கம் என்பது மலரை ஒட்டிக் கொண்டிருக்கும் காம்பு எனத் தெரிய வருகிறது. அவற்றின் நுனிப் பகுதியில் சிறு உருண்டை வடிவத்தில் காணப்படுவது இம்மலரின் மூடிய இதழ்களாகும். அவற்றுக்குள் பல கேசரங்கள் காணப் படும். இது எண்ணெய்ப் பசை கொண்டது. கடைகளில் விற்கப்படுவது பெரும்பாலும் எண்ணெய் எடுக்கப்பட்டது. ஆகை யால் தன்மையில் குறைந்திருக்கும். பெரும்பாலும் ஜான்சி பார், மலாகா தீவுகளில் மிகுதியாகப் பயிராகிறது.

### தன்மை

கார்ப்புச்சுவை, கசப்புச் சுவைகள் கொண்டது. லேசானது குளுமைத் தன்மை கொண்டது. கண்களுக்கு நன்மை பயக்கும். சடராக்னியை வளர்க்கும். உணவிற்குச் சுவையூட்டும். உணவைச் செரிமானமாக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

கபம் பித்தம் இரத்ததோஷம் நாவறட்சி உப்புசம் வயிற்றுவலி இருமல் இழுப்பு கண்நோய் விக்கல் க்ஷயம் ஆகிய வியாதிகளைப் போக்கும்.

இலவங்கம் எண்ணெய் வாதத்தைத் தணிக்கும். பல்ஈறுகளில் வலி கருவுற்றபோது தோன்றும் வாந்தி ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

மிக்க நாவறட்சி தோன்றிய போது இலவங்கக் கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும்.

இலவங்காதி சூரணம், கிரகணி அதிசாரம் வீக்கம் காமாலை பாண்டு இருமல் இழுப்பு காய்ச்சல் வாந்தி வயிற்றுவலி விக்கல் பெருவயிறு பீநஸம் பெரும்பாடு உப்புஸம் முதலிய நோய்களுக்குப் பயன்படுகிறது.

**வராலாதிலேகியம்** (இலவங்கம் சேர்த்து செய்யப்படும் லேகியம்)

இருமல் இழுப்பு க்ஷயம் பெருவயிறு சடராக்னி குறைவு என்பனவற்றைப் போக்கும்.

## 29. இலுப்பை

**ஸம். மதூக** Bassia Latifolia

**தோற்றம்**

உயர்ந்த மரமாக வளரக்கூடியது. இதன் தண்டுப்பகுதி சாம்பல் பூசியதுபோல் வெண்மை நிறம் கொண்டிருக்கும். அதிக எண்ணிக்கையுடைய கிளைகளைக் கொண்டிருக்கும். இலைகள் வெண்மை பச்சை நிறம் கொண்டு இலையடிப்பகுதியில் வெள்ளையான ரோமங்களைப் போன்றவை நிரம்பி இருக்கும். கையால் தொட்டால் வெண்மையான பூச்சு, கையில் ஒட்டிக் கொள்ளும். இலைக்காம்பு ஓரங்குல நீளம் கொண்டிருக்கும். இலைகளில் நரம்புகள் மிகுதியாகக் காணப்படும். நீர்ப்பாங்கான நிலங்களில் வளர்வது நீர் இலுப்பை எனப்படும். மலர் வெண்மை வெளிறிய மஞ்சள் ஆகிய நிறங்கள் கொண்டிருக்கும். குழாயைப் போன்ற இதழ்கள் காணப்படும். காய்கள் உருண்டையாக அல்லது சற்று வளைந்து காணப்படும். பழுத்ததும் இனிப்புச் சுவைகொள்ளும். அதனுள் கறுப்பு அல்லது சிவப்பு நிறம் கொண்டுள்ள விதைகள் காணப்படும். இளவேனில் பருவத்தில் பூக்கும். கார்ப்பருவத்தில் காய்க்கும். இலுப்பை மலரிலிருந்து கள் எடுப்பது உண்டு. அது புஷ்பாஸவம் எனப்படும்.

**விளைநிலம்**

நம்நாட்டில் எங்கும் விளைகிறது. சிறப்பாக உத்தர பிரதேசத்தில் மிகுந்து காணப்படுகிறது.

**தன்மை**

இனிப்பு கசப்புச் சுவைகளைக் கொண்டதாகும். நிலத்தில் விளைந்த இலுப்பையின் மலர் உண்டதும் விந்துவைத் தோற்று விக்கும். இதயத்திற்கு நன்மை தரும். பித்தத்தைத் தணிக்கும்.

ன்பழம் இனிப்புச்சுவை குருத்தன்மை கொண்டது. குளுமைதரும், விந்துவை வளர்க்கும். இலுப்பைஎண்ணெய் இனிப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டு மிகுந்த பிசுபிசுப்புடன் இருக்கும். கப்பித்தக்காய்ச்சலையும் பித்தத்தினால் தோன்றிய எரிச்சலையும் போக்கும்.

இலுப்பைப்பட்டை விரணங்களை ஆற்றும். இரத்தப் பித்தத்தைப் போக்கும். இலுப்பையின் பட்டை மலர் எண்ணெய் விதை மலர்ச்சாறு ஆகியவை மருந்தாகப் பயன்படுகின்றன.

**தீர்க்கும் நோய்கள்**

இலுப்பை மலர் வாதபித்தங்களைப் போக்கும். பழம் வாதபித்தம் நாவறட்சி இரத்ததோஷம் எரிச்சல் இழுப்பு காயம் க்ஷயம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

இலுப்பைமலர்சுரஸத்தைச் சர்க்கரையுடனும் திராட்சைச் சாற்றுடனும் மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்தினால் பித்தத்தினால் தோன்றிய தலைநோய்கள் நீங்கும்.

கருப்பஞ்சாறு இலுப்பைப் பூச்சாறுகளுடன் தேனும் சர்க்கரையும் சிறுநாகப்பூவின் தூளையும் கலந்து பயன்படுத்தி னால் விக்கல் நீங்கும். இலுப்பைமலர் குருவேர் அல்லிக் கிழங்கு நீர்இலுப்பைமலர் இவற்றை மைய அரைத்துத் தேனு டனும் நெய்யுடனும் உட்கொள்ளச் செய்தால் வாந்தி தணியும்.

இலுப்பைப் பட்டையை உடைந்த எலும்புகளின்மேல் வைத்துக் கட்டு கட்டினால் விரைவில் உடைந்த எலும்புகள் சேர்ந்துவிடும்.

அப்பொழுதே மரத்திலிருந்து உதிர்ந்த பருத்த இலுப்பை மலரை கேஸரங்களை நீக்கி நெய்யில் வறுத்துச்சர்க்கரை கலந்து உட்கொண்டால் ஆயுள் வளரும். இலுப்பை மலர் கொண்டு செய்யப்பட்ட 'புஷ்பாஸவம்' என்னும் மருந்து கிரஹணி குட்டம் நீரிழிவு இரத்தபித்தம் சோர்வு முதலிய வற்றைத் தணிக்கும்.

## 30. ஈசுவரி

**ஸம். நாகதமனி** Aristolochia Indica

### தோற்றம்

இது சோற்றுக் கற்றாழையைப் போன்ற சிறுசெடியாகும். பட்டை தடித்து இருபக்கங்களிலும் முட்களுடன் கூடி இருக்கும். இலைகள் மெல்லியவை. வறட்சித் தன்மை கொண்டவை. வாளைப்போல் இருபக்கங்களிலும் கூர்மை கொண்டு நடுவில் தடித்தும் இருக்கும். இலைகளின் பக்கங்களில் முட்கள் இரா. சற்று தூரத்தில் இருந்து பார்த்தால் பாம்புபோல் காணப்படும். இவற்றின் நடுவில் இருபது அங்குல பரப்புள்ள தண்டு மூன்று அடி உயரம் வரை வளரும். அதன் முனையில் பூக்கள் தோன்றும். அவை மணம் கொண்டிருக்கும். பூக்கள் மொட்டாக இருக்கும் போது நான்கைந்து பாம்புக் குட்டிகள் தலை கீழாகத் தொங்கு வதுபோல் இருக்கும். எல்லாப் பருவங்களிலும் தோன்றும். முதுவேனிற் பருவத்திலும் பசுமையாகக் காணப்படும். இதன் கிழங்கு நஞ்சைப் போக்கும்.

### தன்மை

கார்ப்பும் கசப்புமான சுவைகள் உடையது. லேசானது. செல்வத்தைக் கொடுக்கும். நல்லபுத்தியைக் கொடுக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

பித்தம் கபம் நீர்ச்சுருக்கு விரணம் அரக்கர்களால் ஆன பயம் கிரஹங்களினால் தோன்றும் துன்பங்கள் ஜாலகர்தபம் என்னும் நோய் நஞ்சுவகைகள் ஆகியவற்றைப் போக்கும்.

## 31. ஈச்சை

**ஸம். பருஷகம்** Grewiaasiatica

### தோற்றம்

இது சிறு செடியாக வளரும். மட்டைகளுடன் அகலமின்றி நீண்டு ஊசிமுனையுள்ள இலைகள் காணப்படும். காய்கள்

சிறியவையாகவும் சற்று நீளமுள்ளவையாகவும் இருக்கும். அவை பச்சை நிறமும் பழுத்தால் சிறிது சிவப்பு நிறமும் கொண்டிருக்கும்.

**தன்மை**

பச்சைக்காய் புளிப்புச்சுவையும் துவர்ப்புச்சுவையும் கொண்டிருக்கும். லேசானது பித்தத்தை வளர்க்கும். பழம் இனிப்புச் சுவையும் புளிப்புத் தன்மையும் கொண்டிருக்கும். உடலைச் செழிப்பாக்கும். மலத்தைத் தடுக்கும். எரிச்சல், ரத்ததோஷம் காய்ச்சல் க்ஷயம் ஆகியவற்றைப் போக்கும். முலைகள் வீக்கத்தையும் விரணத்தையும் போக்கும். இதன் பட்டை வாதத்தைத் தணிக்கும். நீரிழிவு பால் உறுப்பில் தோன்றும் எரிச்சல் சிறுநீர்த்தடை சீதபித்தம் ஆகியவற்றைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பித்தம் எரிச்சல் இரத்ததோஷம் காய்ச்சல் சுளைக் காச நோய் முதலியவை.

**பயன்**

பருஷகாதி கிருதம் - இது வாதரத்தம் க்ஷயம் அக்கி காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

பருஷாதி கஷாயம் வாதம் நாவறட்சி சிறுநீர்த்தடை ஆகியவற்றைப் போக்கும்.

## 32. உளுந்து

**ஸம்- மாஷா** Phaseolus Radiatus

**தோற்றம்**

உளுந்து நம்நாட்டில் பயிர் செய்யப்படுவதாகும். இதில் சிறியது பெரியது என இருவகை உண்டு. மேலும் இதில் கறுப்பு வெளுப்பு சிவப்பு எனவும் மூன்றுவகைகள் உண்டு. வெள்ளையும் சிவப்பும் தமிழில் காராமணி என்று சொல்லப்படும். வடமொழியில் இராஜமாஷா என்று சொல்லப்படும். பெரும்பாலும் உளுந்துதான் மருந்திற்குப் பயன்படுகிறது.

**தன்மை**

உளுந்து எண்ணெய்ப்பசையும் இனிப்புச்சுவையும் குருத் தன்மையும் கொண்டது. சுவையானது, மலத்தை இளகச் செய் யும். உடல் வலிமையையும் விந்துவையும் வளர்க்கும். பித்த கபங்களை வளர்க்கும். தாய்ப்பாலை மிகுதியாக்கும். வாதத்தைத் தணிக்கும்.

காராமணி இனிப்புச்சுவை கொண்டது. வறட்சித் தன்மை யும் குருத்தன்மையும் கொண்டது. சுவையானது. தாய்ப் பாலையும் வாதத்தையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூலம், இழுப்பு, பரிணாமசூலை என்பன.

**பயன்**

தளிமாஷாதி வாஜீகரணகிருதம்—விந்து வளர்ச்சிக் கேற்றது.

மாஷவடீ—விந்துவளர்ச்சி, உடல் செழிப்பை உண்டாக்கும். வாதத்தைத் தணிக்கும்.

## 33. உவகை

**ஸம். பீலு** Salvabora Parsicu

உவகை இரண்டு மூன்றுகைநீளம் வளரக்கூடிய செடியாகும். இலை மஞ்சள் பச்சை எனும் நிறங்களைக் கொண்டிருக்கும், பெரிதும் சிறிதுமான காய்களைக் கொண்டு இருவகையாக இருக் கும். மலர் மஞ்சள் நிறம் கொண்டு கொத்துக் கொத்தாய் இருக் கும். காய் பச்சையாகவும் பழம் சிவப்பாகவும் இருக்கும். சில கருநிறம் கொண்டிருக்கும். காய் உருண்டையாகவும் இருக் கும்.

**தன்மை**

மிக்க உஷ்ணத்தன்மை கொண்டது. பித்தத்தை வளர்க்கும். மலத்தை இளகச் செய்யும். பழம் மூன்று தோஷங்களையும் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம், வாதம், குன்மம், வயிற்றுவலி முதலியவற்றைப் போக்கும்.

## 34. ஊமத்தை

**ஸம். தத்தூர** *(கருஊமத்தை)* Datura Stramonium
**(வெள்ளை ஊமத்தை)** Datura Fastuosa

**தோற்றம்**

ஊமத்தை சிறுசெடி வகையைச் சேர்ந்தது. இது மலர்களின் நிறத்தைக் கொண்டு வெண்மை கருமை நீலம் மஞ்சள் என நான்கு வகைப்படும். வெண்ணிற மலர்ச்செடியைத் தவிர்த்து மற்றவை அரிதாகவே கிடைக்கின்றன. இவைகளின் நிறங்களில் வேற்றுமையே தவிர நான்கு வகைகளும் குணத்தில் ஒரே வகையானவை. இதன் மலர்கள் மணியின் தோற்றம் கொண்டிருக்கும். மலர்களின் நுனிப்பகுதியில் மஞ்சள் நிறக் கோடுகளும் கத்தரிப்பூவைப் போன்ற அடையாளங்களும் காணப்படும்.

காய் உருண்டை வடிவம் கொண்டு வெளிப்புறத்தில் முட்கள் கொண்டிருக்கும். சித்திரை வைகாசி மாதங்களில் பூக்கும். ஆனியில் காய்கள் தோன்றும். காய்கள் பழுத்தபின் உடைந்து விடும். அதன் உள்ளே மிளகு போன்ற தோற்றத்தில் சிவந்த நிறமுள்ள விதைகள் காணப்படும். அவை காய்ந்ததும் சாம்பல் நிறமுள்ளவையாக மாறும்.

**தன்மை**

மனக்கலக்கத்தையும் மயக்கத்தையும் தோற்றுவிக்கும். துவர்ப்பு இனிப்பு கசப்புச்சுவைகள் கொண்டிருக்கும். உஷ்ணத்தையும் வாதத்தையும் வளர்க்கும். தலையிலுள்ள பேன்களைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல் குட்டம் விரணம் கபம் அரிப்பு கிருமி நஞ்சு என்பனவற்றைப் போக்கும்.

**பயன்**

இதன் இலைகளை ஆமணக்கு எண்ணெய் தடவிச் சூடாக்கிக் கட்டினால் வீக்கம் தணியும்.

காயை நெருப்பிலிட்டுச் சுட்டு அரைத்துக் கட்டினால் விரணங்கள் தீரும்.

இதை வேருடன் எடுத்துச் சாறு பிழிந்து பூசினால் வாதம் தோல்நோய்கள் எனுமிவை தீரும்.

வேருடன் உலர்த்திச் சிறு துண்டுகளாக்கி அவற்றைக் கொண்டு புகை பிடித்தால் உப்புசம் நீங்கும்.

## 35. எட்டி

**ஸம். விஷமுட்டி** Strychnos Noxvomicalinn

**தோற்றம்**

இது நெடுமரமாக வளரும். இலேசானது. இலைகள் வட்டமாகக் குறுகிய காம்புகளுடன் இலைகளின் நடுப்பகுதி எண்ணெய்ப்பசை கொண்டு மூன்று நான்கு நரம்புகளைக் கொண்டிருக்கும். மலர் சிறியதாய் வெளிறிய பச்சை நிறம் கொண்டு சிறிய காம்புகளுடன் காணப்படும். பழங்கள் உருண்டையாகச் சிவப்பும் மஞ்சளுமான நிறம் கொண்டு அழகாகக் காணப்படும். பழங்களுக்குள் வெண்ணிறமுள்ள சதைப் பகுதியில் வட்டமான விதைகள் காணப்படும். எளிதில் நசுக்க முடியாதபடி கடினமாக இருக்கும். குளிர்காலம் இளவேனிற் பருவங்களில் பூக்கும். ில் விஷமுட்டி நாகமுஷ்டி என இருவகைகள் உண்டு.

**தன்மை**

குளிர்ந்த தன்மையும், கசப்புச்சுவையும் கொண்டிருக்கும். வாதத்தைத் தோற்றுவிக்கும். மயக்கத்தை உண்டாக்கும். லேசானது, நரம்புகளுக்கு வலிமை தரும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் அசீரணம் கிரகணி காலரா புஜபங்கம் (ஆண்மை குறைதல்) வயிற்றுவலி இழுப்பு சிறுநீருடன் விந்து கழிதல் குதம்நழுவுதல் இதயத்துடிப்பு மனவிகாரம் நடுக்கம் கள் குடியால் தோன்றும் வாந்தி ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

இதன்வேர் கட்டையின்சாறு பாம்பு விஷத்தைப் போக்கும். மரக்கட்டையைப் புகை போடுதலால் பிசாசுகளால் தோன்றும் துன்பங்கள் நீங்கும். பழக்கதுப்பைத் தேய்த்தால் வாதவலி கால் கை மூட்டுகள் நழுவுதல் நீங்கும். நரம்புகளுக்கு வலிமை தரும். சொறிசிரங்கு நீங்கும். இதன் இலைகளைக் கடுக்காயுடன்

அரைத்து விரணங்களின் மேல்பூசினால் விரைவில் ஆறும். நாகமுஷ்டி பாம்பு விஷத்திற்கு மிகவும் நல்லது.

## 36. எரிமா

**ஸம். ஆம்ராதகம் Spondias Mangifera**

**தோற்றம்**

இது காட்டுமா எனவும் கூறப்படும். மிக்க உயரமாக வளரும். காய்கள் சிறியவையாகச் சிறிது நீண்டு வட்டமாகக் காணப்படும். சதுப்பு மணலைப் போல் கரகரவென்றிருக்கும். காடுகளில் மிகுதியாக விளைவதாகும். மரத்தின் தண்டு பருமனாகவும் பட்டை மிகப் பருமனாகவும் இருக்கும். பட்டை சிறிது வெண்மை நிறம் கொண்டிருக்கும். இலை நீண்ட காம்புகளுடன் காணப்படும்.

**தன்மை**

இம்மரத்தின் துளிர் புளிப்பாக இருக்கும். பழம் இனிப்பும் புளிப்பும் துவர்ப்புமான சுவைகளைக் கொண்டிருக்கும். குளுமைத் தன்மை உடையது. சடராக்னியையும் கபத்தையும் வளர்க்கும். எண்ணெய்ப்பசை உடையது. விந்து வளர்ச்சிக் கேற்றது. மலத்தைக் கட்டும். இளவேனிற் பருவத்தில் தங்க நிறம்கொண்ட மலர்கொத்தாகப் பூக்கும். முதுவேனிற் பருவத்தில் காய்த்துப் பழுக்கும். காய் இதயத்திற்கும் தொண்டைக்கும் தீங்கு செய்யும். இரத்தத்தைக் கெடுக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பித்தம் மார்பில் பட்ட காயம் எரிச்சல் க்ஷயம் ரத்த தோஷம் என்பனவற்றைப் போக்கும். இதன் இலைச்சாறு கிரகணி அதிசாரபேதி ஆகியவற்றைப் போக்கும். காய் காயங்களைப் போக்கும்.

**பயன்**

ஆம்ராதகாதி க்வாதம் நாவறட்சியைப் போக்கும். ஆம்ராதகாதி சூரணம் குழந்தைகளின் அதிசாரத்தைப் போக்கும்.

## 37. எருக்கன்

**ஸம். அர்க்கம் Calotropis Gigantea**

**தோற்றம்**

இரண்டு முதல் ஏழு கை வரை உயரமுள்ள செடியாக வளரும். வறண்ட அல்லது ஸாரமற்ற நிலத்தில் மிகுதியாக

வளரும். தண்டுகளின் மேல் பட்டை லேசாக எளிதில் ஒடிக்கக் கூடியதாய் ஈரப்பசை கொண்டிருக்கும். இளம் இலைகள் பஞ்சைப் போன்ற ரோமங்களுடன் கூடியிருக்கும். இலைக் காம்புப் பகுதி மெல்லியதாகவும் முனையில் அகன்றும் இருக்கும். காம்பு கள் மிகவும் குறுகி இருக்கும். காம்புப் பகுதியில் இலை மேல் சிவந்த கடினமான ரோமங்கள் காணப்படும். இலைகளின் மேல் உள்ள சாம்பல் நிறப்பூச்சினால் இலை வெண்மை நிறம் உள்ளதுபோல் காணப்படும். இது வெள்ளைப் பூ பூக்கும் எருக்கஞ்செடியின் தோற்றமாகும். சிவப்பு மலர் கொண்ட எருக்கஞ்செடியின் இலை ஆலை இலையைப்போல காணப்படும். வெள்ளை எருக்கம்பூ நுனியில் சிறிது மஞ்சள் நிறம் கலந்து காணப்படும். மலர்களில் ஐந்து இதழ்கள் உண்டு. சிவப்புநிற எருக்கமலர் கத்தரிப்பூபோல இருக்கும். நன்றாக மலர்ந்த பின் நான்கு அல்லது ஐந்து இதழ்கள் காணப்படும். மலரின் நடுப்பகுதி சிவலிங்கம் போல் காணப்படும். பங்குனி சித்திரை ஆடி மாதங்களில் பூக்கும். காய்கள் கிளியின் மூக்கு போன்ற முனையுடன் நீளமாக இருக்கும். பழுத்து வெடித்து அதனுள் இருக்கும் கருநிற விதைகள் பஞ்சுடன் எங்கும் பறந்து செல் லும். செடியை ஒடித்தால் பால் சுரக்கும். மரத்தின் இலை மலர் கிளை முதலிய எந்தப்பகுதியை ஒடித்தாலும் பால் சுரக்கும்.

**தன்மை**

இருவகை எருக்கஞ்செடியில் பேதியாகச் செய்யும் வெள்ளை நிறமலர் விந்து வளர்ச்சிக் கேற்றது. லேசானது, சடராக்னியை வளர்க்கக் கூடியது. செரிமானமடையச் செய்யும். சிவப்பு நிறமுள்ள மலர் இனிப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. மலத்தைக் கட்டும். இதன் பால் கசப்பு உவர்ப்புச் சுவைகள் கொண்டது. உஷ்ணசக்தி உள்ளது. அடர்த்தியானது. பேதி யாகச் செய்யும் மருந்துகளில் சிறந்தது.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் குட்டம் அரிப்பு நஞ்சு விரணம் மண்ணீரல்வீக்கம் குன்மம் மூலம் கபம் உதரநோய்கள் மலத்தில்தோன்றும் கிருமிகள் ஆகியவை நீங்கும். வெண்ணிற மலர் சுவையின்மை கபம் மூலம் இருமல் இழுப்பு என்பனவற்றைப் போக்கும்.

சிவப்பு மலர்கள் குட்டம் மூலம் கிருமிநோய் நஞ்சு ரத்த பித்தம் குன்மம் வீக்கம் என்பனவற்றைப் போக்கும். இதன்பால் குட்டம் குன்மம் உதரநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

வேர்க்கட்டையை தூளாக்கிப் பயன் படுத்தினால் பிள்ளைப் பேற்றின் பிறகு வீக்கம் குறையும். ரஸ பஸ்மம் அரை கோதுமை எடை, சுரமாக்கல் பஸ்மம் மூன்று கோதுமை எடை, எருக்கன் வேர்த்தூள் எட்டு அல்லது பத்து கோதுமை எடை சேர்த்துக் கலந்து மாத்திரையாக்கி எட்டு மணிக்கு ஒரு மாத்திரை வீதம் பயன்படுத்தினால் யானைக்கால்வியாதிநீங்கும். இலைகளின் மேலிருக்கும் வெண்ணிறப் பூச்சை எடுத்து எருக்கம் பாலைக் கலந்து கழற்சிக்காய் அளவு மாத்திரையாக்கி வெற்றிலையில் வைத்து மென்று தின்னச் செய்தால் பாம்பின் விஷம் நீங்கும். அல்லது மாத்திரையை நீரில் கலந்து பருகச் செய்யலாம். பாம்பு கடித்ததும் இரண்டு மூன்று எருக்கன் இலைகளை மென்று தின்று வேரை அரைத்துக் கடிவாயின்மேல் வைத்தால் நஞ்சு தணியும்.

## 38. எலிச்செவி

**ஸம். ஆகுகர்ணி** Ipomeareni Formis

**தோற்றம்**

இது கொடிபோல படர்ந்து செல்லும். கார்காலம் மற்றும் கூதிர்ப் பருவத்தில் வளரும். இதன் இலைகள் வட்டமாகவும், தண்டு மெல்லியதாகவும், சிவப்பு நிறமும் முடிச்சுகளைக் கொண்டும் காணப்படும். முடிச்சுகளில் கிளைகள் தோன்றும். இதன் காய் மிளகைப்போல் இருக்கும். இலைகள் தோன்றும். ஒவ்வொரு முடிச்சு போன்ற கணுக்களில் வெள்ளை நிறமுள்ள இறகு போன்ற அரும்புகள் காணப்படும். இதில் பெரிது சிறிது என இரண்டு வகைகள் உண்டு எனச் சில நூல்களில் கூறப்பட்டுள்ளன.

**தன்மை**

கசப்பு கார்ப்புச் சுவைகள் கொண்டது. சமசீதோஷ்ண வீரியமும் கொண்டது. இரசாயனமானது. பெரிய இலைகளைக் கொண்டது. இனிப்புச் சுவையுடையது. கண்களுக்கு நன்மையைச் செய்யும்.

**தீர்க்கும் நோய்கள்**

சிறு எலிச்செவி: இது வயிற்றுவலி காய்ச்சல் கிருமிநோய் கட்டி நீர்ச்சுருக்கு நீரிழிவு பெருவயிறு இதயநோய் நஞ்சு குட்டம் பகந்தரம் (பவுத்ரம்) என்னும் மூலநோய் ஆகியவற்றைப் போக்கும்.

பெரு எலிச்செவி—இது வயிற்றுவலி காய்ச்சல் கிருமி நோய் எரிச்சல் எலிவிஷம் ஆகியவற்றைப் போக்கும்.

எலிச்செவி வேரைப் பெண்குறிக்குள் வைத்துக் கொள்ளச் செய்தால் கருப்பையைச் சார்ந்த குற்றங்கள் நீங்கிப் பிள்ளைப் பேறு உண்டாகும்.

## 39. எலுமிச்சை

**ஸம். ஜம்பீரம்** Lemonum Acidum

**தோற்றம்**

எலுமிச்சையில் காயின் சுவை தோற்றம் முதலியவை மாறு படுதலால் தோன்றிய பலவகைகள் உண்டு. நம் நாட்டில் பெரும்பாலும் எல்லாப் பகுதிகளிலும் வளரும். மரம், செடி என இருவகை உண்டு. புளிப்பு இனிப்புச் சுவைகளாலும் இருவகைப் பிரிவு உண்டு. ஆனால் புளிப்புச் சுவை கொண்டது சிறந்தது. முள் நிறைந்த மரமாகும். இலைகள் தடித்தும் நறுமணமும் விருவிருப்பும் கொண்டிருக்கும். கார்ப்பருவத்தில் பூக்கும். குளிர் காலத்தில் காய்க்கும். இளவேனிற் பருவத்தில் பூத்து, முது வேனிற் பருவத்தில் காய்க்கும் வகையும் ஒன்று உண்டு. மலர்கள் வெண்ணிறமும் நறுமணமும் கொண்டிருக்கும்.

**தன்மை**

புளிப்புச்சுவையும் குருத்தன்மையும் கொண்டது. உஷ்ண வீர்யம் கொண்டது. செரிமானத்தை வளர்க்கும். சடராக்னியை வளர்க்கும். சுவையூட்டும். வாந்தியைத் தணிக்கும். இனிப்புச்சுவை கொண்டது. உடலைச் செழிப்புறச் செய்யும். வாதபித்தங்களைத் தணிக்கும். நன்கு பழுத்த பழம் பித்தத்தை வளர்க்கும். இழுப்பைத் தணிக்கும். இளங்காய் புளிப்புச் சுவையும் கார்ப்புச்சுவையும் கொண்டது. கண்களுக்கு நன்மை தரும். தொண்டையைத் தூய்மைப்படுத்தும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் கபம் மலச்சிக்கல் வயிற்றுவலி இருமல் கபத்தினால் தோன்றும் புரட்டல் வாந்தி நாவறட்சி வாய் சுவையின்மை மார்பில் வலி சடராக்னி குறைவு கிருமி நோய் என்பன.

**பயன்**

எலுமிச்சம் பழச்சாற்றை காலையும் மாலையும் பருகினால் ஆமல பித்தம் தணியும்.

எலுமிச்சம்பழச் சாற்றைப் பருகினால் மிகுதியாக உட்கொண்ட நெய் செரிமானமாகும்.

எலுமிச்சம் பழச்சாற்றில் வெல்லம் கலந்து பசும்பாலுடன் காலையில் பருகச் செய்தால் அம்மை நோயினால் தோன்றும் துன்பம் நீங்கும்.

ஜம்பீராதி பானகம்—சுவையின்மை சடராக்னி குறைவு வாந்தி காய்ச்சல் வயிற்றுவலி நாவறட்சி ஆகியவற்றைப் போக்கும்.

## 40. எள்

**ஸம். தில Sesamumindicum**

**தோற்றம்**

எள் பயிர் வகையைச் சேர்ந்தது. காட்டுஎள் என்றும் ஒருவகை உண்டு. வெள்ளை கறுப்பு சிவப்பு என்னும் நிறங்களைக் கொண்டு மூன்று வகைகளாகும். ஆனால் கறுப்பு எள்ளே சிறந்தது. நம் உணவில் இதன் எண்ணெய் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது.

**தன்மை**

கார்ப்பு கசப்பு இனிப்பு துவர்ப்பு ஆகிய சுவைகள் உடையது. பளுவானது எண்ணெய்ப்பசை மிக்கது. உஷ்ணத் தன்மை கொண்டது. வலிமை தரவல்லது. தலைமுடிக்கு நன்மை தரும். தாய்ப்பாலை வளர்க்கும். பற்களுக்கு நன்மை தரும். புத்தியையும் சடராக்னியையும் வளர்க்கும். கறுப்பு எள் குணத்தில் சிறந்தது. வெள்ளை எள் நடுத்தரமானது. சிவப்பு குணத்தில் மிகவும் தாழ்ந்தது.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் நீரிழிவு மூன்று தோஷங்கள் உடல் உறுப்புகளில் தோன்றும் வலிகள் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

எள் துகளில் எண்ணெய் கலந்து பயன்படுத்தினால் இரத்த மூலம் தணியும். கருஎள் ½ பலம் வீதம் நாள்தோறும் மென்று தின்று குளிர்ந்த நீரைப் பருகினால், உடல் வலிமை பெறும். பல்திடப்படும்

எள் செடியை எரித்துச் சாம்பலைத் தயிர்மேல்தெளிவுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்த்தடை நீங்கும். எள் செடியை எரித்ததன் சாம்பலை இனிப்புத்தயிருடன் கலந்து உட்கொண்டால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் நீங்கும்.

எள் செடியை எரித்ததன் சாம்பலை உட்கொள்ளச் செய் தால் புலால் உணவு செரிமான மடையும்.

நெருஞ்சில்காய் எள்மலர் தேன் நெய் இவற்றைச் சமஅளவு கொண்டு மைய அரைத்து வழுக்கைத் தலையில் தேய்த்தால் முடி வளரும்.

நாள்தோறும் எள் எண்ணெயைப் பருகச் செய்தால் உடல் பருமன் குறையும்.

## 41. ஏலம்

**ஸம். ஏலா** Elltaria Cardamomum

**தோற்றம்**

ஏலம், சிறு செடியாக வளரும். ஏலச்செடியில் சிறியது பெரியது என இரு வகைகள் உண்டு. இந்தச்செடியின்இலை இஞ்சிச்செடியின் இலையைப்போல அதைவிடச்சிறிது அகலமாக இருக்கும். இதன் தண்டில் பல சடைகளைப் போன்ற நீண்ட கொத்துகள் நறுமணத்துடன் காணப்படும். இதில் முக்கோண வடிவாய் சிவப்பு நிறத்தில் பெரியஏலம் தோன்றும். அதனுள் நறுமணமுள்ள விதைகள் இருக்கும். சிற்றேலச் செடியும் இதைப் போலவே காணப்படும். ஆனால் பெரிய ஏலத்தைவிட நறுமணத்தை மிகுதியாகக் கொண்டிருக்கும்.

**தன்மை**

**பெரியஏலம்**

கார்ப்புச்சுவையும் இலகு குணமும் வறட்சித் தன்மையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். செரிமானமடையும் போது கார்ப்புச்சுவை கொள்ளும். வாதத்தை வளர்க்கும். கபபித்தங் களைத் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும்.

**சிறுஏலம்**

கைப்பு கசப்பு கார்ப்புச் சுவைகளும் இலகு குணமும் கொண்டிருக்கும். வறட்சித்தன்மையும், குளுமையும் கொண்டது.

வாதத்தைத் தணிக்கும். கருச்சிதைவைத் தோற்றுவிக்கும். இரண்டு ஏலக்காய்களும் கசப்புச்சுவையும் நறுமணமும் கொண்டவை. இதயத்திற்குத் தீங்கு செய்யும். ஆண்மையைக் குறைக்கும்.

**ஏல எண்ணெய்**

இது கசப்புச்சுவை தீக்ஷ்ணகுணம் கொண்டது. மலத்தை இளகச் செய்யும். உஷ்ண வீரியம் கொண்டிருக்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பெரு ஏலம்—இது இரத்ததோஷம் அரிப்பு இழுப்பு நாவறட்சி நஞ்சு சிறுநீர்ப்பையில் வலி முகநோய் தலைநோய் வாந்தி இருமல் என்னும் நோய்களைப் போக்கும்.

சிற்றேலம், இருமல் இழுப்பு மூலநோய் நீர்ச்சுருக்கு என்னும் நோய்களைப் போக்கும்.

ஏலஎண்ணெய்—இது கபத்தைத் தணிக்கும். குட்டம் நீரிழிவு மூர்ச்சை கிருமிநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

ஏல அரிசித்துகளை ஆட்டின் சிறுநீரில் மூன்று நாட்கள் ஊற வைத்துக் கண்களில் மைபோல் இட்டால் திமிரம் முதலிய கண்நோய்கள் நீங்கும்.

சிறுஏல அரிசித்துகளை நெல்லிக்கனிச்சாற்றுடன் உட்கொள்ளச் செய்தால் நீர்ச்சுருக்கு நீங்கும்.

சிறு ஏலம் திப்பிலி எனும் இவற்றை மையத் துகளாக்கி நெய்யுடன் உட்கொள்ளச் செய்தால் இதயநோய் குன்மம் நீங்கும்.

**திருட்யாதி சூரணம்**

குன்மம் சிறுநீர்ப்பையில்கல் என்னும் நோய்களைப் போக்கும்.

**ஏலாதி குடிகை**

இருமல் இழுப்பு காய்ச்சல் விக்கல் வாந்தி மூர்ச்சை )ரத்தம்உமிழ்தல் சுவையின்மை மண்ணீரல்வீக்கம் குரல்

மாறுபாடு அடிபடுதலால் தோன்றும் க்ஷயம் ஆகியவற்றைப் போக்கும்.

**ஏலாதி தைலம்**

எண்ணெய்க் குளியல் பருகுதல் மூக்கிலிடுதல் என பயன்படுத்தினால் பக்கவாதம் தொண்டை உலர்ந்துபோதல் தலைநோய் காதுவலி செவிட்டுத் தன்மை தாதுக்குறைவு முதலியன நீங்கும்.

**ஏலாதி கிருதம்**

இரசாயனமானது. நீரிழிவு குன்மம் க்ஷயம் சோகை பௌத்திரம் எனும் நோய்களைப் போக்கும்.

ஏலாத்யரிஷ்டம்—அக்கி சீதபித்தம் விஷக்காய்ச்சல் அம்மைநோய் முதலியவற்றைத் தணிக்கும்.

ஏலாதிசூரணம்—வாந்தியைத் தணிக்கும்.

## 42. ஏலவாலுகம்

**ஸம். ஏலவாலுகம்** Bryonia Scadara.

**தோற்றம்**

இது வெள்ளரி வகையைச் சார்ந்த செடியாகும்.

**தன்மை**

இச்செடியின் வேர் குளுமையைத் தோற்றுவிக்கும். சிறிது கசப்புச்சுவை கொண்டிருக்கும். சுவையுண்டாக்கும். இலேசானது, செரிமானமாகும் போது கார்ப்புச் சுவை கொள்ளும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் மயக்கம் வாதம் எரிச்சல் காய்ச்சல் அரிப்பு நஞ்சு விரணம் வாந்தி நாவறட்சி இருமல் இதயநோய், இரத்தபித்தம் கிருமி குட்டம் ஆகியவற்றைப் போக்கும்.

## 43. ஏழிலைப்பாலை

**ஸம். ஸப்தபர்ண** Alstonia scholaris

**தோற்றம்**

மிக்க உயர்ந்த மரமாக வளரும். பட்டை தடிமனாகவும், வெண்மையாகவும் இருக்கும். மரத்தண்டு வெட்டப்பட்டால்

வெண்ணிறமுள்ள பால் சுரக்கும். இலை ஏழு பிரிவுகளைக் கொண்டு குடை கவிழ்த்தாற்போல் இருக்கும். மஞ்சள் நிறமும், எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். மலர் யானையின் மத நீரின் மணம்கொண்டு கொத்தாக வெண்மையும் பச்சையும் கலந்த நிறம் கொண்டிருக்கும். கூதிர் பருவத்தில் பூக்கும். காய் நீளமாக இருக்கும். முதுவேனிற் பருவத்தில் பருத்து விளங்கும். ஒடித்தால் வெள்ளைப்பால் சுரக்கும்.

**தன்மை**

மூன்று தோஷங்களையும் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும். எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். சூட்டை மிகுதியாக்கும். துவர்ப்புச் சுவை கொண்டிருக்கும். மலத்தைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் கபம் வாதம் குட்டம் இழுப்பு குன்மம் இரத்ததோஷம் கிருமிநோய் என்பனவற்றைப் போக்கும்.

**பயன்**

ஏழிலைப் பாலையின் பட்டைக் கஷாயத்தைக் குளியலுக்கும் பருகவும் பயன்படுத்தினால் குட்டம் நீங்கும்.

சீந்தில் கொடி ஏழிலைப்பாலை இவற்றின் கஷாயத்தைச் சுக்குத்தூளுடன் பயன்படுத்தினால் தாய்ப்பால் தூய்மை பெறும்.

ஏழிலைப்பாலைமலர் திப்பிலி இவற்றை நன்றாக அரைத்துத் தேனுடன் கலந்து தயிர்த் தெளிவுடன் உட்கொள்ளச் செய்தால் இருமல் இழுப்பு ஆகியவை தணியும். ஏழிலைப் பாலையின் கட்டையைப் பாலுடன் அரைத்துப் பூசினால் அழுகிய விரணங்கள் நீங்கும்.

**ஸப்தபர்ணச்ச தைலம்**

எண்ணெய் குளியலுக்குப் பயன்படுத்தினால் வங்கு முதலிய தோல் நோய்கள் நீங்கும்.

## 44. ஒதிய மரம்

**ஸம். ஜிங்கிணீ** Odina wodier

**தோற்றம்**

ஒதியன், காடுகளில் உயர்ந்தமரமாக வளரக்கூடியது. இலைகள் இலவமரத்தினிலைகள் போல் சற்று மெல்லியவையாக எண்

ணெய்ப்பசை கொண்டிருக்கும். ஆனால், இலவமரத்தில் உள்ளது போன்ற முட்கள் இதில் இல்லை. மலர் வெண்ணிறம் கொண்டிருக்கும்.

முதுவேனிற் பருவத்தில் பூக்கும். காய் இலந்தைக் காயைப் போல் அமைந்து சற்று நீண்டு இருக்கும்.

**தன்மை**

இனிப்பு துவர்ப்புச் சுவைகளையும் உஷ்ணத் தன்மையும் கொண்டதாகும்.

**பயன்**

இதன் பட்டை மருந்துப் பொருளாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் இதயநோய் வாதம் அதிஸாரம் முதலியவற்றைப் போக்கும்.

## 45. ஓடமரம்

**ஸம். இங்குதீ** Batural Roxburghii

**தோற்றம்**

நெடுமரமாக வளரக்கூடியது. சிறுகற்கள் நிறைந்த மண்ணில் இமயமலைச் சாரலிலும், கோதாவரி ஆற்றங் கரையிலும் மிகுதியாகக் காணப்படுகிறது. இம்மரத்தின் உயரம் ஏறக் குறைய 12, 14 கைகள் நீளம் வரை இருக்கும். இலைகள், பலா மரத்தினிலைகளைப் போன்று சற்று அகலக் குறைவாய் முனைப்பகுதி கூர்மையாக இருக்கும். மலர் சிறியவையாக மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இளவேனிற் பருவத்தில் பூக்கும். விதைகள் பெரியவை. கொட்டையும் பெரியதாகவே இருக்கும். தணலைப் போன்ற நிறமுள்ள காய்கள் அல்லது துளிர்கள் கொண்டதாகையால் அங்கார விருட்சம் எனவும், எண்ணெய் மிகுதியாகக் கொண்ட காய்கள் உடையதாகையால் தைலபலா எனவும், நச்சுத் தன்மை கொண்ட முட்கள் உடையதாகையால் 'விஷகண்டக' எனவும் இதற்கு வடமொழியில் பல பெயர்கள் உண்டு. நீரில் உள்ள கிருமிகளை அழிக்கவல்லது.

**தன்மை**

)லகுவானது இதன் மலர்கள் இனிப்புச்சுவையும் கசப்புச் சுவையும் எண்ணெய்ப்பசையும் உஷ்ண வீரியமும் கொண்டது. வாதகபங்களைத் தணிக்கும்.

பழம்—இனிப்புச் சுவையும் கசப்புச்சுவையும் எண்ணெய்ப் பசையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். கபவாதங்களைத் தணிக்கும். பழத்தின்கோதை நீருடன் கலந்து முகத்தில் பூசிக் கொள்ளச் செய்தால் பொலிவு மிகும்.

எண்ணெய் — இனிப்புச் சுவையும் எண்ணெய்ப்பசையும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். வலிமையையும் பொலிவையும் தரும். தலைமுடியை வளர்க்கும். கபத்தை மிகுதியாக்கும். பித்தத்தைத் தணிக்கும். கண்களுக்கு நன்மை செய்யும். தாதுக்களை வளர்க்கும்.

**பயன்**

ஓட மரத்தைலத்தை எண்ணெய்க் குளியலுக்குப் பயன் படுத்தச் செய்தால் குட்டம் தணியும்.

வாகை ஓடமரம் என இவற்றின் பட்டைகளின் விழுதைத் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் எலிவிஷம் நீங்கும்.

ஓட மரப்பழக்கோதுடன் அதிமதுரம் கலந்து விழுதாக்கிப் பயன்படுத்தினால் இரத்தபித்தம் தணியும்.

ஓடமர எண்ணெயைப் பூசச்செய்தால் அழுகிய விரணங்கள் நீங்கும்.

## 46. ஓமம்

**ஸம். யவானிகா** Carcum Copticum

**தோற்றம்**

ஓமம், பொடிமண் அல்லது கருநிற மண்ணுள்ள நிலங்களில் பயிராகும். நம் நாட்டில் பஞ்சாப் உத்தரபிரதேசப்பகுதிகளில் மிகுதியாக விளைகிறது.

**தன்மை**

கார்ப்பு கசப்புச் சுவைகள் லகுகுணம் உஷ்ணவீர்யம் எனுமிவற்றைக் கொண்டது. சுவையூட்டும். சடராக்னியையும் பித்தத்தையும் வளர்க்கும். வாதகபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பெருவயிறு குன்மம் மண்ணீரல் வீக்கம் கிருமிநோய் விந்து தோஷம் வயிற்றுவலி ஆகியவற்றைத் தணிக்கும்.

**காட்டுஓமம்**

**தன்மை**

கார்ப்புச் சுவையும் உஷ்ணவீர்யமும் தீக்ஷ்ணலகுகுணங் களையும் கொண்டது. எரிச்சலைத் தோற்றுவிக்கும். இதயத் துக்கு நன்மைதரும். விந்துவையும் உடல்வலிமையையும் வளர்க்கும். கபவாதங்களைத் தணிக்கும். கண்நோய் விக்கல் சிறுநீர்ப்பையில் வலி கபத்தினால் தோன்றிய வாந்தி ஆகிய வற்றைத் தணிக்கும்.

**குராஸானி ஓமம்**

இது பாரஸீகயவானி எனப்படுகிறது. ஓமத்தைப் போன்று தன்மை கொண்டு குருகுணம் மிகுந்திருப்பது. மலத்தைக் கட்டும். மயக்கத்தைத் தோற்றுவிக்கும்.

**பயன்**

ஓமஎண்ணெய் வயிற்றுவலி அசீரணம் மூலநோய் கிரஹணி ஆகியவற்றைப் போக்கும்.

சீரகத்தையும் ஓமத்தையும் விழுதாக்கிச் சீது என்னும் கள்ளுடன் பயன்படுத்தச் செய்தால் மூலநோய் தணியும். ஓமம் வசம்பு இவற்றை விழுதாக்கி நோய் கொண்ட பல்லில் ஓரிரவு வைத்துக் கொள்ளச் செய்தால் பல்நோய் தணியும்.

யவானிகாதி கிருதம், சோகை குன்மம் நீரிழிவு கிரஹணி ஆகியவற்றைத் தணிக்கும்.

யவான்யாதி சூரணம் இதயத்துக்கு நன்மைதரும். இருமல் மண்ணீரல்வீக்கம் மூலநோய் கிரஹணி ஆகியவற்றைப் போக்கும்.

யாவானீஷாடவம்—நெஞ்சுவலி விலாவலி இருமல் இழுப்பு மூலநோய் ஆகியவற்றைப் போக்கும். குராசானி ஓமத்தையும் வெல்லத்தையும் கலந்து முதல்நாள் காய்ச்சி வைத்த நீருடன் காலையில் வெறும் வயிற்றில் உட்கொள்ளச் செய்தால் குடலுக்குள்தோன்றும் கிருமிகள் வெளிவந்துவிடும்.

## 47. ஓரிலை

**ஸம். பிருச்னி பர்ணி** Uraria Picta

**தோற்றம்**

ஓரிலை என்பது ஓரிரண்டு அடிகள் உயரமாக வளரும் சிறு செடியாகும். இலைகள் வட்டமாகவும் சிறியவையாகவும் சிறுரோமங்களைக் கொண்டு பச்சைநிறமாகவும் இருக்கும். மலர்க்காம்பு கிளைநுனியில் நீண்டு நரிவாலைப் போலிருக்கும். கார்ப்பருவத்தின் முடிவில் துளிர்க்கும். கூதிர் முதுவேனில் பருவங்களில் முதிர்ந்துவிடும். விடாது மழைபெய்தால் இதன் )லைகள் விழுந்து விடும். இச்செடி சதுப்பு நிலத்தில் வளராது. ;ன் கிளைகள் உயர்ந்து வளராமல் நிலத்தின்மீது படர்ந் திருக்கும். பல கிளைகள் அவ்வாறு நிலத்தில் படர்ந்து குகை போல் காணப்படும். இதன்காய்கள் மிளகாய்போல் தட்டை யாகி, சிங்கத்தின் வாலைப்போல் பரவியிருக்கும். ஒரு காம்பில் மூன்று இலைகள் காணப்படும். ஐப்பசி கார்த்திகை மாதங் களில் பூக்கும். காய்களும் உடன்தோன்றும். இது ஒரு வகை யாகும்.

மற்றொரு வகையான ஓரிலையில் இலைகள் முன்னதைப் போன்றே இருக்கும். ஆனால் இலைகளின் நடுப்பகுதிகள் உலர்ந்து பச்சை நிறத்திடையே வெண்மை அல்லது கருமை நிறத்துடன் காணப்படும். இதன் காய், பெரியதாகி விதை துவரையைப் போல் சிவந்து இருபிரிவாக அமைந்திருக்கும். மேலும் காய்கள் சிறுரோமங்களால் மூடப்பட்டிருக்கும்.

**தன்மை**

இனிப்புச் சுவை உஷ்ணவீர்யம் கொண்டது. லகுகுணம் உள்ளது. மூன்று தோஷங்களையும் போக்கும். விந்து வளர்ச் சிக்கு ஏற்றது. பேதியாகச் செய்யும்.

**தீர்க்கும் நோய்கள்**

எரிச்சல் காய்ச்சல் இழுப்பு ரத்தாதிசாரம் நாவறட்சி வாந்தி பைத்தியம் விரணம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

இதை உணவிலும் குடிநீரிலும் தக்கபடி பயன்படுத்தினால் அதிஸாரம் நீங்கும்.

திரிகடுகம் ஓரிலை இவற்றுடன் காய்ச்சிய பாலைப் பருகச் செய்தால் அதிஸாரத்தில் தோன்றிய வலி நீங்கும். ஓரிலையின் வேரை விழுதாக்கித் தொப்புள் சிறுநீர்ப்பை குறிப்பகுதிகளில் பூசச் செய்தால் மூடகர்ப்பம் வெளிவந்துவிடும்.

ஓரிலைச்சாறு இரண்டு பங்கு ஆட்டுப்பால் ஒரு பங்கு நல்லெண்ணெய் அரை பங்கு எனும் இவற்றைக் கலந்து எண்ணெய்ப் பக்குவம் செய்து எண்ணெய்க் குளியலுக்குப் பயன் படுத்தினால் வாதரத்தம் தணியும்.

ஓரிலைத்துகளை ஆட்டுப்பாலுடன் பாதி அளவு நீர் கலந்து, கஞ்சியாகக் காய்ச்சிப் பருகச் செய்தால் ரத்தாதிசாரம் நீங்கும். ஓரிலைத் தூளைப் புலால் சாற்றுடன் 21 நாட்கள் பயன்படுத்தச் செய்தால் எலும்பு முறிவு குணமாகும்.

பிரிச்னிபர்ண்யாதி கிருதம்—நாள்பட்ட காய்ச்சல் தலைவலி விலாவலி இருமல் க்ஷயம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 48. கஞ்சா

**ஸம். பங்கா** Cannabs Indica

**தோற்றம்**

கஞ்சா, 8 அடி உயரமாக வளரக்கூடிய செடியாகும். வேப்பிலையின் தோற்றத்தில் அதைவிட நீளமும் அகலமும் சற்றுக் குறைந்துள்ள இலைகளைக் கொண்டது. ஒவ்வொரு காம்பிலும் ஐந்தாறு இலைகளிருக்கும். இதில் ஆண் பெண் என இருவகையுண்டு. ஆண்செடியிலிருந்து இலைகள் எடுத்துக் கொள்ளப்படும். பெண் செடியிலிருந்து அபின் எனப்படும் பிசின் (பால்) எடுக்கப்படும். இது மயக்கம் தரும் பொருளாகும்.

**தன்மை**

கசப்புச் சுவை கொண்டது. லேசானது. தீக்ஷ்ணகுணமும் உஷ்ணத்தன்மையும் கொண்டது. பித்தத்தையும் சடராக்னியையும் வளர்க்கும். மலத்தைக் கட்டும். போதை தரும் பொருளாகும்.

# 49. கடம்ப மரம்

**ஸம். கதம்ப** Anthoace phalus Cadumba

**தோற்றம்**

கடம்பமரம் மணற்பாங்கான உவர்நிலத்தில் மிகுதியாக வளரும். இது நம்நாட்டில் பெரும்பாலும் எல்லா இடங்களிலும் காணப்படும். வடமதுரை, பிருந்தாவனப் பகுதிகளிலும் மிகுந்து காணப்படுகிறது. கடம்பமரம் மிகப்பெரிதாக வளரும். இதன் பட்டை தடித்துக் கரடுமுரடாக இருக்கும். இலை இலுப்பை இலை போலிருக்கும். இலைக்காம்பு ஓரங்குல நீளமிருக்கும். இலையின் நடுப்பகுதி எண்ணெய்ப் பசையையும், பின் பக்கம் நரம்புகளையும் மிகுதியாகக் கொண்டிருக்கும். இம்மரத்தின் நிழல் மிகவும் குளிர்ச்சியாக இருக்கும். மலர்கள் மிகவும் மென்மையுடன் சிறியவையாய் மஞ்சள் நிறத்துடன் கேஸரங்கள் நிறைந்து காணப்படும். காய்கள் உருண்டை வடிவத்துடன் பச்சையாகவும் பழுத்ததும் மஞ்சள் நிறத்துடனும் விளங்கும். கார்ப்பருவத்தில் பூக்கும். மலர்களில் தேன் மிகுந்திருத்தலால் வண்டுகளுக்கு மிகவும் விருப்பமான மலராகும்.

**தன்மை**

இனிப்பு கசப்புத் துவர்ப்புச் சுவைகள் கொண்டிருக்கும். வறட்சியும் குருத்தன்மையும் கொண்டது. வாதத்தைத் தணிக்கும். விந்துவை வளர்க்கும். ரத்த தோஷத்தைப் போக்கும். இதன் பழம் இனிப்புச் சுவையுடன் குருத்தன்மை கொண்டது. குளுமையைத் தரும். பித்தத்தையும் ரத்ததோஷத்தையும் தணிக்கும். துளிர், துவர்ப்பு இனிப்புச் சுவைகளையும் லகு தன்மையையும் கொண்டிருக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் பித்தம் ரத்ததோஷம் வீக்கம் நஞ்சு விரணம் கிருமி நோய் மேகநோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

கடம்பம் மருதம் வேம்பு எருக்கன் எனும் இவற்றின் இலைகளை விரணத்தின்மேல் வைத்துக்கட்டினால் நலன் விளையும். கடம்பமலரை இட்டுக்காய்ச்சிய நெய் அல்லது பாலைப் பருகச் செய்தால் சிறுநீர் நிறமாறுபாடும் நீர்ச்சுருக்கும் தணியும். சுக்கு கடம்பமரப்பட்டை என இவற்றின் கஷாயத்தை மூன்று இரவுகள் பருகச் செய்தால் ரத்தாதி ஸாரம் தணியும். கடம்பா கஷாயம் பெண்குறி வலியைப் போக்கும்.

# 50. கடுகரோஹிணி

**ஸம். கடுகா** Picrorrhiza Kurrooa

**தோற்றம்**

கடுகரோஹிணி இமயமலைச்சரிவில் பெரும்பாலும் காணப்படுகிறது. வெள்ளாரை, பிராம்மி செடிகளைப் போல கடுகரோஹிணியும் சிறு செடியாக வளரும். சீந்தில்கொடியைப் போல இதன் தண்டை நட்டாலே முளைத்துச் செடியாக வளரும். வேறு மரங்களுடைய கிளைகளிலும் இது வளரக் கூடியது. இதன் தண்டில் பல வளையங்கள் மோதிரங்களைப் போல் காணப்படும். இலைகள் மாதுளஞ்செடியின் இலைகளைப் போலிருக்கும். காற்றடர்ந்த காட்டுப் பிரதேசங்களில் நன்கு வளரும். இதன்வேர் மருந்தாகப் பயன்படுகிறது. இவ்வேரை எளிதில் ஒடிக்க முடியும்.

**தன்மை**

கசப்புச்சுவை வறட்சித்தன்மை கொண்டது. பக்குவமடையும் பொழுது கார்ப்புச் சுவை கொள்ளும். குளுமை தரும். மலத்தை வெளியேற்றும். சடராக்னியை வளர்க்கும். இதயத்துக்கு நன்மை தரும். கபபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும்**

கபம் பித்தம் காய்ச்சல் இதயநோய் நீரிழிவு காமாலை இழுப்பு ரத்ததோஷம் அழற்சி குஷ்டம் கிருமிநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

அதிமதுரம் கடுகரோஹிணி இவற்றின் விழுதைச் சர்க்கரை நீரில் கலந்து பயன்படுத்தினால் இதயநோய் தணியும். கடுகரோஹிணி கஷாயம் தாய்ப்பாலைத் தூய்மைப்படுத்தும்.

கடுகரோஹிணி சந்தனம் அதிவிடயம் எனும் இவற்றின் விழுதை உட்கொள்ளச்செய்தால் குஷ்டம் நீங்கும். கடுகரோஹிணி விழுதை சர்க்கரையுடன் வெந்நீரில் கலந்து பருகச் செய்தால் கிருமி கபம் பித்தம் ஆகியவற்றால் தோன்றிய காய்ச்சல் நீங்கும். காவிக்கல் கடுகரோஹிணி இவற்றின் துகளைத் தேனுடன் பயன்படுத்தினால் விக்கல் நீங்கும்.

கடுகரோஹிணியின் விழுதைச் சர்க்கரையு பயன்படுத்‌னால் பித்தக்காய்ச்சல் நீங்கும்.

ரோஹிண்யாதி கிருதம்—பித்தத்தினால் தோன்றிய குன்மம் காய்ச்சல் நாவறட்சி வயிற்றுவலி மயக்கம் ஆகியவற்றைப் போக்கும்.

கடுகாதுகஷாயம—காயசசலால தோன்றிய மலத் தடையை நீக்கும்.

கடுகாதிலேஹியம்—வீக்கத்தை நீக்கும்.

## 51. கடுக்காய்

**ஸம். ஹரீதகி** Terminalia Chebula

**தோற்றம்**

கடுக்காயில் ஏழுவகையுண்டு. (1) சுரைக்காயைப்போல் உள்ளது விஜயா. இது எல்லா நோய்களையும் போக்கவல்லது. (2) உருண்டை வடிவம் கொண்டது ரோஹிணி எனப்படும். இது விரணங்களை ஆற்றவல்லது. (3) சதைப்பகுதி மெல்லியதாகவும் கொட்டை பெரியதாகவுமுள்ளது பூதனா எனப்படும். இது உடல் மேல்பூச்சுக்குச் சிறந்தது. (4) சதைப்பற்று அதிகமாகவும் விதை சிறியதாக இருப்பது அமிருதா எனப்படும். இது மலக்கழிப்புக்குத் தர சிறந்தது. (5) மேல் பகுதியில் ஐந்து கோடுகளைக்கொண்டது அபயா எனப்படும். இது கண்நோய்களைப் போக்கவல்லது. (6) பொன்னிறம் கொண்டது ஜீவந்தி எனப்படும். இது எல்லா நோய்களையும் தீர்க்க வல்லது. (7) மேற்பகுதியில் மூன்று கோடுகளைக் கொண்டது சேதகி எனப்படும். இது தூளாக்கிப் பயன்படுத்தச் சிறந்தது. சேதகி என்பது கறுப்பு வெளுப்பு எனும் இரண்டு நிறங்களிலும் காணப்படும். வெண்சேதகி ஆறு அங்குல நீளமும், கருசேதகி ஓரங்குல நீளமும் இருக்கும். கடுக்காய் மரம் மலைப்பாங்கான நிலங்களில் நன்கு வளரக்கூடியது. இலை ஆடாதொடை இலையைப் போலிருக்கும். இதில் ஒருவகையாகிய சேதகி என்னும் மரத்தின் நிழலில் தங்கும் விலங்கினங்களும் பேதியாகும் என்றும், இதன் காயைக் கையில் வைத்துக் கொள்வதாலேயும் பேதியாகச் செய்யும் என்றும் நூல்கள் கூறுகின்றன.

**விளை நிலம்**

விஜயா என்பது எல்லா இடங்களிலும் சிறப்பாக விந்திய மலைப்பகுதியிலும், சேதகீ பூதனா என்பன இமயமலைப் பகுதியிலும், ரோஹிணி என்பது சிந்துநதிக் கரைப் பகுதியிலும், அபயா அமிருதா என்பவை சம்பாரண் என்னும் பகுதியிலும் ஜீவந்தி என்பது ஸௌராஷ்டிரா தேசத்திலும் சிறப்பாக விளைகின்றன.

**தன்மை**

விதைகளுக்குள் உள்ள பருப்பு இனிப்புச்சுவையும் நரம்புப் பகுதி புளிப்புச் சுவையும் காம்புப் பகுதி கசப்புச் சுவையும் தோல் கார்ப்புச் சுவையும் விதைகள் துவர்ப்புச் சுவையும் கொண்டிருக்கும். இச்சுவைகளில் இனிப்பு கசப்புத் துவர்ப்புச் சுவைகளால் பித்தமும், கார்ப்பு கசப்பு துவர்ப்புச் சுவைகளால் கபமும், புளிப்புச்சுவையால் வாதமும் தணியும். இவ்வாறு சுவைகள் அனைத்தையும் கொண்டிருப்பதால் எல்லா தோஷங்களையும் போக்கவல்லது. மற்றும் உப்புடன் கலந்து பயன்படுத்தினால் கபமும், சர்க்கரையுடன் கலந்து பயன்படுத்தினால் பித்தமும், நெய்யுடன் கலந்து பயன்படுத்தினால் வாதமும் தணியும். கடுக்காயை இளவேனில் காலத்தில் தேனுடனும் முதுவேனில் காலத்தில் வெல்லத்துடனும் கார்பருவத்தில் இந்துப்புடனும் கூதிர்ப் பருவத்தில் சர்க்கரையுடனும் முன்பனிக் காலத்தில் சுக்குடனும் பின்பனிக்காலத்தில் திப்பிலியுடனும் உட்கொண்டு வந்தால் பருவகால மாற்றத்தால் தோன்றும் நோய்களைத் தீர்க்கும் ரஸாயனமாகும். கடுக்காயை மென்று தின்றால் சடராக்னியை வளர்க்கும். கஷாயம் காய்ச்சிப் பருகினால் மலம்கழியச் செய்யும். பக்குவம் செய்து உட்கொண்டால் மலத்தைக் கட்டும். வறுத்துப் பயன்படுத்தினால் மூன்று தோஷங்களையும் போக்கும். உணவுடன் சேர்த்து உட்கொண்டால் அறிவாற்றலையும் உடல் வலிமையையும் வளர்க்கும். புலன்களைத் தெளிவு படச் செய்யும். மலம் சிறுநீர் என இவற்றை வெளியேற்றும். உணவுக்குப்பின் பயன்படுத்தினால் தகாத உணவு நீர் இவற்றால் உண்டான தோஷங்களைப் போக்கும்.

**கடுக்காயைப் பயன்படுத்தத் தகாதவர்கள்**

வழி நடையால் களைத்தவர், உடல் வலிவற்றவர், வறண்ட உடல் கொண்டவர், மிகவும் இளைத்தவர், பட்டினி

யால் உடல் இளைத்தவர், இயற்கையாகவே பித்தம் மிகுந்த உடல் கொண்டவர். கருவுற்றவர், இரத்தமிழந்தவர் ஆகியோர் கடுக்காயைப் பயன்படுத்தத் தகாதவர் ஆவர்.

**தீர்க்கும் நோய்கள்**

இருமல் நீரிழிவு மூலம் குஷ்டம் வீக்கம் பெருவயிறு கிருமிநோய் அக்கி கிரஹணி வயிற்று உப்புசம் விஷக்காய்ச்சல் குன்மம் விரணம் வாந்தி தொண்டை இதயம் இவற்றில் தோன்றும் நோய்கள் காமாலை வயிற்றுவலி கட்டி மண்ணீரல் வீக்கம் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் நீர்ச்சுருக்கு சிறுநீர்த் தடை முதலிய நோய்களை நீக்கும்.

**பயன்படுத்தும் முறை**

பசுவின் சிறுநீரில் கடுக்காயை ஊறவைத்து உட்கொள்ளச் செய்தால் கபத்தினால் தோன்றிய சோகை நீங்கும். வெல்லத்தையும் கடுக்காயையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாதரத்தம் தணியும். நாள்தோறும் காலையில் வெல்லத்துடன் கலந்த கடுக்காயைப் பயன்படுத்தச்செய்தால், முளை வெளியில் தெரியாத மூலநோய் தணியும். கடுக்காயின் விழுதைப் பசுவின் சிறுநீருடன் பயன்படுத்தச் செய்தால் கபத்தினால் தோன்றிய யானைக்கால் நோய் தணியும். கடுக்காயை இளஞ்சூடுள்ள நீருடன் பயன்படுத்தினால் விக்கல் தணியும். பாலுடன் கடுக்காய் விதைகளைப் பக்குவம் செய்து பயன்படுத்தினால் சிறுநீர்ப்பையில் தோன்றும் நோய் நீங்கும். கடுக்காயை நெய்யில் வறுத்து நெய்யுடன் உட்கொண்டால் உடல் வலிமையும் ஆயுளும் மிகுதியாக வளரும். கடுக்காயை ஆடாதொடைச் சாற்றுடன் பாவனை செய்து உலர்த்தித் திப்பிலியும் தேனும் கலந்து பயன்படுத்தினால் கடுமையான ரத்தபித்தநோயும் தணியும்.

கடுக்காயைச் சுட்டுத் தூளாக்கி நல்லெண்ணெயுடன் கலந்து பூசினால், குஷ்டத்தால் தோன்றும் விரணங்கள் நீங்கும். கடுக்காய்த்துகளை ரஸாஞ்சனத்துடன் கலந்து பூசினால் 'சிப்லிஸ்' எனும் பால்வினை நோய் நீங்கும். கடுக்காயைப் பசுவின் சிறுநீருடன் உட்கொண்டால் பாமாகுஷ்டம் தத்ருகுஷ்டம் எனும் குஷ்டவகைகள் நீங்கும்.

கடுக்காயை பசுவின் சிறுநீரில் பாவனை செய்து ஆமணக்கு எண்ணெயில் வறுத்து இந்துப்புடன் கலந்து உட்கொண்டு இளஞ்சூடுள்ள நீரைப்பருகி வந்தால் விதைவீக்கம் தணியும்.

மஞ்சளின் சாற்றை இரும்புப் பாத்திரத்தில் இட்டு, அதில் கடுக்காயின் விழுதைச் சேர்த்துக் கலந்து வைத்துக் கொண்டு, சிறிது சிறிதாகப் பூசிக் கொண்டு வந்தால் நகச்சுற்று நீங்கும்.

## 52. கண்டங்கத்தரி

**ஸம். கண்டகாரி** Solanum Xanthocarpum

### தோற்றம்

கண்டங்கத்தரி, நிலத்தில் படர்ந்து வளரும் செடி. இதில் வெள்ளைக் கோடுகளுடன்கூடிய நீளமான இலைகள், மேலும் கீழும் எண்ணற்ற முட்கள் நிறைந்து காணப்படும். மணற்பாங்கான நிலத்தில் வளரும். கோடையில் கத்தரிப் பூவைப் போன்ற மலர்கள் தோன்றும். கார்ப்பருவத்தில் வெள்ளைக் கோடுகள் உள்ள காய்கள் தோன்றும். கூதிர்ப்பருவத்தில் பழுத்து விடும். பழம் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இதில் வெள்ளை நிறமலர் கொண்டவகை ஒன்று உண்டு. நீலமலர் கொண்டது. மூன்று நான்கு கை நீளம் உயர்ந்து கத்தரிச் செடியைப் போலவே காணப்படும். அதனால் இதற்கு 'வார்த்தாகி,' என்ற பெயராயிற்று. இதன் காய் கத்தரிக்காயைப் போலவே இருக்கும். வெள்ளை மலர் பூக்கும். செடியில் முட்கள் மிகவும் குறைந்து, காய்கள் சிறியவையாய் காணப்படும். இருவகை செடிகளும் கற்கள் நிறைந்துள்ள காட்டுப்பகுதிகளில் வளரும்.

### தன்மை

மலத்தைப் போக்கும். கசப்பு கார்ப்புச் சுவைகள் கொண்டது. லேசானது, வறண்ட தன்மையும் உஷ்ணவீர்யமும் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். இவ்விரண்டின் காய் கார்ப்புச் சுவை கொண்டவை. விந்துவை வெளியேற்றும். பேதியாகச் செய்யும். பித்தத்தையும் சூட்டையும் வளர்க்கும்.

### தீர்க்கும் நோய்கள்

இருமல் இழுப்பு காய்ச்சல் பீனசம் விலாவலி கிருமிநோய் இதயநோய் முதலியவற்றைப் போக்கும்.

இவற்றின் காய்கள் கபம் வாதம் வலி அரிப்பு இருமல் உடலில் மிகுதியாகச் சேர்ந்துள்ள கொழுப்பு கிருமிநோய் காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

வெள்ளைப்பூ பூக்கும். கண்டங்கத்தரி சிறப்பாகக் கருவுறச் செய்யும்

# 53. கம்பிப்பாலை

**ஸம். கம்பில்லம் Mallotus Philippinensis**

**தோற்றம்**

வாயுவிளங்கத்தின் பழங்களின் மேலிருக்கும் சிவந்த நிறத் துகள் கம்பிப்பாலை எனப்படும். அம்மரத்தின் கிளைகளின்மேல் படிந்துள்ள துகள் போன்ற மரத்தின் பகுதியும் 'கம்பில்லம்' எனப்படும். சிங்கப்பூர் காச்மீரம் இலங்கை அந்தமான் முதலிய இடங்களில் மக்கள் இப்பழங்களைக் கூடையில் வைத்துக் கொண்டு, ஒன்றோடொன்று தேய்த்து, அடியில் தங்கியதுகளைச் சேகரிப்பார்கள்.

**தன்மை**

கார்ப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது. மலத்தை வெளியேற்றும். கபத்தை தணிக்கும். கம்பிப் பாலையின் துகள் செங்கற்பொடிபோல் இருக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் பித்தம் ரத்தபித்தம் ரத்ததோஷம் குன்மம் பெரு வயிறு விரணம் நீரிழிவு நஞ்சு சிறுநீர்ப் பையில் கல் முதலிய வற்றைப் போக்கும்.

**பயன்**

கம்பில்லத்துகளைத் தேனுடன் கலந்து குன்மநோய்க்கு பயன்படுத்தலாம்.

கம்பில்லத்துகளை வெல்லத்துடன் கலந்து பயன்படுத் தினால் உடலிலுள்ள பூச்சிகள் அனைத்தும் வெளிவந்துவிடும்.

கம்பில்லக் கஷாயம், விழுது இவற்றுடன் எண்ணெய் சேர்த்துப் பக்குவம் செய்து அந்த எண்ணெயை பூசினால் விரணங் கள் ஆறும்.

கம்பில்லகாதி சூரணம்—நீரிழிவு குன்மம் வயிற்றுவலி ஆகியவற்றைப் போக்கும். கம்பில்லகாதி கிருதம் பெருவயிறு நோயைத் தணிக்கும்.

# 54. கரிசலாங்கண்ணி

ஸம். பிருங்கராஜ Prosta Verbesina

**தோற்றம்**

கரிசலாங்கண்ணி நிலத்தின்மீது படர்ந்து வளரும் சிறு செடி வகையாகும். வெள்ளை மஞ்சள் நீலம் நிறங்களுள்ள மலர்களைக் கொண்டு இது மூன்று வகையாகும். நீலநிறம் உள்ளது அரிதாகக்காணப்படுகிறது. இலைகள் துவரை இலையைப் போல சற்றுத் தடித்துக் காணப்படும். காம்புப் பகுதியுடன் இலை அகன்று நுனி கூர்மையாகக் காணப்படும். வெள்ளைப் பூ கொண்ட செடி மிகச் சிறியதாகும். இது கார்ப்பருவத்தில் வளரும். கூதிர்பருவத்தில் மலர் நிறைந்து விளங்கும். மலர்கள் சிறியனவாய் உருண்டை வடிவத்துடன் காணப்படும். நன்கு வளர்ந்ததும் இதழ்கள் உதிர்ந்துவிடும். கருஞ்சீரகம் போன்ற விதைகள் காணப்படும். நீலநிறமுள்ள கரிசலாங்கண்ணியைக் கொண்டு பாதரஸத்தைக் கட்டமுடியும் என்றும், அந்தப் பாத ரஸத்தால் எல்லாக் காரியங்களையும் நிறைவேற்றிக் கொள்ள லாம் என்றும் நூல்கள் கூறுகின்றன. இரும்புச்சத்து மிகுந் துள்ள இலையாகையால் பலநோய்களைத் தணிக்கும் வல்லமை கொண்டதாகும். இதன் துளிர் கறிசமைத்து உண்பதற்கும் பயன்படும்.

**தன்மை**

வெண்மை நிறமுள்ளது கசப்புச் சுவை கொண்டிருக்கும். கண்களுக்கு நன்மை தரும். மஞ்சள் நிறமுடையது கசப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். கண்களுக்குக் குளிர்ச்சி தரும். தலைமுடிக்கு நிறம் தந்து வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

நீலநிறமுடையது. கசப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது. இது சிறந்த ரஸாயனமாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் வாதம் கிருமிநோய் இழுப்பு இருமல் வீக்கம் அசீரணம் நஞ்சு குட்டம் கண்நோய் தலைவலி முதலியவற்றைப் போக்கும். சிறப்பாக நீலநிறமுள்ளது. வெண்குட்டத்தையும் போக்கும்.

**பயன்**

கண்டங்கத்தரி கரிசலாங்கண்ணி இவற்றின் சுரஸத்தில் தேன் கலந்து பயன்படுத்தினால் கபத்தால் தோன்றிய இருமல்

தணியும். கரிசலாங்கண்ணிச்சாறு பத்துப் பங்கும், நல்லெண்ணெய் ஒரு பங்கும் கலந்து எண்ணெய்க் காய்ச்சிப் பருகச் செய்தால் இருமல் இழுப்பு தணியும். நாள்தோறும் கரிசலாங் கண்ணிச்சாற்றை ஒருமாதகாலம் பருகி, பால்சோறு உண்டு வந்தால் நூறாண்டு காலம் உடல் வலிமையுடன் வாழலாம். கரிசலாங்கண்ணிச் செடியை வேருடன் எடுத்து மைய அரைத்துப் பூசினால் 'சிப்லிஸ்' என்னும் பால்வினை நோய் நீங்கும்.

கரிசலாங்கண்ணிச் சாற்றையும் பசும்பாலையும் சமஅளவு கலந்து பருகச் செய்தால் கருச்சிதைவைத் தடுக்கும். வில்வம் கரிசலாங்கண்ணி இவற்றின் வேர்களை மைய அரைத்து மதுவுடன் உட்கொள்ளச் செய்தால் மகப்பேற்றுக்குப் பின் தோன்றும் குறிவலி தணியும்.

பிருங்கராஜதைலம்—இதை எண்ணெய்க் குளியலுக்கும் மூக்கிலிடு மருந்தாகவும் பயன்படுத்தினால் தோல் சுருக்கமும் நரையும் தோன்றா.

மஹாபிருங்கராஜதைலம்—இதை மூக்கிலிடும்—மருந்தாக எண்ணெய்க் குளியலுக்கும் பயன்படுத்தினால் முடி உதிர்தல் தொண்டைப் பிடிப்பு தலை காது கண் நோய்கள் இந்திரலுப்தம் எனும் முடிஉதிரும் நோய் ஆகியவை நீங்கும்.

பிருங்காமலக தைலம்—எண்ணெய்க் குளியல் மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்தினால் தலை கண் நோய்கள் கால் கை வலி காதுவலி பைத்தியம் எனும் நோய்கள் நீங்கும். தலை முடியை வளர்க்கும்.

## 55. கருங்காலி

**ஸம். கதிரா** Acacia Catachu

**தோற்றம்**

கருங்காலி காடுகளில் வளரும் மரமாகும். இதில் ரக்த கதிரம் ச்வேதகதிரம் லகுகதிரம் வல்லீகதிரம் விட்கதிரம் பப்பூலம் என ஆறுவகைகள் உண்டு. இவையனைத்தும் ஒரே வகையான இலைகளைக் கொண்டு முட்கள் நிறைந்து காணப்படும். கார்ப் பருவத்துவக்கத்தில் மலரும். குட்டத்தைப் போக்கும் மருந்து வகைகளில் சிறந்தது என நூல்கள் கூறுகின்றன. இவற்றில் இரிமேதம் என்பது கருவேலமரமாகும். இதற்கு வடமொழியில்

நேமிவிருக்ஷம் என்பது பெயர். ஆகவே இது பெரும்பாலும் வண்டிச் சக்கரம் செய்யப்பயன்படுகிறது.

**தன்மை**

ரக்தகதிரா—கார்ப்பு கசப்புச் சுவைகளும் உஷ்ணவீர்யமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

வெண்கருங்காலி கசப்புச் சுவையும் குளிர்ச்சித் தன்மையும் கொண்டது. பித்த கபங்களைத் தணிக்கும். இதன்பிசின் இனிப்புச் சுவை கொண்டது. உடல் வலிமையையும் விந்துவையும் வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இருமல் சுவையின்மை உடலில் மிகுந்துள்ள கொழுப்பு கிருமிநோய் அரிப்பு நீரிழிவு காய்ச்சல் விரணம் வெண்குட்டம் வீக்கம் அசீரணம் பித்தம் ரத்ததோஷம் சோகை குஷ்டம் கபம் ஆகிய நோய்களைப் போக்கும்.

**பயன்**

கருங்காலிச் சாற்றை குடிநீரிலும் உணவிலும் மேற்பூச்சிலும் பயன்படுத்தினால் கிருமி குட்டம் எனுமிவை நீங்கும்.

கருங்காலி மரத்துகளைத் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் ரத்தபித்தம் தணியும். கருங்காலி கஷாயத்தைக் கொப்பளிக்கச் செய்தால் பல்நோய்கள் நீங்கும்.

கருங்காலி வேரையும், வேம்பின் விதையையும் துகளாக்கி வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் தாவரவிஷத்தால் தோன்றிய துன்பங்கள் நீங்கும்.

கருவேலம்பிசின் விழுதைத் தேனுடன் கலந்து பசுவின் சிறுநீருடன் காலையில் உட்கொள்ளச் செய்தால் யானைக்கால் நோய் தணியும்.

வெண்கருங்காலித்துளின் விழுதை உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும்.

வெண்வேலமரக்கட்டையின் தூளைத் தேனுடன் கலந்து மூன்று நாட்கள் உட்கொண்டால் முறிந்த எலும்பு சேர்ந்து டமாகும்.

வெண்வேலம்பட்டைக் கஷாயத்தைப் பாகுநிலைவரை காய்ச்சி, மோருடன் உட்கொண்டு மோர்ச்சோற்றை அளவுடன் உண்டு வந்தால் ஜலோதரம் தணியும்.

கதிராதிகனகபிந்து அரிஷ்டம்-குட்டம் மூலநோய் இழுப்பு இருமல் பவுத்திரம் நீரிழிவு எனும் நோய்களைப் போக்கும்.

மஹாகதிர கிருதம்—குஷ்டவகைகள் அனைத்தையும் நீக்கும்.

கதிராதி குடிகையை வாயில் வைத்துக் கொண்டால் பல்விழுதல் பல்ஆடுதல் முதலிய வாய்நோய்கள் நீங்கும்.

கதிராரிஷ்டம்—குட்டம் இதயநோய் குன்மம் கட்டி கிருமி நோய் சோகை இருமல் மண்ணீரல்வீக்கம் என்னும் நோய்கள் நீங்கும். கதிரஸாராதி சூர்ணம் வெண்குட்டம் குட்டம் என்ற நோய்களைத் தணிக்கும்.

இரிமேதாதி கிருதம்—பெருவயிறு குன்மம் எரிச்சல் காய்ச்சல் நாவறட்சி மூர்ச்சை வாந்தி இதயநோய் ரத்தபித்தம் காமாலை என்பனவற்றைப் போக்கும்.

பப்பூலாரிஷ்டம்—க்ஷயம் குஷ்டம் அதிசாரம் நீரிழிவு இருமல் இழுப்பு எனும் நோய்களை நீக்கும்.

பப்பூலாதி லேகியம்-க்ஷயம் இருமல் இழுப்பு எரிச்சல் வீக்கம் விக்கல் நாவறட்சி வாந்தி சோகை நீரிழிவு பெருவயிறு தொப்புள் வலி வாதத்தால் தோன்றும் உடல் நடுக்கம் என்பன நீங்கும்.

## 56. கருணை

**(ஸம்.)சூரண** Amorphophallus Camulatus

**தோற்றம்**

இது கிழங்கு வகையைச் சார்ந்தது. இது நிலங்களில் பயிர் செய்யப்படுவதாகும். காடுகளில் தானாகவே முளைக்கும். காட்டுக்கருணை என்னும் வகை ஒன்றுண்டு. பயிர் செய்யப்

படும் கருணை வகையிலும் உள்ளே சிவப்பாக இருப்பது, வெள்ளையாக இருப்பது என இருவகை உண்டு. சிறு கிழங்கை நட்டால் குடையைப் போல் அகன்ற இலைகள் தோன்றும். இந்த இலைகள் நன்றாக வளர்ந்து காம்புடன் மஞ்சள் நிறங் கொண்டு உதிர்ந்துவிடும். அப்பொழுது அடியிலுள்ள கிழங்கை வெட்டியெடுப்பார்கள். காட்டுக் கருணை என்பது தாமிர லோகத்தின் தோஷங்களைப் போக்கக் கூடியது என நூல்கள் கூறுகின்றன.

### தன்மை

பொதுவாகக் கருணை கார்ப்புச்சுவை கொண்டிருக்கும். உண்டபொழுது நாவிலும் தொண்டையிலும் அரிப்பைத் தோற்றுவிக்கும். உஷ்ணவீர்யம் கொண்டிருக்கும். சிவப்பு நிற முள்ள கருணை மலத்தைக் கட்டும். சடராக்னியையும் பித்தத்தையும் வளர்க்கும். கபத்தைத் தணிக்கும். காட்டுக் கருணை கார்ப்புச் சுவையுடையது. உஷ்ண வீர்யத்தை வளர்க்கும். பித்தத்தையும் இரத்தத்தையும் கெடுக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

பொதுவாகக் கருணை இருமல் இழுப்பு வாந்தி என்பன வற்றைப் போக்கும். வெள்ளைக் கருணை கிருமி குன்மம் வலி சுவையின்மை ஆகியவற்றைப் போக்கும்.

சிவப்புக்கருணை, குன்மம் வயிற்றுவலி கிருமிநோய் ஆகிய வற்றைப் போக்கும்.

காட்டுக்கருணையும் இத்தன்மையதே.

### குறிப்பு

அரிப்பு இரத்தபித்தம் குட்டம் எனும் நோய்கொண்டவர் கருணைக் கிழங்கைப் பயன்படுத்தக் கூடாது.

### பயன்

நன்றாக முதிர்ந்த கருணைக் கிழங்கையும் சுக்கையும் நீருடன் மைய அரைத்து ஏழு நாட்கள் தினமும் பலமுறை மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் கொழுப்பு மிகுதியால் தோன்றும் கட்டி நீங்கும்.

சோற்றை நீக்கி கருணைக் கிழங்கை மட்டும் பக்குவம் செய்து மோருடன் ஒரு மாதம் உட்கொண்டால் மூலநோய் நீங்கும்.

கருணைக்கிழங்கை சீலைமண்பூசி புடம் போட்டு அதில் நல்லெண்ணெயும் இந்துப்பும் கலந்து உட்கொள்ளச் செய்தால் மூலநோய் தணியும்.

கருணைக் கிழங்கை மைய அரைத்துத் தேனும் நெய்யும் கலந்து மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் யானைக்கால் நோய் தணியும்.

சூரணாதிலேபம் மூலநோயைத் தணிக்கும்.

## 57. கரும்பு

**(ஸம்.)இக்ஷு** Saechaerumalbum

### தோற்றம்

கரும்பில், பௌண்ட்ரகம் பிருகம் வம்சம் சதகோரகம் காந்தாரம் தாபஸஇக்ஷு காஷ்டேக்ஷு சூசிபத்ரகம் நைபாளம் தீர்க்கபத்ரகம் நீலபோரம் கோசகம் மனோகுப்தா என்று பதின்மூன்று வகைகளுண்டு.

பௌண்ட்ரகம் பிருகம் என்பவை இரண்டும் சுவையிலும் பாகத்திலும் மிக்க இனிப்புச் சுவை கொண்டவை. குளிர்ச்சி தருபவை—உடலைச் செழிக்கச் செய்யும். வாதபித்தங்களைத் தணிக்கும்

கோசகம் என்பது பளுவானது. ரத்தபித்தம் ஈளைக் காச நோய் ஆகியவற்றைப்போக்கும். காந்தாரம் என்பது கருநிற முடையது. பளுவானது விந்துவையும் கபத்தையும் வளர்க்கும். உடலைச் செழிப்புறச் செய்யும்.

வம்சம் என்பது நீண்ட இடைவெளியுள்ள கணுக்களைக் கொண்டது. மிக்க கடினமானது, சற்று உவர்ப்புச் சுவை சதகோரகம் என்பது பலகணுக்களைக் கொண் .ஷ்ணத் தன்மையும் உவர்ப்புச் சுவையும் கொண்டிருக் கும். வாதத்தைப் போக்கும்

தாபஸம் என்பது மென்மையும் இனிப்புச்சுவையும் கொண்டது. கபம் விந்து வலிமை ஆகியவற்றை வளர்க்கும்.

காஷ்டேக்ஷு என்பது தாபஸக்கரும்பைப்போன்றது. ஆனால் இது வாதத்தைச் சீற்றமடையச் செய்யும். சூசீபத்ரம் என்பது ஊசிபோன்ற இலைகளைக் கொண்டது. இதுவும், நைபாளம் தீர்க்கபத்ரகம் நீலபோரம் என்பவையும் வாதத்தை வளர்க்கும். கபம் பித்தம் ரத்தபித்தம் என்பனவற்றைப் போக்கும்.

மனோகுப்தா என்பது வாதத்தையும் நாவறட்சியுடன் கூடிய நோய்களையும் போக்கும்.

கரும்பு வாதபித்தங்களைத் தணிக்கும். சிறுநீரை வெளியேற்றும். ஆனால், அளவோடு பயன்படுத்தவேண்டும். அளவுக்கு மிஞ்சினால் வயிற்றில் பூச்சிகளைத் தோற்றுவிக்கும்.

**சிறப்பான தன்மைகள்**

கரும்பு மலத்தை வெளியேற்றும். உடலுக்குச் செழிப்பையும் மகிழ்ச்சியையும் தரும். இரத்த தோஷத்தை வெளியேற்றும். உடலில் கொழுப்பை வளர்க்கும். இதயத்திற்கு நன்மை தரும்.

**பாணிதம்**

பாகுபோல் காய்ச்சிய கருப்பஞ்சாறு பாணிதம் எனப்படும். இது குருத்தன்மை கொண்டது. உடலை வளர்க்கும். விந்துவையும் கபத்தையும் வளர்க்கும். சிறுநீர்ப்பையைத் தூய்மைப் படுத்தும்.

**மத்ஸ்யண்டி**

மத்ஸ்யண்டி-சிறிதளவே நீர் மிகுந்திருக்கக் காய்ச்சிய கருப்பஞ்சாறு மத்ஸ்யண்டி எனப்படும். இது உடலைச் செழிக்கச் செய்யும். விந்துவை வளர்க்கும்.

வாதபித்தங்களையும் இரத்த தோஷங்களையும் போக்கும். குருத்தன்மையும் எண்ணெய்ப்பசையும் சீதவீரியமும் கொண்டது.

**வெல்லம்**

இது நீர்ப் பசையின்றிக் கெட்டியாகக் காய்ச்சப்பட்ட கருப்பஞ்சாறு. இது நான்கு வகைப்படும். பொதுவாக வெல்லம் குருத்தன்மையும் எண்ணெய்ப் பசையும் கொண்டது. விந்துவை

வளர்க்கும், சிறுநீரைத் தூய்மைப் படுத்தும். உடலில் கொழுப்பையும் வலிமையையும் கிருமியையும் தோற்றுவிக்கும். வாதத்தையும் சிறிதளவு பித்தத்தையும் தணிக்கும். இது மூலநோய் காமாலை நீரிழிவு குன்மம் இரத்தபித்தம் க்ஷயம் மார்பில் அடிபடுதல் இழுப்பு மூர்ச்சை வெறி நஞ்சு நீர்ச்சுருக்கு சிறு நீர்ப்பையில்கல் நாவறட்சி ஆகியவற்றைப் போக்கும்.

**கற்கண்டு**

இனிப்புச்சுவையும் எண்ணெய்ப் பசையும் குளுமைத் தன்மையும் கொண்டது. விந்துவையும் உடல் வலிமையையும் வளர்க்கும். கண்களுக்கு நன்மையைத் தோற்றுவிக்கும். கபத்தை வளர்க்கும்.

**சர்க்கரை**

இனிப்புச் சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டது. விந்துவை வளர்க்கும். வாதம் பித்தம் இரத்ததோஷம் எரிச்சல் மூர்ச்சை வாந்தி காய்ச்சல் இருமல் வலி வெறி ஆகிய வற்றைப் போக்கும்.

**பயன்**

கரும்புப்பாலால் செய்த மதுவை பயன்படுத்தினால் கிரஹணி தணியும்.

கருப்பஞ்சாற்றில் தேன் கலந்து பருகச் செய்தால் சோகை நோய் தணியும், கருப்பஞ்சாற்றால் செய்த நெய் மருந்தைப் பயன்படுத்தினால் காயம்படுதலால் ஏற்படும் இருமல் நீங்கும். கருப்பஞ்சாற்றில் சர்க்கரை கலந்து தடவினால் அக்கி தணியும்.

## 58. கருவேலம்

**(ஸம்.) இருமேதம்** Acacia Farnisiana

**தோற்றம்**

கருவேலம் கருங்காலி வகையைச் சேர்ந்ததாகும். அதை விட இதற்கு முட்கள் குறைவு. இதன்பட்டை இலை முதலியன சிறிது மலநாற்றம் கொண்டிருக்கும்.

**தன்மை**

துவர்ப்புச்சுவை உஷ்ணவீர்யம் கொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

முகம் பல்நோய்கள் இரத்ததோஷம் நஞ்சு கபம் அரிப்பு கிருமிநோய் குட்டம் நஞ்சினால் தோன்றும் விரணம் முதலிய வற்றைப் போக்கும்.

## 59. கர்கடக சிருங்கி

**(ஸம்.) சிருங்கி** Pistacia Integerima

**தோற்றம்**

கர்கடகசிருங்கி முதலில் பருமனாகத் தோன்றி, நீண்டு வளரும்போது மெலியத் தொடங்கும். மேலுக்கு இது பழைய செங்கல்லைப்போல நிறங்கொண்டு இருக்கும். தூளாக்கினால் சிவந்து காணப்படும். இது எளிதில் ஒடிக்கக்கூடியதாகும். இதற்கு ஒருவகை நறுமணம் உண்டு. ஒருவகைச் செடியில் இலை அல்லது இலைக்காம்பின் மேல் ஒருவகைப் பூச்சிகளால் தயார் செய்யப்படும் பொருளாகும். சிறுகிளைகளைப் போன்ற வடிவமைப்பு இருக்கும். வெண்மையும் பச்சையும் கலந்த நிறம் கொண்டு உட்பகுதியில் சிவப்பு நிறம் கொண்டிருக்கும். இதற்குள் காணப்படும் தூள் போன்ற பொருள் உண்மையில் இதைத் தோற்றுவித்த பூச்சிகளின் உயிரற்ற உடல் என்பது சிலர் கருத்து.

ஒன்றுக்கொன்று எதிர்எதிராக இருக்கும் முனைகளைக் கொண்ட இலைகளுடன் கூடி ஹோமம் செய்யப்பயன்படும் சமித்துக்களைக் கொடுக்கும் செடியாகும். இது புத்ரஜீவி எனும் செடிக்குச் சமமாகும். இதில் 'நேபாள சிருங்கி' என்னும் வகை ஒன்று உண்டு எனவும், அது நேபாள தேசத்தில் தோன்றுவதாகும் என்றும் தெரியவருகிறது.

**தன்மை**

கசப்புச்சுவையும் குரு குணமும் உஷ்ணவீரியமும் கொண்டதாகும். கபவாதங்களைத் தணிக்கும். குழந்தைகளுக்கு நன்மை செய்யும். உட்கொண்டதும் விந்துவைத் தோற்றுவிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

க்ஷயம் காய்ச்சல் இழுப்பு நாவறட்சி இருமல் விக்கல் சுவையின்மை வாந்தி அதிஸாரம் இரத்ததோஷம் இரத்தபித்தம்.

நேபாளசிருங்கி-வாத கபவிகாரங்கள் ஸந்நிபாதக்காய்ச்சல் ஆமவாதம் இதய நோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

கர்க்கடக சிருங்கியை மைய தூளாக்கி எண்ணெயுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாதத்தினால் தோன்றிய இருமலைத் தணிக்கும்.

கர்க்கடக சிருங்கி கோரைக்கிழங்கு இவற்றின் தூளைத் தேனில் குழைத்து உட்கொள்ளச் செய்தால் கபத்தினால் தோன்றிய வாந்தி தணியும்.

கர்க்கடக சிருங்கி, முள்ளங்கிவிதை இவற்றின் தூளைத் தேன் நெய் என்பவற்றுடன் கலந்து சிறுவர்களுக்குப் பயன்படுத்தினால் இருமல் தணியும்.

சிருங்கியாதி கிருதம்—சிறுவர்களுக்கு உடல் செழிப்பைத் தரும்.

சிருங்கீகுடம்—இருமல் இழுப்பு இரத்தபித்தம் க்ஷயம் குரல்மாறுபாடு சுவையின்மை ஆகியவற்றைப் போக்கும்.

கர்க்கடாதிசூரணம்—சிறுவர்களுக்குத் தோன்றும் காய்ச்சல் அதிசாரம் கிரஹணி வாந்தி இரத்தப்பெருக்கு இருமல் இழுப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

## 60. பச்சைக் கர்ப்பூரம்

**(ஸம்.) கர்ப்பூர** Camphora

**தோற்றம்**

கர்ப்பூரம், கர்ப்பூரவிருக்ஷத்தின் தலைப்பகுதியில் கட்டியைப் போல் தோன்றுவது. சிறிது மஞ்சள்நிறம் கொண்டு திடமாகவும் வறட்சித் தன்மையும் கொண்டிருக்கும். இது நடுத்தரமானது. இலைகளில் தோன்றுவது தூயவெண்ணிறங்கொண்டு தூளாக

இருக்கும். இது மூன்றாம்தரம்-மரத்துக்குள் தோன்றும் கர்ப்பூரம் தங்கத்தகடுபோல் வெளிர்-மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இது முதல்தரமானது. லேசான எடை கொண்டு கசப்புச் சுவையும் குளுமைத் தன்மையும் நறுமணமும் கொண்டு எண்ணெய்ப் பசையின்றி இருப்பதாகும். மரத்துக்குள் தோன்றுவது பிசின்போலவும், இலைகளில் தோன்றுவது மணல்போலவும் இருக்கும்.

பச்சைக் கர்ப்பூரத்தில் போதாயம் பீமஸேநம் சீதகரம் சங்கராவாஸம் பிராம்து பிஞ்சம் அப்ஜஸாரம் இமவாலுகம் ஜூடிகா துஷாரம் முதலிய பலவகைகள் நூல்களில் கூறப்பட்டுள்ளன. மருத்துவத்தில் கர்ப்பூரம் என்பது பச்சைக்கர்ப்பூரத்தையே குறிக்கும்.

**தன்மை**

கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. எண்ணெய்ப் பசை கொண்டது. மயக்கத்தைத் தோற்றுவிக்கும். புதிய கர்ப்பூரம் உஷ்ணத்தையும் எரிச்சலையும் தோற்றுவிக்கும். நாள்பட்டது எரிச்சலையும் குளிர்ச்சியையும் வாய் உலர்ந்து போதலையும் தணிக்கும்.

கர்ப்பூரத் தைலம் கார்ப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது பற்களுக்கு வலிமை தரும். கபபித்தங்களைத் தணிக்கும். வாதநோய்களைப் போக்கும்.

**பயன்**

ஆயுதங்களால் உண்டான காயத்தில் கர்ப்பூர சூரணத்தை நெய்யுடன் கலந்து கட்டினால் வலியைப் போக்கும். புண்ணை ஆற்றும். கர்ப்பூரத்தை மைய அரைத்து ஆலம் பாலுடன் கலந்து கண்களில் மை போலிட்டால் கண்நோய் நீங்கும்.

சிம்ஹாஸ்யாதிவடி-மார்பில் காயம்படுதல் இழுப்பு ரத்தபித்தம் தொண்டைநோய் ரத்தாதிஸாரம் க்ஷயம் ரத்தப்பெரும்பாடு இருமல் வீக்கம் கிரஹணி ஆகியவற்றைத் தணிக்கும்.

கர்ப்பூராஸவம்-காலரா அதிஸாரநோய்களைத் தணிக்கும்.

# 61. கல்யாண பூசணி

**ஸம். கூஷ்மாண்டம்** Benincasa Cerefera

**தோற்றம்**

பூசணி கொடிவகையைச் சேர்ந்தது.

**தன்மை**

குருத்தன்மை உடையது. உடலைச் செழிக்கச் செய்யும். விந்துவை வளர்க்கும். வாதம் ரத்தபித்தம் என்பனவற்றைத் தணிக்கும். சிறுநீர்ப்பையைத் தூய்மையாக்கும். இதயத்துக்கு நன்மைதரும். இனிப்பும் புளிப்பும் கொண்டிருக்கும். உப்புச் சத்துடையது. மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

இளங்காய்-குளுமையானது பித்தவாதங்களைத் தணிக்கும்.

சிறிது முற்றிய காய், கபத்தை வளர்க்கும். மூன்றுதோஷங்களையும் தணிக்கும்.

மிகவும் முற்றிய பூசணிக்காய் இனிப்புச் சுவையும், லகுகுணமும் சீதவீரியமும் கொண்டிருக்கும். மனநோயைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். பூசணி விதை எண்ணெய்-குருத்தன்மையும் சீதவீரியமும் கொண்டது. கபத்தையும் தலைமுடியையும் வளர்க்கும்.

பூசணி இலையைப் பக்குவம் செய்து உண்டால் வாத கபத்தைக் கரைக்கும். சிறுநீரில் தோன்றும் கல் மணல் ஆகிய வற்றைப் போக்கும்.

**பயன்**

பூசணிச் சாற்றுடன் யவக்ஷாரமும் வெல்லமும் கலந்து பருகச் செய்தால் சிறுநீர்த்தடை சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் முதலியவை நீங்கும்.

பூசணிவேரின் துகளை இளஞ்சூடுள்ள நீருடன் பருகச் செய்தால் மிகக்கடுமையான இருமல் இழுப்பு என்பன நீங்கும்.

# 62. கல்யாண முருங்கை

**ஸம். ரோகிதக** Tecoma Undulata

**தோற்றம்**

மரமாக வளரக் கூடியது. சிவப்பு வெளுப்பு நிறங்கொண்ட மலர்களால் இருவகையாக இருக்கும். சிவப்பு மலர் கொண்டது மருத்துவத்தில் சிறப்பாகப்பயன்படுகிறது.

**தன்மை**

கசப்பு துவர்ப்புச் சுவைகள், எண்ணெய்ப்பசை சீதவீர்யம் கொண்டது. ரத்தத்தைத் தூய்மைபடுத்தும். கபவாதங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கிருமிநோய் மண்ணீரல்வீக்கம் இரத்ததோஷம் விரணம் காதுவலி நஞ்சு கண்நோய் குன்மம் முதலிய நோய்களைப் போக்கும். சிவப்புநிறமலர் கொண்டது சிறப்பாகப் பெருவயிறு நோயைப் போக்கும்.

**பயன்**

தான்றி குடசப்பாலை கல்யாணமுருங்கை விளா எனும் மரங்களின் மலர்களை மையத்துகளாக்கித் தேனுடன் உட் கொள்ளச் செய்தால் கபபித்தங்களால் தோன்றிய நீரிழிவு தணியும்.

கல்யாணமுருங்கைக் கட்டைத் துண்டுகளைக் கடுக்காய் கஷாயத்திலாவது, பசுவின் சிறுநீரிலாவது 7 நாட்கள் ஊற வைத்து வடிகட்டிப் பயன்படுத்தினால் காமாலை குன்மம் நீரிழிவு மூலம் மண்ணீரல்வீக்கம் பெருவயிறு ஆகியநோய்களைப் போக்கும். கல்யாணமுருங்கையின் வேர் விழுதை உட்கொள்ளச் செய்தால் வெள்ளைப் பெரும்பாடு நீங்கும்.

மஹாரோகிதககிருதம் வயிற்றுவலி விலாவலி மண்ணீரல் வீக்கம் காமாலை சோகை முதலியவற்றைப் போக்கும். இது மண்ணீரல் வீக்கத்துக்கு மிகவும் சிறப்பானது.

ரோகிதகாரிஷ்டம்-பெருவயிறு குன்மம் மண்ணீரல்வீக்கம் காமாலை மூலநோய் குட்டம் ஆகியவற்றைப் போக்கும்.

# 63. கழற்சி

**ஸம். குபேராக்ஷ** Molucca Beexn Bohducellanut

**தோற்றம்**

கழற்சி, நம் நாட்டில் பெரும்பாலும் காடுகளில் வளரும் கொடிவகையைச் சேர்ந்தது. இலை மிகவும் மென்மையானது. கொடி முள் நிறைந்ததாகும். காய்களிலும் முள் அடர்ந்திருக்கும். அதற்குள் உருண்டை வடிவத்தில் உறுதியான ஓட்டுடன் விதை அமைந்திருக்கும்.

**தன்மை**

இதன் தளிர் இலை கசப்புச் சுவையும் முற்றிய இலை கார்ப்புச் சுவையும் கொண்டிருக்கும். கபத்தைத் தணிக்கும். விதைகளில் இருக்கும் பருப்பு கசப்பு கார்ப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டது. உஷ்ணவீர்யமும் நச்சுத் தன்மையும் கொண்டது. அளவுக்கு மிகுந்தால் உயிரையும் போக்கும். கழற்சிவேர்-கார்ப்பு துவர்ப்புச் சுவைகளும், உஷ்ணவீர்யமும் கொண்டது. இருது ரத்தத்தை வெளியேற்றும். உடலில் சேர்ந்துள்ள கெட்ட நீரைவெளியேற்றும்.

**தீர்க்கும் நோய்கள்**

இதன் பருப்பு காய்ச்சல் தமகசுவாசம் குன்மம் விஷக் காய்ச்சல் மண்ணீரல்வீக்கம் முதலியவற்றைப் போக்கும் சிறப் பாக விரைவாதத்தைத் தணிக்கும்.

**பயன்**

விதையினுள்ளிருக்கும் பருப்பைச்சந்தனம்போல் அரைத்துத் தேள் பூரான் முதலியவற்றின் விஷத்திற்குக் கொட்டிய இடத்தில் பூசி துணியின் புகையைப் போடவேண்டும். இதன்பருப்பை கோழிமுட்டையின் கருவுடன் அரைத்துப் பூசினால் விதை வாதம் நீங்கும். இதன் பருப்பிலிருந்து எடுத்த எண்ணெய் பக்கவாதம் ஆமவாதம் வாதத்தால் தோன்றியவலி முதலியவற்றிற்கு மேற் பூச்சாகப் பயன்படும். இக்காய்களைச் சுட்ட கரியுடன், படி காரம் பாக்கை எரித்த சாம்பல் சமஅளவில் கலந்து பல் துலக்கப் பயன்படுத்தினால் பல்வலி நீங்கும். இதன் பருப்பை மூன்று கோதுமை அளவு கொண்டு கோழி முட்டையின் கருவுடன் கலந்து நெய்யில் அடை செய்து பயன்படுத்தச் செய்தால் விரை வாதம் நீங்கும்.

## 64. கற்றாழை

**ஸம். குமாரி** Aloevera

**தோற்றம்**

கற்றாழை சிறுசெடியாக வளரக்கூடியது. உவர்நிலத்தில் மிகுதியாக வளரும். சுற்றிலும் படர்ந்து பட்டைகளைப் போன்ற இலைகளைக் கொண்டது. இதற்குக் காய்கள் இல்லை. இதன்பட்டைகளுள் நீர் நிறைந்தகோது (சோறு) காணப்படும். இதில் இருவகையுண்டு. நார் மிகுந்த பட்டைகளைக் கொண்டது ஒருவகையாகும். சோறு மிகுந்து பருத்து வளர்வது மற்றொருவகை. பட்டைகளின் இருபக்கங்களிலும் முட்கள் வரிசையாக நிறைந்திருக்கும். கற்றாழைச் சாறு பாதரஸத்தைத் தூய்மைப் படுத்தும் என்றும் நூல்கள் கூறுகின்றன.

**தன்மை**

பேதியாகச் செய்யும். இதன்சாறு கார்ப்புச் சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டது. கபவாதம் இருமல் இழுப்பு ஆகியவற்றைப்போக்கும்.

**பயன்**

இதன் சாற்றை மூக்கிலிடு மருந்தாகப்பயன்படுத்தினால் காமாலை நீங்கும். இதன் சோற்றை அரைபலம் அளவு பசு நெய்யுடன் உட்கொள்ளச் செய்தால் குன்மம் தணியும்.

கற்றாழை வேரையும் மஞ்சளையும் மைய அரைத்துப் பற்றாகப் பூசினால் குழந்தையையிழந்த மகளிர் மார்பகவலி தணியும். கற்றாழைச் சாற்றில் மஞ்சள் துகளைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் மண்ணீரல்வீக்கம் தணியும். கற்றாழைச் சோற்றைப் பக்குவம் செய்து விரணங்களின்மேல் வைத்துக் கட்டினால், விரணங்கள் விரைவில் ஆறும்.

## 65. காகோலி

**ஸம் காகோலி** Gymnemabal samicum

**தோற்றம்**

இது கிழங்கு வகையைச் சார்ந்தது. அமுக்கராக்கிழங்கைப் போல் இருக்கும். இதன் கிழங்கிலிருந்து நறுமணமுள்ள பால் கசியும். இதில் இரண்டு வகைகள் உண்டு. வெள்ளை நிறமுள்ளது க்ஷீரகாகோலி என்றும், சற்று கருநிறமுள்ளது காகோலி

என்றும் கூறப்படும். இவை மகாமேதா எனும் கிழங்கு தோன்றும் இடத்தில் தோன்றக் கூடும். இமயமலைச்சாரலில் 'மோரங்' என்னுமிடத்தில் மிகுதியாக விளைகிறது.

**தன்மை**

இருவகை காகோலியும் ப்புச்சுவை குருகுணம் வீரியம் கொண்டவையாகும்.

உடலைச் செழிக்கச் செய்யும். விந்துவையும் தாதுக்களையும் கபத்தையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதநோய் எரிச்சல் இரத்ததோஷம் பித்தம் வீக்கம் காய்ச்சல் என்பவற்றைப் போக்கும்.

**பயன்**

காக்கோல்யாதி கணக்வாதம் உடலைச் செழிக்கச் செய்யும், விந்துவையும் தாய்ப்பாலையும் கபத்தையும் வளர்க்கும். பித்தம் வாதம் இரத்ததோஷங்களைத் தணிக்கும்.

## 66. காக்கட்டான்

**ஸம். ஸங்கபுஷ்பி** Convolvulus Micro Chyllus

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. சிவப்பு நீலம் என்னும் இரண்டுவகை மலர்களைக் கொண்டு இது இருவகையாகும். மஞ்சள் சிவப்பு நிறங்களைக் கொண்ட வகைகளும் உண்டு என நூல்கள் கூறுகின்றன. ஆனால் அவை காணப்படுவதில்லை. எல்லாவகைகளும் குணத்தில் ஒன்றாக இருக்கும். இருந்தாலும் வெள்ளை மலர் கொண்டது சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. சங்கைப் போன்ற மலர்களைக் கொண்டதால் இதற்கு சங்கபுஷ்பி என்னும் பெயர் உண்டாயிற்று. இது கொத்துவரைக் காய் போன்ற காய்களைக் கொத்துக் கொத்தாகக் கொண்டிருக்கும். வேலிகளில் பெரும்பாலும் படர்ந்திருக்கும். இதன் வேர் பாம்பு தேள் முதலியவற்றின் நஞ்சைப் போக்கும். அறிவை வளர்க்கக்கூடிய மூலிகைகளில் இதுவும் ஒன்று.

**தன்மை**

துவர்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். புத்தியையும் விந்துவையும் வளர்க்கும் இரசாயனமாகும். நினைவாற்றல் பொலிவு சடராக்னி ஆகியவற்றை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

குட்டம் கிருமி நஞ்சு பூதங்களால் தோன்றிய விகாரம் கால்கைவலி மனநோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

நாள்தோறும் இதன் வேரின் விழுதை இரசாயனமுறைப்படி பயன்படுத்தினால், ஆயுள் அறிவு வலிமை ஆகியவற்றை வளர்க்கும். நோய்களைப் போக்கும்.

காக்கட்டான் விழுதை இரசாயன முறைப்படி பயன் படுத்தினால் கால்கைவலி நீங்கும்.

நீலமலர் கொண்ட காக்காட்டான் வேரின் சூரணத்தை அல்லது தூளை சர்க்கரையுடன் கலந்து பசும்பாலுடன் உட்கொண்டு பால்சோற்றை உணவாகக் கொண்டால் மேல் நோக்கிய இரத்தபித்தம் தணியும்.

காக்கட்டான்வேர் கோஷ்டம் இவற்றின் தூளைத் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் பைத்தியம் தணியும்.

சங்கபுஷ்பீ இரசாயனம்-பேச்சுவன்மை, அறிவாற்றல் மிகும். நோய்கள் அணுகா.

சங்கபுஷ்பீதைலம்-எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் சிறுவர்களுக்குத் தோன்றும் நோய்கள் நீங்கும். உடல் செழிப்பு அறிவு பொலிவு மிகும்.

## 67. காஞ்சொரி

**ஸம். துராலபா** Alhagimaurohum

**தோற்றம்**

இது ஓர் அடி உயரம் வரை வளரும் சிறுசெடியாகும். இதன் இலைகள் மிகவும் சிறியவையாக இருக்கும். காஞ்சொரி செடியின் தண்டு தாமிர நிறம் கொண்டிருக்கும். உடல் மேல் பட்டால் தினவு உண்டாகும். இதன் மேலுள்ள ரோமங்களைப் போன்றவை உடம்பில் பட்டால் அரிப்பும் வேதனையும்

வீக்கமும் தோன்றும். முதுவேனிற் பருவத்தில் இந்தச் செடிகள் முளைக்கும். கார்ப்பருவத்தில் அழிந்துவிடும். எல்லா இடங்களிலும் வளரக் கூடியது. மரங்களின் மேலும் வேலிகளின் மேலும் விரைவாகப் படரும். யவாசா எனப்படும் இதன் ஒருவகையான செடி காந்தார நாட்டில் மிகுதியாகக் காணப்படுகிறது. இச்செடி முட்களைக் கொண்டிருக்கும். கோடை மழை பெய்ததும் இதன் தண்டிலிருந்து பிசின் போல ஒருபொருள் வெளிவரும். அதை முன்னா என்பர். இந்தச் செடியை நீரிலிட்டுக் கொதிக்க வைத்தால் சர்க்கரை போன்ற பொருள் தோன்றும். அதை யவாச சர்க்கரை என்பர்.

**தன்மை**

இனிப்புச் சுவையும் கசப்பு துவர்ப்புச் சுவைகளையும் கொண்டது. இதன் வேரின் சாறு அல்லது இச்செடியின் கஷாயம் இனிப்புச்சுவை கொண்டிருக்கும். குளிர்ந்த தன்மை கொண்டது. இலேசானது மலத்தை வெளியேற்றும்.

**தீர்க்கும் நோய்கள்**

அக்கி துன்மம் இரத்ததோஷம் குட்டம் வெறி மனக்கலக்கம் பித்தம் இருமல் நாவறட்சி வாதரத்தம் காய்ச்சல் முதலியவற்றைப் போக்கும்.

**பயன்**

இதன் விழுதையும் சந்தனத்தையும் கலந்து பயன்படுத்தினால் இரத்தபித்தம் நீங்கும். காஞ்சொரி வேர்த்தூளை தேனுடன் உட்கொள்ளச் செய்தால் கபத்தினால் தோன்றும் வாந்தி தணியும். இதன் சாற்றைப் பயன்படுத்தினால் சிறு நீர்த் தடை நீங்கும். இதன்வேரின் சாற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் மூக்கின் வழியே வெளிவரும் இரத்தபித்தம் தணியும். துராலகாரிஷ்டம் -- இது மூலம் கிரகணி சோகை குட்டம் பெருவயிறு நஞ்சு காய்ச்சல் விக்கம் மஞ்ஞிரல்வீக்கம் இதயநோய் குன்மம் க்ஷயம் வாந்தி கிருமிநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 68. காட்டத்தி

**ஸம். காகோதும்பரிகா** (Diosayros Embyovpteris)

**தோற்றம்**

இது அத்தி மரத்தின் வகையாகும். ஆனால் இதன் பழம் கசப்புச் சுவைகள் கொண்டிருக்கும்.

**தன்மை**

கசப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டது. குளுமைத் தன்மை உடையது. விந்துவைக்கட்டும். கபபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் வெண்குட்டம் சோகை மூலநோய் குட்டம் காமாலை முதலிய நோய்களைப் போக்கும். இதன்பூம் இனிப்புச் சுவையும் எண்ணெய்ப் பசையும் குருத்தன்மையும் கொண்டிருக்கும். தோல் நோயையும் இரத்தபித்தத்தையும் தணிக்கும். காட்டத்தி சிறப்பாக, குட்டம் இரத்தஅதிசாரம் இரத்தபித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

காட்டத்தியின் சாற்றில் வெல்லம் கலந்து பருகச் செய்தால், வெண்குட்டம் முதலிய தோஷங்கள் நீங்கும். காட்டத்தி வேரையும் ஊமத்தங்காயையும் மைய அரைத்து அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் வெறிநாய்க்கடி விஷம் நீங்கும். காட்டத்திப்பாலை மேல்பூச்சாகப் பூசி நெய்யைப் பருகச் செய்தால் மூலநோய் தணியும். காசோதும்பரிகாதி கஷாயம்--வெண்குட்டத்தைப் போக்கும்.

## 69. காட்டு உ

**ஸம். மாஸபர்ணி** Grangea medaras

**தோற்றம்**

இது கொடி வகையைச் சார்ந்தது. மலைப்பாங்கான காட்டுப் பகுதிகளில் மிகுதியாகக் காணப்படும். இலைகள் உளுந்து இலை போல மூன்று மூன்றாக ஒன்று சேர்ந்து காணப்படும். ஒன்று அல்லது 10 அங்குல நீளமுள்ள காய்கள் காய்க்கும்.

**தன்மை**

கசப்புச்சுவை வறட்சி குளுமைத்தன்மை உடையது. உடல் வலிமையையும் இரத்தத்தையும் வளர்க்கும். கிரஹணி வீக்கம் வாதம் பித்தம் காய்ச்சல் இரத்ததோஷம் ஆகியவற்றைப் போக்கும்.

## 70. காட்டாத்தி

**ஸம். தாதகி** Wood for Dia Flori Bunda

**தோற்றம்**

சிறுசெடிகளாக மலைப்பாங்கான இடங்களில் மிகுதியாகக் காணப்படும். இதன் இலை மாதுளஞ்செடியின் இலையைப் போல் இருக்கும். சற்று மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இந்த இலைகளில் காம்பு காணப்படாது. இலைகளின் கீழ்ப்பகுதி சுணை கொண்டிருக்கும். ஒவ்வொரு மலர்த்தண்டிலும் 5 முதல் 12 வரை மலர்கள் இருக்கும். மலர்கள் ஆறு இதழ்களுடன் சிவந்த நிறங்கொண்டிருக்கும். குளிர் காலம் (அ) இளவேனிற் காலத்தில் மலரும். கார்ப்பருவத்தில் விதைகள் பக்குவம் பெறும்.

இதன் மலர்கள் கார்ப்புச்சுவை கொண்டிருக்கும். இலது குணம் குளுமைத்தன்மை கொண்டது. மயக்கத்தை தரும்.

**தீர்க்கும் நோய்கள்**

நாவறட்சி இரத்தபித்தம் அதிசாரம் நஞ்சு கிருமிநோய் அக்கி ஆகியவற்றைப் போக்கும்

**பயன்**

பாச்சோத்திக்கட்டை காட்டாத்திமலர் இவற்றின் விழுதை மேற்பூச்சாகப் பயன்படுத்தினால், குட்டநோய் நீங்கும். காட்டாத்தி மலர் கஷாயத்துடன் தயார் செய்த கஞ்சியில் சுக்குத் தூளையும் புளிப்பு மாதுளம் பழச்சாற்றையும் கலந்து பருகினால் ஜுர அதிசாரம் நீங்கும். காட்டாத்தி மலர் விழுதை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் வெள்ளைப் பெரும்பாடு நீங்கும். தாதக்யாதி அவலேஹம்-சிறுவர்களுக்குத் தோன்றும் அதிசாரம் நீங்கும்.

## 71. காட்டுக் (பெருங்) கோரைக் கிழங்கு

**ஸம். பத்ரமுஸ்தா** Cyperus Rotondous

**தோற்றம்**

இது புல்வகையைச் சேர்ந்த பூண்டாகும். நீண்ட இலைகளாக உள்ள புல்லின் வேர்ப்பகுதியில் கிழங்குபோல்பெரியதாக இருப்பது காட்டுக்கோரைக்கிழங்கு. மற்றபடி இது கோரைக் கிழங்கு போலவே இருக்கும்.

**தன்மை**

கசப்பு, துவர்ப்புச்சுவைகள் குளுமைத் தன்மை கொண்டிருக்கும். கபபித்தங்களைத் தணிக்கும். செரிமானத்தை உண்டாக்கும். பக்குவமாகும் போது கார்ப்புச் சுவை கொள்ளும். மலத்தைக் கட்டும்.

**தீர்க்கும் நோய்கள்**

புளிப்புத்தன்மை அடைந்த பித்தம் கபம் அதிசாரம் இரத்த தோஷம் காய்ச்சல் சுவையின்மை நாவறட்சி கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும். காலராவில் தோன்றிய நாவறட்சியில் காட்டுக்கோரைக்கிழங்கின் கஷாயத்தைப் பயன்படுத்தலாம். காட்டுக்கோரைக்கிழங்கை ஆட்டின் சிறுநீரில் அரைத்துக் கண்களில் மைபோல் இட்டால் கண்நோய் தணியும்.

பத்ரமுஸ்தாதி குடிகை-பற்களுக்கு வலிமை தரும்.

பத்ரோத்கடாதியவபேஹம்-இதனால் கிரஹணி பிள்ளைப் பேற்றினால் தோன்றும் துன்பங்கள் வயிற்றுவலி நீங்கும்.

பத்ரோத்கடாரி கிருதம்-பிள்ளைப் பேற்றுநோய் கிரஹணி சூலை மூலம் ஆகியவற்றை நீக்கும். தாய்ப்பாலைத் தூய்மை படுத்தும்.

## 72. காட்டுத் துளசி

**ஸம். வனதுளசி** Ocimum Gratissimum

**தோற்றம்**

இது, சிறுசெடிவகையைச் சேர்ந்தது. இலைகள் துளசி இலையைப்போல் அதைவிடப் பெரிய அளவில் இருக்கும். பெரும்பாலும் நம்நாட்டில் எங்கும் விளையும்.

**தன்மை**

கார்ப்புச் சுவையும் உஷ்ணவீர்யமும் உள்ளது. வாதத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் வாதம் காய்ச்சல் நஞ்சு இருமல் இழுப்பு கிருமிநோய் கெட்டநாற்றம் ரத்தபித்தம் பக்கவாதம் வீக்கம் என்பனவற்றைப் போக்கும்.

## 73. காட்டுப்பயறு

**ஸம். முத்கபர்ணி** Phaseolus Trilobus Ait

**தோற்றம்**

காட்டுப்பயறு, கொடிவகையைச் சார்ந்தது. மஞ்சள் நிற மலர்களைக் கொண்டது. பயற்றின் இலையைப்போன்ற

இலையைக் கொண்டது. காட்டுப்பயறு காட்டு உளுந்து இரண்டையும் சேர்த்தே ஜீவனீயக் கூட்டுப் பொருள்களில் விந்துவையும் உடல் வலிமையையும் வளர்க்கும் என்று நூல்கள் கூறுகின்றன. காய்கள், வேர்க்கடலையைப் போன்றிருக்கும். வேர்க்கடலைக்கும் இதற்கும் கொடியின் தோற்றத்தில் மட்டுமே வேற்றுமை. இலைக்காம்பு ஒன்றில் மூன்று இலைகள் சேர்ந்தே காணப்படும். காய்களில் ஐந்து அல்லது ஏழு விதைகள் இருக்கும்.

கசப்புச் சுவையையும் இனிப்புத்துணைச் சுவையையும் கொண்டிருக்கும். வறட்சித்தன்மை லகுகுணம் சீதவீரியமும் கொண்டது. விந்துவை வளர்க்கும். கண்களுக்கு ஹிதமானது. மலத்தைக் கட்டும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூன்று தோஷங்கள் மார்பில் பட்ட அடியால் தோன்றும் வீக்கம் காய்ச்சல் எரிச்சல் கிரஹணி மூலநோய் அதிசாரம் ஆகியவற்றைப் போக்கும்.

காட்டுப் பயற்றின் கஞ்சி தாதுக்களை வளர்க்கும். ரத்த பித்தம் காய்ச்சலில் தோன்றும் அழற்சி பித்தத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கு ஆகியவற்றைத் தணிக்கும். காட்டுப்பயறு காட்டு உளுந்து நொச்சி எனுமிவற்றை வேருடன் கொண்டு விழுதாக்கித் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் எலிக்கடி நஞ்சு நீங்கும்.

## 74. காட்டுப்பனை

**ஸம். முஸலீகந்த** Curculigo Orchioides

காட்டுப்பனை புல்வகையைச் சேர்ந்தது. இதன் வேர் பனை வேர் போன்றிருக்கும். இலையும் பனையோலைபோல் நிலத்தில் படர்ந்திருக்கும். இது, கறுப்பு வெள்ளை என்னும் நிறங்களால் இருவகையாகக் கூறப்படுகிறது. கரும்பனையே மிகுந்திருக்கும். இது நிழல் அடர்ந்திருக்கும் இடத்தில் நன்கு வளரும். சிறப்பாக மாமர நிழலில் தோன்றும். இது கார்ப்பருவத் துவக்கத்தில் முகில் முழங்கும்போது நிலத்தில் மிகுதியாக முளைத்து எழும். இதன் இலைகளின் நடுவில் மெல்லிய காம்புகளுடன் மஞ்சள் நிறமான மலர்கள் காணப்படும். வேர்கள்

நிலத்திலுள் பனைமரம்போல் நீண்டு வளரும். கார்ப்பருவ முடிவில் செடியின் மேற்பகுதி அழிந்து விடும்.

**தன்மை**

இது இனிப்புச்சுவையும் கசப்பை இணைச்சுவையாகவும், குருத்தன்மையும் உஷ்ணவீர்யமும் கொண்டிருக்கும். உண்டதும் விந்துவைத் தோற்றுவிக்கும் இரஸாயனமானது. வாதத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது மூலம் வாதபித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

முஸல்வ்யாதி கஷாயம்—பெரும்பாடு அதிஸாரம் ரத்த பித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

முஸலீகந்தாதி சூரணம்—வலிமையையும் ஆண்மையையும் வளர்க்கும்.

## 75. காட்டுப்பீர்க்கு

**ஸம். கோசாதகீ** Luffaaeutangula

**தோற்றம்**

இது, கொடிவகையைச் சேர்ந்தது. பீர்க்கு, மஞ்சள் சிவப்பு எனும் நிறங்களைக் கொண்டு இருவகைப்படும். இவையிரண்டும் இனிப்புச்சுவை கொண்டவையாகும். ஆனால் காட்டுப் பீர்க்குக் கசப்புச் சுவை கொண்டதாகும். இது மஞ்சள் நிற மலர்களைக் கொண்டிருக்கும்.

**தன்மை**

இது கசப்புச் சுவையும் தீக்ஷ்ணகுணமும் கொண்டது. பக்குவமடையும்போது கார்ப்புச் சுவையைக் கொள்ளும். மூன்று தோஷங்களையும் தணிக்கும். பக்குவாசயத்தைத் தூய்மையாக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது, குஷ்டம் மண்ணீரல்வீக்கம் சோகை குன்மம் இடு விஷம் மூலம் காமாலை ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

இதன் விதைகளின் எண்ணெயைக் குளியலுக்குப் பயன் படுத்தினால் உஷ்ணம் தணியும். காட்டுப் பீர்க்கின் காய் மலர் எனும் இவைகளின் துகளைக்கொண்டு தேய்த்தால் மூலமுளை உதிர்ந்துவிடும்.

பீர்க்கங்காய்ச் சாற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன் படுத்தினால் காமாலை தணியும். காட்டுப்பீர்க்கன் சாற்றில் திப்பிலித் துகளைக் கலந்து மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத் தினால் கண்டமாலை நீங்கும். காட்டுப் பீர்க்கங்காய் சுர ஸத்தைத் தயிர்மேல் தெளிவுடன் பருகச் செய்து, பீர்க்கங் கட்டையைப் புகைபோட்டால் கருப்பை நழுவுதல் தடுக்கப்படும்.

காட்டுப்பீர்க்கங் கொடிக்கஷாயம் எலிவிஷத்தைப் போக்கும்

## 76. காட்டுமுல்லை

**ஸம். யூதிகா Jasminum Auriculajum**

**தோற்றம்**

காட்டுமுல்லை கொடிவகையைச் சேர்ந்தது. வெள்ளை, மஞ்சள் என நிறங்களைக் கொண்ட மலர்களால் இருவகை எனக் கூறப்படுகிறது. இதன் இலைகள் சிறுசிறு வட்டமானவை யாகக் கீழ்ப்பகுதியில் சுனைகொண்டும், இலை நடுப்பகுதி வெண்ணிறமுள்ள சுனையால் நிரம்பியுமிருக்கும். மலர்கள் கொத்துக்கொத்தாகக் காணப்படும். இதன் நறுமணம் மனத் திற்கு மயக்கம் தரக்கூடியதாகும். மல்லிகையைப்போல இரவில் நன்றாக மலரும். ஒரு மலரில் ஐந்து இதழ்கள் இருக்கும். முதுவேனில் பருவத்தில் மலரும். கூதிர் பருவத்திலும் இதன் மலர்கள் தோன்றும். பொதுவாகத் தோட்டங்களில் புதராக மண்டிக் காணப்படும். மஞ்சள் நிறமுள்ளது தன்மையில் சிறந்தது என நூல்கள் கூறுகின்றன.

**தன்மை**

கசப்புச்சுவையும், துணைச்சுவைகளாக இனிப்பும் கார்ப்பும் கொண்டிருக்கும். குளுமைத் தன்மை கொண்டது. இதயத் திற்கு நன்மைதரும். கபவாதங்களை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காட்டுமுல்லை பித்தம் விரணம் இரத்ததோஷம் முகம் பல் கண் தலை இவைகளில் தோன்றும் நோய்கள் எரிச்சல் நாவறட்சி நஞ்சு ஆகியவற்றைத் தணிக்கும்.

முதுவேனிற் பருவத்தில் வளரும் காட்டு முல்லைவேரை ஆட்டுப்பாலில் போட்டுக் காய்ச்சிப் பருகச்செய்தால் சிறு நீர்த்தடை நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் என்பன நீங்கும்.

## 77. காட்டுவாகை

**ஸம். ஸ்யோனாகம்** Croevim Indicum

**தோற்றம்**

இது நெடுமரமாக வளரும். மலையாளப் பகுதியில் சிறப்பாகக் காணப்படுகிறது. இம்மரத்திற்குக் கிளைகள் குறைவாக இருக்கும். மேல்பட்டை வெண்ணிறம் கொண்டு கரடு முரடாகவும் உள்ளே பச்சையும் மஞ்சளுமான நிறமும் கொண்டு காணப்படும். இலைக்காம்பு நீளமாக இருக்கும். இதன் காய் கத்தியைப்போல் இரண்டு மூன்று அடிகள் நீண்டிருக்கும். காயினுள் பஞ்சு போன்ற கோதும், முனைப்பகுதி கிளி மூக்கைப்போல் வளைர்தும் காணப்படும்.

இதில் சிவப்பு நிறமலர்கள் பூக்கும் வகை ஒன்று உண்டு. அதன் காய்களும் பெரியவை. அதன் இலைகள், வேம்பின் இலைகளைப் போல சற்று பெரியவையாக இருக்கும். காய்களும் வேப்பங்காயை விடப் பெரியவையாக இருக்கும். இலைகள் சிறிது நாற்றம் கொண்டிருக்கும். இது தசமூலப் பொருள்களில் சிறப்பான மருந்துப் பொருளாகும்.

**தன்மை**

துவர்ப்பு கசப்புச்சுவைகளும் குளுமைத் தன்மையும் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். மலத்தைத் தடுக்கும்.

இதன் இளங்காய் இதயத்திற்கு நன்மைதரும். வாத கபங்களைத் தணிக்கும். கார்ப்பு உவர்ப்பு புளிப்புச் சுவைகளும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும்.

முற்றியகாய் குருத்தன்மைகொண்டு வாதத்தை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் பித்தம் கபம் இருமல் அசீரணம் அதிஸாரம் கிருமி நோய் நாவறட்சி குட்டம் ஆகியவற்றைப் போக்கும்.

# 78. காயபலம்

**ஸம். கட்பல Saychnospotalorum**

இது பானையைப் போன்ற காய்களைக் கொண்டது. ஆம்பல் மலரைப் போன்ற வெண்மலரைக் கொண்டது.

**தன்மை**

துவர்ப்புச்சுவை கொண்டது. கசப்புக் கார்ப்புச்சுவைகளைத் துணைச்சுவைகளாகக் கொண்டது. வாதகபங்களைத் தணிக்கும். சுவையூட்டும். உஷ்ணவீர்யம் கொண்டது. இதன் காய் துவர்ப்புச் சுவை கொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

முகநோய் காய்ச்சல் இழுப்பு இருமல் நீரிழிவு தொண்டை நோய் முதலியவற்றைத் தீர்க்கும். இதன் காய் முகநோய் இருமல் இழுப்பு காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

காயபலப்பட்டையின் சுரஸத்தைத் தேன் கலந்து பயன் படுத்தினால் அதிஸாரம் தணியும்.

காயபலக்கட்டையை மைய அரைத்து விரணங்களின்மேல் தூவினால் விரைவில் அவை ஆறும்.

காயபலக் கட்டையை மைய அரைத்துக் கண்களில் மையாக இட்டால் பித்தத்தினால் தோன்றும் கண்வலி நீங்கும். கடல் நுரை திப்பிலி காயபலக்கட்டை இந்துப்பு எனும் இவற்றைப் பசுவின் சிறுநீர் தேன் நெய் ஆகியவற்றுடன் மைய அரைத்து வர்த்தியாகச் செய்து உலர்த்தி மூங்கில் குழாயில் வைத்துக் கொள்க. நாள்தோறும் நீரில் சந்தனம்போல் இதை அரைத்துக் கண்களுக்கு மையாக இட்டால் கண்நோய்கள் அனைத்தும் நீங்கும்.

கட்பலாதி கஷாயம்— வாதகபத்தால் தோன்றும் இருமல் தொண்டைநோய் இழுப்பு விக்கல் காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

பிரஹத்கட்பலாதி கஷாயம்—ஸந்நிபாதகாய்ச்சல் கண்டமாலை குரல்மாறுபாடு தொண்டைநோய் தாடைப் பிடிப்பு தலைநோய் செவிட்டுத் தன்மை ஆகிவற்றைத் தணிக்கும்.

# 79. கார்போக அரிசி

வடமொ. பாகுசீ Psoralia Corylifolia

## தோற்றம்

சிறு செடிகளான இவை நிலத்தில் பயிர்செய்யப்படு கின்றன. பசுவின் சிறுநீரைப் போன்ற நிறம் கொண்டிருக்கும். இதன் மலர்கள் கருநிறம் கொண்டிருக்கும். குளிர்காலத்தில் கொத்துக்கொத்தாய் காய்க்கும். பழங்கள் துர்நாற்றம் கொண் டிருக்கும். ஆனால் விதைகள் சிறிது மணம் கொண்டிருக்கும். விதைகளைப் பெண்கள் உடற்பூச்சுக்குப் பயன்படுத்துவதுண்டு. அதனால் கிருமிகள் அழியும். உடற்பொலிவு மிகும். தலை முடியை வளர்க்கும். கூச்பிஹார் அஸ்ஸாம் உத்தரப்பிரதேசம் முதலிய இடங்களில் வளரும்.

## தன்மை

கசப்புச் சுவையும் கார்ப்புச்சுவையைத் துணைச் சுவை யாகவும் கொண்டது. இரசாயனமாகும். குளுமை, வறட்சித் தன்மைகளைக் கொண்டது. அறிவாற்றலை வளர்க்கும். காய் பித்தத்தை வளர்க்கும். விதைகள் எண்ணெய்ப் பசை கொண்டவை.

## தீர்க்கும் நோய்கள்

கபம் ரத்தபித்தம் இழுப்பு குட்டம் நீரிழிவு காய்ச்சல் கிருமி ஆகியவற்றைப் போக்கும்.

இதன்காய், குட்டம் நீரிழிவு கபம் வாதம் இழுப்பு இருமல் வீக்கம் அசீரணம் பாண்டு எனும் நோய்களைப் போக்கும்.

## பயன்

கறுப்பு கார்போக அரிசியின் விதைகளை விழுதாக அரைத்து நாள்தோறும் காலையில் பசுவின் சிறுநீரில் கலந்து உட்கொள்ள வேண்டும். மாலையில் உப்பில்லாமல் நெல்லிக்காய்ச்சாற்றுடன் சம்பா அரிசிச் சோற்றை நெய்யுடன் உண்ணவேண்டும். இவ்வாறு ஒரு மாதம் செய்தால், குட்டம் சோகை பெருவயிறு எனும் நோய்கள் நீங்கும்.

தயிரையும் மாதுளம்பழச்சாற்றையும் கலந்து கார்போக அரிசி இலையை எண்ணெயில் பக்குவம் செய்து உட்கொண்டால்

சீதபேதி தணியும். கார்போக அரிசி விதை நான்குபலம், தாளகம் ஒரு பலம் அளவு கொண்டு பசுவின் சிறுநீரில் அரைத்துப் பூசினால் வெண்குட்டம் நீங்கும்.

கார்போக அரிசி விதையைக் கறுப்பு எள் கலந்து துகளாக்கி உட்கொள்ளச் செய்தால், கொடிய குட்டநோயும் நீங்கும்.

நிலப்பனங் கிழங்கு, கார்போக அரிசி இவற்றைச் சமஅளவு கொண்டு உட்கொள்ளச் செய்தால், செவிட்டுத் தன்மை நீங்கும்.

கார்போக அரிசிக்கஷாயம் பருகச் செய்தால் யானைக்கால் நோய் தணியும்.

யோமராஜீதைலம் — இதை எண்ணெய்க் குளியலில் பயன் படுத்தினால் குட்டநோய் விரணம் அரிப்பு சோகை அக்கி வங்கு வாதரத்தம் ஆகியவை தணியும்.

சந்திரப்ரபாவடீ-நீரிழிவு நீர்ச்சுருக்கு சிறுநீர்த்தடை நீர்ப்பையில்கல் விதைவீக்கம் காமாலை இருமல் இழுப்பு குட்டம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 80. காவட்டம்புல்

**ஸம். கத்ருணம்** Andropogon Sehoenanthus

**தோற்றம்**

இது நறுமணம் கொண்ட ஒருவகைப் புல்லாகும். இதன் இலைகளிலிருந்து நறுமணமுள்ள எண்ணெய் எடுக்கப்படுகிறது. ராஜஸ்தான் மால்வா உத்தரப்பிரதேசம் பீஹார் பகுதிகளில் மணல்பாங்கான மற்றும் சிறுகற்கள் மிகுந்த பகுதிகளிலும் மிகுதியாக விளைகிறது.

துவர்ப்புக் கசப்புச் சுவைகளைக் கொண்டது. செரிமான மாகும்போது கார்ப்புச் சுவை கொள்ளும். இதன் எண்ணெய் உடல்வலிமையைத் தரும். சூட்டையும் வியர்வையையும் வெளி யேற்றும்.

**தீர்க்கும் நோய்கள்**

இதயம் தொண்டை இவற்றில் தோன்றும் நோய்கள் பித்தம் ரத்ததோஷம் வலி இருமல் சபம் காய்ச்சல் ஆகிய

வற்றைப் போக்கும். இதன் எண்ணெய், காய்ச்சல் விக்கம் காதுநோய் மூலம் ரத்ததோஷம் இருமல் கபம் எனும் இவற்றைப் போக்கும்.

## 81. கிரந்திதகரம் (தகரை)

**ஸம். கிரந்திதகரம்** Veleriana Hardwick

**தோற்றம்**

இது நறுமணமுள்ள ஒருவகை மரமாகும். இதன் கட்டை கருநிறங்கொண்டிருக்கும். இதில் நந்திதகரம், பிண்டிதகரம் என இருவகைகளுண்டு. தோற்றம் குணம் ஆகிய இரண்டிலும் இருவகைகளும் ஒன்றாகவே இருக்கும். மணத்தில் மட்டும் வேற்றுமை காணப்படும். நந்திதகரம் மிகுதியாகவும் பிண்டி தகரம் குறைவாகவும் மணம் கொண்டிருக்கும். மலர்கள் சிறியவையாக மஞ்சள் நிறங்கொண்டு ஐந்து இதழ்களுடன் காணப்படும். நந்திதகரத்தின் கட்டை வெண்மையும் எண்ணெய்ப் பசையும் கொண்டிருக்கும். பிண்டிதகரம் வறண்டு இலேசாக இருக்கும்.

**குணம்**

இருவகை தகரமும் இனிப்புச்சுவையும் உஷ்ணவீர்யமும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். பூதத்தால் தோன்றும் உன்மாதத்தைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது நஞ்சு கால்கைவலி கண்நோய் மூன்று தோஷங்கள் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

கிரந்திதகரத்தின் வேரை மோருடன் அரைத்து உட்கொள்ளச் செய்தால் ஸந்திகவாதநோய் நீங்கும்.

தகராதி தைலம்—பெண்குறி வலியைப் போக்கும்.

## 82. கிலுகிலுப்பை

**ஸம். சுஷணா** Crotolaria Joncea

**தோற்றம்**

இது சிறுசெடியாகப் பயிர் செய்யப்படுகிறது. இதில், சுஷணா சுஷணபுஷ்பி என இருவகையுண்டு. சுஷணபுஷ்பி என்பது

பலவகைப்படும். இதில் வெண்காய் கொண்டது வட்டவடிவ மான இலைகளைக் கொண்டது வானவில் போல் வளைந்த காய் களைக் கொண்டது மணியைப் போல ஒலிக்கும் காய்களைக் கொண்டது எனவும் பல வகைகள் உண்டு. இச்செடியின் நாரே சணல் நாராகும். இதன்சாறு பாதரஸத்தைக் கட்டும் தன்மை யுடையது என நூல்களில் கூறப்பட்டுள்ளது.

**தன்மை**

இது, புளிப்புச் சுவையையும் துணைச் சுவையாகத் துவர்ப்புச் சுவையையும் கொண்டது. உஷ்ணவீரியமுள்ளது. வாந்தியெடுக்கச் செய்யும். கருச்சிதைவைத் தோற்றுவிக்கும். வாதகபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

க்ஷணபுஷ்பம் பெரும்பாடு ரத்ததோஷம் ஆகியவற்றைப் போக்கும்.

சிறு க்ஷணபுஷ்பி-பாதரஸத்தைக் கட்டும்.

வெள்ளைக்ஷணபுஷ்பி-பாதரஸத்தைக் கட்டும், ஜாலவித்தை களுக்கும் பயன்படும்.

க்ஷணபுஷ்பி விதைகளைப் பாலில் பக்குவம் செய்து உட் கொண்டால் நீண்டநாள் இளமையுடன் வாழலாம்.

## 83. கீரைப்பாலை

**ஸம். ஜீவந்தி** Tylophora Asthmatica

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. கொடி சிவப்பு நிறத் துடன் காணப்படும். இலைகள் வெற்றிலை போல் சற்று சிறிதாக இருக்கும். இலையை ஒடித்தால் பால் சுரக்கும். இதில் சிறுகீரைப்பாலை பெருங்கீரைப்பாலை என இருவகையுண்டு. தங்கநிறப்பால் கொண்ட வகை ஒன்று உண்டு எனவும் நூல்கள் கூறுகின்றன. இது இமயமலைச் சாரலில் காணப்படும். ஜீவனீயக் கூட்டுப்பொருள்களில் இது முதலாவதாகையால் தாதுக் களை வளர்ப்பதில் சிறந்தது என அறியலாகும்.

**தன்மை**

இது குளுமைத்தன்மை இனிப்புச்சுவை எண்ணெய்ப்பசை கொண்டது. சுவையூட்டும் தாதுக்களை வளர்க்கும். கண்

களுக்கு நன்மை பயக்கும். உடலுக்குச் செழிப்பும் வலிமையும் தரும். மாதவிடாய்ப் போக்கைத் தடுக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது கபம் பித்தம் ரத்ததோஷம் விக்கல் இருமல் காய்ச்சல் விரணம் மார்பில் தாக்குண்டதால் ஏற்படும் க்ஷயம் அக்கி கிருமிகுட்டம் எனும் நோய்களைப் போக்கும்.

**பயன்**

கீரைப்பாலையைத் தயிர் மாதுளம்பழச்சாற்றுடன் பக்குவம் செய்து நெய்யுடன் உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும். கீரைப்பாலையின் இளந்துளிரை நெய்யில் வதக்கி உட்கொள்ளச் செய்தால் இரவில் பார்வைக் குறைவு (கண் தெரியாமை) நீங்கும். கீரைப்பாலை வேரின் விழுதை எண்ணெயுடன் உட்கொள்ளச் செய்தால் விலாவலி நீங்கும்.

ஜீவந்த்யாதி கிருதம்-இது எலும்புருக்கி (க்ஷயம்) நோயைப் போக்கும்.

ஜீவந்த்யாதி சூர்ணம்-விக்கல் இழுப்பு இருமல் விலாவலி காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 84. கீழாநெல்லி

**ஸம். பூம்யாமலகீ** Phylanthus Niruri

**தோற்றம்**

இது சிறுசெடி வகையைச் சேர்ந்தது. இலைகள் நெல்லி மரத்தின் இலைகளைப் போல் சிறியவையாக இருக்கும். இதன் காய்கள் கடுகைப்போல் மிகச்சிறியவையாய் இலைக்காம்புகளின் கீழ்ப்பகுதியில் தோன்றும். இவை எண்ணிக்கையில் மிகுந்து காணப்படும். இலை மென்மையாகப் பச்சையும் மஞ்சளுமான நிறம் கொண்டிருக்கும். கீழாநெல்லி கார்ப்பருவத்தில் மிகுதியாக முளைக்கும். கூதிர்ப்பருவத்தில் பூத்துக்காய்க்கும். கோடையில் உலர்ந்துவிடும். ஈரப்பசையுள்ள நிலத்தில் நன்கு வளரும்.

**தன்மை**

இது மிக்க குளுமைத்தன்மை கொண்டது. இரசாயனத் தன்மை உடையது. இனிப்பு புளிப்பு துவர்ப்பு கார்ப்புச் சுவை

களைக் கொண்டது. வாதத்தை வளர்க்கும். விந்துவை மிகுதியாக வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

நாவறட்சி இருமல் இரத்தபித்தம் சோகை காயம் எனுமிவற்றைப் போக்கும்.

**பயன்**

கீழாநெல்லிச் சாற்றைச் சர்க்கரை கலந்து உட்கொண்டால் இருமல் இழுப்பு எனுமிவை நீங்கும். கீழாநெல்லி விழுதை இந்துப்புக் கலந்து நீர் சேர்த்துத் தாமிரப்பாத்திரத்தில் வைத்து, அது சற்று கெட்டியானதும் கண்களைச் சுற்றிலும் பற்றாகப் பூசினால் கண்வலி நீங்கும்.

கீழாநெல்லி விதையைத் தூளாக்கி அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் இரண்டு மூன்று நாட்களில் இரத்தப் பெரும்பாடு தணியும்.

## 85. குங்கிலியம்

**ஸம். குக்குலு** Shorea Robusta

**தோற்றம்**

இது காடுகளில் உயர்ந்த மரமாக வளரும். இதன் இலை, மெல்லியதாய் நீண்டு ஆட்டுக்காதுபோல் அமைந்திருக்கும். மலர்கள் நறுமணம் கொண்டிருக்கும். பங்குனியில் இலைகள் உதிர்ந்து ளவேனிற் பருவத்தில் துளிர்த்துப் பூக்கும். அந்நிலையில் ன் மயக்கத்தைத்தரும் நறுமணமும் கண்களுக்கு அளிக்கும் காட்சி விருந்தும் புகழ் பெற்றவை. இம்மரம் வேருடன் உயர்ந்து அதிக நிழல் தராததாய் மிக்க வலிமையான தண்டைக்கொண்டிருக்கும். இதன் பிசின் குங்கிலியம் எனப்படும்.

குங்கிலியம் மரத்தில் தோன்றுவது நிலத்தில் தோன்றுவதென இருவகையாகும். மரத்தில் தோன்றுவது கருமை மஞ்சள் என இரண்டு வகையாகும். மகிசாக்ஷிகுக்குலு என்பது கருநிறமும் மகாநீலகுக்குலு என்பது நீலநிறமும் குமுத குக்குலு வெண்ணிறமும் ஹிரண்யகுக்குலு என்பது மஞ்சள் நிறமும் கொண்டிருக்குமென நூல்கள் கூறுகின்றன. கடைகளில் கிடைக்கும் மகிசாக்ஷிகுக்குலு என்பது ஐந்து நிறங்கள் கொண்ட கணுக்களுடன் காணப்படும்.

**தன்மை**

கசப்பு கார்ப்புச்சுவை எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். உஷ்ணவீர்யம் உடையது. விந்துவை வளர்க்கும். கப வாதங்களைத் தணிக்கும்.

நெருப்பில் போட்டால் எரியக்கூடியதும் வெயிலில் உருகக்கூடியதும் இளஞ்சூடுள்ள நீரில் போட்டால் கரைந்து விடுவதுமாகிய குக்குலுவே சிறந்தது.

**தீர்க்கும் நோய்கள்**

நாவறட்சி விரணம் நீரிழிவு குட்டம் கட்டி வீக்கம் மூலநோய் கண்டமாலை உடலில் மிகுதியாகச் சேர்ந்துள்ள கொழுப்பு ஆகியவற்றைத் தணிக்கும். இதைப்பயன்படுத்தும் போது புளிப்புச்சுவையுள்ள தீக்ஷ்ண குணம் கொண்ட பொருள்களையும் கலவி உடலுழைப்பு வெயிலில்அலைதல் மது ஆகியவற்றையும் விலக்க வேண்டும்.

**பயன்**

குக்குலுவை இளஞ்சூடுள்ள தசமூலக் கஷாயத்திலிட்டு நன்றாகக் கலக்கி வடிகட்டிக் கடும் வெயிலில் உலர்த்த வேண்டும். பிறகு நெய் கலந்து உருண்டையாகச் செய்து கொள்க. இது குக்குலுவைத் தூய்மைப்படுத்தும் முறையாகும்.

சிறந்த குக்குலுவை பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்தால் ஊருஸ்தம்பவாதம் தணியும்.

குக்குலுவை பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்தால் வீக்கம் தணியும். குக்குலுவை நெய்யுடன் உட்கொள்ளச்செய்தால் இழுப்பு த ணியும். பசுவின் சிறுநீருடன் குக்குலுவை உட்கொள்ள செய்தால் கபத்தினால் தோன்றிய கட்டி நீங்கும். குக்குலுவை திரிபலை கஷாயத்துடன் உட்கொள்ளச் செய்தால் பவுத்திரம் தணியும்.

இரசப்ரகுக்குலு – வாதஇரத்தம் குஷ்டம் கிருமிநோய் காமாலை வெண்குட்டம் கண்டமாலை அரிப்பு சிறுநீர்ப்பையில் கல் எனுமிவைகள் தணியும்.

பஞ்சதிக்தகிருதகுக்குலு -இது வாதநோய் குட்டம் நரம்புச் சிலந்தி கண்டமாலை குன்மம் மூலநோய் நீரிழிவு இருமல் இழுப்பு இதயநோய் சோகை ஆகியவற்றைத் தணிக்கும்.

மகாயோகராச குக்குலு – இது கிருமிநோய் வாதநோய் விரணம் மண்ணீரல்வீக்கம் குன்மம் பெருவயிறு மூலநோய் குட்டம் பித்தநோய் கபநோய்கள் ஆகியவற்றைத் தணிக்கும்.

புனர்னவா குக்குலு – வாதரத்தம் விரைவாதம் ஊருவாதம் முதலிய பலவாத நோய்களைப் போக்கும்.

## 86. குடசப்பாலை

**ஸம். குட்ஜ** Holarrhena Antidysente Crica

### தோற்றம்

இது உயர்ந்து வளரும் மரமாகும். வெளுப்பு கறுப்பு எனும் நிறங்களால் இருவகைப்படும். சிறிது அகன்று நீண்ட இலைகளுடன் இருக்கும். இதன் காய்கள் மெலிந்து நீண்டு இரண்டு காய்கள் முனையில் சேர்ந்து காணப்படும். காய்களுக்குள் பஞ்சைப் போன்ற பொருளும் அதற்குள் யவதானியத்தைப் போன்ற விதையும் காணப்படும். இதன் மலர்கள் மல்லிகையைப் போல் நறுமணம் கொண்டிருக்கும். வெண்ணிறமுள்ளது. மருத்துவத்தில் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது.

### தன்மை

குடசப்பாலை கார்ப்புத் துவர்ப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் சீதவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். மூன்று தோஷங்களையும் போக்கும். இதன் மலர் வாதத்தை வளர்க்கும். விதைகள் கசப்புச் சுவையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

காய்ச்சல் அதிசாரம் இரத்தமூலம் கிருமிநோய் அக்கி குட்டம் இரத்ததோஷம் வாதரத்தம் கபத்தினால் தோன்றிய வலி ஆகியவற்றைத் தணிக்கும்.

### பயன்

குடசப்பாலை விதை சுக்கு இவ்விரண்டையும் மைய அரைத்து அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் க்ஷயநோயாளிக்குத் தோன்றிய அதிசாரம் நீங்கும். குடசப் பாலை விதைகளின் விழுதை மேல்பூச்சாகப் பயன்படுத்தினால் குட்டம் தணியும். குடசப்பாலை கஷாயத்தால் விரணங்

களைக் கழுவினால் புண் விரைவில் ஆறும். குடசப்பாலைமலர் களின் விழுதை உட்கொள்ளச் செய்தால் நீரிழிவு தணியும். குடசப்பாலைக் கட்டையின் விழுதைத் தயிருடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் நீங்கும்.

குடஜாவலேகியம் - இது மூலம் கிரகணி இழுப்பு இருமல் இரத்தாதிசாரம் இரத்தபித்தம் எனுமிவற்றைத் தணிக்கும்.

குடஜாதிகுடிகை-இதுசோகை குட்டம் காய்ச்சல் மண்ணீரல் வீக்கம் மூலநோய் பவுத்திரம் இருமல் குன்மம் வீக்கம் நீரிழிவு தலைச்சுற்றல் விந்துதோஷம் ஆகியவற்றைப் போக்கும்.

## 87. குமிழம்

**ஸம். காஸ்மரி** Gmelina Arborca

### தோற்றம்

இது நெடுமரமாக வளரக் கூடியது. மணற்பாங்கான இடங்களில் நன்கு வளரும். இதன் அடித்தண்டு நீண்டு பட்டை மிக்க பருமனுடன் மஞ்சள் நிறங்கொண்டிருக்கும். இலைக்காம்பு நீளமாகவும் நுனி கூர்மையாகவும் அரச இலையைப் போல சற்றுத் தடித்தும் காணப்படும்.

)லையின் பின்பகுதி சாம்பல் பூசியதுபோலவும் மேல்பகுதி எண்ணெய் பூசியது போலவும் காணப்படும். மலர்கள் மஞ்சள் நிறங்கொண்டு இதழ்கள் ஒன்றோடொன்று சேர்ந்து நடுவில் தாமிர நிறமுள்ள அடையாளங்களுடன் காம்புகள் சிறியவை யாகக் காணப்படும். மலரின் அடிப்பகுதி மிகவும் நீண்டிருக்கும். இதன் காய் சுரைக்காய் தோற்றத்தில் சிறு மகிழங்காய் அளவில் காணப்படும்.

பழம் மஞ்சள் நிறங்கொண்டிருக்கும். கொட்டை டளிட்டம் இனிப்புமான சுவைகளுடன் வாதுமைக் கொட்டையைப்போல் இருக்கும்.

### தன்மை

துவர்ப்பும் கசப்புமான சுவை கொண்டிருக்கும். உஷ்ண வீரியம் உள்ளது. குருத்தன்மை கொண்டது. செரிமானத்தைத் தூண்டும். சடராக்னியை வளர்க்கும். அறிவை வளர்க்கக் கூடியது. இதன் காய் விந்து வளர்ச்சிக்கேற்றது. வலிமை தரும். இராசாயனமானது.

**தீர்க்கும் நோய்கள்**

தலைச்சுற்றல், நாவறட்சி ஆமம் உடல் உலர்ந்துபோதல் வயிற்றுவலி மூலநோய் நஞ்சு எரிச்சல் காய்ச்சல் எனுமி வற்றைப் போக்கும். இதன் காய் வாதம் பித்தம் நாவறட்சி இரத்ததோஷம் க்ஷயம் சிறுநீரடைப்பு எரிச்சல் இரத்தபித்தம் மார்பில் பட்டகாயம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

குமிழம் பழத்தால் செய்த கஞ்சியில் சிறிது புளிப்புச் சுவையும் சர்க்கரையும் சேர்த்துப் பயன்படுத்தினால் இரத்தாதிசாரம் நீங்கும்.

குமிழம்பழம் அதிமதுரம் எனும் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் சர்க்கரை கலந்து கருவுற்ற பெண்ணுக்குக் கொடுத்தால் இளைத்தகரு வலிமை பெறும். இளைத்த சிறு குழந்தைகளுக்குப் பயன்படுத்தினால் அவர்கள் உடல் செழிப்புறும். குமிழம் பழச்சாற்றில் தேன் கலந்து பருகச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

குமிழம் செடியின் இளம்துளிர் இலைகளை நகச்சுற்று தோன்றிய விரலைச் சுற்றிவைத்தால் நோய் நீங்கும்.

காஸ்மரியாதிகிருதம் – இது பெண்குறி நோய்களைப் போக்கும்.

## 88. குன்றிமணி

**ஸம். குஞ்சா.** Abrus Precatoriouswilld

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. வெண்மை சிவப்பு என்னும் நிறங்களால் இருவகைப்படும். காய்கள் பக்குவமானதும் கொடி உலர்ந்து போகும். கார்ப்பருவத்தில் முதன்முதலில் மழை பொழிந்ததும் மறுபடியும் வேரிலிருந்து புதிய கொடி தோன்றும். இந்தக்கொடி கூதிர்ப்பருவத்தில் பூக்கும். இதன் இலைகள் புளிய இலைகளைப் போன்றிருக்கும்.

மலர்கள் ரோஜாமலரைப்போல் சிவந்த நிறமுடன் சிறியவையாகக் காணப்படும். காய்கள் சிறியவையாகும். ஒவ்வொன்றிலும் நான்கைந்து விதைகள் இருக்கும். ஒரேகொடியில் பல

நிறங்களில் விதைகள் தோன்றும். வேரைவிட இலைகள் இனிப்புச்சுவையை மிகுதியாகக் கொண்டிருக்கும்.

**தன்மை**

இருவகை குன்றிமணியும் தலைமுடிக்கு நன்மைதரும். விந்துவையும் வலிமையையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் பித்தம் காய்ச்சல் தலைச்சுற்றல் இழுப்பு நாவறட்சி மதம் கண்நோய் கிருமிநோய் விரணம் குட்டம் எனும் இவற்றை நீக்கும்.

## 89. கொடுக்காய்ப்புளி

**ஸம். ஆம்ல வேதஸ** Zalacca Edulis

**தோற்றம்**

கொடுக்காய்ப்புளி சிற்றினம் பேரினம் என இருவகையாக இருக்கும் என்று நூல்கள் கூறுகின்றன. நெடுமரமாக வளரக் கூடியது பெரும்பாலும் ஸிலோன் நாட்டில் வளரும் என ஸால கிராமநிகண்டுவில் கூறப்பட்டுள்ளது. அவ்வாறே இது தமிழ் நாட்டிலும் பெருமளவில் காணப்படுகிறது. இதன் பழங்களின் கோது கடைகளில் புளிவஞ்சி என விற்கப்படுகிறது.

**தன்மை**

இதன்காய் துவர்ப்புச் சுவையும் துணைச் சுவையாகக் கார்ப்புச் சுவையையும் கொண்டிருக்கும். இதன்பழம் புளிப்புச்சுவை மிகுந்து குருத்தன்மை கொண்டிருக்கும். மலத்தைக் கட்டும். மூன்று தோஷங்களையும் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

நாவறட்சி கிருமிநோய் மூலநோய் சிறுநீர்ப்பையில் கல் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

கொடுக்காய்ப்புளிப்பழம் முருங்கைக்கட்டை இவற்றின் கஷாயத்தில் இந்துப்பையும் திப்பிலி மிளகு எனும் இவற்றின் தூளையும் சேர்த்துப் பயன்படுத்தினால் மண்ணீரல்வீக்கம் தணியும்.

## 90. கொட்டைக்கரந்தை

**ஸம். வரபுஷா** Thevetia Nerifolia

**தோற்றம்**

இதில் நீண்ட இலைகள் உள்ளவை குறுகிய இலைகள் உள்ளவை என இரண்டு வகைகள் உண்டு. நான்கு அடிகள் உயரம் வரை வளரும். இலைகள் சிவந்த நிறம்கொண்டு ஒளி வீசுவனவாக இருக்கும். இருவகை மரங்களின் பழங்களும் ஒரே விதமான மணம் கொண்டிருக்கும். அழகுக்காகவும் இந்த மரங்கள் வளர்க்கப்படுவதுண்டு. நீண்ட இலைகள் உள்ள மரத்தின் பழங்கள் மணத்தில் சற்றுக் குறைந்தும் குறுகிய இலை களைக் கொண்ட மரங்களின் பழம் கடுமணம் கொண்டும் இருக் கும். இம்மரக்கட்டைகள் படகு செய்யப்பயன்படுகின்றன.

**விளைநிலம்**

நீண்ட இலைகளைக் கொண்ட மரம் கொங்கணப்பகுதி யிலும் குறுகிய இலைகளைக் கொண்டது சீனா ஜப்பான் நாடுகளிலும் மிகுதியாக விளைகின்றன.

**தீர்க்கும் நோய்கள்**

இது பித்தம் பெருவயிறு வாதம் மூலம் கிரஹணி வயிற்று வலி முதலியவற்றைப் போக்கும்.

## 91. கொடிவேலி

**ஸம். சித்ரக** Plvmbago Zeylanica

**தோற்றம்**

கொடிவேலி கை அளவு உயரம் உள்ளதாய், நெடுநாள் வாழக்கூடிய புதர் போல் மண்டி வளரும் மூலிகையாகும். ஒவ்வொரு ஆண்டும் இதன் அடித்தண்டிலிருந்து புதிய கிளைகள் தோன்றி வளரும். இதன் தண்டு மெல்லிய முடிச்சுகளுடன் சுணைகொண்டிருக்கும். மலர்க்காம்புகள் வழவழப்பாகவும் சிறு ரோமங்களைப்போன்ற உகைகளையும் கொண்டிருக்கும். இதன் வேர் கட்டைவிரல் பருமனுக்குச் சதைப் பற்றை மிகுதியாகக் கொண்டிருக்கும். தண்ணீர்விட்டான் கிழங்கின் மேல் இருப்பது போல இதன் வேரின்மேல் நார்போன்ற பொருள் சுற்றிக் கொண் டிருக்கும். இந்தக் கொடி புரட்டாசி தை மாசி மாதங்களில்

பூக்கும். மலர்களின் வெண்மை கருநீலம் சிவப்பு மஞ்சள் நிறங்களால் இச்செடி நான்கு வகைப்படும். இவற்றில் கருநீலப்பூ சிறந்தது. வெண்மை சிவப்பு நிறம்கொண்ட மலர்கள் எங்கும் காணப்படுகின்றன. மஞ்சள் கருநீலம் கொண்டவை அரியனவாகக் கிடைக்கின்றன.

**விளைநிலம்**

நம் நாட்டில் இது எங்கும் விளையும். சிறப்பாகத் தெலுங்கு தேசம் அஸ்ஸாம் பீகார் குஜராத் ஜம்முகாஷ்மீர் மகராஷ்டிரம் தமிழ்நாடு எனும் இடங்களில் மிகுதியாகக் காணப்படும்.

**தன்மை**

இது கார்ப்புச்சுவை வறட்சித்தன்மை உஷ்ணவீரியம் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். மலத்தைத் தடுக்கும்.

சிவப்பு நிறமுள்ள கொடிவேலி சுவையூட்டும். உடலைப் பருமனாக்கும். குட்டத்தைப் போக்கும். பாதரஸத்தைக் கட்டும். இது உலோகத்தைத் தங்கமாக்கும் செயலுக்குப் பயன்படும் என நூல்கள் கூறுகின்றன.

**தீர்க்கும் நோய்கள்**

கிரகணி குட்டம் வீக்கம் மூலம் கிருமிநோய் இருமல் வாதகபநோய் வாதமூலம் கபபித்தம் எனும் நோய்களைப் போக்கும்.

**பயன்**

கொடிவேலி விழுதை ஒரு பானைக்குள் பூசி அதில் தயார் செய்த தயிரையோ மோரையோ பயன்படுத்தச் செய்தால் மூல நோய் தணியும். கொடிவேலி விழுதை மோருடன் கலந்து பயன்படுத்தினால் அதிஸாரம் தணியும்.

ஒரு பானையில் கொடிவேலி விழுதைப்பூசி அதில் பாலை ஊற்றித் தயிராக்கவேண்டும். அதைக் கடைந்தெடுத்த வெண்ணெயை உருக்கி முன் கடைந்தமோருடன் கொடிவேலி விழுதையும் கலந்து நெய் முறையாகப் பக்குவம் செய்து பயன்படுத்தினால் வீக்கம் மூலம் அதிசாரம் வாதத்தால் தோன்றும் குன்மம் நீரிழிவு ஆகியவை தணியும்.

கொடிவேலியை மைய அரைத்து விழுதாக்கிப் பயன்படுத்தினால் குட்டம் நீங்கும்.

பசுவின் சிறுநீர் கொடிவேலி திரிகடுகம் நெய் தேன் ஆகிய வற்றைக் கலந்து ஒரு பாத்திரத்தில் இட்டுப் பதினைந்து நாட்கள் வைத்திருந்து பிறகு பயன்படுத்தினால் வெண்குட்டம் நீங்கும்.

கொடிவேலிக் கஷாயத்தைப் பருகச் செய்தால் மணல் போன்ற பொருள் கலந்து வெளியேறும் சிறுநீர் நோய் தீரும்.

கொடிவேலி விழுதைமேல்பூச்சாகப் பயன்படுத்தினால் யானைக்கால் நோய் தணியும்.

கொடிவேலியைத் தேனுடன் உட்கொண்டு பத்திய உணவு உண்ணச்செய்தால் உடலில் இருந்துள்ள கொழுப்பு நீங்கும்.

சித்ரகாதிகிருதம்—இது மூலம் குன்மம் விக்கம் ஆகிய வற்றைத் தணிக்கும்.

சித்திரகாதி லேகியம்—இது இருமல் இழுப்பு இதயநோய் குன்மம் ஆகியவற்றைப் போக்கும்

சித்ரகாத்யரிஷ்டம்—இது கிரகணி சோகை பெருவயிறு மண்ணீரல்வீக்கம் மூலம் எனுமிவற்றைத் தணிக்கும்.

## 92. கொத்துமல்லி

**ஸம். தான்யக** Coriandrum Sativum

**தோற்றம்**

இவை சிறு செடிகளாக வளரும். செடிகளின் நரம்புபோன்ற காம்புகளில் மலரும் விதைகளும் தோன்றுகின்றன. இவ்விதைகள் தனியா எனப்படும்.

கொத்துமல்லி நம் நாட்டில் எங்கும் பயிர் செய்யப்படு கிறது. சிறப்பாக உத்திரப்பிரதேசம் வங்கம் என்னும் மாநிலங் களில் பயிர் செய்யப்படுகிறது.

**தன்மை**

தனியா இனிப்புச் சுவையும் துவர்ப்புச் சுவையும் சீதவீரிய மும் எண்ணெய்ப்பசையும் கொண்டது. விந்துவின் வலிமையைக்

குறைக்கும். சிறுநீரைப் பெருக்கும். இலேசானது. செரிமானத்தை வளர்க்கும். சுவையை உண்டாக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல் மூன்று தோஷங்கள் நாவறட்சி வாந்தி இழுப்பு இருமல் இளைப்பு ஆகியவற்றைப் போக்கும்.

ஒரு நோயில் உபத்ரவமாகத் தோன்றிய நாவறட்சியில் கொத்துமல்லிவிதைச்சாறு சர்க்கரை தேன் கலந்து பருகச் செய்தால் துன்பம் தணியும். (ஒரு நோயைச் சார்ந்து தோன்றும் துன்பம் உபத்ரவம் எனப்படும்)

கொத்துமல்லிவிதை கசப்புப்புடலை எனும் இவற்றின் கஷாயத்தைப் பருகச் செய்தால் சடராக்னி வளரும். மலம் வெளியேறும். கபபித்தங்கள் தணியும்.

கொத்துமல்லி விதை 1 பங்கு, சீரகம் 2 பங்கு சேர்த்துத் தூளாக்கி வெல்லத்துடன் லேகிய பக்குவம் செய்து பயன்படுத்தினால் வாதரத்தம் தணியும்.

கொத்துமல்லிவிதை விழுது $\frac{1}{4}$ பங்கு, நெய் 1 பங்கு, நீர் 4 பங்கு எனக் கொண்டு நெய்ப் பக்குவம் செய்து பயன்படுத்தினால் பித்தாதிசாரத்தால் தோன்றிய வயிற்றுவலி நீங்கும்.

கொத்துமல்லிவிதை விழுதை அரிசி கழுவிய நீருடன் சிறிது சர்க்கரை கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுவர்களுக்குத் தோன்றும் இருமல் இழுப்பு எனும் இவை தணியும்.

தான்ய பஞ்சக கஷாயம்-இது அதிசாரம் இரத்தாதிசாரம் ஆகியவற்றைத் தணிக்கும்.

தானியகலேகியம் — இது பித்தம் சுவையின்மை வாந்தி ஆகியவற்றைத் தணிக்கும்.

## 93. கொம்பரக்கு

**ஸம். லாக்ஷா** Coccus Lacca

**தோற்றம்**

திப்பிலி கல்லாலை இலந்தை சிம்சபாமரம் போன்றவற்றின் கிளைகளில் சிவப்பு நிறமுள்ள பொருள் காணப்படும். அதிலிருந்து

திரட்டி எடுத்த பொருளே கொம்பரக்கு எனப்படும். இப்பினிச் செடியிலிருந்து எடுக்கப்படும் அரக்கே சிறந்தது. இந்த அரக்கைப் பக்குவம் செய்து மங்கையர் கை கால்களில் அலங்கரித்துக் கொள்ளும் ஒருவகை அரக்கும் தயார் செய்யப்படுகிறது.

**தன்மை**

உடல் நிறத்தை அழகுறச் செய்யும். குளுமையானது. உடல் வலிமையை வளர்க்கும். எண்ணெய்ப்பசையும் துவர்ப்புச்சுவையும் கொண்டதாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் பித்தம் இரத்ததோஷம் விக்கல் இருமல் காய்ச்சல் விரணம் மார்பில் தாக்குண்டதால் ஏற்படும் காயம் அக்கி கிருமி குட்டம் எனும் நோய்களைப் போக்கும்.

## 94. கொழிஞ்சில்

**ஸம். சரபுங்கா** Tephrosia Purpurea

**தோற்றம்**

கொழிஞ்சில், அவுரிச் செடியைப் போன்ற சிறுசெடியாகும். இது நீளமான காய்களும் சிவப்பு நிறமலர்களும் கொண்டு மற்ற செடிப் பகுதிகள் நீலநிறம் கொண்டும் காணப்படும். வெண்ணிறமுள்ளது, முள்ளுடன் கூடியது என இதில் மற்றும் இரண்டுவகைகள் உண்டென நூல்களில் கூறப்பட்டுள்ளது. வெண்ணிறமுள்ளதன் இலைகள் சிறியவையாகவும் சிவப்பு நிறமுள்ளது சற்று பெரிதாகவும் இருக்கும். வெண்ணிறமலர் கொண்டது நிலத்தில் படர்ந்திருக்கும். காய்களில் 5, 6 விதைகள் இருக்கும்.

**தன்மை**

சிவப்பு நிறமுள்ளது கார்ப்புச்சுவை உஷ்ணவீரியம் கொண்டிருக்கும். வெண்ணிறமுள்ளது தன்மையில் சிறந்ததாகும். ரஸாயனமானது. முள் கொண்டது கார்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும்.

**தீர்க்கும் நோய்**

மூலநோய் இதயநோய் கபத்தினால் தோன்றிய பெருவயிறு வங்கு ஆகியவற்றைப் போக்கும். இதைக் கொண்(

புகை பிடிக்கச்செய்தால் இருமல் தணியும். எலிவிஷம் நீரிழிவு இரத்ததோஷம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

கொழிஞ்சில் க்ஷாரம் கடுக்காய்த்தூள் இரண்டையும் சம அளவில் கொண்டு உட்கொள்ளச் செய்தால் குன்மம் தணியும்.

கொழிஞ்சில்வேரை அரிசி கழுவிய நீருடன் அரைத்து மூக்கிலிடு மருந்தாகவும் மேல்பூச்சாகவும் பயன்படுத்தினால் விரணம் நஞ்சு நீங்கும்.

கொழிஞ்சில்விதையை மையத்தூளாக்கி மோருடன் கொள்ளச் செய்தால் எலிவிஷம் தணியும்.

கொழிஞ்சில்விதையைத் தூளாக்கித் தேன் கலந்து பூசினால் விரணங்கள் தணியும்.

கொழிஞ்சில்விழுதைச் சடராக்னியின் வலிமைக்கு ஏற்ற படி மோருடன் உட்கொள்ளச் செய்தால் மண்ணீரல்வீக்கம் நீங்கும்.

கொழிஞ்சில் விழுதை வயிற்றின்மேல் பூசினால் குடலுக்குள் உள்ள கிருமிகள் மலத்துடன் வெளிவந்துவிடும்.

## 95. கோஷ்டம்

**ஸம். குஷ்டம் Savssurea Lappa**

**தோற்றம்**

இது காச்மீர பிராந்தியத்தில் உள்ள கிணற்றுப் பகுதிகளில் மிகுதியாக வளரும். புரட்டாசி ஐப்பசி மாதங்களில் இதன் வேர்களை எடுத்துத் துண்டுகளாக்கி வெளிநாடுகளுக்கு அனுப்புகின்றனர். இதில் இனிப்பு கசப்பு எனும் சுவை வேறுபாட்டால் இருவகை உண்டு. சிலர் இளஞ்செடியின் வேர் இனிப்பாகவும் முற்றிய செடியின் வேர் கசப்பாகவும் இருக்கும் என்கின்றனர். சீன தேசத்தினர் இதை குக்குலுவைப்போல நறுமணப்புகை போடப் பயன்படுத்துகின்றனர்.

**தன்மை**

இது, கார்ப்புச்சுவையும் துணைச் சுவைகளாக இனிப்புக் கசப்புச் சுவைகளையும் கொண்டிருக்கும். இலகு குணமும் உஷ்ண

வீரியமும் கொண்டதாகும். விந்துவை வளர்க்கும். வாதகபங்களைத் தணிக்கும்.

**தன்மை**

மூன்று தோஷங்களையும் தணிக்கும். நஞ்சு அரிப்பு இருமல் விக்கல் காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

கோஷ்டம் தனியா இவற்றை நீருடன் மைய அரைத்துப் பூசினால் மண்டலக் குட்டம் நீங்கும்.

கோஷ்டத்தின் சாற்றில் வசம்புத்தூளும் தேனும் கலந்து உட்கொள்ளச் செய்தால் கால்கை வலி நீங்கும்.

கோஷ்டத்தின் தூளை நெய் தேன் இவற்றுடன் கலந்து நாள்தோறும் காலையில் உட்கொள்ளச் செய்தால் நோயின்றி நீண்டநாள் வாழலாம்.

## 96. சக்கரவர்த்திக் கீரை

**ஸம். வாஸ்துக** Chenopodium Album

**தோற்றம்**

இது, சிறு செடிவகையாகும். பெரியது சிறியது என இதில் இரண்டு வகைகள் உண்டு. பெரியது சிவப்பாகவும், சிறியது வெளுப்பாகவும் இருக்கும். மகாராஷ்டிர பிரதேசத்தில் கனகவாஸ்துகம் என மற்றொருவகை உண்டென நூல்கள் கூறுகின்றன. சிவப்பு நிறமுள்ளது கௌடவாஸ்துகம் எனப்படுகிறது. இது கூதிர்ப்பருவம் அல்லது இளவேனிற் பருவத்தில் விளையும்.

**தன்மை**

இருவகைக் கீரையும் இனிப்புச்சுவையுடன் இலகுத்தன்மை கொண்டிருக்கும். மலத்தை வெளியேற்றும். சடராக்னியை வளர்க்கும். சுவை தரும். விந்துவையும் வலிமையையும் தோற்றுவிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூன்று தோஷங்கள் மண்ணீரல்வீக்கம் இரத்தபித்தம் மூலநோய் கிருமி நோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

சக்கரவர்த்திக்கீரையின் சுரசத்தை ஆட்டுப்பாலுடன் உட்கொள்ளச் செய்தால் இரத்தமூலம் தணியும்.

சக்கரவர்த்திக்கீரையை மோருடனும் மாதுளம் பழச்சாற்றுடனும் கொதிக்க வைத்து எண்ணெயில் வதக்கி உட்கொள்ளச் செய்தால் அதிசாரம் நீங்கும்.

சக்கரவர்த்திக்கீரையையும் மணித்தக்காளிக்கீரையையும் நீருடனும் எண்ணெயுடனும் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்தால் ஊருஸ்தம்பவாதம் தணியும்.

## 97. சங்க புஷ்பி

**ஸம். சங்கபுஷ்பி** Pladerade Cussate

**தோற்றம்**

சிவப்பு வெண்மை நீலம் எனும் நிறங்களைக் கொண்ட மலர்களால் இது மூவகைப்படும். ஆனால் பெரும்பாலும் வெண்ணிறமுள்ள மலர்களைக் கொண்டதே சங்கபுஷ்பி என வழங்கப்படுகிறது. வெண்ணிறமுள்ள மலர்களைக் கொண்ட செடி ஏனையவற்றைவிடச் சிறியதாகும். இதன்மலர்கள் சங்கு போல பல வளையங்களைக் கொண்டிருக்கும். இது பொதுவாக நீர் நிறைந்துள்ள நிலப்பகுதிகளில் விளையும். இந்தச் செடியின் தண்டு ஒருகை உயரம் வளரும். தண்டு நான்கு பட்டைகள் உள்ளதாகும். தண்டிலிருந்து இறக்கைகளைப் போல பரவிய பல கிளைகளைக் கொண்டிருக்கும். இலை, மெல்லியதாய் நீண்டு கூர்மையான முனையுடன் மூன்று நரம்புகள் உடையதாகிக் காம்புகள் அற்றிருக்கும்.

கிளையின் நுனியில் மலர் தோன்றும். மலர் மூன்று அடுக்குகளைக் கொண்டிருக்கும். கார்ப்பருவத்தில் பூக்கும். சங்கைப் போல் அல்லது மணியைப் போன்ற தோற்றமுள்ள மலர்களைக் கொண்ட வேறொருவகை சங்கபுஷ்பியுமுண்டு.

**தன்மை**

சங்கபுஷ்பி, மலத்தை வெளியேற்றும். அறிவையும் விந்துவையும் வளர்க்கும். ரசாயனமாகும். தாதுக்களை வலிவு பெறச்

செய்யும். துவர்ப்புச்சுவையும் உஷ்ணத்தன்மையும் கொண்டதாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூன்று தோஷங்கள் கால்கைவலி குட்டம் கிருமி நோய் நஞ்சு பூதத்தினால்தோன்றும் துன்பம் ஆகியவற்றைப் போக்கும்.

## 98. சடாமாஞ்சி

**ஸம். ஜடாமாம்ஸி Spikenard**

**தோ**

இது புதராகப்படரும் செடி வகையாகும். இமயமலைச் சாரலில் விளையும். இதன் வேரின் மேல் பஞ்சு போல சாம்பல் நிறமுள்ள பூச்சு காணப்படும். ரோஜாவைப் போன்று மலர்கள் கொத்தாகத் தோன்றும். இதன் வேர் நறுமணம் கொண்டிருக்கும். இதில் சடாமாம்ஸி சுகந்த சடாமாம்ஸி ஆகாய சடாமாம்ஸி என மூன்று வகைகள் உண்டு. முதலாவது கருநிறமும் இரண்டாவது வெண்மை நிறமும் மூன்றாவது மஞ்சள் நிறமும் கொண்டிருக்கும். ஆனால் கடைகளில் கருநிறமுள்ளதே விற்கப் படுகிறது.

**தன்மை**

சாதாரண சடாமாம்சி கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. சுகந்த சடாமாம்ஸி கசப்புச்சுவையும் குளுமைத்தன்மையும் நறுமணமும் கொண்டிருக்கும். தலைமுடியை வளர்க்கும். உடல் நிறத்தைச் சிறப்பாக்கும்.

ஆகாயமாம்ஸி குளுமைத்தன்மை கொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

சாதாரண சடாமாம்ஸி பூதத்தால் தோன்றும் துன்பங்களையும் காய்ச்சலையும் நஞ்சையும் போக்கும். சுகந்தமாம்ஸி மூன்று தோஷங்கள் பூதங்களால் தோன்றும் துன்பம் கிரகதோஷம் இரத்தபித்தம் காய்ச்சல் நஞ்சு ஆகியவற்றைப் போக்கும்.

ஆகாசமாம்ஸி விக்கம் விரணம் நரம்புச்சிலந்தி சிலந்திப் பூச்சியின் விஷம் அக்கி அம்மை முதலியவற்றைப் போக்கும்.

ஜடிலாதி மகா பைசாசிக கிருதம்—இது பைத்திய நோயைப் போக்கும். கிரகதோஷம், காலகைவலி ஆகியவற்றை நீக்கும்.

## 99. சதகுப்பை

**லம். சதபுஷ்பா** Feniculam Bulgeri

**தோற்றம்**

மை சீரகச் செடியைப்போல 4, 5 அடி உயிரம் வரை வளரும். குடைவிரித்தால் போல் காம்புகள் தோன்றும். அவற்றிடையே சிவப்பு மலர்கள் பூக்கும். ஒவ்வொரு காம்பிலும் நூற்றுக்கணக்கான மலர்கள் தோன்றும். அதனால் இதற்கு சதபுஷ்பா என்ற பெயர் வழங்கலாயிற்று. இந்தச்செடி எல்லா நிலங்களிலும் விளையும். மலர்களில் விதைகள் தோன்றும். பழுத்ததும் தனியாகப் பிரிக்கப்படும்.

**மை**

வறட்சித்தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டது. இதயத்திற்கு நன்மை தரும். கபவாதங்களைத் தணிக்கும். மலத்தைக் கட்டும். விந்துவைக் குறைக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

சூடு இருமல் வாந்தி கபம் வாதம் பெண் குறியில் தோன்றும் நோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

வசம்பு சதகுப்பை விதை ஆகியவற்றை அரைத்து எண்ணெயுடன் பக்குவம் செய்து, இளஞ்சூடாக உள்ளபோது மூல நோய்க்கு ஒற்றடம் கொடுக்கப்பயன்படுத்தவேண்டும்.

சதகுப்பை விதைகள் இந்துப்பு இவற்றை நீருடன் மைய அரைத்துச் சிறிதளவு நெய் சேர்த்துப் பூசினால் தேனீ கொட்டியதால் தோன்றும் துன்பம் நீங்கும்.

சதபுஷ்பாத்ய கிருதம்—குடல் வாதம் உடலில் மிகுந்துள்ள கொழுப்பு யானைக்கால்நோய் மண்ணீரல்வீக்கம் எனுமிவை நீங்கும்.

## 100. சதாவரி (தண்ணீர்விட்டான்கிழங்கு)

**ஸம். சதாவரி** Asparagus Racemosus

**தோற்றம்**

ல் சதாவரி, மகாசதாவரி என இரண்டு வகைகள் உண்டு. இதுகொடிவகையைச் சேர்ந்தது. பெரியதில் இலைகள் சற்று நீளமாக இருக்கும். தண்டுகளில் சிறுமுட்கள் காணப் படும். கொத்துக்கொத்தாக மலர்கள் காணப்படும். கைவிரல் பருமனுள்ள வேர்கள் பல நிலத்திற்குள் பரவி இருக்கும்.

**தன்மை**

மகாசதாவரி—இது சடராக்னியையும் வலிமையையும் வளர்க்கும். இனிப்புச்சுவையும் துணைச்சுவையாகக் கசப்பையும்கொண்டிருக்கும். மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

சிறு சதாவரி—இது மலத்தை வெளியேற்றும். இனிப்புச் சுவையும் துணைச்சுவையாகக் கசப்பையும் கொண்டிருக்கும்.

**நோய்கள்**

மூன்று தோஷங்கள் மூலநோய் க்ஷயம் இரத்த தோஷம் என்பன.

## 101. சதுரக்கள்ளி

**ஸம். ஸேஹுண்ட** Euphorbia Ligularia

**தோற்றம்**

கள்ளியில் பல வகைகள் உண்டு. பொதுவாகக் கள்ளி எனப்படுவது சதுரவடிவில் உயர்ந்து முட்கள் நிறைந்து வளரும். மேல் பகுதியில் உள்ள கிளைகள் உருண்மையாகப் பச்சை நிறங் கொண்டு காணப்படும். இதன் இலைகள் வெண்மையும் பச்சை நிறமும் கொண்டிருக்கும்.

மிக்க கூர்மையுடன் குறைந்த அளவில் முட்கள் உள்ள கள்ளியே சிறந்தது. இதை ஒடித்தால் வெண்ணிறமுள்ள பால் சுரக்கும். இரண்டு மூன்று ஆண்டுகள் கொண்ட செடியின் தண்டில் சிசிரருதுவில் கூர்மையான ஆயுதத்தால் கீறி அதன் வழியே பெருகும் பாலைச் சேகரிக்க வேண்டும்.

**தன்மை**

இது மலத்தைப் போக்கும். தீக்ஷ்ண குணமுள்ளது. செரிமானத்தைத் தூண்டும். கார்ப்புச்சுவையுள்ளது.

இதன்வேர் இலை பால் என்பன மருந்துப்பொருள்களாகப் பயன்படும்.

**தீர்க்கும் நோய்கள்**

வயிற்று வலி அஷ்டீலா எனும் கட்டி மூலநோய் வீக்கம் உடலில் மிகுந்துள்ள கொழுப்பு சோகை காய்ச்சல் மண்ணீரல் வீக்கம் நஞ்சு நீரிழிவு குட்டம் ஆகிய நோய்களைத் தணிக்கும்.

## 102. சந்தனம்

**வம். சந்தனம்** Santalum Album

**தோற்றம்**

வெண் சந்தனம் பல கிளைகள் கொண்டது. இதன்பட்டை பிளவுகள் கொண்டு இலைகள் மிக அகன்று நுனிப்பகுதி மெல்லியதாய் இருக்கும். மலர்கள் மிக்க சிறியவையாகவும் எண்ணற்றவையாகவும் இருக்கும். மொட்டு மலரும் தறுவாயில் வெளிறிய மஞ்சள் நிறத்திலும், நன்கு மலர்ந்தபின் கத்தரிப்பூ நிறத்திலும் இருக்கும். இதன் இலை மலர் பட்டை இவைகளில் மணம் இருக்காது. காய் உருண்டையாக எண்ணெய்ப் பசைகொண்டு பழுக்கும்பின் கறுத்துவிடும். இதன் வேரில் எண்ணெய் மிகுதியாக இருக்கும். சந்தனக்கட்டை நறுமணமும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும்.

சந்தனமரத்தில் பலவகைகள் உண்டு.

**தன்மை**

ஸ்ரீகண்டம் [illegible] செடியின் இலைகளைப் போன்ற இலைகளைக் கொண்டு சந்திரனைப் போல வெண்ணிறமும் மிக்க நறுமணமும் கொண்டு மலய மலையிலும் கோசீர்ஷம் எனும் மலையிலும் திலபர்ணி என்னும் ஆற்றங்கரையிலும் வளரும். இம்மரங்களை [illegible] அவை தங்கள் புகலிடமாகக் கொண்டிருக்கும்.

சம்பரசந்தனம் மிக்க நறுமணம் கொண்டு கிராத தேசத்தில் தோன்றுவதாகும். சிறிது மஞ்சள் நிறம் கொண்டு கொங்கண

நாட்டில் விளைவதாகும். பீதசந்தனம் மஞ்சள் நிறமுள்ளது. தமிழ் நாட்டில் கிடைப்பதாகும். இரத்த சந்தனம் நறுமணமும், மரத்தின் உட்பகுதியில் சிவப்பு நிறமும் கொண்டிருக்கும். இதன் பழங்கள் பவழநிறம் கொண்டிருக்கும். இது திலபர்ணி எனும் நதிப்பகுதியில் விளையும்.

பதங்க சந்தனம்—இதுவும் சிவப்பு நிறம் கொண்டதாகும்.

ஹரிசந்தனம்—இது மஞ்சள் நிறம் கொண்டது. மிக்க நறுமணமுள்ளது. கொங்கண நாட்டில் விளைவதாகும்.

பர்பரசந்தனம்—இது சிந்து நதிக்கு வடக்கில் விளையும். வெண்ணிறம் கொண்டு மணமின்றியிருக்கும்.

ஸ்ரீகண்டம்—இது கசப்புச்சுவையும் துணைச்சுவையாக இனிப்பையும் கொண்டிருக்கும். குருத்தன்மை கொண்டது. விந்துவை வளர்க்கும். இரத்தத்தைத் தூய்மைப்படுத்தும். கிருமிகளைப் போக்கும். உடலில் பூசிக் கொண்டால் காமத்தைத் தூண்டிவிடும்.

ஸ்ரீகண்டத்தில் வேட்ட சந்தனம் என்னும் வகை—இது கசப்புச் சுவையும் மிக்க குளுமைத் தன்மையும் கொண்டது. பித்தத்தைத் தணிக்கும்.

ஸ்ரீகண்டத்தில் சுக்வா என்னும் வகை - இது கசப்புச் சுவையும் குளுமைத் தன்மையும்கொண்டிருக்கும்.

இரத்த சந்தனம்—இது பித்தத்தைத் தணிக்கும்.

பதங்கசந்தனம்—இது கசப்பு இனிப்புச்சுவைகளைக் கொண்டது. விரணங்களை ஆற்றும்.

ஹரிசந்தனம்—இது பித்தத்தைத் தணிக்கும்.

பீத சந்தனம்—இது குளுமைத்தன்மை கொண்டது. இரத்த பித்தத்தைத் தணிக்கும்.

பர்பரசந்தனம்—இது குருகுணமும் வறட்சித் தன்மையும் கொண்டது. கபத்தைத் தணிக்கும்.

சம்பரசந்தனம்—கசப்புச்சுவை குளுமைத் தன்மை கொண்டது. உடற்பொலிவை மிகுதியாக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

ஸ்ரீகண்டம்—இது வாந்தி காய்ச்சல் முகநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

வேட்ட சந்தனம்—இது எரிச்சல் காய்ச்சல் வாந்தி நாவறட்சி குட்டம் இருமல் இரத்த தோஷம் ஆகியவற்றைப்போக்கும்.

சுக்வடீசந்தனம்—இது நீர்ச்சுருக்கு இரத்தபித்தம் எரிச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

இரத்தசந்தனம்—இது கண்நோய் கிருமிநோய் பூதங்களால் தோன்றும் துன்பம் ஆகியவற்றைப் போக்கும்.

பதங்க சந்தனம்-காய்ச்சல் பைத்திய நோய் நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில் கல் ஆகியவற்றைத் தணிக்கும்.

ஹரிசந்தனம்—இது விக்கம் சோர்வு ஆகியவற்றைப் போக்கும்.

பீத சந்தனம்—இது வாதகபம் குட்டம் அரிப்பு படை கிருமி ஆகியவற்றைத் தணிக்கும்.

சம்பரசந்தனம்—இது குட்டம் அரிப்பு நஞ்சு இரத்தபித்தம் வங்கு நாவறட்சி எரிச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

சந்தனச் சாற்றுடன் சுக்குத் தூளைக் கலந்து பயன்படுத்தினால் இரத்தமூலம் தணியும்.

சந்தனத்தைத் தாய்ப்பாலில் அரைத்து மூக்கிலிடுமருந்தாகப் பயன்படுத்தினால் விக்கல் தணியும்.

சந்தனத்தூளைச் சர்க்கரை தேன் இவற்றுடன் கலந்து அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் இரத்த அதிசாரம் எரிச்சல் நாவறட்சி நீரிழிவு ஆகிய நோய்கள் தணியும்.

சந்தனாதி சூரணம்—இது நீரிழிவு இருமல் இழுப்பு நாள்பட்ட காய்ச்சல் மூலநோய் காமாலை ஆகியவற்றைத் தணிக்கும்.

சந்தனத்தைலம்—இதைக்குளியலுக்குப் பயன்படுத்தினால் மலட்டுத் தன்மை நீங்கும். இரத்தபித்தம் க்ஷயம் காய்ச்சல் எரிச்சல் வியர்வை குட்டம் அரிப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

# 103. சம்பங்கி

**ஸம். சம்பக** Michelia Champaka

**தோற்றம்**

இது நறுமணமுள்ள மலர்களைக் கொண்ட செடியாகும். இதில் செடி கொடி என இரண்டு வகைகள் உண்டு. மற்றும் சம்பங்கியில் சுவேத சம்பகம் நாகசம்பகம் ஸுஸ்தான்சம்பகம் நீலசம்பகம் பூமிசம்பகம் என ஐந்து வகைகள் உண்டு எனவும் நூல்கள் கூறுகின்றன

செடியாக வளரும் சம்பங்கி மலர் மஞ்சள்நிறத்துடன் மூன்று இதழ்களைக் கொண்டிருக்கும். கொடிசம்பங்கி முட்களைக் கொண்டு சிறிது அகலமும் நீளமுமுள்ள இலைகளுடன் புதராக வளர்ந்திருக்கும். இதன் மலர்கள் நாகத்தின் படம்போல வளைந்த நான்கு அல்லது ஐந்து இதழ்களைக் கொண்டு முற்றியதும் பச்சையும் மஞ்சளும் கலந்த நிறம் கொண்டிருக்கும்.

சுல்தான் சம்பகம் எனப்படுவது வடமொழியில் 'புன்னாக விருட்சம்' எனப்படுகிறது. இது நெடுமரமாக வளரக்கூடியது. இதன் மலர் சிவந்து சிவலிங்கத்தின் மேல் நாகம் படம் விரித்திருப்பதுபோல காணப்படும். இதன் நடுவில் பாம்பு நாக்கைப் போன்ற நீண்ட சிவந்த கேசரங்கள் காணப்படும்.

சம்பங்கியில் வனசம்பக என்ற வகையொன்று நூல்களில் கூறப்பட்டுள்ளது.

**தன்மை**

வெண்சம்பங்கி—இது கசப்புக் கார்ப்புத் துவர்ப்புச் சுவைகளும் உஷ்ணவீரியமும் கொண்டது. மலத்தை வெளியேற்றும். கபவாதங்களைத் தணிக்கும்.

நாகசம்பங்கி—இது கார்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது. கண்களுக்கு நன்மை செய்யும். விரணங்களை ஆற்றும். கபவாதங்களைத் தணிக்கும்.

ஸுல்தான்சம்பங்கி (புன்னாகம்)—இது இனிப்புச்சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டது. நறுமணமுள்ளது. பித்தத்தைத் தணிக்கும்.

பூமிசம்பங்கி—இது கார்ப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது.

வனசம்பங்கி—இது கார்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது. உடலுக்கு நல்ல நிறம் தரும்.

**தீர்க்கும் நோய்கள்**

வெண்சம்பங்கி—இது அரிப்பு விரணம் வயிற்றுவலி பெரு வயிறு எனும் இவற்றைத் தணிக்கும்.

புன்னாகசம்பங்கி—இது இரத்ததோஷத்தைப் போக்கும்.

பூமிசம்பங்கி—இது விக்கம் வயிற்றுவலி விரணம் கண்ட மாலை ஆகியவற்றைத் தணிக்கும்.

வனசம்பங்கி-விரணத்தை ஆற்றும். கபவாதங்களைத் தணிக்கும்.

**பயன்**

சம்பங்கி வேரின் கஷாயத்தைப் பருகச் செய்தால் அதிமூத்திரம் நீங்கும்.

## 104. சரக்கொன்றை

**ஸம். ஆரக்வத** Cassia Fistula

**தோற்றம்**

இது காடுகளில் வளரும் மரமாகும். இதன்மலர்கள் தீயின் நாக்குப் போன்ற ஒளிகொண்டு வனலக்ஷ்மி அணிந்த தங்கநகை போல விளங்கும். இம்மரம் பூத்தபோது வனத்திற்குப் புது அழகு தரும். இதன் மலர்களின் இதழ்களும் கேசரங்களும் மென்மைத் தன்மை கொண்டவையாகும்.

**தன்மை**

இது கசப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டதாகும். இதன் பழம் இனிப்புச்சுவையும் எண்ணெய்ப்பசையும் கொண்டது. உண்டதும் விந்துவை வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும். இதன் இலைகள் கபத்தைத் தணிக்கும், உடலில் மிகுந்துள்ள கொழுப்பை நீக்கும்.

இதன் மலர்கள் இனிப்புக் கசப்புத் துவர்ப்புச் சுவைகளும் குளுமைத் தன்மையும் கொண்டவை.

**தீர்க்கும் நோய்கள்**

நீரிழிவு நீர்ச்சுருக்கு குன்மம் அரிப்பு குட்டம் மலக்கட்டு ஆகியவற்றைத் தணிக்கும்.

இதன்பழம்—காய்ச்சல் இதயநோய் வாதரத்தம் எனுமிவற்றைப் போக்கும்.

**பயன்**

சரக்கொன்றைப்பழக்கோதைத் திராட்சைச்சாறு அல்லது பாலுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் காய்ச்சல் தணியும்.

சரக்கொன்றை இலை குடசப்பாலை இலை எனுமிவற்றின் கஷாயத்தைப் பருகவும் குளியலுக்கும் பயன்படுத்தினால் குட்டம் தணியும்.

சரக்கொன்றை இலைவிழுதைப் பூச அக்கி தணியும்.

சரக்கொன்றைப் பழக்கோதைக் கருப்பஞ்சாற்றுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் காமாலை தணியும்.

சரக்கொன்றை துளிரையும் பிரப்பந்துளிரையும் கலந்து உப்பில்லாமல் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்தால் ஊருஸ் தம்பவாத நோய் தணியும்.

சரக்கொன்றைவேரின் விழுதையும் கஷாயத்தையும் கலந்து நூறுமுறை பக்குவம் செய்த நெய்யுடன் பருகச் செய்து கருங்காலிக் கஷாயத்தையும் பருகச் செய்தால் குட்டம் தணியும்.

ஆரக்வதாதி தைலம்—இது குட்டநோய் வகைகளைப் போக்கும்.

ஆரக்வதாதி கஷாயம்—இது கபம் வாந்தி குட்டம் விஷக் காய்ச்சல் அரிப்பு நீரிழிவு ஆகியவற்றைத் தணிக்கும்.

# 105. சாமந்தி

**ஸம். சதபத்ரி** Chrysntaemum Cohnriaum

## தோற்றம்

இது மலர்தரும் சிறுசெடியாகும். இது மஞ்சள் வெண்மை சிவப்பு எனும் நிறங்களின் வேற்றுமையால் மூன்றுவகை யாக இருக்கும். மற்றும் இதன் மலர்களில் சிறியது பெரியது என இருவகைஉண்டு. இதன்வேர் அக்கராகாரம்போல் இருத்த லால் அதற்குப்பதிலாக இதைப்பயன்படுத்தலாமென நூல்கள் கூறுகின்றன. சரகர் சுச்ருதர் முதலியவர்கள் இதன் பெயரைப் பொருள்களைப் பற்றி விளக்கும் போது 'கூறியிருப்பதைத் தவிர நோய்களுக்கு மருந்தாகக் கூறவில்லை. பாலகிரகசிகிச்சைக்குப் பயன்படும் என்று பாவமிசிரர் கூறியுள்ளார். வனௌஷதிசந்தி ரோதயம் எனும் நூல் இதைக் காயம்பட்டதால் தோன்றும் இரத்தப்பெருக்கைத் தடுக்கவும் விரணங்களை ஆற்றவும் பயன் படுத்தலாமெனக் கூறுகிறது. கண்களில் எரிச்சல் தோன்றிய போது கண்களின்மேல் வைத்துக் கொள்ளவும் உடல் அழற் சியைப் போக்க மலர்மாலையாக அணியலாம் என்றும் கூறப் பட்டுள்ளது. தேள் கொட்டியதால் தோன்றும் துன்பத்திற்கு மேல் பூச்சாகவும் பயன்படுத்தப்படுகிறது.

## தன்மை

கார்ப்புச்சுவையும் துணைச்சுவைகளாக இனிப்பும் கசப்பும் கொண்டிருக்கும். வாதத்தை மிகுதியாக்கும். பேதியாகச் செய்யும். சிறுநீரைப் பெருக்கும். இருதுரத்தத்தை வெளி யேற்றும். எண்ணெய்ப்பசை கொண்டது.

## தீர்க்கும் நோய்கள்

சிறுநீர்நோய்கள் நீரிழிவு இடுப்புப்பிடிப்பு கபபித்தங்கள் நாவறட்சி வாந்தி ஆகியவற்றைப் போக்கும்.

## பயன்

சாமந்தி மலர்களின் சீதகஷாயத்தைச் கொண்டு நனைத்துக் கொண்டிருந்தால் அடிபட்டதால் தோன்றும் இரத்தப்பெருக்கு ...ற்கும்.

சாமந்திமலர் சுக்கு வெண்சீரகம் எனும் இவற்றை நீருடன் மைய அரைத்துப் பூசினால் விரணங்களும் வீக்கமும் தணியும்.

## 106. சாரடை

**ஸம். புனர்நவா Trianthema Monogyma**

**தோற்றம்**

இது நிலத்தில் படரும் கொடி வகையைச் சேர்ந்தது. வெண்மை சிவப்பு நீலம் என இதில் மூன்றுவகைகள் உண்டு. கார்ப்பருவத்துவக்கத்தில் இது முளைக்கத்துவங்கும். பனிக்காலத்தில் உலர்ந்துபோகும். எனவே, இது கார்ப்பருவம் சரத்காலம் ஆகிய இவ்விரண்டு பருவங்களைத் தவிர ஏனைய பருவங்களில் கிடைக்காது. புற்களால் மறைக்கப்படாதபோது இதன் தண்டு மூன்று நான்கு கை நீளம் வளரும். வெண்சாரடையின் இலை வட்டமாகவும் மென்மையாகவும் பருமனாகவும் இருக்கும். ளம் தண்டின் கிளைகளில் சிறு ஊனைகை படர்ந்திருக்கும். மலர்கள் வெண்மையாகவும் விதைகள் சிறியவையாகவும் முக்கோணவடிவம் கொண்டும் இருக்கும்.

**தன்மை**

கார்ப்புக் கசப்புச்சுவைகள் கொண்டது. க்ஷாரத்தன்மையுள்ளது. சடராக்னியை வளர்க்கும். மலத்தை வெளியேற்றும். கபவாதங்களைத் தணிக்கும்.

வெண்சாரடை கசப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் வறட்சித் தன்மையும் கொண்டிருக்கும்.

நீலநிறமுள்ளது கசப்பு கார்ப்புச் சுவைகளும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். ரசாயனத்தன்மை கொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

சோகை வீக்கம் இநிவிஷம் கட்டு வயிற்றுநோய் இரத்த தோஷம் ஆகியவற்றைப் போக்கும். சிறப்பாக வெண்சாரடை மார்பில் அடிபடுதல் இரத்ததோஷம் ஆகியவற்றையும் சிவப்புச்சாரடை இரத்தப்பெருக்கு வீக்கம் சோகை ஆகியவற்றையும் நீலச்சாரடை இதயநோய் சோகை வீக்கம் இருமல் இளைப்பு ஆகியவற்றையும் போக்கும்.

**பயன்**

கொம்பரக்கு ரசாஞ்சனம் ஏலஅரிசி சாரடைவேர் எனு மிவற்றைத் தயிர் ஏட்டுடன் அரைத்துப் பூசினால் குட்டம் நீங்கும்.

வெண்சாரடை வேரை இட்டுக் காய்ச்சிய பாலைப் பருகச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் நீங்கும்.

வெண்சாரடை வேரின் தூளைத் தேனுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் எலிவிஷம் தணியும்.

வெண்சாரடை வேர் ஊமத்தை இவற்றை விழுதாகச் செய்து உட்கொள்ளச் செய்தால் வெறி நாய்க்கடி விஷம் நீங்கும்.

சாரணைவேர்க் கஷாயத்தைப் பருகச் செய்தால் தூக்கம் இன்றித் துன்பப்படுபவர்களுக்குத் தூக்கத்தைத் தோற்றுவிக்கும்.

சாரணைச் சாற்றில் நனைத்த பஞ்சைப் பெண் குறியில் வைத்துக் கொள்ளச் செய்தால் கடும்வலி நீங்கும்.

கறிவேப்பிலை இந்துப்பு சாரடைவேர் இவற்றைப் பக்குவம் செய்து நெய்யுடன் உட்கொள்ளச் செய்தால் குன்மத்தால் தோன்றிய வலி நீங்கும்.

புனர்நவாத்யரிஷ்டம்—இது இதயநோய் சோகை வீக்கம் மண்ணீரல்வீக்கம் நீரிழிவு குன்மம் பௌத்திரம் பெருவயிறு இருமல் இழுப்பு கிரகணி குட்டம் அரிப்பு மலக்கட்டு விக்கல் ஆகியவற்றை நீக்கும்.

புனர்நவா தைலம்—இதைப்பருகவும் எண்ணெய்க் குளியலுக்கும் பயன்படுத்தினால் காமாலை சோகை இரத்தபித்தம் நீரிழிவு இருமல் இழுப்பு மண்ணீரல்வீக்கம் பௌத்திரம் பெருவயிறு எனும் நோய்கள் நீங்கும்.

## 107. சிவதை

**ஸம். திரிவிருத்** Ipomoea Turpethum

**தோற்றம்**

இது கொடிவகையாகும். வெண்மை கருமை சிவப்பு என மூன்று வகைப்படும். மலத்தை வெளியேற்றும் பொருள்களில் சிறந்ததாகும். சிவப்புச்சிவதை வேரை முதியவர்களுக்கும் சிறுவர்களுக்கும் மென்மையான குடல் கொண்டவர்களுக்கும் பேதியாகச் செய்யப் பயன்படுத்தலாம் என நூல்கள் கூறுகின்றன. கருநிறமுள்ளது விரைந்து செயல்படக்கூடியது. தீக்ஷ்ணகு

முள்ளது. இதயத்துடிப்பையும் தொண்டைப்பிடிப்பையும் தோற்று விக்கும். கடும்குடல் கொண்டவர்களுக்குப் பயன்படுத்தத் தக்கது. இதைப்பயன்படுத்தும் முறையை நூல்கள் விளக்கி யுள்ளன. ஆழமிகப்பதிந்துள்ள இதன் வேரைக் கொண்டு அதன் மேலுள்ள பட்டையை உரித்து எடுத்து உலர்த்திப் பயன்படுத்த வேண்டும்.

**தன்மை**

வெண்சிவதை—இது துவர்ப்புச்சுவையும் துணைச்சுவையாக ப்பையும் கொண்டதாகும். வாதத்தைச் சீற்றமுறச் செய் யும்.

கருஞ்சிவதை—இது துவர்ப்பு இனிப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் கொண்டதாகும். உஷ்ணவீரியமுள்ளது.

சிவப்புநிறமுள்ள சிவதை—இது துவர்ப்புச் சுவையும் துணைச் சுவையாக இனிப்பும் வறட்சித் தன்மையும் கொண்டது. வாதத்தை வளர்க்கும். கபபித்தங்களைத் த ம.

**தீர்க்கும் நோய்கள்**

கிருமிநோய் குட்டம் அரிப்பு விரணம் சோகை வீக்கம் மண்ணீரல்வீக்கம் பெருவயிறு ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

சிவதைத்தூளைத் திராட்சைச் சாற்றுடன் உட்கொள்ளச் செய்தால் காய்ச்சல் தணியும்.

திரிபலைக்கஷாயத்தில் சிவதைத் தூளைக் கலந்து பருகச் செய்தால் மூலநோய் தணியும்.

சிவதை நேர்வாளம் புரசு எனும் இவற்றின் இலைகளை எண்ணெய் நெய்யுடன் வதக்கித் தயிர்த்தெளிவுடன் உட்கொள்ளச் செய்தால் மூலநோய் தணியும்.

## 108. சிம்சிபா

**ஸம். சிம்சபா** Dal Bergia Laji Folia

**தோற்றம்**

இது நெடுமரமாக வளரக் கூடியது. ர் அடிப்பகுதி நேராகத் தடித்து நீண்டு இருக்கும். பல கிளைகள் கொண்

டிருக்கும். மரத்தின்பட்டை பல பிளவுகள் கொண்டிருக்கும். நீண்ட காம்பில் இலைகள் பல சேர்ந்திருக்கும். இளந்தளிர் பச்சை மஞ்சள் நிறங்கொண்டு நன்கு முற்றியபொழுது மினு மினுப்புடன் தோன்றும். காய்கள் மெலிந்து நீண்டு காணப்படும். சிறுகிளைகளை உடைத்தால் உள்பகுதி வெண்மையாக இருந்து காற்றுப்பட்டவுடன் மஞ்சள் நிறம் கொள்ளும். இக்கிளைகளைப் பற்களால் கடித்தால் முதலில் வெண்மையாகவும் பின்பு மஞ்ச ளாகவும் பிறகு சிவப்பாகவும் மாறும். இதில் வெண்மை கருமை மஞ்சள் என மூன்று வகைகள் இருப்பதாகத் தெரிகிறது. கருநிறமுள்ளதே வெகுவாகப் பயன்படுகிறது. இதுமிக்க எண் ணெய்ப்பசை கொண்டு கெட்டியாகவும் பளுவாகவும் இருக்கும்.

**தன்மை**

கசப்புக் கார்ப்புச் சுவைகளும் உஷ்ண வீரியமும் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். கபவாதங்களைத் தணிக் கும். வலிமையைத் தோற்றுவிக்கும். பித்தத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது விக்கம் அக்கி அழற்சி அதிசாரம் நீரிழிவு பீனசம் அசீரணம் ஆகியவற்றைப் போக்கும்.

## 109. சிறுதேக்கு

**ஸம். பாரங்கி** Cleodendron Scrratum

**தோற்றம்**

இது காடுகளில் மரமாக வளர்வதாகும். இம்மரத்தில் கிளைகள் அதிகமாக இரா. மரத்தின் அடித்தண்டைச் சுற்றிலும் இலுப்பை இலையைப் போன்று நான்கு இலைகள் சேர்ந்து அடுக்காகக் காணப்படும். இலைக்காம்புகள் சிறியவையாக மரத்தின் அடித்தண்டில் ஒட்டிக் கொண்டிருக்கும். மலர்கள் வட்டவடிவத்துடன் வெளிறிய சிவப்பு நிறத்தில் இருக்கும். காய் கள் அழகாக நல்ல நிறம் கொண்டு நான்கு பகுதியாகப் பிரிந்து காணப்படும். ஒவ்வொரு பகுதியும் பட்டாணியின் தோற்றத் தில் காணப்படும்.

**தன்மை**

இது கார்ப்புக் கசப்புத் துவர்ப்புச் சுவைகள் வறட்சித் தன்மை இல்குகுணம் உஷ்ணவீரியம் என்பவற்றைக் கொண்டிருக் கும். சடராக்னியை வளர்க்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

குன்மம் இரத்ததோஷம் வீக்கம் இருமல் இழுப்பு பீனசம் காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

சிறுதேக்கு சுக்கு எனும் இவற்றை )ள்ள நீரு உட்கொள்ளச் செய்தால் இருமல் நீங்கும்.

சிறுதேக்குவேரை அரிசிகழுவிய நீருடன் அரைத்துப் பூசினால் கண்டமாலை தணியும்.

சிறுதேக்கு வேரை யவதானியம் ஊறவைத்த நீருடன் அரைத்துப்பூசினால் சிறுவர்களுக்குத் தோன்றும் விரைவீக்கம் நீங்கும்.

## 110. சிறு நாகப்பூ

**ஸம். நாகபுஷ்ப** Mesua Ferrea

**தோற்றம்**

சிறு நாகப்பூ மரம் மிகப் பெரியதாக வளரும். இது தோட்டங்களில் வளர்க்கப்படும். இதன் இலைகள் நீண்டு முனைப் பகுதியில் மெல்லியதாக இருக்கும். இலைகளின் பின்பகுதியில் வெண்மையான பூச்சு இருக்கும். அப்பூச்சு தொட்டால் கையில் ஒட்டிக்கொள்ளும். இலைகளின் உட்பகுதி பச்சையாக இருக்கும். இது சிறுசெடியாக இருக்கும்போது ஒரு தேரைப்போல கிளைகள் படர்ந்து காட்சிதரும். பங்குனி முடிவில் அல்லது சித்திரை முதலில் பூக்கும். இம்மலர்கள் கேசரங்கள் மிகுந்து அழகாகக் காணப் படும். மலரின் இதழ்கள் தகரச்செடிமலர் இதழ்களைப்போல் காணப்படும். இதழ்கள் சீராக இல்லாமல் ஏற்றமும் தாழ்வும் கொண்டிருக்கும். இதன் மலர்க்கிண்ணம்தான் சிறுநாகப்பூ எனும் மருந்துப் பொருளாகும். இது நறுமணம் கொண்டிருக்கும். காய்கள் பெரியவையாக இருக்கும். காய்களிலிருந்து ஒரு வகைப் பிசின் வெளிவரும்.

**தன்மை**

இது துவர்ப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். கபபித்தங்களைத் த ிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல் அரிப்பு நாவறட்சி வியர்வை வாந்தி குட்டம் அக்கி நஞ்சு ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

சிறுநாகப்பூத்தூளைச் சர்க்கரையும் வெண்ணெயும் சேர்த்துப் பயன்படுத்தினால் இரத்தமூலம் தணியும்.

சிறுநாகப்பூத்தூளையும் பசு நெய்யையும் கலந்து பசுவின் பாலுடன் மாதவிடாய்க் காலத்தில் பயன்படுத்தினால் நீண்ட ஆயுளும் வலிமையும் உள்ள குழந்தை பிறக்கும்.

## 111. சிற்றரத்தை

**ஸம். ராஸ்னா** Pluchea Lanceolata

**தோற்றம்**

இது கரிசாலங்கண்ணி இலையைப் போன்ற இலையைக் கொண்டு கற்கள் நிறைந்துள்ள நிலத்தில் விளையும். இதில் மிகவும் சிறியதானவகை ஒன்றுண்டு. அது நறுமணமுள்ளதும் ஏலச்செடி இலையைப் போன்றதுமான இலைகொண்டு மலைகளில் வளரும். ஆனால் இது தன்மையில் குறைந்ததாகும். இதில் சிற்றரத்தை பேரரத்தை என இரண்டு வகைகள் உண்டு.

**தன்மை**

சிற்றரத்தை கசப்புச்சுவையும் குருகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

விக்கம் இருமல் இழுப்பு வாதரத்தம் வாதத்தினால் தோன்றும் வலி பெருவயிறு காய்ச்சல் நஞ்சு விக்கல் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

ராஸ்னாதிதைலம்—இது மண்ணீரல்வீக்கம் விலாவலி இருமல் இழுப்பு வாதநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

ராஸ்னாதிலேகியம்—இது க்ஷயநோயைப் போக்கும்.

# 112. சிற்றாமுட்டி

ஸம். பலா Sida Cardifolia

**தோற்றம்**

இது சிறுசெடிவகையைச் சேர்ந்தது. இதில் சிற்றாமுட்டி பேராமுட்டி என இருவகை உண்டு. மேலும் நாகபலா மகாபலா ராஜபலா எனவும் மூன்று வகைகள் உண்டு என நூல்கள் கூறுகின்றன. ஆனால் மஞ்சள் சிவப்பு வண்ண மலர்களைக் கொண்ட இருவகைகள் எங்கும் காணப்படுகின்றன. இலை எண்ணெய்ப்பசையுடன் துளசி இலையைப்போல் காணப்படும். வளமான நிலப்பகுதிகளில் மூன்று நான்கு கைநீளமுள்ள செடியாக வளரும். மலர் சிறியவையாக இருக்கும். காய்கள் மிளகைப்போல் உட்பகுதியில் பல விதைகளைக் கொண்டிருக்கும்.

பேராமுட்டி என்பதும் பெரும்பாலும் நம்நாட்டில் பல இடங்களில் காணப்படுகிறது. மனிதனின் கழுத்துவரை உயரமுள்ளதாக வளரக்கூடியது. இதன் இலைகள் அகன்று சுணையுடன் கூடியிருக்கும். இலைக்காம்பு நீளமாக இருக்கும். இருவகைகளும் கார்ப்பருவத்தினிடையில் முளைக்கும். கூதிர்ப்பருவத்தில் பூக்கும். குளிர் காலத்தில் காய்த்துப் பழுக்கும். இதன் காய்கள் பன்னிரண்டு முதல் இருபதுவரை சேர்ந்து வளையம் போல் காணப்படும். மகாபலா என்பது ஸஹதேவி என்ற பெயரில் புகழ் பெற்றது. உத்தரப் பிரதேசத்தில் மிகுதியாக விளைகிறது. மஞ்சள் கத்தரிப்பூ ரோஜா நிறம் கொண்ட மலர்களை அப்பகுதியில் காணலாம். செடிகள் கிளைகள் இன்றி துளசி செடியைப்போல் காணப்படும். இலைகள் தடிமனாக மேலும் கீழும் சொரசொரப்பாக இருக்கும்.

**தன்மை**

நான்கு வகை சிற்றாமுட்டிகளும் இனிப்புச்சுவையும் எண்ணெய்ப்பசையும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். மலத்தைத் தடுக்கும். வலிமையையும் உடற்பொலிவையும் தோற்றுவிக்கும். வாதத்தைத் தணிக்கும்.

சிற்றாமுட்டி சிறப்பாக விந்துவை வளர்க்கும். இதன் பழம், துவர்ப்புச் சுவையும் துணைச்சுவையாக இனிப்பையும் குருகுணமும் சீதவீரியமும் கொண்டிருக்கும். விந்துவைக் கட்டும். வாதத்தை வளர்க்கும். பித்த கபங்களைத் தணிக்கும்.

மகாபலை—விந்துவை வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும். தாதுக்களை வளர்க்கும். வலிமையைத் தோற்றுவிக்கும்.

நாகபலை-இனிப்புச்சுவையும் புளிப்பு துவர்ப்பு கார்ப்பு கசப்புச் சுவைகளும் குருத்தன்மையும் கொண்டு உஷ்ணத்தைத் தோற்றுவிக்கும். வாதத்தைத் தணிக்கும்.

பிருகந்நாகபலை—இது துவர்ப்புச்சுவையும் துணைச்சுவையாக இனிப்பும் வறட்சித்தன்மையும் குருகுணமும் கொண்டதாகும்.

அதிபலை-இது, மலத்தைத் தடுத்து வலிமையை வளர்க்கும். உண்டதும் விந்துவை வளர்க்கும். வாதபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் பித்தம் கபம் நாவறட்சி எரிச்சல் நீரிழிவு இருமல் சோகை காமாலை குட்டம் வாதரத்தம் காய்ச்சல் கிருமி வாந்தி இழுப்பு நீர்ச்சுருக்கு இதய நோய்கள் எனுமிவற்றைப்போக்கும்.

மகாபலை-இதயநோய் மூலநோய் வீக்கம் விஷக்காய்ச்சல் -ஆகியவற்றைத் தணிக்கும்.

நாகபலை-அரிப்பு குட்டம் சிறுநீர்த்தடை அடிபடுவதால் தோன்றும் உடல் இளைப்பு ஆகியவற்றைப் போக்கும்.

அதிபலை-கிருமி நோய் எரிச்சல் நாவறட்சி நஞ்சு வாந்தி ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

சிற்றாமுட்டிவேர் மூவிலை எனும் இவற்றை இட்டுக் காய்ச்சிய பசுவின் பாலைப்பருகச் செய்தால் இரத்தமூலம் தீரும்.

சிற்றாமுட்டிவேரை மைய அரைத்துப் பூசினால் கபத்தினால் தோன்றிய அக்கியும் விரணமும் நீங்கும்.

சிற்றாமுட்டிவேரின் தூளைத் தேனில் குழைத்துப் பாலுடன் உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு நீங்கும்.

மகாபலைவேரையும் தாளகத்தையும் மைய அரைத்துப் பூசினால் முற்றிய யானைக்கால் நோய் தணியும்.

மகாபலை வேர்க் கஷாயத்தைப் பருகச் செய்தால் நீர்ச் சுருக்கு தணியும்.

அதிபலை வேர்தூளைச் சர்க்கரை சேர்த்துப்பாலுடன் உட் கொள்ளச் செய்தால் நீரிழிவு தணியும்.

## 113. சீந்தில் கொடி

**ஸம். குடூசி Tinospora Cardifolia**

**தோற்றம்**

இது கொடி கிழங்கு என இருவகைப்படும். ஒன்றின் கொடியும் மற்றொன்றின் கிழங்கும் மருத்துவத்தில் பயன்படும். ஏதேனும் மரத்தைச் சுற்றிக் கொண்டு படரும் கொடி வகையைச் சேர்ந்தது. வெகுகாலம் வளர்ந்த கொடி மனிதனின் கைப் பருமன் அளவு வளரக்கூடியது. இதன்மேல்பட்டை காகிதத்தைப் போல் மெல்லியதாக இருக்கும். இலை ஏறக்குறைய வெற் றிலையைப் போன்ற தோற்றத்தில் வழவழப்பாக இருக்கும். மலர்கள் கொத்துக்கொத்தாக மிகச்சிறியவையாய்க் காணப்படும். இக்கொடி உலர்ந்தாலும் மறுபடி தளிர்க்கும். கொடியை வெட்டினால் தண்டுக்குள் சக்கரம் போன்ற தோற்றம் காணப் படும். துண்டு துண்டாக வெட்டினாலும் அத்துண்டுகளிலிருந்து புதிய கொடிகள் முளைக்கும். கொடி வட்டங்களாகப் படர்ந்து வளரும்.

காய்க்கும் வகை சீந்தில் கொடி ஒன்றுண்டு. இதன் காய் பட்டாணியைப் போன்ற தோற்றத்தில் பழுத்தால் சிவப்பு நிறம் கொண்டு காணப்படும். மற்றொருவகையில் காய்க்காது. மலர்கள் மட்டும் பூக்கும். வைகாசி ஆனி மாதங்களில் பூக்கும். பூக்கும் போது இலைகள் பழுத்துப் பழுப்பு நிறம் கொண்டு உதிர்ந்துவிடும். பூக்கள் மட்டும் கொடிகளில் நிறைந்து காணப் படும். பிறகு புதிய இலைகள் தோன்றும்.

பூக்கள் நிறைந்துள்ள கொடியே வலிமையுள்ளதாகும்

**தன்மை**

சீந்தில்கொடி கசப்புச் சுவையும் துணைச்சுவைகளாகக் கார்ப்புத் துவர்ப்புச் சுவைகளையும் லகுகுணமும் உஷ்ணவீர்யமும் கொண்டிருக்கும். மலத்தைத் தடுக்கும். சடராக்னியை வளர்க்கும். வலிமையைத்தரும். ரசாயனமானது.

**தீர்க்கும் நோய்கள்**

மூன்று தோஷங்கள் நாவறட்சி எரிச்சல் நீரிழிவு இருமல் சோகை காமாலை குட்டம் வாதரத்தம் காய்ச்சல் கிருமி வாந்தி எனும் இவற்றைத் தணிக்கும்.

**பயன்**

சீந்தில்கொடிச்சாற்றைத் தேன் கலந்து காலையில் பருகச் செய்தால் காமாலை தணியும்.

சீந்தில் கொடிச்சாறும் பாலும் எள் எண்ணெயும் கலந்து எண்ணெய்ப் பக்குவம் செய்து எண்ணெய்க் குளியலுக்குப் பயன் படுத்தினால் வாதஇரத்தம் தணியும்.

சீந்தில்கொடிச்சாற்றைத் தேன்கலந்து பருகச் செய்தால் நீரிழிவு தணியும்.

சீந்தில்கொடி இலையின் விழுதை மோருடன் உட்கொள்ளச் செய்தால் காமாலை தணியும்.

சீந்தில்கொடிச் சாற்றை உட்கொண்டு அது செரிமானம் ஆனபின் நெய்யுடன் கஞ்சியாகச் செய்து உட்கொண்டுவந்தால் கொடிய குட்டநோயும் தணியும்.

சீந்தில்கொடிச்சாற்றை அல்லது ஆடாதொடைச்சாற்றைப் பருகச்செய்தால் வாதத்தால் தோன்றிய பெரும்பாடு நீங்கும்.

சீந்தில்கொடிச்சாற்றில் எண்ணெய் கலந்து உட்கொள்ளச் செய்தால் யானைக்கால் நோய் தணியும்.

சீந்தில்கொடியை மிளகுடன் மைய அரைத்து வெந்நீருடன் உட்கொள்ளச்செய்தால் இதயத்தில் சேர்ந்துள்ள வாதம் தணியும்.

குடூச்யாதி கிருதம்–இது குன்மம் இருமல் இழுப்பு க்ஷயம் ஆகியவற்றைத் தணிக்கும்.

மகாருத்ரகுடூசீதைலம்–இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் வாதரத்தம் குட்டம் தாடைப்பிடிப்பு நீரிழிவு காமாலை சோகை அக்கி நரம்புச்சிலந்தி பௌத்திரம் அரிப்பு முதலியவை தணியும்.

அமிர்தாகுக்குலு—இது குட்டம் வாதரத்தம் காமாலை சடராக்னிக் குறைவு பௌத்திரம் பீநசம் மண்ணீரல்வீக்கம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 114. சீரகம்

**ஸம். ஜீரகம்** Cuminum Cyminum

### தோற்றம்

இது சிறுசெடியாகும். வெண்மை மஞ்சள் கறுப்பு சிறியது பெரியது காட்டில் தோன்றுவது எனப் பலவகைப்பட்டிருக்கும். இலைகள் நீளமாகவும் கொத்துமல்லிஇலையைப்போலவும் இருக்கும். செடியில் சிறு உருண்டையான பகுதிகள் தோன்றும். அவற்றில் வெண்ணிறமுள்ள மலர்கள் தோன்றும். பூத்ததும் இந்த உருண்டையான முடிச்சுகள் பிளந்து அவற்றுள்ளிருந்து இரண்டு அங்குலம் நீளமுள்ள கேசரங்களைப்போன்ற பகுதிகள் காணப்படும். அப்பகுதிகளில் பைகளைப்போல் மூன்று அங்குல நீளமுள்ள பழங்கள் தோன்றும். அவற்றுக்குள் விதைகள் மிருந்கும். இவ்விதைகள் சீரகம் எனப்படும்.

### தன்மை

மூவகைச்சீரகங்களும் கார்ப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். மலத்தைத் தடுக்கும். அறிவாற்றலை வளர்க்கும். வலிமையைத் தரும். கண்களுக்கு நலமானது. பித்தத்தை வளர்க்கும். கருப்பையைத் தூய்மைபடுத்தும். கபத்தைத் தணிக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

காய்ச்சல் வாதவிகாரம் குன்மம் வாந்தி அதிசாரம் ஆகியவற்றைத் தணிக்கும்.

மஞ்சள்சீரகம்—இது குன்மம் அதிசாரம் கிரஹணி கிருமி நோய் ஆகியவற்றைப் போக்கும்.

கருஞ்சீரகம்—சிறப்பாக வீக்கம் நாள்பட்ட காய்ச்சல் தலைநோய் குட்டம் ஆகியவற்றைப் போக்கும்.

### பயன்

வெண் சீரகத்தை வெல்லத்துடன் உட்கொள்ளச்செய்தால் விஷக்காய்ச்சல் சடராக்னிக்குறைவு வாதநோய்கள் ஆகியவை தணியும்.

சீரகத்தையும் இந்துப்பையும் மைய அரைத்து சிறிதளவு நெய்விட்டு சூடாக்கித் தேள் கொட்டிய இடத்தில் பூசினால் நஞ்சு இறங்கும்.

சீரகத்தில் வெல்லம் கலந்து அல்லது சீரகவிழுதுடன் தேன் கலந்து மோரைத் துணைமருந்தாக உட்கொள்ளச்செய்து உடல் வியர்க்கும்வரை வெயிலில் இருக்கச் செய்தால் காய்ச்சல் தணியும்.

சீரகாதி சூரணம்—இது கிரஹணி அதிசாரம் காமாலை சோகை சடராக்னிக் குறைவு ஆகியவற்றைத் தணிக்கும்.

சீரககிருதம்—எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் நெருப்பால் சுட்ட விரணம நீங்கும்.

சீரகாத்யரிஷ்டம்—கிரகணி அதிஸாரம் சடராக்னி மாறுபாடு பிள்ளைப் பேற்றினால் தோன்றும் நோய்கள் நீங்கும்.

## 115. சுக்காங்கீரை

**ஸம். சுத்ரிகா** Rumex Vesicarius

**தோற்றம்**

கீரை வகைகளில் இது மிகவும் சுவையுள்ளது.

**தன்மை**

புளிப்புச்சுவையும் சிறிதளவு இனிப்புச்சுவையும் கொண்டிருக்கும். எளிதில் செரிமானமடையும். சுவையூட்டும். கப பித்தங்களைத் தணிக்கும். மேலும் வாதத்தையும் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வயிற்றுவலி சடராக்னிக்குறைவு இதயநோய் மலக்கட்டு நாவறட்சி வாந்தி ஆகியவற்றைத் தணிக்கும்.

## 116. சுண்டை

**ஸம். வல்லீகண்டகாரிக** Solanum Porvum

**தோற்றம்**

கண்டங்கத்தரி வகையைச் சேர்ந்தது. முள் நிறைந்த செடியாகும். வெண்மை நிறமுள்ள சிறியமலர்களைக் கொண்டது. காய்கள் கொத்துக் கொத்தாகக் காய்க்கும்.

**தன்மை**

கசப்பு கார்ப்புச்சுவைகள் வறட்சித்தன்மை உஷ்ண வீரியம் எனுமிவற்றைக் கொண்டது. சுவையூட்டும். சடராக்னியை வளர்க்கும். இதயத்திற்கு நன்மைதரும். வாதகபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது குன்மம் மண்ணீரல் வீக்கம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

இதன் பழங்களை ஆமணக்கு எண்ணெயில் இட்டு நன்கு காய்ச்சி சிறு குழந்தைகளுக்குப் பயன்படுத்தினால் கபத்தால் ஆகும் பேதி நிற்கும். இது மருத்துவத்தில் அதிகமாகப் பயன் படுத்தப்படுவதில்லை.

## 117. சூரியகாந்தி

**ஸம். சுவர்ச்சலா** Cleme Viscosa

**தோற்றம்**

இதில் சிறியது பெரியது என இரண்டுவகைகள் உண்டு. பெரியது ப்ரும்மஸுவர்சலா எனப்படும். இதன் இலைகள் அகன்று இருக்கும். மலர்கள் பல இதழ்களைக் கொண்டு தாமரையைப் போல அகன்ற தோற்றம் கொண்டிருக்கும். மலர்களின் நிறம் மஞ்சளாகும். வெண்மை நிறமுள்ளதும் உண்டு. செடிமுனையில் மலர்கள் தோன்றி சூரியனை நோக்கியிருக்கும். நண்பகலில் சூரியனை நோக்கி நிமிர்ந்தும் மாலையில் மேற்குத்திசையை நோக்கிச் சாய்ந்துமிருக்கும். அதனால் தான் இதற்கு சூரியாவர்த்தா சூரியகாந்தி என்ற பெயர்கள் தோன்றின. இது கார்பருவத்தில் மட்டும் பிழைத்திருக்கும் செடியாகும். ஒருகை நீளம் அல்லது அதற்கு மேல் சிறிது உயரமாக வளரக்கூடிய செடியாகும். கிளைகள் மென்மையானவை. இலைகள் உரோமங்களுடன் கூடியிருக்கும். சிறிய இலைகளுக்குக் காம்பு இருக்காது. பெரிய இலைகள் நீண்ட காம்புகளுடன் கூடியிருக்கும். இலைகள் பலதோற்றங்கள் கொண்டிருக்கும். விதைகள் வெந்தயம் போன்ற தோற்றத்தில் நறுமணம் கொண்டிருக்கும். இதன்விதைகளைப் பருப்பு காய் முதலிய உணவுப்பண்டங்களுக்கு நறுமணம் தருவதற்காகத் தாளிக்கப்பயன்படுத்துவதும் உண்டு. இளம் கிளைகளும் இலைகளும் இனிப்பும் கார்ப்புமான சுவைகளைக் கொண்டிருக்கும்.

கார்ப்புச்சுவையும் வறட்சித் தன்மையும் குரு குணமும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். க்ஷாரத்தன்மை கொண்டது. பித்தத்தைச் சிறிது வளர்க்கும். சிறுநீரைப் பெருக்கும். பிரம்மசுவர்ச்சலா என்பது கசப்புச்சுவையும் துணைச் சுவையாகத் துவர்ப்பும் கார்ப்புச் சுவையும் உஷ்ண வீரியமும் வறட்சித் தன்மையும் கொண்டிருக்கும். கபபித்தங்களைத் ...க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பூத கிரகங்களின் தோஷத்தைப் போக்கும். பிரும்மசுவர்ச்சலா இரத்தபித்தம் இருமல் இழுப்பு சுவையின்மை காய்ச்சல் குட்டம் நீரிழிவு இரத்ததோஷம் பெண்குறிவலி கிருமிநோய் சோகை ஆகியவற்றைத் தீர்க்கும்.

**பயன்**

சூரிய காந்திச் செடியின் உலர்ந்த இலைகளைத் தயிரையும் மாதுளம் பழச்சாற்றையும் சேர்த்துப்பக்குவம் செய்து அதில் எண்ணெய் கலந்து உட்கொள்ளச் செய்தால் அதிசாரம் தணியும்.

சூரிய காந்தி இலைத்தூளைப் பால் நெய் திரிகடுகத்தூள் ஆகியவற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்து சம்பா அரிசிச் சோற்றை உண்ணச் செய்தால் வாதபித்தத்தால் தோன்றிய இழுப்பு நீங்கும்.

சூரிய காந்திவேரின் விழுதை அரிசிகழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் பெண்குறியில் தோன்றும் எரிச்சல் நீங்கும்.

சூரியகாந்தி இலையைக் கசக்கி முகர்ந்தால் தேள்விஷம் நீங்கும். சூரியகாந்திச் செடியை வேருடன் எடுத்துப் பசுவின் பாலுடன் மைய அரைத்துப் பத்து நாட்கள் உட்கொள்ளச் செய்தால் கொடிய வலியுடன் கூடிய சிறு நீர்ப்பையில் தோன்றிய கல் எனும் நோய் தணியும்.

சூரியவர்த்தாதிபிருஹத்கிங்கிணீதைலம் — இது காதில் சீழ் வடிதல் காதில் அரிப்பு செவிட்டுத் தன்மை கண்நோய்கள் தலைநோய்கள் எனும் இவற்றைப் போக்கும்.

## 118. செந்தூரகம்

குஸும்ப Carthamvs Tinctorious

**தோற்றம்**

இது பெரியது சிறியது காட்டில் தோன்றுவது என மூன்று ககளாகும். இதன் காய்களின் மேலும் முட்கள் இருக்கும். ள் மஞ்சள் கலந்த சிவப்பு நிறமும் எண்ணெய்ப் பசையும் கொண்டிருக்கும். இவ்விதைகளை ஆடைகளுக்குச் சாயம் ஏற்றப்பயன்படுத்துவதுண்டு.

வாதத்தை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும். பக்குவ மடையும் போது கார்ப்புச்சுவை கொள்ளும். சடராக்னியை வளர்க்கும்.

லகள் இனிப்புச் சுவையும் துணைச்சுவையாகக் கார்ப்பும் வீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். களுக்கு இதமானது. சிறுநீர் பைங்களிலுள்ள தோஷங் க ப் போக்கும். வறட்சித் தன்மை கொண்டது. கபத்தைத் கும். பித்தத்தை வளர்க்கும். மூலநோயைத் தோற்று ம். உடலில் பிறந்துள்ள கொழுப்பைத் தணிக்கும்.

இதன் மலர் இனிப்புச் சுவையும் குளிர்ந்த தன்மையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். தலைமுடிக்கு கருநிறத்தைத் தோற்றுவிக்கும். கபத்தைத் தணிக்கும். பித்தத்தை வளர்க்கும். விதைகள் கசப்புச் சுவையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். எண்ணெய் பக்குவமடையும் போது கார்ப்புச்சுவை கொள்ளும். மூன்று தோஷங்களையும் வளர்க்கும். உடல் வலிமையைக் குறைக்கும்.

**பயன்**

கக்கரி வெள்ளரி விதைகளுடன் செந்தூரக விதைகளைத் தூளாக்கித் திராட்சை சாற்றுடன் உட்கொள்ளச் செய்தால் நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில்கல் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 119. செம்பருத்தி

ஸம். ஜபா Hibiscus Rosa Sinensis

**தோற்றம்**

இது உயர்ந்து வளரும் மரமாகும். வெண்மை சிவப்பு மஞ்சள் என மலர்களின் நிறங்களைக் கொண்டு பலவகை

களாகும். இலைகள் வட்டவடிவத்துடன் முனையில் கூரியதாக இருக்கும். மலரைக் கொய்தால் காம்பிலிருந்து கொழகொழப்புள்ள நீர் சுரக்கும். காம்புகள் நீளமாகவும் சொரசொரப்புடனும் காணப்படும்.

**தன்மை**

ிப்புச் சுவையும் எண்ணெய்ப்பசையும் குளுமைத் தன்மையும் கொண்டது. உடலைச் செழிப்புறச் செய்யும். மலத்தைத் தடுக்கும். தலை முடியை வளர்க்கும். வாந்தியையும் கிருமிகளையும் தோற்றுவிக்கும். கருவை வளர்க்கும்.

ன் மலர் கார்ப்புச்சுவையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். கிருமிகளைத் தோற்றுவிக்கும். மலர்களை நெய்யில் வதக்கி உட்கொள்ளச்செய்தால் பெண்களுக்கு மாதவிடாய் ஏற்படும்.

**தீர்க்கும் நோய்கள்**

பூச்சிகளால் முடி உதிர்தல் (இந்திரலுப்தம்) எரிச்சல் நீரிழிவு மூலநோய் பெரும்பாடு தாதுக்களின் தோஷம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

செம்பருத்தி மலரின் விழுதைக் கஞ்சியாக்கிப் பயன்படுத்தச் செய்தால் பெண்களுக்கு மாதவிடாய் சீராகும்.

கருநிறமுள்ள பசுவின் சிறுநீருடன் செம்பருத்தி மலரை மைய அரைத்துத் தலையில் பூசினால் இந்திரலுப்தம் எனும் நோய் நீங்கும்.

செம்பருத்தி மொட்டுகள் பத்து அல்லது பன்னிரண்டு கொண்டு பாலுடன் மைய அரைத்து நாள்தோறும் பயன்படுத்தச் செய்து பாலுணவு உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு நீங்கும்.

பிருகன்மந்தாரத்தைலம்—இது குடல் வாதத்தைத் தணிக்கும்.

## 120. செருப்புள்ளடி

**ஸம். ஹம்ஸபதி** Adianjum Iunulatvm

### தோற்றம்

இது சிறுகொடி வகையைச் சேர்ந்தது. ஒரு காலத்தில் நீர் நிரம்பி இருந்து உலர்ந்துபோன நிலத்தில் தோன்றும். அன்னத்தின் அடியைப் போன்றஇலைகளைக் கொண்டது. இவ்விலைகள் மூன்று மூன்றாகச் சேர்ந்திருக்கும். மலர்கள் மஞ்சள் நிறத்துடன் மிகச் சிறியவையாக இருக்கும். இலைகள் சொர சொரப்புடன் கூடியிருக்கும். இது சிறுநீரைச்சார்ந்த நோய்களைத் தீர்க்கும். பாதரஸத்தைக் கட்ட வல்லது எனக் கூறப்படுகிறது.

### தன்மை

கார்ப்புச்சுவையும் உஷ்ண வீரியமும் கொண்டது. ரசாயனமானது

### தீர்க்கும் நோய்கள்

இது கால்கைவலி மயக்கம் ஆகியவற்றைப் போக்கும்

### பயன்

செருப்புள்ளடி வேரையும் நெருஞ்சில் வேரையும் கஷாயம் காய்ச்சி அதில் மிதமியாக எண்ணெயும் நெய்யும் கலந்து பாகஞ் செய்தால் கொடுமையான சிறு நீர்க்கட்டு நீங்கும்.

செருப்புள்ளடி வேர்த்தூளை உலர்ந்து மாவுடன் கலந்து வடை போல் செய்து உட்கொள்ளச் செய்தால் யானைக்கால் நோயில் தோன்றும் காய்ச்சல் தணியும்.

## 121. செவியம்

**ஸம். சவ்யம்** Chavica Rox Burghi

### தோற்றம்

இது பெருமரங்களைச்சார்ந்து வளரும். பல நாள் கொடியாக இருந்து பிறகு மரந்தர் கையளவு பருமனாகப் பெருத்து விடும். முடிச்சுள்ள இடங்களைச் சிறிது கசக்கினாலும் இரண்டாகப் பிளந்துவிடும். இதன் காய்கள்தாம் யானைத் திப்பிலி எனப்படும்.

வெற்றிலையைப் போல நரம்புகளுடன் கூடியிருக்கும். காம்புகள் வெற்றிலையின் காம்புகளைவிடக் குறுகியவையாக இருக்கும். திப்பிலியின் பழங்களைவிட இதன் பழங்கள் பெரியவையாகப் பருத்து இருக்கும். இக்கொடியின் இலை காம்பு கிளை எல்லாம் தீக்ஷ்ண குணம் கொண்டிருக்கும். வங்கநாட்டில் சிலர் கிழங்கைப் போல பருத்துள்ள இதன் வேரை உணவுடன் கலந்து பயன்படுத்துகின்றனர். உஷ்ணப் பிரதேசமான கூச்பிகார் அஸ்ஸாம் வங்கம் சிங்கப்பூர் எனும் நாடுகளில் மிகுதியாக வளர்கிறது.

**தன்மை**

வாதத்தை அனுலோமமாகச் செய்யும். தீக்ஷ்ண குணமுள்ளது.

**தீர்க்கும் நோய்கள்**

வயிற்று உப்புசம் மற்றும் சிறுநீரக நோய்களுக்குப் பயன்படும்.

## 122. சேராங்கொட்டை

**ஸம். பல்லாதக** Semecarpus Anacardium

**தோற்றம்**

இது பெரும் மரமாக வளரக்கூடியது. இம்மரத்தின் தண்டு நேராக வளரும். பட்டை சாம்பல் நிறம் கொண்டிருக்கும். கிளைகள் சிறியவையாக இருக்கும். சிறு கிளைகளின் முனைகளில் இலைகள் நீண்டு அகலம் கொண்டு காணப்படும். இலையின் முனைகள் வட்டமாகவும் அடிப்பகுதி வெண்ணிறமுள்ளதாகவும் இருக்கும். மலர்கள் நீண்ட காம்புகளுடன் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். காய்கள் மனித இதய வடிவத்தில் மினுமினுப்புள்ள கருநிறம் கொண்டு உட்பகுதியில் ஒருவகை எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். காய்கள் பழுக்காத நிலையில் பாலைப்போல் வெண்ணிறமாகவும் முதிர்ந்தபின் கருநிறமும் கொள்ளும்

காய்களின் காம்பின் முனைகள் சதைப்பகுதி மிகக் கொண்டு காய்களைப் போலவே இருந்து பக்குவமான பின் மஞ்சள் நிறம் கொள்ளும். காய்கள் தோன்றும் சிறுகிளைகள் காய்களின் காம்புகள் எனப்படும். இதன் கட்டையில் சாறுமிகுதியாக இருக்கும். ஆகையால் இதன் கட்டைகளை ஒடிப்பது எளிதல்ல. இதன் மலர்களின் கேசரங்கள் மயக்கத்தைத் தோற்றுவிக்கும். மேலே பட்டால் வீக்கத்தையும் தினவையும் உண்டாக்கும். இந்த

மரம் பூத்திருக்கும் போது அதன் நிழலில் படுத்தாலும் அதன் மலர்களின் மகரந்தத்துகள்கள் நிறைந்த காற்று மேலேபட்டாலும் முகம் கால் கைகள் வீங்கும். கார்ப்பருவத்தில் இம்மரம் பூக்கும். கூதிர்ப் பருவத்தில் காய்த்துப் பழுக்கும்.

சேராங் கொட்டை நன்கு முதிர்ந்தபோது துவர்ப்புச்சுவையும் பக்குவமடையும் போது இனிப்புச் சுவையும் கொள்ளும். இலேசானது. சீரணவலிமையை வளர்க்கும் எண்ணெய்ப்பசை கொண்டது. தீக்ஷ்ண குணமும் உஷ்ணவீரியமும் கொண்டது. மலத்தைப் பிரிப்பது. அறிவுத்திறனை வளர்க்கும். சடராக்னியைத்தூண்டும்.

சேராங் கொட்டையின் சாறு இனிப்புச் சுவை கொண்டது. விந்துவை வளர்க்கும். உடலைச் செழிக்கச் செய்யும். இதன் சிறுகிளைகள் அல்லது காம்புகள் இனிமையாக இருக்கும். தலை முடிகளுக்கு நன்மை தரும். சடராக்னியை வளர்க்கும்.

உத்திரப் பிரதேசத்தில் ஆக்ரா அயோத்தி மற்றும் பீஹார் முதலிய பகுதிகளில் உள்ள காடுகளிலும் வங்க தேசத்தில் ஹஜாரிபாக் விரபுரம் முதலிய பகுதிகளிலும் மிகுதியாகக் காணப்படுகிறது.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் வாதம் விரணம் வயிற்றுநோய் குட்டம் மூலநோய் கிரஹணி குன்மம் காய்ச்சல் வெண்குட்டம் கிருமிநோய் முதலியவற்றைப்போக்கும்.

## 123. சோம்பு

**ஸம். மதுரிகா** Pimpinella Anism

**தோற்றம்**

சோம்பு சீரகத்தின் வகையாகும். பெருஞ்சீரகம் எனப்படும். சிறு செடியாக இருக்கும். வெண்ணிறப் பூக்கள் தோன்றும். பிறகு விதைகள் உண்டாகும்.

**தன்மை**

தீர்க்கும் நோய்கள் எனும் அனைத்தும் சீரகத்திற்குப் போன்றவையேயாகும். (சீரகம்—பார்க்க)

## 124. ஞாழல்

**ஸம். பிரியங்கு Prunus Mahaleb**

**தோற்றம்**

ஞாழல் மரவகையைச் சேர்ந்தது. இதன் காய் நறுமணம் கொண்டிருக்கும். காய்களின் மேல்தோல் சுருக்கங்களுடன் கூடியிருக்கும். அதை உடைத்தால் சுருங்கி நீண்ட கருநிறமுள்ள விதை வெளிவரும். இப்பொழுது கிடைக்கும் காய்களில் நறுமணம் இல்லை. மலர்கள்கூட மணமின்றியே காணப்படுகின்றன. இதில் கொடி இனத்தைச் சார்ந்த வகை ஒன்று உண்டு. இது பல்லிகைக் கொடிபோல் நிலத்தில் வளர்ந்து படர்ந்திருக்கும். இலைகள் ஒன்றுக்கொன்று எதிர் எதிராக இருக்கும். இலைகளின் மேற்பகுதி இளம்பச்சை நிறமும் அடிப்பகுதி சற்று வெண்மை நிறம் கலந்தபச்சை நிறமும் கொண்டிருக்கும். ஆடிமாதம் முடிந்து ஆவணி துவங்கும்போது இலைக் காம்புகளின் அடிப்பகுதியில் கொத்துக் கொத்தாக மலர்கள் தோன்றும். மலர்கள் கத்தரிப்பூ நிறம் கொண்டிருக்கும். இளைகள் வளர வளர ஒவ்வொரு காம்பிலும் பூங்கொத்துகள் தோன்றும். முதலில் தோன்றிய மலர்கள் உதிர்ந்துபோகும். பிறகு உருண்டையாகக் காய்கள் தோன்றும். இதன் கொடிகள் கார்த்திகை மாதத்திற்குள் கொத்துக்கொத்தாகப் பூத்துக் காணப்படும். கார்த்திகை மாதத்தின் கடைசியிலும் மார்கழியின் முதலிலும் காய்கள் முதிரும்போது மிக்கவெண்மை அடைந்து வெண்மை நிறம்கொண்டு மினு மினுப்புடன் கண்களுக்கு அழகு விருந்தாகத் தோன்றும். அப்பொழுது முதிர்ந்த காய்களுக்கு அருகில் இருக்கும் இலைகள் உதிர்ந்துவிடும். அந்நிலையில் செடி மிகவும் அழகாகக் காணப்படும். இதில் நறுமணம் மிக்கதான 'கந்தபிரியங்கு' என்னும் வகை ஒன்றுண்டு.

**தன்மை**

ஞாழல் குளுமைத்தன்மையும் துவர்ப்பும் கசப்பும் கலந்த சுவை கொண்டிருக்கும். இதன் பழம் இனிப்புச்சுவை வறட்சித் தன்மை சீதவீரியம் கொண்டிருக்கும். குருத்தன்மையுடையதாகும். மலச்சிக்கலைத் தோற்றுவிக்கும். உடல் வலிமையை வளர்க்கும். வயிற்று உப்புசத்தைத் தோற்றுவிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் பித்தம் இரத்தப்போக்கு இரத்தாதிசாரம் உடலின் தோன்றும் நாற்றம் மிக்க வியர்த்தல் எரிச்சல் காய்ச்சல்

குன்மம் நாவறட்சி நஞ்சு நீரிழிவு ஆகிய நோய்களைப் போக்கும்.

கந்தபிரியங்கு வாதம் மயக்கம் எரிச்சல் இரத்தபித்தம் காய்ச்சல் குட்டம் நாவறட்சி குன்மம் நஞ்சு உடலில் கொழுப்பு மிகுதல் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

ஞாழல்பூவின் தூளைத்தேனில் குழைத்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

கந்தபிரியங்குவை மைய அரைத்துச் சிறிது நெய் சேர்த்துப் பூசினால் கபத்தினால் தோன்றிய அக்கி தணியும்.

ஞாழல் பட்டையை அரிசி கழுவிய நீரில் அரைத்து வெந்நீருடன் காலை வேளையில் உட்கொள்ளச் செய்து வாந்தி எடுக்கச்செய்தால் இடுவிஷம் நீங்கும்.

பிரியங்குவாதிதைலம்-இது பெரும்பாடு பெண்குறி நோய் கிரகணி அதிசாரம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 125. தனுமரம்

**வை. தனுவிருக்ஷம்** Grewia Elastica

**தோற்றம்**

தனுமரம் காடுகளில் பெரிய மரமாக வளரக் கூடியது. மிக்க உறுதியானது. வீடுகட்டுவதற்குப் பயன்படும். இலைகள் இலந்தை இலையின் தோற்றத்தில் ஆனால் சற்றுப்பெரியவையாக இருக்கும்.

**தன்மை**

துவர்ப்புச்சுவை கொண்டது. உடலுக்கு வலிமை அளிக்கும். எலும்புகளை இணைக்கும்

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் கபம் பித்தம் இரத்த தோஷம் இருமல் இதய நோய்கள் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 126. தர்ப்பை

**ஸம். தர்பம்** Andro pogon Nardaides

**தோற்றம்**

இது மணற் பாங்கான நிலத்தில் காடுகளில் விளையும். நீண்ட புல்லைப்போல் தோன்றுவதை இதன் இலைகளாகக் கொள்ள வேண்டும். முனைகள் ஊசியைப்போல் கூர்மையாக இருக்கும். தர்பையில் பலவகைகள் உண்டு. சிறப்பாகக் குட்டையானது நீளமானது என இருவகைகள் உண்டு.

**தன்மை**

இனிப்பு துவர்ப்பு குளுமைத் தன்மை கொண்டிருக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில் கல் எரிச்சல் இரத்ததோஷம் க்ஷயம் கண்நோய் ஆகியவற்றைத் தீர்க்கும்.

**பயன்**

தர்ப்பை வேரை அரிசி கழுவிய நீருடன் மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு நீங்கும். தர்ப்பை வேரையும் சித்தாமுட்டி வேரையும் அரிசி கழுவிய நீருடன் அரைத்துப் பருகச் செய்தால் மூலநோயில் தோன்றும் இரத்தப்பெருக்கு தணியும்.

குஷாவலேகியம்—இது நீரிழிவு நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில் கல் சுவையின்மை ஆகியவற்றைத் தணிக்கும்.

## 127. தாமரை

**ஸம். கமலம்** Nelumvium Speciosum

**தோற்றம்**

இது சேறு நிறைந்த நீர்நிலைகளில் தோன்றும். இதன் இலைகள் வட்ட வடிவம் கொண்டு தடித்துப் பெரியவையாக இருக்கும். இதன் மேற்பகுதி எண்ணெய்ப் பசையுடன் நீலநிறம் கலந்த பச்சை நிறம் கொண்டிருக்கும். இலைகளின் மேல் நீர் ஒட்டாமல் முத்துபோல் அசைந்து கொண்டிருக்கும். இலையின் அடியில் தண்டு நீண்ட குழாய்போல் நிலத்தடிவரை நீண்டு வளர்ந்திருக்கும். அதை ஒடித்தால் குழாய் போன்ற துளைகள் காணப்படும். முதுவேனிற் பருவத்தில் பூக்கும். பெரும்பாலும் இதழ்கள் 25 முதல் 45 வரையில் இருக்கும். மலரின்

நடுவில் பீடம் போல் பொகுட்டு இருக்கும். இது முதிர்ந்து கொட்டை எனப்படும். இதில் விதைகள் 15 வரை இருக்கும். இவை நன்கு முற்றிய பிறகு கருநிறம் கொள்ளும்.

இதில் வெள்ளை சிவப்பு நிறம் கொண்டவையும் உண்டு. ஆம்பல் எனப்படுவது இரவில் சந்திரனைப் பார்த்து மலருவது.

**தன்மை**

தாமரை வகையைச் சேர்ந்த மலர்கள் அனைத்தும் குளிர்ச்சித் தன்மை உடையவை. உடல் நிறத்தை செம்மைப் படுத்தும். இனிப்புச் சுவை கொண்டது. கபபித்தங்களைத் தணிக்கும். வெண்ணிறமுள்ளது குணங்களில் சிறந்தது.

சிவப்பும் நீலமும் தன்மைகளில் குறைந்தவையாகும். மலர் கிழங்குகளுடன் கூடிய தண்டு 'பத்மினி' எனப்படும். இது துவர்ப்புச் சுவையும் துணைச்சுவையாக உவர்ப்பும் கொண்டிருக்கும். குருகுணமும் வறட்சியும் குளுமைத்தன்மையும் கொண்டிருக்கும். வாதத்தை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வெண்தாமரை கண்களுக்கு இதம் தரும். செந்தாமரை மூன்று தோஷங்களையும் இரத்ததோஷத்தையும் போக்கும். கிருமிநோய் வாந்தி சோர்வு முதலியவற்றைப் போக்கும். தாமரைக் கேசரங்கள் நாவறட்சி எரிச்சல் இரத்தமூலம் விக்கம் நஞ்சு ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

தாமரை அல்லது ஆம்பலின் கஷாயம் நீர்ச்சுருக்கைத் தணிக்கும். தாமரைக் கிழங்கை எண்ணெயில் வதக்கிப் பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்த்தடை நீங்கும். தாமரையை விழுதாகச் செய்து ஆட்டுப்பாலுடன் உட்கொள்ளச் செய்தால் கண்நோய் தணியும். தாமரை ஆம்பல் எனும் இவற்றின் இலைகளைத் தூளாக்கித் தேனும் சர்க்கரையும் கலந்து பாலுடன் உட்கொள்ளச் செய்தால் கருச்சிதைவுதணியும். ஆம்பல் கிழங்கை நசுக்கிப் பாலில் வைத்துமூடி ஒரு மாதம் நிலத்துக்குள் புதைத்து வைத்து எடுத்துத் தலையில் பூசிக் கொள்ளச்செய்தால் நரை நீங்கும்.

பஞ்சாரவிந்தகிருதம்—இது விந்துவையும் உடல் ஆற்றலையும் அறிவையும் வளர்க்கும்.

## 128. தாளிசபத்திரி

**ஸம். தாளிசபத்ரம்** Abieswebbiana

### தோற்றம்

இது நெடுமரமாகும். என்றும் பசுமை கொண்டிருக்கும். இலைகள் உதிர்வதில்லை. இதன் இலை அரளி இலையைவிட மெல்லியதாக இருக்கும். கிளைகளிலிருந்து நான்கு பக்கங்களிலும் இலைகள் பரவியிருக்கும். காம்பிலிருந்து நுனிவரை இலைகளின் கீழ்ப் பகுதியில் நீண்ட நரம்புகள் காணப்படும். இலையின் நடுப்பகுதி எண்ணெய்ப் பசைகொண்டு மினுமினுப்புடன் இருக்கும். இதன் விதைகள் கீழாநெல்லி விதைகளைப்போல் இருக்கும். மிக்க கசப்புச் சுவை கொண்டிருக்கும். இம்மரங்கள் குளிர் தேசத்தில் வளரக் கூடியவையாகும்.

### தன்மை

கசப்பும் இனிப்புச் சுவையும் கொண்டது. நறுமணம் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். இலேசானது. தீக்ஷ்ண குணமும் உஷ்ணவீர்யமும் கொண்டது.

### தீர்க்கும் நோய்கள்

இருமல் இழுப்பு சுவையின்மை குன்மம் சடராக்னி குறைவு க்ஷயம் ஆகியவற்றைப் போக்கும்.

### பயன்

தாளிசபத்திரித்தூளை ஆடாதொடை சாற்றுடன் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்த பித்தம் இழுப்பு கப பித்தம் ஆகியவை தணியும்.

தாளிசாதிசூரணம்-இது க்ஷயம் இருமல் இழுப்பு சுவையின்மை மண்ணீரல்வீக்கம் விலாவலி சோகை காய்ச்சல் அதிசாரம் ஆகியவற்றைத் தணிக்கும்.

தாளிசாதிவடகம்—வாந்தி கிரகணி விலாவலி இதயவலி காய்ச்சல் வீக்கம் சோகை குன்மம் பீநசம் இருமல் இழுப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

# 129. தான்றி

**ஸம். விபீதக Terminalia Bellerica**

## தோற்றம்

தான்றிமரம் சுமாராக 100 முதல் 150 அடி வரை வளரக்கூடியது. காடுகளிலும் மலைப் பாங்கான இடங்களிலும் மிகுதியாகக் காணப்படும். இந்த மரத்தின் நிழல் உடல் நலத்தை வளர்க்கும். எனவே வங்க நாட்டில் தோட்டங்களில் இதை வளர்க்கின்றனர். இதன் இலை ஆலஇலையைப்போன்ற உருவம் கொண்டு சிறியதாகக் காணப்படும். இதன் பழங்கள் உருண்டை வடிவத்தில் சிறியவையாகவும் முட்டை வடிவத்தில் பெரியவையாகவும் இரண்டு வகைகளில் கிடைக்கின்றன.

## தன்மை

துவர்ப்பும் இனிப்புமான சுவைகளைக்கொண்டது. செரிமானமாகும்போது இனிப்பாகமாறும். உஷ்ணவீர்யமுள்ளது. குளிர்ச்சியான தொடு உணர்ச்சி கொண்டது. கபபித்தங்களைத் தணிக்கும். மலத்தை வெளியேற்றும். கண்களுக்கு இதம் தரும். தலைமுடியை வளர்க்கும். இதன் விதைகளிலுள்ள பருப்பு மயக்கத்தைத் தோற்றுவிக்கும். இதன் எண்ணெய் குருகுணமும் இனிப்புச் சுவையும் சீதவீரியமும் தலைமுடியை வளர்க்கும் தன்மையும் கொண்டது.

## தீர்க்கும் நோய்கள்

கபநோய் குரல்மாறுபாடு கிரகணி அதிசாரம் வீக்கம் மூலம் குட்டம் மண்ணீரல்வீக்கம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## பயன்

தான்றிக்காய்கோதை மேல்பூச்சாகப்பயன் படுத்தினால் எரிச்சல் வலி நீங்கும். தான்றிவிதையை விழுதாக்கி மதுவுடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீரில் உள்ள குற்றங்களும் சிறுநீர்ப்பையில்கல் ஆகியவை நீங்கும்.

தான்றித்தூளைத் தேனுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும்.

தான்றிக்காயைச் சுட்டுத்தூளாக்கி இந்துப்புடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் அதிஸாரம் தணியும்.

தான்றிக்காயையும் அமுக்கராக்கிழங்கையும் சமஅளவு கொண்டு வெந்நீரில் அரைத்து வெல்லத்துடன் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் இதயத்தில் சேர்ந்த வாதம் தணியும்.

விபீதகாதிக்வாதம்-இது கண் நோய்களைத் தணிக்கும்.
விபீதகாதிகஷாயம்—இது வாந்தி இருமல் இழுப்பு விக்கல் ஆகியவைற்றைத் தணிக்கும்.

## 130. தாழை

**ஸம். கேதகி** Pandanus Osoratissims

### தோற்றம்

7 8 கை உயரமுள்ள செடியாக வளரக்கூடியது. இதன் அடிமரத்திலிருந்து கிளைகள் கிளம்பி வேறுபட்டு அவை தனி மரங்களாகி விடும். அடிமரம் வலிவின்றியிருக்கும். அடித் தண்டின் உட்பகுதி மென்மையாக இருக்கும். ஆலமரத்திற்கு இருப்பதுபோல இதற்கும் விழுதுகள் தோன்றி நிலத்தில் பதிந்து விடும்.

மலர்கள் இரண்டு அல்லது மூன்று கைநீளம் வரை மென்மையாக அடுக்கடுக்கான இதழ்களையும் கொண்டிருக்கும். மேற்பகுதி இதழ்கள் முட்களுடன் கூடியிருக்கும். இதழ்களின் முனைகள் ஊசி போல் கூர்மையாக இருக்கும். இதில் ஆண்மலர் பெண்மலர் என இருவகை உண்டு.

தேங்காயைப் போல பெரிய காய்கள் இதற்கு உண்டு. ஆண் மலர் மகரந்தத்துகள்களால் நிரம்பியிருக்கும். மஞ்சள் வெண்மை என இதன்மலர்கள் இருவகைகளாகும்.

### தன்மை

கார்ப்பு இனிப்புச் சுவைகள் கொண்டிருக்கும். இலேசானது. நறுமணமுள்ளது. மஞ்சள் நிறமுடைய மலர் உஷ்ணத் தன்மையும் கசப்புச் சுவையும் கொண்டிருக்கும். கண்களுக்கு நலம்பயக்கும்.

வெண்தாழை—இது உடற்பொலிவை மிகச்செய்யும். தலை முடிக்கு நறுமணம் தரும்.

மஞ்சள்தாழை—கசப்புச்சுவையும் துணைச்சுவைகளாகக் கார்ப்பு இனிப்புச் சுவைகளையும் கொண்டிருக்கும். இலகு குணமுள்ளது. உஷ்ணவீரியமுள்ளது. கண்களுக்கு இதமானது. கபத்தையும் நஞ்சையும் தணிக்கும்.

தாழைமலர்க்குள் இருக்கும் தண்டு கார்ப்புச் சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். இரஸாயனமானது. கப பித்தங்களைத் தணிக்கும்.

**பயன்**

தாழை வேர் சுரஸம் தாழை மலர்த் தண்டின் விழுது எனும் இவற்றைக் கலந்து நெய்ப்பக்குவம் செய்து பயன்படுத்தினால் நீர்ச்சுருக்கு தணியும்.

தாழைவேரை க்ஷாரமாக்கி எண்ணெய் கலந்து பயன்படுத்தினால் வாதத்தால் தோன்றிய குன்மம் தணியும்.

கேதகாதி தைலம்—இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன் படுத்தினால் எலும்பைச் சார்ந்த வாதநோய் தணியும்.

கேசுகீதைலம்—இதை எண்ணெய்க்குளியலுக்குப் பயன்படுத்தினால் வாதரத்தம் இரத்தபித்தம் காய்ச்சல் எரிச்சல் குளிர் காய்ச்சல் ஆகியவை தணியும்.

## 131. திராட்சை

**ஸம். திராக்ஷா** Graperaisins

**தோற்றம்**

கொடியாகப் படரக் கூடியது. இதில் பலவகை உண்டு. உவர்ப்புமண் பொடிமண் கலந்த நிலம் இதற்கு ஏற்றதாகும். இலைகள் வட்டவடிவில் பெரியவையாகப் பச்சை கத்தரிப்பூ நிறம் கலந்த நிறம் கொண்டிருக்கும். கொடி சிவப்பும் சாம்பல் நிறமும் கலந்துள்ளதாகும். கார்ப்பருவத்தில் பூக்கும். கூதிர் காலத்தில் காய்க்கும். பூக்கள் கொத்தாக இருக்கும். அவை முதிர்ந்திருக்கும் நிலையிலேயே காய்கள் தோன்றும். காயாக இருக்கும் போது பச்சைநிறமும் பழுத்ததும் வெண்மை மஞ்சள் பச்சை ஆகிய நிறங்களும் கொள்ளும். உலர்ந்ததும் சுருங்கிச்சிவந்து காணப்படும்.

**தன்மை**

திராட்சைப்பழம் மலத்தைப் போக்கும். குளுமைதரும். கண்களுக்கு நலம் பயக்கும். வலிமையூட்டும். சுவையில் பக்குவமடையும்போதும் இனிப்பாகவே இருக்கும். குரலை நன்கு விளங்கச் செய்யும். சிறுநீரைத் தடையின்றி வெளியேறச் செய்யும். விந்துவை வளர்க்கும். கபம் சுவை செழிப்பு எனும் இவற்றை உண்டாக்கும்.

காயாக இருக்கும்போது இதன் குணங்கள் குறைந்த அளவில் இருக்கும். புளிப்புத் திராட்சை இரத்தபித்தத்தைத் தோற்றுவிக்கும்.

சற்று நீண்டு பசுவின் முலைக் காம்புகளைப்போல் தோன்றும் (கோஸ்தனீ) திராட்சை விந்துவை வளர்க்கும். பளுவானது. கபபித்தங்களைப் போக்கும்.

உள்ளே விதைகளின்றி சிறியவையாக இருக்கும். திராட்சைப் பழம், நீண்ட திராட்சைப்பழத்தின் தன்மை கொண்டிருக்கும்.

மலைத் திராட்சை இலேசானது. புளிப்பையும் பித்தத்தையும் தோற்றுவிக்கும்.

உலர்ந்த திராட்சை களைப்பைப் போக்கும். குளுமை தரும். எண்ணெய்ப்பசை கொண்டது. எளிதில் மலத்தைப் போக்கும்.

**பயன்**

திராக்ஷைவிழுதைப் பழைய சோற்றுத் தண்ணீருடன் உட்கொள்ளச் செய்தால் நீர்ச்சுருக்கு தணியும்.

திராக்ஷைப் பழங்களைக் கஷாயம் காய்ச்சி அதில் இரண்டு மடங்கு பழைய நெய் சேர்த்துப் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்தால் காமாலை குன்மம் சோகை காய்ச்சல் நீரிழிவு பெருவயிறு எனுமிவை தணியும்.

திராட்சைப் பழத்தையும் அதிமதுரத்தையும்மைய அரைத்து நெய் கலந்து ஸன்னிபாதக் காய்ச்சலில் வாயும் நாவும் உலர்ந்த போது நாவின்மேல் தடவினால் தாபம் தணியும்.

திராக்ஷைப்பழங்களைத் தேனில் தோய்த்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

திராக்ஷைப்பழச் சாற்றில் தேன் கலந்து பருகச் செய்தால் வயிற்றுவலி தணியும்.

திராக்ஷாகிருதம்—இது கட்டி குன்மம் அக்கி எரிச்சல் காய்ச்சல் நாவறட்சி மூர்ச்சை வாந்தி இதயநோய் இரத்தபித்தம் குட்டம் காமாலை எனுமிவற்றைத் தணிக்கும்.

திராக்ஷாரிஷ்டம்-இது மார்பில்பட்டஅடி க்ஷயம் இருமல் இழுப்பு தொண்டைநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

திராக்ஷாதிபாகம்-இது நீரிழிவு பித்தநோய் நீர்ச்சுருக்கு மலக்கட்டு இரத்ததோஷம் இதயநோய் முதலியவற்றைத் தணிக்கும்.

## 132. திராயமாணா (பம்மந்திராய்)

**ஸம். பலபத்ரா** Delphinium Zalil

**தோற்றம்**

இது இமயமலையில் தோன்றும். 6 அல்லது 7 அங்குலம் உயரம் வரை வளரக்கூடிய சிறு செடியாகும். இலைகள் மிகச் சிறியவையாக மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். ஈரான் நாட்டில் குராஸான் மலைப்பகுதியில் மிகுதியாகக் காணப்படும். இதன் மலர்கள் மஞ்சள் நிறம் கொண்டு மென்மையான முட்களுடன் கூடியிருக்கும். வேர் செடியின் அடிப்பகுதியைப்போல நீளமாக இருக்கும். இதை நீரில் அலசினால் நீர் விரைவில் மஞ்சள் நிறமும் கசப்புச் சுவையும் கொள்ளும். இது கார்ப்பருவத்தில் வளரும் செடியாகும்.

**தன்மை**

துவர்ப்புச்சுவையையும் துணைச் சுவையாகக் கசப்புச் சுவையையும் கொண்டிருக்கும். மலத்தை வெளியேற்றும். பித்த கபங்களைத் தணிக்கும். உஷ்ண வீரியமுள்ளது.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல் இதயநோய் குன்மம் மூலநோய் வயிற்றுவலி நஞ்சு இரத்ததோஷம் க்ஷயம் நாவறட்சி ஆகியவற்றைப்போக்கும்.

**பயன்**

இதன் விழுதைப்பாலுடன் உட்கொள்ளச் செய்தால் காய்ச்சல் தணியும்.

இதன் வேரையும் துமட்டிச்செடிவேரையும் விழுதாக்கி அதில் மிகுதியாகத் தேனும் சிறிதளவு சர்க்கரையும் கலந்து மேல்நோக்கிய இரத்த பித்தநோயில் பயன்படுத்த வேண்டும்.

திராயமாணாவைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை உட்கொள்ளச்செய்தால் அக்கிநோய் தணியும்.

திராயமாணாதி கிருதம்—இது பித்தத்தினால் தோன்றிய குன்மம் இரத்தகுன்மம் அக்கி பித்தக்காய்ச்சல் காமாலை குட்டம் ஆகியவற்றைத் தணிக்கும்.

திராயந்த்யாதி கஷாயம்—இது கட்டி குன்மம் அக்கி எரிச்சல் காய்ச்சல் நாவறட்சி மூர்ச்சை வாந்தி இதயநோய் இரத்தபித்தம் குட்டம் காமாலை ஆகியவற்றைத் தணிக்கும்.

## 133. திப்பிலி

**ஸம். பிப்பலி Piper Longum**

**தோற்றம்**

இது புதராக வளரும் செடிவகையைச் சேர்ந்தது. இதன் பழம் அரிசித்திப்பிலி எனப்படும். இச்செடி வெற்றிலை போன்ற சிறு இலைகளைக் கொண்டிருக்கும். இலையுதிர்ப்பருவத்தில் பூக்கும். இளவேனில் பருவம் வரை பழம் பழுக்கும். கொடிகள் பெரியவையாகப் பல கணுக்களைக்கொண்டு வளரும். ஒவ்வொரு கணுவிலிருந்தும் சிறுகிளைகள் தோன்றிப்பழங்களைத் தாங்கியிருக்கும். கல் மணல் சுண்ணாம்புக்கல் மிகுதியாக உள்ள நிலத்தில் விளையும். இது நேபாளம் நைநிதால் போன்ற மலைச்சரிவுகளில் உள்ள காடுகளிலும் மாளவம் அதன் சுற்றுப்புற நாடுகளிலும் பீகார் மத்தியபிரதேசம் ருஹேல்கண்டத்திலுள்ள காடுகளிலும் மிகுதியாக விளைகிறது. மகதம் (பீகாரின் தெற்குப்பகுதி) சிங்களநாடுகளில் விளையும் திப்பிலி சிறந்தது எனக் கூறப்படுகிறது. எனவே இதற்கு வடமொழியில் மாகதி ஸிம்ஹலி என்னும் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

திப்பிலியில் அரிசித்திப்பிலி யானைத்திப்பிலி ஸிம்ஹலி வன பிப்பலி என நான்கு வகைகள் உண்டு.

**தன்மை**

திப்பிலி. சடராக்னியை வளர்க்கும். செரிமானமாகும் நிலையில் இனிப்புச் சுவை கொள்ளும். ரஸாயனகுணமுள்ளது. சீதவீரியம் கொண்டது. வாதத்தையும் கபத்தையும் வளர்க்கும். மலத்தை இளகச்செய்யும். பச்சைத்திப்பிலி கபத்தை வளர்க்கும். எண்ணெய்ப்பசையும் குளுமைத்தன்மையும் இனிப்புச்சுவையும் குருகுணமும் கொண்டிருக்கும். பித்தத்தைத் தணிக்கும். உலர்ந்த திப்பிலி பித்தத்தைச் சீற்றமடையச் செய்யும். தேனுடன் கலந்து திப்பிலியைப் பயன்படுத்தினால் உடலில் வளர்ந்த கொழுப்பையும் கபத்தையும் தணிக்கும். விந்துவை வளர்க்கும் இதன் வேர் திப்பிலிமூலம் மோடி கண்டந்திப்பிலி என்னும் பெயர்களைக் கொண்டதாகும்.

கண்டந்திப்பிலி கார்ப்புச்சுவையும் இலகுத் தன்மையும் உஷ்ணவீரியமுமுள்ளது. வறட்சித் தன்மையுடையது. சடராக்னியை வளர்க்கும். ரத்தபித்தத்தை வளர்க்கும். மலத்தை வெளியேற்றும். கபவாதங்களைத் தணிக்க வல்லது.

**தீர் நோய்கள்**

திப்பிலி, இருமல் இழுப்பு பெருவயிறு காய்ச்சல் குட்டம் நீரிழிவு குன்மம் மூலம் மண்ணீரல்வீக்கம் வயிற்றுவலி எனும் வற்றைப்போக்கும். கண்டந்திப்பிலி பெருவயிறு மண்ணீரல் வீக்கம் குன்மம் கிருமிநோய் இழுப்பு கபவிகாரங்கள் ஆகிய வற்றைத் தணிக்கும்.

யானைத்திப்பிலி, அதிஸாரம் இழுப்பு தொண்டைநோய் கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

திப்பிலிவிழுதை நெய்யில் பக்குவம் செய்து இந்துப்பு கலந்து உட்கொள்ளச் செய்தால் இருமல் தணியும்.

திப்பிலியை முதல் நாள் ஐந்து, இரண்டாம் நாள் மேலும் ஐந்து என்றமுறையில் நாள்தோறும் ஐந்தைந்தாகச் சேர்த்து நீர் அல்லது பாலுடன் அரைத்துப் பத்து நாட்கள் உட்கொள்ளச் செய்து, மறுபடியும் ஐந்தைந்து வீதம் குறைத்துப்பயன்படுத்திப்

பால் சோற்றை உண்ணச் செய்தால் வாதரத்தம் விஷக்காய்ச்சல் சுவையின்மை சோகை மண்ணீரல்வீக்கம் மூலம் இருமல் இழுப்பு சடராக்னிக் குறைவு இதயநோய் பெருவயிறு எனுமிவை தணியும்.

பால்சோற்றை மட்டும் உணவாகக் கொண்டு திப்பிலியை உட்கொள்ளச் செய்தால் மூலநோய் தணியும்.

திப்பிலித்தூளை வெல்லத்துடன் உட்கொள்ளச் செய்தால் இருமல் இழுப்பு அசீரணம் சோகை சடராக்னிக் குறைவு காமாலை நாள்பட்ட காய்ச்சல் எனுமிவை தணியும்.

பிப்பல்யாதிக்ஷாரம்—இதனால் இதயநோய் வீக்கம் குன்மம் மண்ணீரல்வீக்கம் மூலம் பெருவயிறு எனுமிவை தணியும்.

பிப்பல்யாத்யாஸவம்—இது க்ஷயம் குன்மம் பெருவயிறு இளைப்பு கிரஹணி சோகை மூலநோய் ஆகியவற்றைப்போக்கும்.

பிப்பிலிகண்டம்—இது வயிற்றுவலி சுவையின்மை வாந்தி சடராக்னிக் குறைவு நீர்ச்சுருக்கு இடுப்புவலி என்பனவற்றைத் தணிக்கும்.

பிப்பிலி மூலாத்யரிஷ்டம்—இது க்ஷயம் இருமல் காய்ச்சல் மண்ணீரல்வீக்கம் குட்டம் குன்மம் சடராக்னிக்குறைவு வெண் குட்டம் மூலநோய் கட்டி குடல்வாதம் சோகை பெருவயிறு விந்துதோஷம் தாய்ப்பால்தோஷம் நரம்புச் சிலந்தி பூதச்செய லால் தோன்றும் கால்கைவலி ஆகியவற்றை நீக்கும்.

## 134. தினிசமரம்

**ஸம். தினிச** Qugeinia Dalbargia Oides

**தோற்றம்**

மிகவும் பருமனாகவும் நெடுமரமாகவும் வளரும். இதன் கட்டை வண்டிச்சக்கரம் செய்யவும் பொம்மைகள் செய்ய வும் பயன்படும் எனத் தெரிகிறது. ‘ஸர்வஸாரம்’ எனக் குறிப் பிட்டுள்ளதால் இதன் பகுதிகள் அனைத்தும் மருத்துவத்துக்குப் பயன்படும் எனத் தெரிகிறது.

**தன்மை**

துவர்ப்புச் சுவையுள்ளது. உஷ்ண வீரியமுள்ளது. கப பித்தங்களைத் தணிக்கும். எரிச்சலைத் ஆற்றுவிக்கும். வாத நோய்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்த தோஷம் மிகுந்துள்ள கொழுப்பு குட்டம் நீரிழிவு வெண்குட்டம் என்பனவற்றைத் தணிக்கும்.

## 135. தும்பை

**ஸம். துரோணபுஷ்ப** L - Zeylanica

**தோற்றம்**

இது பயிர் நிலத்தில் மிகுதியாக விளையக்கூடியது. இரண்டரை அடி உயரம் வரை வளரும். இலை நீளமாய் ரோமங்களைப் போன்ற நரம்புகளைக் கொண்டிருக்கும். மற்றும் இலை ஒருவகை மணம் கொண்டிருக்கும். இதில் வெள்ளை நிறம் கொண்டு சிறிய முறத்தைப் போன்ற மலர்கள் பூக்கும். இம்மலர்கள் குடுவை போன்ற பகுதியில் இருக்கும். இவை காய்களாக இருப்பதால் தும்பையைக் காய்களில் மலர்களைக்கொண்ட செடி எனக் கொள்வர். கார்ப்பருவத்துவக்கத்தில் இது மலரும். கூதிர்ப் பருவத்தில் பூத்துவிடும். இதில் சிறிது பெரியது என இருவகைகள் உண்டு. பெரியது சிறப்பாக அறிவாற்றலை வளர்க்கும்.

**தன்மை**

இனிப்புச் சுவையும் துணைச்சுவைகளாக உவர்ப்பும் கார்ப்பும் குருத்தன்மையும் வறட்சிகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டது. மலத்தை இளகச் செய்யும். வாதபித்தங்களை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காமாலை வீக்கம் கிருமிநோய் இழுப்பு நீரிழிவு காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

தும்பைச்சாறு விஷக்காய்ச்சலைத் தணிக்கும். தும்பைச் சாற்றைக் கண்களில் மையாக இட்டால் காமாலை தணியும்.

# 136. துரிஞ்சி

**ஸம். பீஜபூரம் Citrus Medica**

**தோற்றம்**

துரிஞ்சி அதிக உயரம் வளராது. இது பல சிறு கிளைகளைக் கொண்டிருக்கும். இலைகள் எலுமிச்சை மரத்தினிலைபோல சற்று நீண்டு அகன்றிருக்கும். மலர்கள் வெண்ணிறத்துடன் எழில் தோற்றம் கொண்டிருக்கும். பழங்கள் உருண்டைவடிவ மானவை. இவற்றில் புளிப்புச்சுவை கொண்டது இனிப்புச்சுவை கொண்டது என இருவகைகள் உண்டு. ஆனால் புளிப்புச் சுவையுடையதுதான் மருத்துவத்திற்குப் பயன்படும்.

**தன்மை**

துரிஞ்சி புளிப்புச் சுவையும் இனிப்புச்சுவையும் இலகு குணமும்கொண்டதாகும். சடராக்னியைவளர்க்கும். தொண்டை நாக்கு இதயம் ஆகியவற்றைத் தூய்மைபடுத்தும்.

இனிப்புச்சுவையுள்ள துரிஞ்சி குருத்தன்மையும் சீதவீரியமும் கொண்டதாகும். சுவையூட்டும். இதன்விதை கசப்புச்சுவை கொண்டிருக்கும். கபத்தைத் தணிக்கும் உஷ்ணவீரியமுள்ளது. மலர் குளுமைத் தன்மையுடையது. மலத்தைக் கட்டும். வாதத்தைத் தணிக்கும். கசப்புச் சுவை கொண்டது. இதன் வேர் இனிப்புச்சுவையுள்ளது. பக்குவமடையும் போது கார்ப்புச் சுவை கொள்ளும். எளிதில் செரிமானமடையாது. இதயத்திற்கு நன்மை தரும். விந்துவைக் குறைக்கும். வாதபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்தபித்தம் இழுப்பு இருமல் சுவையின்மை நாவறட்சி வயிற்றுவலி அசீரணம் வீக்கம் ஆகியவற்றைப் போக்கும். இதன் விதைகள் மூலநோய் வீக்கம் எனுமிவற்றைப் போக்கும். மலர் குன்மத்தைப் போக்கும். வேர் காலரா மூலநோய் வயிற்றுவலி ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

துரிஞ்சிப் பழச்சாற்றில் திரிகடுகத்தூளையும் தேனையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் பித்தம் தன் இருக்கையை அடையும். துரிஞ்சி வேரையும் மலரையும் அரிசிகழுவிய நீருடன் அரைத்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

துரிஞ்சிச் சாற்றை காதில் விட்டால் காதுவலி நீங்கும். துரிஞ்சிச்சாற்றில் யவக்ஷாரமும் தேனும் கலந்து உட்கொள்ளச்செய்தால் விலாவலி இதயவலி சிறுநீர்ப்பைவலி முதலியவை நீங்கும்.

துரிஞ்சிச் சாற்றில் தேனும் ஸௌவர்ச்சல உப்பும் கலந்து பருகச் செய்தால் விக்கல் தணியும்.

பீஜபூராதி கிருதம் - இது வயிற்றுவலி குன்மம் மண்ணீரல் வீக்கம் இதயவலி விலாவலி ஆகியவற்றைத் தணிக்கும். இதயத்திற்கு நன்மைதரும்.

ஆர்த்தரகமாதுலுங்காதிலேகியம்—இது சுவையின்மை க்ஷயம் காமாலை சோகை வீக்கம் இருமல் இழுப்பு பெருவயிறு குன்மம் மண்ணீரல்வீக்கம் வயிற்றுவலி ஆகியவற்றைத் தணிக்கும்.

மாதுலுங்கரஸாயனம்—இது கருவுற்றவர்களுக்குத் தோன்றும் சுவையின்மை வாந்தி சோகை வயிற்றுவலி ஆகியவற்றைப் போக்கும். கருவை நன்கு வளர்க்கும்.

## 137. தென்னை

**ஸம். நாரிகேளம்** Cocosnusifera

### தோற்றம்

இது உவர்நீர் நிரம்பிய மண்ணில் நன்றாக வளரும். எனவே கடற்கரைப்பகுதியில் நன்றாக வளரும். 7, 8, ஆண்டுகள் கழித்துப் பயன் தரும். இதற்குக் கிளைகள் கிடையா. நீண்ட மட்டையும் அதன் இருபக்கங்களிலும் நீண்ட ஓலைகளும் காணப்படும். இம்மட்டைகளுக்கு இடையே பூக்கள் கொத்தாக அழகிய மஞ்சள் நிறம் கொண்டு காணப்படும். இளவேனில் முதுவேனில் பருவங்களில் காய்க்கும். இதிலும் பலவகைகள் உண்டு.

### தன்மை

தேங்காய் குளுமைத்தன்மையுடையது. தாமதித்து செரிமானமடையக் கூடியது. உடலுக்குவலிமை தரும். நாள் பட்ட காய் பளுவாக இருக்கும். பித்தம் எரிச்சல் முதலியவற்றைத் தோற்றுவிக்கும். இளநீர் குளுமையானது. இதயத்திற்கு இன்பமளிக்க வல்லது. சடராக்னியை வளர்க்கும். விந்து வளர்ச்சிக்கு ஏற்றது. இலேசானது. நாவறட்சியைப் போக்

கும். தென்னங்குருத்து துவர்ப்பு இனிப்புச்சுவைகள் கொண்டது. எண்ணெய்ப்பசை கொண்டது. உடல் வளர்ச்சிக்கேற்றது. தேங்காய் எண்ணெய் அடிபடுவதால் தோன்றும் விரணத்திற்கு நன்மை பயக்கும். தாமதித்துச் செரிமானமடையும். தலை முடிக்குக் கருநிறம் தரும். தோல் நோய்களைப் போக்கும். தென்னை வேர் சிறுநீரை வெளியேற்றும்.

**தீர்க்கும் நோய்கள்**

சிறுநீர்த்தடை வாதபித்தம் இரத்தவிகாரம் எரிச்சல் என்பனவற்றைப்போக்கும். இளங்காய் பித்தக்காய்ச்சலைப் போக்கும். இளநீர் நாவறட்சி பித்தம் என்பனவற்றைப்போக்கும். சிறுநீர்ப்பையைத் தூய்மைப்படுத்தும்.

**பயன்**

தேங்காய் விழுதைக் கல்கண்டு திப்பிலித்தூள் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாந்தி தணியும்.

தென்னம்பூவை விழுதாக அரைத்துத் தயிருடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் மணல் நீங்கும்

நாரிகேளாமிருதம்–இது வயிற்றுவலி பரிணாமசூலை விலாவலி சிறுநீர்த்தடை இரத்தபித்தம் பீநசம் ஆகியவற்றைத் தணிக்கும்.

நாரிகேளரஸாயனம்–பெரும்பாடு நீரிழிவு சிறுநீர்த்தடை உடல்எரிச்சல் உடல்இளைப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

## 138. தேக்குமரம்

**ஸம். பூமிருஹம் Tectona Grandis**

**தோற்றம்**

இது மிகவும் உயரமாக வளரும் மரமாகும். கருவை நிலைக்கச் செய்யும்பொருள்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. லைகள் அகலமும் நீளமும் கொண்டிருக்கும். காய்கள் லந்தைக் காய்களைப்போல இருக்கும். பர்மா முதலிய நாடுகளில் மிகுதியாகக் காணப்படுகிறது. இளவேனிற் பருவத்தில் பூக்கும். ஆனிமாதத்தில் காய்க்கும். இதன் விதைகள் கருச்சிதைவைத் தடுக்கும்.

**தன்மை**

குளுமைத் தன்மை கொண்டது. கபத்தையும் வாதத்தை-யும் தணிக்கும். கருவை நிலை நிறுத்தும். வாதபித்தங்களைத்-தணிக்கும். இதன்மலர் துவர்ப்பு கசப்புச்சுவைகள் கொண்டது. இலகு குணமும் வறட்சித் தன்மையும் கொண்டது. வாதத்தைச் சீற்றமுறச் செய்யும். கபபித்தங்களைத் தணிக்கும்.

இதன் காய்—சிறுநீர்த்தடையைப் போக்கும். இதன்பட்டை இனிப்பும் துவர்ப்புமான சுவையும் வறட்சித் தன்மையும் கொண் டிருக்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூலநோய் குட்டம் அதிசாரம் கபபித்தம் ஆகியவற்றைத் தணிக்கும். மலர் கபபித்தம் நீரிழிவு எனுமிவற்றைத் தணிக் கும். காய் நீர்ச்சுருக்கு நோயைத் தணிக்கும்.

**பயன்**

இதன் வேரை விழுதாகச் செய்து ஆட்டுப்பாலுடன் சர்க் கரை கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்த்தடை சிறுநீர்ப் பையில் எரிச்சல் ஆகியவை நீங்கும்.

அதிமதுரம் கீரைப்பாலை தேவதாரு தேக்குமரவிதை ஆகிய வற்றைத் தூளாக்கிப்பாலுடன் உட்கொள்ளச் செய்தால் கரு நிலைக்கும்.

## 139. தேற்றா

**ஸம். கதக** Strychnos Potatorum

**தோற்றம்**

இது மிகவும் உயரமாக வளரக் கூடியமரமாகும். எட்டி மரத்தைவிட உயரமாக வளரும். மலர்கள் மஞ்சள்நிறம் கொண் டிருக்கும். பழம் கருநிறம் கொண்டிருக்கும். விதை உருண்டை யாகவும் சிறிது தட்டையாகவும் வயிறுபருத்து வெண்மை நிறம் கொண்டும் இருக்கும். விதைகள் சுவையற்றிருக்கும். நீரில் உள்ள அழுக்கைப்போக்கும்.

**தன்மை**

இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் குருத்தன்மையும் சீதவீரிய மும் கொண்டிருக்கும். கண்களுக்கு நன்மை தரும். வாதகபங் களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

தேற்றா விதையைக் கல்லில் தேய்த்துத் தேன் கலந்து கண்ணிமைகளின் மேல் தடவினால் கண்களிலிருந்து நீர் பெருகுதல் நிற்கும். வயிற்றின்மேல் பற்றாகப்பூசினால் வயிற்றுவலி தணியும். இதன் சீதகஷாயம் பெரும்பாடு நோயைப்போக்கும். தன் வேர் குட்டத்தைப் போக்கும்.

**பயன்**

தேற்றாமரக்கட்டைச்சாற்றுடன் பக்குவம் செய்த நெய்யை உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் நீங்கும்.

கதகாதிவர்த்தி—இது கண்களில் தோன்றும் நோய்களைப் போக்கும் மையாகும்.

## 140. தேவதாரு

**லம். தேவதாரு** Cedrusdeodara

**தோற்றம்**

இது மிகவும் உயர்ந்து நெடுமரமாக வளரும். 12, 13 கை உயரம் வளரும். சுற்றளவு மூன்று கை வரை இருக்கும். அடி மரம் பருத்து உயரப்போகப் போகக் குறுகலாக வளரும். கிளைகள் நிலத்தை நோக்கி வளைந்திருக்கும். இலைகள் நீண்ட வட்டம் போலக்காணப்படும். மலர்கள் ஆமணக்கு மலர்களைப் போல் கொத்துக் கொத்தாகப் பூக்கும். வீடுகட்டத் தேவையான மரங்களைத் தருவதில் இது சிறந்தது. இந்த மரத்தால் கதவு சன்னல் முதலியன அமைத்தால் அந்த வீட்டில் நறுமணம் கமழும். இம்மரத்தில் எண்ணெய்ப்பசை கொண்டது வறண்டது என இருவகைகள் உண்டு. எண்ணெய்ப்பசை கொண்டது நறுமணமுள்ளது. வறண்டதற்கு மணம் இருக்காது. புகைபோடப் பயன்படுவது எண்ணெய்ப்பசை கொண்டதாகும்.

ில் ஸ்நிக்ததேவதாரு காஷ்டதேவதாரு ஸரளதேவதாரு என மூன்று வகைகள் இருப்பதாகச் சிலநூல்கள் கூறுகின்றன. ஸரள தேவதாருவின் பிசின் ஸ்ரீவேஷ்டகம் எனப்படும். 'கந்த பெரோஜா' என்னும் பெயரில் இது கடைகளில் விற்கப்படுகிறது.

**தன்மை**

கசப்புச்சுவையும் எண்ணெய்ப்பசையும் இலகுத் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். கப வாதங்களைத் தணிக்கும். இதன் எண்ணெய் கசப்பு கார்ப்பு துவர்ப்புச்சுவைகளைக் கொண்டிருக்கும்.

வறண்ட தேவதாரு—கசப்புச்சுவையும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

ஸரள தேவதாரு-குடலைத்தூய்மைப்படுத்தும். உடற்பொலிவைத்தரும்.

ஶ்ரீவேஷ்டம்—பித்தத்தை வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மலக்கட்டு வயிற்றுஉப்புசம் வீக்கம் அசீரணம் சோம்பல் விக்கல் காய்ச்சல் இரத்ததோஷம் நீரிழிவு நாள்பட்டசளி கபம் இருமல் அரிப்பு வாதம் என்பனவற்றைப் போக்கும்.

ஶ்ரீவேஷ்டம்—தலை நோய் கண்நோய் க்ஷயம் காய்ச்சல் குட்டம் கிரகதோஷம் உடலில் தோன்றும் நாற்றம் அரிப்பு விரணம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

தேவதாரு கஷாயம் இழுப்பு விக்கல் எனுமிவற்றைப் போக்கும். தேவதாருகஷாயம் காய்ச்சலைப் போக்கும்.

தேவதாரு சுக்கு எனும் இவற்றின் தூளைப்பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்தால் வீக்கம் தணியும்.

தேவ்தாருக்கட்டையை எரித்து அதிலிருந்து பெருகும் எண்ணெயில் திரிகடுகத்தூள் யவக்ஷாரத்தூள் ஆகியவற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் கபத்தினால் தோன்றிய இருமல் தணியும்.

தேவதாரு கொடிவேலி எனுமிவற்றைப் பசுவின் சிறுநீருடன் மைய அரைத்துக் கொதிக்க வைத்து இளம் சூடுள்ளபோது மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் யானைக்கால் நோய் தணியும்.

தேவதாரு துமட்டிவேர் எனும் இவற்றை நீருடன் அரைத்துப் பூசினால் கபத்தினால் தோன்றிய கண்டமாலை தணியும்.

தேவதாரு சுக்கு நவாச்சாரம் ஆகியவற்றைச் சமஅளவில் கொண்டு மைய அரைத்துப் பசுவின் சிறுநீருடனோ வெந்நீருடனோ கலந்து பூசினால் விரணத்தில் தோன்றிய வீக்கம் விரைவாதம் யானைக்கால்நோய் கட்டி எனுமிவை தணியும்.

ஸரள தேவதாருதூளைப் புகை போட்டால் விரணங்கள் ஆறும்.

தேவதார்வாதி க்ஷாரம்—இது குன்மம் மூலநோய் பெருவயிறு கிரகணி கிருமிநோய் பைத்தியம் கால்கைவலி விஷம் பெண்குறிநோய் எலிவிஷம் பாம்பு விஷம் ஆகியவற்றைத் தீர்க்கும்.

தேவதார்வரிஷ்டம்—இது நீரிழிவு வாதநோய் கிரகணி நீர்ச்சுருக்கு எனும் நோய்களைப் போக்கும்.

ஸரலாதிலேபம்—இது கபத்தினால் தோன்றிய விரைவீக்கத்திற்கு மேற்பூச்சுமருந்தாகும்.

## 141. தொட்டால் சுருங்கி

**ஸம். லஜ்ஜாலு** Mimosa Sensitiva

**தோற்றம்**

இது சிறுசெடிவகையாகும். இதில் இரண்டுவகைகள் உண்டு. ஒன்று பெரும்புதராக வளரக்கூடியது. மற்றொன்று 10, 12 அங்குல உயரமுள்ள சிறு செடியாகும். பெரியது இருவகைப்படும். ஒன்று முட்கள் கொண்டது. மற்றொன்றுமுள் இல்லாதது. இரண்டும் ஒன்று போலவே இருக்கும். முள் தான் வேறுபாடு. இதன் உயரம் நான்கு கைகள் நீளம் ஆகும். இலை வன்னிமரத்திலைபோல் சற்றுச் சிறிதாக அமைந்திருக்கும். காம்பின் இருபக்கங்களிலும் ஒரே சீராய் வரிசையாக இலைகள் வளர்ந்திருக்கும். பூக்கள் நீலம் கலந்த ரோஜா நிறத்தில் காணப்படும். இது நீர்ப்பாங்கான இடங்களில் பெரும்பாலும் முளைக்கும். கார்ப்பருவத்தில் செடி தோன்றும். கூதிர்ப் பருவத்தில் பூக்கும். சிறு வகையைச் சேர்ந்ததற்குக் கிளை இராது. மலர்க்காம்பு இரண்டு அங்குலம் வரை நீண்டு வளர்ந்

திருக்கும். இதன் முனையில் மஞ்சள்நிறமலர்காணப்படும். கூதிர்ப் பருவத்தில் முதிர்ந்துவிடும். கடுகைப் போன்ற விதைகள் தோன்றும். பெரியதற்குக் காய்கள் உண்டு. இருவகைச் செடிகளும் இலையைக் கையால் தொட்டால்சுருங்கிக்கொள்ளும். இருசெடிகளின் அடிப்பகுதியும் சிவந்த நிறம் கொண்டிருக்கும்.

ில் சாதாரணலஜ்ஜாலு விபரீதலஜ்ஜாலு அலம்புஷ என மூன்று வகை உண்டு. இவற்றில் சாதாரண லஜ்ஜாலுதான் எங்கும் காணப்படும். இது நஞ்சைப் போக்கவும் பெண்குறி நோய்களைப் போக்கவும் பயன்படும். விபரீதலஜ்ஜாலு என்பது பாதரஸத்தைக் கட்டப்பயன்படும் எனத்தெரிகிறது.

**தன்மை**

கசப்பு துவர்ப்புச் சுவைகளையும், குளுமைத்தன்மையையும் கொண்டிருக்கும். கப பித்தங்களைத் தணிக்கும். அலம்புஷை என்பது இனிப்புச்சுவையும் லகுத்தன்மையும் கொண்டிருக்கும். பித்தகபங்களைத் தணிக்கும். இதன் வேரைக் கையில் கட்டிக் கொண்டோ அல்லது இதன் விழுதைப் பூசிக்கொண்டோ கொடிய நாகத்தையும் கையால் பிடிக்கலாம். ஒருவேளை பாம்பு தீண்டினாலும் நஞ்சு தணியும் என்பதாம்.

**பயன்**

தொட்டாற் சுருங்கியின் பச்சை வேரின் கஷாயத்தையும் விழுதையும் சேர்த்து எண்ணெய்ப் பக்குவம் செய்து காயம் படுதலால் தோன்றிய விரணத்திற்கு மேல் ஊற்றி வந்தால் விரணம் விரைவில் ஆறும்.

தொட்டற் சுருங்கியின் வேரை அரிசி கழுவிய நீருடன் அரைத்துப் பயன்படுத்தினால் பாம்பின் விஷம் தணியும்.

## 142. நன்னாரி

**ஸம். ஸாரிபா.** Asclepias Pseudosarsa

**தோற்றம்**

இது மரத்தைச் சுற்றிப்படரக்கூடிய அல்லது நிலத்தில் பரவும் கொடிவகையாகும். காடுகளில் மிகுதியாகக் காணப்படும். கார்ப்பருவத்தில் முளைக்கும். இதில் வெண்மை கறுப்பு என இருவகைகள் உண்டு. கருநிறமுள்ளது சிறந்ததாகும். இதன் இலைகள் மெலிந்து நீண்டு காணப்படும். இலைச்

களின்மேல் சிறுசிறு மச்சங்களைப் போன்ற அடையாளங்கள் காணப்படும். இலையை ஒடித்தால் வெண்ணிறப்பால் சுரக்கும். கொத்தாக வெண்ணிற மலர்கள் ஆடி ஆவணி மாதங்களில் பூக்கும். பச்சைவேர் இனிப்பாக நறுமணம் கொண்டிருக்கும். உலர்ந்தாலும் வேரில் நறுமணம் இருக்கும். வேர் மிகவும் ஆழமாகப் பதிந்திருக்கும். இதில் 'அனந்தாசாரிபா' என்னும் மூன்றாவது வகை ஒன்று உண்டென நூல்கள் கூறுகின்றன. ஆனால் அதைப்பற்றி வேறு விளக்கங்கள் தெரியவில்லை.

**தன்மை**

வெண் நன்னாரி இனிப்புச்சுவையையும் துணைச்சுவையாக கசப்பையும் குருத்தன்மையும் சீதவீரியமும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். விந்துவை வளர்க்கும். மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

கருநன்னாரி—இனிப்புச் சுவையும் குளுமைத்தன்மையும் கொண்டிருக்கும். உட்கொண்டதும் விந்துவை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

சடராக்னிக் குறைவு சுவையின்மை இருமல் இழுப்பு நஞ்சு இரத்ததோஷம் பெரும்பாடு காய்ச்சல் அதிஸாரம் ஆகியவற்றைத் தணிக்கும்.

சிறப்பாகக் கருநன்னாரி வாதபித்தம் இரத்ததோஷம் நாவறட்சி வாந்தி காய்ச்சல் ஆகியவற்றைப்போக்கும்.

வெண் நன்னாரி-குட்டம் உடல் நாற்றம் நஞ்சு பெரும்பாடு கபாதிசாரம் நாவறட்சி எரிச்சல் ரத்தபித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

நன்னாரி மல்லி அரளி எனும் இவற்றின் இலைக்கஷாயத்தால் கழுவினால் விரணம் ஆறும்.

நன்னாரியிட்டுக் காய்ச்சிய நெய்யைப் பருகச் செய்தால் எலி விஷம் த ணியும். நன்னாரி கஷாயம் இரண்டு பங்கு நெய் ஒரு பங்கு கலந்து பயன்படுத்தினால் இழுப்பு தணியும்.

சாரிபாதிகாலேகியம்—இது வாதரத்தம் மூலநோய் தோல் நோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

சாரிபாத்யாஸவம்—இது நீரிழிவு வாதரத்தம் பௌத்திரம் எனும் நோய்களைத் தணிக்கும்.

சாரிபாதிவடி-இது காது நோய் நீரிழிவு இரத்தபித்தம் க்ஷயம் இழுப்பு நாள்பட்ட காய்ச்சல் கால்கைவலி மூலநோய் யநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 143. நாகபலை

**ஸம். நாகபலா** Sida Spinosa

### தோற்றம்

இது மஞ்சள் நிறமுள்ள சித்தாமுட்டியைப் போன்ற செடியாகும். பூ ரோஜா மலரின் தோற்றம் கொண்டிருக்கும். காய் உருண்டையாக ஊசை முட்களுடன்கூடி ஆடையில் ஒட்டிக் கொண்டுவிடும். இதன் முட்களின் நுனிப்பகுதி வளைந்திருக்கும். சித்தாமுட்டி வகையைச் சேர்ந்தது.

### தன்மை

இனிப்புச் சுவையும் துணைச்சுவைகளாகப் புளிப்பு துவர்ப்பு கார்ப்புச் சுவைகளும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். உடலுக்குப் பொலிவு தரும். எண்ணெய்ப்பசை கொண்டதாகும். மலத்தைக் கட்டும். இதன் பழம் துவர்ப்பு இனிப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் சீதவிரியமும் கொண்டிருக்கும். விந்துவைக்கட்டும். வாதத்தை வளர்க்கும்.

### தீர்க்கும் நோய்கள்

வாதம் இரத்ததோஷம் பித்தம் இரத்தபித்தம் க்ஷயம் என்னும் நோய்களைப்போக்கும்.

### பயன்

நாகபலை வேர்த்தூளை நெய் தேன் கலந்து பாலுடன் உட்கொண்டு பாலுடனும் நெய்யுடனும் அறுபது நாள் சம்பா அரிசிச் சோற்றை ஓராண்டு உட்கொண்டால் நூறாண்டுகள் நோய் இன்றிவாழலாம்.

நாகபலைத்தூளைப் பாலுடன் உட்கொண்டால் இதயநோய் இழுப்பு இருமல் நீங்கும்.

நாகபலை வேர்சுரசத்தை அடிபட்ட காயத்தில் ஊற்றினால் உடனே வேதனை தணியும்.

நாகபலைவேரின் தூளை நெய்யும் தேனும் கலந்து காலையில் உட்கொண்டு வந்தால் க்ஷயநோய் தணியும்.

நாகபலா கிருதம்—இது இரத்தபித்தம் காயம் படுதலால் உடலிளைப்பு நாவறட்சி எரிச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

நாகபலா தைலம்—இதைக் கொண்டு எண்ணெய்க்குளியல் செய்வித்தால் வாதரத்தம் தணியும்.

## 144. நாணல்

**ஸம். காசம்** Saccharum Sponteneum

### தோற்றம்

புல்வகையைச் சேர்ந்தது. ஈரமுள்ள நீர்ப்பாங்கான ஆற்றங்கரை ஓரங்களில் நன்கு வளரும். வீடுகளின் கூரையாகப் பயன் படுத்தப்படுகிறது. கூதிர் பருவத்தில் பூக்கும். கொத்துக் கொத்தாகப் பூக்கள் வெண்ணிறத்துடன் மிக அழகாகக் காணப் படும். உறுதியான ஈர்க்கைப் போன்ற காம்பில் கொத்தாகப் பூக்கள் தோன்றும். முதலில் சிறிது பச்சை நிறம் கொண்டும் பிறகு சாம்பல் நிறம் கொண்டும் முடிவில் மலர்கள் நல்ல வெண்ணிறம் கொண்டும் காணப்படும்.

### தன்மை

நாணல் இனிப்புச்சுவையும் கசப்புச்சுவையும் சீதவீரியமும் கொண்டிருக்கும். பித்தத்தைத் தணிக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில்கல் எரிச்சல் இரத்ததோஷம் க்ஷயம் கண்நோய் முதலியவற்றைப் போக்கும்.

# 145. நாயுருவி

**ஸம். அபாமார்க** Achyranthus Aspera

**தோற்றம்**

நாயுருவியில் சிவப்பு வெண்மை நிறங்களில் இருவகைகள் உண்டு. சிறுசெடிவகையைச் சேர்ந்தது. மேடான நிலத்தில் பெரும்பாலும் காணப்படும். பள்ளமான இடங்களில் குறைவாகவே காணப்படுகிறது. கார்காலத்துவக்கத்தில் முளைத்துப் பருவ இறுதிவரை வளரும். குளிர் காலத்தில் பூத்துக் காய்க்கும். முதுவேனில் பருவத்தில் காய்களும் செடிகளும் உலர்ந்துவிடும். இந்தச் செடி $2\frac{1}{2}$ அடி உயரம் வரை வளரும். இலைக்காம்புகள் மிகச் சிறியவையாகும். இலைகளில் மிகச் சிறிய வெண்ணிற முள்ள முட்கள் காணப்படும். சிவப்பு நாயுருவியின் இலைகளின் மேல் சிவப்புப் புள்ளிகள் காணப்படும். கிளைகள் நான்முனைப் பட்டைகளைக் கொண்டிருக்கும். வெண் நாயுருவியின் கிளை வெண் ணிறத்திலும் சிவப்பு நாயுருவியின்கிளை சிவந்த நிறத்திலும் காணப்படும். இருவகைசெடிகளின் பூக்கள் நீண்ட கொத்தாகக் கடினத் தன்மையுடன் காணப்படும். மலர்கள் மிகச் சிறியவை யாகவும் சிவப்பு நிறமும் கத்தரிப்பூ நிறமும் கலந்துள்ளவை யாகவும் காணப்படும். மலர்கள் மலரும்போது மேல் நோக்கிய முகம் கொண்டிருக்கும். சில நாட்கள் கழித்துப் பக்கமாகச் சாய்ந்திருக்கும். கடைசியில் காயாக மாறியதும் கீழ்நோக்கிய முகம் கொள்ளும். காய்க்குள் சற்று நீண்ட உருவத்தில் விதைகள் காணப்படும், விதைகளின் சுவை இனிப்பும் கசப்பும் கலந்திருக்கும்.

**தன்மை**

நாயுருவி மலத்தைப்போக்கும். தீக்ஷ்ண குணம் கொண்டது. சடராக்னியைத் தூண்டும். சிவந்த நாயுருவி வாதத்தைத் தடுக்கும். கபத்தைத் தோற்றுவிக்கும். குளுமைத் தன்மையும் வறட்சியும் கொண்டது. வெண்ணிறமுள்ள நாயுருவி குணத்தில் சிறந்ததாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாந்தி கபம் கொழுப்பு வாதம ய நோய் உப்புசம மூலநோய் அரிப்பு வயிற்றுவலி ஊமைக்கட்டி என்பனவற்றைப் போக்கும்.

நாயுருவிவேரை விழுதாகச் செய்து அரிசி கழுவிய நீருடன் சிறிது தேனும் கலந்து உட்கொள்ளச் செய்தால் மூலநோய் தணியும்.

வாகைக் கட்டை நாயுருவி எனுமிவற்றின் சாற்றில் தேன் கலந்து பயன்படுத்தினால் கிருமி நோய் தணியும்.

நாயுருவி க்ஷாரத்தைச் செம்மறியாட்டின் சிறுநீரில் கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் கல் நீங்கும்.

நாயுருவி விதையின் விழுதைச் சேர்த்துப் பக்குவம் செய்த எண்ணெயைக் கொண்டு எண்ணெய்க்குளியல் செய்வித்தால் தலைவலி நீங்கும்.

நாயுருவியிலை இரண்டினைப் பெண்குறியின் நடுவில் வைத்துக் கொள்ளச் செய்தால் கொடிய வலியும் நீங்கும்.

நாயுருவி விழுதை நெய் கலந்து அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் பாம்பு விஷம் நீங்கும்.

நாயுருவி விழுதைப் பாலுடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்த்தடை நீங்கும்.

நாயுருவி விதையின் விழுதை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் இரத்தமூலம் நீங்கும்.

சிகரீகிருதம்—இது எல்லா விஷங்களையும் விஷக்காய்ச்சலையும் தணிக்கும்.

## 146. நாரத்தை

**ஸம். நாரங்க** Citrus Aurantium

**தோற்றம்**

இது எலுமிச்சை வகையைச் சேர்ந்த மரமாகும். சாதாரண உயரம் உள்ள மரமாகும். மலர்கள் வெண்மையாக நறுமணம் கொண்டிருக்கும். காய்கள் உருண்டையாக எலுமிச்சங்காய் களைப்போலவே இருக்கும். நன்கு பழுத்தபின் மஞ்சள் நிற முள்ளதாகிவிடும். இளவேனில் காலத்தில் பூக்கும். முதுவேனில் பருவத்தில் காய்க்கும். அஸ்ஸாமில் ஸில்ஹட் மற்றும் உத்தரப்

பிரதேசத்தில் மலைப்பாங்கான இடங்களில் உள்ள நாரங்கி மிகவும் இனிப்புச்சுவை உள்ளதாகும்.

**தன்மை**

இது சிறிது புளிப்பு கலந்த இனிப்புச்சுவை கொண்டது. சுவை தருவது. புளிப்புச்சுவையுள்ள கிச்சிலி உஷ்ணத் தன்மை கொண்டதாகும். எளிதில் செரிமானமாகாது.

**தீர்க்கும் நோய்கள்**

வாதத்தைப் போக்கும். மலச்சிக்கலைத் தணிக்கும்.

## 147. நாவல்

**ஸம். ஜம்பூ** Eugenia Jambolana

**தோற்றம்**

இது நெடுமரமாக வளரக்கூடியது. இதில் பலவகைகள் உண்டு. உத்தரப்பிரதேசத்தில் புறாமுட்டை அளவு பெரியதாகக் காணப்படும் நாவற்பழவகையும் உண்டு. இளவேனிற் பருவத்தில் தங்க நிறத்தில் மலர்கள் தோன்றும். முதுவேனில் கார்ப்பருவங்களில் காய்க்கும். பழங்களில் சதைப்பகுதி மிகுந்திருப்பது ராஜ ஜம்பூ எனப்படும். இலைகள் சற்று சிறியவையாகவும் பழங்களில் சதைப்பகுதி குறைந்துமுள்ளது காகஜம்பூ எனப்படும். இது துவர்ப்புச் சுவையை மிகுதியாகக் கொண்டிருக்கும். இதை விடச் சிறிய இலைகளைக் கொண்ட நதீஜம்பூ எனப்படும் வகை ஒன்று உண்டு. இது ஆற்றங்கரை ஓரங்களில் காணப்படும். பூமிஜம்பூ எனப்படும் மற்றொருவகையும் உண்டு. இதன் பழங்கள் மிகவும் சிறியவையாக உருண்டை வடிவத்தில் இருக்கும். காடுகளில் பெரும்பாலும் இந்தவகை நாவல் மரங்கள் காணப்படும்.

**தன்மை**

ராஜஜம்பூ இனிப்பு புளிப்புச்சுவைகளைக் கொண்டிருக்கும். உஷ்ணவீரியமுள்ளது. வாதத்தை வளர்க்கும். பித்தத்தைத் தணிக்கும்.

சாகஜம்பூ என்பது துவர்ப்பு புளிப்புச்சுவைகளும் குரு குணமும் கொண்டிருக்கும். விந்துவையும் வலிமையையும் வளர்க்கும். மலத்தைத் தடுக்கும்.

பூமிஜம்பூ ஜலஜம்பூ என்பவை துவர்ப்புச்சுவை கொண்டிருக்கும். இதயத்திலும் தொண்டையிலும் வறட்சித் தன்மையைத் தோற்றுவிக்கும்.

நாவல் விதை துவர்ப்புச்சுவை கொண்டிருக்கும். மலக் கட்டைத் தோற்றுவிக்கும். சர்க்கரைநீரிழிவைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

சோர்வு அதிசாரம் இழுப்பு கபத்தால் தோன்றிய இழுப்பு எரிச்சல் தொண்டை நோய்கள் கிரிமிநோய் ஆகியவற்றைப் போக்கும்.

பார்சோத்திப்பட்டை நாவல்பட்டை காயபலப்பட்டை ஆகியவற்றை மைய அரைத்துத் தூவினால் விரணங்கள் ஆறும்.

நாவல்பட்டை மாம்பட்டை மருதம்பட்டை எனுமிவற்றில் சீதகஷாயத்தைப் பருகச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

காகஜம்பூ விழுதை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் வெள்ளைப்பெரும்பாடு நீங்கும்.

நாவல்கட்டைச் சாற்றைச் சம அளவு ஆட்டுப்பாலுடன் கலந்து உட்கொள்ளச் செய்தால் சிறுவர்களுக்குத் தோன்றும் கிரகணி நீங்கும்.

ஜம்ப்வாதி கஷாயம்—இது வாந்தி காய்ச்சல் அதிஸாரம் மூர்ச்சை நாவறட்சி ஆகியவற்றைத் தணிக்கும்.

ஜம்ப்வாதி கிருதம்—இது இரத்தபித்தம் இரத்தாதிசாரம் பெண்குறிநோய்கள் இரத்தமூலம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 148. நிலப்பனை

**ஸம். முஸலீ** Curevligo Orchioides

**தோற்றம்**

இது புல்வகையைச் சேர்ந்தது. பனைமரம் போன்ற வேர் உடையது. சிறியவையான இலைகளைக் குறைந்த அளவில் கொண்டிருக்கும். மலர்கள் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும்.

இது வெண்மை கறுப்பு என இருவகைகள் கொண்டது. இந்தச் செடிகள் நிழல் மிகுந்துள்ள இடத்தில் சிறப்பாக மாமரங் களின் நிழலில் வளரும். கார்ப்பருவத்தில் மேகங்கள் முழங்கும் போது தோன்றும். பனை ஓலையைப் போன்ற இலைகள் நான்கு பக்கங்களிலும் பரவியிருக்கும். மழைக்காலம் முடிந்ததும் மேற்பகுதி முழுதும் அழிந்துவிடும். செடியிருந்த அடையாளங் களைக் கண்டு கிழங்குகளை வெட்டி எடுப்பார்கள். இவற்றைப் பன்றிகள் தின்னும்.

**தன்மை**

இது எண்ணெய்ப்பசையும் இனிப்புச்சுவையும் கொண்டிருக் கும். குளுமைத் தன்மை உடையது. வலிமையையும் கபத்தையும் வளர்க்கும். பித்தத்தைத் தணிக்கும். சடராக்னியை வளர்க்கும்.

**பயன்**

முஸல்யாதி கஷாயம்–இது பெரும்பாடு அதிசாரம் ரத்த பித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 149. நிலப்புல்

**ஸம். பூத்ருண Andropogon Schocnanthuslm**

**தோற்றம்**

இது காடுகளிலும் தோட்டங்களிலும் மிகுதியாகக் காணப் படும். கொத்துக் கொத்தாகத் தோன்றும். விதைகள் மிகவும் சிறியவையாக இருக்கும். கல்கத்தாப் பகுதியில் இதை வாசனைப்புல் என்கின்றனர். இதன் இலைகளைக் கசக்கினால் எலுமிச்சை எண்ணெயைப் போன்ற நறுமணம் கொண்டிருக்கும். ஒருமுறை முளைத்தால் தொடர்ந்து பல காலம் வரை தோன்றிக் கொண்டே இருக்கும். இதன் இலை எண்ணெய்ப்பசை கொண்டு பச்சை நிறமுடையதாய் சுரசுரப்புடன் காணப்படும்.

**தன்மை**

நிலப்புல் கார்ப்பும் கசப்புமான சுவைகளைக் கொண்டிருக் கும். தீக்ஷ்ணமானது. உஷ்ணத் தன்மை கொண்டது. மலத்தை வெளியேற்றும். இலகுவானது. எரிச்சலைத் தோற்றுவிக்கும். செரிமானத்தைத் தூண்டும். கண்களுக்கு நன்மை தரும். வாயைத் தூய்மைபடுத்தும். விந்துவிற்கு நன்மை தரும். பித்தத்தையும் இரத்தத்தையும் சீற்றமடையச் செய்யும்.

# 150. நிலவேம்பு

**ஸம். கிராததிக்த Swertia chirata**

**தோற்றம்**

இது புதராக வளரக்கூடியது. இரண்டு மூன்று அடிகள் உயரம் வரை வளரும். இலைகள் குறுகி நீண்டிருக்கும். மலர்கள் வெண்மை நிறத்துடன் காணப்படும். நிலவேம்பில் கசப்புச் சுவை சிறிது குறைந்துள்ள வகை ஒன்று உண்டு. நேபாள தேசத்தில் காணப்படும் நிலவேம்பு கசப்புச்சுவைமிகுந்து சிறிதளவு சீதவீரியமும் சிறிது உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். எந்தப் பொருளுடன் சேர்த்தாலும் அந்தப் பொருளுடைய தன்மையைப் பெறும். சிறப்பாக கபபித்தங்களைத் தணிக்கும்.

**தன்மை**

நிலவேம்பு கசப்புச் சுவையும் வறட்சித்தன்மையும் சீத வீரியமும் லகு குணமும் கொண்டதாகும். மலத்தை வெளி யேற்றும். கபபித்தங்களைத் தணிக்கும். வாதத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

ஸந்நிபாதக் காய்ச்சல் இருமல் இழுப்பு இரத்ததோஷம் எரிச்சல் வீக்கம் நாவறட்சி குட்டம் காய்ச்சல் விரணம் கிருமி நோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

நிலவேம்பு பாக்கு கோரைக்கிழங்கு எனும் இவற்றைத் தனித்தனியாக ஒவ்வொன்றுக்கும் சம எடை சந்தனம் கலந்து மைய அரைத்துப் பயன்படுத்தச் செய்தால் இரத்தபித்தம் தணி யும். நிலவேம்பு சுக்கு எனுமிவற்றின் விழுதை உட்கொள்ளச் செய்தால் நெடுநாட்களாகத் தொடர்ந்து இருப்பதும் மூன்று தோஷங்களால் தோன்றுவதுமான வீக்கம் தணியும்.

நிலவேம்புக்கஷாயத்தை உட்கொள்ளச் செய்தால் தாய்ப் பால் தூய்மை பெறும்.

நிலவேம்பு விழுதைச் சமஅளவு சர்க்கரை அல்லது தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் கருவுற்றவளுக்குத் தோன்றும் கடும்வாந்தியும் இதயத்துன்பமும் தணியும்.

பூநிம்பாதி சூரணம்—இது கிரகணி அதிசாரம் சுவையின்மை குன்மம் காமாலை சோகை காய்ச்சல் நீரிழிவு ஆகியவற்றைத் தணிக்கும்.

பிருகத் கிராத தைலம்—இது விஷக்காய்ச்சல் தாதுக்களைச் சார்ந்த காய்ச்சல் காமாலை கிரகணி அதிசாரம் மண்ணீரல் வீக்கம் சோகை வீக்கம் நீரிழிவு ஆகியவற்றைத் தணிக்கும்.

## 151. நிலாவாரை

**ஸம். ஹேம புஷ்பி** Cassia Obovata

**தோற்றம்**

இது சிறு செடிவகையைச் சேர்ந்தது. நம்நாட்டில் எங்கும் காணப்படுவது. இதன் மலர்கள் மஞ்சள் நிறத்துடன் காணப் படும்.

இது தீக்ஷ்ணத் தன்மையும் கசப்புச்சுவையும் கொண்டிருக் கும். உஷ்ணத்தைத் தரும். சடராக்னியையும் விந்துவையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கப பித்தங்களைப் போக்கும். மலத்தை வெளியேற்றும். குட்டம நீரிழிவு காய்ச்சல் என்பனவற்றைப் போக்கும்.

## 152. நீர்நொச்சி

**ஸம். ஜலவேதஸ** Elatine Vertia Vertieellate

**தோற்றம்**

இது பெரியது சிறியது என இருவகை கொண்டிருக்கும். நீர் நிறைந்துள்ள பகுதிகளிலும் ஆற்றங்கரையிலும் தோன்றும். முகில் நிறம் கொண்ட மலர்களை உடையது. இலைகள் மூங்கில் இலையைப் போல நீண்டிருக்கும்.

**தன்மை**

இது கசப்புத் துவர்ப்புச் சுவைகளைக் கொண்டிருக்கும். விரணங்களை ஆற்றும். கபபித்தங்களைத் தணிக்கும். சீதவீரிய முள்ளது. மலத்தைக் கட்டும். வாதத்தைச் சீற்றமுறச்செய்யும்.

**பயன்**

நீர்நொச்சி வேரையும் கோஷ்டத்தையும் கஷாயம் காய்ச்சிக் குளிரவைத்துப் பயன்படுத்தினால் வெறிநாய்க்கடிவிஷம் தணியும்.

நீர்நொச்சி இலைச்சாற்றில் தேன் கலந்து பருகச் செய்தால் ஆமாதிசாரம் நீங்கும்.

## 153. நெல்லி

**ஸம். ஆமலகீ Emblica Officinalis**

**தோற்றம்**

நெல்லிமரம் தோட்டங்களிலும் காடுகளிலும் காணப் படும். இருநூறு முன்னூறு அடிகள் உயரம் வரை வளரக் கூடியதாகும். இலைகள் புளிய மரத்திலைகளைப் போல சற்றுமஞ்சள் நிறம் கொண்டிருக்கும். வஸந்தகாலத்திற்கு முன்னதாகவே துளிர்க்கத்துவங்கும். மஞ்சள் நிறம் கொண்டது. சிறு மலர்களைக் கொண்டிருக்கும். ஐப்பசியில் பூத்துக் காய்க்கத் தொடங்கும். கார்த்திகையில் இனிப்புச் சுவைகொள்ளும். பங்குனியில் நன்றாகப் பழுத்திருக்கும். காய்கள் உருண்டை வடிவம் கொண்டிருக்கும். காய்களின் மேல் ஆறு கோடுகளும் உள்ளே அறுகோணவடிவமுள்ள விதையும் இருக்கும். பச்சைக் காய்கள் எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். சிறுநீரையும் மலத்தையும் எளிதில் வெளியேற்றும். அதனால் அசீரணநோய் களுக்குத் தகுந்த மருந்தாகும். உலர்ந்த காய் சடராக்னியை வளர்க்கும். புளிப்புச்சுவை கொண்டிருப்பதால் வாதத்தை யும், இனிப்பும் குளிர்ந்த தன்மையும் கொண்டிருப்பதால் பித்தத்தையும், வறட்சியும் துவர்ப்பும் கொண்டிருப்பதால் கபத்தையும் போக்கும். எனவே, இது மூன்று தோஷங்களையும் தணிப்பதில் சிறந்ததாகும்.

**தன்மை**

கடுக்காய்க்கு உரிய தன்மைகளைக் கொண்டதாகும். இனிப்பு புளிப்பு கசப்பு கார்ப்பு துவர்ப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் இலகு குணமும் கொண்டதாகும். ஆனால் கடுக் காயைப் போல் அல்லாமல் குளுமைத் தன்மை கொண்டதாகும். விந்துவை மிகுதியாக வளர்க்கும். இரஸாயனமானது.

**தீர்க்கும் நோய்கள்**

மூன்று தோஷங்கள் இரத்தபித்தம் ஆகியவற்றைப்போக்கும்.

**பயன்**

நெல்லிப்பருப்புத்தூளை நீருடனோ விழுதைச் சர்க்கரையும் தேனும் கலந்தோ நெல்லித்தூள் அல்லது நெல்லிச் சாற்றைத் தேனுடன் கலந்தோ உட்கொள்ளச் செய்தால்பெரும்பாடு நீங்கும்.

நெல்லிச் சாற்றை நெய்யுடன் உட்கொள்ளச் செய்தால் அக்கி நோய் தணியும். எள்ளையும் நெல்லிப் பழத்தையும் தூளாக்கித் தேனும் நெய்யும் கலந்து நாள்தோறும் காலையில் ஒரு மாதம் உட்கொள்ளச் செய்தால் அறிவாற்றல் வளரும். நன்கு பழுத்த வாழைப்பழம் நெல்லிச்சாறு தேன் சர்க்கரை எனுமிவற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு நீங்கும்.

சியவன பிராசம்—இது இரஸாயனமானது. க்ஷயம் இருமல் இழுப்பு மார்பில் காயம்படுதல் ஆகியவற்றைப்போக்கும்.

கண்டாமலகி—இது பரிணாமசூலை வாந்தி அம்லபித்தம் மூர்ச்சை இருமல் இழுப்பு சுவையின்மை இதயவலி இரத்த பித்தம் ஆகியவற்றைப்போக்கும்.

பிருங்காமலகதைலம்—இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் தலை நோய்கள் கண் நோய்கள் கால்கைவலி காதுவலி பைத்தியம் முதலியன நீங்கும்.

தாத்ர்யாதி கிருதம்—இது க்ஷயம் கால்கைவலி இரத்த பித்தம் இருமல் நீரிழிவு ஆகியவற்றைத் தணிக்கும். விந்துவையும் மாமிசத்தையும் உடல் வலிமையையும் வளர்க்கும்.

## 154. நீரடி முத்து

**ஸம். துவரக** Gynocardia Odorata

**தோற்றம்**

உயர்ந்து வளரும் மரமாகும். இதன் இலைகள் கம்பி போல் மெலிந்து நீண்டு இருக்குமெனத் தெரிகிறது. ஆனால் மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் புரச இலையைப் போன்ற இலை கொண்டிருக்குமென ஒரு நூலில் கூறப்பட்டுள்ளது. மலைப் பகுதியில் மிகுதியாக வளரும். கடைகளில் வேர்க்கடலையைப் போன்ற தோற்றத்திலுள்ள விதைகள் விற்கப்படுகின்றன.

**தன்மை**

இலகுவானது தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும். துவர்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டிருக்கும்.

நஞ்சு குட்டம் இரத்ததோஷம் அரிப்பு முதலியவற்றைப் போக்கும். இதன் எண்ணெய் விரணம் வீக்கம் உடலில் சேர்ந்துள்ள கொழுப்பு குடலிலுள்ள பூச்சிகள் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

நீரடிமுத்தின் எண்ணெய் ஒருபகுதி கருங்காலிச்சாறு மூன்று பகுதி கொண்டு எண்ணெய்ப் பக்குவம் செய்து 15 நாட்கள் மூடிவைத்துப் பிறகு எண்ணெய்க்குளியலுக்குப் பயன்படுத்தி பத்தியமான உணவு உட்கொள்ளச் செய்தால் உஷ்ணநோய் நீங்கும்.

நீரடிமுத்துத் தைலத்தை நெய் தேன் கலந்து கருங்காலிக் கஷாயத்துடன் உட்கொள்ளச் செய்து பறவைகளின் புலால் சாற்றுடன் உணவு உட்கொள்ளச் செய்தால் 200 ஆண்டுகள் வாழலாம்.

## 155. நீர்த்திப்பிலி

**ஸம். ஜலபிப்பலி** Lippianodiflora

**தோற்றம்**

இது ஆற்றங்கரை ஓரங்களில் மணற்பாங்கான ஈர நிலத்தில் முளைக்கும் சிறு செடியாகும். ஒரு கை உயரம் வளரும். கிளைகள் மென்மையானவை. மஞ்சளும் பச்சையும் கலந்த நிறம் கொண்டதாகும். இலைகள் 20 அங்குலம் வரை நீண்டு மென்மையாகக் கூரிய முனை கொண்டு மஞ்சளும் பச்சையும் கலந்த நிறத்தில் இருக்கும். பெரும்பாலும் இலைகள் காம்பின்றி இருக்கும். மலர் பல இதழ்களைக் கொண்டு திப்பிலி மலரின் தோற்றத்தில் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். மலர்கள் மீன் வாடை கொண்டிருக்கும். இதன் பழங்களைத் தின்ற மீன்கள் செத்து விடும். இதை உடல் மேல் தேய்த்தால் தோல் சிவப்பு நிறம் கொள்ளும். எரிச்சலைத் தோற்றுவிக்கும்.

**தன்மை**

இதயத்திற்கு விருப்பத்தைத் தரும். கண்களுக்கு நன்மை பயக்கும். விந்துவை வளர்க்கும். இலேசானது. மலத்தைக் கட்டும். குளுமைத் தன்மை கொண்டது. வறட்சியானது. துவர்ப்புச் சுவையுள்ளது. பக்குவமடையும்போது கார்ப்புச் சுவைகொள்ளும்.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்ததோஷம் எரிச்சல் விரணம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 156. நெருஞ்சில்

**ஸம். கோக்ஷுர** Tribulvs Terres Tris

**தோற்றம்**

இது நிலத்தில் படரும் சிறு செடிவகையாகும். நெருஞ்சில் யானை நெருஞ்சில் என இதில் இரண்டு வகைகள் உண்டு. சிறு நெருஞ்சில் இலை கடலைச் செடியின் இலையைப்போல் இருக்கும். இதன் இலைகள் மஞ்சள் நிறங் கொண்டிருக்கும். காய் ஆறு முட்களுடன் கூடி இருக்கும். இதன் கொடியிலும் இலையிலும்கூடமுட்கள் இருக்கும். யானை நெருஞ்சில்செடி சற்று உயர்ந்து வளரும். இதன் இலைகள் வெளிறிய நிறம் கொண்டிருக்கும். மலர்கள் வெள்ளை அல்லது மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். யானை நெருஞ்சில் விதை பச்சையாக இருக்கும் போது நறுமணமும் துவர்ப்புச் சுவையும் கொண்டிருக்கும். இதன் பச்சையான கிளையைத் தண்ணீரில் சிறிது நேரம் அலசினால் நீர் முட்டை நிறத்தில் அடர்த்தி பெறும். பால் விற்பவர் பாலில் தண்ணீர் கலந்து இந்தச் செடியின் கிளையைச் சிறிது நேரம் அதில் அலசுவார்கள். பால் நீர் கலக்காதது போல அடர்த்தியாகக் காணப்படும். கொங்கண நாட்டினர் இதன் காய்களைத் தூள் செய்து விந்து வளர்ச்சிக்காகப் பாலில் கலந்து உட்கொள்கின்றனர். பெரியது தன்மையில் சிறந்ததாகும்.

**தன்மை**

நெருஞ்சில் இனிப்புச் சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டது. சடராக்னியையும் உடல் வலிமையையும் விந்துவையும் வளர்க்கும். சிறுநீரை எளிதில் வெளியேற்றும்.

**தீர்க்கும். நோய்கள்**

இது நீரிழிவு இருமல் இழுப்பு மூலநோய் நீர்ச்சுருக்கு இதயநோய் சிறு நீர்க் குழாயில் தோன்றும் கல் எனுமிவற்றைப் போக்கும்.

**பயன்**

நெருஞ்சிலையிட்டுக் காய்ச்சிய பாலை உட்கொண்டால் சிறுநீர்க்குழாயில் தோன்றும் வலி நீங்கும். நெருஞ்சில் விதைத் தூளைத் தேனில் குழைத்துச் செம்மறி ஆட்டுப்பாலுடன் ஏழு நாட்கள் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்க் குழாயில் தோன்றும் கல் நீங்கும்.

நெருஞ்சில் சுக்கு எனும் இவற்றின் கஷாயத்தை நாள் தோறும் காலையில் உட்கொள்ளச் செய்தால் ஆமவாதம் இடுப்புவலி எனுமிவை நீங்கும்.

நெருஞ்சில்விதை அமுக்கராக்கிழங்கு எனுமிவற்றின் தூளைத்தேனில் குழைத்துப் பாலுடன் உட்கொள்ளச் செய்தால் க்ஷயம் இருமல் எனுமிவை நீங்கும்.

சுவதம்ஷ்ட்ராதி கிருதம்—இது இதயநோய் வலி நீர்ச்சுருக்கு நீரிழிவு மூலநோய் இருமல் க்ஷயம் ஆகியவற்றைப்போக்கும்.

பிருகத்கோக்ஷுராதிகிருதம்—இது நீர்ச்சுருக்கு நீரிழிவு விந்து தோஷம் தாதுக்ஷயம் உஷ்ணவாதம் சிறுநீர்ப்பையில் கல் ஆகிய வற்றைத் தணிக்கும்.

## 157. நேபாளதனியா

**ஸம். தும்வரு Zanthoxylum Alatum**

**தோற்றம்**

இது கொத்துமல்லியைப் போலவே இருக்கும். ஆனால், விதைகள் பெரியவையாக இருக்கும்.

**தன்மை**

கசப்புக் கார்ப்புச் சுவை கொண்டு பக்குவம் அடையும் போது கார்ப்புச்சுவை கொள்ளும். இலகு குணமும் தீக்ஷ்ணத்

தன்மையும் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். எரிச்சலைத் தோற்றுவிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாதம் கபம் கண்நோய் காதுநோய் உதட்டுநோய் தலைபளு கிருமிநோய் குட்டம் வயிற்றுவலி சுவையின்மை, கடுமையான மண்ணீரல்நோய் நீர்ச்சுருக்கு எனுமிவற்றைப் போக்கும்.

## 158. நேர்வாளம்

**ஸம். தந்தி Croton Polyandrum**

திரவந்தி — பெரிய நேர்வாளம்.

**தோற்றம்**

நேர்வாளம் புதராக மண்டி வளரும் சிறு செடியாகும். இதில் பலவகைகள் உண்டு எனக் கூறப்படுகிறது. அடிப்பகுதியிலுள்ள இலைகள் அகன்று பெரியவையாக இருக்கும். நுனிப்பகுதியில் உள்ள இலைகள் சிறியவையாகக் கூரிய முனை கொண்டிருக்கும். இலைகளின் அடிப்பகுதியிலும் இளங்கிளைகளிலும் அடர்ந்த உரோமம் போன்றவை படர்ந்திருக்கும். இலைக் காம்பினை ஒட்டி மலர்க் காம்பு அதைவிடக் குட்டையாகத் தோன்றும். ஆண்மலர் பெண்மலர் என வேறு வேறு காம்புகளில் தோன்றும். ஆண்மலரின் காம்பு பெண் மலர்க் காம்பைவிட நீண்டிருக்கும். மலர் காயானதும் காம்பு வளைந்து கீழ்நோக்கித் தொங்கும். மலர்கள் மஞ்சள் நிறத்தில் சிறியவையாக இருக்கும். காய் மூன்று பகுதிகளாகப் பிரிந்து மிகச் சிறிய உரோமங்களைப் போன்ற உறுப்புகளால் மூடப்பட்டிருக்கும். இதில் மூன்று விதைகள் இருக்கும். பங்குனி சித்திரை மாதங்களில் பூக்கும். முதுவேனிற் பருவத்தில் காய்க்கும். பெரிய நேர்வாளம் மரமாக வளரக் கூடியது. விதைகள் முதலியன முன்னவைவிடப் பெரியவையாக இருக்கும்.

**தன்மை**

இருவகை நேர்வாளங்களும் பேதியாகச் செய்யும். கார்ப்புச் சுவையும் உஷ்ணத் தன்மையும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

ஆஸனவாயில் தோன்றும் நோய்கள் மூலநோய் சிறுநீர்ப் பையில் தோன்றும்கல் வயிற்று வலி குன்மம் அரிப்பு குட்டம் எரிச்சல் என்பனவற்றைப் போக்கும்.

## 159. நொச்சி

**ஸம். நிர்குண்டி** Vitex Negundo

**தோற்றம்**

இது உயரமாக வளரக்கூடியது. மலர்களின் நிறங்களைக் கொண்டு வெண்மை நீலம் என இருவகையாக இருக்கும். கர்த்தரீ நிர்குண்டி அரண்ய நிர்குண்டி என நொச்சியில் வேறு இருவகையும் இருப்பதாக நூல்கள் கூறுகின்றன. இலைகள் சிறிது அகன்று நீளமாக இருக்கும்.

**தன்மை**

இருவகை நொச்சிகளும் கசப்புத்துவர்ப்புச்சுவைகளும் இலகு குணமும் கொண்டிருக்கும். நினைவாற்றலை வளர்க்கும். கண்களுக்கு நன்மை தரும். தலைமுடியை வளர்க்கும்.

வெண்நொச்சி—இது வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். இதன் இலை இலகுத் தன்மையுள்ளது. வாதகபங்களைத் தணிக்கும்.

நீலநொச்சி—இது கசப்பு கார்ப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். வாதகபங்களைத் தணிக்கும்.

கர்த்தரீநிர்குண்டி—இது கார்ப்புச்சுவையும் கசப்புச்சுவையும் கொண்டிருக்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

அரண்யநிர்குண்டி—இது கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டி ருக்கும் கபவாதங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

நொச்சி வயிற்றுவலி வீக்கம் ஆமவாதம் கிருமிநோய் குட்டம் சுவையின்மை விரணம் ஆகியவற்றைத் தணிக்கும்.

வெண்நொச்சி—இது க்ஷயம் குட்டம் அரிப்பு வயிற்றுவலி இருமல் ஆகியவற்றைத் தணிக்கும்.

நீலநொச்சி—இது இருமல் கபவீக்கம் வாதநோய் பெரும் பாடு ஆகியவற்றைத் தணிக்கும்.

நொச்சிஇலை—இது கிருமிநோய் குட்டம் வீக்கம் சுவை யின்மை அரிப்பு எனுமிவற்றைத் தணிக்கும்.

காட்டுநொச்சி மலர்—இது கிருமிநோய் மண்ணீரல்வீக்கம் குன்மம் குட்டம் வீக்கம் சுவையின்மை அரிப்பு ஆகியவற்றை நீக்கும்.

**பயன்**

நொச்சி இலையின் விழுதில் நெய்யைச் சேர்த்துப் பூசச் செய்தால் கபத்தினால் தோன்றிய அக்கி தணியும்.

நொச்சிவேர் விழுதை உட்கொள்ளச் செய்தால் நாகத்தின் விஷம் தணியும். நொச்சி இலைகளையும் வேரையும் கொண்டு அரைத்துச் சுரசமாக்கி எண்ணெய் சேர்த்துக்காய்ச்சி அதை எண்ணெய்க் குளியலுக்கும் உட்கொள்ளவும் பயன்படுத்தினால் நரம்புச் சிலந்தி குட்டம் வாதநோய் அரிப்பு எனுமிவை நீங்கும்.

நொச்சிவேர் பூனைஎலும்பு அதிவிடயம் கிரந்திதகரம் ஆகிய வற்றை மைய அரைத்து அதிலிருந்து சாறு எடுத்து எண்ணெய்க் குளியலுக்கும் பருகவும் பயன்படுத்தினால் எலிவிஷம் தணியும்.

நீர்குண்ட்யாதிதைலம் — இது நரம்புச் சிலந்தி குட்டம் வாதநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 160. பதிமுகம்

**ஸம். பத்மகம்** Prunus Pudum

**தோற்றம்**

பதிமுகம் பெருமரமாக வளரக் கூடியதெனத் தெரிய வருகிறது. இந்த மரம் ஸிம்லா கேதார் முதலியமலைகளில் வளரக்கூடியது. நறுமணமுள்ள பொருள்களில் ஒன்றாகும். ]டையிடையே பிளவுபட்ட சிறு இலைகளுடன் கூடியிருக்கும். ]ன் மலர்கள் சிறிது தாமரைமணம் கொண்டிருக்கும். மரப் பட்டை சிவந்து காணப்படும். இம்மரத்திற்குக் காய்கள் இல்லை.

**தன்மை**

துவர்ப்பு கசப்புச் சுவைகளும் இலகு குணமும் சீதவீரியமும் கொண்டிருக்கும். உட்கொண்டதும் விந்துவை வளர்க்கும்.

கருவை நிலைக்கச் செய்யும். வாதத்தை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும். எண்ணெப்பசை கொண்டது.

எரிச்சல் அக்கி குட்டம் இரத்தபித்தம் வாந்தி விரணம் நாவறட்சி ஆகியவற்றைத் தணிக்கும்.

பதிமுகத்தை மைய அரைத்து நெய் கலந்து உட்கொள்ளச் செய்தால் விக்கலும் இழுப்பும் தணியும்.

பதிமுகம் சந்தனம் இவற்றை விழுதாக அரைத்து அரிசி கழுவிய நீருடன் சர்க்கரையும் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் ரத்தபித்தம் தணியும்.

பதுமகாதிலேகியம்—இது இருமல் இழுப்பு விக்கல் ஆகிய வற்றைத் தணிக்கும்.

## 161. பயறு

**ஸம். முத்க** Phaseolus Mungo

**தோற்றம்**

நிலத்தில் பயிர் செய்யப்படும் தானியமாகும். கருநிறம் பச்சை மஞ்சள் வெண்மை சிவப்பு என ஐந்து நிறங்களால் ஐவகைப்பட்டதாகும். பச்சைநிறமுள்ளது சிறந்ததாகும். பொதுவாக மார்கழியில் விதைக்கப்பட்டு மாசி பங்குனி மாதங் களில் பலன் தரும். காட்டுப்பயறு தானாகவே நிலத்தின் வரப்புகளில் முளைக்கும். இதன் விதைகள் கருநிறம்கொண்டு மிகச் சிறியவையாக இருக்கும். இது மருத்துவத்திற்குப் பயன் தரும்.

**தன்மை**

இனிப்புச்சுவையும் வறட்சித் தன்மையும் இலகு குணமும் சீதவீர்யமும் கொண்டிருக்கும். கண்களுக்கு நலமானது. கப பித்தங்களைத் தணிக்கும். சிறிதளவு வாதத்தை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சலைத் தணிக்கும்.

காட்டுப்பயறு—குன்மத்தையும் மூலநோயையும் போக்கும்.

காட்டுப்பயற்றின் கஞ்சி இலகுத் தன்மை கொண்டது. சடராக்னியை வளர்க்கும். கண்களுக்கு நலமானது. உடலைச் செழிப்புறச் செய்யும். உண்டதும் விந்துவைத் தோற்றுவிக்கும். இரத்தபித்தம் சிறுநீர்த்தடை ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

தன் கஞ்சி காய்ச்சலைத் தணிக்கும்.

பயறு கொள்ளு இவற்றால் செய்த கஞ்சி கபம் சீற்ற முற்ற பித்தத்தினால் தோன்றிய இருமலையும் தணிக்கும்.

முத்கவடகம்—இது கபத்தை வளர்க்கும். இரத்த தோஷத்தைப் போக்கும். விந்துவையும் வலிமையையும் வளர்க்கும். வாதபித்தங்களைத் தணிக்கும்.

## 162. பருத்தி

**ஸம். கார்ப்பாஸ** Gossypium Her Baceum

**தோற்றம்**

பருத்தி நம்நாட்டில் தொன்றுதொட்டு விளங்கிவரும் செடியாகும். இது, பருத்தி காட்டுப்பருத்தி என இருவகைப்படும். இதன் இலைகள் ஆமணக்கு இலைகளைப் போல் ஆனால் அவற்றைவிடச் சிறியவையாக இருக்கும். இலைகளின் நடுப் பகுதி எண்ணெய்ப்பசை கொண்டும், இலைகளின் பின்பகுதி சுரசுரப்புடனும் காணப்படும். இலைகளின் மேற்பகுதி பச்சை நிறத்துடனும் பின்பகுதி சிறிது வெளிறியும் காணப்படும். இலைக்காம்பு நீண்டிருக்கும். மலர் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இது குளிர்காலத்தில் பூத்துப் பிறகு காய்க்கும். வைகாசி ஆனி மாதங்களில் காய்ந்து உடையும். அதில் பருத்தியும் விதைகளும் காணப்படும். இதன் விதைகளிலிருந்து எண்ணெய் எடுக்கப்படுகிறது. பருத்திச்செடியின் வேர் மேற்பகுதியில் வெளிறிய நிறமும் உட்பகுதி வெண்மை நிறமும் கொண்டிருக்கும். மணம் ஏதும் இருக்காது. கசப்பு அல்லது துவர்ப்புச்சுவை கொண்டிருக்கும். கருமை இளஞ் சிவப்பு

நிறங்களைக் கொண்ட மலர்களால் பருத்தி மேலும் இருவகை யாகக் காணப்படுகிறது. காட்டுப்பருத்தி ஆண்டு முழுவதும் பூத்துக் காய்க்கும்.

**நன்மை**

பருத்தி குளுமைத் தன்மை கொண்டது. இனிப்புச் சுவை யும் இலகு குணமும் கொண்டிருக்கும். தாய்ப்பாலை மிகச் செய்யும். உடலுக்கு வலிமை தரும். பித்தகபங்களைத் தணிக்கும்.

பருத்திக்காய் துவர்ப்பு இனிப்புச்சுவைகள் கொண்டதாகும். குருத்தன்மையும் மிக்க உஷ்ணவீரியமும் கொண்டதாகும். வாத கபங்களைத் தணிக்கும்.

பருத்திவிதை குருத்தன்மையும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். உண்டதும் விந்துவை வளர்க்கும். தாய்ப் பாலை வளர்க்கும்.

காட்டுப்பருத்தி குளுமைத் தன்மை கொண்டது. சுவை யூட்டும்.

**தீர்க்கும் நோய்கள்**

பருத்தி நாவறட்சி எரிச்சல் சோர்வு மூர்ச்சை ஆகிய வற்றைத் தணிக்கும். பருத்திக்காய் இரத்ததோஷம் காதில் ஒலிதோன்றுதல் காதிலிருந்து சீழ்வடிதல் ஆகியவற்றைத் தணிக் கும்.

காட்டுப்பருத்தி விரணத்தையும் கத்தியால் பட்ட வெட்டுக் காயத்தையும் ஆற்றும்.

**பயன்**

பருத்திப்பூவையும் பட்டையையும் மைய அரைத்துப் பூசினால் குட்டம் தணியும்.

பருத்திவிதையையும் கொள்ளையும் இட்டுக் காய்ச்சிய கஷாயத்தால் செய்த நெய்மருந்து வாத நோயைத் தணிக்கும்.

பருத்திவேரின் சாற்றைப் பருகச்செய்தால் அடிபடுதலால் தோன்றும் நாவறட்சி தணியும்.

ச.—26

பருத்திவேரின் விழுதை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் வெள்ளைப் பெரும்பாடு நீங்கும்.

பருத்திக்காயை மைய அரைத்து நெய் சேர்த்துப் பூசினால் தேள் விஷம் தணியும்.

பருத்திச் செடியை வேருடன் உலர்த்தி எரித்துச் சாம்பலை இரண்டுமடங்கு சம்பா அரிசி கலந்து பாலுடன் பக்குவம் செய்து நெய் கலந்து உட்கொள்ளச் செய்தால் வீக்கநோய் தணியும்.

கார்ப்பாஸதைலம்—இது நரம்புச் சிலந்தியைத் தணிக்கும்.

## 163. பர்ப்பாடகம

**ஸம். பர்ப்பட** Oldenlandia Herbacca

**தோற்றம்**

ஓது சிறு செடியாகும். பயிர் நிலங்களில் தானாகவே ப க்கும். இதில் சிவப்பு நீலம் எனும் இருநிறங்களால் இரு வகைகள் உண்டு. இலைகள் மிகவும் சிறியவையாய் வரிசை யாகக் காணப்படும். உலர்ந்ததும் தூளாகிவிடும் ன காய்கள் மிகவும் சிறியவை.

**தன்மை**

கசப்புச்சுவையும் இலகு குணமும் குளுமைத் தன்மையும் கொண்டது. வாதத்தை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும். மலத்தைத் தடுக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்தபித்தம் நாவற சி காய்ச்சல் எரிச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

பர்ப்பாடகத்தின் கஷாயத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

கோரைக்கிழங்கு பர்ப்பாடகம் இவற்றின் தூளைத் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் அதிசாரம் தணியும்.

பர்ப்பாடகக் கஷாயம் பித்தக் காய்ச்சலைத் தணிக்கும்.

பர்ப்பாடகக் கஷாயத்தில் தேன் கலந்து பயன்படுத்தினால் வாந்தி தணியும்.

## 164. பலா

**ஸம். பனஸ** Artocarpus Integrifulia

### தோற்றம்

பலா நெடு மரமாக வளரக் கூடியது. அடிமரம் பருத்து வலிமையுள்ளதாக இருக்கும். பட்டை கருநிறம் கொண்டிருக்கும். கிளையை வெட்டினால் வெண்ணிறப்பால் வடியும். இலைகள் முதலில் மெலிந்தும் நுனியில் அகன்று வட்டமாகவும் இருக்கும். மலர்கள் புலப்படா. கிளைகளிலும் வேர்ப்பகுதியிலும் காய்க்கும். இளவேனில் பருவத்தில் காய்க்கத்துவங்கும். முதுவேனில் பருவத்தில் நன்கு பழுக்கும். பழங்கள் நீண்ட உருண்டை வடிவத்துடனும் பெரியதாகவும் மேற்பகுதியில் மென்மையான முட்கள் நிறைந்ததாகவும் இருக்கும். பலாவில் பலவகைகள் உண்டு.

### தன்மை

பலாப்பழம் குளுமைத் தன்மையும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். சுவையுள்ளதாகும். உடலில் வலிமையையும் மாமிசத்தையும் வளர்க்கும். கபத்தை மிகுதியாக்கும். விந்துவை வளர்க்கும். இதன் காய் மலத்தைக்கட்டும். துவர்ப்பு இனிப்புச் சுவைகள் கொண்டதாகும். வாதத்தை வளர்க்கும். எரிச்சலைத் தோற்றுவிக்கும். கபம் கொழுப்பு வலிமை என்பனவற்றை வளர்க்கும். இதன் சுளைகளுக்குள் இருக்கும் விதை விந்துவை வளர்க்கும். பளுவானது. சிறுநீரை மிகுதியாக்கும். குன்மம் வயிற்று நோய்கள் உள்ளவர்கள் பலாப்பழத்தை உண்ணக்கூடாது.

### தீர்க்கும் நோய்கள்

இரத்தபித்தம் காயம்படுதலால் தோன்றும் விரணம் என்பனவற்றைப்போக்கும். இதன் விதைகள் வாதம் பித்தம் கபம் என்பனவற்றைப் போக்கும்.

# 165. பவழம்

**ஸம். வகுல Mimusops - Elengi**

### தோற்றம்

இது நெடுமரமாக வளரக் கூடியது. இதன் மலர்கள் சிறியவையாக மணியின் தோற்றத்தில் இருக்கும். கூதிர்ப் பருவத்தில் மலர்ந்து தேனைப் போன்ற நறுமணம் கொண்டிருக்கும். இவற்றை மாலையாகத் தொடுத்து அணிவது உண்டு. காய்கள் நன்கு பழுத்ததும் சிவப்பு நிறம் கொள்ளும். மலர் துவர்ப்புச் சுவை கொண்டிருக்கும். இலை மலர் காய் என எதைப் பறித்தாலும் வெண்ணிறமுள்ள பால் சுரக்கும். பட்டையை உரித்தாலும் பால் சுரக்கும். இது பல்நோய் மருத்துவத்தில் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது.

### தன்மை

பவழம் இனிப்புச்சுவையும் குளுமைத்தன்மையும் கொண்டது. இதயத்திற்கு நன்மைதரும். இதன் மலர் இனிப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டிருக்கும். எண்ணெய்ப் பசையும் நறுமணமும் உள்ளது. மலத்தைத் தடுக்கும்.

இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் குருத்தன்மையும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். மலத்தைத் தடுக்கும். கப பித்தங்களைத் தணிக்கும். பற்களுக்கு வலிமைதரும். இதன் விதைகள் ஆடிய பற்களையும் கெட்டிப்படுத்தும். மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் தலைவலியைப் போக்கும்.

### பயன்

பவழமரக்கட்டையின் கஷாயத்தில் திப்பிலித்தூளையும் தேனையும் நெய்யையும் கலந்து வாய் கொப்பளிக்கச் செய்தால் ஆடிய பற்கள் கெட்டிப்படும். பல்வலி தணியும்.

பவழவேரின் மேல்தோலின் விழுதைப் பாலுடன் மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்தால் வயதானவனின் அசைந்த பல்லும் கெட்டிப்படும்.

பவழப்பட்டையைப் பற்களால் மென்று வந்தால் அசையும் பற்களும் கெட்டிப்படும்.

வகுலாதி தைலம் -- மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினாலும் வாய் கொப்பளித்தாலும் பற்கள் திடப்படும்.

## 166. பனை

**ஸம். கால Borassus Flabelliter**

### தோற்றம்

மிகவும் உயர்ந்து வளரும் மரமாகும். அடிமரம் தடித்து கருநிறம் கொண்டு கரடுமுரடாக இருக்கும். இதற்குக் கிளைகள் இல்லை. இலைக்காம்புகள் நான்கைந்துகை நீளமும் ஆறு அங்குலம் வரை அகன்றும் உறுதியாகக் காணப்படும். இலைகள் வட்டமாக முனையில் பல பிரிவுகளாகப் பிரிந்து உறுதியான நரம்புகளுடன் காணப்படும். இதில் ஆண்பெண் என இருவகை உண்டு. ஆண்மரம் காய்க்காது. மலர்கள் மட்டும் காணப்படும். பெண்மரம் பூத்துக் காய்க்கும். காய்கள் குலையாகப் பல சேர்ந்திருக்கும். காய்கள் உருண்டையாக இருக்கும்.

### தன்மை

பனை இனிப்புச் சுவையும் இலகு குணமும் எண்ணெய்ப் பசையும் கொண்டிருக்கும். மலத்தை வெளியேற்றும். சிறிது மயக்கத்தைத் தோற்றுவிக்கும். கபத்தை வளர்க்கும். கசப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டிருக்கும்.

பனைநுங்கு இனிப்புச்சுவை இலகுத்தன்மை எண்ணெய்ப் பசை கொண்டிருக்கும். பேதியாகச் செய்யும். கபத்தைத் தணிக்கும். வாதபித்தங்களைத் தணிக்கும். பனம்பழம் இனிப்புச்சுவையும் புளிப்புத் தன்மையும் சீதவீரியமும் கொண்டிருக்கும். கபத்தை வளர்க்கும். வாதபித்தங்களைத் தணிக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

இரத்ததோஷம் காயம் எரிச்சல் க்ஷயம் ஆகியவற்றைப் போக்கும். பழம் எரிச்சலையும் நாவறட்சியையும் சோர்வையும் தணிக்கும்.

### பயன்

பனைவேர் விழுதை இட்டுக்காய்ச்சிய பாலையோ நெய்யையோ உட்கொள்ளச்செய்தால் சிறுநீர்த்தடை நீங்கும்.

பனைமட்டைச் சாற்றுடன் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் பைத்திய நோய் தணியும்.

## 167. பாகல்

**ஸம். காரவேல்ல** Momordica Charavtia

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. பெரிது சிறிது முள்ளுடையது காட்டில் தோன்றியது என நான்கு வகையாகும். காட்டுப்பாகல் தவிர மற்றவை மூன்றும் உணவில் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. மற்றும் காட்டுப்பாகலுக்குக் காய்கள் ல்லை. இதன் கிழங்கு மருத்துவத்திற்குப்பயன்படுத்தப்படுகிறது.

**தன்மை**

பாகல் கசப்புச்சுவையும் இலகு குணமும் குளுமைத் தன்மையும் கொண்டது. வாதத்தை வளர்க்கும். கப பித்தங்களைத் தணிக்கும்.

சிறுபாகல் சிறப்பாக இலகுத்தன்மை கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும்.

காட்டுப்பாகல்-இலகுத் தன்மையும் தீக்ஷ்ணகுணமுமுள்ளது. கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல் இரத்ததோஷம் சோகை நீரிழிவு கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும். சிறுபாகல் குட்டம் சுவையின்மை இருமல் இழுப்பு காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

காட்டுப்பாகல் நஞ்சு ஸர்ப்ப விஷம் அக்கி எனுமிவற்றைத் தணிக்கும்.

**பயன்**

பாகற்கொடி கஷாயத்துடன் காய்ச்சிய எண்ணெயைக் குளியலுக்குப் பயன்படுத்தினால் வாத இரத்தம் தணியும்.

பாகல்வேரை மைய அரைத்துப் பூசினால் நழுவிய பெண் குறி சீர்படும்.

பாகல் சாற்றில் எண்ணெய் கலந்து உட்கொள்ளச் செய்தால் காலரா தணியும்.

காட்டுப்பாகல் வேரின் சாற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் காமாலை தணியும்.

காட்டுப்பாகல் சாறு அல்லது விழுதைப்பாலுடன் பத்நாட்கள் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் மணல் ஆகியவை நீங்கும்.

காட்டுப்பாகல் கிழங்கைத் தாய்ப்பாலுடன் மூக்கிலிடும் மருந்தாகப்பயன்படுத்தினால் யானைக்கால் நோய் தணியும்.

காட்டுப்பாகல் கிழங்கின் சாற்றை உட்கொள்ளச் செய்தால் பாம்பு விஷம் நீங்கும்.

## 168. பாக்கு

**ஸம். பூக** Araca Catechv

**தோற்றம்**

இது மிக உயர்ந்து வளரும் மரமாகும். தோற்றத்தில் பனைமரம் போலக் காணப்படும். இம்மரத்தில் இலைகளின் நடுவில் கொத்துக் கொத்தாகப் பாக்குக் காய்கள் தொங்கும். முற்றிய காய்களையும் பழங்களையும் இரண்டு வகைகளாகப் பிரித்து வேறுபடுத்துவார்கள். இதன் காய்கள் ஜாதிக்காய்களைப் போல இருக்கும். முற்றிய காய்களை உலர்த்திப் பச்சையாக விற்பர். பழங்களை இரண்டாக வெட்டி நீருடன் கொதிக்க வைத்துப் பின் விற்பனைக்கு அனுப்புவர். பாக்கில் சைலி தைல்வண கௌல்ய கோண்ட சேஉல வல்லீகுல சந்திரா புரீய சௌல்யம் என எட்டுவகைகள் இருப்பதாக நூல்கள் கூறுகின்றன. இவற்றில் சேஉல வல்லீகுலம் என்பவை கொங்கண நாட்டிலும், சௌல்யம் தெலுங்கு நாட்டிலும் தோன்றுபவை எனக் கூறப்படுகிறது. பாக்கை வெற்றிலையோடல்லாது தனியாக மெல்வதால் சோகை வாதநோய் முதலியன தோன்றும்.

**தன்மை**

பாக்கு இனிப்புச்சுவை கொண்டது. பேதியாகச் செய்யும். ரஸாயனமானது. சிறுநீரைத் தடுக்கும். சடராக்னியைக் குறைக்கும். வாதத்தை வளர்க்கும்.

இளம்பாக்கு—நஞ்சுக்கு இணையான தன்மை கொண்டதாகும்.

முற்றியபாக்கு—குருத்தன்மை கொண்டது. துவர்ப்புச் சுவையுள்ளது. சடராக்னியையும் பார்வையையும் கெடுக்கவல்லது. கபபித்தங்களைத் தணிக்கும். நீருடன் சுண்டச் செய்த பாக்கு மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

பாக்குப்பூ—துவர்ப்பு இனிப்புச்சுவைகள் கொண்டது. குருத்தன்மை உள்ளது.

பாக்குப்பிசின்—உவர்ப்பு புளிப்புச்சுவைகளும் குருத்தன்மையும் சீதவீரியமும் கொண்டது. பித்தத்தை வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் பித்தம் நோய்கள் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

பாக்கு சந்தனம் எனுமிவற்றின் விழுதை உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

பூககண்டம்—இது வயிற்றுவலி அசீரணம் அதிஸாரம் க்ஷயம் நாவறட்சி வாந்தி மூர்ச்சை சோகை ஆகியவற்றைத் தணிக்கும்.

கிரமுகாதி ரஸாயனம்-காய்ச்சல் எரிச்சல் இரத்தபித்தம் க்ஷயம் சடராக்னிக்குறைவு வாந்தி நீரிழிவு மூலநோய் சிறுநீர்த் தடை என்பனவற்றைத் தணிக்கும்.

## 169. பாச்சோத்தி

**ஸம். லோத்ரா** Symplocos Racemosa

**தோற்றம்**

இது மலைப்பகுதிகளில் நெடுமரமாக வளரக் கூடியதாகும். இதில் சிவப்பு வெள்ளை என இருவகைகள் உண்டு. இலைகள் பெரியவையாக நீண்டிருக்கும். மலர்கள் வெள்ளை மஞ்சள் சிவப்பு நிறங்கள் கலந்திருக்கும். இதன் பட்டை ஆடைகளுக்குச்

ாயம் தோய்க்கப் பயன்படும். சிவப்பு நிறமுள்ளது சிறந்தது. ல் தில்வகம் என்ற வகை ஒன்றிருப்பதாகக் கூறப்படுகிறது.

இதன் பட்டை சிவப்புநிறம் கொண்டிருக்கும்.

**தன்மை**

இருவகைகளும் துவர்ப்புச்சுவையும் இலகு குணமும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். மலத்தைக்கட்டும். கண்களுக்கு நலமானது. கபபித்தங்களைத் தணிக்கும். வறட்சித் தன்மையுள்ளது.

**தீர்க்கும் நோய்கள்**

இது இரத்ததோஷம் ரத்தபித்தம் காய்ச்சல் அதிசாரம் விக்சம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

வெட்டிவேர் மஞ்சள் சந்தனம் பாச்சோத்தி பதிமுகம் வெண் சந்தனம் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு இடித்து அரிசி கழுவிய நீருடன் அரைத்து அதில் சர்க்கரை சேர்த்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும். பாச் சோத்தியின் விழுதை மேல் பூச்சாகப்பயன்படுத்தினால் குட்ட நோய் தணியும். பாச்சோத்தி இலையின் விழுதை நெய்யில் வதக்கிச் சர்க்கரை கலந்து கஞ்சியாகவோ அடை போலவோ பக்குவம் செய்து பயன்படுத்தினால் இருமல் ஆமாதிசாரம் வாந்தி நாவறட்சி ஆகியவை தணியும்.

பாச்சோத்தியின் விழுதை ஆலம்பட்டைக் கஷாயத்துடன் பயன்படுத்தினால் வெள்ளைப் பெரும்பாடு தணியும்.

## 170. பாதிரி

**ஸம். பாடலா** Cocsalpinia Bandu Calla

**தோற்றம்**

பாதிரி நெடுமரமாக வளரும். மஞ்சள் வெண்மை கருமை எனும் நிறங்களால் இது மூன்று வகைப்படும். நீண்டகாம்பும் இரண்டு அல்லது நான்கு இலைகள் சேர்ந்தும் முனையில் ஒரு தனி இலையும் இருக்கும். முனை இலையைவிட அடியில் இருக்கும் இலைகள் பெரியவையாக இருக்கும். இளந்துளிராக

இருக்கும்போது இலைகளின் பின்பகுதியில் வெண்ணிறமுள்ள மாவு பூசியது போலிருக்கும். முதிர்ந்த பின் சொரசொரப்புடையது தாகும். இது இளவேனில் பருவத்தில் பூக்கும். மலர்கள் வெளிறிய சிவப்பு நிறம் கொண்டிருக்கும். மலரிதழ்கள் சேர்ந்திருக்கும். நறுமணம் கொண்டிருக்கும். இதன் மலர்களில் தேன் மிகுதியாக இருக்கும். மலைப்பகுதியில் தோன்றும் மலர்களில் தேன் மேலும் மிகுதியாக இருக்கும். மஞ்சள் நிறமலர்களைக் கொண்ட மரமும் வெண்ணிற மலர்களைக் கொண்ட மரமும் மலைச் சரிவுகளிலேயே காணப்படும். மேலும் க்ஷுத்ர பாடல வல்லீபாடல பூமிபாடல என மூன்று வகைகள் இருப்பதாக நூல்கள் கூறுகின்றன. இவற்றில் பூமிபாடல என்பது பாதரஸத்தைக்கட்டும் முறைக்குப் பயன்படுமெனத் தெரியவருகிறது.

**தன்மை**

சிவப்புப்பாதிரி துவர்ப்புச் சுவையும் இனிப்புச்சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டதாகும். இதயத்திற்கு நன்மை தரும். கபபித்தங்களைத் தணிக்கும்.

வெண்பாதிரி நறுமணம் கொண்டதாகும்.

பூமிபாடல கார்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். வலிமையையும் விந்துவையும் வளர்க்கும்.

க்ஷுத்ரபாடல என்பது எண்ணெய்ப்பசை கொண்டது. கபத்தைத் தணிக்கும்.

வல்லீபாடல என்பது உஷ்ண வீரியம் கொண்டது. வாதபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பாதிரி–சுவையின்மை இழுப்பு வீக்கம் மூலநோய் இரத்த தோஷம் அதிஸாரம் வாந்தி விக்கல் நாவறட்சி ஆகியவற்றைப் போக்கும்.

க்ஷுத்ரபாடல என்பது குட்டம் நஞ்சு மிகுதியாக வளர்ந்துள்ளகொழுப்பு ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

பாதிரியிலை விரணங்களின்மேல் மூடப்பயன்படும்.

பாதிரிக்ஷாரம் பயன்படுத்தினால் சிறுநீர்ப் பையில் கல் நீங்கும்.

பாதிரி மலர்களையும் காய்களையும் கஷாயமாகச் செய்து அதில் தேன் கலந்து பயன்படுத்தினால் விக்கல் தணியும்.

பாதிரிப்பட்டையின் விழுது—இதை கஷாயங்களுடன் சேர்த்து எண்ணெய்ப் பக்குவம் செய்து எண்ணெய்க் குளியலுக்குப் பயன் படுத்தினால் நெருப்பால் சுட்டபுண்களின்வலி எரிச்சல் முதலியன தணியும்.

## 171. பிரண்டை

**ஸம். வஜ்ரவல்லி** Vitis Quadrangularis

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. இது த்விதார—திரிதார—சதுர்தார எனத் தோற்றத்தால் மூன்று வகைகளாகும். மரங்களைச் சுற்றிக் கொண்டு வளரும் இயல்பினது. பனை மரத்தில் வளரும் கொடி சிறந்தது. ஒவ்வொரு கணுவிலிருந்தும் சிறுசிறு கம்பிகளைப்போன்ற கொடிகளில் கோவை இலையைப் போன்ற இலைகளும் தோன்றும். இது எளிதில் ஒடியக்கூடியதாகும். நன்றாக முற்றியபோது ஒவ்வொரு கணுவிலும் சிறுசிறு கொத்தாகக் காய்கள் தோன்றும். இவை பழுத்தபோது கருநிறம் கொள்ளும்.

**தன்மை**

இனிப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் இலகு குணமும் கொண்டதாகும். உடைந்த எலும்புகளை இணைக்கும். உண்டதும் விந்துவை வளர்க்கும். பித்தத்தை வளர்க்கும். வாத கபங்களைத் தணிக்கும்.

திரிதார—மூன்று பட்டைகளைக் கொண்டது. இனிப்புச் சுவையும் இலகு குணமும் வறட்சித் தன்மையும் கொண்டிருக்கும்.

சதுர்தார—நான்குபட்டைகளைக் கொண்டது. உஷ்ணவீரிய முள்ளது.

**தீர்க்கும் நோய்கள்**

சிறப்பாகப் பிரண்டை மூலநோயையும் சடராக்னிக் குறைவையும் தீர்க்கும். பூதவிகாரம் வயிற்றுவலி வாதரத்தம் கால் கைவலி வாதநோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

பிரண்டையின் சாற்றை நெய்யையும் பாலையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் உடைந்த எலும்புகள் இணையும்.

## 172. புங்கன்

**ஸம். கரஞ்ச** Pongamia Glabravent

**தோற்றம்**

புங்கன் மிகவும் உயர்ந்து கிளைகள் பலகொண்டு நல்ல நிழல் தரும் மரமாக வளரும். ஈரமுள்ள நிலத்தில் நன்றாக வளரும். எனவே நீர் நிலைகளின் கரைகளில் நன்கு வளரும். இதன் இலைகள் எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். இலைகளின் மேற்பகுதி நீலநிறமும் பின்பகுதி பச்சை நிறமும் கொண்டிருக்கும். மலர்கள் நீலநிறம் கொண்டு கொத்துக் கொத்தாகப் பூக்கும். சித்திரை வைகாசி மாதங்களிலும் கார்காலத்திலும் பூக்கும். காய்கள் இரண்டு அங்குலம் வரை நீண்டு தட்டையாகி முனையில் சற்று வளைந்திருக்கும்.

**தன்மை**

இது கசப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் தீக்ஷ்ணத்தன்மையும் கொண்டது. இலைகள் பக்குவமடையும்போது கார்ப்புச் சுவைகொள்ளும். உஷ்ணவீரியமுள்ளது. இலேசானது. பித்தத்தை வளர்க்கக்கூடியது. மலத்தை இளகச் செய்யும்.

புங்கன் இலை இலகு குணமும் உஷ்ணவீரியமும் பக்குவம் பெறும்போது கார்ப்புச்சுவையும் கொள்ளும். மலத்தை வெளியேற்றும். பித்தத்தை வளர்க்கும். கப வாதங்களைத் தணிக்கும். இதன்மலர் உஷ்ணவீரியமுள்ளது. மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

புங்கன் விதை—கபவாதங்களைத் தணிக்கும். இலகு குணமும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும்.

புங்கன் எண்ணெய்—மிக்க எண்ணெய்ப்பசையும் தீக்ஷ்ண குணமும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். வாதத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூலநோய் இரத்ததோஷம் மண்ணீரல்வீக்கம் பெரு வயிறு நீரிழிவு நஞ்சு குட்டம் முதலியவற்றைப் போக்கும். இதன் எண்ணெய் குட்டம் அரிப்பு முதலிய தோல் நோய்களைப் போக்கும்.

**பயன்**

புங்கன் விதைகளை மைய அரைத்துப் பூசினால் குட்டம் தணியும். புங்கன் கஷாயத்தைப் பசுவின் சிறுநீருடன் கலந்து குளியலுக்கும் மேல் பூச்சுக்கும் உட்கொள்ளவும் பயன்படுத்தி னால் கிருமி குட்டம் நீங்கும்.

புங்கன் பட்டையை மைய அரைத்துக் கொதிக்க வைத்து இளஞ்சூட்டில் பூசினால் அக்கி தணியும்.

பூதிகரஞ்ச சுக்ரம்—இது மூலநோய் பெருவயிறு குன்மம் மண்ணீரல்வீக்கம் நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில் கல் முதலிய வற்றைத் தணிக்கும்.

பூதிகரஞ்ச சூரணம்—இது குன்மம் பெருவயிறு வீக்கம் சோகை முதலியவற்றைப் போக்கும்.

பூதிகாதி லேபம்-வெண்குட்டம் மூலநோய் அரிப்பு நரம்புச் சிலந்தி ஆகியவற்றைப் போக்கும்.

## 173. புடலை

**ஸம். படோலா** Momordia Chrantia

**தோற்றம்**

புடலை கொடி வகையைச் சேர்ந்தது. இனிப்பு கசப்பு என இரண்டு வகையாகக் காணப்படும். இனிப்புச் சுவையுள்ளது நீண்டிருக்கும். கசப்புச் சுவையுள்ளது குட்டையாக இருக்கும். இலைகள் சுரசுரப்பாக இருக்கும். மலர்கள் வெண்மையாக இருக்கும். இருவகைகளும் சுரம் முதலிய பலநோய்களுக்கும் பத்தியமானவையாகும்.

**தன்மை**

இனிப்புச் சுவையுள்ளது. இலகு குணமும் எண்ணெய்ப் பசையும் உஷ்ணவீர்யமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். நாவறட்சியைப் போக்கும். இலை பித்தத்தைத் தணிக்கும். கொடி கபத்தைத் தணிக்கும். வேர் மலத்தை வெளியேற்றும். விதைகளிலுள்ள எண்ணெய் வாத கபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கசப்புப்புடலை மூன்று தோஷங்களையும் தணிக்கும். இரத்ததோஷம் இருமல் காய்ச்சல் கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கவல்லதாகும்.

**பயன்**

குருவேரையும் கசப்புப்புடலை இலையையும் கஷாயமாக்கித் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும். கசப்புப்புடலை இலையைப் பக்குவம் செய்து உண்ணச் செய்தால் வீக்கம் தணியும். கசப்புப் புடலை இலையை உப்பில்லாமல் நீர் எண்ணெய்களுடன் பக்குவம் செய்து உண்ணச் செய்தால் ஊருஸ்தம்ப வாதம் தணியும்.

படோலமூலாதி கிருதம் — இது எரிச்சல் காய்ச்சல் சந்நிபாத காய்ச்சல் நாவறட்சி நஞ்சு வீக்கம் ஆகியவற்றைத் தணிக்கும்.

படோலமூலாதி கஷாயம்—இது குட்டம் கிரகணி மூலநோய் சிறுநீர்த்தடை விஷக்காய்ச்சல் முதலியவற்றைத் தணிக்கும்.

## 174. புத்திரஜீவி

**ஸம். புத்ரஜீவ Putrajiva Roxburghii**

**தோற்றம்**

இது நெடுமரமாக வளரக்கூடியது. கருவை நிலைக்கச் செய்யும் பொருள்களில் சிறந்ததாகக் கூறப்படுகிறது. சுசுருத ஸம்ஹிதைக்கு உரை எழுதிய டல்ஹணர் என்பவர் எழுதியுள்ளதை ஒட்டி இம்மரத்தின் இலைகள் எலுமிச்சை இலைகளைப்போல் இருக்குமென்றும் இதன் காய்களின் நடுப்பகுதி உருண்டையாகவும் முனைகள் மெல்லியவையாகவும் இருக்கும்

எனவும் தெரியவருகிறது. இது தொல்காபுரம் பகுதியில் விளையக் கூடியது எனத் தெரிய வருகிறது. இதன் விதைகளைக் குளிர்ந்த நீருடன் அரைத்துப் பாதங்களில் பூசினால் நஞ்சினால் தோன்றும் துன்பங்களைத் தீர்க்குமென்று கூறப்பட்டுள்ளது.

**தன்மை**

இனிப்புச்சுவையும் துவர்ப்பு கார்ப்புச் சுவைகளும் சீத வீர்யமும் கொண்டிருக்கும். கபவாதங்களைத் தணிக்கும். கருவை நிலைக்கச் செய்யும்.

**தீர்க்கும் நோய்கள்**

எரிச்சல் நாவறட்சி யானைக்கால் அம்மை ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

புத்திரஜீவி பட்டையின் சாற்றை அளவோடு உட்கொள்ளச் செய்தால் யானைக்கால் நோய் தணியும். புத்ரஜீவிச் சாற்றையும் முருங்கைச் சாற்றையும் கலந்து இளஞ் சூடாகக் காய்ச்சி சுக்குத் தூளுடன் பருகச் செய்தால் இதயப்பிடிப்பு முதலிய இதயநோய்கள் நீங்கும்.

## 175. புரசு

**ஸம். பலாச** Butea Frondosa

**தோற்றம்**

புரசமரம் மூன்று மூன்று இலைகளாய்ச் சேர்ந்து இருக்கும். கருநிறமுள்ள காம்புகளுடன் காணப்படும். இதன் காய்கள் நீளமாக ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விதையுடன் கூடியிருக்கும். இதில் சிவப்பு மஞ்சள் வெள்ளை நீலம் என நான்குவகை நிறங்களைக் கொண்ட மலர்களால் நான்கு வகைகள் உண்டு எனத் தெரிகிறது. வெள்ளை மலர் கொண்டது ஞானத்தை வளர்க்குமெனக் கூறப்பட்டுள்ளது. ஆனால் சிவந்த மலர்களைக் கொண்டதுதான் எங்கும் காணப்படுகிறது.

**தன்மை**

இது துவர்ப்புச்சுவையும் கார்ப்புச் சுவையும் எண்ணெய்ப் பசையும் உஷ்ணவீர்யமும் கொண்டது. சடராக்னியை வளர்க்கும். உடைந்த எலும்புகளைச் சேர்க்கும். மலர், கார்ப்புச்

சுவையும் கசப்புத் துவர்ப்புச் சுவைகளும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். கபபித்தங்களைத் தணிக்கும். விதை, இலகுத் தன்மையும் உஷ்ணவீர்யமும் கொண்டிருக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் குன்மம் கிரகணி மூலநோய் கிருமிநோய் ஆகிய வற்றைத் தணிக்கும்.

மலர்—இரத்தபித்தம் சிறுநீர்த்தடை வாதபித்தம் குட்டம் அரிப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

விதை—நீரிழிவு மூலநோய் கிருமிநோய் பெருவயிறு குட்டம் குன்மம் எனுமிவற்றைத் தணிக்கும்.

**பயன்**

புரசவிதைக் கஷாயத்தைப் பாலில் சேர்த்து உட்கொண்டு பாலையே துணை உணவாகப் பருகச் செய்தால் அதிஸாரம் தணியும்.

புரசைக்ஷாரத்தை ஆட்டின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய் தால் சிறுநீரில் தோன்றும் சர்க்கரை நோய் தணியும்.

புரசுக்ஷாரம் கலந்த நீரில் திப்பிலியை பாவனை செய்து உட்கொள்ளச் செய்தால் குன்மம் மண்ணீரல்வீக்கம் எனுமிவை தணியும். புரசு வேர்ச்சாற்றில் சமஅளவு வெண்கடுகு எண் ணெய் கலந்து பருகச் செய்தால் யானைக்கால் நோய் தணியும்.

புரசு க்ஷாரநீர் மூன்று பங்கு, நெய் ஒரு பங்கு, திரிகடுகவிழுது நான்கில் ஒரு பங்கு எனக்கொண்டு நெய்ப்பக்குவம் செய்து பயன்படுத்தினால் மூலநோய் தணியும்.

புரசு விதையை எருக்கம்பாலுடன் அரைத்துத் தேள் கொட்டிய இடத்தில் பூசினால் உடனே விஷம் தணியும்.

## 176. புளி

**ஸம். திந்திரிணி Tamarindus Indicus**

**தோற்றம்**

இது பெரியமரமாக வளரக்கூடியது. நம் நாட்டில் புளிய மரம் எங்கும் காணப்படுகிறது. இதில் புளி சீமைப்புளி என

இருவகை உண்டு. அடி மரம் மிகவும் பருத்துப் பட்டை பிளவு களுடன் கூடிக் காணப்படும். இதன் இலைகள் நெல்லி மரத் தின் இலைகளைப் போலக் காணப்படும். மலர்கள் சிவப்பு நிறம் கொண்டு சிறியவையாகக் காணப்படும். காய்கள் ஒருசாண் நீளமும் இரண்டங்குலம் அகலமும் கொண்டிருக்கும். காயாக இருக்கும்போது பச்சை நிறமும் நன்கு பழுத்ததும் சிவப்பு நிறமும் கொள்ளும். இளவேனில் பருவத்தில் பூக்கும். முதுவேனில் பருவத்தில் காய்க்கும். பழங்களுக்குள் உறுதியான மேல் ஓட்டுடன்கூடிய கருநிறமுள்ள விதைகள் காணப்படும்.

**தன்மை**

புளிப்புச்சுவை கொண்டது. பளுவானது. பித்தம் கபம் இரத்ததோஷம் என்பனவற்றைப் போக்கும். புளியம்பழம் சடராக்னியைத் தூண்டும். வறட்சித் தன்மை கொண்டது. மலத்தை வெளிப்படுத்தும். உஷ்ணத்தன்மை கொண்டதாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

நாவறட்சி மூலநோய் கிரஹணி குன்மம் வயிற்றுவலி இதய நோய் கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

புளிய இலைச்சாற்றை உடலில் பூசினால் தத்ருகுட்டம் நீங்கும். புளியை மைய அரைத்துப் பூசினால் நரம்புச் சிலந்தி நீங்கும். சீமைப்புளிச்சாற்றில் இந்துப்பைக் கலந்து பயன்படுத் தினால் குன்மம் தணியும்.

ஆம்லாதிசூரணம்—இது இருமல் அசீரணம் சுவையின்மை இழுப்பு இதயநோய் சோகை குன்மம் ஆகியவற்றைத் தணிக்கும்.

லகுசிஞ்சாதி லேகியம்—இது சோகை வீக்கம் கிரஹணி நீரிழிவு மண்ணீரல்வீக்கம் முதலியவற்றைத் தணிக்கும்.

திந்திரணீ மண்டூரம்—இது சோகை வீக்கம் க்ஷயம் நாள் பட்ட காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 177. புளியாரை

**ஸம். சாங்கேரீ** Oxalis Corniculata

**தோற்றம்**

இது ஈரமுள்ள நிலத்தில் அரை அடி உயரத்திற்கு வளரக் கூடிய சிறு செடியாகும். ஒரு தண்டில் நான்கு அல்லது ஐந்து காம்புகளும் ஒரு காம்பில் ஐந்து இலைகளும் இருக்கும்.

**தன்மை**

புளிப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். சுவையைத் தோற்றுவிக்கும். பித்தத்தை வளர்க்கும். கபவாதத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

புளியாரை கிரஹணி மூலநோய் குட்டம் அதிஸாரம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

புளியாரைக் கீரையையும் கொடிவேலி இலையையும் நெய் அல்லது எண்ணெயில் வதக்கித்தயிர்த் தெளிவுடன் உட்கொள்ளச் செய்தால் மூலநோய் தணியும். புளியாரைச் சாற்றுடன் இந்துப்பைக் கலந்து பூசினால் தேள்விஷம் தணியும். ஆஸனவாய் நழுவுதல் நிற்கும். மூலநோய் நீங்கும்.

சாங்கேரீகிருதம்—சிறுநீர்த்தடை கிரஹணி என்பன தணியும்.

## 178. புஷ்கரமூலம்

**ஸம். புஷ்கரமூல** Inula Racemosa

**தோற்றம்**

இது கோஷ்டத்தில் ஒருவகையாகும். காச்மீரப் பகுதியில் விளையும் நறுமணப்பொருள்களில் இதுவும் ஒன்று. கோஷ்டத்திற்குப் பதிலாக இதையும் இதற்குப் பதிலாகக் கோஷ்டத்தையும் பயன்படுத்தலாமென்று நூல்கள் கூறியுள்ளதால் இரண்டின் தன்மைகளும் ஒன்றே என அறியலாம்.

**தன்மை**

புஷ்கர மூலம் கார்ப்புச்சுவையும் துணைச்சுவையாகக் கசப்பும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். வாதகபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல் வீக்கம் சுவையின்மை விலாவலி இருமல் சோகை விக்கல் எனுமிவற்றைத் தணிக்கும்.

## 179. பூசணி

**ஸம். கூஷ்மாண்ட** Benincassa Cerifera

**தோற்றம்**

இது கொடியாக நிலத்தில் படர்ந்து வளரும். அகன்று சுணைகளுடன் கூடிய இலைகளைக் கொண்டிருக்கும். பூக்கும் போதே காய்களும் தோன்றும். வெற்றுப் பூக்கள் காயாகா. பூக்கள் கிண்ணங்களைப் போல மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். காய்கள் மிகவும் பெரியவையாக இருக்கும். பச்சைநிறக்காய் களின் மேல் வெண்மையான மாவு பூசியது போன்ற மேல்பூச்சு காணப்படும். காய்கள் முதிர்ந்தால் சற்று மஞ்சள் கலந்த வெண்ணிறம் கொள்ளும். பழங்களின் உட்பகுதி மென்மையாய் விதைகளுடன் கூடி நீர் ஒழுகிக் கொண்டிருக்கும்.

**தன்மை**

பூசணி உடலைச் செழிப்புறச் செய்யும். விந்துவை வளர்க்கும். பளுவானது. பசுமையான காய் குளுமைத்தன்மை மிக்கது. உவர்ப்பு கலந்த இனிப்புச் சுவை கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். இலேசானது. குடலைத் தூய்மை படுத்தும்.

**தீர்க்கும் நோய்கள்**

இளம்பூசணி பித்தம் இரத்ததோஷம் வாதம் என்பன வற்றைப் போக்கும். காய் பித்தத்தைப் போக்கும். நன்கு பழுத்தபழம் மனநோய் கால்கைவலி பைத்தியம் முதலிய தோஷங்களைப்போக்கும்.

## 180. பூண்டு

**ஸம். லசுன** Allum Sativum

**தோற்றம்**

இது ஓரிரண்டு அடிகள் உயரமுள்ள செடியாகும். இலைகள் மெலிந்து நீண்டிருக்கும். நிலத்தடியில் கிழங்குபோலவும் அதை யொட்டி மேல்பகுதியில் கூர்ச்சியாக இலைகள் நான்கு பக்கங் களிலும் தோன்றும். இலைகளின் நடுவில் நீண்ட தண்டு இருக் கும். அதன் நுனியில் வெண்ணிறப் பூக்கள் கொத்தாகப் பூக் கும். வேரின் அடிப்பகுதியில் கிழங்கு வெண்ணிறத்துடன் சிறிது சிவந்த நிறமும் கொண்டிருக்கும். ஒவ்வொரு கிழங்கிலும் 10–12 பருப்புகள் தோன்றும். சிறியதும் பெரியதுமான அள

வுள்ள கிழங்குகளைக் கொண்டு பூண்டு இருவகைப்படும். முது வேனில் பருவத்தில் நன்றாக விளையக் கூடியது. இதற்கு உஷ்ணம் மிகுந்த காற்று தகுந்ததாகும்.

**தன்மை**

வேர் கார்ப்புச்சுவையும் இலை கசப்புச்சுவையும் கொண்டிருக்கும். உள்ளிருக்கும் தண்டு துவர்ப்புச் சுவையும் தண்டின் நுனிப்பகுதி உவர்ப்புச் சுவையும் விதைகள் சிறிது இனிப்புச் சுவையும் கொண்டிருக்கும். உடலை வளர்க்கும். விந்து வளர்ச்சிக் கேற்றது. எண்ணெய்ப்பசையும் உஷ்ணத்தன்மையும் கொண்டது. செரிமானத்தைத் தூண்டும். மலத்தை இளக்கும். சுவையில் கார்ப்பும் பக்குவமடையும் போது இனிப்புச்சுவையும் கொள்ளும். உடலில் சிதைந்த பகுதிகளை ஒன்று சேர்க்கும். குரலைத் தூயதாக்கும். பளுவானது. பித்தம் இரத்தம் என்பனவற்றை வளர்க்கும். உடல்வலிமை நிறம் எனுமிவற்றைச் சிறப்பாக்கும். புத்தியை வளர்க்கும். கண்களுக்கு நலம் தரும். தாதுக்களைச் செழிப்புறச் செய்யும். உடற்பயிற்சி செய்ததும் வெயிலில் அலைந்ததும் கோபம் கொண்ட போதும் பூண்டை உண்ணக் கூடாது. மற்றும் நீர் பால் வெல்லம் எனுமிவற்றுடன் உண்ணுதல் கூடாது,

**தீர்க்கும் நோய்கள்**

இதயநோய் பலநாள் தொடர்ந்திருக்கும் காய்ச்சல் பக்க சூலை மலக்கட்டு குன்மம் சுவையின்மை இருமல் வீக்கம் குட்டம் சடராக்னி குறைவு கிருமிநோய் வாதம் இழுப்பு கபம் ஆகிய வற்றைப் போக்கும்.

**பயன்**

பூண்டின் சுரஸம் நான்குபலம் பால் பதினாறுபலம் நீர் அறுபத்துநான்குபலம் என இவற்றைக் கலந்து பாலின் அளவு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிப் பயன்படுத்தினால் வாத குன்மம் விஷக்காய்ச்சல் இதயநோய் கட்டி வீக்கம் எனுமிவை தணியும்.

பூண்டின் விழுதை எண்ணெயுடன் உட்கொள்ளச் செய்தால் கால்கைவலி நீங்கும்.

பூண்டை மைய அரைத்து நெய்யுடன் உட்கொள்ளச் செய்தால் விஷக்காய்ச்சல் தணியும்.

லசுனாதிகிருதம்—இது பைத்தியநோய் விஷக்காய்ச்சல் கால் கைவலி வலி மூலநோய் பெருவயிறு சோகை மண்ணீரல் வீக்கம் பெண்குறிநோய் காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

ரஸோனபிண்டம்—இது வாதநோய் ஏகாங்கவாதம் ஸர்வாங்க வாதம் ஊருஸ்தம்பவாதம் கிருமிநோய் பெருவயிறு ஆகிய வற்றைத் தணிக்கும்.

## 181. பூர்ஜமரம்

**ஸம். பூர்ஜபத்ர Betulavtilis**

### தோற்றம்

இது மிகவும் உயரமாக வளரும் மரமாகும். இமயமலைப் பகுதியில் தோன்றுமென நூல்கள் கூறுகின்றன. இதன் பட்டை மென்மையாகவும் பலநாள் கெடாமலும் இருக்கும் தன்மை கொண்டது. ஆகையால் இதை முற்காலத்தினர் எழுதுவதற்குப் பனை ஒலையைப் போலப்பயன்படுத்தி வந்தனர். மந்திரங்களை எழுதித் தாயத்தாக ரக்ஷை கட்டுவதற்கும் பயன்படுத்தி வந்தனர். இதன் பட்டைகளைக் கிரகதோஷம் நீங்குவதற்குத் தூபம் போட வும் பயன்படுத்தி வந்தனர்.

### தன்மை

இது துவர்ப்பு கார்ப்புச் சுவைகளும் உஷ்ணத் தன்மையும் கொண்டதாகும். கபத்தைத் தணிக்கும். வலிமையை வளர்க் கும்.

### தீர்க்கும் நோய்கள்

இரத்ததோஷம் கிரகதோஷம் இரத்தபித்தம் காதுவலி உட லில் மிகுந்துள்ள கொழுப்பு நஞ்சு எனுமிவற்றைப் போக்கும்.

### பயன்

கடுகு வேப்பிலை பூர்ஜ இலை எனும் இவற்றின் தூளை நெய்யுடன் கலந்து தூபம் போட்டால் சிறுவர்களுக்குத் தோன் றும் எல்லா கிரக தோஷங்களும் நீங்கும்.

பூர்ஜகிரந்தியாதி லேபம் இது குட்டம் இந்திரலுப்தம் (தலைமுடி திட்டுத் திட்டாக உதிர்தல்) பௌத்திரம் மூலநோய் அரிப்பு என்பனவற்றைப் போக்கும்.

## 182. பூவரசு

**ஸம். பாரிஷ** Thcaspesia Populneac

**தோற்றம்**

இது அரசமரத்தின் வகையைச் சேர்ந்தது. அரசுக்குப் பூ இல்லை. பூவரசுக்கு மஞ்சள் நிறம் கொண்ட வெண்டை மலர்களைப் போன்ற மலர்கள் உண்டு. இது நம் நாட்டில் எங்கும் காணப்படுகிறது.

**தன்மை**

எளிதில் செரிமானமாகாதது. எண்ணெய்ப்பசை கொண்டது. கிருமிகளைக் தோற்றுவிக்கும். விந்துவை வளர்க்கும். கபத்தை மிகுதியாக்கும். இதன் காய்கள் புளிப்புச்சுவையும், வேர் இனிப்பும் துவர்ப்புமான சுவையும் பட்டை துவர்ப்புச் சுவையும் கொண்டிருக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

தொண்டைநோய் இதயநோய் எரிச்சல் நஞ்சு குட்டம் நீரிழிவு விரணம் ஆகியவற்றைப் போக்கும்.

## 183. பூலாங்கிழங்கு

**ஸம. சடி** Curcuma Zerumbet

**தோற்றம்**

இது ஒன்று அல்லது இரண்டு அடி உயரமுள்ள சிறு செடியாகும். இதன் இலைகள் மஞ்சள் செடியின் இலைகளைப் போலிருக்கும். மஞ்சளைப்போல் இதன் வேரில் கிழங்குகள் தோன்றும். இதற்கு மணம் உண்டு. இந்தக் கிழங்குகளை மெல்லிய சிறு வில்லைகளாக நறுக்கி உலர்த்தி விற்கின்றனர்.

மழைக் காலத்தில் நன்கு வளரும்.

**தன்மை**

சடராக்னியை வளர்க்கும். சுவையூட்டும். கசப்பும் கார்ப்புமான சுவை கொண்டிருக்கும். உஷ்ணத் தன்மையுடையது. இலேசானது.

**தீர்க்கும் நோய்கள்**

குட்டம் மூலநோய் விரணம் இருமல் குன்மம் வாதம் கபம் எனுமிவற்றைப் போக்கும்.

# 184. பூனைக்காலி

ஸம். கபிகச்சு Mukuna Pruciens

**தோற்றம்**

இது கொடிவகையாகும். முற்றிய தண்டில் உரோமம் போன்ற முட்கள் அடர்ந்திருக்கும். இளங்கொடிகளில் மென்மையான முட்கள் இருக்கும். இது மூன்று பகுதிகளைக்கொண்ட இலையுடையது. நடுப்பகுதி வட்டமாகவும் பக்கங்களில் இருக்கும் இலைப்பகுதி காம்பின் இடத்தில் அகன்றும் இருக்கும். இலைகளின் நடுவில் சிறியவையாகவும் இலைகளின் பின்பக்கத்தில் சற்று பெரியவையாகவும் வெண்ணிற ரோமங்களைப் போன்ற முட்கள் படர்ந்திருக்கும். காய்களிலும் சிவந்த பெரிய உரோமங்கள் அடர்த்தியாக இருக்கும். ஒவ்வொரு காயிலும் ஆறு விதைகள் இருக்கும். மலர்கள் கத்தரிப்பூ நிறத்தில் பெரியவையாக இருக்கும். கார்ப்பருவத்தில் கொடி துளிர்க்கும். கூதிர்ப் பருவத்தில் மலர்ந்து காய்க்கும். விதைகள் சுவையின்றி இருக்கும். உடலின் மேல் பட்டால் வீக்கத்தையும் அரிப்பையும் உண்டாக்கும். இதில் பெரியது சிறியது என இரண்டு வகைகள் உண்டு. அவை கபிகச்சு தன்வயாஸ எனப்படுகின்றன. துராலபா எனப்படும் காஞ்சொரியும் இவ்வகையைச் சேர்ந்ததே.

**தன்மை**

இனிப்பு கசப்புச் சுவைகளும் குருகுணமும் கொண்டது. உண்டதும் விந்துவை வளர்க்கும். உடலைச் செழிப்பாக்கும். வாதகபங்களைத் தணிக்கும். சிறியதும் இத்தன்மைகளையே கொண்டதாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

உடலில் மிகுதியாகச் சேர்ந்த கொழுப்பு இரத்தபித்தம் குட்டம் இருமல் நாவறட்சி அக்கி வாதரத்தம் வாந்தி காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

பூனைக்காலி வேரின் விழுதை அத்திப்பழம் அளவு உட்கொள்ளச் செய்தால் இரத்தத்துடன் கூடிய அதிஸாரம் தணியும்.

ன் விதைகளை உட்கொண்டால் இரத்தபித்தம் வளரும்.

பூனைக்காலி சுரசத்தை நாள்தோறும் உட்கொள்ளச் செய்தால் ஒரு மாதத்தில் வாதநோய் தணியும்.

சிறு பூனைக்காலிச் சாற்றை உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்த்தடை நீங்கும்.

## 185. பெருங்காயம்

**ஸம். ஹிங்கு** Ferula Alliacea

**தோற்றம்**

விளையும் நிலத்தைக் கொண்டு இது இரு வகைப்படும்.. பாஹ்லீசம் அல்லது பாரஸீகம் என்னும் தேசத்தில் தோன்று பவை ஆகும். பெருங்காய மரம் குராஸான் மலைப்பகுதியில் தானே வளர்வதாகும். இந்த மரத்தின் அடித்தண்டின் மேல் பட்டையை வெட்டி அதில் சுரக்கும் பிசின் எடுக்கப்படுகிறது. இதுதான் உயர்ந்த குணமுள்ள பெருங்காயம். இம்மரங்களில் சற்று ஆழமாகத் துளைகளை ஏற்படுத்திக் குழாய்களைப் புகுத்தி வழியும் பாலைச் சேகரிக்கின்றனர். இது பால் பெருங்காயம் எனப்படும். இது வெளிப்புறத்தில் மஞ்சள் நிறம் கொண்டு உடைத்தால் உள்ளே நல்ல வெண்ணிறம் கொண்டிருக்கும். மரத்திலிருந்து பாலை எடுத்தபின் பட்டையை எடுத்துக் கஷாயம் செய்து அதில் வேறு மரத்துப் பிசின்களைச் சேர்த்து இடித்துக் கெட்டியாக்கிப் பெருங்காயம் தயார் செய்கின்றனர்.

**தன்மை**

பெருங்காயம் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டதாகும். சுவையூட்டும். வலிமையைத்தரும். வாதகபங்களைத் தணிக்கும். பித்தத்தை வளர்க்கும்.

பெருங்காயஇலை கார்ப்புச்சுவையும் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சுவைதரும். கபவாதங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பெருங்காயம் வயிற்றுவலி குன்மம் பெருவயிறு கிருமி நோய் மூர்ச்சை கால்கை வலி ஆகியவற்றைப் போக்கும்.

பெருங்காய இலை இதயவலி சிறுநீர்ப்டையில் தோன்றும் வலி மூலநோய் குன்மம் ஆகியவற்றைப்போக்கும்.

**பயன்**

பெருங்காயத்தைத் தும்பைப்பூச் சாற்றில் இழைத்துக் கண் களில் மையாக இட்டால் காமாலை நோய் நீங்கும்.

சிறிது அளவு பெருங்காயத்தை நெய்யில் பொரித்து வெல்லம் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் பிள்ளைப் பேற்றின் பிறகு கருப்பையில் தங்கிய கெட்ட நீர் வெளியேறும்.

பெருங்காயத்தைக் குங்குமத்துடன் கலந்து மாத்திரை களாக்கி உட்கொள்ளச் செய்தால் இதயவலி நீங்கும்.

ஹிங்க்வாதிகுடிகை—இது வாதகபத்தால் தோன்றிய குன்மம் சிறுநீர்த்தடை வயிற்றுவலி மூலநோய் பெண்குறிநோய் கிரஹணி மண்ணீரல்வீக்கம் சோகை இருமல் இழுப்பு விக்கல் தொண்டைப் பிடிப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

ஹிங்க்வாதிசூரணம்—இதயசூலை விலாவலி சிறுநீர்ப்பையில் வலி பெண்குறியில்வலி குன்மம் தொண்டைப்பிடிப்பு சோகை சுவையின்மை மண்ணீரல்வீக்கம் மூலநோய் விக்கல் இருமல் இழுப்பு சடராக்னிக் குறைவு ஆகியவற்றைப் போக்கும்.

## 186. பெருங்குமிழ்

**ஸம். காச்மரீ** Gmelina Arborca

**தோற்றம்**

இது பலகிளைகளைக் கொண்டு நெடுமரமாகி மிகவும் நல்ல நிழல் தருவதாகும். மரம் வெண்ணிறம் கொண்டிருக்கும். இலைகள் அரசமரத்தின் இலைகளைப் போல அவற்றைவிடப்பெரி யவையாகவும் தடிமனாகவும் இருக்கும். இலைக்காம்புகள் நீண்டு இலையின்முனைகள் கூர்மையாக இருக்கும். இலை களின் மேற்பகுதி பச்சைநிறமும் எண்ணெய்ப்பசையும் கொண் டிருக்கும். பின்பகுதியில் சாம்பல் பூத்ததுபோல வெண்ணிறப் பூச்சு காணப்படும். மலர்களின் இதழ்கள் சேர்ந்து மஞ்சள் நிறம் கொண்டு இடையிடையே சிவப்பு நிறமுள்ள பொட்டுகளுடைய சிறு காம்புகளுடன் கூடியிருக்கும். அவற்றில் உள்ள நான்கு கேசரங் களில் இரண்டு பெரியவையாகவும் இரண்டு சிறியவையாகவும் இருக்கும். காய்கள் சிறு எலுமிச்சம் பழத்தைப்போலச் சுரைக் காய்த் தோற்றத்தில் இருக்கும். பழுத்த பழம் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். மூன்று ஆண்டுகள் தண்ணீரில் கிடந்தாலும் இம்மரக்கட்டை கெடுவதில்லை.

ம

துவர்ப்பும் கசப்புமான சுவைகளைக் கொண்டிருக்கும். உஷ்ணவீரியமுள்ளது. குருத்தன்மை கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். புத்திக்கு நலம் தரும். மலத்தைப் போக்கும். இதன்பழம் விந்துவையும் உடல் வலிமையையும் வளர்க்கும். தாதுக்களைச் செழிப்புறச் செய்யும். பக்குவமடையும் போது இனிப்புச்சுவை கொள்ளும். குளுமைத் தன்மையும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். தலைமுடியை நன்கு வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

தலைச் சுற்றல் உடல் உலர்ந்துபோதல் அசீரணம் வயிற்று வலி மூலநோய் நஞ்சு எரிச்சல் காய்ச்சல் என்பனவற்றைப் போக்கும்.

இதன்பழம் வாதபித்தம் நாவறட்சி இரத்ததோஷம் க்ஷயம் சிறுநீர்த்தடை எரிச்சல் ரத்தபித்தம் காயம்படுதலால் தோன்றும் க்ஷயம் என்பனவற்றைப் போக்கும்.

**பயன்**

குமிழம் பழக்கஞ்சியில் சிறிது புளிப்பும் சர்க்கரையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்தாதிஸாரம் தணியும்.

குமிழம்பழமும் அதிமதுரமும் சேர்த்துக் காய்ச்சிய பாலில் சர்க்கரை கலந்து உட்கொள்ளச் செய்தால் உடல் இளைக்கும். சிறுவர்களின் உடல் நல்ல செழிப்பைப் பெறும்.

காச்மரியாதி கிருதம்—இது பெண்குறி நோய்களைப் போக்கும்.

## 187. பெருங்குரும்பை

**ஸம். மூர்வா Sanscviera Zeyl Encia Willed**

**தோற்றம்**

. இது கிழங்கு வகையைச் சேர்ந்தது. ன் இலைகள் நீண்டு இருபக்கங்களிலும் சுருண்டு சமமாக ராமல் முனை முள்ளைப்போல் இருக்கும். எனவே இலைகள் குழாயைப்போல் அடிப்பகுதி முதல் நுனிவரை முறையே சிறுத்து முனை ஊசியைப்

போல் காணப்படும். இதன்மேல் பச்சைநிறமுள்ள கோடுகள் காணப்படும். மலர் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இதன் இலைகளின் சாறு பாம்பு விஷத்தைப் போக்கும்.

**தன்மை**

இது இனிப்பு கசப்புச்சுவைகளைக் கொண்டது. குருத் தன்மையுள்ளது. மலத்தை வெளியேற்றும். உஷ்ணவீரிய முள்ளது. உடலைச் செழிப்பாக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது இரத்தபித்தம் நீரிழிவு நாவறட்சி இதயநோய் அரிப்பு குட்டம் காய்ச்சல் உடலில் மிகுந்துள்ள கொழுப்பு ஆகிய வற்றைத் தணிக்கும். மூன்று தோஷங்களையும் தணிக்கவல்லது.

**பயன்**

இதன் தூளை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய் தால் பித்தத்தினால் தோன்றும் வாந்தி நிற்கும்.

பெருங்குரும்பை மஞ்சள் நெல்லிக்காய் எனும் இவற்றை மையத் தூளாக்கிப் பசுவின் சிறுநீரில் ஏழுநாட்கள் ஊறவைத்து உட்கொள்ளச் செய்தால் சோகை தணியும்.

மூர்வாதி கிருதம்—இது சோகை காய்ச்சல் வீக்கம் மூல நோய் இரத்தபித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 188. பெருவாகை

**ஸம். சியோ நாக** Orocylm Indicum

**தோற்றம்**

இது மிகவும் பெரிய மரமாக வளரக் கூடியது. கிளைகள் குறைவாக இருக்கும். அடிமரம் இலைக்காம்புகளின் அடை யாளங்களால் மேடுபள்ளமுள்ளதாகக் காணப்படும். பட்டையின் மேல் பகுதி வெண்ணிறம் கொண்டு உள்ளே பச்சை மஞ்சள் கலந்த நிறம் கொண்டிருக்கும். இலைக்காம்புகள் மிகவும் நீள மாக இருக்கும். காய் வாளைப்போல் இரண்டு மூன்று அடிகள் நீளம் கொண்டிருக்கும். காய்க்குள் பஞ்சு போன்ற கோதும் விதைகளும் காணப்படும். காய்கள் முனையில் சற்று வளைந்து கிளிமூக்கைப்போல் காணப்படும். இதில் சிவப்பு நிறமுள்ள மலர்

கள் பூக்கும் மற்றொருவகையும் உண்டு. அதன்காய்கள் மிகவும் பெரியவையாக இருக்கும். அதற்கு வடமொழியில் 'ப்ருதுசிம்ப' என்று பெயராகும். இம்மரங்கள் மலபார்பகுதியில் காணப் ப ாகத் தெரிய வருகிறது. இதன் இலைகள் வேப்ப இலை களைப்போலவும் காய்கள் வேப்பங்காயைப்போல் சற்று பெரிய வையாகவும் இருக்கும். இலைகள் கெட்ட நாற்றம் கொண் டிருக்கும்.

**தன்மை**

துவர்ப்பு கசப்புச் சுவைகளும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். மலத்தைத் தடுக்கும்.

)ளங்காய் துவர்ப்பு இனிப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். சுவையூட்டும். இதயத்திற்கு நன்மை செய்யும். வாதகபங்களைத் தணிக்கும்.

முற்றியகாய் குருத்தன்மை கொண்டதாகும். வாதத்தைத் தூண்டும்.

ப்ருதுசிம்ப சியோநாக—இது துவர்ப்பு கசப்புச் சுவைகளை யும் குளுமைத் தன்மையையும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

ஸந்நிபாதக் காய்ச்சல் வாந்தி கிருமிநோய் நாவறட்சி குட்டம் ஆகியவற்றைப் போக்கும். முற்றியகாய் குன்மத்தையும் மூலநோயையும் தணிக்கும்.

ப்ருதுசிம்ப சியோநாகம்—இது வீக்கம் சிறுநீர்ப்பையில் தோன்றும் நோய்கள் ஆமவாதம் இருமல் இழுப்பு சுவையின்மை ஆகியவற்றைத் தணிக்கும்.

## 189. பேய்ச்சுரை

**ஸம். கடுதும்பி** Valgaris

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. இனிப்புச் சுரையைப் போலத் தோற்றம் கொண்டிருக்கும். சுவையில் மட்டும் மாறு

பட்டதாகும். இதன் முற்றிய காய்களைக் குடுவையாக்கிப் பயன்படுத்துவதுண்டு. இலைகள் சுரசுரப்புடன் காணப்படும்.

**தன்மை**

தீக்ஷ்ணகுணமுள்ளது. கசப்புச்சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். இதயத்திற்கு நன்மை செய்யும்.

**தீர்க்கும் நோய்கள்**

பித்தத்தினால் தோன்றிய இருமல் நஞ்சு விரணம் வீக்கம் வாதபித்தம் காய்ச்சல் எனுமிவற்றைத் தணிக்கும்.

**பயன்**

கசப்புச் சுரையின் விதைகளின் தூளைத் தேன்கலந்து செம்மறியாட்டுப்பாலுடன் ஏழு நாட்கள் காலையில் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் நீங்கும்.

பேய்ச்சுரைக் காயை அரைத்துத் தேனும் சர்க்கரையும் கலந்து கொழுக்கட்டைபோல் செய்து உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு நீங்கும். பேய்த்துமட்டிஇலை பாச்சோத்திப் பட்டை எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு மைய அரைத்துப்பெண் குறியில் தடவிக் கொள்ளச் செய்தால் அங்குத் தோன்றும் நோய்கள்யாவும் தணியும்.

பேய்ச்சுரை வேர்த்தூளால் பல் துலக்கினால் பற்களில் தோன்றும் கிருமிகள் நீங்கும்.

திக்தேகூஷ்வாகு தைலம்—இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் அரிப்பு குட்டம் ஆகியவை நீங்கும்.

## 190. பேய்த்துமட்டி

**ஸம். இந்திரவாருணி** Cucumis Trigons

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. இதில் சிறிது பெரிது என இருவகை உண்டு. மரங்களில் படர்ந்திருக்கும் அல்லது நிலத்தில் பரவியிருக்கும். சற்று மணற்பாங்கான உவர்மண் நிலத்தில் நன்கு வளரும். இலைகள் சாதாரணமாகத் தூரதூர விலகியிருக்கும். இலைக்காம்புகளின் பகுதிகளில் மலர்கள்

அல்லது நீண்ட நூலைப் போன்ற மெல்லியகொடிகள் வளர்ந் திருக்கும். இந்தக் கொடிகள் கம்பிகளைப்போல மரக்கிளை களைச் சுற்றிப் பற்றிக் கொண்டிருக்கும். மணியைப்போல் மலர்கள் இருக்கும். மலர்களின் நுனிப்பகுதி ஐந்து பகுதி களாகப் பிரிந்திருக்கும். இவற்றின் நிறம் மஞ்சள். ஆண்மலர் நீண்டகாம்பும் பெண்மலர் குறுகிய காம்பும் கொண்டிருக்கும். காய்கள் உருண்டையாகப் பந்துபோல் இருக்கும். பெரிய பேய்த்துமட்டியின் இலைகளில் வெண்ணிறக் கோடுகள் காணப் படும். இலைகளின் பின்பகுதி கொடி தண்டு இலைக்காம்பு கள் எனும் இவை சுரசுரப்பாக இருக்கும். காய்கள் உருண்டை யாகவோ சற்று நீண்ட தோற்றத்துடனோ காணப்படும். காயின் மேல் வெண்ணிறக் கோடுகள் இருக்கும். சிறு பிஞ்சாக இருக்கும்போது அதன் மேல் சுணை நிரம்பியிருக்கும். பழங்கள் நீலம் கலந்த பச்சைநிறம் கொண்டிருக்கும். பழக் கோது சிவப்பாகவும் விதைகள் மஞ்சள் அல்லது கருநிறம் கொண் டிருக்கும். சில பெரிய பேய்த்துமட்டிகள் வெண்ணிறப் பூக்கள் கொண்டிருப்பதுமுண்டு. இதன் இலைகள் உள்ளங்கையைப் போல அகன்றிருக்கும். இதன்பழமும் வேரும் மிகவும் வீரியம் கொண்டிருக்கும்.

**தன்மை**

நவகைப் பேய்த்துமட்டிகளும் மிகக் கசப்புச் சுவையும் பக்குவமடையும்போது கார்ப்புச் சுவையும் கொள்ளும். பேதி யாகச் செய்யும். இலேசானது. உஷ்ணவீரியமுள்ளது.

**தீர்க்கும் நோய்கள்**

காமாலை பித்தம் கபம் மண்ணீரல்வீக்கம் வயிற்றுநோய் இழுப்பு இருமல் குட்டம் விரணம் நீரிழிவு மூடகர்ப்பம் (உண்மை யாகக் கருவில்லாமல் கருவுற்றஇலக்கணங்கள் சில காணப்படுதல்) அசீரணம் கண்டமாலை ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

துமட்டிக் காய்த்தூளை வெல்லம் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் காமாலை தணியும்.

பேய்த்துமட்டிவேர்த் தூளை ஆமணக்கு எண்ணெயில் கலந்து பசும்பாலுடன் மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய் தால் விரைவாதம் தணியும். பேய்த்துமட்டிவேர்த்தூளை

பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்தால் கண்டமாலை தணியும்.

பேய்த்துமட்டிப் பழச்சாற்றைப் பசுவின் சிறு நீருடன் கலந்து மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் கொடிய பைத்திய நோயும் தணியும்.

பேய்த்துமட்டி வேரைப் பசுவின் சிறுநீரில் மூன்று நாட்கள் ஊற வைத்துப் பசும் சாணத்துடன் மைய அரைத்து நெய் கலந்து மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் இந்திரலுப்தம் (பூச்சி அரிப்பால் திட்டுத்திட்டாகத் தலைமுடி உதிர்தல்) எனும் நோய் நீங்கும்.

இந்திரவாருணிகாதி சூரணம்–இது இழுப்பு இருமல் நோய்களைப் போக்கும்.

## 191. பேய்ப்பீர்க்கு

**ஸம். தேவதாளி** Lufia Echinata

**தோற்றம்**

பேய்ப் பீர்க்கு கொடிவகையைச் சேர்ந்தது. பீர்க்கங் கொடியைப் போலவே ஆவணி புரட்டாசி மாதத்துவக்கத்தில் தோன்றும். அந்த மாதத்தின் முடிவுவரை மலர் காய்கள் தோன்றும். மலர்கள் வெள்ளை மஞ்சள் மற்றும் சிவப்பு நிறங்களில் இருக்கும். இதன் காய்கள் கார்ப்புச்சுவை கொண்டிருக்கும். இலைக்காம்புகள் நீளமாகவும் இலைகள் அகன்று ஐந்து மூலைகள் உள்ளதாகவும் இருக்கும். மலர்களில் ஐந்து இதழ்கள் இருக்கும். கூதிர்ப் பருவம்வரை காய்த்துப் பின் உதிர்ந்துவிடும்.

**தன்மை**

கசப்புச் சுவை கொண்டிருக்கும். மலத்தை வெளியேற்றும். வாந்தியாகச் செய்யும். இதன் விதைகள் குருத் தன்மை கொண்டிருக்கும். சுவையூட்டும். சடராக்னியின் வலியைக் குறைக்கும். கபத்தை வளர்க்கும். வாதபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மூலநோய் சோகை விக்கம் க்ஷயம் விக்கல் கிருமிநோய் காய்ச்சல் எலிவிஷம் காமாலை முதலியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

பேய்ப்பீர்க்கின் விழுதை அல்லது தூளைக் குளிர்ந்த நீருடன் உட்கொள்ளச் செய்தால் வாதகபங்களின் தொடர்புள்ள பித்தக் காய்ச்சல் தணியும்.

பேய்ப்பீர்க்கின் பழத்தூளைத் தயிரில் கலந்து உண்ணச் செய்து வாந்தி எடுக்கச் செய்தால் எலிக்கடி விஷம் தணியும்.

பேய்ப்பீர்க்கின் மலர்த்தூளை ஒருதுலம் எடை உட்கொள்ளச் செய்தால் கருவுற்றவளுக்கு எளிதில் பிள்ளைப்பேறு உண்டாகும்.

பேய்ப்பீர்க்கு வேரை அரிசி கழுவிய நீருடன் அரைத்துத் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு நீங்கும்.

தேவதாள்யாதிலேபம்—இது மூலநோய்க்கு மேல்பூச்சு மருந்தாகும்.

## 192· பேரீச்சை

**ஸம். கர்ஜூரா** Phoenix Montana

**தோற்றம்**

பேரீச்சையில் நிலப்பேரீச்சை பிண்டப் பேரீச்சை டசுவின் மடிக்காம்புகளைப் போன்ற கோஸ்தனகர்ஜூரம் என மூன்று வகைகள் உண்டு. இவை அனைத்தும் மேலை நாடுகளில் சிறப்பாகக் காபூல் காந்தார் முதலிய பகுதிகளில் விளைவதாகும்.

**தன்மை**

மூன்றுவகை பேரீச்சைகளும் தன்மையில் ஒன்று போலவே இருக்கும். குளுமை இனிமை எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். சுவையூட்டும். இதயத்திற்கு மகிழ்ச்சி தரும். பளுத் தன்மை கொண்டதாகும். மலத்தைக்கட்டும்.

விந்துவையும் உடல் வலிமையையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காயம் க்ஷயம் இரத்தபித்தம் குட்டம் வாந்தி கபம் காய்ச்சல் அதிஸாரபேதி பசி நாவறட்சி இருமல் இழுப்பு மதுவெறி நினைவிழத்தல் வாதபித்தம் மற்றும் கள் குடியால் தோன்றும் நோய்கள் என்பனவற்றைப் போக்கும்.

## 193. பேய் புடல்

**ஸம். படோலா** Trihosenthes Dioica

**தோற்றம்**

இது கொடி வகையைச் சேர்ந்தது. இதன் காய்கள், புடலையின் காய்களைப் போலல்லாது மிகவும் குட்டையானவை யாக இருக்கும். மலர்கள் வெண்ணிறம் கொண்டிருக்கும். இரு வகைப்புடலைகளும் பத்தியமானவை. பொதுவாக எல்லா நோய்களிலும் பயன்படுத்தத்தக்கவையாகும்.

**தன்மை**

கசப்புச் சுவையும் இலகுத் தன்மையும் எண்ணெய்ப் பசை யும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். இதயத்திற்கு நன்மை தரும். உண்டதும் விந்து வையும் சடராக்னியையும் வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இருமல் இரத்ததோஷம் காய்ச்சல் கிருமிநோய் முதலிய வற்றைப் போக்கும்.

**பயன்**

குருவேரையும் கசப்புப் புடலை இலையையும் தூளாக்கி அல்லது கஷாயமாக்கித் தேன் கலந்து பயன்படுத்தினால்இரத்த பித்தம் தணியும்.

பேய்ப்புடல் இலையைப் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்தால் வீக்கம் தணியும்.

பேய்ப்புடல் இலையை உப்பில்லாமல் நீருடனும் எண்ணெ யுடனும் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்தால் ஊருஸ்தம்ப வாதம் தணியும். பேய்ப்புடலங்காயுடன் செய்த கஞ்சியை உட்கொள்ளச் செய்தால் வாதநோய் தணியும்.

பேய்ப்புடல்வேர் கஷாயத்தைப் பித்தத்தினால் தோன்றும் வைசூரியின் துவக்கத்தில் உட்கொள்ளச் செய்தால் நோய் முற்றாது விரைவில் தணியும்.

படோல மூலாதி கிருதம்—இது, அக்கி எரிச்சல் காய்ச்சல் நஞ்சு வீக்கம் ஆகியவற்றைத் தணிக்கும்.

படோலாதி சூரணம்—இது இதயநோய் சோகை கிரஹணி குன்மம் வயிற்றுவலி சுவையின்மை காய்ச்சல் காமாலை முக நோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

படோலமூலாதி கஷாயம்—இது குட்டம் கிரஹணி மூலநோய் சிறுநீர்த்தடை சிறுநீர்ப்பையில் வலி விஷக்காய்ச்சல் ஆகிய வற்றைத் தணிக்கும்.

படோலாதி கிருதம்—விந்துநோய் மூக்குநோய் காதுநோய் முகநோய் காமாலை சோகை குட்டம் அக்கி கண்டமாலை விரணம் எனுமிவற்றைத் தணிக்கும்.

## 194. பொன்னாங்கண்ணி

**ஸம். மீனாக்ஷி** Alternanthers Sessilas (Linn)

**தோற்றம்**

இது, நீர், நிலைகள் பக்கத்தில் அல்லது ஈரமுள்ள நிலப் பகுதியில் விளையும் சின்னஞ்சிறு செடிகளாக நிலத்தின்மீதுபடர்ந் திருக்கும். இலைகள் தடித்துப் பச்சை நிறம் அல்லது மஞ்சள் நிறம் கொண்டு, புளிய இலையின் தோற்றத்தில் இருக்கும். கார்த்திகையில் மிகுதியாகக் காணப்படும். குளிர்காலத்தில் பூக்கும். தோற்றத்தில் பயறுபோலக் காணப்படும். சிறுது மீன்வாடை கொண்டிருக்கும். முதுவேனில் பருவத்தில் செடி உலர்ந்துபோகும்.

**தன்மை**

மலத்தைக் கட்டும். குளுமைத் தன்மை கொண்டது. லசானது. கசப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டிருக்கும். பக்குவம் அடையும்போது கார்ப்புச்சுவை கொள்ளும்.

**தீர்க்கும் நோய்கள்**

குட்டம் பித்தம் கபம் இரத்ததோஷம் என்பனவற்றைப் போக்கும்.

## 195. மஞ்சள்

ஸம். ஹரித்ரா Curcuma Longa

### தோற்றம்

மஞ்சள் நிலத்தில் பயிர் செய்யப்படுவதாகும். மலைச் சரிவில் அல்லது காடுகள் நிறைந்த நிலப்பகுதியில் இது நன்றாக வளரும். இதன் இலைகள் அகன்று நீண்டு இருக்கும். இலை களைக் கசக்கி முகர்ந்தால் மாங்காயின் மணம் வீசும். இதன் வேர்களில் மஞ்சள் கிழங்குகளாகத் தோன்றும். இக்கிழங்குகளைச் சுண்டி உலர்த்துவார்கள். இவையே மஞ்சள் என விற்கப்படு கின்றன. நீரில் சுண்டவைக்காமல் அப்படியே உலர்த்தியும் மஞ்சள்தயார் செய்யலாம்.

மஞ்சளில் மேற்பூச்சுக்கும் சமையலுக்கும் எனத் தனித் தனியாக இரண்டுவகைகள் உண்டு. காட்டுமஞ்சள் அல்லது கஸ்தூரிமஞ்சள் என வேறொருவகையும் காணப்படுகிறது.

### தன்மை

கார்ப்பு கசப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். நிறத்தைத் தோற்றுவிக்கும். கப பித்தங்களைத் தணிக்கும்.

காட்டுமஞ்சள் கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. சுவை தரும். சடராக்னியை வளர்க்கும்.

### தீர்க்கும் நோய்கள்

நஞ்சு பீநசம் சுவையின்மை நீரிழிவு இரத்ததோஷம் வீக்கம் சோகை விரணம் கபம் பித்தம் தோல்நோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

### பயன்

மஞ்சள்தூளை ஒரு பலம் நாள்தோறும் பசுவின் சிறுநீரில் சேர்த்து உட்கொண்டால் குட்டநோய் தணியும்.

மஞ்சள்தூளை வெல்லத்துடன் சேர்த்துப் பசுவின் சிறு நீரைத் துணைமருந்தாக உட்கொண்டால் யானைக்கால் நோய் தணியும்.

பாரிபத்ராதிஹரித்ராகண்டம்—இது கிருமிநோய் கெட்ட விரணம் நரம்புச்சிலந்தி குட்டம் பௌத்திரம் சீதபித்தம் கட்டி

அரிப்பு அசீரணம் காமாலை குன்மம் வீக்கம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 196. மஞ்சிஷ்டி

**ஸம். மஞ்சிஷ்டா** Rudia Cordifolia

**தோற்றம்**

இது கொடி வகையைச் சேர்ந்தது. பத்தடி நீளம் வரை இதன் கொடிகள் வளர்ந்து சிவந்த நிறம் கொண்டிருக்கும். வேர் மிகவும் சிவந்தநிறம் கொண்டிருக்கும். இதன் கொடிகள் மரங்களைச் சார்ந்து பின்னிக்கொண்டு வளரும். இலைகள் வட்டமாக இருக்கும். இதன் வேரிலிருந்து ஒருவகை எண்ணெய் எடுக்கப்படுகிறது. இந்தச் செடி மருந்துக்கு மட்டுமல்லாது ஆடைகளுக்குச் சாயம் ஏற்றுவதிலும் பயன்படுகிறது. இது காடுகளில் நீர்ப்பாங்கான இடங்களில் நன்கு வளரும்.

**தன்மை**

)து இனிப்பும் கசப்புமான சுவைகளைக் கொண்டிருக்கும். குரலைச் செம்மைப்படுத்தும். உடல் நிறத்தையும் பொலிவையும் மிகுதிப்படுத்தும். பளுவானது. குருத்தன்மை கொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்த அதிஸாரம் குட்டம் இரத்ததோஷம் அக்கி நீரிழிவு முதலியவற்றைப் போக்கும்.

**பயன்**

மஞ்சிஷ்டாதி கிருதம்–இது குழந்தைகளுக்குப் பல் முளைக்கும் போது தோன்றும் நோய்களைத் தணிக்கும்.

மஞ்சிஷ்டாதி தைலம் –விரணங்கள் ஆறியபின் அவ்விடத்தில் உரோமங்களைத் தோற்றுவிக்கும். அதற்கு மேற்பூச்சு மருந்தாகும்.

மஞ்சிஷ்டாதி கஷாயம்–இது குட்டநோயைத் தணிக்கும். இதை வாதரத்தம் அரிப்பு படை சொறி முதலியவற்றிற்குப் பயன்படுத்தலாம்.

## 197. மணித்தக்காளி

**ஸம். காகமாசி Solanvm Nigrum**

**தோ|**

இது எங்கும் காணப்படும் சிறு செடிவகையாகும். இதன் மலர்கள் மிகச்சிறியவையாக வெண்ணிறம் கொண்டிருக்கும். மிளகுபோல் உருண்டையான சிறிய பச்சைக் காய்கள் தோன்றும். அவை பழுத்தால் கறுப்பு அல்லது சிவப்பு நிறம் பெறும். இதில் வெண்மை சிவப்பு எனக் காய்களின் நிறத்தால் இருவகையுண்டு. திப்பிலி மிளகு வெல்லம் தேன் இவற்றில் எதனுடனும் கலந்து மணித்தக்காளியை உண்ணக் கூடாது. பறித்தபின் ஓரிரவு இருந்த லையை மறுநாள் உண்பதும் கூடாது.

**தன்மை**

மணித்தக்காளி கசப்பு கார்ப்புச் சுவைகளும் எண்ணெய்ப் பசையும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். விந்துவை வளர்க்கும். கண்களுக்கு நலம் பயக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது வீக்கம் குட்டம் மூலநோய் காய்ச்சல் நீரிழிவு விக்கல் வாந்தி இதயநோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

மணித்தக்காளிச்சாற்றைப் பூசினால் குட்டம் தணியும்.

நொச்சி இலை மணித்தக்காளிஇலை எனுமிவற்றைத் தனித்தனியாகவோ ஒன்று சேர்த்தோ மைய அரைத்து நெய் கலந்து பூசினால் அக்கி நோய் தணியும்.

மணித்தக்காளி இலை முள்ளங்கி இலை வேப்பிலை எனுமிவற்றைப் பக்குவம்செய்து உட்கொண்டால் வீக்கம் நீங்கும்.

மணித்தக்காளி இலையை உப்பில்லாமல் நீருடனும் எண்ணெயுடனும் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்தால் ஊருஸ்தம்பவாதம் தணியும்.

வாயஸ்யாதிலேபம்—இது வெண்குட்டத்தைத் தணிக்கும்.

## 198. மந்தாரை

**ஸம். காஞ்சனார** Bauhinia Veriegate, Royb

**தோற்றம்**

மந்தாரை வெண்மை சிவப்பு மஞ்சள் என்னும் மூன்று நிறங்களால் மூவகைப்படும். இது மணமுள்ளது மணமற்றது என மேலும் இருவகையாகும். மலர்களுக்காக என இது தோட்டங்களில் வளர்க்கப்படுகின்றன. இதன் இலைகள் நன்றாகப் பிளந்து காணப்படும். இரு இலைகள் சேர்ந்திருப்பதுபோலத் தோன்றும். மலர்களில் ஐந்து இதழ்கள் ஏற்றத் தாழ்வாக இருக்கும். சித்திரை பங்குனி மாதங்களில் பூக்கும். வெண்ணிற முள்ளது சிவப்பு மலர்கள் கொண்டதைப் போலவே இருக்கும். இது குளிர்காலத்தில் சிலபகுதிகளில் சரத்ருதுவில் பூக்கும்.

மஞ்சள் நிறம் கொண்டது மலைப்பாங்கான இடத்தில் தோன்றும். இதன் மலர்கள் முன்கூறப்பட்ட இருவகைச் செடியின் மலர்களைவிடப் பெரியவையாக இருக்கும். காய் சுணை நிரம்பி சிவந்து காணப்படும். உட்பகுதியில் சிவப்புநிறத்துடன் கால்ரூபாய் நாணயம் போன்ற சுற்றளவுள்ள விதைகள் காணப் படும். ஒவ்வொரு காயிலும் நான்கு ஐந்து விதைகள் இருக்கும். வை இனிப்புச் சுவைகொண்டிருக்கும்.

**தன்மை**

இது துவர்ப்புச்சுவையும் குளுமைத் தன்மையும் கொண் டிருக்கும். மலத்தைத் தடுக்கும். கபபித்தங்களைத் தணிக்கும். இரண்டுவகை மலர்களும் இலகு வறட்சித் தன்மைகள் கொண் டிருக்கும். சடராக்னியை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கிருமி குட்டம் ஆசனவாய் நழுவுதல் கண்டமாலை விரணம் இருமல் இழுப்பு இரத்தபித்தம் பெரும்பாடு காயம்பட்டதால் தோன்றும் விரணம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

வெள்ளைமந்தாரை மலர்களைச் சமைத்து உண்ணச் செய் தால் இரத்தபித்தம் தணியும். வெள்ளை மந்தாரை மலரின் தூளைத் தேன்கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்தபித்தம் தணியும்.

வெண்மந்தாரைப்பட்டையின் தூளை உட்கொள்ளச் செய்தால் நாகத்தின் விஷம் தணியும். வெண்மந்தாரை வேர்த் தூளை உட்கொள்ளச் செய்தால் மூலநோய் தணியும்.

செம்மந்தாரைப்பட்டையின் தூளை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் கண்டமாலை தணியும்.

காஞ்சநாரகுக்குலு—இது கலகண்டம் கண்டமாலை நரம்புச சிலந்தி ஆகியவற்றைத் தணிக்கும்.

காஞ்சன குடிகை—இது கலகண்டம் கண்டமாலை எனும் நோய்களைப் போக்கும்.

## 199. மரமஞ்சள்

**ஸம். தாருஹரித்ரா** **Berberis Aristata**

**தோற்றம்**

இது மலைப்பகுதிகளில் புதராகத் தோன்றும் செடியாகும். 7 அல்லது 8 கை உயரம்வரை வளர்வதாகும். வேரிலிருந்து பலகிளைகள் தோன்றும். அந்தக்கிளைகள் ஒரு பக்கமாகச் சாய்ந்தபடி நீண்டு நிலத்தை நோக்கி வளைந்திருக்கும். நன்கு முற்றிய பழமையான கிளைகள் மேற்பகுதியில் சாம்பல் நிறமும் உட்பகுதி மஞ்சள் நிறமும் கொண்டிருக்கும். இலைகள் கடின மாய் சுரசுரப்புடன் கரடு முரடாகி நரம்புகள் பருத்துச் சிறிய காம்புடன் கூடியிருக்கும். இலைப்பகுதி முட்கள் கூடியது போலிருக்கும். மலர்கள் பெரியவை. ஆறு இதழ்கள் கொண்டு மஞ்சள் நிறத்துடன் இருக்கும். பழம் சிவப்பும் மஞ்சளும் கலந்த நிறத்துடன் உட்பகுதி சிவந்து அரசுப்பழத் தோற்றத்தில் இருக்கும்.

**தன்மை**

மஞ்சளைப் போன்ற தன்மையுடையது. கசப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

விரணம் நீரிழிவு அரிப்பு அக்கி கண்நோய்கள் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

மரமஞ்சள் பட்டையின் விழுதைப்பூசினால் விரணங்கள் ஆறும். மரமஞ்சள் சாற்றைத் தேனுடன் காலையில் உட்கொண்டு வந்தால் காமாலை நீங்கும்.

மரமஞ்சள் கஷாயத்தை அரிசி கழுவிய நீர் அல்லது தேனுடன் கலந்து பருகச் செய்தால் வெள்ளைப் பெரும்பாடு நீங்கும்.

தார்வ்யாதி அஞ்சனம்–இது கண்களில் தோன்றும் எரிச்சல் சிவத்தல் வீங்குதல் நீர் பெருகுதல் முதலிய நோய்களைத் தணிக்கும்.

தார்வ்யாதி தைலம்–இதைக்காதில் விடுவதால் காது நோய்கள் அனைத்தும் நீங்கும்.

## 200. மருக்காரை

**ஸம். மதனம்** Randia Dumetorum

**தோற்றம்**

இது மிகப்பெரியதாக வளரும் மரமன்று. இதன் இலைகள் உறுதியுடன் முட்கள் நிறைந்து காணப்படும். இலைகள் நாயுருவியின் இலைகளைப்போல இருக்கும். இலைக் காம்புகள் சிறியவையாக இருக்கும். மலர்கள் மஞ்சள் நிறம் கொண்டு சிறியவையாகக் காணப்படும். ஆடியில் பூத்துக் குளிர் காலத்தில் காய்க்கும். காய்கள் ஆப்பிள் பழத்தைப்போல நான்கு பகுதிகளாக இணைந்து உள்ளே நான்கு விதைகளைக் கொண்டிருக்கும். பழம் பழுத்ததும் மஞ்சள் நிறம் கொள்ளும்.

**தன்மை**

மருக்காரைக்காய் இனிப்புக் கசப்புச்சுவைகளையும் இலகுத் தன்மை உஷ்ணவீரியம் வறட்சி எனுமிவற்றைக் கொண்டிருக்கும். வாந்தியைத் தோற்றுவிக்கும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது கட்டி விரணம் குட்டம் வீக்கம் குன்மம் எனும் நோய்களைப் போக்கும்.

## 201. மருது

**ஸம். ககுப** Terminalia Arjuna

### தோற்றம்

மருது காடுகளில் வளரும் மரமாகும். இது வெண்மருது' கருமருது என இருவகைப்படும். சிவப்பு நிறமுள்ளதொருவகை உண்டு என நூலில் கூறப்பட்டுள்ளது. இதன் அடிமரம் நன்றாகப்பருத்து மேல்பட்டை வெண்ணிறம் கொண்டிருக்கும். இம்மரம் 50 கையளவு உயர்ந்து வளரும். இதன் இலை கொய்யாமரத்தின் இலை போல் இருக்கும். இலையின் மேற் பகுதி எண்ணெய்ப்பசை கொண்டும் இலையின் பின்பகுதி நரம்பு களுடன் கூடியிருக்கும். மேல்பகுதியிலிருந்து பார்த்தால் நரம்பு கள் தெரியா. வைகாசி ஆனி ஆடிமாதங்கள் வரை பூக்கும். மலர்கள் மிகச்சிறியவையாக மஞ்சள் நிறமோ வெண்ணிறமோ கொண்டிருக்கும். தை மாசி மாதங்களில் காய்க்கும். மிகவும் புளிப்புச்சுவை கொண்ட நீரை மிகுதியாகக் கொண்டிருக்கும்.

### தன்மை

மருது துவர்ப்புச் சுவையும் குளுமைத் தன்மையும் கொண் டிருக்கும். இதயத்திற்கு நன்மை தரும். கபபித்தங்களைத் தணிக்கும்.

கருநிறமுள்ள மருது துவர்ப்புச்சுவை கொண்டது. கபத்தைத் தணிக்கும். இதன்பிசின் கசப்பு துவர்ப்புச் சுவைகளும் குருகுணமும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும்.

சிவப்பு மருது கார்ப்பு கசப்புச்சுவைகளும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

அடிபடுதலால் தோன்றும் இளைப்பு நஞ்சு இரத்ததோஷம் நீரிழிவு உடலில் கொழுப்பு சேருதல் விரணம் ஆகியவற்றைத் தணிக்கும். கறுப்பு மருது விரணம் கிருமிநோய் வீக்கம் கட்டி செவிட்டுத்தன்மை பெண்குறிநோய் காதுநோய் ஆகியவற்றைப் போக்கும். இதன் பிசின் இரத்ததோஷம் அக்கி காய்ச்சல் விரணம் கிரகதோஷம் வயிற்றுவலி அதிஸாரம் நெருப்பு சுட்ட விரணம் ஆகிய நோய்களைப் போக்கும்.

சிவப்புமருது சோகை காதுநோய் நீரிழிவு குட்டம் நஞ்சு விரணம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

மருதஇலையை விரணங்களின் மேல் வைத்துக்கட்டுவதால் துன்பம் தணியும். மருதம்பட்டைக் கஷாயத்தைக் கொண்டு நனைத்தால் மூலநோய் தணியும். கருங்காலி மருது ஆகிய வற்றின் பட்டைகளின் கஷாயம் குட்டத்தைத் தணிக்கும். மருதக்கட்டைத்தூளை ஆடாதொடைச்சாற்றில் பலமுறை பாவனை செய்து தேன் நெய் கற்கண்டுத்தூள் ஆகியவற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் க்ஷயத்தில் தோன்றும் இரத்தம் வெளியேறும். இருமல் நீங்கும்.

அர்ஜுனாரிஷ்டம்—இது இதய நோய்களைப் போக்கும்.

அர்ஜுனாதிகிருதம் – பித்தத்தால் தோன்றும் நீரிழிவு நோயைப் போக்கும்.

ஸாலஸாராதி கணக்வாதம்–இது குட்டம் நீரிழிவு சோகை கபம் உடலில் மிகுந்துள்ள கொழுப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

## 202. மருதோன்றி

**ஸம். நகரஞ்சக** Lawsonfa Alba

**தோற்றம்**

இது செடிவகையைச் சேர்ந்தது. இதன் இலைகள் சிறியவை யாக இருக்கும். இதன் மலர்கள் வெண்ணிறத்துடன் சிறியவை யாக நறுமணம் கொண்டிருக்கும். இதன் இலைச்சாறு நகத் திற்குச் சாயம் தரும்.

**தன்மை**

எரிச்சலைப் போக்கும். வாந்தியாகச் செய்யும்.

**தீர்க்கும் நோய்கள்**

கபம் குட்டம் என்பனவற்றைப் போக்கும். மலத்தைத் தடுக்கும். பூதத்தால் தோன்றும் துன்பங்களைப் போக்கும். காய்ச்சலைத் தணிக்கும்.

## 203. மலைவேம்பு

**ஸம். கிரிநிம்ப** Ailanthus Excelsa

**தோற்றம்**

மலைவேம்பு வேம்பு இனத்தைச் சேர்ந்தது. மலைகளில் வளரக் கூடியது. இலைகள் வேப்ப இலைகளைப்போல அதை

விடச்சற்று பெரியவையாக இருக்கும். மலர்களும் வேப்பம் பூக்களைப் போலவே சற்று நீலநிறம் கொண்டிருக்கும். காய்கள் உருண்டையாக இருக்கும்.

**தன்மை**

கசப்பு துவர்ப்புச்சுவைகளும் வறட்சித் தன்மையும் சீத வீரியமும் கொண்டிருக்கும். மலத்தைத் தடுக்கும். கபபித்தங் களைத் தணிக்கும். இதன்மலர் தலை வலியைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இது எரிச்சல் விரணம் கிருமிநோய் காலரா சீதபித்தம் நஞ்சு ஆகியவற்றைத் தணிக்கும்.

வேம்பைப் போலவே இதைப்பயன்படுத்தலாம்.

## 204. மா

**ஸம். ஆம்ர** Mangifera Indica

**தோற்றம்**

மாமரத்தில் பலவகைகள் உண்டு. ஆம்ர ராஜாம்ர கோசாம்ர என்னும் மூன்று வகைகள் நூல்களில் விளக்கப் பட்டுள்ளன.

**தன்மை**

மாம்பிஞ்சு துவர்ப்பு புளிப்புச் சுவைகள் கொண்டது. சுவையூட்டும். முற்றியமாங்காய் வறட்சித் தன்மையும் புளிப்புச் சுவையும் கொண்டிருக்கும். இரத்தத்தைக் கெடுக்கும். மூன்று தோஷங்களையும் சீற்றமுறச் செய்யும்.

மாம்பழம் இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் எண்ணெய்ப் பசையும் சீதவீரியமும் கொண்டிருக்கும். உண்டதும் விந்துவை யும் உடல்வலிமையையும் வளர்க்கும். இதயத்திற்கு நன்மை செய்யும். சடராக்னியையும் கபத்தையும் சிறிதளவு பித்தத்தை யும் வளர்க்கும்.

மரத்திலேயே பழுத்தபழம் இனிப்பு புளிப்புச் சுவைகளும் குருத்தன்மையும் கொண்டிருக்கும். சிறிதளவு பித்தத்தை வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும். செயற்கையாகப் பழுக்கச் செய்த மாம்பழம் இனிப்புச்சுவை கொண்டிருக்கும்.

புளிப்புச் சுவையின்மையால் பித்தத்தைத் தணிக்கும். சில நாட்கள் வைத்திருந்த பின் பயன்படுத்தினால் லகுத்தன்மையும் சீத வீரியமும் கொண்டு வலிமையை வளர்க்கும். வாதபித்தங்களைத் ்க்கும்.

மாங்கொட்டைக்குள்ளிருக்கும் பருப்பு துவர்ப்பு சிறிதளவு புளிப்பு இனிப்புச் சுவைகளும் கொண்டிருக்கும். மாந்துளிர் சுவையூட்டும். கபபித்தங்களை தணிக்கும்.

மாமலர் குளுமைத்தன்மை கொண்டது. மலத்தைக் கட்டும். வாதத்தை வளர்க்கும். கபபித்தங்களைத் தணிக்கும்.

மாம்பழங்களை மிகுதியாக உண்பதால் சடராக்னிக் குறைவு விஷக்காய்ச்சல் இரத்தச்சார்புள்ள நோய்கள் கண் நோய்கள் முதலிய துன்பங்கள் தோன்றும். அதற்குச் சுக்குக்கஷாயம் அல்லது ஸௌவர்சலலவணம் சேர்ந்த சீரகக்கஷாயமாவது பருகச் செய்தால் துன்பம் தணியும்.

**பயன்**

மா நாவல்மரத்துளிரிலைகளின் கஷாயத்தைக் காய்ச்சிக் குளிரவைத்துச் சிறிது தேன் கலந்து பருகச் செய்தால் வாந்தி நிற்கும்.

மாங்கொட்டைப்பருப்பை உலர்த்தி மையத்தூளாக்கி மூக்கி லிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் மூக்கிலிருந்து இரத்தம் பெருகும். இரத்தபித்த நோய் தணியும்.

மாம்பட்டைத்தூளைத் தேனுடன் கலந்து பாலை அனுபானமாகக் கொண்டு உட்கொள்ளச் செய்தால் இரத்தாதிஸாரம் தணியும்.

மாம்பழச் சாற்றில் தேன் கலந்து பயன்படுத்தினால் மண்ணீரல் வீக்கத்தால் தோன்றிய பெருவயிறு தணியும்.

புலால் உணவை மிகுதியாக உண்பதால் தோன்றும் அசீரணத்திற்கு மாங்கொட்டைப் பருப்பைப் பயன்படுத்தினால் நோய் நீங்கும்.

கண்டாம்ரகம்—இது அறிவையும் உடல் வலிமையையும் வளர்க்கும். இருமல் இழுப்பு க்ஷயம் மூலநோய் அசீரணம்

நாவறட்சி வாந்தி மூர்ச்சை வயிற்றுவலி சோகை நீரிழிவு நீர்ச் சுருக்கு கால்கை வலி முதலிய நோய்களைத் தணிக்கும்.

ஆம்ரமூலாதி கிருதம்—இது வீக்கம் வாதகபநோய்கள் குன்மம் பெருவயிறு மண்ணீரல்வீக்கம் மூலநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 205. மாசிபத்திரீ

**ஸம். ஸ்தௌணேயக** Artemisia Indica

**தோற்றம்**

கிரந்தி தகரத்தைப்போல இதுவும் மணமுள்ள சிறுசெடி வகையைச் சேர்ந்தது.

**தன்மை**

கார்ப்பு கசப்பு இனிப்புச் சுவைகளைக் கொண்டதாகும். எண்ணெய்ப் பசையுள்ளது. மூன்று தோஷங்களையும் போக்கும். புத்தியையும் விந்துவையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

காய்ச்சல் கிருமி நஞ்சு இரத்ததோஷம் நாவறட்சி எரிச்சல் உடல் நாற்றம் பூதம் பிசாசு முதலியவற்றால் தோன்றும் துன்பங்கள் ஆகியவற்றைப் போக்கும்.

## 206. மாதுளை

**ஸம். தாடிம** Punica Granatum

**தோற்றம்**

மாதுளையில் இனிப்பு புளிப்பு இனிப்பும் புளிப்பும் கலந்த சுவை என மூன்று வகைகள் உண்டு. மாதுளை உயர்ந்து வளரும் மரமாகும். பழங்கள் பந்துகளைப்போல அழகாகக் காணப் படும். அவற்றுள் முத்துக்களைப் போன்ற விதைகள் சாற்றுடன் கூடிய சதைப் பகுதியால் சிறு அறைகளில் அடுக்கப் பட்டிருப்பதுபோல் சீராக அமைந்து காணப்படும். பழங்களின் மேல் தோல் துவர்ப்புச் சுவை கொண்டிருக்கும்.

**தன்மை**

இனிப்பு மாதுளை உஷ்ண வீரியமுள்ளது. இதயத்திற்கு நன்மை தரும். சிறிதளவு கபவாதங்களையும் பித்தத்தை மிகுதியாவும் தணிக்கும்.

புளிப்பு மாதுளை வறட்சித் தன்மை கொண்டது. வாத பித்தங்களை வளர்க்கும். பழங்களின் மேல் தோல் மலத்தைக் கட்டும். கிருமி நோய்களைப் போக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

மாதுளை நாவறட்சி எரிச்சல் காய்ச்சல் இதயநோய் தொண்டை நோய் இரத்தாதிஸாரம் முகநோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

மாதுளம் பழச்சாற்றை நாள்தோறும் உட்கொள்ளச் செய்தால் மூலநோய் மலக்கட்டு ஆமாசீரணம் ஆகியவை தணியும்.

மாதுளம்பழத்தோலை மைய அரைத்துப் பூசினால் பால் வினைநோயில் தோன்றும் புண் ஆறும்.

மாதுளை இலைத்தூளையும் சந்தனத்தூளையும் தேன் கலந்து தயிருடன் உட்கொள்ளச் செய்தால் ஐந்தாம் மாதத்தில் அசையும் கரு நிலைக்கும்.

தாடிமாஷ்டக சூரணம்—இது அதிஸாரம் கிரஹணி க்ஷயம் குன்மம் பெருவயிறு இருமல் இழுப்பு சடராக்னிக் குறைவு மூலநோய் பீநசம் ஆகியவற்றைப் போக்கும்.

தாடிமாதி கிருதம்—இது சோகை குன்மம் மூலநோய் மண்ணீரல்வீக்கம் இருமல் இழுப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

தாடிமாதிதைலம்—இது நீரிழிவு சிறுநீர்த்தடை சிறுநீர்ப் பையில் தோன்றும் கல் வயிற்றுவலி காமாலை இதயவலி விக்கல் ருமல் இழுப்பு முதலியவற்றைத் தணிக்கும்.

## 207. மாவிலங்கை

**ஸம். வருண** Criateava Religiosa

**-ம**

நெடுமரமாக வளரும். ஒரு நீண்ட காம்பில் மூன்று இலைகள் வீதம் தோன்றும். இலை நடுப்பகுதி எண்ணெய்ப்பசை கொண்டு அடர்ந்த பச்சை நிறங்கொண்டிருக்கும். இலைகளின் பின்பகுதி சிறிது வெளிறிய நிறம் கொண்டிருக்கும். மலர்

நான்கு இதழ்களைக் கொண்டும் சிறிது மலர்ந்த மலர் வெளிறிய பச்சை நிறத்துடனும் நன்றாக மலர்ந்த மலர் தங்கநிறம் கொண்டும் காணப்படும். பங்குனி சித்திரை மாதங்களில் பூக்கும். காய் உருண்டையாக வில்வக் காயைப்போல் இருக்கும்.

**தன்மை**

மாவிலங்கை கசப்பு துவர்ப்பு இனிப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண்டிருக்கும். இலகு குணமும் வறட்சித் தன்மையும் உஷ்ண வீரியமும் கொண்டதாகும். மலத்தை வெளியேற்றும். சடராக்னியையும் பித்தத்தையும் வளர்க்கும். வாதகபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

குன்மம் நீர்ச்சுருக்கு சிறுநீர்ப்பையில்கல் வாதரத்தம் கிருமி நோய் கட்டி இதயநோய் மார்புவலி ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

மாவிலங்கைப்பட்டையை அரைத்துக் கண்களில் மை போல் இட்டால் நஞ்சு கலந்த மையால் கண்களில் தோன்றிய துன்பம் நீங்கும்.

வேம்பு மாவிலங்கை இலைகளை இட்டுக் காய்ச்சிய நீரில் குளிக்கச் செய்தால் குழந்தைகளுக்குப் பூதனை என்னும் கிரகத்தால் தோன்றிய துன்பம் நீங்கும்.

மாவிலங்கை விழுதை மாவிலங்கைக் கஷாயத்துடன் உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றிய கல் நீங்கும்.

மாவிலங்கை வேர்க்கஷாயத்தில் தேன்கலந்து ஒரு முறை பருகச் செய்தால் கண்டமாலை தணியும்.

முதலில் பசுஞ்சாண வறட்டியைத் தலையில் தேய்த்தபின் மாவிலங்கை இலை விழுதைத் தேய்த்தால் பூச்சிகளால் தலை முடி உதிர்ந்துபோகும் நோய் நீங்கும்.

வருணாதிகிருதம்—இது சிறுநீர்ப்பையில் தோன்றும் கல்லைப் போக்கும்.

வருண கிருதம்—சிறுநீர்ப்பையில் கல் நீர்ச்சுருக்கு ஆகியவற்றைத் தணிக்கும்.

வருணாதிகணக்வாதம்—இது கபம் உடலில் மிகுந்துள்ள கொழுப்பு சடராக்னிக் குறைவு தலைவலி குன்மம் ஆகியவற்றைப் போக்கும்.

## 208. மிளகு

ஸம். மரீச Piper Nigrum

**தோற்றம்**

மிளகுக்கொடி தரையில் படரும். அருகில் மரம் முதலியவை இருந்தால் அவற்றில் பின்னிக்கொண்டு வளரும். கொடியில் சிறுகிளைகள் முடிச்சுகள் போன்ற கணுக்கள் காணப்படும். ஒவ்வொரு கணுவிலிருந்தும் மெல்லிய கம்பிகளைப் போன்ற கொடிகள் படர்ந்து மரக்கிளை முதலியவற்றைப் பற்றிக்கொள்ளும். இதன் இலை அகன்ற வெற்றிலை போன்று காணப்படும். இவற்றில் ஐந்து நரம்புகள் நன்றாகக் காணப்படும். இலைகளின் மேற்பகுதி பச்சை நிறத்துடனும் அடிப்பகுதி வெளிறியபச்சை நிறம் கொண்டும் இருக்கும். இந்தக் கொடிகளில் ஆண் பெண் என்ற இரண்டு வகைகள் தனித்தனியாக வளரும். சில கொடிகளில் ஆண் பெண்வகைகள் இரண்டும் காணப்படும். கூச்பிகார் அஸ்ஸாம் மலபார் சிங்கப்பூர் மலேயா ஆகிய பகுதிகளில் விளையும் மிளகில் இருவகை உண்டு. ஒன்று கிழக்குப்பகுதியில் தோன்றுவது. மற்றொன்று தெற்குப்பகுதியில் தோன்றுவது. கிழக்குப்பகுதியில் தோன்றும் மிளகைக் கழுவினால் அது வெண்மை நிறம் பெறும். தெற்குப் பகுதியில் தோன்றும் மிளகு சிறந்தது. இதை அளவிற்கு மீறிப்பயன்படுத்தினால் வயிற்று வலி நீர்ச்சுருக்கு போன்ற நோய்களைத் தோற்றுவிக்கும்.

**தன்மை**

மிளகு கார்ப்புச்சுவையும் தீக்ஷ்ணகுணமும் கொண்டதாகும். சீரண சக்தியை வலிவடையச் செய்யும். கபத்தையும் வாதத்தையும் போக்கும். உஷ்ண சக்தியைக் கொடுக்கும். பித்தத்தைத் தோற்றுவிக்கும். இருமல் கிருமிநோய் எனும் இவற்றைப் போக்கும். பச்சை மிளகு செரிமானமாகும்பொழுது இனிப்புச் சுவை கொள்ளும். இது அதிக உஷ்ணம் விளைவிக்காது. சிறிது தீக்ஷ்ணகுணம் கொண்டு கபத்தைப் போக்குவதாகும். பச்சை மிளகு பித்தத்தை வளர்க்காது. வெள்ளை மிளகு கார்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது. சிறிதளவு விந்துவை வளர்க்கும். தக்கபடி பயன்படுத்தினால் இரஸாயனமாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

மிளகு இழுப்பு வயிற்றுவலி கிருமிநோய் ஆகியவற்றைப் போக்கும். வெள்ளைமிளகு நஞ்சு பூதங்களால் தோன்றும் துன்பம் கண்நோய் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

மிளகுத்தூள் சர்க்கரை நெய் தேன் எனும் இவற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் இருமல் நீங்கும்.

மிளகு வெல்லம் தயிர் எனும் இவற்றைக் கலந்து பயன் படுத்தினால் பீநச நோய் உள்ளவர்களுக்கு நன்மை தரும்.

மரீச்யாதிசூரணம்—இது வாதத்தால் தோன்றும் கிரஹணி சுவையின்மை என்பனவற்றைப் போக்கும்.

மரீச்யாதிதைலம்—இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன்படுத்தினால் சொறி அரிப்பு வங்கு முதலியவற்றைப் போக்கும்.

தேகராஜமரீசம்—இது இருமல் இழுப்பு நோய்களைப் போக்கும்.

## 209. முதியார்கூந்தல்

**ஸம். பிரஸாரிணி** Pacderia Foetida; Linn

**தோற்றம்**

இது மரத்தைச் சார்ந்து படரும் காட்டுக் கொடியாகும். கொடியைக் கசக்கிச் சாறு பிழிந்தெடுத்தால் மலநாற்றம் வீசும். கோடையில் இலைகள் உதிர்ந்து கொடியின் நுனிப்பகுதியில் ஒன்றிரண்டு இலைகள் காணப்படும். கார்ப்பருவத்தில் நன்றாகத் துளிர்த்து மலர்களுடன் காணப்படும். கூதிர்ப் பருவத்தில் இந்தக் கொடி மறுபடியும் வலிமை கொண்டிருக்கும். அவ்வமயம் மலர்கள் காயாகும். கொடியின் இருபக்கங்களிலும் சீராக இரண்டிரண்டு இலைகள் காணப்படும். கீழே இருக்கும் இலை பெரியதாக அகன்றிருக்கும். மேலிருக்கும் இலை சற்று சிறிய தாகவும் மெல்லியதாகவும் இருக்கும். மலர்கள் சிறியவையாக மூடிக் கொண்டிருக்கும். அவை இதழ்களுக்கு மேல் வளர்ந் திருக்கும். காம்பை நோக்கிச் சுருங்கியிருக்கும்.

**தன்மை**

இது விந்துவையும் வலிமையையும் வளாக்கும். பேதியாகச் செய்யும்: உஷ்ணவீரியம் கொண்டது. கசப்புச் சுவை கொண்டது.

**தீர்க்கும் நோய்கள்**

இது வாதகபங்களைத் தணிக்கும். வாதரத்தத்தைப் போக்கும். கண்களுக்கு நன்மை தரும். காய்ச்சலைப் போக்கும். உடைந்த எலும்புகளைச் சேர்க்கும்.

**பயன்**

முதியார்கூந்தலை வேருடன் கொண்டு விழுதும் கஷாயமும் செய்து அத்துடன் பாலும் எண்ணெயும் சேர்த்து எண்ணெய்ப் பக்குவம் செய்து பருகவும் எண்ணெய்க் குளியலுக்கும் பயன் படுத்தினால் வாதநோய்கள் தணியும்.

முதியார்கூந்தல் விழுதை இளநீருடன் நாள்தோறும் பயன் படுத்தினால் நீர்ச்சுருக்கு சிறுநீருடன் வெளியேறும் மணல் முதலிய நோய்கள் தீரும்.

பிரஸாரிணீதைலம் — வாதநோய்கள் அனைத்தையும் நீக்கும். வாதரத்தம் கால்கைவலி பைத்தியம் வாந்தி உட லுறுப்புகள் உலர்ந்து போதல் முதலிய நோய்களைத் தணிக் கும்.

## 210. முள்ளங்கி

**ஸம். மூலக** Raphanus Sativus

**தோற்றம்**

இது சிறியது பெரியது எனவும் வெளுப்பு சிவப்பு எனவும் இருவகைளாகிய கிழங்கு இனத்தைச் சேர்ந்ததாகும். மேலும் சாணக்ய—கிருஞ்சன—பிண்ட-பால-கர்ஜர என ஐந்து வகைகள் உண்டு எனவும் நூல்கள் கூறுகின்றன. ஆனால் ஒவ்வொன்றும் வேறுவேறு தன்மைகளைக் கொண்டவையாகையால் வேறு வேறு இனத்தைச் சேர்ந்தவை எனத் தெரிய வருகிறது. வெளுப்பு நிறத்தில் உள்ளது சிறியது பெரியது என இரண்டு வகையிலும் சிவப்பு சார்ந்தமஞ்சள் நிறமுள்ளது நல்ல சிவப்பு நிறம் கொண் டது என இரண்டுவகையிலும் ஆக நான்குவகை முள்ளங்கிகள் பொதுவாகக் காணப்படுகின்றன. வெண்ணிறமுள்ளது யானைத் தந்தம் போலவும் பெரியது நீண்டும் காணப்படும்.

மூன்றாவது சிறிது மெலிந்தும் நான்காவது உருண்டை வடிவத்திலும் காணப்படுகிறது.

**தன்மை**

சிறுமுள்ளங்கி கார்ப்புச்சுவையும் இலகு குணமும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். சுவையூட்டும். குரலைச் செம்மையாக்கும். மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

பெரு முள்ளங்கி வறட்சித்தன்மையும் குருகுணமும் உஷ்ணத் தன்மையும் கொண்டிருக்கும். மூன்று தோஷங்களையும் வளர்க்கும். எண்ணெயில் பக்குவம் செய்தால் மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

சிவப்பு முள்ளங்கி (காரட்) இனிப்புச்சுவையும் தீக்ஷ்ண இலகு குணங்களும் உஷ்ண வீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். மலத்தைத் தடுக்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

இளம் முள்ளங்கி கசப்புஇனிப்பு கார்ப்புச்சுவைகளும் தீக்ஷ்ண குணமும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். தொண்டைக்கு நன்மைதரும். வலிமையை வளர்க்கும். சுவையூட்டும்.

நன்கு முதிர்ந்த முள்ளங்கி உஷ்ணவீரியமுள்ளது. வீக்கத்தையும் அழற்சியையும் தோற்றுவிக்கும். இரத்தத்தைக் கெடுக்கும்.

உலர்ந்த முள்ளங்கி இலகுகுணமுள்ளது. மூன்று தோஷங்களையும் நஞ்சையும் போக்க வல்லது.

உணவுக்குமுன் உண்ணப்பட்ட முள்ளங்கி பித்தத்தை வளர்க்கும். இரத்தத்தைக் கெடுக்கும். எரிச்சலைத் தோற்றுவிக்கும்.

உணவுடன் உண்ணப்பட்ட முள்ளங்கி உடலுக்கு நன்மை தரும்.

முள்ளங்கித் தைலம்—இது கார்ப்புச் சுவையும் தீக்ஷ்ண இலகு குணங்களும் உஷ்ணவீரியமும் கொண்டது. வாதகபங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

முள்ளங்கி காய்ச்சல் இழுப்பு மூக்கு கண் தொண்டைகளில் தோன்றும் நோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

முள்ளங்கிக் கஞ்சி வாயில் எச்சில் ஒழுகுதல் தொண்டைப் பிடிப்பு சுவையின்மை பீநசம் இருமல் கபநோய்கள் ஆகிய வற்றைத் தணிக்கும்.

முள்ளங்கிமலர்—கபபித்தங்களைத் தணிக்கும்.

மூலக தைலம்—கிருமிநோய் குட்டம் நீரிழிவு தலை நோய் கள் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

உலர்ந்த முள்ளங்கிக் கஞ்சியை உட்கொள்ளச் செய்தால் விக்கல் இழுப்பு ஆகியவை தணியும்.

முள்ளங்கியை பக்குவம் செய்து உண்ணச்செய்தால் வாதத் தால் தோன்றும் இருமல் நீங்கும்.

இளம் முள்ளங்கி கஷாயத்தில் திப்பிலித்தூளைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் காலரா தணியும்.

முள்ளங்கியை எள்ளுடன் உட்கொள்ளச் செய்தால் வீக்க வகைகள் அனைத்தும் தீரும்.

மூலகாதிக்ஷாரதைலம்—இதைக் காதில் இட்டால் காது வலி காதுஇரைச்சல் சீழ் ஒழுகுதல் முதலியவை நீங்கும்.

மூலகாதி தைலம்—இதை எண்ணெய்க் குளியலுக்குப் பயன் படுத்தினால் வாத நோய்கள் அனைத்தும் நீங்கும்.

சுஷ்கமூலாதி தைலம்—இதை எண்ணெய்க் குளியலுக்குப் உட்கொள்ளவும் பயன்படுத்தினால் வீக்கம் பெருவயிறு இழுப்பு காமாலை சோகை விரணத்தில் தோன்றிய வீக்கம் கண்வலி முதலியன நீங்கும்.

## 211. மூங்கில்

**ஸம். வம்ச Bam Busa Arundinacea**

**தோற்றம்**

மூங்கில் நீண்ட முட்களுடன் உயர்ந்து வளரும். இதில் பல வகைகள் உண்டு. சிறப்பாக உட்பகுதியில் கெட்டியாக இருப்பது குழாய்போல் இருப்பது என இரண்டு வகைகள் உண்டு. குழாய் போலிருக்கும் மூங்கிலின் கணுக்களில் உப்பு போன்ற ஒரு பொருள் காணப்படும். இதுவே மூங்கில் உப்பு என மருத்துவ முறையில் பயன்படுகிறது. மூங்கிலைக் கல்லில் நீர்விட்டுத் தேய்த்துப்பூசினால் பூரான் கடி முதலியவற்றின் நஞ்சு தீரும். இதில் தோன்றும் அரிசியை ஏழைகள் உண்பர்.

**தன்மை**

மூங்கில் புளிப்பு துவர்ப்பு கார்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. குழாய் போலுள்ள மூங்கில் இதயத்திற்கு நன்மை தரும். இதன் குருத்து கார்ப்பு துவர்ப்பு இனிப்புச்சுவைகளும் குருத்தன்மையும் கொண்டிருக்கும். எரிச்சலைத் தோற்று விக்கும். வாதபித்தங்களை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும்.

மூங்கில் அரிசி—துவர்ப்புச் சுவையும் ரூக்ஷகுணமும் உஷ்ண வீரியமும் கொண்டதாகும். கபத்தைத் தணிக்கும். வலிமை தரும். கொழுப்பையும் கிருமியையும் நஞ்சையும் போக்கும்.

மூங்கில் உப்பு- இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். உடல் வலிமையையும் விந்துவையும் வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

கெட்ட மாமிசப்பகுதியை நீக்கும். கபபித்தங்களைத் தணிக்கும். குட்டம் இரத்ததோஷம் நீரிழிவு மூலநோய் விரணம் வீக்கம் ஆகியவற்றைத் தணிக்கும்.

மூங்கில் உப்பு இரத்ததோஷம் குட்டம் விரணம் சோகை எரிச்சல் நீர்ச்சுருக்கு ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

மூங்கில் இலைக் கஷாயத்தைக் கொண்டு குளியல் செய்வித்தால் மூலநோய் தணியும்.

வம்ச பத்ராதி வர்த்தி—இதை மேல்பூச்சாகப் பயன்படுத்தினால் சிலந்தி எலி நாகம் முதலியவற்றின் விஷம் தணியும். கண்களில் மைபோல் இட்டால் கண்களில் பூ விழுதல் போன்ற கண்நோய்கள் தணியும்.

வேணுபத்ராதிகஷாயம்—இரத்தபித்தத்தைத் தணிக்கும்.

## 212. மேதா - மகாமேதா

**ஸம். மேதா — மகாமேதா**

**தோற்றம்**

மகாமேதா கிழங்கு வகையைச் சேர்ந்தது. உலர்ந்த சுக்கைப்போல இருக்கும். இதன் கொடி மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். மேதா என்பதும் மகாமேதாவைப் போலவே இருக்கும். ஆனால் நிறம் வெண்மையாக இருக்கும். கிழங்கை நகத்தால் கிள்ளினால் கொழுப்பைப் போன்ற தோற்றத்துடன் சாறு சுரக்கும். இரண்டுவகைகளும் இமயமலைச்சாரலில் விளைவனவாகும். ஆயுளை வளர்க்கும் பொருள்களில் இவையும் சேரும்.

**தன்மை**

மேதா என்பது இனிப்புச்சுவையும் எண்ணெய்ப்பசையும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். வாதத்தை வளர்க்கும். பித்தத்தைத் தணிக்கும். மகாமேதா குளுமைத் தன்மை கொண்டது. இவ்விரண்டு வகைகளும் விந்துவை வளர்க்கும். உடலைச் செழிப்பாக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இரத்தபித்தம் வாதசுரம் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

திவிமேதாதிலேகியம்—பித்தத்தால் தோன்றிய இருமலைப் போக்கும்.

## 213. யானைத்திப்பிலி

**ஸம. கஜப்பிப்பலி** Pothos Officinalis

**தோற்றம**

செவியத்தின் பழம் யானைத்திப்பிலி எனப்படும். இதற்கு வடமொழியில் சிரேயசி கோலவல்லி என்னும் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

**தன்மை**

யானைத் திப்பிலி கார்ப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். வர்தகபங்களைத் தணிக்கும். சூட்டை வளர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

அதிஸாரம் இருமல் தொண்டை நோய்கள் கிருமிநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

## 214. லக்ஷ்மணா (திருதாளி)

**ஸம். லக்ஷ்மணா** Ipomoca Sepiaria

**தோற்றம்**

இது நிலத்தில் படர்ந்திருக்கும் கொடி வகையைச் சேர்ந்தது. மிகவும் அரிதாகக் காணப்படும். இதன் இலைகளின் மேல் சிவப்புப்புள்ளிகள் காணப்படும். இதன் மலர்கள் வெண்மையாக இருக்கும். காய்களுக்குள் மெத்தெனப்பஞ்சைப் போன்ற கோது காணப்படும். இதன் கிழங்கு சிறு குழந்தையின் தோற்றத்தில் இருக்கும். ஆகையால் இது பிள்ளைப் பேற்றை உண்டாக்கும் மருந்து பொருளாகக் கருதப்படுகிறது. இதன் சாற்றை பும்ஸவனம் என்னும் சடங்கில் கருவுற்றவளின் மூக்கிலிடுவதற்குப் பயன்படுத்தவேண்டுமென நூல்கள் கூறுகின்றன.

**தன்மை**

இது குளுமைத் தன்மை உடையது. பேதியாகச் செய்யும். உட்கொண்டதும் விந்துவை வளர்க்கும். மூன்று தோஷங்களையும் தணிக்கும். இனிப்புச்சுவை கொண்டது. இரஸாயனப் பொருளாகும். மலட்டுத் தன்மையை நீக்கும்.

**பயன்**

லக்ஷ்மணா கிழங்கைக்கொண்டு செய்த நெய் மருந்தைக் குழந்தை பிறந்ததும் இரண்டாம் நாளும் மூன்றாம் நாளும் அதன் நாக்கில் தடவி உட்கொள்ளச் செய்தால் குழந்தை நல்ல உடல் நலமும் திடமும் கொண்டு வளரும்.

மாதவிடாய்க்குளியலுக்குப்பின் லக்ஷ்மணாவேரின் விழுதைப் பாலுடன் மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்தால் பெண்களுக்கு மலட்டுத் தன்மை நீங்கும்.

லக்ஷ்மணாலேகியம்—இது கருவை நிலைக்கச் செய்யும்.

லக்ஷ்ணமாரிஷ்டம்- பெண்களின் நோய்களைப் போக்கும்.

## 215. வசம்பு

**ஸம். வசா** Acorus Calamus

**தோற்றம்**

வசம்புச்செடி புதராக 5 அடி உயரம் வரை வளரும். இலை கரும்பின் இலையைப்போல ஆனால் சற்று அகன்று காணப்படும். இச்செடியில் மலர்கள் தோன்றா. இச்செடியின் கட்டையே வசம்பு எனப்படுகிறது. இது கோதுமை நிறம் கொண்டிருக்கும். இதன் மணம் ஒருவகை நெடியுள்ளதாக இருக்கும். சிவப்பு வெளுப்பு எனும் நிறங்களால் இது இரு வகைப்படும். மற்றும் சீன தேசத்தில் தோன்றும் 'சோப்சீன' என்ற வகையைச் சார்ந்த வசம்பு பெயர் பெற்றதாகும். சிறப்பாக இது 'சிப்லிஸ்' எனும் பால்வினை நோயைப்போக்கக் கூடியதாகும். இதுவே பிரங்கிக்கட்டை எனப்படுகிறது.

பிரங்கியின் இலை அமுக்கராக்கிழங்குச் செடியின் லையைப் போலிருக்கும். இதன் கிழங்கில் முடிச்சுகள் காணப் படும். பாதிரி மலரின் நிறம் கொண்டிருக்கும்.

மணல் நிறைந்த நீர்ப்பாங்கான இடத்தில் நன்றாக வளரும். சிறப்பாக குராஸான் கூச்பிகார் வங்கம் பீஹார்பகுதி மத்தியப் பிரதேசம் முதலிய இடங்களில் விளைகிறது.

**தன்மை**

வசம்பு கார்ப்பு கசப்புச் சுவைகளும் உஷ்ணவீரியமும் கொண்டதாகும். சடராக்னியை வளர்க்கும். வாந்தியைத் தோற்றுவிக்கும். சிறுநீரையும் மலத்தையும் வெளியேற்றும். வாதத்தைத் தணிக்கும். வெளுப்பு சிவப்பு நிறங்களைக் கொண்ட வசம்புகளில் தன்மையில் வேற்றுமை இல்லை.

பிரங்கிக் கட்டை எனப்படும் வேறு நாட்டில் (சீனாவில்) தோன்றும் வசம்பு **Similax China** எனப்படும். இது சிறிது கசப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். அமுக்கராக் கிழங்கைப் போன்ற

கிழங்கைக் கொண்டிருக்கும். இது சிறப்பாகப் பால்வினை நோயைப் போக்கும்.

**தீர்க்கும்**

வசம்பு வயிற்றுவலி சுரோதஸ்களில்தடை கால்கைவலி கபத்தினால் தோன்றிய பைத்தியநோய் பூதங்களால் தோன்றிய துன்பம் ஆகியவற்றைப் போக்கும். பிரங்கிப்பட்டை சிறப்பாக வாதநோய்களையும் பால்வினைநோய்களையும் போக்கும். (பிரங்கி பட்டையைப்பயன்படுத்தும் போது மது எண்ணெய் புளிப்புக்காடி உவர்ப்பும்புளிப்புமுள்ள காய்கறிகள் உப்பு முதலியவற்றை விலக்க வேண்டும்.)

**பயன்**

வசம்பைத் தூளாக்கித் தேனுடன் உட்கொள்ளச் செய்தால் கால்கைவலி நீங்கும்.

வசம்பு கடுகு எனுமிவற்றை மைய அரைத்துப்பூசினால் விரைவீக்கம் நீங்கும்.

வசம்பு வேப்பங்கட்டை எனும் இவற்றின் கஷாயத்தைப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்தால் கபத்தால் தோன்றிய இதயநோய் தீரும்.

வசம்பு கோஷ்டம் வாயுவிளங்கம் எனும் இவற்றின் கஷாயத்தைக் குளியலுக்குப் பயன்படுத்தினால் சிறுவர்களுக்குத் தோன்றும் சொறி சிரங்கு ஆகியவை நீங்கும். வசம்பின்தூளை அரிசி கழுவிய நீருடன் மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்தால் எலிவிஷம் தணியும். (பத்தியமான உணவு உட்கொள்ளச் செய்யவேண்டும்.)

வசம்பின் விழுதை அளவோடு நீர் அல்லது பால் அல்லது நெய்யுடன் ஒரு மாதகாலம் உட்கொள்ளச் செய்தால் நினைவாற்றல் வளரும்.

வசாதி கிருதம்—இது சடராக்னி நினைவாற்றல் அறிவாற்றல் எனுமிவற்றை வளர்க்கும்.

வசாதி சூரணம்—இது குன்மம் வயிற்றுவலி எனுமிவற்றைப் போக்கும்.

வசாதிகுடிகை—இது வாதத்தினால் தோன்றிய மூல நோயைத் தணிக்கும்.

வசாத்யவ லேஹம்— இது பெண்குறியில்வலி விலாவலி இதய நோய் குன்மம் மூலநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

மதுஸ்நுஹீரஸாயனம்—இது நீரிழிவு குட்டம் குன்மம் வயிற்றுவலி பௌத்திரம் இருமல் இழுப்பு வாதநோய் விரணம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 216. வட்டத்திருப்பி

**ஸம். பாடா** Clypea Hernendo Folia

**தோற்றம்**

இது மரத்தை அல்லது வேறு ஏதேனும் ஒரு கொடியைச் சார்ந்து பின்னிக் கொண்டு வளரக்கூடிய கொடியாகும். கொடி நூலைப்போல மிகவும் உறுதியாக இருக்கும். நன்றாக வளர்ந்தாலும் சுண்டு விரல் பருமன் அளவினில் மிஞ்சி இருக்காது. இலைக்காம்பு இலையின் பின்பகுதியில் சேர்ந்திருக்கும். இலைக் காம்பு செடியில் ஒட்டிக்கொண்டிருக்கும் பகுதி இலையை விடவேறாகக் காணப்படாது. இதன் மலர் மிகவும் சிறியதாய் மயில் தோகை நிறத்தில் காணப்படும். கார்ப்பருவத்தில் பூக்கும்.

காய் மணித்தக்காளிக் காய்களைப்போல் சிவப்பு நிறத்தில் இருக்கும். இதன் சாற்றைத் தண்ணீரிலிட்டால் தயிர்போல் கட்டிவிடும்.

நம் நாட்டில் கிழக்குப் பகுதியில் உள்ள காடுகளிலும் மலையாளப்பகுதி காடுகளிலும் மிகுதியாகக் காணப்படுகிறது. இதில் ராஜாபாடா லகுபாடா என இரண்டு வகைகள் இருப்பதாக நூல்கள் கூறுகின்றன

**தன்மை**

வட்டத்திருப்பி கார்ப்புச்சுவையும் தீக்ஷ்ணத்தன்மையும் உஷ்ணவீரியமும் லகுகுணமும் கொண்டிருக்கும். வாதகபங்களைத் தணிக்கும். உட்கொண்டதும் விந்துவை வளர்க்கும். உடைந்த எலும்பைச் சேர்க்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வட்டத்திருப்பி வயிற்றுவலி காய்ச்சல் வாந்தி குட்டம் அதிஸாரம் இதயநோய் எரிச்சல் அரிப்பு நஞ்சு இழுப்பு கிருமிநோய் குன்மம் இடுவிஷம் விரணம் எனுமிவற்றைப் போக்கும்.

**பயன்**

வட்டத்திருப்பியை காஞ்சொரி வ்ல்வம் எனும் இவற்றில் ஒன்றின் வேருடன் விழுதாக அரைத்து அல்லது கஷாயம் காய்ச்சி உட்கொள்ளச் செய்தால் மூலநோயில் வலி நீங்கும்.

வட்டத்திருப்பி வேர் திரிகடுகம் குடசப்பாலைப் பட்டை இவற்றின் கஷாயத்தை உட்கொள்ளச் செய்தால் மாதவிடாய் இரத்ததோஷம் நீங்கும். பிள்ளைப் பேற்றின்போது குழந்தையின் தலை மட்டும் வெளிவந்து உடல் வெளிவராமலிருக்கும் போது வட்டத்திருப்பியின் வேரைக் குறிப்பகுதியில் வைக்கச் செய்தால் எளிதில் பிள்ளைப்பேறு உண்டாகும்.

வெண்சாரடைவேர் வட்டத்திருப்பிவேர் எனும் இவற்றைச்சம அளவில் கொண்டு அரிசி கழுவிய நீருடன் மைய அரைத்து உட்கொள்ளச் செய்தால் மண்ணீரல்வீக்கத்தால் தோன்றிய பெருவயிறு தணியும்.

புஷ்யானுக சூரணம்—இது மூலநோய் இரத்த அதிஸாரம் பெண்குறிநோய் மாதவிடாய் இரத்ததோஷம் ஆகியவற்றைத் தணிக்கும்.

பாடாதி சூரணம்—இதைக் கொண்டு பல் துலக்கினால் பல்நோய்கள் நீங்கும்.

பாடாத்ய சூரணம்—இது கிரஹணி அதிஸாரம் வாந்தி காய்ச்சலுடன் கூடிய அதிஸாரம் இதயநோய் சுவையின்மை சடராக்னிக் குறைவு ஆகியவற்றைத் தணிக்கும்.

பாடாதி தைலம்—இதை மூக்கிலிடும் மருந்தாகப்பயன் படுத்தினால் பீநசம் தணியும்.

## 217. வத்ஸநாபி

**ஸம். வத்ஸநாபா** Aconitum Chas Manthum

**தோற்றம்**

இதன் இலை நொச்சி இலையைப்போல இருக்கும். இதன் கிழங்கு பசுவின் கன்றின் தொப்புளின் தோற்றத்தில் இருப்பதால் இதற்கு இப்பெயர் ஆயிற்று. இதன் அருகில் வேறு செடி எதுவும் வளராது. இது கொடிய நச்சுத்தன்மை கொண்டது.

**தன்மை**

மிக்ககவனத்துடன் தகுந்த முறையில் இதைப் பயன்படுத்தினால் வாதநோய்கள் காய்ச்சல் ஸந்நிபாதம் குட்டம் முதலியன தீரும். சிறிதளவு அளவுக்கு மீறி உட்கொண்டால் நாக்கை உள்ளுக்கு இழுத்துவிடும். மிகவும் எரிச்சலைத் தோற்றுவிக்கும். தேள் விஷம் முதலியவற்றிற்கு இதை அரைத்துப் பூசுவதுண்டு.

## 218. வல்லாரை

**ஸம். பிராம்மி** Gratiola Monniera, Linn

**தோற்றம்**

நிலத்தில் பரவும் சிறுகொடியாகும். நீர்நிலைகளின் அருகில் நன்கு வளரும். ஒரு முறை இதை வளர்த்தால் வெகு காலம் வரை அழியாது, கார்ப்பருவத்தில் உலர்ந்து கூதிர் பருவத்தில் நன்கு துளிர்த்து வளரும். இளவேனில் முதுவேனில் பருவங்களில் பூத்துக் காய்க்கும். இதன் இலை சிறியதாகவும் வட்டமாகவும் சற்று தடித்தும் காம்புப் பகுதியில் சற்று மெலிந்தும் காணப்படும். உற்றுக்கவனித்தால் இலைகளின் நடுப்பகுதியில் மிகவும் நுண்ணிய அடையாளங்கள் காணப்படும். செடியின் அடிப்பகுதியில் முடிச்சு போன்ற பகுதிகளிலிருந்து கம்பி போன்ற கொடிகள் தோன்றி நிலத்தில் பதிந்திருக்கும். இதன் மலர் வெண்மையுடன் சிறிது நீலம் கலந்த நிறத்துடன் இதழ்கள் சேர்ந்து இதழ்முனைகள் ஐந்து பகுதிகளாகப் பிரிந்து காணப்படும். செடி முழுவதும் கசப்புச்சுவை கொண்டிருக்கும். இதில் மற்றொருவகை மண்டூக பிராம்மி எனப்படுவது உண்டு. இதன் இலைகள் சற்று பெரியவையாகவும் வட்டமாகவும் இலைக் காம்புகள் நீளமாகவும் மலர் சிவந்தும் காணப்படும். இலைகளை மென்றால் ஒருவகை இனிப்புச்சுவையுடன் மணமும் கொண்டிருக்கும்.

**தன்மை**

வல்லாரை கசப்பு துவர்ப்பு இனிப்புச்சுவைகளும் இலகு குணமும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். அறிவாற்றலையும் விந்துவையும் வளர்க்கும். இரசாயனமானது. மண்டூக பிராம்மியும் இத்தன்மைகளையே கொண்டிருக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

குட்டம் சோகை நீரிழிவு இரத்த தோஷம் இருமல் நஞ்சு வீக்கம் காய்ச்சல் ஆகியவற்றைப் போக்கும்.

**பயன்**

வல்லாரை சுரசத்தைப் பாலில் கலந்து பருகச் செய்தால் கால்கைவலி நீங்கும்.

வல்லாரை சுரசத்தில் கோஷ்டத்தின் தூளையும் தேனையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் பைத்தியம் தணியும்.

வல்லாரைச் சுரசத்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் அம்மைநோய் தணியும்.

நெருஞ்சில் அதிமதுரம் வல்லாரைஇலை எனும் இவற்றை விழுதாக்கி உட்கொள்ளச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் நீங்கும்.

பிராம்மிகிருதம்—இது பைத்தியம் குட்டம் கால்கை வலி மலட்டுத் தன்மை ஆகியவற்றைப் போக்கும். அறிவாற்றலை வளர்க்கும்.

மண்டூகபர்ண்யாதி ரஸாயனம்—இது எல்லா நோய்களையும் போக்கும். ஆயுள் உடல்வலிமை நிறம் சடராக்னி அறிவாற்றல் ஆகியவற்றை வளர்க்கும்.

ஸாரஸ்வதாரிஷ்டம் — இது இரசாயனமானது. ஆயுள் வலிமை நினைவாற்றல் உடல் பொலிவு ஆகியவற்றை வளர்க்கும். விந்து தோஷம் மாதவிடாய் இரத்ததோஷம் எனுமிவற்றைப் போக்கும். பாடுதல் படித்தல் என்பனவற்றால் தோன்றும் சோர்வு முதலியவற்றைப் போக்கும்.

## 219. வாகை

**ஸம். சிரீஷ** Mimosa Sirisa Roxb

**தோற்றம்**

இது காடுகளில் வளரும் நெடுமரமாகும். அடிமரம் பருத்தும் பட்டை வெளிறிய கருநிறம் கொண்டும் இருக்கும்

பட்டை இனிப்பு புளிப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டிருக்கும். இலைகள் நெல்லி இலைகளைப் போலிருக்கும். ஒரு காம்பில் பல இலைகள் இருபக்கங்களிலும் சீராக இருக்கும். குளிர் காலத்தில் இலைகள் உதிர்ந்துபோகும். மலர்கள் மஞ்சள் நிறம் கொண்டு மென்மையாக இருக்கும். மலர்களுக்கு மணம் உண்டு. இதில் சிரீஷ—கண்டகிசிரீஷ என இருவகைகள் உண்டென்று நூல்களில் கூறப்பட்டுள்ளது. கண்டகிசிரீஷ என்பது மிக உயர்ந்து வெண்ணிறங் கொண்டு வளரக் கூடியது. நஞ்சை முறிக்கும் பொருள்களில் வாகையும் ஒன்றாகும்.

## தன்மை

இது இனிப்பு கசப்பு துவர்ப்புச் சுவைகள் கொண்டது. இலகுகுணமுள்ளது. சிறிதளவு சூட்டை வளர்க்கும். தோஷங்களைத் தணிக்கும்.

## தீர்க்கும் நோய்கள்

வாகை குட்டம் அரிப்பு இழுப்பு எனுமிவற்றைப் போக்கும்.

கண்டகி சிரீஷ என்பது நஞ்சு அக்கி தோல்நோய் வீக்கம் மிகுதியாகத் தோன்றும் வியர்வை ஆகியவற்றைத் தணிக்கும்.

## பயன்

வாகைப்பட்டையை மைய அரைத்துப்பூசினால் குட்டம் நீங்கும்.

வாகைமலரை மைய அரைத்துச் சிறிது நெய்விட்டுக் கலந்து பூசினால் கபத்தினால் தோன்றிய அக்கி நோய் தணியும்.

வாகை மலர்களின் சுரஸத்தில் வெள்ளை மிளகைப் பல முறை பாவனை செய்து மூக்கிலிடும் மருந்தாகவும் கண்களில் இடும் மையாகவும் உட்கொள்ளும் மருந்தாகவும் பயன்படுத்தினால் பாம்பு விஷம் நீங்கும்.

வாகை வேர் மலர் பட்டை விதை ஆகியவற்றைச் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி அதில் திரிகடுகத்தூளும் இந்துப்பும் தேனும் கலந்து உட்கொள்ளச் செய்தால் பாம்பு முதலியவற்றின் நஞ்சு நீங்கும்.

பஞ்சசிரீஷ கிருதம்—இது எல்லா விஷங்களையும் கால் கை வலி க்ஷயம் பைத்தியம் சோகை குன்மம் கிருமிநோய் மண்ணீரல்வீக்கம் ஊருஸ்தம்பவாதம் காமாலை தாடைப்பிடிப்பு முதலிய நோய்களையும் தணிக்கும்.

சிரீஷாரிஷ்டம்—இது எல்லா விஷங்களையும் போக்கும்.

## 220. வாயுவிளங்கம்

**ஸம். விடங்கா Embelia Ribis Babreng**

### தோற்றம்

இது காடுகளில் வளரும் செடிவகையைச் சேர்ந்தது. மிகவும் உயரமாக வளரக்கூடியது. இலைகள் மகிழ மர இலைகளைப் போலக் காணப்படும். கூதிர் பருவத்தில் சிவந்த நிறத்துடன் கொத்துக் கொத்தாக மலர்கள் தோன்றும். அம்மலர்கள் உருண்டை வடிவமுள்ள காய்களாகும். இலைகள் பருத்துச் சற்று சிவந்த நிறத்துடன் காணப்படும். காய்கள் நன்கு பக்குவமடைந்த பிறகு பறிக்கப்படும். உலர்ந்தபின் காய்களைத் தேய்த்தால் அவற்றின் மேல் காணப்படும் சிவந்த தோல் நீங்கும். இத் தோல்பகுதிதான் கம்பில்லகம் என்னும் மருந்துப்பொருளாகும். வாயுவிளங்கத்தில் கொடியாக வளரும்வகை ஒன்றுண்டு. நன்றாக வளர்ந்த கொடி மனிதனின் தொடையளவு பருமன் கொண்டிருக்கும் கிளைகள் மிகமிருதுவாக இருக்கும். மஞ்சள் நிறமுள்ள மலர்கள் கொத்துக் கொத்தாகப் பூக்கும். கோடைப் பருவத்தில் மலர்ந்து கார்க் காலத்தில் காய்க்கும். மலைச் சரிவிலுள்ள காடுகளில் மிகுதியாகக் காணப்படும். கற்கள் நிறைந்துள்ள ஈரமான நிலம் இதற்கு ஏற்றதாகும். உத்தரப் பிரதேசம் நேபாளம் நைநிதால் முதலிய பகுதிகளில் மிகுதியாக விளைகிறது.

### தன்மை

வாயுவிளங்கம் கார்ப்புச் சுவையும் சிறிது கசப்புச்சுவையும் தீக்ஷ்ணகுணமும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

நஞ்சு தலைச்சுற்றல் வயிற்றுவலி பெருவயிறு கிருமிநோய் முதலியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

வாயு விளங்கத்தின் வேரை அரிசி கழுவிய நீருடன் அரைத்து 'கொள்ளச் செய்தால் ஸர்ப்பவிஷம் நீங்கும்.

வாயுவிளங்கமும் திப்பிலியும் கலந்து நீருடன் அரைத்து மூக்கிலிடும் மருந்தாகவும் கண்களிலிடும் மையாகவும் பயன்படுத்தினால் காமாலை தணியும்.

விடங்கசாராதி லேஹம்—இது குட்டம் வெண்குட்டம் இருமல் இழுப்பு பெருவயிறு மூலநோய் நீரிழிவு கட்டி குன்மம் ஆகியவற்றைத் தணிக்கும்.

விடங்காரிஷ்டம். — இது கட்டி ஊருஸ்தம்பவாதம் சிறுநீர்ப்பையில்கல் நீரிழிவு பௌத்ரம் கண்டமாலை தாடைப் பிடிப்பு என்பனவற்றை நீக்கும்.

விடங்காதிகுடிகை—இது குட்டத்தைப் போக்கும்.

## 221. வாலுளுவை

**ஸம் ஜ்யோதிஷ்மதி Celastrus Paniculata**

**தோற்றம்**

மரத்தின் மேல் படர்ந்து வளரும் கொடி வகையைச் சார்ந்தது. இலைகள் வட்டமாகவும் ஓரங்கள் அரம்போல் கூர்மையான பற்களைப் போன்ற பிளவுகளுடனும் காணப்படும். மலர்கள் சிறியவையாக ஐந்து இதழ்களுடன் காற்றில் அசைந்தாடிக் கொண்டிருக்கும். காய்கள் பட்டாணியைப் போல இருக்கும். பழம் மஞ்சள் நிறம் கொள்ளும். இலை எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். செக்கிலிட்டு ஆட்டி எண்ணெய் எடுக்கலாம். இதன் எண்ணெய் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். இதன் பழங்களைத் தின்றால் காகங்கள் மரித்துவிடும்.

**தன்மை**

கார்ப்பும் கசப்புமான சுவை கொண்டிருக்கும். பேதியாகச் செய்யும். மிக்க உஷ்ணத் தன்மை கொண்டது. தீக்ஷ்ணகுணமுள்ளது. வாந்தியாகச் செய்யும். சடராக்னியையும் புத்தியையும் நினைவாற்றலையும் வளர்க்கும்.

யூதுல் தேஜோவதி என்றொருவகை உண்டு. ஆனால் தன்மையில் இரண்டிற்கும் வேற்றுமை இல்லை.

**தீர்க்கும் நோய்கள்**

சோகை அக்கி இருமல் இழுப்பு ஆகியவற்றைப் போக்கும். தேஜோவதி என்பது இதயநோய் பல்நோய் விக்கல் மூலநோய் தொண்டை நோய் ஆகியவற்றைப் போக்கும்.

வாலுளுவை எண்ணெய்—இது கார்ப்பு கசப்புச் சுவைகளும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். அறிவாற்றலையும் நினைவாற்றலையும் வளர்க்கும். பித்தத்தை மிகுதியாக்கும். வாதத்தைத் தணிக்கும்.

**பயன்**

வாலுளுவை எண்ணெயுடன் ஸர்ஜக்ஷாரத்தையும் பெருங்காயமும் சேர்த்துப்பாலுடன் உட்கொள்ளச் செய்தால் பெருவயிறு நோய் தணியும்.

வாலுளுவை இலையை வதக்கிக் காடியுடன் உட்கொள்ளச் செய்தால் மாதவிடாய்த்தடை நீங்கும்.

வாலுளுவை எண்ணெயைப் பாலுடன் எட்டு நாட்கள் உட்கொள்ளச் செய்தால் ஸந்நிபாதத்தினால் தோன்றிய பெரு வயிறு நீங்கும்.

ஜ்யோதிஷ்மத்யாதிதைலம்—இதை எண்ணெய்க்குளியலுக்குப் பயன்படுத்தினால் பௌத்திரம் (பகந்தரம்) நீங்கும்.

## 222. வால்மிளகு

**ஸம். கங்கோலகம்** Cubeba Officinalis

**தோற்றம்**

இது பெரியது சிறியது என இருவகையாக இருக்கும். வால்மிளகு மிளகைப் போன்ற தோற்றங்கொண்டு சிறு வால் அமைப்புப் கூடியிருக்கும். மென்றதும் இதன் குளுமைத் தன்மையை உணரலாம். இது நறுமணமுள்ள பொருளாகும்.

**தன்மை**

இலேசானது. தீக்ஷ்ணகுணமுள்ளது. சிறிது கசப்புச் சுவை கொண்டிருக்கும். இதயத்திற்கு நன்மை தரும்.

**தீர்க்கும் நோய்கள்**

வாய்நாற்றம் இதயநோய் கபம் வாதம் கண்பார்வைக் குறைவு ஆகியவற்றைப் போக்கவல்லது.

## 223. வாழை

**ஸம். கதலீ** Musa Sapientam (R×b)

**தோற்றம்**

கிளையற்ற மரம் வாழை. நம் நாட்டில் எல்லாப் பகுதிகளிலும் காணப்படும். குளிர் காலத்தில் பூக்கும். வாழையில் பல வகைகள் உண்டு. முக்கியமாக நாட்டு வாழை காட்டு வாழை மலைவாழை மொந்தன் வாழை என்பவை குறிப்பிடத்தக்கவை. வாழையின் எல்லாப் பகுதிகளும் பயன்படுத்தப்படுகின்றன.

**தன்மை**

வாழை இனிப்புச் சுவையும் குருத்தன்மையும் எண்ணெய்ப் பசையும் குளுமைத் தன்மையும் கொண்டது. உண்டதும் விந்துவை வளர்க்கும். பித்தத்தைத் தடுக்கும்.

வாழைப்பழம் சடராக்னி குறைவுள்ளபோது அபத்தியமாகும். விந்துவை வளர்க்கும். எளிதில் செரிமானமடையாது. மிகுதியாக உண்டால் கபநோய்கள் தோன்றும்.

வாழைப்பூ—இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் எண்ணெய்ப் பசையும் குருத்தன்மையும் சீத வீரியமும் கொண்டிருக்கும். வாத பித்தங்களைத் தணிக்கும்.

வாழைக்கிழங்கு இனிப்புச்சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டதாகும்.

வலிமையைத் தோற்றுவிக்கும். தலைமுடியை வளர்க்கும். சுவைதரும். சடராக்னியைத் தூண்டும்.

வாழைச்சாறு குளுமைத் தன்மை கொண்டது. மலத்தைக் கட்டும்.

வாழைத்தண்டு குளுமைத் தன்மை கொண்டது. சுவை தரும். சடராக்னியை வளர்க்கும்.

காட்டுவாழை—இனிப்புச் சுவையும் குருத்தன்மையும் சீத வீரியமும் கொண்டது. வலிமையைத் தரும்.

மலைவாழை இனிப்புச்சுவையும் குருத்தன்மையும் சீதவீரியமும் கொண்டிருக்கும். உடல் வலிமையை வளர்க்கும். எளிதில் செரிமானமாகாது. பித்தத்தைத் தணிக்கும்.

மஹேந்திரகதலி—உஷ்ணவீரியமுள்ளது. வாதபித்தங்களைத் தணிக்கும்.

கிருஷ்ணகதலி—இனிப்பு துவர்ப்புச் சுவைகளும் இலகு குணமும் கொண்டது. வாதத்தை வளர்க்கும்.

மொந்தன்வாழை இனிப்புச்சுவை கொண்டது. விந்துவை வளர்க்கும். பித்தத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

பெண்குறிநோய் சிறுநீர்ப்பையில் தோன்றும்கல் இரத்த பித்தம் நாவறட்சி எரிச்சல் காயம்படுதலால் தோன்றும் இளைப்பு ஆகியவற்றைப் போக்கும்.

வாழைப்பூ இரத்தபித்தத்தையும் காயத்தையும் போக்கும்.

வாழைக்கிழங்கு ஆம்லபித்தத்தையும் எரிச்சலையும் போக்கும். வாழைச்சாறு நீர்ச்சுருக்கு நீரிழிவு நாவறட்சி காதுநோய் அதிஸாரம் இரத்தபித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

வாழைத்தண்டு பெண்குறிநோய் இரத்தபித்தம் ஆகியவற்றைத் தணிக்கவல்லது.

**பயன்**

வாழைப்பழத்தைப் பசுவின் சிறுநீரில் கொதிக்க வைத்து அல்லது நெருப்பில் சுட்டு உட்கொள்ளச் செய்தால் இருமல் இழுப்பு எனுமிவை நீங்கும். நன்கு முற்றிய வாழை இலையின் விழுதை விரணங்களின் மேல் வைத்துக் கட்டினால் சீழ் குறையும்.

வாழைத் தண்டின் சாற்றைச் சூடாக்கிக் காதில் விட்டால் காது வலி தணியும். வாழைப்பழத்தை நெய்யில் கலந்து உட்கொள்ளச் செய்தால் பெரும்பாடு தணியும்.

கதல்யாதி கிருதம்—இது பெரும்பாடு சிறுநீர்த்தடை நீரிழிவு நீர்ச்சுருக்கு மிகுதியாகச் சிறுநீர் வெளியேறுதல் ஆகிய நோய் களைத் தணிக்கும்.

## 224. வில்வம்

**ஸம். பில்வ Aegle Marmelos**

**தோற்றம்**

இது கிளைகளுள்ள மரமாகும். மிகவும் உயரமாக வளரக் கூடியது. அடிமரம் தடித்துப் பிளவுபட்டு வெண்ணிறம் கொண் டிருக்கும். அடி மரத்தில் முட்கள் இரா. இளங்கிளைகளில் முட்கள் இருக்கும். ஒரு காம்பில் மூன்று இலைகள் இருக்கும். இலைக்காம்பு ஒன்றிரண்டு அங்குலம் நீளமிருக்கும். இலைகள் பச்சைநிறம் கொண்டு சாறின்றி இருக்கும். கூதிர்ப்பருவத்தின் இறுதியில் பூக்கும். மொட்டுகள் மலர்ந்து வெண்ணிறம் கொண்டு நறுமணம் வீசிக் கொண்டிருக்கும். காய்த்து முது வேனில் பருவத்தில் முதிர்ந்து பழுக்கும். அந்நிலையில் கிளைகளில் உள்ள இலைகள் முதிர்ந்துவிடும். காய்கள் பச்சை நிறம் கொண் டிருக்கும். பழுத்ததும் மஞ்சள் நிறம் கொள்ளும். உள்ளே மஞ்சள் சிவப்பு நிறம் கொண்ட கோது காணப்படும். அப்பழங்கள் நறுமணம் கொண்டிருக்கும். பழங்கள் மிகவும் சுவை கொண் டிருக்கும். வில்வக்கட்டை புனிதமானதெனப் பாராட்டப்படு கிறது.

**தன்மை**

துவர்ப்பு கசப்புச் சுவைகள் கொண்டது. மலத்தைக் கட்டும். வறட்சியானது. உஷ்ணத்தையும் பித்தத்தையும் வளர்க்கும். வலிமைதரும். இலேசானது. சடராக்னியை வளர்க்கும்.

வில்வக்காய் கார்ப்புச் சுவையும் துவர்ப்புக் கசப்புச் சுவை யும் இலகு குணமும் எண்ணெய்ப்பசையும் கொண்டிருக்கும். பழுத்த பழம் குருத்தன்மை கொண்டது. எளிதில் செரிமான மாகாது. அபானத்தில் கெட்டநாற்றத்தைத் தோற்றுவிக்கும். மூன்று தோஷங்களையும் வளர்க்கும்.

வில்வக்காய்க்குள் இருக்கும் கோது கபவாதங்களைத் தணிப் பதில் வல்லது.

**தீர்க்கும் ரோகங்கள்**

வில்வக்காய் வயிற்று வலி ஆமவாதம் கிரஹணி அதிஸாரம் ஆகியவற்றைப் போக்கும்.

வில்வமலர் அதிஸாரம் நாவறட்சி வாந்தி ஆகியவற்றைத் தணிக்கும்.

வில்வ இலை கபவாதங்களையும் வயிற்றுவலியையும் தணிக்கும். வில்வவேர் வயிற்று வலியையும் நீர்ச்சுருக்கையும் போக்கும். காயை உலர்த்திப்பயன்படுத்தினால் நல்ல பலன் விளையும்.

**பயன்**

வில்வக்காய்க்கோது அதிமதுரத்துகள் சர்க்கரை தேன் எனும் இவற்றைக் கலந்து அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் பித்தரத்தத்தால் தோன்றிய அதிஸாரம் தணியும்.

வில்வக்காய் விழுதுடன் சுக்குத் தூளையும் வெல்லத்தையும் கலந்து மோருடன் உட்கொண்டு வந்தால் கொடிய கிரஹணியும் நீங்கும்.

வில்வ இலைக் கஷாயத்தில் திரிகடுகத்தூளைச் சேர்த்து உட்கொண்டால் மூன்று தோஷங்களினால் தோன்றும் வலி நீங்கும். மேலும் மலக்கட்டு மூலநோய் காமாலை என்பனவும் நீங்கும்.

வில்வக்காயைப்பசுவின் சிறு நீருடன் அரைத்து விழுதாக்கி எண்ணெயும் ஆட்டுப்பாலும் சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சிக் காதில் இட்டால் செவிட்டுத் தன்மை நீங்கும்.

வில்வக்காய்த் தூளை வெல்லம் கலந்து பயன்படுத்தினால் இரத்தாதிஸாரம் ஆமசூலை வயிற்றுவலி ஆகியவை நீங்கும்.

வில்வவேர்த்தூள் பொரித்தூள் சர்க்கரை எனுமிவற்றைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் குழந்தைகளுக்குத் தோன்றும் வாந்தி அதிஸாரம் ஆகியவை தணியும்.

வில்வ வேர்ப்பட்டைத்தூளை வேரின் கஷாயத்தில் கலந்து பாலுடன் நாள்தோறும் குளித்து தெய்வத்தை வணங்கியபின்

உட்கொண்டு வந்தால் பத்தாயிரம் ஆண்டுகள் வாழ் இயலும் என நூல்கள் கூறுகின்றன.

பில்வாதி தைலம்—இது இதய நோயைத் தணிக்கும்.

பில்வத்தைலம்—இது கிரஹணி அதிஸாரம் சுவையின்மை மூலநோய் யானைக்கால் குடல்வாதம் வீக்கம் காய்ச்சல் இருமல் இழுப்பு குன்மம் சோகை தலைநோய் பெண்குறிநோய்கள் மலட்டுத் தன்மை எனுமிவற்றை நீக்கும்.

பில்வாதி லேகியம்—இது வாந்தி இதயநோய் காமாலை குன்மம் கிரஹணி சுவையின்மை பீநசம் இருமல் இழுப்பு மண்ணீரல்வீக்கம் இடுவிஷம் மூலநோய் பாண்டு ஆகியவற்றைத் தணிக்கவல்லது.

பில்வாதிகுளிகை—இது நஞ்சு காலரா அசீரணம் இடுவிஷம் காய்ச்சல் கால்கைவலி முதலியவற்றை நீக்கும்.

## 225. விளாமரம்

**ஸம். கபித்த** Feronia Elepnhanutim

**தோற்றம்**

இது நெடுமரமாக வளரக்கூடியது. அடிமரம் தடித்துப் பட்டை வெண் ணிறம் கொண்டு பிளவுகளுடன் கூடியிருக்கும்.. இலைகள் மருதோன்றி இலைகளைப் போல அமைந்து சற்று அகலமாக இருக்கும். இலையுதிர் பருவத்தில் இலைகள் உதிர்ந்து ஒருசில இலைகள் மட்டும் மிஞ்சியிருக்கும். கார்ப்பருவத்தில் பூக்கும். மலர்கள் சிறியவையாய் வெண்ணிறம்கொண்டிருக்கும். காய்கள் உருண்டையாக இருக்கும் அவற்றின் மேல்ஓடு வெண்ணிறம் கொண்டு கடினமாக இருக்கும். தைமாதத்தில் காய்கள் பழுக்கும். பழங்களுக்குள் விதைகள் நிரம்பிய கோது காணப்படும். இலைகளும் காய்களும் பழங்களும் மணம் கொண்டிருக்கும்.

**தன்மை**

விளாங்காய் துவர்ப்புச் சுவையும் இலகு குணமும் கொண்டிருக்கும். மலத்தைக் கட்டும். விளாம்பழம் இனிப்பு புளிப்பு துவர்ப்புச் சுவைகளும் குருகுணமும் கொண்டது. மலத்தைக் கட்டும். எளிதில் செரிமானமாகாது. வாதபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

விளாங்காய் இருமல் அதிஸாரம் இதய நோய் வாந்தி ஆகியவற்றைப் போக்கும். விளாம்பழம் க்ஷயம் இரத்த தோஷம் வாந்தி சோர்வு முதலியவற்றைப் போக்கும். விளாம்விதை விக்கல் இருமல் இதயநோய் நஞ்சு அக்கி ஆகியவற்றைப் போக்கும்.

விதைகளின் எண்ணெய் எலிவிஷம் விக்கல் வாந்தி ஆகியவற்றைத் தணிக்கும். விளாமலர் வாந்தி அதிஸாரம் விக்கல் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

விளாங்காய் வில்வக்காய் இவற்றின் கோதைக் கஞ்சியாக்கிப் பயன்படுத்தினால் மூலநோய் துன்பம் தணியும்.

விளாமரத்திலையையும் மூங்கில் இலையையும் சமமாகக் கொண்டு மெத்தென்றரைத்து தேன் கலந்து உட்கொள்ளச் செய்தால் கடுமையான பெரும்பாடு நீங்கும்.

கபித்தாஷ்டக சூரணம்—இது அதிஸாரம் கிரகணி க்ஷயம் குன்மம் பெருவயிறு இருமல் இழுப்பு மூலநோய் சுவையின்மை ஆகியவைற்றைத் தணிக்கும்.

கபித்தநிர்யாஸாதி கஷாயம்—இது நீரிழிவு நோய்வகைகளைப் போக்கும்.

## 226. விளாமிச்சைவேர்

**ஸம். உசீரம்** Andropogon Murcatus

**தோற்றம்**

வீரணம் எனப்படும் தர்ப்பையைப் போன்ற ஒருவகைப் புல்லின்வேர் விளாமிச்சைவேர் ஆகும். இது நீர் நிலைகளின் ஓரங்களில் நன்றாக விளையும். நிலத்தடியில் இதன்வேர் இரண்டடி ஆழம்வரை வளரும் விளாமிச்சைவேரின் தட்டிகள் செல்வந்தர்களின் இல்லங்களில் கோடைக்காலத்தில் குளுமையைத் தருவதற்காகப் பயன்படுகின்றன. இதன் மேல் தண்ணீர் தெளித்தால் நறுமணம் வீசும்.

இதில் சிறியது பெரியது வெண்ணிறமுள்ளது என மூன்று வகைகள் உண்டு.

**தன்மை**

சிறியது கசப்பு இனிப்புச்சுவைகளும் இலகு குணமும் சீத வீரியமும் கொண்டிருக்கும். விந்துவைக்கட்டும். கபபித்தங் களைத் தணிக்கும். பெரியதும் இத்தன்மைகளைக் கொண்டதே யாகும். வெண்ணிறமுள்ளது கசப்புச்சுவையும் இலகு குணமும் சீதவீரியமும் கொண்டதாகும்.

**தீர்க்கும் நோய்கள்**

விளாமிச்சை, காய்ச்சல் வாந்தி வெறி நாவறட்சி இரத்த தோஷம் நஞ்சு அக்கி எரிச்சல் நீர்ச்சுருக்கு விரணம் ஆகியவற்றைப் போக்கும். வெண்ணிறமுள்ளது இரத்ததோஷம் தோல் நோய் நீர்ச்சுருக்கு இரத்த பித்தம் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

விளாமிச்சைவேர் சந்தனம் இவற்றைச் சமஅளவு கொண்டு தூளாக்கிச் சர்க்கரை கலந்து அரிசி கழுவிய நீருடன் உட் கொள்ளச் செய்தால் இரத்த பித்தம் தணியும்.

விளாமிச்சை வேரின் விழுதைப்பூசினால் அம்மை நோய் தணியும்.

உசீராஸவம்—இது இரத்தபித்தம் சோகை குட்டம் நீரிழிவு மூலநோய் கிருமிநோய் வீக்கம் ஆகியவற்றைத் தணிக்கும்.

உசீராதி தைலம்—இது நீர்ச்சுருக்கு சிறுநீர்த்தடை சிறு நீர்ப்பையில்கல் எனும் நோய்க்ளைப்போக்கும்.

## 227. வெங்காயம்

**ஸம். பலாண்டு Allium Copa**

**தோற்றம்**

பூண்டைப் போல இதுவும் இரண்டு அல்லது மூன்று அடிகள் உயரம் வளரக் கூடியதாகும். இலைகள் உருண்டையாக நீண்டு குழாய் போல் இருக்கும். நடுவில் இருக்கும் தண்டு மூன்று அடி நீளமிருக்கும்.

அதன் நுனியில் வெண்ணிற மலர் தோன்றும். செடியின் வேரில் கிழங்குகள் தோன்றும். இதில் வெள்ளை சிவப்பு என

இரண்டு வகைகள் உண்டு. அவை சிறியவை பெரியவை என மேலும் இருவகைப்படும்.

## தன்மை

வெங்காயம் இனிப்புச்சுவை கொண்டது. பக்குவமடையும் போதும் இனிப்புச்சுவை கொள்ளும். குளுமைத் தன்மை கொண்டதாகும். கபத்தை வளர்க்கும். விந்துவையும் உடல் வலிமையையும் வளர்க்கும்.

வெள்ளை வெங்காயம் குருத்தன்மை கொண்டது. சுவை யூட்டும். சிவப்பு வெங்காயம் கார்ப்புச் சுவையும் உப்புச்சத்தும் கொண்டிருக்கும். கபத்தைத் தணிக்கும்.

வெங்காயவிதை உட்கொண்டதும் விந்துவை வளர்க்கும். காட்டுவெங்காயம் கார்ப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் கொண்டது. நஞ்சைப் போக்கும். தீக்ஷ்ணகுணமுள்ளது. சிறுநீரை வெளியேற்றும். கபத்தைத் தணிக்கும். மிகுதியாகப் பயன் படுத்தினால் வாந்தியையும் பேதியையும் தோற்றுவிக்கும்.

## தீர்க்கும் நோய்கள்

வெள்ளை வெங்காயம் பெருவயிறு அரிப்பு காதுவலி சொரி ஆகியவற்றைப் போக்கும்.

சிவப்பு வெங்காயம்—தொண்டை உலர்ந்துபோதல் வாந்தி என்பனவற்றைப் போக்கும்.

வெங்காயவிதை நீரிழிவு பற்களில் தோன்றும் கிருமிகள் ஆகியவற்றைப் போக்கும்.

காட்டுவெங்காயம்—அளவோடு பயன்படுத்தினால் வீக்கம் இருமல் இழுப்பு ஆகியவற்றைத் தணிக்கும்.

## பயன்

காஞ்சொரிவேர் வெங்காயவேர் இவ்விரண்டையும் அரைத்துச் சாற்றை மூக்கிலிடுமருந்தாகப் பயன்படுத்தினால் மூக்கிலிருந்து இரத்தம் பெருகுதல் நிற்கும்.

வெங்காயத்தைக் கஷாயம் கஞ்சி முதலிவற்றுடன் பயன் படுத்தினால் இரத்தமூலம் வாதம் ஆகியவை தணியும்.

வெங்காயச் சாற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் விக்கல் இழுப்பு தணியும். வெள்ளை வெங்காயத்தை வறட்டித் தணலில் சுட்டு மேல்தோலை உரித்துச் சர்க்கரையுடன் நாள்தோறும் உட்கொண்டால் விந்து வெளியேறுதல் தணியும். உடலும் செழிப்புறும்.

## 228. வெட்பாலை (கொடிசப்பாலை)

**ஸம். குடஜ** Holarrhena Antinysenterica

**தோற்றம்**

இது நடுத்தர உயரமுள்ளமரமாகும். இதன் இலைகள் கடம்பமரத்திலைகளைப் போல அமைந்து ஆனால் அவற்றை விடப் பெரியவையாக இருக்கும். இலைகளை கிள்ளினாலும் இளம்கிளைகளை ஒடித்தாலும் வெண்ணிறப்பால் பெருகும். மலர் வெண்மை நிறம் கொண்டிருக்கும். கார்ப்பருவத்தில் பூக்கும். இதில் வெள்ளை கறுப்பு என இரண்டு வகைகள் உண்டு. வெள்ளை வெட்பாலை வங்கநாட்டில் குறைவாகவும் மத்திய பிரதேசக் காடுகளில் கோரக்பூர் பிலீபீத் பஸ்திவரேலி பகுதிகளில் மிகுதியாகவும் காணப்படுகிறது. விதைகள் யவதானியத்தைப் போலிருக்கும். விதைகளின் மேல் பஞ்சைப்போல மென்மையான பூச்சு காணப்படும். இம்மரத்தின் காய்கள் மெலிந்து நீண்டு இரண்டிரண்டு காய்களின் முனைகள் சேர்ந்து காணப்படும். இம்மரத்தின் மலர்கள் மல்லிகையைப்போல மிக்க நறுமணம் கொண்டிருக்கும். வெள்ளை மலரையும் எண்ணெய்ப் பசை கொண்ட இலையையும் பெரிய காயையும் கொண்டது ஆண் குடஜம் என்றும் கருநிறப்பட்டை கொண்டு சிவப்பு நிறத்துடன் சிறியவையான காய்களும் மலர்களும் கொண்டது கருகுடஜம் அல்லது ஸ்திரிகுடஜம் என்றும் கூறப்படுகின்றன. ஆனால் வெண்ணிறமுள்ள வெட்பாலையே மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகிறது.

**தன்மை**

வெட்பாலை கார்ப்பு துவர்ப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் சீதவீரியமும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். கபத்தைத் தணிக்கும். கொடிசப்பாலை விதை கார்ப்புச்சுவையும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். மலத்தைக் கட்டும். சடராக்னியை வளர்க்கும். மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

ூதன் மலர் கபபித்தங்களைத் தணிக்கும். கசப்பு துவர்ப்புச் சுவைகளுடையதாய் வாதத்தை வளர்க்கும்.

கருநிற கொடிசப்பாலை பித்தத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

வெட்பாலை மூலநோய் அதிஸாரம் இரத்தபித்தம் நா வறட்சி குட்டம் ஆகியவற்றைத் தணிக்கும். வெட்பாலைவிதை காய்ச்சல் அதிசாரம் இரத்தமூலம் கிருமிநோய் அக்கி குட்டம் இரத்ததோஷம் வாத ரத்தம் கபத்தால் தோன்றிய வலி ஆகிய வற்றைத் தணிக்கும். இதன்மலர் இரத்ததோஷம் குட்டம் அதி ஸாரம் கிருமிநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

கருநிறவெட்பாலை குட்டத்தையும் மூலநோயையும் போக் கும்.

**பயன்**

வெட்பாலைவிதையையும் சுக்கையும் மைய அரைத்து அரிசிக் கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்தால் க்ஷய நோயாளிக்குத் தோன்றிய அதிஸாரம் நீங்கும்.

வெட் பாலைக் கட்டையின் கஷாயத்தில் சுக்குத்துளைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் இரத்த மூலம் தணியும்.

வெட்பாலை விதையால் செய்த நெய் மருந்தை உட் கொள்ளச் செய்தால் இரத்தாதிஸாரம் தணியும்.

வெட்பாலை மலரின் விழுதை உட்கொள்ளச் செய்தால் நீரிழிவு நீங்கும். வெட்பாலைக் கட்டையின் விழுதைத் தயிரு டன் உட்கொண்டு பத்திய உணவை உண்டு வந்தால் சுக்ராச்மரி (விந்து கல்போல் கட்டிப்போதல்) எனும் நோய் நீங்கும்.

குட-ஜாவலேகியம்—இது மூலநோய் கிரஹணி இருமல் இழுப்பு இரத்த அதிஸாரம் இரத்தபித்தம் எனும் நோய்களைத் தணிக்கும்.

குடஜாதி குளிகை—இது சோகை குட்டம் காய்ச்சல் மண் ணீரல்வீக்கம் மூலநோய் பௌத்திரம் விந்துதோஷம் இருமல் ரத்தபித்தம் குன்மம் நீரிழிவு முதலிய நோய்களைப்போக்கும்.

குடஜாரிஷ்டம்—இது கிரஹணி இரத்தஅதிஸாரம் காய்ச்சல் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 229. வெற்றிலை

லம். **Piper Betel**

**தோற்றம்**

இது கொடிவகையைச் சேர்ந்தது. இந்தக்கொடி பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கும். திப்பிலிச் செடியின் இலைகளைப் போன்ற இலைகளைக் கொண்டிருக்கும். வெள்ளை கறுப்பு என நிறங்களால் இது இருவகைப்படும். சிலர் வெற்றிலை ஏழுவகைப்படுமென்று கூறுவர். புளிப்புச்சாறு கொண்டதாகும் நறுமணம் கொண்டிருக்கும். இவ்வகை வெற்றிலை மாளவ நாட்டில் விளையும். படூலிகா என்பது தெலுங்கு நாட்டிலும் வேஹஸநீயா என்பது கடற்கரை ஓரங்களிலும் விளைவதாகும்.

**தன்மை**

வெற்றிலை துவர்ப்பு கசப்புச் கார்ப்புச் சுவைகளைக் கொண்டது. இலகு குணமும் உஷ்ணவீரியமும் கொண்டதாகும். உப்புச்சத்து உள்ளது சுவை தரும். வலிமையையும் நறுமணத்தையும் தோற்றுவிக்கும். நாக்கைத் தூய்மைபடுத்தும். பித்தத்தை வளர்க்கும். கபவாதங்களைத் தணிக்கும். காம உணர்ச்சியை தூண்டும். கிருமிகளைப் போக்கும்.

பழுத்த வெற்றிலை சிறப்பான குணங்களைக் கொண்டதாகும். வெற்றிலை வேர் வறட்சித் தன்மையும் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டதாகும். வலிமை தரும். சடராக்னியை வளர்க்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

கறுப்பு வெற்றிலை கசப்புத் துவர்ப்புச் சுவைகளும் உஷ்ண வீரியமும் கொண்டது. நாவறட்சியையும் பேச்சுதடைப்படுதலை யும் தோற்றுவிக்கும்.

வெள்ளை வெற்றிலை சுவை தரும். சடராக்னியை வளர்க்கும். கபவாதங்களைத் தணிக்கும்.

பூர்வாட வெற்றிலை —இது மிகுந்தசாறு கொண்டது இனிப்புச் சுவையும் தீக்ஷ்ணகுணமும் குளுமைத் தன்மையும்

கொண்டது. சுவையூட்டும். மூன்று தோஷங்களையும் தணிக்கும்.

அம்லவாட வெற்றிலை—இது கார்ப்பு புளிப்பு கசப்புச்சுவை களும் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டது. வாயில் புண்களையும் எரிச்சலையும் தோற்றுவிக்கும். இரத்தத்தைக் கெடுக்கும். பித்தத்தை வளர்க்கும். வாதத்தைத் தணிக்கும்.

ஸாதஸீ வெற்றிலை—இனிப்புச்சுவையும் கார்ப்புச் சுவை யும் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டதாகும். சடராக் னியை வளர்க்கும். குன்மம் பெருவயிறு ஆகிய நோய்களைத் தணிக்கும்.

ஸப்தசிரா வெற்றிலை—ஏழு நரம்புகளைக் கொண்ட வெற்றிலையாகும். இனிப்புச் சுவையும் திக்ஷ்ணகுணமும் நறு மணமும் கொண்டதாகும். இதயத்திற்கு நன்மை தரும். வலிமையையும் ஆண்மையையும் வளர்க்கும்.

அம்லஸரா வெற்றிலை—இனிப்புச் சுவையும் மிக்கதீக்ஷ்ண குணமும் குளுமைத் தன்மையும் கொண்டிருக்கும். சடராக்னியை வளர்க்கும். வலிமையைத் தரும். வாய்க்கு நறுமணத்தைத் தரும். மயக்கத்தைத் தோற்றுவிக்கும். பித்தத்தையும் எரிச்சல் குன்மம் ஆகியவற்றையும் தணிக்கும்.

படுலிகா வெற்றிலை—இது துவர்ப்பு கார்ப்புச்சுவைகளையும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். தொண்டையைத் தூய்மை படுத்தும்.

ஹேஸநீயா வெற்றிலை—இது கார்ப்புச் சுவையும் தீக்ஷ்ண குணமும் கொண்டதாகும். இதயத்திற்கு நன்மை தரும். சுவையூட்டும். கபவாதங்களைத் தணிக்கும். செரிமானத்தைத் தூண்டும்.

**பயன்**

வெற்றிலை சுரஸத்தில் தேன்கலந்து கண்களில் மைபோல் இட்டால் கண் பொங்குதல் தணியும்.

ஏழு வெற்றிலைகளை விழுதாக்கி அதில் சிறிது இந்துப்பைக் கலந்து வெந்நீருடன் உட்கொள்ளச் செய்தால் யானைக்கால் நோய் தணியும்.

நாகவல்யா திசூரணம்— விந்துவைக்கட்டும். இரஸாயன மருந்தாகும்.

## 230. வேம்பு

**ஸம். நிம்ப Melia Azadirecta, Willd**

### தோற்றம்

வேப்பு மிகவும் நெடிய மரமாக வளரும். இலைகள் இரண்டரை அங்குலம் நீளம் கொண்டு கூரிய முனையுடன் ஓரங்களில் அரம் போன்று இருக்கும். இளவேனிற் பருவத்தில் இலைகள் உதிர்ந்து சிவந்த துளிர்கள் தோன்றும். கிளைகளின் பட்டை கரடுமுரடாகக் கறுத்துக் காணப்படும். இளவேனில் பருவத்தின் முடிவில் நீண்ட காம்புகளில் கொத்துக் கொத்தாக வெண்ணிறமுள்ள பூக்கள் தோன்றும். சற்று நீண்டு உருண்டையான பச்சை நிறக் காய்கள் தோன்றும். பழுத்ததும் மஞ்சள் நிறம் கொள்ளும். அதன் விதைகளில் எண்ணெய் இருக்கும். வேப்ப எண்ணெய் தோல்நோய்களைப் போக்கும். வேம்பில் நிலத்தில் தோன்றுவது மலையில் தோன்றுவது என இருவகைகள் உண்டு. வேப்பம் பழம் மஞ்சள் நிறம் கொண்டு உள்ளிருக்கும் சோது இனிப்புச் சுவை கொண்டிருக்கும்.

### தன்மை

வேம்பு கசப்புச் சுவையும் இலகு குணமும் குளுமைத் தன்மையும் கொண்டதாகும். மலத்தைக் கட்டும். இதயத்திற்கு நன்மை தரும். சடராக்னி வாதம் பித்தகபங்கள் எனுமிவற்றைத் தணிக்கும்.

மலைவேம்பு கசப்பு துவர்ப்புச் சுவைகளும் வறட்சித் தன்மையும் சீதவீரியமும் கொண்டிருக்கும். கபபித்தங்களைத் தணிக்கும்.

வேப்பிலை கார்ப்புச்சுவை கொண்டதாகும். கண்களுக்கு நன்மை தரும். வாதத்தை வளர்க்கும். பித்தத்தைத் தணிக்கும்.

வேப்பம்பூ—சுவையூட்டும் பித்தகபங்களைத் தணிக்கும்.

### தீர்க்கும் நோய்கள்

சோர்வு நாவறட்சி இழுப்பு காய்ச்சல் சுவையின்மை கிருமி நோய் விரணம் வாந்தி குட்டம் நீரிழிவு ஆகியவற்றைத்தணிக்கும்.

வேப்பிலை நஞ்சு சுவையின்மை குட்டம் ஆகியவற்றைத் தணிக்கும். வேப்பம் பழம் குட்டம் குன்மம் மூலநோய் கிருமி மிகுதியாக வளர்ந்த கொழுப்பு எனுமிவற்றைத் தணிக்கும்.

வேப்பம்பூ குட்டத்தைத் தணிக்கும். மலைவேம்பு எரிச்சல் விரணம் கிருமிநோய் காலரா சீதபித்தம் நஞ்சு ஆகியவற்றைத் தணிக்கும்.

மலைவேப்பம்பூ தலைவலியைப்போக்கும்.

**பயன்**

வேப்பங் கஷாயத்தைக் குளியலுக்குப் பயன்படுத்தினால் குட்டம் நீங்கும்.

வேப்பங் கொட்டையை மைய அரைத்துச் சுடு நீருடன் உட்கொள்ளச் செய்தால் நஞ்சு உடனே நீங்கும்.

வேப்பங் கட்டை கஷாயத்தில் தேன் கலந்து காலையில் உட்கொண்டு வந்தால் காமாலை தணியும்.

வேப்பங் கொட்டை பேய்ப் பீர்க்கு விதை ஆகிய இரண்டையும் அரைத்து நீரில் கலந்து உட்கொள்ளச் செய்தால் வாந்தியாகி கபத்தினால் தோன்றிய இதய நோய் தணியும்.

நிம்பாதி தைலம்—இது வாதநோய் குட்டம் நரம்புச் சிலந்தி சீழ்கட்டி பௌத்திரம் கண்டமாலை குன்மம் மூலநோய் நீரிழிவு க்ஷயம் இழுப்பு இதயநோய் சோகை வீக்கம் வாதரத்தம் முதலிய நோய்களைப் போக்கும்.

பஞ்சநிம்ப சூரணம்—இது அக்கி அரிப்பு பௌத்திரம் யானைக்கால் நோய் வாத ரத்தம் நரம்புச்சிலந்தி நீரிழிவு பெரும்பாடு நஞ்சு வகைகள் உடற்பருமன் பெருவயிறு ஆகியவற்றைத் தணிக்கும்.

## 231. ஜாதிக்காய்

**ஸம். ஜாதீப்பலம்** Myristica Officinalis

**தோற்றம்**

இம்மரம் நுனிவரை நேராக வளரும். கிளைகள் சம அளவில் சிறிது இடைவிட்டு இருக்கும். கிளைகள் நிலத்தை நோக்கி

வளைந்து அழகாகக் காணப்படும். இலைகளைக் கசக்கினால் நறுமணம் கமழும். மலர்கள் மிகச் சிறியவை. மணமற்றவை மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். காய்கள் கோழிமுட்டை வடிவத்தில் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். காய்களின் மேல் பாகம் மூன்று பகுதிகளாகக் காணப்படும். காயின் மேல் தோல் தடித்திருக்கும். காய் பழுத்ததும் இது மஞ்சள் நிறமாக மாறும். இது பழத்தை மூடிக் கொண்டிருக்கும். பழம் நன்கு பழுத்ததும் தோல் பிளவுபடும். இது பிளவு பட்டதும் உள்ளே சிவப்பு நிறம் கொண்ட சதைப்பகுதியாக ஒரு புரை-(கூறுபாடு) காணப்படும். பழம் உலர்ந்ததும் இது தனியாகக் கழன்றுவிடும். அதற்குள் ஜாதிக்காய் இருக்கும். இது எண்ணெய்ப்பசை கொண்டது. ஜாதிக்காய் சுமித்ரா சிங்களம் பிநாங்கு முதலிய நாடுகளில் விளையும்.

**தன்மை**

ஜாதிக்காய் கசப்பு கார்ப்புச் சுவைகளும் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சுவையூட்டும். சடராக்னியை வளர்க்கும். குரலைச் செம்மைப் படுத்தும் கபவாதங்களைத் தணிக்கும். பளுவாக எண்ணெய்ப்பசை கொண்டுள்ளது சிறந்தது. வறண்டு இலேசாக இருப்பது தன்மைகளில் குறைந்ததாகும்.

ஜாதிப் பழத்தின் உள்ளிருக்கும் சதைப்பகுதி கெட்டியாகி சிவப்பு நிறத்தில் இருக்கும். இதற்கு ஜாதி பத்திரி என்று பெயர். ஜாதிபத்திரி இனிப்பு கார்ப்புச் சுவைகளும் இலகு குணமும் உஷ்ணவீரியமும் கொண்டிருக்கும். சுவையூட்டும். கபத்தைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

ஜாதிக்காய் கிருமிநோய் இருமல் இழுப்பு பீநசம் அதிஸாரம் நீரிழிவு தொண்டைநோய் வாந்தி இதயநோய் ஆகியவற்றைத் தணிக்கும். ஜாதிபத்திரி இருமல் இழுப்பு வாந்தி நாவறட்சி நஞ்சு கிருமிநோய் ஆகியவற்றைத் தணிக்கும்.

**பயன்**

ஜாதிபலாதிசூரணம்—இது கிரஹணி அதிஸாரம் இருமல் இழுப்பு க்ஷயம் சடராக்னி தடை பீநசம் ஆகியவற்றைத் தணிக்கும்

ஜாதீபலாதிவடி-இது கிரஹணி அதிஸாரம் இருமல் இழுப்பு க்ஷயம் ஆகியவற்றைத் தணிக்கும்.

## 232. ஜீவகம் - ரிஷபகம்

**ஸம். ஜீவக - ரிஷபக**

**தோற்றம்**

இவை இரண்டும் புதராகத் தோன்றும் சிறு செடிவகைகள் ஆகும். ஜீவக இலைகள் கீரைப்பாலை இலையைப் போலிருக்கும். இதில் சிறு முட்கள் இருக்கும். கிழங்குகள் பாலுள்ளவையாகும். இதன் இலைப்பகுதி கூர்ச்சம் (கொத்து போலுள்ள நீண்டகாம்பு) போலக்காணப்படும். இலைகள் உலர்ந்தவை போலச் சாறின்றி காணப்படும். இக்கிழங்குகள் வெங்காயம் போல் இருக்கும். இமயமலைப்பகுதிகளில் காணப்படுகிறது. அங்கும் இவை மிகவும் அரிதாகவே காணப்படுகின்றன. தாதுக்களையும் விந்துவையும் வளர்க்கும். மருந்துப் பொருள்களில் இவை சிறந்தவையாகும்.

**தன்மை**

இவ்விரண்டு கிழங்கு வகைகளும் இனிப்புச் சுவையும் சீத வீரியமும் கொண்டவை. உடல் வலிமையையும் விந்துவையும் கபத்தையும் வளர்க்கும். வாதபித்தங்களைத் தணிக்கும்.

**தீர்க்கும் நோய்கள்**

இவை எரிச்சல் இரத்ததோஷம் உடல் இளைப்பு க்ஷயம் ஆகிய நோய்களைப் போக்கும்.

## 233. ஸர்ப்பாக்ஷி

**ஸம். ஸர்ப்பாக்ஷி** Ophiorrhiza Mumgos

**தோற்றம்**

இது நிலத்தில் படர்ந்து வளரும் சிறு செடியாகும். இதன் இலைகள் அகன்று சிவப்பு நிறப் பொட்டுகளுடன் காணப்படும். மலர் சிவப்பு நிறத்துடன் கத்தரிப்பூவைப் போன்ற தோற்றத்தில் இருக்கும். பார்வைக்கு இது நாகம் போல் காணப்படுவதால் இது ஸர்ப்பாக்ஷி எனப்பட்டது. இதன்வேர் சிறுசிறு முடிச்சுகளுடன் நிலத்தில் வெகு ஆழம் வரை வளர்ந்திருக்கும். இது மலைப்பாங்கான நீர் நிலைகள் அதிகமாக இருக்கும் இடங்களில்



**கோழிக் கொண்டைப்பூ விதுன்னா CELOSIA ARGENTEA**

**தன்மை :** கசப்பு, துவர்ப்பு இனிப்புச் சுவைகள், லேசு.

**தீர்க்கும் நோய்கள் :** பித்தம், கபம், அதிசாரம், மூலநோய், சோர்வு, இருமல், க்ஷயம், தொண்டைப்புண்.



**கிச்சிலிக் கிழங்கு கசோரம் (சடி)**

**GAEMPFERIA GALANGA**

**தன்மை :** கசப்பு, கடுப்புச்சுவை, நறுமணம், உஷ்ணம்.

**தீர்க்கும் நோய்கள் :** கபம், மேகம், கபவாதம், விரணம், ;மல், உப்புசம், பக்கவாதம், தலைவலி, காய்ச்சல்.



**குங்கிலியம் சால SHOREA ROBUSTA**

**தன்மை :** கடுப்புச் சுவை.

**தீர்க்கும் நோய்கள் :** ஆமபித்தம், மேகம், குட்டம், அரிப்பு, கிருமி நோய், கபம், இரத்த பித்தம், பெரும்பாடு.



கொடிவயலை ஸ்வேதபோதகி

**BASELLARUBRA**

**தன்மை** : கபம், இருமல், வாதம் ஆகியவற்றை வளர்த்தல்.

**தீர்க்கும் நோய்கள்** : பித்தம், மேகம்.



கொஞ்சி அஸ்வசகோட GLYCOMIS / PENTAPHYLA

தீர்க்கும் நோய்கள் : காய்ச்சல், பாம்பு விஷம்.



**சதபுஷ்பி சோமலதா** **RUGA GRAVEOLENS**

**தீர்க்கும் நோய்கள் :** வலி, கிருமி நோய், முடக்குவாதம், கால் கை வலி.



**சித்திர பாலடை சித்திரபர்ணி** **URARIA PICTA**

**தீர்க்கும் நோய்கள் :** வாய்ப்புண், பாம்பு விஷம்.



## சிவப்புக் கொடிவேலி ரக்த சித்ரகா

**PLUMBAGO ROSEA**

**தன்மை** : கார்ப்புச்சுவை, இலகு, உஷ்ணவீரியம், வறட்சி, சடராக்னி வளர்ச்சி.

**தீர்க்கும் நோய்கள்** : கிரஹணி, குட்டம், வீக்கம், மூலம், கிருமி நோய், இருமல், வாதகபம், கபபித்தம்.



சிறுபூனைக்காவி துராலபா PASSIFLORA FOETIDA

தீர்க்கும் நோய்கள் : கடும் காய்ச்சல், இழுப்பு, இருமல், ஸன்னிபாதம்.



**சிவப்பு மூக்கிரட்டை ரக்தபுனர்நவா**

**BOERHAVIA / DIFFUSA**

**தன்மை :** கடுப்புச்சுவை, உஷ்ணம்.

**தீர்க்கும் நோய்கள் :** வாதம், இருமல், இழுப்பு, பெருவயிறு, குன்மம், மூலம், சோகை, க்ஷயம், நஞ்சு குட்டம், கபம், பித்தம்.



## சிவப்பு நாயுருவி இரத்த அபாமார்க்க

**ACAYRANTHES ASPERA**

**தன்மை :** உசப்பு, கடுப்புச் சுவைகள், பேதியாகச் செய்தல், சிறுநீரை வெளியேற்றுதல்.

**தீர்க்கும் நோய்கள் :** உப்புசம், பெருவயிறு, ரத்தமூலம், மூன்று தோஷங்கள், சொறி, குட்டம், பாம்புவிஷம், நாய்விஷம், கண்நோய், தோல் நோய்கள், விரணம், முதலியன.



**சிவனார்வேம்பு சிவநிம்பா INDIGOFERA ASPALANTHOIDES**

**தீர்க்கும் நோய்கள்** : கட்டி, குட்டம், பல்வலி, பால்வினை நோய்.



**சிறுபிளை அஸ்மபேத AERVA LAIATA**

**தன்மை :** பித்தத் தணிப்பு.

**தீர்க்கும் நோய்கள் :** மேகம், உப்புசம், இதயநோய், குன்மம். நீர்ச்சுருக்கு, சிறுநீர்ப்பையில் கல், மூலநோய்.



**சீமையகத்தி தத்ருக்ன CASSIA ALATA**

**தன்மை :** கடுப்புச் சுவை, வலிமையூட்டுதல்.

**தீர்க்கும் நோய்கள் :** கபம், ரக்தகாஸம், வாதம், விரணம் படை முதலிய தோல் நோய்கள், பால்வினை நோய்.



**சீமைதேவதாரி சரளா PINUS LONGI FOLIA**

**தன்மை :** சூட்டை வளர்த்தல்.

**தீர்க்கும் நோய்கள் :** வாதம், கபம், ஆமவாதம் அழற்சி, மூர்ச்சை, தொண்டையில் விரணம், காதுவலி, காதில் சீழ்வழிதல்.



**சுண்டை லக்ஷ்மணா SALANUM VERB ACIM**

**தன்மை :** கசப்புச்சுவை, குருகுணம், உஷ்ணம், சடராக்னி வளர்ச்சி.

**தீர்க்கும் நோய்கள் :** இருமல், க்ஷயம், விக்கல், மூலம், இழுப்பு, மேகம், கிருமி நோய், பித்தம், கபம், சளி.



**சுருளை மருள், மூர்வா SANSEVIERIA ROXBURGHIANA**

**தன்மை :** கசப்பு, கார்ப்புச் சுவைகள், உஷ்ணம்.

**தீர்க்கும் நோய்கள் :** இதய நோய், கபவாதம், குட்டம், அரிப்பு, விரணம், மேகம், விஷக்காய்ச்சல், க்ஷயம், இருமல், நஞ்சு சளி.



சூர்யாவர்த்தா (பேய் ஆமணக்கு)
சூர்யாவர்த்தா CHROZOPHORA KOTTLERI
தீர்க்கும் நோய்கள் : இருமல்.



**செம்முள்ளி குரண்டா BARLESIA PRIONLIES**

**தன்மை :** கசப்பு, புளிப்பு, உஷ்ணம், வியர்வையத் தோற்றுவித்தல், கபத்தை வெளியேற்றுதல், தலை முடியை கறுப்பாக்குதல்.

**தீர்க்கும் நோய்கள் :** இருமல், வீக்கம், பல்நோய், தோல் நோய், எலி விஷம்.



### திருநீற்றுப்பச்சை முஞ்சகி (ருத்ரஜடா)

**OCIMUM BASILICUM**

**தன்மை :** குளுமை, விந்துவைக் கட்டுதல், கருவை நிலைக்கச் செய்தல்.

**தீர்க்கும் நோய்கள் :** மேகம், பித்தம் நீர்ச்சுருக்கு, காது நோய், தலைவலி, தேள் விஷம், பால்வினை நோய்.



தேற்றாமரம் கதக STRYCHNOSPOTA TOROM

**தன்மை :** கார்ப்பு கசப்புச் சுவைகள், சுவையூட்டுதல், லேசு, கண்களுக்கு நன்மை.

**தீர்க்கும் நோய்கள் :** மேகம், கிரஹணி, நீர்ச்சுருக்கு, சடராக்னி குறைவு, கபம், பித்தம்,



நரி மிரட்டி சோணபுஷ்பி CROTOLARSA VIRUCOSA

**தன்மை :** கசப்பு, துவர்ப்புச் சுவகைள், வாந்தியாகச் செய்தல்.

**தீர்க்கும் நோய்கள் :** அஜீரணம், கபம், காய்ச்சல், தொண்டை நோய், இதய நோய், பித்தம் ஸன்னிபாதம்.



நரிவிள சிலேஷ்மாந்தகா **CORDIA ANGUSTI FOLIA**

**தன்மை :** கார்ப்பு, துவர்ப்புச் சுவைகள், எண்ணெய்ப் பசை, குளுமை, விந்து வளர்ச்சி.

**தீர்க்கும் நோய்கள் :** விரணம், பித்தம், அக்கி, எரிச்சல், இரத்தபித்தம், காய்ச்சல், நஞ்சு, கிருமி நோய்.



**நாகமல்லி யூதிகபர்ணி RHINACANTHES**

**தீர்க்கும் நோய்கள் :** படை (தோல் நோய்) அக்கி, பாம்பு விஷம்.



**நாய் துளசி, விஸ்வதுளசி OCIMUM CANUM**

**தீர்க்கும் நோய்கள் : பித்தக்காய்ச்சல், சொறி சிரங்கு, இருமல்.**



**நாய் வேம்பு பிசுமந்தா MELIA AZADIRACHTA**

**தன்மை :** குளுமை, கசப்புச்சுவை.

**தீர்க்கும் நோய்கள் :** அழற்சி, கபம், ரத்தபித்தம், பித்தம், மேகம் தோல்நோய், குட்டம், கிருமிநோய், அரிப்பு, விரணம், சீதபித்தம், காய்ச்சல், நாள்பட்ட காய்ச்சல்.



**நித்தியமல்லி மல்லிகா JASMINUM GRANN FOLIUM**

**தன்மை :** கசப்பு கடுப்புச் சுவைகள்.

**தீர்க்கும் நோய்கள் :** வாதபித்தம், கபம், ரத்த கபம், விரணம், முகநோய், பல்நோய், தலை நோய்கள்.



**நிலத்துத்தி வாட்டியபுஷ்பி** **SIDACARDI FOLIA**

**தன்மை :** கசப்பு இனிப்புச்சுவைகள், எண்ணெய்ப்பசை, வலிமையூட்டுதல், விந்துவளர்ச்சி, குளுமை.

**தீர்க்கும் நோய்கள் :** ரக்தாதிசாரம், உப்புசம், வாதம், வயிற்று வலி, மேகம், க்ஷயம், வாதரத்தம், ரத்தபித்தம்.



**நிலப்பனங்கிழங்கு தாலமூலிகா CURGULIGO / ORCHIOIDES**

**தன்மை :** இனிப்பு, குளுமை, சடராக்னி, விந்து வளர்ச்சி, குருகுணம், எண்ணெய்ப்பசை.

**தீர்க்கும் நோய்கள் :** மேகம், க்ஷயம், உப்புசம், மூலம், காமாலை, இருமல், வயிற்றுவலி, நாய்க்கடி விஷம், கபம், பால்வினைநோய்.



**நிலவேம்பு பூநிம்பா ANDRO GRAPHIS PANICULATA (SWERTIA)**

**தன்மை :** கசப்பு, குளுமை, வறட்சி, லேசு.

**தீர்க்கும் நோய்கள் :** அழற்சி, குளிர்காய்ச்சல், ஆமவாதம், குன்மம், வயிற்றுவலி, இரத்தகாசம், இருமல், குட்டம், அரிப்பு, விரணம் கண்டமாலை, கிருமி நோய், இரத்தகிரஹணி, கிரஹணி.



நிலாவாரை சோனாமுகி CASSIA ANGUSTI FOLIA

தன்மை : தீக்ஷ்ணம், உஷ்ணம், கடுப்புச்சுவை, விந்து வளர்ச்சி.

தீர்க்கும் நோய்கள் : கபம், வாதம், பித்தம், குட்டம், காய்ச்சல், சிறுநீர்த்தடை, நெஞ்சுவலி.



**நீர்டிமுத்து தந்தி BALIOSPERMUM MONTANOM**

**தீர்க்கும் நோய்கள் :** சொறி, சிரங்கு, அரிப்பு, தோல் நோய்கள், குட்டம், வாதரக்தம், பால்வினை நோய்கள்.



**நீலஅல்லி நீலோத்பலம் NYMPHAEA STELLATA**

**தன்மை :** குளுமை, இனிப்பு, துவர்ப்புச் சுவைகள், நறுமணம்.

**தீர்க்கும் நோய்கள் :** பித்தம், வாதம், இரத்தபித்தம், பெரும்பாடு.



**நீலக்கொடிவேலி நீலசித்ரகா PLAMBAGO CAPENSIS**

**தன்மை :** இலகு குணம், உஷ்ணவீரியம், சடராக்னி வளர்ச்சி.

**தீர்க்கும் நோய்கள் :** வாதம், பெருநோய், மூலம், கிரஹணி, பக்கவாதம், அரிப்பு, விரணம், குட்டம், பெருவயிறு, இழுப்பு, வலி.



நீர்முள்ளி கோகிலாக்ஷ  HYDROPHILLA SPINOSA

**தன்மை :** குளுமை.

**தீர்க்கும் நோய்கள் :** மேகம் நீர்ப்பெருக்கு, உப்புசம், பெருவயிறு, வாதம்.



**பங்கி பங்கா CANNA SATIVA**

**தன்மை :** மயக்கம் தோற்றுவித்தல், உடல்வலிமை, உடல் செழிப்பு, விந்துக்கட்டு, கண்டொழுக்கு, குளுமை, சடராக்னியை வளர்த்தல்

**தீர்க்கும் நோய்கள் :** மூலம், அதிசாரம், வயிற்று நோய், வாத கபங்கள், க்ஷயம், இருமல், இழுப்பு, விக்கல், உப்புசம்.



**பணியாரத்துத்தி கங்கடி ABUTILAN, INDICUM**

**தன்மை : எண்ணெய்ப்பசை, உடல், விந்து வளர்ச்சி.**

**தீர்க்கும் நோய்கள் : விரணம், மேகம், வெட்டுக்காயம்.**



**பலிசை பருஷா** **GREWIA ASIATICA**

**தன்மை :** புளிப்புச்சுவை, குளுமை, வலிமையூட்டுதல்.

**தீர்க்கும் நோய்கள் :** மேகம், முடக்குவாதம்.



பவழமல்லி பாரிஜாதம் **NYOTAN THESARBO RTRISTIS**

**தீர்க்கும் நோய்கள் :** காய்ச்சல், பித்தம், கபம், இடுப்புநோய், கிருமி நோய், பித்தக்காய்ச்சல், சிறுநீர்த்தடை, தலைப்பொடுகு, தலைப்புண்.



பிரை சாகோடகா STREBLUS ASPER

தன்மை : பித்த வளர்ச்சி.

தீர்க்கும் நோய்கள் : பித்தம், குட்டம்.



பிரண்டை வஜ்ரவல்லி OISSUSGVAN DRANGULARIS

**தன்மை :** உஷ்ணவீரியம், அரிப்பை உண்டாக்குதல், சடராக்கியை வளர்த்தல்.

**தீர்க்கும் நோய்கள் :** கபம், இருமல், காய்ச்சல், வாதம், குன்மம், மூலம், விக்கல், ஸன்னி பாதம்.



பிரம்மதண்டி சிருகாலகண்டகா **ARGEMONE NEXICANA**

**தீர்க்கும் நோய்கள் :** கண்நோய், பால்வினை நோய், விரணம், மூர்ச்சை, தேள் விஷம், குட்டம், தோல் நோய், பெருவயிறு, உப்புசம்.



பீனாரி சங்கன் குப்பி குண்டலி

CLERODENDRUM INERNE

தீர்க்கும் நோய்கள் : முடக்குவாதம்.



புங்கன் கரஞ்ச PONGAMIA GLADIRA

**தன்மை** : கசப்புச்சுவை, உஷ்ணவீரியம், லேசு, பித்தத்தை வளர்த்தல், மலமிளக்கி.

**தீர்க்கும் நோய்கள்** : குட்டம், உதாவர்த்தம், குன்மம், மூலம், விரணம், கிருமி நோய், கபம், வீக்கம், மேகநோய்.



**புலிப்பிரண்டை ஆம்லவேதச VITISSETOSA, CISSUSSETOSA**

**தன்மை :** புளிப்புச் சுவை.

**தீர்க்கும் நோய்கள் :** குன்மம், இதயநோய், மூலம், க்ஷயம், பித்தம், இரத்தபித்தம், மேகம், தேள் விஷம்.



**புளிச்சக்காய் பிலிம்பி AVERHOA BILIMBI**

**தீர்க்கும் நோய்கள் :** குன்மம், இதயநோய், மூலம், க்ஷயம், மேகம், பித்தம், இரத்தபித்தம், தலைச் சுற்றல், தேள், பாம்பு விஷம், வயிற்றில் எரிச்சல், சிறுநீர்த்தடை.



புளிச்சச்கீரை பீலு HILUSCUS KANNAALUNUS

**தன்மை :** புளிப்புச்சுவை, கல்லீரல் வலிமை, பித்த வளர்ச்சி, சடராக்னி வளர்ச்சி, மலக்கட்டு.

**தீர்க்கும் நோய்கள் :** இரவில் கண்தெரியாமை, கட்டி.



**புளியாரை ஆம்லிகா OXLISCAR ICULATA**

**தன்மை :** புளிப்புச்சுவை, சடராக்னி வளர்ச்சி, உஷ்ணம்.

**தீர்க்கும் நோய்கள் :** வாதரத்தம், சடராக்னி குறைவு, சோர்வு, குன்மம், மூலநோய், கிரஹணி, சிறுநீர்த்தடை, மேகம், கண்புறை.



**பேய்அத்தி உன்மத்தஉதும்பர FICUS NISPDRA**

**தன்மை :** கசப்புச்சுவை.

**தீர்க்கும் நோய்கள் :** வயிற்றுப்புண், தொண்டைப்புண், விஷக்காய்ச்சல், சீதபேதி.



பேராமுட்டி மகாபல **PAXLONIORDO RAKA**

**தன்மை :** இனிப்பு, வலிமை, விந்து வளர்ச்சி.

**தீர்க்கும் நோய்கள் :** காய்ச்சல், இதயநோய், மூன்று தோஷங்கள், நாவறட்சி, மூலம், வீக்கம், நீரிழிவு.



**மாமரம் ஆம்ர MANGIFERA INDICA**

**தன்மை :** துவர்ப்பு, புளிப்பு, வாதபித்த வளர்ச்சி, வறட்சி, ரத்ததோஷம் தோற்றுவித்தல், மாம்பழம் – விந்து வளர்ச்சி இதயத்திற்கு நன்மை, உடற்பொலிவு, குளுமை, பித்தத்தணிப்பு, கபவளர்ச்சி.

**தீர்க்கும் நோய்கள் :** வாதம், பித்தம் மலக்கட்டு, மாம்பருப்பு – வாந்தி அதிசாரபேதி, மார்பில் எரிச்சல்.



## மாசிபத்திரி கிரந்திபர்ணி ஸ்தௌனேயக

**ARTEMISIA PARVIFLORA**

**தன்மை :** கார்ப்பு கசப்புச்சுவைகள், எண்ணெய் பசையூட்டுதல், மலமிளக்கி, நறுமணம்.

**தீர்க்கும் நோய்கள் :** பித்தம், விரணம், வாதம், குட்டம், கிருமிநோய், சடராக்னி குறைவு, கை கால் வலி, மூர்ச்சை.



முசுமுசுக்கை ஆகுமுகி **MELOTHRIA MADERAS PATANA**

**தீர்க்கும் நோய்கள் :** இழுப்பு, குன்மம், மண்ணீரல் வீக்கம், விரணம், இருமல்.



**முடக்கத்தான் தேஜோவதி CARDIOS PERMUM HCLICACUBAN**

**தன்மை :** கசப்பு, கடுப்புச்சுவை, எண்ணெய்ப் பசை, பிசுபிசுப்பு, மலமிளக்கி.

**தீர்க்கும் நோய்கள் :** இடுப்பு நோய், மேகவாதவலி, கண்நோய், கட்டி, விரணம், ரத்த பித்தம், சிறுநீர்தடை, க்ஷயம்.



**முட்சங்கன் குண்டலி AZIMATE TERACANTHA**

**தன்மை :** கசப்பு, கடுப்புச்சுவைகள், வாதத்தணிப்பு.

**தீர்க்கும் நோய்கள் :** வாத காசம், இருமல், க்ஷயம், உப்புசம், கிருமிநோய்.



**மூவிலை சாலிபர்ணி** **PSEVDAR THRIAVISCIDA**

**தன்மை** : கசப்புச்சுவை, உஷ்ணம், உடல்வலிமை வளர்த்தல்.

**தீர்க்கும் நோய்கள்** : இருமல், இழுப்பு, சளி, காய்ச்சல், எரிச்சல், அழற்சி, விஷக்காய்ச்சல், மேகம், உப்புசம், கொடிய வாத நோய்கள், வீக்கம், அதிசாரம்.



**லோத்ரம் லோத்ரா SYMPLOCOS RACCMOSA**

**தன்மை :** லேசு, குளுமை, துவர்புச்சுவை, மலக்கட்டு.

**தீர்க்கும் நோய்கள் :** ரத்தபித்தம், ரத்தாதி ஸாரம், வீக்கம், பித்தம், நஞ்சு, வாதம், பெரும்பாடு.



**வலம்புரி ஆவர்தனி HALECHESS ISOCA**

**தன்மை :** கசப்பு, கடுப்புச்சுவைகள், விந்துக்கட்டு.

**தீர்க்கும் நோய்கள் :** கிருமி நோய், கபம், குன்மம், பெருவயிறு, இருமல், விரணம், பித்தம், உப்புசம், அரிப்பு.



வாசனைப்புல் ரோகிஷா **CYMBO POGON FLEXUOSIS**

*தன்மை :* துவர்ப்பு, கசப்புச்சுவைகள், மலமிளக்கி.

*தீர்க்கும் நோய்கள் :* இதய நோய், தொண்டை நோய், இரத்தபித்தம், வலி, இருமல், கபம், காய்ச்சல்.



வாதநாராயணன் வாதநாராயண DELONIX ELACTA

**தன்மை :** கசப்புச்சுவை.

**தீர்க்கும் நோய்கள் :** மார்புவலி, முதுகுவலி, முடக்குவாதம்.



**வாயுவிளங்கம் விடங்க ENBELI ABASAAL**

**தன்மை :** மலமிளக்கி, கார்ப்பு, கசப்புச்சுவைகள், வறட்சி, உஷ்ணத்தன்மை, சடராக்னி வளர்ச்சி, லேசு.

**தீர்க்கும் நோய்கள் :** வயிற்று நோய், அசீரணம், இருமல், இழுப்பு, இதய நோய், மலக்கட்டு, கபம், நீரிழிவு, கிருமிநோய், வயிற்று உப்புசம், குன்மம்.



**விடதலை வீரவிருக்ஷ DICHROST ACHYS / CINE AREA**

**தன்மை :** கார்ப்புச்சுவை, உஷ்ண வளர்ச்சி.

**தீர்க்கும் நோய்கள் :** சிறுநீர்தடை, விரணம், வீக்கம், கபவாத நோய்கள்,

அத்துடன் பழையவெல்லமும் சேர்த்து நல்லெண்ணெயில் குழைத்து உட்கொள்ளச் செய்தால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 51

## 22. விடங்காதி சூரணம் (வேறு முறை)

வாயுவிடங்கம் இந்துப்பு கோஷ்டம் திரிகடுகம் பெருங்காயம் மனோசிலை இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கித் தேனும் நெய்யும் கலந்து குழைத்து உட்கொள்ளச் செய்தால் இருமல் விக்கல் இழுப்பு இவை நீங்கும். 52

## 23. [1]சித்திரகாதி லேகியம்

கொடிவேலி கண்டந்திப்பிலி [2]திரிகடுகம் பெருங்காயம் காஞ்சொரி பூலாங்கிழங்கு புஷ்கரமூலம் யானைத்திப்பிலி துளசி வசம்பு சிறு தேக்கு சீந்தில்கொடி சித்தரத்தை கற்கடகசிருங்கி திராக்ஷை இவற்றுள் ஒவ்வொன்றும் கால்பலம் வீதம் எடுத்து நன்றாகப் பொடி செய்து [3]வஸ்திரகாயம் செய்து கொள்க. கண்டங்கத்திரி சேர்த்துக் காய்ச்சிய 50 பலம் கஷாயத்தை வடிக்கட்டி மேற்படி சூரணத்தை அத்துடன் சேர்த்து இருபது பலம் பழுப்புச் சர்க்கரை கலந்து பக்குவம் செய்து பக்குவமாகும் பொழுது நான்கு பலம் நெய் சேர்த்து முறைப்படி லேகியம் தயார் செய்க. குளிர்ந்த பின் நான்கு பலம் தேன் நான்கு பலம் திப்பிலி நான்கு பலம் மூங்கிலுப்பு இவற்றின் தூளைக் கலந்து லேகியமாகச் செய்து வைத்துக் கொள்க. நோயாளியின் சீரண வலிமைக்கு ஏறறவாறு நாள்தோறும் இந்த லேகியத்தைப் பயன்படுத்தினால் இருமல் இதயநோய் குன்மம் இழுப்பு இவை நீங்கும். 53 - 56

## 24. அகஸ்திய ஹரீதகீ ரஸாயனம்

[4]தசமூலம் பூனைக்காலிவிதை சங்கபுஷ்பி பூலாங்கிழங்கு சித்தா மூட்டி யானைத்திப்பிலி நாயுருவி கண்டந்திப்பிலி கொடிவேலி சிறு தேக்கு புஷ்கரமூலம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் வீதம் கொண்டு 64 பலம் யவதானியம் 100 கடுக்காய் 320 பலம் நீர் சேர்த்து யவதானியம் நன்றாகப் பக்குவம் அடையும் வரை காய்ச்சுக.

---

1. சித்திரகா - கொடிவேலி
2. திரிகடுகம் - சுக்கு மிளகு திப்பிலி
3. வஸ்திரகாயம் செய்தல் - துணியால் சலித்துக் கொள்வது,
4. தசமூலம் - சிறுமல்லி பெருமல்லி சிறுவழுதுணை கண்டங் கத்திரி நெருஞ்சில் வில்வம் முன்னை பெருவாகை பெருங் குமிழன் பாதிரி இவற்றின் வேர்கள்.



**வெண்காசினி கீரை ஸ்வேதநாளி HIBISCUS KANN ALINUS**

**தன்மை :** இனிப்பு, கார்ப்பு, துவர்ப்பு, புளிப்புச் சுவைகள், மலமிளக்கி, உஷ்ணம், சடராக்னி வளர்ச்சி, எண்ணெய்ப்பசை.

**தீர்க்கும் நோய்கள் :** கபம், வாதம், ரத்தம், குன்மம், மண்ணீரல் வீக்கம், பெருவயிறு, நஞ்சு, குட்டம்.



வெண்மந்தாரை ஸ்வேதகாஞ்சனாரா

**BAVHINIA RACE MOSA**

**தன்மை :** குளுமை, வறட்சி, துவர்ப்புச்சுவை, மலக்கட்டு.

**தீர்க்கும் நோய்கள் :** இழுப்பு, இருமல், பித்தம், ரத்தவிகாரம், பெரும்பாடு க்ஷயம், குட்டம், வாதம், விரணம், கபம், கண்டமாலை.



**வெண்ணங்கு கர்ணிகார PTER OSPERMUM / ACERI FOLIUM**

**தன்மை :** மலமிளக்கி, கார்ப்புச்சுவை, உஷ்ணம்.

**தீர்க்கும் நோய்கள் :** கபம், வயிற்றுவலி, கிருமி, வயிற்று நோய், நீரிழிவு, விரணம், குன்மம்.



**வெள்ளைவெட்சி ஸ்வேதபந்தூக IXORA ALBA**

**தன்மை :** கசப்பு, கடுப்புச்சுவை, லேசு, மலக்கட்டு.

**தீர்க்கும் நோய்கள் :** மேகம், கபவாதம், கட்டி.



**வெள்ளை அலரி ஸ்வேதகரவீர NERIUM ODORUM**

**தன்மை** : கசப்பு, கார்ப்பு, துவர்ப்புச்சுவைகள், உஷ்ணம், நஞ்சு.

**தீர்க்கும் நோய்கள்** : கிருமி, விரணம், அரிப்பு, குட்டம், சிறுநீர்க் குழாயில்கல், (மேல்பூச்சுக்கு மட்டும்).



## வெற்றிலை நாகவல்லி PIPER BETLE

**தன்மை :** துவர்ப்பு, கசப்பு, கார்ப்புச் சுவைகள், லேசு, நறுமணம்.

**தீர்க்கும் நோய்கள் :** கபம், வாதம், சோர்வு, வாய் நாற்றம்.

# சரகஸம்ஹிதை

## சிகித்ஸா ஸ்தானம்

### பதினாறாவது அத்தியாயம்

## *பாண்டுரோக சிகிச்சை

ஆத்ரேய முனிவர் கூறியபடி பாண்டுரோக (சோகை நோய்) சிகிச்சையை விளக்குவோம். 1 - 2

### 1. பாண்டு நோய் வகைகள்

வாதம் பித்தம் கபம் என்னும் தோஷங்களின் காரணமாக வேறு வேறாகத் தோன்றுவன மூன்றும், மூன்று தோஷங்களும் கலந்து தோற்றுவிக்கும் ஸந்நிபாதம் ஒன்றும், மற்றும் மண்ணைத் தின்னும் பழக்கத்தால் தோன்றுவது ஒன்றும் ஆக சோகை நோய் ஐந்து வகைபபடும். 3

### 2. சோகை நோயின் தோற்றம்

பித்தத்தை முதன்மையாகக் கொண்டு வாத பித்த கபங்கள் சீற்றமடைந்து இரசம் இரத்தம் முதலிய தாதுக்களில் பரவும் போது நோயாளியின் உடலில் உள்ள தாதுக்கள் வலிவிழந்து உடல் முதலில் பளுவாகத் தோன்றும். பிறகு தோஷங்களினால் தாதுக்கள் கேடுறுவதால் உடல் நிறமும் வலிமையும் எண்ணெய்ப் பசையும் ஓஜஸ் என்பதைச் சார்ந்த பத்து தன்மைகளும் மிகவும் குன்றிப்போகும். அப்பொழுது நோயாளி இரத்தமும் கொழுப்பும் மிகவும் குறைந்து தாதுக்களில் சிறிதேனும் வலிமையின்றி கண் முதலிய புலன்களின் வலிமையையிழந்து உடல் நிறமும் மாறியவனா

---

* பாண்டுரோக சிகிச்சை — இரத்தம் முதலிய தாதுக்கள் குறைந்து உடல் இளைத்து வெண்மை நிறம் கொள்ளும் நோய் பாண்டு (சோகை) எனப்படும். அந்நோயின் முற்குறி தோற்றம் காரணம் வகைகள் சிகிச்சை முறைகள் என்பன விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் இப்பெயர் பெற்றது.

வான். அத்தகைய சோகை நோய் தோன்றக் காரணங்களையும் நோயின் இலக்கணங்களையும் கூறுகிறேன், கேள். (என ஆத்ரேயர் அக்னிவேசருக்கு இவ்வாறு விளக்கினார்) 4 - 6

கார்ப்பு புளிப்பு உப்புச் சுவை மிகுந்துள்ள பொருள்களையும், காரவகைகளையும், மிகவும் உஷ்ணவீரியமும் சூடும் கொண்டுள்ள பொருள்களையும் மிகுதியாக உண்பதாலும் ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களை கலந்து உண்பதாலும், நாடு பருவம் முதலியவற்றிற்கு ஒவ்வாத பொருள்களை உண்பதாலும் மொச்சை உளுந்து பிண்ணாக்கு எள்ளு எண்ணெய் போன்றவற்றை மிகுதியாக உண்பதாலும், உண்ட உணவு சரியாகச் சமானமாகாத நிலையில் பகலில் உறங்குவதாலும், அத்தகைய உடல் நிலையில் உடற்பயிற்சி கலவி முதலிய செயல்களைப் புரிவதாலும், வாந்தி எடுக்கச் செய்தல் முதலிய ஐந்து வகைத் தூய்மைப்படுத்தும் செயல்களை முறை தவறிப் பயன் படுத்திக் கொள்வதாலும், அந்தந்த பருவகாலங்களுக் கேற்ப நடந்து கொள்ள வேண்டிய முறைக்கு மாறாக நடந்து கொள்வதாலும் அல்லது பருவகாலங்களில் இயற்கையாக அல்லாது பல மாறுபாடுகள் தோன்றுவதாலும், அபானம் மலம் சிறு நீர் முதலியவற்றின் வேகத்தைத் தடுப்பதாலும், காமம் கவலை அச்சம் சினம் வருத்தம் முதலியவற்றால் மனம் தாக்கப் படுவதாலும் பித்தம் சீற்றமடையும். அந்தப் பித்தமானது இதயத்தை சேர்ந்து வலிமையுள்ள வாதத்தால் ஈர்க்கப்பட்டு இதயப்பகுதியிலுள்ள [1] பத்து இரத்தக் குழாய்களில் நிரப்பப்படுகிறது. அதனால் அவ்வாறு சீற்றமடைந்த பித்தம் உடல் முழுவதும் பரவி உடல் மேல் தோலுக்கும் சதைக்கும் இடையே சேர்ந்து கபத்தையும் வாதத்தையும் இரத்தத்தையும் தோலையும் மாமிசத்தையும் கெடுத்துவிடும். அதனால் உடலின் மேல் தோல் வெண்மை மஞ்சள் பச்சை முதலிய நிறங்களைக் கொள்ளும். இதுதான் சோகை நோய் எனப்படும். (பாண்டு நோயில் வெண்மை மஞ்சள் முதலிய பலநிறங்களைக் கொண்டாலும் சிறப்பாக இந்நோயில் உடல் வெளுப்பாகவே காணப்

---

1. பத்து இரத்தக்குழாய்கள்-இதயத்தில் ஏழு தாதுக்களின் சாரமாகிய ஓஜஸ் என்பதைத் தாங்கும் பத்து தமனிகளையும் சார்ந்து, அவற்றின் வழியே உடல் முழுவதும் பரவி இரஸம் முதலிய தாதுக்களைக் கெடுக்கும் இந்த இரத்தக் குழாய்களைப்பற்றிய விளக்கம் ஸூத்ரஸ்தானம் முப்பதாவது அத்தியாயத்தில் 8-12சுலோகங்களின் உரையில் காண்க. உயிருக்கு ஆதாரமான அந்த பத்து இரத்தக் குழாய்களிலும் பரவி சோகையை தோற்றுவிக்கும் என்பது கருத்து.

படுவதால் பொதுவாகப் பாண்டு நோய் எனக்கூறப்பட்டது என்றுணர்க). 7 - 11

## 3. சோகை நோய்க்கு முற்குறி

மார்பு படபடப்பது எண்ணெய்ப்பசையின்றி உடலின் மேல் தோல் வறண்டிருப்பது வியர்க்காமை மிக்க களைப்பு என்பன சோகை நோய்க்கு முற்குறிகளாகும். 12

## 4. சோகை நோயின் பொது இலக்கணம்

காதுகளில் இரைச்சல், சடராக்னி மிகவும் குறைதல் உடல் வலிமை குன்றி இளைத்தல், உணவின் பெயரைக் கேட்டாலும் வெறுப்பு தோன்றுதல், மிகவும் சோர்வு, சக்கரத்தின் மேலிருப்பவனைப் போல் தலை சுற்றுதல், உடல் முழுவதும் குத்தல்வலி, காய்ச்சல், மேல்மூச்சு வாங்குதல், உடல் பளுவாகத் தோன்றுதல், உணவில் விருப்பம் தோன்றினாலும் வாய்க்குச் சுவையாகத் தோன்றாமை, உடலுறுப்புகளை உடைப்பது போலும் இழுத்துப் பிடிப்பது போலவும் முறுக்குவது போலவும் வலி தோன்றுதல், முடி உதிர்தல், இரு கண்களின் சுற்றுப்பகுதியில் வீக்கம், பச்சை நிறம் தோன்றுதல், உடல் நிறம் மாறுபடுதல், காரணமின்றி சினம் கொள்ளுதல், குளிர்ச்சி தரும் பொருள்களில் வெறுப்பு, தூக்கம் மிகுதல், வாயிலிருந்து எச்சிலைத் துப்பிக் கொண்டிருத்தல், பேசும் வலிமையும் குறைதல், ஆடுசதையில் முறுக்குவது போன்ற வலி, இடுப்பிலும் தொடையிலும் கால்களிலும் வலி, உறுப்புக்கள் இளைத்தல், சற்று உயரமான இடத்திற்கு ஏறிச் செல்லும் போது மிகவும் களைத்துப் போதல் போன்ற அறிகுறிகள் பொதுவாக சோகை நோய் வகைகள் அனைத்திலும் காணப்படும். வாதம் முதலியவற்றால் தோன்றும் சோகை வகையின் சிறப்பிலக்கணம் கூறப்படும். 13 - 16

## 5. வாதத்தினால் தோன்றும் சோகையின் இலக்கணம்

வாதத்தை வளரச் செய்யும் உணவு வகைகளாலும், செயல்களாலும் வாதம் சீற்றமுற்று சோகை நோயைத் தோற்றுவிக்கும். அப்பொழுது நோயாளியின் உடல் கருமை கலந்த வெண்ணிறம் கொண்டும் வறண்டும் சிவந்தும் காணப்படும். தடியால் அடிப்பட்டது போல் உடல் முழுவதும் குத்தல் வலி தோன்றும். உடல் நடுங்கும். விலாக்களிலும் தலையிலும் வலி தோன்றும். மலம் நீர்ப்பகுதியின்றி உலர்ந்திருக்கும். வாய்சுவையறியாது. உடலில் வீக்கம் தோன்றும். வயிற்றில் உப்புசம் தோன்றி உடல் வலிமை அடியோடு குன்றிப் போகும். (மூன்பு பொதுவாகக் கூறப்பட்ட இலக்கணங்களுடன்

இத்தகைய அறிகுறிகளும் சேர்ந்து காணப்பட்டால் வாதம் மிகுதலால் தோன்றிய சோகை என்று அறிக.) 17 - 18

## 6. பித்தத்தினால் தோன்றும் சோகை நோயின் இலக்கணம்

இயற்கையாகப் பித்தம் மிகுந்துள்ள உடல் கொண்டவர்கள் மேலும் பித்தத்தை வளர்க்கும் பொருள்களைப் பயன்படுத்துவதால் பித்தம் மிகவும் சீற்றமடைந்து இரத்தம் முதலிய தாதுக்களைக் கெடுத்துச் சோகையைத் தோற்றுவிக்கும். அத்தகைய நோயாளியின் உடல் மஞ்சளோ பச்சையோ நிறங்கொண்டு காய்ச்சலால் துன்பமடையும். நாவறட்சி மிகும். நினைவிழத்தலும் தோன்றும். நீர் வேட்கையும் தோன்றும். அவனுடைய மலமும் சிறுநீரும் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். வியர்வை மிகுதியாகும். நோயாளி குளிர்ச்சி தரும் செய்கைகளையும் குளுமைத் தன்மையையும் மிகவும் விரும்புவான். உணவில் விருப்பம் தோன்றாது. வாய் கசக்கும். புளிப்புச் சுவையுள்ளவையும், சூடானவையும் அவனுக்குச் சுகம் தரா (உஷ்ணமும் புளிப்புச்சுவையும் பித்தத்தை வளர்ப்பவையாகையால் அவை கூடாதவை என்றுணர்க). உண்ட உணவு சடராக்னியால் பக்குவமடையும் போது புளிப்புச்சுவை கொள்ளும். அப்பொழுது புளியேப்பம் மிகும். வயிற்றில் எரிச்சலும், உடலில் கெட்ட நாற்றமும் தோன்றும். மலம் நீர்த்து வெளியாகும். களைப்பு மிகும். கண்கள் இருண்டு போகும். (சோகை நோய்க்குப் பித்தமே முதற்காரணம். எனவே இயற்கையாகப் பித்தம் மிகுந்துள்ளவனுக்கு உணவு முதலியவற்றால் பித்தம் சீற்றமுறும் போது வாத கபங்களில் ஒன்றின் தொடர்பு இன்றியே சோகை நோய் தோன்றும் என்று உணர்க.) 19 - 22

## 7. கபத்தினால் தோன்றும் சோகை நோயின் இலக்கணம்

கபத்தை வளர்க்கும் உணவு வகைகளாலும் செயல்களாலும் கபம் சீற்றமடைந்து இரசம் இரத்தம் முதலிய தாதுக்களைக் கெடுத்துச் சோகை நோயைத் தோற்றுவிக்கும். அத்தகைய நோயாளிக்கு உடல் பளுவாகத் தோன்றும். சோம்பல் மிகும். வாந்தி ஆகும். உடல் வெளுத்துக் காணப்படும். வாயிலிருந்து உமிழ்நீர் மிகுதியாக வெளி வரும். மயிர்கூச்சம் தோன்றும். உடல் தளரும். நினைவு தவறும். தலை சுற்றுவது போலிருக்கும். களைப்பும் பெருமூச்சும் இருமலும் தோன்றும். எந்த வேலையிலும் விருப்பம் தோன்றாது. நோயாளி செயலிழந்து காணப்படுவான். சுவையின்மை தோன்றும். பேசும் போது வாயையும் தொண்டையையும் அடைப்பது போலிருக்கும். மலம் சிறுநீர கண்கள் வெளுத்துக் காணப்படும். கார்ப்பும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமுமுள்ள பொருள்களில் விருப்பம் மிகும்.

நோயாளி சூடான சூழ்நிலையை விரும்புவான். உடலில் வீக்கம் காணப்படும். வாய் இனிப்புச் சுவையோ உவர்ப்புச் சுவையோ கொண்டிருக்கும். இந்த அறிகுறிகள் சிறப்பாகக் காணப்பட்டால் கபம் மிகுந்துள்ளதால் தோன்றிய சோகை நோயென்று அறிக. 23-25

**8. ஸந்நிபாதத்தால் தோன்றிய சோகை நோயின் இலக்கணம்**

வாதம் முதலிய தோஷங்கள் சீற்றமடையக் காரணங்களாகக் கூறப்பட்ட பொருள்களைக் கலந்து மிகுதியாகப் பயன்படுத்துவதால் மூன்று தோஷங்களும் சீற்றமடைந்து ஸந்நிபாதத்தால் தோன்றும் சோகையைத் தோற்றுவிக்கும். இதில் வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகச் சிறப்பாகக் கூறப்பட்ட இலக்கணங்கள் அனைத்தும் ஒருங்கே காணப்படும். இந்த நோய் மிகவும் பொறுக்க முடியாததாகும். 26

**9. மண்ணைத் தின்னும் பழக்கத்தால் தோன்றும் சோகையின் இலக்கணம்**

மண்ணைத் தின்னும் பழக்கம் உள்ளவனுக்கு வாதம் முதலியவற்றில் ஏதேனும் ஒன்று சீற்றம் பெறும். துவர்ப்பு மண் வாதத்தையும், காரச் சுவையுள்ள உழுமண் பித்தத்தையும், இனிப்புச்சுவை கொண்ட (நாமக்கட்டி முதலிய) மண் கபத்தையும் சீற்றமடையச் செய்யும். அந்தந்த வகை மண்ணைத் தின்பதால் அந்தந்த தோஷம் சீற்றமடைந்து சோகை நோயைத் தோற்றுவிக்கும். மண் தனது வறட்சித் தன்மையால் இரசம் முதலிய தாதுக்களையும் உண்ட உணவையும் வறண்டு போகச் செய்து விடும். அந்த மண் செரிமானமடையாமல் தாதுக்கள் பரவும் வழிகளில் சேர்ந்து அவ்வழிகளைத் தடுக்கும். மற்றும் புலன்களின் வலிமையை அழித்து ஒளியையும் வீரியத்தையும் ஓஜஸ் எனப்படும் தாதுக்களின் சாரத்தையும் மிகவும் குறைத்துச் சோகையைத் தோற்றுவிக்கும். இந்த நோயால் வலிமை, நிறம், சடராக்னி விரைவில் அழியும். இந்த நோய் கொண்டவனுடைய கன்னம், கண்களின் சுற்றுப்பகுதி, புருவம், தொப்புள், ஆண்குறி ஆகிய பகுதிகளில் வீக்கம் காணப்படும். குடலில் கிருமிகள் சேர்ந்து இரத்தத்துடனும் கபத்துடனும் பல முறை வெளியேறும். இந்த இலக்கணங்கள் காணப்பட்டால் மண் தின்பதால் தோன்றிய சோகை நோய் என்று உணர்க. (இந்த நோய்க்கு மண்ணே முதற் காரணம் அன்றி வாதம் முதலியவை அல்ல என்றறிக.) 27 - 30

**10. தீர்க்க இயலாத சோகை நோயின் இலக்கணம்**

சோகை நோய் பல நாள் தொடர்ந்து இருந்து தகுந்த சிகிச்சை பெறாவிடில் அது சிகிச்சைக்கு உட்படாததாகும். மற்றும் பல

நாட்கள் சிகிச்சை பெறாததால் முற்றி அதிக வீக்கம் கொண்டு நோயாளி காணும் பொருள்கள் அனைத்தும் மஞ்சள் நிறம் கொண்டவையாகக் காணப்படும். நோயாளிக்குள்ள சோகை நோய் தீர்க்க இயலாததாகும். சோகை நோய் கொண்டவனுக்கு கபத்துடன் கூடிய மஞ்சள் நிறம் கொண்ட மலம் தடைப்பட்டு சிறிது சிறிதாக அடிக்கடி வெளியாகிக் கொண்டு உடல் மிகவும் வலிவிழந்து நன்றாக வெளுத்து வாந்தியும் நினைவிழத்தலும் நாவறட்சியும் தோன்றுமாயின் அந்த நோயாளி பிழைப்பது அரிது. மற்றும் இரத்தம் அடியோடு குறைந்து போனதால் உடல் மிகவும் வெளுத்து கண்களும் பற்களைத் தாங்கும் ஈறுகளும் நகங்களும் மலமும் சிறுநீரும் மிக்க வெளுத்திருக்குமாயின் அந்த நோயாளி பிழைக்க மாட்டான். இவ்வாறு வாதம் முதலிய வேற்றுமைகளால் ஐந்து வகைகளான சோகை நோய் விளக்கப்பட்டது. 31 - 33

## 11. காமாலையின் தோற்றமும் இலக்கணமும்

சோகைநோய் கொண்டவன் பித்தத்தை வளர்க்கும் பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்தினால் பித்தம் மிகவும் சீற்றம் கொண்டு இரத்தத்தையும் மாமிசத்தையும் உலர்த்திக் காமாலை நோயைத் தோற்றுவிக்கும். இந்த நோயால் துன்பமடைபவனின் கண்கள் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். உடல் மேல்தோலும் நகங்களும் முகமும் மஞ்சள்நிறங் கொண்டு காணப்படும். மலமும் சிறுநீரும் இரத்தச் சிவப்பாகவோ மஞ்சளாகவோ இருக்கும். உடல் மிகவும் இளைத்து அந்த நோயாளி தவளையைப்போல் வறண்ட மஞ்சள் நிறத்துடன் தோற்றமளிப்பான். கண்கள் முதலான புலன்கள் வலிவிழந்து தம் செயல்களைப் புரிய இயலாதவைகளாகும். மற்றும் அழற்சி அசீரணம் வலிவின்மை உடல் முழுவதும் தளர்ச்சி சுவையின்மை என்பன அவனை மிகவும் துன்புறுத்தும். இந்த காமாலை நோய் குடலிலும், இரத்தம் முதலிய தாதுக்களிலும் பித்தம் பரவி இருப்பதால் தோன்றுவதாகும். (சோகைநோய் தோன்றியதும் தக்குந்தபடி பத்தியமிருந்து சிகிச்சை பெறாவிடில் அப்பொழுது காமாலை நோய் தோன்றும். மற்றும் சோகைநோய் இல்லாவிடினும் பித்தத்தை வளர்க்கும் புளிப்புச் சுவையுள்ள பொருள்கள் முதலியவற்றை மிகுதியாகப் பயன்படுத்துவதால் பித்தம் சீற்றமுற்று தாதுக்களைச் சார்ந்து பரவி காமாலை நோயைத் தோற்றுவிக்கும். இவ்வாறு காமாலை இருவகையாகுமென்று உணர்க.) 34 - 36

## 12. கும்ப காமாலையின் இலக்கணம்

முன்கூறிய காமாலைநோய் தோன்றுமாயின் தகுந்த சிகிச்சை செய்யாமல் விட்டுவிட்டால் அந்நோய் மிகவும் கொடியதாகிக்

கும்பகாமாலை எனப் பெயர் கொள்ளும். (கும்பம் என்றால் குடல். அங்கு தோன்றிய காமாலையாகையால் இதற்கு இப்பெயராயிற்று. காமாலைநோய் முற்றிக் குடலைச் சார்ந்து வலிவுறுவதாகும் என்று அறிக).

## 13. தீர்க்க இயலாத காமாலையின் இலக்கணம்

காமாலை நோயினால் துன்புறுபவனின் மலமும் சிறுநீரும் கண்களும் கருநிறமோ மஞ்சள் நிறமோ கொண்டு உடலில் மிகவும் வீக்கம் காணப்பட்டாலும், கண்களும் முகமும் மிக்க சிவந்து வாந்தியும் மலமும் சிறுநீரும் இரத்தச்சிவப்பாகி வெளிவந்து கொண்டிருந்து நினைவிழத்தல் தோன்றினாலும், அழற்சியும் சுவையின்மையும் நாவறட்சியும் வயிற்று வீக்கமும் சோம்பலும் மயக்கமும் தோன்றினாலும், உடலில் சூடு மிகவும் தணிந்து நோயாளி தன்னுடலறியாத நிலை கொண்டாலும் நோயாளி விரைவில் உயிரிழப்பான். 37 - 38

## 14. சோகை காமாலை நோய்களுக்குப் பொது சிகிச்சை

எளிதில் தீர்க்கக் கூடிய, மற்றும் கஷ்டப்பட்டுச் சிகிச்சை புரிவதால் தீர்க்கக்கூடிய சோகை, காமாலை நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் இனி கூறப்படுகின்றன. சோகை நோயால் துன்புறுபவனுக்கு முதலில் முறைப்படி எண்ணெய்ச் சிகிச்சை செய்வித்து குடல் எண்ணெய்ப் பசை கொண்டு மென்மையடைந்தபிறகு உடலில் சீரணப் பையிலுள்ள (பக்குவாசயத்திலுள்ள) தோஷங்களைப் போக்க தீக்ஷ்ண குணமுள்ள மருந்துகளால் வாந்தி எடுக்கச் செய்தும், தீக்ஷ்ணத் தன்மையுள்ள மருந்துகளால் பேதியாகச் செய்தும் சிகிச்சை புரியவேண்டும். காமாலைநோய் கொண்டவனுக்கும் முதலில் எண்ணெய் முறையால் குடல் எண்ணெய்பசை கொள்ளச் செய்து கசப்புச் சுவைகொண்ட மென்மையான மருந்துகளால் பேதியாவதற்கு மட்டும் சிகிச்சை செய்யவேண்டும். 39 - 40

## 15. குடல் தூய்மை பெற்ற சோகை, காமாலை நோயாளிகளுக்கு உணவு முறை

சோகை காமாலை நோயாளிகளை வாந்தி எடுக்கச் செய்தும் அவர்களுக்கு பேதிக்குக் கொடுத்தும் குடல் தூய்மை பெற்றபின் இனி கூறப்போகும் முறைப்படி உணவு அளிக்கவேண்டும். பழைய சிவப்புச்சம்பா அரிசி, யவதானியம் கோதுமை இவற்றின் சோற்றை பருப்புக்கஞ்சித் தெளிவுடனோ பயறு துவரை சிறுகடலை இவற்றின் பருப்புகளுடனோ காட்டு விலங்கினங்களின் இறைச்சிச்சாற்றுடனோ நோயாளிகளை உண்ணச் செய்யவேண்டும். 41 - 42

### 16. சோகை காமாலை நோய்க்கு [1]பஞ்சகவ்யாதி கிருதம்

காமாலை அல்லது சோகைநோய் கொண்டவனுக்கு முதலில் எண்ணெய்ப்பசை தோற்றுவிக்கப் [1] பஞ்சகவ்ய கிருதத்தையோ [2] மகாதிக்தக கிருதத்தையோ [3] கல்யாண கிருதத்தையோ பயன் படுத்த வேண்டும். (சோகைநோய் பித்தத்தைச் சார்ந்து தோன்றுவதாகையால் அத்தகைய பித்தத்தைத் தணிக்கக்கூடிய நெறிமுறைகள் இங்கு கூறப்பட்டன என்று உணர்க). 43

### 17. சோகை நோய்க்கு [4]தாடிமாதிகிருதம்

மாதுளம்பழத் தோல் நான்கு பலம், கொத்துமல்லி விதை இரண்டு பலம், கொடிவேலி ஒரு பலம், சுக்கு ஒரு பலம், திப்பிலி அரைப் பலம் வீதம் கொண்டு விழுதாக்கி முப்பத்திரண்டு பலம் நெய்யும், அறுபத்து நான்கு பலம் நீரும் சேர்த்து முறைப்படி நெய் தயார் செய்க. இம்மருந்து இதயநோய் சோகை குன்மம் மூலநோய் மண்ணீரல் வீக்கம், வாதகபநோய்கள் என்பனவற்றைப் போக்கும். சடராக்னியை வளர்க்கும். இருமல், இழுப்பு, குடலிலேயே தடைப் பட்டுள்ள (மூட) வாதம் என்பனவற்றைப் போக்கும். மிக்க சிரமத்துடன் பிள்ளை பெறுபவளுக்கு இதமானது. இம்மருந்தைப் பயன் படுத்தும் பெண்களுக்கு மலடு நீங்கும். 44 - 46

### 18. [5]கடுகாதி கிருதம்

கடுகரோகிணி கோரைக்கிழங்கு மஞ்சள் மரமஞ்சள் வெட்பாலை அரிசி பேய்ப்புடல் சந்தனம் பெருங்குரும்பை மருக்கொன்றை காஞ்செரி திப்பிலி பர்ப்பாடகம் வேப்பம்பட்டை நிலவேம்பு, தேவதாருக்கட்டை இவை ஒவ்வொன்றும் ஒரு தோலா வீதம் சேர்த்து விழுதாக்கி பதினாறு பலம் நெய்யும் அறுபத்து நான்கு பலம் பசும்பாலும் கலந்து அனைத்தையும் ஒன்றாக்கி முறையாக நெய்ப் பக்குவம் செய்து பயன்படுத்தினால் இரத்தபித்தம் காய்ச்சல் அழற்சி வீக்கம் பகந்தரம் (பவுத்திரம்) மூலநோய் மூத்தப் பெரும்பாடு கொப்பளங்கள் முதலியன நீங்கும். 47—49

---

1. பஞ்சகவ்யகிருத முறையை அபஸ்மார சிகித்ஸாத்யாயத்தில் காண்க.
2. மகாதிக்தககிருத முறையை குட்ட நோய் சிகித்ஸாத்யாயத்தில் காண்க.
3. கல்யாண கிருத முறையை உன்மாத சிகித்ஸாத்யாயத்தில் காண்க.
4. தாடிமாதி- மாதுளம் பழம் முதலியன.
5. கடுகம்-கடுகரோகிணி

## 19. [1]பத்யாகிருதம்

நூறு கடுக்காய்களின் தோலை நீரிலிட்டுக் கஷாயம் காய்ச்சி, அதில் விதைநீக்கிய ஐம்பது கடுக்காய்களின் தோல்களைக்கொண்டு அரைத்த விழுதைச் சேர்த்து பதினாறு பலம் பசுநெய் கலந்து முறைப்படி நெய்ப் பக்குவம் செய்து தக்க அளவில் நாள்தோறும் பருகச் செய்தால் சோகையும் குன்மமும் நீங்கும். 50

## 20. [2]தந்தீகிருதம்

நான்கு பலம் நேர்வாள வேரில் அறுபத்தாறு பலம் நீர் சேர்த்து நான்கில் ஒரு பகுதி மிகுந்திருக்கக் காய்ச்சி அதில் பதினாறு பலம் பசுநெய்யும் நான்கு பலம் நேர்வாளக்காயின் விழுதும் சேர்த்து முறைப்படி நெய்ப்பக்குவம் செய்து பயன்படுத்தினால் இது மண்ணீரல்வீக்கம் சோகை வீக்கம் (சோபை) என்னும் நோய்களைப் 51
போக்கும்.

## 21. திராக்ஷாகிருதம்

நாள்பட்ட பழைய நெய் பதினாறு பலம் திராட்சை எட்டு பலம் நெய்க்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து முறைப்படி நெய்ப்பக்குவம் செய்து பயன்படுத்தினால் காமாலை குன்மம் சோகை காய்ச்சல் நீரிழிவு பெருவயிறு முதலிய நோய்களை இது போக்கும். 52

## 22. [3]ஹரித்ராதிகிருதம்

மஞ்சள் கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் வேப்பம்பட்டை சித்தாமுட்டி அதிமதுரம் இவற்றைச் சம அளவில் கொண்டு விழுதாக்கி அவ்விழுதிற்கு நான்கு மடங்கு எருமை நெய்யும் நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு பசும்பாலும் சேர்த்து முறையாக நெய்ப் பக்குவம் செய்து பயன்படுத்தினால் காமாலை நோய் நீங்கும். இது 53
சிறந்த மருந்தாகும்.

## 23. மற்றும் சில நெய் முறைகள்

பதினாறு பலம் எருமை நெய்யில் முப்பத்திரண்டு பலம் பசுவின் சிறுநீரும் அரைப் பலம் மரமஞ்சளின் விழுதும் சேர்த்து முறைப்படி நெய்ப்பக்குவம் செய்து சோகைநோய்க்குப் பயன் படுத்துக. ஐந்து பலம் மரமஞ்சளைக்கொண்டு கஷாயம் காய்ச்சி அக்

---

1. பத்யா-கடுக்காய்
2. தந்தீ-நேர்வாளம்
3. ஹரித்ரா-மஞ்சள்

கஷாயம் முப்பத்திரண்டு பலமும் சந்தனத்தின் விழுது அரைப்பலமும் எருமை நெய் பதினாறு பலமும் சேர்த்து முறையாக நெய்ப்பக்குவம் செய்து பாண்டு காமாலை நோய்களுக்குப் பயன்படுத்துக. 54

## 24. சோகை நோய்க்குப் பேதியாகச் செய்தல்

முன் கூறிய நெய் முறைகளைப் பயன்படுத்தி சோகைநோய் கொண்டவனின் குடல் எண்ணெய்ப்பசை கொண்டதை கவனித்து பிறகு பேதியாகச் செய்யவேண்டும். பசும்பாலில் பசுவின் சிறுநீரை கலந்தோ பசும்பாலை மட்டும் கொண்டோ பலமுறை பேதியாகச் செய்யவேண்டும். 55

நேர்வாளவிதைக் கஷாயம் இளஞ்சூடாக இருக்கும்பொழுது அதில் குமிழத்தின் தூள் நான்குபலம் சேர்த்தோ நன்கு நசுக்கப்பட்ட திராட்சைப்பழம் நான்கு பலம் சேர்த்தோ வடிக்கட்டி சோகைநோய் கொண்டவனைப் பருகச் செய்து பேதியாகச் செய்யவேண்டும். சிவதையின் தூள் அரைப்பலம் கொண்டு இரண்டு மடங்கு அளவுள்ள சர்க்கரை கலந்து குளிர்ந்த நீரிலிட்டுப் பித்தத்தினால் தோன்றிய சோகைநோய் கொண்டவனைப் பேதியாவதற்குப் பருகச் செய்ய வேண்டும்.

கடுக்காயைப் பசுவின் சிறுநீரில் கொதிக்கவைத்துத் தூளாக்கி பசுவின் சிறுநீருடன் கபத்தினால் தோன்றிய சோகைநோய் கொண்டவனுக்குப் பருகத் தந்து பேதியாகச் செய்யவேண்டும். 56 - 57

## 25. காமாலை நோய் கொண்டவனுக்குப் பேதியாகச் செய்ய மருந்து

புளிவஞ்சி சுக்கு மிளகு திப்பிலி வில்வ இலை இவற்றை விழுதாகச் செய்து கருப்பஞ்சாறுடனோ பால் முதுக்கன்கிழங்கின் சாற்றுடனோ நெல்லிக்காய்ச் சாற்றுடனோ கலந்து பருகச் செய்தால் காமாலை நோய் தணியும். மற்றும் அரைப்பலம் நேர்வாள விதையை விழுதாக அரைத்து குளிர்ந்த நீரில் கலந்து தூளின் அளவிற்கு இரண்டு மடங்கு வெல்லமும் கலந்து பருகச் செய்தால் காமாலை தணியும். அல்லது சிவதையை அரைத்து [1]திரிபலை கஷாயத்துடன் கலந்து பருகச் செய்தால் காமாலை தணியும். 58—59

## 26. சோகை நோய்க்கு [2]விசாலாதி கஷாயம்

பேய்த்துமட்டி திரிபலை கோரைக்கிழங்கு கோஷ்டம் தேவதாருக் கட்டை வெட்பாலை அரிசி இவை ஒவ்வொன்றும் ஒரு தோலா

---

1. திரிபலை-கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்.
2. விசாலா - பேய்த்துமட்டி.

அதிவிடயம் அரை தோலா பெரும் குரும்பைப்பட்டை இரண்டு தோலா வீதம் சேர்த்துத் தூளாக்கி இளஞ்சூடுள்ள நீரில் கலந்துப் பிசைந்து வடிக்கட்டி அந்தச் சாற்றைப் பருகிய உடனே தேனைப் பருகக் கொடுத்தால் இருமல் இரைப்பு காய்ச்சல் அழற்சி சோகை சுவையின்மை குன்மம் வயிற்று உப்புசம் ஆமவாதம் இரத்தபித்தம் என்னும் நோய்கள் நீங்கும். 60 - 62

## 27. சோகை நோய்க்கு [1]திரிபலாதி சீதகஷாயம்

திரிபலையையோ சிந்தில் கொடியையோ பராபஞ்சளையோ வேப்பம் பட்டையையோ ஒரு பலம் கொண்டு நன்கு இடித்து மண்பானையில் இட்டு அதில் ஆறுபலம் குளிர்ந்த நீர் சேர்ந்து ஓரிரவு முழுவதும் ஊறவைத்து மறுநாள் காலையில் அதை வடிக்கட்டி அந்த கஷாயத்துடன் சிறிது தேனைக் கலந்து பருகச் செய்யவேண்டும். சோகைநோயைப் போக்கும். 63

## 28. சோகை நோய்க்குப் பால்

பசுவின் பாலில் பசுவின் சிறுநீரைக் கலந்தோ எருமைப்பாலில் எருமையின் சிறுநீரைக் கலந்தோ சோகை நோய் கொண்டவன் பதினைந்து நாட்கள் வரை நாள்தோறும் பருகும்படிச் செய்ய வேண்டும். அல்லது திரிபலையின் கஷாயத்தைப் பசுவின் சிறுநீரில் கலந்து ஏழுநாட்கள் வரை நாள்தோறும் பருகச்செய்ய வேண்டும். 64

## 29. மாதுலுங்காங்குர கஷாயம்

துருஞ்சிச் செடித்துளிர்களை நெருப்பில் காய்ச்சி பசுவின் சிறுநீரால் குளிரச் செய்து அத்துடன் நன்கு பிசைந்து அந்தச் சாற்றை வடிக்கட்டிப் பருகச் செய்தால் சோகையும் வீக்கமும் நீங்கும். 65

## 30. சோகை நோய்க்கு சுவர்ணக்ஷீரி முறை

சுவர்ணக்ஷீரி (பிரம்மதண்டி) வெண்சிவதை கருஞ்சிவதை தேவதாரு சுக்கு இவற்றைச் சம அளவில் சேர்த்து நான்கு பலம் அளவுள்ள பசுவின் சிறுநீருடன் அரைத்து வடிக்கட்டிப் பருகச் செய்க. அல்லது அந்த சுவர்ணக்ஷீரி முதலிய பொருள்களைப் பசுவின் சிறுநீரில் பக்குவம் செய்து பருகச் செய்க. அல்லது அந்தப் பொருள் களைச் சேர்த்துக் காய்ச்சிப் பசும்பாலைப் பருகச்செய்க. இதனால் வாதம் முதலிய தோஷங்கள் சமநிலைபெறும். 66 — 67

1. திரிபலா-கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்.

### 31. சோகை நோய்க்குக் கடுக்காய்

கடுக்காயை முன் கூறியபடி பசுவின் சிறுநீர் முதலிய வற்றுடன் கலந்து அரைத்துப்பருகச் செய்க. அந்த கஷாயம் முதலியவை செரிமானமடைந்த பின் பாலுடனோ இனிப்புச் சுவை கொண்ட சாறுகளுடன் பக்குவம் செய்த இறைச்சிச் சாற்றுடனோ உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 68

### 32. சோகை நோய்க்கு உலோகபற்பம்

உலோக பற்பத்தைப் பசுவின் சிறுநீரில் ஏழுநாட்கள் [1]பாவனை செய்து பாலுடன் கலந்து பருகச் செய்தால் சோகை நோய் தணியும். 69

### 33. சோகை நோய்க்கு [2]நவாயஸ சூரணம்

சுக்கு மிளகு திப்பிலி கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் கோரைக்கிழங்கு வாயு விளங்கம் கொடிவேலி இவை ஒன்பதையும் சம அளவில் கொண்டு உலோகபற்பம் ஒன்பது பங்கும் சேர்த்து நன்கு தூளாக்கித் தேனும் நெய்யும் சேர்த்து உட்கொள்ளச் செய்தால் சோகை இதயநோய் குட்டம் மூலநோய் காமாலை என்னும் நோய்கள் தீரும். இது கிருஷ்ண ஆத்ரேயரால் கூறப்பட்ட நவாயஸசூரண மாகும். 70 - 71

### 34. [3]குடநாகராதி வடகம்

வெல்லம் சுக்கு மண்டூர பற்பம் எள் இவற்றைச் சம அளவில் கொண்டு இவை அனைத்திற்கும் இரண்டு மடங்கு திப்பிலியும் சேர்த்து நன்றாக அரைத்து மாத்திரைகள் செய்து சோகை நோய்க்குப் பயன்படுத்துக. 72

### 35. மண்டூர வடகம்

சுக்கு மிளகு திப்பிலி கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் கோரைக்கிழங்கு வாயுவிளங்கம் செவ்யம் கொடிவேலி மரமஞ்சள் சுவர்ணமாக்ஷிகம் கண்டந்திப்பிலி தேவதாரு கட்டை. இவை ஒவ்வொன்றும் இரண்டு பலம் வீதம் கொண்டு தனித்தனியாக நன்றாகத் தூளாக்கிப் பிறகு இவ்வனைத்தின் அளவிற்கு

1. பாவனை செய்தல்-இரவு முழுவதும் சாற்றில் ஊறவைத்துப் பகலில் உலர்த்துதல்
2. நவ-ஒன்பது (பொருள்களுடன் சேர்ந்த) ஆயஸ்சூர்ணம் - உலோகபற்பம்.
3. குடம்-வெல்லம் நாகரம்-சுக்கு வடகம்-மாத்திரை

மடங்கு மண்டூரபற்பத்தை நன்றாகத் தூளாக்கி இந்த மருந்துகளின் தூள்கள் அனைத்திற்கும் எட்டு மடங்கு அளவுள்ள பசுவின் சிறு நீரில் (மண்டூரபற்பத்தை மட்டும்) கலந்து நன்கு பக்குவம் செய்து மாத்திரை செய்யும் அளவிற்குப் பக்குவமடைந்ததும் முன்பு செய்து வைத்துள்ள சுக்கு முதலியவற்றின் தூளைக்கலந்து பக்குவம் செய்து அத்திக்காய் அளவுள்ள மாத்திரைகளாகச் செய்க. இது மண்டூரவடகம் எனப்படும். இம்மருந்தை நோயாளியின் சடராக்னி வலிமைககேற்ற அளவு நாள்தோறும் உட்கொள்ளச் செய்துத் தனக்கு பழக்கமான உணவை பசும்மோருடன் உண்ணச் செய்க. இந்த மாத்திரை சோகை நோய் கொண்டவனுக்கு உயிரைத்தர வல்லதாகும். மற்றும் குட்டம் அசீரணம் வீக்கம் ஊருஸ்தம்பவாதம் (தொடைகள் தூண்களைப் போல் பளுவாகுதல்) கபநோய்கள் மூல நோய் காமாலை நீரிழிவு மண்ணீரல்வீக்கம் எனும் நோய்களைத் 73 - 77

## 36. சோகை நோய்க்கு தாப்யாதி[1] சூரணம்

சுவர்ணமாக்ஷிகம் சிலாசத்து வெள்ளிமாக்ஷிகம் மண்டூரம் இவை ஒவ்வொன்றும் ஐந்து பலம் கொடிவேலி கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் சுக்கு மிளகு திப்பிலி வாயுவிளங்கம் இவை ஒவ்வொன்றும் ஒரு பலம்வீதம் கொண்டு அனைத்தையும் சேர்த்து எட்டு பலம் சர்க்கரையும் கலந்து நன்றாகத் தூளாக்கி வேளைக்கு ஒரு தோலா அளவுள்ள மருந்து வீதம் தேனுடன் நாள்தோறும் உட்கொள்ளச் செய்க. மருந்து செரிமானமடைந்த பிறகு இதமான உணவை பத்தியமாகப் பயன்படுத்தச் செய்க. இம்மருந்து சோகை முதலிய நோய்களைப் போக்கும். மற்றும் கொள்ளு மணத்தக்காளி இலை புறாஇறைச்சி முதலியவற்றை விலக்க வேண்டும். 78—79

## 37. சோகைக்கு யோகராஜரஸாயனம்

கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் இவை மூன்றும் மூன்று பங்கு சுக்கு மிளகு திப்பிலி இவை மூன்றும் மூன்று பங்கு கொடிவேலி மூன்று பங்கு வாயுவிளங்கம் மூன்று பங்கு கோமூத்ரசிலாசத்து வெள்ளியின் சாரமாகிய சிலாசத்து[2] சுத்தி செய்யப்பட்ட சுவர்ண

1. தாப்யம்-சுவர்ணமாக்ஷிகம்
2. சிலாசத்து-மலைப்பாறைகளிலுள்ள தங்கம் முதலிய உலோகங்கள் வெயிலினால் உருகி பாறைகளின் மேல் வழிந்திருக்கும். அவ்வாறு உருகிய வெள்ளியின் சாரம் வெள்ளி சிலாசத்து எனப்படும்.

மாக்ஷிகம் உலோகபற்பம் இவை நான்கும் ஒவ்வொன்றும் ஐந்து பங்கு சர்க்கரை எட்டுபங்கு இவ்வாறு கொண்டு அனைத்தையும் ஒன்றாகச் சேர்த்துத் தூளாக்கித் தூள் முழுவதும் கலந்து போகுமளவிற்குத் தேன் சேர்த்து இரும்புப் பாத்திரத்தில் பாதுகாத்து வைக்க. இதில் அத்திப்பழம் அளவு நோயாளியின் சடராக்னியின் வலிவுக்கேற்றபடி பயன் படுத்தச் செய்க. நாள்தோறும் இதைப்பயன்படுத்தி மருந்து செரிமானமடைந்த பிறகு பழக்கமான பத்தியமான உணவை உண்ணச்செய்க. கொள்ளு மணத்தக்காளிக்கீரை புறாவின் இறைச்சி இவற்றை விலக்கச் செய்க. இம்மருந்து யோகராஜம் எனப்படும். அமுதுக்கொப்பானது. நோய்கள் அனைத்தையும் போக்கும. உயர்ந்த இரசாயனமாகும். இம்மருந்தைப் பயன்படுத்தினால் சோகை நஞ்சு இருமல் எலும்புருக்கி நோய் விஷக்காய்ச்சல் குட்டம் அசீரணம் நீரிழிவு தாதுக்குறைவு இழுப்பு சுவையின்மை எனும் நோய்களை அறுபோக்கும். சிறப்பாக கால்கைவலி காமாலை மூலநோய்களைத் தீர்க்கும். 80 - 86

## 38. சோகைக்கு சிலாசத்து வடகம்

கொடிப்பாலைவிதை கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் வேப்பம்பட்டை பேய்ப்புடல் கோரைக்கிழங்கு சுக்கு இவற்றைச் சம அளவில் கொண்டு இடித்து நான்கு மடங்கு நீர் சேர்த்து நான்கில் ஒரு பகுதி மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சி அதில் எட்டு பலம்[1] சிலாசத்தை பத்து நாட்களோ இருபது நாட்களோ முப்பது நாட்களோ[2] பாவனை செய்க. இவ்வாறு பதப்படுத்தப்பட்ட சிலாசத்தில் எட்டு பலம் சர்க்கரையும் மூங்கில்உப்பு திப்பிலி நெல்லி வற்றல் கர்காடகசிருங்கி இவை ஒவ்வொன்றும் ஒரு பலமும் கண்டங் கத்திரிவேரும் பழமும் ஒவ்வொரு பலமும் சேர்த்து நன்றாகத் தூளாக்குக. அத்துடன் நறுமணம் கொள்ளும் அளவிற்கு இலவங்கப் பட்டை இலவங்கப்பத்திரி ஏல அரிசி எனும் இம்மூன்றையும் தூளாக்கிக் கலந்து அதில் மூன்றுபலம் தேனையும் சேர்த்து ஒரு தோலா எடையுள்ள மாத்திரைகளாகச் செய்க வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் நோயாளியின் சடராக்னியின் வலிமைக்கு ஏற்ற வாறு உணவிற்குமுன்போ உண்ட பிறகோ உட்கொள்ளச் செய்து உடனே புளிப்பு மாதுளம் பழச்சாறு பசும்பால் பறவைகளின் புலால்

1. சிலாசத்து தோன்றும் வகை அதன் தன்மை பயன் முதலிய வற்றை முதல் அத்தியாயத்தில் ரசாயனம் மூன்றாம் பாகத்தில் காண்க.
2. பாவனை-இரவு முழுவதும் ஊறவைத்துப் பகலில் உலர்த்தும் முறை பாவனை எனப்படும்.

சாறு தூயநீர் சுரை எனும் கள் ஆஸவம் என்பனவற்றில் ஒன்றைப் பருகச் செய்க. இவ்வாறு பயன்படுத்தினால் இம்மருந்து, இதயநோய் விந்துவின் தோஷம் சிறுநீர் நோய்கள் சடராக்கினியின் தோஷம் தாதுக்குறைவு பலவகை நஞ்சு வயிற்று நோய்கள் இருமல் இரத்தப் பெரும்பாடு இரத்தபித்தம் வீக்கம் குன்மம் கழுத்து நோய் என்பன வற்றைப் போக்கும். இந்த மாத்திரை பலவகை விரணங்களையும் ;ம். இவ்வாறு நோய்களைத் தீர்த்து சுகத்தைத் தரும். 87—92

## 39. சோகைநோய்க்கு [1]புனர்னவா மண்டூரவடகம்

சாரடை சிவதை சுக்கு மிளகு திப்பிலி வாயுவிளங்கம் தேவதாருக் கட்டை கொடிவேலி கோஷ்டம் மஞ்சள் மரமஞ்சள் கடுக்காய் நெல்லிக் காய் தான்றிக்காய் நேர்வாளவேர் செவ்யம் வெட்பாலைவிதை திப்பிலி கண்டந்திப்பிலி கோரைக் கிழங்கு இவை ஒவ்வொன்றும் ஒரு பலம் வீதம் சேர்த்துத் தூளாக்கி அத்தூளின் அளவிற்கு இரண்டு மடங்கு மண்டூர சூரணம் கலந்து நூற்றிருபத்தெட்டுபலம் பசுவின் சிறுநீர் கலந்து மாத்திரைகளாகச் செய்யக்கூடிய அளவிற்குச் சுண்டக் காய்ச்சி இலந்தங்கொட்டை அளவுள்ள (அரை தோலா எடை கொண்ட) மாத்திரைகளாகச் செய்க. இம்மாத்திரையை மோரில் கலந்து நாள் தோறும் பருகச் செய்க. இம்மருந்து சோகை மண்ணீரல்வீக்கம் மூலம் விஷக்காய்ச்சல் (முறைக்காய்ச்சல்) வீக்கம் கிரகணி குட்டம் கிருமிநோய் என்பனவற்றைப்போக்கும். (முதலில் மண்டூரத்தூளைப் பசுவின் சிறுநீரில் கலந்து பக்குவ மடையும் போது ஏனைய சாரடை முதலியவற்றின் தூளைச் சேர்த்துப் பக்குவம் செய்க.) 93—96

## 40. காமாலை, சோகை நோய்களைப் போக்கும் சூரணங்கள்

மரமஞ்சள் கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் வாயுவிளங்கம் உலோகபற்பம் இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கித் தேனையும் நெய்யையும் கலந்து உட்கொள்ளச் செய்தால் காமாலை சோகை நோய்கள் தீரும். மற்றும் உலோகபற்பம் கடுக்காய்த்தோல் மஞ்சள் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கித் தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளச் செய்தாலும் கடுக்காய்த்தோலை வெல்லத்துடனும் நெய்யுடனும் கலந்து உட்கொள்ளச் செய்தாலும் காமாலை நோய் நீங்கும். 97 — 98

கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் மஞ்சள் மரமஞ்சள் கடுகரோகிணி உலோகபற்பம் இவற்றைச் சமஅளவில் சேர்த்துத்

1. புனர்னவா-சாரடை

தூளாக்கித் தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளச் செய்தால் காமாலை நோய் நீங்கும். 99

### 41. காமாலைக்கு [1]தாத்ரியவலேஹியம்

மூங்கிலுப்பு சுக்கு அதிமதுரம் இவை ஒவ்வொன்றும் இரண்டு பலம், திப்பிலி பதினாறுபலம், திராட்சை பதினாறுபலம் வீதம் கொண்டு அனைத்தையும் சேர்த்துத் தூளாக்குக. இரு நூற்றைம் பத்தாறு பலம் அளவுள்ள நெல்லிச்சாற்றில் ஐம்பதுபலம் சர்க்கரை சேர்த்துப் பாகாகக் காய்ச்சி அதில் முன் தயார் செய்த தூளைக் கலந்து லேகிய பக்குவம் செய்க. அது குளிர்ந்தபின் பதினாறு பலம்தேன் கலந்து நோயாளியின் சடராக்கினிக்குத் தககபடி ஒருதுலம் அளவு வீதம் பயன்படுத்தினால் காமாலை பித்த சோகை இருமல் ஹலீமகம் என்னும் நாள்பட்ட காமாலை என்பன தீரும். 100-101

### 42. சோகைக்கு மண்டூரவடகம்

சுக்கு மிளகு திப்பிலி கடுக்காய் நெல்லிக்காய் நான்றிக்காய் செவ்யம் கொடிவேலி தேவதாருபட்டை வாயு விளங்கம் கோரைக் கிழங்கு வெட்ப்பாலைஅரிசி இவற்றைச் சம அளவு கொண்டு நன்றாகத்தூள்செய்க. இவ்வனைத்திற்கும்சம அளவுசுத்தி (தூய்மை) செய்யப்பட்ட மண்டூரத்தூளை அதற்கு எட்டு மடங்கு பசுவின் சிறு நீரில் கலந்து இளஞ்சூட்டில் மைபோலாகும் வரை பக்குவம் செய்து கொண்டு முன் தயார் செய்த தூளைக் கலந்து மாத்திரைகளாகும் பக்குவத்திற்குக் காய்ச்சுக. அது குளிர்ந்த பிறகு ஒரு தோலா அளவு கொண்ட மாத்திரைகளாகச் செய்க. இதை நோயாளியின் சடராக்னிக்கு ஏற்றவாறு நாள்தோறும் உட்கொள்ளச் செய்தால் மண்ணீரல்வீக்கம் சோகை கிரகணி மூலநோய் முதலியன தீரும். இம்மருந்தைப் பயன்படுத்தும் போது வறுத்த அரிசியாலான சோற்றை மோருடன் உண்ணச் செய்ய வேண்டும். 102 - 104

### 43. [2]கௌடாரிஷ்டம்

மஞ்சிஷ்டி மஞ்சள் திராட்சை சிற்றாமுட்டிவேர் இரும்பு அறாவிய தூள் பாச்சோத்தி பட்டை இவற்றைச் சேர்த்துத் கஷாயம் காய்ச்சி அதில் வெல்லம் சேர்த்து முறைப்படி அரிஷ்டம் செய்க. இது கௌடாரிஷ்டம் எனப்படும். இது சோகை நோயைப் போக்க வல்லதாம். 105

---

1. தாத்ரி - நெல்லிக்காய்
2. கௌடம்-வெல்லம் சேர்த்துத் தயார் செய்யப்பட்டது.

## 44. *பீஜகாரிஷ்டம்

வேங்கைக்கட்டை பதினாறுபலம் திரிபலை இருபது பலம் திராட்சை ஐந்து பலம் கொம்பரக்கு ஏழுபலம் வீதம் கொண்டு அனைத்தையும் இருநூற்றைம்பத்தாறு பலம் நீரிலிட்டு நான்கில் ஒரு பகுதி மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சி வடிக்கட்டி நெய் ஊறிய பானையில் சேர்க்க. அத்துடன் நூறுபலம் சர்க்கரையும் பதினாறு பலம் தேனையும் கலக்க. மற்றும் மிளகு திப்பிலி நகம் (ஒரு வகை நறுமணப்பொருள்) வெட்டி வேர் பாக்கு [1]ஏலுவாலுகம் (ஒரு வகை வெள்ளரி) அதிமதுரம் இலுப்பைப்பூ கோஷ்டம் இவை ஒவ்வொன்றும் ஒரு துலம் வீதம் தூளாக்கி முன்பு செய்த திரவமருந்தில் சேர்த்து (நெய்யில் ஊறிய) பானையிலிட்டு மூடி சீலை மண் பூசி யவ தான்யக் குவியலுக்குள் கோடை காலமாயின் பத்து நாட்களும் கூதிர் காலமாயின் இருபது நாட்களும் வைத்திருக்கவும் இம்மருந்தை நோயாளியின் சடாராக்னியின் வலிமைக்கேற்ற அளவு உட்கொள்ளச் செய்க. இம்மருந்து கிரகணி சோகை மூலம் குன்மம் நீர்ச்சுருக்கு சிறுநீர்க்குழாயில் தோன்றும் கல் (அச்மரி) நீரிழிவு காமாலை ஸந்நி பாதம் எனும் நோய்களைத் தீர்க்கும். 106 - 110

## 45. காமாலைக்கு [2]தாத்ரி அரிஷ்டம்

நன்கு பழுத்த இரண்டாயிரம் நெல்லிக்கனிகளை நசுக்கி விதைகளை நீக்கிச் சாறுபிழியவும். அதற்கு எட்டில் ஒரு பங்கு தேனும் இரண்டு பலம் திப்பிலித்தூளும் ஐம்பது பலம் சர்க்கரையும் கலந்து நெய்யில் பழகியபானையில் சேர்த்து மூடி சீலைமண் பூசி முன்பு கூறியபடி தானிய குவியலுக்குள் பதினைந்து நாட்கள் வைத்து எடுக்க இது தாத்ரி அரிஷ்டம் எனப்படும். நோயாளியின் சடராக்னிக கேற்ற அளவு இதைக் காலையில் பருகச்செய்ய வேண்டும். மருந்து செரிமானமடைந்த பிறகு பத்தியமான உணவை மிதமாக உட் கொள்ளச் செய்க; மற்றும் இது காமாலை சோகை இதய நோய் வாத ரத்தம் முறைக் காய்ச்சல் இருமல் விக்கல் சுவையின்மை இழுப்பு எனும் நோய்களைப் போக்கும். 111 - 113

## 46. சோகை நோயாளிக்குக் குடிநீர்

மூவிலை ஓரிலை கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி நெருஞ்சில் எனும் இவ்வைந்தையும் சேர்த்துக் காய்ச்சிய நீரைச் சோகை நோய் கொண்டவனும் திராட்சையும் நெல்லிக்காயும் சேர்த்துக்

---

* பீஜகம் — வேங்கை

1. ஏலுவாலுகம் - மேற்பகுதியில் சிறுமுட்களைப் போன்ற ஊகை நிறைந்துள்ள வெள்ளரி

2. தாத்ரி-நெல்லிக்காய்

காய்ச்சிய நீரைக் காமாலை நோய் கொண்டவனும் குடிநீருக்கும் உணவு தயார் செய்யவும் பயன்படுத்த வேண்டும். 114

## 47. சோகை நோயில் தோஷத்திற்கேற்ப சிகிச்சை

இவ்வாறு ஆத்ரேய முனிவரால் சோகை நோய்க்கு உரிய சிகிச்சை முறைகள் விளக்கப்பட்டன. மருத்துவ நூலை நன்கு கற்ற மருத்துவன் நோயாளியின் உடலில் மிகுந்துள்ள வாத பித்த கபங்களின் நிலையை நன்கு ஆராய்ந்து அந்தந்த தோஷத்திற்கேற்ப சிகிச்சை புரிய வேண்டும். வாதத்தினால் தோன்றிய சோகை நோய்க்கு நெய்முறையையும் பித்தத்தினால் தோன்றிய சோகை நோய்க்குக் கசப்புச் சுவையும் குளுமைத்தன்மையும் சீத வீரியமும் கொண்ட மருந்துகளையும் கபத்தினால் தோன்றிய சோகை நோய்க்குக் கார்ப்புச்சுவையும் கசப்புச் சுவையும் வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்ட மருந்துகளையும் பயன்படுத்த வேண்டும். மற்றும் ஸந்நிபாதத்தினால் தோன்றிய சோகை நோய்க்கு வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட மருந்துகளைத் தக்கபடி கலந்து பயன்படுத்தவேண்டும். 115 — 116

## 48. மண்ணைத் தின்னும் பழக்கத்தால் தோன்றிய சோகை நோய்கருச் சிகிச்சை

மண்ணைத் தின்பதால் தோன்றிய சோகை நோய் கொண்டவனுக்கு முதலில் மிகவும் தீக்ஷ்ண குணமுள்ள கள்ளிப்பால் மருக்காரக்காய் முதலிய வாந்தியாகவும் பேதியாகவும் செய்யும் மருந்துகளைப் பயன்படுத்தி குடலில் சேர்ந்துள்ள மண்ணை வெளியேற்ற வேண்டும். நோயாளியின் சடராக்னி வலிமை, உடல்வலிமை முதலியவற்றை ஆராய்ந்து தக்க அளவில் இந்த மருந்துகளைப் பயன் படுத்துக. அவ்வாறு குடல் தூய்மை பெற்றபின் வலிமையையூட்டும் நெய் மருந்துகளை உட்கொள்ளச் செய்க. 117 — 118

## 49. மண் தின்பதால் தோன்றும் சோகைக்கு [1]வியோஷாதி கிருதம்

சுக்கு மிளகு திப்பிலி வில்வவேர் மஞ்சள் மரமஞ்சள் கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் வெண்மூக்கரட்டை சிவப்பு மூக்கரட்டை கோரைக்கிழங்கு இரும்புஅறாவியதூள் வட்டத்திருப்பி வாயுவிளங்கம் தேவதாருப்பட்டை தேள்கொடுக்குஇலை சிறுதேக்கு இவற்றைச் சம அளவில் கொண்டு விழுதாக அரைத்து அதற்கு நான்கு மடங்கு நெய்யும் நெய்யின் சம அளவு பசும்பாலும் (நான்கு

1. வியோஷம்-சுக்கு மிளகு திப்பிலி.

மடங்கு நீரும்) சேர்த்து முறைப்படி நெய்பக்குவம் செய்க. நோயாளி யின் சடராக்னி வலிமையும் நோயின் வலிமையும் உணர்ந்து தக்க அளவு இதை பயன்படுத்தினால் மண்ணைத் தின்பதால் தோன்றிய சோகை தீரும். 119 - 120

சிறுநாகப்பூ அதிமதுரம் திப்பிலி யவக்ஷாரம் அருகம்புல்வேர் இவற்றைச் சமஅளவு கொண்டு விழுதாக்கி முன் கூறியபடி நெய்யும் பாலும் நீரும் சேர்த்து முறையாக நெய்ப்பக்குவம் செய்து மண்ணைத் தின்பதால் தோன்றிய சோகை நோய் கொண்டவனுக்குப் பயன்படுத்துக. 121

## 50. மண்ணைத் தின்னும் பழக்கத்தைக் கைவிடச் செய்யும் வழி

மண் தின்பதால் தோன்றிய சோகை நோய் கொண்ட நோயாளி அப்பழக்கத்தைக் கைவிடும்படி செய்யவேண்டும். அவன் கைவிடாம லிருந்தால் மண்ணில் வெறுப்பு தோன்றச் செய்ய வேண்டும். மண்ணின் தோஷத்தைப்போக்கும் வாயுவிளங்கம் ஏலஅரிசி அதிவிடயம் வேப்பிலை வட்டத்திருப்பி முள்ளுக்கத்திரி கடுகரோகிணி வெட்பாலைஅரிசி பெருங்குரும்பைபட்டை முதலிய பொருள்களால் மண்ணின் இயற்கைத் தன்மை மாறும்படி [1]பாவனை செய்து அந்த மண்ணைத் தின்பதால் அவனுக்கு மண்ணில் வெறுப்புத் தோன்றும் படிச் செய்யவேண்டும். 122 - 123

## 51. மண் தின்பதால் தோன்றும் சோகைக்குச் சிறப்புச் சிகிச்சை

சோகை நோய்க்கு வாதம் முதலிய சீற்றமடைந்துள்ள தோஷங் களுக்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையே மண்ணைத் தின்பதால் தோன்றிய சோகை நோயிலும் சீற்றமடைந் துள்ள தோஷங்களின் நிலையறிந்து தக்கபடி பயன்படுத்துக. 124

## 52 தாதுக்களைச் சார்ந்த சீற்றமுற்ற கபத்தால் தோன்றிய காமாலை இலக்கணமும் சிகிச்சையும்

குடலில் கபம் சீற்றமடைந்து தாதுக்களை அடைந்து பரவும் பித்தத்தைத் தடுத்த பொழுது பித்தம் சீற்றமடைந்து காமாலை நோயைத் தோற்றுவிக்கும் அந்த நோய் கொண்டவனுக்கு மலம் பிண்ணாக்கைப் போன்ற தோற்றத்தில் வெளியாகும். அத்தகைய பித்தத்திற்குக் கபத்தைப் போக்கும் மருந்துகளைக் கொண்டு சிகிச்சை செய்யவேண்டும். 125

1. பாவனை - இரவில் சாற்றில் ஊறவைத்துப் பகலில் உலர்த்தும் முறை.

## 53. கபமும் வாதமும் சீற்றமுறுவதால் தோன்றும் காமாலை

வறட்சியும் குளுமைத் தன்மையும் குருகுணமும் கொண்ட இனிப்பான உணவுப் பொருள்களைப் பயன்படுத்துவது மிக்க உடற்பயிற்சி மலம் சிறுநீர் இவற்றின் வேகங்களைத் தடுப்பது முதலிய காரணங்களால் வாதம்சீற்றமுற்று கபத்துடன் கூடி வலிமை கொண்டு குடலிலுள்ள பித்தத்தை வெளியேற்றும். அப்பொழுது நோயாளியின் கண்களும் சிறுநீரும் உடல் மேல் தோலும் மஞ்சள் நிறம் கொள்ளும். மலம் வெண்மை நிறம் கொண்டு வெளியேறும். வயிற்றில் குடல் இரையும் - மலம் தடைப்படும். இதயம் பளுவாகத் தோன்றும். உடல் வலிமை குன்றும். சடராக்னி குறையும். விலாவலி, விக்கல் முச்சுத் திணறல், சுவையின்மை, காய்ச்சல் என்பன தோன்றும். இத்துன்பங்கள் பித்தம் ரத்தம் முதலிய தாதுக்களைச் சார்ந்து சிறிதளவே இருக்கும்போது முறையாகத் தோன்றும். 126 - 27

## 54. கபவாதங்களால் தோன்றிய காமாலைக்குச் சிகிச்சை

முன்பு கூறியபடி காமாலை தோன்றியபொழுது மயில் தித்திரிப்புள் கோழி எனும் பறவைகளின் இறைச்சிச் சாற்றில் வறட்சித்தன்மையும் புளிப்பும் கார்ப்பும் கொண்ட பொருள்களைச் சேர்த்துப் பக்குவம் செய்தோ உலர்ந்த முள்ளங்கியைச் சேர்த்துப் பக்குவம் செய்த கொள்ளின் பருப்புத் தெளிவுடனோ உணவை உண்ணச் செய்ய வேண்டும். மற்றும் துரிஞ்சிப் பழச்சாற்றில் தேனும் திப்பிலி மிளகு சுக்கு இம்மூன்றின் தூளும் கலந்து பருகச் செய்ய வேண்டும். இந்த சிகிச்சைகளால் சீற்றமடைந்த வாத கபங்கள் தணிந்து இயற்கை தன்மை கொள்ளும். குறைந்த பித்தமும் வளர்ந்து தாதுக்களை விட்டு மறுபடியும் குடலில் தன் இருக்கையை அடையும். (தன்னிடத்தை விட்டு இரத்தம் முதலிய தாதுக்களைச் சார்ந்துள்ள பித்தத்தை வளர்ப்பதால் அது தாதுக்களை விட்டு குடலில் தன்னிருப்பிடம் சேரும் என்று உணர்க.) 128 - 130

## 55. தாதுக்களைச் சார்ந்த காமாலைக்குச் சிகிச்சை

மேலும் அத்தகைய காமாலை நோய் கொண்டவனுக்கு மலம் பித்தத்தைச் சார்ந்த நிறம் கொண்டு வாதம் தணியும் வரை கார்ப்புச் சுவையும் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணத் தன்மையும் உவர்ப்பும் மிக்க புளிப்புச்சுவையும் கொண்ட மருந்துகளால் சிகிச்சை செய்ய வேண்டும். அவ்வாறு புரிவதால் வாதம் தணிந்து பித்தம் இரத்தம் முதலிய தாதுக்களை விட்டகன்று குடலில் தன்னிருக்கையைச் சேர்ந்து மலத்தை இயற்கையான நிறம் கொள்ளுமாறு செய்யும்.

அப்பொழுது குடலிரைச்சல் வயிற்று உப்புசம் இதயம் பளுவாகத் தோன்றுதல் முதலிய துன்பங்கள் அகலும். பிறகு அவனுக்குக் காமாலை நோய்க்கு உரிய சிகிச்சைகளைப் புரிய வேண்டும்.

*131 - 132*

### 56. ஹலீமக இலக்கணம்

சோகை நோய் கொண்டவனின் உடல் மஞ்சள்நிறமோ பச்சை நிறமோ கரு நிறமோ கொண்டு வலிமையிழந்து இருத்தல், செயலில் விருப்பமில்லாமை, இளைத்தல், சோம்பல், சடராக்னிக் குறைவு, குறைந்த அளவு காய்ச்சல், கலவியல் விருப்பமின்மை, உடலில் வலி, இழுப்பு, நாவறட்சி, சுவையின்மை, உடல் சுற்றுவது போலிருத்தல் முதலியன தோன்றினால் அந்த நோய் ஹலீமகம் எனப்படும்.

*133 - 134*

### 57. ஹலீமக சிகிச்சை

ஹலீமக நோயால துன்புறுபவனுக்கு சீந்தில் கொடியின் சாறும் பசும்பாலும் எருமை நெய்யும் சேர்த்துப் பக்குவம் செய்த நெய்யை குடல் எண்ணெய்ப்பசை கொள்வதற்காகப் பயன் படுத்தவேண்டும். (நெய்யும் பாலும் சம அளவாகவும் நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு சீந்தில் கொடியின் சாறும் கலந்து முறைப்படி நெய் தயார் செய்க.) இம்முறையால் குடல் மென்மையடைந்த பின் சிவதையின் தூளை நெல்லிச்சாற்றில் கலந்து பேதியாவதற்குப் பருகச் செய்ய வேண்டும். பேதியாவதால் குடல் தூய்மை பெற்ற பிறகு இனிபபுச்சுவையை மிகுதியாகச் சேர்த்துப் பித்த வாதங்களைப் போக்கும் உணவு வகைகளை உட்கொள்ளச் செய்ய வேண்டும். பிறகு [1]திராட்சாதி லேகியத்தையும் இனிப்புச்சுவை கொண்டப் பொருள்களைக் கலந்து பக்குவம் செய்யப்பட்ட நெய் முறைகளையும் பயன் படுத்த வேண்டும். மற்றும் பால் சேர்த்துச் செய்யப்பட்ட வலிமை தரும் வஸ்தி முறைகளையும் அநுவாஸனவஸ்தி முறைகளையும் அவ்வப்பொழுது முறைப்படி பயன்படுத்த வேண்டும். சடராக்னியை வளர்ப்பதற்காக திராட்சை மது அரிஷ்ட முறைகள் என்பனவற்றைத் தக்கபடி பருகச் செய்ய வேண்டும். இருமலுக்குக் கூறப்பட்ட ஹரீதகி லேகியத்தையுட்கொள்ளச் செய்து திப்பிலி அதிமதுரம் சித்தாமுட்டி இம்மூன்றின் தூளையும் பசும்பாலில் கலந்து உடல் வலிமைக்கும் தோஷங்களின் நிலைக்கும் ஏற்றவாறு பருகச் செய்ய வேண்டும்.

*135 — 138*

---

1. இந்த யாயத்தில் 100-101 சுலோக உரையைக் காண்க.
2. காஸ யாயத்தைக் காண்க.

**முடிவுரை**

ஐந்து வகை சோகை நோய்களுக்குக் காரணங்களும் இலக்கணங்களும், சிகிச்சை முறைகளும், காமாலை கும்பகாமாலை என்னும் இரண்டு வகைகளும் அந்த நோய்களில் தீர்க்கக்கூடிய, தீர்க்க இயலாதவற்றின் இலக்கணங்களும், அந்நோய்களின் நிலைகளுக்கேற்ப சிகிச்சை முறைகளும், கொடியதான ஹலீமக நோயின் இலக்கணமும், அதற்குரிய சிகிச்சை முறையும் இந்த பாண்டு ரோக சிகிச்சை எனும் அத்யாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. 139

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
திருத்தம் செய்யப்பெற்று திருடபலரால் நிறைவு
செய்யப்பட்ட சிகித்ஸாஸ்தானத்தில் பாண்டு ரோக
சிகிச்சை என்னும் பதினாறாம் அத்யாயம் முற்றும்.

# பதினேழாம் அத்தியாயம்

# *ஹிக்காசுவாஸ சிகிச்சை

இனி விக்கல் இழுப்பு என்னும் நோய்களுக்குரிய சிகிச்சை முறைகளை ஆத்ரேயமுனிவர் விளக்கியபடி கூறுவோம். 1 - 2

## 1. அக்னிவேசரின் வினா

உலகத்தின் தன்மையை நன்கு உணர்ந்த முனிவர்களில் சிறந்தவராக விளங்கிய ஆத்ரேயரை உயர்ந்த அறிவு கொண்டவரான அக்னிவேசர் கரங்குவித்து வேதங்களினுண்மைப் பொருளில் தயக்குத் தோன்றிய ஐயப்பாடு குறித்து இவ்வாறு வினவினார்.

மூவகை தோஷங்கள் சீற்றமடைதலைக் காரணங்களாகக் கொண்டவை. அந்த தோஷங்களினால் தோன்றுபவை, எளிதில் தீர்க்கக்கூடியவை, கொடியவை என இரு வகைகளாகப் பிரிந்த காய்ச்சல் முதலாகப் பல நோய்கள் விளக்கப்பட்டன. அத்தகைய நோய்களில் மிகக் கொடியதும் சிகிச்சைக்கு உட்படாததுமாம் உள்ள நோய் எது? 3 - 4

## 2. ஆசிரியரின் விளக்கம்

அக்னிவேசரின் வினாவைச் செவிமடுத்த அறிவில் மிகச் சிறந்தவரான ஆத்ரேயர் உண்மையையுணர்த்தும் உரைகளால் தன் மறுமொழியை நன்கு விளக்கி கூறினார்.

உயிரினங்களைத் துன்புறுத்தும் காய்ச்சலில் [1]சங்ககம் [2]ரோகிணி என பல வகைகள் உண்டு. ஆனால் அவை இழுப்பு விக்கல் என்பனவற்றைப் போல் கொடிய துன்பத்தை விளைவிக்காதன வாகும். மேலும் காய்ச்சல் அதிசாரம் முதலிய நோய்களால் துன்பப் பட்டுக்கொண்டிருப்பவனுக்கு இறுதிகாலத்தில் விக்கலும் இழுப்பும்

* ஹிக்கா சுவாஸ சிகிச்சை - விக்கல், இழுப்பு என்னும் நோய்களுக்குக் காரணம், இலக்கணம், சிகிச்சை இவற்றை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

1. சங்ககம் - தலைப்பொட்டுகளில் கடுமையான வலி
2. ரோகிணி - தொண்டைக்குள் வீக்கம்

மிகச்சீற்றங்கொண்டு தோன்றும். அல்லது இவற்றிலேதேனுமொன்று தவறாது தோன்றும். இவை மிகக் கொடிய துன்பம் தருவனவாம். 5 - 7

## 3. விக்கல்-இழுப்பு இவற்றின் தொடர்பு

இழுப்பு விக்கல் இவ்விரண்டும் கபமும் வாதமும் சீற்றமடைந்த உடலில் பித்தத்திற்கு இருக்கையான நாபியில் (ஆமாசயத்தில்) தோன்றும். இதயத்தையும் இரசம் இரத்தம் முதலிய தாதுக்களையும் உலரச் செய்யும். பொதுவாக இவ்விரு நோய்களும் ஒத்திருக்கும். இயற்கையாகவே மிகவும் பாடுபட்டு நீக்கக் கூடியவையாயிருக்கும். சிறிதளவு தகாத உணவு கொண்டாலோ செயல்புரிந்தாலோ கொடிய நாகத்தைப்போல் மிகவும் சீற்றமடைந்து விரைவில் அது கொன்றுவிடும். 8 - 9

## 4. விக்கல் - இழுப்பு வேற்றுமை

விக்கல் - இழுப்பு இவை இரண்டும் ஒவ்வொன்றும் ஐந்து வகைகளாகுமென்று சூத்திரஸ்தானத்தில் அஷ்டோதரீயாத்யாயத்தில் இருக்கும் நோய்களின் விளக்கத்தில் கூறப்பட்டுள்ளன. அத்தகைய நோய்கள் தோன்றும் காரணம் இலக்கணம் சிகிச்சைமுறைகள் என இவை தனித்தனியாக விளக்கப்படும். 10

## 5. விக்கல் - இழுப்பு இவைகளின் தோற்றம்

தூசியும் புகைக்காற்றும் மூக்கின் வழியே உடலுக்குள் புகுதல், குளுமையான நிலத்தில் இருத்தல், குளிர்ந்த நீரை மிகையாகக் குளிக்கவும் பருகவும் பயன்படுத்துதல், உடலுக்குத் துன்பம் தரும் வேலைகளை மிகுதியாகச் செய்தல், கலவியின்பத்தில் மிகவும் திளைத்திருத்தல், வழிநடத்தல், வறண்ட உணவு வகைகளைப் பயன்படுத்துதல், வேளையற்ற வேளையில் உண்ணல், அசீரணம் வயிற்றுப் பொருமல், உடல் வறண்டு எண்ணெய்ப்பசையிலாதிருத்தல், உடலை இளைக்கச் செய்தல் பட்டினி கிடத்தல் முதலியவற்றை மிகையாகச் செய்வதால் உடல் வலிமையின்மை, உயிர்நிலைகளில் அடிபடுதல், ஒன்றற்கொன்று எதிர்மாறான தன்மையுடைய உணவுப் பொருட்களை கலந்து பயன்படுத்துதல், வாந்திஎடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் முதலிய தூய்மைப்படுத்தும் சிகிச்சை முறைகளை மிதமிஞ்சிப் பயன்படுத்துதல் என்னும் காரணங்களினால் விக்கலும் இழுப்பும் தோன்றும். மேலும் அதிஸாரம், காய்ச்சல், வாந்தி, நாள்பட்டசளி (பீனசம்), இதயத்தில் அடிபடுதல், தாதுக்கள் குறைதல், இரத்த பித்தம், வாதம் மேல்நோக்கிச்

செல்லுதல், விஷூசி (காலரா), [1] அலஸகம், சோகை நஞ்சு என்பன வற்றால்கூட இழுப்பும் விக்கலும் தோன்றும். 11 - 13

## 6 கபம் சீற்றமடையக் காரணம்

மொச்சை உளுந்து பிண்ணாக்கு எள் எண்ணெய் இவற்றை மிதமிஞ்சிப் பயன்படுத்தினாலும், மாவினால்செய்த தின்பண்டங்கள் கிழங்கு வகைகள் மலத்தைக் கட்டுப்படுத்தும் உணவுப் பொருள்கள் எரிச்சலைத் தூண்டக்கூடியதன்மை கொண்டவை எளிதில் சரிக்காத உணவு, நீரில் தோன்றும் மீன் சதுப்பு நிலத்தில் வாழும் விலங்கு களின் இறைச்சி தயிர் பச்சைப்பால் இவற்றை மிதமிஞ்சிப்பயன் படுத்தினாலும், மூக்குத்துளை முதலிய நரம்பு வழிகளில் நீர் மிகக்கசியும் சிகிச்சைகளைச்செய்வித்துக் கொள்வதாலும் கபத்தை வளர்க்கும் பொருள்களை உண்பதாலும் கழுத்திலும் மார்பிலும் அடிபடுதலாலும் மலத்தைக் கட்டும் வேறு காரணங்களாலும் இழுப்பும் விக்கலும் தோன்றும். 14 - 16

முன் கூறிய தூசி புகை முதலிய காரணங்களால் சீற்றமடைந்த வாதம் உயிர்க்காற்றை எடுத்துச் செல்லும் நரம்புகளில் புகுந்து இதயத்தைச் சேர்ந்து முன் கூறிய கூடாத உணவு வகைகளையுட் கொள்வதால் சீற்றமடைந்த கபத்தை மேல் நோக்கிச் செலுத்தி உயிர் நீக்கவல்ல கொடிய ஐந்து வகை விக்கல்களையும் ஐந்து வகை இழுப்புகளையும் தோற்றுவிக்கும். 17

## 7. விக்கல் இழுப்புகளின் முற்குறி

தொண்டையிலும் இதயத்திலும் பளு தோன்றுதல் வாய் துவர்ப்பாக இருத்தல் வயிற்றில் குடலில் இரைச்சல் தோன்றுதல் என்பன விக்கல் தோன்ற முற்குறிகளாகும். வயிற்றுப் பொருமல் (உப்புசம்) விலாவலி இதயத்தில் வலி உயிர் காற்று எதிர்மாறாகச் செல்வது இவை இழுப்பு தோன்றுவதற்கு முற்குறி. 18 - 19

## 8. விக்கலின் தோற்றம்

முன் கூறியபடி சீற்றமடைந்தவாதம் சீற்றமடைந்தபித்தத்துடன் கூடி உயிர்காற்று நீர் உணவு இவற்றை எடுத்துச் செல்லும் நரம்பு களில் அவற்றை செல்ல விடாமல் தடுத்து விக்கலைத் தோற்று விக்கும். 20

---

1. அலஸகம் - உணவு செரிமானமாகாமல் வயிற்றில் அசை யாமல்

## 9. பெரும் விக்கலின் இலக்கணம்

பெரும் விக்கலில் தனித்தனியாக விக்கல் வகைகளின் இலக்கணங்களை கூறுகிறேன் கேள். கபத்துடன் கூடிய வாதம் உடலிலுள்ள மாமிசம் வலிமை ஊக்கம் ஒளி என்பன குறைந்து போன மனிதனின் தொண்டையில் பரவி மிகுந்த ஒலியுடன் ஒன்று இரண்டு மூன்று வேகங்களைக்கொண்ட விக்கலை இடைவிடாமல் தோன்றச்செய்யும். அப்போது உயிர்காற்று நரம்புகளையும் பொட்டு முதலிய உயிர் நிலைகளையும் உடலிலுள்ள வெப்பத்தையும் செயல்படாமல் தடுத்து உடலுக்குள் உணவு நீர் இவற்றை எடுத்துச் செல்லும் வழிகளையடைத்து நினைவிழக்கச் செய்யும். உறுப்புகளை அசையாமல் இயங்காமற்செய்யும். பொட்டு இயங்காமல் நின்றுவிட்டது போலிருக்கும். புருவங்கள் நிலைதவறிப் போனவை போலிருக்கும். நோயாளி தடைப்பட்ட பேச்சுடன் பிதற்றிக்கொண்டிருப்பான். இவ்வாறு துன்பங்கொண்டவனை சிறிது நேரமாவது சுகங்கொண்டிருக்கவிடாமல் விக்கல் துன்பப்படுத்தும். இந்த அறிகுறிகளைக் கொண்ட விக்கல் மிகவும் வன்மையும் வேகமும் மிகுந்த ஒலியும் மிகுவும் வலிமையும் கொண்டிருப்பதால் [1]மகாஹிக்கா என்னும் பொருத்தமான பெயர்கொண்டது. இது தோன்றியதும் உயிரைப் போக்கும். (21 - 26)

## 10. கம்பீர *ஹிக்காவின் இலக்கணம்

இளைத்த உடலும் நலிந்த உள்ளமும் கொண்ட மனிதன் விக்கலின் வேகத்தினால் மர்மம் பிளக்கப்படுவது போல் நோவு கொண்டு விரைத்து உடலுறுப்புகளை முடக்கிக் கொண்டு ஒரு வேளை நீட்டியும் ஒருபோது இப்படியும் அப்படியும் வளைத்தும் இருவிலாப் பக்கங்களை இழுத்து கொண்டும் கூவிக்கொண்டும் உடலியங்காமல் விரைத்தலால் வலியுடனும் விக்கிக்கொண்டிருப்பான். இந்த விக்கல் தொப்புளிலிருந்து அல்லது சீரணப்பையிலிருந்து வீறு கொண்ட ஒலியுடன் உடலை மிகவும் நடுங்கச் செய்து கொண்டு, வளைந்து விரைவாக வெளியேறும். மேலும் மூச்சுக் குழாய்களைத் தடுக்கும். அப்போது மனிதன் நினைவிழந்து மயங்கி உடல் வலிமை குன்றி உயிர் நீங்கும் நிலையடைவான். இது உடலிலுள்ள சீரணப்பை தொப்புள் என்னும் இடங்களிலிருந்து வெளியேறுவதாலும் வீறு கொண்ட ஒலியுடன் கூடியிருப்பதாலும் 'கம்பீர ஹிக்கா' என்னும் பெயர் கொண்டதாம். 27 - 30

1. மகாஹிக்கா - பெரும் விக்கல்.

* கம்பீரஹிக்கா - வீறு கொண்ட விக்கல்

### 11. [1]வியபேதஹிக்காவின் இலக்கணம்

மெல்லப்படுவது உண்ணப்படுவது உறியப்படுவது பருகப்படுவது என நான்கு வகைப்பட்ட உணவு. ஜடராக்னியின் தொடர்பினால் சீரணமாகத் துவங்கும் போது சீற்றமடைந்த வாதகபங்களினால் விக்கல் தோன்றி உணவு முழுதும் செரியாமலடைந்த போது மிகவும் வலிமை பெறும். பிதற்றல் வாந்தி அதிஸாரம் நாவறட்சி என்னும் துன்பங்களால் நோவுற்ற நோயாளி நினைவு தப்பி உடல் மறந்திருப்பான். உடலை முறித்துக் கொண்டு கொட்டாவி விடுவான். கண்களில் நீர் பெருகும். வாய் உலர்ந்து போகும். விக்கல் தோன்றும் போது உடல் பல கோணங்களில் வளையும். வயிறு உப்புசமடையும். இந்த விக்கல் தொண்டையடியில் தோன்றி, தொடர்ச்சியாக அல்லாமல் விட்டுவிட்டு வெளிவரும். உணவு செரியாமையாகும் போது தோன்றுவதாகையால் வியபேதா எனப்படும். இதுவும் மிகக்கொடியதாகி உயிரை வதைக்கும்.
31 - 33

### 12. *க்ஷுத்ரஹிக்காவின் இலக்கணம்

உடலுக்குச் சோர்வு தரும் வேலைகளில் ஈடுபடுவதால் வாதம் சிறிதளவு தாக்கப்பட்டு குடலிலிருந்து நெஞ்சையடைந்து சிறிதளவுள்ள விக்கலைத் தோற்றுவிக்கும். இது பெரும் விக்கலைப் போல் மார்பு, தலை போன்ற உயிர் நிலைகளைத் துன்புறுத்தாது. துன்பம் விளைவிக்காது. மூச்சுக்குழாய், உணவு செல்லும் வழி இவற்றைத் தடுக்காது. உடலுக்குச் சோர்வு தோன்றும் போது வலிவு பெறும். உணவு உட்கொண்டதும் சிறிதளவு தணியும். இது உடற்பயிற்சி மிகுதியாகச் செய்வதால் தோன்றும். வேறுவகை உடற்பயிற்சியால் தணியும். இது இதயம் நெஞ்சு தொண்டை கன்னம் முதலிய இடங்களைச் சேர்ந்து மிகுதியான விரைவுகாட்டாமல் சிறிதளவே துன்பம் தோற்றுவிக்கும். எனவே க்ஷுத்ரஹிக்கா எனப்படும். இது சிகிச்சை முறைகளால் எளிதில் தீர்க்கக் கூடியது.
34 - 37

### 13. [2]அன்னஜஹிக்காவின் இலக்கணம்

உணவு நீர் வகைகளை முறையின்றி விரைவாக உண்பதாலும், தேவையான அளவுக்கு மிஞ்சியுண்பதாலும், வாதம் சீற்றமடைந்து

---

1. வியபேதம் - உணவு செரிமானமாகும் போது தோன்றுவது. இதுவே வாக்படரால் 'யமளா' என்று கூறப்படுகிறது.
* க்ஷுத்ரஹிக்கா - குறைந்த வலிமையுள்ள விக்கல்
2. அன்னஜம் - உண்ட உணவினால் தோன்றுவது

உண்ட உணவு அடர்த்தியாக இருந்து தடுக்கப்பட்டு குடலிலிருந்து மேல் நோக்கிப்பரவும். மிகுந்த வெறியூட்டும் கள் பருகினாலும், மிகவும் சினங்கொண்டாலும், மிகுதியாக உரையாடுதல், வெகுதூரம் நடந்து போதல், மிகுதியாக நகைத்தல், மிகுந்த பளு சுமத்தல், புரளுதல் ஆகிய இவற்றை உண்டதும் செய்தாலும் பருகியநீர் உண்ட உணவுகளால் குடலிலுள்ள வாதம் துன்புறுத்தப்பட்டு மேல் நோக்கிப் பரவும். அந்த வாதம் மார்பிலுள்ள உறுப்புகளில் சேர்ந்து விக்கலைத் தோற்றுவிக்கும், நோயாளி மெள்ள தும்மலுடன் விக்கிக் கொண்டிருப்பான். இது நீண்ட நேரம் தொடர்ந்திருக்காது. உயிர் நிலைகளுக்கும் புலன்களுக்கும் துன்பம் விளைவிக்காது. அப்பொழுது நீரைப் பருகுவதாலும் உணவை உட்கொள்வதாலும் விக்கல் தணியும். உணவு வயிற்றில் சேர்ந்து தோன்றுவதாகையால் இதற்கு 'அன்னஜஹிக்கா' என்று பெயராயிற்று. 38 - 41

## 14. சிகிச்சையால் தீர்க்கக்கூடியதும் இயலாததுமான விக்கல் வகை

தோஷங்கள் மிகவும் சீற்றமடைதல் உணவில் விருப்பமின்மை முதலிய காரணங்களால் உணவு கொள்ளாமல் இளைத்தல், காய்ச்சல் முதலிய நோய்களால் இளைத்தல் வயது முதிர்ச்சி மிதமிஞ்சிக் கலவியின்பத்தில் திளைத்தல் முதலிய காரணங்களால் முன் கூறிய ஐந்து விக்கல் வகைகள் எல்லாமே விரைவாக உயிரைக்கொல்லும். 42

எளிதில் சிகிச்சையால் தீர்க்கவல்ல க்ஷுத்ர - அன்னஜ விக்கல் வகைகள் இரண்டிரண்டாக விரைவாக வெளியேறுவதால் [1]யமிகா எனப்படும் இவற்றில் விக்கல், பிதற்றல் நாவறட்சி நினைவிழத்தல் தோன்றினால் இவையும் சிகிச்சையால் தீர்க்க இயலாதனவாகும். அவையிரண்டும் இரண்டிரண்டாக விரைவுடன் தோன்றி உடல் இளைக்காமல் நலிவு தோன்றாமல் தாதுக்களும் புலன்களும் நிலை கொண்டிருக்கும். அவையும் எளிதில் சிகிச்சையால் தீர்க்கக் கூடியன வாகும். மாறாகத்தோன்றும் உடல் இளைத்தல் முதலிய கோளாறுகள் விக்கல் நோயாளியைக் கொல்லும். 43 - 44

## 15. இழுப்பு தோன்றுதல்

சீற்றமடைந்த வாதம் கபத்துடன் கூடி உயிர்காற்றையும் பருகும் நீரையும் கொண்டு செல்லும் நரம்பு வழிகளைத் தடுப்பதால் கபம் உடலில் குறுக்கும் நெடுக்குமாக பலவகையாகப் பரவும் போது இழுப்பு தோன்றும். அது ஐந்து வகைப்படும். 45

---

1. யமிகா - ட்டை

## 16. மகாசுவாசத்தின் இலக்கணம்

உயிர்காற்று கபத்தினால் தடுக்கப்பட்டு மேலெழும்பப் மிகவும் துன்பம் விளைவித்துக் கொண்டு ஒலியுடன் மிகவும் நீண்ட மூச்சாக வெளியேறும். தன்மனம் போல் திரிந்த பிறகு தடுத்து நிறுத்தப்பட்டு பெருமூச்சு விடும் காளையைப்போல் நோயாளி மூச்சுவிடுவான். இந்த மூச்சு தோன்றும்போது பொதுவாக மனிதனுக்குப் பொருளைப் பற்றிய நினைவோ சாஸ்திர அறிவோ அடியோடு இல்லாமற்போகும். கண்கள் விகாரமடைந்து பலவாறு அசைந்து கொண்டிருக்கும். கண்களும் முகமும் பார்க்க விகாரமாக இருக்கும். சிறுநீரும் மலமும் தடைபடும். பேச்சு தடுமாறும். அந்த நிலையில் நோயாளி மிகவும் நலிந்திருப்பான். விடும் மூச்சு ஒலியுடன் வெகு தொலைவு வரை கேட்கும். இந்த அறிகுறிகளுடன் கூடியது 'மகா சுவாஸம்' எனப்படும். இந்நோய் கொண்டவன் விரைவில் உயிர் துறப்பான். 46 - 48

## 17. [1]ஊர்த்வசுவாசத்தின் இலக்கணம்

இந்த நோய் கொண்டவனின் மூக்குத் துளைகளும் நரம்பு வழிகளும் கபத்தினால் தடுக்கப்படுகின்றன. சீற்றமடைந்த வாதத்தினால் இவன் துன்பமடைந்து வெகு கஷ்டத்துடன் நீண்டமேல் மூச்சை வெளியேவிட்டு இழுக்க இயலாமல் திணறுவான். இவனுடைய இந்நிலை ஊர்த்வசுவாஸமெனப்படும். இவ்வாறு மூச்சு வெளியேறும் போது இமைக்காமல் கண்விழிகள் மேல்நோக்கிப் பலவாறு சுற்றிக்கொண்டிருக்கும். நோயாளி விகாரமாகக் கண்களை சுற்றிலும் திருப்பி விகாரமானபார்வை கொண்டிருப்பான். பொறுக்க முடியாத வேதனையுடன் முகம் வெளுத்து வாய் உலர்ந்து எந்த வேலையிலும் விருப்பமின்றி மெய் மறந்து நினைவிழந்திருப்பான். மேல் நோக்கிச் சென்ற மூச்சு மறுபடி கீழ்நோக்கி பரவுவது மிகவும் கஷ்டமாகும். எனவே நோயாளி மூச்சுவிடாமல் கண்மண் தெரியாமல் நினைவிழந்து கிடப்பான். இந்நோய் விரைவில் நோயாளியைக் கொன்று விடும். (ஏனைய இழுப்புகளில் மூச்சு மேல்நோக்கிச் சென்று மறுபடியும் கீழ் நோக்கிப் பரவி சுவாசகோசத்தையடையும். ஆனால் இந்த வகை இழுப்பு மூச்சை மறுபடியும் வரவிடாமல் அடிக்கடி மேல் நோக்கி வெளியேற்றிக் கொண்டிருக்கும்.) எனவே இது ஊர்த்வ சுவாஸம் எனப்படும். 49 - 51

---

1. ஊர்த்வசுவாசம் - மேல்மூச்சு

## 18. [1]சின்னசுவாஸத்தின் இலக்கணம்

இந்நோய் கொண்டவன் பிராணன் முதலிய ஐந்து வகைக்காற்றுகளாலும் துன்புற்று மூச்சுவிட்டுக் கொண்டிருப்பான். மூச்சு வெளியேறாமல் உயிர் நிலைகளில் துண்டிப்பது போல் வலியும் வயிற்று வீக்கமும் வியர்வையும் நினைவிழத்தலும் சிறுநீர்ப்பையில் நெருப்பால் சுடுவது போல் எரிச்சலும் கண்களில் நீர் பெருகுதலும் உடல் இளைத்தலும் தோன்றும். இந்த துன்பங்களுடன் நோயாளி பாடுபட்டு மூச்சுவிடுவான். ஒரு கண் மட்டும் சிவந்திருக்கும். அறிவு அழிந்து போகும். வாயில் ஈரம் உலரும். உடல் நிறம் மாறும். பொருத்தமில்லாமல் ஏதேதோ உளறிக் கொண்டிருப்பான். இந்த அறிகுறிகள் உடையது சின்னசுவாஸம் எனப்படும். இதனால் மூட்டுகள் எல்லாம் விரைவில் சிதைந்து நோயாளி உயிர் துறப்பான். (முன் கூறிய மூன்று வகை இழுப்புகளும் இயற்கையிலேயே சிகிச்சைக்கு உட்படாதவைகளாகும். 52 - 54

## 19. தமகசுவாஸத்தின் இலக்கணம்

சீற்றமடைந்த வாதத்தைக் கொண்டு செல்லும் நரம்புகளில் வாதம் இயற்கைக்கு மாறாகப் பரவி தலையிலும் தொண்டையிலும் சேர்ந்து கபத்தைத் தூண்டிவிடும். தூண்டப்பட்ட அந்தக் கபத்தினால் சளி பிடிக்கும். கபத்தினால் மூக்குத்துளைகளும் தொண்டையிலுள்ள நரம்புகளும் தடுக்கப்பட்டு வாதம் தங்கி 'குர்குர்' என்னும் ஒலியுடன் மிகவும் விரைவுள்ள மூச்சை வெளியேற்றும். இந்த மூச்சு வெளியேறும் போது மூச்சுத்திணறி மிகவும் துன்பம் உண்டாகும். நினைவு தவறும். மிக்க விரைவுடன் இருமல் தோன்றும். கபத்தினால் மூச்சுக்குழாய் தடுக்கப்படும். அடிக்கடி இருமும் போது கபம் வாயிலிருந்து வெளியேறாவிடில் மூச்சுவிட முடியாமல் மிகவும் துன்பம் உண்டாகும். கபம் வெளியேறினால் சிறிது நேரம் துன்பம் குறைந்து சுகம் உண்டாகும். அத்தகைய இழுப்பின் வேகத்தினால் தொண்டையில் அரிப்பும் கரகரப்பும் தோன்றி நோயாளி மிகவும் சிரமத்துடன் பேசுவான். படுக்கையில் சுகமாகப் படுத்தாலும் இழுப்பின் தொந்தரவினால் நொடி நேரமும் தூங்கமுடியாமல் துன்பமடைவான். படுத்த போது வாதத்தின் வேகத்தால் விலாக்கள் மேலுக்கிழுக்கப்படுவது போலிருக்கும். உட்கார்ந்திருந்தால் சிறிது சுகமாக இருக்கும். நோயாளிஎப்பொழுதும் சூடான பொருள்களை விரும்புவான். கண்கள் மேல் நோக்கிச் செல்லும். நெற்றியில் வியர்வை தோன்றும். மிகுந்த துன்பத்துடன் இழுப்பின் வேகத்தால் வாயில் நீர் இன்றி உலர்ந்து அடிக்கடி காற்றை

1. சின்னசுவாஸம் - விட்டு விட்டு வரும் மேல் மூச்சு

இழுத்து நிரப்பிக் கொண்டு 'புஸ்புஸ்' என்று மூச்சு விடுவான். இந்நோய் வானத்தில் முகில் படர்ந்தபோதும் மழை பெய்யும் போதும் குளிர்காலத்திலும் எதிர் காற்று வீசும் போதும் கபத்தை வளர்க்கும் பொருள்களைப் பயன்படுத்தியபோதும் மிகவும் வளர்ந்து சீற்றம் கொள்ளும். இத்தகைய அறிகுறிகளுடன் கூடியது 'தமகசுவாஸம்' எனப்படும். இத்தகைய தமகசுவாஸத்திற்கு [1]யாப்யம் என்று பெயர். ஒரு வேளை இந்நோய் தோன்றியதும் தகுந்த சிகிச்சை செய்தால் எளிதில் தீர்க்கக் கூடியதாகும். 55 - 62

## 20. பிரதமக-ஸந்தமக சுவாஸத்தின் இலக்கணம்

முன் கூறிய தமகசுவாஸத்தில் ஜ்வரமும் நினைவிழத்தலும் தோன்றுமாயின் அது பிரதமகசுவாஸம் எனப்படும். இந்த நோய் வாதம் முதலியவை மேல்நோக்கிப் பரவுதல் தூசி முதலானவை மூக்குத்துளைகளில் புகுதல் செரிமான மின்மை உடல் நலிந்திருத்தல் மலம் சிறுநீர் இவற்றைத் தடுத்தல் எனும் இவற்றால் தோன்றும். இந்த பிரதமக சுவாஸமே இருட்டால் மிகுதியாகியும் குளிர்ச்சியான பனிவிடைகளால் தணிந்தும் இருட்டில் மூழ்கி இருப்பது போல் கண்கள் இருண்டுமிருந்தால் ஸந்தமக சுவாஸம் எனப்படும். 63 - 64

## 21. க்ஷுத்ரசுவாஸத்தின் இலக்கணம்

எண்ணெய்ப்பசையின்றி வறண்ட பொருள்களை உண்பதாலும் உடலுக்கு மிகவும் களைப்பைத் தரும் வேலைகளைச் செய்வதாலும் குடலிலுள்ள வாதம் சிறிது சீற்றமடைந்து மேல் நோக்கிப் பரவி க்ஷுத்ரசுவாஸத்தைத் தோற்றுவிக்கும். இது உடலுக்கு மிகுந்த துன்பத்தைத் தராது. உறுப்புகளைக் கஷ்டப்படுத்தாது. ஏனைய இழுப்புகளைப் போலல்லாது எளிதில்சிகிச்சைக்கு உட்படக்கூடியது. உணவு நீர் செல்லும் வழிகளைத்தடுக்காது. புலன்களுக்கு எத்தகைய நோவையும்தோற்றுவிக்காது. இது சிறுசிறு காரணங்களால்தோன்றி உடலைத்துன்புறுத்தாமல் எளிதில் சிகிச்சைகளால் தீர்க்கக் கூடியதாகையால் க்ஷுத்ரசுவாஸம் எனப்படும். (மகா சுவாஸ ஊர்த்வ சுவாஸ சின்னசுவாஸங்கள் மூன்றும் யாப்யமாகிய தமகசுவாஸமும் மிகவும் உடல் வலிமை கொண்டவனுக்கு நோய்க்குரிய அறிகுறிகளனைத்துமின்றி ஒரு சில அறிகுறிகளுடன் மட்டும் தோன்றுமாயின் அவையும் சிகிச்சை முறைகளால் எளிதில் தீர்க்கக் கூடியனவேயாகும்) 65 - 67

---

1. யாப்யம் - மருந்து கொடுத்தும் நோயை குணப்படுத்த முடியாத நிலையில் நோயாளி ஏற்கத்தக்க உணவுகளைக் கொடுத்து உடலில் உயிருள்ள வரை காலங்கடத்துவது.

**22. விக்கலுக்கும் இழுப்புக்கும் சிகிச்சை முறைகள்**

இவ்வாறு விக்கல்களில் ஐந்து வகைகளும் இழுப்பு ஐந்து வகைகளும் அவற்றிற்குரிய இலக்கணங்களும் விளக்கப்பட்டன. இவற்றில் மகாசுவாஸம் ஊர்த்வசுவாஸம் சின்னசுவாஸம் என இம்மூன்றும் சிகிச்சை செய்யாமல் கைவிடத்தக்கவை. இவை மிகவும் கொடியனவாகி மிக விரைவாக உயிரைப்போக்கும். எனவே சிகிச்சையின்றி விடத்தக்கன. மிகவும் எளிதில் சிகிச்சைக்கு உட்படக்கூடியதும், ஆயுள் உள்ளவரை சிகிச்சை செய்வதால் சற்று தணிபவையுமான தமகசுவாஸ - க்ஷுத்ரசுவாஸம் என்னுமவற்றை உரிய காலத்திலேயே சிகிச்சை செய்யாமல் விட்டால் சிறிய நெருப்பைக் கவனியாமல் விட்டால் உலர்ந்த விறகை விரைவில் எரித்து விடுவது போல அவை உடலை எரிக்கும். எனவே அவற்றிற்கு தோன்றிய உடனே தகுந்த முறையில் சிசிச்சை செய்ய வேண்டும். 68 - 69

**23. விக்கல் - இழுப்பு - இவற்றிற்குச் சிகிச்சை முறை**

விக்கல் இழுப்பு இவ்விரண்டிற்கும் புறக்காரணங்களாகிய உணவு முதலியனவும் உட்காரணங்களாகிய தொப்புள் முதலிய தோன்றுமிடங்களும், தோஷங்களும் ஒன்றாகவே இருப்பதனால் இந்த இரு நோய்களுக்கும் சிகிச்சை முறையும் ஒன்றாகவே இருக்குமென்று முனிவர்கள் முடிவு செய்தனர். அத்தகைய ஒரே சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. 70

விக்கல் இழுப்பு இவற்றிலொன்றால் துன்புறுபவனுக்கு முதலில் இந்துப்புடன் கூடிய எண்ணெயை உடல் முழுதும் பூசி வியர்வை சிகிச்சை செய்ய வேண்டும். எண்ணெய்ப்பசை கொண்டவனை வியர்க்கச் செய்யும் பொருள்களால் [1]நாடீஸ்வேதமோ [2]பிரஸ்தரஸ்வேதமோ [3]ஸங்கரஸ்வேதமோ கையாண்டு நன்றாக உடல் வியர்க்கும் படிச் செய்ய வேண்டும். 71

**24. உடல் வியர்க்கச் செய்வதன் பயன்**

மலைமேலுள்ள புதர்களில் கெட்டியாக இறுகியிருக்கும் பனி சூரியனின் கிரணங்கள்பட்டதும் கரைந்து விடுவது போல் வியர்க்கச் செய்யும் சிகிச்சை முறைகளால் ரஸம் முதலியவற்றை உடலில் பரவச் செய்யும் துவாரங்களில் கெட்டியாக இறுகிய கபம் கரையும். அதனால் மூக்குத்துளை முதலிய நரம்புவழிகள் மென்மையடையும். வாதம் சீராகப் பரவும். 72-73

**25. உடல் வியர்க்கச் செய்ததும் உணவு முறை**

உடல் வியர்க்கச் செய்யும் முறைகளால் நன்றாக உடல் வியர்த்ததைக் கவனித்து நெய் முதலியவற்றுடன் எண்ணெய்ப்பசை

---

1, 2, 3.—இந்த ஸ்வேத முறைகளை சூத்திரஸ்தானத்தில் ஸ்வேதாத்யாயத்தில் காண்க.

கொண்ட உணவை விரைவில் மீன் பன்றி முதலியவற்றின் மாமிச ரசத்துடனோ தயிர் மேலுள்ள தெளிவுடனோ உண்ணக் கொடுக்க வேண்டும். 74

## 26. விக்கல் இழுப்புக்கு வாந்தி எடுக்கச் செய்தல்

முன்கூறிய உடல் வியர்க்கச் செய்யும் சிகிச்சையால் கபம் கரைந்து எண்ணெய்ப் பசையுடன் கூடிய உணவை உட்கொள்வதால் அது வளர்ந்தபோது திப்பிலி இந்துப்பு தேன் என்னுமிவற்றுடன் வாதத்திற்குப் பகையாகாதவாறு வாந்தி எடுக்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தி வாந்தியாகும் படிச் செய்ய வேண்டும். 75

## 27. வாந்தி எடுப்பதால் நன்மை

மிகவும் துன்பத்தைத்தரும் கபம் வாந்தி எடுத்து வெளியேறிய பிறகு விக்கல் இழுப்பு கொண்ட நோயாளிக்கு சிறிது சுகமாக இருக்கும். கேடுற்ற கபம் இல்லாமையால் துவாரங்கள் (நரம்புவழிகள்) தடையின்றி இருப்பதால் வாதம் சீராகப் பரவும். 76

## 28. விக்கல் இழுப்பு இவைகளுக்குப் புகைப்பிடித்தல்

வாந்தி எடுத்தும் தோஷம் முழுதும் வெளியேறாமல் சிறிது நரம்பு வழிகளில் தங்கியிருக்குமாயின் இனி கூறப்போகும் முறைகளால் புகைபிடிக்கச்செய்து தோஷங்களை வெளியேற்ற வேண்டும்.

மஞ்சள் இலவங்கப்பத்திரி ஆமணக்குவேர் கொம்பரக்கு மனோசிலை தேவதாருகட்டை அரிதாரம் சடாமாம்சி இவற்றைச் சம அளவில் சேர்த்து நன்றாக அரைத்து வெள்ளைத் துணியில் தடவி உலர்த்தி வர்த்தி போல் செய்து அதை நெய்யில் நனைத்து அதன் நுனியில் நெருப்பு பற்றவைத்து விக்கல் இழுப்புள்ள நோயாளியைப் புகை பிடிக்கச் செய்ய வேண்டும். தேன்மெழுகு குங்கிலியம் நெய் இவற்றை ஒன்றாகக் கலந்து மண் அகலிலிட்டு வேறு அகலால் மூடி இடைவெளியில்லாமல் நன்றாக இறுகச் செய்து மேல் அகலில் சிறு துளைசெய்து அதில் மாட்டின் கொம்பு மயிர்,கற்றை பெருவாகை ஆமணக்குக்கட்டை, உலர்ந்த நாணல் கட்டை முதலியவற்றில் ஒன்றை குழாய் போல் அமைத்து அந்த அகலுக்குள் நெருப்பு பற்றவைத்துக் குழாய்வழியாகப் புகைபிடிக்கச்செய்யவேண்டும். பதிமுகம் குங்கிலியம் அகிற்கட்டை ஆனைவணங்கி (சாம்பிராணி வகை) இவற்றின் தூளை நெய்யில் ஊறவைத்து முன் போல் அகலுக்குள் வைத்துக் குழாய் வழியே புகைபிடிக்கச் செய்ய வேண்டும். 77 - 80

## 29. *ஸ்வரக்ஷீணம் முதலியவற்றால் தோன்றும் விக்கல் இழுப்புகளுக்குச் சிகிச்சை

குரல் நலிவு கழிச்சல் இரத்தபித்தம் எரிச்சல் இவற்றிற்குத் துணையாகத் தோன்றிய விக்கல் இழுப்புகளில் இனிமையும் குளுமையும் எண்ணெய்ப்பசையும் கொண்ட மருந்துகளைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். 81

## 30. உடல் வியர்க்கச் செய்யும் முறைக்குத் தகாதவர்கள்

பித்தம் எரிச்சல் இவற்றால் துன்பங்கொணடவன் இரத்தமும் வியர்வையும் மிகுதியாக வெளியேறிக் கொண்டிருப்பவன் உடலில் ரசம் முதலிய தாதுக்களும் உடல் வலிமையும் குறைந்துள்ளவன் எண்ணெய்பசையின்றி உடல் வறண்டிருப்பவன் கருவுற்ற பெண் இயற்கையாகப் பித்தம் மிகுந்துள்ள உடல் கொண்டவன் இவர்கள் உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தத் தகாதவர்கள். அத்தகையவர்களுக்கு விக்கல் இழுப்பு தோன்றுமாயின் சர்க்கரையுடன் கூடி இளஞ்சூடுள்ள எண்ணெயைத்தடவி எண்ணெய் சேர்த்துக் கிளறியமாவுகொண்டோ உபநாகம் என்னும் முறைப்படியோ மார்பிலும் தொண்டையிலும் நொடி நேரம் ஒத்தடம் கொடுத்து வியர்க்கச் செய்ய வேண்டும். 82-83

## 31. உத்காரிக முறை

எள் ஆளிவிதை உளுந்து கோதுமை இவற்றில் ஒன்றைத் தூளாக்கி அதில் வாதத்தைப் போக்கும் பொருள்களைச் சேர்த்து எண்ணெய் புளிப்புச்சுவையுள்ள நீர்பொருள்கள் பால் இவற்றைக் கலந்து அடையைப்போல் காய்ச்சி இளஞ்சூடுள்ளபோது உடல் மேல் வைத்துக் கட்டுவது உத்காரிகா என்னும் உடல் வியர்க்கச் செய்யும் முறையாகும். 84

## 32. [2]ரூக்ஷஸ்வேத முறை

புதிதாகத் தோன்றிய காய்ச்சல் [3]ஆமதோஷம் இவற்றில் ரூக்ஷஸ்வேதமுறையைப் பயன்படுத்துக அல்லது பட்டினி கிடக்கச் செய்க

* ஸ்வரக்ஷீணம் - குரல் நலிவு

1. உபநாஹம் - ஒத்தடமுறை. (உபநாஹஸ்வேத முறையை சூத்திரஸ்தானத்தில் ஸ்வேதாத்யாயத்தில் காண்க.)
2. ரூக்ஷஸ்வேதம் - எண்ணெய்பசையற்று சூடுள்ள பொருள்களால் ஒத்தடம் கொடுத்தல்.
3. ஆமதோஷம் - 'சரகஸம்ஹிதை' தமிழாக்கம் முதற் பகுதியில் 479ம் பக்கம் காண்க.

அல்லது தோஷங்களைக் கவனித்து உப்பு கலந்த நீரைப்பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்க. 85

## 33. வாதம் தணியச் செய்யும் முறை

வாந்தி எடுக்கச் செய்தல் முதலியவற்றை மிதமிஞ்சிப் பயன்படுத்துவதால் வாதம் மிகுதி அடையும். அப்பொழுது வாதத்தைத் தணியச் செய்யும் மாமிச இரசம் முதலியவற்றாலும் சம அளவிலுள்ள குளுமை சூட்டுடன் கூடிய எண்ணெய்க் குளியல் முதலிய வற்றாலும் அந்த வாதத்தைத் தணியச் செய்க. 86

## 34. மேல்நோக்கிப் பரவும் வாதத்திற்குச் சிகிச்சை

மேல் நோக்கிச் செல்லும் வாதத்திலும் வயிற்று உப்புசத்திலும் துறிஞ்சிச் சாறு புளிவஞ்சி பெருங்காயம் உகாப்பழச்சாறு பிடால வணம் இவற்றுடன் கூடிய உணவையுண்ணச் செய்தால் வாதம் கீழ் நோக்கிப்பரவும். 87

## 35. விக்கல் இழுப்புகளில் நான்கு நிலைகள்

உடல் வலிமையுள்ளவன், வலிமைகுன்றியவன், இயற்கையாகக் கபம் மிகுதியாகக் கொண்டவன், வாதம் மிகுந்து வறண்ட உடல் கொண்டவன் என விக்கல் இழுப்பு கொண்ட நோயாளிகள் நான்கு வகை நிலையைக் கொண்டிருப்பர். 88

## 36. உடல் வலிமை கொண்டவனுக்குச் சிகிச்சை

விக்கல் இழுப்பு நோய்களில் கபம் மிகுந்துள்ளபோதும் நோயாளி வலிமை கொண்டிருந்தாலும் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் என்னும் முறைகளைப் பயன்படுத்தி பத்தியமான உணவைக் கொடுத்துப் பிறகு புகை பிடிக்கச் செய்த லேகியம் முதலியவற்றைப் பயன்படுத்தி நோயைத் தணிக்க வேண்டும். 89

## 37. வலிமையற்ற போது சிகிச்சை முறை

வாதம் மிகுந்துள்ள வலிமை குன்றிய நோயாளிகளுக்கும் சிறுவர்களுக்கும் முதியோர்களுக்கும் வாதத்தைப் போக்குவதும் தணியச் செய்வதுமாகிய எண்ணெய் முறைகளை யூஷம் மாமிசரசம் முதலியவற்றில் கலந்து பருகச் செய்து வலிமையூட்ட வேண்டும். 90

## 38. *சோதனை முறைகளைக் கூடாதவர்களுக்குப் பயன்படுத்துவதால் வரும் தீங்கு.

உருகாமல் கபம் கெட்டியாக இருக்கும் போதும் உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்தாத போதும் நோயாளி வலிமை குறைந்துள்ள போதும் வாந்தி எடுக்கச் செய்தல் முதலிய தூய்மைப் படுத்தும் முறைகளைக் கையாண்டால் வாதம் சீற்றமடைந்து இதயம் முதலிய உயிர் நிலைகளிலுள்ள எண்ணெய்ப் பகுதியை உலரச் செய்து விரைவில் உயிரைப் போக்கும். (எனவே அத்தகையவர்களுக்குச் சோதனை முறைகளைப் பயன்படுத்தக்கூடாது). 91

## 39. வலிமை கொண்டவனுக்கும் வலிமையற்றவனுக்கும் சிகிச்சை

முதலில் சதுப்பு நிலத்தில் வாழ்கின்ற விலங்குகள் நீர்வாழ் உயிரினங்கள் ஆகியவற்றின் மாமிசத்தினாலான ரஸத்தை கபம் மிகுந்துள்ள உடல் திடமுள்ள நோயாளிகளை நிறைவாக உண்ணச் செய்து உடல் வியர்க்கச் செய்யும் முறைகளால் வியர்வை தோன்றச் செய்து பிறகு வாந்தி எடுக்கச் செய்து தூய்மைப்படுத்தும் முறைகளால் தோஷத்தை வெளியேற்ற வேண்டும். உடல் வலிமை குன்றியுள்ள வாதம் மிகுதியாகக் கொண்ட நோயாளிக்கு உடல் வலிமையை வளர்க்கும் சிகிச்சைகளைப் பயன்படுத்த வேண்டும். அதற்கு மயில் தித்திரிப்புள் கோழி வறண்டநிலப் பகுதியில் வாழும் விலங்கு பறவை இவற்றின் இறைச்சியை **தசமூலகஷாயத்திலோ, கொள்ளின் கஷாயத்திலோ பக்குவம் செய்துப் பயன்படுத்துதல் நலம். 92-93

## 40. [1]குளுத்தயூஷம்

கண்டங்கத்திரிவேர் வில்வப்பழக்கோது கர்கடகசிருங்கி காஞ்சொரிவேர் நெருஞ்சில் சீந்தில்கொடி கொள்ளின் பருப்பு கொடிவேலி இவற்றைக் கஞ்சியாகக் காய்ச்சி வடிக்கட்டி திப்பிலி சேர்த்துப்பக்குவம் செய்யப்பட்ட நெய்யினால் தாளித்துச் சுக்கும் உப்பும் தகுந்த அளவு கலந்து விக்கல் இழுப்புமுள்ள நோயாளிக்கு உணவுடன் பயன்படுத்துக. 94-95

---

*சோதனை முறை - உடலைத் தூய்மைபடுத்துவதற்கான வாந்தி எடுக்கச் செய்தல் முதலிய முறைகள்.

** தசமூலம் - ஓரிலை மூவிலை காட்டுப்பயறு காட்டு உளுந்து நெருஞ்சில் வில்வம் முன்னை பெருவாகை பாதிரி குமிழ் இவற்றின் வேர்கள். தசமூலமெனப்படும்.

1. குளுத்தயூஷம் - கொள்ளினால் தயார் செய்யப்பட்ட ஒரு வகைக் கஞ்சி.

**41. [1]முத்கயூஷம்**

சிற்றரத்தை சிற்றாமுட்டி மூவிலை ஓரிலை கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி நெருஞ்சில் பயத்தம்பருப்பு கொடிவேலி இவற்றை நீர் சேர்த்துக் கொதிக்க வைத்து யூஷமாகக் காய்ச்சி அதில் திப்பிலி சேர்த்துப் பக்குவம் செய்த நெய்யைத் தாளித்து சுக்குப்பொடி இந்துப்பு சேர்த்துப் பக்குவம் செய்து பயன்படுத்துக. இது விக்கல் இழுப்புகளைப் போக்கும். 96

**42. [2]க்ஷாரயூஷம்**

துறிஞ்சி மரத்துளிர் வேப்பந்துளிர் பேய்ப்புடல்துளிர் பயறு திரிகடுகம் இவற்றை க்ஷாரமாக்கி அதில் இந்துப்பு நாயுருவி முதலிய பொருள்களினால் தயார் செய்யப்பட்ட க்ஷாரத்தையும் முருங்கை விதை மிளகு இவற்றின் தூளையும் தகுந்த அளவு சேர்த்துக் கஞ்சியாகக் காய்ச்சி உணவாகப் பயன்படுத்தினால் விக்கல் இழுப்பு நீங்கும். 97-98

**43. மேலும் சில கஞ்சி வகைகள்**

கண்டங்கத்திரி முருங்கைஇலை உலர்ந்த முள்ளங்கி இவற்றில் ஏதேனும் ஒன்று சேர்த்துக் காய்ச்சிய பயற்றின் கஞ்சி விக்கல் இழுப்பு கொண்டவர்களுக்கு நலம் தரும். கத்திரிக்காய் கலந்து காய்ச்சிய கஞ்சியில் தயிர் திரிகடுகம் நெய் கலந்து பருகச் செய்யலாம்.

பழைய சம்பா அரிசி அறுபதாங்குறுவை அரிசி கோதுமை யவதானியம் இவற்றால் தயார் செய்த சோறு விக்கல் இழுப்பு கண்ட நோயாளிக்கு நல்லது.

பெருங்காயம் சௌவர்சலஉப்பு சீரகம் பிடாலவணம் புஷ்கர மூலம் கொடிவேலி கர்காடக சிருங்கி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கெட்டியான கஞ்சி விக்கல் இழுப்பு கண்டவர்களுக்கு நலம் பயக்கும். 99-101

**44. தசமூலாதிக்வாத *யவாகூ**

ஓரிலை மூவிலை காட்டுப்பயறு காட்டுஉளுந்து நெருஞ்சில் வில்வம் முன்னை பெருவாகை பெருங்குமிழன் பாதிரி இவற்றின்

1. முத்கம் - பயறு.
2. க்ஷாரம் - மருந்துப் பொருளைச் சாம்பலாக்கி நீரில் கலந்து வைத்துத் தெளிந்த பின் அடியில் தங்கிய வண்டலை க்ஷாரம் எனக் கொள்க.

*யவாகூ -

வேர்கள் பூலாங்கிழங்கு சித்தரத்தை கண்டந்திப்பிலி புஷ்கரமூலம் கர்கடகசிருங்கி கீழாநெல்லி சிறுதேக்கு சீந்தில்கொடி சுக்கு இவற்றைச் சம அளவில் சேர்த்து நீர் கலந்து பாதியளவு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிக்கட்டி அந்த நீருடன் முறைப்படி காய்ச்சிய யவாகூவையோ அல்லது இவற்றைக் கொண்டு காய்ச்சிய கஷாயத்தையோ பருகினால் இருமல் நெஞ்சுப்பிடிப்பு விலாவலி விக்கல்இழுப்பு முதலியன நீங்கும். 102-103

## 45. விக்கல் இழுப்பு கொண்டவனுக்கு உணவு

புஷ்கரமூலம் பூலான்கிழங்கு திரிகடுகம் துறிஞ்சிப்பழச்சாறு புளிவஞ்சி நெய் வெல்லம் பெருங்காயம் இவற்றை உணவுடனும் பருகும் நீருடனும் பயன்படுதுவது விக்கல் இழுப்பு கண்ட நோயாளிக்கு நலம் விளைவிக்கும். 104

விக்கல் இழுப்பு கண்டவன் நாவறட்சி தோன்றும் போது தசமூல கஷாயத்தையோ தேவதாருக் கட்டையின் கஷாயத்தையோ மதிரை என்னும் கள்ளையோ பருக வேண்டும். 105

வட்டத்திருப்பி பெருங்குரும்பை சித்தரத்தை சரள (தேக்கு) மரக்கட்டை தேவதாருக்கட்டை இவற்றை நன்றாகக் கழுவி துண்டுகளாக்கி சுரை என்னும் கள் தெளிவில் ஓரிரவு ஊறவைத்து வடிக்கட்டி அதில் சிறிது உப்பு சேர்த்து இரண்டு பலம் அளவு பருகி வந்தால் விக்கல் இழுப்பு தணியும். 106-107

பெருங்காயம் சௌவர்ச்சல உப்பு இலந்தம்பழம் மஞ்சிஷ்டி திப்பிலி சித்தாமுட்டி இவற்றைச் சம அளவில் சேர்த்துக் துறிஞ்சிப்பழச் சாற்றில் அரைத்து காஞ்சிகத்துடன் (காடி) கலந்து பருக வேண்டும். மேலும் சௌவர்ச்சல உப்பு சுக்கு சிறுதேக்கு இவற்றைச் சம அளவில் சேர்த்து இம்மொத்த அளவிற்கு இரண்டு மடங்கு சர்க்கரை கலந்து தூளாக்கி வென்னீரில் கலந்து பருகினால் விக்கல் இழுப்பு தணியும். 108-109

சுக்கு இவற்றின் விழுதையோ மிளகு யவக்ஷாரம் கலந்து செய்த விழுதையோ பீநாறிக்கட்டை கொடிவேலி காட்டுமல்லி பெருங்குரும்பை இந்நான்கையும் சேர்த்து அரைத்த விழுதையோ இளஞ்சூடுள்ள நீரில் கலந்து பருகினால் விக்கல் இழுப்பு நீங்கும். 110

## 46. பித்தம் துணை கொண்ட இழுப்புக்குச் சிகிச்சை

பித்தம் துணையாகத் தோன்றிய இழுப்பில் சிறிய கோதுமை மூங்கிலுப்பு சுக்கு திப்பிலி இவற்றைக்கலந்து நெய்யில் புட்டுப் போல் அவித்து பயன்படுத்துக. 111

## 47. வாதம்-வாதபித்தம் துணையாவதற்குச் சிகிச்சை

முள்ளம்பன்றி முயல் இவற்றின் இறைச்சியைச் சம அளவில் சேர்த்துத் திப்பிலித்தூளை தகுந்த அளவு சேர்த்து முள்ளம்பன்றியின் இரத்தத்தையும் பசுநெய்யையும் சம அளவிற்கொண்டு கொழுக் கட்டையாகச் செய்து வாதம் துணையாகக் கொண்ட இழுப்பில் பயன் படுத்துக.

சூரியகாந்தி இலை பால் பசுநெய் இம்மூன்றையும் ஒன்றாகச் சேர்த்து அதில் திரிகடுகத்தூளைக் கலந்து பக்குவம் செய்து அந்த நெய்யைப் பழைய சம்பா அரிசிச் சோற்றுடன் உண்டால் வாதபித்தம் துணையாக நின்ற இழுப்பு நீங்கும். 112-113

## 48. கபபித்தங்களைத் துணையாகக் கொண்ட இழுப்புக்குச் சிகிச்சை

கபபித்தங்களை துணையாகக் கொண்ட இழுப்பில் வாகை மலர் களின் சாற்றையோ ஏழிலைப்பாலை சுரஸத்தையோ திப்பிலித்தூள் தேன் என்பனவற்றுடன் கலந்து பயன்படுத்தினால் நலம் தரும். 114

## 49. இழுப்பு-விக்கலுக்கு மருந்து

அதிமதுரம் கண்டந்திப்பிலி வெல்லம் பசுஞ்சாணம் குதிரைச் சாணங்களின் சாறு நெய் தேன் இவற்றைச் சம அளவில் கலந்து தின்றால் இழுப்பும் விக்கலுடன் கூடிய இழுப்பும் நீங்கும். 115

கழுதை குதிரை ஒட்டகம் பன்றி செம்மறியாடு யானை இவற்றில் ஒன்றின் சாணத்தின் சாற்றுடன் தேன் கலந்து கபம் மிகுந்துள்ள இழுப்பிற்குப் பருகச் செய்ய வேண்டும். அமுக்கறாங்கிழங்கு க்ஷாரத்தை தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளச் செய்க. 116

## 50. விக்கல் இருமல்களுக்குச் சோதனை முறை

மயில் கால்களிலுள்ள நகங்கள், மயில் இறகின் அடிப்பகுதி மீனின் செதிள் முள்ளம் பன்றியின் முள்ளின் தூள் மற்றும் பெரிய முள்ளம்பன்றியின் முள், பாலைவனப்பகுதியில் வாழும் விலங்குகளின் அல்லது மானினுடைய ரோமங்கள் 'குரர' என்னும் பறவை இறக்கை (மயில் இறகுகள்) ஒற்றைக்குளம்புள்ள கழுதை குதிரை முதலிய விலங்குகளுடையவும் இரட்டைக்குளம்புள்ள பசு எருமை முதலிய வற்றினுடையவும் கொம்புகள் தோல்கள் எலும்புகள் என்னுமிவற்றில் அனைத்தையுமோ அல்லது சிலவற்றையுமோ எரித்துச் சாம்பலாக்கி மெத்தென்றரைத்து அதில் தேனும் நெய்யும் கலந்து உண்டால் இழுப்பு விக்கல் கொடிய இழுப்புகள் நீங்கும்.

கபம் சீற்றமடைந்து மூச்சுக்காற்றின் வழியையடைத்துக் கொள்வதால் மூச்சுக்காற்று (பிராணவாயு) சீற்றமடைந்து விக்கல் இழுப்பு இருமல் என்னும் மூன்றையும் தோற்றுவிக்கும். எனவே கபத்தைக் குறைத்து மூச்சுக்காற்றின் வழியைத்தூய்மைப்படுத்தி தடங்கலின்றி செய்ய இனி கூறப்படும் லேஹியவகைகளைப் பயன்படுத்த வேண்டும். கபம் இல்லாத போது இவற்றைப் பயன்படுத்தலாகாது. 117-120

விக்கல் இழுப்பு தோன்றியவனுக்கு இருமல் குரலுக்குத் தடங்கல் தோன்றும் போது அறிவுள்ள மருத்துவன் வாத கபங்களைப் போக்கக் கூடிய வாந்தி எடுக்கச் செய்யும் மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். தமகசுவாஸத்தில் (ஆஸ்த்மா) அத்தகைய மருந்துடன் கூடிய பேதியாகச் செய்யும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். மிக விரைவாக ஓடும் நீர் வழியைத் தடுத்தால் அது எதிர்த்துப் பரவி வேறு வழிகளைத் தேடிப் பரவும். அதைப் போல் எப்பொழுதும் சுற்றிக் கொண்டிருக்கும் தன்மை கொண்ட வாதத்தின் வழியை கபம் அடைத்தால் வாதம் சீற்றமடைந்து எதிர்திசையில் பல வழிகளில் திரிந்து கொண்டிருந்து விக்கல் முதலிய நோய்களைத் தோற்றுவிக்கும். எனவே முன் கூறியபடி வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலியவற்றால் குடலைத் தூய்மைபடுத்தி வாதத்திற்கு தங்கு தடங்கல் ஏற்படாமல் செய்வது முக்கிய கடமையாம். 121-122

## 51. [1]சட்யாதி சூரணம்

பூலாங்கிழங்கு பெரியபூலாங்கிழங்கு கீரைப்பாலை இலவங்க பத்திரி கோரைக்கிழங்கு புஷ்கரமூலம் துளசி கீழாநெல்லி ஏலஅரிசி திப்பிலி அகில் சுக்கு குருவேர் இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி எட்டு மடங்கு சர்க்கரை சேர்த்து எப்பொழுதும் [2]தமகசுவாஸம் விக்கல் என்பனவற்றிற்கு உணவு குடிநீர் வகைகளில் பயன்படுத்துக. 123-124

## 52 [3]முக்தாதி சூரணம்

நல்லமுத்துக்கள் பவழம் வைடூரியம் சங்கு ஸ்படிகம் ரஸாஞ்ஜனம் சாரகந்தம் என்னும் ஸ்படிகம் காசமணி எருக்கன் சின்ன ஏலக்காய்

---

1. சடீ - பூலாங்கிழங்கு
2. தமகசுவாஸம் - கபத்தால் மூச்சுகாற்றின் வழி தடுக்கப்பட்டு கழுத்தும் முகத்தைச் சார்ந்த உறுப்புகளும் விம்மிக்கொண்டு இருமமுடியாமல் மயக்கம் தரக்கூடிய இழுப்பு தமகசுவாஸமெனப்படும்.
3. முக்தா - முத்து

ஸௌவர்ச்சல உப்பு இந்துப்பு தாமிரம் இரும்பு அறாவிய தூள் வெள்ளி சௌகந்தியம் என்னும் மாணிக்கம் ஸௌவீராஞ்சனம் ஜாதிக்காய் சணல்விதை நாயுருவிவிதை இவற்றைச் சம அளவில் சேர்த்து நன்றாக அரைத்து வேளைக்குக் கால் பலம் வீதம் தேனிலும் நெய்யிலும் கலந்து பயன்படுத்தினால் விக்கல் இழுப்பு இருமல் விரைவாக நீங்கும்.

இவற்றை மெழுகு போல் அரைத்துக் கண்களுக்கு மையாக இட்டால் கண்ணில் தோன்றிய பூ, கருத்த நிறமுள்ள பிறவி மறு பீளைக்கட்டு கண்களில் அரிப்பு கண்களிலிருந்து கெட்ட நீர் வடிதல் [1]அர்மம் முதலிய கண் நோய்கள் நீங்கும். (இங்கு முத்து பவழம் முதலியவற்றை முறைப்படி தூய்மையாக்கி பஸ்பம் அல்லது சிந்தூரமாகச் செய்து பிறகு இம்மருந்தில் கலப்பது நலம்.) 125-128

## 53. *சடிபுஷ்கராதி சூரணம்

பூலாங்கிழங்கு புஷ்கரமூலம் நெல்லிக்காய் கதுப்பு இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி தேனுடன் கலந்து பயன்படுத்தினாலும் இரும்பு அறாவிய தூளின் பஸ்மம் தேன் கலந்து பயன்படுத்தினாலும் விக்கல் இழுப்பு நீங்கும். 129

## 54. விக்கலை நீக்கும் முறைகள்

சர்க்கரை கீழாநெல்லி திராட்சை, பசுஞ்சாணம் குதிரை சாணம் கரைத்து வடி கட்டிய நீர் இவற்றை ஒன்றாககலந்து பருகினாலும்சுக்கு வெல்லம் இவற்றை சம அளவில் பயன் படுத்தினாலும் மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்தினாலும் விக்கல் இழுப்பு நீங்கும். 130

## 55. விக்கலுக்கு மூக்கிலிடு மருந்து வகைகள்

வெள்ளைப்பூண்டு வெள்ளை வெங்காயம் சிவப்பு வெங்காயம் இவற்றில் ஒன்றை அரைத்துத் தாய்ப்பாலுடன் கலந்து மூக்கிலிடுதல் சந்தனத்தை தாய்ப்பாலில் கலந்து மூக்கிலிடுதல் இளஞ்சூடுள்ள நெய்யிலோ பாலேட்டிலோ இந்துப்புத்தூளைக் கலந்து மூக்கிலிடுதல் பெரிய ஈக்களின் மலத்தை அரக்கின் ரஸத்துடன் கலந்து மூக்கிலிடுதல் என்னும் முறைகளால் விக்கல் இழுப்பு நீங்கும். ஜீவனீய கணத்தில் கூறப்பட்ட ஜீவகம் முதலிய மருந்துப் பொருள்களைத் தாய்ப்பாலில் கலந்து முறைப்படி பக்குவம் செய்த நெய்யை பயன்படுத்தினாலும் மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்தினாலும் விக்கல் நீங்கும்.

---

1. அர்மம் — கண்களில் சிறு நரம்புகள் படர்தல்

* சடி—பூலாங்கிழங்கு

பசும்பாலில் சர்க்கரையும தேனும் கலந்து ஒரு முறை குளிர்ந் திருப்பதையும் மற்றொரு முறை சூடுள்ளதையும் மாற்றி மாற்றி பயன் படுத்தினாலும் மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்தினாலும் விக்கல் நீங்கும். 131-134

## 56. விக்கலுக்கு மேலும் சில மருந்துகள்

பேதியாகக் கூடிய மருந்துப் பொருள்களால் தயார் செய்யப்பட்ட நெய் விக்கல் நோயை விரைவில் தீர்க்கும். நெல்லிக்காய்ச் சாற்றிலோ, விளாம்பழச் சாற்றிலோ திப்பிலியின் தூளைத் தேனுடன் கலந்து பருகினாலும் விக்கல் நீங்கும்.

நெற்பொரி கொம்பரக்கு தேன் சிறிய திராட்சை திப்பிலி குதிரை சாணத்தின் சாறு இவற்றைச் சம அளவில் சேர்த்துப் பயன் படுத்தினாலும் இலந்தம்பழம் தேன் சிறிய திராட்சைப்பழம் திப்பிலித் தூள் சுக்குத்தூள் இவற்றைச் சம அளவில் கலந்து பயன்படுத் தினாலும் விக்கல் நீங்கும்.

விக்கல் நோய் கொண்டவனை ஏமாற்றித் திடீரென்று தண்ணீரை மேலே தெளித்தல் பயமுறுத்துதல் வியப்பு சினம் உண்டாக்குதல் அச்சம் தோற்றுவித்தல் களிப்பு அன்பு உணர்ச்சி இவற்றைத் தோற்றுவித்தல் முதலியன விக்கல் நோய் தீர்க்கும் வழிகளாகும். 135-137

## 57. விக்கல் நோயில் தவிர்க்கத்தக்கவை

விக்கல் இழப்பு தோன்றுவதற்குக் காரணமாகக் கூறப்பட்டன வற்றை விலக்குதல் நலம். 138

## 58 விக்கல் இழுப்புக்கு நெய் முறைகள்

விக்கல் இழுப்பு நோய் கொண்டவனுக்குத் தாடை மார்பு தொண்டை உலர்ந்து போனாலும் இயற்கையிலேயே வறட்சி கொண்ட உடலுடையவராக இருந்தாலும் இனி கூறப்போகும் நெய் முறைகளைப் பயன்படுத்துக.

தசமூலகஷாயம் தயிர் மீதுள்ள ஏடு இவற்றின் அளவிற்கு நான்கில் ஒருபங்கு நெய் சேர்த்து அதில் திப்பிலி சௌவர்ச்சல உப்பு யவக்ஷாரம் வல்லாரை துளசி பெருங்காயம் பூலாங்கிழங்கு இவற்றைச் சம அளவு கொண்டு அரைத்த விழுதைச் சேர்த்து முறைப்படி நெய் தயார் செய்து தகுந்த அளவில் பயன்படுத்தினால் விக்கல் இழுப்பு நீங்கும். 139-140

## 59. [1]தேஜோவத்யாதிக்ருதம்

செவ்யம் கடுக்காய்த் தோல் கோஷ்டம் திப்பிலி கடுக ரோகிணி நான்முகப்புல் புஷ்கரமூலம் புரசை விதை கொடிவேலி பூலாங்கிழங்கு சௌவர்சலஉப்பு கீழாநெல்லி இந்துப்பு வில்வப்பழக்கோது தாளிச பத்திரி கிரைப்பாலை வசம்பு இவை ஒவ்வொன்றும் கால்பலம் அத்துடன் கால்பலத்தில் நான்கில் ஒரு பங்கு பெருங்காயம் சேர்த்து விழுதாக அரைத்து அறுபத்துநான்கு பலம் நெய் நெய்யின் அளவிற்கு நான்குமடங்கு நீர்சேர்த்து முறையாக நெய் காய்ச்சி சீரண வலிமைக் கேற்ப பயன்படுத்தினால் விக்கல் இழுப்பு வீக்கம் வாதம் மூலம் கிரஹணி இதயநோய் விலாவலி என்பன நீங்கும். *141-144*

## 60. *மனச்சிலாதிகிருதம்

மனோசிலை வெள்ளைகுங்கிலியம் கொம்பரக்கு மஞ்சள் பதுமகம் மஞ்சிஷ்டி ஏலஅரிசி ஒவ்வொன்றும் கால் பலம் வீதம் சேர்த்து அறுபத்து நான்கு பலம் நெய் அதற்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து முறைப்படி நெய் காய்ச்சி விக்கல் இழுப்பு நோய்களுக்குப் பயன்படுத்துக. *145*

## 61. ஜீவநீயாதி முறை

ஜீவநீயகணத்தில் கூறப்பட்டுள்ள ஜீவகம் முதலிய பொருள் களைச் சேர்த்துத் தயார் செய்த நெய்யைத் தேன் கலந்து பருகுக. இருமலுக்குக் கூறப்பட்ட [2]திரியூஷணகிருதமோ [3]தாதிகிருதமோ [4]வாசா கிருதமோ பயன்படுத்தினால் இழுப்பு நீங்கும். *146*

## 62. விக்கல் இழுப்புக்குப் பொதுவாக சிகிச்சை

கபவாதங்களைப் போக்குவதும் வாதத்தைச் சீராக இயங்கச் செய்வதுமான உஷ்ணவீரியமுள்ள மருந்துகள் உணவு நீர் வகைகள் இவைகளை பயன்படுத்துவதால் விக்கல் இழுப்பு நீங்கும். *147*

## 63. இழுப்பு விக்கலுக்குச் சிகிச்சை முறை

வாதத்தை வளர்த்து கபத்தைப்போக்கும் சிகிச்சையாவது கபத்தை வளர்த்து வாதத்தை தணிக்கும் சிகிச்சையாவது மாறிமாறிச் செய்ய வேணடும். ஒன்றையே தொடர்ந்து செய்யலாகாது. அவ்வாறு செய்யும் போது அவ்விரண்டில் வாதத்தைப் போக்கும் சிகிச்சையே

---

1. தேஜோவதி — செவ்யம்
* மனச்சிலா - மனோசிலை
2. திரியூஷணகிருதம்—இதை 18-ம் அத்யாயத்தில் காண்க.
3, 4—இந்த கிருதங்களை குன்ம சிகிச்சாத்யாயத்தில் காண்க.

நன்மை செய்வதாகும். விக்கல் இழுப்பு கொண்டவனுக்கு வாதத்தைப் போக்கும் சிகிச்சை முறையால் வேறு தோஷம் வளர்ந்து வேறு நோய் தோன்றினாலும் அது சாதாரணமாக வலிமை குறைந்திருக்குமாதலால் எளிதில் சிகிச்சைக்குக் குணமாகும். வாந்தி எடுக்கச் செய்தல் முதலிய சமனமுறைகளைப் பயன்படுத்துவதால் நோய் வளர்ந்தாலும் வேறு நோய் தோன்றினாலும் எளிதில் சிகிச்சை செய்வது இயலாது. பட்டினி கிடக்கச் செய்வதால் தோன்றிய நோயின் வளர்ச்சி அல்லது வேறு நோய் சிகிச்சைக்கு உட்படாததாகும். எனவே வமனம் முதலிய வற்றால் தூய்மைபெற்ற குடலுள்ளவனுக்கும் சோதனை சிகிச்சை செய்யப்படாதவனுக்கும் தோன்றிய விக்கல் இழுப்புகளில் நோயை தணிப்பதும் உடலைச் செழிக்கச் செய்வதும் ஆன மருந்து உணவு முதலியவற்றால் சிகிச்சை புரிய வேண்டுமே தவிர பட்டினி கிடக்கச் செய்வதை ஒரு பொழுதும் பயன்படுத்தக்கூடாது. 148-150

**முடிவுரை**

விக்கல் இழுப்பு என்னும் நோய் மிகவும் கஷ்டப்பட்டு நீக்கக் கூடியதற்குக் காரணங்களும், அவை தோன்றுவதற்குக் காரணங்களும், இவ்விரண்டிற்கும் சிகிச்சைகள் சமமாக இருப்பதற்குக் காரணங்களும், இவ்விரண்டின் இலக்கணங்களும், பத்தியமான மருந்து வகையும் )ந்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன.

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
திருத்தம் செய்யப்பெற்று திருடபலரால்நிறைவு
செய்யப்பட்ட சிகித்ஸாஸ்தானத்தில் விக்கல் இழுப்புகளுக்குச்
சிகிச்சை என்னும் பதினேழாம் அத்யாயம் முற்றும்.

## பதினெட்டாம் அத்தியாயம்

# * காசசிகிச்சை

ஆத்திரேய முனிவர் அருளியபடி காசசிகிச்சை முறைகளை விளக்குவோம். 1 - 2

### குருவின் உரை

உயர்ந்த தவம் புகழ் நினைவாற்றல் புத்தி இவற்றால் பெருமை கொண்ட மகா முனிவராகிய ஆத்திரேயர், அக்கினி வேசருக்கு அனுபவத்தினால் கண்டவாறு இருமல் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை பற்றிக் கூறலானார். 3

### 1. இருமல் நோய் வகைகள்

வாத பித்த கபத்தினால் தனித்தனியே தோன்றுவது தாதுக்கள் குறைவதால் தோன்றுவது மார்பு தாக்கப்படுவதால் தோன்றுவது என இருமல் நோய் ஐந்து வகைப்படும்.

இந்த நோயைச் சிகிச்சை செய்யாமல் அலட்சியப்படுத்தினால் நாள்தோறும் அது வளர்ந்து உடலிலுள்ள இரத்தம் முதலிய தாதுக்களைச் சுண்டச் செய்து கடைசியில் மரணத்தைத் தோற்று விக்கும்.

### 2. இருமலுக்கு முற்குறி

முன்பு கூறிய ஐந்து வகை இருமல்களும் தோன்றுவதற்கு முன்பு தொண்டை உலர்ந்து வாயில் முட்கள் குத்துவது போல் இருக்கும். தொண்டையில் அரிப்பும் உணவுப் பொருள்களில் சுவையின்மையும் உட்கொள்ள இயலாமையும் தோன்றும். இவை இருமல் நோய் தோன்றுவதற்கான முற்குறிகளாகும். 5

---

*காசம் - இருமல்.

இருமலுக்குக் காரணம் இலக்கணம் சிகிச்சை முறை இவற்றைப் பற்றிக் கூறுவதால் இவ்வத்தியாயத்திற்கு காசசிகிச்சை என்ற பெயர் வந்தது.

### 3. இருமல் நோயின் தோற்றம்

வாதம் சீற்றமடைந்து கீழ்நோக்கிச் செல்லும் வாயுவைத் தடைப் படுத்திப் பரவும் வழியில் மேல்நோக்கிச் சென்று, உதானம் என்னும் உருக்கொண்டு தொண்டையிலும் மார்பிலும் பரவி வாய் மூக்குத் துளைகள் முதலிய வழிகளில் நிறைந்து உடலை முன்பக்கத்திற்கு வளைத்து அசையச்செய்து தாடை கழுத்தின் பக்கங்களில் உள்ள நரம்புகள் கண்கள் இவற்றைக் குறுகச் செய்து கண்கள் முதுகு விலா இவைகளை ஸ்தம்பிக்கச் செய்து நீரின்றி உலர்ந்தோ கபத்துடன் கூடியோ வாயிலிருந்து வெளியேறும். அது மேல் நோக்கிப் பரவி வாய் வழியே வெளியேறுவதாலும் மார்பு தொண்டை முதலிய வற்றைத் துன்பப்படுத்துவதாலும் காசம் எனப்பெயர் கொள்ளும். 6 - 8

முன்கூறிய தோற்றம் இருமல் வகைகளுக்குப் பொதுவானாலும் வாதத்திற்குத் தடங்கலைத் தோற்றுவிக்கும் கபம் முதலியவற்றின் சிறப்பான வேகங்களால் தொண்டையில் தோன்றும் துன்பம் ஒலி மாறுதலால் இருமல் வேறு வேறு வகை கொண்டதாகக் கூறப் படுகிறது. 9

### 4. வாதத்தினால் இருமல் தோன்றக் காரணம்

எண்ணெய்ப்பசையின்றி குணத்திலும் வீர்யத்திலும் குளுமைத் தன்மைகொண்டு துவர்ப்புச் சுவையுள்ள பொருளை உண்ணுதல் தேவைக்குக் குறைவாகக் காலம் கடந்து உண்ணுதல் அல்லது உணவு கொள்ளாது இருத்தல் தன் வலிமைக்கு மிஞ்சி கலவியின்பம் கொள்ளுதல் மலம் சிறுநீர் இவற்றின் வேகத்தைத் தடுத்தல் உடலுக்குக் களைப்பு தரும் வேலைகளைச் செய்தல் இவற்றால் வாதம் சீற்றமடைந்து அதனால் இருமல் தோன்றும். 10

### 5. வாதத்தினால் தோன்றும் இருமலுக்கு இலக்கணம்

இருமல் வெளியேறும் போது இதயம் விலாக்கள் மார்பு தலை இவற்றில் மிகுந்த வலியையும் குரல் மாறுபாட்டையும் தோற்றுவித்து வேகத்துடன் வெளிவரும். இருமும் பொழுது மார்பும் தொண்டையும் வாயும் ஈரமில்லாமல் உலர்ந்து போகும். மயிர்க்கூச்சல் தோன்றும். கண்கள் இருண்டு போகும். சில சமயங்களில் இருமலின் உரத்த ஒலி ஏற்படும். உடல் வலிமையைக் குறைத்து உடலை இளைக்கச் செய்து வலிமையைக் குறைத்து மயக்கமுறச் செய்யும். வறண்ட இருமல் தோன்றும். அப்பொழுது நீரின்றி உலர்ந்த கபம் மிகவும் சிரமத்துடன் வெளியேறினால் இருமல் சிறிது குறையும். மற்றும் எண்ணெய்ப்பசை புளிப்பு கார்ப்பு உஷ்ணவீர்யம் கொண்ட உணவு

நீர் இவைகளை உட்கொண்டபோது இருமல் குறைதல் என்னுமிவை வாதம் சீற்றமடைவதால் தோன்றும் இருமலின் இலக்கணம். உணவு சீரணமானதும் வாதம் விரைவு கொள்ள அதனால் இருமல் அதிக மாகும். 11 - 13

### 6. பித்தத்தினால் தோன்றும் இருமலின் காரணமும் இலக்கணமும்

கார்ப்புச் சுவையுள்ள உஷ்ணவீர்யம் மிகுந்த பொருள்களையும் எரிச்சலை உண்டாக்கும் புளிப்புச் சுவையுள்ள யவக்ஷாரம் முதலிய க்ஷார வகைகளையும் மிகுதியாகப் பயன்படுத்தல், மிக்க சினம் கொள்ளுதல், நெருப்பு வெயில் முதலியவற்றின் சூடு உடலில் அதிக மாகப்படுதல் ஆகியவற்றால் பித்தம் சீற்றமடைந்து இருமல் தோன்றும். 14

இருமும் போது மஞ்சள் நிறமுள்ள கபம் வெளியேறுதல் கண்கள் மஞ்சள் நிறம் கொள்ளுதல் வாய்க் கசப்பு குரல்மாறுபாடு நெஞ்சில் புகை வெளியேறுவது போலிருத்தல் நாவறட்சி அழற்சி நினை விழத்தல் சுவையின்மை முதலியன தோன்றும். தலை சுழல்வது போல் இருத்தல் மிகவும் இருமும் போது கண்களுக்கு நக்ஷத்திரம் மின்னுவது போல் தோன்றுதல் பித்த நீருடன் கூடிய கபம் வெளி யேறுதல் ஆகியவை பித்தத்தினால் தோன்றிய இருமலின் அறிகுறிகள். 15 - 16

### 7. கபத்தினால் தோன்றும் இருமலின் காரணமும் இலக்கணமும்

வெகு நேரத்திற்கு சீரணமாகக் கூடிய துவாரங்களில் நீர் சுரக்கச் செய்யும் பொருள்கள் இனிப்புச் சுவை எண்ணெய்ப் பசையுள்ளதுமான பண்டங்களை உண்ணுதல் பகலில் தூங்குதல் எத்தொழிலையும் செய்யாமல் வீண்பொழுது போக்குதல் என இவைகளால் கபம் வளர்ந்து சீற்றமடைந்து வாதத்தின் வழிகளைத் தடுத்து இருமலைத் தோற்றுவிக்கும். இவ்வறிகுறிகள் காணப் பட்டால் அது கபத்தினால் தோன்றிய இருமல் என்று அறிக. 17

சடராக்கினி குறைதல் சுவையின்மை வாந்தியாதல் கடினமான சளி ஒக்காளம் தோன்றுதல் உடல் கனத்தல் மயிர்க்கூச்சல் தோன்றுதல் வாய் இனித்தல் மூக்கு கண் வாய் முதலிய துவாரங் களில் நீர் வழிதல் உடல்வலி இருமும்போது இனிப்புச் சுவையுடன் எண்ணெய்ப்பசை கொண்டு கெட்டியான கபம் வெளிவருதல் மார்பில் வலியுடன் கபம் நிறைந்திருப்பதுபோல் தோன்றுதல் ஆகிய அறிகுறிகள் கபத்தினால் தோன்றிய இருமலில் காணப்படும். 18-19

### 8. மார்பில் தாக்குதலால் இருமல் தோன்றுதல்

உடலில் எண்ணெய்ப் பசையின்றி வறட்சி கொண்டிருப்பவன், கலவியில் மித மிஞ்சி ஈடுபடுதல் பளு சுமத்தல் வழிநடத்தல்

வலிமை மிக்கவருடன் போராடுதல் குதிரை யானை முதலிய வற்றுடன் எதிர்த்துப் போராடுதல் போன்ற இவற்றை மிகுதியாகச் செய்தால் அத்தகையவனுக்கு மார்புக்குள் தாக்குதல் ஏற்படும். அதனால் நெஞ்சில் வாதம் சேர்ந்து சீற்றமடைந்து இருமலைத் தோற்றுவிக்கும். 20

## 9. நெஞ்சு (மார்பு) தாக்கப்படுவதால் தோன்றும் இருமலின் அறிகுறிகள்

நெஞ்சு தாக்கப்பட்டு தோன்றிய இருமல் பிறகு வறட்டு இருமலாக மாறி ரத்தம் கலந்த கபமாக வெளியேறும். தொண்டையில் பொறுக்க முடியாத வலி மார்பில் பிளக்கப்படுவது போன்ற வலி ஊசியால் 'சுருக்சுருக்' என்று குத்துவது போல மார்பில் வலி எரிச்சல் மார்பில் கையால் தொட்டாலும் பொறுக்க முடியாத வலி மூட்டுகளில் வலி காய்ச்சல் மூச்சுத்திணறல் நாவறட்சி குரல் விகாரமடைதல் இருமலின் வேகத்தால் தொண்டையில் புறாவின் சத்தத்தைப் போல் 'குர் குர்' என்ற ஒலி முதலிய அறிகுறிகள் காணப்படும். 21-23

## 10. ஈளை (க்ஷயம்) நோயால் இருமல் தோன்றுதல்

தேவைக்குக் குறைவாக மிகுதியாக காலம் தவறி உணவு கொள்ளுதல் பழக்கமற்ற தன் உடலுக்கு ஒவ்வாதவற்றை உண்ணுதல் தன் வலிமைக்கு மிகுதியாகக் கலவியின்பம் நுகர்தல் மலம் சிறுநீர் இவற்றின் வேகத்தைத் தடுத்தல் பிறர் துன்பம் கண்டு துயரப்படுதல் என இவைகளால் சடராக்கினி குறைந்தவனுக்கு வாத பித்த கபங்கள் நன்றாகச் சீற்றமடையும். ரஸம் இரத்தம் முதலிய தாதுக்களை முறையாக அவை குறைக்கும். அதனால் இருமல் தோன்றும். உடல் நாள்தோறும் இளைக்கும். 24

## 11. க்ஷயத்தினால் தோன்றிய இருமலின் இலக்கணம்

இருமும்போது நாற்றமுள்ள மஞ்சள்நிறத்துடன் சீழைப்போன்ற கபம் இர்த்தத்துடன் சேர்ந்து வெளியேறும். இருமல் விரைவாகத் தோன்றும் போது இதயம் தன் இடத்தை விட்டு நழுவியது போல் தோன்றும். காரணமின்றி குளிரும் சூடும் மாறி மாறித் தோன்றும். நோயாளி மிதமிஞ்சி உணவு உட்கொள்வான். எனினும் உடல் வலிமை இழந்து நாள்தோறும் இளைத்து வரும். முகம் உடல் தோல் இவை எண்ணெய்ப்பசை கொண்டு கண்கள் தெளிவாக ஒளியுடன் கைகால்களில் பளப்பளப்பும் தோன்றும். எப்பொழுதும் பொறாமையும் வெறுப்பும் நோயாளியிடம் இருக்கும். மூன்று தோஷங்களும் கலந்துள்ள காய்ச்சல் தோன்றும்.

விலாக்களில் வலி சளி மார்சளி சுவையின்மை மலம் காரணமின்றி நீராகவும் கெட்டியாகவும் மாறி மாறி வெளியேறுதல் குரல் மாறுபாடு ஆகிய அறிகுறிகள் தாதுக்கள் குறைவினால் தோன்றிய இருமலுக்கு இலக்கணம், இந்நோய் உடல் இளைத்தவனுக்குத் தோன்றினால் உடலை அழிக்கும் 25-28

## 12. சிகிச்சையால் தீர்க்கக் கூடியதும் தீர்க்க இயலாததுமான இருமல்

முன்கூறிய இருமல்களில் க்ஷய நோயினால் தோன்றிய இருமல், தாதுக்கள் மிகவும் குறைந்துள்ளவனுக்குத் தோன்றினால் அது சிகிச்சைக்கு உட்படாதது ஆகும். உடல்வலிமை பெற்ற நோயாளிக்கு ஒரு வேளை சிகிச்சையால் நோய் நீங்கலாம். மார்பில் தாக்குதல் ஏற்பட்டதால் தோன்றிய நோய் காலம் கடத்தி உயிரைப் போக்கும். கை தேர்ந்த வைத்தியன் நல்ல மருந்து வேளைக்குத் தக்க பணிவிடை செய்பவர் நோயாளியின் தகுதி இவை இருந்தால் க்ஷயத்தினாலும் நெஞ்சில் தாக்குதலினாலும் தோன்றிய இருமல் நோய் தோன்றிய புதிதில் ஒரு வேளை சிகிச்சையால் நீங்கலாம். கிழத்தன்மையால் தாதுக்கள் குறைந்து வயது முதிர்ந்தவர்களுக்குக் தோன்றிய இருமல் காலம் கடத்தக் கூடியதாகும். தீர்க்கக் கூடியதான வாதம் பித்தம் கபம் இவற்றினால் முதியவர்களுக்குத் தோன்றிய மூன்று வகை இருமல் நோய்களைத் தகுந்த சிகிச்சை முறைகளால் தீர்க்கலாம். காலம் கடத்தி உயிரை போக்கும் இருமல் நோயில் உடல் இயற்கைத் தன்மைக்குத் தகுந்தபடி பத்தியம் உணவு முறை முதலியவற்றால் நோயாளி வாழ்நாள்களை அதிகத் துன்பமின்றிக் கடத்தலாம். 29-31

## 13. வாதத்தினால் தோன்றிய இருமலுக்குச் சிகிச்சை

இருமல் நோய்களுக்கு இங்கு கூறப்படும் சிகிச்சை முறைகளைக் கேட்பாயாக. வாதத்தினால் வறண்ட உடல் கொண்டவனுக்கு (பித்தத் தொடர்பு இன்றி) தோன்றிய இருமலுக்கு முதலில் நெய் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். வாதத்தைப் போக்கக் கூடிய மருந்துப் பொருள்களையும் எண்ணெயையும் சேர்த்துச் செய்த வஸ்தி முறைகளையும் [1]பேயா [2]யூஷம் க்ஷீர வகைகள் மாமிச இரசங்கள் முதலியவற்றையும் பயன்படுத்த வேண்டும். வாதத்தைப் போக்கும் பொருட்களுடன் எண்ணெய்ப்பசையுள்ள பொருள்களைச்

---

1. பேயா — நீர்த்தன்மையுள்ள கஞ்சி.
2. யூஷம் — கெட்டித்தன்மையள்ள கஞ்

சேர்த்துப் புகை பிடித்தல் தகுந்த லேகியங்கள் எண்ணெய்க்குளியல் பரிஷேகம் உடல் மேல் (ஊற்றுதல்) எண்ணெய்ப் பசையுள்ள பொருள்களால் உடல் வியர்க்கச் செய்தல் எனும் இம்முறைகளைப் பயன்படுத்த வேண்டும். அபான வாயுவும் மலமும் தடுக்கப்பட்டிருந் தால் எண்ணெய் நிறைந்த வஸ்திகளைப் பயன்படுத்துக. உடலின் இடுப்பிற்கு மேற்பகுதி உலர்ந்து வறண்ட இருமல் தோன்றினால் உண்டபின் பயன்படுத்தத் தக்க நெய் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். வாதம் பித்தத்துடன் கூடி இடுப்பிற்கு மேல் உள்ள உடற் பகுதி உலர்ந்திருந்தால் உண்டபின் பயன்படுத்தத்தக்க நெய் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். பித்தத்துடன் கபம் சேர்ந்து இடுப்பிற்கு கீழ் உடல் உலர்ந்துள்ள போது எண்ணெய் முறையால் பேதியாகச் செய்தல் நல்லது. 32-34

## 14. [1]கண்டகாரிகிருதம்

கண்டங்கத்திரி கஷாயம் 30 பலம் சீந்தில் கொடி கஷாயம் 30 பலம் பசு நெய் 16 பலம் சேர்த்து முறைப்படி நெய் காய்ச்சிப் பயன்படுத்தினால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். சடராக்கினி வளரும். 35

## 15 [2]பிப்பல்யாதிகிருதம்

அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு கொத்துமல்லிவிதை வட்டத்திருப்பி வசம்பு சித்தரத்தை அதிமதூரம் யவக்ஷாரம் பெருங்காயம் இவற்றுள் ஒவ்வொன்றும் அரைக்கால் பலம் சேர்த்து விழுதாகச் செய்து பதினாறு பலம் நெய் சேர்த்து அத்துடன் [3]தசமூல கஷாயம் அறுபத்து நான்கு பலம் சேர்த்து முறைப்படி நெய் தயாரித்து வேளைக்கு ஒரு பலம் வீதம் மருந்தைப் பருகி உடனே பேயா [4]மண்டம் என்னும் கஞ்சித் தெளிவைப் பருகினால் இழுப்பு இருமல் இதயநோய் விலாவலி கிரஹணி நோய் குன்மம் முதலியவை நீங்கும். இம்மருந்து ஆத்ரேய முனிவரால் கூறப்பட்டது. அதனால் இது மிகவும் சிறந்தது என்பதாம். 36-38

1. கண்டகாரி — கண்டங்கத்திரி.
2. பிப்பலி — அரிசித்திப்பிலி.
3. தசமூலம்—சிறுமல்லி பெருமல்லி கண்டங்கத்திரி சிறுவழுதுணை நெரிஞ்சில் வில்வம் முன்னை பெருவாகை பெருங்குமிழன் பாதிரி.
4. மண்டம் — கஞ்சியின் அடியில் தங்கியுள்ள பகுதி.

## 16. திரியூஷணாதிகிருதம்

[1]திரிகடுகம் [2]திரிபலை திராக்ஷை பெருங்குமிழன் சிறு ஈச்சம் பழம் வட்டத்திருப்பி பெரிய வட்டத்திருப்பி தேவதாருக் கட்டை ரித்தி காஞ்சொரி கொடிவேலி பூலாங்கிழங்கு வல்லாரை கீழாநெல்லி மேதா கோவை தண்ணீர்விட்டாங்கிழங்கு நெருஞ்சில் முதுக்கன் கிழங்கு இவற்றுள் ஒவ்வொன்றும் கால் பலம் வீதம் சேர்த்து விழுதாக அரைத்து பதினாறு பலம் நெய் அத்துடன் நான்கு மடங்கு பசும்பால் கலந்து முறைப்படி நெய் காய்ச்சி நோயாளியின் சடராக்கினிக்குத் தக்கவாறு பயன் படுத்தினால் இருமல் நீங்கும். மேலும் இந்த நெய்யைப் பயன்படுத்துவதால் காய்ச்சல் குன்மம் சுவையின்மை மண்ணீரல்வீக்கம் தலைவலி இதயவலி விலாவலி காமாலை மூலம் [3]அஷ்டீலா இதயத்தாக்குதல் வீக்கம் க்ஷயம் இவை நீங்கும். இது திரியூஷணாதி கிருதம் எனப்படும். இது மிகவும் சிறந்த மருந்தாகும். 39-42

## 17. [4]ராஸ்னாதிகிருதம்

சித்தரத்தை [5]தசமூலம் தண்ணீர்விட்டான்கிழங்கு இவை ஒவ்வொரு பலம் கொள்ளு இலந்தப்பழம் யவக்ஷாரம் ஒவ்வொன்றும் எட்டு பலம்ஆட்டு மாமிசம் ஐம்பது பலம் இவையனைத்தையும் இருநூற்று ஐம்பத்தாறு பலம் தண்ணீருடன் சேர்த்து அறுபத்து நான்கு பலம் மிகுந்திருக்குமாறு காய்ச்சி அறுபத்து நான்கு பலம் நெய் நெய்யளவு பசும்பால் [6]ஜீவனீய கணத்தில் கூறப்பட்ட பத்துப் பொருள்களிலும் ஒவ்வொரு பலம் எடுத்து மேற்கண்ட பொருள்களுடன் சேர்த்து அரைத்து முறைப்படி நெய் தயார் செய்க. இதை மூக்கில் இடும் மருந்தாகவும் பருகச் செய்யவும் பயன்படுத்தலாம். அனுவாஸன வஸ்திக்கு (எண்ணெய் வஸ்திக்கு) வாத நோய்களில் நோயின்

---

1. திரிகடுகம் — சுக்கு மிளகு திப்பிலி.
2. திரிபலை — கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்.
3. அஷ்டீலா — குடலுக்குள் தொப்புளுக்குக் கீழ் வாதம் மிகுந்து குன்மத்தைப போல் உண்டாகும் கட்டி.
4. ராஸ்னா — சித்தரத்தை
5. தசமூலம் — சிறுமல்லி பெருமல்லி கண்டங்கத்திரி சிறு வழுதுணை நெருஞ்சில் பில்வம் முன்னை பெருவாகை பெருங்குமிழன் பாதிரி என்பன வற்றின் வேர்கள்
6. ஜீவனீயகணம்—காகோலி க்ஷீரகாகோலி மேதா ஜீவகம் ரிஷபகம் ஜீவந்தி காட்டுப்பயறு காட்டு உளுந்து அதிமதுரம் மஹாமேதா என்பவை.

நிலைக்குத் தக்கவாறு இந்த நெய்யைப் பயன்படுத்த வேண்டும். இதனால் ஐந்து வகை இருமல் தலைநடுக்கம் தொடை இடுக்குகளிலும் பெண்குறியிலும் தோன்றும் வலி ஸர்வாங்க ஏகாங்க வாதம் மண்ணீரல் வீக்கம் மேல்நோக்கி இயங்கும் வாயு முதலிய நோய்கள் நீங்கும். 43-46

## 18. *விடங்காதி சூரணம்

வாயுவிடங்கம் சுக்கு சித்தரத்தை பெருங்கரயம் இந்துப்பு சிறு தேக்கு யவக்ஷாரம் இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூள் செய்து நோயாளியின் சடராக்கினியின் வலிமைக்கு ஏற்ற அளவு இவ்விடங்காதி சூரணத்தை நெய்யில் குழைத்து உட்கொள்ளச் செய்ய வேண்டும். இம்மருந்தை கபத்துடன் கூடிய வாதத்தினால் தோன்றிய இருமலிலும் விக்கல் இழுப்பு முதலிய நோய்களிலும் சடராக்கினி வலிவிழந்திருக்கும் போதும் பயன்படுத்தலாம். 47

## 19. க்ஷாரசூரணம்

ஸத்யக்ஷாரம் யவக்ஷாரம் [1]பஞ்ச கோலங்கள் [2]ஐந்து லவணங்கள் பூலாங்கிழங்கு சுக்கு விளாமிச்ச வேர் இவற்றைச் சமஅளவில் சேர்த்துத் தூளாக்கி [3]வஸ்திரகாயம் செய்து பசு நெய்யில் கலந்து பருகச் செய்தால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 48-49

## 20. [4]துராலபாதிசூரணம்

காஞ்சொரி பூலாங்கிழங்கு திராக்ஷை சுக்கு கற்கண்டு கற்கடகசிருங்கி இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி நல்லெண்ணெயில் குழைத்து உட்கொள்ளச் செய்தால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 50

## 21. [5]துஸ்பர்சாதிசூரணம்

காஞ்சொரி திப்பிலி கோரைக்கிழங்கு கற்கடகசிருங்கி பூலாங்கிழங்கு இவற்றைச் சம அளவில் எடுத்துத் தூள் செய்து

---

* விடங்கம் — வாயுவிளங்கம்

1. பஞ்சகோலங்கள் — அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு
2. ஐந்து லவணங்கள் — இந்துப்பு வளையலுப்பு கறியுப்பு பிடஉப்பு கடலுப்பு
3. வஸ்திரகாயம் செய்தல் — துணியால் சலித்தல்
4. துராலபா — காஞ்சொரி
5. துஸ்பர்சா — காஞ்சொரி.

அத்துடன் பழையவெல்லமும் சேர்த்து நல்லெண்ணெயில் குழைத்து உட்கொள்ளச் செய்தால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 51

## 22. விடங்காதி சூரணம் (வேறு முறை)

வாயுவிடங்கம் இந்துப்பு கோஷ்டம் திரிகடுகம் பெருங்காயம் மனோசிலை இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கித் தேனும் நெய்யும் கலந்து குழைத்து உட்கொள்ளச் செய்தால் இருமல் விக்கல் இழுப்பு இவை நீங்கும். 52

## 23. [1]சித்திரகாதி லேகியம்

கொடிவேலி கண்டந்திப்பிலி [2]திரிகடுகம் பெருங்காயம் காஞ்சொரி பூலாங்கிழங்கு புஷ்கரமூலம் யானைத்திப்பிலி துளசி வசம்பு சிறு தேக்கு சீந்தில்கொடி சித்தரத்தை கற்கடகசிருங்கி திராக்ஷை இவற்றுள் ஒவ்வொன்றும் கால்பலம் வீதம் எடுத்து நன்றாகப் பொடி செய்து [3]வஸ்திரகாயம் செய்து கொள்க. கண்டங்கத்திரி சேர்த்துக் காய்ச்சிய 50 பலம் கஷாயத்தை வடிக்கட்டி மேற்படி சூரணத்தை அத்துடன் சேர்த்து இருபது பலம் பழுப்புச் சர்க்கரை கலந்து பக்குவம் செய்து பக்குவமாகும் பொழுது நான்கு பலம் நெய் சேர்த்து முறைப்படி லேகியம் தயார் செய்க. குளிர்ந்த பின் நான்கு பலம் தேன் நான்கு பலம் திப்பிலி நான்கு பலம் மூங்கிலுப்பு இவற்றின் தூளைக் கலந்து லேகியமாகச் செய்து வைத்துக் கொள்க. நோயாளியின் சீரண வலிமைக்கு ஏற்றவாறு நாள்தோறும் இந்த லேகியத்தைப் பயன்படுத்தினால் இருமல் இதயநோய் குன்மம் இழுப்பு இவை நீங்கும். 53 - 56

## 24. அகஸ்திய ஹரீதகீ ரஸாயனம்

[4]தசமூலம் பூனைக்காலிவிதை சங்கபுஷ்பி பூலாங்கிழங்கு சித்தாமூட்டி யானைத்திப்பிலி நாயுருவி கண்டந்திப்பிலி கொடிவேலி சிறு தேக்கு புஷ்கரமூலம் இவை ஒவ்வொன்றும் ஒல்வொரு பலம் வீதம் கொண்டு 64 பலம் யவதானியம் 100 கடுக்காய் 320 பலம் நீர் சேர்த்து யவதானியம் நன்றாகப் பக்குவம் அடையும் வரை காய்ச்சுக.

---

1. சித்திரகா - கொடிவேலி
2. திரிகடுகம் - சுக்கு மிளகு திப்பிலி
3. வஸ்திரகாயம் செய்தல் - துணியால் சலித்துக் கொள்வது,
4. தசமூலம் - சிறுமல்லி பெருமல்லி சிறுவழுதுணை கண்டங் கத்திரி நெருஞ்சில் வில்வம் முன்னை பெருவாகை பெருங் குமிழன் பாதிரி இவற்றின் வேர்கள்.

பிறகு அதை வடிக்கட்டி அந்தககஷாயத்தில் முன் பக்குவம்செய்த 100 கடுக்காய்களையும், 100 பலம் வெல்லத்தையும் சேர்த்து மறுமுறை காய்ச்சுக. பக்குவமாகி வரும்பொழுது பசுநெய் நான்கு பலம் நல்லெண்ணெய் நான்கு பலம் திப்பிலி சூரணம் நான்கு பலம் சேர்த்து நன்றாக லேகியமாகப் பக்குவம் செய்து இறக்கிக் குளிர்ந்தபின் நான்கு பலம் தேன் கலந்து வைக்கவும். இது அகஸ்தியரால் கூறப்பட்ட சிறந்த ரஸாயனமாகும். தகுந்த அளவு இந்த ரஸாயனத்தைப் பருகி வேளைக்கு இரண்டு கடுக்காய் வீதம் நாள்தோறும் மென்று தின்ன வேண்டும். இதைப் பயன்படுத்தினால் முதுமையில் தோன்றும் உடல் தோல் சுருக்கம் மயிர் நரைத்தல் நீங்கும். உடலுக்கு நல்ல நிறம் உண்டாகும். வலிமையும் ஆயுளும் வளரும். ஐந்து வகை இருமல் க்ஷயம் விக்கல் இழுப்பு முறைக்காய்ச்சல் மூலம் கிரஹணி இதயநோய் சுவையின்மை பீனஸம் என்னும் நாள்பட்ட சளி இவை நீங்கும். 57 - 62

## 25. [1]ஸைந்தவாதிசூரணம்

இந்துப்பு திப்பிலி சிறுதேக்கு சுக்கு காஞ்சொரி இவற்றைச் சம அளவில் சேர்த்துச் சூரணமாக்கிப் புளிப்பு மாதுளம் பழச்சாற்றுடன் பருகினால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். மற்றும் சிறு தேக்கு சுக்கு இவற்றைச் சம அளவில் கலந்து தூள் செய்து இளஞ் சூடுள்ள வெந்நீரில் கலந்து பருகச் செய்தல் வைரம் பாய்ந்த கருங் காலிக்கட்டை காசிக்கட்டி இவற்றைச் சூரணமாக்கி மதிரை என்னும் களளுடனோ தயிர் மேலுள்ள ஆடை நீக்கிய நீருடனோ பயன்படுத்து தல் திப்பிலியை நெய்யில் வறுத்துச் சூரணமாக்கிச் சிறிது இந்துப்பு சேர்த்து மதிரை என்னும் கள்ளுடன் பருகச் செய்தல் எனும் இம் முறைகளால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 63 - 64

## 26. இருமல் நோயில் புகை பிடித்தல்

இருமல் நோய் கொண்டவனுக்கு தலைபளு தலைவலி சளியினால் மூக்கு ஒழுகுதல் இதயத்தில் துன்பம் காசத்தினால் தோன்றிய பீனஸநோய் ஆகிய துன்பங்கள் ஏற்படும் போது புகை பிடிக்கச் செய்ய வேண்டும். 65

## 26. (அ) புகை பிடிக்கும் முறை

எட்டு அல்லது பத்து அங்குலம் நீளமுள்ள குழாயை மடக்கு போன்ற மண்சட்டியில் துளை செய்து பொருத்தி சட்டியில் உள்ள மருந்துப் பொருள்களின் புகையை வாயினால் உள்ளுக்கு இழுக்கச்

1. ஸைந்தவம் - இந்துப்பு

செய்ய வேண்டும். அந்தப் புகை ந்சுவரை சென்றபின் வாயினால் வெளியே விடச் செய்யவேண்டும். 66 - 67

முன்கூறியபடி புகை பிடிப்பதால் உண்டான சூட்டினால் நெஞ்சில் கெட்டிப்பட்ட கபம் கரைந்து வாத கபத்தினால் தோன்றிய இருமல் தணியும். 68

## 28. புகை பிடிக்க மருந்து வகைகள்

1. மனோசிலை அரிதாரம் அதிமதுரம் ஜடாமாம்சி கோரைக் கிழங்கு புங்கங்காய் இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி எண்ணெய் கலந்து அம்மருந்தைப் புகை பிடிக்கப் பயன்படுத்தச் செய்ய வேண்டும். புகை பிடித்தவுடனே இளஞ்சூடுள்ள பாலில் மிதமாக வெல்லம் கலந்து பருகச் செய்ய வேண்டும். வாதம் முதலிய தோஷங்களினால் தோன்றிய இருமல் க்ஷயத்தினால் தோன்றும் இருமல் வேறு மருந்து வகைகளால் தணியா விட்டாலும் இவ்வாறு புகை பிடித்தலால் தவறாது நீங்கும். 69 - 70

2. பிரபௌண்டரீகம் அதிமதுரம் குந்துமணி மனோசிலை மிளகு திப்பிலி திராக்ஷை ஏலஅரிசி துளசி மலர்க்கொத்து இவற்றைச் சம அளவில் சேர்த்து சிறிது தண்ணீர் விட்டு அரைத்து வெண்மையான சிறிய பட்டுத்துணியில் பூசி வர்த்தியாக (திரியாக) செய்து உலர்த்தி நெய்யில் தோய்த்து அதன் புகையைப் பிடிக்கச் செய்யவேண்டும். புகைபிடித்ததும் பாலோ வெல்லம் கலந்த நீரோ (பானகமோ) பருகச் செய்யவேண்டும்.

3. மனோசிலை ஏலஅரிசி மிளகு யவக்ஷாரம் ரஸாஞ்சனம் கோரைக்கிழங்கு மூங்கிலுப்பு வெட்டிவேர் அரிதாரம் வெண்பட்டுத்துணி அரப்பு வாசனைப்புல் இவற்றை மெத்தென்று அரைத்து முன்கூறிய படி திரியாகச் செய்து புகை பிடிக்கச்செய்து பாலோ பானகமோ பருகச் செய்ய வேண்டும்.

4. மனோசிலை அரிதாரம் திப்பிலி சுக்கு இந்நான்கையாவது அல்லது இலவங்கப்பட்டை இங்குதிவிதை கண்டங்கத்திரிக்காய் முள்ளுக்கத்திரிக்காய் பனைவேர் மனோசிலை பருத்திவிதை அமுக்கிராங்கிழங்கு என்பனவற்றையாவது முன் கூறியபடி திரியாகச் செய்து புகைபிடிக்கச் செய்தால் இருமல் நோய் நீங்கும். 71-75

## 29. இருமல் நோய்க்குக் கஞ்சி வகைகள்

சம்பா யவதானியம் கோதுமை அறுபதுநாள் குறுவை இவற்றின் சோற்றை கிராமப் பகுதியில் வாழ்வனவும் நீரில் வாழ்வனவுமான

விட்ங்குகளின் இறைச்சிரஸத்தையோ உளுத்தம் பருப்பு பூனைக்காலி விதை இவற்றால் தயார் செய்யப்பட்ட யூஷம் என்னும் கஞ்சி யையோ கலந்து உண்பது இருமல் நோயாளிக்கு நன்மை தரும். 76

1. குரோசானி ஓமம் திப்பிலி வில்வப்பழத்தின் கதுப்பு சுக்கு கொடிவேலி சித்தரத்தை சீரகம் மூவிலை புரசு பூலாங்கிழங்கு புஷ்கர மூலம் இவற்றைச் சேர்த்து பேயா என்னும் கஞ்சி காய்ச்சி அதில் நெய்யும் உப்பும் புளிப்புச் சுவையும் சேர்த்து வாதத்தினால் தோன்றிய இருமல் நோயாளிக்குப் பயன்படுத்துக. இதனால் இடுப்பு வலி நெஞ்சுவலி விலாவலி வயிற்றுவலி விக்கல் இழுப்பு நீங்கும்.

2. தசமூல கஷாயம் [1]பஞ்சகோலம் அதற்கு சமஅளவு எள் வெல்லம் சேர்த்து சேய்தபேயா என்னும் கஞ்சியில் இந்துப்பு அல்லது பால் சேர்ந்து வாதத்தினால் தோன்றிய இருமலுக்குப் பருகச் செய்ய வேண்டும்.

3. மீன் கோழி பன்றி இவற்றின் இறைச்சியைக் கொண்டு காய்ச்சிய பேயா என்னும் கஞ்சியில் இந்துப்பு சேர்த்து, நெய்யுடன் பக்குவப்படுத்திய பேயா என்னும் கஞ்சியை வாதத்தினால் தேரன்றிய இருமலுள்ளவர்களுக்கு பருகக் கொடுக்க வேண்டும். 77-80

## 30. வாதத்தினால் தோன்றிய இருமலுக்குக் காய்கறி வகைகள்

சக்கரவர்த்திக்கீரை மணத்தக்காளிக்கீரை முள்ளங்கி புளித்தக் கீரை நல்லெண்ணெய் பால் கருப்பஞ்சாறு வெல்லம் இவற்றா லான தின்பண்டங்கள் தயிர் புளிப்புக்கஞ்சி புளிப்பு மாதுளம் பழம் முதலியவற்றின் சாறு பிரஸன்னா என்னும் கள்ளின் தெளிவு இனிப்பு புளிப்பு உப்புச் சுவையுள்ள உணவுப் பொருள்கள் ஆகியவை வாதத்தினால் தோன்றிய இருமலுக்கு நன்மை பயக்கவல்லவை.
81 - 82

## 31. பித்தத்தினால் தோன்றிய இருமலுக்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய இருமலில் மருக்காரக்காய் முதலிய வாந்தியைத் தோற்றுவிக்கக் கூடிய பொருள் சேர்த்து தயார் செய்த நெய்யைப் பயன்படுத்தி வாந்தி எடுக்கச்செய்யவும். அல்லது மருக்காரக்காய் பெருங்குமிழன் அதிமதுரம் இம்மூன்றையும் சம அளவில் சேர்ந்துக் காய்ச்சிய கஷாயத்தையோ அல்லது அதிமதுரம் மருக்காரக்காய் இவ்விரண்டையும் விழுதாகச் செய்து முதுக்கன்கிழங்கு

1. பஞ்சகோலம் — அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி செவ்யம் கொடிவேலி, சுக்கு.

ரஸம் கருப்பஞ்சாறு இவற்றுடன் கலந்ததையோ பருகச் செய்து வாந்தியெடுக்கச் செய்க. இதனால் கபம் வெளியேறிய பிறகு குளுமைத் தன்மையும் இனிப்புச் சுவையும் கொண்ட பேயா முதலிய உணவுப் பொருள்களைப் பயன்படுத்தவும். 83-84

## 32. கபமும் பித்தமும் கலந்து தோன்றிய இருமலுக்கு விரேசன முறை

சிறிதளவு கபம் கலந்த பித்தத்தினால் தோன்றிய இருமலில் இனிப்புச்சுவையுடன் கூடிய பொருள்களைச் சேர்த்த சிவதை வேரின் சூரணத்தைப் பயன்படுத்திப் பேதியாகச் செய்ய வேண்டும். கபம் மிகுதியாகிக் கெட்டித்தன்மையடைந்து பித்தத்துடன் சேர்ந்து தோற்றுவிக்கும் இருமலில் கசப்புச்சுவை கொண்ட மருந்துப் பொருள்களுடன் சிவதையைச் சேர்த்துப்பயன்படுத்தி பேதியாகச் செய்ய வேண்டும். 85

அவ்வாறு பித்தத்துடன் கபம் குறைந்துள்ள போது எண்ணெய்ப் பசையும் குளுமைத் தன்மையும் கொண்ட மருந்துகள் பேயா முதலிய வற்றையும் கபம் அதிகமாகிக் கெட்டிப்பட்டிருக்கும்போது வறண்ட குளுமைத் தன்மைகொண்ட மருந்துகள் பேயா முதலிய உணவுவகை களையும் கொடுக்க வேண்டும். அத்துடன் இனி கூறப்போகும் லேகிய வகைகளையும் பயன்படுத்துக. 86

## 33. பித்தத்தினால் தோன்றிய இருமலுக்கு லேகிய முறைகள்

1. சிருங்காடகம் தாமரை விதைகள் அவிரிக்காய்ச்சாறு திப்பிலி இந்நான்கு 2. திப்பிலி கோரைக்கிழங்கு அதிமதுரம் திராக்ஷை பெருங்குறும்பை சுக்கு இவ்வாறு 3. நெற்பொரி நெல்லிமுள்ளி திராக்ஷை மூங்கிலுப்பு திப்பிலி சர்க்கரை இவ்வாறு 4. திப்பிலி பது மகம் திராக்ஷை கண்டங்கத்திரிச்சாறு இந்நான்கு 5. பேரீச்சங்காய் திப்பிலி மூங்கிலுப்பு நெரிஞ்சில் இந்நான்கு இவற்றுள் ஏதாவது ஒரு கூட்டுப் பொருளைச் சமஅளவில் சேர்த்துச் சூரணமாக்கி நெய்யையும் தேனையும் கலந்து லேகியமாகப் பயன்படுத்தினால் பித்தத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். இவ்வைந்தும் ஐந்து வகை லேகிய முறைகளாகும். 87-89

## 34. சர்க்கராதி லேகியம்

சர்க்கரை சந்தனம் திராக்ஷை நெல்லிமுள்ளி கருநெய்தல் இவற்றைச் சூரணமாகச் செய்து தேனில் கலந்து பித்தத்தினால் தோன்றிய இருமலுக்குப் பயன்படுத்துக. கபத்துடன் கூடிய பித்த இருமலில் இந்த மருந்தில் கோரைக்கிழங்கு மிளகு இவ்விரண்டையும்

செய்தால் இருமல் காய்ச்சல் எரிச்சல் நெஞ்கில் தாக்கப்படுதலால் தோன்றும் நோய்கள் இவை நீங்கும். 101

## 42. ஸர்ப்பிர்குடம் (குளிகை)

முன்கூறிய மூவிலை முதலிய பொருள்களைச் சேர்த்துப் பக்குவம் செய்த பாலை புரை ஊற்றி அத்தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்து நெய்யாக்கி அந்த நெய்க்கு நான்கு மடங்கு பாலும் கருப்பஞ்சாறும் சேர்த்து [1]ஜீவனீய கணத்தைச் சேர்ந்த பத்து மருந்துகளும் பிஸ்தா அக்ரூட் மகூலிகா என்னும் அக்ரூட் நிகோசகம் ஆகிய நான்கையும் ஒவ்வொன்றும் முக்கால் பலம் வீதம் சேர்த்து விழுதாக அரைத்து அனைத்தையும் முறைப்படி நெய் காய்ச்சி குளிர்ந்தபின் சர்க்கரை திப்பிலி மூங்கிலுப்பு மிளகு சிருங்காடகம் வற்றின் சூரணத்தை மேற்படி நெய்யில் கலந்து அதை தேனுடனும் கோதுமை மாவுடனும் உருண்டையாக ஆகும் வரை கலக்கவும். ஒவ்வொரு பலம் கொண்ட உருண்டைகளாகச் செய்க. இது ஸர்ப்பிர் குடம் என்று சொல்லப்படும்.

இந்தக் குளிகையை உட்கொண்டு மத்தியான உணவுக் கட்டுப் பாட்டுடன் இருந்தால் விந்துவைச் சார்ந்த நோய்கள் இரத்தத்தைச் சார்ந்த நோய்கள் இருமல் உடல் உருக்கிநோய் முதலியன நீங்கும். 102 - 105

## 43. சர்க்கராதி ஸ்வரஸம்

சர்க்கரை சுக்கு விளாமிச்சவேர் கண்டங்கத்திரி பூலாங்கிழங்கு வற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்துத் துணியால் வடிக்கட்டி அந்தச் சாற்றில் நெய் கலந்து பருகச் செய்தால் பித்தத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 106

## 44. பித்தத்தினால் தோன்றிய இருமலுக்குக் கிருதம்

எருமைப்பால் ஆட்டுப்பால் செம்மறியாட்டுப்பால் நெல்லிக்காய்ச் சாறு பசு நெய் இவற்றைச் சமஅளவில் சேர்த்து முறைப்படி நெய் காய்ச்சி ஜடராக்கினிக்குத் தகுந்தவாறு பயன்படுத்தினால் பித்தத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். இதுவரை பித்தத்தினால் தோன்றிய இருமலுக்கு சிகிச்சை கூறப்பட்டது. இனி கபத்தினால் தோன்றிய இருமலுக்குச் சிகிச்சை முறைகள் கூறப்படும். 107

---

1. ஜீவனீய கணம் — கீரைப்பாலை காகோலி க்ஷீரகாகோலி மேதா மஹாமேதா காட்டு உளுந்து காட்டுப் பயறு வேர் ரிஷபகம் ஜீவகம் அதிமதுரம் இவற்றின் கூட்டிற்கு ஜீவனீய கணம் எனப்பெயர்.
2. சிருங்காடகம் — தாமரைக் கிழங்கு.

## 45. கபத்தினால் தோன்றிய இருமலுக்கு [1]சோதன முறை

கபத்தினால் தோன்றிய இருமல்நோய் உள்ளவனுக்கு உடல் வலிமை நன்றாக இருந்தால் முதலில் கூறப்பட்ட முறைப்படி சோதன முறைகளைப் பயன்படுத்தி உடல் தூய்மை பெற்ற பிறகு யவதானியச் சோறு காரம் வறட்சி உஷ்ணத்தன்மைகளுடன் கபத்தை நீக்கச் செய்வதுமான உணவு வகைகளைப் பயன்படுத்த வேண்டும். 108

## 46. கபத்தினால் தோன்றிய இருமலுக்கு யூஷம்

திப்பிலி யவக்ஷாரம் இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்த கொள்ளின் தெளிவு முள்ளங்கி சேர்த்து செய்யப்பட்ட யூஷம் காரம் சேர்த்துப் பக்குவம் செய்யப்பட்ட இறைச்சியின் சாறு இவற்றுள் ஒன்றுடன் எளிதில் சரிமானமாகக்கூடிய உணவைக் கொள்ளச்செய்ய வேண்டும். வறண்ட நிலப்பகுதியில் வாழும் விலங்குகள் பொந்துகளில் வாழும் உடும்பு முதலிய உயிரினங்கள் இவற்றின இறைச்சியின் சாற்றை எள் கடுகு வில்வவிதை இவற்றின் எண்ணெயில் பக்குவம் செய்து அந்த ரஸத்துடன் எளிதில் சரிமானமாகக்கூடிய உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 109

## 47. கபத்தினால் தோன்றிய இருமலுக்கு உணவு குடிநீர் வகை

தேன் புளிப்புச் சுவையுள்ள பொருள் வெந்நீர் மோர் தீங்கற்ற மது இவற்றைப் பருகலாம். மேலும் புஷ்கரமூலம் கொன்றை வேர் பேய்ப்புடல் இவற்றை நசுக்கி நீரில் சேர்த்து இரவு முழுவதும் ஊறவைத்துக் காலையில் அந்நீரை வடிக்கட்டி சிறிது தேன் கலந்து உணவிற்கு முன்பும் நடுவிலும் கடைசியிலும் அல்லது காலை நண் பகல் மாலையிலும் குடிநீராகப் பயன்படுத்துக. 110-111

## 48. [2]கட்பலாதி கஷாயம்

குமிழம்பழம் வாசனைப்புல் சிறு தேக்கு கோரைக்கிழங்கு கொத்த மல்லிவிதை வசம்பு கடுக்காய் சுக்கு பர்பாடகம் கற்கடகசிருங்கி தேவதாரு இவற்றைச் சம அளவில் சேர்த்து இடித்து நீர் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கும்படி கஷாயம் காய்ச்சி வடிக்கட்டி அதில் தேனும் பெருங்காயத்தூளும் சேர்த்து வாத கபத்தினால் தோன்றிய இருமலுக்குப் பருகச் செய்யவேண்டும். தொண்டை நோய்

---

1. சோதனமுறை—வாந்திக்கும் பேதிக்கும் மருந்து கொடுத்து உடலைத் தூய்மைப் படுத்தும் முறை.
2. கட்பலா — குமிழன்.

முகத்தில் வீக்கம் விக்கல் ;மல் காய்ச்சல் முதலியவைகளுக்கும் இதை பயன்படுத்தலாம். 112-113

## 49. [1]பாடாதி ஸ்வரஸம்

வட்டத்திருப்பி சுக்கு பூலாங்கிழங்கு பெருங்குறும்பை [2]கவாக்ஷி கோரைக்கிழங்கு திப்பிலி இவற்றைச் சமஅளவில் எடுத்து வெந்நீர் சேர்த்து அரைத்துவடிக்கட்டி அந்தச் சாற்றில் பெருங்காயம் இந்துப்பு சேர்த்துப் பயன்படுத்தினால் கபத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 114

## 50. நாகராதி ஸ்வரஸம்

சுக்கு அதிவிடயம் கோரைக்கிழங்கு கற்கடகசிருங்கி கடுக்காய்த் தோல் பூலாங்கிழங்கு இவற்றைச் சம அளவில் சேர்த்து முன்கூறியபடி வெந்நீரில் அரைத்து வடிக்கட்டி பெருங்காயமும் இந்துப்பும் சேர்த்துப் பயன்படுத்துக. 115

## 51. [3]குலுத்த கஷாயம்

திப்பிலியை எண்ணெயில் வறுத்துப் பொடி செய்து கொள்ளின் கஷாயத்தில் கால் பலம் கலந்துக் கற்கண்டுப் பொடியைச் சேர்த்துப் பருகச்செய்தால் கபத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 116

## 52. [4]காஸமர்தாதி ஸ்வரஸம்

தூதுவளை குதிரைசாணம் கரிசலாங்கண்ணி முள்ளுக்கத்திரி கருந்துளசி இவற்றை இடித்து ஸ்வரஸம் (சாறு) தயார் செய்து தேன் கலந்து பருகச்செய்தால் கபத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 117

## 53. தேவதார்வாதி லேகியம்

தேவதாருக்கட்டை பூலாங்கிழங்கு சித்தரத்தை கற்கடகசிருங்கி காஞ்சொரி இவற்றைச் சம அளவில் சேர்த்துப் பொடி செய்தாவது திப்பிலி சுக்கு கோரைக் கிழங்கு கடுக்காய்த் தோல் நெல்லிமுள்ளி சீனாக்கற்கண்டு இவற்றைச் சம அளவில் பொடி செய்தாவது தேனும் எண்ணெயும் கலந்து லேகியம் செய்து பயன்படுத்தினால் வாதத்துடன் சேர்ந்த கபத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். இவை யிரண்டும் தனித்தனி முறைகள். 118

---

1. பாடா — வட்டத்திருப்பி
2. கவாக்ஷி — கழக்கோடி
3. குலுத்தம் — கொள்ளு
4. காஸமர்தா — தூதுவளை

### 54. [1]பிப்பல்யாதி சூரண முறைகள்

திப்பிலி கண்டந்திப்பிலி கொடிவேலி யானைத்திப்பிலி (இந்நான்கும் ஒரு முறை) கடுக்காய்த் தோல் கீழாநெல்லி நெல்லிமுள்ளி கோரைக் கிழங்கு திப்பிலி (இவை இரண்டாவது முறை) தேவதாருக் கட்டை கடுக்காய்த்தோல் கோரைக்கிழங்கு திப்பிலி சுக்கு (இவை மூன்றாவது முறை) பேய்த்தும்மட்டி திப்பிலி கோரைக் கிழங்கு சிவதை (இவை நான்காவது முறை) இம் முறைகளில் கூறப்பட்ட மருந்துகளைச் சூரணம் செய்து கலந்து லேகிய பாகத்தில் பயன்படுத்தினால் கபத்தினால் தோன்றிய இருமல் நீங்கும் 119-121

### 55. ஸௌவர்சலாதி சூரணம்

ஸௌவர்சல உப்பு கடுக்காய்த்தோல் நெல்லிமுள்ளி திப்பிலி யவக்ஷாரம் சுக்கு இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி நெய் கலந்து பயன்படுத்தினால் வாதகபத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 122

### 56. [2]தசமூலாதி கிருதம்

64 பலம் அளவுள்ள தசமூல கஷாயத்தில் 16 பலம் அளவுள்ள பசு நெய் கலந்து அதில் புஷ்கரமூலம் பூலாங்கிழங்கு வில்வவேர் துளசி வேர் [3]திரிகடுகம் பெருங்காயம் ஒவ்வொன்றும் கால் பலம் வீதம் கலந்து முறைப்படி நெய் பக்குவம் செய்து சீரண சக்திக்கு ஏற்றவாறு பேயா என்னும் கஞ்சியைத் துணை மருந்தாகக் கொண்டு தினந்தோறும் பயன்படுத்தச் செய்தால் எல்லாவிதமான வாத கபங்களினால் தோன்றிய இருமல் இழுப்பு நீங்கும். 123-124

### 57. [4]கண்டகாரி கிருதம்

கண்டங்கத்திரியை வேர் இலை காய்களுடன் கூட இடித்து எடுத்த ஸ்வரஸம் 64 பலத்துடன் பதினாறு பலம் பசுநெய்யைக் கலந்து அதில் சித்தாமுட்டிவேர் திரிகடுகம் வாயுவிடங்கம் பூலாங்கிழங்கு கொடிவேலி ஸௌவர்சல உப்பு யவக்ஷாரம் மோடி புஷ்கரமூலம் சிவப்பு மூக்கரட்டை

---

1. பிப்பலி — அரிசித்திப்பிலி.
2. தசமூலம் — வில்வவேர் பெருவாகைவேர் குமிழம்வேர் பாதிரி வேர் முன்னை வேர் ஓரிலை மூவிலை கண்டங்கத்திரி முள்ளங்கத்திரி வேர்கள் நெரிஞ்சில் இவை தசமூலம் எனப் படும்.
3. திரிகடுகம் — சுக்கு மிளகு திப்பிலி.
4. கண்டகாரி — கண்டங்கத்

செவியம் காஞ்சொரி புளிவஞ்சி கற்கடகசிருங்கி கீழாநெல்லி சிறு தேக்கு சித்தரத்தை நெரிஞ்சில் வேர் இவற்றின் விழுதை நான்கு பலம் அளவு சேர்த்து முறைப்படி நெய் காய்ச்சுக. சீரணவலிமைக்கு ஏற்றவாறு பயன்படுத்தினால் இருமல் வகைகள் அனைத்தையும் விக்கல் இருமல் வகை அனைத்தையும் இது நீக்கும். இது கபத்தினால் தோன்றிய நோய்களைப் போக்குவதில் சிறந்தது. 125-128

## 58. [1]குலுத்தாதி கிருதம்

கொள்ளுச்செடியை வேருடன் எடுத்து இடித்து எடுத்த கஷாயத்தில் நாலில் ஒரு பங்கு நெய் நெய்யில் நாலில் ஒரு பங்கு [2]பஞ்சகோலங்களின் விழுது சேர்த்து முறைப்படி நெய் பக்குவம் செய்க. இது கபத்தினால் தோன்றிய இருமலிலும் விக்கல் இழுப்பு நோய்களிலும் பயன்படுத்தத்தக்கது. 129

வாதத்தினால் தோன்றிய இருமலுக்கு முன் 69-75 செய்யுட்களில் கூறப்பட்ட புகைபிடிக்கும் முறைகளைக் கபத்தினால் தோன்றிய இருமலிலும் பயன்படுத்தலாம். மேலும் பேய்ப் பீர்க்குக் கோதும் மனோசிலையும் சேர்த்து முறைப்படி புகைபிடிக்கப் பயன் படுத்தினால் வாதத்தினால் தோன்றிய இருமல் நீங்கும். 130

## 59. [3]தமககாஸ சிகிச்சை

கபத்தினால் தோன்றிய இருமலில் மிகுந்த துன்பம் விளைவிக்கும் பித்தம் துணையாகிய போது அந்தந்த நிலைக்குத் தக்கவாறு பித்த காசத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 131

## 60. வாதம் துணையான போது இருமலுக்குச் சிகிச்சை

இருமல் நோயில் வாதத்திற்குக் கபம் துணையாக இருந்து தொந்தரவு கொடுக்குமாயின் கபகாசத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சைகளைக் கையாள வேண்டும். வாதமும் கபமும் பித்தத்திற்குத் துணையாக நின்றபோது பித்தகாசத்தை நீக்கும் சிகிச்சை முறையைப் பயன்படுத்த வேண்டும். 132

---

1. குலுத்தம் — கொள்ளு
2. பஞ்சகோலம் — அரிசித் திப்லிபி கண்டந்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு இவற்றின் கூட்டு பஞ்சகோலம் எனப் படும்.
3. தமககாஸம் - தீவிரமான இருமல்.

### 61. வாதச்லேஷ்ம காச சிகிச்சை

வாத கபங்களால் தோன்றிய இருமலில் சிறிது கபத்துடன் கூடி ;மல் தோன்றுமாயின் வறட்சித் தன்மை கொண்ட மருந்து உணவு நீர்வகைகள் நன்மை தரும். வறண்ட இருமல் தோன்றுமாயின் எண்ணெய்ப்பசையுடன் கூடிய மருந்து உணவு நீர் வகைகள் நன்மை தரும். பித்தமும் கபமும் கூடிய காசத்தில் கசப்புச் சுவையுடன் கூடிய உணவு நீர் வகைகள் நன்மை தரும். 133

### 62. தாக்கப்படுவதால் (க்ஷதஜகாசம்) தோன்றும் இருமலுக்குச் சிகிச்சை

அடிபடுவதால் தோன்றும் இருமல் அபாயத்தை விளைவிக்கக் கூடியது. எனவே அதை நன்றாக ஆராய்ந்து இனிப்புச்சுவை கொண்டவைகள் [1]ஜீவனீய கணப்பொருள்கள் உடல் வலிமை யையும் மாமிசத்தையும் வளர்க்கக் கூடிய மருந்து உணவு நீர் வகைகள் இவற்றால் விரைவில் சிகிச்சை செய்து நோயைப் போக்க வேண்டும். 134

### 63. மேற்படி நோய்க்கு பிப்பல்யாதி லேகியம்

திப்பிலி அதிமதுரம் சீனாக்கற்கண்டு இவை ஒவ்வொன்றும் கால் பலம் பசும்பால்ஆட்டுப் பால் கருப்பஞ்சாறு இவை ஒவ்வொன்றும் பதினாறு பலம் யவதானியம் கோதுமை திராட்சை இவற்றின் தூள் நெல்லிக்காய் ஸ்வரஸம் நல்லெண்ணெய் இவை ஒவ்வொன்றும் இரண்டுபலம் இவை அனைத்தையும் ஒன்றாகச் சேர்த்து இளஞ்சூட்டில் லேகியமாகப் பக்குவம் செய்து அதில் பசும்பாலையும் தேனையும் கலந்து பயன்படுத்தினால் இருமலும் இழுப்பும் நீங்கும். இதயநோய் உடலிளைப்பு விந்துகுறைபாடு முதுமை இவற்றில் இது நன்கு பயன் தரும். 135 - 137

தாக்குதலால் தோன்றிய இருமலால் துன்புறுபவனுக்கு பித்த காசத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். அதிலும் பால் நெய் இனிப்புச் சுவையுள்ளவை ஆகியவற்றை கொண்டு குறிப்பாகச் சிகிச்சையும் செய்யவேண்டும். வாதம் பித்தம் முதலியவற்றுடன் கூடிய [2]க்ஷதஜ காசத்திற்கு இனி கூறப்போகும் முறையில் சிகிச்சை செய்ய வேண்டும். 138

---

1. ஜீவனீயகணப்பொருள் - க்ஷீரைப்பாலை காகோலி க்ஷீரகாகோலி மேதா மகாமேதா காட்டுளுந்துவேர் காட்டுப்பயறுவேர் ரிஷபகம் ஜீவகம் அதிமதுரம் இவற்றின் கூட்டிற்கு ஜீவனீயகணம் எனப்பெயர்.
2. க்ஷதஜகாசம் - தாக்கபடுவதால் ஏற்படும் இருமல்,

## 64. க்ஷதஜகாசத்திற்கு நிலைக்கு ஏற்ற சிகிச்சை

தாக்குதலால் தோன்றிய இருமலில் வாதபித்தங்களின் தொடர்பு இருந்து உடல்வலி தோன்றுமாயின் நெய் முறைகளைக் கொண்டு குளியல் செய்விப்பது நன்மை தரும். வாத சம்பந்தமான துன்பங்கள் தோன்றுமாயின் வாதத்தைப் போக்கக்கூடிய எண்ணெய் முறைகளைத் தேய்த்துக்கொண்டு குளிக்கச் செய்ய வேண்டும். 139

யத்திலும் விலாக்களிலும் வலி தோன்றுமாயின் வாதரத்த க் கூறப்பட்ட (29 -ம் யாயம் 61 - 70 சுலோகம்) ஜீவனீய கிருதம் என்று கூறப்படும் மருந்துநெய்யைப் பருகச் செய்ய வேண்டும். 140

## 65. மேற்படி நோயில் இளைத்த உடலுள்ளவனுக்குச் சிகிச்சை

தாக்குதலால் இருமல் தோன்றி மார்பில் எரிச்சல் இருக்கும் போதும் இரத்தம் வெளிவந்து உடல் இளைத்திருக்கும் போதும் சடராக்கினி வலிமையுடனிருந்தால் இறைச்சி சாப்பிடும் பழக்கமுள்ளவர்களை லாவகம் முதலிய பறவைகளின் மாமிச ரஸத்தைப் பருகச் செய்ய வேண்டும்.

நாவறட்சி மிகுதியாக இருந்தால் சராதி [1] திருண பஞ்சமூலங்களைச் சேர்த்துக் காய்ச்சிய ஆட்டுப் பாலைப் பருகச் செய்ய வேண்டும். 141

## 66. தாக்குதலால் ஏற்பட்ட இருமலில் இரத்தப் பெருக்கிற்குச் சிகிச்சை

மார்பு புண்ணாகி மூக்கு முதலிய துவாரங்களிலிருந்தாவது வாய் வழியிலாவது இரத்தம் வெளியேறிக் கொண்டிருக்குமாயின் பால் கடைந்தெடுத்த வெண்ணெயிலான நெய்யைப் பருகச்செய்வதுடன் தை மூக்கிலிடுமருந்தாகவும் பயன்படுத்தலாம். உடல் சோர்ந்து ளைத்துச் சடராக்கினி வலிமை குறைந்திருந்தால் யவாகூ என்னும் கஞ்சியைப் பருகச் செய்ய வேண்டும். உடல் விறைத்திருக்குமாயின் ஒரு நாளில் சரிமானமாகக் கூடிய அளவு (சுமார் 8 பலம்) நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். மேலும் பித்தத்திற்கும் இரத்தத்திற்கும் விரோதமின்றி வாதத்தை மட்டும் போக்கக்கூடிய சிகிச்சையைக் கையாள வேண்டும். 142 - 143

1. திருணபஞ்சமூலம் - தர்ப்பம் ஞாழல் கரும்பு பேய்க்கரும்பு சம்பாத்தாள் இவ்வைந்தும் திருணபஞ்ச மூலம் எனப்படும்.

## 67. தாக்குதலால் ஏற்பட்ட இருமலுக்குப் புகைபிடித்தல்

மார்பில் தாக்குதல் ஏற்பட்டுத் தோன்றியபுண் மேற்படி சிகிச்சை களினால் நீங்கியும் கபம் வளர்ந்து மார்பிலும் தலையிலும் பிளத்தலைப் போன்ற வலி தோன்றினால் அத்தகைய வலி, இருமல் இவற்றில் இனி கூறப் போகும் புகைபிடித்தல் முறையைக் கையாள வேண்டும். 144

## 68. புகைபிடிக்கும் முறைகள்

மேதா மகாமேதா அதிமதுரம் சித்தாமுட்டி பேராமுட்டி கொம் பரக்கு இவற்றை நீர் ஊற்றி மைய அரைத்து வெள்ளைப்பட்டுத் துணியில் பூசிவர்ததி செய்து உலர்த்தி நெய்யில் தோய்த்து முறைப்படி புகை பிடிக்கச் செய்து உடனே [1]ஜீவனீயகணத்தைச் சார்ந்த பொருள்களைக் கொண்டு செய்த நெய முறைகளைப் பருகச் செய்ய வேண்டும். 145

மனோசிலை புரசை ஓமம் மூங்கிலுப்பு சுக்கு இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்து அதில் வெண்பட்டுத் துணியை ஊற வைத்து வர்த்தியாகச் செய்து உலர்த்தி அதைக்கொண்டு முறைப்படி புகைபிடிக்கச் செய்ய வேண்டும். உடனே கருப்பஞ்சாறு அல்லது வெல்லத்தினாலான பானகத்தைப் பருகச்செய்ய வேண்டும் 146

மனோசிலை பச்சைஆலம்மொட்டு இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்து நெய்யைச் சேர்த்து வெண்பட்டுத்துணியில் பூசி வர்த்தியாகச்செய்து புகை பிடிக்கச் செய்து உடனே தித்திரிப்புள்ளின் மாமிச ரஸத்தைப் பருகச் செய்ய வேண்டும். 147

ஜீவனீய கணப்பொருள்களை அரைத்து சிட்டுக்குருவியின் முட்டைக் கருவினைச் சேர்த்து வெண்பட்டுத்துணியில் பூசி வத்தி செய்து அதைக் கொண்டு புகை பிடிக்கச் செய்ய வேண்டும். உடனே காய்ச்சிய இரும்புக் குண்டு தீயில் பசும்பாலைக் காய்ச்சி அதைப் பருகச் செய்ய வேண்டும். 148

## 69. க்ஷயத்தினால் தோன்றிய இருமலுக்குச் சிகிச்சை

மிகவும் உடல் வலிமை குன்றியவனுக்கு தாதுக்கள் குறைந்து உடல் இளைப்பு தோன்றியதால் உண்டான இருமலின் போது

---

1. ஜீவனீய கணம் - க்ஷீரைப்பாலை காகோலி மேதா மஹா மேதா காட்டுளுந்துவேர் காட்டுப் பயறுவேர் ரிஷபகம் ஜீவகம் அதிமதுரம் இவற்றின் கூட்டிற்கு ஜீவனீயகணம் எனப்பெயர்.

சிகிச்சையைக் கை விட வேண்டும். உடல் வலிமை குன்றி இளைத்துள்ளவனுக்கு இருமல் புதியதாகத் தோன்றியபோது (காலம் கடக்காத போது) உடல் நலம் பெறுவது எளிதல்ல என்று சொல்லி சிகிச்சை செய்ய வேண்டும். 149

## 70. க்ஷயத்தினால் தோன்றிய மலுக்கு [1]பிரும்மண [2]தீபன சிகிச்சை

க்ஷயத்தினால் தோன்றிய இருமலுக்கு உடல் வலிவு பெற்று வளர்ச்சி பெறும் (பிரும்மண) சிகிச்சையையும் சடராக்கினியை வளர்க்கும் சிகிச்சையையும் முதலில் செய்யவேண்டும். தோஷங்கள் மிகவும் சீற்றமடைந்திருந்தால் எண்ணெயுடன் கூடிய மென்மையான மருந்து முறைகளால் பேதியாகச் செய்ய வேண்டும். 150

உடல் இளைத்து வலிமை குன்றியுள்ள நோயாளிக்கு இருமல் தோன்றியபோது புளிவஞ்சியின் பிசின் சிவதைக் கஷாயம் திராட்சை ரஸம் தில்வக கஷாயம் பால்முதுக்கன்கிழங்கின்சாறு இவற்றுள் ஒன்றுடன் முறைப்படி பக்குவம் செய்யப்பட்ட நெய்யைக் கொண்டு பருவநிலை தேசம் நோயாளியின் வலிவு இவற்றிற்கு ஏற்றவாறு பருகச் செய்து பேதியாகச் செய்ய வேண்டும். குடலைத் தூய்மைப் படுத்தும் இம்முறை உடலுக்கும் வலிமைக்கும் கெடுதலைத் தோற்று விக்காமல் காப்பாற்றித் தோஷத்தை மட்டும் வெளியேற்றும். எனவே இது மிகவும் நன்மை பயப்பதாகும். 151 - 152

## 71 கற்கடகசிருங்கி கிருதம்

க்ஷயத்தினால் தோன்றிய இருமலில் பித்தமும் கபமும் ரஸம் முதலிய தாதுக்களும் மிகவும் குறைந்துள்ள போது கற்கடகசிருங்கி பால் சிததாமுட்டி பேராமுட்டி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய நெய்யைப் பருகச் செய்க. 153

## 72. [3]விதார்யாதி கிருதம்

க்ஷயத்தினால் தோன்றிய இருமல் நோய் கொண்டவனுக்கு சிறுநீர் இயற்கை நிறம் மாறி மிகவும் சிரமத்துடன் வெளியேறிக் கொண்டிருந்தால் பால் முதுக்கன்கிழங்கு கடம்பமரப்பட்டை பனம் பழம் இவற்றுள் ஏதாவது ஒன்றுடன் பக்குவம் செய்யப்பட்ட பசு நெய் அல்லது பசும் பாலைப் பருகச் செய்ய வேண்டும். 154

---

1. பிரும்மணம் — உடலை செழிப்பாக்குவது.
2. தீபனம் — பசியை அதிகரிக்கச் செய்வது.
3. விதாரி — பால்முதுக்கன் கிழங்கு.

அடிபடுவதால் தோன்றிய இருமலில் ஆண்குறி குதம் பித்தம் துடையிடுக்குகளில் வீக்கம் போன்ற நோய் உண்டாகியிருந்தால் நெய்யில் மேல் உள்ள தெளிவு (கிருதமண்டம்) தேன் இவையிரண்டுடனோ அல்லது நெய்யும் எண்ணெயும் சம அளவில் சேர்த்தோ முறைப்படி அனுவாஸன வஸ்தியைப் (எண்ணெய் வஸ்தி) பயன்படுத்தி மான் முதலிய ஜாங்கல நிலப்பகுதியிலுள்ள மிருகங்களின் இறைச்சியுடன் உணவு உட்கொள்ளச் செய்யவேண்டும். அல்லது வர்த்தகம் முதலிய பறவைகள் பொந்தில் வாழும் உடும்பு போன்ற பிராணிகள் இறைச்சியை உணவாகக் கொண்ட புலி முதலிய கொன்று தின்னும் பிராணிகள் இவற்றில் ஒன்றின் மாமிசத்தைச் சிறுகச் சிறுக உண்ணச் செய்ய வேண்டும். இவை நுட்பமும் தீக்ஷ்ணமுமான குணங் கொண்டு உடலில் தோஷங்கள் பரவியுள்ள துவாரங்களில் புகுந்து தோஷகளை நீக்கி தூய்மைப் படுத்தும் குணம் கொண்டிருப்பதால் துவாரங்களைத் தடுக்கும் கபத்தை வெளியேற்றும். அதனால் ரஸம் முதலிய தாதுக்கள் பரவும் துவாரங்கள் தூய்மை பெற்று, உண்ட உணவின் ரஸம் தடங்கலின்றி உடல் முழுவதும் பரவி வளர்ச்சியைத் தரும். 155 - 157

## 73. [1]த்விபஞ்சமூலாதி கிருதம்

[2]மகாபஞ்சமூலம் [3]சிறுபஞ்சமூலம் (தசமூலம்) [4]திரிபலை செவியம் சிறுதேக்கு கொடிவேலி கொள்ளு மோடி வட்டத்திருப்பி இலந்தம்பழம் யவதானியம் இவற்றைச் சம அளவில் எடுத்துச் சேர்த்து இடித்து நான்கு மடங்கு தண்ணீர் சேர்த்து நாலில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி அதில் புஷ்கர மூலம் கற்கடகசிருங்கி இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்த விழுதைக் கலந்து பசு நெய் கலந்து முறைப்படி நெய் காய்ச்சுக.

இது குளிர்ந்த பிறகு யவக்ஷாரம் ஸர்ஜக்ஷாரம் [5]பஞ்சலவணம் இவற்றைத் தகுந்த அளவு தூளாக்கிக் கலந்து சடராக்கினிக்கு ஏற்றவாறு க்ஷயத்தினால் தோன்றிய இருமல் நோய் கொண்டவனுக்குப் பருகக் கொடுக்க வேண்டும். 158 - 160

---

1. த்விபஞ்சமூலம் — தசபஞ்சமூலம்.
2. மகாபஞ்சமூலம்— வில்வம் பெருங்குமிழம் பெருவாகை பாதிரி சிறுவழுதுணை இவ்வைந்தும் மகாபஞ்சமூலம்.
3. சிறுபஞ்சமூலம்— சிறுமல்லிகை பெருமல்லிகை கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி நெரிஞ்சில் இவ்வைந்தும் சிறுபஞ்சமூலம்.
4. திரிபலை — கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்
5. பஞ்சலவணம் — இந்துப்பு சவுட்டுப்பு அட்டுப்பு கறியுப்பு வளையலுப்பு.

## 74. [1]குடுச்யாதி கிருதம்

சீந்தில்கொடி திப்பிலி பெருங்குறும்பை மஞ்சள் சித்தரத்தை வசம்பு கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி வட்டத்திருப்பி சித்தரமூலம் சுக்கு கொடிவேலி இவற்றைச் சம அளவில் எடுத்து நான்கு மடங்கு நீர் சேர்த்து நாலில் ஒரு பகுதி மிகுந்திருக்கக் காய்ச்சி வடிக்கட்டி அதற்குச் சம அளவு பசு நெய் கலந்து முறைப்படி பக்குவம் செய்து சடராக்கினிக்குத் தகுந்த அளவு பயன்படுத்தினால் குன்மம் இழுப்பு தாதுக்கள் குறைவதால் ஏற்படும் இருமல் கூடிய காஸம் இவை நீங்கும். 161 -162

கண்டங்கத்திரி கடுக்காய்த்தோல் கோரைக்கிழங்கு வட்டத்திருப்பி குமிழம் சுக்கு திப்பிலி கடுகரோகிணி திராட்சைப்பழம் பெருங்குமிழன் துளசி இவை ஒவ்வொன்றும் கால் பலம் வீதம் சேர்த்து விழுதாக அரைத்துப் பதினாறு பலம் நெய் சேர்த்து அறுபத்து நான்கு பலம் பசும்பால் திராட்சைப் பழரஸம் அறுபத்து நான்கு பலம் கலந்து முறையாக நெய் பக்குவம் செய்க. இதைப் பயன்படுத்தினால் தாதுக் குறைவு காய்ச்சல் மண்ணீரல்நோய் ஆகியவையும் எல்லாவித இருமல்களும் நீங்கும். 163 - 164

நன்றாகப் பழுத்த நெல்லிக்கனிகளை பாலில் கொதிக்க வைத்து உலர்த்தித் தூளாக்கி அதைக் கொண்டு பக்குவம் செய்யப்பட்ட நெய்யைப் பருகச் செய்யலாம். நெய்க்கு இரண்டு மடங்கு மாதுளம் பழச்சாறு கலந்து திரிகடுக சூர்ணம் கலந்து பக்குவம் செய்த நெய்யைப் பருகச் செய்யலாம். யவக்ஷாரம் சேர்த்துப் பக்குவம் செய்த நெய்யை உணவு உண்டபின் பருகச் செய்யலாம். திப்பிலி வெல்லம் நெய்சேர்த்து நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு ஆட்டுப்பால் கலந்து பக்குவம் செய்த நெய்யைப் பருகச் செய்யலாம். 165 - 166

இந்த நெய் முறைகளை க்ஷயத்தினால் தோன்றிய இருமல் உள்ளவனை சடராக்கினியின் வலிமைக்கு ஏற்றவாறு பருகச் செய்தால் சடராக்கினி நன்கு வளர்ந்து தோஷத்தினால் தடுக்கப்பட்ட தொண்டை குடல் மார்பு துவாரங்கள் தூய்மை பெற்று தோஷத்தினால் தடுக்கப்படாமலிருக்கும். 167

## 75. [2]ஹரீதகீ லேகியம்

கொதிக்க வைத்த 128 பலம் யவதானிய கஷாயத்தில் கடுக்காய்களைப் பக்குவம் செய்து அவை நன்றாக வெந்தபின்

1. குடூசி — சீந்தில்கொடி
2. ஹரிதகீ — கடுக்காய்.

இடித்துக் கொட்டையை நீக்கி 6 பலம் பழைய வெல்லம் கால்பலம் மனோசிலை அரைக்கால் பலம் ரஸாஞ்சனம் இரண்டு பலம் திப்பிலித்தூள் கலந்து லேகியமாகப் பக்குவம் செய்து பயன்படுத்தினால் இருமல் இழுப்பு நீங்கும். 168 - 169

## 76. இருமலுக்குச் சூரண முறைகள்

முள்ளம்பன்றி முள் அல்லது மயிலிறகுகளை நெருப்பில் சுட்டுச் சாம்பலாக்கி நெய்யும் தேனும் சர்க்கரையும் கலந்து பருகச் செய்யவும். சுவாஸம், காஸம் குணமாகும்.

ஆமணக்கு இலையை இடித்துச் சாம்பலாக்கித் திரிகடுகத்தூள் பழையவெல்லம் எண்ணெய் இவற்றைப் கலந்து பருகச் செய்யவும். அல்லது துளசி ஆமணக்கு இலைகளை க்ஷாரம் செய்து அதில் திரி கடுகசூரணம் எண்ணெய் வெல்லம் கலந்து பயன்படுத்தவும். திராட்சை தாமரை இலை கண்டங்கத்திரிக்காய் திப்பிலி இவற்றைச் சம அளவில் எடுத்துத் தேனும் பசு நெய்யும் கலந்து பருகச் செய்யவும். அல்லது திரிகடுகத்தூளைப் பழைய வெல்லம் நெய் இவற்றுடன் கலந்து பருகச் செய்யவும். 170 - 172

## 77. [1]சித்திரகாதி சூரணம்

கொடிவேலி [2]திரிபலை சீரகம் கற்கடகசிருங்கி திரிகடுகம் திராட்சை இவற்றைச் சம அளவில் எடுத்துச் சேர்த்துத் தேனும் பசு நெய்யும் கலந்தோ வெல்லம் கலந்தோ பயன்படுத்துக. 173

## 78. பதிமுகாதி லேகியம்

பதிமுகம் திரிபலை [3]திரிகடுகம் வாயுவிடங்கம் தேவதாரு சித்தா முட்டி சித்தரத்தை இவற்றைச் சம அளவில் எடுத்துச் சேர்த்து நன்றாகத் தூளாக்கித் துணியால் சலித்து அத்தூளுக்குச் சம அளவு பசுநெய் சர்க்கரை தேன் கலந்து நன்றாகக் கலக்கி லேகியம் செய்க. இதை உடல் வலிமைக்கு ஏற்றவாறு பயன் படுத்தினால் இருமல் வகைகள் அனைத்தும் நீங்கும். 174 - 175

## 79. [4]ஜீவந்தியாதி சூரணம்

கீரைப்பாலை அதிமதுரம் வட்டத்திருப்பி மூங்கிலுப்பு திரிபலை பூலாங்கிழங்கு கோரைக்கிழங்கு ஏலஅரிசி பதிமுகம் திராட்சை

---

1. சித்திரகம் - கொடிவேலி
2. திரிபலை - கடுக்காய் நெல்லிக்காய தான்றிக்காய்
3. திரிகடுகம் - சுக்கு மிளகு திப்பிலி
4. ஜீவந்தி - கீரைப்பாலை

முள்ளுக்கத்திரி கண்டங்கத்திரி கொத்தமல்லி விதை நன்னாரி புஷ்கர மூலம் கற்கடகசிருங்கி ரஸாஞ்ஜனம் மூக்கரட்டை. இரும்புத்தூள் மருக்கொன்றை ஓமம் சிறுதேக்கு கீழாநெல்லி ரித்தி வாயுவிடங்கம் காஞ்சொரி யவக்ஷாரம் கொடிவேலி செவியம் புளிவஞ்சி சுக்கு மிளகு திப்பிலி தேவதாருக்கட்டை இவற்றைச் சம அளவில் எடுத்து நன்றாகத் தூளாக்கி வேளைக்குக் கால் பலம் வீதம் தேனும் நெய்யும் கலந்து பயன்படுத்துக. இதனால் ஐந்துவகை இருமல்களும் நீங்கும். 176 - 179

## 80. [1]மரீசாதி சூரணம்

மிளகுத்தூளை நெய் தேன் சர்க்கரை கலந்து பயன்படுத்துக. இது மிகவும் சிறந்த இருமல் நீக்கும் மருந்தாகும். இலந்தை இலைகளை விழுதாக அரைத்து நெய்யில் வறுத்து இந்துப்பு கலந்து குரல் மாறுபாடு இருமல் முதலியவைகட்குப் பயன்படுத்துக. 180 - 181

## 81. க்ஷயத்தினால் தோன்றிய இருமலுக்குக் கஞ்சி வகைகள்

பாச்சோத்தி இலையை அரைத்து விழுதாகச் செய்து வறுத்து சர்க்கரை கலந்து பயன்படுத்துக. அல்லது அந்த விழுதைச் சேர்த்துப் பக்குவம் செய்த பேயா என்னும் கஞ்சியையோ மேற்படி விழுதாகச் செய்யப்பட்ட புட்டையோ பயன்படுத்தினால் வாந்தி நாவறட்சி இருமல் ஆமாதிஸாரம் இவை நீங்கும்.

வெண்கடுகு படர்புல் வாயுவிடங்கம் [2]திரிகடுகம் கொடிவேலி கடுக்காய்த்தூள் இவற்றைச் சம அளவில் எடுத்துச் சேர்த்துக் கஷாயமாக்கி அதைக் கொண்டு கஞ்சி தயார் செய்து மிதமாக உப்பும் நெய்யும் கலந்து பருகச் செய்தால் இருமல் விக்கல் விக்கலுடன் கூடிய இழுப்பு பீனஸம் என்னும் நாள்பட்ட சளி சோகை க்ஷயம் வீக்கம் காதுவலி முதலிய நோய்கள் நீங்கும். 182 - 183

## 82. [3]கண்டகார்யாதியூஷம்

கண்டங்கத்திரி கஷாயத்தில் பயத்தம் பருப்பு கலந்து கஞ்சி காய்ச்சி அதில் நெல்லிக்காய் புளியுமாதுளம் பழச்சாற்றையும் கலந்து இந்துப்பு பெருங்காயம் இவற்றுடன் பக்குவப்படுத்திப் பயன் படுத்தினால் இருமல் அனைத்தும் நீங்கும் 184

---

1. மரீசம் - மிளகு
2. திரிகடுகம் - சுக்கு மிளகு திப்பிலி.
3. கண்டகாரி - கண்டங்கத்திரி.

## 83. பால் முதலியவை

வாதத்தைப் போக்கக்கூடிய மருந்துப் பொருள்களைக் கலந்து பக்குவம் செய்த கஞ்சி முறைகள் பால் மாமிசரஸம் என்பனவற்றை க்ஷயத்தினால் தோன்றிய இருமலுக்குப் பயன்படுத்தலாம்

மேலும் கோழி முதலிய மூக்கினால் இரையைக் கொத்தித்தின் பவை பொந்தில் வாழும் உடும்பு முதலியவை இவற்றின் இறைச்சி களைக் கொண்டு தயார் செய்த ரஸத்தை க்ஷயத்தினால் தோன்றிய இருமலுள்ளவனுக்குப் பயன்படுத்துவது நலம். 185

## 84. க்ஷயத்தினால் தோன்றிய இருமலுக்கு புகைபிடித்தல்

காயம்படுவதால் ஏற்பட்ட இருமலுக்கு புகைபிடிக்கும் (145வது செய்யுள்) முறையையும் அதற்குக் கூறப்பட்ட அனுபான முறை களையும் க்ஷயத்தினால் தோன்றிய இருமலுக்கும் பயன்படுத்தலாம். 186

க்ஷயத்தினால் தோன்றிய இருமலுடையவனுக்கு சடராக்கினியை வளர்க்கச் செய்யும் முறை உடலை வளர்க்கச் செய்யும் முறை துவா ரங்களைத் தூய்மை செய்யும் முறை என்னும் மூவகை முறை களையும் மாற்றி மாற்றி மற்றொன்றாகப் பயன்படுத்துதல் மிகவும் அவசியம்.

நோயாளியின் உடல் வலிமைக்குத் தக்கவாறு அந்தந்த நிலைக்கு ஏற்றபடி மேற்படி முறைகளைப் பயன்படுத்த வேண்டும். மேலும் உடல் வலிமையை வளர்க்கும் மருந்துகள் உணவு வகைகள் குடிநீர் வகைகள் இவையனைத்தும் நன்மை பயக்கக் கூடியவையே. 187

க்ஷயத்தினால் தோன்றிய இருமல், மூன்று தோஷங்களும் சீற்ற மடைவதாகிய ஸந்நிபாதத்தினால் தோன்றும். எனவே இது மிகவும் கடுமையானது. மூன்று தோஷங்களும் சீற்றமடையும் ஸந்நிபாதத் திற்குத் தகுந்த சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். மூன்று தோஷங்களில் மிகவும் சீற்றமடைந்துள்ளதையும் அதற்குத் துணையாக இருப்பதையும் நன்றாக ஆராய்ந்து தகுந்த முறையில் நோயாளியின் உடல் வலிமையைக் கவனித்து சிகிச்சை செய்ய வேண்டும். முன்கூறிய ஐந்து வகை இருமல்களில் முறையே ஒன்றை விட மற்றொன்று வலிமையுள்ளது என அறிக. 188 - 189

## 85. இருமலுக்குப் பொது சிகிச்சை

தகுந்த உணவு வகைகள் கஞ்சி முறைகள் நெய்முறைகள் லேகி யங்கள் பானகங்கள் சடராக்கினியை வளர்ப்பவை பால் வகைகள்

ஸர்ப்பிற்குடம் என்னும் முறை புகை பிடிக்கும் முறைகள் இவை யனைத்தும் இருமலுக்கு ஏற்ற சிகிச்சைகளாகும். 190

**முடிவுரை :**

இருமல் நோய்வகைகள் அவை தோன்றக் காரணங்கள் அவற்றின் அறிகுறிகள் எளிதில் நீக்கக்கூடியது நீக்க இயலாததுமான வேற்றுமைகள் அவற்றிற்குரிய மருந்து வகைகள் ஐந்து வகை இருமல்களின் கொடுமைகளில் ஏற்றத்தாழ்வு இவையனைத்தும் இந்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. 191

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்டு திருடபலமுனிவரால் நிறைவு செய்யப்பட்ட சரகஸம்ஹிதை சிகிச்ஸா ஸ்தானத்தில் காச சிகிச்சை (இருமல் நோய் சிகிச்சை) என்னும் பதினெட்டாம் அத்தியாயம் முற்றும்.

## பத்தொன்பதாவது அத்தியாயம்

# *அதிஸாரசிகிச்சை

ஆத்திரேய மாமுனிவர் விளக்கியவாறு அதிஸார சிகிச்சையைப்பற்றி விளக்குவோம். 1 - 2

ஒரு சமயம் ஆத்திரேய மாமுனிவர் இமயமலையின் வடக்குச் சாரலில் தன்னுடைய அன்றாடச் சடங்குகளையும் அக்கினி ஹோத்ரத்தையும் முடித்து விட்டு முனிவர்களுடன் உட்கார்ந்திருந் தார். அப்பொழுது சீடரான அக்கினிவேசர் ஆத்திரேய முனிவரின் அருகில் பணிவுடன் சென்று வணங்கி பின்வருமாறு கேட்கலானார்.

வணங்கத்தக்கவரே [1]அதிஸார (பேதி) நோய் முதன் முதலில் எப்படி உண்டாயிற்று? அதற்குக் காரணம், இலக்கணம், சிகிச்சை இவற்றைக் குறித்துத் தாங்கள் உபதேசிக்கத் தகுதியுள்ளவர். ஆகையால் மக்களின் நன்மைக்காக அதை விளக்கிக் கூறுங்கள். 3

வணங்கத்தக்க புனர்வஸு ஆத்திரேயர அக்கினிவேசருடைய வினாவைக் கேட்டு 'உன்னுடைய கேள்விகளுக்குப் பதிலளிக்கிறேன் கேட்பாயாக' என்றார். முற்காலத்தில் வேள்விகளில் ஆடுகள் முதலிய வேள்விக்குரிய விலங்குகள் பூஜிக்கப்பட்டு கொல்லாமல் விடு விக்கப்பட்டன. பிறகு தக்ஷனது வேள்வியிலும் அதற்குப் பிறகு மனு வின்பிள்ளைகளான நரிஷ்யன் நாபாகன் இக்ஷ்வாகு நிருகன் சர்யாதி ஆகியோர் செய்த வேள்விகளில் வேள்வி மிருகங்கள் கொல்லப் பட்டன. பின்னர் பிருஷத்ரன் என்ற அரசன் செய்த நீண்ட யாகத்தில் வேள்வி மிருகங்களான ஆடுகள் கிடைக்காமல் போனதால் பசுக்களை வேள்வி மிருகங்களாக உபயோகித்தனர். அவ்வரசனது வேள்வியில் பசுக்களைக் கொல்வது தொடங்கப்பட்டது. அதைக் கண்டு உலகம் வேதனை அடைந்தது. கொல்லப்பட்ட பசுக்களின் மாமிசம்[2] குருகுணம்

---

* அதிஸாரம் — அதிஸாரம் என்னும் வயிற்றுப் போக்கு அல்லது பேதியைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுவதாயிற்று.

1. அதிஸாரம் — மிகுதியான நீருடன் கலந்து மலம் வெளியேறுதல்.

2. குருகுணம் - எளிதில் சீரணிக்க இயலாதது.

உஷ்ணவீர்யம் இயற்கைக்கு முரண்பட்ட தன்மை இவற்றைக் கொண்டிருந்ததால் அதை உண்பது சடராக்கினிக் குறைவையும் மக்களின் மனத்தில் துன்பத்தையும் ஏற்படுத்தியது. அதிலிருந்துதான் அதாவது பிருஷத்ரன் வேள்வியிலிருந்துதான் (அதிஸாரம்) (பேதி) என்ற நோய் முதன் முதலில் தோன்றியது. 4

### 1. வாதாதிஸாரத்தின் தோற்றமும் காரணமும்

இயற்கையிலேயே வாதஉடல்அமைப்பு உள்ளவனுக்குக் காற்று வெயில் இவற்றில் அதிகமாக அலைதல் அதிகமாக உடற் பயிற்சி, வறட்சிகுணமுள்ள உணவு, குறைவான உணவு அளவுக்குக் குறைவான உணவு இவற்றை உண்ணுதல், அடிக்கடி கடினமான மதுவை அருத்துதல், மிகுதியான புணர்ச்சி, எப்பொழுதும் சிறுநீர் மலம் போன்றவற்றின் வேகத்தை அடக்குதல், ஆகிய இவற்றால் வாதம் சீற்றம் அடைகிறது. சடராக்கினியும் தன் வலிமையை இழந்து விடுகிறது. அப்பொழுது சீற்றமடைந்த வாயு சிறுநீரையும் வியர்வையையும் மலம் தங்குமிடத்தை (மலாசயம்) அடைவித்து மலத்தைத் திரவமாகச் செய்து அதிஸாரம் என்னும் நோயைத் தோற்றுவிக்கிறது.

### 2. வாதாதிஸாரத்தின் இலக்கணம்

நோயாளியின் மலம் திரவமாகவும் விரைவில் பரவக் கூடியதாகவும் நீரில் மூழ்கக் கூடியதாகவும் இருக்கும். சீரணமாகாமலும் உலர்ந்தும் திரவமாகவும் வலியுடனும் வெளியேறும். மேலும் புலால் நாற்றத்துடன் மிகுந்த ஓசையுடனோ அல்லது ஓசை இல்லாமலோ சிறுநீர் கீழ்நோக்கிச் செல்லும் வாயு இவற்றைத் தடுத்துக் கொண்டும் வெளியேறும். தடைப்பட்ட வாயு வயிற்றுக்குள் ஒலியுடனும் வலியுடனும் சுழன்று கொண்டிருக்கும். இதுவே வாதாதிஸாரத்தின் இலக்கணம். இதற்கு [1]ஆமாதிஸாரம் என்றும் பெயர். இது வாதத்தினால் ஏற்படக்கூடியது.

### 3. வாதத்தினால் தோன்றிய பக்குவாதிஸாரத்தின் இலக்கணம்

வாதத்தினால் தோன்றிய பக்குவாதிஸாரத்தில் மலம் தடைப் பட்டும் துளித் துளியாகவும் ஓசையுடனும் வெளியேறும். நுரை பிசுபிசுப்பு மலத்துவாரத்தில் கத்திரியினால் கத்தரிப்பது போன்ற வலி இவையும் ஏற்படும். மலம் கழிக்கும் நேரத்தில் மயிர்க் கூச்சல் பெருமூச்சு அதிகமாக இருக்கும். வாய் உலர்ந்து போகும். இடுப்பு தொடை [2]திருகம் முழங்கால் இடுப்பின் பின்பாகம் விலாப்புறம்

---

1. ஆமாதிஸாரம் – உணவு ஜரிக்காமல், மலமும் பக்குவமாகாமல் பேதியாதல்.
2. திருகம் — கழுத்தும், மார்பும் சந்திக்கும் பூட்டு

இவற்றில் குத்தல்வலி ஏற்படும். மலம் வெளியேறும் போது ஆஸணவாயும் (குதம்) கீழிறங்கும். வாதத்தினால் மலம் அடிக்கடி உருண்டை உருண்டையாக வெளியேறும். சிலர் இதனை அனுக்கிரதிதம் என்று கூறுகின்றனர். ஏனெனில் வாதத்தினால் மலம் உலர்ந்து இறுகி உருண்டை உருண்டையாக வெளியேறுகிறது. 5

## 4. பித்தாதிஸாரத்தின் காரணம் தோற்றம்

இயற்கையிலேயே பித்தம் மிகுதியாக உள்ள உடல் அமைப்பு உள்ளவனுக்கு புளிப்பு உப்பு கார்ப்பு இச்சுவைப் பொருள்களையும் க்ஷாரம் உஷ்ணம் தீக்ஷ்ணகுணம் பொருந்தியவற்றையும் அதிகமாகப் பயன்படுத்துதல் எப்பொழுதும் நெருப்பின் அருகிலும் வெயிலிலும் அதிக நேரம் இருத்தல் சூடான காற்றின் தாக்குதல் ஆகிய )வற்றால் பித்தம் சீற்றமடைகிறது. மேலும் கோபம் பொறாமை )வற்றின் மிகுதியாலும் பித்தம் சீற்றமடையும். சீற்றமடைந்த பித்தம் நீராகவும் (திரவமாகவும்) சூடாகவும் இருப்பதால் சீரணப்பையை (பக்குவாசயத்தை) கெடுத்து சடராக்கினியின் வலிமையை இழக்கச் செய்து தானும் அதில் இருந்து கொண்டு சூடாகவும் நீராகவும் இளகச்செய்யும் இயல்புள்ளதாகவும் இருப்பதால் மலத்தை உடைத்து அதிஸாரம் என்னும் நோயை உண்டு பண்ணுகிறது.

## 5. பித்தாதிஸாரத்தின் இலக்கணம்

பித்தத்தினால் தோன்றிய அதிஸார நோய் உள்ளவனுக்கு மலம் மஞ்சள் பச்சை கருப்பு நீலம் இந்நிறங்களுடனும் இரத்தமும் பித்தமும் கலந்து மிக்க துர்நாற்றத்துடனும் வெளியேறும். மேலும் இந்நோயாளிக்கு நாவறட்சி எரிச்சல் வியர்வை மூர்ச்சை வயிற்றில் வலி ஆஸனவாயில் கதகதப்பு புண் இவையும் தோன்றும் இவை )ஸாரத்தின் இலக்கணமாகும். 6

## 6. கபாதிஸாரத்தின் காரணம் தோற்றம்

இயற்கையிலேயே கபம் மிகுதியாக உடலமைப்பு உள்ள குருகுணம் இனிப்புச் சுவை குளர்ச்சித்தன்மை எண்ணெய்ப்பசை இவ்வியல்பு கொண்ட பொருள்களை அதிகமாகப் பயன்படுத்தல் அதிகமாக உணவு உண்ணும் பழக்கம் உடல் அல்லது மனம் )வற்றைப் பற்றிக் கவலையின்றி இருத்தல் பகலில் உறங்குதல் சாம்பல் இவ்வாறான காரணங்களால் கபம் சீற்றம் அடைகிறது. )யற்கையிலேயே குருகுணம் இனிப்புச் சுவை குளிர்ச்சி எண்ணெய்ப் பசை இத்தன்மைகளைக் கொண்டதும் சீற்றமடைந்ததுமான கபம் கீழ்நோக்கிச் சென்று சடராக்கினியின் ஆற்றலை இழக்கச் செய்து

மேலும் இயற்கையிலேயே குளுமைத் தன்மையுடனிருப்பதால் (சௌம்யம்) மலாசயத்தில் சென்று மலத்தை இளகச் செய்து அதிஸாரத்தைத் தோற்றுவிக்கிறது.

### (7) கபாதிஸாரத்தின் இலக்கணம்

மலம் எண்ணெய்ப்பசை வெண்ணிறம் பிசுபிசுப்புத்தன்மை கொண்டும் திரித் திரியாகவும் சீரணமாகாமலும் கெட்டியாகவும துர்நாற்றத்துடனும் கபத்தோடும் வேதனையுடன் சிறிது சிறிதாக அடிக்கடி வெளியேறும். மலம் வெளியேறும் போது அடிக்கடி முக்குதலும் வயிறு ஆஸனவாய் (குதம்) சிறுநீர்ப்பை தொடை யிடுக்குகள் இவற்றில் பளுத் தன்மையும் தோன்றும், மலம் கழித்த பின்னரும் மலம் போகாதது போன்ற உணர்ச்சி தோன்றுதல் மயிர்க் கூச்சல் பிரட்டல் தூக்கம் சோம்பல் சுறுசுறுப்பின்மை உணவில் வெறுப்பு ஆகியவை தோன்றும். இதுவே கபாதிஸாரத்தின் இலக்கணமாகும். 7

### (8) ஸந்நிபாதாதிஸாரத்தின் தோற்றம் காரணம்

மிக்க குளிர்ச்சி, மிக்க எண்ணெய்ப்பசை, மிக்க வறட்சி, மிக்க உஷ்ணம், மிக்க குருகுணம் மிகவும் தீய்ந்து போனதும் மிகவும் கடின மானதுமான உணவு வகைகளை உண்பது, மேலும் தாறுமாறான உணவு முரண்பட்ட உணவு ஒவ்வாத உணவு பட்டினி கிடத்தல் நேரங் கடந்து உண்ணுதல் பத்தியம் அபத்தியம் என்று பாராமல் உணவு உண்பது கேடடைந்த கள் நீர் இவற்றைப் பருகுவது அதிக அளவில் கள் குடிப்பது பஞ்சகர்ம முறையை முறையின்றி செய்தல் முறை தவறிச் சிகிச்சை செய்தல் நேர்மாறான பணிவிடை நெருப்பு வெயில் காற்று இவற்றால் அதிகமாகத் தாக்கப்படுதல் நீரை அதிகமாகப் பயன்படுத்துவது உறங்காதிருத்தல் பகலில் உறங்குதல் சிறுநீர் மலம் போன்றவற்றின் வேகத்தைத் தடுத்தல் மேலும் இயற்கைக்கு மாறுபட்ட பருவங்கள் தன் வலிமைக்கு மீறி உழைத்தல் அச்சம் துக்கம் மனவெழுச்சி இவற்றை அதிகமாக அடைதல் கிருமி உடல் உருக்கி நோய் காய்ச்சல் மூலநோய் போன்றவற்றால் உடல் மிகவும் இளைத்துப் போதல் இத்தகைய தன்மைகள் உள்ளவனுக்கு உடலில் ஒரே சமயத்தில் வாதம் பித்தம் கபம் இம்மூன்று தோஷங்களும் சீற்றமடைகின்றது. சீற்றமடைந்த இம்மூன்று தோஷங்களும் மறுபடியும் சடராக்கினியின் வலிமையைக் குறைத்து சீரணப்பையில் சென்று தோஷங்களின் முழு இலக்கணங்களுடன் கூடி அதிஸார நோயைத் தோற்றுவிக்கின்றன. மேலும் முற்கூறிய சீற்றம் அடைந்த தோஷங்கள் இரத்தம் முதலிய தாதுக்களை அதிக அளவில் கேடடையச் செய்து அந்தந்த தாதுக்களுக்கும் தோஷங்களுக்கும் உரிய

இயற்கையான நிறங்களுடன் கூடிய அதிஸாரத்தை ஏற்படுத்துகின்றன. இரத்தம் முதலான தாதுக்கள் அதிக அளவில் கேடு அடைந்திருந்தால் மஞ்சள் பச்சை நீலம் மஞ்சிஷ்டி இவைகளுக்கு ஒப்பான நிறம் புலால் போன்ற நிறம் கருப்பு வெண்மை பன்றியின் கொழுப்பு போன்ற நிறம் ஆகிய நிறங்களை மாறி மாறி கொண்டு எப்பொழுதும் வலியுடனும் அல்லது வலியில்லாமலும் மலம் கழியும். மேலும் உருண்டையாகவும் ஒரு சமயம் சீரணமாகாமலும் சீரணமடைந்தும் மலம் வெளியேறும். இத்துன்பங்களுடன் கூடிய நோயாளியின் மாமிசம் இரத்தம் வலிமை இவை மாத்திரம் அதிக அளவில் குறையாது. ஆனால் சடராக்கினிக்குறைவும் சுவையின்மையும் ஏற்படும். இவ்விதமாக உள்ள ஸந்நிபாத அதிஸாரம் மிக்க கஷ்டத்துடன் தீர்க்கக் கூடியது என்று அறிய வேண்டும். 8

**9. தீர்க்க இயலாத அதிஸார நோய்**

இனி கூறப்போகிற நிறங்களுடனும் துன்பங்களுடனும் தோன்றிய அதிஸார நோயை சிகிச்சைக்குக் கட்டுப்படாதது என்று கருதி சிகிச்சையை கைவிடவேண்டும்.

நீக்க இயலாத அதிஸார நோயாளியின் மலம் தூய்மையான இரத்தத்தின நிறம் கல்லீரல் நிறம் மேதஸ் (கொழுப்பு) மாமிசம் கழுவிய தண்ணீர் இவற்றில் ஒன்றின் நிறம் தயிர் நெய் மஜ்ஜை (எலும்புக்குள் உள்ளசோறு) எண்ணெய் வஸா (நிணநீர்) பால் *வேஸவாரம் இவற்றின் நிறம் கொண்டும் மேலும் மிக்க நீலம் மிக்க இரத்தம் மிக்க கருநிறம் கொண்டும் நீர் போன்று தெளிவாகவும் தவளையின் நிறம் போன்றும் காணப்படும். மேலும் மிகவும் பிசுபிசுப்புடனும் பச்சை நீலம் கூடிய கஷாய நிறத்துடனும் பல நிறங்கள் கலந்துள்ளதாயும் பிசுபிசுப்புடனும் நூல் போன்றும் மயில் தோகை போன்றும் பல நிறங்களுடனும் காணப்படும். நோயாளியின் இத்தகைய மலம் அழுகிப்போன கோழியின் நாற்றம் கொண்டும் சீழுடனும் பச்சை மீன்வாடையுடனும் இருக்கும். மலத்தின் மேல் அதிக ஈக்கள் உட்கார்ந்திருக்கும். மலத்துவாரத்தில் அழுகிப்போன மலத்துடன் பல தாதுக்களின் ஒழுக்கும் அதிகமாகக் காணப்படும். மலம் துளித் துளியாகவோ அல்லது மலமின்றி நீர்மட்டுமோ ஒழுகும். நாவறட்சி எரிச்சல் காய்ச்சல் தலைசுற்றல் தமகசுவாஸம் (தீவிரமான இருமல்) விக்கல் மேல் மூச்சு ஆகிய தொல்லைகள் பின் தொடர்தலும் அடிக்கடி வேதனையும் வேதனையின்றி இருத்தலும்

---

*வேஸவாரம் — எலும்பில்லாத மாமிசத்தை வேகவைத்து அரைத்து அரிசித் திப்பிலி சுக்கு மிளகு வெல்லம் நெய் இவற்றுடன் கலந்து தயாரிக்கப்படும் தின்பண்டம்.

ஆஸனவாய் தனது இடத்தை விட்டு நழுவிப் போதலும் அதன் உள் பிடிப்பு வளையங்கள் நழுவிப் போதலும் வலிமை மாமிசம் இரத்தம் இவை அதிக அளவில் குறைந்து போதலும் உடல் முழுவதிலும் உள்ள மூட்டுக்களிலும் எலும்புகளிலும் வேதனை சுவையின்மை இருப்புக் கொள்ளாமை எதிலும் விருப்பமின்மை பிதற்றல் மூர்ச்சை திடீரென்று இச்செயல்கள் மறைந்து போதல் ஆகியவையும் இதன் இலக்கணங்களாகும். இவ்விதமாக (நிறங்களையும் தொல்லைகளையும் கொண்ட) இலக்கணங்களுள்ள ஸந்நிபாத அதிஸார நோய் தீர்க்க இயலாதது என்று அறிந்து கொள்ள வேண்டும் இவ்வாறு ஸந்நிபாத அதிஸாரத்தினுடைய தோற்றமும் இலக்கணமும் கூறப்பட்டன. 9

ஸந்நிபாதத்தினால் தோன்றிய அதிஸார நோயையும் மற்ற அதிஸார நோய்களையும் தீர்க்க முடியாத நிலை ஏற்படுவதற்கு முன்பே அந்நோய்களின் முக்கியமான தோஷங்களை அறிந்தும் அவற்றின் காரணம் *உபசயம் இவற்றை நன்கு ஆராய்ந்தும் மருத்துவன் சிகிச்சை செய்ய வேண்டும். 10

## 10. [1]ஆகந்துக அதிஸாரம்

மனம் சம்பந்தமான (மானஸிக) விகாரங்களான அச்சம் துயரம் இவற்றால் ஏற்படக்கூடிய தனித்தனியான இரண்டு வகை அதிஸாரங்களுக்கும் வாதாதிஸாரத்திற்குக் கூறப்பட்ட இலக்கணங்களே பொருந்தும். 11

பயம் துக்கம் இவற்றால் வாயு சீற்றம் அடைகிறது. இவற்றிற்கு வாதத்தை நீக்கக் கூடிய சிகிச்சை முறையையும் மனத்திற்கு மகிழ்ச்சியையும் ஆறுதலையும் அளிக்கக் கூடிய சிகிச்சை முறையையும் செய்விக்க வேண்டும். 12

இவ்வாறு தீர்க்கக்கூடிய ஆறுவகையான அதிஸார நோய்கள் கூறப்பட்டன. அவைகட்குக் கூறப்போகும் சிகிச்சை முறைகளைக் கேட்பாயாக. 13

நன்றாக வேகாத உணவு [2](விதக்தாஹாரம்) வகையினால் ஏற்படுகிற தோஷங்கள் சீற்றமடைந்து உடலில் குவிந்து

---

* உபசயம் - நோயைத் தணிவடையச் செய்யும் முறை

1. ஆகந்துகம் - எதிர்பாராதது.

2. விதக்தாஹாரம் - தீய்ந்து போன உணவு.

அதிஸார நோயைத் தோற்றுவிக்கின்றன. அதனால் முதன் முதலில் அத்தோஷங்களை வெளியேற்றுவதற்கு உரிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 14

ஆமாதிஸார நோயில் முதலில் மலத்தைக் கட்டக் கூடிய மருந்து களைப் பயன்படுத்தக் கூடாது. ஆமாதிஸாரத்தில் முதலில் மருந்து களால் மலத்தைக் கட்டுப்படுத்தினால் தடைப்பட்டுப் போன ஆமம் ([1]தண்டலஸகம்) உடலில் கொம்பு போன்று அசைவற்றிருந்து வயிற்றுஉப்புசம் கிரஹிணீ மூலநோய் வீக்கம் சோகை .மண்ணீரல் நோய் குஷ்டம் குன்மம் உதரம் காய்ச்சல் ஆகிய நோய்களைத் தோற்றுவிக்கும். 15 - 16

ஆகையால் தோஷங்கள் கேடடைந்து தாமாகவே போகிற அதிஸார நோயை மருத்துவன் சிகிச்சை செய்யாமல் விட்டுவிட வேண்டும். ஒருவேளை மலம் மிகவும் கஷ்டப்பட்டு வெளியேறினால் அத்தோஷங்களை வெளியேற்ற கடுக்காயைப் பயன்படுத்த வேண்டும். 17

கடுக்காயைப் பயன்படுத்தி தோஷங்கள் வெளியேறிய பிறகு அதிஸார நோய் தணிவடைகிறது. வயிறு சற்று தளர்கிறது. உடலில் இலேசுத் தன்மையும் சடராக்கினி வளர்ச்சியும் ஏற்படுகின்றன. 18

அதிஸார நோயில் தோஷங்கள் நடுநிலையைப் பெற்றிருந்தால் சடராக்கினியைத் தூண்டக்கூடியவையும், எளிதில் ஜரிக்காத உணவை ஜீரணமாக்கக் கூடியவையுமான பொருள்களால் (தீபன, பாசன) தயாரித்த [2]பிரமத்யா எனப்படும் கஷாயத்தை பயன்படுத்த வேண்டும். தோஷங்கள் சிறிதளவே சீற்றம் பெற்றிருந்தால் நோயாளியைப் பட்டினி கிடக்கச் செய்ய வேண்டும். 19

**11. பிரமத்யா வகைகள்**

(1) அரிசித்திப்பிலி சுக்கு தனியா ஓமம் கடுக்காய் வசம்பு (2) வெட்டிவேர் பெருங்கோரைக்கிழங்கு வில்வப்பழத்தின் கோது சுக்கு தனியா (3) ஓரிலை நெருஞ்சில் மஞ்ஜிஷ்டி கண்டங்கத்திரிவேர் இக்கூட்டுப் பொருள்களில் ஒன்றைமுறைப்படி நீரில் பக்குவம்செய்து மத்யம தோஷத்தினால் தோன்றிய அதிஸார நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும்.

---

1. தண்டலஸகம் - கொம்புபோன்று அசைவற்று இருத்தல்.
2. பிரமத்யா — ஒரு பங்கு மருந்துப் பொருளை எட்டுமடங்கு தண்ணீரில் இட்டுக் காய்ச்சப்படும் கஷாயம்.

இவ்வாறு அதிஸார நோய்க்கு மூன்று வகையான பிரமத்யாக்கள் கூறப்பட்டன. 20 - 21

### 12. ஆமாதிஸாரத்திற்குச் சீரணம் செய்யக் கூடிய நீர்

வசம்பு அதிவிடயம், கோரைக்கிழங்குபற்பாடகம், விளாமிச்சவேர் (ஹ்ரீபேரம்) சுக்கு இந்த கூட்டுகளில் ஒன்றால் ஷடாங்க கஷாயம் முறைப்படி தயார் செய்த நீரை ஆமாதிஸாரத்தில் சீரணம் ஆவதற்காகக் கொடுக்க வேண்டும். 22

பசியினால் வருந்துகிற நோயாளிக்கு உணவுகாலம் அறிந்து எளிதில் சீரணமாகக் கூடிய உணவை உண்ணக் கொடுக்க வேண்டும். இதனால் அவனுக்கு உணவில் சுவையும் சடராக்கினி வலிமையும் விரைவில் ஏற்படுகின்றன. 23

முதலில் நோயாளிக்கு ஒத்துக் கொள்ளக் கூடிய மோர் காடி கஞ்சி [1]தர்ப்பணம் ஸுரை தேன் இவற்றில் ஒன்றை இலகுவான உணவுடன் பயன்படுத்த வேண்டும். 24

பிறகு சடராக்கினியைத் தூண்டக்கூடியதும் மலத்தைக் கட்டக் கூடியவையுமான பொருள்களில் தயாரித்த [2]யவாகூ (கஞ்சி) [3]விலேபீ [4]கடம் [5]யூஷம் மாமிசரஸம் சோறு இவற்றை முறைப்படி பயன்படுத்த வேண்டும். 25

### 13. சடராக்கினியைத் தூண்டக்கூடிய, மலத்தைக் கட்டக் கூடிய பொருள்கள்

மூவிலை ஓரிலை முள்ளுக்கத்திரி கண்டங்கத்திரி சித்தாமுட்டி நெரிஞ்சில் வில்வம் வட்டத்திருப்பி சுக்கு தனியா பூலாங்கிழங்கு புரசு கொட்டைக்கரந்தை வசம்பு சீரகம் அரிசித்திப்பிலி குரோசானி ஓமம் கண்டந்திப்பிலி கொடிவேலி யானைத்திப்பிலி புளிப்புமாதுளை பெருங்காயம் பிடலவணம் இந்துப்பு ஆகிய

---

1. தர்ப்பணம்— நீரில் கலந்த ஸத்துமா
2. யவாகூ — அரிசி முதலியன ஒரு பங்கும் ஆறு பங்கு தண்ணீரும் சேர்ந்த கஞ்சி
3. விலேபீ —அரிசி முதலியவற்றுடன் 4 மடங்கு தண்ணீர் சேர்ந்த கஞ்சி
4. கடம் —ஒரு வகை கஞ்சி. 34வது செய்யுளில் காண்க.
5. யூஷம் —ஒரு மடங்கு மருந்து பொருளும் 16பலம் தண்ணீரும் சேர்ந்த கஞ்சி.

இப்பொருள்களைத் தனித்தனியாகவோ ஒன்றாகச் சேர்த்தோ கஷாயம் செய்து உணவிலும் குடிநீரிலும் பயன்படுத்த வேண்டும். இந்தக் கூட்டுப் பொருள் வாதகபத்தை நீக்கும். சடராக்கினியைத் தூண்டி விடுவதுடன் சீரண சக்தியையும் உண்டுபண்ணும். வலிமையைக் கொடுக்கும். மலத்தையும் கட்டுப்படுத்தும். ஆகையால் அதிஸார நோய்களுக்கு இவை மிகவும் சிறந்தவை. 26 - 29

## 14. அதிஸார நோய்க்குக் கீரை வகைகள்

ஆமதோஷம் பக்குவம் அடைந்து வயிற்றில் வலியுடனும் கபத்துடனும் தடைப்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகவோ முக்கி முக்கியோ பல தடவை மலம் வெளியேறும். அதிஸார நோயாளிக்கு முள்ளங்கி இலந்தம்பழம் இவற்றில் தயார் செய்த கஞ்சி அல்லது பசலைக்கீரை பாலுள்ளகீரை வகைகள் குரோசானி ஓமம் (வாஸ்துக கீரை) சக்கரவர்த்தி கீரை (ஸுவர்ச்சலைக்கீரை) ஸூர்யகாந்தி (சஞ்சூ) கார்போக அரிசிக்கீரை பூலாங்கிழங்கின் இலை வெள்ளரிக் காய்இலை கீரைப்பாலை சிறபிடம் லோணிகா வட்டத்திருப்பி இவற்றின் கீரைகள் அல்லது உலர்ந்த கீரைகள் இவற்றை தயிர் மாதுளஞ்சாறு இவற்றில் பக்குவம் செய்து பெருமளவில் நெய் எண்ணெய் சேர்த்து உணவுடன் உண்ணக் கொடுக்க வேண்டும். 30 - 33

## 15. [1]கடயூஷம்

வில்வக்காய்க்கதுப்பின்கல்கம் (விழுது) எள்ளுக் கல்கம் இவ்விரண்டையும் சம அளவில் எடுத்துப் புளிப்புத் தயிரின் ஏட்டையும் பெருமளவில் நெய் அல்லது எண்ணெயையும் சேர்த்துத் தயாரித்த கடயூஷத்தை உண்ணக் கொடுத்தால் பிரவாஹிகா என்னும் நோய் நீங்கும். 34

மேலும் யவ அரிசி பயறு உளுந்து சம்பா அரிசி எள்ளு இலந்தை வில்வப்பிஞ்சு இப்பொருள்களுடன் முறைப்படி தான்யயூஷத்தைத் தயாரிக்க வேண்டும். அந்தக் கஞ்சியில் நெய் எண்ணெய் இவற்றைக் காய்ச்சிச் சேர்த்துப் புளிப்புத் தயிர் புளிப்புமாதுளம் பழத்தின் ரஸம் இவற்றையும் சேர்த்துச் சம்பா அரிசிச் சோற்றுடன் மலம் குறைந்தும் முகம் உலர்ந்தும் உள்ள அதிஸார நோயாளிக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். 35 - 36

துணை உணவாகத் தயிரின் தெளிவில் எண்ணெயையும் நெய் யையும் சூடாக்கித் தாளித்து அதில் வெல்லத்தையும் சுக்குப் பொடி

---

1. கடயூஷம் — உணவுப் பொருள்கள், மருந்துப் பொருள்கள் புளிப்பு மோர் சேர்த்துத் தயார் செய்யப்படும் கஞ்சி.

யையும் சேர்த்து உண்ணக் கொடுக்கவேண்டும். அல்லது ஸௌரை என்னும் மதுவுடன் எண்ணெயிலும் நெய்யிலும் தாளித்து அதில் வெல்லத்தையும் சுக்குப் பொடியையும் சேர்த்து உண்ணக் கொடுக்க வேண்டும். 37

## 16. அதிஸார நோயில் புலாலைப் பயன்படுத்துதல்

புளிப்புச்சுவையுள்ளமாதுளம்பழம் போன்ற பழங்களின் ரஸத்தை நெய்யிலும் எண்ணெயிலும் காய்ச்சியும் அல்லது பூண்டின் கஞ்சியை (கிருஞ்ஜனம்) நெய்யிலும் எண்ணெயிலும் வறுத்தும் அல்லது லோபாகம் என்னும் பிராணியின் மாமிசரஸத்தைப் புளிப்பு மாதுளம் போன்ற பழங்களின் ரஸத்தைச் சேர்த்தும் அல்லது ஆமையின் மாமிசத்தை நெய் சேர்த்தும் எண்ணெய்ப்பசை உள்ள தாகச் செய்து புளிப்பு மாதுளம் போன்ற பழங்களின் ரஸத்தைச் சேர்த்தும் தயாரித்துப் பயன்படுத்த வேண்டும். 38

மயில் தித்திரிப்பறவை கோழி வர்த்தகப்பறவை இவற்றின் மாமிசத்தை நெய் சேர்த்துப் பக்குவம் செய்து புளிப்பு மாதுளம் போன்ற பழங்களின் ரஸத்தையும் சேர்த்துப் புளிப் பாகச் செய்து சம்பா அரிசிச் சோற்றுடன் உண்ணக் கொடுக்க வேண்டும். இதனால் மலக்குறைவினால் தோன்றிய துன்பங்கள் நீங்கும். 39

## 17. மலக்குறைவில் மாமிசரஸம்

ஆட்டு உடலின் நடுப்பாகத்திலுள்ள மாமிசத்திலிருந்து முறைப் படி தயார் செய்த மாமிசரஸத்தைத் துணியில் வடிக்கட்டி அதில் ஆட்டின் இரத்தத்தைச் சேர்த்து அத்துடன் புளிப்பு மாதுளம்பழரசம் தனியா சுக்கு இவற்றின் சூரணம் நெய் இவற்றையும் சேர்த்துப் பக்குவம் செய்க. அதில் சிவப்புச் சம்பாஅரிசிச் சோற்றைச் சேர்த்து உண்ணக் கொடுக்க வேண்டும். உணவு உண்டபிறகு அதே மாமிசரஸத்தைப் பருகக் கொடுக்க வேண்டும். இதனால் மலக்குறைவினால் தோன்றிய நோய்கள் தணிவடைகின்றன. 40 - 41

## 18. ஆஸனவாய் கீழிறங்குதலுக்குப் (அண்டுதள்ளுதல்) பணிவிடை

மலத்வாரத்தில் (ஆஸனவாயில்) வலியுடனும் மலம் பக்குவ மடைந்து வெளியேறுவதுடன் ஆஸனவாய் கீழிறங்கியுள்ள அதிஸார நோயாளிக்குப் புளிப்புச்சுவையுள்ள பொருள்களில் நெய் சேர்த்துப் பருகக் கொடுக்க வேண்டும். அல்லது அதே நெய்யினால் எண்ணெய் வஸ்தி கொடுக்க வேண்டும். 42

## 19. சாங்கேரி கிருதம்

புளியாரை இலந்தை புளிப்புத்தயிர் சுக்கு யவக்ஷாரம் இவற்றால் முறைப்படி தயாரித்த நெய்யைப் பருகக் கொடுத்தால் ஆஸனவாய் வெளியேறியதால் தோன்றிய வேதனைகள் நீங்கும். 43

## 20. சவ்யாதி கிருதம்

முன் கூறப்பட்ட நெய்யில் (கிருதத்தில்) செவ்வியம் கண்டந் திப்பிலி சுக்கு அரிசித்திப்பிலி மிளகு பிட உப்பு புளிப்பு மாதுளம் விதை தனியா சீரகம் கொடிவேலி இவற்றை விழுதாகச் சேர்த்து முறைப்படி தயார் செய்த புளிப்பான இந்த நெய்யை நிலைமைக்கு ஏற்றவாறு பருகக் கொடுக்க வேண்டும். 44

## 21. *தசமூலாதி வஸ்தி

தசமூலப்பொருள்களின் கஷாயத்தில் வில்வக்கோதை விழுதாகச் சேர்த்து தயாரித்த நெய்யை எண்ணெய் வஸ்தியாகப் பயன் படுத்த வேண்டும். அல்லது பூலாங்கிழங்கு சதகுப்பை வில்வக்கோது அல்லது வசம்பு அல்லது கொடிவேலி இவற்றின் விழுதில் முறைப்படி தயார் செய்த நெய்யை அனுவாஸன வஸ்தியாக (எண்ணெய் வஸ்தி யாக)ப் பயன்படுத்துக. 45

ஆஸனவாய் கீழிறங்கி அசைவற்றுள்ள நோயாளிக்கு முதலில் எண்ணெய்ச் சிகிச்சையும் வியர்ப்பிக்கும் சிகிச்சையும் செய்து ஆஸனவாய் மென்மை அடைந்த பிறகு **பிசுவினால் வெளிவந்த ஆஸனவாயை உள்ளுக்குள் அழுத்திச் செலுத்த வேண்டும். 46

அதிஸார நோயினால் [1]அபானவாயுவும் மலமும் தடைப்பட்டு வெளிவருதல் வலி பிரவாஹிகா இரத்தமும் கபமும் அதிக அளவில் வெளியேறுதல் அதிகாவறட்சி முதலிய தன்மைகளைக் கொண்ட அதிஸார நோயாளிக்கு நிறைய பாலைக் குடிக்கக் கொடுக்க வேண்டும். அல்லது நெய்யையும் எண்ணெயையும் சமஅளவு எடுத்துப் பருகச் செய்து அதன்பிறகு அப்பொழுதே கறந்த சூடான பாலை வயிறு நிறைய பருகக் கொடுக்க வேண்டும். ஆமணக்கு வேருடன் தயாரித்த பாலையோ இளம் வில்வத்துடன் தயாரித்த பாலையோ பருகக் கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் இரத்தம் வெளியேறுதல்

---

* தசமூலப்பொருள்கள்:- 1.முன்னை 2.குமிழம் 3.பாதிரி 4. காட்டுவாகை 5.வில்வம் 6.ஓரிலை 7.மூவிலை 8.நெரிஞ்சில் 9.கண்டங்கத்திரி 10 முள்ளுக்கத்திரி.

** பிசு — எண்ணெயில் அல்லது கஷாயத்தில் தோய்த்த பஞ்சு.

1. அபான வாயு - ஆசன வாய் வழியாக வெளியேறும் ஒருவகை காற்று.

கபத்துடன் மலம் வெளியேறுதல் வலி பிரவாஹிகா மலக்கட்டு இவை தணிவடைகின்றன. 47 - 49

## 22. பித்தாதிஸாரத்திற்குச் சிகிச்சை

பித்தத்திற்கு உண்டான காரணம் *உபசயம் அதன் இலக்கணம் ஆம தோஷம் இவற்றால் தோன்றிய பித்தாதிஸார நோயாளிககு அவனுடையவலிமைக்கு ஏற்றவாறு பட்டினி இருக்கச் செய்துசீரணம் ஆகக்கூடிய பொருள்களைப் பயன் படுத்த வேண்டும் பித்தாதிஸார நோயில் நாவறட்சி அதிகமாக இருக்குமாகில் கோரைக்கிழங்கு பற்பாடகம் விளாமிச்சவேர் நன்னாரி சந்தனம் நிலவேம்பு வெட்டிவேர் இவற்றைக் கொண்டு ஷடங்க கஷாய முறைப்படி தயார் செய்த நீரைப் பருகக் கொடுக்க வேண்டும். நோயாளியை இந்நீரைப் பருகச் செய்த பிறகு உணவு வேளையில் சித்தாமுட்டி பேராமுட்டி பயறு ஓரிலை மூவிலை முள்ளுக்கத்திரி கண்டங்கத்திரி தண்ணீர்விட்டான் கிழங்கு நெரிஞ்சில் இப்பொருள்களில் ஷடங்க கஷாய முறைப்படி தயார்செய்த கஷாயத்தில் கஞ்சி **மண்டம் அல்லது தர்ப்பணம் (நீரில் குழப்பிய சத்துமா) போன்ற பொருள்களை (உடலுக்கும் நோயின் நிலைமைக்கும்) ஏற்றவாறு பயன்படுத்த வேண்டும். சிறுபயறு பெரும்பயறு அரேணுகம் காட்டுப்பயறு துவரை இவற்றைச் சேர்த்துத் தயாரித்த கஞ்சியையோ லாவகம் கபிஞ்ஜலம் என்ற பறவைகள் முயல் மான் கருப்புமான் கருநிறவாலுள்ளமான் இவற்றின் மாமிசரஸத்தையோ அதில் புளிப்பு மாதுளை போன்ற புளிப்புச் சுவையுள்ள பொருள்களுடன் காடியாகச் செய்தோ அவ் விதம் செய்யாமலோ உள்ள மாமிசரஸத்தையோ உண்ணச் செய்து சிறிது சிறிதாகச் சடராக்கினிக்கு வளர்ச்சியை உண்டு பண்ண வேண்டும். இவ்வாறு செய்தும் பித்தாதிஸாரம் தணியாவிடில் சடராக் கினியை வளர்க்கக் கூடியவையும் (உபசமனத்தை) தணிவை உண்டு பண்ணக் கூடியவையும் மலத்தைக் கட்டக்கூடியவையுமான பொருள் களைப் பயன்படுத்த வேண்டும். 50

## 23. அதிவிடயமருந்து

அதிவிடயம் வெட்பாலரிசி வெட்பாலமரப்பட்டை இவற்றை விழுதாகச் செய்து தேன்கலந்து அரிசி களைந்த நீருடன் பருகச் செய் தால் பித்தாதிஸாரம் தணியும். 51

---

* உபசயம் — உடலுக்கு ஏற்ற பொருள்களால் நோயைத் தணிக்கும் முறை

** மண்டம் — கஞ்சியின் தெளிவு

## 24. பித்தாதிஸாரத்தை நீக்கக் கூடிய ஆறுவகை மருந்துகள்

*(1) நிலவேம்பு கோரைக்கிழங்கு வெட்பாலரிசி ரஸாஞ்ஜனம் (2) வில்வவேர் மரமஞ்சள் இலவங்கப்பட்டை விளாமிச்சவேர் சிறுகாஞ்சொரி (3) செஞ்சந்தனம் தாமரைத்தண்டு சுக்கு பாச்சோத்தி கருநெய்தல் (4) கருப்புள்ளு இலவம்பிசின் பாச்சோத்தி தொட்டால் சுருங்கி செந்தாமரை கரு நெய்தல் (5) கருநெய்தல் காட்டாத்திப்பூ மாதுளைத் தோல் சுக்கு (6) கட்பலம் சுக்கு வட்டத்திருப்பி இந்த ஆறு வகையான கூட்டுப்பொருள்களில் ஒன்றைத்தூளாகச் செய்தோ விழுதாகச் செய்தோ தேன் சேர்த்து அரிசி களைந்த நீருடன் பேயா என்னும் கஞ்சி தயாரித்து பருகக்கொடுக்க வேண்டும். ஆறுவகையாகக் கூறப்பட்ட இந்த மருந்து முறைகள் பித்தத்தினால் தோன்றிய அதிஸாரத்தைப் போக்கும். 52 - 55*

## 25 அதிஸார நோய்க்குப் புலால்

*இம்மருந்துகளைப் பயன்படுத்தி நன்றாகச் சீரணமான பிறகு நோயாளியின் இயற்கை நிலைக்குத் தக்கவாறு மலத்தைக் கட்டக்கூடிய பொருள்களுடன் கூடிய மாமிச ரஸத்துடன் பழமையான செஞ்சம்பா அரிசிச் சோற்றை உண்ணச் செய்வது சிறந்தது. 56*

## 26. பித்தாதிஸார நோய்க்கு ஆட்டுப்பால்

*பித்தாதிஸாரநோயாளி வெள்ளாட்டுப்பாலை விடாமல் சாப்பிட்டு வந்தால் அவனது சடராக்கினி வளர்ச்சி பெற்று விரைவில் அதிஸார நோய் தணிவடையும். அவனது வலிமையும் பொலிவும் வளர்ச்சியுறும். 57*

## 27. பித்தாதிஸாரத்தில் பசும்பாலைப் பயன்படுத்துதல்

*பித்தாதிஸாரத்தில் சடராக்கினி வளர்ச்சி பெற்று நோயாளி வலிமையுடனிருந்தும் அவனுடைய உடலில் தோஷமும் அதிகமாய் மேற்கூறிய சிகிச்சையினால் பித்தாதிஸாரம் தணிவடையாவிடில் பசும்பாலைக் குடிக்கச் செய்து நோயாளியை மலங்கழிக்கச் செய்ய வேண்டும். 58*

*மேலும் புரசின்விதையின் கஷாயத்தில் பசும்பால் சேர்த்துப் பித்தாதிஸார நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும். பிறகு நோயாளியின் வலிமைக்கு ஏற்றவாறு கொஞ்சம் சூடானபாலைவயிறு நிறையப்பருகச் செய்ய வேண்டும். இதனால் மலம் வெளியேறிப் பித்தாதிஸாரநோய் தணிவடைகிறது. (2) புரசவிதையைப் போன்று *திராயமாணாவைக் கஷாயம் செய்து பால் சேர்த்து மலங்*

---

* திராயமாணா-பிரம்மி இலை அல்லது கடுக்காய் தோல்

கழிக்கக் குடிக்கச் செய்ய வேண்டும். பிறகு வலிமைக்கு ஏற்ற வாறு சூடான பசும்பாலை வயிறு நிறைய பருகச் செய்ய வேண்டும். 59 - 60

## 28. பித்தாதிஸாரத்தில் எண்ணெய் வஸ்தி

மலம் கழிக்கக் கொடுத்து மலம் வெளியேறியும் *ஸம்ஸர்ஜன முறையைக் கையாண்ட பிறகும் வலி தொடர்ச்சியாக இருக்கு மாயின் விரைவில் தோஷத்திற்கு ஏற்றவாறு எண்ணெய் வஸ்தி கொடுக்க வேண்டும். 61

## 29. **சதபுஷ்பாதி அனுவாஸன வஸ்தி

சதகுப்பை தண்ணீர் விட்டான்கிழங்கு இவற்றின் விழுது பால் அதிமதுரம் வில்வம் இவற்றின் கல்கம் (விழுது) இவற்றிற்கு நான்கில் ஒரு பங்கு எள் எண்ணெய் நெய் அனைத்தையும் சேர்த்து முறைப்படி தயார் செய்து எண்ணெய் வஸ்தியாகக் கொடுக்க வேண்டும். 62

## 30. பித்தாதிஸாரத்திற்குப் பிச்சாவஸ்தி

பித்தாதிஸார நோயில் எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்தி ஸம்ஸர்ஜன முறையைக் கையாண்ட பிறகும் அதிஸாரம் தொடர்ச சியாக இருக்குமேயாகில் பிச்சாவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 63

## 31. [1]பிச்சாவஸ்தி

உலராத இலவமரத்தின் பச்சைமொட்டு மேல் புதிய பச்சையான தர்ப்பை இலைகளைச் சுற்றி அதன் மேல் கருப்பு மண்ணைப் பூசி உருண்டையாகச் செய்து அதை வறட்டி நெருப்பில் வாட்ட வேண்டும். மண் உலர்ந்துபோன பிறகு உருண்டையை நெருப்பிலிருந்து வெளியில் எடுத்து உடைத்துத் தர்ப்பையை நீக்கிவிட்டு அந்த மொட்டு களை மட்டும் தனியாக எடுத்துக்கொள்ளவேண்டும். அதை உரலில் இட்டு இடித்து ஒரு பலம் சாறு எடுத்துக் கொண்டு சூடான ஒரு ***பிரஸ்தம் பால் சேர்த்துத் துணியில் வடிக்கட்டிக் கொள்ள வேண்டும். இந்தப்பாலில் தோஷத்திற்கும் நோயாளியின் வலிமைக்கும் தகுந்த வாறு எண்ணெய் நெய் சேர்த்து அதிமதுரத்தின் விழுதையும் சேர்த்

* ஸம்ஸர்ஜனம்- மலங்களை வெளிப்படுத்தும் (சோதனை) சிகிச்சை செய்து கொண்டவர்களுக்கான கஞ்சி பருகும் முறைகள்

** சதபுஷ்பா — சதகுப்பை

*** பிரஸ்தம் — பதினாறு பலம்

1. பிச்சாவஸ்தி - உடலிலுள்ள தாதுக்களுக்கு களிப்புணடாக்கும ஒரு வகை வஸ்தி.

துப் பித்தாதிஸார நோயினால் வருந்துகிற நோயாளியின் உடலில் எண்ணெயைத் தேய்த்து இந்த பிச்சாவஸ்தியை ஆஸனவாயில் செலுத்த வேண்டும். இதனால் மலமும் வஸ்திப் பொருளும் வெளி வந்த பிறகு நோயாளியைக் குளிக்கச் செய்து பால் அல்லது காற்றடர்ந்த காடுகளில் வாழும் பறவை அல்லது பிராணிகளின் மாமிசரஸத்துடன் சம்பா அரிசி போன்ற நன்மை பயக்கக்கூடிய சோற்றை உண்ணக் கொடுக்க வேண்டும். இந்தப் பிச்சாவஸ்தியைப் பயன்படுத்துவதனால் முற்றிப்போன பித்தாதிஸாரம் காய்ச்சல் வீக்கம் குன்மம் நாள்பட்ட அதிஸாரம் நாள்பட்ட கிரஹணி நோய் இவை விரைவில் நீங்குகின்றன. மேலும் மலம் கழிக்கக் கொடுத்தும் கஷாயவஸ்தி செய்தும் இவற்றின் *அதியோகத்தினால் தோன்றக் கூடிய தொல்லைகள் பிச்சாவஸ்தியைப் பயன்படுத்துவதனால் விரைவில் தணிவடை கின்றன. 64 - 68

## 32. இரத்தாதிஸாரத்திற்குக் காரணம்

பித்தாதிஸார நோயாளி, பித்தாதிஸாரத்தில் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையும் உணவையும் நடைமுறைகளையும் கடைப்பிடிக்காமல் பித்தத்தை வளர்க்கக் கூடிய உணவு குடி நீர்வகைகளை அதிக அளவு பயன்படுத்துவதனால் உடலில் பெருமளவில் பித்தம் வளர்ச்சி பெற்று இரத்தத்தைக்கேடையைச் செய்து இரத்தாதிஸாரம் (இரத்தப்போக்கு) என்னும் நோய் தோன்றும். இந்நோயில் மிக்க நாவறட்சி வலி எரிச்சல் ஆஸனவாயில் கடுமையான புண் இவை ஏற்படுகின்றன. 69-70

## 33. இரத்தாதிஸாரத்திற்குச் சிகிச்சை

நாவறட்சி போன்ற துன்பங்களுடன்கூடிய இரத்தாதிஸார நோயாளிக்குத் தேனையும் சர்க்கரையையும் சேர்த்துக் குளிர்ந்த ஆட்டுப் பாலைக் கொடுக்க வேண்டும். உணவில் துணை உணவாகத் தேனையும் சர்க்கரையையும் சேர்த்துக் குளிர்ந்த ஆட்டுப் பாலைப் பயன்படுத்த வேண்டும். ஆஸனவாயைக் கழுவுவதற்கும் ஆட்டுப் பாலில் தேனையும் சர்க்கரையையும் சேர்த்துப் பயன்படுத்துக. 71

மேலும் இரத்தாதிஸார நோயாளிக்கு சிவந்த சம்பா அரிசிச் சோற்று டன் குளிர்ந்த ஆட்டுப்பால் தேன் சர்க்கரை இவற்றையும் சேர்த்து உண்ணக் கொடுக்க வேண்டும். அல்லது புறா போன்ற பறவைகளின் மாமிசரசத்தை நெய்யில் தயாரித்து நெய்யும் சர்க்கரையும் சேர்த்து அதில் சம்பாஅரிசிச்சோற்றையும் சேர்த்து உண்ணக் கொடுக்க வேண்டும். 72

---

* அதியோகம் — மருந்துகளை அதிகமாகப் பயன்படுத்தல்

## 34. இரத்தாதிஸாரத்தில் புலாலைப் பயன்படுத்துதல்

காற்றடர்ந்த காடுகளில் வாழ்கின்ற சீதவீர்யமுள்ள முயல் போன்ற பிராணிகளுடைய பறவைகளுடைய மாமிச ரஸத்தில் நெய்யையும் சர்க்கரையையும் சேர்த்து அதில் புளிப்புச் சுவையுள்ள மாதுளம் பழம் போன்ற புளிப்புச்சுவையுள்ள பழங்களின் ரஸத்தைச் சேர்க்காமல் சிவப்பு சம்பா அரிசிச் சோற்றை நெய் சேர்த்து உண்ணக் கொடுக்க வேண்டும். 73

மேலும் மான் அல்லது ஆடு இவற்றின் புதியதான இரத்தத்தை சூடான நெய் சேர்த்து உண்ணக் கொடுப்பது மிகவும் சிறந்தது. அல்லது குமிழம் பழத்தில் தயாரித்த கஞ்சியில் சிறிதளவு புளிப்பு உள்ள மாதுளம் பழரஸத்தையும் சர்க்கரையையும் சேர்த்துப் பருகச் செய்வது மிகவும் சிறந்தது. 74

## 35. *நீலோத்பலாதியோகம்

கருநெய்தல் இலவம்பிசின் தொட்டால் சுருங்கி தாமரைக்கேசரம் இப்பொருள்களின் சூரணத்தை இரத்தாதிஸார நோயாளிக்கு ஆட்டுப் பாலுடன் குடிக்கக் கொடுக்கவும். இந்த மருந்து சீரணமான பிறகு ஆட்டுப்பாலுடன் சிவப்புச் சம்பா அரிசிச் சோற்றைஉண்ணக் கொடுக்க வேண்டும். நோயாளி மிக்க வலிமை குறைந்தவனாக இருந்தால் இந்தச் சூரணத்தை ஆட்டுப்பாலில் பருகச் செய்த பிறகு விரைவில் ஆட்டுப்பாலுடன் சம்பா அரிசிச்சோற்றை உண்ணச் செய்க. அல்லது உணவு உண்பதற்கு முன்பு வெண்ணெயில் தேனையும் சர்க்கரையையும் சேர்த்துப் பயன்படுத்துக. 75-76

## 36. இரத்தாதிஸாரத்தைப் போக்கக் கூடிய மாமிசரஸம்

பாலைக் கடைந்து எடுத்த வெண்ணையை காய்ச்சியநெய்யுடன் சிட்டுக்குருவி (கபிஞ்ஜலம்) இறைச்சி சாற்றையும் பாலையும் கலந்து உட்கொண்டாலும் அல்லது பாலையே உணவாகக் கொண்டாலும் மூன்று நாட்களில் இரத்தாதிஸார நோய் நீங்கும். 77

## 37. இரத்தாதிஸார நோய்க்கு **சதாவரீகல்கம்

இரத்தாதிஸாரநோயாளியை தண்ணீர் விட்டான்கிழங்கின் விழுதைப் பாலில் சேரத்துக் குடிக்கச் செய்து பால் சோறு மட்டும் உண்ணச் செய்தால் இரத்தாதிஸார நோய் விரைவில் நீங்கும். அல்லது நெய்யில் தண்ணீர் விட்டாங்கிழங்கின் கஷாயத்தையும் அதனுடைய

---

* நீலோத்பலம் — கருநெய்தல்

** சதாவரி — தண்ணீர்விட்டான்கிழங்கு

விழுதையும் சேர்த்து முறைப்படி தயாரித்த நெய்யைப் பருகச் செய்து பால்சோறு மட்டும் உண்ணச் செய்தால் அதிஸார நோய் விரைவில் நீங்கும். 78

வெட்பாலரிசியின் விழுதை நெய்யுடன் பக்குவம் செய்து யவாகூ என்னும் கஞ்சியின் தெளிவுடன் பருகச் செய்த பிறகு பேயா என்னும் கஞ்சியை பருகச் செய்ய வேண்டும். 79

## 38. [1]தார்வ்யாதி கிருதம்

மரமஞ்சள்பட்டை வெட்பாலரிசி அரிசித்திப்பிலி சுக்கு திராட்சை கடுகரோகிணி இந்த ஆறு பொருள்களின் விழுதைச் சேர்த்து முறைப் படி தயாரித்த நெய்யை [2]பேயாமண்டம் என்னும் கஞ்சித் தெளிவுடன் சேர்த்துப் பருகக் செய்து கஞ்சி உணவு முறையைகடைபிடிக்கச் செய் தால் மிக்க கடினமான மூன்று தோஷங்களினால் தோன்றிய அதிஸார நோய் விரைவில் தணிவடையும். 80 - 81

சுத்தம் செய்த கருப்பு மண் அதிமதுர சூரணம், சங்கபஸ்பம் இவற்றைச் சமஅளவு எடுத்து ஆட்டு ரத்தத்துடனும், அரிசி களைந்த நீருடனும் தேனையும் சேர்த்துப் பருகினால் இரத்தப் போக்கு நின்றுவிடும். 82

ஞாழல் பூ விழுதைத் தேனுடன் கலந்து அரிசி களைந்த நீருடன் சேர்த்துப்பருகினால் இரத்தாதிஸாரம் விரைவில் நின்றுவிடும். இம் மருந்தைச் சாப்பிடும் போது காற்றடர்ந்த காடுகளில் வாழும் பறவை பிராணிகளுடைய மாமிசரஸத்துடன் சிவப்பு சம்பா அரிசிச் சோற்றைச் சேர்த்து உண்ண வேண்டும். 83

ஒரு பங்கு கருப்பு எள்ளின் விழுதை நான்கு பங்கு சர்க்கரையும் கலந்து ஆட்டுப் பாலுடன் பருகினால் விரைவில் இரத்தப் போக்கு நின்றுவிடும். 84

ஒரு பலம் வெட்பாலரிசியில் கஷாயம் செய்து பருகிக் காற்றடர்ந்த காடுகளில் வாழும் பறவை பிராணிகளின் மாமிசரஸத்தையும் உண்டால் விரைவில் பித்தத்தினால் தோன்றிய அதிஸார நோய் நீங்கும். 85

சந்தனவிழுதுடன் சர்க்கரை தேன் சேர்த்து அரிசி களைந்த தண்ணீருடன் பயன்படுத்தினால் எரிச்சல் நாவறட்சி நீரிழிவு இரத்தப்போக்கு இந் நோய்கள் நீங்கும் 86

---

1 தார்வீ — மரமஞ்சள்

2. பேயா, மண்டம் — கஞ்சி வகைகள்

அடிக்கடி மலம் கழிவதனால் ஆஸனவாய் வெளிவந்து பித்தத்தின் வளர்ச்சியினால் அழலை உள்ளவனுக்கு பேய்ப்புடல் இலை அதிமதுரம் இவற்றின் குளிர்ந்தகஷாயத்தினால் ஆஸனவாயை கழுவ வேண்டும். 87

ஆஸனவாய்ப் புண்ணுக்கு *பஞ்சவல்கல கஷாயத்தையோ கரும்பின் சாற்றையோ ஆட்டுப்பாலையோ நெய் சர்க்கரை தேன் சேர்த்த பசும்பாலையோ ஆஸனவாயைக் கழுவ பயன்படுத்த வேண்டும். 88

ஆஸனவாய்ப் புண்ணுக்கு பஞ்சவல்கல விழுதை நெய் சேர்த்து ஆஸனவாயில் தடவ வேண்டும். அல்லது அவற்றின்மிக்க மென்மை யான தூளை ஆஸனவாயின் மேல் தூவ வேண்டும். 89

## 39 **தாதக்யாதிசூரணம்

காட்டாத்திப்பூ பாச்சோத்தி இவற்றின் சூரணத்தைச் சம அளவு எடுத்து ஆஸனவாயின் மேல் தூவவேண்டும். இதனால் இரத்தப் போக்கு ஏற்படுகிறதில்லை. ஆஸனவாய்ப்புண்ணும் தணிவடை கிறது. வேதனைகளும் நீங்குகின்றன. 90

## 40. அதிக இரத்தப் போக்கில் செய்ய வேண்டியவை

மிக்க பெருமளவு இரத்தாதிஸாரமுள்ள நோயாளிக்கு முதன் முதலில் கூறிய குளிர்ந்த கஷாயம் முதலியவைகளால் ஆஸனவாய் தொடையிடுக்கு இடுப்பு தொடை இப்பகுதிகளில் நெய்யைத் தடவிப் பிறகு (பரிஷேசனம்) ஊற்றுதல் செய்ய வேண்டும். மேலும் ஜ்வரசி கிச்சையில் கூறப்பட்ட சந்தனாதி தைலம் அல்லது ***சததௌல கிருதம் இவற்றைப் பஞ்சில் எடுத்து ஆஸனவாய் தொடையிடுக்கு இவ்விடங்களில் (ஸேசனம்) நனைத்து பூச வேண்டும். 91-92

## 41. பிச்சாவஸ்தி பிரயோகம்

குத்தல் வலி துளித்துளியாக அடிக்கடி மலம் கழிதல் மலக் குடலில் வாயு தங்கிச் சுழலுதல் அல்லது வாயு ஒரே இடத்தில் தங்கி இருத்தல் இவ்வாறாக உள்ள இரத்தாதிஸாரநோயாளிக்கு முன்கூறிய பிச்சாவஸ்தியைப் பயன் படுத்தியபிறகு பிரபௌண்டரீகத்தின்

---

* பஞ்சவல்கலம் — அத்தி ஆல் அரசு இத்தி நாவல் இவற்றின் பட்டைகள்

** தாதகி— காட்டாத்திப்பூ

*** சததௌதம் — நூறு தடவை மடக்கி மடக்கி செய்த நெய்.

விழுதால் முறைப்படி தயார் செய்த நெய்யை எண்ணெய் வஸ்தி யாகக் கொடுக்க வேண்டும். 93-94

வெகுகாலமாக அதிஸார நோயினால் துன்புறுகிறவனுக்கு ஆஸன வாய் மிகவும் வலிவு இழந்துவிடுகிறது. தன் செயலையும் இழந்து விடுகிறது. அதன் வலிமைக் குறைவை நீக்க நெய்யை அல்லது எண்ணெயை நாள்தோறும் ஆஸனவாயில் பூசவேண்டும். 95

## 42. வஸ்தியின் சிறப்பு

அதிஸார நோயில் மலம் அதிகமாக வெளியேறிவிடுவதனால் வாயு தன் இடத்தில் அதிகம் வளர்ச்சி பெற்றுவிடுகிறது. பித்தமும் சீற்ற மடைகிறது. அந்த சீற்றமடைந்த பித்தத்தையும் மிக்க வளர்ச்சி பெற்ற வாயுவையும் போக்குவதற்கு வஸ்தி மிகவும் சிறந்த மருந் தாகும். 96

இரத்தாதிஸார நோயாளிக்கு மலம் இரத்தம் கலத்து வெளியேறி னாலும் அல்லது மலம் கழிவதற்கு முன்போ பின்போ இரத்தம் வெளியேறினாலும் அவனுக்குத் தண்ணீர்விட்டான் கிழங்கில் தயார் செய்த நெய்யைப் பருகக் கொடுக்க வேண்டும். 97

## 43. வெண்ணெயின் பயன்

இரத்தாதிஸாரத்தினால் வருந்துகிற நோயாளிக்கு மலத்துடனோ மலம் கழிப்பதற்கு முன்போ பின்போ இரத்தப்போக்கு தோன்றினால் புதியதாகக் கடைந்தெடுத்த வெண்ணெயில் அரைப்பங்கு சரக்கரை நான்கில் ஒரு பங்கு தேன் சேர்த்துக் கொடுக்க வேண்டும். இதைப் பருகும் போது நோயாளி நன்மை பயக்கும் உணவுகளைப் பயன்படுத்தினால் விரைவில் இரத்தப் போக்கு நீங்குகிறது. 98

## 44. இரத்தப்போக்குக்கு நெய்

ஆல் அத்தி அரசு இவற்றின் மொட்டுகளை இடித்துச் சுடு நீரில் போட்டு ஓர் இரவும் பகலும் ஊறவைக்க வேண்டும். பிறகு அந்த நீரை வடிக்கட்டி முறைப்படி தயார் செய்த நெய்யில் அரைப் பாகம் சர்க்கரையும் நெய்யையும் நான்கில் ஒருபங்கு தேனையும் சேர்த்துப் பருகக் கொடுத்தால் மலம் கழிவதற்கு முன்போ பின்போ வெளிப்படும் இரத்தப்போக்கு விரைவில் நீங்கி விடும். 99 - 100

## 45. ஆஸனவாய்ப்புண்ணினால் (அழலை) தீமை

மிகவும் வலிமை குறைந்த இரத்தாதிஸார நோயாளி அறியாமை யினால் பித்தத்தை வளர்க்கக் கூடியவையும் பித்தத்தை உண்டாக்கக்

கூடியவையுமான உணவுப் பொருள்களை அதிக அளவில் உண்பதால் அவனுடைய ஆஸனவாய் வளையங்கள் மிகக் கொடுமையான புண் (அழலை) ஆகிவிடுகின்றன. இவ்விதம் ஏற்படுவதால் நோயாளி விரைவில் மரணம் அடைவான். 101

## 46. கபாதிஸாரத்திற்குச் சிகிச்சை

கபாதிஸார நோயாளியை முதன் முதலில் பட்டினி கிடக்கச் செய்து சீரணமாகக் கூடிய மருந்துகளைப் பயன்படுத்துவது நன்மையை அளிக்கவல்லது. பிறகு ஆமாதிஸாரத்தைப் போக்கக் கூடிய சடராக்கினியைத் தூண்டிவிடக் கூடிய (முன்கூறிய) கூட்டுப் பொருள்களைப் பயன்படுத்தச் செய்ய வேண்டும். 102

கபாதிஸாரத்தினால் வருந்துகிற நோயாளியைப் பட்டினி இருக்கச் செய்தும் சீரணிக்கக்கூடிய மருந்துகளைப் பயன்படுத்தியும் கபாதி ஸாரம் நீங்காவிடில் கபத்தைப் போக்கக் கூடிய மருந்துப் பொருள் களால் அதற்குச் சிகிச்சை செய்ய வேண்டும். 103

## 47. கபாதிஸார நோய்க்கு நான்கு வகை மருந்துகள்

(1) வில்வம் கற்கடகசிருங்கி கோரைக்கிழங்கு கடுக்காய் சுக்கு (2) வசம்பு வாயுவிடங்கம் ஓமம் தனியா தேவதாரு (3) கோஷ்டம் அதிவிடயம் வட்டத்திருப்பி செவியம் கடுகரோகிணி (4) அரிசித் திப்பிலி கண்டந்திப்பிலி கொடிவேலி ஆனைத்திப்பிலி ஆகிய இந்த அரைச் செய்யுளில் சொல்லப்பட்ட நான்குவகையான கூட்டு மருந்துப் பொருள்களைக் கஷாயமாகச் செய்து கபாதிஸாரத்தில் கொடுத்தால் சடராக்கினியின் வலிமை வளர்ச்சியுறும். 104 - 106

## 48. *அஜாஜ்யாதி சூரணம்

கருஞ்சீரகம் வட்டத்திருப்பி சுக்கு மிளகு இவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாகம் காட்டாத்திப்பூ இரண்டு பாகம் இவற்றை எடுத்துத் தூள்செய்து வஸ்திரகாயம் செய்து துறிஞ்சிப் பழச் சாற்றைச்சேர்த்துப் பயன்படுத்த வேண்டும். 107

## 49. ரஸாஞ்ஜனாதிசூரணம்

ரஸாஞ்ஜனம் அதிவிடயம் வெட்பாலரிசி இவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாகம் காட்டாத்திப்பூ இரண்டு பாகம் இவற்றைச் சூரணம் செய்து தேனையும் சுக்குப் பொடியையும் சேர்த்துப் பருகக் கொடுக்க வேண்டும் 108

* அஜாஜீ — கருஞ்சீரகம்

## 50. கபாதிஸாரத்திற்கு மருந்து வகை

(1) காட்டாத்திப்பூ சுக்கு வில்வம் பாச்சோத்தி தாமரைக்கேஸரம் (2) நாவல்பட்டை சுக்கு தனியா வட்டத்திருப்பி இலவம்பிசின் சித்தாமுட்டி (3) தொட்டால் சுருங்கி காட்டாத்திப்பூ வில்வக் கோது நாவல்பட்டை மாம்பட்டை (4) உலர்ந்த விளாம்பழக்கதுப்பு, வாயு விடங்கம் சுக்கு மிளகு இந்நான்கு வகையான மருந்துப்பொருள்களின் சூரணத்தை, புளியாரைச் சாறு புளிப்பு இலந்தப்பழக் கஷாயம் புளிப்புத்தயிர் இவற்றில் ஊறவைத்துக் கபாதிஸார நோயாளிக்குக் கொடுக்க வேண்டும். மேற்கண்டவாறு சொல்லப்பட்ட நான்குவகை யான சூரணங்களில் ஒன்றை உண்ட பிறகு*கடத்துடன் நெய்யையும் இந்துப்பையும் சேர்த்துப் பயன்படுத்த வேண்டும். 109 - 111

## 51. **கபித்தாதி சூரணம்

விளாம்பழக் கோது சுக்கு அரிசித்திப்பிலி மிளகு எனும் பொருள் களை எடுத்துத் தூளாக்கி வஸ்திரகாயம் செய்து சம அளவு எடுத்துத் தேனையும் நெய்யையும் சேர்த்துப் பருகக் கொடுக்க வேண்டும். இதனால் அதிஸார நோய் நீங்கும். 112

## 52. ***பிப்பல்யாதி மருந்து

அரிசித்திப்பிலிச் சூரணத்தைத் தேன் சேர்த்துப் பருகிய பிறகு கொடிவேலிச் சூரணத்துடன் மோரைப் பருக வேண்டும். அல்லது பிஞ்சுவில்வக்கோதைச் சாப்பிடுவதாலும் அதிஸார நோய் நீங்கும். 113

கபாதிஸார நோயில் வாயு தடைப்பட்டு குத்தல் வலியையும் பிரவாஹிகா நோயையும் (சீதபேதி போன்றது) தோற்றுவிக்கிறது. அதற்கு பிஞ்சு வில்வக்கோது வெல்லம் எள்எண்ணெய் அரிசித் திப்பிலி சுக்கு இவற்றைச் சம அளவு எடுத்துப் பொடி செய்து வஸ்திரகாயம் செய்து மருந்தாகப் பயன்படுத்த வேண்டும்.

அதன்பிறகு வாதத்தைப் போக்கக் கூடிய மருந்துப் பொருள் களால் தயார் செய்த முள்ளங்கிக் கஞ்சியை உண்ணக் கொடுக்க வேண்டும். வாதாதிஸாரத்தில் குறிக்கபபட்டுள்ள மாமிசரஸம் கஞ்சி கடம் இவற்றையும் பயன்படுத்த வேண்டும். 114 - 115

* கடம் — கஞ்சி வகையுள் ஒன்று

** கபித்தம் — விளாம்பழம்

*** பிப்பலி — அரிசித்திப்பிலி

## 53. கபாதிஸார நோயில் நெய்யின் பயன்

முன் கூறிய சாங்கேரிகிருதம் அல்லது குன்ம நோய் அத்தியாயத்தில் கூறப்பட்ட ஷட்பலகிருதம் அல்லது பத்து ஆண்டுகள் பழமையான நெய் இவற்றில் ஒன்றை நோயாளியின் வலிமைக்கு ஏற்றவாறு அளவுடன் கஞ்சியின் *மண்டத்தில் கலந்து கபாதிஸார நோயாளிக்குப் பருகக்கொடுக்க வேண்டும். 116

## 54. பிச்சாவஸ்தியின் பயன்

கபாதிஸாரத்தில் வாதமும் கபமும் தடைப்பட்டிருத்தல். அல்லது மலத்துடன் கபம் அதிகமாக வெளிவருதல். அல்லது குத்தல் வலி. அல்லது பிரவாஹிகா (இரத்த பேதி) இவ்வாறாக இருந்தால் முன் கூறிய பிச்சாவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 117

மேலும் வாதகபம் தடைப்பட்டோ கபம் அதிக அளவில் வெளியேறுவதோ குத்தல் வலியுடன் பிரவாஹிகாவோ ஏற்பட்டிருந்தால் முதலில் கூறப்பட்டுள்ள பிச்சாவஸ்தியில் அரிசித்திப்பிலி வில்வக்கோது கோஷ்டம் சதகுப்பை வசம்பு இவற்றின் விழுதையும் இந்துப்பையும்சேர்த்துப் பிச்சாவஸ்தியாகக் கொடுக்க வேண்டும். 118

## 55. அனுவாஸன வஸ்தி (எண்ணெய் வஸ்தி)

முறைப்படி பிச்சாவஸ்தி கொடுத்துத் தொல்லைகள் ஏதுமின்றி மருந்து வெளிவந்த பிறகு நோயாளியை நீராடச் செய்து மாலையில் கட்டுப்பாடான (பத்தியமான) உணவை அவனுக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். அதற்குப் பிறகு அடுத்த நாள் அறிவாளியான மருத்துவன் சூடான வில்வத்தைலத்தினால் எண்ணெய் வஸ்தியைப் பயன் படுத்தச் செய்ய வேண்டும். 119

மேலும் அதிஸார நோயில் நோயாளி கபத்தினாலும் வாதத்தினாலும் மிகவும் வருந்தினால் அரிசித்திப்பிலி வில்வக்கோது கோஷ்டம் சதகுப்பை வசம்பு இவற்றின் விழுதுடன் எள்எண்ணெயையும் சேர்த்து முறைப்படி தயார்செய்த எண்ணெயை அடிக்கடி எண்ணெய் வஸ்தியாகக் கொடுக்க வேண்டும். இதனால் வாதகபத்தினால் தோன்றும் துன்பங்கள் தணிவடைகின்றன. 120

## 56. வளர்ச்சியுற்ற வாயுவுக்குச் சிகிச்சையின் இன்றியமையாமை

கபாதிஸாரத்தில் கபத்தைப் போக்கக் கூடிய (லங்கனம்) பட்டினி கிடத்தல் முதலான சிகிச்சையினால் கபம் குறைந்து வாயு தன்

---

* மண்டம் வகை கஞ்சியின் வண்டல்.

னிடத்தில் சீரணப்பையில் (பக்குவாசயத்தில்) நிச்சயமாக வளர்ச்சி பெற்று விடுகிறது. வளர்ச்சி பெற்ற அந்த வாயு திடீரென்று நோயாளிக்கு மரணத்தைத் தோற்றுவிக்கிறது. ஆகையால் வளர்ச்சி பெற்றிருக்கிற வாயுவை வெகு விரைவில் நீக்க வேண்டும். 121

## 57. ஸந்நிபாததாதிஸாரத்திற்குச் சிகிச்சைக் குறிப்பு

ஸந்நிபாததாதிஸார நோயில் முதன் முதலில் வாயுவுக்குச் சிகிச்சை செய்ய வேண்டும். பிறகு பித்தத்திற்கும் கடைசியில் கபத்திற்கும் சிகிச்சை செய்ய வேண்டும். அல்லது ஸந்நிபாத அதிஸாரத்தில் எந்தத் தோஷம் வலிமையுடன் அதிகமாக உள்ளதோ அதற்கு முதன் முதலில் சிகிச்சை செய்ய வேண்டும். 122

### முடிவுரை

இந்த அதிஸாரசிகித்ஸிதம் என்னும் அத்தியாயத்தில் அதிஸார நோயின் தோற்றம் அதன்காரணம் இலக்கணம் தீர்க்ககூடிய தீர்க்க இயலாத வகைகள் நிலைமைக்கேற்றவாறு நன்மை பயக்க வல்ல ச்சை முறைகள் ஆகியவை கூறப்பட்டுள்ளன.

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் சிகித்ஸாஸ்தானத்தில்
அதிஸாரசிகிச்சை என்னும்
பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.

## இருபதாவது அத்தியாயம்

# *சர்தி சிகிச்சை

இனி ஆத்ரேய மாமுனிவர் கூறியருளியபடி சர்தி (வாந்தி நோய்) சிகிச்சை என்னும் இருபதாவது அத்தியாயத்தைவிளக்குவோம். 1-2

**1. துவக்கவுரை :**

புகழுடையவரும், தத்துவஞானம் தவம் இவற்றின் ஒளியுடன் விளங்குபவரும் அக்கினிக்கும் சூரியனுக்கும் ஒப்பான பெருமையடைந்தவரும், உயிரினங்களின் நலனில் ஈடுபாடுடையவரும், அத்திரி முனிவரின் மகனுமான ஆத்திரேய மாமுனிவரை அக்னிவேசர் கீழ் வருமாறு கேட்கலானார். 3

மருத்துவருள் சிறந்தவரே! ரோகாதிகாரத்தில் உங்களால் ஐந்து விதமான (சர்தி) வாந்தி நோய்கள் கூறப்பட்டன. அவற்றின் காரணம், அறிகுறிகள் ,சிகிச்சை இவற்றைப் பற்றி மக்களின் நன்மைக்காக எடுத்துக்கூறுவீராக. 4

அக்கினிவேசருடைய அச்சொல்லைக் கேட்டு மருத்துவருள் சிறந்தவராகிய ஆத்ரேயர் மகிழ்ச்சியுற்றவராய் என்னால் முன்பு கூறப்பட்ட ஐந்து விதமான வாந்திகள் பற்றி விரிவாகக் கூறுகிறேன் கேட்பாயாக என பதிலுரைத்தார். 5

**வாந்  ன் வகைகள்**

கபவாத பித்தங்கள் தனித்தனியாகச் சீற்றமடைவதால் மூன்று வகையும் ஸந்நிபாதத்தினால் நான்காவது வகையும் வேண்டாத பொருள்களின் சேர்க்கையால் ஐந்தாவது வகையும் ஆக வாந்தி ஐந்து வகைப்படும். இதயத்தில் வலி உண்டாகி கபம் அதிகமாகி உணவில் வெறுப்பு தோன்றுவது அவைகளின் முற்குறிகளாகும். 6

*சர்தி — வாந்தி.

வாந்தியின் காரணம் இலக்கணம் சிகிச்சை  ।வற்றைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் என்னும் பெயர் பெறுவதாயிற்று.

## 3 வாதத்தினால் தோன்றும் வாந்தி

உடற்பயிற்சி தீக்ஷ்ணவீர்யம் கொண்ட உணவு மருந்து துக்கம வியாதி பயம் உபவாஸம் இவற்றால் இளைத்தவனுக்கு வாயுவானது குடலில் மிகுந்து தோஷங்களைக் கிளப்பிவிட்டு மேலே சென்று இரைப்பையில் வலியை உண்டுபண்ணி மர்மஸ்தானத்தைத் துன்புறுத்திக் கொண்டு வாந்தியைத் தோற்றுவிக்கும். வாயுவினால் தோன்றும் வாந்தியானது மிகுந்த ஓசையுடனும் நுரையுடனும் சிறிது சிறிதாகவும் கருப்பு நிறம் கொண்டு அல்லது கஷாய நிறம் கொண்டு மிகவும் கஷ்டத்துடன் வெளிவரும். இதனால் இதயத்திலும் விலாப் புறங்களிலும் வலி, வாய் உலர்ந்துபோதல் தலை தொப்புள், இவற்றில் வேதனை, இருமல் குரல் மாறுபாடு முதலிய துன்பங்கள் ஏற்படும். 7-9

## 4. பித்தத்தினால் தோன்றும் வாந்தி

அசீரணத்தாலும் கார்ப்புப் புளிப்புச் சுவையுள்ள பொருள் களைப் பயன்படுத்துவதாலும் எரிச்சல் குளிர்ச்சி ஆகியவற்றாலும் இரைப்பையில் உள்ள பித்தமானது வேகத்துடன் *ஸ்ரோதஸ்களைத் துன்பப்படுத்தி இதயத்தின் மேலே சென்று வாந்தியைத் தோற்று விக்கும். 10

நினைவிழத்தல் தாகவிடாய் வாய் உலர்ந்து போதல் தலை தாடைகள் கண்கள் இவற்றில் துன்பம் தலை சுற்றல் இவ்வடையாளங்களுடன் மஞ்சளாகவும் மிகுந்த சூட்டுடனும் பச்சை நிறம்கொண்டும் புகைநிறம் கொண்டும் எரிச்சலுடனும் வாந்தி வரும். 11

## 5. கபத்தினால் தோன்றும் வாந்தி

எண்ணெய்ப்பசை குருத்தன்மை சீரணமாகாமை எரிச்சல் இவற்றை உண்டாக்கக் கூடிய உணவுப் பொருள்களாலும் பகல் தூக்கத்தினாலும் வளர்ந்த கபம் மார்பு தலை இதயம் ஸ்ரோதஸ்கள் இவையாவற்றையும் சூழ்ந்து வாந்தியைத் தோற்றுவிக்கிறது. சோம்பல் வாயில் இனிப்புச்சுவைதோன்றுவது கபம் ஒழுகுதல் வயிறு நிரம்பியிருப்பது போன்ற உணர்ச்சி தூக்கம் சுவையின்மை உடல் கனத்தல் இவற்றால் நோயாளி துன்பமுற்று மயிர்க்கூச்சலுடன் சிறிது துன்பத்துடன் எண்ணெய்ப் பசையுடனும் கெட்டியாகவும் இனிப்பாகவும் உள்ள வாந்தி எடுப்பான். 12 - 13

---

*ஸ்ரோதஸ் - உடலில் உள்ள துவாரங்கள் ஸ்ரோதஸ் எனப்படும்.

## 6. ஸந்நிபாதத்தினால் தோன்றும் வாந்தி

பத்தியமும் அபத்தியமுமான உணவைச் சேர்த்துச் சாப்பிடுவதாலும் பருவநிலைகளின் தட்பவெப்பநிலை மாற்றத்தினாலும் சீரணமாகாத உணவுகளாலும் ஒரே சமயத்தில் கபவாத பித்தங்கள் சீற்றமடைந்து வாந்தியைத் தோற்றுவிக்கின்றன. 14

ஸந்நிபாதத்தினால் தோன்றிய வாந்தி நோயுடையவன், வலி அசீரணம் சுவையின்மை எரிச்சல் நாவறட்சி இழுப்பு மயக்கம் இவ்வறிகுறிகளுடன், உப்புச்சுவை புளிப்புச் சுவையுள்ள நீல சிவப்பு நிறமுள்ள உஷ்ணத்துடன் கூடிய வாந்தியை எடுப்பான். 15

மலம் வியர்வை சிறுநீர் நீர் இவற்றின் வழிகளை வாயு தடுத்து மேலே சென்று தோஷமுற்று மனிதனின் குடலைத் தடுத்து மேல் நோக்கிக் கொணர்ந்து வாந்தியை எடுக்கச் செய்கிறது. நாவறட்சி இழுப்பு விக்கல் ஆகிய தொல்லைகளுடன் மலமும் சிறுநீரும் ஒரே விதமான நிறமும் மணமும் உடையதாகி மிகுந்த வேகத்துடன் வாந்தி தோன்றும். இதனால துன்புறும் நோயாளி விரைவில மரணம் அடைவான். 16 - 17

## 7 மனத்திற்குப் பிடிக்காத பொருள்களால் தோன்றும் வாந்தி

மனத்தைத் தாக்கக் கூடியவையும் மனத்திற்குப் பிடிக்காதவையும் உடலுக்கு ஏற்காதவையும் தூய்மை அற்றவையும் மலினமானவையும் பொறுக்க முடியாத துர்நாற்றமுள்ளவையுமான உணவுகளாலும் அத்தகைய பொருள்களைப் பார்ப்பதாலும் மிகுந்த வேதனையுற்ற மனத்தை உடையவன் எடுக்கும் வாந்தியானது பிடிக்காத வஸ்துவால் ஏற்பட்ட வாந்தி எனப்படும். 18

## 8. சிகிச்சைக்கு உட்பட்டவையும் உட்படாதவையுமான வாந்திகள்

உடல் இளைத்தவனது வாந்தியும், தொடர்ந்து நீடித்திருந்து துன்பத்தைக் கொடுத்து இரத்தம் சீழ் இவற்றுடன் கூடியதாய் மயில் தோகை போன்று பல நிறத்துடனும் வெளிவரும் வாந்தியும் சிகிச்சைக்கு உட்படாதவை என்றும் இத்தகைய துன்பங்கள் இல்லாத வாந்தி சிகிச்சைக்கு உட்பட்டது என்றும் அறிஞர் கூறுவர். 19

## 9. வாந்திக்கு சிகிச்சை முறை

எல்லா வாந்திகளுமே சீரணப்பையில் நீர் சுரந்து கொண்டும் புரட்டிக் கொண்டும் வெளிவருவனவேயாகும். அதனால் அவற்றிற்குப் பட்டினிகிடத்தலே சிறந்த சிகிச்சை ஆகும். வாயுவினால் தோன்றும்

வாந்தியைத் தவிர்த்து பித்தத்தினாலும் கபத்தினாலும் தோன்றும் வாந்திகளுக்கு முதன் முதலில் தோஷங்களைப் போக்கக் கூடிய பொருள்களால் ஆகிய மருந்துகளால் பேதியாகக் கொடுக்க வேண்டும். 20

கடுக்காய்த்தூளைத் தேனில் குழைத்தோ மற்றும் மனத்திற்குப் பிடித்தமான [1]விரேசன முறைகளையோ பயன் படுத்த வேண்டும். கள்ளுடனோ பாலுடனோ கலந்த விரேசன முறைகளை உடலுக்கு ஏற்றவாறு செய்தால் மேலே சென்றுள்ள தோஷங்கள் கீழே சென்று விடும். 21

கொடிகளில் காய்க்கும் பேய்ப் பீர்க்கு, பேய்ப்புடல் முதலிய வற்றைக் கொண்டு வாந்தியெடுக்கச் செய்தல் நலம். உடல் இளைத்தவனுக்கு ஏற்படும் வாந்தியை மாமிசரஸத்தாலும் மனத்திற்கு விருப்பமான எளிதில் சீரணமாகக் கூடிய உலர்ந்த தின்பண்டங்களாலும் பலவகையான உணவுப் பொருள்களாலும் குடி நீர் வகைகளாலும் சிகிச்சை செய்து தணிக்க வேண்டும். 22

தித்திரிப்பறவை மயில் லாவம் என்னும் பறவை இவைகளின் மாமிசத்தால் நன்கு பக்குவம் செய்யப்பட்ட ரஸம் வாதத்தினால் தோன்றிய வாந்தியைப் போக்கும். மேலும் இலந்தம்பழம் கொள்ளு தனியா *தசமூலப் பொருள்கள் புளிப்புச் சுவையுள்ள பொருள்கள் யவதானியம் இவற்றால் ஆகிய கஞ்சியும் வாதத்தினால் தோன்றும் வாந்தியைப் போக்கும். 23

கடுமையான வேலையால் மிகவும் களைத்துப் போனவனின் இதயம் போல் வாதத்தினால் தோன்றிய வாந்தியில் வேதனைப்படும் இதயமுள்ள நோயாளிக்கு தனியா சுக்கு தயிர் தண்ணீர் மாதுளம் பழச்சாறு இவற்றுடன் இந்துப்பும் கலந்த நெய் தயார் செய்து கொடுப்பது நல்லது. 24

சுக்கு மிளகு திப்பிலி இவற்றுடன் இந்துப்பும் கடலுப்பும் கல்லுப்பும் சேர்த்து நெய் தயார் செய்து அளவுடன் கொடுக்க வேண்டும். அல்லது எண்ணெய்ப்பசையுள்ளவையும் மனத்திற்குப் பிடித்தவையுமான உணவு வகைகளை மாமிசரசத்துடனும் கஞ்சியுட

1. விரேசன முறை - பேதியாகச் செய்யும் முறை

*தசமூலப்பொருள் - சிறுமல்லி, பெருமல்லி கண்டங்கத்திரி சிறுவழு துணை நெருஞ்சில் பில்வம் முன்னை பெரு வாகை பெருங்குமிழன் பாதிரி இப்பத்தும் தச மூலப் பொருள்கள் எனப்.

னும் அல்லது தயிருடனும் புளித்த மாதுளம்பழச்சாற்றுடனும் உண்ணச்செய்ய வேண்டும். 25

## 10. பித்தத்தினால் தோன்றிய வாந்திக்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய வாந்தியில் அதனை நேரான நிலைக்குக் கொண்டுவருவதற்கு திராக்ஷை பால்முதுக்கன்கிழங்கு கரும்பு இவற்றின் சாற்றுடன் சிவதைச் சூரணத்தைக் கொடுக்க வேண்டும். கபாசயத்தில் மிகவும் அதிகரித்துப்போன பித்தத்தை இனிப்புச் சுவையுள்ள பொருள்களால் மேல் நோக்கியே வாந்தி எடுக்கச் செய்து போக்க வேண்டும் 26

அவ்வாறு தூய்மை படுத்திய பின் பித்தம் நீங்கிய பிறகு தேன் சர்க்கரை நெற்பொரி இவற்றால் தயார் செய்த மண்டத்தை (கஞ்சியில் ஒரு வகை) குடிக்கச் செய்ய வேண்டும். அல்லது பயத்தங் கஞ்சியைப் பருகக் கொடுக்கலாம். அல்லது சம்பா அரிசிச் சோற்றை காடடர்ந்த நிலைப்பகுதியில் வாழும் விலங்கினங்களின் மாமிசரஸத்துடன் உண்ணக் கொடுக்க வேண்டும். 27

கற்கண்டு தேன் அரிசித்திப்பிலி இவற்றுடன் காடியும் சேர்த்து இதனை நெற்பொரி யவ அரிசிமாவு பேரீச்சம்பழமஜ்ஜையுடன் தயார் செய்யப்பட்ட கெட்டியான கஞ்சியைக் கொடுக்க வேண்டும். அல்லது தேங்காய் திராக்ஷை இலந்தம்பழம் இவற்றைச் சேர்த்துக் குழைத்துக் கொடுக்க வேண்டும். 28

ஸ்ரோதோஞ்ஜனம் நெற்பொரி குவளை இலந்தம் பழத்தின் கோது இவற்றின் தூளைத் தேனில் கலந்து கொடுக்க வேண்டும். அல்லது கடுக்காய்த்தூளைத் தேனில் குழைத்துக் கொடுக்கலாம். இலந்தம் பழச்சாறு அஞ்ஜனக்கல் தேன்மெழுகு நெற்பொரி சர்க்கரை அரிசித் திப்பிலி இவற்றைச் சேர்த்துத் தூள் செய்து கொடுக்கலாம். 29

குளிர்ந்த திராக்ஷை ரஸத்தைக் குடிக்கச் செய்யலாம். மண், ஒடு, கல் இவற்றைக் காய்ச்சித் தண்ணீரில் போட்டு அந்தத்தண்ணீரை குளிர வைத்துப் பருகச்செய்க. நாவல்தளிர் மாந்தளிர் இவற்றால் கஷாயம் செய்து குளிர்ந்த பின் தேனுடன் குடிக்கச் செய்யலாம். 30

பித்தவாந்தியுள்ளவனை பயற்றையும் அரிசித்திப்பிலியையும் இரவில் தண்ணீரில் ஊறப்போட்டு பின்னர் மறுநாள் அத்தண்ணீரைப் பருகும்படிசெய்யலாம். விளாமிச்சிவேர் தனியா இவற்றைத் தண்ணீரில் ஊறப்போட்டு அத்தண்ணீரைப் பருகச் செய்யலாம். அல்லது கடலை கோதுமைவேர் சீந்திற்கொடி இவற்றுள்

ஏதாவது ஒன்றை இரவில் தண்ணீரில் ஊறப்போட்டு அத்தண்ணீரைப் பித்த வாந்தி உள்ளவனைப் பருகச்செய்யலாம். அல்லது பித்த வாந்தியுள்ளவனைக் கருப்பஞ்சாற்றையாவது பாலையாவது பருகச்செய்ய வேண்டும். 31

பித்தவாந்தியுள்ளவனை வெட்டிவேர் அல்லது தங்கநிறமுள்ள காவிக்கல்லை தண்ணீரில் ஊறப்போட்டு அத்தண்ணீரைப் பருகச் செய்யலாம். அல்லது அரிசி களைந்த அத்தண்ணீரில் விளாமிச்சி வேரை ஊறவைத்து அத்தண்ணீரைப் பருகச்செய்யலாம். அல்லது நல்லவெண்சந்தனத்தை நெல்லிக் காய்ச்சாற்றுடன் தேன் கலந்து பருகச் செய்வது நல்லது. இத்தகைய மருந்து முறைகள் நாவறட்சியையும் வாந்தியையும் போக்கும். 32

நல்ல சந்தனம் செவியம் ஜடாமாம்சி சிறந்த திராக்ஷை வெட்டிவேர் காவிக்கல் இவற்றின் விழுதை உண்ணச்செய்யலாம். காவிக்கல் சம்பாத்தாள் வேர் இவற்றின் சூரணத்தை குளிர்ந்த தண்ணீரில் சேர்த்துக் குடிக்கச்செய்யலாம். அவ்விதமே பெருங்குறும்பைப் பொடியை அரிசிகளைந்த தண்ணீரில் ஊறவைத்துக் குடிக்கச் செய்யலாம். 33

## 11. கபத்தினால் தோன்றும் வாந்திக்குச் சிகிச்சை

கபத்தினால் தோன்றும் வாந்தியில் கபத்தையும் சீரணப்பையையும் தூய்மை செய்வதற்காக அரிசித்திப்பிலி கடுகு வேம்பு இவற்றாலான கஷாயத்தில் மருக்காரக்காய்ச்சூரணமும் சிறிது இந்துப்பும் சேர்த்து வாந்தி எடுக்கக் கொடுப்பது சிறந்தது. 34

பழைய கோதுமை பழைய சம்பா அரிசி பழைய யவதானியம் இவற்றுடன் பேய்ப்புடல் சீந்திற்கொடி சித்திரமூலம் ஆகியவையும் சேர்த்துத் தயாரித்த ஜலத்தில் முறைப்படி கஞ்சி காய்ச்சிக் கபவாந்தியுள்ளவனுக்கு உணவாகக் கொடுக்கலாம். சுக்கு மிளகு திப்பிலி வேம்பு இவற்றால் மோரில் தயாரித்த கஞ்சியை உணவாகக் கொடுக்கலாம். அல்லது புளிப்பு கசப்புச் சுவையுள்ள பழங்களைச் சாப்பிடக் கொடுக்கலாம். 35

காற்றால் வறண்ட காட்டுப்பகுதியில் வாழும் பிராணிகள் மற்றும் பறவைகளுடைய மாமிச ரஸம் அவற்றின் மாமிசத்தை சூலத்தில் குத்தி நெருப்பில் பக்குவம் செய்து தயாரித்த மாமிசம் பழைய தேன் பழைய ஸீது (ஒரு வகை கள்) பழைமையான அரிஷ்டம் இவற்றைப் பயன்படுத்தலாம். திராக்ஷை விளாம்பழம் எலுமிச்சம்

பழம் இவற்றில் தயாரித்த [1]ராகவம் [2]ஷாடவம் என்ற பான கங்களைப் பயன்படுத்தலாம். கபத்தினால் தோன்றும் வாந்தியி னால் துன்புறும் நோயாளிக்கு பயறு காட்டுப்பயறு கடலை இவற்றை வறுத்து ஸத்துமாவு செய்து அதில் சுக்குச் சூரணத்துடன் தேன் கலந்து நக்கிச் சாப்பிடக் கொடுக்கலாம். அல்லது கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக் காய் வாயுவிடங்கம் இவற்றைச் சம அளவில் எடுத்துச் சூரணம் செய்து சுக்குச் சூரணத்தையும் சேர்த்துத் தேனுடன் கொடுக்க வேண்டும். அல்லது வாயுவிடங்கம் பெருங் கோரைக்கிழங்கு புதியதான இவற்றின் சாற்றில் சுக்குச் சூரணத்தை யும் தேனில் கலந்து கொடுக்கலாம். அல்லது நாவல் புளிப்பு இலந்தை இவற்றின் சூரணம் அல்லது பெருங்கோரைக்கிழங்கு கற்கடகசிருங்கி இவற்றின் சூரணம் அல்லது சிறுகாஞ்சொரியின் சூரணம் இவற்றைத் தேனில் குழைத்துக் கபவாந்தியைப் போக்குவதற்குச் சாப்பிடக் கொடுக்க வேண்டும். 36 - 38

கபவாந்தி அதிகமாக இருக்கும் போது அதைப் போக்குவதற்குச் சுத்தி செய்த மனோசிலை எலுமிச்சம்பழச்சாறு இவற்றைத் தேனுடன் கலந்து கொடுக்கலாம். அல்லது அரிசித்திப்பிலி மிளகு இவற்றின் சூரணத்தை தேன் விளாம்பழச்சாறு இவற்றுடன் சேர்த்துக் கொடுக்கலாம். 39

## 12. ஸந்நிபாதத்தினால் தோன்றும் வாந்திக்குச் சிகிச்சை

ஸந்நிபாதத்தினால் தோன்றியவாந்தியில் தோஷம் பருவ காலம் நோய் சடராக்கினியின் வலிவு இவற்றை சாத்திரமறிந்த மருத்துவன் நன்கு ஆராய்ந்து அந்தந்த தோஷங்கட்குத் தனித்தனியாகக் கூறப் பட்ட சிகிச்சைமுறைகளைக் கையாளவேண்டும். தோஷங்களின் கூட்டுக்கு ஏற்றவாறு சிகிச்சை முறையைச் சேர்த்துப் பயன்படுத்த வேண்டும். 40

## 13. அருவெறுப்பினால் தோன்றும் வாந்திக்குச் சிகிச்சை

மனம் கேடடைவதால் தோன்றிய வாந்தி நோயாளியை அவனது மனத்திற்கு அனுகூலமான ஆறுதலளிப்பவையான மனத்தை மகிழ்விக்கும் சொற்களால் தேற்ற வேண்டும்.

நண்பர்கள் வாயிலாக நோயாளியை அகப்பொருட்சுவை மிகுத்த புகழ் வாய்ந்த சுருதியில் சொல்லப்பட்ட (இதிஹாஸங்களைச்

1. ராகவம் - வெல்லம் மாதுளை தேன் இவைகளாலான ஒரு வகை பானகம்
2. ஷாடவம் - பழரசங்களால் தயாரித்த பானகம்

சார்ந்த) கதைகளைக் கேட்கச் செய்ய வேண்டும். மனத்திற்கு உற்சாகமூட்டக்கூடியவகையில் நோயாளியை உலாவச் செய்ய வேண்டும். மனத்திற்கு மகிழ்ச்சியூட்டக் கூடிய மண் மலர் *சுக்தம் புளிப்புப் பழங்கள் போன்ற பலவகையான பொருள்களை நுகரச் செய்ய வேண்டும்.

மனத்தின் அருவெறுப்பைப் போக்கக் கூடிய பலவகையான தின்பண்டம் பானகம் ஷாடவம் ராகவம் [1]அவலேஹம் யூஷம், மாமிசரசம் [2]காம்பிளிகம் கடயூஷம் மாமிசம் நெல்பொரி மணம் நிறம் சுவை மிகுந்துள்ள பழங்கள் உணவுப் பொருள் இவற்றைப் பயன்படுத்துவதால் மனம் கேடடைவதனால் தோன்றும் வாந்தி நீங்கும். 41 - 43

மனக்கேட்டினால் (அருவெறுப்பினால்) தோன்றிய வாந்தியுடைய நோயாளிக்கு மணம் சுவை தொடுவுணர்ச்சி ஒலி தோற்றம் இவைகள் மனத்திற்கு இன்பமூட்டுபவைகளாக இருக்கச் செய்தால் நோய் தணியும். மேலே கூறப்பட்ட மணம் சுவை முதலியன அவனுக்கு ஒத்துக் கொள்ளாவிடினும் அவை நன்மை பயப்பனவாகத் தோன்றினால் அவற்றைப் பயன்படுத்துவதில் தவறில்லை. 44

## 14. வாந்தியில் தோன்றும் தொல்லைகட்குச் சிகிச்சை

வாந்திநோய்க்குச் சிகிச்சை செய்தும் அதன் தொல்லைகள் நீங்காவிடில் அந்தந்த தொல்லைகட்குச் சொல்லப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். வாந்தி அதிகமாக இருக்கும் போது ஸித்திஸ்தானத்தில் (விரேசனாதி யோகாத்தியாயத்தில்) சொல்லப்பட்ட மருந்து முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 45

## 15. நீண்டகால வாந்திக்குச் சிகிச்சை

இடைவிடாது நீண்டநாட்களாக வாந்தி எடுப்பதனால் உடலிலுள்ள தாதுக்கள் நலிவடைகின்றன. அதனால் வாயு வளர்ந்து சீற்றமடைகிறது. ஆகையால் நீண்ட நாள் வாந்திக்கு வாயுவை நீக்கக் கூடிய [3]ஸ்தம்பனம் செய்யக்கூடிய சிகிச்சையையும் [4]பிரும்மண சிகிச்சையையும் செய்ய வேண்டும். 46

---

*சுக்தம் - புளித்துப்போன திரவ பதார்த்தத்தின் ஒரு வகைகள்

1. அவலேஹம் - லேகியம்
2. காம்பிளிகம் - எள்ளுப்பொடி கிழங்கு வகைகள் சேர்த்து பக்குவம் செய்யப்படும் ஒரு வகை உணவு.
3. ஸ்தம்பனம் - அசைவற்றிருக்கச் செய்தல்
4. பிரும்மணம் - உடலுக்குப் புஷ்டி அளிக்கும் சிகிச்சை

க்ஷதக்ஷீண சிகிச்சாத்தியாயத்தில் கூறப்பட்ட [1]ஸர்ப்பிற்குடம் பாலில் தயார் செய்யப்பட்ட மருந்துகள் உன்மாத நோயில் கூறப்பட்ட கல்யாண கிருதம் இருமல் நோயில் கூறப்பட்ட [2]திரியூஷணகிருதம் வாத ரத்த சிகிச்சையில் விளக்கியுள்ள [3]ஜீவனீய கிருதம் இவற்றையும் தவிர உடலுக்கு ஆண்மையை வளர்க்கக்கூடிய மாமிச ரஸம் லேகியங்கள் இவற்றையும் பயன்படுத்தினால் வெகுநாட்களாகத் தொடர்ந்து இருந்து வரும் வாந்தி தணிவடையும். 47

**முடிவுரை :**

மதிப்புக்குரிய முனிவருள் சிறந்தவரான ஆத்ரேய புனர்வஸு இந்த வமனரோகசிகிச்சாத்தியாயத்தில் நோயின் காரணம் நோயின் வகைகள் இலக்கணம் நோயினால் ஏற்படும் தொல்லை தீர்க்கக் கூடிய தீர்க்க இயலாதவகைகள், வாந்தி நோயைத் தணிக்கக் கூடிய பலவகை மருந்துகள் ஆகிய இவைகளைப் பற்றிக் கூறியுள்ளார். 48

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்டு திருடபலரால் பூர்த்தி செய்யப்பட்ட
சரகஸம்ஹிதையில் சிகிச்சாஸ்தானத்தில் சர்திரோகசிகிச்சை என்னும்
;பதாம் அத்தியாயம் முற்றும்.

1. ஸர்ப்பிற்குடம் - நெய்முறை தயார் செய்வது போல் பக்குவம் செய்து அதில் சர்க்கரை கல்கண்டு அல்லது வெல்லம் தேன் சேர்த்து லேகியம் போல் செய்யப்படும் மருந்து.
2. திரியூஷணாதி கிருதம் - சுக்கு மிளகு திப்பிலி ஆகியவற்றால் ஆகிய ஒரு வகை நெய் மருந்து.
3. ஜீவனீயகிருதம் - ஜீவகம், ரிஷபகம் முதலியவற்றாலான ஒரு வகை நெய் மருந்து.

## இருபத்தோராம் அத்தியாயம்

# *விஸர்ப்ப சிகிச்சை

ஆத்திரேய மாமுனிவர் கூறியருளியபடி விஸர்ப்ப (அக்கி நோய்) சிகிச்சையைப் பற்றி விளக்குவோம். 1 - 2

### 1. தொடக்கவுரை

கிந்நரர்களால் சூழப்பட்டு, பலவித நீர் வீழ்ச்சிகளைக் கொண்டு நதிகள் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கப் பற்பல மூலிகைகள் நிரம்பியதாய், சிறந்த மலர்களையுடைய பலவித மரங்கள் தங்களது ...ிய நறுமணத்தை எப்பொழுதும் பரப்பிக் கொண்டிருக்க - ...கய பலவகை அணிகளுடன் கூடிய கயிலாயமலையில் உலவுகின்றவரும் முனிவரால் சூழப்பட்டும் மகரிஷிகளால் பூஜிக்கப் பட்டவராய் எல்லா உயிரினங்களின் நன்மையையே கருதுகின்ற வரும் புலனடக்கமுள்ளவருமான புனர்வஸு ஆத்திரேய முனிவரிடத்தில் அக்கினிவேசர் தக்ககாலமறிந்து வணக்கத்துடன் கீழ்வருமாறு கேட்கலானார்: 3 - 5

### 2. அக்கினிவேசரின் வினா

பகவானே, உயிரினங்களின் உடலில் பாம்பின் நஞ்சுக்கு ஒப்பானதும், விரைவில் பரவக் கூடியதுமான கொடிய நோயை நான் காண்கிறேன். அந்தக் கொடிய நோய்க்கு சிகிச்சை செய்யாவிடில் மனிதர்கள் விரைவில் மாண்டு போகிறார்கள். அதனால் இந்நோயைப் பற்றி எனக்கு மிகவும் ஐயம் உண்டாகிறது. 6 - 7

---

*விஸர்ப்பம் - அக்கி என்னும் நோய். விஸர்ப்பத்தைப்பற்றி விளக்கப் படுவதால் இவ்வத்தியாயம் விஸர்ப்ப சிகிச்சை என்னும் பெயர் பெறுவதாயிற்று. ஸர்ப்பத்தின்விஷம் பரவுவதுபோல் நோய் உடலின் மேல் தோலில் கொப்புளம், வீக்கம், வலி, நிறம் மாற்றங்களுடன் திட்டு திட்டாகவும், உடல் முழுவதும் அல்லது ஒரு அங்கத்தின் (கை, கால்) மேல் பரவக் கூடிய நோய் இது. தமிழில் இதை அக்கி, படர், கடுவன், கரப்பான் என்றெல்லாம் கூறுவர். பெரும்பாலும் இந்த நோய் 'அக்கி' என்று கூறப்படுகிறது.

1. அந்நோயின் பெயரென்ன ? அல்லது எப்பெயரால் அதை அறியமுடியும் ?

2. அப்பெயர் வரக் காரணம் என்ன ?

3. அந்நோய் எத்தனை வகைப்படும் ?

4. அந்நோயால் உடலில் எங்கெந்த தாதுக்கள் கேடடைகின்றன?

5. அந்த நோய்க்குக் காரணம் யாது ?

6. அந்த நோய்க்கு இருப்பிடம் எது ?

7. அந்த நோய் எளிதில் தீர்க்கக்கூடியதா ? எளிதில் தீர்க்க இயலாததா ? தீர்க்கவே இயலாததா ?

8. அந்த நோயை எந்த இலக்கணங்களால் அறியமுடியும் ? அந்த நோய்க்கு மருந்து என்ன ? 8 - 9

என அக்கினிவேசரின் மேற்கண்ட வினாக்களைக் கேட்ட முனிவருள் சிறந்தவரான புனர்வஸு ஆத்திரேயர் ஐயங்களனைத்திற்கும் முறையாகப் பதிலளித்தார். 10

இந்நோய் உடல் முழுவதும் பல இடங்களில் பரவிச் செல்வதனால் விஸர்ப்பம் (அக்கி) எனப்படும். உடலில் அது தோன்றிய இடத்தைச் சுற்றிலும் வெகு விரைவில் பரவுவதனாலும் பரிஸர்ப்பம் என்றும் பெயர் பெறும். 11

## 3. அக்கி நோயின் வகைகள்

மூன்று தோஷங்களும் தாம் கேடடைந்து மற்ற தாதுக்களையும் கேடடையச் செய்து ஏழு விதமான விஸர்ப்ப நோயை உண்டாக்குகின்றன. அவையாவன (1) வாதம் (2) பித்தம் (3) கபம் (4) *ஸந்நிபாதம் (5) வாதபித்தம் (6) வாதகபம் (7) பித்தகபம் எனப்படும்.

வாதபித்தத்தினால் தோன்றும் அக்கிநோய் **ஆக்னேயம் எனப்படும். கபவாதத்தினால் தோன்றும் அக்கி ***கிரந்தி எனப்படும்.

---

* ஸந்நிபாதம் - வாதம் பித்தம் கபம் மூன்று தோஷங்களும் சேர்ந்து உண்டாக்கும் நோய்.

** ஆக்னேயம் - நெருப்பு போன்றது ; இதில் எரிச்சல் அதிகம் இருக்கும்.

*** கிரந்தி - முடிச்சு போன்றது; கெட்டியான கொப்புளங்களுடன் கூடியது ; இதில் வலி அதிகம்.

பித்த கபத்தினால் ஏற்படும் *கர்தமம் என்ற அக்கி மிகக் கொடியது. 12 - 14

## 4. அக்கிநோய் தோன்றக் காரணம்

இரத்தம் லஸீகா (நிணநீர்) தோல் மாமிசம் இவை நான்கும் தூஷ்யங்கள் எனப்படும். வாதம் பித்தம் கபம் இவை மூன்றும் தோஷங்களாகும். இவை ஏழும் கேடடைந்து அக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன. 15

உப்பு புளிப்பு கார்ப்புச் சுவை உஷ்ணவீரியமுள்ளவற்றை அதிக மாக உண்பது புளிப்புத் தயிர் தயிர்த்தெளிவு [1]சுக்தம் ஸௌவீரகம் என்னும் காடி கேடடைந்த கள் உஷ்ண வீரியமுள்ள [2]ராகவம் [3]ஷாடவம் இவைகளை அதிகமாகப் பயன்படுத்துவது பச்சைக்கறிகாய்களை உண்பது சீரணமாகாமல் எரிச்சலை ஊட்டக் கூடிய உணவை உண்பது [4]கூர்ச்சிகா [5]கிலாடம் [6]மந்தகம் இவைகளை மிகுதியாகப் பயன்படுத்துவது [7]சாண்டாகி [8]ஆஸுதம் போன்றவைகளை மிகுதியாகப் பயன்படுத்துவது எள் உளுந்து கொள் எள்ளெண்ணெய் அரிசிமாவு ஆடு, மாடு போன்ற (கிராமிய) வீட்டுப் பிராணிகளின் மாமிசம் நீர் நிலைகளில் வாழும் பிராணிகளின் மாமிசம் பூண்டு அழுகிப் போன மாமிசம் உடலுக்கு ஏற்காத உணவு வகைகள் இவைகளை அதிக மாகப் பயன் படுத்துவது அளவுக்கு மீறி உண்பது பகலில் உறங்கு வது அசீரணம் ஏற்கனவே உண்ட உணவு சீரணமாகாத பொழுது மேலும் உண்பது கத்தி போன்ற கருவியால் அறுக்கப்படுவது, உடலுறுப்புகளில் அடிபட்டிருப்பது, உடலுறுப்புக்களில் கயிறு போன்றவற்றால் இறுக்கிக் கட்டப்படுவது மிக்க உயரத்திலிருந்து கீழே விழுவது

---

* கர்தமம் - சேறு போன்ற நிறமுடையது ; இதில் தோல், தசை முதலியன அழுகியிருக்கும்

1. சுக்தம்
2. ராகவம்
3. ஷாடவம்

(1-3) காடிவகைகள்

4. கூர்ச்சிகா - பாலைத் தயிர் அல்லது மோருடன் சேர்த்துக் காய்ச்சுவதால் ஏற்படும் கெட்டியான பகுதியும் திரவ மான பகுதியும்
5. கிலாடம் - திரிந்து போன பால்
6. மந்தகம் - நன்கு தோய்வுறாத தயிர்
7. ஸாண்டாகி - முள்ளங்கி கடுகு முதலியவற்றைக் கொண்டு செய்யப்படும் ஒரு வகை கள்.
8. ஆஸுதம் - ஒருவிதமான காய்

வெயிலில் அதிகமாகத்திரிவது உடலுக்கு அதிகமாக உழைப்பைக் கொடுப்பது நஞ்சு தீண்டினகாற்று உடல் மேல் படுவது நெருப்பினால் சுடப்படுவது ஆகிய இக்காரணங்களால் சீற்ற மடைந்த வாத பித்த கபங்கள் ஒன்று சேர்ந்து இரத்தம் [1]லஸீகா (நிணநீர்) தோல் மாமிசம் இவற்றைக் கேடடையச் செய்து அக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன. குறிப்பாக இந்நோய் கேடடைந்த உணவு உண்ணும் பழக்கம் உள்ளவர்களுக்குத்தான் ஏற்படுகிறது. 16 - 22

### 5. இடத்தைப் பொறுத்து மூன்று விதமான அக்கிநோய்

ஒன்று வெளிப்புற உறுப்புகளைச் சார்ந்தது. இரண்டாவது உடலுக்குள் உள்ள தாதுக்களைச் சார்ந்தது. மூன்றாவது உள்புற மும் வெளிப்புறமுமுள்ள எல்லா உறுப்புகளையும் சார்ந்தது. இவற்றுள் ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று முறையே மேல் மேலும் கொடுமையானது ஆகும். 23

### 6. தீர்க்கக் கூடியதும், தீர்க்க இயலாததும்

வெளிப்புற உறுப்புகளைச் சார்ந்து வந்த அக்கி நோய் தீர்க்கக் கூடியது. உட்புறமும் வெளிப்புறமும் உள்ள உறுப்புக்களைச் சார்ந்து வந்த அக்கிநோய் தீர்க்க இயலாதது. உட்புற உறுப்புக் களை மட்டும் சார்ந்து வந்த அக்கிநோய் மிகக் கொடியது. எளிதில் தீர்க்க இயலாதது. (வெகுவாக முயன்று அறுவைச் சிகிச்சை முதலியவற்றால் மட்டுமே தீர்க்கக் வல்லது.) 24

உடலுக்குள் உள்ள தாதுக்கள் சீற்றமடைந்து உடல் உள் ளுறுப்புகளின் வழிகளைச் சார்ந்து உடலுக்குள்ளே நோயைத் தோற்றுவிக்கின்றன. வெளியிலுள்ள வழிகளைச் சார்ந்த தோஷங் களைக் கேடடையச் செய்து வெளியைச் சார்ந்த அக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன. உட்புறமும் வெளிப்புறமும் உள்ள தாதுக் களை கேடடைச் செய்து உட்புறமும் வெளிப்புறமும் அக்கி நோயை தோற்றுவிக்கின்றன. 25

### 7. உட்புறத்தைச் சார்ந்த அக்கியின் இலக்கணம்

இதயம் போன்ற முக்கிய உயிர் நிலைகளான இடங்களில் காயம் படுவது மயக்கம் உள்ளுக்குள் ஒன்றுக்கொன்று உறுப்புகள் உராய்தல் மிக்க நாவறட்சி மலம் சிறுநீர் கீழ் நோக்கிச் செல்லும் வாயு இவற்றின் வேகங்கள் தாறுமாறாகுதல் விரைவில் சடராக்கினி குறைந்து போதல் ஆகிய இவைகள் உள்ளுறுப்புக்களைச் சார்ந்து தோன்றிய அக்கி நோயின் இலக்கணங்களாகும். இவ்விலக்கணங்கள் இல்லாமல் வாதம்

1. லஸீகா - நிணநீர்

முதலிய தோஷங்களுக்குகூறப்பட்ட இலக்கணங்கள் தென்படுமாயின் அந்நோய் வெளியில் தோன்றும் அக்கி என்று கருதவும். 26 - 27

## 8. தீர்க்க. இயலாத அக்கி நோயின் இலக்கணம்

எல்லா இலக்கணங்களுடன் கூடி உள்ளுறுப்புகளைச் சார்ந்ததும் வெளியுறுப்புகளைச் சார்ந்ததுமான அக்கி, தோன்றக் கூடிய காரணங்கள், மிகவும் வலிவுற்றவைகளாகவும் அதிகத் தொல்லை தரக்கூடியவைகளாகவும் இதயம் தலை வஸ்தி முதலிய மர்மஸ்தானங் களைப் பற்றியவைகளாகவும் இருந்தால் அது நோயாளிக்கு மரணத்தை ஏற்படுத்தும். 28

## 9. வாத அக்கியின் காரணம்

வறட்சித்தன்மை உஷ்ணவீர்யம் கொண்ட உணவு வகை தகாத நடைமுறை இவற்றால் சீற்றமடைந்த வாயு அல்லது வேறு தோஷங் களால் சூழப்பட்டு கேடடைந்த வாயு என இவை இரத்தம் முதலான தூஷ்யங்களைக் கேடடையச் செய்து தம் வலிமைக்கு ஏற்றவாறு உடலில் சென்று அக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன. 29

## 10. வாதத்தினால் தோன்றும் அக்கியின் இலக்கணம்

தலைச்சுற்றல் உடல் முழுவதும் கொதிப்பு மிக்க நாவறட்சி ஊசிகுத்துவது போன்ற வலி வயிற்றில் வலி உடல் உறுப்புகளில் வேதனை முறுக்குவது போன்ற வலி நடுக்கம் காய்ச்சல் கடுமையான இழுப்பு இருமல் எலும்பு மூட்டுகளில் உடைப்பது போன்ற வலி மூட்டுகள் தளர்ந்து போதல் அதன் ஆட்டம் உணவில் சுவை யின்மை உண்ட உணவு நன்றாகச் சரிமானமாகாமை கண்கலங்கிப் போதல் கண்ணீர்வடிதல் உடல் உறுப்புக்களில் எறும்பு ஊர்வது போன்ற உணர்ச்சி அக்கி தோன்றியுள்ள இடம் கருப்பு சிவப்பு நிறத்துடன் காணப்படுதல் அந்த இடத்தில் வீக்கம் ஊசி குத்துவது போன்ற வலி பிளப்பது போன்ற வலி குத்தல் வலி கூனிப் போதல் சுருங்கிப் போதல் மயிர்க்கூச்சம் உதறல் பொறுக்க முடியாத துன்பம் ஆகிய இவ்வடையாளங்கள் வாதத்தினால் தோன்றிய அக்கிநோயின் இலக்கணங்களாகும். இந்நிலையில் சிகிச்சை செய்யாவிடில் சிவப்பு நிறமாகவோ கருப்பு நிறமாகவோ சிறுகொப்புளங்கள் அதிக அளவில் குவிந்து விடும். அந்தக் கொப்புளங்களிலிருந்து மெல்லிய தெளிவான சிவப்பு நிறமுடைய நீர் சிறிதளவு ஒழுகும். கீழ் நோக்கிச் செல்லும் வாயு சிறுநீர் மலம் இவை தடைப்பட்டு வெளியேறும். அக்கிநோயைத் தோற்றுவிக்கக் கூடிய வறட்சி தன்மை உஷ்ணத்தன்மை கொண்ட பொருள்களை பயன்படுத்தினால் நோய் மேலும் சீற்றமடை யும். எதிர்மாறான தன்மை (எண்ணெய்பசை, குளுமைத்தன்மை) கொண்டவற்றைப் பயன்படுத்தினால் நன்மை ஏற்படும். இவ்வாறு

வாத அக்கியின் தணிவடைவது வடையாதது என வகை இலக்கணங்கள் விளக்கப்பட்டன. 30

## 11. பித்தத்தினால் தோன்றும் அக்கி நோயின் காரணம், இலக்கணம்

உஷ்ணமான உணவு உஷ்ணத்தை கிளப்பும் செயல்கள் புளிப்புத் தன்மை எரிச்சல் தன்மை கொண்ட பொருள்களை பயனபடுத்தல் என இவற்றால் சேர்ந்து போன பித்தம், இரத்தம் நிணநீர தோல் மாமிசம் இவற்றைக் கேடடையச் செய்து இரத்தத்தை எடுத்துச் செல்லும் நாடிகளைநிரப்பி அக்கி நோயைத் தோற்றுவிக்கிறது. 31

காய்ச்சல் நாவறட்சி உணர்வின்மை மயக்கம் வாந்தி சுவையறியாமை உறுப்புகளில் பிளப்பது போன்ற வலி அதிக வியர்வை உடலுக்குள் எரிச்சல் பிதற்றல் தலைவலி கண்கள் கலங்கிப் போதல் தூக்கமின்மை நிலைகொள்ளாமை தலைசுற்றல் குளிர்ந்த காற்று குளிர்ந்த நீர் இவற்றில் அதிகபற்று கண்கள் சிறுநீர் மலம் இவற்றின் நிறம் பச்சையாகவோ மஞ்சளாகவோ இருத்தல் பசுமையாகவோ மஞ்சளாகவோ பொருள்கள் கண்களுக்குத் தென்படுதல் கொப்புளங்கள் பரவியுள்ள இடங்கள் சிவப்பு மஞ்சள் பச்சை நீலம் கருப்பு இவற்றுள் ஏதாவதொரு நிறத்துடன் தோன்றுதல் கொப்புளங்களுக்கிடையே உள்ள இடங்களில் தோல் மேலே எழும்பியிருத்தல் என வை பித்த அக்கியின் அடையாளங்களாகும்.

மேலும் இந்நோய் பரவும் இடங்களில் கொப்புளங்கள் தோன்றி அவ்விடத்தில் மிகுந்த எரிச்சல் பிளப்பது போன்ற வலி காணப்படும். கொப்புளங்களிலிருந்து சிவப்பு பச்சை மஞ்சள் கருப்பு நீலம் இவற்றுள் ஏதாவதொரு நிறத்துடன் இரத்தம் போன்ற நீர் வடியும். கொப்புளம் விரைவில் பழுத்துவிடும். உஷ்ணத்தை வளர்க்கும் பொருள்கள் நலம் தரத்தக்கனவல்ல. இதற்கு எதிரிடையானவற்றைப் பயன்படுத்தினால் நன்மை உண்டாகும். இதனை பித்தத்தினால் தோன்றிய அக்கி நோய் என்று அறிக. 32

## 12. கபத்தினால் தோன்றிய அக்கியின் காரணம், இலக்கணம்

இனிப்பு புளிப்பு உப்புச் சுவை பொருந்தியவை எண்ணெய்ப் பசை கொண்டவை குருதுணம் பொருந்தியவை ஆகிய இத்தகைய உணவுப் பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்துவதாலும் பகலில் அதிகம் உறங்குவதாலும் சேர்ந்த கபம், இரத்தம் லஸீகா (நிணநீர்) தோல் மாமிசம் இவற்றைக் கேடடையச் செய்து மிக்க துன்பத்துடன் சிறிது சிறிதாக உடலுறுப்புகளில் சென்று அக்கி நோயைத் ...்க்கிறது. 33

உடல் எப்பொழுதும் குளிர்ந்திருக்கும். குளிர் காய்ச்சல் உடல் கனத்துப் போதல் தூக்கம் சோம்பல் உணவில் சுவையின்மை வாயில் இனிப்புச் சுவை வாயில் கபத்தினால் கொழ கொழப்பு அடிக்கடி துப்ப வேண்டுமென்ற உணர்ச்சி வாந்தி சுறுசுறுப்பின்மை ஈரத்துணியால் உடலை போர்த்தியது போன்ற உணர்வு, சடராக்னிக் குறைவு வலிமைக் குறைவு என இவ்வடையாளங்கள் காணப்படும். மேலும் அக்கி நோய் தோன்றியுள்ள இடம் வெண்மை நிறமாகக் காணப்படும். வீக்கம் தோன்றும். சிறிது இரத்த நிறமும் காணப்படும். அவ்விடத்தில் உணர்ச்சியின்மை அசைவற்றிருத்தல், பாரமாயிருத்தல் சிறிது வேதனையுடன் விரைவில் பக்குவமடையாதிருத்தல் வெகுநாள் நீடித்திருக்கும் தன்மை மேல் தோல் தடித்திருத்தல் என இத்தகைய அடையாளங்களுடன் கூடிய கொப்புளங்கள் தோன்றும். அவற்றின் நிறம் வெண்மையாகவோ சாம்பல் நிறமாகவோ இருக்கும். அக்கொப்புளங்கள் பழுத்து உடைந்தால் அதிலிருந்து வெண்மை பிசு பிசுப்பு நூல்போன்ற கெட்டித்தன்மை இவற்றைக் கொண்ட எண்ணெய்ப்பசை போன்ற நீர் பெருகும். அவ்விடத்தில் விரணமுண்டாகும். பளுத்தன்மை நிலை பெற்றிருத்தல் நீரால் நனைந்தது போல குளிர்ந்து இருத்தல் பிசு பிசுப்பு தடிப்புத்தன்மை தோல் தடித்து அழுக்கு படர்ந்தது போல் காணப்படுதல் இத்தகைய குறிகளுடன் கூடிய புண் வெகுகாலம் வரையில் நிலைத்திருக்கும். நோயாளியின் நகங்கள் கண்கள் முகம் தோல் சிறுநீர் மலம் இவை வெண்ணிறமாக இருக்கும். கப அக்கி உண்டாவதற்குக் காரணமான பொருள்களைப் பயன்படுத்துவதால் இந்நோய் அதிகரிக்கும். இவற்றிற்கு எதிரிடையான உணவு பழக்க வழக்கங்களைக் கடைப்பிடித்தால் நன்மையுண்டாகும். இவ்வாறுள்ளது கபத்தினால் தோன்றிய அக்கி என்று கருதப்படவேண்டும். 34

## 13. வாதபித்த தோஷங்களின் சேர்க்கையால் தோன்றிய அக்கி நோய்

தனக்கே உரித்தான காரணங்களால் சீற்றமடைந்த வாதபித்தங்கள் ஒரே காலத்தில் சேர்ந்து வலிமை பெற்று உடலுறுப்புகளில் எரிச்சலுடன் கூடிய அக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன.

ஒரே சமயத்தில் வாதபித்தங்கள் வலிமை பெற்று சீற்றமடைந்த அக்கி நோயாளியின் உடல் முழுவதிலும் அனல் பரவியிருக்கிறது போன்று உணர்வு பெறுவான். வாந்தி கழிச்சல் எரிச்சல் மூர்ச்சை மயக்கம் காய்ச்சல் கடுமையான இழுப்பு உணவில் சுவையின்மை எலும்பு மூட்டுகளில் பிளப்பது போன்ற வலி அதிக நீர் வேட்கை

உணவு செரியாமை உறுப்புகளில் பிளப்பது போன்ற வலி என தொல்லைகள் தோன்றும். அக்கி நோய் பரவியுள்ள இடங்கள் அணைந்த கரியின் நிறம் அல்லது அதிக இரத்தநிறம் உள்ளவையாக இருக்கும். தீ சுட்டதால் ஏற்பட்ட கொப்புளம் போன்று நிறைய கொப்புளங்கள் தோன்றும். அவை விரைவில் பரவும் தன்மை பெற்றிருப்பதால் உயிர் நிலைகளில் விரைவில் பரவி விடும். உயிர் நிலைகளில் பரவிக்கொதிப்படைந்த மிக்க கொடிய வலிமை பெற்ற இந்த வாயு உடலுறுப்புகளில் பிளப்பது போன்ற வலியை உண்டாக்கி நோயாளியை நினைவிழக்கச் செய்கிறது. விக்கலையும் இழுப்பையும் உண்டுபண்ணுகிறது. தூக்கத்தை அழிக்கிறது. அதனால் அறிவு நிலை தவறி மனத்தில் கவலை அதிகமாகத் தொல்லையைத் தருகிறது. இந்நிலையிலுள்ள நோய்களில் நோயாளி எவ்வகையிலும் மனவமைதி பெறுவதில்லை. நோயாளி அமைதியின்மையால் இடம் இருக்கை படுக்கை இவற்றில் நிலை கொள்ளாமல் திரிய விரும்புவான். நிலை கொள்ளாதிருப்பதால் கஷ்டப்பட்டபின் உறக்கம் கொள்வான். நோயாளிக்கு வலிமைக்குறைவு ஏற்படும். எளிதில் விழித்துக் கொள்ளமாட்டான். இதற்கு *ஆக்னேய விஸர்ப்பம் என்று பெயர். இந்நோய் கொண்ட நோயாளி சிகிச்சை செய்வது பயன் தராது. (இந்த நோய் சிகிச்சைக்கு எளிதில் வசப்படாதது) (35 - 36)

## 14. கப பித்தங்களின் சேர்க்கையால் தோன்றும் அக்கி நோய்

சீற்றமடையச் செய்கிறபொருள் உணவு பழக்கவழக்கங்கள் இவை களை அதிகமாகப் பயன்படுத்துவதால் ஒரே சமயத்தில் கபமும் பித்தமும் சீற்றமடைந்து உடலில் ஒரு பகுதியில் அக்கி நோயைத் தோற்றுவிக்கிறது. இதற்குக் கர்தம அக்கி என்று பெயர். இந்நோய் உண்டான உடற்பகுதி அழுகி விடும். குளிர் காய்ச்சல் தலையில் பளு உடலில் எரிச்சல் ஈரத்துணி போர்த்தியது போன்ற உணர்ச்சி உறுப்புக்களில் தளர்ச்சி பெருந்தூக்கம் சோம்பல் மயக்கம் உணவில் வெறுப்பு பிதற்றல் சடராக்கினியின் சிதைவு வலிமைக்குறைவு எலும்புகளில் பிளப்பது போன்ற வேதனை மூர்ச்சை மிக்க நாவறட்சி துவாரங்களில் கபம் சூழ்ந்திருப்பது போல் இருத்தல் புலன்கள் தம் செயல் திறம் குறைதல் உணவு செரியாமல் மலம் வெளியேறு தல் ஆகிய இவ்வடையாளங்கள் தோன்றும். மேலும் தன்னையறியா மல் கைகால்கள் உறுப்புகள் உதறி அடித்துக் கொள்ளுவதால்

*ஆக்னேய விஸர்ப்பம்- தீ போன்று தீமை விளைவிக்கும் தன்மையது. இதுவே பெரும்பாலும் 'அக்கி' என்ற பெய ரால் வழங்கப்படுகிறது.

உறுப்புகளில் வலி இருப்புக் கொள்ளாமை ஆர்வம் இந்த இலக்கணங்கள் இந்நோயில் காணப்படும். கப பித்தங்களால் தோன்றும் அக்கி பெரும்பாலும் இரைப்பையில் ஏற்படுகிறது. உடலில் ஏதாவது ஒரு பகுதியில்தான் இந்நோய் ஏற்படும். இந்நோய் தோன்றிய இடத்தில் சிவப்பு அல்லது பழுப்பு அல்லது வெண்மை நிறமுள்ள சிறிய சிறிய கட்டிகள் காணப்படும்.

அந்த இடம் மிக்க பளபளப்பாகவோ கருப்பு மங்கிய நிறத்துடனோ காணப்படும். பிசுபிசுப்பு அதிக சூடு பளு சிறிதளவு வேதனை வீக்கம் உள்ளுக்குள்ளேயே அடங்கிப் பழுத்திருக்கும் தன்மை நீர்ப்பெருக்கின்மை விரைவில் அழுகும் தன்மை கொச கொசப்புத் தன்மை என இவ்வடையாளங்களிருக்கும். மாமிசம் தோல் இவை கொஞ்சம் கொஞ்சமாகச் சீழ்ப்பட்டு அழுக ஆரம்பிக்கும். சிறிதளவு வேதனை இருக்கும். நோய் உண்டான இடத்தில் விரலால் அழுத்தினால் (சேற்றில் அழுத்தினால் பள்ளம் தோன்றுவது போல) பள்ளம் விழும். இவ்வாறு உள்ள அக்கி நோயிலிருந்து அழுகிய சீழுடன் கூடிய மாமிசத்துண்டுகள் அறுந்து விழும். அவ்விடத்திலுள்ள இரத்தக்குழாய் நரம்புகள் நன்றாக வெளியில் காணப்படும். அதிலிருந்து பிணநாற்றம் வீசும். இந்நோய் அறிவு நினைவு இவற்றை இழக்கச் செய்யும். இதைக் கர்தம விஸர்ப்பம் என்று சொல்லுகிறோம். இது எல்லா இலக்கணங்களுடன் கூடியிருந்தால் தீர்க்க இயலாதது என்று அறிக. 37 - 38

**15. கபவாதத்தினால் தோன்றிய *(கிரந்தி) அக்கி நோயின் காரணம், இலக்கணம்**

நிலையான பளுத்தன்மை கெட்டித்தன்மை இனிப்பு குளிர்ச்சி எண்ணெய்ப்பசையுள்ள உணவு கபத்தை வளர்க்கக்கூடிய உணவு. இவைகளைப் பயன்படுத்துதல் உடற்பயிற்சியின்மை குவிந்துள்ள தோஷங்களை உரிய காலத்தில் வாந்திக்கும் பேதிக்கும் கொடுத்து வெளியேற்றாமை ஆகிய இத்தகைய காரணங்களால் கபமும் வாயுவும் சீற்றமடைகின்றன. கேடடைந்து குவிந்து மிக்க வலிமை பெற்ற அந்த கபவாதங்கள் இரத்தம் [1]லஸீகா தோல் மாமிசம் இவற்றைக் கேடடையச் செய்து (விஸர்ப்ப) அக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன. குவிந்த கபமானது வாயு செல்லும் துவாரங்களை அடைத்து விடுகிறது. இந்நிலையில் வாயு மிக்க சீற்றம் பெறுகிறது.

* கிரந்தி - முடிச்சு
1. லஸீகா - நிணநீர்

சீற்றமடைந்த வாதம், கபத்தைப் பலவழிகளில்பிரித்து *கபாசய மான மார்பில் விரைவில் பழுக்காத கெட்டியான முடிச்சு மாலைகளை உண்டு பண்ணுகிறது. அல்லது வாயுவும் சீற்றமடைந்த கபமும் அதிக அளவில் உடலில் உள்ள இரத்தத்தைக் கேடடையச் செய்து ரத்தக் குழாய் நரம்புகள் மாமிசம் தோல் இவற்றைந் தாக்கி முடிச்சு மாலையை உண்டுபண்ணுகின்றன. இந்நிலையில் பொறுக்கமுடியாத வலி ஏற்படுகிறது. முடிச்சுகள் சில பெரியனவாகவும் சில சிறியன வாகவும் சில நீளமாகவும் சில உருண்டையாகவும் இருக்கும். முற்றிய இந்த முடிச்சுஅக்கியில் காய்ச்சல் கழிச்சல் இருமல் விக்கல் இழுப்பு உடலுருக்கி மதிமயக்கம் நிறமாற்றம் உணவில் சுவையின்மை செரியாமை வாயிலிருந்து கபம் ஒழுகுதல் வாந்தி மூர்ச்சை உறுப்பு கள் முறிவது போன்ற வலி மிக்க உறக்கம் இருப்புக் கொள்ளாமை உடல் தளர்ச்சி போன்ற தொல்லைகள் ஏற்படுகின்றன.

இத்தொல்லைகள் கொண்ட கிரந்தி விஸர்ப்பநோயாளி எவ்வகை யிலும் சிகிச்சைக்குத் தகுதியற்றவனாக ஆகிறான். (இந்நோய் தீர்க்க இயலாதது என்று அறிக) 39

நோய் தோன்றிய பிறகு நோயைச் சார்ந்து ஏற்படுகின்றவை கட்கு தொல்லைகள் என்று பெயர். அத்தொல்லை பெரியதாகவோ கடுமையாகவோ சிறியதாகவோ எளிதாகவோ இருக்கலாம். நோய் முக்கியமானது. தொல்லை முக்கியமல்லாதது. முக்கியமான நோய் தணிந்து விட்டால் முக்கியமல்லாத தொல்லை தானாகவே தணிந்து விடுகிறது. தொல்லை உடலில் துன்பத்தை அதிகமாக விளைவிப்ப தாக இருந்தால் அத்தொல்லைக்கு முதலில் சிகிச்சை செய்ய வேண்டும். ஏனெனில் முதலிலேயே நோயினால் துன்புற்று வாடுகிற நோயாளிக்கு அதன்பிறகு தோன்றிய தொல்லை மிக்க துன்பத்தை விளைவிக்கும். சிகிச்சை கடினமாகும். மருத்துவமும் எளிதில் செய்ய முடியாததாக ஆகிவிடும். 40

## 16. [1]ஸந்நிபாதத்தால் தோன்றிய அக்கி நோய்

வாதத்தினாலும் பித்தத்தினாலும் கபத்தினாலும் ஏற்படும் அக்கி நோய்க்குக் கூறப்பட்ட காரணங்கள் யாவும் இந்த ஸந்நிபாத அக்கியைத் தோற்றுவிக்கின்றன. அவற்றின் இலக்கணங்கள் எல்லாம் ஸந்நிபாத அக்கியில் காணப்படும். எல்லாத் தாதுக்களிலும் இது பரவியிருக்கும். விரைவில் மரணத்தை விளைவிக்கக்கூடியது.

---

* கபாசயம் - கபத்திற்கு இருப்பிடம் (மார்பு)

1. ஸந்நிபாதம் - வாதம் பித்தம் கபம் என்ற மூன்று தோஷங் களும் ஒன்று சேர்ந்து நோயைத் தோற்றுவிப்பது.

மிக்க தொல்லைகளைத் தரக்கூடியது. இவ்வாறான ஸந்நிபாத அக்கி நோய் சிகிச்சை செய்து தணியக்கூடியது அல்ல என்று அறிக. 41

வாதம் பித்தம் கபம் இவற்றினால் தோன்றிய அக்கி நோய்கள் தீர்க்கக் கூடியவை [1]ஆக்னேய விஸர்ப்பம் [2]கர்தம விஸர்ப்பம் ஆகிய இரண்டும் தொல்லைகள் இன்றி மர்மங் (உயிர்நிலை) களில் பரவாமல் நரம்புகள் இரத்தக்குழாய்கள் இவற்றிலும் பரவாவிடில் அழுகும் தன்மையை அடையா. இவை சாதாரண சிகிச்சையினால் சில நாட்களில் தணியக் கூடியவை.

கவனக்குறைவுடன் சிகிச்சை செய்தால் அவையும் பாம்பின் விஷம் போன்று விரைவில் நோயாளியைக் கொன்றுவிடும். அதே போல் கிரந்தி விஸர்ப்பத்திற்கு தொல்லைகள் தொடங்குவதற்கு முன்பே சிகிச்சை செய்யத் தொடங்க வேண்டும். தொல்லைகளுடன் கூடிய இந்த முடிச்சுஅக்கியை சிகிச்சை செய்யாமல் விட்டு விடுவதே நல்லது. எல்லாத் தாதுக்களிலும் பரவியிருப்பதாலும் விரைவில் மரணத்தைக் கொடுப்பதாலும் எதிரிடையான சிகிச்சை செய்ய வேண்டியிருப்பதாலும் [3]ஸந்நிபாத விஸர்ப்பம் தீர்க்க இயலாதது என்று அறிக. 42

இவற்றுள் தீர்க்கக் கூடியவைகட்குச் சிகிச்சையை விளக்கு வோம். 43

## 17. அக்கி நோய்க்குப் பொதுசிகிச்சை முறை

அக்கி நோய் ஆமதோஷத்துடன் கூடி கப ஸ்தானத்தில் மார்பில் இருக்குமாயின் பட்டினி இருக்கச் செய்து நோயாளிக்கு வாந்தி எடுக்க மருந்து கொடுப்பது நல்லது.

கைப்புச் சுவையுள்ள பொருள்களால் தயாரித்த உணவு வகை களை உண்ணக் கொடுத்தல் நன்மை தரவல்லது. வறட்சித் தன்மை யும் சீதவீர்யமுமுள்ள பொருள்களால் மேல் பூச்சு பூசுவது பயனளிக்க வல்லது. 44

அக்கி நோயில் ஆம தோஷமானது பித்தஸ்தானத்தில் சென்றிருக்குமாயின் நோயாளியைப் பட்டினி இருக்கச் செய்து

---

1. ஆக்கினேய விஸர்ப்பம் - வாதபித்தங்களால் ஏற்படும் அக்கி.
2. கர்தம விஸர்ப்பம் - பித்தகபங்களால் ஏற்படும் அக்கி.
3. ஸந்நிபாத விஸர்ப்பம் - வாதம் பித்தம் கபம் இம்மூன்று தோஷங் களும் ஒன்று சேர்ந்து தோற்றுவிக்கும் அக்கிநோய்.

வாந்திக்கு மருந்து கொடுப்பது மேலானது. கைப்புச் சுவையுள்ள பொருள்களைப் பயன்படுத்துவது நல்லதாகும். குறிப்பாக இதில் இரத்தத்தைவெளியேற்றும் சிகிச்சையையும் மலம் கழிக்கச் செய்யும் சிகிச்சையையும் கையாள வேண்டும். 45

ஆமதோஷமானது வாயுஸ்தானத்தில் இருந்து தங்கிச் சீற்ற மடைந்து விஸர்ப்ப நோயைத் தோற்றுவித்திருந்தால் முதன் முதலில் வாயு தங்கியிருந்த இடத்தை வறட்சித் தன்மையுள்ள மருந்துகளைக் கொடுத்து வறட்சியை உண்டாக்க வேண்டும். உலர்த்த வேண்டும்.

ஏதாவதொரு அக்கி நோயில் இர மா பித்தமோ துணையாக இருந்தால் முதலிலேயே எண்ணெய்ச் சிகிச்சை செய்விக்கக் கூடாது. 46

வாதம் முக்கியமாக உள்ள அக்கி நோயிலும் பித்தம் குறைந்த அளவுள்ள அக்கி நோயிலும் [1]திக்தக கிருதத்தைப் பருகச் செய்ய வேண்டும். தோஷம் அதிகமாக வளர்ந்துள்ள பித்தஅக்கி நோயில் நோயாளிக்கு மலம் கழிப்பதற்கு மருந்து கொடுக்க வேண்டும். 47

அக்கிநோயில் தோஷங்கள் மிகுதியாக இருந்தால் மலம் கழிக்கச் செய்யாத எந்தவிதமான நெய்யையும் பயன்படுத்தக்கூடாது. மலத்தை வெளியேற்றாமல் நெய்யைப் பயன்படுத்துவதால் அடைபட்ட தோஷங்கள் தோல் மாமிசம் இரத்தம் இவற்றைக் கேடடையச் செய்யும். ஆகையால் அக்கி நோய் உள்ளவனுக்கு முதலில் விரேசனம் (பேதியாகச் செய்தல்) கொடுப்பது மிகச் சிறந்தது. அல்லது தொடக்கத்தில் அந்நோய் இரத்தத்தை சார்ந்தே உண்டாவதால் இரத்தத்தை வெளியேற்றுவது சிறந்தது. 48 - 49

இவ்வாறு சுருக்கமாக அக்கி நோயைப் போக்க சிகிச்சை சொல்லப்பட்டது. இதுவே மேலும் விளக்கமாகச் சொல்லப்படும். 50

கப பித்தத்தினால் தோன்றிய அக்கி நோயில் மருக்காரக்காய் அதிமதுரம் வேம்பு வெட்பாலரிசி இவற்றை வாந்தி எடுக்கச் செய்வதில் பயன்படுத்த வேண்டும். 51

பேய்ப்புடலின் வேர் வேப்பம்பட்டை அரிசித்திப்பிலி மருக்காரக் காய் வெட்பாலரிசி இவற்றை அக்கி நோயில் வாந்தி எடுக்கப் பயன் படுத்துக. 52

1. திக்தக கிருதம் குஷ்ட நோய் அத்தியாயத்தில் கூறப்பட்டது.

அக்கி நோயில் தோஷங்களை வெளியேற்றுவதற்கு நன்மை பயக்கக்கூடியதும் கபபித்தங்களை நீக்கக் கூடியவையாக கல்பஸ்தானத்தில் கூறப்பட்டுள்ள மருந்துகளைப் பயன்படுத்தலாம். 53

## 18. [1]முஸ்தாதி *க்வாதம்

(1) கோரைக்கிழங்கு வேப்பம்பட்டை பேய்ப்புடல்இலை இவற்றை முறைப்படி **கஷாயமாகக் காய்ச்சி அக்கி நோயாளிக்கு குடிக்கக் கொடுக்கலாம்.

(2) முறைப்படி தயாரித்த சந்தன கஷாயம் அல்லது சந்தனம் கருநெய்தல் இவற்றால் முறைப்படி செய்த கஷாயம் இவைகளைக் கொடுக்கலாம்.

(3) நன்னாரி அல்லது விளாமிச்ச வேர் நெல்லிக்காய் கோரைக் ிங்கு இவற்றைக் கஷாயமாகத் தயாரித்துப் பருகச் செய்க.

(4) **நிலவேம்பு கஷாயம்** - நில வேம்பு பாச்சோத்தி சந்தனம் சிறுகாஞ்சொரி சுக்கு தாமரைக் கேஸரம் கருநெய்தல் தான்றிக்காய்த் தோல் அதிமதுரம் சிறுநாகப்பூ இவை யாவற்றையும் இடித்து முறைப்படி கஷாயம் தயார் செய்து அக்கி நோய் தணியக் கொடுக்க வேண்டும்.

(5) பிரபௌண்டரீகக் (நாமக் கரும்பு) கட்டை அதிமதுரம் தாமரைக் கேஸரம் கருநெய்தல் சிறுநாகப்பூ பாச்சோத்தி இவைகளை இடித்து நீரிலிட்டுக் கஷாயமாகத் தயாரித்துப் பருகக் கொடுக்கவும்.

(6) திராக்ஷை பர்பாடகம் சுக்கு சீந்திற்கொடி சிறுகாஞ்சொரி இவைகளை இடித்து நீரில் ஊறவைத்து இரவு முழுவதும் வைத்திருந்து காலையில் பிசைந்து வடிகட்டின நீரைப் பருகக் கொடுக்க வேண்டும். இது நாவறட்சியுடன் கூடிய அக்கி நோயைத் தணிக்கும்.

1. முஸ்தா - கோரைக்கிழங்கு

* க்வாதம் - பசுமையான அல்லது உலர்ந்த மூலிகைகளைக் காய்ச்சி வடிக்கட்டி எடுக்கப்படும் கஷாயம்.

** கஷாயம் - மருந்துப் பொருள்களைக் காய்ச்சி எடுக்கப்படுவது கஷாயம் எனப்படும்.

*(7)* பேய்ப்புடல்இலை வேபபம்பட்டை மரமஞ்சள் கடுகரோகிணி அதிமதுரம் மருக்கொன்றை இவற்றைத்தூள் செய்து [1]சீதகஷாய மாகத் தயார் செய்து காலையில் பிசைந்து வடிக்கட்டி அக்கி நோய் தணிவதற்குப் பருகக் கொடுக்க வேண்டும்.

*(8)* முன்பு கூறியுள்ள [2]படோலாதி சீத கஷாயப் பொருள் களுடன் சுக்கு மிளகு திப்பிலி பயந்தம் பருப்பு ஆகியவற்றையும் சேர்த்து முறைப்படி தயார் செய்த கஷாயத்தில் நெய் சேரத்துக் குடிக்கச் செய்தால் அக்கிநோய் தணிவடையும்.

*(9)* அக்கி நோயால் துன்புறுகிறவன் பேய்ப்புடல்இலை பயந்தம்பருப்பு நெல்லிக்காய் இவற்றை இடித்துக் கஷாயமாகச் செய்து நெய் சேர்ந்து பருகினால் நோய் நீங்கும். 54 - 61

அக்கி நோய் நீங்க மருத்துவன் பித்தகுஷ்ட நோயை நீக்கக் கூடிய மகாதிக்தகிருதத்தைப் பருகக் கொடுக்க வேண்டும். அல்லது குன்ம நோய்ச் சிகிச்சைக்கு சொல்லப்பட்ட *திராயமாணா கிருதத்தை நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும். 62 - 63

## 19. அக்கி நோயில் பேதிக்கு மருந்து

*(1)* சிவதைச் சூரணத்தை நெய் பால் வெந்நீர் திராக்ஷைரஸம் இவற்றுள் ஏதாவது ஒன்றில் சேர்த்து அக்கி நோயாளிக்கு மலம் கழிக்கப் பயன்படுத்த வேண்டும்.

*(2)* பிரம்மீய ரஸத்துடன் முறைப்படி தயார் செய்த பாலை மலம் கழிக்கக் கொடுக்க வேண்டும்.

*(3)* அக்கி காய்ச்சல் இவை தணிவடைய *திரிபலா கஷாயத் தில் நெய் சிவதைச் சூரணம் சேர்த்து மலத்தை வெளியேற்றக் கொடுக்க வேண்டும்.

*(4)* நெல்லிக்காய்ச் சாற்றில் நெய் சேர்த்து மலத்தை வெளியேற்றக் கொடுக்க வேண்டும். இந்த நான்கு முறைகளும்

1. சீதகஷாயம் - மருந்துப் பொருள்களை நீரில் போட்டு ஓர் இரவு ஊறவைத்து மறுநாள் காலையில் எடுத்த நீர்.
2. படோலம் - பேய்ப்புடல்

*: திராயமாணா - பிரம்மி - வல்லாரை

*திரிபலா - கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்

தோஷங்களையும் கோஷ்டத்தைச் சார்ந்துள்ள அக்கி நோயையும் நீக்கவல்லவை. கடினமான மலக்குடலுள்ளவனுக்குச் சிவதைச் சூரணம் சேர்த்துக் கொடுப்பது நல்லது. 64 - 67

## 20. [1]சாகைகளைச் சார்ந்த அக்கி சிகிச்சை

சாகைகளில் இரத்தம் கெடடைந்திருந்தால் முதலில் இரத்தத்தையே வெளியேற்ற வேண்டும். இரத்தம் வாதத்தினால் கெடடைந்திருந்தால் கொம்பினாலும் பித்தத்தினால் கெடடைந்திருந்தால் அட்டையினாலும், கபத்தினால் கெடடைந்திருந்தால் கொம்புகளின் குழாயினாலும் இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். அல்லது நோயுள்ள இடத்திற்கு ஏற்றவாறு அருகிலுள்ள இரத்தக் குழாயைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். விரைவில் இரத்தத்தை வெளியேற்றாவிடில் இரத்தம் கெடடைந்து தோல் மாமிசம் இரத்தக் குழாய்கள் இவற்றையும் கெடடைய (அழுகச்) செய்கிறது. 68 - 70

## 21. அக்கி நோய்க்கு வெளிப்புறச் சிகிச்சை

வாந்திக்குக் கொடுத்தல் பேதிக்குக் கொடுத்தல் இரத்தம் வெளியேற்றுதல் ஆகிய இம்முறைகளால் உடலின் உள்ளே உள்ள தோஷங்கள் தூய்மை பெற்ற பிறகு தோல் மாமிசம் இவைகளில் தோஷங்கள் இருந்தாலோ அல்லது தோஷங்கள் குறைவாக இருந்தாலோ வெளியில் பயன்படுத்தக் கூடிய மருந்துகள் இனி சொல்லப்படுகின்றன. 71

அத்திப்பட்டை அதிமதுரம் தாமரைக் கேசரங்கள் கருநெய்தல் சிறுநாகப்பூ ஞாழல் இவற்றைச் சம அளவில் எடுத்து தண்ணீர் விட்டு விழுதாக அரைத்து எட்டில் ஒரு பங்கு பசு நெய் சேர்த்து அக்கி நோய் தோன்றிய இடத்தில் மேலே பூச வேண்டும். 72

இளம் ஆலம் விழுதுகள் வாழைத் தண்டின் மென்மையான பகுதி தாமரைக்கிழங்கு இவற்றைச் சம அளவில் எடுத்து விழுதாகச் செய்து அத்துடன் நால்பாமரப்பட்டை கஷாயத்துடன் நூறு முறை மடக்கி செய்த நெய்யைச் சேர்த்து அக்கி பரவியுள்ள இடத்தில் மேல் பூச்சாகப் பூச வேண்டும். 73

செஞ்சந்தனம் அதிமதுரம் சிறுநாகப்பூ காட்டுக் கோரைக்கிழங்கு வெண்சந்தனம் பதுமகம் ஏலரிசி விளாமிச்சவேர் ஞாழல்பூ இவற்றைச் சம அளவில் எடுத்து விழுதாகச் செய்து நெய் சேர்த்து அக்கி தோன்றிய இடத்தில் பூசவேண்டும். 74

---

1. சாகைகள் - தோல் ரத்தம் முதலிய தாதுக்களும் (கை கால் முதலிய உறுப்புகளும்) சாகைகள் எனப்படும்.

அருகம்புல் தாமரைத்தண்டு சங்கபஸ்மம் சந்தனம் கருநெய்தல் நொச்சிவேர் யவஅரிசி இவையாவற்றையும் சம அளவில் எடுத்து விழுதாக அரைத்து அக்கிநோய் கண்ட இடத்தில் மேலே பூச்சாகப் பூசுக. 75

நன்னாரி தாமரைக்கேஸரம் விளாமிச்சவேர் கருநெய்தல் மஞ்சிஷ்டி சந்தனம் பாச்சோத்தி கடுக்காய்த்தோல் இவையாவற்றையும் சம அளவில் எடுத்து விழுதாகச் செய்து அக்கி நோய் சூழ்ந்துள்ள இடத்தில் மேல் பூச்சாக பூச வேண்டும். 76

விளாமிச்சவேர் அரேணுகம் பாச்சோத்தி அதிமதுரம் பதுமகம் அருகம்புல் குங்குலியம் இவற்றைச் சம அளவில் எடுத்து விழுது செய்து பசுநெய் கலந்து அக்கி நோய் தோன்றியுள்ள இடத்தில் மேல் பூச்சாகப் பூசுக. 77

யவ அரிசியில் தயாரித்த பாயசத்தையோ யவதானியத்தில் தயாரித்த ஸத்துமாவையோ தண்ணீர் கலந்து பசு நெய்யும் சேர்த்து அக்கி நோய் ஏற்பட்டுள்ள இடத்தில் மேற்பூச்சாகப் பூசவும்.

அதிமதுரம் தண்ணீர்விட்டான் கிழங்கு யவ அரிசியின் சத்துமாவு இவற்றைச் சம அளவில் எடுத்து விழுது செய்து பசு நெய் கலந்து அக்கி நோய் உள்ள இடத்தில் மேல் பூச்சாகப் பூசவும். 78

சித்தாமுட்டிவேர் தாமரைக் கிழங்கு தண்ணீர்விட்டான் கிழங்கு பால்முதுக்கன் கிழங்கு அகில் சந்தனம் இவற்றைச் சம அளவில் கொண்டு விழுது செய்து பசுநெய் சேர்த்து அக்கி நோய் உள்ள இடத்தில் பூசுக. தாமரைத்தண்டு தாமரைக் கிழங்கு இவற்றை விழுது செய்து மேல் பூச்சாகப் பூசவும். 79

யவதானியத்தின் மாவு அதிமதுரத்தின் சூரணம் இவற்றை விழுதாக அரைத்து நெய் சேர்த்து அக்கியுள்ள இடத்தில் மேல் பூச்சு பூசுவது நலம். நொச்சி விதை பெருங்கடலைமாவு பயத்தம் பருப்பு வெள்ளையரிசிமாவு இவற்றுள் ஏதாவது ஒன்றை விழுதாகச் செய்து நெய் சேர்த்து அக்கிநோய் பரவியுள்ள இடத்தில் மேல் பூச்சாகப்பூசுக. அல்லது இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துத் தண்ணீரில் கலந்து பிசைந்து நெய் சேர்த்து மேல் பூச்சாகப் பூசலாம். குளிர்ந்த தாமரைச் சகதி நல்முத்து சங்கு பவழம் முத்துச்சிப்பி காவிக்கல் இவற்றுள் ஏதாவது ஒன்றைப் பொடி செய்து நெய் கலந்து அக்கி நோயுள்ள இடத்தில் தடவினால் நன்மை ஏற்படும்.

புஷ்கரமூலம் அதிமதுரம் சித்தாமுட்டி தாமரைக்கிழங்கு கருநெய்தல் இவற்றை ஒன்றாகச் சேர்த்தோ தனித்தனியாகவோ அரைத்து மேற்பூச்சு பூசுவது நல்லது. 80 - 82

இளம் ஆலம்தளிர் வெண்கிலரிப்பாலை இவற்றை விழுதாக அரைத்து நெய் சேர்த்து அக்கி நோயில் மேல் பூச்சு பூசலாம். தாமரைக்கிழங்கு தாமரைத்தண்டு கோரைக்கிழங்கு இவற்றைச் சம அளவில் எடுத்து விழுது செய்து நெய் சேர்த்து மேல் பூச்சாகப் பூசுக. தண்ணீர் விட்டாங்கிழங்கு பால்முதுக்கன்கிழங்கு இவற்றின் விழுதை நூறுமுறை மடக்கி செய்த நெய்யுடன் சேர்த்து அக்கிநோய் உள்ள இடத்தில் தடவலாம். கடல் பாசி நாணல் வேர் கோஜிஹ்வா (பசுவின் நாக்கு போன்ற ஒரு மூலிகை) (விஷகர்ணிகா) எலிச்செவி நொச்சிஇலை இவற்றை விழுது செய்து நெய் சேர்த்து அக்கி நோயில் மேல் பூச்சாகப் பூசலாம்.

வாகைப்பட்டை சித்தாமுட்டி வேரின் பட்டை இவற்றைச் சம அளவில் எடுத்து விழுது செய்து நெய் சேர்த்து அக்கி பரவியுள்ள இடத்தில் மேல் பூச்சாகப் பூசினால் நன்மை தரும்.

ஆல் அத்தி இத்தி நொச்சி அரசு இவற்றின் இளம்துளிர் பட்டை இவற்றை விழுதாகச் செய்து நெய் சேர்த்து அக்கி நோயில் மேல் பூச்சாகப் பூசலாம். மேற்கூறிய யாவும் வாத பித்தத்தினால் தோன்றிய அக்கி நோய்க்கு நன்மை பயக்கவல்லவை. 83 - 86

## 22. கபத்தினால் தோன்றிய அக்கி நோய்க்கு மேல் பூச்சு

கபத்துடன் கூடிய அக்கி நோய்க்கு மேல் பூச்சுகளைப் பற்றிச் சொல்லுகிறேன். கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் இவற்றின் தோல் பதுமகம் விளாமிச்சவேர் தொட்டாற்சுருங்கி கருவேலம்வேர் நாணல் வேர் வெட்டிவேர் இவை யாவற்றையும் சமமாக எடுத்து விழுதாகச் செய்து அக்கி நோய் கண்ட இடத்தில் மேல் பூச்சு பூசுக.

கருங்காலி எழிலைப்பாலை இவற்றின் பட்டை காட்டுக்கோரைக் கிழங்கு சரக்கொன்றைஇலை வெண்கருங்காலிப்பட்டை மஞ்சள்புல் குறிஞ்சியின் இலை தேவதாரு இவையாவற்றையும் சம அளவில் கொண்டு விழுது செய்து அக்கிநோய் தோன்றியுள்ள இடத்தில் மேல் பூச்சாகப் பூசவேண்டும். (1) சரக்கொன்றைஇலை கருநொச்சிப்பட்டை (2) நொச்சியிலை மணத்தக்காளி இலை வாகைப் பூ (3) கடல் பாசி நாணல் வேர் பால்முதுக்கன்கிழங்கு ஞாழல் பூ (4) கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் அதிமதுரம் பால்முதுக்கன் கிழங்கு வாகைப்பூ (5) புஷ்கரமூலம் வெட்டி வேர் மரமஞ்சள்பட்டை

அதிமதுரம் சித்தாமுட்டி வேர் ஆகிய இவ்வைந்து வகை கூட்டு மருந்துகளைத் தனித்தனியாக விழுதாகச் செய்து நெய் சேர்த்து கபத்தினால் தோன்றிய அக்கியுள்ள இடத்தில் மேல்பூச்சாகப் பூசுக. அல்லது இரண்டு இரண்டு கூட்டு மருந்துகளைச் சேர்த்தோ எல்லா கூட்டு மருந்துகளையும் ஒன்றாகச் சேர்த்தோ விழுதாகச் செய்து மேல் பூச்சு பூசலாம். 87 - 91

மேற்கூறிய ஏழு மருந்து வகைகளிலும் நெய் சேர்க்கச் சொல்லா விடினும் சிறிதளவு சேர்க்கவும். இனி சொல்லப் போகின்ற வாத பித்தங்களை முக்கியமாகக் கொண்ட அக்கி நோயில் மேல் பூச்சுக் களில் நெய் அதிக அளவில் சேர்க்கப்பட வேண்டும். 92

## 23. வாதம் இரத்தம் பித்தம் இவற்றை முதன்மையாகக் கொண்ட அக்கி நோய்க்குச் சிகிச்சை

தனியாக நால்பாமரபபட்டை கஷாயத்தில் நூறு முறை மடக்கித் தயாரித்த நெய்யையோ உறைந்த நெய்யின் மேல் படர்ந்த ஏடு போன்ற பகுதியையோ ஆல், அத்தி, இத்தி, அரசு, நொச்சிப்பட்டைக் கஷாயத்தைக் காய்ச்சி அதன் குளிர்ந்த நீரையோ அடிக்கடி அக்கி தோன்றிய இடத்தில் மேலே நனைக்க வேண்டும். மேலே கூறியுள்ள பொருள்களைக் கொண்டே தயாரித்த கஷாயத்தை அக்கி நோயுள்ள இடத்தில் ஊற்றுவதற்கும், அவைகளையே விழுதாகச் சேர்த்து முறைப்படி தயாரித்த நெய்யை மேல் பூசுவதற்கும் பயன்படுத்தலாம். அந்தப்பொருள்களையே சூரணமாகச் செய்து இரணங்களின் மேல் தூவப் பயன்படுத்தலாம். அருகம்புல் சாற்றில் முறைப்படி தயாரித்த நெய்யை அக்கி நோயில் உண்டான இரணங்களை ஆற்றுவதற்காகப் பயன்படுத்தலாம்.

மரமஞ்சள் பட்டை அதிமதுரம் பாச்சோத்திப் பட்டை சிறுநாகப்பூ பேய்ப்புடல் வேப்பம் பட்டை நெல்லிக்காய் கடுக்காய் தான்றிக்காய் அதிமதுரம் இவற்றைச் சம அளவில் எடுத்து முறைப்படி தயாரித்த கஷாயங்களை அக்கி நோயில் உண்டான இரணங் களைக் கழுவுவதற்குப் பயன்படுத்தலாம். இப்பொருள்களை விழுதாகச் செய்து முறைப்படி கஷாயமாகக் காய்ச்சித் தயாரித்த நெய்யை அக்கி நோயில் உண்டான இரணத்திற்கு மேல் பூச்சாகப் பூசப் பயன்படுத்தலாம். அப்பொருள்களையே சமமாக எடுத்துத் தூளாகச் செய்து *வஸ்திரகாயம் செய்த மென்மையான சூரணத்தை அக்கி நோயில் தோன்றும் இரணங்களின் மேல் தூவப் பயன்படுத்தலாம். 93 - 97

*வஸ்திரகாயம் - துணியால் சலித்தல்

## 24. மேல் பூச்சு முறை

நோயைத் தோற்றுவிக்கக் கூடிய தோஷங்களை நீக்குவதற்கு முன்பு பூசப்பட்ட மேல் பூச்சைத் துடைத்து விட்டு மேலே கூறப்பட்ட பூச்சு மருந்துகளை அடிக்கடி பயன்படுத்த வேண்டும். 98

முன்பு பூசிய மேல் பூச்சை முழுவதும் துடைக்காமலே சிறிது ஈரமாக இருக்கும் போதே மறுபடியும் அதன்மேல் பூசவேண்டும். பூச்சு மிகவும் கனமாக இருந்தல் கூடாது. ஆனால் கபத்தினால் தோன்றிய அக்கி நோய்க்குப் பூசப்பட்ட பூச்சு உலர்ந்த பிறகு அதைத் துடைத்து விட்டு கனமாக மேல் பூச்சு பூசவேண்டும். 99

மருந்துப் பொருளின் விழுது கட்டைவிரலின் மூன்றில் ஒரு பாகம் தடிமனாக இருக்கும்படி பூசவேண்டும். விழுது அதிக எண்ணெய்ப்பசை உள்ளதாகவோ வறட்சியாகவோ இருத்தல் கூடாது. கெட்டியாகவோ இளகலாகவோ இருத்தல் கூடாது. ஒரே அளவாக இருத்தல் வேண்டும். 100

ஒரு நாள் தங்க வைத்த விழுதை ஒருக்காலும் மறுபடியும் பூசக் கூடாது. துடைத்து எடுத்த அதே விழுதையே மறுபடியும் பூசக் கூடா 101

மருந்துப் பொருள்களின் விழுதைத் துணியில் தடவி மேல் மூடுவதனால் உடலில் உள்ள உஷ்ணம் வெளியில் வருவதில்லை. அதனால் இரணத்தில் பிசுப்பிசுப்பு குத்தல் வலி இவை உண்டா கின்றன. மேல் துணி மூடியிருப்பதனால் வியர்வை ஏற்பட்டு அதில் சிறிய சிறிய கட்டிகளும் அரிப்பும் ஏற்படுகின்றன. 102 - 103

முன்பு மேற்பூச்சு பூசிய பூச்சின் மேல் மறுபடியும் அடிக்கடி பூசுவதனால் முன்பு விழுது தடவிய துணியால் மூடப்படுவதனால் ஏறபடும் தொல்லைகள் யாவும் உண்டாகும். 104

அக்கிநோய் அல்லது மற்ற நோய்களில் அதிக எண்ணெய்ப்பசை உள்ளதாகவோ மிக்க லேசாகவோ மேல் பூச்சு பூசுவதனால் தோலில் பூச்சு மருந்து நிலையாக இருப்பதில்லை. நோயும் தணிவடையாது. 105

அதனால் மிக்க லேசாகப் பூசக்கூடாது. மிக்க லேசாகப் பூசு வதனால் அது உலர்ந்து பிளந்து விடுகிறது.

மருந்தினுடைய ரஸம் வீர்யம் முதலியவைகள் நோய் பரவியிருக்கும். அடித்தளம் வரையில் செல்லாது. அடித்தளத்தைச் சேர்வதற்குமுன்பே உலர்ந்து விடுகிறது. 106

எண்ணெய்ப்பசையற்ற மேற்பூச்சு பூசுவதனால் மிக்கலேசாக பூசின மேற் பூச்சில் எத்தகைய துன்பங்கள் ஏற்படுமோ அவை இங்கேயும் உண்டாகும். எண்ணெய்ப்பசையற்ற பூச்சு விரைவில் உலர்ந்து துன்பத்தை உண்டாக்குகிறது. 107.

## 25. அக்கி நோய்க்கு உணவு நீர் வகை

அக்கி நோய்க்கு உணவு நீர் வகைகளைச் சொல்லுகிறேன். நோயாளியைப் பட்டினி கிடத்தல் முதலிய உடல் இளைக்கும் சிகிச்சை செய்து, பிறகு எண்ணெய்ப்பசையற்றதும் தேன் சர்க்கரை இவை கலந்ததுமான*மந்தத்தைப் பருகக் கொடுக்க வேண்டும். 108

அந்த மந்தத்தில் இனிப்பு அல்லது புளிப்பு மாதுளம் பழச் சாற்றைச் சேர்த்து அல்லது நெல்லிக்காய்ச்சாறு சேர்த்துச் சிறிதளவு புளிப்பு உண்டாக்கிப் பருகக் கொடுக்கலாம். மேலும் சிற்றீச்சை சிறியதிராக்ஷை பேரீச்சங்காய் இவற்றைத் தண்ணீரில் பக்குவம் செய்து அதில் யவதானியம் அல்லது சம்பா அரிசியில் தயார் செய்த சத்துமாவை நெய் கலந்து (தர்பணம்) அதாவது உடலுக்கு பலமும், மனதிருப்தியையும் அளிக்கக் கூடியவாறு கஞ்சியாகவோ அல்லது லேகியமாகவோ செய்து கொடுக்க வேண்டும். இது உடலுக்கு ஊட்டத்தைக் கொடுக்கக்கூடியது. 109

பேயப்புடல் நெல்லிக்கனி இவற்றின் கஷாயத்தில் மிக்க நாள் பட்ட பழைமையான சம்பா அரிசிக் கஞ்சி பயறு காட்டுப்பயறு கடலை இவற்றால் தயாரித்த கஞ்சியைச் சேர்த்து முன்பு சாப்பிட்ட லேகியம் போன்ற மருந்துகள் சீரணமானபிறகு உணவைக் கொடுக்க வேண்டும்.

அந்தக் கஞ்சியை நோயாளியின் ருசிக்கு ஏற்றவாறு புளிப்புச் சுவை சேர்க்காமலோ புளிப்பு மாதுளம் பழரஸத்தைச் சேர்த்தோ கொடுக்கலாம்.

காற்றடர்ந்த வறண்ட பூமியில் வாழும் உயிரினங்களின் புலால் சாற்றுடன் சிறிய திராட்சை புளிப்பு மாதுளம்பழம் நெல்லிக்காய்

---

*மந்தம் — நெய்யுடன் கலந்த சத்துமாவை குளிர்ந்த நீரில் இளகலாகக் கலந்த பொருள்

இவற்றில் முறைப்படி பக்குவம் செய்து தயாரித்த கஷாயத்துடன் உணவு கொள்ளச் செய்ய வேண்டும்.

இதில் நெய் போன்ற எண்ணெய்ப்பசையுள்ள பொருள்களைச் சேர்க்கக் கூடாது. அது வறட்சியாக இருத்தல் வேண்டும். 110 - 112

அக்கிநோயில் மிக்க பழைய சிவப்பரிசி வெள்ளரிசி பெருஞ்சம்பா அறுபதாங்குருவை அரிசி இவற்றைப் பக்குவம் செய்து பக்குவமான பிறகு நன்றாக வடிக்கட்டி (நீர்தங்கியிருக்கக் கூடாது) உணவாகப் பயன்படுத்த வேண்டும். 113

அக்கி நோயாளிக்கு யவதானியம் கோதுமை சம்பா அரிசி இவற்றுள் ஒத்துக் கொள்ளக் கூடிய ஏதாவதொன்றைப் பயன்படுத்த லாம். சம்பா அரிசி ஒத்துக் கொள்ளாமல் கபம் உடலில் அதிகமாக உள்ள நோயாளிக்கு சம்பா அரிசியை எவ்வகையிலும் பயன்படுத்தக் கூடாது. 114

## 26. அக்கி நோயில் தவிர்க்கத் தக்கவை

எரிச்சலை உண்டாக்கக்கூடியதும் முரணானதுமான உணவு வகை களை உண்பது பகலில் உறங்குவது சினம் கொள்வது அதிக உடற் பயிற்சி மிகுந்த வெயிலில் உட்கார்ந்திருப்பது நெருப்பின் சூட்டின் அருகில் இருப்பது பெருங்காற்று இவற்றைத் தவிர்க்க வேண்டும். 115

## 27. அக்கி நோயில் சிகிச்சைச் சுருக்கம்

பித்தத்தினால் தோன்றிய அக்கி நோயில் மேலே அக்கி நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறையில் குளிர்ச்சியாக உள்ள பொருள்கள் யாவற்றையும் பயன்படுத்தவேண்டும். வறட்சியான சிகிச்சை முறைகளை கபத்தினால் தோன்றிய அக்கிநோயில் பயன் படுத்தலாம். எண்ணெய்ப்பசையுள்ள பொருள்களாகிய சிகிச்சை முறைகளை வாதத்தினால் தோன்றிய அக்கிநோயில் பயன்படுத்த லாம். வாதபித்தத்தைத் தணிக்கக்கூடிய சிகிச்சை முறைகள் [1]ஆக்னேய அக்கி நோயில் நன்மை பயப்பவை. கபபித்தத்தை தணிக்கச் செய்யும் சிகிச்சை [2]கர்தம அக்கிநோயில் பயனளிக்கும். 116 - 118

---

1. ஆக்னேயம் — வாதபித்தத்தால் தோன்றும் அக்கி ஆக்னேயம் எனப்படும்.
2. கர்தம அக்கி — பித்தகபத்தால் ஏற்படும் அக்கிக்குக் கர்தம அக்கி என்று பெயர்.

## 28. (கிரந்தி) முடிச்சு அக்கிக்குச் சிகிச்சை

காலத்தை அறிந்த மருத்துவன் இரத்த பித்தங்கள் முக்கியமாக உள்ள முடிச்சுஅக்கி நோயில் உற்றுக் கவனித்துத் துவக்கத்திலேயே வறட்சித்தன்மையுள்ள பொருள்களைப் பயன்படுத்துதல், பட்டினி கிடக்கச் செய்தல் ஆல் அத்தி இத்தி அரசு நொச்சி இவ்வைந்து மரப் பட்டைகளால் தயாரித்த கஷாயத்தினால் நனைத்தல், மேற்படி ஐந்து வகை மரப்பட்டைகளால் தயாரித்த மேல் பூச்சுக்கள இரத்தக் குழாய் களைக் கீறி இரத்தத்தை வெளியேற்றுதல் அல்லது அட்டைப் பூச்சியைக் கொண்டு இரத்தத்தை வெளியேற்றுதல் வாந்தி எடுக்கச் செய்தல் மலம் கழிக்கக் கொடுத்தல் துவர்ப்பு கைப்புச் சுவையுள்ள பொருள்களால் முறைப்படி தயார் செய்த நெய் எண்ணெய் கொடுத்தல் என இவைகளை சிகிச்சை முறைகளாகப் பயன்படுத்தவேண்டும். 119 - 120

வாந்திக்கும் பேதிக்கும் கொடுத்து உடலின் மேல், கீழ் பகுதி களை தூய்மை பெறச் செய்தல் இரத்தம் வெளியேற்றுதல் இவற்றை செய்த பிறகு வாததையும் கபத்தையும் நீக்கக் கூடிய சிகிச்சை முறைகளைப் பயன்படுத்துதல் முடிச்சுஅக்கி நோய்க்கு நற் பயன் அளிக்கவல்லது. 121

குத்தல்வலி அதிகமாயுள்ள முடிச்சு அக்கி நோயில் சூடும் எண் ணெய்ப் பசையுமுள்ள புட்டு [1]உத்காரிகாவையோ எண்ணெய்ப் பசையும் சூடுமுள்ள [2]வேசவாரத்தையோ ஒத்தடம் கொடுப்பது 122

முடிச்சு அக்கி நோய்க்கு [3]தசமூலத்தை விழுதாகச் செய்து அதன் கஷாயத்தில் முறைப்படி தயாரித்த சூடான எண்ணெயை அக்கி தோன்றியுள்ள இடத்தின் மேல் ஊற்றவேண்டும். அல்லது கோஷ் டத்தை விழுதாகச் செய்து அதையே கஷாயமாகச் செய்து முறைப் படி தயாரித்த சூடான எண்ணெயில் யவக்ஷாரம் அல்லது புங்கக்ஷா ரத்தைச் சேர்த்து முடிச்சுஅக்கி நோயில் ஊற்றுவது நல்லது. சூடான பசுவின் சிறுநீரையோ அல்லது வாத கபத்தைப் போக்கக்

1. உத்காரிகா - மருந்துப் பொருள்களைப் புட்டாகச் செய்வது
2. வேசவாரம் - சுக்கு மிளகு தனியா ஓமம் நெய் மாமிசம் சேர்த்து இடித்த பொருள்.
3. தசமூலம் — சிறுமல்லி பெருமல்லி கண்டங்கத்திரி சிறுவழு துணை நெருஞ்சில் பில்வம் முன்னை பெரு வாகைபெருங்குமிழன் பாதிரி என்பன.

கூடிய இலைகளால் தயாரித்த சூடான கஷாயத்தையோ முடிச்சு அக்கி மேல் ஊற்றுவது நலம்.

## 29. [1]கிரந்தி விஸர்ப்ப நோய்க்கு மேற்பூச்சு

முடிச்சு அக்கி நோயில் அமுக்கராக் கிழங்கு சூரணத்தை விழுதாகச் செய்து சூடாக்கி பற்று (மேல் பூச்சு) போடலாம். உலர்ந்த முள்ளங்கி விழுதைச் சூடாக்கியோ புங்கம் பட்டையை விழுதாகச் செய்து சூடாக்கியோ தான்றிக்காய்த் தோலை விழுதாகச் செய்து சூடாக்கியோ முடிச்சு அக்கி நோயில் மேல்பூச்சாகப் பூச வேண்டும்.

சித்தாமுட்டி பேராமுட்டி கடுக்காய்த்தோல் பூவரசுமொட்டு தான்றிக்காய்த்தோல் மூங்கில்இலை முன்னைப்பட்டை இவற்றைச் சமஅளவில் எடுத்து விழுதாகச் செய்து சூடாக்கி முடிச்சு அக்கி நோய்க்குப் பற்றாகப் போடவும். *123 - 125*

நேர்வாளமரத்தின் வேர்ப்பட்டை கொடிவேலி கொடிக்கள்ளிப்பால் எருக்கம்பால் சேராங்கொட்டை அன்னபேதி இவற்றைச் சமஅளவில் எடுத்து விழுதாகச் செய்து பற்று போடலாம். இது கல்லைக் கூட பிளக்கவல்லது. இது கபத்தினால் வெளிப்பாகத்தில் தோன்றிய முடிச்சு அக்கி நோயில் முடிச்சைப் பிளக்கவல்லது. *126*

உலர்ந்த முள்ளங்கி கொள்ளு இவற்றின் கஞ்சியில் யவக்ஷாரம் புளிப்பு மாதுளம் பழச்சாறு சேர்த்து நீண்ட நாட்களாக உள்ள முடிச்சு அக்கிநோயில் முடிச்சைப் போக்கப் பயன்படுத்தலாம். *127*

## 30. கிரந்திவிஸர்ப்ப நோய்க்கு உணவு

கோதுமை அல்லது யவதானியத்தைச் சோற்றுடன் ஸீது (ஒரு வகை கள்) தேன் சர்க்கரை என்பனவற்றை சேர்த்து முடிச்சு அக்கி நோயாளிக்கு உண்ணக் கொடுக்கலாம். அல்லது [2]வாருணி மண்டத்தில் துறிஞ்சிப் பழச் சாற்றையும் தேனையும் சேர்த்துப் பருகக் கொடுக்கலாம். *128*

கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் அரிசித்திப்பிலி இவற்றை சம அளவு கொண்டு வஸ்திரகாயம் செய்த சூரணத்தைச் தேனுடனோ

1. கிரந்தி விஸர்ப்பம் — முடிச்சு அக்கி
2. வாருணி — ஒரு வகை கள்

குஷ்டநோய் சிகிச்சைக்கு கூறப்பட்ட கோரைக் கிழங்கு போன்றவை களால் தயாரித்த சத்துமாவையோ ரஸாயனாத்தியாத்தில் சொல்லப் பட்டசேராங்கொட்டைக் கஷாயத்தில் தயாரித்த சத்துமாவையோ [1]ஸ்வர்ணமாக்ஷிக பஸ்மத்தையோ (தேவதாரு சீந்தில்கொடி கஷாயத் தையோ) ரசாயன முறைப்படி எடுத்த சுத்த சிலாசத்தையோ புகை பிடிப்பதையோ, சிரோவிரேசனப் பொருள்களையோ குன்மாத்தியா யத்தில் குன்மத்தைப் போக்கக் கூடியதாகக் கூறப்பட்ட மருந்து களையோ முடிச்சு அக்கிநோய்க்கு பயன்படுத்தலாம். இரும்பு இந்துப்பு கல் தங்கம் தாமிரம் இவற்றில் ஏதாவது ஒன்றை நெருப்பில் சூடாக்கி அதன்மேல் துணியைச் சுற்றி முடிச்சு அக்கி நோய் உள்ள இடத்தின் மேல் ஒத்தடம் கொடுத்தால் கட்டி இளகி முடிச்சு நீங்கும். 129 - 131

## 31. முடிச்சு அக்கி நோய்க்குச் சூடு போடும் முறை

மேற்கூறிய பலவகையான சிகிச்சை முறைகளால் தீராமல் வலிமை பெற்று நிலையாகக் கல் மாதிரி கெட்டியாக உள்ள முடிச்சு அக்கியை [2]க்ஷாரம் அல்லது அம்பு அல்லது தங்கம் இவற்றால் சூடு போட வேண்டும். 132

## 32. கிரந்திவிஸர்ப்பத்திற்கு அறுவைச் சிகிச்சை

மேற்கூறிய சிகிச்சை முறைகள் பயனளிக்காவிடில் அந்த முடிச் சைப் பழுக்கச் செய்யக்கூடிய பொருள்களால் மேற்பூச்சு பூசிப் பழுக்கச் செய்து அறுவை சிகிச்சை முறையில் முடிச்சைப் பிளந்து கட்டியை வெளியில் எடுத்துவிட வேண்டும். கட்டியை எடுத்த பிறகு இரத்தத்தில் பிசுபிசுப்பு ஏற்படாதிருப்பதற்காக அடிக்கடி இரத்தம் வெளியேற்றும் முறையை செய்ய வேண்டும். பிறகு வாதத்தையும் கபத்தையும் நீக்கக் கூடியமருந்துகளை மேற்பூச்சாகப் பூசவேண்டும். வாத கபத்தை நீக்கக்கூடிய புகை பிடித்தல் சிரோவிரேசனம் கட்டி உள்ள இடத்தை வியர்ப்பித்தல் பிசைந்து விடுதல் ஆகியவற்றை அடிக்கடி செய்ய வேண்டும். 133 - 134

மேலும் மேற்கூறிய சிகிச்சை முறையால் முடிச்சு அக்கி நோயில் தோஷங்களைத் தணிக்க முடியாவிடில் முடிச்சு அக்கியைப் பழுக்கச் செய்வது சிறந்தது. எரித்தல் பழக்கச் செய்தல் இவற்றாலும் மிக்க அழுகியுள்ள முடிச்சு அக்கி இரணத்தைத் தூய்மைப் படுத்தி ஆற்று விக்க வேண்டும். அவ்வாறே மற்ற இரணங்களுக்குப் பொதுவாக

1. ஸ்வர்ணமாக்ஷிகபஸ்மம் — பொன்னிமிளைத்தூள்
2. க்ஷாரம் — காரப்பொருள் (எரித்தல் தன்மையுள்ளது)

உள்ளுக்கும் வெளிக்கும் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன் படுத்த வேண்டும். 135 - 136

கம்பில்லகம் (கம்பிப்பாலை) வாயுவிடங்கம் மரமஞ்சள் [1]காரஞ்ஜகம் ஜாதிக்காய் இவற்றை விழுதாக அரைத்து முறைப்படி எண்ணெய் தயாரித்து முடிச்சுஅக்கி இரணத்திற்குச் சிகிச்சை செய்ய வேண்டும். 137

தேசத்தையும் பருவ வேறுபாடுகளையும் நன்கு அறிந்த மருத்துவன் அக்கி நோயில் ஏற்பட்டுள்ள இரணத்தை திவிவிரணீயம் என்னும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள இரணத்திற்குக் கூறிய சிகிச்சை முறைகளைப் பின்பற்ற வேண்டும். 138

முடிச்சுஅக்கி நோய்க்கு அந்த நோயை நீக்கக் கூடிய சிகிச்சை முறைகள் அனைத்தையும் பயன்படுத்த வேண்டும். அவற்றையே கபத்தினால் தோன்றிய கண்டமாலை நோயை நீக்கவும் பயன்படுத்த வேண்டும். 139

வாதத்தினால் தோன்றிய கழுத்துமாலை (தண்டமாலை) நோயில் கபம் துணையாக இருந்தால் அந்நோயாளி சில நாட்களுக்கு நெய் பால் கஷாயங்கள் இவற்றைப் பயன்படுத்தினால் அந்நோய் நீங்கும். 140

## 33. அக்கி நோயில் இரத்தம் வெளியேற்றுவதன் சிறப்பு

இந்த அக்கி சிகிச்சை அத்தியாயத்தில் அக்கி நோய் நீங்குவதற்காகச் சொல்லப்பட்ட சிகிச்சை முறைகள் யாவும் ஒன்று. இரத்தம் வெளியேற்றும் முறையும் ஒன்று. இவை இரண்டும் சமமானவை. (இவை இரண்டு வகைகளும் ஒன்றேயாகும்). 141

## 34. அக்கிநோய்க்குப் பொதுவானதும் சிறப்பானதுமான சிகிச்சை

ரத்தமும் பித்தமும் கேடடையாமல் அக்கிநோய் தோன்றுவதில்லை. ஆகையால் எல்லாச் சிகிச்சை முறைகளும் பொதுவாகக் கூறப்பட்டன. ஆனால் தோஷங்களின் ஏற்றத்தாழ்வு மாறுபாடு இவற்றிற்கு ஏற்ப குறிப்பாகச் சிகிச்சை முறைகள் இவ்வத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. ஆகையால் அறிஞனான மருத்துவன் சுருக்கமாகவும் விளக்கமாகவும் சொல்லப்பட்ட சிகிச்சை முறைகளை நன்கு ஆராய்ந்து தக்கவாறு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். 142 - 143

1. காரஞ்ஜகம் — புங்கன் விதை

**முடிவுரை**

அக்கி நோய்க்குப் பெயர்க் காரணம் பெயர் வகை தோஷம் தூஷ்யம் காரணம் வழிக்கேற்றவாறு தோன்றுமிடம் முடிச்சு அக்கி நோயின் கடுமை எளிமை ஆகியவற்றின் இலக்கணம் தொல்லைகள் தீர்க்கக்கூடிய தீர்க்க இயலாத நோய் வகைகள் முறைப்படி சிகிச்சை முறை இவ்விஷயங்களைப் பற்றிப் புனர்வஸு ஆத்திரேயர் மிக்க ஆற்றல் கொண்ட அறிவாளியான அக்கினிவேசருக்கு உபதேசித்தருளினார். 144 - 146

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் சிகிச்சாஸ்தானத்தில்
விஸர்ப்ப சிகிச்சை என்ற இருபத்தோராம் அத்தியாயம் முற்றும்.

# இருபத்திரண்டாவது அத்தியாயம்

# *த்ருஷ்ணா சிகிச்சை

இனி பகவான் ஆத்திரேயர் சொல்லியபடி த்ருஷ்ணா (நாவறட்சி) சிகித்ஸிதம் என்னும் அத்தியாயத்தை விரிவாக விளக்குவோம். 1-2

மெய்ஞானம், தவம், சாந்தி, சாந்திராயண விரதம் என்பவைகளால் பெரும் புகழ் பெற்ற ஆத்திரேய முனிவர் உலக மக்களின் நல்வாழ்விற்காக ஐந்து வகையான நாவறட்சியைப்பற்றி சீடர்களுக்கு நல்லதோர் உபதேசத்தைச் செய்தார். 3

## 1. நாவறட்சியின் காரணங்கள்

மனக்கலக்கம் அச்சம் மயக்கம் துன்பம் சினம் மிக்கபட்டினியிருத்தல் என இவற்றாலும் க்ஷாரப் பொருள் புளிப்பு உப்பு கார்ப்பு உஷ்ணவீரியம் வறட்சி கொண்டவையும் உலர்ந்ததும் ஆகியவைகளுடன் கூடிய உணவு வகைகளை மிகுதியாகப் பயன்படுத்துவதாலும் ரஸம் இரத்தம் போன்ற தாதுக்களின் குறைவாலும் சுரம் முதலிய நோய்களால் இளைத்தலாலும் தூய்மைப்படுத்தும் சிகிச்சையை மிகுதியாகப் பயன்படுத்துவதாலும் வாந்தியும் பேதியும் மிகுதலாலும் கதிரவனின் கடுமையான வெப்பத்தால் தாக்கப் படுதலாலும் பித்த வாதங்கள் வளர்ச்சியடைந்து சீற்றமடைந்து உடலிலுள்ள கபம் நீர் முதலிய குளுமையான தாதுக்களையும் உணவின் ரஸத்தை எடுத்துச் செல்லும் குழாய்களையும் நாக்கின் ஓரங்களையும் தொண்டை தாடைகள் நீர் தங்கும் உறுப்பு (க்லோம) ஆகியவைகளையும் நன்றாக வரளச் செய்து த்ருஷ்ணா என்னும் நீர் வேட்கையைத் தோற்றுவிக்கின்றன. தண்ணீரை எவ்வளவு குடித்தாலும் தாகம் தணிவடைவதில்லை. சீற்றமடைந்த வாதபித்தங்கள் நோயுண்டவன் பருகும் நீர் முழுவதையும் உடனுக்கு உடனே வற்றச் செய்து மேலும் நாவறட்சியைத் தூண்டும். மற்றும் கொடிய நோய்களால் இளைத்தவர்களுக்கு இத்தகைய த்ருஷ்ணா எனும் நாவறட்சி [1] உபத்திரவமாகத் தோன்றும். 4-7

---

* த்ருஷ்ணா — நாவறட்சி (நீர்வேட்கை)
இதைப்பற்றிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெற்றது.

1. உபத்திரவம் — கொடிய நோயின் அடியாகத் தோன்றும் மற்றொரு நோய்

## 2. நாவறட்சியின் முற்குறி      லக்கணமும்

நாவறட்சி நோய் தோன்றுவதற்கு முன்பு வாய் உலர்ந்து ஈரமில்லாமல் போய்விடும். நாவறட்சி நோயின் கீழே கூறப்படும் இலக்கணங்கள் சிலவோ குறைந்த அளவிலோ காணப்படுகின்றன. குறிப்பாக எப்பொழுதும் நீர்வேட்கை இருந்து கொண்டே இருக்கும். 8

## 3. நா      லக்கணம்

வாய் உலர்ந்து போதல் குரல்மாற்றம் தலைச்சுற்றல் வெப்பப் பிதற்றல் உறுப்புகள் செயலற்றுப் போதல் தாடைகள் உதடுகள் தொண்டை நாக்கு இவைகள் சுரசுரத்துப் போதல் மனத்திற்கு ஒன்றும் தோன்றாமலிருத்தல் நாக்கு உள்ளே இழுத்துக் கொள்ளுதல் ருசியின்மை, காது கேளாமை, மர்ம உறுப்புகளில் வலி, உடல் இளைத்தல் என இவை நீர்வேட்கையின் இலக்கணங்கள். மற்றும் ஐந்து வகையான நீர்வேட்கை இலக்கணங்களைக் கூறுகிறேன், கவனமாகக் கேள். 9 - 10

## 4. வாத நீர்வேட்கையின் தோற்றம்

முன்கூறிய காரணங்களால் சீற்றமடைந்த வாதம், உடலில் நீர் தோற்றத்திலுள்ள பலவகையான ரஸ தாதுக்களை உலர்த்திய போது மனிதன் வலிவு குறைந்தவனாய் இளைத்து மிகுதியான தாகமுள்ளவனாகக் காணப்படுவான். 11

## 5. வாத நீர்வேட்கையின் இலக்கணங்கள்

வாத நீர்வேட்கையில் தூக்கமின்மை, தலைச்சுற்றல், வாய் உலர்ந்து போதல், சுவை மாற்றம், மூக்கு போன்ற துவாரங்கள் அடைபடுதல் என இவை தோன்றும். 12

## 6. பித்த நீர்வேட்கையின் தோற்றம்

பித்தத்தில் நெருப்பின் பகுதி பெருமளவில் உள்ளது. அத்தகைய பித்தம், தன் காரணங்களால் சீற்றமடைந்து உடலின் ரஸதாதுக்களை வெப்பமடையச் செய்யும். பித்தத்தினால் வெப்பம் கொண்ட ரஸதாது கடுமையான வெப்பத்துடன் கூடிய நீர் வேட்கையைத் தோற்றுவிக்கும். 13

## 7. பித்த நீர்வேட்கையின் இலக்கணம்

பித்தத்தினாலுண்டான நீர்வேட்கையின் வாய் கசக்கும். தலையில் எரிச்சல் உண்டாகும். குளிர்ச்சியில் விருப்பமும் நினை

விழத்தலும் தோன்றும். கண் சிறுநீர் மலம் இவைகள் மஞ்சள் நிறமுள்ளவைகளாக மாறிவிடுகின்றன. 14

## 8. அசீரண (ஆம) நீர்வேட்கையின் தோற்றம்

அசீரணத்தினால் தோன்றும் நீர்வேட்கை உஷ்ணத்தன்மை கூடியதாயிருக்கும். இது ஆம பித்த தோஷத்தினால் தோன்றுகிறது. அசீரணத்தில் சுவையின்மையும் வயிற்று உப்புசமும் ஏற்படும். வாயிலிருந்து அடிக்கடி கப உமிழ் நீர் ஒழுகும். 15

## 9. ரஸதாதுக் குறைவால் தோன்றிய நீர்வேட்கையின் இலக்கணம்

உடல் ரஸதாதுவினால் உருவாக்கப்பட்டது. அந்த ரஸதாது ஐந்து பெரும்பூதங்களின் சேர்க்கையானாலும் பெருமளவு நீர்ப் பகுதியைக் கொண்டது அவ்வித ரஸதாது குறைந்து போவதால் நீர் வேட்கை உண்டாகிறது. குரல்கம்மல், மயக்கம், இதயமும் தொண்டையும் தாடைகளும் உலர்ந்து போதல் ஆகியவை அதன் இலக்கணங்களாகும். 16

## 10. துணை நோயாகத் தோன்றும் நீர்வேட்கையின் இலக்கணம்

காய்ச்சல், நீரிழிவு, உடலுருக்கி, இழுப்பு, இருமல் ஆகிய இந்த நோய்களால் வருந்துகிறவர்களுக்குத் துணைநோயாக நீர்வேட்கை தோன்றும். அடிக்கடி நீர் பருகிக் கொண்டிருந்த போதிலும் நாவறட்சி தணிவடையாமல் வளர்ந்து கொண்டேயிருக்கும். ஆகையால் இந்த நோய் மிகக் கடுமையானது. எளிதில் தீர்க்கக்கூடியதல்ல. 17

## 11. தீர்க்க முடியாத நீர்வேட்கை

கடுமையான நோய்களினால் உடல் இளைத்தவனுக்கும் அடிக்கடி வாந்தி எடுப்பவனுக்கும் கடுமையான துணை நோயான நீர்வேட்கை தோன்றி உயிரைப் போக்கும். 18

## 12. ரஸதாது வற்றுவதினால் உண்டாகும் நீர்வேட்கை

நெருப்பு இன்றி வறட்சி ஏற்படுவதில்லை. உலர்வதற்குக் காற்று காரணமாகிறது. பெருமளவில் வளர்ச்சியடைந்த இவை இரண்டும் உடலிலுள்ள ரஸதாதுவைச் சுண்டச் செய்து நாவறட்சியை ஏற்படுத்துகின்றன.

(வாத பித்தங்களால் உடலில் நீர்த்தன்மையுடைய தாதுக்கள் ஈரமில்லாமல் போக, தாகம் மிகுதியாக உண்டாகிறது. ஆதலால் பித்த வாதங்களின் சேர்க்கையில்லாமல் நீர்வேட்கை உண்டாகாது. வாத

பித்தங்கள் ரஸதாதுவைச் சுண்டச் செய்யக் காரணங்களாகின்றன. நீர்வேட்கையைத் தீர்க்கமுடியாத நீர்வேட்கை என்கிறோம்.) 19

## 13. உணவினால் தோன்றும் நீர்வேட்கை

குருத்தன்மையுள்ள உணவு, பால், எண்ணெய்ப் பொருள்கள் இவைகளை மிகையாக உண்பதால்வாத பித்தங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து உணவு சீரணமாகும் நேரத்தில் சீற்றமடையும். சடராக்கினி உணவுப் பொருள்களைச் சீரணமாக்கும்போது பித்தம் சீற்றமடையும். சீற்றமடைந்த வாத பித்தங்கள், உடலில் நீரைப் பரவச் செய்கிற உணவு ரஸங்களை எடுத்துச் செல்லும் குழாய்களில் பரவி நீர் வேட்கையைத் தோற்றுவிக்கும். எனவே நாவறட்சிக்கு வாத பித்தங்கள் காரணங்களாகின்றன. 20

## 14. கள்குடிப்பதால் தோன்றும் நாவறட்சி

தீக்ஷ்ணம், உஷ்ண வீரியம், வரட்டுத்தன்மை, இவைகளால் வாத பித்தங்கள் இரண்டும் சீற்றம் அடைகின்றன. அதே குணமுள்ள கள் வகைகளைக் குடிப்பவர்களுக்கு மிக்க நீர்வேட்கை தோன்றும். சீற்ற மடைந்த வாத பித்தங்கள் ரஸதாதுவின் நீரை வற்றச் செய்கின்றன. 21

## 15 கள்குடிப்பதால் தோன்றும் நீர்வேட்கைத் தணிப்பு

கொதிக்கும் மணலில் ஊற்றிய நீர் வறண்டு விடுவதுபோல் கட்குடியினால் நீர் வேட்கை தோன்றியவனுக்குக் குளிர்ந்த நீரைப் பருகச் செய்வதால் அது தணிந்து விடும். 22

## 16. குளிர்ச்சி முறையால் தோன்றும் வெப்பம்

கடும் வெய்யிலில் அலைந்து திரிவதால் உடல் மிகவும் உஷ்ணம் பெறும். உடனே குளிர்ந்த நீரில் மூழ்கினால் உடலின் மேல் பரவியுள்ள வெப்பம் மயிர்க்கால்களை அடைத்து உடலுக்குள் பரவி வயிற்றுக்குள் சேருகிறது. வெப்பத்தினால் நாவறட்சி மிகும். ஆகை யால் வெயிலினால் தாக்கப்பட்டு களைத்தவன் உடனே குளிர்ந்த நீரில் குளிப்பது கூடாது. 23

## 17. நாவறட்சியின் பொதுவான இலக்கணங்கள்

மேற்கூறிய நாவறட்சிகளில் வாதக்குறைவு, தாதுக்கள் குறைதல், பித்தத்தினால் தோன்றிய கோளாறுகள் என இவை காணப்படும். இலக்கணங்கள் பொதுவாகயிருப்பினும் வெவ்வேறு காரணங்களினால் தோன்றிய நாவறட்சி நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளும் வெவ் வேறு வகைப்படும். 24

## 18. பொதுவாக நாவறட்சியின் சிகிச்சை முறைகள்

நாவறட்சியில் உடலிலுள்ள நீர்த்தாது உலர்ந்து போனால் விரைவில் மனிதன் உயிர்நீப்பான். அவ்வாறு உலர்ந்த தாதுவின் நீர் தோன்றச் செய்வதற்குத்தரையில் படாத மழை நீரைச் சிறிதளவு தேன் கலந்து பருகச்செய்ய வேண்டும். அத்தகைய நீர் கிடைக்காவிடில் அதைப்போன்ற குணங்களைக் கொண்ட வேறு நீரைப் பயன்படுத்தலாம். 25

சிறிதளவு துவர்ப்புச் சுவையைத் துணை ரஸமாகக் கொண்டதும் தெளிவானதும் லகுகுணமுள்ளதும் குளிர்ச்சியானதும் நறுமணமுள்ளதும் சிறந்த சுவையுடன் கூடியதும் கபத்தை வளர்ச்சியடையச் செய்யாததும் ஆன நிலத்திலுள்ள நீர் [1]ஐந்திர ஜலத்திற்குச் சமமானது, அந்த நீரைப் பருகக் கொடுக்கவும். 26

## 19 நாவறட்சிக்குக் குடிநீர்

*திருணபஞ்ச மூலங்களைச் சமஅளவு கொண்டு நீர் சேர்த்துக் காய்ச்சிக் குளிரவைத்துக் கற்கண்டு சேர்த்து நாவறட்சி கொண்டவனுக்குப் பருகத் தரவேண்டும். அல்லது மழை நீரில் பொரிமாவையும் சர்க்கரையையும் மற்றும் தேனையும் தக்க அளவில் சேர்த்துப் பருகச் செய்ய வேண்டும். யவதானியத்தைச் சிறிது வறுத்து ''மந்தம்' என்னும் ஒருவகைக் கஞ்சி செய்து அதில் தேனும் சர்க்கரையும்' கலந்து பருகச் செய்யவேண்டும். 27

## 20. நாவறட்சி கொண்டவனுக்குத் தக்க உணவு முறைகள்

சம்பா அரிசி அல்லது தினை அரிசியினால் தயார் செய்யப்பட்ட ''பேயா'' என்னும் கஞ்சியைப் பருகச் செய்ய வேண்டும். அல்லது பாலுடன் வேக வைத்த சம்பா அரிசிச் சோற்றில் தேனும் சர்க்கரையும் கலந்து காய்ச்சிக் குளிர்ந்த பாலுடன் கலந்து உண்ணச் செய்ய வேண்டும். அல்லது புறா முதலிய பறவைகளின் மாமிசத்தை உப்பு புளி சேர்க்காமல் நெய்யினால் வறுத்து அந்த மாமிசரசத்துடன் தேனும் சர்க்கரையும் கலந்த உணவை உண்ணச் செய்ய வேண்டும். திருணபஞ்சமூலம் முஞ்சாதகம் என்னும் புல் முரளமரத்தின் வேர் இவைகளால் முறைப்படி தயாரித்த பாலில் அடர்ந்த காட்டில் வசிக்கும்

---

1. ஐந்திர ஜலம் — வானத்திலிருந்து மழை நீர் தரையில் விழுவதற்கு முன் சேகரிக்கப்பட்ட நீர்

*திருண பஞ்சமூலம் — காசம் தர்ப்பை நாணல் கரும்பு நெருஞ்சில் இவ்வைந்தின் வேர்கள்

பிராணிகளின் மாமிசரசத்தையும் சேர்த்து நாவறட்சியுள்ளவனுக்குத் தரவேண்டும். அல்லது மேற்கூறிய பொருள்களினால் பக்குவம் செய்த பாலில் தேனும் சர்க்கரையும் சேர்த்துப் பருகச் செய்தால் நாவறட்சி தணியும். 28 - 30

## 21. நாவறட்சிக்கு எண்ணெய்க்குளியல் முதலியன

நூறு முறைகள் மடக்கித் தயாரிக்கப்பட்ட நெய்யை உடலின் மேல் தடவிக் கொண்டு குளிர்ந்த நீரில் குளிக்கச் செய்து பாலைப் பருகச் செய்ய வேண்டும். பயத்தம் பருப்பையோ சிறு கடலைப் பருப்பையோ நெய்யில் வறுத்துக் கஞ்சியாகக் காய்ச்சி நோயாளியைப் பருகச் செய்ய வேண்டும். 31

இனிய சுவை கொண்ட பொருள்களையும் [1] ஜீவனீய கணத்தைச் சேர்ந்த பொருள்களையும் குளிர்ந்த சீதவீரியமுள்ள கசப்புச் சுவை கொண்ட பொருள்களையும் சேர்த்துக் காய்ச்சிய பாலில் தேனும் சர்க்கரையும் கலந்து குடிக்கச்செய்யவும். இதை எண்ணெய்க் குளியலுக்கும் உடலில் ஊற்றவும் பயன்படுத்தத்தகும்.

மேலும் முன் கூறப்பட்ட பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாலிலிருந்து எடுக்கப்பட்ட வெண்ணெயினாலான நெய்யைக் குடிக்கச்செய்யவும். இதை உடலின் மேல் தேய்த்துக் கொள்ளவும், மூக்கிலிடும் மருந்தாகவும் பயன்படுத்தலாம்.

மற்றும் தாய்ப்பாலிலோ ஒட்டகத்தின் பாலிலோ சர்க்கரையைச் சேர்த்து மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தலாம். அல்லது கருப்பஞ்சாற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தலாம். 32 - 33

## 22. தாடை உலர்ந்து போவதைப் போக்கும் முறை

பால் கருப்பஞ்சாறு வெல்லப் பானகம் கற்கண்டுப் பானகம் தேன் சீது என்னும் மது திராக்ஷைப்பழத்தினால் ஆன மது புளியம் பழச்சாறு துறிஞ்சிப் பழச்சாறு முதலியவற்றில் ஒன்றால் வாய் கொப்பளிக்கச் செய்தால் வறட்சி நோயால் தாடைகள் உலர்ந்து போவது நீங்கும். 34

## 23. நாவறட்சியைப் போக்கும் பூச்சுகள்

நாவல் காட்டுமா இலந்தை நொச்சி இம்மரங்களின் பட்டை களையோ ஆலம் அத்தி அரசு மருது நொச்சி என்னும் ஐந்து மரப்

---

1. ஜீவனியகணம் - கீரைப்பாலை காகோலி க்ஷீரகாகோலி மேகா மகாமேகா காட்டு உளுந்துவேர், காட்டுப் பயறுவேர் ரிஷபகம் ஜீவகம் அதிமதுரம் ஆகியவை.

பட்டைகளையோ இலந்தை புளியஇலை துருஞ்சிப்பழம் நொச்சி புளிப்புமாதுளம்பழம் இவற்றின் சாறுகளுடன் அரைத்து அதில் நெய் கலந்து இதயத்திலும் முகத்திலும் தலையிலும் பூசினால் மயக்கம்(நினைவிழத்தல்) தலைசுற்றல் நாவறட்சி முதலியநோய்கள் நீங்கும். 35

மாதுளம்பழச்சாறு விளாம்பழச் சாறு பாச்சோத்தி நிலப்பூசணி துரிஞ்சிப்பழம் பச்சை நெல்லிக்காய் இவைகளைச் சேர்த்து விழுதாக அரைத்து அதில் நெய்யையும் ஆரநாளம் என்னும் கழுநீர் காடியையும் சேர்த்து நோயாளியின் நெற்றியில் பூசினால் நாவறட்சி நோய் நீங்கும். அல்லது பாசிக்கொடி சேறு தாமரைப்பூ இவற்றைச் சேர்த்து அரைத்து அத்துடன் மாதுளம் பழச்சாறு முதலிய புளிப்புச் சாறுகளைச் சேர்த்தோ சத்துமாவை புளிப்புச்சாற்றில் கலந்தோ நெற்றியில் பற்றாகப் பூசினால் நாவறட்சி நோய் நீங்கும். 36

## 24. நாவறட்சி நீங்கப் பணிவிடைகள்

தயிர்த்தெளிவு கஞ்சி காடி நீர் ஆகியவற்றில் நனைத்த துணி நனைந்த தாமரை மணிமாலைகள் இவற்றை உடலில் அணிந்து கொண்டிருப்பது குளிர்ந்த நீரில் கரைத்த சந்தனம் தடவிய மார்பகத்தைக் கொண்டவர்களை அல்லது நனைந்த பட்டாடைகளை உடுத்திய அன்புள்ள நங்கைகளைத் தழுவிக் கொண்டிருப்பது. பன்னீர் சந்தனம் முதலியவற்றால் குளிர்ந்த நங்கையர்களின் கொங்கைகளையும் உடலையும் தொட்டுக்கொண்டிருப்பது இமய மலைக் குகை காடுகள் தோட்டங்கள் ஆற்றுவெள்ளம் குளம் தாமரை கள் குளிர்ந்த காற்று நிலா குளிர்ந்த பொருள்கள் மனதிற்கினிய தண்ணீர் நிலைகள் இவற்றின் அருகில் வசித்தல் இவற்றைப்பற்றிய வரலாறுகளைக் கேட்டல் முதலிய பணிவிடைகளால் நாவறட்சி நோய் தணியும். 37 - 39

## 25. நாவறட்சிக்குத் தனிப்பட்ட சிகிச்சை முறைகள் மற்றும் வாதத்தினாலுண்டான நாவறட்சிக்குச் சிகிச்சை

வாதத்தினால் தோன்றிய நாவறட்சி நோய்க்கு வாதத்தைப் போக்கும் உணவும் குடிநீரும் மென்மை, லேசு, குளிர்ச்சி எனும் குணங் களுள்ள உணவு குடிநீர் முதலியவைகளும் நன்மை பயப்பனவை ஆகும். [1]க்ஷதத்தினால் (அடிபடுதலால்) உண்டான இருமலைப் போக்கக்கூடிய பொருள்களுடன் சேர்த்துக் காய்ச்சப்பட்ட பாலையும்

---

1. க்ஷத இருமலைப் போக்கும் பொருள்கள் - கண்டங்கத்திரி, தூதுவளை, ஆடாதொடை போன்றவைகள்.

நெய்யையும் பயன்படுத்த, மேல்நோக்கிச் செல்லும் வாயு இருமல் க்ஷயம் நாவறட்சி இவை நீங்கும். ஜீவனிய கணப் பொருள்களால் தயாரித்த பாலும் நெய்யும் வாதம் பித்தம் இவையிரண்டினால் உண்டான நாவறட்சி நோய்க்கு பயனளிப்பவைகளாகும். 40

## 26. பித்த நாவறட்சிக்குக் குடிநீர் முறை

காய்ச்சிக் குளிர்ந்த நீரில் திராக்ஷை சந்தனம் பேரீச்சங்காய் வெட்டிவேர் இவைகளை ஊரவைத்து தேன் சேர்த்துப் பருகச் செய்ய வேண்டும். இது பித்தத்தினால் தோன்றிய நாவறட்சி நோயைப் போக்கும். மேலும் சிகப்புச் சம்பா அரிசி பேரீச்சம் பழம் சிற்றீச்சம் பழம் கருநெய்தல் திராக்ஷை தேன் இவற்றைத் தண்ணீரில் கலந்து அந்நீரில் புதுப்பானையின் ஓட்டாஞ்சல்லியைப் பழுக்கக் காய்ச்சிப் போடவேண்டும். குளிர்ந்த பிறகு அந்த நீரைப் பித்த நாவறட்சி நோயுள்ளவனைப் பருகச் செய்ய வேண்டும். 41

## 27. பித்த நாவறட்சிக்கு அரிசி களைந்த நீர் பருகுதல்

சிவப்புச் சம்பா அரிசி பதினாறுபலமும் பாச்சோத்தி மரக்கட்டை அதிமதுரம் ரஸாஞ்ஜனம் கருநெய்தல் இவை அனைத்தும் சேர்ந்து நான்குபலமும் கொண்டு இடித்துத் தூளாக்கி நான்கு மடங்கு தண்ணீர் கலந்து ஒரு பானையிலிட்டு ஓட்டாஞ்சல்லியைப் பழுக்கக் காய்ச்சி அந்த நீரில் போட வேண்டும். அது குளிரந்த பிறகு அந்நீரை வடிகட்டித் தேன் கலந்து குடிக்கச்செய்தால் பித்த நாவறட்சி நோய் நீங்கும். 42

## 28. பித்த நாவறட்சிக்கு குடிநீர்

ஆலந்துளிர் துருஞ்சிமரத் துளிர் நொச்சித் துளிர் தர்பவேர் நாணல்வேர் அதிமதுரம் இவைகளைச் சமபங்கு சேர்த்துத் தூளாக்கி புதுப்பானையில் இட்டு நான்கில் ஒரு பங்கு மிகுமாறு காய்ச்சிப் பக்குவம் செய்து கருபபுமண் கருப்பு மணல் அல்லது புதுப்பானையின் ஓட்டாஞ்சில்லி இவைகளில் ஒன்றை பழுக்கக் காய்ச்சி அத்தண்ணீரில் போட்டுக் காய்ச்சிய அக்கஷாயத்தை நன்றாகக் குளிர்ந்த பிறகு தெளிவாக வடிக்கட்டி சர்க்கரை கலந்து பருகச் செய்ய வேண்டும். அல்லது சற்றே கொதிக்க வைத்த சீந்தல் கொடிக் கஷாயத்தில் தேனும் சர்க்கரையும் சேர்த்துப் பருகச் செய்ய நீர்வேட்கை நோய் தணியும். 43

பாலுள்ள மரத்தின் பட்டைகள் இனிப்புச் சுவையுள்ள பொருள் கள் குணத்தினாலும் வீரியத்தினாலும் மிகக் குளிர்ந்த பொருட்கள் என இவைகளைச் சீத கஷாயமாக நன்கு தயார் செய்து அக்கஷாயத்

தில் பழுக்கக்காய்ச்சிய ஓட்டாஞ்சல்லிகளைப் போட்டு வடிக்கட்டி சர்க்கரையும் தேனும் சேர்த்துக் குடிக்கச் செய்தால் பித்த நாவறட்சி நோய் அகலும். 44 - 46

## 29. ஆமஅசீரண நாவறட்சியின் சிகிச்சை

சுக்கு மிளகு திப்பிலி வசம்பு சேராங்கொட்டை கைப்புச் சுவைப் பொருள்கள் இவைகளைச் சேர்த்து முறைப்படி தயாரித்த கஷாயம் ஆமஅசீரண நாவறட்சி நோயைத் தணிக்கும். மேலும் கபத்தினாலுண்டான வாந்திக்குக் கூறிய சிகிச்சை முறைகள் ஆமஅசீரண நாவறட்சிக்கும் பயன்படுத்தத்தக்கவை. 47

## 30. கபத்துடன் சேர்ந்த நாவறட்சிக்கு வாந்தி முறை

உடல் அசைவற்றிருந்தல் ருசியின்மை செரியாமை சோம்பல் வாந்தி இவைகளுடன் கூடிய நாவறட்சியில் கபம் சேர்ந்திருப்பதை அறிந்து தயிர் தேன் சத்துமாவு உப்புநீர் இவற்றுடன் சுடுநீர் கலந்து வாந்தியெடுக்கக் கொடுப்பது சிறந்தது. 48

புளிப்புமாதுளம் பழச்சாற்றிலோ துவர்ப்புச்சுவை கொண்ட நெல்லிக்காய் முதலியவற்றின் சாற்றிலோ மருக்காரக் காய்த்தூளைச் சேர்த்து லேகியமாக்கி உட்கொள்ளச் செய்க. அல்லது மஞ்சளை நீரில் கலந்து காய்ச்சி அதில் தேனும் சர்க்கரையும் கலந்து பருகச் செய்தால் கபத்தினால் தோன்றிய நாவறட்சி நீங்கும். 49

## 31. க்ஷய நோயினாலுண்டாகும் நாவறட்சிக்குச் சிகிச்சை

க்ஷய நாவறட்சி (க்ஷய) ஈழகாசநோயைப் போன்றது தான். இது பெருமளவில் மனிதருக்குத் தொல்லை தரக்கூடியது. இந்த நோயை, மார்பில் அடிபட்டு வலிவு குன்றியவனுக்கும் தாதுகுன்றிய நோயாளிக்கும் கூறப்பட்டுள்ள மருந்து முறைகளைப் பயன்படுத்தித் தணியச்செய்ய வேண்டும். 50

## 32. கள்குடித்தல் குளிர்ந்த நீரில் குளியல் இவற்றால் தோன்றும் நாவறட்சிக்குச் சிகிச்சை

மிக்க கட்குடியினால் தோன்றும் நாவறட்சிக்கு அரைப்பங்கு நீர் கலந்த கள்ளில் புளிப்பு மாதுள ரஸம் இந்துப்பு வாசனைப் பொருள், கள் இவற்றை சேர்த்துப்பருகச் செய்ய வேண்டும். கடும் வெய்யிலில் அலைந்தவுடனே குளிர்ந்த நீரில் குளித்ததால் தோன்றும் கடுமையான நாவறட்சிக்கு நீர்கலந்த கள்ளோ வெல்லப்பானகமோ அருந்தக் கொடுக்க வேண்டும். 51

## 33. பட்டினி கிடப்பதனால் உண்டான நாவறட்சிக்கு மருத்துவம்

உணவு உட்கொள்ளாமையால் (உபவாஸம்[1] இருப்பதால்) தோன்றும் நீர் வேட்கையிலும் எண்ணெய்ப்பொருள்களை அதிகமாக பயன்படுத்துவதினால் உண்டாகும் நாவறட்சியிலும் தெளிவான கஞ்சியை பருகக் கொடுக்க வேண்டும்.

மேலும் குருகுணமுள்ள திண்பண்டங்களை மிகையாக உண்பதினால் தோன்றும் நீர்வேட்கைக்கு வாந்தியெடுக்கச் செய்து உண்ட உணவு வகைகளை வெளிப்படுத்த வேண்டும். குருகுணமுள்ள உணவுகளைப் புசித்த வலிமையுள்ள மனிதனுக்கு நீர்வேட்கை ஏற்பட்டால் கள்ளில் நீரைக் கலந்துகொடுத்தோ சுடுநீரைக் குடிககச் செய்தோ வாந்தியெடுக்கச் செய்ய வேண்டும்.

அரிசித் திப்பிலியை மிகையாக மெல்லச் செய்து வாயில் விறுவிறுப்பு உண்டாக்கி [2]மந்தத்தைக் கொடுத்துப் பருகச் செய்ய வேண்டும். 52 - 53

## 34. தாடை வறண்ட நீர் வேட்கையின் சிகிச்சை

வலிவுள்ளவனுக்குத் தாடை வறண்டு நீர்வேட்கை தோன்றினால் நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். வலிவு குறைந்தவனுக்கு நீர் வேட்கையினால் தாடை வறண்டு போனால் நெய்யில் பக்குவம் செய்வதால் எண்ணெய்ப்பசை கொண்ட உணவில் பால் அல்லது மாமிச ரசத்தைச் சேர்த்துக் குடிக்கச் செய்ய வேண்டும். 54

## 35. மற்றும் சில நீர்வேட்கைகளுக்குச் சிகிச்சை முறைகள்

மிக்க எண்ணெய்ப்பசையுள்ள பண்டங்களை உண்பதினால் உண்டாகும் நாவறட்சிக்கு வெல்லத்தினாலான பானகத்தைப் பருகச் செய்து நோயைத் தணிக்கச் செய்ய வேண்டும்.

மூர்ச்சை நோயில் ஏற்படும் நீர் வறட்சியை இரத்த பித்த நோய்க்குக் கொடுக்க வேண்டிய மருந்துகளைக் கொடுத்துத் தணிக்க வேண்டும்.

நாவறட்சி நோயினால் வலிவுகுன்றி உடல் உலர்ந்தவனுக்கு விரைவில் பசும்பாலைக் குடிக்கச் செய்து நோயைத் தணிக்க

1. உபவாஸம் - பட்டினி கிடத்தல்
2. மந்தம் - யவதானியத்தால் தயார் செய்த சத்துமாவில் நெய் சர்க்கரை நீர் கலந்து செய்த உணவுப்பொருள்

வேண்டும். அல்லது நெய்யில் வறுத்த குளிர்ந்த ஆட்டு மாமிசரசத்தில் இனிப்புச்சுவையும் சீதவீரியமுமுள்ள பொருட்களைச் சேர்த்துப் பருகக் கொடுக்க வேண்டும். இது இதயத்திற்குச் சிறந்தது.
55 - 56

நாவறட்சி எரிச்சல் மூர்ச்சை தலைசுற்றல் ஓய்ச்சல் கள்வெறி இரத்ததோஷம் விஷம் இவற்றினால் பித்தம் மிகுதியானால் இயற்கையான குளிர்ந்த நீரைப் பருகச் செய்ய வேண்டும். ஸன்னிபாதத்தினால் பித்தம் தோன்றினால் வெந்நீரைக் குளிரவைத்து குடிக்கச் செய்ய வேண்டும். 57

விக்கல் இழுப்பு காய்ச்சலின் துவக்க நிலை, நாட்பட்ட ஜலதோஷம் (பீனஸம்) மிகுதியாக நெய் குடித்தல் விலாவலி தொண்டை நோய் ஆகியவற்றால் தோன்றும் நாவறட்சியிலும், கபம் வாதம் இவற்றால் தோன்றிய நோய்களிலும், சளி (கபம்) இறுகிய போதும் வாந்தியெடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் ஆகியவற்றை செய்த உடனேயும் வெந்நீரைப் பருகக் கொடுப்பது சிறந்தது. 58

சோகை பெருவயிறு நாட்பட்ட சளி நீரிழிவு குல்மம் (புதர் போன்ற கட்டி) சடராக்கினிக்குறைவு கழிச்சல் மண்ணீரல் வீக்கம் இந்நோய்களுள்ளபோது நீர்குடிப்பது நல்லதல்ல. மிக்கத் தேவையிருந்தால் சிறிதளவு நீர் குடிக்கக் கொடுக்கலாம். 59

முன்கூறப்பட்ட நோய்களில் நாவறட்சியுண்டாகி உடனடியாக நீர் குடிக்காவிடில் உடனே மரணமேற்படும். அல்லது நோய் வெகுகாலம் வரை நீடிக்கும். 60

ஆகையால் [1] தானியாம்பு (தானியஜலம்)வில் சர்க்கரையும் தேனும் கலந்து குடிக்கச் செய்ய வேண்டும். அல்லது நோய்க்கும் உடலின் தன்மைக்கும் ஏற்றமுறையில் குடிக்கக் கொடுத்து நாவறட்சியைத் தணியச் செய்ய வேண்டும். 61

இவ்வாறு சிகிச்சை செய்வதனால் நாவறட்சி தணிவடைந்து அதனால் உண்டாகும் துன்பங்கள் எளிதில் தீரும். நோய்களினால் தோன்றும் பலதுன்பங்களை நீக்க முற்படும்போது முதல் முதலில் நாவறட்சிக்குத் தக்க சிகிச்சை செய்ய வேண்டும். 62

---

1. தானியாம்பு - காஞ்சிகம் என்னும் ஒரு விதமான புளிப்புக் காடி

**முடிவுரை**

ஐவகை நீர்வறட்சிக்குக் காரணங்களான வாத பித்தங்கள் நோய் தோன்றும்வகை நோயால் உறுப்புகளில் தோன்றும் துன்பங்கள் நோயில் பலவகைக்குரிய இலக்கணங்கள் எளிதில் தீர்க்கக்கூடிய தீர்க்க இயலாத வகைகள் நோய்குரிய சிகிச்சை முறைகள் இவை யனைத்தும் இவ்வத்தியாயத்தில் தனித்தனியாக விளக்கப் பட்டுள்ளன. 63

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்டு த்ருடபலரால் முழுமையாக்கப்பட்
சரகஸம்ஹிதையில் சிகித்ஸாஸ்தானத்தில்
'த்ருஷ்ணாரோக சிகிச்சை' என்னும்
இருபத்திரண்டாவது அத்தியாயம் முற்றும்.

## இருபத்துமூன்றாம் அத்தியாயம்

# *விஷ சிகிச்சை

பகவான் ஆத்திரேயர் கூறியபடி விஷசிகிச்சையை விளக்கு வோம். 1 — 2

### 1. ஆத்திரேயரின் உரை

அக்கினிவேசரை நோக்கி ஆத்ரேயர் இவ்வாறு கூறினார். அக்கினிவேச! முதலில் விஷம் தோன்றிய விதம் அதன் தன்மைகள் அந்த நஞ்சின் இருப்பிடம் அது உடலில் விரைந்து செயலாற்றும் வகைகள் (நஞ்சு உடலில் பரவிய போதும், உண்ணும் உணவு முதலியவற்றில் கலந்துள்ளபோதும்) அதனால் தோன்றும் இலக்கணங்கள், நஞ்சைப் போக்கக்கூடிய சிகிச்சை முறைகள் என்பனவற்றை நன்றாக விளக்குகிறேன், கவனிப்பாயாக. 3

### 2. விஷம் தோன்றிய வரலாறு

தேவர்களும் அரக்கர்களும் அமுதத்திற்காகப் பாற்கடலைக் கடைந்தனர். அப்பொழுது முதலில் மிக்க ஒளியும் நான்கு கோரைப்பற்களும் செம்பட்டை நிறமுள்ள தலைமுடியும் நெருப் புமிழும் கண்களும் பயங்கரத் தோற்றமும் கொண்டபுருடனொரு வன் தோன்றினான். உலகத்திலுள்ள மக்களனைவரும் அவனைக் கண்டு நடுங்கி மிக்க கலக்கமும் பயமும் கொண்டனர். மிக்க கவலையும் பயமும் உண்டாக்கியதால் அந்த அச்சுறுத்தும் உரு வம் விஷமென்னும் பெயர் கொண்டது. 4 — 5

### 3. நஞ்சின் இருப்பிடங்கள்

முதலில் நீரில் தோன்றிய விஷத்தைப் பாம்பு தேள் முதலிய சில அசையும் உயிரினங்களிலும் அசையாப்பொருள்களான மரம், செடி முதலிய சில தாவரங்களிலும் தங்கி இருக்கும்படி பிரும்மா ஆணையிட்டார். ஆகையால் நஞ்சு இருவகைப்படும். அது

---

*விஷசிகிச்சை—பலவகை நஞ்சுகளினால் தோன்றும் நோய் களுக்குச் சிகிச்சை கூறப்படுவதால் இவ்வத்தியாயம் இப் பெயர் பெற்றது.

(வீரியத்தில்) நெருப்பிற்கிணையானது. எட்டு வேகங்களையும் பத்து தன்மைகளையும் இருபத்து நான்குவகை சிகிச்சைகளையும் கொண்டதாகும். 6

## 4. காலத்திற்கேற்ப நஞ்சு சீற்றமும் அடக்கமும் கொள்ளுதல்

நஞ்சு நீரில் தோன்றியதாகையால் கார் பருவத்தில் வெல்லத்தைப்போல் நீர்த்துப் பரவும். பிறகு கூதிர் பருவம் (ஐப்பசி, கார்த்திகை) தன் வலிமையால் அந்த நஞ்சைத் தணிக்கும். ஆகையால் கூதிர் பருவத்தில் அகஸ்திய நட்சத்திரத்தின் மகிமையால் நஞ்சின் வலிமை மிகவும் குறைந்து விடும். 7 – 8

## 5. நஞ்சு கொண்ட உயிரினங்கள்

சிலவகை பாம்புகள், பூச்சிகள், பெருச்சாளி, சிலந்தி வகைகள், தேள், பல்லி, அட்டை, மீன், தவளை, குளவி, ஓணான், முதலியவைகளும் நாய் சிங்கம் புலி நரி சிவிங்கி கீரி முதலிய கோரைப்பற்களுள்ளவையும் நஞ்சு கொண்டவையாகும். அவற்றின் கோரைப் பற்களிலுள்ள விஷம் அசையும் பொருட்களில் உண்டாகும் (ஜங்கம) விஷம் எனப்படும். இங்கு பெரும்பாலும் கோரைபற்கள் உள்ள உயிரினங்கள் கூறப்பட்டன. பற்கள் இல்லாத சிலந்தி முதலியவற்றிற்கு பிறஉறுப்புகளில் நஞ்சு தங்கியிருக்குமென அறியவும். 9 – 10

## 6. தாவர இனங்களில் நஞ்சு

முஸ்தகம் பௌஷ்கரம் கிரௌஞ்சம் வத்ஸநாபம் வலாஹகம் கர்க்கடம் காலகூடம் கரவீரம் காலகம் இந்திராயுதம் தைலம் மேதகம் குசபுஷ்பம் ரோஹிஷம் புண்டரீகம் லாங்கலகம் அஞ்சநாபகம் ஸங்கோசம் மர்கடம் சிருங்கீவிஷம் ஹாலாஹலம் முதலிய பெயர்களைக்கொண்ட நஞ்சு வகைகள் சில செடிகளின் மரங்களின் வேர் கிழங்கு, பழம், புஷ்பம் இலை முதலிய பகுதிகளைச் சார்ந்திருக்கும். இது (அசையாப்பொருள்களில் உள்ளமையால்) தாவர விஷம் எனப்படும். 11 – 13

## 7. கரம் என்னும் நஞ்சின் இலக்கணம்

சிலபொருட்களின் கூட்டு நச்சுத்தன்மை கொள்ளும். இந்த நஞ்சு கரம் என்னும் பெயர் பெறும். இது செரிமானமடையாமல் வெகுகாலம் உடலில் தங்கியிருந்து நோயைத் தோற்றுவித்து உயிரைப் போக்கும். ஏனைய நச்சுப் பொருட்களைப்

போல விரைவில் உயிரைப் போக்காது. (நாள்தோறும் இரத்தம் முதலிய தாதுக்களைக் கெடுத்து சோகை மண்ணீரல் வீக்கம் குன்மம் அதிஸாரம் முதலிய கொடிய நோய்களைத் தோற்று விக்கும்.) 14

## 8. ஜங்கம விஷத்தின் இலக்கனம்

தூக்கம் சோம்பல் உடல் சோர்வு எரிச்சல் விரணம் உண்டாதல் அசீரணம் மயிர்க்கூச்சம் சோபை அதிஸாரம் முதலிய நோய்களை ஜங்கம விஷம் (அசையும் உயிரினங்களின் நஞ்சு) தோற்றுவிக்கும். 15

## 9. தாவர விஷத்தின் இலக்கணம்

தாவர விஷம் காய்ச்சல் விக்கல் பற்கள் கூசுதல் முதலிய வற்றைத் தோற்றுவிக்கும். தொண்டையை அடைத்தல் நுரை யுடன் கூடிய வாந்தி பேதி சுவையின்மை இழுப்பு மயக்கம் முதலியவற்றையும் உண்டாக்கும். 16

## 10. இருவகை நஞ்சுகள் ஒன்றை மற்றொன்று தணித்தல்

அசைவனவாகிய உயிரினங்களினாலான (ஜங்கம) விஷம் தாக்குண்டவரின் உடலில் கீழ் நோக்கிப் பரவக்கூடியதாகும். தாவர விஷம் உடலில் மேல்நோக்கிப் பரவக்கூடியதாகும். இவ் வாறு ஒன்றுக்கொன்று எதிரிடையான வழியில் பரவக் கூடியவை ஆகையால் பொதுவாக ஜங்கம விஷம் தாவர விஷத்தையும் தாவர விஷம் ஜங்கம விஷத்தையும் தணிக்கும். 17

## 11. நஞ்சின் வேகங்களும் அவற்றின் இலக்கணங்களும்

உடலில் நஞ்சு பரவும் விதம், எட்டு நிலைகளென (வேகங் களாக) முன்பு கூறப்பட்டுள்ளது. அவற்றின் விளக்கம் வருமாறு: முதல் வேகத்தில் நஞ்சு உடலில் ரஸதாதுவில் பரவி அதைக் கெடுத்துத் தன் வேகத்தைக் காட்டும். அப்போது நாவறட்சி யும் நினைவிழத்தலும் தோன்றும். பற்கள் கூசும். வாயி லிருந்து எச்சில் பெருகும். வாந்தியாகும். மிகவும் சோர்வு தோன்றும். இரண்டாவது வேகத்தில் இரத்தம் கெட்டு உடல் நிறம் மாறுபடும். தலைசுற்றலும் நடுக்கமும் தோன்றும். நினைவிழத்தல் மிகும். உடலை முறித்துக் கொள்ளுதலும் கொட்டாவி விடுதலும் காணப்படும். உடல் முழுவதிலும் நமைச்சல் தோன்றும். கண்கள் இருண்டு போகும். மூன்றாவது வேகத்தில் நஞ்சு உடலின் மாமிசதாதுவில் பரவி அதைக் கெடுத்து

விடும். அப்போது உடலின் மேல் தழும்புகள் நமைச்சல் வீக்கம் தோன்றும். நான்காவது வேகத்தில் நஞ்சு உடலிலுள்ள கொழுப்பு பகுதியில் பரவி அதைக்கெடுக்கும். அதனால் வாதம் முதலிய தோஷங்களினால் தோன்றும் நோய்களும் எரிச்சல் வாந்தி உடலைச் சூலத்தால் குத்துவது போன்ற வலி நினை விழத்தல் முதலிய துன்பங்களும் தோன்றும். ஐந்தாவது வேகத்தில் நஞ்சு எலும்புகளில் பரவி அதைக் கெடுக்கும். கண்களில் நீலம் சிவப்பு முதலிய பலநிறங்கள் காணப்படும். கண்கள் இருண்டு விடும். ஆறாவது வேகத்தில் நஞ்சு எலும்புக்குள் உள்ள மஜ்ஜை எனும் தாதுவில் பரவி அதைக் கெடுக்கும். விக்கல் மிகுதியாகத் தோன்றும்; ஏழாவது வேகத்தில் நஞ்சு விந்துவில் பரவி அதைக்கெடுக்கும். அப்பொழுது தோள்களின் பிடிப்பு நழுவிப்போகும். எட்டாவது வேகத்தில் நஞ்சு ஏழுதாதுக் களையும் கடந்து உடல் முழுவதும் பரவி மரணத்தை விளை விக்கும். 18 — 21

## 12. விலங்கு முதலியவற்றிற்குத் தோன்றும் வேகங்கள்

விலங்கினங்களின் உடலில் ஜங்கம [2]ஸ்தாவர விஷங் களால் தோன்றும் வேகங்கள் நான்கு வகையாக இருக்கும். பறவைகளின் உடலில் மூன்று வேகங்கள் தோன்றும். விலங் கினத்தில் உடலில் நஞ்சு சேர்ந்த போது முதல் வேகத்தில் அதன் உடல் இளைத்து 'கிர்' என்று சுற்றும். இரண்டாம் வேகத்தில் உடல் நடுங்கிக் கொண்டிருக்கும். புலன்கள் திறனற்றுப் போகும். அல்லது உடல் வீங்கும். மூன்றாம் வேகத்தில் விலங்கு உணவைக் கொள்ளாமலிருக்கும். நான்காம் வேகத்தில் இழுப்பு தோன்றி மரணம் உண்டாகும்.

பறவைகள் முதல் வேகத்தில் வருத்தத்துடன் செய்வதறி யாமல் அசைவின்றியிருக்கும். இரண்டாம் வேகத்தில் சுற்றிச் சுற்றி விழும். மூன்றாம் வேகத்தில் உடல் அசைவிழந்து மரித்து விடும். 22— 23

## 13. [illegible]ன் பொது இலக்கணம்

நஞ்சு இலாகவம் ரூக்ஷம் ஆசு விசதம் வியவாயி தீக்ஷ்ணம் விகாசி, சூக்ஷ்மம் உஷ்ணம், தெளிவாக அறிய முடியாத சுவை

1. ஜங்கம விஷம்—நகர்வனவாகிய விலங்கு முதலியவற்றால் தோன்றிய நஞ்சு.
2. ஸ்தாவர விஷம்—நிலையாக இருக்கும் சில செடிகளி லிருக்கும் நஞ்சு.

என்னும் பத்து குணங்களைக் கொண்டதென ஆயுர்வேத அறிஞர்கள் கூறுகின்றனர். 24

## 14. நஞ்சின் குணங்களின் விளக்கம்

நஞ்சு ரூக்ஷமான (வறட்சியான) குணமுள்ளதாகையால் வாதத்தையும் உஷ்ண குணமுள்ளதாகையால் பித்தத்தையும் [1]சூக்ஷ்மத்தன்மையால் நுண்ணிய வழிகளில் பரவி ரத்ததுடன் கலந்து அதையும் சீற்றமடையச் செய்யும். விஷம் தெளிவாக அறியமுடியாத சுவையுடையதாகிக் கபதோஷத்தையும் உணவின் ரஸங்களுடன் விரைவில் கலந்து அதையும் கெடுக்கும். விஷம் [2]வியவாயியாகையால் உடல் முழுவதும் விரைவில் பரவும். விஷம் தீக்ஷ்ண குணம் கொண்டதாகையால் இதயம் பொட்டுகள் முதலிய மென்மையான உயிர் நிலைகளில் விரைவில் பரவி அவற்றைக் கெடுக்கும். விஷம் [3](விகாஸி) அதாவது உடலில் உள்ள கைகால் மூட்டுகள் முதலிய இணைப்புகளைச் சிதைத்துத் துன்புறுத்துவதாகும். விஷம் இலேசானதாகையால் சிகிச்சைக்குக் கட்டுபடாதது. ஓரிடத்திலும் நிலையில்லாதாகையால் அது மருந்துடன் சேர்ந்து எளிதில் தணியாது. பிசுபிசுப்பில்லாதது (தெளிவானது) விசதம் எனப்படும். எனவே தோஷங்களிலோ ஏழு தாதுக்களிலோ ஒட்டாமல் பரவி வாதம் முதலியவற்றிற்கான இருப்பிடங்களைச் சேர்ந்து வாதம் முதலியவற்றிலெதையாவது சீற்றமடையச் செய்யும். 25 – 27

## 15. வாதத்தின் இருப்பிடத்தைச் சேர்ந்த விஷத்தின் இலக்கணம்

இயற்கையாக வாதம் மிகுந்துள்ளவனின் உடலில் விஷம் சேர்ந்த போதும், அல்லது வாதத்திற்கு இருப்பிடமான பக்குவாசயம் (சீரணப்பை) முதலிய உறுப்புகளில் விஷம் பரவிய போதும் கபபித்தங்களுக்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் குறைந்து நாவறட்சி நினைவிழத்தல் எதிலும் விருப்பமின்மை மூர்ச்சை

---

1. சூக்ஷ்மம்—நுண்ணியது. நுண்ணிய தாதுக்கள், துவாரங்களிலும் மயிர்க்கால்களிலும் புகுந்து பரவக் கூடியது.
2. வியவாயி—செரிமானமாகும் முன்பே உடலில் பரவக் கூடியது. முதலில் உடலில் பரவி பிறகு செரிமானமாகக்கூடியது.
3. விகாஸி—உடலில் உள்ள மூட்டுகளை நழுவச் செய்வது. உயிரான ஓஜஸ் என்பதை இரஸம் இரத்தம் முதலிய தாதுக்களிலிருந்து வேறுபடுத்துவது.

தொண்டையடைப்பு வாந்தி வாயில் நுரைதள்ளுதல் முதலிய வாதம் சீற்றமுறுவதால் தோன்றும் இலக்கணங்கள் காணப்படும். 28

## 16. பித்தத்தைச் சேர்ந்த நஞ்சின் இலக்கணம்

இயற்கையாகப் பித்தம் மிகுந்துள்ளவனின் உடலில் அல்லது பித்தத்திற்கு இருப்பிடமாகிய தொப்புள் முதலிய உறுப்புகளில் நஞ்சு சேர்ந்த போது கபவாதங்களுக்குச் சொல்லப்பட்ட இலக்கணங்கள் குறைந்து நாவறட்சி இருமல் காய்ச்சல் வாந்தி சோர்வு அழற்சி நினைவிழத்தல் அதிஸாரம் முதலிய பித்தத்திற்கு உரிய லக்கணங்கள் மிகுந்து காணப்படும். 29

## 17. கபத்தை சேர்ந்த நஞ்சின் இலக்கணம்

இயற்கையாகப் கபம் மிகுந்துள்ளவனின் உடலில் அல்லது கபத்திற்குரிய இடங்களாகிய ஆமாசயம் முதலிய உடற்பகுதிகளில் நஞ்சு பரவியபொழுது வாதபித்தங்களுக்குரிய இலக்கணங்கள் குறைந்து இழுப்பு தொண்டைஅடைப்பு நமைச்சல் வாயிலிருந்து எச்சில் மிகுதியாக ஒழுகுதல் வாந்தி முதலிய இலக்கணங்கள் மிகுந்து காணப்படும். 30

## 18. *தூஷீவிஷத்தின் இலக்கணம்

*தூஷீவிஷமானது இரத்தத்தைக் கெடுத்து உடலில் தழும்புகளையும் கொப்புளங்களையும் அரிப்பையும் படையையும் தேமலையும் உண்டாக்கும். மேலும் இந்த நஞ்சு வாதம் முதலிய தோஷங்களை ஒன்றொன்றாகக் கெடுத்து வாதம் முதலியவற்றிற்குக் கூறப்பட்ட இலக்கணங்களைத் தோற்றுவித்து முடிவில் உயிரைப் போக்கும். 31

## 19. சிகிச்சைக்கு உட்படாத நஞ்சின் இலக்கணம்

நஞ்சு உடலில் பரவும் போது நஞ்சிலுள்ள வீரியத்தினால் உடலிலிருந்து இரத்தம் பெருகும். மேலும் அந்த நஞ்சு ரத்தத்தின் சுரோதஸ்ஸுக்கள் என்னும் துவாரங்களையடைத்து உயிரைப் போக்கும். மேலும் நச்சுப் பொருளைப் பருகியபோது

---

*தூஷீவிஷம்—தேசம் காலம் பகல்தூக்கம் முதலியவற்றால் கெட்டு வாதம் முதலிய தோஷங்களைக் கெடுக்கக்கூடிய நச்சுத்தன்மையைப் பெற்ற பொருள்.

நஞ்சு உடலில் பரவி இறந்த பிறகு முகூர்த்த காலம் (சுமார் ஒன்றரை மணி நேரம்) சென்றதும் இதயத்தைச் சேரும். பாம்பு முதலியவை கடித்த போது அந்த நஞ்சினால் உயிர் நீங்கிய பின் மீண்டும் நஞ்சு கடிபட்ட இடத்திற்கு வந்து சேரும். நஞ்சுபூசிய அம்பினால் அடிக்கப்பட்ட விலங்கு உயிர் துறந்த போது மீண்டும் நஞ்சு அடிபட்ட உடற்பகுதியை அடையும். 32

## 20. மேலும் சில சிகிச்சைக்கு உட்படாத நஞ்சுகள்

நஞ்சு உடலில் பரவியபோது உதடுகள் கருத்தல் பற்கள் சிதைதல் முடிஉதிர்தல் உறுப்புகள் செயலிழத்தல் கை கால்களில் வலிப்பு குளிர்ச்சிப் பொருட்களாகப்பட்டாலும் மயிர்கூச்சம் தோன்றாதிருத்தல் கொம்பு முதலியவற்றால் அடித்தாலும் தழும்புகள் தோன்றாமை உடலில் கூரிய கருவிகளால் காயம் பட்டாலும் இரத்தம் பெருகாமலிருத்தல் முதலிய இலக்கணங்கள் காணப்பட்டால் நஞ்சுக்கிலக்காகியவன் பிழைக்கமாட்டான். இத்தகைய இலக்கணங்கள் காணப்படாத முன்பே மருத்துவர் தகுந்த சிகிச்சை முறைகளைக் கையாளலாம். 33 – 34

## 21. நஞ்சை முறிக்கும் இருபத்து நான்கு வகை சிகிச்சைகள்

(1) மந்திர ஜபம் செய்தல் (2) மந்திரக்கயிறு கட்டுதல் (3) பாம்பு முதலியவை கடித்த இடத்தைக் கீறிக்காயப்படுத்தல் (4) கடிபட்ட இடத்தைக் கசக்கி இரத்தத்துடன் நஞ்சை வெளியேற்றுதல் (5) கடிபட்ட இடத்திலிருந்து கொம்பு குழாய் முதலியவற்றைக் கொண்டு உறிஞ்சி நஞ்சை வெளியேற்றுதல் (6) கடிபட்ட இடத்தை நெருப்பினால் சுடுதல் (7) நீரை ஊற்றுதல் (8) நீரில் அமர்ந்து முழுகச்செய்தல் (9) இரத்தத்தை வெளியேற்றுதல் (10) வாந்தி எடுக்கச் செய்தல் (11) பேதியாகச் செய்தல் (12) நஞ்சு தலைக்கு ஏறாமலிருக்க மருந்தைப் பயன்படுத்துதல் (13) இதயத்தைக் காப்பாற்றத் தக்க மருந்தைப் பயன்படுத்துதல் (14) கண்களில் மையிடுதல் (15) மூக்கில் மருந்திடுதல் (16) புகை போடுதல் (17) இலேகியம் (18) மருந்து (19) தணியச்செய்யும் முறை (20) கடிபட்ட இடத்தில் மருந்துப் பொடிகளைத் தூவுதல் (21) மாறான தன்மை கொண்ட வேறு நஞ்சைப் பயன்படுத்தல் (22) நினைவிழக்காமல் காப்பாற்றுதல் அல்லது நினைவு தவறினால் மறுபடி நினைவு தோற்றுவித்தல் (23) மேல் பூச்சு மருந்துகள் (24) மிருதசஞ்சீவனி (இறக்கும் தருவாயிலிருப்பவனை உயிர்ப்பிக்கும் மருந்துகளையும்) பயன் படுத்துதல் என இவை நஞ்சை நீக்கும் 24 வகை சிகிச்சைகளாகும். 35 – 37

## 22. கடிவிஷத்திற்குச் சிகிச்

பாம்பு கடித்ததும் நஞ்சு உடலில் பரவுவதற்கு முன்பே கயிறு துணி முதலியவற்றில் ஒன்றால் கடிபட்ட இடத்திற்கு மேல் இறுகக்கட்ட வேண்டும். அப்பொழுது நஞ்சு கடிபட்ட இடத்திலேயே தங்கியிருக்கும். பிறகு கடிபட்ட இடத்தை நன்றாக அழுத்திக் கசக்கி நஞ்சை வெளியேற்ற வேண்டும். அல்லது கடிபட்ட இடத்தைக் கீறி நஞ்சை வெளியேற்றவேண்டும். உயிர் நிலைகளில் கடிபட்டபொழுது மட்டும் இந்த கசக்குதல் கீறுதல் என்னும் சிகிச்சைகளைச் செய்யக்கூடாது. வாயில் யவதானியத்துகள். நல்லபுற்றுமண், சாம்பல் இவற்றில் ஒன்றை வாயின் உட்புறம் பூசிக்கொண்டுஅவ்வாயினால் கடிபட்ட இடத்திலிருந்து நஞ்சு கலந்த இரத்தத்தை உறிஞ்சி வெளியேற்ற வேண்டும். (தன்வாயில் நஞ்சு படாமலிருக்க மருத்துவன் மாவு முதலியவற்றை வாயில் வைத்துக் கொண்டு உறிஞ்ச வேண்டும்.) 38

## 23. கடிவிஷத்திற்கு இரத்தத்தை வெளியேற்றுதல்

பாம்பு முதலியன கடித்தால் கடிபட்ட இடத்தைச்சுற்றி கூர்மையானக் கருவிகளைக் கொண்டு (பிரச்சானம் என்னும் முறைப்படி) லேசாகக் கீறி அல்லது கொம்பு முதலியவற்றால் இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். அல்லது அட்டைகளைக் கடிக்கச் செய்து இரத்தத்தை உறியச் செய்ய வேண்டும். நஞ்சு பரவிய இடத்தில் அசுத்தரந்தக்குழாயைக் கீறி அதை வெளியேற்ற வேண்டும். உடலிலுள்ள இரத்தம் நஞ்சினால் கெட்டிருந்தால் உடலும் மற்றும் தாதுக்களினுடைய தன்மைகளும் கெடும். அதனால் உயிர் நீங்கும். எனவே கெட்ட இரத்தம் வெளியேறாவிடில் சுக்கு, மிளகு, திப்பிலி, ஒட்டடை, ஐந்து உப்புகள், இலைத்துகள் முதலியவற்றால் தேய்த்து இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 39 — 40

## 24. பாம்பு விஷத்திற்குப் [1]பிரதிகர்ஷண சிகிச்சை

[2]திரிகடுகம் ஒட்டடை மஞ்சள் [3]ஐந்து லவணங்கள் கோரோசனம் இவற்றைச் சம அளவில் சேர்த்துப் பாம்பு முதலியவை

1. பிரதிகர்ஷணம்—மருந்துப் பொருள்களின் தூளைக் கொண்டு கடிபட்ட இடத்தைத் தேய்த்தல்.
2. திரிகடுகம்—சுக்கு மிளகு திப்பிலி.
3. ஐந்து லவணங்கள்—இந்துப்பு, சூரியுப்பு, வெடியுப்பு, வயலுப்பு ஸௌவர்சலஉப்பு.

கடித்த இடத்தில் தேய்க்க வேண்டும். இதனால் இரத்தம் வெளியேறி நஞ்சு நீங்கும். மேலும் நஞ்சுடன் கலந்த இரத்தம் விரைவாக அதிகம் வெளியேறினால் ஆலம்பட்டை முதலிய குளிர்ச்சி தரும் பொருள்களின் விழுதினால் பற்றுப்போட வேண்டும். 41

காற்று, நெருப்பைப் பரவச் செய்வது போல உடலிலுள்ள இரத்தம் நஞ்சை விரைவாக உடல் முழுவதும் பரவச் செய்யும். இவ்வாறு நஞ்சுக்குத் துணையாகும் இரத்தம், குளிர்ந்த மேல் பூச்சு குளிர்ந்த நீரால்நனைத்தல் முதலியவற்றால் கட்டுப் பட்டிருக்கும். அதனால் வேகம் குறைந்து நஞ்சு பரவாமலிருக்கும். நஞ்சின் வேகத்தால் வெறி மயக்கம் மனத்தில் கலக்கம் இதயத்தில் துன்பம் முதலியன உண்டாகும். அப்பொழுது குளுமைப்படுத்தும் செயல்களால் துன்பமுண்டாகாமல் சிகிச்சை செய்ய வேண்டும். மயிர்கூச்சல் உண்டாகும் வரை குளிர் காற்று படும்படி வீச வேண்டும். 42 – 43

## 25. கருவிகளைக் கொண்டு கீறுதலால் நஞ்சை நீக்குதல்

பாம்பு கடித்ததும் கடிபட்ட இடத்தின் வெட்டி இரத்தத்தை வெளியேற்றினால் வேரை அறுத்தால் செடி உலர்ந்து விடுவது போல நஞ்சு பரவாமல் அடியோடு நீங்கும். மேலும் வாயால் உறிஞ்சிய போது நஞ்சு முழுவதும் வெளியேறி விடும். மந்திரக் கயிறு கட்டினால் நஞ்சு உடலில் பரவாமல், ஆற்றைத்தடுத்து கரையைக் கட்டினால் நீர்ப் பெருக்கு நின்று விடுவது போல கடிபட்ட இடத்திலேயே அக்கயிறு நஞ்சை நிறுத்தி விடும். கடிபட்ட இடத்தை நெருப்பினால் சுட்டால் தோலிலும் மாமிசத்திலும் கலந்த நஞ்சு முழுவதும் நீங்கும். அசுத்த இரத்தக் குழாயைக் கீறி இரத்தத்தை வெளியேற்றினால் இரத்தத்தில் கலந்த நஞ்சு நீங்கும். நஞ்சைப்பருகினால் உடனே வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் என்னும் முறைகளால் நஞ்சை வெளியேற்ற வேண்டும். 44 – 45

## 26. நஞ்சின் இரண்டாம் வேகத்திற்குச் சிகிச்சை

நஞ்சுக்கு உரிய இரண்டாவது வேகத்தில் முதலில் இதயத்தைக் காப்பாற்ற வேண்டும். இதயத்தை நஞ்சு தாக்காமலிருக்க இனி கூறப்போகும் இதயத்தைக் காப்பாற்றும் மருந்து முறைகளில் கிடைத்ததைப் பருகச் செய்ய வேண்டும். தேன் நெய் எலும்புக்குள் இருக்கும் சோறு பசுநெய் காவிக்கல்

இவற்றை ஒன்றாகச் சேர்த்தோ பசுஞ் சாணத்தைக் கரைத்து வடிக்கட்டியோ கருப்பஞ்சாற்றையோ காகத்தைச் சுட்டு பக்கு வம் செய்யப்பட்ட மாமிசத்தின் சாற்றையோ ஆடு முதலிய வற்றின் இரத்தத்தையோ கருப்புப் புற்றுமண்ணையும் சாம்பலை யும் கலந்து பருகச் செய்ய வேண்டும். 46 - 47

## 27. நஞ்சின் மூன்றாவது முதலிய வேகங்களுக்குச் சிகிச்சை

நஞ்சுக்கிலக்காகியவனின் உடலில் நஞ்சின் மூன்றாவது வேகத்திற்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் காணப்பட்டால் சோபையைப் (வீக்கம்) போக்குவதும் வாந்தியாகச் செய்வதுமான க்ஷாரங்களினாலான [1]அகதம் என்னும் விஷத்தைப் போக்கும் மருந்துகளுடன் சிறிது தேனையும் நீரையும் கலந்து பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். பசுஞ்சாணத்தின் ரஸத்துடன் தேனையும் நீரையும் கலந்து பருகத்தர வேண்டும். நான்காம் வேகத்தின் இலக்கணங்கள் காணப்பட்டால் பசுஞ் சாணத்தை நீரில் கரைத்து வடிக்கட்டிய ரஸத்துடன் விளாம் பழச்சாறு தேன் நெய் என்பனவற்றைக் கலந்து பருகச் செய்ய வேண்டும். ஐந்தாம் வேகத்தில் கர்காண்டம் என்கிற ஒரு வகை தானியமும் வாகை விதைகளும் சேர்த்து ரஸமாகச் (சாறு) செய்து அதைக் கொண்டு [2]ஆச்யோதனம் என்னும் முறையில் கண்களை நனைத்தல் அல்லது மையாகக் கண்களில் விடச் செய் வதுடன் மூக்கிலிடும் மருந்தாகவும் பயன்படுத்த வேண்டும். ஆறாம் வேகத்தின் இலக்கணங்கள் காணப்படுமாயின் பசுவின் பித்தத்துடன் (கோரோசனத்தையும்) மஞ்சளையும் சேர்த்து நோயாளி மூர்ச்சை தெளிய ஆச்யோதன முறையாகவும், மையாக வும் கண்களிலிட்டும், மூக்கிலிட்டும் சிகிச்சை செய்ய வேண்டும். மேலும் மஞ்சிட்டி மிளகு திப்பிலி இம் மூன்றையும் தூளாக்கி நீருடன் பருகச் செய்ய வேண்டும். இது இருபத்திரண்டாவது சிகிச்சை.

நஞ்சு கடைசி தாதுவில் பரவுவதால் தோன்றிய ஏழாவது வேகத்தில் பாம்புக்கடியுண்டவனுக்குத் தாவரத்தின் விஷத்தை

---

1. அகதம்—நஞ்சினால் தாக்கப்பட்ட உடலிலிருந்து நஞ்சைப்போக்கக்கூடிய மருந்து.

2. ஆச்யோதனம்—கஷாயம் தேன் ஆஸவம் எண்ணெய் பயன்படுத்தத்தக்க மருந்து இவற்றை நோயாளியின் கண்களைத் திறக்கச் செய்து கண் நடுவில் மூன்றங்குல [illegible] சொட்டாக விடுதல்.

மருந்தாகப் பருகச் செய்ய வேண்டும். நச்சுப் பொருளைப் பருகியவனுக்கு உடலில் நஞ்சின் ஏழாவது வேகம் தோன்றியபோது பாம்பைக் கொண்டு கடிக்கச் செய்ய வேண்டும். (ஜங்கம விஷத்தைத் தாவர விஷமும் தாவர விஷத்தை ஜங்கம விஷமும் தணியச்செய்யும்.) 48 – 50

## 28. நஞ்சின் எட்டாவது வேகத்திற்குச் சிகிச்சை

நஞ்சுக்கிலக்காகியவனின் உடலில் அந்த நஞ்சின் எட்டாவது வேகத்திற்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் காணப்பட்டால் நோயாளி இறந்தவனைப் போல் அசைவின்றியிருப்பான், அப்பொழுது மயிலின் பித்தம் ஒரு பங்கு அதில் பாதி புரச விதைகள் கலந்து அரைத்துப் பயன்படுத்த வேண்டும். மேலும் கண்டங்கத்திரி விதை அரைப்பாகமாகக் காய்ச்சப்பட்ட கருப்பஞ்சாறு ஒட்டடை கோரோசனம் வேப்பம்பட்டை இவற்றைச் சேர்த்து அரைத்து மாத்திரைகளாகப் பயன்படுத்த வேண்டும். அல்லது கோரோசனம் துளசி கண்டந்திப்பிலி மஞ்சள் மரமஞ்சள் கோஷ்டம் இவற்றைப் பசுவின் பித்தமாகிய கோரோசனத்தின் ரஸத்துடனாவது வாகைப் பூக்களின் சாற்றுடனாவது பெரியவேம்பு அல்லது சுசப்புக் கோவைச் சாற்றுடனாவது அரைத்து மாத்திரைகளாகச் செய்து பயன்படுத்த வேண்டும். அல்லது சுசப்புக் கோவை துளசி வெப்பாலை மூக்கரட்டை மணத்தக்காளி வாகை விதை இவற்றைச் சம அளவில் கலந்து பயன்படுத்த வேண்டும். தூக்குப் போட்டு கொண்டவனோ நஞ்சை பருகியவனோ நீரில் விழுந்தவனோ இறக்கும் நிலையிலிருந்தால் அத்தகையவனுக்கு இந்த முறைகளை மேல் பூச்சாகப்பயன்படுத்துக. தலையில் கீறி ரத்தத்துடன் இந்த மருநது கலக்கும்படிச் செய்யவும். மேலும் இதை மூக்கில் மருந்தாகவும் கண்களில் மையாகவும் பயன்படுத்தவும். நிலைமைக்கேற்றவாறு மருத்துவன் இதைப் பயன்படுத்த வேண்டும். அமுதத்தைப் போல் இம்முறை உயிரைக் காக்கும். (இது மிருதஸஞ்சீவனி என்னும் இருபத்து நான்காவது சிகிச்சையாகும்.) 51 - 53

## 29. நஞ்சைப் போக்கும் மிருதஸஞ்சீவனி முறை

ஸ்ப்ருக்கை என்னும் வாசனைப் பொருள் காட்டுக் கோரைக் கிழங்கு தூணியாங்கம் என்னும் வாசனைப் பொருள் (மாசி பத்திரி பச்சிலை) ஸௌராஷ்டிரமண் கல்பாசி கோரோசனம் கிரந்திதகரம் வாசனைப்புல் குங்குமப்பூ சடாமாஞ்சி துளசிஇலை ஏல அரிசி அரிதாளம் கருங்காலி மரத்தின் வைரம்பாய்ந்த பகுதி

முள்ளுக்கத்திரி வாகைமலர் தேவதாருப்பிசினைக் கொண்டு செய்யப்பட்ட திருவட்டப்பசை என்னும் புகை மருந்து பதுமகம் காச்மீரத்தாமரை பேய்த்துமட்டி தேவதாருப்பட்டை தாமரை மலர்க்கேசரங்கள் வெண்பாச்சோத்தி மனோசிலை அரேணுகம் சாதிமல்லிப்பூ எருக்கமலர் இவ்விரண்டு பூக்களின் சாறு மஞ்சள் மரமஞ்சள் பெருங்காயம் திப்பிலி கொம்பரக்கு குருவேர் காட்டுப் பயறு சந்தனம் அதிமதுரம் மருக்காரக்காய் நொச்சி சரக் கொன்றையின் பிசின் பாச்சோத்தி நாயுருவி ஞாழல் சித்திரத்தை வாயுவிளங்கம் இவை அனைத்தையும் பூச நட்சத்திரமுள்ள நாளில் சம அளவில் எடுத்துக் கொண்டு அனைத்தையும் சேர்த்து அரைத்து மாத்திரைகளாகச் செய்யவும். இது மிருதஸஞ்சீவனி எனப்படும். இந்த மாத்திரைகளைப் பயன்படுத்தினால் நஞ்சு வகைகள் அனைத்தும் தீரும். வெற்றியைத் தரும். நஞ்சினால் இறந்தவனும் பிழைத்துக் கொள்வான். காய்ச்சலைப் போக்கும் இதை முகர்ந்து பார்க்கவும் உடலின் மேல் பூசவும் உடலில் தாயத்துபோலத் தாங்கவும் புகை பிடிக்கவும் வீட்டில் வைக்கவும் பயன்படுத்தலாம். அவ்வாறு வைப்பதால் பூதங்கள் நச்சு விலங்குகள் அலட்சுமியாகிய ஏழ்மை பிறர் தம்மைத் துன்புறுத்தச் செய்த ஏவல் செயல்கள் அபிசாரமந்திரங்கள் தீயினால் துன்பம் இடி விழும் அச்சம் கெட்ட கனவுகளால் கலக்கம் வசப்படுத்திக் கொள்ளமாதர்கள் இடும் மருந்தால் தோன்றும் துன்பம் அகால மரணம் நீரால் அச்சம் திருடர்களால் பயம் முதலியவை அனைத்தும் போகும். தனம் தானியம் செல்வம் அனைத்தும் இல்லத்தில் நிரம்பியிருக்கும். ஆயுள் உடல் வலிமை நாள்தோறும் வளரும். அமுதம் தோன்றுவதற்கு முன் இதுவே மிருதசஞ்சீவினீயாகப் பிரம்மனால் ஏற்படுத்தப்பட்டது. 54 — 60

## 30. நஞ்சினால் தோன்றும் தோஷங்களுக்குச் சிகிச்சை

பாம்பு முதலிய நஞ்சுள்ளவை கடித்ததும் பட்டுத்துணித் துண்டு முதலியவற்றை மந்திரித்து கடிபட்ட இடத்திற்கு மேல் தமனிகளை (அசுத்த இரத்தத்தை இருதயத்திற்கு எடுத்துச் செல்லும் இரத்தக்குழாய்) இறுக்கிக் கட்ட வேண்டும். இது [1]அவமார்ஜனம் என்னும் முறையாகும். இதை மந்திரித்த உடனே செய்ய வேண்டும். அந்த மந்திரங்களினால் பூதங்கள் முதலியன உடலில் புகாமல் நோயாளி காப்பாற்றப்படுவான்.

1. அவமார்ஜனம்—நஞ்சு தமனிகளின் வழியாக மேலே பரவாமல் கீழே செல்லச் செய்யும் முறை.

பிறகு நஞ்சு எந்த தோஷத்துடன் கலக்குமோ அதை கவனித்து அந்த தோஷத்தைத் தணியச் செய்ய வேண்டும். 61

## 31. வாதம் முதலியவற்றைச் சேர்ந்ததற்குச் சிகிச்சை

நஞ்சு, வாதத்திற்கு இருப்பிடமான பக்வாசயம்(சீரணப்பை) முதலிய இடங்களைச் சேர்ந்தால் முறைப்படி நோயாளியின் உடலை வியர்க்கச் செய்யும் ஸ்வேதன முறைகளைப் பயன்படுத்த வேண்டும். கிரந்திதகரம் கோஷ்டம் இரண்டையும் விழுதாகச் செய்து தயிருடன் கலந்து பருகச் செய்ய வேண்டும். நஞ்சு பித்தத்தின் இருப்பிடத்தைச் சேர்ந்தால் நெய்யையும் தேனையும் பாலையும் நீரையும் பருகச் செய்யவேண்டும்.[1] அவகாஹனம் [2]பரிஷேகம் என்னும் சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். நஞ்சு கபத்தின் இருப்பிடத்தைச் சேர்ந்தால் இனி (101–104 சுலோகங்களில்) கூறப்போகிற (க்ஷார அகதம்) என்னும் காரமருந்தைப் பயன்படுத்தி உடலை வியர்க்கச் செய்து நரம்பைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 62–63

## 32. இரத்தத்தைச் சேர்ந்த நஞ்சுக்குச் சிகிச்சை

தூஷீவிஷம் எனும் நஞ்சு இரத்தத்துடன் சேர்ந்துள்ள போது நரம்பைக் கீறுதல் வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய ஐந்து வகைச் செயல் முறைகளையும் பயன் படுத்த வேண்டும். தோஷத்தின் இடத்தை நன்கு கவனித்து அதற்குத் தக்கமருந்தை அந்தந்த தோஷத்திற்கு உரிய இடத்தைச் சேர்ந்த நஞ்சுக்கு மாறாகச் செயல் படாதவாறு கையாண்டு அந்த இடத்திற்குரிய தோஷத்தை முதலில் தணியச் செய்ய வேண்டும். 64

## 33. நஞ்சைப் போக்கும் [1]உபதானம் என்னும் சிகிச்சை

கபத்தின் வழிகள் நஞ்சினால் கெட்டு அதனால் துவாரங்கள் (ஸ்ரோதஸ்ஸுகள்) அடைபட்டு வாதம் செயல்படாமல் தடுக்கப் பட்டிருந்தால் இறப்பவனைப் போல் மூச்சுவிடுதல் உதடுகள் கறுத்தல் முதலிய சிகிச்சைக்கு உட்படாத இலக்கணங்கள் காணப்படாமல் இருந்தால் நோயாளியின் தலையில் காக்கையின் காலடியைப் போன்ற தோற்றத்தில் கூரிய கருவிகளால் கீறி காயப்படுத்தி அதில் ஸாதலா என்னும் மூலிகையின் விழுதை

1. அவகாஹனம் - முழுகுதல்.
2. பரிஷேகம் - நனைத்தல்.

ஒரு பலம் அளவு வைத்துக்கட்டி வாலுளுவை *திரிகடுகம், கட்பலம் என்பனவற்றின் தூளை முதலில் மூக்கிலிடவேண்டும். (இதனால் நோயாளி நினைவைத் திரும்பப் பெறுவான்) பிறகு இரத்தம் ஒழுகிக் கொண்டிருக்கும் ஆட்டுமாமிசம், மான்மாமிசம், எருதுகடா கோழி முதலியவற்றின் மாமிசங்களில் ஏதாவது ஒன்றைத் தலைமீது உண்டாக்கப்பட்ட காயத்தில் வைத்தால் உடலில் பரவிய நஞ்சு நோயாளியின் இரத்தத்திலிருந்து அந்த மாமிசத்தில் பரவும். (இது [1]உபதானம் எனப்படும் பன்னிரண்டாவது சிகிச்சைமுறையாகும்.) 65 – 67

## 34. நஞ்சுக்கு மூக்கில் மருந்திடுதல்

மூக்குதுளைகள் கண்கள் காதுகள் நாக்கு தொண்டை ஆகியவை தடுக்கப்பட்டு செயலற்றிருந்தால் கண்டங்கத்திரி விதை துரிஞ்சிப்பழத் தோல் வாலுளுவை முதலியவற்றைத் தூளாக்கி மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 68

## 35. தேவதாரு [2]அஞ்சனம்

நஞ்சினால் கண்கள் இருண்டு போகுமாயின் தேவதாருக் கட்டை திரிகடுகம் மஞ்சள் அரளி புங்கு வேம்பு துளசி இவற்றைச் சம அளவில் கலந்து ஆட்டின் சிறுநீரில் அரைத்துக் கண்களில் மையிடவேண்டும். 69

## 36. நஞ்சை நீக்கும் கந்தஹஸ்தி எனும் மருந்து

வாலுளுவை வசம்பு அமுக்கராக்கிழங்கு பெருங்காயம் சீந்தில்கொடி கோஷ்டம் இந்துப்பு வெள்ளைப்பூண்டு கடுகு விளாம்பழக்கோது பெருவாகைவேர் புங்கன்விதை திரிகடுகம் வாகைப்பூ மஞ்சள் மரமஞ்சள் மூங்கிலுப்பு இவற்றைச் சம அளவில் சேர்த்து ஆட்டின் சிறுநீருடன் அரைத்து அதை ஒரு நாள் பசுவின் பித்தத்திலும் மறுநாள் குதிரைப் பித்தத்தின் சாற்றிலும் ஊற வைக்கவும். இவ்வாறு ஏழு நாட்கள் மாற்றி மாற்றி ஊறவைத்து அம்மருந்தைக் கண்களுக்கு மை போலிட்டால் தலைக்கு ஏறிய நஞ்சு விரைவாகத் தணியும். (இம்மருந்தை மாத்திரைகளாகச் செய்யலாம்). 70 – 71

---

*திரிகடுகம்—சுக்கு, மிளகு, திப்பிலி.

1. உபதானம்—நஞ்சு தலைக்கு ஏறாமலிருக்கத் தலையில் செய்யும் சிகிச்சை முறை.
2. அஞ்சனம்—கண்களில் இடும் மை.

## 37. கந்தஹஸ்தியால் நீங்கும் நோய்கள்

மேலும் முன் கூறிய மருந்தைக் கண்களுக்கு மையாகப் பயன்படுத்தினால் பல வகைக் காய்ச்சல்களும் பூதம் கிரகம் என்பனவற்றால் தோன்றும் துன்பங்களும் வாந்திபேதி (விசூசிகா) அஜீரணம் நினைவிழத்தல் பைத்தியம் கால்கைவலி முதலிய நோய்களும் காசம் படலம் நீலிகா தலை நோய்கள் கண்களில் நீர்வற்றிப் போய் புண்ணாகுதல் கண்களில் பூவிழுதல், கண்கட்டி கண்களில் பில்லம் (நெடுநாள்பட்ட கண்நோய்) வெண்விழி மேல் சதை பரவுதல், கண்களில் அரிப்பு பார்வை குறைதல் முதலிய கண்நோய்களும் க்ஷயம் வலிவின்மை மதுவெறி சோகை மயக்கம் என்னும் நோய்களும் நீங்கும். 2–76

## 38. மகா கந்தஹஸ்தி முறை

இலவங்கப்பத்திரி கருப்பு அகில் கோரைக்கிழங்கு ஏலஅரிசி அத்தி அரசு ஆல் இத்தி நாவல் என்பனவற்றின் பிசின் வகை ஐந்து சந்தனம் ஸ்ப்ருக்கா எனப்படும் வாசனைப்பொருள் இலவங்கப்பட்டை வெண்வெட்டிவேர் நீலாம்பல் குருவேர் அரேணுகம் விளாமிச்சவேர் நகச்சிப்பி எனப்படும் நறுமணப் பொருள் தேவதாருக்கட்டை சிறுநாகப்பூ குங்குமப்பூ வாசனைப் புல் கோஷ்டம் ஞாழல் கிரந்திதகரம் வாகையின் இலை பட்டை வேர் காய் மலர் என்பன **ஐந்தும்** திரிகடுகம் அரிதாரம் மனோசிலை சீரகம் சிறுவாகை வாலுளுவை புங்கு வெண்கடுகு நொச்சி மஞ்சள் துளசி ரஸாஞ்சனம் பூங்காவி மஞ்சிட்டி வேப்பம் பிசின் மூங்கிலுப்பு அமுக்காரக்கிழங்கு பெருங்காயம் விளாம்பட்டை புளிவஞ்சி கொம்பரக்கு தேன் அதிமதுரம் கார்போகஅரிசி வசம்பு அருகம்புல் கோரோசனம் தகரம் என்னும் அறுபது பொருள் களையும் சம அளவில் கொண்டு பசுவின்பித்தத்துடன் (கோரோசனச் சாற்றுடன்) பூச நட்சத்திரம் கூடிய நாளில் அரைத்து மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும். இந்த முறை சிவனால் குபேரனுக்கு உபதேசம் செய்யப்பட்டதாகும். தவறாது பயன் தரும் பெருமை கொண்டதாகும். அறுபது மருந்துப் பொருள் களுடன் கூடிய இந்த மாத்திரையை உட்கொள்ளவும் கண்களில் மையிடவும் உடல் மேல் பூச்சு பூசவும் பயன்படுத்திய மருத்துவன் சிகிச்சை முறையில் வெற்றிபெறுவான். 77 – 82

## 39. மேற்படி மருந்தைப் பயன்படுத்தும் முறை

மகாகந்தஹஸ்தி என்னும் மருந்தை எப்பொழுதும் கண் களுக்கு மையிடப் பயன்படுத்தினால் கண்ணில் பூவிழுதல் அரிப்பு

கண்பார்வை குறைதல் மாலைக்கண் கண்களில் காய்களைப் போல் ஏற்படுதல் காசம் கண்கட்டி புறைபடருதல் முதலிய கண்நோய்கள் தீரும். இம்மருந்தைப் பயன் படுத்தும் போது எப்பொழுதும் உடலுக்கு நன்மைதரக்கூடிய பத்தியமான உணவை மிதமாக உட்கொள்ள வேண்டும். மேலும் விஷக்காய்ச்சல்கள் அசீரணம் தத்ருகுட்டம் அரிப்பு வாந்திபேதி (விசூசிகா) பாமா குட்டம் என்னும் சொறிசிறங்கு நஞ்சுள்ள எலி சிலந்தி நச்சுப் பாம்பு முதலியவற்றின் நஞ்சினால் தோன்றும் தீங்குகளும் சில வகைச்செடி வேர்களிலும் கிழங்குகளிலும் உள்ள நஞ்சினால் தோன்றும் துன்பங்களும் தீரும்.

இம்மருந்தை உடலில் பூசிக்கொண்டு நாகப்பாம்பையும் கையால் பிடிக்கலாம். நஞ்சையும் உட்கொள்ளலாம். மரணம் நெருங்கியிருந்தாலும் இம்மருந்தினால் அத்துன்பம் நீங்கி வெகு காலம் மூப்பும் நோயும் இன்றி வாழலாம். மேலும் மலம் வெளியேறாமல் கட்டுப்பட்டிருக்குமாயின் ஆஸனவாயிலும் பொய்யான (மூட) கர்ப்பம் தாங்கியுள்ள நங்கையின் பெண் குறிவாயிலும் இம்மருந்தைப் பூசினால் நோய் நீங்கும். மயக்கம் நினைவிழத்தல் என்பன தோன்றிய போது நெற்றியில் இதைப் பற்றுப்போடப் பயன்படுத்துதல் மிக்க சிறந்தது. பேரி மத்தலம் தப்பட்டை என்னும் ஒலியுண்டாக்கும் வாத்தியங்களில் இம் மருந்தைப்பூசி அக்கருவிகளை வாசித்தால் பாம்பின் விஷம் நீங்கும். இம்மருந்து உள்ள இடத்தில் பாலகிரகநோய்கள், அரக்கக்கிரக நோய்கள் தோன்றா. இடுமருந்து ஏவல்களாலும் மந்திரஉச்சாடனங்களாலும் தீங்குகள் விளையா. கிரகங் களால் தோன்றும் துன்பங்களும் தீ ஆயுதங்கள்முதலியவற்றால் தோன்றும் துன்பங்களும் நிகழா. அரசர் திருடர் முதலியவர் களால் தோன்றும் அச்சம் முதலியன தோன்றா. இம்மருந்து ருக்கும் இடத்தில் என்றும் இலட்சுமிவாசம் செய்வாள். 83—89

## 40. மகாகந்தஹஸ்தி என்னும் மருந்தைத் தயார் செய்ய மந்திரம்

முன் கூறிய மகாகந்தஹஸ்தி என்னும் மருந்துக்குக் கூறப் பட்ட அறுபதுவகை மருந்துப்பொருள்களை ஒன்றாகச் சேர்த்துப் பூச நட்சத்திரம்கூடிய நன்னாளில் பொடிசெய்து அப்பொடியைக் கல்வத்திலிட்டு கோரோசனச் சாற்றுடன் 'மமமாதா—' என்னும் மந்திரத்தை ஜபம் செய்து கொண்டே நன்றாக அரைத்து மாத்திரைகளாகச் செய்ய வேண்டும்.

மந்திரம்:—

மமமாதா ஜயா ஸாம ஜயோ நாமேதி மே பிதா
ஸோஹம் ஜயஜயா புத்ரோ விஜயோத ஜயாமிச
நம:புருஷ ஸிம்ஹாய விஷ்ணவே விச்வகர்மணே
ஸநாதனாய கிருஷ்ணாய பவாய விபவாயச
தேஜோ விருஷாகபேஸ்ஸாக்ஷாத் தேஜோ
பிரம்மேந்திரயோர்யமே
யதாஹம் நாபிஜானாமி வாஸுதேவபராஜயம்
மாதுச்ச பாணிக்ரகணம் ஸமுத்ரஸ்யசசோஷணம்
அநேநஸத்யவாக்யேன ஸித்யதா மகதோஹ்யயம்
ஹிலிமிலிஸம்ஸ்ருஷ்டே ரக்ஷ ஸர்வபேஷ ஜோத்தமே
ஸ்வாஹா—
(ஸிஹி லிஹி, மிலி மிலி, ஸம்ஸ்ருஷ்டேரக்ஷரக்ஷஸர்வ
பேஷஜோத்தமேஸ்வாஹா— 90 — 94

## 41. நஞ்சுக்கு ரிஷபகம் முதலியவற்றின் பானகம்

ரிஷபகம் ஜீவகம் சிறுதேக்கு அதிமதுரம் நீலாம்பல் கொத்த மல்லிவிதை சிறுநாகப்பூ வெள்ளைப்பூ பூக்கும் விண்ணுகரந்தை இலந்தபழக்கோது இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்துத் தூளாக்கி உட்கொண்டால் நஞ்சின் சீற்றத்தால் தோன்றிய இருமல் காய்ச்சல் முதலிய நோய்கள் நீங்கும். 95

## 42. ஹிங்கு ஆதிசூர்ணபாளம்

பெருங்காயத்தையும் திப்பிலியையும் சேர்த்தாவது இந்துப்பையும் விளாம்பழச் சாற்றையும் சேர்த்தாவது தேனுடனும் சர்க்கரையுடனும் கலந்து உட்கொண்டால் நஞ்சினால் தோன்றிய காய்ச்சல் இருமல் முதலியவற்றுடன் கூடிய விக்கல் ப்பு என்பன தீரும். 96

## 43. நஞ்சினால் தோன்றிய வாந்தி விக்கல்களுக்கு லேகியமும புகையும்

இலந்தங்கொட்டைக்குள் இருக்கும் பருப்பு ரஸாஞ்சனம் நெற்பொரி நீலாம்பல் இவற்றைச் சம அளவில் எடுத்துத் தூளாக்கித் தேனும் நெய்யும் கலந்து உட்கொண்டால் நஞ்சினால் தோன்றும் வாந்தி நீங்கும். மேலும் முள்ளுக்கத்திரி கண்டங் கத்திரி துவரை இலவங்கப்பத்திரி இவற்றைச் சேர்த்து அரைத்து முறைப்படி திரியாகச் செய்து அதைக் கொண்டு புகை பிடித்தால் விக்கல் நீங்கும். 97

### நீக்கும் புகை

மயிலிறகு வெள்ளைக் கொக்கின் எலும்பு கடுகு சந்தனம் இவற்றைச் சேர்த்துத் தூளாக்கி நெய்கலந்துப் புகை போட்டு அப்புகை வீட்டிலும் படுக்கையிலும் இருக்கைகளிலும் ஆடைகளிலும் பரவும்படிச் செய்தால் நஞ்சு நீங்கும். 98

### 45. பாம்பின் நஞ்சிற்குப் புகை

கிரந்திதகரம் கோஷ்டம் இருதலைப்பாம்பின்தலை வாகை மலர் இவற்றைச் சேர்த்து நெய் கலந்து புகை பிடித்தால் பாம்பின் நஞ்சினால் தோன்றும் வலிகளும் வீக்கமும் நீங்கும். 99

### 46. நஞ்சை நீக்கும் வேறு புகை முறை

கொம்பரக்கு வெட்டிவேர் இலவங்கப்பத்திரி குங்கிலியம் சேராங்கொட்டை மருதமலர் வெள்ளைக்குங்கிலியம் வெள்ளை சங்கபுஷ்பம் இவற்றையனைத்தையும் தூளாக்கிப் புகை போட்டால் பாம்புகள் எலிகள் சிலந்தி முதலியவையும் சிலைப்பேன் முதலிய கிருமிகளும் ஒழியும். இது புகைபோடத்தக்க மருந்துகளில் சிறந்தது. 100

### 47. நஞ்சைப்போக்கும் க்ஷாரவடகம்

இளம்புரசின் கிளைகளைச் சுட்டு எரித்த சாம்பலை முறைப்படி க்ஷாரநீராகச் செய்து பருகவும். சிவந்த காவிக்கல் மண் மஞ்சள் மரமஞ்சள் வெண்துளசி மலர்கொத்துகள் அதிமதுரம் கொம்பரக்கு இந்துப்பு சடாமாஞ்சி அரேணுகம் பெருங்காயம் நன்னாரி பெருநன்னாரி கோஷ்டம் திரிகடுகம் குங்குமப்பூ இவற்றைச் சம அளவில் கலந்துத் தூளாக்கி முன்கூறிய க்ஷார நீரில் கலந்துப் பாக்குவம் செய்யவும். கரண்டியால் கிளறிக் கொண்டே கரண்டியில் மருந்து ஒட்டுகிற அளவுக்குப் பக்குவம் செய்து இறக்கவும். பிறகு இலந்தைப்பழ அளவு மாத்திரைகளாக செய்து நிழலில் உலர்த்தி எடுக்கவும். இதைப்பயன்படுத்துவதால் பலவகை நஞ்சு, நஞ்சினால் தோன்றிய வீக்கம் குன்மம் தோல்நோய் மூலநோய் பகந்தரம் என்னும் பௌத்திர நோய் மண்ணீரல் வீக்கம் சோகை கால் கை வலி கிருமிநோய்கள் பிசாசு பிடித்துக் கொள்வதால் தோன்றும் துன்பம் குரல்மாறுபாடு சடராக்னிக்குறைவு இருமல் பைத்தியம் என்னும் நோய்கள் நீங்கும். 101 – 104

வரை நஞ்சைப்பருகியதற்கும் பாம்பு முதலியவற்றின் நஞ்சிற்கும் நஞ்சு பூசப்பட்ட அம்புகளாலான துன்பங்களுக்கும் இலக்கணங்கள் சிகிச்சை முறைகள் பொதுவாகக் கூறப்பட்டன. இனி தனித்தனியாக ஒவ்வொன்றுக்கும் சிறப்பான இலக்கணங் களும் சிகிச்சை முறைகளும் விளக்கப்படுகின்றன. 105

## 48. உணவைப் பரீட்சைசெய்ய வேண்டியதற்குக் காரணம்

அரசர்களுக்குப் பகைவர்களைச் சார்ந்த தன் பணியாளர் களாலும் பெண்களாலும் உணவு மற்றும் அவர்களுடன் உலாவுதல் போன்றவற்றாலும் உயிருக்குத் தீங்கு நேரிடலாம். ஆகையால் முதலில் சமையல் முதலியவை செய்யும் பணியாளர்களை நன்றாக ஆராய வேண்டும். 106

## 49. நஞ்சிட்டவனின் இலக்கனம்

பிறரைக் கொல்ல நினைத்து உணவில் நஞ்சு கலந்து தந்த வன் வேறு எந்த வேலையையும் செய்வதற்கு ஐயம் கொண்டிருப் பான். ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் பேசுவான். அல்லது சந்தேகப்படுபவன்போல் தயங்கித் தயங்கிப் பேசுவான். அவனுடைய முகப்பொலிவு இயற்கையான தன்மை மிகவும் மாறியிருக்கும். இந்த இலக்கணங்களைக் கொண்டு நஞ்சிட்ட வனைக் கண்டு கொள்ளலாம். 107

## 50. கலந்த உணவின் இலக்கணம்

வழக்கமாகத் தனக்கு உணவு வழங்கும் சமையற்காரன் பணியாள் முதலியவர்களிடம் மாறுதலான தன்மைகள் காணப் பட்டால் அவர்கள் வழங்கிய உணவை அரசன் அவசரப்பட்டு உண்ணக்கூடாது. மேலும் அந்த உணவில் சிறிது எடுத்து நெருப்பில் போட்டுப் பார்க்கவும். அவ்வுணவில் நஞ்சு கலந் திருந்தால் நெருப்பில் பல விந்தையான உருவங்கள் காணப்படும். நெருப்பிலிருந்து மயில் தோகையைப் போல பல நிறங்களுடன் தீ எழும்பும். அந்தத் தீ பொறுக்க இயலாத அளவு அனல் வீசிக் கொண்டிருக்கும். பிணநாற்றம் வீசும். 'சடசட' வென்னும் ஒலியுடன் தணல் வெடிக்கும். ஒரு முறை தீ சுழன்று ஆறிப்போகும். அந்த நஞ்சுடன் கூடிய உணவைப் பாத்திரத்தில் வைத்தால் நிறம் மாறிக் காணப்படும். அவ்வுணவின் மேல் ஈ உட்கார்ந்தால் இறந்து விடும். அவ்வுணவைக் காகங்கள் பார்த்தால் அதன் குரல் ஒலி குறைந்து விடும். நஞ்சு கலந்த உணவைக் கண்டால் சகோரப்புள்ளின் கண்கள் சிவந்து விடும். 108 – 110

## 51. நஞ்சு கலந்த நீரைப் பரீட்சை செய்தல்

குடிக்கத்தக்க நீர் முதலிய திரவப்பொருளில் நஞ்சு கலந்தால் அந்த நீரில் கோடுகள் காணப்படும். நிறம் மாறியிருக்கும். நீலநிறக்கோடுகள் காணப்படும். அந்த நீரில் தன் நிழல் காணப்படாது. அல்லது விகாரமான தோற்றத்தில் காணப்படும். நஞ்சு கலந்த நீர் கள் முதலியவற்றில் உப்பைக்கலந்தால் நுரை கட்டும். 111

## 52. நஞ்சு கலந்த உணவினால் உடலில் தோன்றும் இலக்கணங்கள்

நஞ்சு கலந்த உணவு நீர் வகைகளை முகர்ந்தால் தலையிலும் இதயத்திலும் வலியுண்டாகும். மயக்கம் தோன்றும், அவற்றைக் கையால் தொட்டால் கையில் வீக்கம் காணப்படும். தொடுதலுணர்ச்சி நீங்கும். விரல்களில் எரிச்சலும் ஊசியால் குத்தினால் போன்ற வலியும் உண்டாகும். நகம் பிளந்து விடும். அத்தகைய உணவும் நீரும் நாக்கில் பட்டால் எரிச்சலும் அரிப்பும் உண்டாகும். நாக்கு சுவையுணரும் தன்மையை இழந்து நிறமும் மாறிக் காணப்படும். பற்கள் கூசும். கன்னங்களின் உட்பகுதி செயலிழந்து விடும். வாயில் எரிச்சல் உண்டாகி எச்சில் பெருகும். (கரகரத்தல் போன்ற) தொண்டை நோய்கள் காணப்படும். 112 – 113

## 53. ஆமாசயத்தைச் சேர்ந்த நஞ்சினால் தோன்றும் இலக்கணம்

நஞ்சுடன் கூடிய உணவு நீர் முதலியன ஆமாசயத்தைச் (உணவுப்பை) சேர்ந்தால் உடல் நிறம் மாறும். உடல் வியர்க்கும். வலியும் தோன்றும். சடராக்னி வலிமை குன்றும். வாந்தியாகும் போலிருக்கும். கண்பார்வை குறையும். இதயத்தைப் பிடிப்பது போன்ற உணர்ச்சி ஏற்படும். உடல் நிறைய கரும்புள்ளிகள் காணப்படும். 114

## 54. நஞ்சு கலந்த உணவு பக்குவாசயத்தைச் சேர்ந்ததால் தோன்றும் இலக்கணம்

நஞ்சு கலந்த உணவு பக்குவாசயத்தைச் (சீரணப்பை) சேர்ந்தால் நினைவு தவறும். பைத்தியம் பிடித்தது போலிருக்கும் அறிவு கெடும். அழற்சியுண்டாகும். உடல் வலிமை குறையும். மயக்கம் தோன்றும், உடலும் இளைக்கும். வயிற்றில் நஞ்சு சேர்ந்திருந்தால் சோகை நோய் தோன்றும். 115

## 55. கலந்த பல் துலக்கும் குச்சியால் தோன்றும் துன்பங்கள்

நஞ்சு கலந்திருந்தால் பல் துலக்குவதற்கான குச்சி பிளவு பட்டிருக்கும். அதனால் பல் துலக்கினால் ஈறுகள் உதடுகள் மற்றும் அதுபட்ட இடத்திலுள்ள சதைப்பகுதி வீங்கும். நஞ்சு கலந்த எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு குளித்தால் முடி உதிர்ந்து போகும். தலைவலி உண்டாகும். தலையில் கட்டிகள் தோன்றும். *116*

## 56. நஞ்சு கலந்த மை முதலியவற்றால் தோன்றும் துன்பங்கள்

கண்களுக்கு இடும் மை முதலியவற்றில் நஞ்சு கலந்திருந் தால் கண்கள் எரிச்சலுடன் நீர் பெருகிக் கொண்டிருக்கும். கண்களில் சதை வளரும். இமைகள் வீங்கும். கண்கள் சிவக்கும். மேலும் நஞ்சு உணவினால் குடலும் நஞ்சு கலந்த சந்தனம் முதலியவற்றால் உடல் மேல் தோலும் முதலில் கெடும். *117*

## 57. நஞ்சு கலந்த நீரில் குளித்தல் முதலியவற்றால் தோன்றும் துன்பங்கள்

நஞ்சு கலந்த நீரில் குளித்தாலும் நஞ்சு கலந்த எண்ணெய் முதலியவற்றையோ நஞ்சு கலந்த பூச்சையோ உடலின்மேல் தேய்த்துக் கொண்டாலும் நஞ்சு கலந்த ஆடை நகைகள் முதலிய வற்றை அணிந்தாலும் உடலைப் பொலிவுறச் செய்யும் பூச்சு களில் நஞ்சு கலந்திருந்தாலும் உடலில் அரிப்பு வலி சிறு கட்டிகள் கொப்புளங்கள் மயிர் கூச்சம் என்பனஉண்டாகும். நமநம என்று பூச்சிகள் ஊறுவதுபோல் அரிப்புடன் வலியும் வீக்கமும் காணப் படும்.நஞ்சுள்ள இடத்தில் உட்கார்ந்தாலும் நஞ்சுள்ள பாதுகை கள் அணிந்தாலும் நஞ்சுள்ள சேணம் பூட்டப்பட்டுள்ள குதிரை யானை முதலியவற்றின்மேல் ஏறினாலும் அல்லது நஞ்சு கலந்த கவசம் பூண்டாலும் நஞ்சுள்ள கொடிகளைப் பயன்படுத்தினாலும் நஞ்சுள்ள படுக்கையில் படுத்தாலும் நஞ்சுள்ள இருக்கையிலிருந் தாலும் முன்பு கூறிய அரிப்பு முதலிய தீமைகள் காணப்படும். கால் கைகளில் எரிச்சல் தோன்றும். குத்தல் வலியுண் டாகும். கால் கைகள் எரிந்து புண்ணாகும். *118 – 119*

## 58. நஞ்சு கலந்த மலர்மாலை முதலியவற்றால் தோன்றும் துன்பங்கள்.

மலர் மாலைகள் நஞ்சுடன் கூடியிருந்தால் வாடியிருக்கும். அம்மாலைகளைத் தலையில் வைத்துக் கொண்டால் தலைவலியும்

மயிர் கூச்சமும் தோன்றும். நஞ்சுடன் கூடிய புகை பட்டால் உடலிலிருக்கும் துவாரங்களை மூக்குத்துளைகளைச் செயலற்றுப் போகும் படிச் செய்யும். மூக்குக்கு மணமறியும் வலிமையும் கண்களுக்கு உருவங்களைக் காணும் வலிமையும் அழியும். மேலும் கிணறு குட்டை முதலியவற்றில் இருக்கும் நீர் நஞ்சு கலந்திருக்குமாயின் கெட்ட நாற்றத்துடன் கலங்கியிருக்கும். அத்தகைய நீரைக் குடித்தால் அது விக்கம் கொப்புளம் படை முதலியவற்றைத்தோற்றுவிக்கும். 120 – 121

## 59. ஆமாசயத்தையும் தோலையும் சேர்ந்த நஞ்சினால் தோன்றும் துன்பங்களுக்குச் சிகிச்சை.

நஞ்சு கலந்த உணவினால் ஆமாசயம் (உணவுப்பை) கெட்டிருக்குமாயின் முதலில் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். குளித்தல் எண்ணெய்க்குளியல்முதலியவற்றினால் நஞ்சு உடம்பில் பட்டால் நஞ்சை நீக்கும் மருந்துகளை உடல் மேல் பூசுதல் மருந்து கலந்த நீரால் உடலை நனைத்துக் கொண்டிருத்தல் முதலிய சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். நோயாளியினுடையவும் தோஷங்களுடையவும் வலிமையையும் கவனித்துச் சிகிச்சை செய்ய வேண்டும். 122

இவ்வாறு நாவரங்களின் நஞ்சைப் போக்கும் சிகிச்சை முறைகள் விளக்கப்பட்டன. இனி உயிரினங்களின் நஞ்சைப் போக்கக்கூடிய சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. சிறப்பாகப் பாம்புகளின் நஞ்சுக்குத் தக்க சிகிச்சை முறைகள் முதலில் விளக்கப்படுகின்றன. 123

## 60. நாகங்களின் வகை, அவற்றின் நஞ்சினால் தோஷங்கள் சீற்றமடைதல்.

தர்வீகரம் மண்டலி ராஜிமான் என நாகம் மூன்று வகை. அதில் தர்வீகரம் என்பது வாத தோஷத்தையும் மண்டலி என்னும் நாகம் பித்ததோஷத்தையும் ராஜிமான் என்பது கப தோஷத்தையும் சீற்றமடையச் செய்யும். 124

## 61. தர்வீகரம் முதலிய நாகங்களின் இயக்கணம்

அகன்ற படமுள்ள நாகம் தர்வீகரமெனப்படும். மண்டலி என்பது உடலில் திட்டுத் திட்டாக வட்டவடிவங்களும் புள்ளிகளும் சிறியதான படமும் கொண்டிருக்கும். ராஜிமான் என்னும் நாகம் பலவகை நிறங்களுடன் சிறு பொட்டுகளும் நீண்ட கோடுகளும் கொண்ட உடல் கொண்டிருக்கும். 125

## 62. தர்வீகரம் முதலியவற்றின் நஞ்சின் இலக்கணம்

தர்வீகரம் என்னும் நாகத்தின் நஞ்சு, கார்ப்புச்சுவையையும் வறட்சித் தன்மையையும் மிகுதியாகக் கொண்டிருக்கும். மண்டலி என்னும் நாகத்தின் நஞ்சு, புளிப்புச் சுவையும் உஷ்ண வீரியமும் மிகுதியாகக் கொண்டிருக்கும். ராஜிமான் என்னும் நாகத்தின் நஞ்சு இனிப்புச் சுவையையும் குளுமைத் தன்மையையும் கொண்டிருக்கும். இவ்வாறு வேறு வேறான சுவையையும் தன்மையையும் கொண்டிருப்பதால் தர்வீகரம் என்பது வாதத்தையும் மண்டலி என்பது பித்தத்தையும் ராஜிமான் என்பது கபத்தையும் சீற்றமடையச் செய்யும். 126

## 63. தர்வீகரம் என்னும் நாகத்தின் கடியின் இலக்கணம்

தர்வீகரம் என்னும் நாகம் கடித்தால் கடிபட்ட இடத்தில் நுண்ணிய கோரைப்பற்களின் அடையாளத்துடன் கறுத்து இரத்தப் பெருக்கின்றி ஆமையைப் போன்ற வீக்கம் காணப்படும். இதன் நஞ்சு உடலில் வாதநோய்களின் இலக்கணங்களைத் தோற்றுவிக்கும். 127

## 64. மண்டலி என்னும் நாகத்தின் கடியின் இலக்கணம்

மண்டலி என்னும் நாகம் கடித்தால் பற்கள் ஆழமாகப் பதிந்திருக்கும். வீக்கமும் மஞ்சள் நிறமும் மஞ்சள் நிறத்துடன் இரத்தப் பெருக்கும் காணப்படும். இந்த நஞ்சு பித்த நோய்களின் இலக்கணங்களைத் தோற்றுவிக்கும். 128

## 65. ராஜிமான் நாகத்தின் கடி இலக்கணம்

ராஜிமான் என்னும் நாகம் கடித்தால் பிசுபிசுப்பு கடினமான வீக்கம் எண்ணெய்ப்பசை வெண்நிறம் இறுகிப்போன இரத்தம் ஆகியவை காணப்படும். இந்த நஞ்சு கபநோய்களின் இலக்கணங்களைத் தோற்றுவிக்கும். 129

## 66. நாகங்களின் பெண் ஆண் அலி வகைகள்

ஆண் நாகம் வட்ட வடிவமுள்ள படமும் நீண்ட உடலும் கொண்டிருக்கும். மிகவேகமாகச் சீறும். கண்கள் தலை மேற்பகுதியிலிருக்கும். பெண் நாகத்தின் தலை பருமனாக இருக்கும். உடல் மிகவும் பருத்தோ மெலிந்தோ இராமல் சமநிலையிலிருக்கும். இந்த இலக்கணங்களுக்கு மாறான தன்மை கொண்டது அலியாகும். 130

## 67. பெண் ஆண் அலி பாம்புகளின் நஞ்சினால் தோன்றும் துன்பங்கள்

*பெண் நாகம் கடித்தால் கடியுண்டவன் மிகவும் அச்சம் கொண்டிருப்பான். பார்வை கீழ்நோக்கியிருக்கும். குரல் மெலிந்து நடுங்கிக் கொண்டிருக்கும். ஆண்நாகம் கடித்தால் வற்றிற்கு மாறான இலக்கணங்கள் காணப்படும். அலியான பாம்பு கடித்தால் இந்த இலக்கணங்கள் இரண்டும் கலந்து காணப்படும். 131 – 132*

## 68. கருவுற்ற அல்லது முட்டையிட்ட பாம்பின்கடியின் இலக்கணம்

*கருவுற்ற நாகம் கடித்தால் கடிபட்டவனின் முகம் வெளிறி யிருக்கும். உதடுகள் வீங்கும். கண்கள் கறுத்து விடும். அப் பொழுதே முட்டையிட்ட நாகம் கடித்தால் கொட்டாவி மிகும். சினம் மிகுதியாகும். உள்நாக்கில் நோய் தோன்றும். சிறுநீர் சிவப்பு நிறத்துடன் வெளியேறும். 133*

## 69. உடும்பின் இலக்கணம்

*உடும்புக்குப் பிறந்த சர்ப்பம் கௌதேரம் அல்லது கௌதேயம் எனப்படும். இதற்கு நான்கு கால்கள் இருக்கும். இது கருநாகத்திற்குச் சமமான நஞ்சு கொண்டிருக்கும். முன்பு கூறிய தர்விகரம் மண்டலி ராஜிமான் முதலிய நாகத்தின் வகை கள் ஒரு வகையுடன் மற்றொரு வகை கலப்பதால் உண்டாகிய கலப்பினத்தைச் சேர்ந்த நாகங்கள் பலவகைப்படும். 134*

## 70. கடிகளின் வகைகள்

*மிகவும் ஆழமாகப் பதியும்படியான கடி, வட்டமாகத் தோன்றும் கடி கோரைப் பற்களால் நன்கு கடிக்கப்பட்ட கடி கோரைப் பற்களனைத்தும் பதியும் படியிருக்கும் கடி கோரைப் பற்களால்கீறப்பட்ட கடி முதலியன மிக்க துன்பத்தைத் தோற்று விக்கும். ஏனைய கடிகள் மிக்க துன்பத்தை விளைவிக்கா. 135*

## 71. வயதுக்கேற்ற நஞ்சின் விரைவு

*கருநாகங்கள் (தர்விகரம்) சிறுவயதிலும் மண்டலி நாகங்கள் கிழத்தன்மையிலும் ராஜிமான் என்பவை நடுவயதிலும் திட்டி விஷமென்னும் (பார்வை. மூச்சுக்காற்றுகளாலே விஷத்தைப் பரப்பும் கொடிய) பாம்புகளைப் போல மிகவும் வேகமுள்ள நஞ்சு கொண்டிருக்கும். 136*

### 72. நாகங்களின் கோரைப்பற்களின் வகை

நாகங்களுக்குக் கோரைப்பற்கள் மேல் வரிசையில் இரு பக்கங்களுக்கும் இரண்டும் கீழ்வரிசையில் இருபக்கங்களுக்கும் இரண்டும் ஆக நான்கு பற்கள் இருக்கும். இந் நான்கிலும் இடது பக்கத்தில் கீழ்ப்பகுதியிலுள்ள கோரைப் பல் வெண்மையும் இடது பக்கத்தில் மேல் வரிசைப்பல் மஞ்சள் நிறமும் வலது பக்கத்தில் கீழ்ப் பக்கத்தின் பல் சிவப்பு நிறமும் மேல் வரிசைப் பல் கருநிறமும் கொண்டிருக்கும். 137

### 73. பற்களில் இருக்கும் நஞ்சின் அளவு

பசு வாலிலுள்ள மயிரைத் தண்ணீரில் தோய்த்து எடுத்தால் அதிலிருந்து நழுவி கீழே விழும் நீர்த் துளியளவுள்ள நஞ்சு பாம்பின் இடது பக்கத்துக் கீழ்பகுதியிலுள்ள கோரைப் பல்லிருக்கும். இடது பக்கத்து மேற்பகுதியிலுள்ள கோரைபல்லில் இரண்டு துளிகள் அளவுள்ள நஞ்சும் வலது பக்கத்துக் கீழ் பகுதியிலுள்ள கோரைப்பல்லில் மூன்று துளிகள் அளவுள்ள நஞ்சும் மேற்பகுதியிலுள்ள கோரைப்பல்லில் நான்கு துளிகள் அளவுள்ள நஞ்சும் இருக்கும்.

எந்த கோரைப்பல்லால் பாம்பு கடித்ததோ அதற்கேற்ற அளவுள்ள நஞ்சு உடலில் கலந்து அதற்கேற்ற வலிமையுடன் துன்பம் விளைவிக்கும். 138 – 139

### 74. விஷப்பூச்சிகளின் பிறப்பு

நாகங்களின் சிறுநீர்மற்றும் மலத்திலிருந்து பல வகை நச்சுப் பூச்சிகள் தோன்றும். அவை தூஷீவிஷங்கள் (தோஷங்களையும், தாதுக்களையும் கெடுத்து நோய்களை தோற்றுவித்து காலங் கடந்து துன்பம் விளைவிப்பவை) என்றும் உயிரைப் போக்குபவை என்றும் இருவகைப்படும். 140

### 75. தூஷீ விஷப்பூச்சிகளின் கடியின் இலக்கணம்

தூஷீவிஷங்கள் எனப்படும் பூச்சிகள் கடித்தால் கடிபட்டவனின் உடல் சிவப்பு கருப்பு வெண்மை மாநிறம் எனும் நிறங்களில் ஏதேனும் ஒன்றைக் கொண்டிருக்கும். கடிபட்ட இடத்தில் கொப்புளங்கள் காணப்படும். அரிப்பு எரிச்சல் இவற்றுடன் நஞ்சு பலவகையாக உடலில் பரவும். உடலில் அங்கங்கு கொப்புளங்கள் தோன்றி அந்தப்பகுதி அழுகிவிடும். 141

### 76. உயிரைப் போக்கும் பூச்சிகளின் கடியின் இலக்கணம்

உயிரைப் போக்கக்கூடிய பூச்சியின் கடியால் கடிபட்ட இடத்தில் பாம்பு கடித்ததைப் போல வீக்கம் தோன்றும். நெடியுடன் கூடிய இரத்தம் பெருகும், கண்கள் பளுவாகத் தோன்றும் நினைவிழத்தல் ஏற்படும். மிக்க வலியும் பெருமூச்சும் நாவறட்சியும் சுவையின்மையும் தோன்றும். இந்த இலக்கணங்களைக் கண்டு உயிரைப் போக்கும் தூஷீவிஷமென்னும் பூச்சி கடித்ததெனஅறியவும். 142 – 143

### 77. நஞ்சுடைய சிலந்திகளின் கடியின் இலக்கணம்

தூஷீவிஷத்தைச் சார்ந்த சிலந்தி கடித்தால் கடிபட்ட இடம் பள்ளமாகிக் கருநிறமோ மாநிறமோ கொண்டிருக்கும். நுண்ணிய சிறுதுளைகள் பல காணப்படும். நெருப்பினால் சுட்டது போன்ற எரிச்சல் கடிபட்ட இடத்திலிருக்கும். நீர் ஒழுகிக் கொண்டிருக்கும். கடிபட்ட இடத்திலுள்ள சதை அழுகும். வீக்கம் காணப்படும். காய்ச்சலும் தோன்றும். இந்த இலக்கணங்களைக் கொண்டு தூஷீவிஷமுள்ள சிலந்தியின் கடியென்று உணரவும். 144

### 78. உயிரைப் போக்கும் நஞ்சுள்ள சிலந்திக் கடியின் இலக்கணம்

சிலந்திக்கடியால் கடிபட்ட இடத்தில் வீக்கமும் வெண்மை கருமை சிவப்பு மஞ்சள் என்னும் நிறங்களிலொன்றுடன் கூடிய கொப்புளங்களும் தோன்றி காய்ச்சலும் நீண்ட பெருமூச்சும் எரிச்சலும் விக்கலும் தலையசையாமையும் தோன்றினால் அச்சிலந்தி உயிரைப் போக்கும் நஞ்சுடன் கூடியதெனக்கொள்க. 145 – 146

### 79. தூஷீ விஷமுள்ள எலிக் கடியின் இலக்கணம்

தூஷீவிஷம் (காலங்கடந்து தீங்கு விளைவிக்கக்கூடிய நஞ்சு) உள்ள எலி கடித்தால் கடிபட்ட இடத்திலிருந்து வெண்ணிறமுள்ள இரத்தம் பெருகும். உடலின் மேல் வட்டமான படைகள் தோன்றும். காய்ச்சல் சுவையறியாமை மயிர்க்கூச்சம் எரிச்சல் என்பன தோன்றும். 147

### 80. சிகிச்சைக்கு உட்படாத எலிக்கடி முதலியவற்றின் இலக்கணம்

சிகிச்சைக்கு உட்படாத நஞ்சு கொண்ட எலி கடித்தால் நினைவிழத்தல் உடலில் வீக்கம் நிறமாறுபாடு கடிபட்ட இடத்தி

---

1. தூஷீவிஷம்—உடலில் பல நாள் தங்கியிருந்து துன்பம் விளைவித்துக் காலம் கடத்தி உயிரைப் போக்கும் நஞ்சு.

லிருந்து நீர் பெருகுதல் சீழ் பிடித்தல் என்பன காணப்படும். இந்த நஞ்சினால் துன்பப்படுபவனுக்குக் காது கேட்காது. காய்ச்சல் தோன்றும். தலை பாரமாகத் தோன்றும். வாயிலிருந்து எச்சில் ஒழுகிக் கொண்டிருக்கும். இரத்த வாந்தியும் தோன்றும். 148

## 81. உடும்பு அல்லது ஓணான் நஞ்சின் இலக்கணம்

ஓணான் அல்லது உடும்பு கடித்தால் உடலெல்லாம் சாம்பல் நிறமோ வெண்மை கலந்த கருநிறமோ அல்லது பல நிறங்களோ கொள்ளும். நினைவு தவறும். பேதியாகும். 149

## 82. தேள் விஷத்தின் இலக்கணம்

தேள் கொட்டினால் அந்த இடத்தில் முதலில் நெருப்பால் சுட்டது போல் எரிச்சல் தோன்றும். பிறகு விரைவாக உடலைப் பிளப்பது போன்ற வலியுடன் கடிபட்ட இடத்திலிருந்து நஞ்சு உடலெங்கும் பரவி பிறகு கடிபட்ட இடத்தில் வந்து சேரும். 150

## 83. சிகிச்சைக்கு உட்படாத தேள் கடியின் இலக்கணம்

கண், மார்பு, மூக்கு, நாக்கு என்னும் இடங்களில் தேள் கொட்டினாலும், அவ்விடங்களில் விஷம் பரவினாலும் அந்த நஞ்சு சிகிச்சைக்கு உட்படாததாகும். மேலும் கடிபட்ட பகுதியிலிருந்து மாமிசம் சிதைந்து விழுந்தாலும் மிக்க வலி தோன்றினாலும் கடிபட்டவன் விரைவில் உயிரிழப்பான். 151

## 84. குளவி நஞ்சின் இலக்கணம்

குளவி கொட்டினால் எரிச்சலுடன்கூடிய சிறு கொப்புளங்களும் வீக்கமும் தோன்றும். மிக்க வலியும் குத்தலும் கூடிய துன்பம் உடல் முழுவதும் பரவியுள்ளது போல் காணப்படும். காய்ச்சலும் வாந்தியும் தோன்றும். கடிபட்ட இடத்தில் தோல் மாமிசம் வெந்துநொந்ததுபோல் காணப்படும். 152

## 85. உச்சிடிங்கம் எனும் தேள் விஷத்தின் இலக்கணம்

உச்சிடிங்கம் எனும் கருந்தேள் (நட்டுவாக்களி) கொட்டினால் மயிர் கூச்சம் தோன்றும். ஆண்குறி வலியுடன் விறைத்துத் துன்பம் தரும். குளிர்ந்த நீரைத் தெளித்தது போல் உடல் முழுவதும் உணர்வின்றியிருக்கும். 153

## 86. நஞ்சுள்ள தவளைக் கடியின் இலக்கணம்

நஞ்சுள்ள தவளை கடித்தால் ஒரு கோரைப்பல் பதிந்த காயம் மட்டும் காணப்படும். கடித்த இடத்தில் வீக்கமும் உடலில் வலியும் தோன்றும். உடல் நிறம் மஞ்சளாகிவிடும். நாவறட்சியும் வாந்தியும் தோன்றும். தூக்கம் மிகும். 154

## 87. நச்சு மீன் அட்டை முதலியவற்றின் கடியின் இலக்கணம்

நச்சு மீன் கடித்தால் மிக்க எரிச்சலும் வீக்கமும் வலியும் காணப்படும். நஞ்சுள்ள அட்டை கடித்தால் வீக்கம் அரிப்பு காய்ச்சல் நினைவிழத்தல் என்பன தோன்றும். 155

## 88. பல்லி பூரான் கொசு இவற்றின் கடிகளின் இலக்கணம்

நச்சுப் பல்லி கடித்தால் எரிச்சல் குத்தல் வலி உடல் வியர்த்தல் வீக்கம் என்பன தோன்றும். காடுகளிலுள்ள நஞ்சுடன்கூடிய பூரான் கடித்தால் கடித்த இடம் வியர்க்கும். வலியும் எரிச்சலும் உண்டாகும். கொசு கடித்தால் அரிப்பும் சிறிதுவீக்கமும் சிறிது வலியும் காணப்படும். மலைக் கொசுவின் நஞ்சு வீறு கொண்டிருக்கும். அதன் நஞ்சு சிகிச்சைக்கு உட்படாததாகும். 156 – 157

## 89. ஈக்கடியின் இலக்கணம்

நஞ்சுடன் கூடிய ஈ கடித்தால் கடிபட்ட இடத்தில் கரு நிறமுள்ள கொப்புளங்கள் தோன்றி அவற்றிலிருந்து நீர் பெருகிக் கொண்டிருக்கும். எரிச்சல் தோன்றும். நினைவிழத்தலும் காய்ச்சலும் உண்டாகும். 'ஸ்தகிகா' என்னும் இனத்தைச் சேர்ந்த விஷ ஈ கடித்தால் உயிரும் போகக்கூடும். 158

## 90. இடத்தின வலிமையால் நஞ்சின் வேகம்

சுடுகாடு கிராமதேவதைகளின்கோயில் புற்று யாசங்கள் நடைபெறுமிடம் ரிஷிகள், முனிவர்கள் வாழும் இடம் கோவில் முதலிய சிறப்பான இடங்களிலுள்ள பாம்பு கடித்தாலும் அமாவாசை பௌர்ணமி நடுப்பகல் நடு இரவு அஷ்டமி ஆகிய காலங்களில் பாம்பு கடித்தாலும் [1]காபாலிகர் [2]பாஷாண்டிகள் வசிக்கும் இடங்களில் பாம்பு கடித்தாலும்

---

1. காபாலிகர்—சைவர்களில் ஒரு வகை. மனிதன் மண்டை ஓடு உணவுக்குப் பாத்திரமாகக் கொண்டவர்கள்.

2. பாஷாண்டிகள்—மத ஆசார ஒழுக்கம் முதலியவற்றைப் பின்பற்றாதவர்கள்.

நஞ்சு சிகிச்சைக்கு உட்படாததாகும். மேலும் திட்டிவிடம் எனப்படுவன, கண்பார்வை மூச்சு மலம் ஸ்பரிசம் இவற்றால் நஞ்சைப்பரப்பக்கூடிய கொடிய பாம்புகளாகும். அவை தீண்டினாலும் மர்மஸ்தானங்களில் கடிபட்டாலும் நஞ்சு எத்தகைய சிகிச்சை முறைகளாலும் தீர்க்கப்படமாட்டாமல் மரணம் ஏற்படும். 159 – 160

## 91. பாம்பு விஷம் வீறு பெறுவதன் காரணம்

மிகவும் அச்சம் கொண்ட மனிதன், கள் முதலியவைை அருந்துவதால் போதையில் இருப்பவன், வலிவற்றவன் உஷ்ணம் பசி முதலியவற்றால் துன்பப்படுபவன் ஆகியவர்களை எவ்வகைப் பாம்பு கடித்தாலும் நஞ்சு மிக்க விரைவுடன் உடலில் பரவும். மனிதனின் இயற்கை காலம் என்பன நஞ்சுக்கேற்ற தன்மை கொண்டிருந்தாலும் நஞ்சுக்கு பலம் அதிகம்; விரைவாகச் செயல்படும். அவ்வாறன்றி காலமும் இயற்கையும் நஞ்சுக்கு எதிரான தன்மை கொண்டிருந்தால் நஞ்சின் பலமும் வேகமும் குறைவாகக் காணப்படும். (மனித உடல் உஷ்ணத் தன்மை கொண்டிருந்து காலமும் உஷ்ணகுணமுள்ளதானால் நஞ்சின் வேகம் விரைவாகும். மனிதன் கபத்தின் இயற்கை கொண்டு காலமும் குளிர்ந்ததாக இருந்தால் அவை நஞ்சின் தன்மைக்கு எதிர் மாறானவை. அப்போது நஞ்சின் வேகமும் குறைவாக இருக்குமென்று உணர்க.) 161 – 162

## 92. குறைந்த வேகமுள்ள நஞ்சு கொண்ட பாம்புகள்

தண்ணீரால் அடிக்கப்பட்டது இளைத்தது மிக்க அச்சம் கொண்டது கீரியுடன் போர் செய்து தப்பியது கிழத்தன்மை கொண்டது சிறு வயதிலுள்ளது சட்டை உரித்தது ஆகிய பாம்புகள் வீறு கொள்ளாத சிறிதளவே வேகமுள்ள நஞ்சு கொண்டிருக்கும். பாம்பு கோபம் கொண்டபோது தன் உடம்பில் எல்லாப்பகுதிகளிலும் பரவி இருக்கும் நஞ்சைக் கடியில் செலுத்தும். அது உணவு உண்ட உடனும் அச்சம் கொண்டிருக்கும் போதும் சிறிதளவே நஞ்சைக் கடியில் செலுத்தாது. எனவே அப்பொழுது அதன் வேகம் குறைவாகவே இருக்கும். 163 - 164

## 93. பூச்சிகளின் நஞ்சுக்கு உள்ள வாதம் முதலியவற்றின் தன்மை

உச்சிடிங்கம் என்னும் வகையைச் சார்ந்த தேள்களும் சாதாரணமான தேள்வகையும் பொதுவாக வாதம் மிகுந்துள்ள

நஞ்சைக் கொண்டிருக்கும். சிலந்தி முதலிய பூச்சிகள் வாத பித்தம் மிகுதியாக உள்ள நஞ்சோடு கூடியிருக்கும். குளவி முதலியவை கபத்தை மிகுதியாக உள்ள நஞ்சைக் கொண்டிருக்கும். 165

## 94. வாதம் முதலிய தோஷங்களுடன் கூடிய நஞ்சினால் தோன்றும் துன்பங்கள்

நஞ்சு உடலில் பரவியபோது மிகுந்துள்ள தோஷத்திற்குக் கூறப்பட்டுள்ள இலக்கணங்களைக் கொண்டு நோயாளியின் உடலில் சீற்றமடைந்துள்ள தோஷங்களை உணர்ந்து அதற்கு மாறான சிகிச்சையைக் கையாள வேண்டும். 166

வாதம் மிகுந்துள்ள நஞ்சு உடலில் பரவிய போது மார்பில் வலி பெருமூச்சு விடுதல் உடல் மரத்தல் நரம்புகளைப் பிடித்து இழுத்தாற்போல் இருத்தல் எலும்புகளிலும் மூட்டுகளிலும் வலி உடல் நடுக்கம் உடலுறுப்புகள் கோணுதல் உடல் கருநிறம் கொள்ளுதல் என்பன காணப்படும்.

பித்தம் மிகுந்துள்ள நஞ்சு உடலில் பரவிய போது நினைவு தவறும். சூடுள்ள மூச்சு வெளியாகும். மார்பில் எரிச்சல் வாய் கார்ப்புச் சுவை கொள்ளுதல் கடிபட்ட இடத்திலும் மாமிசத்திலும் பிளப்பது போன்ற வலி தோன்றுதல் ஆகியவை காணப்படும். சிவப்பும் மஞ்சளுமான நிறங் கொண்ட வீக்கம் கடிபட்ட இடத்தில் தோன்றும்.

கபம் மிகுதியாக உள்ள நஞ்சு உடலில் பரவிய போது வாந்தியாகுதல் வாய்சுவையின்மை ஓக்காளம் வாயிலிருந்து எச்சில் ஒழுகுதல் என்பன காணப்படும். உடல் பளுவாகத் தோன்றும். உடல் குளிர்ந்திருக்கும். வாய் இனிக்கும். 167–169

## 95. வாதம் மிகுந்துள்ள நஞ்சுக்குச் சிகிச்சை

வாதம் மிகுந்துள்ள நஞ்சுக்குக் கடிபட்ட இடத்தில் சந்தனத் தூள் பற்று போட வேண்டும். எள்ளெண்ணெயினால் எண்ணெய்க் குளியல் செய்விக்க வேண்டும். தவிடு முதலியவற்றைக் கொண்டும் [1]நாடீஸ்வேத முறையாலும் உடல் வியர்க்கச் செய்ய வேண்டும். உடலுக்கு ஊட்டமளித்து (பிரும்மண) பருக்கச் செய்யும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 170

1. தாடீஸ்வேதமுறை - உடல் வியர்க்கச் செய்யும் முறை.

### 96. பித்தம் மிகுந்துள்ள நஞ்சுக்குச் சிகிச்சை

பித்தம் மிகுந்துள்ள நஞ்சுக்கு மிக்க குளிர்ந்த நீரால் உடலை நனைத்தல் குளிர்ச்சி தரும் பற்று போடுதல் என்னும் முறைகளால் நஞ்சைப் பரவவிடாமல் தடுக்க வேண்டும். கபம் மிகுந்துள்ள நஞ்சு பட்ட இடத்தில் கீறுதல் சிதைத்து மாமிசத்துடன் நஞ்சை வெளிப்படுத்தி கத்திரித்தல் உடல் வியர்க்கச் செய்து வாந்தி செய்வித்தல் என்னும் முறைகளைக் கையாள வேண்டும். 171

### 97. நஞ்சுக்குப் பொது சிகிச்சை

உச்சிடிங்கம் முதலிய தேள்கள் தவிர மற்றவை தீண்டிய போது நஞ்சு உடலில் எந்த இடத்தில் பரவியிருந்தாலும் மிக்க குளிர்ச்சி தரும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 172

### 98. தேள் விஷத்திற்குச் சிகிச்சை

தேள் கொட்டிய உடன் கடிபட்ட இடத்தை வியர்க்கச் செய்து நெய்யோடு இந்துப்பைக் கலந்து அவ்விடத்தில் தேய்க்க வேண்டும். சூடான காடி, நீர் முதலியவற்றால் உடலை நனைக்கச் செய்ய வேண்டும். நெய்யுடன் கூடிய உணவை உண்டு நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். உச்சிடிங்கம் என்னும் தேள் கொட்டிய போதும் இம்முறையையே கையாள வேண்டும். மேலும் மண்ணைக் கொண்டு கடிபட்ட இடத்தில் எதிர்மாறாகத் தேய்க்க வேண்டும். வென்னீரில் மண் முதலியவற்றைச் சேர்த்து தகுந்த சூடுள்ள போது அடிக்கடி பற்று போட வேண்டும். 173 – 174

### 99. வெறிநாய் முதலியவற்றின் கடிக்குச் சிகிச்சை

வெறிநாய் கடித்தால் வாதம் முதலிய மூன்று தோஷங்களும் சீற்றமுறும். உணர்வையூட்டும் தாதுக்கள் கெடும். அதனால் தலையில் வலியுண்டாகும். வாயிலிருந்து எச்சில் ஒழுகிக் கொண்டிருக்கும். தலை கீழ்நோக்கிச் சாய்ந்திருக்கும். மேலும் நஞ்சுள்ள நரி சிவங்கி முதலிய கொடிய விலங்குகள் வெறிகொண்டுள்ள போது கடித்தால் கபவாதங்கள் சீற்றமுறும். அதனால் இதயத்திலும் தலையிலும் வலி தோன்றும். காய்ச்சல் தோன்றும். உடல் அசைவற்றிருக்கும். நாவறட்சி நினைவிழத்தல் தோன்றும். 175 - 176

1. நாடீஸ்வேதமுறை—உடல் வியர்க்கச் செய்யும் முறை.

## 100. நஞ்சுள்ள அல்லது நஞ்சில்லாத கடிகளின் இலக்கணம்

நஞ்சுடன் கூடிய பூச்சிகள் கடித்தால் அரிப்பு குத்தல் நிற மாற்றம் தொடு உணர்ச்சியின்மை கடிபட்ட இடத்தில் நீர் பெருக்கும் அழுகுதல் ஈரமின்றி உலர்ந்திருத்தல் எரிச்சல் வலியுடன் புண்ணாதல் விந்து போதல் வீக்கம் உடல் முழுதும் கட்டிகள் பரவுதல் கடித்த இடத்தில் வெடிப்பு தோன்றுதல் கொப்புளங்கள் தோன்றுதல் கெட்ட மாமிசம் வளர்தல் படைகள் தோன்றுதல் காய்ச்சல் முதலிய இலக்கணங்கள் காணப்படும். நாய் நரி முதலியவை நஞ்சு இல்லாதவையானால் இந்த இலக்கணங்கள் தோன்றா. 177 – 178

## 101. நிலைமைக்கேற்ப சிகிச்சை

முன் கூறப்பட்ட இலக்கணங்களையொட்டி அந்தந்த இலக்கணங்களுக்கு ஏற்ப இருபத்து நான்கு முறைகளில் தகுந்த சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். மேலும் இனி கூறப்போகும் சிகிச்சை முறைகளையும் ஆராய்ந்து நிலைமைக்குத் தக்கவாறு கையாளவேண்டும். 179

## 102. நஞ்சு பரவுவதால் தோன்றிய எரிச்சலுக்குச் சிகிச்சை

நஞ்சு பரவுவதால் இதயத்தில் எரிச்சல் தோன்றி வாயிலிருந்து எச்சில் ஒழுகிக் கொண்டிருந்தால் நிலைமைக்கேற்ப வாந்தியாகச் செய்தல், பேதியாகச் செய்தல் என்பனவற்றை நன்கு செய்விக்க வேண்டும். அதனால் குடல் தூய்மை அடைந்த பின் பேயா என்னும் கஞ்சி உணவு முதலியவற்றை முறையாகப் பயன்படுத்த வேண்டும். 180

## 103. தலை கண்களில் பரவியதற்குச் சிகிச்சை

நாய் நரி முதலியவற்றின் நஞ்சு தலையைச் சேர்ந்திருந்தால் செம்பரத்தைவேர் சிறுதேக்கு கருந்துளசிவேர் இவற்றை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். மேலும் உடலின் கீழ்ப்பகுதியில் கடிபட்டால் தலையிலும் உடலின் மேற்பகுதியில் கடிபட்டால் உள்ளங்காலிலும் கீறி அந்த இடத்தில் கோழி காகம் மயில் இவற்றின் இரத்தம் சொட்டும் மாமிசத்தை வைக்க வேண்டும். மேலே கூறப்பட்ட விலங்குகளின் நஞ்சு கண்களில் பரவியிருந்தால் திப்பிலி மிளகு யவக்ஷாரம் வசம்பு இந்துப்பு முருங்கைப்பட்டை இவற்றை ரோகிதம் என்னும் மீனின் பித்தத்தைச் சேர்த்து அரைத்துக் கண்களில் மைபோல் இடவேண்டும். 181 – 183

## 104. ஆமாசயம் முதலியவற்றில் சேர்ந்த நஞ்சுக்குச் சிகிச்சை

தொண்டையில் நஞ்சு சேர்ந்திருந்தால் பச்சைவிளாங்காய்க் குள்ளிருக்கும் சோற்றுடன் சர்க்கரையையும் தேனையும் கலந்து உண்ணச் செய்ய வேண்டும். நஞ்சு ஆமாசயத்தில் (உணவுப்பை) சேர்ந்திருந்தால் ஒரு பலம் அளவுள்ள கிரந்திதகரத்தைத் தூளாக்கித் தேனும் சர்க்கரையும் கலந்து உட்கொள்ளச் செய்க. நஞ்சு பக்குவாசயத்தைச் (சிறுகுடலை) சேர்ந்திருந்தால் திப்பிலி மஞ்சள் மரமஞ்சள் மஞ்சிட்டி இவற்றைச் சம அளவில் சேர்த்துக் கோரோசனையுடன் அரைத்துப் பருகச் செய்க. நஞ்சு ரஸம் என்னும் தாதுவில் கலந்திருந்தால் உடும்பு மாமிசத்தையும் இரத்தத்தையும் உலர்த்தித் தூளாக்கி விளாங்காய்ச் சாற்றுடன் கலந்து உட்கொள்ளச் செய்க. இரத்த தாதுவில் நஞ்சு கலந்த போது நறுவிலி இலந்தை [1]அத்தி என்பனவற்றின் வேர் பட்டை துளிர் இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்து விழுதாகச் செய்து நீரில் கலந்து பருகச் செய்க. மாமிசத்தில் நஞ்சு கலந்திருந்தால் கருங்காலிவேர் வேப்பம்வேர் வெப்பாலை வேர் இவற்றை நீருடன் அரைத்துத் தேன் கலந்து அதைப் பருகச் செய்ய வேண்டும். சிற்றாமுட்டிவேர் பேராமுட்டிவேர் இலுப்பைவேர் அதிமதுரம் கிரந்திதகரம் இவற்றைச் சம அளவில் சேர்த்து நீர் சேர்த்து அரைத்து நஞ்சு தலையைச் சேர்தல் தாதுக்களில் பரவுதல் முதலிய நிலைகளில் எல்லாவற்றிலும் பயன்படுத்தலாம். 184–188

## 105. கபநஞ்சுக்குத் திப்பிலித் தூளைத் தேய்த்தல்

நஞ்சினால் உடலில் கபதோஷம் சீற்றமடைந்திருந்தால் திப்பிலி கடுகு யவக்ஷாரம் இவற்றைத் தூளாக்கி வெண்ணெயுடன் கலந்து சதுக்க இடத்தின் மேல் தூவி தேய்க்க வேண்டும். 189

## 106. நஞ்சைப் போக்கும் சில முறைகள்

சடாமாஞ்சி குங்குமப்பூ இலவங்கப்பத்திரி மஞ்சள் கிரந்தி தகரம் சந்தனக் கட்டை மனோசிலை [2]புலிநகப்பூண்டு என்னும்

---

1. அத்தி—வெளுத்த மலர் கொண்ட மலைமுருக்கி.

2. புலிநகம்—நகி, புலி (வியாக்ர) நகம் என்று கூறப் படும் வாசனைப் பொருள். இது நகத்தைப் போலிருப்ப தால் இதற்கு இப்பெயர் ஆயிற்று. இது நீரிலுள்ள ஒருவகை பூச்சிக் கூட்டின் ஓடு. இது வலிமையையும் இந்திரியத்தையும் வளர்க்கும், விஷத்தைப் போக்கும்.

ஒருவகை வாசனைப் பொருள் துளசி இவற்றை நீருடன் சேர்த்து மைய அரைத்துப்பருகவும் மூக்கில் மருந்தாகவும் பயன்படுத்தவும். கண்களில் மையாக இடவும் மேல் பூச்சுக்கும் பயன்படுத்தினால் பலவகை வீக்கங்களும் நஞ்சுகளும் நீங்கும். 190

### 107. நஞ்சைப் போக்கும் மருந்து

சந்தனம் கிரந்திதகரம் கோஷ்டம் மஞ்சள் மரமஞ்சள் இலவங்கப்பட்டை மனோசிலை புங்கன்பட்டை சிறுநாகப்பூச்சாறு புலிநகப்பூண்டு இவற்றைச் சம அளவில் சேர்த்து அரிசி கழுவிய நீருடன் மைய அரைத்துப் பருகச் செய்தால் அம்மருந்து, அரக்கர்களை இந்திரன் வஜ்ரம் என்னும் ஆயுதத்தால் அழித்தது போல் நஞ்சு வகைகள் அனைத்தையும் போக்கும். 191 – 192

### 108. நஞ்சைப் போக்கும் குடிநீர் முறைகள்

வெண்மிளகை லொகைமலர்ச்சாற்றில் ஏழு நாட்கள் ஊற வைத்துப் பாம்புக் கடி கொண்டவர்களுக்கு மூக்கிலிடும் மருந்தாகவும் குடிநீராகவும் கண்களிலிடும் மையாகவும் பயன்படுத்தினால் நஞ்சு நீங்கும். 193

### 109. நஞ்சைப் போக்கும் குடிநீர்

கிரந்திதகரம் கோஷ்டம் இரண்டையும் இரண்டு பலம் வீதம் சேர்த்துப் பொடி செய்து நான்கு பலம் அளவு நெய்யும் தேனும் கலந்து பருகச் செய்தால் தக்ஷகனைப் போன்ற நாகம் கடித்தாலும் எளிதாக நஞ்சு குறையும். 194

### 110. பாம்புக் கடிக்கு கண்களிலிடும் மை

நொச்சிவேர் வெள்ளைமலர் கொண்ட விஷ்ணுகரந்தை இவற்றை அரைத்துப் பருகச் செய்து கோஷ்டத்தைத் தேனில் அரைத்துக் கண்களில் மையாக இட்டால் கருநாக (தர்வீகா)த்தின் நஞ்சு தீரும். 195

### 111. மலைப்பாம்பின் (மண்டலியின்) நஞ்சுக்குச் சிகிச்சை

மஞ்சிட்டி அதிமதுரம் சீவகம் ரிஷபகம் குமிழங்கிழங்கு ஆலம்விழுது இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்துச் சர்க்கரை கலந்து பருகச் செய்தால் மலைப்பாம்பின் (மண்டலியின் [illegible] [illegible] ீரும். 196

## 112. ராஜிமந்தம் என்னும் பாம்பின் நஞ்சுக்கு மருந்து

திரிகடுகம், அதிவிடயம் கோஷ்டம் ஒட்டடை அரேணுகம் கிரந்திதகரம் கடுகரோகிணி இவற்றைச் சம அளவில் கலந்து தூளாக்கித் தேனுடன் கலந்து பருகச் செய்தால் ராஜிமந்தம் என்னும் பாம்பின் நஞ்சு தீரும். 197

## 113. பாம்பு விஷத்திற்குக் குடிநீர்

ஒட்டடை பஞ்சள் மரமஞ்சள் சிறுகீரைவேர் இவற்றைச் சேர்த்து அரைத்து தயிரும் நெய்யும் கலந்து பருகச் செய்தால் வாசுகி என்னும் கொடிய பாம்பு கடித்தாலும் நஞ்சு தீரும். 198

## 114. நச்சுப் பூச்சிக்கடிக்குச் சிகிச்சை

பூச்சி கடித்தால் முதலில் வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய தூய்மைப் படுத்தும் சிகிச்சைகளைச் செய்து பிறகு அத்தி ஆலம் அரசு இத்தி நாவல் என்னும் பாலுள்ள மரங்களின் பட்டைகளை அரைத்துப் பூசினால் நஞ்சு தீரும். முத்தை அரைத்துப் பற்றாகப் பூசினால் நஞ்சுள்ள பூச்சிகளின் கடியால் தோன்றிய வீக்கம் எரிச்சல் குத்தல்வலி காய்ச்சல் என்பன நீங்கும். 199

## 115. சிலந்தி விஷத்திற்குச் சிகிச்சை

சந்தனப் பதுமகப் வெட்டிவேர் வாகை நொச்சிவேர் பால் முதுக்கன் கிழங்கு கிரந்திதகரம் கோஷ்டம் பாதிரிவேர் குருவேர் நன்னாரிவேர் இவற்றைச் சம அளவில் சேர்த்து நறுவிலி இலைச் சாற்றுடன் அரைத்து சிலந்தி தீண்டிய பொழுது நிலைமைக்குத் தக்கவாறு மேல்பூச்சாகவும் மூக்கிலிடு மருந்தாகவும் குடிநீராகவும் பயன்படுத்தினால் நஞ்சு நீங்கும். 200 – 201

## 116. சிலந்தி நஞ்சுக்குப் பான முறை

இலுப்பைப்பட்டை அதிமதுரம் கோஷ்டம் வாகைப்பட்டை குருவேர் பாதிரிவேர் வேம்பம்பட்டை நன்னாரி வசம்பு, வெட்டிவேர் இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்து தேன் கலந்து பருகச் செய்தால் சிலந்தியின் நஞ்சு தீரும். 202

### 117. பூச்சிக்கடியால் உடலில் கெட்டுப் போன மாமிசப் பகுதிக்குச் சிகிச்சை

குசும்பமலர் அரிதாரம் (கோதந்தம்) ஸ்வர்ணக்ஷீரி புறா எச்சம் நேர்வாளவேர் வெண்சிவதை இந்துப்பு இவற்றைச் சேர்த்து அரைத்து உடலில் சிலந்தி அல்லது விஷப்பூச்சிகள் கடித்த இடத்தில் வைத்தால் அங்கு இறுகி ஆவிபோல் ஆகிக் கெட்டுப்போன கர்ணிகா என்னும் மாமிசப்பகுதி தனியாக உதிர்ந்துவிடும். 203

### 118. விஷப்பூச்சிக் கடி விரணத்திற்குச் சிகிச்சை

வெண்மலைமுக்கிப்பட்டை (மால்கிங்கிணிப்பட்டை) மருத மரப்பட்டை வாகைப்பட்டை நருவிலிப்பட்டை அத்தி அரசு முதலிய பாலுள்ள மரங்களின் பட்டைகள் இவற்றைச் சேர்த்துக் கஷாயமாகவோ விழுதாகவோ தூளாகவோ செய்து சிலந்தி முதலிய விஷப்பூச்சிகள் தீண்டியதால் தோன்றிய விரணத்தைக் கழுவுதல் உட்கொள்ளுதல் முதலியவற்றிற்குப் பயன்படுத்தினால் அவ்விரணங்கள் தீரும். 204

### 119. எலிக்கடிக்குச் சிகிச்சை

இலவங்கப்பட்டை சுக்கு இவ்விரண்டையும் சம அளவில் சேர்த்து அரைத்து வெந்நீருடன் கலந்து பருகச் செய்தால் எலிக்கடியினால் நேரும் துன்பங்கள் நீங்கும். 205

### 120. தேள் முதலியவற்றின் நஞ்சுக்குச் சிகிச்சை

குடசப்பாலை கிரந்திதகரம் தேவதாளி பேய்ச்சுரை இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கிப் பருகவும், மூக்கிலிடு மருந்தாகவும் பயன்படுத்தினால் தேள் எலி சிலந்தி பாம்பு முதலியவற்றின் நஞ்சு தீரும். மேலும் இம்முறை அமுதம் போல் எல்லா நஞ்சுகளையும் போக்கும். இடு மருந்தால் தோன்றும் அசீரணத்தைப் போக்கும். இவ்வாறு கூறப்பட்ட முறைகள் அனைத்தையும் திரிகண்டகம் என்னும் விஷப்பூச்சிக் கடிகளுக்கும் தோஷங்களுக்கும் ஏற்ப பயன்படுத்தலாம்.

206–207

### 121. தேள் விடத்திற்கு மருந்து

புறாஎச்சம் துரிஞ்சிப்பழம் வாகைமலர்ச்சாறு சங்கபுஷ்பி எருக்கம்பால் சுக்கு புங்கம்பட்டை தேன் இவற்றைச் சேர்த்து அரைத்து கொட்டிய இடத்தில் மேல்பூச்சு மருந்தாகப்

## 122. தவளை மீன் முதலியவற்றின் நஞ்சுக்கு மருந்து

*வாகை மலரை அரைத்துக் கள்ளிப்பாலுடன் கலந்து மேல் பூச்சாகப் பயன்படுத்தினால் தவளையின் நஞ்சு நீங்கும். வெள்ளை விண்ணுகரந்தையின் வேரும் திரிகடுகமும் கலந்து அரைத்து நெய்யில் கலந்து மீன் கடி நஞ்சுக்குப் பயன்படுத்துக.* 209

## 123. அட்டை முதலியவற்றின் நஞ்சுக்குச் சிகிச்சை

*நச்சுப்பூச்சிகடிக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகள் அனைத்தையும் அட்டைக்கடிக்கும் பயன்படுத்தலாம். மேலும் வாத பித்தங்களைப் போக்கும் சிகிச்சை முறைகளை அட்டைக் கடிக்கும் பயன்படுத்துவது சிறந்த முறையாகும். மற்றும் தேள் கடிக்குக் கூறப்பட்ட மருந்துகள் அனைத்தையும் உச்சிடிங்கம் என்னும் தேள் விஷத்திற்கும் குளவி எலி முதலியவற்றின் நஞ்சுக்கும் பயன்படுத்தலாம்.* 210 — 211

## 124. விச்வம்பரம் முதலிய விஷப்பூச்சிகளின் கடிக்கு மருந்து

*வசம்பு மூங்கில்பட்டை வட்டத்திருப்பி கிரந்திதகரம் துளசி மலர்க்கொத்து சிற்றாமுட்டி பேராமுட்டி சிற்றரத்தை கோஷ்டம் வாகைப்பட்டை மஞ்சள் மரமஞ்சள் மூவிலை ஓரிலை வெள் சங்குபுஷ்பி ஓமம் சிலாசித்து வாசனைப்புல் வெண்மலைமுக்கி (மால்கிங்கினி) யவக்ஷாரம் ஒட்டடை மனோசிலை இவற்றைச் சம அளவில் கலந்து ரோகிதம் என்னும் மீனின் பித்தத்துடன் அரைத்து மூக்கிலிடு மருந்தாகவும் கண்களில் மையாகவும் மேற் பூச்சாகவும் பயன்படுத்தினால் விச்வம்பரை முதலிய பதின்மூன்று வகை நச்சுப்பூச்சிகளின் நஞ்சு நீங்கும். நஞ்சை நீக்குவதில் இது சிறந்த மருந்தாகும். (விச்வம்பரை முதலிய பதின்மூன்று நச்சுப்பூச்சிகளின் கடி கபத்தைச் சீற்றமடையச் செய்யும்).* 212 — 214

## 125. பூரான் கடிக்குச் சிகிச்சை

*ஸர்ஜக்ஷாரம் ஆட்டுப்புழுக்கையின்சாம்பல் துளசி அக்ஷிபீடகம் (வெண்மை மஞ்சள் நிறமுள்ளதும் ஊசையும் கொண்டது மான தானியவகை) இவற்றை அரைத்து மதிரை என்னும் கள்ளின் தெளிவுடன் கண்களில் தேய்த்தால் பூரான்கடி நீங்கும், இதைப் பருகவும் மூக்கில் மருந்தாக இடவும் மேல்பூச்சாகவும் பயன்படுத்தலாம்.* 215

## 126. பல்லி விடத்திற்குச் சிகிச்சை

*விளாங்காயினுள் இருக்கும் கோது அக்ஷிபீடகம் என்னும் தானியவகை எருக்கன் விதைகள் திரிகடுகம் புங்கன் விதைகள்*

மஞ்சள் மரமஞ்சள் இவற்றை அனைத்தையும் பயன்படுத்தினால் பல்லியின் நஞ்சு நீங்கும். 216

## 127. நஞ்சு வகைகள் அனைத்திற்கும் சிகிச்சை

கசப்புக் கோவைச் [1](காகாண்டம்) சாற்றுடன் கூடிய சிறுகீரை வேரும். மயில் பித்தத்துடன் கூடிய 'வாயச பீலுகை' பட்டையும் எல்லா விடங்களுக்குப் தக்க மருந்துகளாகும். 217

## 128. எல்லா வகை நஞ்சுக்கும் ஐவகை வாகை என்னும் மருந்து

வாகைமரத்தின்பழம் வேர் பட்டை மலர் இலை இவ்வைந்தையும் சமஅளவில் சேர்த்து அரைத்து அவ்வனைத்தின் அளவிற்கு நெய் கலந்தால் அது பஞ்சசிரீடம் என்னும் மருந்தாகும். இது எல்லா வகை நஞ்சுகளுக்கும் சிறந்த மருந்தாகும். 218

## 129. நாலுகால் இரண்டு கால் பிராணிகளின் நஞ்சுக்கு மருந்து

பூனை முதலிய நாலுகால் பிராணிகள் காட்டு மனிதர்களாகிய இரண்டுகால் உயிரினங்கள் நகத்தால் கீறினாலும் பற்களால் கடித்தாலும் வீங்கிக் காயம் பக்குவம் அடைந்து சீழ் பிடித்து நீர் ஒழுகிக் கொண்டிருப்பதுடன் காய்ச்சலையும் தோற்றுவிக்கும். அப்பொழுது வெண்கருங்காலியின் வைரம் பாய்ந்த கட்டை மருதப்பட்டை கோஜிஹ்வா என்னும் மரப் பட்டை செறுபுள்ளரி மஞ்சள் மரமஞ்சள் காவிக்கல் இவற்றை அனைத்தையும் அரைத்துப் பூசினால் நஞ்சு நீங்கி அத்தகைய விரணம் ஆறும். 219

## 130. நஞ்சென்று ஐயம் கொள்வதால் வரும் தீங்கின் இலக்கணம்

அடர்ந்த இருளில் நஞ்சில்லாத வேறு உயிரினங்கள் கடித்த பொழுது நஞ்சு உள்ளதோ என்னும் ஐயம் தோன்றுவதாலும் சில துன்பங்கள் தோன்றும். நஞ்சென்னும் ஐயப்பாட்டின் வேகத்தால் வாந்தி காய்ச்சல் நினைவிழத்தல் அழற்சி தோன்றும். சோர்வும் மயக்கமும் அதிஸாரபேதியும் உண்டாகும். 220–221

## 131. நஞ்சு எனும் ஐயப்பாட்டிற்குச் சிகிச்சை

அவ்வாறு நஞ்சென்னும் ஐயப்பாடு கொண்டு துன்பப்படும் நோயாளியை நல்ல சொற்களால் அச்சத்தை நீக்கி சிகிச்சை

செய்ய வேண்டும். சர்க்கரை கல்கண்டு வரசரிசி தூய்மைப் படுத்தப்பட்ட கந்தகம் திராட்சைப்பழம் க்ஷீரகாகோலி அதி மதுரம் தேன் இவற்றை நீரில் கலந்து மந்திரித்துப் பருகச் செய்ய வேண்டும். அத்தகைய நீரைத் தெளித்தலும் நல்லுரைகளால் அமைதிபடுத்தலும் மகிழ்ச்சியுண்டாகப் பேசுவதும்நஞ்சு என்னும் ஐயப்பாடு கொண்டவனுக்குத் தக்க சிகிச்சைகள் ஆகும்.
222 – 223

## 132. என்னும் ஐயப்பாடு கொண்டவனுக்கு உணவு

அறுபது நாள் சம்பா, சம்பா வரகு தினை என்பனவற்றை நஞ்சின் ஐயப்பாட்டினால் துன்பப்படுபவனுக்கு உணவாகப் பயன் படுத்தவேண்டும். உவர்ப்புச் சுவைக்காக இந்துப்பைப் பயன்படுத்த வேண்டும். மேலும் சிறு கீரை கீரைப்பாலை கத்திரி புளியாரை கீரை எலிச்செவிகீரை வல்லாரை பேய்ப்புடல் அல்லது பாகல் பிரியங்கு இவ்விலைகள் உணவிற்கேற்ற கீரை வகைகள் ஆகும்.
224

## 133. நஞ்சினால் துன்பமடைந்தவனுக்குத் தக்க புலால் உணவு

நஞ்சினால் துன்பமடைபவரின் உணவில் புளிப்புச் சுவைக் காக நெல்லிக்காய் சாறு புளிப்பு மாதுளைச் சாறுகளைச் சேர்ப்பது நல்லது. பயறு அரேணுகம் சேர்த்துக் காய்ச்சிய யூஷம் என்னும் கஞ்சியையும் மான் மயில் செம்மறியாடு லாவகம் தித்திரி என்னும் பறவைகள் புள்ளிமான் இவற்றின் புலால் சாற்றினையும் நஞ்சை முறிக்கும் மருந்துகள் கலந்து பக்குவம் செய்யப்பட்ட புலால் சாற்றை அல்லது கஞ்சிகளையும் எரிச்சலை யூட்டாத உணவு வகைகளையும் நஞ்சினால் துன்புறுபவர்களுக்குப் பயன்படுத்துக.
225 – 226

## 134. நஞ்சினால் துன்புறுவர் விடத் தக்கவை

வேளையற்ற வேளையில் உண்ட உணவு அல்லது ஒன்றுக் கொன்று எதிர் மாறான தன்மை கொண்ட பாலும் மீனும் போன்றவகையில் சேர்த்து உண்பது உண்டதும் மறுபடி ஏதேனும் உண்பது சினம் பசியையடக்குதல் அச்சம் உடலுக்குச் சோர்வு தரும் வேலைகளைச் செய்தல் கலவி இவற்றை நஞ்சினால் துன்பம் நீங்கிய பிறகும் சில நாட்கள் வரை தவிர்க்க வேண்டும். முக்கியமாக பகல் தூக்கத்தை அடியோடு விட வேண்டும். 227

## 135. பசு முதலியவைகளுக்கு நேரும் விஷக்கடியின் இலக்கணம்

நான்கு கால் விலங்குகளாகிய பசு முதலியவற்றை அரவம் முதலியவை தீண்டினால் அவ்விலங்கின் தலை அடிக்கடி தொங்கும். அதன் உடலில் வீக்கம் தோன்றும். உதடு காது பிடி தளர்ந்து தொங்கிக் கொண்டிருக்கும். அல்லது உலர்ந்து போகும். காய்ச்சல் தோன்றும். கண்களும் உடலும் அசைவற்றுப்போகும். நாடைகள் நடுங்கும். உடல் முழுவதிலும் மிக்க வலி தோன்றும். உரோமங்கள் உதிரும். மிக்க சோர்வு தோன்றும். எதிலும் விருப்பமின்மை காணப்படும். நடுக்கம் உண்டாகும். உடல் சுற்றி கீழே விழும். இவை பாம்பு முதலியவற்றால் கடிக்கப்பட்ட விலங்கின் உடலில் காணப்படும் இலக்கணங்களாகும். 228 – 230

## 136. கொண்ட விலங்கினங்களுக்குச் சிகிச்சை

தேவதாருக கட்டை மஞ்சள் மரமஞ்சள் சரள மரக்கட்டை சந்தனக்கட்டை அகில்கட்டை சிற்றரத்தை கோரோசனம் சீரகம் குங்கிலியம் கிரந்திதகரம் இந்துப்பு நன்னாரி இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கிக் கருப்பஞ்சாறு கலந்து பசுவின் பித்தமும் தேனும் சேர்த்து விலங்கினங்கள் பாம்பு முதலியவற்றின் நஞ்சினால் துன்புறும்போது பருகவும் மூக்கிலிடவும் மேல் பூசவும் பயன்படுத்த வேண்டும். இது நல்ல மருந்தாகும். 231 – 232

## 137. கரம் என்னும் - அதன் இலக்கணம்

பெண்கள் கணவனைத் தம் வயப்படுத்திக் கொள்ள எண்ணித் தம் உடலில் தோன்றும் வியர்வை மாதவிடாய் இரத்தம் மற்றும் ஏனைய மலங்களைச் சேர்த்து மருந்தாக்கி உணவில் கலந்து கொடுப்பார்கள். மற்றும் அரசர்கள் விலங்குகளின் எலும்புகளையும் சிறிதளவு நச்சுத் தன்மை கொண்ட பொருள்களையும் கலந்து சமையல்காரர் ஏவலாள் முதலியவர்கள் மூலமாகத் தங்களுக்குப் பகையான அரசர்களுக்கு இடச் செய்வார்கள். இதுவே 'கரம்' என்று சொல்லப்படும்.

அத்தகைய உணவினால் சோகை இளைப்பு சீரணசக்தி குறைவு காய்ச்சல் முதலியன தோன்றும். மேலும் உயிர் நிலைகளில் கடைதலைப் போன்ற வலி வயிற்று உப்புசம் கால் கைகளில் வீக்கம் பெருவயிறு கிரஹணி தாதுக்ஷயம் குன்மம் சுவாச காசநோய் விஷக்காய்ச்சல் முதலியன தோன்றும். அத்தகைய நோயாளிக்குக் கனவில் பூனை நரி புலி கீரி குரங்கு முதலிய

விலங்குகள் காணப்படும் ஆறுகளில் நீரில்லாதது போலவும் மரங்கள் உலர்ந்திருப்பது போலவும் கனவில் காணப்படும், தன் உடல் கருத்திருந்தாலும் மஞ்சள் நிறம் கொண்டிருப்பது போலவும் மஞ்சள் நிறம் கொண்டிருந்தால் கரு நிறம் கொண்டிருப்பது போலவும் கனவில் காணப்படும். தன் உடலில் காது மூக்கு முதலியவை இல்லாதது போல் காணப்படும். புலன்களின் வலிமை கெடுவதால் இத்தகைய மாறுதல்கள் தோன்றும். 233 – 237

## 138. இடு விடத்திற்குச் சிகிச்சை

முன் கூறிய இலக்கணங்கள் காணப்பட்டால் 'நீ யாருடன் கூடி என்ன உண்டாய்? என்று கேட்டு அவன் சொல்லும் வார்த்தைகளால் 'கரம்' என்னும் இடுவிஷம் கொண்டவனாகத் தோன்றினால் உடனே தாமிரம் அராவியதால் தோன்றிய மிகவும் நுண்ணியதான தூளைத் தேனில் கலந்து கொடுத்துமுறைப்படி வாந்தி எடுக்கச் செய்தால் இதயம் தூய்மைபெறும். 238

## 139. இடுவிஷத்திற்குத் தங்க பற்பம்

முன்பு கூறியபடி வாந்தி எடுத்தலால் இதயம் தூய்மையடைந்த பிறகு [1]சாண அளவு தங்கபற்பம் கொடுக்க வேண்டும். தங்கபற்பம் பலவகை நஞ்சுகளையும் இடுவிஷத்தையும் விரைவில் போக்கும். மற்றும் தங்கத்தை உண்டவனுக்கு உடலில் எந்த நஞ்சும் தாமரை இலைமேல் நீரைப்போல் ஒட்டாமல் போகும். 239 – 240

## 140. நஞ்சுக்கு நாகதந்தியாதி கிருதம்

நாகதந்தி (பெரியவெள்ளரி) சிவதை நேர்வாள வேர் எலிச் செவிவேர் கள்ளிப்பால் மருக்காரக்காய் இவற்றுடன் எருமைநெய் கலந்து 32 பலம் பசுவின் சிறுநீர் கலந்து முறைப்படி நெய் தயார் செய்க. இதைப் பயன்படுத்தினால் பாம்பு விடம் பூச்சிகளின் நஞ்சு இடு விஷம் முதலியன நீங்கும். 241

## 141. நஞ்சை போக்கும் அம்ருத கிருதம்

வாகைப்பட்டை திரிகடுகம் திரிபலை சந்தனம் கரு நெய்தல் சிற்றாமுட்டி பேராமுட்டி நன்னாரி வெண்சங்குபுஷ்பி காட்டுத் துளசி வேப்பம்பட்டை பாதிரிப்பட்டை பந்துஜீவகமலர் துவரை

1. சாண அளவு—நான்கு உளுந்து அளவு.

பெருங்குரும்பை ஆடாதொடை வெண்துளசி வெட்பாலை வட்டத்திருப்பி அழிஞ்சில்விதை அமுக்கராக்கிழங்கு வெள்ளெருக்கு வேர் அதிமதுரம் பதுமுகம் பேய்த்துமட்டி முள்ளுக்கத்திரி கொம்பரக்கு மந்தாரை தண்ணீர்விட்டான்கிழங்கு மலைமுக்கி நேர்வாளம் நாயுருவி ஓரிலை ரசாஞ்சனம் ச்வேதபண்டா நாகணம் கோஷ்டம் தேவதாருக்கட்டை ஞாழல் முதுக்கன் கிழங்கு அதிமதுரப்பால் புங்கம்பழம் புங்கம்பட்டை மஞ்சள் மரமஞ்சள் பாச்சோத்தி இவை ஒவ்வொன்றும் ஒரு தோலா வீதம் சேர்த்து அரைத்து 64 பலம் நெய்சேர்த்து அதில் ஆட்டின் சிறுநீர் பசுவின் சிறுநீர் இரண்டும் மூன்று *ஆடகங்களும் இதற்குச் சமமாக ஒரு ஆடகம் நீரும் கலந்து முறைப்படி நெய் காய்ச்சுக. இது அமிர்தகிருதம் எனப்பெயர் கொள்ளும். இதைப்பருகவும் உடல் மேல் தேய்த்து நீராடவும் மூக்கில் மருந்தாக இடவும் பயன்படுத்தினால் கால்கைவலி க்ஷயம் பைத்தியம் பிசாசுபிடித்தல் கிரகங்களால்துன்பம் இடுவிஷம் பெருவயிறு சோபை கிருமிநோய் குன்மம் மண்ணீரல்வீக்கம் ஊருஸ்தம்பம் என்னும் வாதம் காமாலை தாடைப்பிடிப்பு (ஒருவகை வாத நோய்) கழுத்துப் பிடிப்பு இவை நீங்கும். உயிர் நீங்கும் தறுவாயிலுள்ளவனுக்கு இதை மூக்கிலிடு மருந்து முதலியவற்றிற்குப் பயன்படுத்தினால் நோயாளி பிழைப்பான். ஆகவே இதற்கு அமிர்தகிருதம் என்னும் பெயராயிற்று. 242 – 249

## 142. பாம்பு முதலியவற்றிலிருந்து காத்துக் கொள்ளுதல்

மனிதன் பகலில் குடையைக் கொண்டும் இரவில் 'சர்சர்' என்னும் தாளவாத்தியத்தால் ஓசைப்படுத்திக் கொண்டும் திரிந்தால் பகலில் குடை நிழலைக் கண்டும் இரவில் வாத்ய ஒலியைக் கேட்டும் பாம்புகள் பயந்து ஓடிவிடும். ஆதலால் அவற்றால் தீங்கு விளையா. 250

## 143. பாம்பு கடித்ததும் செய்ய வேண்டிய சிகிச்சை

பாம்பு கடித்த உடனே கடிபட்டவன் அப்பாம்பைக் கடிக்க வேண்டும். பாம்பு அகப்படாவிட்டால் மண்கட்டியையாவது கடிக்க வேண்டும். மேலும் பாம்பு கடித்த உடனே அப்பகுதிக்கு மேல் மந்திரித்ததுணி முதலியவற்றால் இறுகக்கட்டி கடிபட்ட இடத்தைத் துண்டித்து நெருப்பால் சுட வேண்டும். அவ்வாறு செய்தால் நஞ்சு பரவாமல் தணியும். 251

* ஆடகம் – 64 பலம்.

### 144. நஞ்சைப் போக்க மணிகளை அணிதல்

வைரம் மரகதம் சாரம் பிசுகம் விஷமூஷிகை பத்மராகம் (பாம்பின் தலையிலுள்ள நாகமணி) வைடூரியம் யானையின் மத்தகத்தினுள் இருக்கும் முத்து முதலியவை நஞ்சைப் போக்கும். இரத்தினங்களையும், நஞ்சை நீக்கவல்ல சிறந்த மூலிகைகளையும் உடலில் பூண்டால் நஞ்சினால் துன்பம் தோன்றாது. மேலும் மைனா கிரௌஞ்சம் மயில் அன்னம் கிளி முதலிய பறவைகளை வீட்டில் வளர்த்தால் பாம்பு முதலிய நச்சுப் பிராணிகள் வீட்டில் சேரா. 252 — 253

### முடிவுரை

இவ்வாறு தாவர ஜங்கம விஷங்களும் அவற்றின் பல வகைகளும், அவற்றால் தோன்றும் நோய்களும் அவற்றிற்கு உரிய சிகிச்சை முறைகளும் இந்த அத்தியாயத்தில் விளக்கப்பட்டன. இந்த சிகிச்சை முறைகளை நன்கு அறிந்து தகுந்தபடி பயன்படுத்தினால் நஞ்சினால் வரும் துன்பமனைத்தும் நீங்கும். 254

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரக மாமுனிவரால் பரிசோதிக்கப்பட்டு த்ருடபலரால் முழுமையாக்கப்பட்ட சரக ஸம்ஹிதையில் சிகித்ஸாஸ்தானத்தில் 'விஷ சிகிச்சை' என்னும் இருபத்துமூன்றாவது அத்தியாயம் முற்றும்.

## இருபத்துநான்காம் அத்தியாயம்

# *மதாத்யயசிகிச்சை

இனி ஆத்ரேய மாமுனிவர் கூறியருளியபடி மதாத்யய சிகிச்சையைப் பற்றி விளக்குவோம். 1—2

### 1. மதுவின்  ப்பு

சுரை என்பது முன்பு இந்திரன் முதலிய தேவர்களால் போற்றப்பட்டது. ஸௌத்ராமணி என்னும் யாகத்தில் தேவர்களைக்குறித்து அந்தந்த தெய்வத்திற்குரிய மந்திரங்களுடன் கைக்கொள்ளப்பட்டு முறையாக ஓமம் செய்யப்பட்டது. வேதங்களைக் கற்று வேத முறைகளைச் செவ்வனே செய்வதில் தேர்ச்சி பெற்றவர்களுமான அந்தணர்களால் முறையாக அது நிறுவப்பட்டது. சுரையை ஓமம் செய்வதை முக்கியமாகக் கொண்ட யாகங்களைத் தாங்குவது அதுவே. அத்தகைய சுரையாகிய சோமத்தை மிகுதியாகப் பருகிய இந்திரன் தமோகுணம் மிகுந்துள்ளவனாகி உடலிலுள்ள பிராணங்களுக்கு முக்கியமான [1]ஓஜஸ் கெட்டிருக்கும் போது அவனுடைய துன்பங்களைப் போக்கி நலம்பெறச் செய்ததும் சுரையே. முறைப்படி வேள்வியைப்புரியும் அந்தணர்களுக்குப் பார்க்கத்தக்கதாகி சில சிறப்பான கர்மங்களில் தொடுவதற்கும் சில முறைகளால் தயார் செய்யப்படுவதற்கும் தக்கது அதுவே. வேள்வி நன்கு முடிவு பெறக் காரணமானதாகையால் வேள்விக்கு உரியது சுரையாகும். 3—5

### 2. மதுவின் பொது இலக்கணம்

மூலப்பொருள்களாகிய தானியங்கள் பழங்கள் பலவகைப்படுவதாலும் தயார் செய்யப்படும் முறைகள் பலவகைப்படுதலாலும் சுரை மது மைரேயம் என்பன போன்ற பல பெயர்கள்

* மதாத்யயம்—மதுபானத்தால் தோன்றும் வெறி. அதன் இலக்கணங்களும் சிகிச்சை முறைகளும் இவ்வத்தியாயத்தில் கூறப்படுவதால் இதற்கு இப்பெயர் ஆயிற்று.

1. ஓஜஸ்—உடலுக்கு வலிமையும் பொலிவையும் அளிக்கவல்ல ஏழு தாதுக்களின் சாரம்.

சுரைக்கு உண்டு. ஆயினும் அவை அனைத்துமே பொதுவாக வெறியூட்டும் தன்மை கொண்டிருப்பதால் 'மத்தியம்' என்ற பெயராலேயே சுரையின் வகைகள் அனைத்தும் இங்கு குறிப்பிடப் படுகின்றன. 6

மற்றும் இந்த சுரை, அமுதம் என்றும் தெய்விகத் தோற்றம் கொண்டு தேவர்களுக்கும் சுரை என்றும் பெயரால் தெய்வத் தன்மை பொருந்திய பித்ருக்களுக்கும் சோமம் என்றும் தோற்றம் கொண்டு அந்தணர்களுக்கும் மிக்க நலம் தருவதாயிற்று. மேலும் இந்த சுரை, அசுவினிதேவர்களின் தொடர்பால் மிக்க தேஜஸ் கொண்டதாகவும், மறைகளைச் சார்ந்த மந்திரத் தோற்றம் கொண்டதாகவும், இந்திரனைச் சார்ந்த வீரியத் தோற்றம் கொண்டதாகவும், சௌத்ராமணி என்றும் பெயர் கொண்ட வேள்வியில் 'சோமம்' என்றும் தோற்றம் கொண்டும் விளங்கும். அத்தகைய இச்சுரை, அச்சம் வருத்தம் விருப்பமின்மை நடுக்கம் முதலியவற்றைப் போக்கி மிக்க வலிமையையும் மன நிறைவையும் மகிழ்ச்சியையும் எல்லையற்ற இன்பத்தையும் மேலும் பல நன்மைகளையும் அளிக்கவல்லதாகும். 7-8

## 3. மதுவைப் பருகும் முறை

தேவர்கள் அசுரர்கள் கந்தர்வர்கள் இயக்கர்கள் இராக்கதர் கள் மனிதர்கள் ஆகிய அனைவருக்கும் இன்பத்தை அளிக்கக் கூடியதாகக் கூறப்படும் இந்த மது முறைப்படியே பருக வேண்டும். 9-10

மது பருகுபவன், முதலில் தன் உடலைத் தூய்மை படுத்திக் கொள்ள வேண்டும். குளியல் முதலிய செய்கைகளால் தூய்மை பெற்றபின் சிறந்த வாசனை உள்ள சந்தனம் போன்ற பூச்சு களைப் பூசிக் கொண்டு பருவத்திற்கேற்ற தூய ஆடைகளை உடுத்தி சிறந்த மலர் மாலைகளையும் அணிகலன்களையும் பூண்டு தேவர்களையும் அந்தணர்களையும் வணங்கி சிறந்த மங்கலப் பொருள்களைத் தொட்டு பருவத்திற்கு ஏற்றவாறு சிறந்த மலர்கள் பரவி கிடக்கும் இடத்தில் மாதர்களுக்கு மகிழ்ச்சிதரும் மணங்கொண்ட புகை சூழ்ந்துத் தலையணைகளுடன்கூடிய நாற்காலி போன்ற இருக்கையிலோ நன்றாகப் பரப்பப்பட்டுள்ள விரிப்புடன் கூடிய கட்டில் போன்ற மென்மையான படுக்கை யிலோ இன்பத்துடன் அமர்ந்து தங்கம் வெள்ளி முதலியவை யாலானதும் இரத்தினங்கள் இழைக்கப்பட்டுள்ளதுமான அழகான பல்வகை வர்ணங்களுடைய பாத்திரத்தில் அல்லது வேறுவகை

யான தூய்மையுள்ள பாத்திரத்தில் மதுவைத் தாங்கிப் பருக வேண்டும். 11—15

அவ்வமயம் அழகும் இளமையும் மதர்ப்பும் கொண்டு பருவத்திற்கு ஏற்ற ஆடை அணிகலன் மலர்மாலை முதலியவற்றை அணிந்து தூய்மையான உடல் கொண்டுள்ள அழகான பெண்களுடன் இருந்து அவர்கள் தீண்டுவதால் மகிழ்ச்சியில் மூழ்கியிருக்கவேண்டும். 16—17

## 4. மதுவிற்கு ஏற்ற துணை உணவுகள்

மதுவகைக்கும் காலநிலைக்கும் ஏற்றவாறு பலவகைப்பழங்கள் உப்புச்சுவையும் மணமுமுள்ள ஊறுகாய் போன்றவைகள் நிலத்திலும் நீரிலும் வாழ்கின்றவையும் வானத்தில் பறக்கின்றவையுமான பலவகை உயிரினங்களின் வறுத்த மாமிசங்கள் சமயற்கலையில் தேர்ந்தவர்களால் அவ்வப்பொழுது தயார் செய்யப்பட்ட பலவகைத்தின்பண்டங்கள் ஆகியவற்றோடு மதுவைப் பருகவேண்டும். முதலில் தேவர்களைத் துதித்து விருப்பமுள்ளவர்களுக்குத் தந்து வழிபாட்டுச் சிறிதளவு மதுவை நிலத்தில் விட்டுப்பிறகு மிகுந்துள்ளதைப் பருகவேண்டும். 18—20

## 5. வாதம் மிகுந்துள்ள உடல்கொண்டவன் மது பருக வேண்டிய முறை

வாத இயல்பு உடையவன் தன் உடலில் எண்ணெய் தேய்த்துக் கொண்டு மேற்பூச்சுகளைப் பூசிக் குளித்து ஆடைகள் அணிந்து புகை போட்டுக் கொள்ளுதல் நறுமணமுள்ள பொருள்களை உடல் மேல்பூசிக் கொள்ளுதல் ஆகியவற்றைச் செய்து கொண்டு எண்ணெய்ப்பசையும் உஷ்ணவீரியமுள்ள உணவை உண்டு பிறகு மதுவை அருந்த வேண்டும். 21

## 6. பித்தம் மிகுந்த உடல்கொண்டவன் மது பருகவேண்டிய முறை

பித்த இயல்பு உடையவன் பலவகையான குளிர்ச்சி பொருந்திய பணிவிடைகளைச் செய்துகொண்டு இனிப்புச் சுவையும் எண்ணெய்ப்பசையும் குளுமைத்தன்மையும் கொண்ட உணவை உண்டு பிறகு மதுவைப்பருகவேண்டும். இவ்வாறு செய்தால் மிக்கநலம் உண்டாகும். எத்தகைய துன்பமும் நேராது. 22

## 7. கபம் மிகுந்துள்ள உடல்கொண்டவன் மதுபருகவேண்டிய முறை

கபம் மிகுந்த உடல் கொண்டவன் வென்னீரில் குளித்துக் கோதுமையாலான உணவுண்டு வறண்ட நிலங்களில் வாழும்

உயிரினங்களின் புலாலில் மிளகு சேர்த்து உண்ட பிறகு மதுவைப் பருக வேண்டும்.

மேற் சொன்ன விதிமுறைகள் யாவும் மிக்க செல்வ முள்ளவர்களுக்கே உரியனவாகும். மற்றவர்கள் தம் நிலைக்கு ஏற்றவாறு தக்கபண்டங்களைச் சேகரித்து உண்டபின் அளவோடு மதுவைப்பருகுதல் நன்மைதரும். 23–24

## 8. உடல் அமைப்புக்கேற்ற மது வகைகள்

வாதம் மிகுந்த உடல் கொண்டவனுக்கு வெல்லத்தாலும் அரிசிமாவினாலும் தயார் செய்யப்பட்ட மது நன்மைதரும். கபம் மிகுந்துள்ளவனுக்குத் தேனாலும் பித்தம் மிகுந்துள்ளவனுக்குத் திராட்சையாலும் தயார் செய்யப்பட்ட மதுவகைகள் நன்மை தரவல்லவை. 25

## 9. மதுவால் நன்மையும் தீமையும் தோன்றக் காரணம்

மது பல கூட்டுப்பொருள்களால் தயார் செய்யப்படுகிறது. எனவே பல சிறந்த தன்மைகளுடன் கூடிய அதனைப்பருகுவதால் சடராக்னி வளர்வது போன்ற பல நன்மைகள் உண்டாகின்றன. ஆயினும் மது, வெறியைத் தூண்டும் தன்மையும் கொண்டுள்ளது. ஆகவே மது நன்மையையும் அளவுக்குமிஞ்சியபொழுது தீமையை யும் விளைவிக்கக்கூடியதாகிறது. மற்றும் மதுவுக்கு ஏற்ற உடல் கொண்டவர்களுக்கு நன்மையையும், ஒத்துக் கொள்ளாதவர் களுக்குத் தீமையையும் தோற்றுவிக்கிறது. 26

## 10. அளவுடன் கூடிய மது அமுதமாகும்

முறையுடன் அளவுடன் உகந்தகாலத்தில் தன் வலிமைக்கு ஏற்றவாறு நன்மை பயக்கவல்ல உணவுடன் பருகப்படும் மது அமுதத்திற்கு ஒப்பான பயனை அளிக்கும். 27

## 11. முறை தவறிப் பருகுவது நஞ்சாகும்

வறண்ட உணவு உட்கொண்டு நாள்தோறும் உடலுழைப் பினால் களைப்படையும் தன்மை கொண்டவன் மதுவகைகளைப் பாகுபாடின்றி கிடைக்கும் நேரத்தில் அளவுக்கு மிஞ்சிப் பருகு வதால் நஞ்சினால் தோன்றுவதற்கொப்பான தீமைகளை அடை வான். 28

## 12. மதுவினால் விளையும் கேடு

பருகிய பிறகு மது தன் பத்துகுணங்களின் சிறப்பினால் [1]ஓஜஸின் பத்துகுணங்களைக் கிளறி மனத்தில் கலக்கத்தைத் தூண்டிவிடுகிறது. 29

## 13. தன்மைகள்

1. இலேசு, 2. உஷ்ணம் 3. விரைவில் செயல்படுதல் 4. நுண்மை 5. புளிப்புச்சுவை, 6. செரியானமடையாமலேயே பரவும் தன்மை 7. விரைவில் பரவுதல் 8. வறட்சித் தன்மை 9. மூட்டுகளை நெகிழச் செய்தல் 10. வேறொன்றுடன் கலக்காமல் தனியாக இருக்கும் தன்மை எனப்பத்துத் தன்மைகள் மதுவிற்கு உண்டு. 30

## 13. அ. ஓஜஸின் தன்மைகள்

1. பளுவாக இருத்தல் 2. குளிர்ச்சி 3. மென்மை 4. மழுமழுப்பு 5. கெட்டியாயிருத்தல் 6. இனிப்பு 7. நிலைபெற்றிருத்தல் 8. தெளிவு 9. பிசுபிசுப்பு 10. எண்ணெய்ப்பசை என்னும் பத்து தன்மைகள் ஓஜஸ் என்பதற்கு உண்டு. 31

## 14. மதுவால் ஓஜஸ் முதலியன கேடுறுதல்

மது, தன் இலேசானதன்மையால் ஓஜஸின் குருத்தன்மையையும், தன் உஷ்ணத் தன்மையால் ஓஜஸின் குளுமைத் தன்மையையும், தன் புளிப்புச் சுவையால் ஓஜஸின் இனிப்புச் சுவையையும், விரைவாகச் செயல்படுவதால் ஓஜஸின் மென்மையையும், விரைவாகப்பரவுவதால் ஓஜஸின் தெளிவையும், தன்வறட்சித்தன்மையால் ஓஜஸின் எண்ணெய்ப்பசையையும், செரியானமடையாமலேயே பரவக் கூடியதாகையால் ஓஜஸின் நிலையான தன்மையையும், நீரில் எண்ணெய் பரவுவதுபோல பரவும் தன்மை கொண்டிருப்பதால் ஓஜஸின் மழுமழுப்பையும், தன் தனித்திருக்கும் தன்மையால் ஓஜஸின் பிசுபிசுப்பையும், தன் நுண்மைத் தன்மையால் ஓஜஸின் அடர்த்தியையும் கெடுக்கும். 32—34

ரஸம் முதலிய தாதுக்களுக்கும் வாதம் முதலிய தோஷங்களுக்கும் மனம் அறிவு புலன்கள் ஆகியவற்றின் வழிகளுக்கும்

1. ஓஜஸ்—உடலுக்கு வலிமையும் பொலிவையும் அளிக்கவல்ல ஏழு தாதுக்களின் சாரம்.

சிறப்பாக ஆன்மா ஓஜஸ் என்பனவற்றிற்கும் இருப்பிடம் இதயமாகும். 35

அளவுக்கு மீறி உட்கொள்ளும் மது உடலிலுள்ள எல்லா தாதுக்களுக்கும் ஸாரமான ஓஜஸைக்கெடுத்துவிடுகிறது. அதனால் ஓஜஸுக்கு இருப்பிடமான இதயமும் அதைச்சார்ந்துள்ள மனம் அறிவு புலன் முதலியவைகளும் கேடடைகின்றன. 36

## 15. மதுவால் தோன்றும் மூவகை வெறிகள்

மதுவைப்பருகியபோது ஓஜஸ் கேடடையாமல் இதயத்தைச் சார்ந்துள்ள அறிவு புலன்கள் போன்றவைகள் தத்தம் செயல்களை இழக்காமல் இருத்தல் முதல் நிலையாகும். சிறிதளவு ஓஜஸ் கேடடைந்து ஏற்படுவது இரண்டாவது நிலை. ஓஜஸ் முற்றிலும் கேடடைவதால் தோன்றுவது மூன்றாவது நிலையாகும். 37

அசிமாவினால் தயாரித்த மதுவில் மூட்டுகளை நெகிழச் செய்தல், நுண்ணிய தன்மை, மற்றொன்றுடன் கலக்காமல் தனியாக இருக்கும் தன்மை என்பன மூன்றும் மிகுதியாகஇல்லாமையால் அது ஓஜஸைக் கெடுப்பதில்லை. 38

மதுவின் தன்மைகள் இதயத்தைச் சூழ்ந்து கொள்ளும். அதனால் ஒருவகை மனப்பூரிப்பு நீர்வேட்கை மனநிறைவு இன்பம் போகம் தூக்கம் ஆகியவைகளும் ராஜஸம் தாமஸம் போன்ற பலவிகாரங்களும் மனம் போனபடி மிதமின்றி மதுவைப் பருகுபவனைப் பற்றிக்கொள்கின்றன. இது கள்வெறி எனப்படுகிறது. இயற்கையாக ராஜஸகுணம் மிகுந்துள்ளவனில் ராஜஸ குணத்தையும், இயற்கையாகத் தாமதகுணம்மிகுந்துள்ளவனிடத்தில் தாமஸ குணத்தையும் மது வளர்க்கும். 39-41

## 16. முதல் நிலை மதுவெறி

மது மகிழ்ச்சியையும் மனநிறைவையும் வளர்க்கும். உணவு குடிநீர் வகை இவற்றின் தன்மைகளைப்பற்றிய அறிவு தெளிவாக இருக்கும். இசைக்கருவிகளை இசைத்தல் வாயால் பாடுவது சிரிப்பது பலவகைக் கதைகளைக் கூறுவது உரையாடலில் ஈடுபட்டிருப்பது போன்ற செயல்களில் ஊக்கம் மிகும். இந்த நிலையில் அறிவும் நினைவாற்றலும் கெடுவதில்லை. புலன்களும் தம் செயல்களை இழப்பதில்லை. மற்றும் இந்நிலை மதுவெறி கொண்டவன் இன்பத்துடன் தூங்கி நேரத்துடன்

விழித்துக் கொள்வான். இந்த இலக்கணங்கள் மதுவைப் பருகிய போது முதல் நிலை வெறியில் தோன்றுபவையாகும். 42–43

### 17. நடுநிலை மது வெறி

மதுவெறி நடுநிலையில் பருகியவனின் நினைவாற்றல் சிறிதுநேரம் தெளிவாக இருக்கும். சிறிது நேரம் தெளிவற்றிருக்கும். சில நேரங்களில் பேச்சு தெளிவாகவும் சிலவேளைகளில் தடைப்பட்டும் தெளிவற்றும் இருக்கும். சில சமயங்களில் பேச்சு நேராகவும் சிலசமயம் தட்டுத்தடுமாறியும் இருக்கும். சில சமயங்களில் பொருத்தமாகவும் சில சமயம் பொருத்தமில்லாமலுமிருக்கும். எதிரிடையான (விபரீதமான) பொருள் கொண்டதாகவுமிருக்கும். இந்நிலையில் உள்ளவனுக்குத் தள்ளாடுதல் தலைசுற்றல் ஏற்படும். உட்கார்வது நீர் பருகுவது உணவு உண்பது கதை சொல்வது ஆகிய இவற்றில் நிலை கொள்ளாதிருப்பான். இந்த இலக்கணங்களைக் கொண்டது நடுநிலைவெறியாகும். 44–45

### 18. முற்றிய மதுவெறி

நடுநிலையைத் தாண்டி முற்றிய நிலையை அடைவதற்கு இடைநிலையிலுள்ள மதுவெறி கொண்டு இயற்கையாக ரஜோ குணம் அல்லது தமோகுணம் மிகுந்துள்ளவன் தவறான செயல்களில் தான் ஈடுபடுவான். அறிவாற்றல் குறைந்துள்ள மனிதனாயினும் அச்சம் தருவதும் அழிவை விளைவிக்கக் கூடியதுமான வழியைப் பின்பற்ற விரும்பான் அல்லவா! எனவே அறிவுள்ளவன் இந்த மூன்றாம் நிலை மதுவெறியை அடையலாகாது. 46–47

### 19. முற்றிய மூன்றாம் நிலை மதுவெறியின் இலக்கணம் :

முற்றிய மூன்றாம் நிலை மதுவெறி கொண்டவன் வெட்டி வீழ்த்தப்பட்ட மரம் போன்று செயலற்று நினைவிழந்து திடீரென்று கீழேவிழுவான். மதமும் மோகமும் சூழ்ந்த நிலையில் அவன் உயிரோடு இருந்தாலும் இறந்தவனைப் போல காணப்படுவான்.

அவன் எத்தகைய நல்ல பொருளையும், அன்புள்ள நண்பர்களையும் உணர்ந்து கொள்ளமாட்டான். மதுவை எதற்காக அருந்துகிறானோ அந்த இன்பத்தையும் உணரமாட்டான். செய்யத்தக்கது செய்யத் தகாதது தனக்கு நன்மை பயப்பது கேடு விளைவிப்பது ஆகியவற்றைப் பகுத்து அறியமாட்டான்.

இத்தகைய இகழத்தக்க முற்றியவெறி நிலையை அறிவாளி அடைய விரும்புவனோ? (அறிவுள்ளவன் மதுவை இத்தகைய வெறியூட்டுமளவிற்குப் பருகமாட்டான் என்பதாம்) இந்நிலையில் உள்ளவன் உயிரினங்கள் அனைத்திற்கும் துன்பத்தை விளைவிப்பான். மக்கள் அனைவராலும் இகழப்படுவான். மேலும் இத்தகைய மதுவெறி வருங்காலத்தில் மிக்க துன்பத்தைத் தரக் கூடிய மதாத்யயம் என்னும் நோயையும் தோற்றுவிக்கும். 48–51

எனவே, இம்மையிலும் மறுமையிலும் நற்பயன்களை அளிக்க வல்ல செயல்கள் அனைத்தும் மனத்தைக் கட்டுப்படுத்துவதில் தான் அடங்கி உள்ளன. 52

கடுமையான புயற்காற்றினால் தாக்கப்படும் ஆற்றங்கரை மரத்தைப்போல மதுபருகும் மனிதன் மிக்க மனத்தாக்குதலை அடைவான். 53

தமோகுணமும், ரஜோகுணமும் கொண்ட அறிவிலி கொடிய தீமைகளை விளைவித்துக் கடுமையான நோய்களைத் தோற்றுவிக்கக்கூடிய மதுவை இன்பம் பயக்கவல்லதென்று கருதுகிறான். 54

அறிவையும் நுண்ணறிவையும் இழக்கச் செய்வதாகிய சாத்விக குணங்கள் அற்ற மதுவைப் பருக அவா கொண்டவன் இம்மை மறுமைகளுக்கு வெகு தூரம் விலகியிருப்பவன் ஆகிறான். 55

## 20. மதுவைப் பருகுவதால் தோன்றும் தீமைகள்

மயக்கம் அச்சம் வருத்தம் சினம் அகால மரணம் ஆகியவை மதுவால் தோன்றும். பைத்தியம் நினைவிழத்தல் கால்கைவலி [1]அபதானகம் என்னும் மனநோய்களும் மதுவைப்பருகுவதால் தோன்றக்கூடும். 56

நினைவாற்றலை இழக்கச் செய்யும் தன்மை ஒன்றே மதுவெறியால் தோன்றக் கூடிய தீங்குகள் அனைத்திற்கும் வித்தாகும். அத்தகைய மதுவின் தீமைகளை அறிந்த அறிஞர்கள் அதனை இகழ்கின்றனர். (அறிஞர்கள் தாமும் மதுவைப்பருகுவதில்லை. பெருமுயற்சி செய்து பிறரையும் குடிக்கவிடுவதில்லை). 57

1. அபதானகம்–உடலுறுப்புகளில் மிக்க வலியைத்தோற்றுவித்து கூக்குரலிட்டுக்கொண்டு நினைவிழந்து கீழே விழச்செய்யும் நோய்.

மேற்கூறிய தீமைகளனைத்தும் பருகத்தகாத மதுவை மித மிஞ்சிப் பருகுவதால் தோன்றும். உண்மையில் மதுவும் உணவுப் பண்டங்களைப் போன்றதே. மிதமிஞ்சி அல்லது முறைதவறி உண்ட உணவும் தீமையே விளைவிக்கும். அதைப்போல முறை தவறி பருகிய மதுவும் தீமையையும் நோயையும்தோற்றுவிக்கும். முறையாக அளவுடன் உண்ட மது அமுதம் போன்றதாம். 58–59

மக்கள் உயிரைக்காப்பது உணவு. ஆனால் அதுவே அளவுக்கு மிஞ்சினால் கேடுவிளைவிக்கிறது. நஞ்சு உயிரைப் போக்குவதாயினும் நிலைமை அறிந்து தக்க அளவில் பயன் படுத்தினால் உடலைவளர்க்கும் ரஸாயனமாகும். (எள்ளளவு நஞ்சை உட்கொள்ளப்பழகினால் அது ரஸாயனமாகி உடலை வளர்க்கும்.) 60

## 21. முறையுடன் மதுபருகுவதால் நன்மை

முறையாக அளவறிந்து பருகிய மது ஊக்கம், வலிமை, மகிழ்ச்சி, உடல்செழிப்பு, உடல் நலம், விந்துவளர்ச்சி ஆகிய வற்றை முதல் வெறிநிலையிலேயே விரைவாகத் தோற்றுவிக்கும். (ஏனைய பொருள்கள் செரிமானமடையும் போது முன்கூறிய நன்மைகளைத் தோற்றுவிக்கும். மது செரிமானமடைவதற்கு முன்னதாகவே முன்கூறப்பட்ட நன்மைகளைத் தோற்றுவிக்கும் என்பதாம்.) 61

## 22. மதுவின் தன்மைகள்

முறையாகப் பருகிய மது சுவையூட்டும். சடராக்னியைத் தூண்டும். இதயத்திற்கு வலிமைதந்து இதந்தரும். குரலையும் உடல்நிறத்தையும் செம்மையாக்கும். இன்பத்தைவளர்க்கும். அச்சம் வருத்தம் களைப்பு ஆகியவற்றைப் போக்கும்.

தூக்கம் வராதவனுக்குத் தூக்கத்தையுண்டாக்கும். ஊமை போலிருப்பவனை நன்றாக உரையாடச் செய்யும். வெகுநேரம் தூங்குபவனை நேரத்தோடு விழித்துக் கொள்ளச் செய்யும். மலமும் சிறுநீரும் தடைப்பட்டிருந்தால் அவற்றை வெளி யேற்றும், உறவினர்களின் பிரிவு அல்லது சிறைப்படுதல் முதலிய வற்றாலும் உடலுழைப்பினாலும் தோன்றும் வருத்தத்தை உணராதபடிசெய்து மனத்திற்கு ஊக்கத்தைத் தரும். முறையற்ற

வகையில் கள்ளைக் குடிப்பதால் தோன்றிய நோய்களுக்கு முறை யாகப்பருகும் மதுவே தக்க மருந்தாகும். பருகும்போது இனிய சங்கீதம் முதலிய புலன்களால் நுகரத்தக்க விஷயங் களில் விருப்பம் தோன்றினால் மதுவெறி இருக்கும்வரை அவ் விஷயங்களிலேயே ஈடுபாடு உண்டாகும். வயது முதிர்ந்தவர் களுக்கும் மது மிக்க மனமகிழ்ச்சியைத் தோற்றுவிக்கும். 62–67

## 23. மது பருகத்தக்க முறை விளக்கம்

உணவு குடிநீர் வயது நோய் வலிமை காலம் என்பன ஒவ்வொன்றும் மூன்று வகைப்பட்டிருக்கும். மூவகைப்பட்ட அவ்வாறினையும், சத்துவம் ராஜஸம் தாமஸம் என்னும் மூன்று குணங்களால் மூவகைப்பட்ட மனத்தையும் நன்கு கவனித்துத் தக்க மதுவைத் தேர்ந்து அளவறிந்து பருகவேண்டும்.

1. உணவு—வாதபித்தகபங்களை வளர்க்கும் தன்மையால் மூன்று வகைப்படும்.
2. குடிநீரும்—வாதபித்தகபங்களை வளர்க்கும் தன்மையால் மூன்றுவகைப்படும்.
3. வயது—குழந்தைப்பருவம் இளமை முதுமை என மூவகைப்படும்.
4. நோய்—மென்மை நடுத்தரம் கடுமை என்னும் தன்மை யால் மூவகைப்படும்.
5. வலிமை—உயர்ந்தது நடுத்தரம் மிக்ககுறைந்தது என மூன்றுவகைப்படும்.
6. காலம்—குளிர்காலம் கோடைக்காலம் மழைக்காலம் என மூவகைப்படும்.
7. தோஷம்—வாதம் பித்தம் கபம் என்பவை மூன்று.
8. குணம்—ஸாத்விகம்—ராஜஸம்—தாமஸம் என மூவகைப் படும்.

இவ்வாறு மூவகைப்பட்ட உணவு முதலியவற்றிற்கு ஏற்ற மதுவை அறிந்து தேர்ந்தெடுத்துப் பயன் படுத்துவதே யுக்தி யாகும். 68–69

## 24. யுக்தியைப் பின்பற்றி மது பருகுவதன் பயன்

யுக்தியுடன் மதுவைப் பருகுபவன் கள் வெறியால் தோன்றும் தீமைகளை அடையாமல் ஸத்துவகுணம்மேலிட அறம்

பொருள் இன்பங்களுக்குக் கேடில்லாத நிலையைப் பெறு வான். 70

மதுவைப் பருகுவதால் தோன்றிய முதல்நிலை வெறியில் மனம் ஊக்கம் பெறும். இரண்டாவது நிலையில் மனம் தெளி வற்றநிலையில் இருக்கும். அந் நிலையிலிருந்து முற்றிய வெறி நிலையடைவதற்கு முன் இடைநிலையில் மனம் முழுமை யாக ஒன்றையும் அறியாத நிலைபெறும். முற்றிய மூன்றாம் வெறிநிலையில் அதைவிட மனத்தில் எத்தகைய குணமும் தோன்றாதநிலையுண்டாகும். 71

மழை பெய்வதால் பயிர்கள் முளைப்பது போல் மதுவால் தோன்றிய முதல் வெறியில் மனத்தில் ஸத்துவகுணம் நல்ல தெளிவு பெறுகிறது. இரண்டாவது மூன்றாவது நிலைகளில் தங்கம் முதலிய உலோகங்களின் உயர்ந்தது நடுத்தரமானது தரத்தில் மிக்க தாழ்ந்தது என்ற மூன்று நிலைகளையும் நெருப்பு தெரியப்படுத்துவது போல மது மனிதனின் உயர்ந்த நடுத்தர கீழ்த்தரமான மூன்று தரங்களையும் தெரியப்படுத்துகிறது. 72—73

## 25. ஸத்துவகுணம் மேலிட்டிருக்க மது பருகத்தக்க சூழ்நிலை

நறுமணமலர்மாலைகள் அணிந்து ஆடல்பாடல்களில் ஈடு பட்டிருக்கும்போது பருகப்பட்டது நல்லமுறையில் தயார் செய்த மது, கசடற்றது, சுவையுள்ள உணவு பருகும்நீர் முதலியவற்று டன் கூடி தூய்மை பெற்றது எப்பொழுதும் மனத்திற்கு இனிய கதை உரையாடல் முதலியவற்றில் ஈடுபாட்டையுண் டாக்குவது, இன்பத்துடன் மகிழ்ந்திருக்கும் நிலையில் பருகப் பட்டது, பருகிய பின் இன்பத்தை மிகுதியாக்கும் முதல் வெறி நிலையைஅடைவிப்பது, மனத்திற்குமகிழ்ச்சியையும் விருப்பத்தை யும் வளர்ப்பது, வெறிநிலையில் மயக்கம் முதலியவற்றைத் தோற்றுவிக்காதது என இத்தகையதன்மைகளைக் கொண்ட மது ஸத்துவ குணத்தை மிகுதிப்படுத்தும் என அறிக. 74—76

## 26. ராஜஸ குணத்தை வளர்க்கும் சூழ்நிலை

மனத்தில் நல்ல எண்ணங்களையும் தீயஎண்ணங்களையும் வளர்க்கும் கதைகளை பேசச்செய்வது, சிறிது தெளிவும் சிறிது தெளிவற்றதுமான உரையாடலைச் செய்விப்பது சிறிது பொருந் தக்கூடிய மற்றும் சிறிது பொருத்தமல்லாத முறையில் பேசச் செய்வது வெறிநிலை முடிவில் மோகம் முதலியவற்றால்

வருத்தத்தைத் தருவது முறைப்படி தயார் செய்யப்படாதது என இத்தன்மைகளைக் கொண்ட மது மனத்தில் ரஜோ குணத்தை வளர்க்கும். 77

## 27. தாமஸகுணத்தை வளர்க்கும் சூழ்நிலை

மகிழ்ச்சியையும் விருப்பத்தையும் தோற்றுவிக்காமல் மனத்தை மிகவும் கலங்கச் செய்யும் வகையில் உளறும்படிச் செய்வதும், உணவு குடிநீர் வகைகளில் விருப்பத்தைத் தோற்றுவிக்காததும் வெறிநிலையின் முடிவில் மோகத்தையும் சினத்தையும் துக்கத்தையும் தோற்றுவிப்பதுமான மது தாமஸத்தை வளர்ப்பது என உணர்க. 78

மது பருகுபவர்களிடையே தான் கலந்து கொள்ள விரும்பினால் முன்கூறிய இலக்கணங்களால் ஸத்துவகுணம்மிகுந்துள்ளவர்களை அறிந்து அவர்களுடன் சேரவேண்டும். ராஜஸ தாமஸ குணங்கள் மிகுந்துள்ளவர்களை அறவே விலக்க வேண்டும். அத்தீயவர்களுடன் சேர்ந்தால் அவர்களின் தொடர்பினால் அவர்களைப்போலவே மிகுதியாக மதுவை உட்கொண்டு இரண்டாவது மூன்றாவது வெறிநிலைகளால் தோன்றும் தீமைகளுக்கு இலக்காக நேரும். 79

## 28. மதுபருகச் சேர்த்துக்கொள்ளத் தக்கவர்

பிறருக்கு இன்பம் விளைவிக்கும் தன்மை கொண்டவர் தகுந்த நல்வார்த்தைகளைப் பேசுபவர் காண்பதற்கு இனிய தோற்றம் கொண்டவர் கற்றோர்களாலும் நற்பண்பாளர்களாலும் விரும்பப்படுபவர், சாத்திர நூல்கள் வகுத்தவழிதவறாதவர் குற்றமற்றவர் சாத்திரப்பொருள்களை உரைத்தால் அவற்றை நன்கு உணர்ந்து ஏற்றுக் கொள்பவர் மிக்க நட்பு கொண்டு ஒருவருக்கொருவர் நன்மை பயக்கக்கூடியவகையில் பழகுபவர், மதுவால் தோன்றிய மனத்தெளிவைத் தம் மகிழ்ச்சியாலும் மென்மையான தன்மையாலும் மேலும் வளர்க்கக்கூடியவர் நண்பர்களைக் காண்பதே நல்விருந்தென மகிழ்பவர் என இத்தன்மைகளைக் கொண்டவர்கள் மதுவைப்பருகும் போதுகூட இணைந்திருந்தால் இன்பத்தையே மிகச்செய்வார்கள். (அத்தகைய நண்பர்கள் மதுவை மிகுதியாகப்பருகி அதனால் தோன்றும் தீமைகளுக்கு இலக்காகாமல் காப்பர் என்பதாம்.) 80–82

## 29. நல்ல சூழ்நிலையில் மது அருந்துவதன் பயன்

மனத்திற்கு உகந்த தோற்றம் மணம் சுவை தொடு உணர்ச்சி ஒலி என்பவற்றில் ஈடுபடும் நல்லதன்மைகளைக்

கொண்ட நண்பர்களுடன் சேர்ந்து மது அருந்துபவர்கள் புண்ணியம் செய்த மகான்களுக்குச் சமமான இன்பத்தை அடைகிறார்கள். 83

## 30. மது பருக மனத்திற்கு உகந்த நிலை

ஐம்புலன்களுக்கு உரிய ஒலி தொடுவுணர்ச்சி உருவம் சுவை மணம் என்பவற்றில் சிறப்பாக இன்பம் தரக்கூடிய வகையில் உள்ள மனத்திற்குஉகந்த இடத்தில் தகுந்தவர்களுடன்கூடி தக்க நேரத்தில் மனமகிழ்ச்சியுடன் மதுவைப் பருகவேண்டும். 84

## 31. மதுவால் நேரம்கடந்து வெறி கொள்பவன்

உறுதியான உடலும் உள்ளமும் படைத்தவன் உணவு உண்டபின் மது அருந்துபவன் மது அருந்தும் பழக்கமுள்ள குடும்பத்தில் பிறந்தவன் பல மதுவகைகளை அருந்தும் பழக்கம் கொண்டவன் ஆகியவர்களை மதுவெறியால் தோன்றும் தீமைகள் விரைவில் தாக்குவதில்லை. (நஞ்சுகொண்ட உயிரினங்களுக்கு அந்த நஞ்சால் தீமை விளையாததுபோல மது பழக்கப்பட்டவர்களுக்கு தீமைகளை விளைவிப்பதில்லை என்பதாம்). 85

## 32. மது அருந்தத்தகாதவர்கள்

பசி நாவறட்சிகளால் துன்புறுகிறவர் வலிமையற்றவர் வாத பித்த இயற்கை இயல்பு உடையவர் வறட்சித் தன்மை கொண்ட பொருளை உண்பவர் குறைந்த அளவுஉணவுஉண்பவர் தேவைக்கு மிகுதியாக உண்பவர் உடலில் வாதம் முதலிய தோஷங்கள் தடைப்பட்டுள்ளவர் தளர்வடைந்தமனநிலை உடையவர் சினம் மிகுந்துள்ளவர் உடலுக்கு மது ஒத்துக் கொள்ளாதவர் இளைத்த உடல் கொண்டவர் களைப்படைந்தவர் மிக்கமதுபருகியதால் உடல் வலிமை குறைந்தவர்கள் என இத்தகையவர்கள் சிறிதளவு மது அருந்தினாலும் விரைவில் வெறிக்கு இலக்காகின்றனர். 86–87

## 33. மது அருந்துவதால் நோய்கள் தோன்றுதல்

அக்னிவேச! இனி மதுவெறியால் நோய்கள் தோன்றக் காரணம் வாதம் முதலிய தோஷங்கள் மதுவெறியால் சீற்ற முற்றுத் தோற்றுவிக்கும் நோய்களின் இலக்கணம் அந்நோய்களுக்குச் சிகிச்சை முதலியவற்றை விளக்குகிறேன், கேள். 88

### 34. வாதவெறி நோய்க்குக் காரணம்

புணர்ச்சி துக்கம் அச்சம் மிக்க சுமையைத் தாங்குதல் வெகுதூரம் நடத்தல் முதலிய செயல்களால் மிகவும் இளைத்தவர்களும் வறட்சித் தன்மை கொண்ட உணவை உண்பவரும் உணவின் அளவைக் குறைத்து உண்டவரும் பட்டினிகிடப்பவரும் வறட்சித் தன்மை கொண்ட பழமையான மதுவைப்பருகி இரவில் தூக்கம் கொள்ளாமல் இருந்தால் அவர்களுக்கு வாதம் சீற்றமுற்று மதுவெறியைத் தோற்றுவிக்கும். (மதுவெறி நோயானது மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றுவதாயினும் அம்மூன்றிலும் இங்கு வாதம் அதிக அளவில் சீற்றமுற்று நோயைத் தோற்றுவிக்கும் என்று உணர்க). 89—90

### 35. வாதவெறியின் இலக்கணம்

விக்கல் இழுப்பு தலை நடுக்கம் விலாவலி இரவில் தூக்கம் வராமை அதிக அளவில் உளறுதல் எனும் இந்த இலக்கணங்கள் வாதவெறியால் துன்புறுபவனிடம் காணப்படும். 91

### 36, பித்தமதுவெறிக்குக் காரணம்

புளிப்புச்சுவையும் உஷ்ணவீரியமும் தீக்ஷ்ணகுணமும் கொண்ட உணவை உண்டவன் தீக்ஷ்ணகுணமும் உஷ்ணவீரியமும் புளிப்புச் சுவையும் உள்ள மதுவைப்பருகினாலும், மிக்க சினம் கொண்டுள்ளபோது மதுவைப்பருகினாலும் நெருப்பினருகில் இருப்பதால் அல்லது வெயிலால் உடல் சூடுகொண்டுள்ளபோது மதுவை மிகுதியாகப் பருகினாலும் அத்தகையவனுக்குப் பித்தம் சீற்றமுறுவதால் வெறி நோய் தோன்றும். பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் மதுவெறியானது இயற்கையாக வாதம் மிகுந்துள்ளவனுக்குத் தோன்றினால் உடனே சிகிச்சை செய்வதால் தணியும். சிகிச்சைபுரிவதற்குக் காலம் கடத்தினால் விரைவில் அது கொன்றுவிடும். 92—93

### 37. பித்த மதுவெறியின் இலக்கணம்

பித்தமதுவெறிகொண்டவனின் உடல் மஞ்சள் நிறம் கொண்டிருக்கும். நீர்வேட்கை எரிச்சல் காய்ச்சல் வியர்வை மூர்ச்சை கழிச்சல் தலைச்சுற்றல் முதலியவை தோன்றும். உடல் சக்கரத்தில் சுழல்வதுபோலத் தோன்றும். 94

### 38. கபமதுவெறிக்குக் காரணம்

இனிப்புச்சுவையும் எண்ணெய்ப்பசையும் குருத்தன்மையும் கொண்ட உணவை உட்கொண்டவனும், உடலுழைப்பு செய்யும்

பழக்கமற்றவனும் பகலில் உறங்குபவனும் உழைப்பின்றி கார்ந்திருக்கும் பழக்கம் கொண்டவனும் புதியதும் இனிப்புச் சுவை கொண்டதுமான மதுவையோ வெல்லத்தாலும் அரிசி மாவினாலும் தயார் செய்யப்பட்ட மதுவையோ மிகுதியாகப் பருகினால் கபம் சீற்றமுற்று மதுவெறி நோயைத் தோற்று விக்கும். 95–96

## 39. கபமதுவெறியின் இலக்கணம்

வாந்தி சுவையின்மை ஒக்காளம் மயக்கம் உடலின்மேல் ஈரத்துணி போர்த்தப்பட்டது போன்ற உணர்ச்சி உடல் பளு வாகத் தோன்றுதல் எனும் இலக்கணங்களால் கபத்தினால் தோன்றிய மதுவெறி நோயை அறிந்து கொள்க. 97

## 40. நஞ்சும் மதுவும் ஒன்றே

மூன்று தோஷங்களையும் (ஸந்நிபாதம்) சீற்றம் அடையச் செய்யும் குணம் விஷத்திலும் மதுவிலும் காணப்படுகிறது. ஆனால் விஷத்திலுள்ள குணங்களின் அத்தனை கடுமை மதுவில் இல்லை. இதுதான் நஞ்சுக்கும் மதுவுக்கும் உள்ளவேறுபாடு. மற்றவை இரண்டிற்கும் ஒன்றே. 98

சில வகை நஞ்சுகள் விரைவில் மரணத்தையும் சில நஞ்சுகள் நோயையும் தோற்றுவிக்கின்றன. அதேபோல மதுவினால் ஏற் படுகின்ற மூன்றாம்நிலை வெறி, முடிவில் மரணத்தைத் தோற்று விக்கிறது; சில சமயங்களில் நோய்களைத் தோற்றுவிக்கிறது. 99

## 41. மதுவெறிநோய்கள் அனைத்தும் மூன்று தோஷங்களைச் சார்ந்தவையே

மதுவெறிநோய்கள் அனைத்திலும் மூன்று தோஷங்களின் இலக்கணங்களையே காணலாம். தனித்தனியாக வாதம் முதலிய தோஷங்களைக் குறித்துக் குறிப்பிடப்பட்ட வெறி நோய்கள் அந்தந்த தோஷங்கள் மிகுந்த அளவில் சீற்றமடைவ தால் தோன்றுகின்றன. 100

## 42. மதுவெறி நோயின் பொது இலக்கணம்

உடலில் மிக்க வேதனை மூர்ச்சை இதயத்தில் குத்தல்வலி சுவை அறியாமை மிக்க நாவறட்சி காய்ச்சல் குளிர் காய்ச்சல் அல்லது உஷ்ணக் காய்ச்சல் தலையிலும் விலாப்புறங்களிலும் எலும்பு மூட்டுக்களிலும் மின்னல் போன்ற துடிப்பு வலி

கடுமையான கொட்டாவி உடலில் ஏதேனும் ஒரு பகுதியில் துடிப்பு உடலின் ஒரு பகுதியில் நடுக்கம் களைப்பு மார்பு கட்டுப் பட்டிருப்பது போன்று இருத்தல் இருமல் விக்கல் இழுப்பு தூக்கம் வராமை உடல் முழுவதும் நடுக்கம் காது கண் முகம் இவற்றைச் சார்ந்த நோய்கள் தோன்றுதல் [1]திரிகம் என்னும் இடத்தில் வலி வாந்தி கழிச்சல் மார்புபடபடத்தல் ஆகியவை வாதம் பித்தம் கபம் எனும் மூன்றும் சீற்றமுறுவதால் தோன்று வனவாகும். மற்றும் தலைசுற்றல் உளறல் இல்லாத உருவங் களைக் கற்பனை செய்து கொண்டு காண்பது புல் கொடி இலை தூசி இவற்றை உடல் முழுவதும் பூசிக்கொள்ளுதல் பறவை களால் அச்சுறுத்தப்படுவதாக நினைத்து பயம் கொள்ளுதல் குழப்பமான தீயகனவுகளைக் காண்பது ஆகிய இலக்கணங்கள் யாவும் மதுவெறிநோயில் காணப்படும். 101–106

## 43. மதுவெறி நோய்க்குச் சுருக்கமான சிகிச்சை

மதுவெறி நோய்கள் அனைத்தும் மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் ஏற்படுகின்றன. ஆயினும் அம் மூன்றில் மிகுந் துள்ளதோஷத்திற்கு முதலில் சிகிச்சை செய்யவேண்டும். 107

மதுவெறிநோயில் பித்தமும் வாதமும் சம அளவில் சீற்ற மடைந்திருந்தால் முதலில் கபத்திற்கு உரிய உடற்பகுதியில் தோன்றிய தோஷத்திற்குச் சிகிச்சை செய்து பிறகு பித்தத் திற்கும் வாதத்திற்கும் சிகிச்சை செய்ய வேண்டும். 108

முறை தவறியோ அளவுக்குமிஞ்சியோ மிகக் குறைந்த அளவிலோ மதுவைப்பருகுவதால் வெறிநோய் தோன்றுமானால் நோய்க்குக் காரணமான மதுவகையையே முறையாகத் தக்க அளவில் பருகச் செய்தால் நோய் தணியும். 109

மதுவெறிநோயில் மதுவில் உள்ள ஆமதோஷம் சீரணமான பிறகு நோயாளிக்கு உணவு உண்ண விருப்பம் தோன்றி உடல் இலேசாக இருக்குமாயின் அப்பொழுது நன்மை பயக்கவல்ல அவனுக்குப்பழக்கமான குளுமைத் தன்மை கொண்ட மதுவில் ஸௌவர்ச்சல உப்பு பிடம் என்னும் உப்பு இந்துப்பு எலுமிச்சம் பழச்சாறு துரிஞ்சிப்பழச்சாறு இஞ்சிச்சாறு நீர் ஆகியவற்றைச் சேர்த்து அளவு முறைகளை அறிந்து பருகச் செய்தால் நோய் தணியும்.

1. திரிகம்—முதுகுத் தண்டின் அடிப்பகுதி.

)ங்கு கூறப்பட்டுள்ள பொருளின் விளக்கம் கீழ்வருமாறு: கண்கள் சுற்றுவதும் மனம் விகாரமடைவதுமான துன்பங்கள் தோன்றுவதற்கு முன்பே மதுபருகுவதை நிறுத்தவேண்டும். இது தான் சமயோகம் அதாவது பருகும் முறை எனப்படும். மனக் கலக்கம் தோன்றத் துவங்கியதும் விடாமல் மேலும் பருகுவது மிகையாகப் பருகுவதாகும். மிகக் குறைவாக மதுவைப்பருகு தல் குறைபடப்பருகுதல் ஆகும். காலம் இடம் தோஷம் தன் உடல் இயற்கை முதலியவற்றிற்கு மாறாகப் பருகுதல் முறை தவறிப்பருகுதலாகும். சமயோகத்தால் மதுவிற்குக் கூறப்பட்ட நன்மைகள் யாவும் தோன்றும். குறைவாகவோ, முறை தவறியோ மிகுதியாகவோ மதுவைப் பருகினால் வெறிநோய் தோன்றும். அந்தநோய் எவ்வகை மதுவால் தோன்றியதோ அவ்வகை மதுவை முறையாக அளவுடன் சமயோகமாகப் பருகு வதால் நோய் தணியும். மற்றும் அந்த மது செரியானமாகும் நிலையில் அம்மதுவில் சௌவர்ச்சல உப்பு முதலியவற்றைக் கலந்து பருகவேண்டும். அதாவது சமயோகத்தில் பயன் படுத்தப் பட்ட மது நோயைத் தணிக்கும். நஞ்சைப்போல் தீக்ஷ்ணம் முதலிய தன்மைகளைக் கொண்ட மது, சமயோகத்தால் அம் மதுவால் தோன்றிய துன்பங்களைப் போக்கும். வேறு மருந்து பயன்தராது என்று உணர்க. 110—111

## 44. மது வெறி நோய்க்கு மதுவைப் பயன்படுத்துவதால் தோன்றும் நன்மை

தீக்ஷ்ணமும் உஷ்ணத்தன்மையும் புளிப்புச்சுவையும்கொண்டு எரிச்சலைத் தோற்றுவிக்கும் தன்மையும் கொண்ட மதுவை மிகுதியாகப் பருகுவதால் குடலில் உள்ள உணவுரசம் [1]விதக்தம் என்னும் நிலையடைந்து [2]க்ஷாரமாக மாறிவிடும். அதனால் உடலுக்குள் மிக்க அழற்சியும் காய்ச்சலும் நாவறட்சியும் மூர்ச்சை யும் மனக்கலக்கமும் வெறியும் தோன்றும். அந்த துன்பங்கள் தணிய விரைவில் மதுவையே பருகச் செய்ய வேண்டும். மது புளிப்புச் சுவையை முதன்மையாகக் கொண்டதாகையால் க்ஷாரத் தன்மை கொண்ட உணவின் ரஸத்தை இனிப்புச் சுவை கொண்ட தாகச் செய்துவிடும். க்ஷாரம் புளிப்புச்சுவையுடன் சேர்ந்தால் இனிப்புச் சுவைகொள்ளும். (மது இயற்கையாகவே புளிப்புத் தன்மைகொண்டது. அதற்கு இனிப்பு துவர்ப்பு கசப்பு கார்ப்புச்சுவைகள் துணைச்சுவைகளாகும். மதுவில் முன்கூறிய

1. விதக்தம்—பித்தத்தினால் தோன்றும் அசீரணம்.
2. க்ஷாரம்—எரிச்சலை உண்டு பண்ணக்கூடியபொருள்.

இலகு தீக்ஷ்ணம் முதலிய பத்துகுணங்களும் இருக்கின்றன. இவ்வாறுநான்கு துணைச்சுவைகளும் பத்து தன்மைகளும் சேர்ந்து பதினான்கு தன்மைகளைக் கொண்டதாகிப் புளிப்புச் சுவையுடன் கூடிய மதுவில் புளிப்புத்தன்மை மிகச் சிறப்பாக இருக்கும். ஆகையால் மது வெறியால் உணவின் ரஸம் க்ஷாரமாக மாறியதை சமயோகத்தால் பருகிய மது இனிப்புச்சுவை கொண்டதாகச் செய்து தோஷங்களனைத்தையும் தணியச் செய்யும் என்பதாம்). 112–116

மதுபானத்தினால் சீற்றமடைந்த தோஷங்களால் உடலில் உள்ள ஸ்ரோதஸ்கள் அடைப்பட்டபொழுது வாயு தனக்குப் பரவும் வழியில்லாமற் போனதால் தலையிலும் எலும்பு மூட்டுகளிலும் பொறுக்க முடியாத வலியை ஏற்படுத்தும். இந்நிலையில் தோஷங்களை இளகச்செய்வதற்கு மற்ற புளிப்புச்சுவையுள்ள பொருள்கள் இருப்பினும் விரைவில் பரவும் தன்மையும் தீக்ஷ்ணமும் உள்ள மதுவையே சுரோதஸ்களைத், தடுத்த தோஷங்களைக் கரைத்து வெளியேற்றுவதற்காகப் பயன்படுத்த வேண்டும். 117–118

## 45. முறையாகப் பருகப்பட்ட மது நோய் தீர்க்கும் முறை

முறையுடன் பருகிய மது உடலிலுள்ள துவாரங்களின் தடையை நீக்குகிறது. வாயுவை நேராகச் செலுத்துகிறது. உணவில் சுவையூட்டுகிறது. ஜடராக்னியைத் தூண்டிவிடுகிறது. பழக்கத்தால் பருகப்படும் மது உடலின் இயற்கை நிலைக்கு அனுகூலமாகிவிடுகிறது. அதனால் துன்பங்கள் தோன்றுவதில்லை. 119

மேலும் அதனால் உடலின் துவாரங்களில் தடை நீங்கி வாயு நேராக சஞ்சரிப்பதால் தலைபோன்ற உறுப்புகளில் தோன்றும் வேதனைகளும் மற்றதுன்பங்களும் நீங்கிவிடுகின்றன. மது வெறிநோயும் தணிவடையும். 120

## 46. வாதம் சீற்றமடைவதால் தோன்றும் மதுவெறிக்குச் சிகிச்சை

யவ அரிசிமாவினால் தயார் செய்யப்பட்ட மதுவில் தூரிஞ்சிப் பழம் புளி இலந்தைப்பழம் புளிப்புமாதுளம்பழம் என்பன வற்றின் சாறுகளையும் ஓமம் கொட்டைக்கரந்தை சீரகம் சுக்கு இவற்றைச் சம அளவு கொண்டு செய்த தூளையும் சிறிது இந்துப்பையும் சேர்த்துப் பருகச் செய்க. இதனால் வாத தோஷத்தால் தோன்றிய மதுவெறி தணியும். 121–122

## 47. வாதமதுவெறியைத் தணிக்கும் புலால் உணவு

வாதத்தை முக்கியமாகக் கொண்ட மதுவெறிநோயாளிக்கு காடை தித்திரிப்புள் கோழி மயில் போன்ற பறவைகளின் புலால் சாறும் மான் மீன் நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் பிராணிகள் பொந்தில் வாழும் பிராணிகள் வலிமையுடன் பிறஉயிரினங்களை அடித்துத் தின்னும் பிராணிகள் ஆகியவற்றின் புலால் சாறு களுடன் எண்ணெய்ப்பசையும் புளிப்புச் சுவையுமுள்ள பொருள் களால் தயார் செய்த சம்பா அரிசிச் சோற்றைஉண்ணக்கொடுக்க வேண்டும். 123—124

எண்ணெய்ப்பசை உஷ்ணகுணம் உப்பு புளிப்புச் சுவை கொண்ட பொருள்களால் தயாரிக்கபட்டவை வாய்க்கு இன்ப மானவை. [1]வேஸவாரம் கோதுமையால் தயாரித்த பலவித மான தின்பண்டங்கள் வாருணி என்னும் மது மாமிசத்துடன் இஞ்சி சேர்த்து தயாரிக்கப்பட்ட எண்ணெய்ப்பசையுள்ள அப்பம் போன்றவை உளுந்து மாவினால் தயாரித்த பலவிதமான வடை முதலியவை என இவற்றை வாதமதுவெறி நோய் தோன்றிய வனுக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். 125—126

முன் சொன்ன கொழுப்பு மிகுதியாக உள்ள பிராணிகளின் மாமிசத்தில் மிளகுச் சூரணம் இஞ்சிச்சாறு சேர்த்தோ புளிப்பு மாதுளம் பழச்சாறு சேர்த்தோ எண்ணெய்ப்பசை அதிகமில்லாத வற்றை வாதமதுவெறி நோயினால் துன்புறுகிறவனுக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். அந்த மாமிசத்தில் இலவங்கப் பட்டையையும் ஏல அரிசியையும் இலவங்கப்பத்திரியையும் சேர்த்தோ தனியா மிளகு இஞ்சி இவற்றைச் சேர்த்து இலேகியம்போல் செய்தோ உண்பதற்குத் தகுதியான இளஞ் சூடுள்ள நிலையில் உண்ணக் கொடுக்க வேண்டும். 127—128

வாதமதுவெறி நோயால் துன்புறுகிறவனுக்கு உணவு உண்ட பிறகு நாவறட்சி ஏற்பட்டால் வாருணீ என்னும் புளிப்பு காடித் தெளிவைப் பருகக் கொடுக்க வேண்டும். புளிப்பு மாதுளம் பழச்சாற்றையோ [2]பெரும்பஞ்சமூலத்தால்

1. வேஸவாரம்—எலும்பில்லாத மாமிசத்தை வேகவைத்து அரைத்து அதில் வெல்லம் நெய் மிளகு திப்பிலி இவை சேர்த்து உருண்டையாகச் செய்யப்படும் பொருள்.
2. பெருபஞ்சமூலம்—1. வில்வம் 2. முன்னை 3. பெரு வாகை 4. பாதிரி 5. குமிழம் 6. ஓரிலை 7. மூவிலை 8. நெரிஞ்சில் 9. காட்டு உளுந்து 10. காட்டுப்பயறு

கஷாயமுறைப்படித் தயாரித்த நீரையோ தனியா சுக்கு இவற்றால் முறைப்படி தயாரித்த நீரையோ தயிரின் தெளிவு புளிப்புக் காடியின் தெளிவு சுக்தம் என்னும் காடித் தெளிவு இவற்றுள் ஏதாவது ஒன்றையோ பருகக் கொடுக்க வேண்டும். 129–130

மேற்கூறிய கைகண்ட சிகிச்சை முறையையும் உணவு முறையையும் அளவு காலம் இவற்றிற்கேற்பப் பின்பற்றுவதால் வாதசீற்றத்தால் தோன்றும் மதுவெறி நோய் தணிவடைகிறது. வலிமையும் நிறமும் வளர்ச்சி பெறுகின்றன. 131

[1]ராகம் [2]ஷாடவம் என்னும் பானகங்களையும் உணவிற்குச் சுவையை ஊட்டக் கூடிய பலவகையான மாமிசங்களையும் கீரை வகையுடன்கூடிய அரிசி மாவினால் தயாரித்த தின்பண்டங் களையும் யவ அரிசி கோதுமை சம்பா அரிசி இவற்றால் ஆகிய உணவைச் சேர்த்துச் சாப்பிடச் செய்யவும். சுடுநீருடன் எண்ணெய்க் குளியல் மேற்பூச்சு கம்பளி போன்ற கெட்டியான துணிகளைப் போர்த்திக் கொள்ளுதல் அகில் கட்டையை அரைத்துக் கெட்டியாக உடலில் பூசிக் கொள்ளுதல் அகிற் புகையைப் பயன்படுத்துதல் பருத்த பின்பக்கம் தொடைகள் மார்பகம் இவற்றுடன் கூடிய மாதர்களை இறுக அணைத்துக் கொள்ளுதல் சூடுள்ள மேற்போர்வைகளைப் போர்த்திக் கொள்ளுதல் சூட்டை வளர்க்கும் படுக்கையில் படுத்துக் கொள்ளுதல் இன்பமயமான வீட்டிற்குள் வசித்தல் ஆகிய இவற்றால் வாதத்தினால் தோன்றிய மதுவெறி நோய் விரைவில் தணிவு அடையும். 132–135

## 48. பித்த மதுவெறி நோய்க்குச் சிகிச்சை

பேரீச்சங்காய் திராட்சை சிற்றீச்சை புளிப்பு மாதுளரஸம் இவற்றை மதுவில் கலந்து குளிரச் செய்து அதில் யவசத்துமாவை யும் சர்க்கரையையும் சேர்த்துப் பித்த மது வெறி நோயில் அதிக நாவறட்சியுள்ளவனுக்குப் பருகக் கொடுக்க வேண்டும். சர்க்கரை யினாலோ திராட்சையினாலோ செய்த மதுவைப்பருகக் கொடுக்க வேண்டும். மற்ற மது வகையிலும் பெருமளவில் தண்ணீர் கலந்து தக்கசமயத்தில் குடிக்கக் கொடுக்கலாம். 136–137

1. ராகம் 2. ஷாடவம்—சர்பத் போன்ற பானகங்கள்.

## 49. பித்தமதுவெறி நோயைத் தணிக்கும் மாமிச உணவுப் பொருள்கள்

முயல் கபிஞ்சலம் என்னும் பறவை மான் லாவகம் என்னும் பறவை கருநிற வாலுள்ள மான் எனும் இவற்றின் மாமிசத்தை இனிப்புச்சுவை புளிப்புச் சுவையுள்ள பொருள்களால் தயாரித்த சம்பா அரிசி அல்லது அறுபதாம் குறுவை அரிசிச் சோற்றுடன் கலந்து பித்தத்தினால் தோன்றிய மதுவெறி நோயாளிக்கு உண வாகக் கொடுக்க வேண்டும். பேய்ப்புடல் பயறு இவற்றின் கஞ்சியில் ஆட்டு மாமிசரஸத்தையோ புளிப்பு 'மாதுளம்பழச் சாற்றையோ நெல்லிக்காய்ச்சாற்றையோ சேர்த்துச் சம்பா அரிசி அல்லது அறுபதாங்குறுவை சோற்றை உண்ணக் கொடுக்கவேண் டும். திராட்சை நெல்லிக்காய் பேரீச்சங்காய் சிற்றீச்சை இவற் றின் ரஸத்தால் பலவகையாகத் தயாரித்த மந்தம் ([1]தர்ப்பணம்) அல்லது கஞ்சி மாமிசரஸம் சேர்த்து அதில் சம்பா அரிசி அறு பதாங்குறுவை அரிசிச் சோறு கலந்து உணவாகக் கொடுக்கலாம். 138–140

பித்தம் சீற்றம் பெறுவதால் தோன்றும் மதுவெறிநோயில் பக்குவாசயத்தில் (சீரணப்பையில்) கபமும் பித்தமும் சீற்ற மடைந்து தம் இயற்கை நிலையைவிட்டு மேல்நோக்கிப்பரவு வதால் தோஷம் அளவில்மிகுந்து எரிச்சலும் நாவறட்சியும்மிகுதி யாக உள்ளபோது திராட்சைச்சாற்றினால்செய்யப்பட்ட மதுவில் நீரும் பொரிமாவும் கலந்து பருகச்செய்து விரைவில் வாந்தி எடுக்கச் செய்யவேண்டும். இவ்வாறு செய்வதால் பெருமளவில் வளர்ச்சியடைந்த கபமும் பித்தமும் வெளி வந்து விடுகின்றன. மேலும் பித்தத்தினால் தோன்றிய மது வெறி நோயும் தணி வடைகிறது. 141–142

வாந்தி எடுக்கச் செய்த பிறகு பசி ஏற்படுமாயின் உணவு காலத்தை அறிந்து தர்ப்பண முறையைப் பின்பற்ற வேண்டும். இதனால் சடராக்னி வளர்ந்து மிகுதியுள்ள தோஷங்களும் உணவும் செரிமானமடையும். 143

## 50. பித்தமதுவெறி நோயில் இருமல் போன்றவைகட்குச் சிகிச்சை

இரத்தத்துடன் கலந்த கோழையை உமிழ்தல் அதிகமாக இருமல் விலாப்புறங்களில் வலி மார்பகத்தில் வேதனை எரிச் சலுடன் கூடிய நீர்வேட்கை இதயத்திலும் மார்பிலும் குமட்டல்

---

1. தர்ப்பணம்—உடலுக்கு செழிப்பைத் தரக் கூடியது.

இந்த இலக்கணங்கள் பித்தமதுவெறி நோயில் தோன்றினால் சீந்தில்கொடியினுடையவும் பெருங்கோரைக் கிழங்கினுடையவும் சுரஸத்திலோ பேய்புடல் இலைச் சுரஸத்திலோ சுக்குத் தூளைச் சேர்த்துப் பருகக் கொடுக்க வேண்டும். மருந்து சீரணமான பின் தித்திரிப் பட்சியின் மாமிசத்துடன் சம்பா அரிசிச் சோற்றையோ அறுபதாங்குறுவை அரிசிச் சோற்றையோ உண்ணக் கொடுக்க வேண்டும். 144–145

வாதமும் பித்தமும் அதிக அளவில் வளர்ச்சி பெற்ற பித்த மதுவெறிநோயாளிக்கு நீர்வேட்கை மிகுதியாக இருந்தால் தோஷங்களை சரி செய்வதற்குக் குளிர்ந்த திராட்சை ரஸத்தைப் பருகக் கொடுத்து அது சீரணமானபின் இனிப்புச் சுவையும் புளிப்புச் சுவையும் சேர்த்துத் தயாரித்த ஆட்டுமாமிசத்தை நோயாளிக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். 146–147

உண்ணும் போது இடையில் நாவறட்சி தோன்றினால் மதுவைச் சிறிய அளவில் பருகச் செய்யவேண்டும். உணவுக்குப் பிறகு மேலும் நாவறட்சிதணியாமல் இருந்தால் நிறைய தண்ணீர் கலந்து வெறி தோன்றாதபடி மதுவை மிகச்சிறிய அளவில் கொடுக்கவேண்டும். 148

மூர்ச்சையின் [1]சீதகஷாயத்தை அல்லது உவகைப் பழத்தின் சீதகஷாயத்தைப் பருகத் தரவேண்டும். இயற்கையாகக் குளிர்ச்சி கொண்டுள்ள நீர், நன்னாரி காட்டு உளுந்து, காட்டுப் பயறு ஓரிலை இவற்றை [2]ஷடங்கக்வாத முறையில் தயாரித்து குளிர்ந்த கஷாயத்தை நீர் வேட்கை நீங்கப் பயன்படுத்தவேண்டும். 149–150

நாவறட்சி மிகுதியாக உள்ளபோது புளிப்பு இலந்தை, புளிப்பு மாதுளை புளி புளியாரைக்கீரை புளிவஞ்சி இவ்வைந்து புளிப்புப் பொருட்களின் சாற்றை வாய்க்குள் தடவச் செய்தால் விரைவில் நீர்வேட்கை தணியும். 151

## 51. பித்த மதுவெறியைத் தணிக்கும் உணவுப் பழக்க வழக்கங்கள்

குளிர்ந்த உணவு குளிர்ந்த நீர் குளிர்ச்சியான படுக்கை இருக்கை குளிர்ந்த வாயு குளிர்ந்த நீர் குளிர்ச்சியான தோட்டம்

---

1. சீதகஷாயம்—தண்ணீரில் மூலிகையை ஊறவைத்துக் காய்ச்சாமல் தயார் செய்யும் கஷாயமுறை.
2. ஷடங்கக்வாதமுறை—மருந்துப்பொருள்களைப் போட்டு ஆறில் ஒருபங்கு மிகுந்திருக்கக் காய்ச்சிய கஷாயம்.

சந்தனநீர் தெளிக்கப்பட்ட ஆடை தாமரைப்பூ கருநெய்தல் போன்றமலர்கள் பலவகையணிகள் முத்துமாலைகள் சந்திர கிரணங்கள் முதலியவற்றால் குளிர்ச்சி பெறுதல் குளிர்ந்த நீர் நிறைந்த தங்கம் வெள்ளி வெண்கலப்பாத்திரங்களை உடல்மேல் படும்படிச் செய்தல் பனிக்கட்டி நிறைந்துள்ள தொட்டியில் இருத்தல் பனி நீர் நிரம்பிக் குளிர்ந்துள்ள தோல்பையை உடலில் படும்படி வைத்துக் கொள்ளுதல் அரைத்த சந்தனம் பூசியதால் ஈரம் கொண்ட உடலுள்ள மாதர்களைத் தழுவிக் கொள்ளுதல் மலைச்சந்தனக்காற்று உடலில் படும்படிச் செய்து கொள்ளுதல் மற்றும் சீதவீரிய முள்ள பொருள்களால் குளிர்ச்சி ஏற்படுத்திக் கொள்ளுதல் ஆகியவற்றைத் தக்கபடி பித்தத்தினால் தோன்றிய மதுவெறிநோயைத் தணிக்கப் பயன்படுத்தலாம். 152–155

தகாதமுறையில் மதுபருகியதால் உடலில் எரிச்சல் தோன்றினால் சந்தன நீரால் நனைந்த அழகிய அல்லிதாமரைகளின் இலைகளை உடலின்மேல் வைத்துக் கொள்வது மிக்க நன்மை தரவல்லது. பலவகையான சிறந்த கதைகள் மயிலின் இனிமையான குரல் மேகத்தின் கர்ஜனை என இவைகளைக் கேட்பது மதுவெறியைத் தணிவடையச் செய்கிறது. 156–157

நீர்த்தாரை பொழியும் இயந்திரம் மிக்க காற்றை வீசச் செய்யும் இயந்திரம் எப்பொழுதும் நீர்த்தாரை பெருகும் இடம் ஆகியவற்றுடன் கூடிய வீட்டில் வசித்தால் மது அருந்துவதால் தோன்றிய எரிச்சல் தணியும். 158

ஞாழல் விளாமிச்சவேர் பாச்சோத்தி (வெட்டி வேர்) சிறு நாகப்பூ இலவங்கப்பத்திரி தகரவிதை என இவற்றைச் சம அளவில் எடுத்து [1]காளீயகத்திலோ சந்தன இலைச் சாறு அல்லது கஷாயத்திலோ அரைத்து மேற்பூச்சு பூசினால் எரிச்சல் நீங்கும். 159

இலந்தை துளிர்களையோ வேப்பந்துளிர்களையோ பசலைக் கீரையையோ நீரில்இட்டு மத்தால் கடைந்தால் நுரை தோன்றும். அந்த நுரையை மேற்பூச்சாகப் பூசுவதால் எரிச்சல் தணியும். 160

மது அருந்துவதால் உண்டாகிற எரிச்சலுக்குக் கள் கள்தெளிவு புளிப்புத்தயிர் துரிஞ்சிப்பழச்சாறு தேன் புளிப்புக்காடி எனும் இவற்றில் ஒன்றை உடல்மேல் ஊற்றுதலும் பூசுதலும் சிறந்த சிகிச்சைகளாகும். 161

1. காளீயகம் - ஒரு வகை மது

நாவறட்சி எரிச்சல் இவற்றை நீக்கக் குளிர்ந்த தண்ணீரை மேலே ஊற்றுதல் குளிர்ந்த நீரில் அமிழ்ந்து குளிக்கச் செய்தல் குளிர்ந்த நீரில் நனைந்த விசிறியால் வீசிக் கொள்ளுதல் ஆகியவை சிறந்த முறைகளாகும். 162

அறிவாளியான மருத்துவரின் சொற்படி நடக்கக்கூடிய நோயாளியின் நோயின் அளவு காலம் இவற்றை அனுசரித்துப் பயன்படுத்திய மேற்கூறிய செயல்கள் யாவும் விரைவில் அவனுடைய பித்தமதுவெறி நோயைத் தணிவடையச் செய்கின்றன. 163

## 52. கபமதுவெறிநோய்க்குச் சிகிச்சை முறை

வாந்தியாகச் செய்தும் பட்டினிகிடக்கச் செய்தும் கபமது வெறி நோயைத் தீர்க்க வேண்டும். 164

கபமது நோயாளிக்கு நீர்வேட்கை தோன்றினால்: 1. வெட்டிவேர் 2. சித்தாமுட்டிவேர் ஓரிலை வேர் 3. சிறுபஞ்ச மூலம் 4. மேற்கூறிய மூன்றுவகைகளுடன் சுக்கு 5. காஞ்சொரி கோரைக்கிழங்கு 6. கோரைக்கிழங்கு பர்படகம் 7. கோரைக்கிழங்கு எனும் இந்த ஏழுவகைகளில் ஏதேனும் ஒன்றின் கஷாயத்தை நன்கு குளிரவைத்துப் பருகச் செய்ய வேண்டும். இம்முறைகளை மதுவெறி நோய்வகைகள் அனைத்திலும் நாவறட்சியையும் காய்ச்சலையும் தணிக்கப் பயன்படுத்தத் தகும். 165-167

## 53. ஆமமற்ற கபமது வெறி நோய்க்குச் சிகிச்சை

ஆமமற்ற கபமதுவெறிநோயாளிக்கு உண்ண அவா ஏற்பட்டால் சர்க்கரை அல்லது தேனில் தயாரித்த பழைய அரிஷ்டத்துடன் அல்லது சீதுஎனும் கள்ளுடன் உடலைச் செழிக்கச் செய்து வலிமையைத் தோற்றுவிக்கக்கூடிய பொரிமா முதலிய பொருள்களுடன் சேர்த்துத் தகுந்த நேரத்தில் உட்கொள்ளச் செய்ய வேண்டும். 168-169

யவ அரிசிச்சோற்றுடனோ கோதுமை (நொய்)யால் செய்த சோற்றுடனோ எண்ணெய்ப்பசையற்ற வறட்சித்தன்மை கொண்ட கஞ்சி வகையை உட்கொள்ளச் செய்ய வேண்டும். சிறிதளவு காரப்பு புளிப்புச் சுவைகள் கொண்டதும் மிகக் குறைந்த அளவில் நெய் சேர்க்கப்பட்டதுமான கொள்ளின் கஞ்சியுடனாவது உலர்ந்த முள்ளங்கியாலான கஞ்சியுடனாவது உணவைக் கொடுக்க வேண்டும். 170

புளிப்பு மாதுளம் பழரசத்தில் பேய்ப்புடல் சேர்த்து முறைப் படி தயாரித்த கஞ்சியை அல்லது நெல்லிக்காய்ரஸத்தில் முறைப் படி தயாரித்த கஞ்சியைப் பருகச் செய்ய வேண்டும். மிளகு போன்ற கார்ப்புச் சுவையுள்ள பொருள்களைச் சேர்த்துச் செய்த யவ அரிசிச் சோற்றை உண்ணக் கொடுக்க வேண்டும். 171

## 54. கபமதுவெறிநோயாளிக்குப் புலால் உணவு

1. புளிப்பு மாதுளம்பழச்சாற்றைக் காடியாகச் செய்து அத்துடன் சுக்கு அரிசித்திப்பிலி மிளகு ஆகியவற்றைச் சேர்த்த கஞ்சி.

2. புளிவஞ்சியுடன் ஆட்டுப்புலால் சாற்றில் நெய் சேர்க்காமல் தயாரித்த கஞ்சி 3. புளிப்பு மாதுளம் பழச்சாற்றைக் காடியாகச் செய்து காற்றடர்ந்த வறண்ட நிலத்தில் வாழும் உயிரினங்களின் அல்லது பறவைகளின் புலால் சாற்றைச் சேர்த்து தயாரித்த கஞ்சி ஆகிய இம்மூன்று வகைகளில் ஒன்றைக் கபமதுவெறி கொண்ட நோயாளிக்கு உணவாகப் பயன்படுத்த வேண்டும். 172

கடாய் அல்லது மடக்கில் புலாலைப் போட்டுக் கார்ப்பு புளிப்பு உப்புச் சுவைகள் கொண்ட பொருள்களின் சாற்றுடன் தயாரித்த உணவை உண்ணச் செய்து பிறகு மதுவை அருந்தச் செய்ய வேண்டும். 173

மாமிசத்தில் மிகுதியாக மிளகுத்தூளைச் சேர்த்துச் சிறிதளவு அரிசித்திப்பிலி சாற்றைக் கலந்து பக்குவம் செய்து பயன் படுத்துக. மிக்க காரமும் ஓமமும் சுக்கும் மாதுளப்பழச்சாறும் கலந்து வறுத்த மாமிசத்தில் இஞ்சியை மிகுதியாகச் சேர்த்துச் சூடான யூஷம் என்னும் கஞ்சியைக் கலந்து உருண்டையாகச் செய்து நோயாளியின் சடராக்னியின் வலிமைக்கேற்ற அளவு உண்ணச் செய்து பிறகு சர்க்கரையால் செய்யப்பட்ட மதுவைப் பருகச் செய்யவேண்டும். இதனால் கபமதுநோய் தணியும். 174–176

## 55. கபவெறி நோய்க்கு அஷ்டாங்கலவண முறை

ஸௌவர்ச்சல உப்பு சீரகம் புளி புளிவஞ்சி இவை ஒவ்வொன்றும் ஒருபங்கு இலவங்கப்பட்டை ஏல அரிசி மிளகு இவை ஒவ்வொன்றும் அரைப்பங்கு சர்க்கரை ஒரு பங்கு ஆக இந்த எட்டு பொருள்களையும் சேர்த்துச் சூரணம் செய்க. இது அஷ்டாங்கலவணம் எனப்படும். சடராக்னியை வளர்க்கும்

மருந்துகளில் இது மிகவும் சிறந்ததாகும். இதைக் கபமதுமெ, நோயில் பயன்படுத்தினால் சுரோதஸ்களைத் தூய்மைபடுத்தும். இந்த அஷ்டாங்க லவணத்தை நிலைமைக்கு ஏற்றவாறு புளிப்பு இனிப்புச் சுவைகள் கொண்ட பொருள்களின் சாற்றுடன் பயன் படுத்தினாலும், கோதுமை யவ அரிசி இவற்றால் ஆன தின்பண்டங்கள் சேர்த்த புலாவுடன் பயன்படுத்தினாலும் அது சுவையைத் தோற்றுவிக்கும். 177–179

விதையில்லாத திராட்சையுடன் சுக்கு திப்பிலி மிளகு என்பனவற்றைத் தகுந்த அளவில் சேர்த்து அரைத்து அதில் துரிஞ்சிப் பழச்சாற்றையும் மாதுளம் பழச்சாற்றையும் கலந்து ஸௌவர்ச்சலலவணம் ஏல அரிசி மிளகு சீரகம் கரிசிலாங்கண்ணி ஓமம் என்பனவற்றின் தூளையும் தேனையும் கலந்தால் 'ராகம்' எனும் பொருளாகும். இது சுவையையூட்டிச் சடராக்னியை வளர்க்கும். 180–181

மேற்சொன்ன திராட்சை வகையைப்போல் கருஞ்சீரகத்தை அரைத்து அதில் சுக்தமெனும் மதுவையும் பழுப்புக் கற்கண்டும் சேர்த்துச் செய்த சட்டினி போன்ற பொருள் சடராக்னியை வளர்த்து உணவைச் சீரணமடையச் செய்யும். 182

மாங்கொட்டைப் பருப்பையும் நெல்லிப்பருப்பையும் தனித் தனியாகத் துண்டுகளாக்கி அத்துடன் தனியா ஸௌவர்ச்சல உப்பு சீரகம் மிளகு என்பனவற்றைச் சேர்த்து அரைத்து வெல் லமும் தேனும் கலந்து புளிப்புச்சுவை கூட்டி இந்துப்பையும் கலந்து துவையல்போல் செய்து உணவில் கலந்து உட்கொள்ளச் செய்தால் அது சுவையூட்டுவதுடன் உணவைச் செரிமான மடையச் செய்யும். 183–184

வறட்சித் தன்மையும் உஷ்ணவீரியமும் கொண்ட உணவு வகைகளைப் பயன்படுத்துவது சுடுநீரில் நீராடுவது தகுந்தஉடற் பயிற்சி செய்வதுபட்டினி கிடப்பது தக்க நேரத்தில் கண்விழிப்பது நேரத்திற்கு ஏற்றவாறு வறட்சித்தன்மையுடைய நீரில் மூழ்குவது மேற்பூச்சு பூசிக்கொள்வது வலிமையையும் நிறத்தையும் கொடுக் கக்கூடிய பொடிகளை உடல் மேல் தேய்த்துக்கொள்வது பளு வான தடித்த ஆடைகளை அணிந்து கொள்வது அகிற்பொடியை உடல்மேல் பூசிக்கொள்வது உஷ்ணத்தையும் இன்பத்தையும் தரக் கூடிய மாதர்களைத் தழுவிக் கொள்வது பணிவிடைபுரிவதில் நன்கு தேர்ச்சிபெற்று இன்பம் அளிக்கவல்ல கைகள் பொருந்திய நங்கைகளால் உடல்பிடித்துவிடச் செய்து கொள்வது ஆகியவை

கபத்தினால் தோன்றிய மதுவெறி நோயை விரைவில் தணிக்கின்றன. 185–188

வாதம் முதலான தோஷங்களின் மிகுதியைக் கருதி சொல்லப்பட்ட இந்த தனித்தனி சிகிச்சை முறைகளை பத்துவித ஸந்நிபாதத்தினால் தோன்றிய மது வெறி நோய்களில் ஊகித்துச் சிகிச்சை முறைகளைக் கலந்து கையாள வேண்டும். 189

பலவிதமான தோஷங்களின் வேறுபாட்டையும் தோஷங்களுக்கேற்ற சிகிச்சையையும் தீர்க்கக் கூடியது அல்லாதது என்பதையும் அறிந்த மருத்துவன், தீர்க்கக்கூடிய நோய்களைத் தக்க முறையில் சிகிச்சை செய்து நீக்க வேண்டும். 190

## 56. மது வெறியில் மகிழ்ச்சியை அளிக்கக் கூடியவை

அழகான பூந்தோட்டம் தாமரைகளுடன் விளங்குகின்ற அழகான குளம் தூய்மையும் அழகும் பொருந்திய உணவு வகைகள் மகிழ்ச்சியை அளிக்கக்கூடிய நல்ல நண்பர்கள் நறுமணமுள்ள மலர் மாலைகள் தூய்மையான ஆடைகள் கந்தர்வகானம் மனத்திற்கு உகந்த நண்பர்களின் கூட்டம் நகைச்சுவையும் இசையும் பொருந்திய கதைகள் விருப்பமுள்ள தக்க மாதர்களுடன் கூடியிருத்தல் ஆகியவை மதுவெறி நோயைப் போக்கக் கூடியவைகளாகும். 191–193

முதலில் மனக்கலக்கத்தைத் தோற்றுவித்துப் பிறகு உடலுக்குத் துன்பத்தை மதுவெறி நோய் உண்டாக்கும். ஆகையால் மனத்திற்கு மகிழ்ச்சியைத்தரக்கூடிய செயல்களால் நோயாளியின் மனத்திற்கு இன்பம் தோற்றுவிக்கவேண்டும். அத்தகைய செயல்கள் உடலுக்கும் ஆறுதல் அளிக்கக்கூடியவை. 194

மேற்கூறிய சிறந்த சிகிச்சை முறைகளால் மதுவெறிநோய் தணியும். இச்சிகிச்சை முறைகள் பயனளிக்காவிடில் மதுவை மருந்தாகப் பயன் படுத்துவதைவிட்டுப் பாலைப்பருகச் செய்ய வேண்டும். 195

முன் கூறிய பட்டினிகிடத்தல் செரிமானத்தைத் தூண்டும் மருந்துகளை உட்கொள்ளச் செய்தல் தூய்மைபடுத்தும்

1. ராகம்—சட்டினி மாதிரியான ஒரு வகை கலவை.

சோதனைமுறைகளை வமனசிகிச்சைமுறைகளைக் கையாளுதல் எனும் இவற்றால் கபம் குறைந்த பிறகு உடல் வலிமை குறைந்து இலேசாகும். அப்பொழுது வெயிலில் காய்ந்த மரங்களுக்கு மழை நலம் பயப்பதுபோல வாதபித்தங்களின் சீற்றத்தால் மது வெறி கொண்டவனுக்குப் பால் உயிரைக் காத்து உடலைச் செழிப்படையச்செய்யக் கூடியதாகும். 196–197

பாலைப்பருகியபின் மதுவெறி நோய் முழுதும் நீங்கி உடலில் வலிமை தோன்றிய பிறகுப் பாலைநீக்கி நாள்தோறும் சிறிது சிறிதாக மதுவை அளவில் குறைத்துப்பருகச் செய்ய வேண்டும். (மதுவால் உடலில் உள்ள ஓஜஸ் எனும் தாதுக்களின் சாரம் மிகக் குறைந்திருக்கும். இனிப்பு குளுமை முதலிய பத்து தன்மை களைக் கொண்ட பசும்பாலைப் பருகச் செய்தால் ஓஜஸின் தன்மைகளைக் கொண்ட பால் அதை வளர்த்து உடலைச் செழிப்புறச் செய்யும்.) 198

## 57. திடீரென்று மது அருந்துவதன் தீங்கு

மது அருந்தும் பழக்கத்தைச் சிலநாள் விட்டுப் பிறகு அதிக அளவில் மது அருந்துவோருக்கு த்வம்ஸகம் விட்க்ஷயம் எனும் நோய்கள் ஏற்படுகின்றன. மதுவெறி நோய்வாய்ப்பட்டு வருந்தி உடல் இளைத்தவனுக்கு அவை தோன்றினால் சிகிச்சை செய்வது மிகக்கடினமாகும். 199

## 58. த்வம்ஸகம் விட்க்ஷயம் எனும் நோய்களின் )லக்கணமும், சிகிச்சையும்

வாயிலிருந்து கபம் ஒழுகுதல் தொண்டை தாடை உலர்ந்து போதல் எத்தகைய ஒலியையும் பொறுக்க இயலாமை சோம்பல் தூக்கம் ஆகிய இவை த்வம்ஸக நோயின் இலக்கணங்களாகும்.

இதயநோய் தொண்டைநோய் நினைவிழத்தல் வாந்தி உடலில் வேதனைகள் காய்ச்சல் நாவறட்சி இருமல் தலைவலி ஆகிய இவைகள் விட்க்ஷயநோயின் இலக்கணங்களாகும். 200–202

வாதமதுவெறி நோய்க்குக்கூறப்பட்ட சிகிச்சை முறைகள் அனைத்தையும் த்வம்ஸக விட்க்ஷய நோய்களுக்குக் கையாளலாம். இந்த த்வம்ஸக விட்க்ஷய நோய்கள்இரண்டும் வலிவிழந்து இளைத்தவனுக்கு ஏற்படுகின்றன. 203

வாதத்தைப் போக்கக் கூடிய வஸ்தி முறைகள் நெய் பாலிலிருந்து எடுக்கப்பட்ட நெய்யைப் பருகுதல் நெய்யையும் பாலையும் சேர்த்துப் பருகுதல் எண்ணெய்க்குளியல் மருந்துப் பொருள்களைத் தூள் செய்து உடல்மேல் தேய்த்துக் கொண்டு மூழ்குதல் வாதத்தைப் போக்கக் கூடிய உணவு நீர் வகைகளைப் பயன்படுத்துதல் ஆகிய இச்செயல்களால் த்வம்ஸகம் விட்க்ஷயம் என்னும் நோய்கள் தணிவடைகின்றன. முறைப்படி மது அருந்துகிறவனுக்கு மதுவெறி நோய் ஏற்படுகிறதில்லை. 204–205

மதுவிலிருந்து விடுபட்டு புலனடக்கமுள்ள மனிதனுக்கு மது அருந்துவதால் ஏற்படுகிற உடல் துன்பங்கள் மனநோய்கள் ஏற்படுகிறதில்லை. 206

**முடிவுரை**

முறையுடன் மது அருந்துதல் சுரை எனும் மத்யத்தின் பெருமை அதை அருந்தவேண்டியமுறை மதுவுடன் உட்கொள்ளத் தக்கபொருள்கள் மதுவிருப்பமுள்ளவர் தன்மை சிறந்தமுறையில் வெறியை உண்டாக்கும் விதம் பெருமை வாய்ந்த மது வகை மது வெறியின் பொது இலக்கணம் மதுவெறியின் மூன்று வகை அம்மூன்று வகையின் தனித்தனியான இலக்கணம் மதுவின் தீமை நன்மைகள் மது அருந்துவோரில் மூன்று வகையினர் சாத்துவிகம் போன்ற குணங்களை முன்னிட்டு வெறியின் இலக்கணம் மதுபானம் செய்பவர்களின் நண்பர்களின் நற்குழு நேரங் கழித்து வெறியை அடையக்கூடிய மனிதர்களைப் பற்றிய விளக்கம் மதுவெறி நோய்க்குக் காரணம் மதுவெறியின் இலக்கணம் மதுவெறியை நீக்கும் முறை மதுவெறி நோய்க்குச் சிகிச்சை முறைகள் இவை யாவும் இந்த மதாத்யய சிகிச்சை என்னும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன. 207–211

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
சிகிச்சாஸ்தானத்தில் மதாத்திய சிகிச்சை என்னும்
இருபத்துநான்காம் அத்தியாயம் முற்றும்.

## இருபத்தைந்தாவது அத்தியாயம்

# *த்விவ்ரணீய சிகிச்சை

இனி இரண்டு விதமான [1]விரணங்களின் சிகிச்சையைப் பற்றி ஆத்திரேய மாமுனிவர் கூறியவாறு விளக்குவோம். 1–2

### 1. முன்னுரை

இம்மைமறுமைகளை அறிந்தவரும் மதஅகங்காரங்கள் அற்றவரும் துன்பத்தைப் போக்குபவரும் ஆசிரியருமான ஆத்திரேயரைக் குறித்து அக்னிவேசர் பணிவுடன் கீழ்வருமாறு கேட்கலானார். 3

### 2. அக்கினிவேசரின் வினா

தெய்வத்தன்மை பொருந்தியவரே, மங்களத்தை அளிப்பவரே, ஸூத்திரஸ்தானத்தில் ரோகஸங்கிரகம் என்னும் அத்தியாயத்தில் இரண்டுவகை விரணங்களைப் பற்றிக் கூறியருளினீர். அவற்றின் இலக்கணங்களையும் சிகிச்சை முறைகளையும் குறித்து விளக்குமபடி கேட்டுக் கொள்கிறேன்.

அக்கினிவேசருடைய வினாவைக் கேட்டு ஆசிரியரான ஆத்திரேயர் பதிலளித்தார். நிஜம், ஆகந்துகம் என்னும் இரண்டு வகை விரணங்கள் பற்றி முன்பு கூறப்பட்டது. பணிவுள்ளவனே', அவற்றின் இலக்கணங்களும் சிகிச்சை முறைகளும முறைப்படி கேட்பாயாக. உடலிலுள்ள வாத பித்த கபமெனும் தோஷங்கள் கேடடைவதால் தோன்றக் கூடிய விரணம் ஒன்று. புறக்காரணங்களினால் தோன்றக் கூடிய விரணம் மற்றொன்று. 5–6

* த்விவ்ரணீயம்—இரண்டு வகையான விரணங்களைப் பற்றியும் அவற்றின் சிகிச்சைமுறையைப் பற்றியும் விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுவதாயிற்று.

1. இரண்டு வகை விரணங்கள்—1. தோஷஜம், 2. ஆகந்துகம்.

### 3. இரண்டு வகை விரணங்கள்

அடிபடுதல் கட்டுப்படுதல் கீழேவிழுதல் பிராணிகளின் கோரைப்பற்கள் நகங்கள் நஞ்சைத் தொடுதல் நெருப்பு ஆயுதங்கள் மந்திரம் விஷப் பொருளை மேலே பூசுதல் மருந்திடுதல் ஆகியவற்றால் ஏற்படும் விரணங்கள், நிஜ தோஷங்களின் இலக்கணத்திற்கு மாறுபட்ட இலக்கணங்கள் கொண்ட விரணம் ஆகியவை புறக்காரணங்களால் தோன்றக் கூடிய விரணங்களாகும். வாதம் முதலிய தோஷங்களால் ஏற்படக் கூடிய விரணம் நிஜ விரணம் எனப்படும். 7—8

### 4. புறக்காரணங்களால் ஏற்படும் விரணங்கட்குப் பொ

அகக்காரணங்களாலும் புறக்காரணங்களாலும் தோன்றுகிற விரணங்கள் தணியாவிடில் அகக்காரணங்களால் தோன்றிய விரணங்களுக்குக் கூறியுள்ள மருந்துகளைப் பயன்படுத்தித் தோஷங்களின் தன்மையும் வலிமையும் அறிந்து மருத்துவன் சிகிச்சை செய்ய வேண்டும். 9

### 5. நிஜ விரணங்களுக்குக் காரணமும் அவை தோன்றும் விதமும்

தம் காரணங்களால் கேடடைந்த வாத பித்த கபங்கள் *வெளி வழிகளைத் தழுவி மனிதனின் உடலில் நிஜ விரணத்தைத் தோற்றுவிக்கின்றன. 10

### 6. வாதத்தினால் தோன்றும் விரணத்தின் இலக்கணம்

விரணம் பரவாதிருத்தல் தொட்டால் கடினமாகத் தென்படுதல் குறைவாக நிணநீர் ஒழுகுதல் பொறுக்க முடியாத வேதனை சிவந்த கறுப்பு நிறமும் ஊசி குத்துவது போன்ற வலியும் துடிப்பும் தோன்றுதல் என்னும் இவை வாத விரணத்தின் இலக்கணங்களாகும். 11

### 7. வாதத்தினால் தோன்றும் விரணத்திற்குச் சிகிச்சை

நோயாளிக்கு மனநிறைவை உண்டாக்குதல் எண்ணெய் பருகச்செய்தல் எண்ணெய்ப் பசையுடன் கூடிய வியர்வையை வரவழைத்தல் ஒத்தடம் கொடுத்தல் மேல்பூச்சுபூசுதல் மருந்தை

---

* வெளி வழி—கை கால்கள், ரத்தம் முதலிய தாதுக்கள், தோல் என்பவை நம் உடலில் வெளிவழி எனப்படும்.

மேல் ஊற்றுதல் என இவற்றின் வாயிலாக வாதத்தினால் தோன்றிய விரணத்திற்குச் சிகிச்சை செய்ய வேண்டும். 12

## 8. பித்தத்தினால் தோன்றும் விரணத்தின் இலக்கணம்

மிக்க நாவறட்சி மயக்க நிலை காய்ச்சல் வியர்வை எரிச்சல் கெட்டுப்போதல் வெடிப்பு தோன்றல் அழுகிய பொருளைப் போன்ற நாற்றம் துர்நாற்றமுள்ள நீர் ஒழுகுதல் இவையாவும் பித்தத்தினால் தோன்றிய விரணத்தின் இலக்கணங்களாகும். 13

## 9. பித்த விரணத்திற்குச் சிகிச்சை

குளிர்ச்சித் தன்மை இனிப்பு கைப்புச்சுவையுமுள்ள பொருள் களால் தயாரித்த கல்கத்தை (விழுதை) மேல் பூச்சாகப் பூசுதல் கஷாயத்தை ஊற்றுதல் நெய் பருகச் செய்தல் மலங்கழிக்கச் செய்யும் பொருள்களைப் பயன்படுத்தல் ஆகியவை பித்தத்தினா னால் தோன்றும் விரணங்களைத் தணிக்க வல்லவை. 14

## 10. கபத்தினால் தோன்றும் விரணத்தின் இலக்கணம்

மிக்க பிசுபிசுப்பு மிக்க கனமாயிருத்தல் எண்ணெய்ப்பசை குளுமை திமிர்த் தன்மை குறைந்த வலி வெண்மைநிறம் சிறிதளவு கொசகொசப்பு வெகுநாட்கள் வரை வலி நீடித்தல் ஆகியவை கபத்தினால் தோன்றும் விரணத்தின் இலக்கணங் களாகும். 15

## 11. கபத்தினால் தோன்றும் விரணத்திற்குச் சிகிச்சை

துவர்ப்புச் சுவை காரப்புச் சுவை வறட்சித் தன்மை உஷ்ணவீர்யம் என்பவை பொருந்திய பொருள்களின் விழுதை மேல்பூச்சாகப்பூசுதல் அவற்றின் கஷாயத்தை ஊற்றுதல் பட்டினி கிடக்கச் செய்தல் செரிமானத்தைத் தூண்டுதல் ஆகிய இம் முறைகள் கபத்தினால் தோன்றும் விரணத்தைத் தணிவடையச் செய்யும். 16

முதலில் நிஜம் ஆகந்துகம் என இரண்டுவகை விரணங்கள் பற்றி கூறினோம். அவை பல வகை வேற்றுமைகளால் இருபது வகைகள் ஆகும் என்று கூறினோம். அந்த இருபது வகை விரணங்கட்கு பரிசோதனை மூன்று வகைப்படும். கேடடைந்தவை (துஷ்டவிரணங்கள்) பன்னிரெண்டு வகைப்படும். 17

## 12. விரணம் தோன்றும் இடங்கள் முதலியன

எட்டு விதமான விரணம் தோன்றும் இடங்கள் எட்டுவித நாற்றம் பதினான்கு விதங்களான நீர் ஒழுக்கு பதினாறு விதங்களான பின் விளையும் தொல்லைகள் இருபத்து நான்கு விதங்களான தோஷங்கள் முப்பத்தாறு விதங்களான சிகிச்சை முறைகள் சொல்லப்பட்டுள்ளன. இவை அனைத்தைப் பற்றியும் சொல்லுகிறேன் கேட்பாயாக. 18–19

## 13. விரணங்களின் இருபது வகை.

1. (கிருத்தியம்) எளிதில் அறுவை சிகிச்சையால் தீர்க்கக் கூடியது 2. (அத்திருத்தியம்) அறுவைச் சிகிச்சையின்றி தானாகவே உடைந்து குணமடையக் கூடியது 3. (துஷ்டவிரணம்) கேடடைந்த விரணம் 4. (அதுஷ்டவிரணம்) கேடடையாதது 5. (மர்மஸ்திதம்) உயிர்நிலையில் தோன்றுவது 6. உயிர் நிலையைப் பற்றாதது 7. (ஸம்விருதம்) முகமில்லாதது 8. (விவிருதம்) முகமுள்ளது 9. (தாருணம்) மிகக்கடினமானது 10. (மிருது) மென்மையானது 11. (ச்ராவி) சீழ் ஒழுக்கு உடையது 12. சீழ் நீர் ஒழுக்கு இல்லாதது 13. (ஸவிஷம்) நச்சுத் தொடர்புடையது 14. நச்சுத் தொடர்பற்றது 15. (விஸமம்) சமநிலையற்றது 16. (ஸமம்) சமநிலையிலுள்ளது 17. (உத்ஸங்கி) உள்ளுக்குள் புரைபோடியது 18. (அனுத்ஸங்கி) புரை போடாதது 19. (உத்ஸன்னம்) மாமிசம் மேலே தூக்கியிருத்தல் 20. (அனுத்ஸன்னம்) இதற்கு மாறுபட்டது ஆகிய இருபது வகை விரணங்கள் உள்ளன. 20–21

## 14. மூன்று விதமான பரிசோதனைகள்।

1. கண்ணால் பார்ப்பது 2. கேட்டறிவது 3. தொட்டறிவது என விரணங்களுக்கு மூன்றுவகை பரிசோதனைகள் உண்டு. 1. நோயாளியின் வயது நிறம் உடல் புலன்கள் இவற்றைக் கண்டு நோயின் தன்மையை அறிய வேண்டும். 2. விரணத்தின் காரணம் தோன்றும் வேதனைகள் உடலுக்கு ஒத்துக்கொள்ளக் கூடியவை சடராக்கினி இவற்றைப் பற்றி நோயாளியைக் கேட்டு அறிந்து கொள்ள வேண்டும். 3. கடினத்தன்மை மென்மை குளிர்ச்சி சூடு இவற்றைத்தொடுவுணர்ச்சியினால்அறிந்துகொள்ள வேண்டும். 22–23

## 15. கேடடைந்த பன்னிரெண்டு வகை விரணங்கள்

1. வெண்மை நிறம் கொண்டது. 2. இரணத்தின் வழி உள்ளடங்கியிருப்பது 3. இரணத்தின் வழி தடித்திருப்பது

*4. மஞ்சள் நிறத்துடனிருப்பது 5. நீலநிறம் கொண்டது 6. வெண் கருநிறம் கொண்டது. 7. விரணத்தில் சிறுகட்டிகள் அதிகமாகத் தோன்றுவது 8. சிவப்பு நிறம் கொண்டது. 9. கருநிறம் கொண்டது 10. துர்நாற்றம் கொண்டது 11. ஊறல் கூடியது 12. விரணத்தின் உள்ளே அதிகமாகச் சீழ் அழுந்தியிருத்தல் என இவ்வாறு கேடடைந்த பன்னிரெண்டு வகை விரணங்கள் கூறப்பட்டன. அவற்றின் முக்கிய காரணங்களான இருபத்துநான்கு வகை தோஷங்கள் பிறகு விளக்கப்படும். 24-25*

## 16. விரணம் தோன்றுவதற்குரிய எட்டு இடங்கள்

*1. தோல் 2. நாடிநரம்புகள் 3. சதை (மாமிசம்) 4. (மேதஸ்) கொழுப்பு 5. எலும்பு 6. தசைநார்கள் 7. உயிர் நிலைகள் 8. உடல் உள்ளுறுப்புகள் ஆகிய இந்த எட்டும் விரணம் தோன்றுவதற்கு உரிய இடங்களாகும். 26*

## 17. விரணத்தில் தோன்றக் கூடிய எண்வித நாற்றம்

*1. நெய் 2. எண்ணெய் 3. வஸை (நிணநீர்) 4. சீழ் 5. இரத்தம் 6. ச்யாவம் அல்லது பிணநாற்றம் 7. புளிப்பு நாற்றம் 8. சீழ் போன்ற நாற்றம் (பூதிகம்) இவ்வகையாக விரணங்களுக்கு எட்டு வகை நாற்றங்கள் உண்டு. 27*

## 18. விரணத்தின் பதினான்கு வகையான ஒழுக்குகள்

*1. நிணநீர் 2. தண்ணீர் போன்றது 3. சீழ் 4. இரத்தம் 5. மஞ்சள் நீர் போன்றது 6. கருநிற இரத்தம் 7. இரத்தம் கலந்த மஞ்சள் நிறங்கொண்ட நீர் 8. கஷாய நிறமுள்ளது 9. நீலநிறங்கொண்டது 10. பச்சைநிறம் கொண்டது 11. பிசுபிசுப்புத் தன்மை கொண்டது 12. வறண்ட நீர் 13. வெண்மை நிறம் கொண்டது 14 கரு நிறமுள்ளது என விரணத்திற்கு ஏற்றவாறு பதினான்கு வகை ஒழுக்குகள் சொல்லப்பட்டுள்ளன. 28*

## 19. விரணங்களால் ஏற்படும் பதினாறு வகை துன்பங்கள்

*1. (விஸர்ப்பம்) அக்கி 2. பக்கவாதம் 3. நரம்புகள் அசையாமை 4. *அபதானகம் 5. பயக்க நிலை 6. பித்துபிடித்தல் 7. விரணங்களில் வேதனை 8. காய்ச்சல் 9. நாவறட்சி 10. தாடைப்பிடிப்பு 11. இருமல் 12. வாந்தி 13. (அதிஸாரம்)*

* அபதானகம்—ஒரு வகை வாதநோய்.

கழிச்சல் 14. விக்கல் 15. மூச்சு முட்டுதல் 16. உடல் நடுக்கம் என பதினாறு வகையான துன்பங்கள் கூறப்படுகின்றன. 29–30

## 20. விரணத்தின் இருபத்து நான்கு விதமான தோஷங்கள்

1. ஸ்நாயு (தசைநார்கள்) அழுகிப் போதல் 2. இரத்தக் குழாய்கள் (நாடி நரம்புகள்) அழுகிப் போதல் 3. விரணம் மிகவும் ஆழமாக ஊன்றி இருத்தல் 4. கிருமிகளால் தசை நார்களும் நாடிநரம்புகளும் தின்னப்படுதல் 5. எலும்பு முறிவு 6. விரணத்தில் (சல்யங்கள்) ஆணி, குச்சி, எலும்பு போன்ற வேறு பொருட்கள் பதிந்திருத்தல் 7. விரணத்தில் விஷத்தின் தொடர்பு 8. விரணம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பரவுதல் 9. நகத்தினால் வெட்டப்படுதல் 10. கட்டையினால் அடிபடுதல் 11. தோல் உராய்தல் 12. உரோமங்கள் உராய்தல் 13. விரணத்திற்கு சீராகக் கட்டுகட்டாதிருத்தல் 14. விரணத்தில் மிக்க எண்ணெய்ப்பசை இருத்தல் 15. விரணத்தில் அதிகமாக மருந்திடுதல் 16. அசீரணம் 17. அதிகமாக உணவு உண்பது 18. பகையான உணவை உண்பது 19. உடலுக்கு ஒவ்வாத (இயல்புக்குமாறான) உணவை உண்பது 20. துக்கம் அல்லது கோபம் 21. பகலில் உறங்குதல் 22. உடற்பயிற்சி 23. தகுந்த சிகிச்சை செய்யாமை 24. புணர்ச்சி ஆகிய இத்தோஷங்கள் விரணத்தைக் குணமடையச் செய்யமாட்டா. 31–34

## 21. அறுவைச் சிகிச்சையால் தணியக் கூடிய விரணங்கள் (மிக்க கஷ்டப்பட்டு குணப்படுத்தக் கூடியவை)

பெருமளவு தோஷமுள்ளவை அதிக அளவில் ஒழுக்கு உடையவை துர்நாற்றமுடையவை பதினாறு உபத்திரவங்களுடன் கூடியவை இருபத்து நான்கு வகையான தோஷங்கள் உள்ளவை என இவையெல்லாம் அறுவைச் சிகிச்சையால் (மிகவும் கஷ்டப்பட்டு) ஆற்றக்கூடியவையாகும். 35

## 22. எளிதில் தீர்க்கக் கூடிய விரணங்கள்

வாலிப வயதுள்ள மனிதனின் தோல் மாமிசம் ஆகியவற்றில் தோன்றியது தீங்கு ஏற்படாத இடத்தில் தோன்றியது பொருத்தமான பருவகாலத்தில் தோன்றியது துன்பங்களற்றது புதியதாகத் தோன்றியது என இவை எளிதில் தீர்க்கக் கூடியவை. 36

## 23. தீர்க்க இயலாத விரணங்கள்

முன்பு தீர்க்கக்கூடிய விரணங்களுக்குச் சொல்லப்பட்ட லக்கணங்கள் ஒன்று அல்லது இரண்டு குறைவாக இருந்தால்

அது கஷ்டப்பட்டு தீர்க்கக் கூடியதாக ஆகிறது. மற்றவை சிகிச்சையால் பயன் அற்றவையாய் தீர்க்க இயலாத விரணங் களாகின்றன. 37

## 24. விரணத்திற்குச் [1]சோதனை செயல்கள்

எல்லா வகையான விரணங்களிலும் முதலில் வாந்தி எடுக்க மருந்து கொடுப்பது மலங்கழிக்க மருந்து கொடுப்பது அறுவைச் சிகிச்சை செய்விப்பது வஸ்தி செய்விப்பது ஆகிய சோதனைச் செயல்களால் சீற்றமடைந்த தோஷங்களுக்கு ஏற்ற வாறு உடலைத் தூய்மை படுத்த வேண்டும். (உடலின் மேற் பகுதியில் விரணம் தோன்றினால் வாந்தி எடுக்கச்செய்வதும், கீழ்ப்பகுதியில் உள்ள விரணத்திற்குப் பேதியாகச் செய்வதும் தக்க சிகிச்சைகளாகும்.) 38

## 25. விரணத்தைத் தணிக்கும் முப்பத்தாறு செயல் முறைகள்

உடனடியாகத் தூய்மைப்படுத்தப்பட்ட நோயாளியின் விரணங்கள் விரைவில் குணமடைகின்றன. இனி முறைப்படி கூறப்படும் 36 வகை சிகிச்சை முறைகளையும் கேட்பாயாக. 39

1. (சோபக்னம்) வீக்கத்தைத் தணிக்கக் கூடிய இரத்தம் எடுப்பது 2. பிளத்தல் 3. குத்தி எடுத்தல் 4. அறுத்து எடுத்தல் 5. சுரண்டி எடுத்தல் 6. கொத்தி எடுத்தல் 7. தையல்போடுதல் போன்றவையான அறுவை சிகிச்சை முறைகள் 8. (அவபீடனம்) கல்கம் (விழுது) முதலியவற்றால் மேற்பூச்சு பூசி சீழை வெளிப் படுத்துதல் 9. (நிர்வாபணம்) எரிச்சல் சூடு இவைகளைத் தணிக்கக் கூடிய குளிர்ந்த பொருள்களைப் பயன்படுத்துதல் 10. (ஸந் தானம்) தையல் போடுதல். விரணத்தின் வாயில் மருந்துகளை இட்டு சிதைந்த விரணத்தின் மேல் பிளவுபட்டபகுதிகளை ஒன்று சேர்த்தல் 11. (ஸ்வேதம்) வியர்ப்பித்தல் 12. சமனம் (தணித் தல்) 13. (ஏஷணம்) துழாவிப் பார்த்தல் 14. (சோதன கஷா யம்) தூய்மைப்படுத்தும் கஷாயம் 15. (ரோபண கஷாயம்) (விரணத்தை ஆற்றும் கஷாயம்) 16. (சோதனப்பிரலேபம்) தூய்மை செய்யும் மேற்பூச்சு 17. (ரோபணப்பிரலேபம்) குணப் படுத்தக் கூடிய மேற்பூச்சு 18. (சோதன தைலம்) தூய்மைப் படுத்தும் எண்ணெய் 19. (ரோபண தைலம்) விரணத்தை ஆற்றக்கூடிய எண்ணெய் 20. (சோதன கிருதம்) தூய்மைப் படுத்தும் நெய் 21. (ரோபண கிருதம்) விரணத்தை ஆற்று

1. சோதன—தூய்மைப்படுத்தும் செயல்கள்.

விக்கும் நெய் 22. (விரணத்தை மூடுவதற்காக) விரணத்தை ஆற்றக் கூடிய இலைகளைப் பயன்படுத்துதல் 23. விரணத்தின் உள்ளே இலைகளைக் கொண்டு மூடி வைத்தல் 24. கட்டுக் கட்டுதல் 25. (பத்தியம்) கட்டுப்பாடான உணவு 26. (உத்ஸாதனம்) அமிழ்ந்துள்ள விரணத்தை மேலே தூக்கி விடுதல் 27, 28. இரண்டுவகை சூடு போடுதல் 29. (அவஸாதனம்) மேலே தூக்கியுள்ள விரணத்தை கீழே இழுத்துச் சென்று சரிசெய்தல் 30. கடினம் (மென்மையான விரணத்தை கெட்டிப்படுத்துதல்) 31. கடினத்தன்மையை உண்டு பண்ணக் கூடிய மேற்பூச்சு 32. விரணங்களை மென்மையாகச் செய்யக் கூடிய புகைபோடுதல் 33. மென்மையை உண்டு பண்ணக் கூடிய மேற்பூச்சு 34. (வர்ண்யம்) நிறத்தை இயற்கை நிலைக்குக் கொண்டு வருதல் 35. விரணத்தை ஆற்றக் கூடிய சூரணத்தை மேலே தூவுதல் 36. உரோமத்தை மீண்டும் வளர்க்கக் கூடிய பொருள்களின் சூரணத்தைப் பயன்படுத்துதல் இவ்வாறு 36. வகையான சிகிச்சை முறைகள் விரணத்திற்குக் கூறப்பட்டன. 40—43

## 26. இரத்தத்தை வெளியேற்றுதல்

விரணம் தோன்றுவதற்கு முன்பே விரணம் தோன்றுவதற்கான அறிகுறிகளை மருத்துவன் அறிந்து, வீக்கத்திலிருந்து ரத்தத்தை வெளியேற்றி விட வேண்டும். 44

## 27. தூய்மைப்படுத்தும் முறை

அதிக அளவில் தோஷம் சேர்ந்துள்ள விரணமுடைய மனிதனுக்கு முதலில் (சோதனம்) தூய்மைச் சிகிச்சையைச் செய்விக்க வேண்டும். குறைந்த அளவில் தோஷமிருந்தால் பட்டினி கிடக்கச் செய்ய வேண்டும். வாதம் முதலிடம் பெற்ற விரணமாயின் துவர்ப்புச் சுவையுள்ள பொருள்களால் தயார் செய்த நெய்யைப் பயன்படுத்தி முதலில் வாதத்தை நீக்க வேண்டும். 45

## 28. வீக்கத்தைத் தணிக்கவல்ல [1]வடாதி மேற்பூச்சு

1. ஆலமரத்தின் விழுது 2. அத்தி மரப்பட்டை 3. அரச மரப்பட்டை 4. இத்திமரப்பட்டை 5. நொச்சி மரப்பட்டை (இவை ந்யக்ரோதாதி கூட்டுப் பொருள் எனப்படும்) இவற்றைச் சம அளவில் எடுத்து நீர் ஊற்றி செய்த விழுதை முறைப்படி நெய்யில் சேர்த்து மேற்பூச்சு பூச வீக்கம் தணிவடையும். 46

1. வடம்—ஆலமரம்

## 29. [1]விஜயாதி மேற் பூச்சு

1. சித்தாமுட்டி 2. அதிமதுரம் 3. க்ஷீரகாகோலி 4. தாமரைக் கிழங்கு 5. தண்ணீர் விட்டாங் கிழங்கு 6. நீலத் தாமரை 7. சிறுநாவற்பூ 8. சந்தனம் (இந்த 8ம் சேர்ந்தது சித்தாமுட்டி கூட்டுப்பொருள் எனப்படும்) இப்பொருள்களைச் சம அளவில் எடுத்து நீரில் அரைத்து மேற்பூச்சு பூச வீக்கம் தணியும். 47

## 30. [2]மதுகாதி மேற்பூச்சு

1. சத்துமா 2. அதிமதுரம் 3. நெய் 4. சர்க்கரை இவற்றை ஒன்றாகச் சேர்த்துக் கலந்து மேற்பூச்சு பூச வேண்டும். வீக்க நோயில் அஜீரணத்தையும் எரிச்சலையும் உண்டாக்கக் கூடிய உணவைப் பயன்படுத்தக் கூடாது. 48

## 31. பிளத்தல் ([3]பாடனக்கிரியா)

மேற்கூறிய சிகிச்சை முறைகளினால் வீக்கம் தணியாவிடில் பக்குவமடைந்த (பழுத்த) அந்த வீக்கத்தை ஒத்தட முறையால் பிளக்கச் செய்வது நன்மை பயக்கவல்லது. 49

எண்ணெய் அல்லது நெய் அல்லது எண்ணெய் நெய் இவற்றைச் சேர்த்து சத்துமாவை உருண்டையாகச் செய்து சிறிதளவு சூடாக்கி வீக்கத்தின் மேல் பக்குவமடைவதற்காக (பழுக்கச் செய்ய) ஒத்தடம் கொடுத்துக் கட்ட வேண்டும். 50

எள் ஆளிவிதை புளிப்புத்தயிர் ஸுரையின் 'வண்டல் கோஷ்டம் இந்துப்பு இவற்றால் முறைப்படி தயார் செய்த சத்துமா உருண்டையை [4]உபநாஹம் (ஒத்தடம்) கொடுத்து வைத்துக் கட்டுவது நல்லது. 51

வேதனை எரிச்சல் சிவப்பு நிறம் ஊசிகுத்துவது போன்ற குத்தல் வலி ஆகியவை வீக்கத்தில் தோன்றினால் அது பாதி பக்குவம் (அரைப்பழுத்தது) அடைந்தது என்று அறிய வேண்டும். 52

1. விஜயா—சித்தாமுட்டி
2. மதுகம்—அதிமதுரம்
3. பாடனக்கிரியா—பிளத்தல்
4. உபநாஹம்-ஒத்தடம்

ஆளிவிதை குக்குலு சதுரக்கள்ளியின்பால் கோழி புறாக்களின் மலம் புரசமரத்தின் க்ஷாரம் பிரம்மதண்டு நேர்வாளம் இவற்றை மென்மையான உடல் உள்ளவர்களுக்கு பக்குவமடைந்த வீக்கத்தை உடைப்பதற்குப் பயன்படுத்த வேண்டும். 53

வலிமை பொருந்தியவர்களுக்குத் தோன்றிய பக்குவமடைந்த வீக்கத்திற்கு அறுவை சிகிச்சை கீழே கூறப்படுகிறது. 54

## 32. ஆறு வகை அறுவை சிகிச்சை

1. பிளத்தல் 2. குத்தி எடுத்தல் 3. அறுத்து எடுத்தல் 4. சுரண்டி எடுத்தல் 5. கொத்தி எடுத்தல் 6. தையல் போடுதல் என ஆறுவகையான அறுவைச் சிகிச்சைகள் சொல்லப் பட்டுள்ளன. 55

## 33. பிளத்தல் சிகிச்சைக்கு ஏற்ற விரணங்கள்

1. [1]நாடீவிரணம்-புரையோடிப் போன விரணம் 2. [2]பக்குவ விரண சோதம்-பழுத்துப்போன விரண வீக்கம் 3. [3]க்ஷதோதரம்-அடிபட்டு வீங்கிப்போன பெருவயிறு 4. [4]பத்ததோதரம்- அடைப் பட்டுப்போன ஆஸனவாயையுடைய பெருவயிறு நோய் 5. பக்குவ மடையாத வீக்கத்தினுள் ஆணி கல் முதலியவை உள்ள விரணம் இவை போன்ற மற்ற வீக்க நோய்களுக்கு [5](பாடன கர்மா) பிளத்தல் சிகிச்சை செய்ய வேண்டும். 56

## 34. குத்தி நீக்கத்தக்க விரணங்கள்

1. [6]ஜலோதரம்-நீர்ப்பெருவயிறு 2. பக்குவமடைந்த குன்மம் 3. பக்குவமடைந்த இரத்த குன்மம் 4. [7](விஸர்ப்பம்) அக்கி 5. கட்டிகள் இவை போன்ற இரத்தத்தில் தோன்றிய வீக்கங்களுக்கு குத்தி எடுக்கும் சிகிச்சை செய்ய வேண்டும். 57

---

1. நாடீவிரணம்-புரையோடியவிரணம்
2. பக்குவ விரணம்-பழுத்துப் போன விரணம்
3. க்ஷதோதரம்-அடிபட்டு வீங்கிய பெருவயிறு
4. பத்ததோதரம்-அடைப்பட்டுப் போன ஆஸனவாய் உடைய பெருவயிறு.
5. பாடனகர்மா-பிளத்தல் சிகிச்சை.
6. ஜலோதரம்-நீர்ப்பெருவயிறு
7. விஸர்ப்பம்-அக்கி

## 35. அறுத்து நீக்கத் தக்க நோய்கள்

1. முகமில்லாத கட்டி 2. மேல்பாகம் தடித்துள்ள விரணம் 3. மேலே எழும்பி நிற்கும் விரணம் 4. கெட்டித்தன்மையுள்ள விரணம் இவை போன்ற விரணங்கள் 5. மூல நோய் 6. அதிக மாமிச வளர்ச்சியுள்ள நோய் இவற்றில் அறுத்து நீக்கும் சிகிச்சையைக் (சேதன சிகிச்சை) கையாள வேண்டும்.

## 36. சுரண்டி எடுப்பதற்குரிய நோய்கள்

குஷ்டம் [1](கிலாஸம்) தோல் இவை போன்ற சுரண்டி எடுக்க வேண்டிய நோய்களில் அறிவாளியான மருத்துவன் [2](லேகனக்கிரியை) சுரண்டி எடுக்கும் சிகிச்சையைச் செய்ய வேண்டும். 58

## 37. கொத்தி எடுக்கத் தக்க நோய்கள்

வாதரக்தம் [3](கிரந்தி) நரம்பு முடிச்சு சிறிய கட்டிகள் கொப்புளம் இரத்த மண்டலம் குஷ்டம் அடிபட்ட உறுப்புகள் வீக்கமுள்ள உறுப்பு இவற்றில் கொத்தி எடுத்தல் என்னும் சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 59

## 38. தையல் போட வேண்டிய நோய்கள்

ஆழமான விரணமுள்ள வயிற்று உட்பகுதி வயிறு கிழிந்த பகுதி இவற்றில் தையல் போட வேண்டும். இவ்வாறு அறுவைச் சிகிச்சை அறுவகைப்படும். 60

## 39. [4]பீடனத்திற்கு (அமிழ்த்தி விடுவதற்கு) ஏற்ற நோய்கள்

மிகச்சிறிய முகமுள்ள விரணம் உட்பகுதியில் சீழ் மிகுந்துள்ள விரணம் போன்றவைகளுக்கு அமிழ்த்தி விடுதல் என்னும் சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 61

## 40. விரணத்தை அமிழ்த்துவதற்கு வேண்டிய பொருள்கள்

கடலை பயறு கோதுமை அரேணுகம் இவற்றைத் தண்ணீரில் அரைத்து எண்ணெயின்றி விரணத்தின் மேல் [5](அவபீடனம்) அமிழ்த்தி விடுவதற்கு எடுத்துக் கொள்க. 62

1. கிலாஸம்-தேமல்
2. லேகனம்-சுரண்டி எடுத்தல்
3. கிரந்தி-நரம்பு சுருட்டல்
4. பீடனம்-அமிழ்த்திவிடுதல்.
5. அவபீடனம்-அமிழ்த்திவிடுதல்.

)லவம்பட்டை சித்தாமுட்டிவேர் ஆலந்தளிர் இவற்றைச் சம அளவில் எடுத்து விழுதாகச் செய்து நெய் போன்ற எண்ணெய்ப்பசையுள்ளவற்றைச் சேர்க்காமல் விரணத்திற்கு அவபீடனம் செய்வதற்குப் பயன்படுத்துவது சிறந்தது.

## 41. விரணத்தை ஆற்றுவதற்கான [1]நியக்ரோதாதி லேபம்

[2]நியக்ரோதாதி கூட்டுப்பொருள் [3]சித்தாமுட்டி கூட்டுப் பொருள் இவற்றை மேற் பூச்சாகப் பூசி வீக்கத்தை ஆற்ற வேண்டும். இவற்றின் கஷாயத்தை [4](பரிஷேகத்தில்) மேலே ஊற்றுவதற்குப் பயன்படுத்தலாம். 63

## 42. [5]சததௌதகிருதத்தின் பயன்

இரத்தபித்தம் முக்கியமாயுள்ள விரணத்தை நூறு தடவை மடக்கிச் செய்த நெய் மிக்க குளிர்ச்சியுள்ள பால் அதிமதுர கஷாயம் இவற்றில் ஒன்றால் ஆற்ற வேண்டும். 64

## 43. விரணம் தோன்றியுள்ள பகுதியை ஒன்று சேர்க்கும் முறை

விரணத்திலிருந்து தொங்குகிற மாமிசத்தின் மேல் மருத்துவன் நெய்யையோ தேனையோ பூசி மாமிசத்தைச் சமநிலையில் வைத்துக் கட்டுக் கட்ட வேண்டும். 65

## 44. [6]பிரியங்குவாதி [7]அவசூரணத்தை மேலே தூவுதல்

ஞாழல் பாச்சோத்தி குமிழம் மஞ்சிஷ்டி காட்டாத்திப்பூ இவற்றைச் சூரணம் செய்து விரணத்தில் தொங்கும் மாமிசத்தைச் சீராகச் செய்து மேலே சூரணத்தைத் தூவ வேண்டும். 66

*பஞ்சவல்கல சூரணத்துடன் சங்கப் பொடி சேர்த்தோ காட்டாத்திப்பூ பாச்சோத்தி இவற்றின் சூரணத்தைச் சங்கப்

1. ந்யக்ரோதம்-ஆல்.
2. ந்யக்ரோதாதி கூட்டுப் பொருள்-46வது செய்யுளில் பார்க்க.
3. சித்தாமுட்டி கூட்டுப் பொருள்—47வது செய்யுளில் பார்க்க.
4. பரிஷேகம்-மேலே ஊற்றுதல்.
5. சததௌதம்-நூறு தடவை மடக்கிச் செய்தது.
6. பிரியங்கு-ஞாழல்
7. அவசூரணம்-மேலே தூவுதல்.

* பஞ்சவல்கலம்-ஆல் அரசு அத்தி இத்தி புரசு இவற்றின் பட்டைகள்.

பொடியில் சேர்த்தோ விரணத்தின்மேல் தூவ வேண்டும். வ
வாறு செய்வதால் அந்த விரணம் ஆறும். 67

## 45. உடைந்த எலும்பைச் சேர்க்கும் முறை

உடைந்த எலும்பு நழுவிய மூட்டு இவற்றை மற்ற உடைந்த உறுப்புகளுடன் சரியாக வைத்துச் சமமாக மருத்துவன் சேர்க்க வேண்டும். பஞ்சு வைத்து நேராகக் கட்ட வேண்டும். பிறகு உடைந்த அல்லது நழுவிய இடத்தில் தக்கையை வைத்து உறுதியாகச் செய்ய வேண்டும். பெரும் அளவில் நெய் தடவிய துணியினால் இதமாக அசையாமலிருக்கும்படி கட்டுக் கட்ட வேண்டும். 68-69

## 46. எலும்பு முறிந்த நோயாளிக்கு உணவு முறை

எலும்பு முறிந்த மூட்டு நழுவிய நோயாளிகளுக்கு எரிச்சல் உண்டாக்காத, புஷ்டியான உணவைக் கொடுக்க வேண்டும். மூட்டுகள் விலகாமலிருக்கும்படியான சோர்வை உண்டாக்காத உணவைக் கொடுக்க வேண்டும். 70

## 47. தொல்லைகளுக்கு சிகிச்சை

மூட்டு நழுவியுள்ள அடிபட்ட உறுப்புகளுள்ள நோயாளிக்கு அக்கி போன்ற நோய்கள் தோன்றினால் அவற்றிற்கு அந்நிலைகளை நன்கு அறிந்த மருத்துவன் தகுந்த சமயத்தில் சிகிச்சை செய்யவேண்டும். 71

## 48. விரணத்திற்கு வியர்ப்பிக்கும் சிகிச்சை

உலர்ந்து அதிக வேதனையுடன் நிலைத்திருந்த வாதத்தை முக்கியமாகக் கொண்ட விரணங்களில் (கிருசரம்) கிச்சடி பாயஸம் கிராமங்களில் வாழும் பிராணிகள் பொந்தில் வாழும் எலி போன்ற உயிரினங்கள் நீரில் வாழும் மீன் போன்றவை நீர் மிகுந்த நீர் நிலைகளின் அருகில் வாழும் பன்றி போன்றவை ஆகியவைற்றின் மாமிசத்தை முறைப்படி [1]வேசவாரமாகச் செய்து மிளகு போன்றபொருள்களைச் சேர்த்து மிகவும் சூடான [2]உத்தாரிகா (புட்டு) செய்து விரணத்தில் கட்டி வியர்ப்பிக்கச்

1. வேசவாரம்-எலும்பில்லாத மாமிசத்தை வேகவைத்து அரைத்து அரிசித்திப்பிலி, சுக்கு, மிளகு, வெல்லம் நெய் இவற்றுடன் கலந்து தயாரிக்கப்படும் தின்பண்டம்.
2. உத்காரிகா-பிட்டு.

செய்ய வேண்டும். இதனால் விரணத்தினால் துன்புற்ற நோயாளி சுகமடைகிறான். 72–73

எரிச்சலும் வேதனையும் கூடிய வாதத்தை முதன்மையாகக் கொண்ட விரணங்களுக்கு வறுத்த ஆளிவிதையையும் எள்ளையும் பால்விட்டு அரைத்து அந்தப் பாலிலேயே கரைத்து விழுதாக்கி மருத்துவன் மேற்பூச்சு பூசச் செய்ய வேண்டும். 74

## 49. வலியை நீக்குவதற்கு எண்ணெய்ப்பசை

சித்தாமுட்டி சீந்தில்கொடி அதிமதுரம் ஓரிலை தண்ணீர் விட்டாங்கிழங்கு கீரைப்பாலை இவற்றின் சூரணம் அல்லது கல்கத்தை (விழுதை) சர்க்கரை பால் நல்லெண்ணெய் மீன்வஸை நெய் ஆகியவைகளோடு ஒன்றாகச் சேர்த்துப் பக்குவம் செய்து தேன் மெழுகும் சேர்த்துத் தயாரித்து இந்தப் பசையை விரணங்களின் மேல் இட வலி நீங்கும். 75–76

*தசமூலப் பொருள்களால் முறைப்படி தயாரித்த சூடான கஷாயத்தில் சூடான பால் அல்லது சூடான எண்ணெய் நெய் சேர்த்து வலியுள்ள விரணத்தில் ஊற்ற வேண்டும். 77

யவசூரணம் எள்ளு அதிமதுரம் இவற்றின் மாவை நெய்யில் பிசைந்து சூடாகச் செய்து மேல் பூச்சுப் பூசினால் விரணத்தில் தோன்றுகிற எரிச்சல் குத்தல் வலி இவை தணிவடையும். 78

கருப்பு எள்ளையும் பயற்றையும் பாலில் வேகவைத்து கெட்டியான பாலை விரணத்தின் மீது வைத்துக் கட்டினால் எரிச்சல் குத்தல் வலி தணிவடையும். இது எரிச்சலையும் வேதனையையும் போக்குவதில் சிறந்தது. 79

## 50. ஏஷனி முறை (சலாகா முறை)

மிகச் சிறிய முகம் அதிக ஒழுக்கு ஒரே இடத்தில் சீழ் சேர்ந்துள்ளது உயிர் நிலைகளைத் தவிர்த்து ஏனைய இடங்களில் தோன்றியது ஆகிய விரணங்களில் ஏஷணியை (விரணத்தின் உள்ளே செலுத்தி ஆராயும் கருவி) செலுத்துவது நன்மையை அளிக்கவல்லது. 80

---

* தசமூலப்பொருள்கள்—வில்வம் முன்னை காட்டுவாகை பாதிரிகுமிழம் நெருஞ்சில் கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி ஓரிலை மூவிலை என்பவை.

சலாகா இரண்டு விதமானவை. 1. மரம் கொடி போன்றவற்றின் காம்புகளால் மிக மென்மையாகச் செய்யப்பட்டது. 2. இரும்பு போன்றவற்றால் மிகக் கடினமாகச் செய்யப்பட்டது. 81

அதிக மாமிசமும் மிக்க ஆழமுமுள்ள இடத்தில் தோன்றிய விரணத்தை இரும்பு போன்ற கடினமான சலாகையினால் எஷணம் (ஊடுருவிப்பார்த்தல்) செய்ய வேண்டும். இதற்கு மாறுபட்ட இடங்களில் தோன்றிய விரணத்தை மரம்கொடி போன்றவற்றின் மென்மையான காம்புகளால் ஊடுருவிப் பார்க்க வேண்டும் என்பதை மருத்துவன் அறிந்து கொள்ள வேண்டும். 82

அசுத்தமானது மிக்க துர்நாற்றமுள்ளது நிறம் மாறிய மேல் தோல் உள்ளது அதிக ஒழுக்கு உள்ளது குத்தல்வலி உள்ளது என இத்தகைய இலக்கணம் கொண்ட விரணங்கள் அசுத்தமான விரணங்கள் என்று அறிந்து கொள்க. இவற்றிற்குச் சோதன முறை (தூய்மையாக்கக்கூடிய) மருந்துகளால் சிகிச்சை செய்ய வேண்டும். 83

## 51. விரண [1]சோதன கஷாயம்

*திரிபலை கருங்காலி மரமஞ்சள் ஆல் அத்தி அரசு இத்தி நொச்சி இவற்றின் பட்டைகள் சித்தாமுட்டி தர்ப்பை வேப்பிலை இலந்தைஇலை இவற்றால் முறைப்படி தயாரித்த கஷாயத்தினால் விரணங்களைக் கழுவுதால் அவை தூய்மையாகின்றன. 84

## 52. தூய்மைப்படுத்த பூச்சு முறை

உப்புடன் கூடிய எள்ளின் கல்கம் (விழுது) மஞ்சள் மரமஞ்சள் சிவதை அதிமதுரம் வேப்பிலை இவற்றை விழுதாகச் செய்து நெய் கலந்து மேல் பூச்சு பூசினால் விரணம் தூய்மையடையும். 85

## 53. சுத்தமான விரணத்தின் இலக்கணம்

அதிகச் சிவப்போ வெண்மையோ கருப்போ ஆன நிறம் கொள்ளாமல் அதிக வேதனையற்ற மேல் எழும்பியிராத புரையோடாத விரணங்கள் சுத்தமானவை இவற்றிற்கு [2](ரோபண) சிகிச்சை செய்ய வேண்டும். 86

1. சோதனம்—தூய்மைப்படுத்துவது
* திரிபலா—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்
2. ரோபணம்—ஆற்றுவிப்பது

### 54. புண்ணை ஆற்றுவிக்கும் கஷாயம்

ஆல் அத்தி அரசு கடம்பம் இத்தி நொச்சி (கரவீரம்) அரளி எருக்கு வெட்பாலை ஆகிய பொருள்களால் முறைப்படி தயாரிக்கப்பட்ட கஷாயம் விரணத்தை ஆற்றும். 87

### 55. சந்தனாதி மேற்பூச்சு

சந்தனம் தாமரைக்கேசரம் மரமஞ்சள்பட்டை நீலத்தாமரை மேதா மகாமேதா பெருங்குறும்பை தொட்டால்சுருங்கி அதி மதுரம் ஆகியவற்றைச் சமஅளவில் எடுத்து முறைப்படி தயாரித்த கஷாயத்தினால் கழுவிய விரணங்கள் ஆறுகின்றன. அல்லது மேற் கண்ட பொருள்களை விழுதாகச் செய்து விரணத்தின் மேல் பூச விரணம் ஆறும். 88

பிரபௌண்டரீகக் கட்டை கீரைப்பாலை கோஜிஹ்வா காட் டாத்திப்பூ சித்தாமுட்டி கருப்பு எள்ளு ஆகிய பொருள்களைச் சமமாக எடுத்து விழுதாகச் செய்து பசுநெய் சேர்த்து விரணத்தின் மேற்பூச்சு பூசுவதனால் விரணம் ஆறும். 89

### 56. கம்பில்லகாதி தைலம்

கம்பில்லகம் வாயுவிடங்கம் வெட்பாலைப்பட்டை [1] திரிபலா சித்தாமுட்டி பேய்ப்புடல் வேம்பு பாச்சோத்தி கோரைக்கிழங்கு ஞாழல் கருங்காலி காட்டாத்திப்பூ குங்குலியம் சிறியஏலம் கருநிற அகில் சந்தனம் ஆகிய பொருள்களைச் சம அளவில் எடுத்து விழுதாகச் செய்து நல்லெண்ணெய் சேர்த்து முறைப்படி தயாரித்த தைலத்தை விரணத்தில் இட்டால் விரணம் விரைவில் ஆறும். இது விரணத்தை குணப்படுத்துவதில் சிறந்தது. 90–91

### 57. பிரபௌண்டரீகாதி தைலம்

பிரபௌண்டரீகக் கட்டை அதிமதுரம் காகோலி க்ஷீரகா கோலி வெண்சந்தனம் செஞ்சந்தனம் ஆகியவற்றை சமமாக எடுத்து விழுதாகச் செய்து எண்ணெயில் இட்டு முறைப்படி தயாரித்த இத்தைலம் விரணத்தை ஆற்றுவதில் சிறந்தது. 92

### 58. [2] தூர்வாகம்பில்லாதி தைலங்கள்

அறுகம்புல் சாற்றில் மரமஞ்சள் பட்டையை விழுதாக அரைத்துச் சேர்த்து முறைப்படி தயாரித்த எண்ணெய், கம்பில்லக

1. திரிபலை—கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்.
2. தூர்வா—அறுகம்புல் கம்பில்லகம்—கம்பிப்பாலை.

சாற்றில் மரமஞ்சள் பட்டையை விழுதாக அரைத்துச் சேர்த்து முறைப்படி தயாரித்த எண்ணெய் இவற்றுள் ஏதாவது ஒன்றை விரணத்தின்மேல் தடவ விரணம் விரைவில் ஆறும். இவை விரணத்தை ஆற்றுவதில் சிறந்தவை. 93

## 59. இரத்த பித்தத்தை முதன்மையாகக் கொண்ட விரணத்திற்கு நெய்

இரத்தபித்தத்தை முக்கியமாகக் கொண்டு ஆற்றத் தகுந்த விரணத்தை ஆற்றுவதற்கு எண்ணெய் தயாரிக்கும் முறைப்படி. நெய் தயார் செய்து மருத்துவன் பயன்படுத்த வேண்டும். 94

## 60. விரணத்தை மூடுவதற்கான இலைகள்

கடம்பம் மருதம் வேப்பம், பாதிரி புரசு எருக்கு எனும் மரங்களின் இலைகளை விரணத்தின் மேல் மூடுவதற்கு கற்றறிந்த மருத்துவன் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். 95

## 61. ங் கட்டுக் கட்டுதல்

மரத்தின் பட்டை மாந்தோல் பட்டுத்துணி இவற்றுள் ஏதாவது ஒன்றினால் விரணத்திற்குக் கட்டுக் கட்ட வேண்டும். அக்கட்டு இடது வலது என இரண்டு வகைப்படும். இவ்வொறு கட்டுவது நன்மையளிக்கவல்லது. 96

## 62. விரண நோயாளி நீக்கத்தக்கவை

உப்பு புளிப்பு கார்ப்பு சுவையுள்ளவை சூட்டையும் எரிச்சலையும் உண்டுபண்ணக் கூடியவை குருகுணமுள்ளவை ஆகிய உணவு குடிநீர் வகைகளைப் பயன்படுத்துவதையும் புணர்ச்சி முதலிய இவைகளையும் விரண நோயாளி நீக்க வேண்டும். 97

விரணங்களின் தோஷத்தின் நிலையை அறிந்து அதிக குரு குணமோ அதிக குளுமையோ எண்ணெய்ப்பசையோ இல்லாத எரிச்சலை உண்டாக்காததுமான உணவு குடிநீர் வகைகளைப் பயன்படுத்துவதும் பகலில் உறங்காதிருப்பதும் விரண நோயாளிக்கு நன்மையளிக்கும். 98

## 63. ஆழமான விரணத்திற்குச் சிகிச்சை

[1]தாய்ப்பாலை வளர்க்கக் கூடிய பொருள்கள் [2]ஜீவனீய கணம் எனும் கூட்டுப் பொருள்கள் [3]பிரும்மணீயமெனும் கூட்டுப் பொருள்கள் ஆகியவற்றை ஆழமான விரணங்களின் மேல் தூவ வேண்டும். 99

## 64. விரணத்திற்கு மேல்பூச்சு

பூவரசு இலையின் காம்பு அல்லது அன்னபேதி மலங்கழிக்கச் செய்யும் பொருள்கள் குக்குலு கலவிங்கப் பறவையின் மலம் புறாவின் மலம் இவற்றை அரைத்து விழுதாகச் செய்து விரணத்தின் மேல் பூசுவது [4]அவஸாதனம் எனப்படும். 100

## 65. விரணத்திற்குச் சூடு போடுதல்

அதிக இரத்தப்பெருக்கு உள்ளபோதும் துண்டிக்கத்தக்க மாமிசப்பகுதியைத் துண்டித்த பகுதியிலும் கபத்தினால் தோன்றிய முடிச்சு போன்ற கட்டிகளின்மீதும் கண்டமாலை எனக் கழுத்தைச் சுற்றி தோன்றியவிரணத்திலும் வாதத்தினால் நிலையாகத் தங்கியுள்ள விரணங்களிலும் உள்ளேயே அமுங்கி சீழும் நிணநீரும் வெளிவராமல் இருக்கும் விரணத்திலும் மிக ஆழமாகப் பரவியுள்ள விரணத்திலும் கடினமான விரணத்திலும் இரண்டாகத்துண்டிக்கப்பட்ட உறுப்புப்பகுதிகளிலும் சூடுபோடும் சிகிச்சை முறையைப் பயன்படுத்துவது நல்லது. 101–102

1. விளாமிச்ச வேர் 2. சம்பா தானியம் 3. அறுபதாம் குறுவை 4. நீண்ட கணுவுள்ள கரும்பு 5. தர்ப்பை 6. நாணல் 7 நருவிக்கரும்பு வேர் 8. கரும்புல் 9. செங்கரும்பு 10. காட்டுப்புல இவை தாய்ப் பாலை வளர்க்கும் பொருள்களாகும்.

2 ஜீவனீய கூட்டுப் பொருள்கள்—ஜீவகம், ரிஷபகம், மேதா மஹாமேதா காகோலி க்ஷீரகாகோலி, காட்டுப் பயறு காட்டுஉளுந்து கிரைப்பாலை அதிமதுரம்.

3 பிரும்மணீய கூட்டுப் பொருள்கள்—பால்முதுக்கன்கிழங்கு கண்டங்கத்திரி (ராஜக்ஷவகம்) அமுக்கிராக்கிழங்கு காகோலி க்ஷீரகாகோலி வெண்சித்தாமுட்டி மஞ்சள் சித்தாமுட்டி காட்டுபருத்தி முதுக்கன் கிழங்கு ரிஷ்ய கந்தா

அவஸாதனம்—மேலே பூசுவது (தூவுவது)

## 66. (அக்கினிகர்மா) எரிப்பதற்கு உகந்த பொருள்கள்

சூடான தேன்மெழுகு எண்ணெய் மஜ்ஜை தேன் கொழுப்பு நெய் இவற்றாலோ அக்கினிகர்மாவில் கூறப்பட்டுள்ள பலவகையான இரும்புக் கருவிகளாலோ திறமைசாலியான மருத்துவன் சூடு போட்டு எரித்து விட வேண்டும். 103

## 67. எரித்து விடும் சிகிச்சைக்கு உரியவை

வறண்ட விரணம் மென்மையான உடலுடையவர்களின் விரணம் ஆழமான விரணம் வாதத்தை முக்கியமாகக்கொண்ட விரணம் இவற்றில் நெய் எண்ணெய் வசை மஜ்ஜை தேன்மெழுகு ஆகியவற்றைக் கொண்டு எரிக்கும் சிகிச்சையை செய்ய வேண்டும். இவற்றிற்கு மாறுபட்ட விரணங்களில் இரும்பினால் தயாரித்த கருவி தேன் இவற்றால் எரித்து விடும் சிகிச்சையைச் செய்ய வேண்டும். 104

## 68. எரித்து விடும் சிகிச்சைக்குத் தகாதவர்

சிறுவர் வலிமைகுன்றியவர் முதியோர் கரு தரித்தவர்கள் இரத்த பித்த நோயாளி நாவறட்சியாலும் காய்ச்சலினாலும் துன்புறுவோர் மகளிர் வருத்தமுற்றவர் இவர்களுக்கு எரிக்கும் சிகிச்சை செய்யக்கூடாது. மேலும் நரம்புகள் உயிர்நிலைகள் இவற்றில் தோன்றிய விரணங்கள் நஞ்சினால் ஏற்பட்ட விரணங்கள் கல் கட்டை ஆணிபோன்றவற்றால் உள்ளுக்குள்ளே குத்துண்ட விரணங்கள் கண்களில் தோன்றிய விரணங்கள் குஷ்டத்தில் தோன்றிய விரணங்கள் இவைகளுக்கு (அக்கினிகர்மா) எரிக்கும் சிகிச்சை செய்யக்கூடாது. 105-106

## 69. விரணத்திற்கு [1] க்ஷாரகர்மா

நோய் தோஷம் அளவு காலம் எரிக்கும் சிகிச்சைக்குத் தகுதி வலிமை இவற்றை அறிந்த மருத்துவன் அறுவைச்சிகிச்சையும் அக்கினிகர்மாவும் செய்யத்தகுதியுள்ள இடங்களில் க்ஷாரத்தைப் பயன்படுத்த வேண்டும். 107

## 70. விரணத்திற்குப் புகை போடுதல்

அகில் சந்தனம் குங்குலியம் போன்ற வாசனைப் பொருள்களால் புகைபோடுவதால் மென்மையான விரணங்கள்

1. க்ஷார கர்மா—காரப்பொருட்களை விரணத்தில் போடுவது.

கெட்டிப்படும். நெய் மஜ்ஜை வஸை இவற்றால் புகைபோட்டால் கெட்டியாக உள்ள விரணம் சிதைந்து மென்மையாகும். இவ்விருவகை புகை போடும் முறைகளால் வேதனை ஒழுக்கு கெட்ட நாற்றம் விரணத்தில் தோன்றிய கிருமிகள் இவை அழிந்து விடுகின்றன. மேலும் கடினவிரணம் (சிதிலம்) மென்மையடையும். மென்மையானது கெட்டிப்படும். 108–109

## 71. விரணத்தில் கடினத்தன்மை உண்டுபண்ண மேற்பூச்

பாசசோத்தி ஆலம்மொட்டு கருங்காலி *திரிபலை இவற்றைச் சம அளவில் எடுத்து விழுதாகச் செய்து நெய் சேர்த்து மேற்பூச்சு பூசினால் விரணத்தின் மென்மைத் தன்மையும் தளர்ச்சியும் (சிதிலம்) நீங்கும். 110

குத்தல் எரிச்சல் வேதனை கடினத்தன்மை அசைவற்றதன்மை ஒழுக்கு இவைகள் அற்ற விரணத்திற்கு யவதானியமாவில் நெய் சேர்த்து அடிக்கடி மேற்பூச்சு பூச வேண்டும். 111

பயறு அறுபதாங்குறுவையரிசி இவற்றைப்பாலில் வேக வைத்துப் பாயஸமாகச் செய்து முறைப்படி மேற்பூச்சு பூச வேண்டும். அல்லது [1]ஜீவனீய கூட்டுப் பொருள்களை விழுதாகச் செய்து கடினமாக உள்ள விரணத்தில் அடிக்கடி [2]தர்ப்பணக் கிரியை செய்ய வேண்டும். 112

## 72. மேல்தோல் தோன்றுவதற்குச் சிகிச்சை

மருதம் அத்தி அரசு பாச்சோத்தி நாவல் எனும் மரங்கள் பெருங்குமிழம் இவற்றின் பட்டைகளைச் சூரணமாகச் செய்து விரணத்தின் மேல் தூவுவதனால் விரைவில் தோல் உற்பத்தியாகும். 113

## 73. தோலைத் தூய்மைப்படுத்த மேற்பூச்சு

மனோசிலை ஏலக்காய் மஞ்சிஷ்டா [illegible] மஞ்சள் மராமஞ்சள் ஆகியவற்றைத் தூள் [illegible] துணியால் சலித்து

* திரிபலை—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்.

1. ஜீவனீய கூட்டுப் பொருள்கள்—மேதா மஹாமேதா காகோலி க்ஷீரகாகோலி ஜீவகம் ரிஷபகம் காட்டுப் பயறு காட்டுஉளுந்து அதிமதுரம் கீரப்பாலை.
2. தர்ப்பணக்கிரியை—புஷ்டியைக் கொடுக்கக்கூடியது.

நெய்யும் தேனும் கலந்து மேற்பூச்சு பூசுவது தோலை வளர்ப்பதில் சிறந்தமுறையாகும். 114

## 74. தோலில் கருமை நிறத்தை உண்டாக்கும் சிகிச்சை

இரும்புத்துள் அன்னபேதி திரிபலையின் பூக்கள் ஆகியவற்றைச் சேர்த்து விழுதாகச் செய்து மேற்பூச்சு பூசுவதனால் விரைவில் தோல் கருநிறமடையும். 115

## 75. தோல் இயற்கை நிறமாவதற்குச் சிகிச்சை

[1] காலீயகம் மஞ்சள் சந்தனம் அகில் பாம்பருப்பு சிறுநாகப்பூ மஞ்சிஷ்டி பாதரஸம் ஆகிய பொருள்களைப் பசுஞ்சாணத்தின் சாற்றில் குழைத்து மேற்பூச்சு பூசினால் தோலின் நிறம் இயற்கை நிலையை அடையும். 116

வெட்டிவேர் சியாமகம் அரசமரம் நொச்சிமரம் இவற்றின் வேர் கொம்பரக்கு பூங்காவி சிறுநாகப்பூ (அமிருதாஸங்கம்) என்ற வாசனைப் பொருள் அன்னபேதி ஆகிய பொருள்களை அரைத்து மேற்பூச்சாகப் பூசினால் தோல் தன்இயற்கைநிறத்தை அடையும். 117

## 76. உரோமம் தோன்றுவதற்கு மருந்து

நான்கு கால்கள் உள்ள பிராணிகளுடைய தோல் உரோமம் குளம்பு கொம்பு எலும்பு ஆகியவற்றைச் சாம்பலாகச் செய்து வைத்துக் கொள்க. இதை உரோமம் வளரவேண்டிய இடத்தின் மேலே எண்ணெய் தடவிய பிறகு தூவவேண்டும். அதனால் அந்த இடத்தில் உரோமம் வளரும். 118

இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள பதினாறு வகையான துன்பங்களுக்கும் முறைப்படி சிகிச்சை நிலைமைக்கு ஏற்றவாறு சொல்லப்பட்டுள்ளது. 119

### முடிவுரை

த்விவிரணீயம் என்னும் சிகிச்சாத்தியாயத்தில் 1. இரண்டு வித விரணங்கள் 2. விரணத்தின் வேறுபாடு 3. விரணத்தின் பரிசோதனை 4. துஷ்டவிரணம் 5. விரணத்தின் இடம் 6. விரணத்தின் நாற்றம் 7. விரணத்தின் ஒழுக்கு 8. விரணத்

1. காலீயகம்—மஞ்சள் சந்தனம்.

தினால் தோன்றும் தொல்லைகள் 9. விரணத்தின் சிகிச்சை ஆகிய ஒன்பது விதமான கேள்விகளுக்குப் பதிலைச்சுருக்கமாகவும் விவரமாகவும் அக்கினிவேசருக்கு ஆத்திரேய முனிவர் அருளியிருக்கிறார். *120—121*

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கபட்டு திருட பலரால் நிறைவு செய்யப்பட்ட
சரகஸம்ஹிதையில் சிகித்ஸாஸ்தானத்தில் த்விவிரணீய சிகிச்சை
என்னும் இருபத்தைந்தாவது அத்தியாயம் முற்றும்.

## இருபத்தாறாம் அத்தியாயம்

# *திரிமர்மீய சிகிச்சை

இனி தலை சிறுநீர்ப்பை இதயம் என்னும் இம்மூன்று உயிர் நிலைகளிலும் தோன்றும் நோய்களுக்குத் தக்க சிகிச்சை முறைகள் ஆத்ரேய முனிவர் கூறியபடி விளக்கப்படுகின்றன. 1—2

உடற்கூற்றை விளக்கும் பொழுது நூற்றியேழு உயிர் நிலைகளில் சிறுநீர்ப்பை இதயம் தலை என்னும் இம்மூன்றும் உயிருக்கு இலக்காகி இருப்பவையாகையால் அவை முக்கியமானவை என மருத்துவர் கூறுகின்றனர். சீற்றமடைந்த வாத பித்த கபங்களாகிய தோஷங்கள் உயிருக்கு இருக்கைகளான அம்மூன்றையும் துன்புறுத்தினால் உயிரும் துன்பமடையும். எனவே உயிருக்கு முக்கிய நிலைக்களன்களாகிக் கொடிய நோய்களுக்கு இலக்காகக் கூடிய அம்மூன்றையும் நோய்கள் தாக்காமல் காப்பாற்றும் முறைகளைக் கூறுவேன், கேள் என ஆத்திரேய முனிவர் அக்னிவேசரை நோக்கிக் கூறினார். 3—4

### 1. சிறுநீர்ப்பையைத் தாக்கும் நோய்களின் தோற்றம்

துவர்ப்பு கசப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண்டவையும் வறண்டவையும் ஆன உணவுப் பண்டங்களை உண்பதாலும் சிறுநீர் மலம் இவற்றை வெளியேறாமல் அவற்றின் வேகங்களைத் தடுத்தலாலும் உண்ணாமல் பட்டினி கிடப்பதாலும் கலவியின் பத்தில் மிகுதியாக ஈடுபடுதலாலும் சீரணப்பையில் இருக்கும் அபானம் என்னும் காற்று சீற்றமடையும். அப்பொழுது வலிமை

* திரிமர்மீயசிகிச்சை—தலை சிறுநீர்ப்பை இதயம் என்னும் மூன்று உயிர் நிலைகளிலும் தோன்றும் நோய்களுக்குச் சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் இப்பெயர் கொண்டது.

1. உயிர் நிலைகள்-மூளை, இருதயம் சிறுநீர்ப்பை போன்ற உறுப்புகளிலும், ஊன், தசை நார், எலும்பு ஆகியவை கூடுமிடங்களிலும் உள்ள உணர்ச்சிமிக்க நுண்ணிய பகுதிகள்.

கொண்ட காற்று தொப்புளுக்குக் கீழ்ப்பகுதியில் உள்ள துவாரங்களைச் செயல்படாமல் தடுத்து மலத்தையும் அபானத்தையும் சிறுநீரையும் வெளியேறாமல் தடுத்து விடும். அதனால் (மேல் நோக்கிப் பரவும்) உதாவர்த்தம் என்னும் கொடிய வாத நோய் தோன்றும். 5

## 2. உதாவர்த்தம் என்னும் வாதத்தின் இலக்கணம்

சிறுநீர்ப்பையிலும் இதயத்திலும் வயிற்றிலும் அடிவயிற்றிலும் முதுகிலும் விலாக்களிலும் கொடியவலி இடைவிடாமல் தோன்றும். வயிற்று உப்புசம் ஓக்காளம் கத்திரியால் வெட்டுவது போன்ற வலி குத்தல் அசீரணம் சிறுநீர்ப்பையில் வீக்கம் என்பன தோன்றும். மேலும் மலம் வெளியேறாது. வயிற்றின் மேல் சிறுகட்டிகள் தோன்றும். ஆஸனவாயில்அபானம் தடுக்கப்பட்டு மேல் நோக்கிப் பரவும். அப்பொழுது விந்து வெகுநேரம் கழித்து மிக்க துன்பத்துடன் வெளியாகும். அல்லது வறண்டு கடினமாகவோ சீதத்துடனோ மிகவும் குறைந்த அளவில் வெளியேறும். 6—7

## 3. உதாவர்த்தத்தினால் தோன்றும் நோய்கள்

முன்பு கூறிய உதாவர்த்தம் என்னும் மேல் நோக்கிப் பரவும் வாதத்தால் காய்ச்சல் நீர்ச்சுருக்கு [1] பிரவாஹிகை மார்வலி இரஹணி வாந்தி குருட்டுத்தன்மை செவிட்டுத் தன்மை தலையில் எரிச்சல் வாதஉதரம் அஷ்டீலா என்னும் வாத நோய் மனத்தில் விகாரம் நாவறட்சி இரத்தபித்தம் சுவையின்மை குன்மம் இழுப்பு இருமல் பீநஸம் (நாட்பட்டசளி) அர்த்திதம் என்னும் வாதம் விலாவலி என்பனவும், வாதத்தால் தோன்றக் கூடிய ஏனைய கொடிய நோய்களும் தோன்றும். 8—9

## 4. உதாவர்த்தத்திற்குச் சிகிச்சை

உதாவர்த்தம் என்னும் நோயினால் துன்பப்படுபவனுக்கு குளிர்க்காய்ச்சலைப் போக்கும் அகில் முதலியவற்றினால் தயார் செய்யப்பட்ட எண்ணெயைப் பூசி உடல்வியர்க்கச்செய்து தோஷங்கள் மென்மையடைந்த பின் பலவர்த்தி நிரூஹவஸ்தி எண்ணெய் வஸ்தி முதலிய பேதியாகச் செய்யும் வஸ்தி முறைகளைப் பயன் படுத்தி வாதத்தைக் கீழ்நோக்கிச் செலுத்தும் உணவுநீர் வகைகளைப் பயன்படுத்தவேண்டும். 10—11

1. பிரவாஹிகை - வயிற்றுவலியுடன் முக்கி முக்கி மலம் கழித்தல்.

## 5. உதாவர்த்தத்திற்குப் [1]பலவர்த்தி

கருஞ்சிவதை வெண்சிவதை திப்பிலி நேர்வாளவிதை (அல்லது வேர்) அவுரிவேர் இவை ஒவ்வொரு பங்கும் உளுந்துமாவு பத்து பங்கும் இந்துப்பு இரண்டு பங்கும் கலந்து பசுவின் சிறு நீருடன் மைய அரைத்துத் தகுந்த அளவு வெல்லம் சேர்த்துக் கைக்கட்டை விரல் பருமனுள்ள திரியாகச் செய்ய வேண்டும். மேலும் எள்ளின் (பிண்ணாக்கு) தூள் சௌவர்ச்சல உப்பு பெருங் காயம் கடுகு திரிகடுகம் யவக்ஷாரம் இவற்றைச் சம அளவில் கலந்து அரைத்து திரியாகச் செய்யுமளவிற்குத் தக்கபடி வெல்ல மும் உளுந்தும் கலந்து அரைத்து வத்தியாகச் செய்ய வேண்டும். அல்லது வாயுவிடங்கம் கம்பில்லகம் சங்கபுஷ்பி இவற்றைக்கள்ளிப் பாலும் எருக்கம்பாலும் சேர்த்து அரைத்து வெல்லம் கலந்து வத்தியாகச் செய்க. திப்பிலி கடுகு மருக்காரக்காய் ஒட்டடை இவற்றைப் பசுவின் சிறுநீருடன் அரைத்து வெல்லம் கலந்து வத்தியாகச் செய்தும் பயன்படுத்தலாம். அல்லது கருஞ்சிவதை மருக்காரக்காய் பேய்ச்சுரை திப்பிலி இவற்றைத் தூளாக்கிக் குழாய் மூலம் ஆஸனவாய்க்குள் செல்லுமாறு ஊதிப் பயன்படுத்த வேண்டும். 12–14

## 6. பலவர்த்தியைப் பயன்படுத்துதல்

கடுகு பேய்ச்சுரை மருக்காரக்காய் திப்பிலி பேய்ப்பீர்க்கு இந்துப்பு இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்குக. ஆஸன வாயில் எண்ணெயைப் பூசி குழாய் வைத்து ஊதி அதன்மூலம் அத்தூளை உட்செலுத்த வேண்டும். (முன்பு கூறிய வத்திகளை யும் ஆஸனவாயில் எண்ணெயைப் பூசியபின் உட்செலுத்த வேண்டும். அல்லது அவ்வாறே முன் கூறிய மருந்துத் துகள் களையும் குழாய் மூலம் உள்ளே செல்லுமாறு ஊதி ஏற்ற வேண்டும்.) இவற்றால் திசைமாறி மேல் நோக்கிப் பரவும் அபானவாதம் கீழ்நோக்கிச் சரிவர இயங்கும். 15

## 7. உதாவர்த்தத்தில் நிரூஹவஸ்தி

முன்பு கூறிய முறைகளால் உதாவர்த்தம் தணிந்து சிறு நீரும் மலமும் வெளியேறாமல் தடைப்பட்டிருக்குமாயின் நோயாளிக்கு முதலில் எண்ணெய்க்குளியல் செய்வித்து உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்தி மேல் நோக்கிச்

1. பலவர்த்தி—மருந்துப் பொருளை வத்தியாக்கி ஆஸன வாயினுள் செலுத்தும் முறை.

சென்ற தோஷங்களை கீழ்நோக்கிச் செலுத்தும் மருந்துகளையும் சிறுநீர் எண்ணெய் வகை க்ஷாரம் புளிப்புச் சுவையுள்ள சாறு வகைகள் முதலியவற்றையும் வாதத்தை நீக்கக்கூடிய மருந்துகளுடன் கலந்து மிக்கவலிமை கொண்ட நிரூஹவஸ்தியைப்பயன் படுத்த வேண்டும். வாதம் மிகுந்திருந்தால் புளிப்பு உவர்ப்புப் பொருள்களுடன் கூடிய எண்ணெயையும் பித்தம் மிகுந்திருந்தால் பசும் பாலையும் கபம் மிகுந்திருந்தால் பசுவின்சிறுநீரையும் கலந்து நிரூஹவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். நிரூஹவஸ்தி, மலக்கட்டையும் சிறுநீர்த்தடையையும் அபானத் தடுப்பையும் போக்கி அவற்றை விரைவாக வெளியேற்றி ஆஸனவாய்ப் பகுதியிலுள்ள நரம்புகளையும் ஆஸனவாயையும் தூய்மைப்படுத்தும். 16–17

## 8. உதாவர்த்தத்திற்கு உணவு நீர் வகை

உதாவர்த்த நோய் கொண்டவன் யவ அரிசிச் சோற்றை சிவதைஇலை கள்ளிஇலை எள் முதலியவற்றுடனும் சிற்றூர்களிலும் நீரிலும் சதுப்பு நிலத்திலும் வாழும் உயிரினங்களின் புலால் சாற்றுடனும் உண்ணவேண்டும். மற்றும் வாதம் மலம் சிறுநீர் இவற்றை வெளியேற்றும் பொருள்களுடன் கூடிய யவ அரிசிச் சோற்றை உண்ண வேண்டும். நாவறட்சி தோன்றினால் கள் தெளிவையாவது வெல்லத்தால் செய்த சீது என்னும் கள்ளையாவது உணவுடன் பருக வேண்டும். 18

## 9. உதாவர்த்தத்திற்குப் பேதியாகச் செய்தல்

முன் கூறியபடி நிரூஹவஸ்தியைப் பயன்படுத்தினாலும் உதாவர்த்தம் தணியாமல் தொடர்ந்திருந்தால் பசுவின் சிறுநீர் கள்தெளிவு தயிர்த்தெளிவு சுக்தம் (ஒருவகைகாடி) என்பனவற்றில் ஏதேனும் ஒன்றுடன் பேதியாகச் செய்யும் மருந்தைக் கொடுக்க வேண்டும். பிறகு உடல் நலத்துடன் இருக்கும்போது ஒரு வேளை வறட்சியால் வாதமும் மலமும் தடைப்பட்டிருந்தால் அநுவாஸன வஸ்தியைப் (எண்ணெய் வஸ்தி) பயன்படுத்த வேண்டும். 19

## 10. உதாவர்த்தத்திற்கு ஹிங்குவாதி சூர்ணபானம்

பெருங்காயம் வசம்பு கொடிவேலி கோஷ்டம் ஸர்ஜக்ஷாரம் வாயுவிளங்கம் இவற்றை ஒன்றைவிட மற்றொன்று இரண்டு பங்காக இருக்கும்படிச் சேர்த்துப் பொடி செய்து இளஞ்சூடுள்ள நீரில் கலந்து பருகச் செய்தால் வயிற்று உப்புசம் காலரா மூல நோய் குன்மம் உதாவர்த்தம் என்னும் நோய்கள் நீங்கும். 20

### 11. *வசாதி சூரணம்

வசம்பு கடுக்காய்த்தோல் கொடிவேலிப்பட்டை யவக்ஷாரம் திப்பிலி அதிவிடயம் கோஷ்டம் என்னும் இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி வெந்நீரில் கலந்து பருகச் செய்து புலால் சாற்றுடன் உணவு கொள்ளச் செய்தால் வயிற்று உப்புசம் மூட வாதம் என்பன நீங்கும். 21

### 12. [1]ஹிங்கு, [2]உக்ரகந்தாதி சூரணம்

பெருங்காயம் ஒரு பங்கு ஓமம் இரண்டு பங்கு பிடாலவணம் மூன்று பங்கு சுக்கு நான்கு பங்கு சீரகம் ஐந்து பங்கு கடுக்காய்த் தோல் ஆறு பங்கு புஷ்கரமூலம் ஏழு பங்கு கோஷ்டம் எட்டு பங்காகக் கொண்டு அனைத்தையும் சேர்த்துத் தூளாக்கி இளஞ்சூடுள்ள நீரில் கலந்து பருகச் செய்தால் மண்ணீரல் வீக்கம் வயிற்று நோய் அசீரணம் காலரா என்னும் நோய்கள் நீங்கும். 22

### 13. உதாவர்த்தத்திற்கு லகுபஞ்சமூலாதிகிருதம்

மூவிலை ஓரிலை கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி நெருஞ்சில் சாரணை புளிவஞ்சி பூதிககரஞ்சம் (கெட்ட நாற்றத்துடன் கூடிய புங்கன்) இவற்றை ஒவ்வொன்றும் இரண்டு பலம் வீதம் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி அதில் 16 பலம் அளவு நெய் கலந்து முறைப்படி நெய்ப்பக்குவம் செய்து அதை அபானவாயு தடைப்பட்டிருக்கும் பொழுது பயன்படுத்தினால் துன்பம் நீங்கும். 23

### 14. வயிற்றுப்புசத்தைப் போக்கும் பஞ்சலவண சூரணம்

முன்பு கூறப்பட்ட [3]பேதியாகச் செய்யக் கூடிய பழங்கள் வேர்கள் பெருங்காயம் எருக்கன்வேர் தசமூலங்கள் கள்ளி சித்தரத்தை சாரணை இவற்றைச் சம அளவில் சேர்த்து அனைத்திற்கும் சம அளவு ஐந்து வகை உப்புகளையும் சேர்க்கவும், அத்துடன் நெய் முதலிய எண்ணெய் வகைகளையும் பசுவின் சிறுநீரையும் கலந்து அரைத்து அடை போல் செய்து மண் மடக்கிலிட்டு வேறொரு மடக்கால் மூடி சீலைமண் பூசி புடம் போடவும். பக்குவமாகிய அந்த லவணத்தைச் சூரணமாக்கி உணவு நீர் இவற்றில் கலந்து பயன்படுத்தினால் வயிற்று உப்புசம் உதாவர்த்தத்தினால் தோன்றும் துன்பங்கள் நீங்கும். 24-25

* வசா—வசம்பு.
1. ஹிங்கு—பெருங்காயம்.
2. உக்ரகந்தா—ஓமம்.
3. தீர்கஞ்சீவிதீயாத்யாயத்தில் காண்க.

### 15. *ஆநாஹ இலக்கணமும், சிகிச்சையும்

மலம் தடைப்பட்டுப் போதல் தலைவலி போன்ற தலை நோய்கள் உடல்பளு ஏப்பம் தாராளமாக வராமல் தடைப்படுதல் சளி ஒழுகுதல் என்னும் இலக்கணங்களுடன் ஆம தோஷத்தினால் ஆநாஹம் என்னும் நோய் தோன்றும். அதற்கு வாந்தி எடுக்கச் செய்தல் பட்டினி கிடத்தல் சீரணவலிமையைத் தரும் மருந்துகளைக் கொடுத்தல் என்ற வகையில் சிகிச்சை செய்ய வேண்டும். (உதாவர்த்தம் என்னும் நோயே மேற்கூறிய இலக்கணங்களுடன் கூடியபொழுது ஆநாஹம் என்று கூறப்படும்.) 26

### 16. உதாவர்த்தம் குன்மம் முதலியவற்றிற்கு [1]ஏரண்ட தைலம்

குன்மம் பெருவயிறு பிரத்னம் (தொடை இடுக்குகளில் நரம்பு வீங்குதல்) மூலநோய் மண்ணீரல்வீக்கம் உதாவர்த்தம் பெண்குறிநோய்கள் விந்துநோய்கள் கொழுப்புடனும் கபத்துடனும் கூடிய வாதரத்தம் கம்பீரவாதரத்தம் கிருத்ரஸீவாதம் பக்கவாதம் முதலிய (பேதியாவதற்கு மருந்துகொடுக்க வேண்டிய) வாத நோய்கள் கொழுப்பினாலும் கபத்தினாலும் பித்தரத்தங்களினாலும் வாதம் செல்லும் வழி தடுக்கப் படுதல் முதலியவற்றிற்கு ஆமணக்கு எண்ணெயைப் பாலுடனோ புலால்சாற்றுடனோ திரிபலை கஷாயத்துடனோ கஞ்சி வகைகளுடனோ பசுவின் சிறுநீருடனோ மதிரை என்னும் கள்ளுடனோ சேர்த்து அந்தந்த தோஷங்களுக்கு ஏற்றவாறு யுக்தியுடன் பயன்படுத்துவது சிறந்த முறையாகும். 27—29

### 17. ஆமணக்கு எண்ணெயின் தன்மை

ஆமணக்கு எண்ணெய் இயற்கையிலேயே வாதத்தைப் போக்கும் தன்மைகொண்டது. அது பால் முதலியவற்றுடன் சேருவதாலும் அதனால் பேதியாகச் செய்வதாலும் கொழுப்பு இரத்தம் பித்தம் கபம் என்பனவற்றுடன் கூடிய வாதத்தைப் போக்குவதாகும். 30

### 18. ஆமணக்கு எண்ணெயைப் பயன்படுத்த வேண்டிய அளவு

நோயாளியின் வலிமை குடலின் தன்மை நோயின் நிலை என்பனவற்றைக் கவனித்து ஐந்து பலம்வரை அளவாகக் கொண்டு ஆமணக்கு எண்ணெயைப் பயன்படுத்த வேண்டும். மென்மை

---

* ஆநாஹம்—வயிற்று உப்புசம்.

1. ஏரண்டம்—ஆமணக்கு

யான குடல உடையவருககும உடல வல்மை குறைந்துள்ளவர் களுக்கும் உணவுப் பொருள்களுடன் கலந்து பயன்படுத்த வேண்டும். (இவ்வாறு சிறுநீர்ப்பையைச் சார்ந்து தோன்றும் நோய்களுக்குச் சிகிச்சை கூறப்பட்டுள்ளது). 31

## 19. நீர்ச்சுருக்கின் முற்குறி

உடல் உழைப்பு மிகுதியாகச் செய்தல் வன்மை (தீக்ஷ்ணம்) யான மருந்துகளையும் வறட்சித்தன்மை கொண்ட கள்ளையும் இடைவிடாமல் உட்கொள்ளுதல் மிக்க விரைவாக ஓடுதல் குதிரை முதலிய ஊர்திகளில் ஏறி சவாரி செய்தல் சதுப்பு நிலத்தில் தோன்றும் விலங்குகளின் புலாலை உண்ணுதல் மீன்களை மிகுதியாக உண்ணுதல் உண்டதும் மறுபடி எதையேனும் உண்ணுதல் அசீரணத்தைத் தோற்றுவிக்கக் கூடிய பண்டங்களை உண்ணுதல் முதலிய எண்வகைக் காரணங்களால் நீர்ச்சுருக்கு தோன்றும். 32

## 20. நீர்ச்சுருக்கின் தோற்றம்

வாதம் முதலிய தோஷங்கள் அவற்றிற்குக் கூறப்பட்ட காரணங்களால் தனித்தனியாகவோ ஒன்று சேர்ந்தோ சிறுநீர்ப் பையில் சேர்ந்து சிறுநீர் வெளியேறும் வழியைத் தடுத்துத் துன் புறுத்தி மிக்க கஷ்டத்துடன் சிறுநீர் வெளியேறும்படிச் செய்யும். 33

## 21. நீர்ச்சுருக்கின் இலக்கணம்

நீர்ச்சுருக்கு வாதத்தினால் தோன்றினால் தொடையிடுக்கிலும் சிறுநீர்க்குழாயிலும் சிறுநீர்ப்பையிலும் மிக்க வலி குத்தல் முதலியவை காணப்படும். சிறுநீர் சிறிது சிறிதாக வெளியேறும். நீர்ச்சுருக்கு பித்தத்தினால் தோன்றினால் மஞ்சள் நிறத்துடன் இரத்தம் கலந்து மிக்க எரிச்சலும் குத்தல்வலியும் உண்டாகி மிக்க கஷ்டத்துடன் பல முறை சிறுநீர் வெளியேறும். 34

கபபித்தத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கில் சிறுநீர்ப்பையிலும் சிறுநீர்க்குழாயிலும் வீக்கமும் பளுவும் தோன்றி சிறுநீர் தடித்துக் கலங்கிய நிறங் கொண்டு மிகவும் கஷ்டத்துடன் பல முறை வெளியேறும்.

ஸந்நிபாத நீர்ச்சுருக்கில் வாதம் முதலிய மூன்றிற்குக் கூறப் பட்ட காரணங்களால் மூன்று தோஷங்களும் ஒன்றாகச் சீற்ற முற்று சிறுநீர்ப்பையில் சேர்ந்து மூன்று தோஷங்களினால் தோன்றிய நோய்க்கு உரிய இலக்கணங்களனைத்தும் கொண்டு

சிறுநீரை மிகவும் கஷ்டத்துடன் வெளியேற்றும். இது மிகவும் கஷ்டப்பட்டு சிகிச்சை செய்வதால் தணிக்கக்கூடிய நோய் ஆகும். 35

## 22. சிறுநீர்ப்பையில் கல் தோன்றுதல்

வாதம், சீற்றம் அடைந்து சிறுநீர்க்குழாயில் சேர்ந்து அதன் வழியை அடைத்து சிறுநீரை மட்டுமோ விந்து கலந்த . சிறு நீரையோ நீர்த்தோற்றத்திலிருக்கும் பித்தத்துடன் கூடிய சிறு நீரையோ கபத்துடன் கூடிய சிறுநீரையோ (தன்னிடத்திலுள்ள வற்றச் செய்யும் தன்மையால்) உலர்ந்து போகச் செய்யும். அவ்வாறு வறண்டுபோன சிறுநீரில் கரைந்துள்ள பித்தம், கபம் அல்லதுவிந்து இவைகள் உறைந்து போவதால் பசுவின் பித்தத்தில் கோரோசனம் தோன்றுவது போல் கடினமான பொருள் தோன் றும். இது (அச்மரீ)கல் என்று கூறப்படும். 36

## 23. சிறுநீர்ப்பையில் தோன்றும் கல்லின் இலக்கணம்

அவ்வாறு சிறுநீர்ப்பையில் தோன்றும் கல் கடம்பமலரைப் போல் தோற்றமும் நிறமும் கொண்டு கல்லைப்போல் கடின மாயும் வழவழப்புடன் முக்கோணவடிவில் மூன்று பொறை களுடனும் மென்மையுடனும் இருக்கும். அது சிறுநீர்வழியை யடைந்து சிறுநீர் வெளிவராமல் தடுத்துச் சிறுநீர்ப்பையில் கொடியவலியையும் குத்தலையும் தோற்றுவிக்கும். 37

## 24. அச்மரீ மூத்ரகிருச்சிரத்தின் இலக்கணம்

முன் கூறியபடி (அச்மரீ)கல் சிறுநீர்க்குழாயைச் சேர்ந்து சிறுநீரை வெளிவராமல் தடுத்தபோது ஆண்குறியிலுள்ள[1] ஸேவனி என்னும் நரம்பிலும் குறியிலும் சிறுநீர்ப்பையிலும் கொடியவலி தோன்றி சிறுநீர் தடையின்றி வெளிப்படாமல் சிறிது சிறிதாகப் பிரிந்து வெளிவரும். அந்த நோயாளி வலியைப் பொறுக்க முடியாமல் குறியைக் கையால் பிசைந்து வலுக்கட்டாயமாக சிறு நீரை வெளியேற்ற முற்படும் போது மாறாக ஆசனவாயிலிருந்து மலம் சிறிதுசிறிதாக வெளியேறும். ஆனால் சிறுநீர் மட்டும் வெளியேறாது. குறியைக் கசக்கியதால் உட்பகுதியில் காயம் உண்டாகி புண்ணாகியதால் இரத்தம் கலந்த சிறுநீர் மிகவும் கஷ்டத்தின் பேரில் சிறிது சிறிதாக வெளியேறும். குறியைக் கசக்கியதால் குழாயினில் உள்ள கல் வெளியே வந்துவிடுமாயின் பிறகு துன்பமின்றி சிறுநீர் வெளியேறும். 38

1. ஸேவனி—ஆண்குறியில் தோன்றும் தையல் போன்ற பகுதி.

## 25. *சர்க்கரையுடன் கூடிய நீர்ச்சுருக்கு

முன்பு கூறிய தோற்றம் கொண்ட சிறுநீர்க்கல் வாதத்தினால் பல துண்டுகளாகி சிறுநீர்க் குழாயில் குத்தல் வலி முதலான துன்பங்களை விளைவித்து மிக்க கஷ்டத்துடன் சிறுநீரை வெளிவரச் செய்யும். (இவ்வாறு வாதத்தால் துண்டுகளாக்கப் பட்ட கல் சர்க்கரை அல்லது மணல் போல் ஆகிவிடுவதால்) இந்த நோய் சர்க்கரையுடன் கூடிய நீர்ச்சுருக்கு எனப்படும்.

விந்துவையும் வெளிவராமல் தடுப்பதால் ஆண்களுக்குச் சிறுநீர் மிகவும் கஷ்டத்துடன் வெளியேறும். இந்த நீர்ச்சுருக்கில் தொடையிடுக்குகளிலும் சிறுநீர்ப்பையிலும் ஆண்குறியிலும் மிக்க துன்பமும் வலியும் தோன்றும். மேலும் விரைகளில் சிறுநீர் விந்துவினால் தடுக்கப்பட்டு எளிதாக வெளியேறாமல் மிக்க துன்பத்துடன் வெளியாகும். இது அண்டஸ்தம்பம் (விரைகளில் தடுக்கப்பட்டது) என்றும் 'விந்துவால் தடுக்கப்பட்ட நீர்ச் சுருக்கு' என்றும் கூறப்படும். இது மிக்க கொடிய நோய் ஆகும். 39-41

## 26. விந்துவால் தோன்றும் நீர்ச்சுருக்கின் இலக்கணம்

வாதம் முதலிய மூன்று தோஷங்கள் தனித்தனியாகவோ மூன்றும் சேர்ந்தோ சீற்றமடைந்து சிறுநீர் வெளியேறும் வழியை அடைந்து விந்துவைத் தடுக்கும். அதனால் குறியிலும் சிறுநீர்ப்பையிலும் மிக்கவலி தோன்றும். சிறுநீரும் விந்துவும் மிக்க துன்பம் தந்து வெளியேறும். இந்த நோயில் குறி வீங்கி மிக்க துன்பத்தைத் தரும். சிறுநீர்ப்பையிலும் விரைகளிலும் ஊசியால் குத்துவது போன்ற வலி தோன்றும். 42

## 27. இரத்தம் கலந்த நீர்ச்சுருக்கு

சிறுநீர்க் குழாயில் முள் முதலியவற்றால் காயம் படுவதாலும் அடிபடுவதாலும் விந்து குறைபடுவதாலும் இரத்தம் சீற்றம் அடைந்து சிறுநீர்ப்பையில் சேர்ந்து தடுக்கப்பட்டு மிக்க துன்பம் தந்து சிறுநீருடன் மிக்க கஷ்டத்துடன் வெளியேறும். அது வெளியேறாமல் நாள்தோறும் சேர்ந்து வந்தால் கட்டிப் போய் கல்லைப் போல் கடினமாகிவிடும். அப்பொழுது அதனால் சிறுநீர் வழி தடுக்கப்பட்டு சிறுநீர்ப்பையில் சிறுநீர் சேர்ந்து

* சிறுநீர்ப்பையில் மணல்போல் தங்கியிருக்கும் பொருள் இங்கு சர்க்கரை எனப்படுகிறது.

விடும். அதனால் அது பளுவாக இருக்கும். அது சிறுநீருடன் கலந்து வெளியேறினால் இலேசாகும். 43—44

## 28. நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

வாதத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கில் சிறுபஞ்சமூலங்களையும் இந்த நூலில் ஆங்காங்கே கூறப்பட்ட வாதத்தைப் போக்கும் பொருள்களையும் சேர்த்துத் தயார் செய்த எண்ணெய் முதலியவற்றால் எண்ணெய்க்குளியல் எண்ணெய்வஸ்தி எண்ணெய் மருந்தால் உடலை நனைத்தல் உத்தரவஸ்தி எண்ணெயை உடல் பகுதிமேல் ஊற்றிக் கொண்டிருத்தல் வாதத்தைப் போக்கும் பொருட்களுடன் பக்குவம் செய்யப்பட்ட புலால்சாறு என்பனவற்றை நிலைமைக் கேற்பப் பயன்படுத்திச் சிகிச்சை செய்ய வேண்டும். 45

## 29. வாத நீர்ச்சுருக்குக்கு [1]த்வி பஞ்சமூலாதி கிருதம்

சாரணை ஆமணக்குவேர் தண்ணீர்விட்டான் கிழங்கு நாயுருவி வெண்சாரணை சிற்றாமுட்டி கல்லூர்வஞ்சி [2]இருபஞ்சமூலங்கள் (தசமூலம்) கொள்ளு இலந்தைவேர் யவதானியம் இவற்றை நீர் சேர்த்து நான்கில் ஒருபகுதி மிகுந்திருக்கக் காய்ச்சி எள் எண்ணெய் காட்டுப் பன்றியின் கொழுப்பு கரடிக் கொழுப்பு நெய் இவற்றைச் சேர்த்து கஷாயத்திற்கு நாலில் ஒரு பங்காகக் காய்ச்சி முன் கூறிய கஷாயப் பொருள்களையும் ஐந்து உப்பு களையும் விழுதாக அரைத்து எண்ணெய் அளவிற்கு நான்கில் ஒரு பங்கு சேர்த்து முறைப்படி பக்குவம் செய்க. இந்த நெய்யை நோயாளியின் செரிமான வலிமைக்கு ஏற்ற அளவு பருகச் செய் தால் கொடிய வலியுடன் கூடியதும் வாதத்தினால் தோன்றியது மான நீர்ச்சுருக்கு நீங்கும். 46—47

## 30. வாதநீர்ச்சுருக்குக்கு உபநாஹஸ்வேதம்

முன்பு கூறிய கஷாயப் பொருள்களையும் இவற்றைப் போன்ற வாதத்தைப் போக்கும் வேறு பொருள்களையும் கிடைத்தவற்றைச் சேர்த்தோ எண்ணெயுடன் கூடிய எள்ளின்

---

1. த்வி—இரண்டு, பஞ்சமூலாதி—ஐந்து மருந்துச் செடி வேர்கள் முதலியவை.
2. தசமூலம்—வில்வம் முன்னை காட்டுவாகை பாதிரி பெருங்குமிழ் மூவிலை ஓரிலை நெருஞ்சில் கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி இவற்றின் வேர்கள்.

காய் அகத்திக்காய் முதலியவற்றை மையஅரைத்தோ அத்துடன் ஆமணக்கு எண்ணெய் முதலிய எண்ணெய்களையும் புளிப்புச் சுவையுள்ள மோர் முதலிய நீர்ப்பொருளையும் கலந்து கொதிக்க வைத்து உடல் பொறுக்கக்கூடிய சூட்டில் (உடற்பகுதி மேல் வைத்துக் கட்டி) உபநாஹஸ்வேத முறைப்படிப்பயன்படுத்திணால் வாதத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கு நீங்கும். 48

## 31. பித்த நீர்ச் சுருக்குக்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கில் தன்மையிலும் தொடுகையிலும் குளிர்ச்சியுள்ள பொருளால் உடலை நனைத்தல் அத்தகைய நீரில் மூழ்கியிருக்கச் செய்தல் முதலியன நலம் தரும். மற்றும் கோடையில் சூடு தணிவதற்குப் பயன்படுத்தக் கூறப்பட்ட முறைகளும் இதற்கு நலம் தரும். மற்றும் திராட்சை முதுக்கன்கிழங்குச்சாறுகள் கரும்புஞ்சாறு நெய்பால் என்னும் பொருட்களைக்கொண்டு வஸ்தி செய்வித்துப் பேதியாகச் செய்ய வேண்டும். 49

## 32. பித்தத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கின் சிகிச்சை

தண்ணீர்விட்டான்கிழங்கு நாணல்வேர் தருப்பைவேர் நெருஞ்சில் முதுக்கன்கிழங்கு நெற்பயிர்வேர் கரும்புவேர் நீர்க் கோரைக்கிழங்கு இவற்றைச் சம அளவில் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிருந்திருக்கக் காய்ச்சி அதில் தேனும் சர்க்கரையும் தகுந்த அளவு கலந்து குளிர்ந்தபின் அதைப்பருகச் செய்தால் பித்தத்தினால் தோன்றும் நீர்ச்சுருக்கு நீங்கும். 50

## 33. பித்த நீர்ச்சுருக்குக்குக் கஷாய முறைகள்

தாமரைக்கிழங்கு நெய்தல்கிழங்கு சிருங்காடககிழங்கு தண்ணீர்விட்டான் கிழங்கு கல்ஹூரர்வஞ்சிவேர் இவற்றில் ஒன்றைக் கஷாயமாகக் காய்ச்சித்தேனும் சர்க்கரையும் கலந்து பருகச் செய்க. அல்லது அவற்றைக் குளிர்ந்த நீரில் ஊறவைத்துப்பருகச் செய்க. 51

## 34. பித்த நீர்ச்சுருக்குக்கு வெள்ளரி விதை விழுது.

திராட்சைப்பழத்தை நீரில் போட்டுப் பிசைந்து வடிகட்டி அந்த நீரில் வெள்ளரிவிதை சுக்கங்காய்விதை குசும்ப விதை ஆடாதொடை இவற்றைத் தூளாக்கிக் கலந்து அதில் குங்குமம்பூவைச் சேர்த்துப் பருகச் செய்தால் நீர்ச்சுருக்கு சிறு நீர்ப்பையில் கல் சிறுநீர்ப்பையில் மணல் போன்ற பொருள்

சேர்தல் முதலியன நீங்கும். எல்லா வகை நீர்ச்சுருக்குக்கும் நலம் தருவதாகும். 52

## 35. மற்றொரு முறை

வெள்ளரிவிதை அதிமதுரம் மரமஞ்சள் இவற்றைச் சம அளவில் சேர்த்துப் பொடி செய்து கழுநீருடன் கலந்து பித்தத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கில் பருகச் செய்க. மேலும் மரமஞ்சளின் தூளை நெல்லிச்சாற்றுடன் கலந்து அதில் தேன் சேர்த்துப் பித்தநீர்ச்சுருக்கில் பருகச் செய்ய வேண்டும். 53

## 36. கபத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

கபத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கில் க்ஷாரமானவையும் உஷ்ணவீர்யமுள்ளவையும் தீக்ஷ்ணமானவையுமான பொருள்களுடன் கூடிய மருந்துகளையும் அத்தன்மை கொண்ட உணவு நீர் வகைகளையும் பயன்படுத்த வேண்டும். அத்தகைய பொருட்களால் உடல் வியர்க்கச் செய்து யவஅரிசிச் சோற்றை உண்ணச் செய்க. வாந்தி எடுக்கச் செய்யும் முறையையும் கஷாயவஸ்தி முறைகளையும் பயன்படுத்த வேண்டும். கசப்புச் சுவையுள்ள பொருள்களும் மருந்துகளும் சேர்த்துப் பக்குவம் செய்த மோரைப் பருகச் செய்க. அத்தகைய பொருட்களுடன் காய்ச்சிய எண்ணெயைக் கொண்டு எண்ணெய் குளியலைச் செய்யுவிப்பதும் மிகவும் நன்மை பயக்கும். 54

## 37. திரிகடுகம் முதலியவற்றின் சூரணம்

திரிகடுகம் நெருஞ்சில் சிற்றேலக்காய் ஸாரஸபக்ஷியின் எலும்பு இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கிப் பசுவின் சிறுநீரில் கலந்து தேன் சேர்த்துக் கபத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கில் பருகத் தர வேண்டும். சிறுஏல அரிசியைத் தூளாக்கி வாழைக்கிழங்கின் சாற்றுடனோ தேக்குமரப்பட்டைச் சாற்றுடனோ தேன் கலந்து பருகச் செய்க. 55

புங்கங்காயைத் தூளாக்கி மோரில் கலந்து பருகச் செய்தால் நீர்ச்சுருக்கு நீங்கும். அல்லது பவழபற்பத்தைக் கழுநீருடன் பருகச் செய்தால் கபத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்கு நீங்கும். ஏழிலைப்பாலை புளிவஞ்சி குருவேர் ஏலஅரிசி கருங்காலியின் வைரம் பாய்ந்த பகுதி புங்கம்பட்டை குடசப்பாலை விதை சீந்தில் கொடி இவற்றை நீருடன் காய்ச்சி அக்கஷாயத்தைக் கஞ்சியுடன் சேர்த்துப்பருகச் செய்க. அல்லது அந்த கஷாயத்தில் தேன் கலந்து பருகச் செய்தாலும் நீர்ச்சுருக்கு நீங்கும். 56

## 38. சந்நிபாதத்தினால் தோன்றும் நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

வாதம் முதலிய மூன்று தோஷங்களும் சமமாகச் சீற்றமுற்ற சந்நிபாதத்தால் தோன்றிய நீர்ச்சுருக்கில் முன் கூறிய சிகிச்சைகள் அனைத்தையும் பயன்படுத்த வேண்டும். முதலில் வாதத்திற்குச் சிகிச்சை செய்து பிறகு ஏனைய தோஷங்களுக்கேற்ற சிகிச்சைகளைப் புரிய வேண்டும். மூன்று தோஷங்களும் சீற்றமுற்ற போதிலும் கபம் மிகுந்திருந்தால் கபத்திற்குச் சிறப்பான வாந்தியாகச் செய்யும் முறையையும், பித்தம் மிகுந்திருந்தால் பேதியாகச் செய்யும் முறையையும், வாதம் மிகுந்து சீற்றமடைந்திருந்தால் வஸ்தி முறையையும் முதலில் பயன்படுத்த வேண்டும். (ஸந்நிபாதத்தில் மூன்று தோஷங்களும் சம அளவில் சீற்றமடைந்த போதும் முதலில் வாதத்திற்குச் சிகிச்சை செய்து பிறகு மற்ற தோஷங்களுக்குச் சிகிச்சை செய்ய வேண்டும். தோஷங்கள் ஏற்றத்தாழ்வான அளவில் சீற்றமடைந்த பொழுது மிகுந்துள்ள தோஷத்திற்கு ஏற்ற சிகிச்சையை முதலில் கையாள வேண்டும் என்பது கருத்து.) 57-58

## 39. சிறுநீர்ப்பையில் தோன்றும் கல்லுக்குச் சிகிச்சை

அச்மரீ என்கிற கல்அடைப்பு நோயிலும் மணல்போல் விழுகின்ற சிறு நீர்நோயிலும் கபத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்குக்கேற்ற சிகிச்சையையும் வாதத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்குக்கேற்ற சிகிச்சையையும் கையாள வேண்டும். மற்றும் அச்மரீ என்னும் கல்லை உடைத்து வெளிவரச் செய்யும் சிறப்பு முறைகள் இனி கூறப்படும். 59

## 40. வாதாச்மரிக்குப் பாஷாணபேதாதி சூரணம், நெய்முறை

கல்லூர்வஞ்சிவேர், ஆடாதொடை நெருஞ்சில் வெட்டத்திருப்பி கடுக்காய்த் தோல் திரிகடுகம் பூலாங்கிழங்கு நேர்வாள வேர் சடாமாஞ்சி ஓமம் நாயுருவிவிதை சுக்கங்(கசப்பு வெள்ளரி)காய்விதை வெள்ளரிவிதை சீரகம் பெருங்காயம் புளி வஞ்சி கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி கொட்டைகரந்தை வசம்பு இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி நீருடன் பருகச் செய்தாலும் அப்பொருட்களை விழுதாகச் செய்து அதற்கு நான்கு மடங்கு நெய்யும் நெய்யளவிற்கு நான்கு மடங்கு பசுவின் சிறுநீரும் கலந்து முறைப்படி நெய் காய்ச்சிப் பருகச் செய்தாலும் அது அச்மரீ என்னும் கல்லை உடைத்து வெளியேற்றும். 60-61

## 41. வாதாச்மரிக்கு [1]ஸ்வதம்ஷ்ட்ராதி]கல்கம்]

நெருஞ்சில்வேர் நீர்முள்ளிவேர் ஆமணக்குவேர் கண்டங் கத்திரிவேர் முள்ளுக்கத்திரிவேர் இவற்றைச் சம அளவில் சேர்த்துப் பசும்பாலுடன் அரைத்துப் புளிப்பில்லாத தயிருடன் கலந்து ஏழு நாட்கள் பருகச்செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றிய கல் கரையும். 62

## 42. சிறுநீர்ப்பையில் கல்லுக்கு சாரடை முதலியவற்றின் விழுது

சாரடை அயபற்பம் மஞ்சள் நெருஞ்சில்வேர் பவழபற்பம் காட்டுஅத்திவேர் தருப்பைப்பூ (நாணல்பூ) இவற்றைச் சம அளவில் சேர்த்துப் பசும்பாலுடனோ நீருடனோ கள்ளுடனோ கருப்ஞ்சாற்றுடனோ கலந்து மைய அரைத்துப் பருகச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றிய கல் மணல் என்பன நீங்கும். 63

## 43. சிறுநீர்ப்பையில் கல்லுக்கு [2]திருட்யாதி சூரணம்

சிறுஏல அரிசி தேவதாருக் கட்டை [3]பஞ்சலவணங்கள் யவக்ஷாரம் குந்துருஷ்கம் என்னும் வாசனைப் பொருள் பாஷாண பேதி கம்பிப்பாலை நெருஞ்சிவிதை கசப்பு வெள்ளரிவிதை வெள்ளரிவிதை கொடிவேலி பெருங்காயம் சடாமாஞ்சி குரோ சாணிஓமம் இவை அனைத்தும் சமஅளவும் திரிபலை இரண்டு மடங்கும் சேர்த்துத் தூளாக்கி அதை சுக்தம் என்னும் ஒருவகை புளிப்புக்காடியைத்,தவிர்த்து ஏனைய புளிப்புச்சுவையுள்ள திரவப் பொருள்களில் ஏதேனும் ஒன்றுடனாவது புலால் சாற்றுடனாவது கள்ளுடனாவது கஞ்சியுடனாவது பருகச் செய்தால் சிறுநீர்ப் பையில் தோன்றிய கல் குன்மம் என்பன உடைந்து நோய் தீரும். 64–65

## 44. [4]சிக்ருமூல கல்கம்

முருங்கைவேரை விழுதாக அரைத்து அதனால் யூஷம் என்னும் கஞ்சி செய்து நெய் அல்லது எண்ணெயால் தாளித்துக் குளிர்ந்தபின் அதில் ஒரு பலம் அளவு கொண்டு அத்துடன் தயிர்த் தெளிவும் உப்பும் கலந்து பருகச் செய்தால் சிறுநீர்ப்

1. ஸ்வதம்ஷ்ட்ரா—நெருஞ்சில்
2. த்ருடி—ஏல அரிசி.
3. பஞ்சலவணங்கள்—இந்துப்பு, கரியுப்பு, சுட்( சவுட்டுப்பு, சௌவர்ச்சல உப்பு.
4. சிக்ருமூலம்—முருங்கைவேர்.

பையில் தோன்றிய கல் நீங்கும். முருங்கைவேரை அரைத்துக் குளிர்ந்த நீரில் கலந்து பருகச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றிய மணல் நீங்கும். 66

## 45. நீர்ச்சுருக்குக்கு யவக்ஷாரம்

சீனாகல்கண்டு யவக்ஷாரம் இவ்விரண்டையும் சம அளவில் கொண்டு நீரில் கலந்து பருகச் செய்தால் நீர்ச்சுருக்கு நீங்கும். 67

## 46. சிறுநீர்ப்பையில் தோன்றிய கல்லை உடைத்தல்

தூய கள்ளைத் தகுந்தபடி பருகச் செய்து தேர் மீதோ வேகமாக ஓடும் குதிரை மீதோ ஏறி விரைந்து சவாரி செய்யச் செய்தால் உடலுறுப்புகள் அசைந்து சிறுநீர்க்குழாயில் அடைப் பட்டிருக்கும் கல் நழுவி விழும். அவ்வாறு வெளிவராவிடில் கைதேர்ந்த மருத்துவன் அறுவைச்சிகிச்சை செய்து அதை வெளி யேற்ற வேண்டும். 68

## 47. விந்துவால் தோன்றிய கல்லுக்குச் சிகிச்சை

விந்துவால் சிறுநீர்ப்பையில் தோன்றிய கல்லுக்கு வாதம் முதலிய தோஷங்களின் தொடர்பை நன்கு கவனித்து அந்தந்த தோஷத்திற்கேற்ற சிகிச்சையைப் பின் வருமாறு கையாள வேண்டும்.

வாதம் மிகுந்திருந்தால் பருத்திவேர் ஆடாதொடை பாஷாணபேதி சிற்றாமுட்டி சிறுபஞ்சமூலம் காட்டுகோதுமை வெண்சாரடை துமட்டிவேர் சிவப்புச்சாரடை தண்ணீர் விட்டான் கிழங்கு சீந்தில்கொடி வெள்வேங்கை இவற்றைச் சம அளவில் சேர்த்து முறைப்படி கஷாயம்செய்து அதனால் பக்குவம் செய்த புலால் சாற்றைப் பயன்படுத்துக. விந்து தடைப்பட்டு பித்தத் தினால் தோன்றிய நீர்ச்சுருக்கில் முன்கூறிய பொருள்களால் செய்த கஷாயத்துடன் பாலையோ நெய்யையோ முறைப்படி செய்து பயன்படுத்துக. கபம் மிகுந்திருந்தால் முன் கூறிய கஷாயத்துடன் யூஷத்தையோ (ஒருவகை கஞ்சி) அல்லது அக் கஷாயத்துடன் கூடிய உணவு நீர்வகைகளையோ பயன்படுத்த வேண்டும். எவையேனும் இரண்டு தோஷங்கள் கலந்து சீற்ற மடைந்த நோயானால் அவ்விரண்டு தோஷங்களுக்கும் கூறிய சிகிச்சை முறைகளைத் தக்கபடி கலந்து கையாளவேண்டும். 69–70

## 48. விந்துவினால் தோன்றும் நீர்ச்சுருக்குக்குக் கள்ளைப்பயன் படுத்தல்

முன்கூறிய சிகிச்சையால் நீர்ச்சுருக்கு தணியாவிடில் பழைய கள்ளையோ மது என்னும் ஆஸவத்தேயோ பயன்படுத்தலாம். மேலும் பறவைகளின் புலாலையும் உடல் செழிக்கச் செய்யும் முறைகளையும் விந்துவின் இருக்கை தூய்மையாவதற்கு வஸ்தி களையும் பயன்படுத்த வேண்டும். விந்துவின் இருப்பிடம் தூய்மை பெற்று விந்து வளர்ச்சிக்கு ஏற்ற முறைகளால் நலம் ஏற்பட்ட பிறகு அன்பு கொண்ட இளநங்கைகளுடன் கலவி இன்பம் துய்க்கச் செய்ய வேண்டும். 71—72

## 49. இரத்தத்துடன் கூடிய நீர்ச்சுருக்குக்குச் சிகிச்சை

இரத்தத்தால் தோன்றிய நீர்ச்சுருக்குக்குக் கருநெய்தல் தண்டுகள் பனைமரத்தின் இளம்குருத்து வெண்கரும்பு பாலேட்சு என்னும் ஒரு வகைக்கரும்பு நீர்க்கோரைக்கிழங்கு இவற்றின் சாற் றில் சர்க்கரையும் தேனும் கலந்து பருகச் செய்க. அல்லது கரும்பு முதுக்கன்கிழங்கு வெள்ளரிக்காய் இவற்றை நன்கு மென்று உண்ணச் செய்ய வேண்டும். அல்லது இவற்றின் சாற்றைப் பருகச் செய்ய வேண்டும். 73

## 50. இரத்த நீர்ச்சுருக்குக்கு நெருஞ்சில் நெய்

நெய்யின் அளவிற்கு நெருஞ்சில் சாற்றைச் சேர்த்து நெய்யின் அளவைவிட எட்டு மடங்கு பசும்பால் கலந்து முறைப்படி பக்குவம் செய்த நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். அல்லது [1]இலகு பஞ்சமூலத்தின் சுரஸம் மதுரஸ்கந்தத்தில் கூறப்பட்ட தேத்தான் கொட்டை முதலிய [2]கூட்டுப்பொருள்களின் சுரஸம் இவற்றை முன்போல் நெய்யுடன் கலந்து முறைப்படி பக்குவம் செய்து பயன்படுத்தவேண்டும். இவ்விரண்டு கூட்டுப் பொருள்களைத் தனித்தனியாக நெய்யாகவும் செய்து பயன்படுத்தலாம். 74

## 51. இரத்தநீர்ச் சுருக்குக்கு வஸ்தி முறை

இனிப்புச்சுவை கொண்ட கூட்டுப் பொருள்கள் கலந்த பாலுடனாவது அதிமதுரம் அக்ரோட்டு முதலிய இனிப்புச்சுவை யுள்ளவற்றால் செய்த எண்ணெயுடனாவது வஸ்தி செய்விக்க

---

1. இலகுபஞ்சமூலம்—(சிறுபஞ்சமூலம்) ஓரிலை, மூவிலை, காட்டு உளுந்து, காட்டுப்பயறு, நெருஞ்சில்.
2. கூட்டுப்பொருள்களின் சுரஸம் — விமானஸ்தானத்தில் எட்டாவது அத்தியாயத்தில் காண்க.

வேண்டும். மேலும் பித்தத்தினால் தோன்றிய நீர்ச்சுருக்குக்குச் சொன்ன சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 75

## 52. நீர்ச்சுருக்கில் தவிர்க்க வேண்டியவை

உடற்பயிற்சிசெய்தல் சிறுநீர் மலம் முதலியவற்றின் வேகத்தைத்தடுத்தல் உலர்ந்து வறண்ட உணவுப் பண்டங்களையும் மாவுப்பண்டங்களையும் மிக உண்ணுதல் காற்றில் உலாவுதல் மிக்க வெயிலில் அலைதல் மிதமிஞ்சிய கலவி உலர்ந்த பேரீச்சங்காய் தாமரை அல்லி முதலியவற்றின் கிழங்கு விளாங்காய் நாவல்பழம் தாமரைத்தண்டு துவர்ப்புச் சுவையுள்ள பொருள்களைப் பயன்படுத்துதல் என்பனவற்றை நீர்ச்சுருக்கு நோய் கொண்டவன் தவிர்க்க வேண்டும். 76

## 53. இதயமென்னும் உயிர்நிலையில் நோய் தோன்றக் காரணம்

அளவுக்கு விஞ்சிய உடற்பயிற்சி தீக்ஷ்ணகுணமுள்ள பொருள்களை உண்ணுதல் மிக்க பேதியாதல் அளவுக்கு விஞ்சிய வஸ்தி சிகிச்சை மிக்க சிந்தனையிலாழ்ந்திருத்தல் அச்சம் மிகவும் உணர்ச்சிவயப்படுதல் காய்ச்சல் முதலிய நோய்களில் தாறுமாறாக சிகிச்சை பெறுதல் மிக்க வாந்தியாதல் அசீரணம் சிறுநீர் மலம் இவற்றின் வேகங்களைத் தடுத்தல் நோய் முதலியவற்றால் உடல் இளைத்தல் என்பன இதயநோய்க்குக் காரணங்களாகும். 77

## 54. இதய நோயின் பொது இலக்கணம்

உடல் நிறம் மாறுபடுதல் நினைவிழத்தல் காய்ச்சல் இருமல் விக்கல் இழுப்பு வாய்ச்சுவை அறியாமை நாவறட்சி மயக்கம் வாந்தி வாயில் கபம் மிகுந்து வெளியாதல் வலி முதலிய துன்பங்கள் தோன்றுதல் வாய்ச்சுவையின்மை போன்ற பலவகைத் துன்பங்கள் இதய நோயால் உண்டாகும். 78

## 55. வாதம் முதலியவற்றால் தோன்றிய இதய நோயின் இலக்கணம்

வாதத்தினால் தோன்றிய இதய நோயில் மனத்தில் ஒன்றும் தோன்றாமல் வெறுமை மிகும். உடலில் ஈரம் உலர்ந்து போகும். உடைப்பது போன்ற வலியும் இதயம் தடைப்பட்டு போதலும் நினைவிழத்தலும் தோன்றும். பித்தத்தினால் தோன்றும் இதய நோயில் மயக்கம் மிகும். உடல் நடுங்கும். எரிச்சல் தோன்றும். நினைவிழத்தல் ஏற்படும். அச்சம் மிகும். அழற்சியும் காய்ச்சலும் உண்டாகும். உடல் மெலியும். கபத்தினால் தோன்றிய இதய நோயில் இதயம் செயலற்றதுபோல்

மெள்ளத்துடிக்கும். பளுவாகத் தோன்றும். இதயம் நீரில் நனைந்திருப்பது போல் தோன்றும். வாயிலிருந்து எச்சில் மிகுதியாக ஒழுகிக் கொண்டிருக்கும். காய்ச்சல் இருமல் தூங்கிவழிதல் என்பன தோன்றும். ஸந்நிபாதத்தினால் தோன்றிய இதய நோயில் மூன்று தோஷங்களுக்கும் தனித்தனியாகக் கூறப்பட்ட இலக்கணங்கள் காணப்படும். கிருமியினால் தோன்றிய இதய நோயில் மிக்க வலியும் குத்தல் வலியும் தோன்றுவதுடன் அரிப்பும் காணப்படும். 79–80

## 56. இதய நோய்க்குச் சிகிச்சை

ஸௌவீரகம் என்னும் [1]காஞ்சிகம் தயிர்த் தெளிவு மோர் எள் எண்ணெய் இவற்றைச் சம அளவில் கொண்டு இந்துப்புடன் பக்குவம் செய்து வாதத்தினால் தோன்றிய இதயநோய்க்குப் பருகச் செய்யவேண்டும்.

81

## 57. [2]புனர்னவாதி தைலம்

சாரடை தேவதாரு பஞ்சமூலங்கள் சித்தரத்தை யவதானியம் வில்வம் கொள்ளு இலந்தை இவற்றைச் சம அளவில் சேர்த்து நான்கு மடங்கு நீரில் போட்டு நான்கில் ஒரு பகுதியாகக் காய்ச்சி அதில் நான்கில் ஒரு பங்கு எண்ணெய் கலந்து முறைப்படி பக்குவம் செய்து அந்த எண்ணெயைக் குளியலுக்கும் பருகவும் பயன்படுத்தினால் வாதத்தினால் தோன்றிய இதய நோய் தீரும். 82

## 58. [3]ஹரீதக்யாதி கிருதம்

கடுக்காய் சுக்கு புஷ்கரமூலம் சீந்தில் கொடி நெல்லிக்காய் *ஐந்து உப்புகள் பெருங்காயம் இவற்றைச் சேர்த்து விழுதாக அரைத்து முறைப்படி நெய் காய்ச்சிப் பயன் படுத்தினால் வாதத்தினால் தோன்றிய குன்மமும் இதய நோயும் விலாவலியும் நீங்கும். 83

புஷ்கரமூலம் துறிஞ்சிச் செடியின் வேர் சுக்கு பூலாங்கிழங்கு கடுக்காய்த் தோல் இவற்றை விழுதாக அரைத்து அத்துடன்

---

1. காஞ்சிகம்—காடி
2. புனர்னவா—சாரடை
3. ஹரீதகீ—கடுக்காய்

* ஐந்து உப்புகள்—இந்துப்பு, கரியுப்பு, சுட்டுப்பு, சவுட்டுப்பு சௌவர்ச்சல உப்பு.

[1]க்ஷாரோதகம் நெய் உப்பு இவற்றையும் கலந்து முறைப்படி நெய் செய்து பயன்படுத்தினால் இருதய நோயும் இருதயத்தில் கந்தரிப்பது போல் தோன்றும் வலியும் நீங்கும். 84

## 59. வாதத்தினால் தோன்றிய இதய நோய்க்குக் கஷாயம்

புஷ்கரமூலம் துறிஞ்சிவேர் புரசுப்பட்டை வாசனைப்புல் பூலாங்கிழங்கு தேவதாருகட்டை இவற்றைச் சம அளவில் கொண்டு கஷாயம் செய்து அதில் சுக்கு சீரகம் வசம்பு ஓமம் யவக்ஷாரம் என்பனவற்றின் விழுதையும் சேர்த்து இளஞ்சூடுள்ள போது பருகச் செய்தால் வாதத்தினால் தோன்றிய இதய நோய் தீரும். 85

## 60. நெஞ்சுவலிக்குக் கடுக்காய் முதலியவற்றின் குடிநீர்

கடுக்காய்த்தோல் பூலாங்கிழங்கு புஷ்கரமூலம் திப்பிலி கண்டங்கத்திரி செவ்யம் கொடிவேலி சுக்கு துறிஞ்சிப்பழம் இவற்றைச் சம அளவில் கொண்டு நெய்யும் நல்லெண்ணெயும் சம அளவில் சேர்த்து வறுத்து அரைத்து விழுதாக்கிக் கள்ளின் தெளிவில் கலந்து அதில் வெல்லமும் உப்பும் சேர்த்துப் பருகச் செய்தால் இதயத்திலும் விலாவிலும் முதுகிலும் வயிற்றிலும் பெண் குறியிலும் தோன்றிய வலி நீங்கும். 86

## 61. [2]திரியூஷணாதி கிருதம்

சுக்கு மிளகு திப்பிலி கடுக்காய் தான்றிக்காய் நெல்லிக்காய் திராட்சை பேரீச்சங்காய்பூசுணைவட்டத்திருப்பி நொச்சி நெருஞ்சில் சிற்றாமுட்டி பேராமுட்டி ரித்தி சிறுவலஅரிசி கீழாநெல்லி காஞ்சொறி மேதா மகாமேதா இலுப்பை அதிமதுரம் ஓரிலை தண்ணீர் விட்டான்கிழங்கு ஜீவகம் மூவிலை இவை ஒவ்வொன்றும் ஒரு [3]கர்ஷம் வீதம் கொண்டு மைய அரைத்து விழுதாக்கி ஒரு ப்ரஸ்தம் (16 பலம்) நெய் சேர்த்து ஒரு ப்ரஸ்தம் அளவுள்ள எருமைத் தயிரும் கலந்து முறைப்படி நெய் தயார் செய்க. இந்த நெய்யில் ஒன்று அல்லது அரை அல்லது கால் என்ற அளவில் தேன் கலந்து நாளும் உட்கொள்ளச் செய்க. இது

1. க்ஷாரோதகம் யவக்ஷாரநீர்.
2. திரியூஷணாதி—சுக்கு மிளகு திப்பிலி முதலியவை.
3. கர்ஷம்—கால் பலம் ஒருதோலா—11 கிராம்.

இழுப்பு இருமல் சோபை ஹலீமகம் (முற்றிய காமாலை) இதய நோய் கிரஹணி என்னும் நோய்களுக்கு மிகவும் பயன்படும். 87–89

## 62. பித்தத்தினால் தோன்றிய இதய நோய்க்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய இதய நோயில் குளுமைத்தன்மை கொண்ட பொருள்களைக் கொண்டு உடல் மேல் தேய்த்தல் நனைத்தல் முதலிய முறைகளைக் கையாள வேண்டும். பேதியாகச் செய்யும் மருந்துகளில் திராட்சை சர்க்கரை தேன் ஈச்சம் பழம் என்பனவற்றைக் கலந்து பேதியாகச் செய்வதற்குரிய மென்மையான முறையைக் கையாள வேண்டும். குடல் தூய்மையடைந்த பிறகு பித்தத்தைத் தணிக்கும் உணவு நீர் வகைகளைப் பயன்படுத்த வேண்டும். 90

## 63. பித்தத்தினால் தோன்றிய இதய நோய்க்கு விழுது முதலியன

அதிமதுரம் கடுகரோகிணி இவ்விரண்டையும் நீருடன் அரைத்து விழுதாகச் செய்து சர்க்கரை கலந்து பித்தத்தினால் தோன்றிய இதய நோயில் பருகச் செய்ய வேண்டும். மேலும் க்ஷதக்ஷீணம் என்னும் நோய்க்குக் கூறப்பட்ட நெய் முறைகள் ஸர்பிர்குடம் என்பனவற்றை நோயின் வலிமை காலம் முதலியவற்றை நன்கு ஆராய்ந்து தக்கபடி பயன்படுத்த வேண்டும். மேலும் காற்று மிக்க காட்டுப்பகுதியிலுள்ள விலங்குகளின் புலால் சாற்றைப் பித்தத்தினால் தோன்றிய இதயநோய் உள்ளவனைப் பருகச் செய்து பாலுடன் சோற்றை உண்ணச் செய்ய வேண்டும். இத்தகைய சிகிச்சைகளால் பித்தத்தினாலும் இரத்தத்தினாலும் தோன்றிய நோய்கள் தீரும். 91–92

## 64. திராக்ஷாதி கிருதம்

திராட்சை சிற்றாமுட்டி சித்தரத்தை சர்க்கரை பேரீச்சங்காய் தண்ணீர்விட்டான்கிழங்கு காகோலி ரிஷபகம் கருநெய்தல் மேதா மகாமேதா ஜீவகம் இவற்றைச் சம அளவில் சேர்த்து விழுதாக அரைத்து எருமை நெய்யும் பசும்பாலும் கலந்து முறைப்படி நெய் தயார் செய்து பித்தத்தினால் தோன்றிய இதய நோயில் பருகச் செய்க. 93

## 65. [1]கசேருகாதி கிருதம்

நீர்க்கோரைக்கிழங்கு பாசிக்கொடி இஞ்சி ப்ரபௌண்டரீகம் அதிமதுரம் தாமரைக் கிழங்கு இவற்றைச் சம அளவில்

---

1. கசேருகம்—நீர்க்கோரைக்கிழங்கு.

சேர்த்து விழுதாக்கி அவ்விழுதிற்கு நான்கு மடங்கு நெய், நெய்க்குச் சமமாக பசும்பால் கலந்து முறைப்படி நெய் பக்குவம் செய்து நெய்க்கு நாலில் ஒரு பங்கு தேன் கலந்து பயன்படுத்தினால் பித்தத்தினால் தோன்றிய இதய நோய் தீரும். 94

## 66. ஸ்வ பஞ்சமூலாதி கிருதம்

நெய்யுடன் இலகு பஞ்சமூலங்களின் விழுதைக் கலந்து அத்துடன் பசும்பாலையோ திராட்சைச்சாற்றையோ கருப்பஞ் சாற்றையோ நெய்யின் அளவிற்குச் சமமாகக் கலந்து முறைப்படி நெய் தயார் செய்து பித்தத்தினால் தோன்றிய இதய நோயில் பருகச் செய்ய வேண்டும். மேலும் திராட்சை முதலிய இனிப்புச் சுவையுள்ள பழங்களின் சுரஸம் கருப்பஞ்சாறு முதலியவற்றைப் பித்தத்தினால் தோன்றிய இதயநோய் உள்ளவனைப் பருகச் செய்ய வேண்டும். 95

## 67. கபத்தினால் தோன்றிய இதய நோய்க்குச் சிகிச்சை

கபத்தினால் தோன்றிய இதய நோய்க்கு முதலில் உடல் வியர்க்கச் செய்தல் வாந்தி எடுக்கச் செய்தல் பட்டினி கிடக்கச் செய்தல் என்னும் முறைகளைப் பயன்படுத்திப் பிறகு கபத்தைப் போக்கும் சிகிச்சைகளைக் கையாள வேண்டும்.

கொள்ளுக்கஷாயத்துடன் கொத்தமல்லி விதையைச் சேர்த்துப் பக்குவம் செய்து அதனுடன் யவஅரிசிச் சோற்றை உண்ணச் செய்ய வேண்டும். தீக்ஷ்ணகுணமுள்ள பொருள்களைக் கொண்டு தயார் செய்த நீர் வகைகள் கபத்தினால் தோன்றிய இதய நோயில் நலம் தரும். 96

## 68. கபத்தினால் தோன்றிய இதயநோய்க்குச் சூரணம்

சிறியகுறிஞ் (காயபலம்) சுக்கு மராமஞ்சள் கடுக்காய்த்தோல் அதிவிடயம் இவற்றைச் சம அளவில் கொண்டு பசுவின் சிறுநீரில் கொதிக்க வைத்து உலர்த்தித் தூளாக்கிப் பயன்படுத்தலாம். மற்றும் திப்பிலி பூலாங்கிழங்கு புஷ்கர மூலம் சித்தரத்தை வசம்பு கடுக்காய்த்தோல் சுக்கு இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கிப் பயன்படுத்தத்தகும். 97

## 69. கபத்தினால் தோன்றிய இதயநோய்க்கு லேகியம்

அத்தி அரசு ஆல் மருதம் புரசு கல்யாணமுருங்கை ரோஹிதகம் இவைகளின் வேர் கருங்காலிவேர் கட்டை இவற்றை சம

அளவில் சேர்த்து முறையாக நாலில் ஒருபங்கு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சி அதில் சிவதை சுக்கு மிளகு திப்பிலி என்பனவற்றின் தூளைச் சேர்த்து முறைப்படி லேகியம் செய்து நோயாளியின் சீரணத்தன்மைகேற்ற அளவு வெந்நீருடன் பருகச் செய்தால் கபத்தினால் தோன்றிய இதய நோய் தீரும். (சூரணத்தின் அளவிற்கு நான்கு மடங்கு கஷாயமும் சூரணத்தின் அளவுக்கு இரண்டு மடங்கு வெல்லமோ சர்க்கரையோ சேர்த்து லேகியம் தயார் செய்ய வேண்டும்.) 98

## 70. சிலாசத்து முதலிய ரஸாயன முறைகள்

கபத்தினால் தோன்றிய இதயநோய்க்குச் சிலாசத்தை கரப்ரசிதீய ரஸாயன பாதத்தில் சொல்லப்பட்ட முறைப்படிப் பயன்படுத்தத்தகும். மற்றும் ரஸாயன அத்தியாயத்தில் கூறப்பட்ட சியவனப்ராசமும் அகஸ்த்யஹரீதகீ லேகியமும் கரப்ரசிதீய ரஸாயனத்தில் கூறப்பட்ட ஆமலகீ ரஸாயனமும் ப்ராம்மீ ரஸாயனமும் முறைப்படிப் பயன்படுத்தத் தக்கவை. 99

## 71. ஸந்நிபாதத்தால் தோன்றிய இதய நோய்க்குச் சிகிச்சை

மூன்று தோஷங்களும் சீற்றமடைவதால் தோன்றிய இதய நோயில் முதலில் பட்டினி கிடக்கச் செய்ய வேண்டும். மூன்று தோஷங்களுக்கும் இதமாகக் கூறப்பட்ட உணவு நீர் வகைகளைக் கலந்து பயன்படுத்துக. வாதம் முதலிய மூன்று தோஷங்களின் சீற்றமுற்றதன் தராதரம் அறிந்து அந்தந்த தோஷங்களுக்கு ஏற்றவாறு உணவு வகைகளைப் பயன்படுத்தச் செய்க. 100

ஸந்நிபாதத்தினால் தோன்றிய இதயநோயில் உணவு உண்டதும் வலி மிகுந்து சீரணமாகும் போது குறைந்து முழுவதும் செரிமானமானபின் தணிந்திருந்தால் அது கபம் மிகுந்துள்ளதால் தோன்றிய இதய நோய் என்றறிக. அப்பொழுது தேவதாருகட்டை கோஷ்டம் பாச்சோத்திக்கட்டை ஸௌவர்சல உப்பு இந்துப்பு வாயுவிளங்கம் அதிவிடயம் இவற்றைச் சம அளவில் தூளாக்கி வெந்நீருடன் பருகச் செய்க. 101

## 72. மிக்க தோஷத்திற்கேற்ற விரேசன சிகிச்சை

உண்ட உணவு செரிமானமானவுடனே இதயத்தில் வலி மிகுந்தால் அது வாதம் மிகவும் சீற்றமுற்றதால் தோன்றிய இதய நோய் என்று அறிக. அப்பொழுது ஆமணக்கு எண்ணெய் முதலிய எண்ணெய்ப் பசையுள்ள பொருள்களைக் கொண்டு

பேதியாகச் செய்தல் நலமாம். மற்றும் உணவு செரிமானமாகும் போது வலி மிகுந்தால் அது பித்தம் மிகுந்து சீற்றம் அடைவதால் தோன்றியதென்றுணர்க. அப்பொழுது திராட்சை முதலிய இனிப்புச் சுவையுள்ள பழங்களைக் கொண்டு மென்மையான அளவில் பேதியாகச் செய்க. உணவு செரிமானமாவதற்கு முன்பு ஆகும் போதும் ஆனபிறகும் இதயத்தில் வலி ஒரே சீராய் அதிகமாக இருந்தால் மூன்று தோஷங்களும் சமமான அளவில் சீற்றமுற்றதால் தோன்றிய இதயநோய் என்று அறிக. அதற்கு சிவதை வேர் முதலிய தீக்ஷ்ணகுணமுள்ள பொருட்களைக் கொண்டு பேதியாகச் செய்ய வேண்டும். 102

## 73. இதயநோய்க்குக் குடலைத் தூய்மைப்படுத்துதல்

இதயநோய்கள் அனைத்திலும் வாதம் தடுக்கப்பட்டுச் சீற்ற மடைந்து ஆமாசயத்தில் (உணவுப் பை) தங்கியிருக்கும். எனவே மூன்று தோஷங்களும் சீற்றமுற்றதால் தோன்றிய இதயநோயில் ஆமாசயத்தில் தங்கிய வாதத்தை நீக்க முதலில் பேதியாகச் செய்ய வேண்டும். பிறகு பட்டினி கிடக்கச் செய்தல் செரி மானத்தைத் தூண்டுதல் முதலிய முறைகளைக் கையாள வேண்டும்.

## 74. கிருமியால் தோன்றிய இதயநோய்க்குச் சிகிச்சை

கிருமி(புழுக்)களால் தோன்றிய இதயநோயில் புழுப்பூச்சி களைப் போக்க விமான ஸ்தானத்தில் வியாதிதருபீயம் என்னும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள முறைகளைப் பயன்படுத்திச் சிகிச்சை செய்ய வேண்டும். 103

## 75. தலையிலுள்ள உயிர் நிலைகளில் தோன்றும் நோய்களுக்குக் காரணம

சிறுநீர் மலம் இவற்றின் வேகத்தைத் தடுத்தல் செரிமான மாகாத உணவை உண்ணல் தூசி முதலியன மூக்குத் துளை களுக்குள் புகுதல் அளவுக்கு மீறிப் பேசுதல் சினங்கொள்ளுதல் மாதவிடாய் தாறுமாறாக இருத்தல் அல்லது மாதவிடாய் காலத் தில் தகாதபடி நடத்தல் தலையில் அடிபடுதலால் எரிச்சல் உண்டாகுதல் இரவில் கண்விழித்தல் பகலில் நெடுநேரம் தூங்குதல் மிக்க குளிர்ந்த நீரைப் பயன்படுத்தல் பனியில் திரிதல் மிதமிஞ்சி கலவியின்பம் கொள்ளுதல் மனவருத்தத்தால் மிகவும் கண்ணீர் விடுதல் புகை சூழ்ந்து கொள்ளுதல் என்னும் காரணங் களால் தலையில் சேர்ந்துள்ள தோஷங்கள் மூன்றும் சீற்றமடை

யும். அதில் வாதம் மிகவும் சீற்றமடைந்து [1]பிரதிச்யாயம் என்னும் நோயை உண்டாக்கும். 104

## 76. வாதம் முதலியவற்றால் தோன்றும் பீநசத்தின் இலக்கணம்

வாதத்தினால் தோன்றிய பீநசத்தில் (நாள்பட்டசளி) மூக்குத்துளைகளில் வலியும் ஊசியால் குத்துவது போல குத்தல் வலியும் தோன்றும். தும்மல் மிகும். நீரைப் போன்ற சளி மிகுதியாக ஒழுகும். குரலும் மாறுபடும். தலைவலி தோன்றும். பித்தத்தினால் தோன்றிய பீநசத்தில் மூக்கு நுனி புண்ணாகும். காய்ச்சல் தோன்றும். வாய் உலர்ந்து போகும். நாவறட்சி மிகும். மஞ்சள் நிறத்துடன் சூடுள்ளதாகச் சளி பெருகும்.

கபத்தினால் தோன்றிய பீநசத்தில் இருமல் சுவையின்மை தோன்றும். மூக்கிலிருந்து தடித்த சளி பெருகும். வாயிலிருந்து தடித்த எச்சில் ஒழுகிக் கொண்டிருக்கும். மூக்குத் துளைகளில் பொறுக்க இயலாத அரிப்பு உண்டாகும்.

ஸந்நிபாதத்தினால் தோன்றிய பீநசத்தில் வாதம் முதலிய வற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட இலக்கணங்கள் அனைத்தும் கலந்து தோன்றும். பொறுக்க இயலா வலி மிகும். 105–106

## 77. கெட்ட பீநசத்தால் உண்டாகும் துன்பங்கள்

பீநசம் என்னும் நோய் தோன்றியதும் சிகிச்சை செய்யாமல் கூடாத உணவு நீர் முதலியவற்றைப் பயன்படுத்துவதால் மேலும் நோய் வலிவடையும். அதனால் தும்மல் மிகும். மூக்குத்துளைகள் உலர்ந்து போகும். மூக்குத்துளைகளை அடைத்து வலியுடன் சிறிது நீர் ஒழுகிக் கொண்டிருக்கும். மூக்குத்துளைகள் புண்ணாகும். மேலும் [2]சோதம் [3]நாஸார்புதம் என்பனவும் தோன்றும். மூக்கிலிருந்து இரத்தமும் சீழும் பெருகும். மூக்கில் கொப்புளங்கள் தோன்றும். தலை காது கண் இவற்றில் நோய்கள் உண்டாகும். தலை முடி உதிர்ந்து போகும். அல்லது முடி மஞ்சள் அல்லது வெண்மை நிறமாக மாறும். நாவறட்சி

1. பிரதிச்யாயம்—நாள்பட்ட சளி—பீநசம்
2. சோதம்—வீக்கம்
3. நாஸார்புதம்—மூக்குக்குள் வரும் புரைகுழல் சதை வளருதல்.

இருமல் இழுப்பு காய்ச்சல் இரத்தபித்தம் குரல் மாறுபாடு உடலுலர்ந்து இளைத்துப் போதல் முதலியன முதிர்ந்த பீநசத்தால் தோன்றும். 107–109

## 78. ர்ந்த பீநசத்தின் இலக்கணம்

முன்கூறியபடி முதிர்ந்த பீநசத்தில் மூக்குத் துளைகள் அடைபட்டு மூச்சு தடைப்படும். சளியும் ஒழுகிக் கொண்டிருக்கும். மூக்கு உலர்ந்து புண்ணாகும். மூக்கு மணமறியும் தன்மையையிழக்கும். வாய் மிக்க கெட்ட நாற்றம் வீசும். காரணமில்லாமலேயே நோயாளி அடிக்கடி உணர்ச்சி வயப்படுவான். இது நாள் பட்ட கெட்ட பீநசத்தின் இலக்கணமாகும். 110

## 79. க்ஷவது (தும்மல்) இலக்கணம்

வாதம் மிக்க சீற்றமடைந்து தலையிலுள்ள துவாரங்களில் எல்லாம் பரவி மூக்கிலுள்ள உயிர் நிலையைச் சார்ந்து மூக்குத் துளைகளின் வழியே பெருத்த ஒலியுடன் வெளியேறும். இது தும்மல் எனப்படும்.

## 80. மூக்கு உலர்ந்து போதல்

வாதம் சீற்றமடைந்து கபத்தை ஈரப்பசையின்றி உலர்ந்து போகும் படி செய்து மூக்குத் துளைகளிலும் [1]சிருங்காடகம் என்னும் மூக்கிலுள்ள உயிர்நிலையிலும் ஈரப்பசையை உலர்த்தி விடும். 111

## 81. [2]பிரதீநாஹ இலக்கணம்

கபம் சீற்றமடைந்து வாதத்துடன் சேர்ந்து மூக்குத்துளைகளை அடைக்கும். அதனால் மூச்சு விடுதல் மிகவும் கஷ்டமாகி விடும். இது பிரதீநாஹமெனப்படும்.

---

1. சிருங்காடகம்—மூக்கின் துவாரங்கள், காதின் துவாரங்கள், வாய்புறம், தொண்டை இந்நான்கு திசைகளிலிருந்து வரும் (ஸ்ரோதஸ்ஸுகள்) துவாரங்கள் கூடும் இடம் (நாற்சந்தி).
2. பிரதீநாஹம்—வயிற்றில் உப்புசம் ஏற்படுவதுபோல் மூக்கில் ஏற்படும் உப்புசமும், அடைப்பும்.

### 82. பரிஸ்ரவ இலக்கணம்

தலையில் மூளையிலிருக்கும் கபம் கட்டிப்போய் மஞ்சள் நிறத்துடன் வீடாது மூக்கு வழியே வெளியேறிக் கொண்டிருந்தால் அது பரிஸ்ரவம் என்னும் நோயாகும். 112

### 83. பூதிநஸ்யத்தின் இலக்கணம்

முன்கூறிய மூக்கு ஒழுகுதலைச் சிகிச்சை செய்யாமல் விட்டு விட்டால் கபம் நிறம் மாறி கெட்ட நாற்றம் கொண்டு மூக்குத் துளைகளின் வழியேயும் வாயின் வழியேயும் வெளியேறும். அது பூதிநஸ்யம் என்னும் நோயாகும். இதனால் மூக்கில் வீக்கமும் தலை சுற்றலும் தோன்றும்.

### 84. அபீநஸ இலக்கணம்

மூக்குத்துளைகள் அடைப்பட்டு ஈரப்பசை உலர்ந்து அழுகியது போலாகி புகை வெளியேறுவது போல துன்பத்தை உண்டாக்கும். அப்பொழுது மூக்கு மணத்தையும் வாய் சுவையையும் அறியா. இது வாத கபங்களால் தோன்றும் நோயாகும். இது பீநஸத்திற்குச் சமமான இலக்கணங்களைக் கொண்டிருக்கும். 113—114

### 85. கிராணபாகத்தின் இலக்கணம்

மூக்குத்துளைகளில் எரிச்சலும் இரத்த நிறமுள்ள வீக்கமும் தோன்றி புண்ணானால் அது கிராணபாகம் என்னும் மூக்கு நோயாகும். இது இரத்தபித்தத்தால் தோன்றுவதாகும்.

### 86. நாஸாச்வயது (வீக்கம்) இலக்கணம்

வாதம் முதலிய தோஷங்கள் சீற்றமடைந்து மூக்கைச் சார்ந்துள்ள இரத்தத்தையும் மாமிசத்தையும் கெடுத்து மூக்கில் வீக்கத்தைத் தோற்றுவிக்கும். இது நாஸாச்வயது எனப்படும். 115

### 87. நாஸார்புதத்தின் இலக்கணம்

வாதம் முதலிய தோஷங்கள் சீற்றமடைந்து மூக்குத்துளைகளைச் சேர்ந்து இரத்தம் மாமிசம் என்பனவற்றைக் கெடுத்து மூச்சு விட முடியாமல் தடுத்து மூக்கில் கட்டிகளை உண்டாக்கும். இது நாஸார்புதம் எனப்படும்.

## 88. பூயரத்தத்தின் இலக்கணம்

மூக்குத்துளைகளிலிருந்தாவது காதுகளிலிருந்தாவது வாயிலிருந்தாவது பித்த நீருடன் கலந்த இரத்தம் பெருகுமாயின் அது பூயரத்தம் எனப்படும். 116

## 89. அ_ம்ஷிகா தீப்தங்களின் இலக்கணங்கள்

பித்தத்துடன் கூடிய வாதம் தோல் முதலியவற்றைக் கெடுத்து மூக்குத்துளைகளில் கொப்புளங்களைத் தோற்றுவிக்கும். அவை பக்குவமடைந்து புண்ணாகும். இது அம்ஷிகா எனப்படும். மற்றும் இந்த நோயினால் மூக்குத்துளைகளில் நெருப்பால் சுட்டது போன்ற எரிச்சல் தோன்றும். இது தீப்தம் என்னும் மூக்கு நோயாகும். 117

## 90. தலையில் தோன்றும் நோய்களும், இலக்கணங்களும்

வாதத்தினால் தோன்றிய தலைநோயில் மிக்க வலி குத்தல்வலியும் தோன்றி தலை அதிர்ந்து கொண்டிருக்கும். பித்தத்தினால் தோன்றிய தலைவலியில் எரிச்சலும் வலியும் மிகுந்திருக்கும். கபத்தினால் தோன்றிய தலைவலியில் தலை மிகவும் பளுவாகத் தோன்றும். மூன்று தோஷங்களினாலும் உண்டாகிய தலைநோயில் வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட இலக்கணங்கள் எல்லாம் தோன்றும். கிருமியால் தோன்றிய தலைநோயில் தலையில் அரிப்பும் கெட்ட நாற்றமும் ஊசியால் குத்துவது போன்ற வலியும் குத்தலும் தோன்றும். 118

## 91. வாதத்தினால் வாயில் தோன்றும் நோய்

(வாயில் தோன்றும் நோய்கள் வாதம் பித்தம் கபம் ஸந்நிபாதம் என்னும் நான்கினால் தோன்றுவன. இவை நான்கு வகை என முன் அஷ்டோதரீயாத்யாயத்தில் கூறப்பட்டது அவற்றின் இலக்கணங்கள் இங்கு விளக்கப்படுகின்றன.)

வாதத்தினால் தோன்றிய வாய்நோயில் வாய் ஈரமின்றி உலர்ந்து சுரசுரப்புடன் வறண்டிருக்கும். வலி குத்தல் முதலிய துன்பங்கள் அவ்வப்பொழுது தோன்றும். வாய் கருநிறமோ சிவப்பு நிறமோ கொண்டிருக்கும். வாயிலிருந்து எச்சில் ஒழுகிக் கொண்டிருக்கும். வாய் குளிர்ந்து உதடு துடித்துக் கொண்டிருக்கும். ஊசியால் குத்துவது போலவும் உடைப்பது போலவும் வலி தோன்றும். 119

## 92. பித்தத்தினால் வாயில் தோன்றும் நோய்

பித்தத்தினால் தோன்றிய வாய் நோயில் நாவறட்சி காய்ச்சல் கொப்புளங்கள் தாடைப்பகுதியில் எரிச்சல் வாயிலிருந்து புகை வருவது போலிருத்தல் முகம் வெடித்து இருப்பது போலிருத்தல் மயக்கம் பலவகைக் குத்தல் வலி முதலிய பல துன்பங்களும் வெண்மை சிவப்பு தவிர ஏனைய நீலம் மஞ்சள் முதலிய நிறங்களும் தோன்றுதல் என்னும் இலக்கணங்கள் காணப்படும். 120

## 93. கபத்தினால் தோன்றும் வாய் நோயின் இலக்கணம்

கபத்தினால் வாயில் தோன்றிய நோயில் அரிப்பும் பளுத் தன்மையும் தோன்றும். வாயிலிருந்து வெண்மை நிறத்துடன் எச்சில் ஒழுகிக் கொண்டிருக்கும். வாயில் ஆமணக்கு எண்ணெய் பூசியது போன்ற எண்ணெய்ப்பசை மிகுந்திருக்கும். சுவை இன்மையும் மரத்துப் போதலும் ஒக்காளமும் தோன்றும். கபம் வெளியாகும். சடராக்னி குறைவுபடும். தூக்கமயக்கம் தோன்றும். துன்பங்கள் சற்று மந்தமாகக் காணப்படும். 121

## 94. ஸந்நிபாதத்தினால் தோன்றும் முக நோயின் இலக்கணம்

வாதம் முதலிய தோஷங்களுக்குத் தனித்தனியாக முன்பு கூறிய இலக்கணங்கள் அனைத்தும் கலந்து காணப்பட்டால் அது ஸந்நிபாதத்தினால் தோன்றிய முக நோயாகும்.

## 95. மற்றும் சில முக நோய்கள்

வாதம் முதலிய தோஷங்களாலும் ஸந்நிபாதத்தினாலும் வாயில் தோன்றுவனவாகிய நான்கு வகை நோய்கள் இங்குக் கூறப்பட்டன. அவை உதடு முதலிய இடவேற்றுமையாலும் இரத்தம் முதலிய தூஷ்யங்களாலும் குளிர்ச்சி தந்தபுஷ்பகம் முதலிய பெயர் வேற்றுமைகளாலும் அறுபத்து நான்குவகை முகநோய்களாகும். அவற்றின் இலக்கணங்கள் அவற்றிற்கான சிகிச்சை முறைகள் என்பன தனித்தனியாகச் சாலாக்ய தந்திரத்தில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. இங்கு முன்பு கூறிய நான்கு வகை நோய்களுக்கு மட்டும் சிகிச்சை முறைகள் கூறப்படுகின்றன. 122–123

## 96. அரோசகத்தின் ம) இலக்கணம்

வாதபித்த கபங்களாலும் மிக்க வருத்தம் அச்சம் உலோபம் சினம் என்னும் காரணங்களாலும் மனத்திற்குப் பிடிக்காததை

உண்பதாலும் மனத்திற்குப் பிடிக்காததை முகர்தல் அல்லது காண்பது என்னும் காரணங்களாலும் சுவையின்மை தோன்றும்.

## 97. வாதம் முதலியவற்றால் தோன்றிய அரோசக இலக்கணம்

வாதத்தினால் தோன்றிய சுவையின்மையில் பல்கூசிப்போய் நாவும் மெல்ல முடியாமல் இருக்கும். வாய் துவர்ப்புச்சுவை கொள்ளும். பித்தத்தினால் தோன்றிய சுவையின்மையில் வாய் விறுவிறுப்புடன் புளித்தும் நாக்கு சுவைகளையறியாமல் கெட்ட நாற்றம் கொண்டிருக்கும். கபத்தினால் தோன்றிய சுவையின்மையில் வாய் உவர்ப்பு இனிப்புச் சுவைகளுடன் கொழகொழப்புடன் கனத்தும் போய் சுவையறியாமல் தளர்ந்திருக்கும். வாய்ப்பிடிப்பு, உண்ட உணவு எளிதாக உள்ளே செல்லாமல் தடைப்படுதல் என்பன தோன்றும். 124—125

## 98. அச்சம் முதலியவற்றால் (ஆகந்துகமாகத்) தோன்றுவதும் ஸந்நிபாதத்தினால் தோன்றுவதுமான சுவையின்மையின் இலக்கணங்கள்.

மிக்க வருத்தம் அச்சம் உணவுப் பொருள்களில் மிகுந்த நப்பாசை சினம் முதலியவற்றாலும் மனத்திற்குப் பிடிக்காத தூய்மையற்ற பொருள்களை உண்பதாலும் அத்தகையவற்றை முகர்வதாலும் தோன்றிய சுவையின்மையில் வாய் சுவையறியு மென்றாலும் உணவுப்பண்டங்கள் வாய்க்குப் பிடிக்காமல் போகும். மேலும் மூன்று தோஷங்களாலும் தோன்றும் சுவையின்மையில் தனித்தனியாக வாதம் முதலியவற்றிற்குக் கூறப் பட்ட இலக்கணங்கள் சேர்ந்து காணப்படும். அதனால் உணவுப் பண்டங்கள் சுவையற்று காணப்படும். 126

## 99. வாதத்தினால் தோன்றிய காது நோயின் இலக்கணம்

வாதத்தினால் தோன்றிய காது நோயில் காதுக்குள் ஒலி உண்டாகும். குத்தல் வலி தோன்றும். காதுக்குரும்பி உலர்ந்து போகும். காதுகளிலிருந்து இலேசாகச் சீழ் வழியும். ஒலி கேட்காது.

## 100. பித்தத்தினால் தோன்றிய காது நோயின் இலக்கணம்

பித்தத்தினால் தோன்றிய காதுநோயில் வீக்கம் உண்டாகும். காது சிவந்து உடைப்பது போன்ற வலியும் மிக்க எரிச்சலும் தோன்றும். மஞ்சள் நிறமும் கெட்டநாற்றமும் கொண்ட நீர் காதிலிருந்து ஒழுகிக் கொண்டிருக்கும். 127

### 101. கபத்தினால் தோன்றும் காது நோயின் இலக்கணம்

கபத்தினால் தோன்றிய காது நோயில் காது கேட்கா மலிருக்கும். அரிப்பும் கடினமான வீக்கமும் எண்ணெய்ப்பசை யுடன் வெண்மை நிறம் கொண்ட சீழ் வழிதலும் சிறிது வலியும் காணப்படும்.

### 102. ஸந்நிபாதத்தினால் தோன்றும் காது நோயின் இலக்கணம்

ஸந்நிபாதத்தினால் தோன்றிய காது நோயில் வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட இலக்கணங்கள் அனைத்தும் தோன்றும். அவற்றில் எந்த தோஷம் மிகவும் சீற்றமடைந்திருக்குமோ அதற்குரிய வகையில் சீழ் ஒழுகும். 128

### 103. வாதத்தினால் தோன்றும் கண் நோயின் இலக்கணம்

வாதத்தினால் தோன்றிய கண் நோயில் கண்கள் சிறிது சிவந்து பீளையின்றி இருக்கும். கண்கள் அதிர்தலும் குத்தல் வலியும் கடுமையான வலியும் காணப்படும். 129

### 104. பித்ததத்தினால் தோன்றிய கண் நோயின் இலக்கணம்

பித்தத்தினால் தோன்றிய கண் நோயில் எரிச்சலும் மிக்க வலியும் உண்டாகும். கண்கள் சிவந்து மஞ்சள் நிறமுள்ள பீளை யுடன் சூடு அடைந்து நீர் பெருகிக் கொண்டிருக்கும்.

### 105. கபம் மற்றும் ஸந்நிபாதத்தினால் தோன்றும் கண் நோய்களின் இலக்கணம்

கபத்தினால் தோன்றிய கண்நோயில் பீளை வெள்ளையாக இருக்கும். பிசுபிசுப்புடன் நீர் மிகுதியாகப் பெருகிக் கொண் டிருக்கும். கண்கள் பளுவாகி அரிப்பும் தோன்றும். வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட இலக்கணங் கள் ஸந்நிபாதத்தினால் தோன்றும் கண் நோயில் கலந்து காணப் படும். இங்கு நான்கு வகையான கண் நோய்கள் மட்டும் விளக்கப்பட்டன. சாலாக்யதந்திரத்தில் தொண்ணூற்று ஆறு வகைக் கண்நோய்களின் இலக்கணம் சிகிச்சை முதலியன விளக்கப் பட்டிருப்பதால் இந்த தந்திரத்தில் அவை மறுபடியும் விளக்கப் படுதல் தேவையற்றதென்பதால் இங்கு அவை விளக்கப்பட வில்லை. 130–131

### 106. தலைமுடி உதிர்தல் நரைத்தல் இவற்றின் இலக்கணம்

உடலில் உள்ள சூடு வாதம் முதலிய தோஷங்களுடன் கூடி தலையில் முடி தோன்றும் இடத்தில் சூட்டை உண்டாக்கி முடி

உதிர்ந்து போகும்படிச் செய்யும். தலையில் வழுக்கை தோன்றும். அத்தகைய நாடு முடிதோன்றும் பகுதியைச் சிறிதளவே சூடடையச் செய்தால் முடி வெளுத்து நரை தோன்றும். அல்லது செம்மை நிறமுள்ளதாகும். 132

இவ்வாறு கழுத்துக்கு மேற்பகுதியிலிருக்கும் மூக்கு கண் முதலிய உறுப்புகளைச் சார்ந்த நோய்கள் ஆயுர்வேத நூலில் கூறப்பட வேண்டிய [1]எட்டு அங்கங்களுக்கும் (பிரிவுகள்) குறைவு படாமல் நூல் முழுமைபெறுவதற்காக இங்கு குறிப்பிடப் பட்டன. 133

## 107. வாத பீநசத்திற்குச் சிகிச்சை

இருமலும் குரல் வேறுபாடுமுள்ள வாதத்தினால் தோன்றிய பீநசத்தில் (நாள்பட்டசளி) யவக்ஷாரத்துடன் கூடிய நெய்யை யும் புலால் சாற்றையும் சூடான பாலையும் பருகச் செய்ய வேண்டும். எண்ணெய்ப் பொருள்களால் தயார்செய்யப்பட்ட புகையைப் பிடிக்கச் செய்ய வேண்டும். 134

1. ஆயிர்வேதத்தின் பிரிவுகள் எட்டு, அவை
   (1) சல்யதந்திரம் (உடலில் பதிந்துள்ள முள் அம்பு முதலியவற்றை வெளியேற்றுதல்).
   (2) சாலாக்யதந்திரம்—(கூர்மையான ஆயுதங்களைக் கொண்டு செய்யத்தக்க முறை).
   (3) காயசிகிச்சை—(உடலில் தோன்றிய காய்ச்சல், கழிச்சல் போன்ற நோய்களைத் தீர்க்கும் முறை).
   (4) பூதவித்தை—(பிசாசு முதலியவற்றால் தோன்றும் மனநோய்களைப் போக்கும் முறை)
   (5) கௌமாரப்ருத்தியம்—(குழந்தைகள் மருத்துவம்)
   (6) அகத தந்திரம்—(விஷசிகிச்சை)
   (7) ரஸாயனதந்திரம்—(ரஸம் ரத்தம் முதலிய உடலில் உள்ள தாதுக்களை செழிப்புறச் செய்யும் முறை).
   (8) வாஜீகரணம்—(விந்துவையும் ஆண்மையையும் வளர்க்கும் முறை). ஆயுர்வேத நூலாசிரியர்கள் இந்த எட்டு பிரிவுகளில் ஏதேனும் ஒன்றைச் சிறப்பாக விளக்கிக் கூறி மற்றைப் பிரிவுகளையும் தங்களுடைய நூலில் சுருக்க மாகச் சொல்வது வழக்கம்.

## 108. வாத பீநசத்திற்குப் புகை

சதகுப்பை விதை இலவங்கபத்திரி சிற்றாமுட்டி வேர் பெருவாகை வேர் ஆமணக்கு விதை வில்வவேர் சரக்கொன்னைப் பட்டை இவற்றை அரைத்து அதில் மெழுகையும் நெய்யையும் வசம்பையும் சேர்த்து திரியாகச் செய்து முறைப்படி புகை பிடிக்கத் செய்க. மற்றும் பொரிமாவை நெய்யுடன் கலந்து துணியில் சுற்றி மடக்கில் வைத்து அதன் புகையைப் பிடிக்கச் செய்க. பீநசநோயின் துவக்கத்தில் மருத்துவர் இப்புகை பிடித்தலைச் செய்விக்க வேண்டும். 135–136

### வாதபீநசத்திற்கு உடல் வியர்க்கச் செய்தல்

வாதத்தினால் தோன்றிய பீநசத்தில் பொட்டுகளிலும் தலையிலும் நெற்றியிலும் வலி தோன்றினால் [1]பாணிஸ்வேத [2]உபநாஹஸ்வேத முறைகளைப் பயன்படுத்துக. தும்மல் இருந்தாலும் மூக்கிலிருந்து சளி ஒழுகிக் கொண்டிருந்தாலும் மூக்கு அடைப்பட்டிருந்தாலும் எண்ணெய்க்குளியலைச் செய்வித்து [3]ஸங்கரஸ்வேத முறை முதலியவற்றை முறைப்படி கையாள வேண்டும். 137

## 109. வாதபீநசத்திற்கு மூக்குப் பொடி

வாசனைப்புல் சீரகம் வசம்பு முஞ்சைப்புல் காட்டுக் கோரைக்கிழங்கின்பூ இவற்றையோ இலவங்கப்பட்டை இலவங்கப்பத்திரி மிளகு ஏலஅரிசி கருஞ்சீரகம் இவற்றையோ சம அளவில் கலந்துத் தூளாக்கி முகரச் செய்தல் மூக்கினால் உரியச் செய்தல் எனும் இவற்றால் முன்கூறிய துன்பங்கள் நீங்கி பிநச நோயும் தணியும். 138

## 110. எண்ணெய் நசியம்

மூக்குத்துளைகளும் சிருங்காடகம் என்னும் பகுதியும் மூக்கும் கண்களும் உலர்ந்து போயிருந்தால் இனிகூறப்போகும் எண்ணெயை மூக்கினுள் உறிஞ்சச் செய்யவேண்டும்.

1. பாணிஸ்வேதம்—கையால் சூடு ஒத்தடம் கொடுத்தல்.
2. உபநாஹஸ்வேதம்—மருந்துப் பொருட்களை இடித்து வதக்கி விழுதாக்கி இளம் சூட்டில் துணியில் கட்டி ஒத்தடம் கொடுத்தல். அவ்விடத்திலேயே மருந்தைப் பூசி துணியால் கட்டுதல்.
3. ஸங்கரஸ்வேதம்—சூடாக்கப்பட்ட மருந்துப் பொருட்களை துணியில் கட்டி வலியுள்ள இடத்தை துணியால் மறைத்து அதன்மேல் ஒத்தடம் கொடுத்தல்.

எள்ளை ஆட்டுப்பாலில் ஊறவைத்து நிழலிலுலர்த்திப் பின் ஆட்டுப்பாலை விட்டு மைய அரைத்து. அவ்விழுதிற்கு நான்கில் ஒரு பங்கு அதிமதுரத்தூள் கலந்து ஆட்டுப்பால் ஆவியில் சிறிதளவு வேகும்படி வைத்துப் பிறகு, ஆட்டுப்பால் விட்டுப் பிசைந்து அதிலிருந்து எண்ணெய் எடுக்க வேண்டும். அந்த எண்ணெய்க்கு நான்கு மடங்கு தசமூலகஷாயத்துடன் சித்தரத்தை அதிமதுரம் இந்துப்பு இவற்றின் விழுதை எண்ணெய் அளவின் நான்கில் ஒரு பங்காகவும் சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சுக. இவ்வாறு பத்து முறை தசமூலகஷாயமும் சித்தரத்தை முதலியவற்றின் விழுதும் கலந்து பக்குவம் செய்யப்படுவதே 'அணுதைலம்' எனப்படும். இதை முன்கூறியபடி மூக்குத்துளை முதலியன உலர்ந்திருந்தபோது மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 139–140

## 111. வாதபீநசத்திற்கு ஆஸ்தாபன வஸ்தி

வாதத்தினால் தோன்றிய பீநசத்தில் நோயாளியின் உடலை எண்ணெய் முறைகளால் நொய்மைப்படுத்திப் பிறகு [1]ஆஸ்தாபன வஸ்தியால் தோஷத்தை வெளியேற்ற வேண்டும். 141

## 112. வாதபீநசத்தில் (நாள்பட்ட சளி) உணவுக் கட்டுப்பாடு

வாதபீநசத்தால் துன்பப்படும் நோயாளி எண்ணெய்ப் பசையும் புளிப்புச் சுவையும் உஷ்ணவீரியமும் லகுகுணமும் உள்ள உணவுப் பொருள்களையும் கிராமங்களிலுள்ள விலங்கு இனங்களின் புலால் சாற்றையும் எளிதாகச் செரிமானமாகக் கூடிய சோற்றுடன் உண்ண வேண்டும். குளிக்கவும் பருகவும் வெந்நீரையே பயன்படுத்த வேண்டும். காற்று மிகக் குறைந்து சூடாக இருக்கும் இல்லத்தில் வசிக்க வேண்டும். மற்றும் கவலை உடற்பயிற்சி மிக்க உரையாடல் கலவி என்பனவற்றைத் தனக்கு நன்மையை விரும்பும் நோயாளி அறவே விலக்க வேண்டும். 142–143

## 113. பித்தத்தினால் தோன்றும் பீநசத்திற்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய பீநசத்தில் சுக்குடன் சேர்த்துப் பக்குவம் செய்த நெய்யையோ பாலையோ பித்ததோஷம் பக்குவமடைவதற்குப் பருகச் செய்ய வேண்டும். பீநசம் பக்குவப் பட்டிருந்தால் [2]சிரோவிரேசன முறையைப் பயன்படுத்த வேண்டும். 144

---

1. ஆஸ்தாபன வஸ்தி - கஷாய வஸ்தி.
2. தலையிலுள்ள தோஷங்களை மூக்கின் வழியாக மருந்தைச் செலுத்தி வெளியேற்றுதல்.

### 114. பக்குவமடைந்த பீநசத்திற்குத் தைலம்

பக்குவப்பட்ட பீநசத்தில் வட்டத்திருப்பி மஞ்சள் மர மஞ்சள் பெருங்குரும்பை திப்பிலி முல்லைத்துளிர் நேர்வாளவேர் இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்யப்பட்ட தைலத்தைச் சிரோவிரேசனத்திற்காகப் பயன்படுத்த வேண்டும். 145

### 115. பூயரக்தம் முதலியவற்றிற்குச் சிகிச்சை

பூயரக்தம் என்னும் பீநசத்திற்கு இரத்த பித்த சிகிச்சைக்குக் கூறப்பட்ட இரத்த பித்தத்தைப் போக்கும் கஷாயங்களையும் மூக்கிலிடும் மருந்துகளையும் பயன்படுத்தத் தகும். மற்றும் மூக்குத் துளைகள் புண்ணாகி எரிச்சலும் வறட்சியும் மிகுந்துள்ள போது குளுமையைத் தரக்கூடிய மேல்பூச்சு நீரால் உடலை நனைத்தல் மருந்துபொருளை முகரச் செய்தல் மூக்கில் மருந்திடுதல் பணிவிடைசெய்தல் என்பன கையாளத்தக்கவை. இனிப்பும் குளுமையும் கொண்டுள்ள கஷாயங்களைப் பயன்படுத்துதல் நலம் தரும். பித்தம் குறைந்த அளவில் உள்ள பீநசத்தில் எண்ணெய்ப் பசையுள்ள மருந்துகளைக் கொடுத்துப் பேதியாகச் செய்தல் நலமாம். 146–147

### 116. பித்த பீநசத்தில் உணவுக்கட்டுப்பாடு

பீநசத்தில் நெய் பால் யவஅரிசி அறுபதுநாள் குறுவை கோதுமை காற்றடர்ந்த காட்டுப்பகுதியிலுள்ள விலங்குகளின் புலால் குளிர்ந்த தன்மையும் புளிப்பு கசப்புச் சுவையுமுள்ள கீரை வகைகள் பயறு முதலியவற்றால் செய்யப்பட்ட கஞ்சி வகைகள் முதலியன உண்பதற் கேற்றவையாகும். 148

### 117. கபத்தினால் தோன்றிய பீநசத்திற்குச் சிகிச்சை

கபத்தினால் தோன்றிய பீநசத்தில் தலைபளுவும் சுவையின்மையும் தோன்றினால் முதலில் பட்டினி கிடக்கச் செய்ய வேண்டும். பீநசம் பக்குவமடைவதற்குத் தலையில் நெய்யைப்பூசி வியர்க்கச் செய்ய வேண்டும். மருந்து நீரை தலையில் ஊற்ற வேண்டும். வெள்ளைப்பூண்டு பயற்றின் மாவு [1]திரிகடுகத்துகள் யவக்ஷாரம் இவற்றை நெய் கலந்து பயன்படுத்த வேண்டும். இதற்குப் பிறகும் கபம் வெளியேறாமல் இருந்தால் கபத்தைப் போக்கும் மருந்துகளால் வாந்தி எடுக்கச் செய்தல் நலம் தரும். 149–150

1. திரிகடுகம்—சுக்கு, மிளகு, திப்பிலி.

## 118. மூக்கு நோய்களில் சிரோவிரேசனம்

அபீநசம் பூதிநஸ்யம் பரிஸ்ரவம் அருநம்ஷிகா என்னும் நோய்களில் மூக்குத் துளைகளில் அரிப்பு தோன்றிய போதும் கபத்தினால் தோன்றிய பீநசத்திலும் மிளகு திப்பிலி முதலிய காரச் சுவையுள்ளவற்றின் தூள்களால் புகைபிடிக்கச் செய்வதும், [1]அவபீட நஸ்யத்தைப் பயன்படுத்துவதும் நலமாம். 151

## 119. மூக்கு நோய்களில் கடுமையான சிரோவிரேசனம்

மனோசிலை வசம்பு திரிகடுகம் வாயுவிளங்கம் பெருங்காயம் குக்குலு மஞ்சள் நாயுருவி முதலிய காரப் பொருள்களைத் தூளாக்கி [2]ப்ரதமன நஸ்யமாகப் பயன்படுத்த வேண்டும். 152

## 120. கபத்தினால் தோன்றிய பீநசத்திற்கு [3]பார்ங்க்யாதிதைல நசியம்

சிறுதேக்கு மருக்காரக்காய் முஞ்சையும் ஆளி முதலிய வற்றைப் பசுவின் சிறுநீர் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி அதில் நான்கில் ஒருபங்கு கடுகெண்ணெய் கலந்து அதில் கொம்பரக்கு, வசம்பு பேய்ச்சுரை வாயுவிளங்கம் கோஷ்டம் திப்பிலி புங்கம் பட்டை இவற்றைச் சம அளவில் கொண்டு செய்த விழுதை எண்ணெயின் அளவிற்கு நான்கில் ஒரு பங்கு சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சுக. கபம் பக்குவமடைந்து மூக்குத்துளை களின் வழியே பெருகிக் கட்டியாகிக் கொழுப்பாக வராமல் இருக்கும்போது இந்த எண்ணெயை மூக்கில் இடும் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 153-154

## 121. கப பீநசத்தில் வாந்தி எடுக்கச் செய்தல்

கபத்தினால் தோன்றிய பீநசம் (நாள்பட்ட சளி) முன்கூறிய கிரியைகளால் வேகம் குறைந்திருக்கும் போது நோயாளியின் உடலில் எண்ணெய்ப்பசை ஊட்டி மருக்காரக்காய் முதலிய வாந்தியாகச் செய்யும் பொருள்களைச் சேர்த்துப் பக்குவம் செய்த பால் கஞ்சிகளையும் எள் உளுந்தும் கலந்து பக்குவம்

1 அவபீட நஸ்யம் மிகவும் தீக்ஷ்ணகுணமுள்ள பொருள் களின் விழுதால் சிரோவிரேசனம் செய்வித்தல்.

2 ப்ரதமன நஸ்யம் - மருந்துத்தூளை குழாய்வழியே மூக்குத்துளைகளுக்குள் ஊதச்செய்தல்

3 பார்ங்க்யாதி - சிறுதேக்கு முதலியவை.

செய்த யவாகூ என்னும் கஞ்சியையும் பயன்படுத்தி வாந்தி யாகும்படிச் செய்ய வேண்டும். 155

## 122. கப பீநசத்தில் உணவுக்கட்டுப்பாடு

கத்தரிக்காய் பேய்ப்புடல் திரிகடுகம் கொள்ளு துவரை பயறு இவற்றைச் சேர்த்துத் தயார் செய்த கஞ்சியையும் காந்தைப் போக்கும்சோற்றையும்வெந்நீரையும் பயன்படுத்துதல் மிகவும் நலம் தரும். குளிக்கவும் வெந்நீரையே பயன்படுத்த வேண்டும். 156

## 123. கெட்ட பீநசம்-நாசார்பீதம் இவற்றிற்குச் சிகிச்சை

மூன்று தோஷங்களும் சீற்றமடைவதால் தோன்றும் நாள் பட்ட பீநசத்தில் முற்கூறிய சிகிச்சைகள் அனைத்தையும் கலந்து செய்ய வேண்டும். மூக்குத் துளைகளில் வீக்கம் தோன்றினால் வீக்கத்தைப் போக்க சிகிச்சை செய்ய வேண்டும். மற்றும் மூக்கில் கட்டியும் மாமிச வளர்ச்சியும் தோன்றினால் முறைப்படி க்ஷார வகையைப் பயன்படுத்தவேண்டும். மற்ற அரும்ஷிகை முதலிய மூக்கு நோய்களில் அவற்றிற்குத் தக்கபடி சிகிச்சை களைக் கவனித்துச் செய்ய வேண்டும். 157

## 124. வாதத்தால் தோன்றிய தலை நோய்க்குச் சிகிச்சை

வாதத்தினால் தோன்றிய தலை நோயில் வாதத்தைப் போக்கும் எண்ணெய் முறைகளையும் உடல் வியர்க்கச் செய் வதையும் மூக்கில் மருந்திடுதலையும் பயன்படுத்த வேண்டும். வாதத்தைப் போக்கும் உணவு குடிநீர் வகைகளையும் வாதத்தைப் போக்கும் பொருள்களால் உபநாக முறையையும் பயன்படுத்த வேண்டும். 158

## 125. வாதத்தினால் தோன்றிய தலைநோய்க்கு [1]உபநாஹஸ்வேத முறை

அகில் முதலிய பொருள்களை எண்ணெயில் வறுத்து அவை இளஞ்சூடுள்ள போது உபநாக முறைப்படி உடலை வியர்க்கச் செய்ய வேண்டும். மற்றும் [2]ஜீவனீய கூட்டுப்பொருள்களாலும்

1. உபநாஹஸ்வேதம்—மருந்துப் பொருட்களை இடித்து, வதக்கி துணியில் கட்டி ஒற்றடம் கொடுத்தல்.
2. ஜீவனீய கூட்டுப்பொருள்—காகோலி, க்ஷீரகாகோலி, மேதா, மகாமேதா, காட்டுப்பயறு ஜீவகம், ரிஷபகம், கீரைப்பாலை, காட்டு உளுந்து, அதிமதுரம்.

முல்லை மலர்களாலும் மீன்களாலும் புலால் வகையாலும் உபநாகஸ்வேதம் செய்வது நலம் தரும். 159

## 126. வாத தலைநோய்க்கு மூக்கிலிடும் மருந்து

சித்ரகத்தை இலகுபஞ்சமூலம் இவற்றை விழுதாக அரைத்துப் பசும்பால் சேர்த்துத் தயார் செய்த எண்ணெயை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால், அது தலைநோய்களைப் போக்கும். அல்லது சித்ரகத்தை காகோலி க்ஷீரகாகோலி இவற்றைச் சேர்த்து விழுதாக்கி அத்துடன் சர்க்கரை பசும்பால் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெயை மூக்கிலிட வேண்டும். 160

## 127. மூக்கிலிடும் மருந்து எண்ணெய் வகைகள்

சிற்றாமுட்டி இலுப்பைப்பட்டை அதிமதுரம் முதுக்கன்கிழங்கு சந்தனம் நீல ஆம்பல் ஜீவகம் ரிஷபகம் திராட்சைப்பழம் சர்க்கரை இவற்றைக் கல்கமாகச் (விழுதாக) செய்து அதை ஒரு [1]பிரஸ்தம் எண்ணெய்க்கு அதன் அளவிற்கு நாலில் ஒரு பங்கு சேர்த்து எண்ணெயின் அளவிற்குப் பசும்பாலும் காட்டு விலங்குகளின் புலால் சாறு ஐம்பது பலங்களும் கலந்து முறையாக எண்ணெய் காய்ச்சி அதை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் கழுத்துக்கு மேற்பகுதியில் வாத பித்தங்களால் தோன்றிய நோய்கள் அனைத்தும் தணியும். 161–162

## 128. [2]மாயூரகிருதம்

தசமூலங்கள் சித்தாமுட்டி சித்ரகத்தை திரிபலை அதிமதுரம் இவை ஒவ்வொன்றும் மூன்று பலம் வீதம் கொள்க. அத்துடன் மயிலின் இறகு பித்தம் குடல் மலம் முகம் கால்கள் என்னும் பகுதிகளை நீக்கி மிகுந்த உடற்பகுதியையும் சேர்த்து கஷாயம் காய்ச்சவும். அதில் ஒரு துரோணம் (256 பலம்) நீர் சேர்த்து நான்கில் ஒரு பகுதி மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி அத்துடன் ஒரு ப்ரஸ்தம் (16 பலம்) பசு நெய்யும் அதே அளவு பசும்பாலும் சேர்த்து ஜீவனீய கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்கள் பத்தில் ஒவ்வொன்றும் ஒரு [3]கர்ஷம் வீதம் சேர்த்து அரைத்த விழுதையும் கலந்து முறையாக நெய்ப்பக்குவம் செய்க. இது மாயூரகிருதம் எனப்படும். இது தலை நோய்கள் அனைத்தையும் அழற்சியையும் போக்கும். கழுத்துப் பகுதியில் உள்ள முது

1. பிரஸ்தம்—16 பலம்.

2. மயூரம்—மயில். 3. கர்ஷம்—கால்பலம்

தெலும்புப் பூட்டிற்கு மேற்பகுதியில் தோன்றுவனவாகிய காது கண் மூக்கு நாக்கு கன்னத்தின் உட்பகுதி வாய் கழுத்து எனும் இடங்களில் தோன்றும் நோய்கள் அனைத்தையும் போக்கும்.
163—165

## 129. மகாமயூரகிருதம்

முன்கூறிய தசமூலப் பொருள்களும் மயில் மாமிசமும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் பிரஸ்தம் அளவுள்ள நெய்யும் நான்கு பிரஸ்தங்கள் பாலும் சேர்க்க. மற்றும் இரைப்பாலை திரிபலம் மேதா திராட்சை ரித்தி சிற்றீச்சம்பழம் மஞ்சிஷ்டி செவியம் சிறுதேக்கு குமிழும் தேவதாரு காஞ்சொறி மகாமேதா பனைமரக்குருந்து பேரீச்சமரக்குருத்து தாமரைத்தண்டு தாமரைக்கிழங்கு கர்காடகசிருங்கி ஜீவகம் பதுமகம் தண்ணீர் விட்டான்கிழங்கு முதுக்கன் கிழங்கு கரும்பு கண்டங்கத்தரி நன்னாரி பெருநன்னாரி பெருங்குரும்பை நெருஞ்சில் ரிஷபகம் சிறுங்காடகக்கிழங்கு நீர்க்கோரைக்கிழங்கு சித்தரத்தை மூவிலை கீழாநெல்லி சிறுளை அரிசி புலான் கிழங்கு புஷ்கர மூலம் சாரணை மூங்கிலுப்பு காகோலி பேரீச்சம்பழம் அக்ரோடு வாதுமைப் பருப்பு முஞ்சாதம் என்னும் புல் அபிஷீகம் என்னும் பழம் என இவற்றில் கிடைத்தவற்றை ஒவ்வொரு கர்ஷம் வீதம் கொண்டு விழுதாக்கி முன்கூறிய கஷாயத்துடன் சேர்த்து முறையாக நெய் காய்ச்சுக. இந்த நெய்யை மூக்கில் மருந்திடவும் பருகவும் உடல் மேல் தேய்த்துக் குளிக்கவும் வஸ்தியின் வழியே குடலுள் செலுத்தவும் பயன்படுத்தலாம். இது எல்லாவகை தலை நோய்களையும் தணிக்கும். கொடிய இருமல் இழுப்பு மன்யாஸ்தம்பம் (மென்னி பிடிப்பு) முதுகுவலி உடல் உலர்ந்து போதல் குரல் மாறுபாடு அர்திதவாதம் (முகம் கோணலாகப் போதல்), பெண்குறிநோய்கள் விந்துவிலும் மாதவிடாயிலும் தோன்றும் நோய்கள் என்பனவற்றிற்கு இதைப் பயன்படுத்தலாம். மக்கட்பேறு இல்லாத நங்கை மாதவிடாய்க்குப் பின் குளித்து இந்நெய்யைப் பருகினால் மலடு நீங்கும். குழந்தை பிறக்கும். இந்த மருந்து ஆத்ரேயமுனிவரால் மிகவும் பாராட்டப்பட்டது.
166—174

முன்கூறிய மருந்தில் தசமூலம் முதலிய பொருள்களுடன் மயிலின் மாமிசத்திற்குப் பதிலாக பெருச்சாளி கோழி அன்னம் முயல் என்பனவற்றில் ஒன்றின் மாமிசத்தைச் சேர்த்துக் கஷாய மாக்கி முன்கூறிய விழுதைச் சேர்த்து நெய் காய்ச்சி மூக்கில் மருந்திடுதல் முதலியவற்றிற்குப் பயன்படுத்தினால் முன்னே சொல்லப்பட்டபடி நற்பயனை விளைவிக்கும். அதாவது

கழுத்துக்கு மேலுள்ள உறுப்புகளில் தோன்றும் நோய்களைப் போக்கும். 175

## 130. பித்தத்தினால் தோன்றிய தலைநோய்களுக்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய தலைநோயில் நெய் பால் குளுமையைத் தரும் நீரால் நனைத்தல் மேல்பூச்சு மூக்கில் மருந்திடுதல் ஜீவனீயக் கூட்டுப் பொருள்களால் செய்த நெய் முறை பித்தத்தைத் தணிக்கும் உணவு குடிநீர் ஆகியவை பயன்படுத்தச் சிறந்தவை யாகும். 176

## 131. பித்தத்தால் தோன்றிய தலைநோய்க்கு மேற்பூச்சு

சந்தனம் வெட்டிவேர் அதிமதுரம் சிற்றாமுட்டி புலிநகப் பூண்டின் வேர் இவற்றைச் சேர்த்துப் பசும்பாலுடன் அரைத்துப் பற்றுப் போடலாம். அல்லது இப்பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் குளித்தாலும் பித்தத்தினால் தோன்றிய தலைநோய் தணியும். 177

## 132. பித்தத் தலைநோய்க்குச் சிரோவிரேசன நசியம்

பித்தத்தினால் தோன்றிய தலை நோயில் இலவங்கப்பட்டை இலவங்கப்பத்திரி சர்க்கரை இவற்றைக் கருநீருடன் மைய அரைத்து அவபீட நசியமாகப் பயன்படுத்தி நெய் மருந்தை மூக்கிலிட வேண்டும். 178

## 133. மூக்கிலிடும் நெய்மருந்து

அதிமதுரம் சந்தனம் நன்னாரி இவற்றுடன் பால் சேர்த்துக் காய்ச்சிய நெய்யையோ, சர்க்கரை திராட்சைப்பழம் அதிமதுரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய நெய்யையோ பித்தத்தினால் தோன்றிய தலைநோயில் மூக்கிலிடுமருந்தாகப் பயன்படுத்தலாம். 179

## 134. கபத்தினால் தோன்றிய தலைநோய்க்குச் சிகிச்சை

கபத்தினால் தோன்றிய தலை நோயில் முதலில் உடல் வியர்க்கச் செய்து புகை பிடித்தல் மூக்கில் மருந்திடுதல் [1]பிரதமன நசியம் என்னும் முறைகளால் சிகிச்சை செய்து தூய்மைபெற்ற

---

1. பிரதமன நசியம்—மருந்துகளைக் குழாய் வழியே மூக்குத் துளைகளுக்குள் ஊதிச் செலுத்துதல்.

பின் கபத்தைப் போக்கும் மருந்துப் பொருள்களை உடல் மேல் பூசியும் அத்தன்மை கொண்ட உணவு நீர் முதலியவற்றை உட்கொள்ளச் செய்தும் சிகிச்சை செய்ய வேண்டும். 180

## 135. தலைநோயில் சூடுபோடுதல் இரத்தத்தை வெளியேற்றுதல்

கபத்தினால் தோன்றிய தலை நோயில் பழைய நெய்யைப் பயன்படுத்தியும் தீக்ஷ்ணகுணமுள்ள மருந்துகளுடன் வஸ்தியைப் பயன்படுத்தியும் சிகிச்சை செய்ய வேண்டும். மற்றும் கபத்தாலும் வாதத்தாலும் தோன்றிய தலைநோயில் முறைப்படி நெருப்பில் காய்ச்சப்பட்ட இரும்புக்கம்பி முதலியவற்றால் நெற்றியில் பொட்டுகளில் சூடுபோட வேண்டும். மற்ற இரத்தத்தினால் தோன்றியதும் ஸந்நிபாதத்தினால் தோன்றியதும் ஆன தலை நோய்கள் இரண்டிலும் இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 181

## 136. புகை பிடிக்கும் முறை

ஆமணக்கு விதை வெட்டிவேர் பட்டுத்துணி குக்குலு அகில் சந்தனம் இவற்றால் வர்த்தி செய்து முறையாகப் புகை பிடிக்கச் செய்க. அல்லது கோஷ்டம் கிரந்திதகரம் தவிர்த்து ஏனைய அகில் முதலிய நறுமணப்பொருள்களைக் கொண்டு வர்த்தி செய்து அதனால் புகைபிடிக்கச் செய்க. 182

## 137. ஸந்நிபாதத் தலை நோய்க்குச் சிகிச்சை

ஸந்நிபாதத்தினால் தோன்றிய தலை நோயில் வாதம் முதலிய தோஷங்களுக்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட சிகிச்சைகளைக் கலந்து பயன்படுத்துக.

## 138. கிருமியால் தோன்றிய தலை நோய்க்குச் சிகிச்சை

கிருமிகளால் தோன்றிய தலைநோயில் தீக்ஷ்ணகுணமுள்ள மருந்துகளால் சிரோவிரேசன முறையைப் பயன்படுத்த வேண்டும். 183

## 139. கிருமிகளால் தோன்றிய நோய்க்கு நசியம் முதலியன

இலவங்கப்பட்டை நேர்வாளவேர் புலிநகம் என்னும் நறுமணப்பொருள் வாயுவிளங்கம் முல்லைமலர் நாயுருவிவிதை புங்கன்விதை வாகைவிதை கறுப்புக் கடுகு சிறுபீளை வில்வ வேர் மஞ்சள் பெருங்காயம் ஜாதிமல்லி கர்ப்பூரதுளசி இவற்றைச் சம அளவில் கொண்டு விழுதாக அரைத்து அதன் அளவிற்கு நான்கு மடங்கு எண்ணெய், எண்ணெயின் அளவிற்கு நான்கு

மடங்கு ஆட்டின் சிறுநீர் கலந்து முறைப்படி எண்ணெய் காய்ச்சி அதை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தலாம். அல்லது விழுதுக்குக் கூறப்பட்ட பொருள்களைத் தூளாக்கி பிரதமன நசியமாகவும் பயன்படுத்தலாம். மற்றும் முருங்கைவிதை புங்கன்விதை திரிகடுகம் இவற்றைக் கஷாயமாகவோ ரஸமாகவோ க்ஷாரமாகவோ தூளாகவோ விழுதாகவோ செய்து அவபீடன நசியமாகப் பயன்படுத்தவும். *184–186*

## 140. வாயில் தோன்றும் நோய்களுக்குச் சிகிச்சை

வாயில் தோன்றும் நோய்களுக்குப் புளித்த சுள் சசப்பு கார்ப்புச் சுவைகள் கொண்ட கஷாயங்கள் தேன் துவர்ப்புச் சுவையுள்ள திரவப் பொருள் ஆகிய மருந்துகளால் [1]கபள கிரகமும் புகை பிடித்தலும் பிரதமன நசியமும் பேதியாகச் செய்தலால் உடலைத் தூய்மை படுத்துவதும் வாந்தி எடுக்கச் செய்தலால் தூய்மைபடுத்துவதும் பட்டினி கிடக்கச்செய்வதும் அந்தந்த தோஷங்களைத் தணிக்கக்கூடிய உணவு நீர் வகைகளை உட்கொள்ளச் செய்வதுமான சிகிச்சை முறைகளை அந்தந்த தோஷத்திற்குத் தக்கபடி பயன்படுத்த வேண்டும். *187–188*

## 141. வாய்நோய்களுக்குத் திப்பிலி முதலியவற்றாலான கபளக்ரகம்

திப்பிலி அகில் மரமஞ்சள்பட்டை யவக்ஷாரம் ரஸாஞ்சனம் வட்டத்திருப்பி வாலுளுவை கடுக்காய்த்தோல் இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி அதில் தேன் கலந்து சீது மாதவம், மாத்விகம் ஆகிய மதுவகைகளில் ஏதேனும் ஒன்று கலந்து விழுதாகச்செய்துநோயாளியைவாயில் அடக்கிக்கொள்ளச் செய்தால் மிக்க நலம் பயக்கும். *189–190*

## 142. பல்லில் இரத்தப் பெருக்கைப் போக்கும் சூரணம்

சிறுவாலுளுவை கடுக்காய்த்தோல் ஏலஅரிசி மஞ்சிஷ்டி கடுகரோகிணி கோரைக்கிழங்கு வட்டத்திருப்பி ஜோதிஷ்மதி (வாலுளுவை) பாச்சோத்திப்பட்டை மரமஞ்சள்பட்டை கோஷ்டம் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கிப் பற்களின் மேல் தேய்த்தால் பற்களிலிருந்து இரத்தம்பெருகுதலும் அரிப்பும் பல்வலியும் நீங்கும். *191*

---

1. கபளகிரகம்—மருந்துப் பொருள்களை விழுதாக அரைத்து வாயில் அசைப்பதற்கேற்ற அளவு வைத்துக் கொள்வதென்னும் சிகிச்சை முறை.

### 143. கழுத்துநோய்களுக்கு [1]பஞ்சகோலாதி குளிகை

பஞ்சகோலங்கள் தாளிசபத்திரி ஏலஅரிசி மிளகு இலவங்கப் பட்டை புரசின்க்ஷாரம் முஷ்க்கம் என்னும் மரத்தின் க்ஷாரம் யவக்ஷாரம் இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கி பழைய வெல்லத்தின் பாகில் சேர்த்து இலந்தைக் கொட்டை அளவுள்ள உருண்டைகளாக்கி முஷ்க்க இலைச்சாம்பலில் ஏழு நாட்கள் வைத்திருந்து பிறகு கழுத்து நோயாளி ஒவ்வொரு மாத்திரை யாக வாயில் வைத்துக் கொண்டால் அமிர்தத்தைப் போல் நோய்களைத் தீர்க்கும். 192–194

### 144. தொண்டையில் தோன்றும் நோயைப்போக்கும் காலக சூரணம்

ஒட்டடை யவக்ஷாரம் வட்டத்திருப்பி திரிகடுகம் இரஸாஞ்சனம் வாலுளுவை திரிபலை பாச்சோத்திப்பட்டை கொடிவேலிப் பட்டை இவற்றைச் சமஅளவில் கொண்டு தூளாக்கித் தேன் கலந்து வாயினுள் வைத்துக் கொண்டிருந்தால் தொண்டையில் தோன்றும் நோய்கள் நீங்கும். இந்தக் காலகசூரணம் பல் வாய் தொண்டை நோய்களைப் போக்கும். 195–196

### 145. தொண்டை நோய்களுக்குப் பீதகசூரணம்

மனோசிலை யவக்ஷாரம் அரிதாரம் இந்துப்பு மரமஞ்சள் பட்டை இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கித் தேன் கலந்து உருண்டைகளாக்கி நெய் மேலிருக்கும் தெளிவில் ஊற வைத்து வாயில் தோன்றும் நோய்களுக்கு வாய்க்குள் வைத்துக் கொள்ளச் செய்க. இது பீதகசூரணமெனப்படும். இது வாய் நோய்களுக்குச் சிறந்த மருந்தாகும். 197–198

### 146. [2]மிருத்வீகாதி சூரணம்

திராட்சை கடுகரோகிணி திரிகடுகம் மரமஞ்சள் பட்டை திரிபலை கோரைக்கிழங்கு இவற்றைச் சம அளவில் தூளாக்கி நெய்யின் மேல் உள்ள தெளிவில் ஊறவைத்துத் தொண்டை நோய்களில் வாயினுள் வைத்துக் கொள்ளச் செய்க. 199

### 147. [3]பாடாதி சூரணம்

வட்டத்திருப்பி ரஸாஞ்சனம் பெருங்குரும்பை வாலுளுவை இவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கித் தேன் கலந்து

1. பஞ்சகோலம்—திப்பிலி கண்டந்திப்பிலி செவியம் கொடி வேலி சுக்கு என்னும் ஐந்தும் சேர்ந்ததாம்.
2. மிருத்வீகா—இனிப்புத்திராட்சை
3. பாடா—வட்டத்திருப்பி.

வாயினுள் வைத்துக் கொள்ளச் செய்தால் இது தொண்டை நோய்கள் அனைத்தையும் நீக்கும். முன்கூறிய காலக பீதக பிருத்வீகாதி சூரணங்கள் மூன்றும் முறையே வாதபித்தகபங்களைப் போக்குவனவாகும். 200

## 148. தொண்டை நோய்க்குக் கஷாயங்கள்

கடுகரோகிணி அதிவிடயம் வட்டத்திருப்பி மரமஞ்சள் கோரைக்கிழங்கு குடசப்பாலைவிதை இவற்றைச் சம அளவில் கலந்து நான்கு மடங்கு பசுவின் சிறுநீருடன் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி அந்தக் கஷாயத்தைப் பருகச் செய்தால் தொண்டை நோய்கள் நீங்கும். 201

## 149. முகநோய்களுக்கு [1]தார்வீரஸ முறை

மரமஞ்சளை அரைத்து கஷாயமாக்கி அது கெட்டிப்படும்படி பக்குவம் செய்க. அதைத் தேனில் கலந்து பயன்படுத்தினால் வாயில் தோன்றும் நோய்களும் இரத்த தோஷமும் நாட்புச் சிலந்தியும் நீங்கும். 202

## 150. தாடையுட்பகுதி உலர்தலுக்குச் சிகிச்சை

நாவறட்சியின்றி தாடையினுட்பகுதி மட்டும் உலர்ந்து போகுமாயின் உணவு உண்டபின் நெய்யைப் பருகச் செய்க. மற்றும் மூக்கிலிடும் மருந்து இனிப்பு எண்ணெய்ப்பசை கொண்டவை குளுமையான புலால் சாறுவகைகள் என்பன நன்மை பயக்கும். 203

## 151. வாய்ப்புண்ணுக்குச் சிகிச்சை

வாயில் புண் தோன்றிய போது தாடையுட்பகுதியிலும் நாக்கிலும் நரம்பைக் கீறவேண்டும். பிறகு சிரோவிரேசனத்தையும் (மூக்கில் மருந்திடுதல்) பேதியாகச் செய்வதையும் பயன்படுத்துக. பசுவின் சிறுநீர் எண்ணெய் நெய் தேன் பால் இவற்றால் [2]கபளதாரணம் செய்விக்கவேண்டும். திரிபலை வட்டத்திருப்பி திராட்சை முல்லைத்தளிர் முதலியவற்றைத் தேனுடன் வாயில் வைத்துக் கொள்ளச் செய்க. துவர்ப்பு கசப்புச் சுவையு

1. தார்வீ—மரமஞ்சள்
2. கபளதாரணம்—மருந்தை வாய்க்குள் வைத்துக் கொண்டிருத்தல்.

முள்ள பொருள்களைச் சீதகஷாயமாக்கித் தேன் கலந்து அதனால் வாயைக் கழுவச் செய்தால் வாய் தூய்மை கொள்ளும்.
204–205

## 152. [1]கதிராதி [2]வடி எண்ணெய்

நூறு பலம் கருங்காலிச் சாற்றையும், இருநூறு பலம் கருவேலம் பட்டையைத் தண்ணீரில் நன்கு கழுவி சிறு துண்டுகளாக்கி நசுக்கி அதையும் நான்கு துரோணங்கள் (256 பலம்) அளவுள்ள நீரில் இட்டு நான்கில் ஒரு பகுதி மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி அக்கஷாயத்தை மறுபடியும் இளஞ்சூடுள்ள நெருப்பில் மெல்லக் காய்ச்ச வேண்டும். அது கெட்டிப்படும் போது சந்தனம் பதுமகம் வெட்டிவேர் மஞ்சிஷ்டி காட்டாத்திப்பூ கோரைக்கிழங்கு பிரபௌண்டரீகம் எனும் நறுமணப்பொருள் அதிமதுரம் இலவங்கப்பட்டை ஏல அரிசி தாமரைக்கேசரங்கள் கொம்பரக்கு ரஸாஞ்சனம் சடாமாஞ்சி திரிபலை பாச்சோத்திப்பட்டை குருவேர் மஞ்சள் மரமஞ்சள் ஞாழல்கட்டை சிறுஏலஅரிசி மஞ்சிஷ்டி தேக்குமரப்பட்டை வசம்பு காஞ்சொரி அகில் சிவப்புச்சந்தனம் காவி ஸௌவீராஞ்சனம் என்பன ஒவ்வொன்றும் ஒரு கர்ஷம்(ஒரு பலம்) வீதம் பொடி செய்து சேர்த்து இலேகிய பக்குவத்திற்குக் கிளறி தெளிந்த பின் அதில் இலவங்கம் புலிநகப்பூண்டு தக்கோலம் ஜாதிக்காய் இவற்றில் ஒவ்வொன்றும் ஒரு பலம் வீதம் தூளாக்கிக் கலந்து நான்கு பலங்கள் பச்சைக்கர்ப்பூரமும் சேர்த்து நன்றாகக் கலந்து குளிகைகளாகச் செய்து நிழலில் உலர்த்துக. இந்த மாத்திரையை வாயினுள் வைத்துக் கொள்ளச் செய்ய வேண்டும். இது கதிரளாராதி குளிகை எனப்படும். மற்றும் முன்கூறிய கதிரளாராதி கஷாயத்தில் நாலில் ஒரு பங்கு எள்ளெண்ணெயும் சந்தனம் முதலியவற்றின் விழுதும் சேர்த்து முறைப்படி எண்ணெய்காய்ச்சி இலவங்கம் முதலியவற்றையும் சேர்த்து வைத்துக் கொள்க. இது கதிரளாராதிதைலம் எனப்படும். இந்த மாத்திரையையும் எண்ணெயையும் பயன்படுத்துவதால் பற்கள் அசைதல் நழுவுதல் பற்களில் துளைகள் ஏற்படுதல் கிருமிநோய் வாய்ப்புண் வாய் நாற்றம் வாய்சுவையை அறியாது மரத்துப் போதல் சுவையின்மை வாயிலிருந்து எச்சில் ஒழுகிக் கொண்டிருத்தல் வாயில் கொழகொழப்பு குரல் மாறுபாடு தொண்டை உலர்ந்து போதல் என்பன நீங்கும். பல் வாய் தொண்டை போன்றவற்றில் தோன்றும் நோய்கள் மற்றும் முக நோய்கள்

1. கதிராதி–கருங்காலி முதலியவை.
2. வடி–மாத்திரை.

அனைத்திற்கும் இந்த மாத்திரையும் தைலமும் சிறந்த மருந்துகளாகும். 206-214

## 153. சுவையின்மைக்குச் சிகிச்சை

சுவையின்மை [1] கபளகிரகம் புகைபிடித்தல் முகத்தைத் தூய்மை படுத்தல் மனத்திற்கு விருப்பமான உணவு நீர்வகைகள் மனத்திற்குக் களிப்பூட்டும் செய்கைகள் ஆறுதல் அளித்தல் என்பனவற்றைச் செய்ய வேண்டும். 215

## 154. வாதிகாதி அரோசகங்களுக்குச் சிகிச்சை

கோஷ்டம் சௌவர்சலஉப்பு சீரகம் சர்க்கரை மிளகு பிடா லவணம் இவற்றைச் சம அளவில் தூளாக்கி எண்ணெயும் தேனும் கலந்து வாதத்தினால் தோன்றிய சுவையின்மைக்கு கபளகிரகம் செய்விக்க வேண்டும்.

நெல்லித்தோல் ஏலஅரிசி பதுமகம் வெட்டிவேர் திப்பிலி கருநெய்தல் சந்தனம் இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி எண்ணெயும் தேனும் கலந்து கபத்தினால் தோன்றிய சுவையின்மையில் கபளகிரகம் செய்விக்க வேண்டும்.

பாச்சோத்திப்பட்டை வாலுளுவை கடுக்காய்த்தோல் திரிகடுகம் யவக்ஷாரம் இவற்றைச் சம அளவில் கலந்து தூளாக்கி எண்ணெயும் தேனும் கலந்து கபத்தினால் தோன்றிய சுவையின்மையில் கபளகிரகம் செய்விக்கவேண்டும்.

இஞ்சிச்சாறு மாதுளம் பழச்சாறு சீரகம் சர்க்கரை இவற்றைச் சேர்த்து அதில் எண்ணெயும் தேனும் கலந்து ஸந்நிபாதத்தினால் தோன்றிய சுவையின்மையில் கபளகிரகம் செய்விக்கவேண்டும். 216–218

## 155. சுவையின்மையைப் போக்கும் பொருள்கள்

கருஞ்சீரகம் மிளகு சீரகம் திராட்சை புளியம்பழம் புளிப்பு மாதுளம்பழ விதை ஸௌவர்சலஉப்பு வெல்லம் தேன் என்பவை சுவையின்மையைப்போக்கும் பொருள்களாகும். 219

1. கபளகிரகம்—மருந்தை விழுதாகச் செய்து வாயில் அடக்கிக்கொள்ளுதல்

### 156. சுவையின்மைக்குச் *சோதன முறை

வாதத்தினால் தோன்றிய சுவையின்மையில் வஸ்திமுறையும் பித்தத்தினால் தோன்றிய சுவையின்மையில் பேதியாகச் செய்தலும் கபத்தினால் தோன்றிய சுவையின்மையில் வாந்தி எடுக்கச் செய்தலும் பயன்படுத்தத்தக்கவை. மனத்திற்கு இன்பமளிக்காதவற்றைப் பார்ப்பதால் தோன்றிய சுவையின்மையில் மனத்திற்குக் களிப்பூட்டும் மருந்து உணவு குடிநீர் வகைகளைப் பயன்படுத்தவேண்டும். 220

### 157. காது நோய்க்குச் சிகிச்சை

காது நோய்க்குப் பீநசத்திற்குப் போலவே வாதத்தைப் போக்கக் கூடிய சிகிச்சை முறைகள் இதமானவை. மற்றும் மேல்பூச்சு காதில் மருந்தை நிரப்புதல் மூக்கில் மருந்திடுதல் என்பனவும் நன்மை பயக்கும். காதிலிருந்து ஒழுகுதல் விரணங்களுக்குக் கூறப்பட்ட தூய்மைபடுத்தல் முதலிய சிகிச்சை முறைகள் நன்மை தரும். அந்தந்த தோஷங்களுக்கு ஏற்ப உணவு நீர் வகைகளைப் பயன்படுத்த வேண்டும். எண்ணெய்ப் பொருள்களைக் கொண்டு காதை நிரப்ப வேண்டும். 221

### 158. காதுநோய்க்குத் தைலம்

பெருங்காயம் நேபாளதனியா சுக்கு இம்மூன்றையும் விழுதாக்கி அதன் அளவிற்கு நான்கு மடங்கு கடுகெண்ணெயும் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு நீரும் சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சுக. இந்த எண்ணெயைக் காதில் ஊற்றினால் காதுகுத்தல் வலி நீங்கும். 222

### 159. காதுநோய்க்குக் கர்ணபூரண தைலம்

தேவதாருகட்டை வசம்பு சுக்கு சதகுப்பை கோஷ்டம் இந்துப்பு இவற்றை விழுதாக்கி கடுகெண்ணெய் சேர்த்து எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு ஆட்டின் சிறுநீர் கலந்து எண்ணெய் காய்ச்சி அந்த எண்ணெயைக் காதில் ஊற்றினால் குத்தல் வலி நீங்கும். 223

### 160. காதுநோய்க்குத் தைலம்

கிளிஞ்சில்களைப் புதுப்பானையில் வைத்துச் சுட்டுச் சாம்பலாக்கி அதைத் துணியால் சலித்து எடுத்து அத்துடன் அகில்

* சோதனம்—தூய்மைபடுத்துதல்.

முதலிய நறுமணப்பொருள்களின் விழுதைச் சேர்த்து மற்றும் ரஸாஞ்சனம் சுக்கு இவற்றின் விழுதையும் கலந்து எண்ணெயுடன் முறைப்படிக் காய்ச்சி அந்த எண்ணெயைக் காதில் ஊற்றினால் காது வலி நீங்கும். 224–225

## 161. காதுகேளாமை முதலியவற்றிற்கு க்ஷார தைலம்

நன்றாக உலர்ந்த முள்ளங்கிக் கிழங்கைத் துண்டுகளாக்கி க்ஷார முறைப்படி நெருப்பில் சுட்டுக் கரியாக்கி அத்துடன் பெருங்காயம் சுக்கு சதகுப்பை வசம்பு கோஷ்டம் தேவதாரு முருங்கைப் பட்டை ரஸாஞ்சனம் ஸௌவர்ச்சலுப்பு யவக்ஷாரம் ஸர்ஜி க்ஷாரம் ஔத்பிதலவணம் இந்துப்பு புளியத்தி கிரந்திகம் பிடாலவணம் கோரைக்கிழங்கு இவற்றைச் சம அளவில் சேர்த்து அரைத்த விழுதும் அவ்விழுதின் அளவிற்கு நான்கு மடங்கு நல்லெண்ணெயும் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு [1]மதுசுக்தமும் எண்ணெயின் அளவிற்குச் சமமாக துறிஞ்சிப் பழச் சாறும் வாழைக் கிழங்கின் சாறும் கொண்டு அனைத்தையும் கலந்து முறைப்படி எண்ணெய் தயார் செய்க. இது க்ஷாரதைலம் எனப்படும். இந்த எண்ணெயைக் காதில் ஊற்றினால் செவிட்டுத் தன்மை காதில் ஒலி தோன்றுதல் சீழ் வழிதல் கிருமிநோய் காதில் குத்தல் வலி என்னும் நோய்கள் கடுமையாக முற்றியிருந்தாலும் தீரும். 226-229

பீநச நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகள் அனைத்தையும் வாய் காது கண் நோய்களில் தோஷங்கள் காலம் நோயாளியின் வலிமை நோயின் வலிமை என்பனவற்றை நன்கு கணித்து தோஷங்களுக்கு ஏற்றவாறு பயன்படுத்துக. 230

## 162. கண்நோய்க்குச் சிகிச்சை

கண்நோய் தோன்றியதும் நோய் முற்றாத நிலையில் [2]பிடாலகம் என்னும் மேல்பூச்சு முறையைப் பயன்படுத்துக.

மதுசுக்தம்—தூய மண்பானையில் தயிர்த்தெளிவு முதலியவற்றைச் சேர்த்து அதில் வெல்லம் தேன் சுக்குப் பொடி என்பனவற்றைக் கலந்து மூடி துணியால் வாயைக்கட்டி தானியக் குவியலுக்குள் மூன்று நாட்கள் வைத்திருந்து பிறகு பயன்படுத்துக. இது மதுசுக்தம் எனப்படும்.

2 பிடாலகம்—கண்களின் மேல் பூசுதல்.

அதனால் கண்களில் எரிச்சல் கெட்ட மாமிசம் வளர்தல் கண்ணீர் பெருக்கு இமைகளில் வீக்கம் கண்சிவத்தல் என்பன நீங்கும். 231

## 163. வாதத்தினால் தோன்றிய கண்நோய்க்குப் பூச்சு மருந்து

சுக்கு இந்துப்பு இவ்விரண்டையும் நெய்யின் மேலுள்ள தெளிவுடன்(ஏடு) சேர்த்து அரைத்தாவது தேன் இந்துப்பு காவிக் கல் இவற்றை அரைத்தாவது, வெண்பாச்சோத்தியை நெய்யில் வறுத்து அரைத்தாவது, வாதத்தினால் தோன்றிய கண்நோயில் அது பக்குவமடையாதநிலையில் கண்ணின் மேற்பகுதியில் பற்றா கப்பூச வேண்டும். மற்றும் கடுக்காய்த் தோலை நெய்யில் வறுத்து அரைத்துப் பற்றுப்போட்டால் வாதத்தினால் தோன்றிய கண் வலி நீங்கும். 232–233

## 164. பித்தத்தினால் தோன்றிய கண் நோய்க்குப் பூச்சு மருந்து

சந்தனம் நன்னாரி மஞ்சிஷ்டி இம்மூன்றையாவது பதுமகம் அதிமதுரம் சடாமாஞ்சி மரமஞ்சள் இந்நான்கையாவது அரைத்துக் கண்ணிமைகளின் மேல் பற்றாகப் போட வேண்டும். 234

## 165. கபம் ஸந்நிபாதம் இவற்றால் தோன்றிய கண் நோய்களுக்குப் பூச்சு மருந்து

காவிக்கல் இந்துப்பு கோரைக்கிழங்கு கோரோசனம் இவற்றை ரஸமுறையாக்கி அல்லது ஞாழல் மனோசிலை இவ் விரண்டையும் தேன் கலந்து ரஸமுறை செய்து கபத்தினால் தோன்றிய கண் நோயில் இமைகளின் மேல் பற்றுப் போட வேண்டும். மற்றும் ஸந்நிபாதத்தில் தோன்றிய கண்நோயில் வாதம் முதலியவற்றால் தோன்றிய கண்நோய்களுக்கு தனித் தனியாகக் கூறப்பட்ட பூச்சு மருந்துகளை கலந்து கண்ணிமை களின்மேல் பற்றுப்போட வேண்டும். 235

## 166. வாதபித்த கண் நோய்களுக்கு [1]ஆச்யோதனம்

கண் நோய்கள் மூன்று நாள் கழித்துப் பக்குவமடையும். அப்பொழுது மருந்தை கண்களில் மைபோல் இடுமுறையைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறு பயன்படுத்தும்போது மைகளைக் கையால் தொடக்கூடாது.

---

1. ஆச்யோதனம்–கண்ணைத் திறந்து இரண்டு அங்குல உயரத்திலிருந்து மருந்தைக் கண்ணின் நடுவில் சொட்ட விடுதல்.

வாதத்தினால் தோன்றிய கண் நோயில் வில்வம் முதலிய கூட்டுப் பொருள்களையும் ஆமணக்கு வேர் முஞ்சைப்புல்வேர் கண்டங்கத்தரிவேர் சிவப்புமுருங்கைப்பட்டை ஆகியவற்றையும் சேர்த்துத் தயார் செய்த கஷாயத்தை இளஞ்சூடுள்ள போது ஆச்யோதன முறையில் பயன்படுத்த வேண்டும். திராட்சை மரமஞ்சள் மஞ்சிஷ்டி கொம்பரக்கு இலுப்பைப்பட்டை அதிமதுரம் நீலாம்பல் இவற்றைச் சம அளவில் கொண்டு கஷாயம் காய்ச்சி அதில் சர்க்கரை கலந்து குளிர்ந்த பின் கண்களில் நிரப்பினால் பித்தத்தாலும் இரத்தத்தாலும் தோன்றிய கண் நோய்கள் தணியும். 236–238

## 167. கபம் ஸந்நிபாதம் இவற்றால் தோன்றிய கண் நோய்க்கு ஆச்யோதனம்

சுக்கு திரிபலை கோரைக்கிழங்கு வேப்பம்பட்டை ஆடாதொடை இவற்றைச் சம அளவில் கொண்டு கஷாயம் காய்ச்சிக் கபத்தினாலான கண் நோயில் ஆச்யோதனமுறையில் பயன்படுத்துக. மற்றும் வாதம் முதலிய தோஷங்களால் தோன்றிய கண் நோய்களுக்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட மருந்துகளைக் கலந்து ஸந்நிபாதத்தினால் தோன்றிய கண் நோய்க்குப் பயன்படுத்த வேண்டும். 239

## 168. வாதத்தினால் தோன்றிய கண் நோய்க்கு வர்த்தி

முள்ளங்கத்திரி கண்டங்கத்திரிவேர்ப்பட்டைகள் ஆமணக்கு வேர்ப்பட்டை முருங்கைமலர் இந்துப்பு இவற்றைச் சம அளவில் கொண்டு ஆட்டுப் பால்சேர்த்து அரைத்து வர்த்தியாகச் செய்க. இதைக் குழைத்துக் கண்களில் மை போல் இட்டால் வாதத்தினால் தோன்றிய கண் நோய் தீரும். 240

## 169. பித்தத்தினால் தோன்றிய கண் நோய்க்கு வர்த்தி

முல்லைமொட்டு சங்கசூரணம் திரிபலை அதிமதுரம் சிற்றாமுட்டி இவற்றைச் சம அளவில் கொண்டு மழை நீருடன் அரைத்துக் கட்டியாகச் செய்க. வர்த்தியைக் குழைத்துக் கண்களில் மை போலிட்டால் பித்தத்தினாலும் இரத்தத்தினாலும் தோன்றிய கண் நோய்கள் நீங்கும். 241

## 170. கபத்தினால் தோன்றிய கண் நோய்க்கு வர்த்தி

இந்துப்பு திரிபலை திரிகடுகம் சங்கநாபிவேர் கடல்நுரை சிலாசத்து ஸர்ஜரஸம் இவற்றைச் சம அளவில் கொண்டு மைய

அரைத்துக் கம்பி போலாக்குக. இதைத் தேன், தாய்ப்பால், மழைநீர் ஏதேனும் ஒன்றுடன் தேய்த்துக் கண்களில் மை போல் இட்டால் கபத்தினால் தோன்றும் கண் நோய் நீங்கும். 242

## 171. ஸந்நிபாதத்தினால் தோன்றும் கண்நோய்க்கு அமிர்தா வர்

சீந்தில்கொடி தாமரைத்தண்டு வில்வவேர் பேய்ப்புடல் ஆட்டுப்பிழுக்கை பௌண்டரீகம் என்னும் நறுமணப்பொருள் அதிமதுரம் மரமஞ்சள் மஞ்சள் சந்தனம்இவற்றைத் தனித்தனி எட்டு பலம் வீதம் கொண்டு நீரில் கழுவி இடித்து நான்குமடங்குநீரில் இட்டு நான்கில் ஒரு பகுதி மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி மறுபடியும் அடுப்பிலேற்றிப் பக்குவம் செய்க. நன்றாகப் பக்குவமடையும் போது அதில் வெண்மிளகு ஒரு தோலா எடை புதிய உலர்ந்த முல்லை மலர் ஒரு பலம் இரண்டையும் மைய தூளாக்கிச் சேர்த்து மெழுகைப் போல் பக்குவம் ஆக்கி மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்துக. இவ்வர்த்தியைப் பயன்படுத்தினால் மூன்று தோஷங்களாலும் தோன்றிய கண் நோய்கள் நீங்கிப் பார்வையும் நன்றாகச் சீர்படும். 243–245

## 172. கண்நோய்களுக்கு வர்த்தி

சங்கம் பவழம் வைடூரியம் இரும்பு தாமிரம் நீர்க்கோழி எலும்பு சுரோதோஞ்சனம் (சுரமாக்கல்) வெள்ளைமிளகு இவற்றை அரைத்து குளிகைகளாக்கிப் பயன்படுத்தினால் கண் நோய்கள் அனைத்தும் நீங்கும். 246

## 173. [1]காசாதிஹர அஞ்சனம்

மிளகு அரை [2]சாணம் திப்பிலி இரண்டுசாணம் கடல்நுரை இரண்டு சாணம் இந்துப்பு அரைசாணம் புதிய ஸௌவீராஞ்சனம் ஒரு சாணம் வீதம் கொண்டு சித்திரை நட்சத்திரம் உள்ள நாளன்று மைபோல் அரைத்து அதனால் கண்களுக்கு மையிட்டால் அரிப்பு காசநோய் கபத்தினால் தோன்றிய கண்நோய் இவை நீங்கும். 247–248

1. காசம்—கண்களில் கருவிழி உள்ள கண்ணாடி போன்ற உறுப்பில் தோன்றும் பார்வையை மறைக்கும் நோய்.
2. சாணம்— 2 தோலா எடை.

## 174. திமிராதி ஹரசூரணாஞ்சனம்

ஏலஅரிசியைத் தூளாக்கி ஆட்டின் சிறுநீரில் மூன்று நாட்கள் ஊறவைத்து உலர்த்தித் தூளாக்கிக் கண்களில் மைபோல் இட்டால் [1]திமிரம் கிருமிநோய் பில்லம் என்னும் கண்நோய் மிகுதியாகப் பீளை கட்டுதல் என்பன நீங்கும். 249

## 175. திமிராதிஹரவர்த்தி

ஸௌவீராஞ்சனம் மயில்துத்தம் சுவர்ணமாக்ஷிதம் (தாப்யம் தாபீ என்னும் ஆற்றில் தோன்றிய ஒரு வகை கனிப்பொருள்) மனோசிலை காட்டுக் கொள்ளு அதிமதுரம் உலோகங்கள் மணிகள் புஷ்பாஞ்சனம் இந்துப்பு காட்டுப்பன்றியின் கோரைப்பல் தேற்றான்கொட்டை இவற்றைச் சேர்த்து மை போல் அரைத்து வர்த்தியாகச் செய்து பயன்படுத்தினால் கண் நோய்கள் அனைத்தும் நீங்கும். 250–251

## 176. திமிராதிஹ சுகாவதீ வர்த்தி

தேற்றாங்கொட்டை சங்கு இந்துப்பு திரிகடுகம் சர்க்கரை கடல்நுரை ரஸாஞ்சனம் தேன் வாயுவிளங்கம் மனோசிலை கோழிமுட்டையின்ஓடு என இவற்றைத் தூளாக்கித் தேனுடன் அரைத்து நீண்ட வர்த்திகளாகச் செய்து அதைக் கண்களுக்கு மையிடப் பயன்படுத்தினால் திமிரம் படலம் காசம் எனும் கண் நோய்களை நீக்கி கண்களிலுள்ள அழுக்கை வெளியேற்றும். இது சுகாவதீ வர்த்தி எனப்படும். 252–253

## 177. [2]திருஷ்டிபிரத வர்த்தி

திரிபலம் கோழிமுட்டையின்மேல்ஓடு அன்னபேதி இரும்பு பஸ்பம் கருநெய்தல் வாயுவிடங்கம் கடல்நுரை இவற்றை ஆட்டுப்பால் சேர்த்து மைய அரைத்துத் தாமிரப் பாத்திரத்தில் எடுத்து வைத்து ஏழுநாட்கள் ஆட்டுப்பாலில் ஊறவைத்து மறுபடியும் ஆட்டுப்பாலுடன் மைய அரைத்து வர்த்தியாகச் செய்க. இது அடிபட்டோர், விரணமுற்றோர் கண்பார்வை கெட்டுக் கண் கருவிழி கெடாமலிருப்பவனுக்குப் பார்வை மிக நன்றாக விளங்கச் செய்யும். 254–255

1. திமிரம்–கண்பார்வை மறைதல்.

2. திருஷ்டிபிரதம்–கண்பார்வையை நன்றாக விளங்கச் செய்வது.

### 178. திமிரஹர சூரணாஞ்சனம்

உயிரற்ற கருநாகத்தின் வாயில் சுரமாக்கல்லை ஒரு மாத காலம் வைத்துப் பிறகு எடுத்து உலர்த்தி மைய அரைத்து அதில் பாதி அளவு நன்றாக உலர்ந்த முல்லை மலர்களையும் இந்துப்பையும் நன்றாக தூளாக்கிக் கலந்து கண்களில் மை போல் இடச் செய்தால் திமிரம் என்னும் கண் நோய் அகலும். இது மிகவும் சிறந்த மை மருந்தாகும். 256—257

### 179. கண் நோய்களுக்கு மை

திப்பிலி புரச மலர்களின் சாறு கருநாகத்தின் வசை இந்துப்பு பழையநெய் இவற்றைச் சேர்த்து நன்றாக அரைத்து மெழுகு போலாக்கிக் கண்களுக்கு மைபோல் இடச் செய்தால் கண் நோய்கள் அனைத்தும் நீங்கும். இது ரஸகிரியை எனப்பெயர் கொள்ளும். 258

### 180. காசம் முதலியவற்றிற்கு ரஸ முறை

கருநாகத்தின் வசை தேன் நெல்லிக்காய்ச்சாறு இவற்றை விழுதாகச் செய்து பயன்படுத்தினால் காசம் அர்புதம் முதலிய கண்நோய்கள் நீங்கும். 259

### 181. திமிரநோய்க்கு ரஸ முறை

நெல்லிக்காய்ச்சாறு ரஸாஞ்சனம் பழைய நெய் இவற்றைக் கலந்து செய்த ரஸமுறையால் பித்தத்தினாலும் இரத்தத்தினாலும் தோன்றிய திமிரம் படலம் என்னும் கண் நோய்கள் நீங்கும். 260

### 182. அந்தபடலரஸமுறை (கண்பார்வையைத் தரும் ரஸமுறை)

நெல்லிக்காய்ச்சாறு இந்துப்பு திப்பிலி சிறுமிளகு இவற்றைச் சம அளவில் கொண்டு மெத்தென்று அரைத்துத் தேனில் கலந்து ரஸகிரியை செய்து கண்களுக்கு மைபோல் பயன்படுத்தினால் அது குருட்டுத் தன்மையையும் படலம் என்னும் கண் நோயையும் போக்கும். 261

### 183. தலை வழுக்கையைப் போக்கும் மருந்து

முடிஉதிர்ந்து தலை வழுக்கையாதல் முடி நரைத்தல் உடலில் சுருக்கங்கள் ஏற்படுதல் முடி செம்பட்டை நிறமாக மாறுதல் முதலியவற்றிற்கு முதலில் வாந்தி எடுக்கச்செய்து குடல் தூய்மைபெறச் செய்ய வேண்டும். பிறகு மூக்கிலிடுமருந்து

எண்ணெய் தலையிலும் முகத்திலும் மருந்து பூசுதல் என்பன வற்றால் சிகிச்சை செய்ய வேண்டும். 262

### 184. தலை வழுக்கையாவதைப் போக்கும் நசியம்

பால்முதுக்கன்கிழங்கு முதலிய கூட்டுப்பொருள்களால் அல்லது *ஜீவனீய கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களால் செய்த எண்ணெயை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினாலும் அல்லது மூக்குநோய்ச்சிகிச்சைக்கு கூறப்பட்ட அணுதைலத்தை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினாலும் வழுக்கையாதல் நரைத்தல் என்பன நீங்கும். 263

### 185. நரையைப் போக்கும் நசியம்

பசும்பால் மருதாணிஇலைச்சாறு கரிசலாங்கண்ணி இலைச் சாறு துளசியிலைச்சாறு என்பன ஒவ்வொன்றும் ஒரு பிரஸ்தம் (16 பலம்) நல்லெண்ணெய் நான்கு பலம் அதிமதுரத்தின் விழுது ஒரு பலம் இவற்றை ஒன்றாகச் சேர்த்து முறைப்படி எண்ணெய் செய்து அதைக்கல்லால்செய்தபாத்திரத்திலோ செம்மறியாட்டின் கொம்பிலோ வைத்து மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் நரை நீங்கும். 264-265

### 186. நரையைப் போக்கும் பூச்சுமருந்து

சுவர்ணக்ஷீரி அரளி இவ்விரண்டையும் சேர்த்து ஆட்டுப் பாலில் அரைத்து நரைத்த முடியைப் நீக்கி அந்த இடத்தில் பூசி னால் நரை நீங்கும். 266

### 187. நரையை நீக்கும் எண்ணெய்

கரிசாலங்கண்ணி சுரஸம் ஒருபிரஸ்தம் (16 பலம்) பசும் பால் ஒரு பிரஸ்தம் அதிமதுரத்தின் விழுது ஒரு பலம் எண்ணெய் நான்கு பலம் கலந்து முறைப்படித் தைலம் செய்து மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் நரை நீங்கும். 267

### 188. நரையைப் போக்கும் மகாநீல தைலம்

சூரியகாந்திச் செடி வேர் கரு மருதாணிவேர் துளசிஇலை கருத்தசணல்இலை கரிசலாங்கண்ணி மணித்தக்காளி அதிமதுரம்.

---

* ஜீவனீயம்—வலிவைக் கொடுக்கும் ஜீவனீயம் முதலிய மருந்துகள்.

தேவதாருக்கட்டை இவை ஒவ்வொன்றும் பத்து பலம் திப்பிலி திரிபலை சுர்மாக்கல் பௌண்டரீகம் நறுமணப்பொருள் மஞ்சிஷ்டி பாச்சோத்திப்பட்டை கருஅகில் நீலாம்பல் மாங்கொட்டையினுள் இருக்கும் பருப்பு கருநிறமுள்ள களிமண் தாமரைத் தண்டு சிவப்புச்சந்தனம் அவுரிவிதை சேராங்கொட்டை காட்டு மல்லி கார்போகஅரிசி வேங்கை வேர் எஃகு அறாவியதூள் மருக் காரக்காய் கருத்தகொடிவேலி புஷ்கரமூலம் மருதமரப்பட்டை குமிழம் மாம்பழம் நாவற்பழம் இவை ஒவ்வொன்றும் ஐந்து பலம் வீதம் கொண்டு அனைத்தையும் சேர்த்து விழுதாக அரைத்து தான்றிக்காய் எண்ணெய் ஒரு ஆடகம் (64 பலம்) அளவும் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு நெல்லிக்காய்ச் சாறும் கலந்து முறைப்படி எண்ணெய் காய்ச்சுக. அல்லது சாறு முழுவதும் சுண்டிப்போகும்படி வெயிலில் வைத்து வடி கட்டுக. இதைப் பருகவும் மூக்கிலிடும் மருந்தாகவும் எண்ணெய் குளியலுக்கும் பயன்படுத்தலாம். இது கண்களுக்கு நன்மையும் ஆயுள் வளர்ச்சியும் நல்குவதுடன் தலை நோய்கள் அனைத்தையும் போக்கக்கூடியதாகும். இது மகா நீல தைலம் எனப்படும். நரையைப் போக்குவதில் இது சிறந்த எண்ணெயாகும்.
268–275

### 189. நரையைப் போக்க*பிரதிமர்சன நசியம்

பிரபௌண்டரீகம் அதிமதுரம் திப்பிலி சந்தனம் நீல ஆம்பல் இவை ஒவ்வொன்றும் ஒரு கர்ஷம் (8 பலம்) வீதம் கொண்டு அரைத்து நான்கு பலங்கள் எண்ணெய் அதற்கு இரண்டு மடங்கு நெல்லிக்காய்ச்சாறு கலந்து முறைப்படி எண்ணெய் தயார் செய்து பிரதிமர்சம் என்னும் நசியத்திற்குப் பயன்படுத்தினால் தலை நோய்கள் அனைத்தும் நீங்கும். 276–277

### 190. நரையை நீக்கும் பூச்சு மருந்து

சாரைப்பருப்பு அதிமதுரம் ஜீவகம் முதலியவற்றின் கூட்டுப் பொருள் எள் திப்பிலி இவற்றைச் பசும்பாலுடன் அரைத்து தலையில் பூசிக் கொண்டால் செம்மை நிறம் கொண்ட முடி கருநிறம் கொள்ளும். 278

---

* பிரதிமாசன நசியம்—மூக்கிலிடு மருந்தான நெய் எண்ணெய் முதலியவற்றை ஒவ்வொரு மூக்குத் துளையிலும் இரண்டு சொட்டு வீதம் உட்செலுத்தும் முறை.

## 191. கேசரஞ்சன [1]பிரலேபம்

எள் நெல்லிக்காய்த்தோல் தாமரை கேசரங்கள் அதிமதுரம் இவற்றைச் சம அளவில் கொண்டு தேனுடன் மைய அரைத்துத் தலையில் பூசிக் கொள்ளச் செய்தால் முடிவேர்களுக்கு வலிவு உண்டாகி முடியும் கருநிறம் கொள்ளும். 279

## 192. கேசரஞ்சன பிரலேபம் (2வது முறை)

இந்துப்பு இரும்பு அறாவிய தூள் அரிசி இவற்றைச் சம அளவில் சேர்த்துத் தூளாக்கி சுக்தம் முதலிய பொருள்களைக் கலந்து கொதிக்க வைக்கவும். தலையில் எண்ணெய்ப்பிசுக்கு இல்லாமல் நன்றாகக் குளித்த பின் இந்த மருந்தைப்பூசி இரவு முழுவதும் ஊறச் செய்து மறுநாள் காலையில் திரிபலை சேர்த்துக் காய்ச்சிய நீரால் தலையை நன்றாகக் கழுவச் செய் தால் முடி கருத்து மென்மை கொண்டு நன்கு வளரும். 280

## 193. கேசரஞ்சன பிரலேபம் (3வது முறை)

இரும்பு அறாவிய தூளைச் சம அளவு கொண்ட திரிபலை யுடன் சேர்த்துப் புளிப்புச் சுவையுள்ள சாறுகளுடன் மைய அரைத்து தலை முடிக்குப் பூசினால் முடி கறுத்து நன்றாக வளரும். முடிக்குக் கரு நிறம் தரும் மருந்துகளில் இது சிறந்த தாகும். 281

## 194. இங்குக் கூறப்படாத நோய்களுக்குச் சிகிச்சை

இவ்வாறு பீநசத்தினால் தோன்றும் துன்பங்களான நோய் கள் முதல் நரைத்தல் வரையான நோய்களுக்குச் சிகிச்சைகள் கூறப்பட்டன. ஏனைய நாவறட்சி இருமல் இழுப்பு காய்ச்சல் இரத்தபித்தம் என்னும் பீநசத்தால் தோன்றும் துன்பங்களுக்கு அந்தந்த தனிப்பட்ட நோய்களுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். மற்றும் வஸ்தி, இதயம் தலை என்னும் உயிர்நிலைகளில் தோன்றும் நோய்களில் இங்குக் கூறப்பட்டவையல்லாது மற்ற நோய்களுக்கு வாதம் முதலிய தோஷங்களுடன் தொடர்பில்லாமல் பொதுவாகக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாளவேண்டும். சித்திஸ்தானத்தில் திரிமர்மீயசித்தி என்ற 9வது அத்தியாயத்தில் கூறப்பட்ட சிகிச்சை களைச் செய்ய வேண்டும். 282

1. பிரலேபம்—மேல்பூச்சுக்கான மருந்து

## 195. வாதத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டுக்கு சிகிச்சை

வாதத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டிற்கு உணவு கொண்ட பின் நெய்யைப் பருகுவது நலம். மற்றும் வாத நோய் சிகிச்சை அத்தியாயத்தில் கூறப்படும் பலாதைலம், ராஸ்னா தைலம் அம்ருதாதைலம் என்பனவற்றைப் பருகுதல் எண்ணெய்க் குளியல் கொப்பளித்தல் வஸ்தி முறை என்னும் நான்குவகை சிகிச்சை முறைகளில் பயன்படுத்த வேண்டும். மற்றும் பஞ்ச மூலங்களைச் சேர்த்துப் பக்குவம் செய்த மயில் அல்லது தித்திரி அல்லது கோழியின் புலால்சாறு மாயூரகிருதம் பால் காஸ சிகிச்சிதத்தில் கூறப்பட்ட திரியூஷணகிருதம் என்பனவற்றைப் பயன்படுத்த வேண்டும். 283–284

## 196. பித்தத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டுக்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டில் பேதியாகச் செய்து இனிப்புச்சுவை கொண்ட பொருள் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகச் செய்க. மற்றும் க்ஷதக்ஷீண சிகிச்சித அத்தியாயத்தில் கூறப்பட்ட ஸர்பிர்குடம் என்பதையும் கசப்புப் பொருள்கள் சேர்த்துப் பக்குவம் செய்த நெய்யையும் வாதரத்த சிகிச்சிதத்திற்குக் கூறிய ஜீவனீயகிருதத்தையும் இரத்தபித்த சிகித்சிதம் எனும் அத்தியாயத்தில் கூறிய வாசாகிருதத்தையும் பயன் படுத்தலாம். 285

## 197. கபத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டுக்குச் சிகிச்சை

கபத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டில் தீக்ஷ்ண குணமுள்ள மருந்துகளால் சிரோ விரேசனம் காயவிரேசனம் வாந்தி எடுக்கச் செய்தல் புகை பிடித்தல் என்பனவற்றைச் செய்வித்துக் கார்ப்புச் சுவையுடன் கூடிய பொருள்களுடன் சேர்ந்த யவஅரிசிச் சோற்றை உண்ணச் செய்க. மற்றும் செவியம் சிறுதேக்கு கடுக்காய்த்தோல் திரிகடுகம் யவக்ஷாரம் கொடிவேலி இவற்றைச் சம அளவில் கலந்து தூளாக்கித் தேனுடன் உட்கொள்ளச் செய்க. அல்லது திப்பிலி கடுக்காய்த்தோல் இவற்றைச் சேர்த்துத் தூளாக்கித் தேனுடன் உட்கொள்ளச் செய்து பழைய மதுவைப் பருகச் செய்க. 286–287

## 198. இரத்தத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டுக்குச் சிகிச்சை

இரத்தத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டில் காற்று வீசும் காட்டுப் பகுதியிலுள்ள விலங்கினங்களின் புலால் சாற்றுடன்

நெய் கலந்து பயன்படுத்துக. மற்றும் திராட்சைச்சாறு பால் முதுக்கன்கிழங்கின்சாறு கருப்பஞ்சாறு என்பனவற்றில் தேனும் சர்க்கரையும் கலந்து பருகச் செய்ய வேண்டும். 288–289

## 199. ஸந்நிபாதத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டுக்குச் சிகிச்சை முறை

ஸந்நிபாதத்தினால் தோன்றிய குரல் மாறுபாட்டில் வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாளவேண்டும். நரம்பைக்கீறும் சிகிச்சையை மட்டும் விலக்கவும். இவ்வாறு சுருக்கமாகக் குரல் மாறு பாட்டுக்குச் சிகிச்சை முறைகள் கூறப்பட்டன. 290

## 200. பொதுவான சிகிச்சை முறை

உடலில் வஸ்தியை(குடலை) வாதமும் இதயத்தை பித்தமும் தலையைக் கபமும் சார்ந்து தம் இருக்கையாகக் கொண்டிருக்கும். எனவே அந்தந்த இடங்களுக்கு அருகில் தோன்றிய நோய்களை உணர்ந்து அந்தந்த தோஷத்திற்கு உரியபடி வாந்தி எடுக்கச் செய்தல் முதலியவற்றைக் கையாள வேண்டும். (வாதத்திற்கு வஸ்தி முறையையும் பித்தத்திற்கு பேதியாகச் செய்தலையும் கபத்திற்கு வாந்தி எடுக்கச் செய்தலையும் கையாள வேண்டும். வாதம் முதலியவை சீற்றமடைந்து வேறு இடத்தைச் சார்ந் திருக்கும் போது அவ்வாறு சேர்ந்த இடம் எந்த தோஷத்திற்கு இயற்கையான நிலையாகுமோ அதைக் கவனித்து நிலையான அந்தந்த தோஷங்களுக்கு ஏற்ற சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும் என்பது கருத்தாகும்.) 291

## 201. மூன்று தோஷங்கள் ஒன்றுக்கொன்று பகைமை கொள்ளாமைக் குக் காரணம்

காற்று ஆதவன் சந்திரன் என்பனவற்றிற்கு இயற்கையான அளவிற்கு மீறிய சீற்றமுண்டாயின் உலகத்திற்குத் துன்பம் உண்டாகும். அவ்வாறன்றி குளுமை சூடு முதலியவற்றின் தன்மைகள் ஏற்றமோ தாழ்வோ கொள்ளாமல் சமநிலையில் இருந்தால் உலகத்திற்குக் கெடுதல் உண்டாக்காமல் நலத்தை வளர்க்கும். அவ்வாறே உடலில் வாதபித்த கபங்கள் அளவிற்குக் குறைவோ வளர்ச்சியோ அடைந்தால் உயிரினங்களுக்குக் காய்ச் சல் முதலிய துன்பங்களைத் தோற்றுவிக்கும். இயற்கையாக இருக்க வேண்டிய அளவிற்குச் சம நிலையில் இருந்தால் உடலைக் காப்பாற்றி வளர்க்கும். வாதபித்தகபங்கள் மூன்றும் ஒன்றற் கொன்று மாறான தன்மை கொண்டவை. ஆயினும் உடலில்

யற்கையாகப் பிறவியிலேயே தோன்றியவை. எனவே பாம்பிற்கு அதன் கொடிய நஞ்சு தீங்கை விளைவிக்காதது போல வாதம் முதலியவையும் இயற்கை அளவில்இருந்தால் எத்தகைய தீங்கையும் விளைவிக்கா. ஒன்றை மற்றொன்று கெடுக்காது. 292–293

**முடிவுரை**

திரிமர்மீயம் என்னும் இந்த அத்தியாயத்தில் சிறுநீர்ப்பை இதயம் தலை என்னும் முக்கிய உயிர் நிலைகளில் தோன்றும் நோய்கள் தோற்றம் இலக்கணம் சிகிச்சை முறைகள் என்பன தனித்தனியாக விளக்கப்பட்டுள்ளன. 294

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் சீர்படுத்தப்பட்ட சிகித்ஸாஸ்தானத்தில் திரிமர்மீயம் என்னும் இருபத்தியாறாவது அத்தியாயம் முற்றும்.

## இருபத்தியேழாவது அத்தியாயம்

# ஊருஸ்தம்பசிகிச்சை

இனி ஆத்திரேய பகவான் கூறியபடி ''ஊருஸ்தம்பம்'' என்னும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1–2

### 1. அக்கினிவேசரின் வினா

மிக்க உயர்ந்த தெய்விக ஒளியும் தவச்செல்வமும் கொண்டவரும் சந்திர சூரியர்களுடன் கூடியிருக்கும் மேருமலையைப் போன்றவரும் புத்தி திறமை நினைவாற்றல் நுண்ணறிவு புகழ் பொறுமை முதலிய உயர்ந்த பண்புகளுக்கு இருப்பிடமானவரும் ஆசிரியர்களில் சிறந்தவருமாகிய ஆத்திரேய மாமுனிவரைக்கண்டு தக்கதருணத்தில் அக்கினிவேச முனிவர் தமக்குத் தோன்றிய ஐயத்தை இவ்வாறு அறிவித்தார்.

முக்காலமும் உணர்ந்தவரும் மருத்துவர்களில் சிறந்தவருமான குருவே! வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் மூக்கில் மருந்திடுதல், எண்ணெய் வஸ்தி, கஷாயவஸ்தி முதலிய ஐவகையான தூய்மைப்படுத்தும் சிகிச்சை முறைகள் தனித்தனியாகவோ கலந்தோ எல்லாநோய்களுக்கும் பயன்படுத்தத்தக்கவை என்று கூறினீர்கள். அவ்வாறு அச்சிகிச்சை முறைகளைப் பயன்படுத்தியும் நீக்க இயலாததும் பெருமுயற்சியினால் தீர்க்கக்கூடியதுமாகிய நோய் இவ்வுலகில் மனிதர்களுக்குத் தோன்றுவது ஏதேனுமுளதா? என்று கேட்க, குரு 'ஊருஸ்தம்பம்' என்னும் நோய் ஐவகைச் செயல்களால் நீக்க இயலாதது என்று கூறினார். அது தோன்றக் காரணங்களையும் சிகிச்சை முறைகளையும் விளக்க வேண்டுமென அக்கினிவேசர் கேட்க, ஆத்திரேயர் இவ்வாறு கூறலானார் 3–7

---

ஊருஸ்தம்பம்–தொடைகள் தூண்களைப் போல் பருத்து அசைவற்றுப்போவது ஊருஸ்தம்பநோய். மற்றும் அதன் சிகிச்சையைப்பற்றி விரிவாக விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெற்றது.

## 2. ஊருஸ்தம்ப இலக்கணமும், தோற்றமும்

உண்ட உணவு சிறிது செரிமானமாகியபின் அசீரணம் இருக்கும் போது எண்ணெய்ப்பசையுள்ளதும் சூடுள்ளதும் இலேசானதும் சீதளமானதும் உலர்ந்ததும் சிறிது ஈரமுள்ளதுமான ஒன்றுக் கொன்று எதிர்மாறான குணங்கள் கொண்ட உணவுப் பொருட் களை ஒன்றாகக் கலந்துஉண்பது கிராமப்பகுதியில் ஈரப்பாங்கான இடங்களில் வாழும் பிராணிகளின் மாமிசத்துடன் தயிரையும் பாலையும் சேர்த்து உண்பது மாவாலான தின்பண்டங்களைத் தின்றுக் கெட்டுப்போன கள்ளைப் பருகுவது பகலில் நன்றாகத் தூங்கி இரவில் கண்விழிப்பது பட்டினி கிடப்பது உண்டதும் மறுபடியும் உண்பது உடலுக்கு மிகுதியாகக் களைப்பையுண் டாக்கும் வேலைகளை மிதமிஞ்சி செய்வது மிகவும் அச்சம் கொள்ளுவது சிறுநீர் மலம் வாதம் இவைகளின் போக்கைத் தடுப்பது எண்ணெயை மிகுதியாக உட்கொள்வது முதலியவற் றால் குடலில் பக்குவமடையும் நிலையைப் பெறாத உணவுரஸம் நாள்தோறும் மேலும் மேலும் சேர்ந்து விடுகிறது. அது கொழுப்புடன் கூடி வாத பித்த கபங்களின் வழிகளைத் தடுத்து அம்மூன்று தோஷங்களுடன் கூடி பளுவாக இருப்பதனால் இதயத்திற்குக் கீழ்ப்பகுதிகளிலுள்ள நரம்பு தமனிகளில் பரவி விரைவாக உடலின் கீழ்ப்பகுதிக்கு இறங்கிக் கொழுப்பின் வலிமையால் மேலும் வலிமை பெற்று தொடைகளிலும் ஆடுசதை களிலும் நிரம்பி விடுகிறது. அதனால் கால்கள் தொடுஉணர்ச்சி யின்றி அசைவற்றுத் தூண்போல் நின்றுவிடும். தொடைகளில் நிறைந்த கபம் அசைவின்றி நிலையாக நின்று தங்கி விடும். அப்பொழுது கால்கள் மிகவும் பளுவாகத் தோன்றி சோர்வு எரிச்சல் வலி முதலியவற்றைத் தோற்றுவிக்கும். தொடு உணர்ச்சி அற்றுப்போகும். நடுக்கம் தோன்றும். பிளப்பது போன்ற வலியுண்டாக்கும். இவ்வாறு நோய் உடலையும் உயிரையும் துன்பப்படுத்தி வாட்டும். மேலும் கபம் கொழுப் புடன் கூடி வாத பித்தங்களை எதிர்த்துத் தான் சீற்றமடைந்து தன்னிடமுள்ள நிலை பெறும் தன்மையாலும் குளிர்ந்த தன்மை யாலும் தொடைகளை நீட்டவும் மடக்கவும் முடியாமல் கம் பத்தைப்போல் அசைவின்றி இருக்கவும் செய்து விடும். ஆகை யால் இந்த நோய்க்கு ஊருஸ்தம்பம் என்னும் பெயர் வந்தது. *8—14*

## 3. ஊருஸ்தம்பத்தின் முற்குறிகள்

ஊருஸ்தம்பம் என்னும் நோய் தோன்றுவதற்கு முன்பு மனத் தில் ஏதேனும் ஒன்றையே நினைத்துக் கவலைகொள்ளுதல் மிகுதி யாகத் தூங்குதல் உடல் உணர்ச்சியில்லாதிருத்தல் வாய் சுவை

யற்றிருத்தல் காய்ச்சல் என்பன தோன்றும். வாந்தி வரும். ஆடுசதையிலும் தொடையிலும் வலியுண்டாகும். இவையெல்லாம் ஊருஸ்தம்ப நோயின் முற்குறிகளாகும். 15

### 4. ஊருஸ்தம்ப நோயில் எண்ணெய்ச் சிகிச்சை செய்வதனால் உண்டாகும் தோஷங்கள்

மேற்கூறிய ஊருஸ்தம்ப நோய் தோன்றுவதற்கு முன் வாத நோய் என்று நினைத்து எண்ணெய்ச் சிகிச்சையைப் பயன் படுத்தினால் பாதங்களில் பொறுக்க இயலாத வலியுண்டாகும். தொடு உணர்ச்சியே அற்றுப்போகும். கால்கள் மேலே தூக்க முடியாமலும் அசைக்க முடியாமலும் மிக்கதுன்பம் உண்டாகும். 16

### 5. ஊருஸ்தம்ப இலக்கணம்

ஊருஸ்தம்பநோயில் முழங்கால்சதை தொடைகள் இவைகளில் பொறுக்கமுடியாத கடுமையான வலியுண்டாகும். பாதங்கள் நிலத்தில் ஊன்ற முடியாமல் வலிக்கும். கால்களில் சிறிது எரிச்சலும் வலியுமுண்டாகும். குளிர்ந்த தொடு உணர்ச்சியை அறிய முடியாது. கால்களைச் சீராகக் கீழே வைத்து நிற்க, பிடிக்க, நடக்க, அசைக்கவும் முடியாமல் துன்பமுண்டாகும். கால்களும் தொடைகளும் அசைக்கமுடியாமல் ஏதோ சுமையைச் சுமந்து செல்வது போலத் தோன்றும். 17–18

### 6. தீர்க்கமுடியாத ஊருஸ்தம்பத்தின் இலக்கணம்

இந்த நோயில் எரிச்சல் வலி ஊசியால் குத்துவது போன்ற வலியுமுண்டாகி நடுக்கம் கண்டால் நோய் தீர்க்க முடியாதது என்று கருத வேண்டும். மேற்சொன்ன துன்பங்கள் இல்லாவிடில் துவக்கத்தில் அந்த ஊருஸ்தம்ப நோயை மருத்துவத்தினால் தீர்க்க முடியும் என்று உணரவேண்டும். 19

### 7. ஊருஸ்தம்பத்தில் தவிர்க்க வேண்டியவை

ஊருஸ்தம்ப நோயில் எண்ணெய்க்குடி எண்ணெய்க் குளியல் முதலிய எண்ணெய் சிகிச்சை கஷாய, எண்ணெய்வஸ்திகள் வாந்தி பேதி சிகிச்சைகளும் தவிர்க்கத்தக்கவை. இதன் காரணத்தைச் சொல்கிறேன், கேள்.

எண்ணெய்வஸ்திமுறை கபத்தை வளர்க்கும். 'ஆகையால் இந்நோய்க்கு எண்ணெய்ச் சிகிச்சை செய்யத் தகாது, தொடையிலிருக்கும் கபத்தைப் பேதிக்குக் கொடுத்து எடுக்க இயலாது.

கபத்தையும் கபஸ்தானத்தில் தங்கியிருக்கும் பித்தத்தையும் எளிய வாந்தி எடுக்கச் செய்யும் சிகிச்சையினால் நீக்க இயலும். சீரணப் பையிலுள்ள கபத்தையும் பித்தத்தையும் பேதியாகக் கொடுத்து நீக்க முடியும். கபம், கபம் தங்கியிருக்குமிடம் பித்தம் இம் மூன்றும் சீரணப்பையை அடைந்திருக்கும் போது அவைகளை வஸ்தி முறை சிகிச்சையினால் வேருடன் களைந்து நோயைக் குணப்படுத்தலாம். ஆனால் ஆமரசம் (பக்குவமடையாத உணவு ரஸம்) மற்றும் கொழுப்பினால் ஆடுசதை மற்றும் தொடைகள் அசைவற்றவையாக இருக்கும் போது அது வாதத்தின் இருப்பிட மாகையால் பள்ளத்தில் தங்கிய நீரை மேட்டு நிலத்துக்கு பாயச் செய்ய இயலாதது போல மேற்சொன்ன எண்ணெய்வஸ்தி வாந்தி பேதி இவ்வகை சிகிச்சைகளால் ஊருஸ்தம்ப தோஷங்கள் நீக்க முடியாதவைகளாகும். 20–24

## 8. ஊருஸ்தம்ப சிகிச்சை முறை

ஊருஸ்தம்பநோயில் கபமும் ஆமரசமும் மிகுதியாக இருப்ப தால் அவ்விரண்டையும் அடியோடு போக்கும் நீர் சுண்டச் செய்யும் சிகிச்சை முறையை நன்கு ஆராய்ந்து தக்கவாறு கையாள வேண்டும். 25

## 9. இந்நோய்க்குத் தக்க பத்தியமான உணவுவகைகள்

வறட்சியான பணிவிடைகளை மேற்கொண்டுள்ள நோயா ளிக்கு யவதானியம் வரகு அரிசி கேழ்வரகு ஆகியவற்றை உப்பில் லாமல் சிறிது நீரிலும் எண்ணெயிலும் பக்குவம் செய்து உண்ணக் கொடுக்க வேண்டும்.

துளசி வேம்பு எருக்கன் மூங்கில்குருத்து கொன்றை இவை களின் துளிர்களை காகதுண்டி சக்ரவர்த்திக்கீரை பேய்ப்புடல் முதலிய கசப்புச் சுவையுள்ள காய்கறிகளுடன் சேர்த்து உப்பில் லாமல் சமைத்து க்ஷாரப் பொருள் அரிஷ்டம் கடுக்காய் என்ப வைகளுடன் பக்குவம் செய்த யவதானியம் வரகுஅரிசி கேழ்வரகு ஆகியவற்றை உண்ணச் செய்ய வேண்டும். 26–27

## 10. ஊருஸ்தம்பத்தைப் போக்கும் க்ஷாரம் முதலிய முறைகள்.

[1]யவக்ஷாரம் முதலிய க்ஷாரப்பொருட்கள் [2]அரிஷ்டங்கள் கடுக்காய்கள் தேனுடன் கலந்த நீர்த்திப்பிலி என்பனவற்றை

---

1. யவக்ஷாரம்—யவதானியக் கட்டையை எரித்துத்தயார் செய்த உப்பு.
2. அரிஷ்டம்—மருந்துப் பொருட்களாலான கஷாயத்தைக் காய்ச்சிப் பக்குவம் செய்தது அரிஷ்டம் எனப்படும்.

முறைப்படித் தயாரித்துப் பயன்படுத்தினால் ஊருஸ்தம்பநோய் நீங்கும். 28

## 11. ஊருஸ்தம்ப நோயைப் போக்கும் சூரணம்

தொட்டால்சிணுங்கி இலவங்கோந்து வில்வம் இவற்றைச் சம எடைகொண்டு கலந்து தூள் செய்து தேனில் குழைத்து உண்ணச் செய்தால் ஊருஸ்தம்ப நோய் தணியும். அவ்வாறே தேவதாருபிசின் குருவேர் தேவதாருகட்டை தகரவிதை இவை களைச் சம எடையாகச் சேர்த்துத் தூள் செய்து தேனில் உட் கொள்ளச் செய்தால் இந்த நோய் தணியும். 29

அவ்வாறே சந்தனம் காட்டாத்திப்பூ கோஷ்டம் தாளி சபத்திரி விளாமிச்சைவேர் இவைகளைத் தூள் செய்து தேனில் கலந்து உட்கொள்ளச் செய்தால் ஊருஸ்தம்ப நோய் தணியும்.

(1) கோரைக்கிழங்கு கடுக்காய் பாச்சோத்தி பதிமுகம் கடுகரோகிணி

(2) தேவதாரு மஞ்சள் மரமஞ்சள் வசம்பு கடுகரோகிணி

(3) அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி ஸரளதேவதாருகட்டை தேவதாருகட்டை

(4) செவியம் கொடிவேலி தேவதாருக்கட்டை கடுக்காய்

(5) சேராங்கொட்டை அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி

மேற்சொன்ன ஐந்து வகைகளில் ஏதாவது ஒன்றைத் தூள் செய்தோ விழுதாக்கியோ தேனில் கலந்து உட்கொள்ளச் செய் தால் ஊருஸ்தம்பநோய் நீங்கும். 30–32

குன்றிமணி மருக்காரக்காய் நீர்வளவேர் வெட்பாலையரிசி வசம்பு பெரும்குரும்பை சரக்கொன்னை வட்டத்திருப்பி புங்கம் பட்டை பாகல்வேர் இவற்றைச் சமஎடையாகச் சேர்த்து நன்றாகத் தூள் செய்து தேனிலோ சிறிதளவு நீரிலோ தயிர்த் தெளிவு தேன் இவற்றிலோ சேர்த்துப் பயன்படுத்தினால் ஊருஸ் தம்பநோய் நீங்கும். 33–34

## 12. பெருங்குரும்பை முதலியவைகளின் சூரணம்

பெருங்குரும்பை அதிவிடயம் கோஷ்டம் கொடிவேலி கடுக ரோகிணி இவைகளைச் சம எடையாக எடுத்துத் தூள் செய்து முன் போல் தேனிலோ சிறிதளவு நீரிலோ தேன் சேர்த்த தயிர்த் தெளிவுடனோ கொடுக்கலாம். அல்லது குக்குலுவை ஓரிரவு பசுவின் சிறுநீரில் ஊறவைத்துக் காலையில் அதை உலர்த்தித் தூளாக்கிச் சிறிதளவு நீரும் தேனும் சேர்த்துப் பயன்படுத்தவும். 35

## 13. [1]ஸ்வர்ணக்ஷீர்யாதி சூர்ணம்

மலையெருக்குவேர் அதிவிடயம் கோரைக்கிழங்கு வாலுளுவை வசம்பு தேவதாரு கொடிவேலி கோஷ்டம் வட்டத் திருப்பி கடுகரோகிணி இவைகளைச் சூர்ணம் செய்து தேனிலோ நீர்கலந்த தேனிலோ குழைத்து உட்கொள்ளச்செய்ய வேண்டும். 36--37

## 14. [2]பலீ சூர்ணம்

ஞாழல் புலிநகமரத்தின் வேர் சிறுநாகப்பூ என்பனவற்றை நன்றாகத் தூள் செய்து தேன் கலந்து கொடுக்க ஊருஸ்தம்ப நோய் நீங்கும். திரிபலை (கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக் காய்) அரிசித்திப்பிலி கோரைக்கிழங்கு செவியம் கடுகரோகிணி என்பனவற்றின் சூரணத்தை ஊருஸ்தம்ப நோயாளிக்குத் தேனுடன் கொடுக்கலாம். 38

## 15. ஊருஸ்தம்பத்தின் நிலைமைக்கேற்ப சிகிச்சை

[3]அபதர்ப்பணசிகிச்சை செய்வதனால் உண்டான ஊருஸ் தம்பநோய் கொண்டவனை, நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் பிராணிகளின் மாமிசத்தைப் பழைய சம்பா அரிசிச் சோற்றுடன் கலந்து [4]சந்தர்ப்பண முறையின்படி உண்ணச் செய்தால் அப தர்ப்பண சிகிச்சையால் உண்டான ஊருஸ்தம்பநோய் நீங்கும். 39

## 16. ஊருஸ்தம்ப நோயில் வாதத்தைத் தணிக்கும் சிகிச்சை

வறட்சி முறையான சிகிச்சையினால் வாதம் சீற்றங்கொண்ட போது தூக்கமின்றி துன்பப்பட நேர்ந்தால் எண்ணெய் மற்றும்

---

1. ஸ்வர்ணக்ஷீரி—மலையெருக்கு
2. பலீ—ஞாழல்
3. அபதர்ப்பணம்—பட்டினியிருக்கச் செய்தல் அல்லது உடல் இளைக்கச் செய்தல்.
4. சந்தர்ப்பணம்—உடல் பருக்கச் செய்தல் அல்லது உடலை செழிக்கச் செய்தல்

வியர்வை சிகிச்சை முறையைக் கையாண்டு நோயைத் தணியச் செய்ய வேண்டும். 40

## 17. நோய் நிலைக்குத் தக்க தைலம்

உவகையிலை க்ஷீரகாகோலி சித்தரத்தை நெருஞ்சில் தேவதாரு அகில் வட்டத்திருப்பி என்பனவற்றைச் சம எடையாகச் சேர்த்து விழுதாக்கி அந்த விழுதிற்கு நான்கு மடங்கு எண்ணெய் அவ்வெண்ணெய்க்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து முறைப்படி இரண்டு பலம் அல்லது நான்கு பலங்களாகவோ எண்ணெய்ப் பக்குவமாக்கித் தேன் கலந்து பருகச் செய்யவேண்டும்.

## 18. [1]குஷ்டாதிதைலம்

கோஷ்டம் சந்தனம் (வாசனைப்பொருட்கள்) விளாமிச்சை வேர் நான்முகப்புல் தேவதாருவேர் சிறுநாகப்பூ ஓமம் அமுக்கராக்கிழங்கு இவைகளைச் சம எடையாகக் கலந்து விழுதாகச் செய்து கடுகெண்ணெய் நான்கு மடங்கும் எண்ணெய்க்கு நான்கு மடங்கு தண்ணீரும் சேர்த்துப் பக்குவம் செய்து மேற்சொன்னவற்றில் நான்கில் ஒரு பங்கு தேன் கலந்த தைலத்தை நோயாளியின் உடலுக்கேற்றவாறு கொடுக்க வேண்டும். இதனால் ஊருஸ்தம்ப நோய் நீங்கும்.

## 19. [2]சைந்தவாதி தைலம்

இந்துப்பு இரண்டு பலம் சுக்கு ஐந்து பலம் கண்டந்திப்பிலி இரண்டு பலம் கொடிவேலி இரண்டு பலம் சேராங்கொட்டை இருபது (எண்ணிக்கையில்) என்பனவற்றை விழுதாகச் செய்து 128 பலம் அரிசிக்கஞ்சி நீரில் தயாரித்த காடி 16 பலம் கடுகுஎண்ணெய் 16 பலம் இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயாரிக்கவும். இதைப் பருகச் செய்தால் மகப்பேறு உண்டாகும். ''க்ருத்ரஸீ'' என்னும் வாத நோய் தொடைகளில் பிடிப்பு மூலநோய் மற்றும் வாத நோய்கள் இவையெல்லாம் நீங்கும். 41–46

## 20. [3]அஷ்டகட்வரதைலம்

கண்டந்திப்பிலி ஒரு பலம் சுக்கு ஒரு பலம் இவையிரண்டையும் விழுதாகச் செய்து எட்டு மடங்கு நெய்யுடன் கூடிய மோர்

---

1. குஷ்டாதி—கோஷ்டம் முதலிய பொருட்கள்
2. சைந்தவாதி தைலம்—இந்துப்பு முதலிய மருந்துப் பொருட்களால் தயார் செய்யப்பட்ட எண்ணெய்.
3. அஷ்டகட்வர—எட்டு மடங்கு நெய்யுடன் கூடிய தயிர்த் தெளிவு.

கடுகுஎண்ணெய் 16 பலம் பசும்தயிர் 16 பலம் இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து முறைப்படி தயாரித்த எண்ணெயைப் பயன்படுத்தினால் ''க்ருத்ரஸி'' என்னும் வாதநோய் தொடைகள் அசைவற்றுப் போகும்நிலை ஆகியவை நீங்கும். 47

இவ்வாறு ஊருஸ்தம்பநோய்க்கு உள்ளுக்குக் கொடுக்கும் மருந்துகள் விளக்கப்பட்டன. இனி கபத்தை நீக்கக்கூடிய வெளிப்பூச்சு மருந்துகள் விளக்கப்படும், கேள். 48

## 21. ஊருஸ்தம்பத்திற்கு மேல்பூச்சு மருந்துகள்

புற்றுமண் புங்கமரத்தின்வேர் பட்டை விதை பழம் ஆகிய நான்கு, செங்கற்பொடி இவைகளைச் சம எடையாகக் கொண்டு தூள் செய்து மேல் தூவவும், மேல் பூச்சாகவும் பயன்படுத்தவும். 49

## 22. கபத்தை நீக்கும் மேல்பூச்சு

அமுக்கரான்கிழங்கு எருக்கு வேம்பு தேவதாரு என்பனவற்றின் பட்டைகளின் தூள் தேன் கடுகு புற்றுமண் இவற்றை ஒன்றாகச் சேர்த்தோ நேர்வாள விதை எலிச்செவி துளசிவிதை கடுகு ஆகியவற்றைச் சம எடையாக எடுத்து விழுதாகச் செய்தோ ஊருஸ்தம்ப நோயாளிக்கு அறிஞனான மருத்துவன் கெட்டியாக மேல் பூச்சு பூசவேண்டும். மேல் சொன்ன மருந்தைப் பற்றாகவும் போடலாம். 50–51

## 23. ஊருஸ்தம்பம் போக்க மேல்பூசவும் நனைக்கவும் மருந்து

சிறிய பெரிய நேர்வாள வேர்கள் துளசி வெட்பாலையரிசி கடுகு ஆகியவற்றை நன்றாக அரைத்துப் பற்றுப் போடவும். தக்கோலம் முருங்கை துளசி சுக்கு வெட்பாலையரிசி வேம்பு என்பனவற்றின் இலைகள் வேர் பட்டை காய்கள் என இவற்றை எல்லாம் இடித்துத் தண்ணீரில் போட்டு நன்றாகக் காய்ச்சிக் குளிக்கச் செய்தால் ஊருஸ்தம்பநோய் நீங்கும். 52

## 24. மற்றும் சில மேற்பூச்சுகள்

பசுவின் சிறுநீருடன் கடுகை விழுதாக அரைத்து ஓர் இரவு வைத்து மறுநாள் பற்று அல்லது மேல்பூச்சாகப் பூசவேண்டும். வெட்பாலையரிசி துளசி கோஷ்டம் முதலிய வாசனைப் பொருட்கள் முருங்கைப்பட்டை எருக்கன்வேர் தும்புரு என்னும்

வாசனைப்புல் புற்றுமண் கருந்துளசி இவைகளைச் சம எடையாகச் சேர்த்து மைய அரைத்துத் தயிரையும் இந்துப்பையும் சேர்த்துக் கெட்டியான பற்றுப் போட்டால் ஊருஸ்தம்பநோய் தணியும். 53–55

பெருவாகைக்கட்டை கருங்காலிக்கட்டை வில்வவேர் முள்ளுக் கத்தரி கண்டங்கத்தரி ஸரளம் என்னும் தேவதாருப்பட்டை வேங்கப்பட்டை முருங்கம்பட்டை தக்கோலம் நெருஞ்சில் காட்டுத் துளசி கருந்துளசி புங்கம்பட்டை இவைகளைச் சம எடையாகச் சேர்த்து நன்றாகக் கொதிக்க வைத்து அக்கஷாயத்தைத் தொடை மேல் ஊற்றி நனைக்க வேண்டும். அல்லது மேற்சொன்ன பொருட்களை மைய அரைத்துப் பற்றுப்போட்டாலும் ஊருஸ்தம்ப நோய் குணமடையும். 56–57

## 25. ஊருஸ்தம்பநோய் நீங்க உலாவத்தக்க இடங்கள்

ஊருஸ்தம்பநோயாளியின் தாபம் குறைந்து நோய் நீங்க முடிந்தவரை உடற்பயிற்சி செய்யத் தூண்டவேண்டும். விடியற் காலையில் மேடான இடங்களிலும் கற்கள் மிகுதியாக உள்ள பரப்பான நிலங்களிலும் மண்மேடுகளிலும் நடக்கச் செய்ய வேண்டும்.

குளிர்ந்த நீருடைய ஆறுகளில் எதிர் நீச்சல் போடச் செய்தால் குணமேற்படும். அல்லது தேங்கியுள்ள மிக்க குளிர்ச்சி தரக்கூடிய பெரிய குளங்களிலோ அல்லது நீர்த்தேக்கங்களிலோ மூழ்கிப்பல முறை நீச்சல் அடிக்கும்படி ஊக்கம்தர வேண்டும்.

)த்தகைய உடற்பயிற்சி முதலியவை செய்வதால் தொடைகளில் தேங்கியிருக்கும் கபம் நீரின் தொடர்பினால் கரைந்து பிறகு உலர்ந்து விடும். அப்பொழுது மேற்சொன்ன பயிற்சி முறைகளால் ஊருஸ்தம்பநோய் நீங்கும். 58–59

## 26. மேலும் சில சுருக்கமான சிகிச்சைகள்

வாதத்தை சீற்றமடையச் செய்யாதவையும் கபத்தைக் குறைக்கக் கூடியவையுமான உணவையும் மருந்துகளையும் எப்பொழுதும் பயன்படுத்த வேண்டும். மேற்சொன்ன நீச்சல் முதலிய செயல்களையும் புரியச் செய்ய வேண்டும். மற்றும் இந்த நோய்க்குச் சிகிச்சை செய்யும்பொழுது உடல் வலிமையையும் சடராக்கினியையும் கேடடையாமல் காப்பாற்றிக் கொண்டே மிக்ககவனத்துடன் சிகிச்சை புரிய வேண்டும். 60–61

**முடிவுரை**

ஊருஸ்தம்ப நோயுண்டாகக் காரணங்கள் முற்குறிகள் லக்கணங்கள் ஊருஸ்தம்ப நோயில் புரியத்தகுந்த பஞ்சகர் மாக்கள் ஒவ்வாமைக்குக் காரணங்கள் ஊருஸ்தம்ப நோய்க்குச் சிகிச்சை முறைகள் ஆகியவை அனைத்தும் இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன. 62

*அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்டு திருடபலரால் முழுமையாக்கப்பட்ட சரகஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானத்தில் ஊருஸ்தம்பசிகிச்சை என்னும் இருபத்தேழாம் அத்தியாயம் முற்றும்.*

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# * வாத வியாதி சிகிச்சை

ஆத்திரேய மாமுனிவர் கூறியருளியவாறு வாத வியாதி சிகிச்சையைப் பற்றி விளக்குவோம். 1–2

### 1. வாயுவின் பெருமை

வாயுதான் உடலுக்கு நீண்ட ஆயுள் வலிமை ஆத்மாவை நிலைநிறுத்தும் தன்மை வாழ்க்கைக்குத் தேவையான செயல்கள் அனைத்திலும் திறமை ஆகியவற்றைக் கொடுக்கிறது. 3

உடலில் தங்குதடையின்றிச் செல்லுதல் தன்னிடத்திலிருத்தல் தன் இயற்கை நிலையிலிருத்தல் எனும் தன்மைகள் கொண்ட வாயுவை உடையவன் நூறாண்டுகளுக்கு மேலும் நோயின்றி வாழ்கிறான். 4

### 2. வாயுவின் ஐந்து வகைகள்

1. பிராணன் 2. உதானன் 3. சமானன் 4. வியானன் 5. அபானன் எனும் ஐந்து வகையாகிய வாயு உடலில் அதனதற்குத் தக்க இடத்தில் இருந்து கொண்டு கேடடையாமல் தங்குதடையின்றிச் சென்று உடலை நன்னிலையில் வைத்துக் காப்பாற்றுகிறது. 5

### 3. பிராண வாயுவின் இருப்பிடம், செயல்

தலை மார்பு கழுத்து நாக்கு முகம் மூக்கு என்பவை பிராண வாயுவின் இருப்பிடங்களாகும். துப்புதல் தும்முதல் ஏப்பம் விடுதல் மூச்சு விடுதல் (சுவாஸம்), உணவை உணவுப் பைக்கு எடுத்துச் செல்லுதல் இவைகள் பிராண வாயுவின் செயல்களாகும். 6

* வாத தோஷத்தால் தோன்றும் நோய்களுக்கு உரிய சிகிச்சைகளைப் பற்றிக் கூறுவதால் இவ்வத்தியாயம் இப் பெயர் பெற்றது.

## 4. உதானவாயுவின் இடம், செயல்கள்

தொப்புள் மார்பு கழுத்து என இவை உதான வாயுவின் இருப்பிடங்களாகும். பேசுதல் செயலில் முயற்சி உற்சாகமூட்டுதல் வலிமை பொலிவு எனும் இவற்றைச் சரியான நிலையில் இருக்கச் செய்தல் என்பவை உதான வாயுவின் செயல்களாகும். 7

## 5. சமானவாயுவின் இடம், செயல்கள்

வியர்வை தோஷம் நீரைத்தாங்கக்கூடிய ஸ்ரோதஸ்ஸுகள் என இவை சமான வாயுவின் இருப்பிடங்களாகும், சடராக்கினியின் பக்கத்திலிருக்கிற சமான வாயு சடராக்கினிக்கு வலிமையைக் கொடுக்கிறது. இதுவே சமானவாயுவின் செயல் ஆகும். 8

## 6. வியான வாயுவின் இடம், செயல்கள்

வியான வாயு உடல் முழுவதும் பரவியிருக்கிறது. இது விரைவில் உடலில் பரவும் நன்மையைப் பெற்றது. விரைவில் செயலாற்றலை அளிப்பது. உறுப்புகளை நீட்டவும் மடக்கவும் செய்தல் உறுப்புகளுக்கு நடுக்கத்தை உண்டுபண்ணுதல் இமைகளை விரிக்கவும் மூடவும் செய்தல் ஆகிய இவைகள் வியான வாயுவின் செயல்களாகும். 9

## 7. அபான வாயுவின் இருப்பிடம், செயல்கள்

இரண்டு விதைகள் சிறுநீர் தங்குமிடம் ஆண்குறி தொப்புள் தொடை தொடையிடுக்கு ஆசனவாய் இவைகள் அபானவாயுவுக்கு இருப்பிடங்களாகும். விந்து சிறுநீர் மலம் மாதவிடாய் கரு இவைகளை வெளிப்படுத்தல், பெருங்குடலில் தங்கியிருக்கும் அபான வாயுவின் செயல்களாகும். இவ்வைந்து வாயுக்களும் தத்தம் இயற்கை நிலையில் இருந்து கொண்டு தத்தம் செயல்களைத் திறமையாகச் செய்கின்றன. கேடடையாத இந்த ஐந்து வகையான வாயுக்கள் உடலை நோயின்றிக் காக்கின்றன. 10–11

## 8. கேடடைந்த வாயுவின் செயல்

தடம் புரண்டு செல்லக் கூடியவையும் கேடடைந்தவையுமான ஐந்து விதமான வாயுக்கள் அவற்றின் இடம் செயல் இவற்றிற்கு ஏற்றவாறு நோய்களைத் தோற்றுவித்து உடலைத் துன்புறுத்துகின்றன. அல்லது மரணத்தைத் தோற்றுவிக்கின்றன. 12

கணக்கற்ற நோய்கள் இருந்த போதிலும் வாதத்தினால் தோன்றக் கூடிய எண்பது விதமான நகபேதம் போன்ற நோய்

களைக் குறித்து ஸூத்ரஸ்தானத்தில் பதாவது யா யத்தில் விளக்கம் சொல்லப்பட்டுள்ளது. 13

## 9. வாத நோயின் விளக்கம்

ஐந்து விதமான வாயுக்களின் இடங்களின் நிலையைக் குறித்த தனித்தனியான வாயுவினாலும் சூழ்ந்துள்ள வாயுவினா லும் ஏற்படக் கூடிய நோய்களுக்குக் காரணம் சிகிச்சை பெயர் இவற்றைக் குறித்துச் சொல்லுகிறேன், கேள். 14

## 10. வாதம் சீற்றமடைவதற்குக் காரணம்.

வறட்சி குளிர்ச்சி பொருந்திய பொருள்களைப் பயன்படுத்து தல் குறைந்த அளவில் இலேசான உணவுகளை உண்ணுதல் வலிமைக்கு மீறிப் புணர்தல் அதிகமாக இரவில் கண்விழித்தல் (எதிரிடையான உணவை உண்பது உடலைத் தகாத வழியில் இயக்குவது போன்ற) தாறுமாறான செயல்கள் ஆகியவை தோஷமும் இரத்தமும் உடலிலிருந்து அதிக அளவில் வெளியேறுதல் குதித்தல் நீந்துதல் மிக்க உடற்பயிற்சி வெகுதூரம் நடத்தல் தகாத முறையில் உடலைப் பயன்படுத்தல் தாதுக்களின் குறை பாடு கவலை துக்கம் வெகுநாட்களாக நோய்வாய்ப்பட்டு இளைத்துப் போதல் சுகமான படுக்கையும் இருக்கையுமில்லாமை சினம் கொள்ளுதல் பகலில் உறங்குதல் அச்சம் மலம் சிறுநீர் போன்றவற்றின் வேகத்தைத் தடைப்படுத்தல் ஆமதோஷம் அடி படுதல் உணவு உண்ணாமை உயிர் நிலையில் அடிபடுதல் யானை ஒட்டகம் குதிரை போன்ற வாகனங்களில் விரைவாகச் செல்லுதல் விழுதல் போன்ற செயல்களினால் இடைவெளியுள்ள துவாரங்களில் வலிமையுடைய வாயு சீற்றமடைந்து உடல் முழு வதிலும் அல்லது உடல் உறுப்புகளிலும் பலவகையான நோய் களைத் தோற்றுவிக்கின்றது. 15—18

## 11. வாத நோயின் முற்குறிகள்

வாத நோய்க்குரிய இலக்கணங்கள் தெளிவாகக் காணப் படாது அடங்கிய நிலை முற்குறியாகும்.

## 12. வாதவியாதியின் இலக்கணம்

நோய்க்குறிகள் தெளிவாகக் காணப்படுவது நோயின் இலக்கணமாகும். வாத நோயின் இலக்கணம் மறைதல் உடல் இலேசாகுதல் இவை அந்நோய் நீங்குவதற்கு அடையாளமாகும் 19

## 13. சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்.

உறுப்புகளும் துணைஉறுப்புகளும்சுருங்கிப்போதல் மூட்டுகள் செயலற்றுப் போதல் எலும்புகளிலும் பூட்டுகளிலும் உடைப்பது போன்ற வலி மயிர்க்கூச்சல் உளறுதல் கை பின்பாகம் இடுப்பு தலை இவற்றில் பிடிப்பு நொண்டித்தன்மை இழுத்து இழுத்து நடத்தல் கூனிப்போதல் உறுப்புகள் உலர்ந்து போதல் உறக்கம் கொள்ளாதிருத்தல் கருச்சிதைவு விந்துகேடடைதல் மாதவிடாய் முடங்கிப்போதல் உடலில் துடிப்பு உடலில் உணர்வின்மை தலை மூக்கு கண் கழுத்துக்கு மேலுள்ள பாகம் கழுத்து ஆகியவை கோணிப்போதல் அல்லது (அசைவற்றுப்போதல்) அழுந்திப் போதல் உடலில் உடைப்பது போன்ற வேதனை ஊசியால் குத்துவது போன்ற குத்தல்வலி உறுப்புகளில் நடுக்கம் நினைவற்ற தன்மை உழைப்பில்லாமலே சோர்வு தோன்றுதல் ஆகிய இவை சீற்றமடைந்த வாயுவின் இலக்கணங்களாகும். மேற்சொன்ன காரணங்கள் அதனதன் இருப்பிடம் இவற்றின் நிலைமைகளை முன்னிட்டு கேடடைந்த வாயு, வெவ்வேறான நோய்களைத் தோற்றுவிக்கிறது. 20—23

## 14. கோஷ்டத்தில் தங்கியுள்ள சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்

*கோஷ்டத்தில் தங்கியுள்ள கேடடைந்த வாயு, சிறுநீரையும் மலத்தையும் தடைப்படுத்தி (பிரத்னம்) தொடையிடுக்கில் கட்டி இதய நோய் குன்மம் மூலநோய் விலாக்களில் வலி என்னும் நோய்களைத் தோற்றுவிக்கும். 24

## 15. உடல் முழுவதும் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்

உடல் முழுவதும் சீற்றமடைந்த வாயு, உடலில் துடிப்பு விண்டு போதல் போன்ற வலி, உடல் முழுவதுமுள்ள மூட்டுகள் உடைந்து போவது போன்ற வேதனை என இவைகளை ஏற்படுத்தும். 25

## 16. ஆஸன வாயில் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்.

ஆஸனவாயில் சீற்றமடைந்த வாயு, மலம் சிறுநீர் கீழ் நோக்கிச் செல்லும் வாயு ஆகியவற்றைத் தடைப்படுத்தும். வயிற்றில் வலி உப்புசம் சிறுநீர்ப்பையில் கல் மணல் போன்றவை

கோஷ்டம்—மலக்குடல், இரைப்பை, வயிறு, சிறுநீர்பை, கர்ப்பப்பை முதலியவற்றைக் குறிக்கும்.

தோன்றுதல் முழங்கால் தொடை இடுப்பின் பின்பகுதி [1](திரிகம்) இடுப்புடன் சேருமிடம் கால் இவற்றில் வேதனை உடல் உலர்ந்து போதல் என இவற்றையும் ஏற்படுத்தும். 26

## 17. உணவுப்பையில் சீற்றமடைந்த வாதத்தின் இலக்கணம்.

இதயம் தொப்புள் விலாப்புறம் வயிறு இவற்றில் வேதனை மிக்க நீர்வேட்கை ஏப்பம் வாந்திபேதி இருமல் தொண்டையும் வாயும் உலர்ந்து போதல் இழுப்புநோய் எனும் இலக்கணங்களை உணவுப் பையில் சீற்றமடைந்த வாயு தோற்றுவிக்கும். 27

## 18. சீரணப்பையில் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்

சீரணப்பையில் சீற்றமடைந்த வாதம், குடலில் ஓசை வயிற்றில் வலி 'குடகுட' என்கிற ஒலி சிறுநீர்க்கடுப்பு மலம் கஷ்டத்துடன் வெளியேறுதல் வயிற்று உப்புசம் இடுப்பு எலும்பு முதுகு எலும்பு சேருமிடம் என்னுமிடத்தில் வேதனை என இவைகளை ஏற்படுத்தும். 28

## 19. புலன்களில் சீற்றமடைந்த வாதத்தின் இலக்கணம்.

காது கண் நாக்கு போன்ற புலன்களில் சீற்றம் அடைந்த வாயு, புலன்களின் இயற்கைச் செயல்களை இழக்கச் செய்கிறது. 29

## 20. தோலில் சீற்றமடைந்த வாதத்தின் இலக்கணம்

தோலில் வறட்சி வெடிப்பு உணர்வின்மை கருநிறம் சுருக்கம் ஊசியால் குத்துவது போன்ற குத்தல்வலி நீளுதல் (தோலில்) சிவப்பு நிறம் கணுக்களில் வலி என்பவை தோலில் சீற்றமடைந்த வாதத்தின் இலக்கணங்களாகும். 30

## 21. இரத்தத்தில் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்

குடலில் பொறுக்க முடியாத வேதனை கதகதப்பு நிற மாற்றம் குன்றிப்போதல் உணவில் சுவையின்மை உடல் முழுவதிலும் சிறு சிறு கொப்புளங்கள் தோன்றுதல் உண்ட உணவு அடைபட்டுப்போதல் என்பனவற்றை இரத்தத்தில் சீற்றமடைந்த வாயு தோற்றுவிக்கும். 31

---

1. திரிகம் – இடுப்பின் இருபுறத்தெலும்புகளும், முதுகெலும்பும் மூன்று திசைகளிலிருந்து கூடும் இடம். இது திரிகஸந்தி என்றும் கூறப்படும்.

## 22. மாமிசத்திலும் கொழுப்பிலும் சீற்றமடைந்த வாயுவின் லக்கணம்

*மாமிசத்திலும் கொழுப்பிலும் சீற்றமடைந்த வாயு, உடல் பளு மிக்க குத்தல்வலி கொம்பால் முஷ்டியால் அடிபட்டதற்கு ஒப்பான வலி வேதனைமிக்க உடல் சோர்வு என்பனவற்றைத் தோற்றுவிக்கும்.* 32

## 23. மஜ்ஜையிலும் எலும்பிலும் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்

*எலும்பிலும் மஜ்ஜையிலும் சீற்றமடைந்த வாதம், எலும்பில் வெடிப்பது போன்ற வலி கணுக்களை உடைப்பதுபோன்ற வலி மூட்டுகளில் குத்தல்வலி மாமிசக்குறைவு வலிமைக்குறைவு உறக்கம்வராமை இடைவிடாத வலி ஆகியவற்றைத் தோற்றுவிக்கும்.* 33

## 24. விந்துவில் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்

*விந்துவை விரைவில் வெளியேறச் செய்தல் அல்லது கட்டிவிடுதல் கருவை நிறைவுபெறுமுன் விரைவில் வெளியேற்றுதல் கரு தரிக்காதவாறு செய்தல் கருவில் பலவகையான குறைபாடுகளைத் தோற்றுவித்தல் என்பவை விந்துவில் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணங்களாகும்.* 34

## 25. நரம்பில் சீற்றமடைந்த வாதத்தின் இலக்கணம்

*நரம்புகளில் சீற்றமடைந்த வாயு, முதுகைப் பின்புறமாக வளைத்தல் முன்பக்கமாக வளைத்தல் (கல்லி) இழுத்து இழுத்து நடத்தல் கூனுதல் உடல் முழுவதும் அல்லது ஒரே உறுப்பில் வாத நோய் ஆகியவற்றைத் தோற்றுவிக்கும்.* 35

## 26. [1]ஸிரையில் சீற்றமடைந்த வாதத்தின் இலக்கணம்

*ஸிரையில் சீற்றமடைந்த வாயு, உடலில் குறைந்த வேதனை வீக்கம் உடல் உலர்ந்து போதல் துடிப்பு ஸிரைகள் உணர்ச்சியற்றுப் போதல் சுருங்கிப் போதல் விரிந்து (பருத்து) போதல் ஆகிய தீமைகளை உண்டாக்கும்.* 36

## 27. மூட்டுகளில் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணம்

*மூட்டுகளைத் தழுவி சீற்றமடைந்த வாயு, மூட்டுகளில் துருத்தியைத் தொடுவது போன்ற உணர்ச்சி உலர்ந்து போதல்*

---

*1. ஸிரை—அசுத்த ரத்தத்தை எடுத்துச் செல்லும் குழாய்கள்.*

கை, கால் விரல்கள் முதலிய உறுப்புகளை நீட்டுவதிலும் மடக்குவதிலும் வேதனை அல்லது செயலிழக்கச் செய்தல் ஆகியவற்றை ஏற்படுத்தும்.

இவ்வாறு இடத்தைக் குறித்துச் சீற்றமடைந்த வாயுவின் இலக்கணங்கள் விளக்கப்பட்டன. 37

## 28. *அர்திதத்தின் இலக்கணம்

அதிக அளவில் வளர்ச்சி பெற்று உடலில் ஒரு பகுதியில் சீற்றமடைந்த வாயு, அந்தப் பகுதியில் செல்லுகிற இரத்தத்தைச் சுண்டச் செய்து கைவிரல்கள் முழங்கால் இவற்றை முடங்கச் செய்து முகம் மூக்கு புருவம் நெற்றி கண் தாடை என இவற்றைக் கோணலாகச் செய்து உணவைக் கோணலாகவே உள்ளே செலுத்துகிறது. பேசும் பொழுது வாயும் மூக்கும் கோணலாகின்றன. கண்கள் நிலைபெற்றுவிடுகின்றன. தும்மல் வந்தாலும் தும்ம முடியாது. அந்த நோயாளியின் பேச்சை ஒலி குறைவாகவும் தட்டுத்தடுமாறியும் தெளிவற்றும் தடைப்பட்டும் வெளிவரச் செய்கிறது. காது கேளாமை பற்கள் ஆடுதல் குரல் மாறுபாடு கை கால் கண்கள் முழங்கால் தொடை பொட்டு காது (தாடை) தொண்டை எனும் இவ்விடங்களில் வேதனை இவற்றைத் தோற்றுவிக்கிறது. உடலில் குறிப்பிட்ட பகுதியில் சீற்றமடைந்த வாதம் அந்தப் பகுதியில் அல்லது முகத்தில் பாதிப் பகுதியில் மட்டும் இந்த இலக்கணங்களைத் தோற்றுவித்து அர்திதம் எனப் பெயரையும் பெறுகிறது. 38-42

## 29. அந்தராயாமத்தின் இலக்கணம் (உடலை- மார்பு பக்கமாக வளைத்து இறுத்திப் பிடித்தல்)

சீற்றமடைந்த வாயு, கழுத்தின் இருபக்கங்களிலும் உள்ள நாடிகளை அண்டி நாடிகளுக்குள் சென்று மென்னிப்பிடிப்பைத் தோற்றுவிக்கும் செயலுக்கு அந்தராயாமம் என்று பெயர். அது கழுத்தை முன்பக்கமாக வைத்து மென்னியை அசையவிடாமல் செய்யும். பற்களைக் கடித்தல் வாயிலிருந்து நீர் ஒழுகுதல் முதுகின் பின்பகுதியைப் பிடித்து இழுத்தல் தலைப் பிடிப்பு கொட்டாவி முகத்தை அசைக்க இயலாமை பேசஇயலாமை இவை அந்தராயாமத்தின் இலக்கணங்களாகும். இனி பஹிராயாமத்தின் இலக்கணம் சொல்லப்படுகிறது. 43—45

---

* அர்திதம்—முகத்தை அல்லது வாயை ஒரு பக்கமாக இழுக்கும் ஒருவகை பக்கவாதம்.

## 30. பஹிராயாமத்தின் இலக்கணம் (உடலை முதுகின் பக்கமாக வளைத்து இறுத்திப் பிடித்தல்)

மிக்கவலிமை பெற்ற வாயு, உடலின் பின்பகுதி (முதுகுத் தண்டு) மென்னி இவற்றை இருப்பிடமாகக் கொண்ட நரம்பு களை உலரச் செய்து பஹிராயாமம் என்னும் நோயைத் தோற்று விக்கிறது. பின்பக்கம் உடலை வில்போல வளைத்துத் தலையின் பின்பக்கமாக இழுத்துச் சென்று முகவாய்க்கட்டையை அசைக்க முடியாமல் இறுக்கிப் பிடித்தல் பற்களைக் கடிக்கச் செய்தல் கொட்டாவியை உண்டு பண்ணுதல் உமிழ்நீர் ஒழுகுதல் பேச இயலாமை இவற்றைத் தோற்றுவிக்கும். இந்த முழுமையான இலக்கணங்களைக் கொண்டபோது இந்நோய் நோயாளிக்கு மரணத்தேயோ உடல் ஊனத்தையோ ஏற்படுத்தும். 46–48

## 31. தாடைப்பிடிப்பின் இலக்கணம்

சீற்றமடைந்த வாயு, தாடையின் இருபக்கங்களிலும் கட்டுப் பட்டுள்ள நாடிகளில் நுழைந்து கீழ்த்தாடையை அசையவிடாமல் செய்கிறது. இதனால் வேதனையின்றி அசையாமல் வாய் திறந்தவாறு இருக்கச் செய்யும் அல்லது அசைவற்று வாய் மூடிய படியே இருக்கச் செய்யும். 49

## 32. (ஆக்ஷேபகத்தின்) நடுக்கம் அல்லது ன் இலக்கணம்

சீற்றமடைந்த வாயு, கால்கள் கைகள் நரம்புகள் *ஸிரைகள் [1]கண்டரைகள் இவற்றை உலர்த்தும். உடலில் அடிக்கடி கை கால்கள் விறைத்துக் கொண்டு வலிப்பு உண்டுபண்ணுகிறது. 50

## 33. தண்டகத்தின் இலக்கணம்

சீற்றமடைந்த வாயு, கை கால் தலையின் பின்பாகம் (கழுத்து, முதுகு) இடுப்பு இவற்றைக் கொம்பு போல அசை வற்றிருக்கச் செய்து தண்டகம் என்றுபெயர் பெற்று சிகிச்சைக்கு அப்பாற்பட்டதாகிறது. 51

அர்திதம் ஆக்ஷேபகம் முதலிய நோய்களில் வாயுவின் வேகம் (கடுமை) குறைந்து போனால் நோயாளி நலம் அடைந்தவனாக காணப்படுகிறான். மறுபடியும் இவ்வாயுவின் வேகம் தோன்றும்

---

* ஸிரை—கெட்ட ரத்தத்தை எடுத்துச் செல்லும் குழாய் கள்.

1. கண்டரைகள்—தசைநார்கள்.

போது மிக்கக் கடுமையான அந்தந்த நோய்களினுடைய இலக்கணங்களுடன் உடலில் துன்பங்களைத் தோற்றுவிக்கும். இவ்வாறான ஆக்ஷேபகம் போன்ற நோய்களுக்கு மருத்துவன் பெரும்பாலும் சிகிச்சை செய்ய வேண்டாம். 52

### 34. பக்ஷவாதத்தின் இலக்கணம்

சீற்றமடைந்த வாயு, இடது பக்கம் அல்லது வலது பக்கம் ஏதாவது ஒரு பாகத்தை அழித்து உடலில் உள்ள செயல் திறனை இழக்கச் செய்து துன்பத்தையும் குரல் தடைப்படுதலையும் ஏற்படுத்துகிறது. 53

### 35. ஒருறுப்பு வாத நோயின் இலக்கணம்

சீற்றமடைந்த வாயு, உடலின் பாதிப்பகுதியில் உள்ள ஸிரை நரம்புகளை உலர்த்தி ஒரு கால் அல்லது ஒரு கையை முடமாக்குகிறது. குத்தல்வலி வலி இவற்றைத் தோற்றுவிக்கிறது. இதை ஒருறுப்பில் தோன்றிய வாத நோய் [1]ஏகாங்கரோகம் என்று தெரிந்து கொள்க. இந்தநோய் உடல் முழுவதும் பரவியிருந்தால் ஸர்வாங்கநோய் என்று பெயர் பெறும். 54-55

### 36. கிருத்ரஸியின் இலக்கணம்

கிருத்ரஸிநோய் முதலில் இடுப்பின் பின்பகுதி இடுப்பு பின் தட்டு தொடை முழங்கால் ஆடுசதை கால் இவற்றில் முறையாக அசையும் தன்மையைப் போக்கி ஊசிகுத்துவது போன்ற வேதனையை உண்டுபண்ணும். அடிக்கடி இந்த இடங்களில் துடிப்பு உண்டாகும். இது வாயுவின் சீற்றத்தால் ஏற்படுகிறது. இந்த நோயில் வாதம் கபம் இரண்டும் சீற்றம் அடைவதால் சோம்பல் உடல்பளு உணவில் சுவையின்மை என்பனவும் மேலும் மேற்கூறிய இலக்கணங்களும் ஏற்படும். 56

### 37. [2] கல்லியின் இலக்கணம்

கால் முழங்கால் பாதம் ஆடுசதை தொடை கைகளின் அடிபாகம் இவற்றில் சீற்றமடைந்த வாயு, பிசைந்து விடுவது போன்றவேதனையையும் செயல் முடக்கத்தையும் ஏற்படுத்துகிறது. இதைக் கல்லி என்று சொல்கிறோம். இங்குக் குறிப்

1. ஏகாங்ரோகம்—இது பக்கவாதம் எனப்படும்.
2. கல்லி—நடக்கும்பொழுது காலை பின்னால் சுண்டி இழுக்கும் நோய்.

பிடப்படாத எஞ்சியுள்ள நோய்களைப் பற்றி ஸூத்ரஸ்தானத்தில் கூறப்பட்டுள்ளது. அந்நோய்களை இடம் பெயர் இலக்கணம் இவற்றிற்கு ஏற்றவாறு புரிந்து கொள்ள வேண்டும். 57

வாத நோய்கள் அனைத்திலும் பித்தமும் கபமும் துணையாக இருக்கும். அவற்றின் இலக்கணங்களை அந்தந்த தோஷங்களின் நிலையைக் கொண்டு அறிந்து கொள்ள வேண்டும். தாதுக்களின் குறைபாட்டினாலும் வாயு செல்லும் வழி தடைப்படுவதனாலும் வாயு சீற்றமடைகிறது. 58

உடலில் வாதம் பித்தம் கபம் இம்மூன்றுதோஷங்களும் [1]ஸ்ரோதஸ்ஸுகளில் கேடடையாமல் பின் தொடர்கின்றன. அவற்றுள் மிக நுட்பமாக இருக்கும் காரணத்தால் வாயு தான் பித்தத்தையும் கபத்தையும் தூண்டிவிடுகிறது. சீற்றமடைந்த வாயு, பித்தத்தையும் கபத்தையும் கிளப்பிவிட்டு உடலில் வெவ்வேறான இடங்களில் இழுத்துச் சென்று நோயை உண்டாக்குகிறது. செல்லும் வழி தடைப்படுவதனால் ரஸம் முதலிய தாதுக்களை உலர்த்தக் கூடியதாகவும் அது ஆகிறது. 59–60

## 38. பித்தத்தினால் சூழப்பட்ட வாயுவின் இலக்கணம்

உடல் முழுவதும் எரிச்சல் மிக்கநாவறட்சி வயிற்றில் குத்தல் வலி தலைசுற்றல் கண்பார்வை மறைதல் கார்ப்பு புளிப்பு உப்புச் சுவையும் உஷ்ணவீர்யமும் பொருந்திய பொருள்களை உண்பதனால் எரிச்சல் ஏற்படுதல் குளுமையான பொருள்களைப் பயன்படுத்துவதில் அவா என்பவை பித்தத்தினால் சூழப்பட்ட வாயுவின் இலக்கணங்களாகும். 61

## 39. கபத்தினால் சூழப்பட்ட வாயுவின் இலக்கணம்

கபத்தினால் சூழப்பட்ட வாயு, உடலில் குளுமை பளு வேதனை இவற்றை ஏற்படுத்தும். அதிக அளவில் கார்ப்பு புளிப்பு உப்பு உஷ்ணவீர்யம் கொண்ட பொருள்களைப் பயன்படுத்துவதால் நோய் தணிவடைகிறது. பட்டினி கிடத்தல் உழைப்பு வறட்சி உஷ்ணம் இவைகளில் அவா அதிகமாக ஏற்படும். 62

1. ஸ்ரோதஸ்கள்—துவாரங்கள்

## 40. இரத்தம் சூழ்ந்த வாயுவின் இலக்கணம்

இரத்தத்தினால் சூழப்பட்ட வாயு, தோல் மாமிசம் இவற்றின் நடுப்பகுதி இவற்றில் அதிகமான எரிச்சலையும் வேதனையையும் தோற்றுவிக்கும். சிவப்பு நிறமுள்ள வீக்கத்தையும் நிற வட்டங்களையும் தோற்றுவிக்கும். 63

## 41. மாமிசத்தால் சூழப்பட்ட வாயுவின் இலக்கணம்

மாமிசம் சூழ்ந்துள்ளவாயு, கடினமான நிறமாற்றமுள்ள சிறிய சிறிய கட்டிகள் வீக்கம் மயிர்க்கூச்சல் எறும்புஊர்தல் போன்ற உணர்ச்சி ஆகியவற்றை ஏற்படுத்தும். 64

## 42. மேதஸில் (கொழுப்பு) சூழ்ந்த வாயுவின் இலக்கணம்

கொழுப்பில் சூழ்ந்துள்ள வாயு, உடல்உறுப்புகளில் அசைவு எண்ணெய்ப்பசை மென்மைத்தன்மை குளிர்ச்சி வீக்கம் உணவில் சுவையின்மை எனும் இவற்றைத் தோற்றுவிக்கும். இவை மிகவும் சிரமப்பட்டு சிகிச்சை செய்ய வேண்டியவை ஆகும். இவற்றை ஆட்யவாதம் என்றும் சொல்கின்றனர். 65

## 43. எலும்பில் சூழ்ந்துள்ள வாயுவின் இலக்கணம்

சூடான தொடுவுணர்ச்சி உறுப்புகளைக் கைகளால் பிடித்து விட வேண்டுமென்னும் அவா உறுப்புகள் முறிந்து போவது போன்ற வேதனை ஊசிகளால் குத்துவது போன்ற பொறுக்க முடியாத அதிகமான துன்பம் இவை எலும்பில் சூழ்ந்துள்ள வாயுவின் இலக்கணங்களாகும். 66

## 44. மஜ்ஜையில் சூழ்ந்துள்ள வாயுவின் இலக்கணம்

[1]மஜ்ஜையில் சூழ்ந்துள்ள வாயு, உடலை முடங்கச்செய்தல் கொட்டாவி முறுக்குவது போன்ற வலி குத்தல்வலி இவைகளை ஏற்படுத்தும். கைகளால் பிடித்து விட்டால் நோயாளிக்கு ]ன்பம் ஏற்படும். 67

## 45. விந்துவில் சூழ்ந்துள்ள வாயுவின் இலக்கணம்

விந்துவில் சூழ்ந்துள்ள வாயு, விந்துவை வெளிப்படுத்தாது. அல்லது விந்துவில் அதிகவேகத்தை உண்டுபண்ணும். அல்லது விந்துவைப் பயனற்றதாக ஆக்கிவிடும்.

---

1. மஜ்ஜை—எலும்புக்குள் இருக்கும் சோறு.

## 46. உணவில் சூழ்ந்த வாயுவின் இலக்கணம்

உணவில் சூழ்ந்துள்ள வாயு, உணவு உண்டபிறகு வயிற்றில் வலி, உணவு சீரணமான பிறகு வலி தணிவடைதல் ஆகிய வற்றை ஏற்படுத்தும். 68

## 47. சிறுநீரில் சூழ்ந்துள்ள வாயுவின் இலக்கணம்

சிறுநீரில் சூழ்ந்துள்ள வாயு, சிறுநீரை வெளியேற்றாது சிறுநீர்ப்பையில் உப்புசத்தை ஏற்படுத்தும். 69

## 48. மலத்தில் சூழ்ந்துள்ள வாயுவின் இலக்கணம்

மலத்தில் சூழ்ந்துள்ள வாயு, மலத்தைத் தடைப்படுத்துதல் சீரணப்பையில் கத்தரியால் கத்தரிப்பது போன்ற வலி உணவு உண்டபிறகு அருந்திய எண்ணெயை விரைவில் சீரணிக்கச் செய்தல் உண்டபிறகு வயிற்றில் உப்புசம் உணவுடன் கூடி கஷ்டத்துடன் உலர்ந்த மலத்தை நேரம் கழித்து வெளியேற்றுதல் பின் தட்டுகள் தொடையிடுக்கு பின்பாகம் இவற்றில் வேதனை வாயு எப்பொழுதும் குறுக்காகச் செல்லுதல் இதயம் நல்லநிலையில் இல்லாமை என இவற்றைத் தோற்றுவிக்கும். 70—71

## 49. முக்கியமான வாத நோய்கள்

1. மூட்டுகள் தம்மிடத்திலிருந்து நகர்ந்து விடுதல். 2. தாடை அசைவற்று நின்று போவது 3. சுருங்கிப் போவது அல்லது திரும்பிப் போவது 4. கூனிப்போதல் 5. முகம் வாய் ஒரு பக்கமாகக் கோணிப்போதல் 6. பக்கவாதம் 7. உறுப்புகள் உலர்ந்து போதல் 8. நொண்டித்தன்மை 9. முழங்கால் மூட்டுகளில் வாயு சீற்றமடைந்து தோன்றக் கூடிய வாதரத்தநோய் 10. உடலுறுப்புகளை அசைவற்றுப்போகும்படி செய்தல் 11. தொடைகள் தூண்போல் பருத்து அசைவற்றுப்போதல் 12. கொழுப்பில் (மஜ்ஜை) தோன்றும் வாத நோய் 13. எலும்பில் தோன்றும் வாத நோய் ஆகிய இந்நோய்களுக்கு நோய் தோன்றிய இடம் அதன் வலிமை ஆகிய காரணத்தினால் மிகவும் கஷ்டப்பட்டுதான் சிகிச்சை செய்ய இயலும் அல்லது இந்நோய்கள் தீர்க்க இயலாதவைகளாகவும் ஆகிவிடும். புதியதாகத் தோன்றியவையும் வலிமையுள்ள நோயாளியிடமிருப்பவையும் துன்பங்களற்றவையுமான இந்நோய்கள் தீர்க்கக்கூடியவை.
72—74

## 50. வாத நோய்க்குப் பொதுவான சிகிச்சை

வாதத்தை நீக்கக் கூடிய சிறந்த சிகிச்சை முறைகளைக் கேட்பாயாக. மற்றதோஷங்களினால் சூழப்படாமல் வாதத்தினால் மட்டும் தோன்றிய நோய்க்கு முதன் முதலில் நெய் வஸை (தைலம்) எண்ணெய் மஜ்ஜை போன்ற எண்ணெய்களைக் கலந்து சிகிச்சை செய்ய வேண்டும். எண்ணெய்ப்பசை ஏற்பட்ட பிறகு மேலே கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப்பயன்படுத்த வேண்டும். 75

## 51. வாத நோயில் வஸ்தியைப் பயன்படுத்துதல்

முன் கூறிய முறைப்படி எண்ணெய்ச்சிகிச்சை செய்த பிறகு எண்ணெய் பருகியதனால்சோர்வடைந்தநோயாளியைத்தேற்றிப் பால் கஞ்சி கிராமங்களில் வாழும் அல்லது நீர் நிலைகளில் வாழும் அல்லது நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் உயிரினங்களின் பறவைகளின் மாமிசரஸங்களையாவது அல்லது மாதுளை போன்ற புளிப்புச் சுவையுள்ள பொருள்கள் இந்துப்பு நெய் போன்ற எண்ணெய்ப் பொருள்களையாவது சேர்த்துத் தயாரித்த பாயசம் அல்லது கிச்சடி இவைகளை உண்ணச் செய்தும் எண்ணெய் வஸ்தியைக் கொடுத்தும் மேலும் எண்ணெய்ப்பசையுள்ள மூக்கிலிடும் மருந்துகளை மூக்கிலிட்டு உடலுக்குத் திருப்தி ஏற்படக்கூடிய உணவு வகைகளை உண்ணச் செய்தும் எண்ணெய்ப்பசை உண்டாக்கும் சிகிச்சையைச் செய்ய வேண்டும். இவ்வாறு நன்முறையில் உடலில் எண்ணெய்ப்பசை ஏற்படுத்தியபிறகு வியர்ப்பிக்கும் சிகிச்சையை (ஸ்வேதசிகிச்சையை)ச் செய்ய வேண்டும். 76–77

## 52. வாதநோயில் வியர்ப்பித்தல்

நோயாளியின் உடல் முழுவதிலும் எண்ணெய்ப்பசை உண்டான பிறகு உடல் முழுவதிலும் அல்லது வாயு சீற்றமடைந்துள்ள இடத்திலும் வாதத்தை நீக்கக் கூடிய எண்ணெயை நன்றாகத் தேய்த்து எண்ணெயுடன் கூடிய [1]நாடீஸ்வேதம் [2]பிரஸ்தரஸ்

1. நாடீஸ்வேதம்—குழாய் வழியாக வேண்டிய அளவு சூடான திரவத்தை அல்லது ஆவியைச் செலுத்தி ஒற்றடம் தருவது.
2. பிரஸ்தரஸ்வேதம்—மருந்துப் பொருட்களைச் சூடாக்கி நிலத்திலோ கல்லிலோ பரப்பிவிட்டு அதன்மேல் நோயாளியைப் படுக்க வைத்து வியர்வையை உண்டாக்குவது.

வேதம் [1]ஸங்கரஸ்வேதம் மற்ற பலவகையான ஸூத்ரஸ்தானத்தில் கூறியுள்ள (ஸ்வேத) வியர்வைச் சிகிச்சை முறைகள் ஆகியவற்றையும் தேவைக்கு ஏற்றவாறு பயன்படுத்த வேண்டும். 78

## 53. எண்ணெய்ச் சிகிச்சை வியர்ப்பிக்கும் சிகிச்சை வற்றின் பயன்

நன்முறையில் கையாண்ட எண்ணெய்ச் சிகிச்சை வியர்வைச் சிகிச்சைகளால் மடங்கிய அல்லது அசைவற்றுப் போன நிலையிலுள்ள உறுப்புகளை உலர்ந்த சொம்பைப்போல தன்னுடைய விருப்பத்திற்கு ஏற்றவாறு மெள்ள மெள்ள வளைக்க முடியும். 79

## 54. வியர்வைச் சிகிச்சையின் பயன்

மயிர்க்கூச்சல் ஊசியால் குத்துவது போன்ற வலி உடல் முன்பக்கமாகவோ பின்பக்கமாகவோ வணங்கிவிடுதல் வீக்கம் அசைவற்றுப்போகும் தன்மை உறுப்புகளில் பிடிப்பு போன்ற வாத நோய்கள் விரைவில் தணிவடைந்து உறுப்புகளில் மென்மைத்தன்மையைத் தோற்றுவிக்கும். 80

## 55. எண்ணெய்ப்பசை உண்டாக்குவதன் பயன்

நன்முறையில் பயன்படுத்திய எண்ணெய் உலர்ந்துள்ள தாதுக்களுக்கு ஊட்டத்தை உண்டுபண்ணுகிறது. உடலில் வலிமை சடராக்கினி வளர்ச்சி செழிப்பு உயிராற்றலின் வளர்ச்சி ஆகியவற்றையும் தோற்றுவிக்கிறது. 81

## 56. அடிக்கடி எண்ணெய்ச் . சிகிச்சை வியர்வைச் சிகிச்சை செய்வதன் பயன்

வாத நோயுள்ளவனின் உடலுக்கு அடிக்கடி எண்ணெய்ச் சிகிச்சை வியர்வைச் சிகிச்சை செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதால் அவனுடைய வயிற்றுக்குள் உள்ள உறுப்புகள் மென்மைத் தன்மையை அடைகின்றன. வாத நோயும் நிலைத்து நிற்பதில்லை. 82

## 57. வாதநோயில் [2]மிருது விரேசனம்

அதிக தோஷங்களின் காரணத்தால் முன் கூறிய சிகிச்சை முறைகளைச் செய்தும் வாத நோய் தணியாவிடில் எண்ணெய்ப்

---

1. ஸங்கரஸ்வேதம்—மருந்துப் பொருட்களை ஒரு துணியில் சுற்றியோ சுற்றாமலோ உருண்டையாக்கி ஒற்றடம் கொடுத்து வியர்வையை உண்டாக்குவது.
2. மிருதுவிரேசனம்—மென்மையான மருந்துகளால் மலம் கழிக்கச் செய்தல்.

பசையுடன் கூடிய மிருதுவான மலங்கழிக்கச் செய்யும் பொருள் களில் தயாரித்த மருந்தினால் நோயாளிக்கு [1]சோதன சிகிச்சை செய்ய வேண்டும். 83

## 58. வாதநோயில் எளிதில் மலம் கழிக்கச் செய்தல்

1. தில்வககிருதத்தையோ 2. ஸாதலா கிருதத்தையோ பால் சேர்த்த விளக்கெண்ணெயையோ மலம் கழிக்கக் கொடுக்க வேண்டும். இம் மூன்று மருந்துகளும் தோஷங்களை அகற்றி நன்மையை அளிக்கக் கூடியவை. 84

## 59. வாதத்திற்கு (அனுலோமனத்தின்) நேராகச் செய்தலின் இன்றியமையாமை

எண்ணெய்ப்பசை புளிப்புச்சுவை உப்புச்சுவை உஷ்ண வீர்யம் ஆகியவற்றை கொண்ட உணவு வகைகளால் உடலில் ஒன்றாகச் சேர்ந்திருக்கிற மலம், ஸ்ரோதஸ்களைத் (துவாரங்கள்) நடைப்படுத்தி வாதத்தைத் தடுத்துவிடுகிறது. அதனால் வாயுவுக்கு [2]அனுலோமனம் (தாறுமாறாகச் செல்வதை நேராகச் செலுத்துதல்) செய்ய வேண்டும். 85

## 60. [3]நிரூஹவஸ்தியின் (கஷாய-வஸ்தியின்) உபயோகம்

வலிமை குறைந்தும் வாத நோயால் துன்புற்றும் இருக்கிற நோயாளிக்கு மலம் கழிக்கக் கொடுக்க இயலாவிடில் பாசன தீபன பொருள்களால் தயாரித்த நிரூஹவஸ்தியைக் கொடுக்க வேண்டும். மேலும் பாசன தீபன மருந்துகளை உணவில் சேர்த்து உண்ணக் கொடுக்க வேண்டும். 86

## 61. வாதநோயில் மூக்கிலிடும் மருந்து

தூய்மைப்படுத்தும் சிகிச்சையால் குடல் தூய்மை பெற்று [4]பாசன [5]தீபன மருந்துகளைப் பயன்படுத்திய பிறகு சடராக்கினி வளர்ச்சி பெற்ற பின் மறுபடியும் நோயாளிக்கு எண்ணெய்ச் சிகிச்சை வியர்ப்பிக்கும் சிகிச்சைகள் செய்விக்க வேண்டும். அவனை

---

1. சோதன சிகிச்சை—தூய்மைப்படுத்தும் சிகிச்சை
2. அனுலோமனம்—நேரான வழியில் சரியாக இயங்கச் செய்தல்
3. நிரூஹவஸ்தி—கஷாயவஸ்தி
4. பாசனம்—சீரணிக்கச் செய்வது.
5. தீபனம்—சடராக்கினியை வளர்க்கக் கூடியது.

எப்பொழுதும் இனிப்புச்சுவையும் புளிப்புச்சுவையும் உப்புச் சுவையும் எண்ணெய்ப்பசையும் கொண்ட உணவு வகைகளை உட்கொள்ளச் செய்ய வேண்டும். எல்லா வகையான வாத நோய்களிலும் முறைப்படி புகை பிடிக்கச் செய்தல் மிக்க நன்மையை அளிக்கவல்லது. இவ்வாறு வாத நோய்க்குப் பொது வான சிகிச்சை முறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. 87–88

## 62. [1]கோஷ்டத்தில் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

கோஷ்டத்தில் (வயிற்றுக்குள் உள்ள உறுப்புக்கள்) வாயு சீற்றம் பெற்றிருந்தால் காரப்பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். அல்லது [2]பாசன தீபனப் பொருள்களுடன் புளிப்புச் சுவையுள்ள பொருள்களைச் சேர்த்துப் பயன்படுத்தி மலத்தைப் பக்குவமடையச் செய்ய வேண்டும். 89

## 63. [3]குதம் [4]பக்குவாசயம் [5]ஆமாசயம் ல் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

மலம் வெளியேறும் குழாயில் அல்லது சீரணப்பையில் வாயு சீற்றம் பெற்றிருந்தால் [6]உதாவர்த்த நோயை நீக்கக் கூடிய சிகிச்சை நலம் தரும். உணவுப் பையில் சீற்றம் பெற்ற வாயு வுக்கு மலம் கழிக்கக் கொடுத்து உடலைத் தூய்மைப்படுத்தி தோஷங்களுக்குத் தகுந்தவாறு சிகிச்சை செய்விக்க வேண்டும். 90

## 64. உடல் முழுவதும் சீற்றமடைந்த வாயுவுக்கு வஸ்தி

உடல் முழுவதும் சீற்றமடைந்த வாயுவுக்கு வாதத்தைப் போக்கக்கூடிய தைலங்களால் எண்ணெய்க் குளியலையும் எண்ணெய்வஸ்தியுடன் கூட கஷாய வஸ்தியையும் பயன்படுத்த வேண்டும். வாயு, தோலில் சீற்றமடைந்திருந்தால் வியர்ப்பித்

1. கோஷ்டம்—வயிற்றுக்குள் இருக்கும் உறுப்பு.
2. பாசனம்—சீரணிக்கச் செய்வது
   தீபனம்—சடராக்கினியை வளர்க்கக் கூடியது.
3. குதம்—மலத்வாரம்(மலக்குடல்)
4. பக்குவாசயம்—சீரணப்பை
5. ஆமாசயம்—உணவுப்பை
6. உதாவர்த்தம்—(பக்குவாசயத்தில்) ஜீரணப்பையில் வாயு சீற்றமடைந்து, எதிர் முகமாக மேல் நோக்கிப் பரவி, அங்கு வலியையும், அஜீரணத்தையும், மலம் வெளிப் படாமையும் தோற்றுவித்துத் துன்பம் அளிக்கும் நோய்.

தல் எண்ணெய்க்குளியல் அமிழ்ந்து மூழ்குதல் இவைகளுடன் இதயத்திற்கு நன்மை பயக்க வல்ல உணவுகளையும் பயன் படுத்தச் செய்க. 91

## 65. இரத்தத்தில் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

விரேசனம் இரத்தத்தை வெளியேற்றுதல் குளிர்ச்சியான மேற்பூச்சு இவைகளை இரத்தத்தில் சீற்றமடைந்த வாயுவுக்குப் பயன்படுத்த வேண்டும்.

## 66. மாமிசத்திலும் கொழுப்பிலும் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

[1]விரேசனம் (நிரூஹவஸ்தி) கஷாய வஸ்தி சமனப்படுத்தும் சிகிச்சை இம்முறைகளை மாமிசத்திலும் கொழுப்பிலும் மேதஸிலும் சீற்றமடைந்த வாயுவுக்குக் கையாள வேண்டும். 92

## 67. எலும்பிலும் [2]மஜ்ஜையிலும் சீற்றமடைந்த வாயுவுக்குச்சிகிச்சை

வாதத்தைப் போக்கக் கூடிய தைலங்களை உடலில் தேய்த்தும் வாதத்தைப் போக்கக்கூடிய நெய் அல்லது எண்ணெயையோ உள்ளுக்கு கொடுத்தும் எலும்பிலும் மஜ்ஜை யிலும் சீற்றமடைந்த வாயுவைத் தணிவடையச் செய்ய வேண்டும்.

## 68. விந்துவில் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

மகிழ்ச்சியூட்டக் கூடியவையையும் வலிமையளிக்கக்கூடியவையையும் விந்துவைத் தோற்றுவிக்கக் கூடியவையுமான உணவு நீர் வகைகளை விந்துவில் சீற்றம் அடைந்த வாயுவுக்குக் கொடுக்க மிக்க நன்மை தரும். 93

விந்து வெளிவராது தடைப்பட்டிருக்குமானால் பேதியாக மருந்து கொடுக்க வேண்டும். பிறகு [3]ஸம்ஸர்ஜன முறையினால் உடலுக்குச் செழிப்புஏற்படுத்தி நோயாளி இயற்கையான உணவை உண்ண ஆரம்பித்த பிறகு முன்பு கூறிய வலிமைக்கும் விந்து வளர்ச்சிக்கும் கொடுக்க வேண்டிய மருந்துகளைப் பயன்படுத்தச் செய்ய வேண்டும். 94

---

1. விரேசனம்—மலம் கழிக்கச் செய்தல்.
2. மஜ்ஜை—எலும்புக்குள் உள்ள சோறு.
3. ஸம்ஸர்ஜன முறை—கஞ்சி பருகும் முறைகள்.

### 69. கருப்பையில் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

கருப்பையில் சீற்றம் பெற்ற வாயு கருவை உலர்த்திவிடும். இந்நிலையில் கற்கண்டு அதிமதுரம் குமிழம்பட்டை இவற்றின் விழுதைக் கொண்டு முறைப்படி தயாரித்த பால் கஷாயத்தைப் பயன்படுத்தவேண்டும். சிறுவர்கள் நாள்தோறும் உடல் இளைத்துவரும்போதும் இதைப்பயன் படுத்தினால் உலர்ந்த உறுப்புகள் வளர்ச்சியடையும். 95

### 70. இதயம் தொப்புள் வற்றில் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

இதயத்தில் சீற்றமடைந்தவாயுவுக்குமூவிலையின் விழுதால் முறைப்படி தயாரித்த பால் நலம் பயக்கும். தொப்புளில் சீற்றம் அடைந்த வாயுவுக்கு வில்வக்காய்கருப்பு சேர்த்துப் பக்குவம் செய்த மீன்களைப் பயன்படுத்தவேண்டும். 96

### 71. உடல் முழுவ ம் ஒருறுப்பிலும் சீற்றமடைந்த வாயுவுக்குச் சிகிச்சை

வாயு ஒருறுப்பில் அல்லது உடல் முழுவதும் சீற்றம் பெற்றிருந்தால் முறுக்குவதற்கு ஒப்பான வலி (துன்பம்) உண்டாகும். அதற்கு ஒற்றடம் கொடுக்க வேண்டும். உடல் முழுவதிலும் சீற்றமடைந்த வாயுவால் உறுப்புகளில் முடக்கம் ஏற்பட்டிருந்தால் உளுந்தையும் இந்துப்பையும் சமஅளவு சேர்த்து முறைப்படி தயாரித்த எண்ணெயினால் எண்ணெய்க்குளியல் செய்விக்க வேண்டும். 97

### 72. தோள்பட்டை, தலை, தொப்புள் பகுதி இவற்றில் சீற்றம் அடைந்த வாயுவிற்குச் சிகிச்சை

தோள்பட்டை அல்லது தலையில் வாயு சீற்றம் அடைந்திருந்தால் தோன்றும் நோய்க்கு வாதத்தை நீக்கக்கூடிய பொருள்களால் தயாரித்த எண்ணெயை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். உணவிற்குப் பிறகு வாதத்தைப் போக்கக் கூடிய பொருள்களால் தயாரித்த நெய்யையோ எண்ணெயையோ மருந்தாகப் பருகக் கொடுக்க வேண்டும். தொப்புளுக்குக் கீழ்ப் பகுதியில் சீற்றமடைந்த வாயுவிற்கு வஸ்தியையும், *அவபீடனத்தையும் பயன்படுத்த வேண்டும். 98

---

* அவபீடனம்—உணவு உண்பதற்கு முன்பும், உண்ட பிறகும் நெய், எண்ணெய் முதலிய மருந்துகளைப் பயன்படுத்தும் எண்ணெய் குடி முறை.

## 73. [1]அர்திதவாதநோய்க்குச் சிகிச்சை

அர்திந வாத நோய்க்கு மூக்கில் மருந்திடுதல், தலையில் எண்ணெயைத் தேக்கி வைத்தல், உடலுக்கு ஊட்டமளிக்கக் கூடிய உணவு, [2]நாடீஸ்வேதம், நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் பிராணிகளின் அல்லது பறவைகளின் மாமிசத்தால் ஒற்றடம் கொடுத்து அம்மாமிசத்தை வைத்துக் கட்டுதல் ஆகியவை சிறந்த முறைகளாகும். 99

## 74. பக்கவாதத்திற்குச் சிகிச்சை

பக்கவாதத்திற்கு உடலை வியர்ப்பிக்கச்செய்து பேதியாகச் செய்யும் பொருள்களுடன் எண்ணெயைச் சேர்த்து மலம் கழிக்கக் கொடுக்க வேண்டும்.

## 75. கிருத்தரஸி (காலை இழுத்து இழுத்து நடக்கும் ஒரு வித வாத நோய்) சிகிச்சை

கிருத்ரஸி நோயில் தசைநார்களுக்கும் குதிகாலுக்கும் நடுவில் உள்ள நரம்பைக்கீறி ரத்தத்தை வெளியேற்றி நெருப்பால் சூடுபோடுதல் எண்ணெய்வஸ்தி கஷாய வஸ்திகளைப் பயன்படுத்தல் ஆகிய இம்முறைகளைக் கையாள வேண்டும்.

## 76. கல்லி (நடக்கும்போது காலைப் பின்னால் சுண்டி இழுத்தல்) நோய்க்குச் சிகிச்சை

கல்லி நோய்க்குப் பாயசத்தில் அல்லது அரிசிமாவும் வறுத்த எள்ளும் சேர்த்துச் செய்த சிற்றுண்டியில் எண்ணெயும் நெய்யும் சேர்த்துச் சூடாக்கிக் கொண்டு அதனால் ஒற்றடம் கொடுத்துப் பிறகு அம்மாவினை வைத்துக் கட்ட வேண்டும். மாமிசத்தை எண்ணெய், நெய் சேர்த்துச் சூடாக்கி அதனால் ஒற்றடம் கொடுத்து அதை வைத்துக் கட்டவேண்டும். 100-101

## 77. திறந்தவாறுள்ள முகவாய் தாடைக்குச் சிகிச்சை

தாடை திறந்தபடியே உள்ள [3]ஹநுஸ்தம்பநோயில் தாடைக்கு வியர்வை சிகிச்சை செய்து நன்றாக வியர்த்த பிறகு

---

1. அர்திதம்—வாய் முகம், தாடை ஆகியவை ஒரு பக்கமாகக் கோணிப் போதல்.
2. நாடீஸ்வேதம்—குழாய் வழி ஆவியைச் செலுத்தி ஒற்றடம் தருதல்.
3. ஹநுஸ்தம்பம்—முகவாய்க்கட்டை அசையாமல் இருத்தல்.

தொங்கும் முகவாயைக் கட்டை விரலால் அழுத்திக் கொண்டு ஆள்காட்டி விரலை மேல்தாடையின் இருபுறத்திலும் அழுத்திப் பிடித்துக்கொண்டு முகவாய்க்கட்டையைத் தூக்கிப் பொருத்தி வைக்க வேண்டும். தாடை தன் இடத்தை விட்டுக் கீழ்பக்க மாக நழுவியிருந்தால் அதைத்தூக்கிச் சரியாகப் பொருத்தி வைக்க வேண்டும். தாடை அசைவற்று நின்றிருந்தால் வியர்ப் பிக்கும் சிகிச்சை செய்து அதை மேலே தூக்கி மேலும் கீழும் அசையச் செய்து பொருந்தி வைக்க வேண்டும்.

)ங்கு சில வாதநோய்க்குச் சிகிச்சைகள் சொல்லப்பட்டன. சொல்லப்படாத வாத நோய்களுக்கு இடம் தோஷங்கள் [1]தூஷ் யங்கள் இவற்றின் நிலை மாறுபாடுகளுக்கு ஏற்றவாறு சிகிச்சை செய்யவேண்டும். 102—103

## 78. வாதநோயில் உணவுப் பழக்க வழக்கங்கள்

வாதநோயினால் துன்புறும் நோயாளிக்கு நெய் எண்ணெய் வஸை மஜ்ஜை இவற்றை ஊற்றுதல் எண்ணெய் தேய்த்துப்பிடித்து விடுதல் எண்ணெய் வஸ்தி கஷாயவஸ்தி எண்ணெய்ப்பசை உண்டாக்குதல் வியர்ப்பித்தல் அதிகக் காற்றில்லாத இடத்தில் வசிக்கச் செய்தல் சூடுள்ள துணியால் உடலைப் போர்த்திக் கொள்ளச்செய்தல் அல்லது காற்றுப்புகாத அறையில் வசிக்கச் செய்தல் மாமிசரஸத்தைப்பருகச் செய்தல் பால் பருகச் செய்தல் இனிப்பு புளிப்பு உப்புச் சுவைகளுள்ள உணவுப்பொருள் களைப் பயன்படுத்தல் மற்றும் உடலைச் செழிக்கச் செய்யும் உணவுகளை உண்ணச்செய்தல் என்பன யாவும் சிறந்தவை. 104—105

## 79. வாதநோயில் மாமிசரஸத்தின் பயன்

சித்தாமுட்டி [2]பெரும்பஞ்சமூலம் அல்லது [3]தசமூலம் இவற் றின் கஷாயத்தில் ஆட்டு மூளையின் மாமிசம் நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் பிராணி அல்லது பறவைகளின் மாமிசம் மாமிசத்தைத் தின்னும் பிராணிகளின் மாமிசம் இவற்றைத் தனித்

1. தூஷ்யங்கள்—சப்ததாதுக்களான ரஸம், ரத்தம், மாமிசம், கொழுப்பு, எலும்புக்குள் உள்ள சோறு, எலும்பு, விந்து
2. பெரும்பஞ்சமூலம்—பில்வம் முன்னை பெருவாகை பாதிரி குமிழம்.
3. தசமூலம்—கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி ஓரிலை மூவிலை நெருஞ்சில் வில்வம் முன்னை பெருவாகை பாதிரி குமிழம்.

தனியாக முறைப்படி க்வாதம் (கஷாயம்) செய்த மாமிசரஸத்தில் நெய் சேர்த்துப் பக்குவம் செய்யவேண்டும். பக்குவமாகும் நேரத்தில் தயிர் சுக்கு மிளகு திப்பிலி இவற்றின் தூளையும் தகுந்த அளவு உப்பையும் சேர்க்க வேண்டும். இவ்வாறான உணவை வாத நோயினால் துன்புறுபவர்களுக்குப் பயன்படுத்த வேண்டும். 106–107

## 80. வாத நோயில் புலால் ஒற்றடம்

மேலே கூறிய பிராணிகளுடைய மாமிசத்தை இடித்துக் கொதிக்க வைத்து எலும்பை நீக்கி நெய் எண்ணெய் காடி இவற்றுடன் சேர்த்து வாதநோயால் துன்புறுகிற நோயாளியின் உறுப்புகளின் மீது ஒற்றடம் கொடுத்துப்பிறகு அதை வைத்துக் கட்ட வேண்டும். 108

## 81. வாதத்தைப் போக்கும் பொருள்களில் மூழ்குதல்

வாதநோயால் துன்புறும் நோயாளியை 1) வாதத்தை நீக்கக் கூடிய இலைகளின் கஷாயம் 2) வாதத்தைப் போக்கக்கூடிய பொருள்களால் முறைப்படி தயாரித்த பால் 3) வாதத்தை நீக்கக் கூடிய பொருள்களால் முறைப்படி தயாரித்த எண்ணெய் இம்மூன்றில் ஏதாவது ஒன்றினால் நிரப்பப்பட்ட தொட்டியில் இருக்கச் செய்து மூழ்கச் செய்ய வேண்டும். மேலும் வாத நோயால் துன்புறுகிற நோயாளி தன்னுடைய உடலில் வாதத்தைப் போக்கக் கூடிய பொருள்களால் தயாரித்த எண்ணெயைப் பூசி பிடித்து விட்டுக் கொண்டு வாதத்தைப் போக்கக் கூடிய பொருள்களால் தயாரித்த கஷாயத்தை உடலில் ஊற்றிக் கொள்ள வேண்டும். 109

## 82. வாத நோயில் *நாடீஸ்வேதம்

நீர்ப்பாங்கான இடத்தில் வசிக்கின்ற பிராணிகள் அல்லது பறவைகளின் மாமிசம் நீரில் வாழும் மீன் ஆமை போன்றவைகளின் மாமிசம் தசமூலம் தண்ணீர் விட்டான் கிழங்கு கொள்ளு புளிப்புஇலந்தை உளுந்து எள் சித்தரத்தை யவஅரிசி சித்தாமுட்டி வசை புளிப்புத்தயிர் காடி இவ்வெல்லாப் பொருள்களையும் பானையிலிட்டுத் தண்ணீர் விட்டுக் கொதிக்க வைத்து பாதியளவு ஆனபிறகு இறக்கி வைத்து வாயை மூடி மூடியின்

நாடீஸ்வேதம்—குழாய் வழியாக ஆவியைச் செலுத்தி ஒற்றடம் தருவது.

நடுவில் சிறிய ஓட்டை செய்து வாதத்தை நீக்கக் கூடிய மரங்களின் பசுமையான இலைகளை யானைத்துதிக்கை போலச் செய்து அந்த ஓட்டையில் வைத்து அதன் வழியாக வெளி வருகிற ஆவியை வாத நோயால் துன்புறுகிறவனது உறுப்புகளில் மேல்படும்படி வைத்து வியர்ப்பிக்கச் செய்யவேண்டும். அல்லது மேற்கூறிய பொருள்களை இடித்து ஒற்றடம் கொடுத்துக்கட்ட வேண்டும். ஒற்றடம் கொடுப்பதற்கு மாமிசரஸத்தைத் தண்ணீரில் கொதிக்க வைத்து எடுத்துக் கொள்ளவேண்டும். அல்லது மேற்கூறிய பொருள்களின் கஷாயம் விழுது இவற்றால் முறைப்படி தயார் செய்த நெய்யை உடல்மேல் பூசவும் பருகவும் கொடுக்க வேண்டும். மேற்படி எண்ணெயை உடம்பில் பூசிப் பிடித்து விடச் செய்ய வேண்டும். 110—112

## 83. வாத நோய்க்கு ஒற்றடம்

கோரைக்கிழங்கு ஸுரையின் வண்டல் எள் கோஷ்டம் தேவதாரு உப்பு தகரவிதை இவற்றின் தூளில் தயிர் பால் நெய் வஸை மஜ்ஜை எண்ணெய் இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்க. கெட்டியான பிறகு இதைக்கொண்டு வாதநோயால் துன்புறும் உறுப்புகளில் ஒற்றடம் கொடுத்துப்பிறகு இதை வைத்துக்கட்ட வேண்டும். 113

## 84. கெட்டியான மேற்பூச்சு

*வேஸவாரம் பால் உளுந்து எள் சோறு ஆமணக்கு விதை கோதுமைமாவு யவஅரிசிமாவு புளிப்புஇலந்தை சிறுபஞ்ச மூலம் இப்பொருள்களை நன்றாக இடித்து விழுதாகச்செய்து நெய் எண்ணெய் சேர்த்து பிட்டாகச் செய்து சூடாக்கி அதனால் வாதநோய் உள்ள உறுப்புகளில் கனமாக மேற்பூச்சு பூசச் செய்ய வேண்டும். பிறகு அதன் மேல் புதியதான ஆமணக்கு இலையை வைத்து மாலையில் கட்டி மறுநாள்காலையில் அவிழ்த்து மருந்தை நீக்கிவிடச் செய்ய வேண்டும்.

* வேஸவாரம்—எலும்பு இன்றி மாமிச பிண்டத்தைத் சிறு சிறுதுண்டுகளாக்கி வேகவைத்து வெல்லம் நெய் அரிசித் திப்பிலி மிளகு இவற்றின் தூளைச் சேர்த்துத் தயார் செய்தபிட்டு.

பிறகு பாலையும் தண்ணீரையும் ஒன்றாகச் சேர்த்துச் சூடு செய்து அதனால் அந்த உறுப்பைக் கழுவி விட வேண்டும். பிறகு காலையில் மேற்சொன்ன பொருள்களால் மேற்பூச்சு பூசி உரோமத்துடன் கூடிய தோலால் கட்டிவிட வேண்டும். இக் கட்டைக் காலையில் கட்ட வேண்டும். மாலையில் அவிழ்த்து விட வேண்டும். 114-116

## 85. ஒற்றடம் கொடுத்தல்

எண்ணெய்ப்பசையுள்ள கடுகு எள் ஆளிவிதை போன்ற வித்துகளைக் காடியில் அரைத்துக் குழைத்து சூளுமையான மேற்பூச்சு பூசுதல் ஒற்றடம் கொடுத்துக் கட்டுதல் ஆகிய வற்றை செய்ய வேண்டும். வாதத்தைப் போக்கக் கூடிய வாசனை யுள்ள பொருள்களில் எண்ணெய் சேர்த்துப் பாயஸம் அல்லது வறுத்த எள்ளுடன் சேர்த்துப் பொடி செய்து கிச்சடிபோல் தயார் செய்து அதனால் சூளுமையான மேற்பூச்சு அல்லது ஒற்றடம் கொடுத்து கட்டுதலைச் செய்யவேண்டும். 117

வறட்சியான உடல்கொண்ட தனிப்பட்ட வாதத்தால் துன்புறுகிற நோயாளியின் உடலில் தோன்றுகிற பல்வகையான நோய்களைத் தணிக்கச் செய்ய அமுதத்திற்கு ஒப்பான பலவகை யான எண்ணெய்களைக் கூறுவோம். 118

## 86. தனிப்பட்ட வாத நோய்க்குத் [1]தசமூலாதிகிருதம்

தசமூலப் பொருள்கள் நான்கு பலம் புளிப்பு இலந்தை யவம் கொள்ளு ஒவ்வொன்றும் 16 பலம் இவற்றை 256 பலம் தண்ணீரில் இட்டுக் கஷாயமாக நான்கில் ஒரு பகுதி மிருந் திருக்கக் காய்ச்சி எடுத்து வைத்துக்கொள்க. [2]ஜீவனீய கூட்டுப் பொருள்கள் பத்து சர்க்கரை பேரீச்சங்காய் குமிழம் பட்டை திராட்சை இலந்தை (பல்கு) காட்டாத்தி இவை எல்லாவற்றை யும் விழுதாகச் செய்து அந்தக் கஷாயத்தில் சேர்க்கவும். பசும் பால் 16 பலமும் நெய் 16 பலமும் சேர்த்து முறைப்படி பக்குவம்

1. தசமூலம்—கண்டங்கத்திரி முள்ளுக்கத்திரி ஓரிலை மூவிலை நெருஞ்சில் வில்வம் முன்னை பெருவாகை பாதிரி குமிழம்.
2. ஜீவனீய கூட்டுப்பொருள்கள்—ஜீவகம் ரிஷபகம் மேதா மகாமேதா காகோலி க்ஷீரகாகோலி காட்டுப்பயறு காட்டுஉளுந்து கீரைப்பாலை அதிமதுரம்.

செய்க. இந்த நெய் தனியாக வாதத்தினால் தோன்றிய வாத நோய்களைத் தீர்க்கும். இதைப் பருகுவதற்கும் எண்ணெய்க் குளியலுக்கும் வஸ்திக்கும் பயன்படுத்தலாம். இந்த நெய் எந்த விதமான தீங்கையும் தோற்றுவிக்காது. 119–121

## 87. [1] சித்ரகாதி கிருதம்.

கொடிவேலி சுக்கு சித்தரத்தை புஷ்கரமூலம் திப்பிலி பூலாங்கிழங்கு இவற்றைச் சம அளவு எடுத்து விழுதாகச் செய்து முறைப்படி தயார் செய்த நெய் வாத நோயைத் தீர்ப்பதற்குச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. 122

## 88. [2] பலாதி கிருதம்

சித்தாமுட்டி வில்வம் இவற்றின் கஷாயத்தில் பாலையும் நெய்யையும் சேர்த்து முறைப்படி நெய் தயார் செய்க. இந்த நெய்யை தலையிலுள்ள வாத நோய்க்குத் துளித்துளியாக ஒரு தோலா அளவு மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்துக. 123

## 89. தசமூலாதி மஜ்ஜஸ்நேஹம்

கிராமங்களில் வாழும் ஆடு மாடு போன்றவை நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் பன்றி எருமை போன்றவை நீரில் வாழும் மீன் போன்ற பிராணிகள் இவற்றின் எலும்பை நசுக்கித் தண்ணீரில் பக்குவம் செய்து அவற்றிலிருந்து எடுக்கப்பட்ட எண்ணெயில் தசமூலப்பொருள்களில் தயாரித்த கஷாயம் ஜீவகம் ரிஷபகம் நன்னாரி முதுக்கன்கிழங்கு பூனைக்காலி மற்றும் வாதத்தைப் போக்கக் கூடிய பொருள்கள் ஜீவனீய கூட்டுப் பொருள்கள் பத்து இவற்றைச் சேர்த்துவிழுதாகச் செய்து அதற்கு இரண்டு மடங்கு பால் சேர்த்து மறுபடியும் பக்குவம் செய்க. நன்றாகப் பக்குவமான இந்த எண்ணெயை மூக்கில் இடும் மருந்தாகவும் எண்ணெய்க்குளியலுக்கும் பருகுவதற்கும் எண்ணெய் வஸ்திக்கும் பயன்படுத்தலாம். இது ஸிரை எலும்பு [3]கோஷ்டம் இவற்றில் சீற்றமடைந்த வாயுவை விரைவில் நீக்குகிறது. மஜ்ஜை குறைந்தவர்களுக்கும் விந்து ஓஜஸ் இவை குறைந்தவர்களுக்கும் இந்த எண்ணெய் வலிமையையும்செழிப்பையும் கொடுக்கவல்லது. அமுதத்திற்கு ஒப்பான பயனையும் அளிக்கவல்லது. 124–127

---

1. சித்ரகா—கொடிவேலி.
2. பலா—சித்தாமுட்டி
3. கோஷ்டம்—இரைப்பை, குடல் முதலிய உள்ளுறுப்புகள்

மேலும் இவ்வாறு முதலை மீன் ஆமை சுலூகம் என்கிற மீன் இவற்றின் வஸையையும் தயார் செய்து மூக்கிலிடும் மருந்தாகவும் பருகவும் பயன்படுத்தலாம். 128

## 90. திரிபலா *சதுஸ்நேஹம் அல்லது மகாஸ்நேஹம்

[1]திரிபலை 16 பலம் கொள்ளு நான்கு பலம் முருங்கையின் பட்டை 5 பலம் துவரை 5 பலம் சித்தரத்தை 2 பலம் கொடிவேலி 2 பலம் தசமூலம் 1 பலம் இவையெல்லாவற்றையும் இடித்து 256 பலம் தண்ணீரில் இட்டுக் காய்ச்சி நான்கில் ஒரு பகுதி மிகுந்துள்ள அதை வடிகட்டி அதில் ஸுரை காடி புளிப்புத் தயிர் ஸௌவீரம் என்னும் காடி துஷோதகம் புளிப்பு இலந்தைரஸம் புளிப்புமாதுளைரஸம் புளிரஸம் எண்ணெய் வஸை நெய் மஜ்ஜை பால் இவை ஒவ்வொன்றும் பதினாறு பலம் வீதம் ஜீவனீய கூட்டுப் பொருள் பத்து ஒவ்வொன்றும் ஆறு பலம் வீதமும் கொண்டு விழுதாகச் செய்து இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்க. முறைப்படி தயார் செய்த இந்த சதுஸ்நேஹத்தை, அல்லது மஹாஸ்நேஹத்தை விரை மஜ்ஜை எலும்பு இவற்றில் சீற்றமடைந்த வாயு உடல் முழுவதும் சீற்றமடைந்துள்ள வாயு உடலில் எங்கேயாவது ஒருறுப்பில் தோன்றியுள்ள வாத நோய் உடல் நடுக்கம் [2]ஆக்ஷேபகம் வலி இவற்றிற்கு மேற்பூச்சாகப் பூசிப் பிடித்து விடப் பயன்படுத்த வேண்டும். 129–133

## 91. [3]நிர்குண்டி தைலம்

நொச்சியின்வேர் இலை இவற்றின் ஸ்வரஸம் (சாறு) எடுத்து அதற்குச் சமமாக எண்ணெய் சேர்த்து முறைப்படி தைலம் தயாரிக்க வேண்டும். புரையோடின விரணம் குஷ்டம் வாதத்தினால் தோன்றிய வேதனை பாமா அபசீ போன்ற நோய்கள் ஆகியவற்றில் பருகுவதற்கும் எண்ணெய்க்குளியலுக்கும் நிரப்புவதற்கும் பயன்படுத்தலாம். பருத்திக் கொட்டை கொள்ளு இவற்றின் கஷாயத்தில் எண்ணெய் சேர்த்து முறைப்படி தயார் செய்த தைலம் வாத நோயை நீக்கும். 134–135

---

* சதுஸ்நேகம்—நெய், எண்ணெய், நிணநீர், எலும்புக்குள் உள்ள சோறு.

1. திரிபலை—கடுக்காய், நெல்லிக்காய் தான்றிக்காய்.
2. ஆக்ஷேபகம்—உதறுதல்.
3. நிர்குண்டி—நொச்சி

## 92. [1]மூலகதைலம்

முள்ளங்கிச் சாற்றுடன் சம அளவு பால் சேர்த்து அத்துடன் தயிரையும் சேர்த்து மூன்று நாட்கள் வைக்க வேண்டும். மூன்று நாட்கள் கழித்து புளித்துத்போன (காடியான) அத்துடன் அதிமதுரம் சர்க்கரை சித்தரத்தை இந்துப்பு சுக்கு இவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் எடுத்து விழுதாகச் செய்து 16 பலம் நல்லெண்ணெயுடன் எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து முறைப்படி தைலம் தயாரிக்கவும். இத்தைலத்தைப் பருகவும் தேய்த்துக் குளிக்கவும் பயன்படுத்தினால் வாதநோய் நீங்கும். 136–137

## 93. [2]பஞ்ச மூல தைலம்

சிறுபஞ்சமூலகஷாயத்தில் பல வருடங்கள் பழமையான எள்ளுப் பிண்ணாக்கைச் சேர்த்து காய்ச்சி வடிகட்டி எடுத்துக் கொள்க. அதில் 128 பலம் பால் 16 பலம் நல்லெண்ணெய் சேர்த்து முறைப்படி தைலம் தயார் செய்க. இது எல்லா விதமான வாதங்களையும் போக்கும். கபத்தைத் துணையாகக் கொண்ட வாத நோய்க்கும் சிறந்தது. 138–139

## 94. [3]யவகோலாதி தைலம்

யவஅரிசி இலந்தை கொள்ளு ஆனைத்திப்பிலி உலர்ந்த முள்ளங்கி வில்வப்பழத்தின்தோல் இவற்றைச் சம அளவு கொண்டு எண்ணெய் ஒரு மடங்கும் எண்ணெயைக் காட்டிலும் புளிப்புக் காடி எட்டு மடங்கும் சேர்ந்த கஷாயத்தில் புளிப்புச் சுவையுள்ள பழங்கள் கார்ப்புச் சுவையுள்ள பொருள்கள் இவற்றின் விழுதைச் சேர்த்து தயார் செய்த எண்ணெயைக் குளிர்காலத்தில் மிகவும் கொடுமையான வீங்கிய வாத நோயில் பயன்படுத்த வேண்டும். 140–141

## 95. வேறு வகை எண்ணெய்கள்

எல்லாவித வாதநோய்களிலும் பருகுவதற்கும் மூக்கிலிடுவதற்கும் எண்ணெய்க் குளியலுக்கும் எண்ணெய் வஸ்திக்கும் பயன்படுத்தக் கூடியவையும், ஆயுளுக்கு நன்மையளிக்கக் கூடியவையும் வலிமையையும் நிறத்தையும் கொடுக்கக் கூடியவை

---

1. மூலகம்–முள்ளங்கி
2. சிறுபஞ்சமூலம்–கண்டங்கத்திரி, முள்ளுக்கத்திரி, ஓரிலை மூவிலை நெரிஞ்சில்.
3. கோலம்–இலந்தை.

யும் மாதவிடாய் தோஷம் விந்துதோஷம் இவற்றைப் போக்கக் கூடியவையும் மகப்பேற்றை உண்டாக்கக்கூடியவையும் தீமையைத் தோற்றுவிக்காத எல்லா தோஷங்களையும் நீக்கு வதில் சிறந்தவையுமான மற்ற எண்ணெய் வகைகளைச் சொல் கிறேன், கேட்பாயாக. 142–143

## 96. ஸஹசரதைலம்

ஸஹசரமரத்தின் வேரின் சாறு 1 துலாம் (100 பலம்) எடுத்து எட்டு மடங்கு தண்ணீர் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சுக. நான்கில் ஒரு பங்குகாய்ச்சி மிகுதியான இந்தக் கஷாயத்தை வடிகட்டி அதில் ஸஹசரமரத்தின் வேரின் விழுது பத்து பலம் எண்ணெய் 64 பலம் எண்ணெய்க்கு நான்கு மடங்கு பால் எல்லாவற்றையும் சேர்த்து முறைப்படி தைலம் தயார் செய்க. நன்றாகப் பக்குவமான அந்தத் தைலத்தில் 18 பலம் சர்க்கரையைச் சேர்க்கவும், இத்தைலத்தைக் கடுமையான வாத நோயில் பயன்படுத்த வேண்டும். 144–145

## 97. நெருஞ்சில் [1](ச்வதம்ஷ்ட்ரா) தைலம்

நெருஞ்சில் சாறு 32 பலம் பால் 32 பலம் சுக்குவிழுது 6 பலம் வெல்லம் 8 பலம் எண்ணெய் 16 பலம் இவற்றை ஒன்றாகச் சேர்த்து முறைப்படி தயார் செய்த எண்ணெய் எல்லாவிதமான வாத நோய்களையும் போக்கும். இது சீரணமான பிறகு பாலுடன் கஞ்சி வகைகளையும் உண்ணக் கொடுப்பது சிறந்தது. 146–147.

## 98. [2]பலாதைலம்

சித்தாமுட்டி 100 பலம் சீந்தில் கொடி 25 பலம் சித்த ரத்தை 12.5 பலம் இவற்றை 100 ஆடகம் (ஒரு ஆடகம் என்பது 64 பலம்) தண்ணீரில் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சி பத்தில் ஒரு பங்கு மிகுதியான அந்தக் கஷாயத்தில் தயிர்த்தெளிவு 64 பலம் கருப்பஞ்சாறு சுக்தம் என்னும் காடி 64 பலம் நல்லெண்ணெய் 64 பலம் ஆட்டுப்பால் 32 பலம் கொண்டு எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துக் காய்ச்ச வேண்டும். அதில் பூலாங்கிழங்கு ஸரளம் தேவதாரு ஏலஅரிசி மஞ்ஜிஷ்டி அகில்

1. ச்வதம்ஷ்ட்ரா—நெருஞ்சில்
2. பலா—சித்தாமுட்டி.

சந்தனம் பத்மகாஷ்டம் அதிவிடயம் கோரைக்கிழங்கு காட்டுப் பயறு அரேணுகம் அதிமதுரம் துளசி புலிநகப்பூண்டு ரிஷபகம் ஜீவகம் புரசமரப்பிசின் கஸ்தூரி லதாகஸ்தூரி (நளிகா) வேலிப் பருத்தி இலை ஜாதிப் பத்திரி ஸ்பிருக்கா (ஒரு வாசனைப்பொருள்) குங்குமப்பூ கல்பாசிஜாதிக்காய் வெட்டிவேர் (குந்துருகம்) ருமிமஸ்தகி கர்ப்பூரம் துருஷ்கம் திருவட்டப்பிசின் இலவங்கப் பட்டை நகம் பச்சைக்கர்ப்பூரம் கோஷ்டம் ஜடாமாஞ்சி ஞாழல் பச்சைமாசிப்பத்திரி தகரம் வாசனைப்புல் வசம்பு மருக்காரப்பழம் பெருங்கோரைக்கிழங்கு சிறுநாவற்பூ இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பலம் எடுத்து விழுதாகச் செய்து முன்கூறிய கஷாயத்தில் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்து கொள்ள வேண்டும்.

நன்றாகத் தயார் செய்த அந்தத் தைலத்தில் [1]பாத்ரகல்க மாக வாசனைப் பூக்களின் தூளைச் சேர்க்க வேண்டும். இத் தைலம் இழுப்பு இருமல் காய்ச்சல் விக்கல் வாந்தி குன்மம் உரக்ஷதம் (மார்பில் அடிபடுதலால் ஏற்படும் புண்) தாதுக்குறைவு மண்ணீரல்வீக்கம் உடலுருக்கி கால்கைவலி (அலக்ஷ்மி) பொலி வின்மை இந்நோய்களைப் போக்கும். வாத நோயைப் போக்கு வதில் இது மிகவும் சிறந்தது. இந்த பலாதைலத்தைப்பற்றி கிருஷ்ணாத்ரேயர் அக்னிவேசருக்குக் கூறினார். 148–156

## 99. [2]அம்ருதாதி தைலம்

சீந்தில்கொடி ஐந்து துலாம் எடுத்துத்தூள் செய்து எட்டு மடங்கு தண்ணீரில் இட்டு நான்கில் ஒரு பங்கு மிகுதியாகும்படிக் காய்ச்சி வடிகட்டி அதில் கஷாயத்திற்குச் சம அளவு பால் சேர்க்கவும். இரண்டு ஆடகம் எண்ணெய் ஏலஅரிசி ஜடாமாம்சி தகரவிதை விளாமிச்சவேர் நன்னாரி கோஷ்டம் செஞ்சந்தனம் சித்தாமுட்டிவேர் கீழாநெல்லி மேதா சதகுப்பை ரித்தி ஜீவகம் காகோலி க்ஷீரகாகோலி சிராவணீ அதிபலா நகம் மகாசிராவணீ கீரைப்பாலை முதுக்கன்கிழங்கு பூனைக்காலி விதை தண்ணீர்விட்டான்கிழங்கு மகாமேதா கர்கடகசிருங்கி அரேணுகம் வசம்பு நெருஞ்சில் ஆமணக்குவேர் சித்தரத்தை காலானுஸாரிவா (கல்மத்து) ஸஹசரம் பால்முதுக்கன்கிழங்கு ஆனைவணங்கி கோரைக்கிழங்கு இலவங்கப்பட்டை

1. பாத்ர கல்கம்—அடிப்பாத்திரத்தில் வாசனைப் பொருள் தூள்களை இட்டு எண்ணெயை வடி கட்ட வேண்டும்.
2. அம்ருதா—சீந்தில் கொடி.

இலவங்கப்பத்திரி ரிஷபகம் வெட்டிவேர் காட்டுப்பயறு ஏலஅரிசி குங்குமம் ஸ்பிருக்கா (நாகமரம்) இலவங்கம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கால்பலம் மஞ்ஜிஷ்டி 3 கர்ஷம் அதிமதுரம் எட்டு பலம் இவை எல்லாவற்றையும் விழுதாகச் செய்து முன்சொன்ன எண்ணெயில் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயாரிக்க வேண்டும். இத்தைலம், விந்து சடராக்கினி வலிமை குறைந்தவர் மனநோயால் துன்புறுகிறவர் பைத்தியம் நிலைகொள்ளாமை கால்கைவலி ஆகிய இந்நோய் கொண்டவர் ஆகியவர்களுக்கு இயற்கை நிலையைக் கொடுக்கிறது. இந்த அம்ருதாதிதைலம் என்பது வாத நோயை நீக்குவதில் முதன்மையாகக் கருதப்படுகிறது. குருவான கிருஷ்ணாத்திரேயர் மருத்துவர்களால் புகழப்பட்ட இத்தைலத்தைப்பற்றி அக்னிவேசருக்குக் கூறியருளினார்.
157–164

## 100. [1]ராஸ்னாதி தைலம்

1000 பலம் சித்தரத்தையை எட்டு மடங்கு தண்ணீரில் இட்டு நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி அந்தக் கஷாயத்தில் 56 பலம் எண்ணெய் சேர்த்து அதில் அம்ருதாதி தைலத்தில் கூறியுள்ள ஏலஅரிசி முதல் வசம்பு வரையில் கூறப்பட்ட பொருள்களை விழுதாகச் செய்து சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்ய வேண்டும். ராஸ்னாதி தைலம் வாத நோயால் தோன்றிய வேதனைகளைத் தணிவடையச் செய்யும்.
165

முன்கூறியுள்ள முறைப்படி அமுக்கராக்கிழங்கு முதியார் கூந்தல் சித்தாமுட்டி பேராமுட்டி இந்நான்கு பொருள்களால் தைலங்களைத் தயாரித்துக்கொள்க. அல்லது இவற்றில் அவை களையே கஷாயமாகவும் விழுதாகவும் செய்து பால்சேர்த்துத் தனித்தனியாகத் தைலம் தயார் செய்து கொள்க. 166

## 101. [2]மூலகாதி தைலம்

முள்ளங்கிச்சாறு பால் எண்ணெய் புளிப்புத்தயிர்காடி இவற்றைச் சம அளவு எடுத்து அதில் சித்தாமுட்டி கொடிவேலி இந்துப்பு அரிசித்திப்பிலி அதிவிடயம் சித்தரத்தை செவியம் அகில் முருங்கப்பட்டை சேராங்கொட்டை வசம்பு கோஷ்டம் நெருஞ்சில் சுக்கு புஷ்கரமூலம் பூலாங்கிழங்கு வில்வம் சத தப்பை தகரவிதை தேவதாரு இவற்றை விழுதாகச் செய்து அத்துடன் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்து

1. ராஸ்னா—சித்தரத்தை 2. மூலகம்—முள்ளங்கி.

கொள்ளவும். இந்த எண்ணெயைப்பருகச் செய்தால் கடுமையான வாதத்தினால் ஏற்பட்ட நோய்கள் தணிவடையும். 167–169

## 102. [1]விருஷ மூலாதி தைலம்

ஆடாதொடைவேர் 100 பலம் சீந்தில்கொடி 100 பலம் கொடிவேலி 50 பலம் அமுக்கிராக்கிழங்கு 50 பலம் இவைகளைத் தனித்தனியாக எட்டு மடங்கு தண்ணீருடன் நான்கில் ஒரு பங்கு மிகுதியுள்ளதாகக் காய்ச்சி அதில் 64 பலம் எள்எண்ணெய் அதற்குச் சமஅளவு பால் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்க. இத்தைலம் முறிந்த எலும்பும் சிதைந்து போன எலும்பு முள்ள நோயாளிகளுக்குப் பயன் படுத்தத் தகும். இதே தைலத்தில் மூல காதிதைலத்தில் கூறியுள்ள சித்தாமுட்டி போன்ற பொருள் களை விழுதாகச் செய்து தயாரித்த தைலமும் மிக்க பயனைத் தரும். 170–171

## 103. [2]ராஸ்னாதி தைலம்

சித்தரத்தை வாகைப்பட்டை அதிமதுரம் சுக்கு ஸஹசரம் (நெய்ச்சண்டிப்பூண்டு) சீந்தில்கொடி பெருவாகைப்பட்டை தேவ தாரு புளிவஞ்சி (சரக்கொன்றை) அமுக்கிராக்கிழங்கு நெருஞ்சில் இவற்றுள் ஒவ்வொன்றையும் பத்து பலம் எடுத்துத் தூள் செய்து எட்டு மடங்கு தண்ணீரில் இட்டு நான்கில் ஒரு பங்கு மிகுந் திருக்கும்படிக் காய்ச்சி வடிகட்டி அதில் வாசனைப் பொருள் களை ஒவ்வொரு கால் பலம் எடுத்து விழுதாகச் செய்து தயிர் காடி உளுந்துக்கஷாயம் முள்ளங்கிச்சாறு கருப்பஞ்சாறு இவை ஒவ்வொன்றும் 16 பலம் வீதம் எள்எண்ணெய் பதினாறு பலமும் கொண்டு இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து முறைப் படி தைலம் காய்ச்சுக. முள்ளங்கிச் சாற்றுடன் தயாரிக்கப்படும் தைலங்களில் உயர்ந்த இத்தைலம் மண்ணீரல் நோய் சிறு நீர்த் தடுப்பு இழுப்பு இருமல் வாதத்தினால் தோன்றிய நோய் இவற்றைப் போக்கும். நிறம் ஆயுள் வலிமை இவற்றையும் வளர்க்கும். 172–175

## 104. [3]யவகோலாதி தைலம்

யவம் இலந்தை கொள்ளு மீன் முருங்கைப்பட்டை வில்வப் பழத்தின்கோது இவற்றின் கஷாயத்தில் முள்ளங்கிச்சாறு தயிர்

1. விருஷ—ஆடாதொடை.
2. ராஸ்னா—சித்தரத்தை.
3. யவகோலாதி—யவதானியம், இலந்தை முதலியன.

பால் எண்ணெய்களையும் சேர்த்து முறைப்படி தயாரித்த இந்த எண்ணெயை, மருத்துவன் எல்லாவிதமான வாத நோய்களையும் போக்கப் பயன்படுத்த வேண்டும். பூண்டுச்சாற்றில் மேற் கூறிய யவம் போன்ற பொருள்களின் கஷாயத்தைச் சேர்த்து முறைப்படித் தயார் செய்த தைலம் வாத நோயைப் போக்கும். 176—177

மேற்கூறிய ஏதாவது ஒரு எண்ணெயை மாதவிடாயாகித் தலைமுழுகிய மாதர்களுக்குப் பருகக் கொடுத்தால் மலடியும் மகப்பேற்றைப் பெறுவாள். 178

## 105. [1] அகர்வாதி தைலம்

குளிர்காய்ச்சலில் கூறியுள்ள அகர்வாதிதைலத்தைப் பல நூறு தடவை மடக்கி மடக்கித் தயார் செய்து பயன்படுத்தி னால் அது வாத நோயை நீக்கும் ஆற்றலைப் பெறுகிறது. 179

வெற்றியை விரும்புகிற மருத்துவன் வாத நோயைத் தணி வடையச் செய்ய வாதரத்த சிகிச்சையில் இனி கூறப்போகிற எண்ணெய்களையும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். 180

## 106. வாதநோயில் எண்ணெயின் சிறப்பு

வாத நோயை நீக்குவதில் எண்ணெயைத் தவிர வேறு ஒரு சிறந்த மருந்து கிடையாது. அது [2]வியவாயி உஷ்ணவீர்யம் [3]குருகுணம் ஆகியவற்றைப் பெற்றிருப்பதாலும் [4]ஸம்ஸ்காரத்தி னாலும் மிகவும் வலிமையுடையது. அந்த எண்ணெயில் வாதத்தைப் போக்கக் கூடிய பொருள்களைச் சேர்த்துத் தைலம் தயாரிக்கப்படுமேயாகில் அது மிக்கசிறந்த பயனை அளிக்கும். அதனால் வாதத்தைப் போக்கக்கூடிய பொருள்களைச் சேர்த்து நூறு தடவையோ ஆயிரம் தடவையோ மடக்கிச் செய்யப்படுமாகில் எண்ணெய் மிகவும் நுட்பமான வழிகளில் (துவாரங்களில்) தோன்றிய நோய்களை விரைவில் தீர்க்கிறது. 181—182

---

1. அகர்வா—அகில்கட்டை.
2. வ்யவாயி—நுட்பமான எல்லாப்பகுதிகளிலும் விரைவில் பரவக் கூடியது.
3. குருகுணம்—பளுவானது.
4. ஸம்ஸ்காரம்—எந்தப் பொருள்களுடன் சேர்கிறதோ அதன் தன்மையைப் பெறுதல்.

மற்ற தோஷங்களுடன் வாயு சேர்ந்திருக்குமாயின் பொதுவாக வாதத்தை நீக்கக்கூடிய சிகிச்சையைச் செய்ய வேண்டும். குறிப்பாகப் பித்தத்தாலும் கபத்தாலும் [1]ஸ்ரோதஸ்கள் சூழ்ந்து கொள்ளப்பட்டு வாயு சீற்றம் பெற்றிருந்தால் அதற்கும் வாதத்திற்கு உரிய சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். 183

## 107. பித்தத்தினால் சூழப்பட்ட வாத நோய்க்குச் சிகிச்சை

குறிப்பாக ஸ்ரோதஸ்ஸுகளில் வாதம், பித்தத்தினால் சூழப்பட்டிருந்தால் ஒரு முறை குளிர்ச்சியான சிகிச்சை மற்றொரு முறை சூடான சிகிச்சை என மாறி மாறி நோயாளிக்குச் சுகம் அளிக்கும்படிச் சிகிச்சை செய்ய வேண்டும். வாதரக்த நோய்ச் சிகிச்சையில் சொல்லப்போகிற [2]ஜீவனீய கூட்டுப் பொருள்களால் தயார் செய்த ஜீவனீய கிருதம் எனும் நெய்யைப் பயன்படுத்துவது சிறந்ததாகும். 184

## 108. பித்தத்தினால் சூழப்பட்ட வாதநோயில் (பத்யம்) உணவு முறை

மரங்களடர்ந்த நிலங்களில் வாழும் பிராணிகள் பறவைகள் இவைகளின் மாமிசம் யவதானியம் சம்பா அரிசி இவைகளும் [3]யாபனாவஸ்தி [4]க்ஷீரவஸ்தி மலங்கழிக்கக் கொடுத்தல் ஆகியவையும் சிறுபஞ்சமூலம் சித்தாமுட்டி இவற்றால் தயார் செய்த பாலைப் பருகுதலும் பித்தத்தினால் சூழப்பட்ட வாத நோயில் நன்மையளிக்கும். 185

## 109. பித்தத்தினால் சூழப்பட்ட வாத நோய்க்குக் குளிப்பாட்டுதல்

பித்தத்தினால் வாயு சூழ்ந்திருக்குமாகில் அதிமதுரத்தில் தயாரித்த எண்ணெய் (மதுயஷ்டிதைலம்) பலாதைலம் நெய் பால் சிறுபஞ்சமூலகஷாயம் அல்லது குளிர்ந்த நீர் இவற்றை நோயுற்ற இடங்களில் ஊற்றி நீராட்ட வேண்டும். 186

1. ஸ்ரோதஸ்—துவாரங்கள்.
2. ஜீவனீய கூட்டுப்பொருள்—ஜீவகம் ரிஷபகம் மேதா மகாமேதா காகோலி க்ஷீரகாகோலி காட்டுப்பயறு காட்டு உளுந்து கீரைப்பாலை அதிமதுரம்.
3. யாபனாவஸ்தி—தீங்கு இழைக்காதவஸ்தி.
4. க்ஷீரவஸ்தி—பால் வஸ்தி.

### 110. கபத்தினால் சூழப்பட்ட வாதத்திற்கு உணவு முறை

*யவதானியத்தைச் சேர்த்துத் தயாரித்த உணவு வகையும் மலைகள் மரங்கள் அடர்ந்து இராத வறண்ட நிலத்தில் வாழும் பிராணிகள் பறவைகள் இவற்றின் மாமிசத்தையும் கபத்தினால் சூழப்பட்ட வாதத்தில் உணவாகக் கொடுக்க வேண்டும். மேலும் கடுமையான வியர்ப்பிக்கும் சிகிச்சை தீக்ஷ்ணமான கஷாய வஸ்தி வாந்தியாகவும் பேதியாகவும் மருந்து கொடுத்தல் ஆகியவை களும் நன்மையைத் தரும். பழமையான நெய் எள்எண்ணெய் கடுகுஎண்ணெய் இவைகளும் நன்மையளிக்கும். 187*

### 111. வாத நோயில் பித்தமும் கபமும் சேர்ந்திருக்குமாயின் முதலில் பித்தத்திற்குச் சிகிச்சை

*கபமும் பித்தமும் வாதத்துடன் சேர்ந்திருக்குமானால் முதன் முதலில் பித்தத்தை நீக்க வேண்டும். 188*

### 112. கபத்தையும் பித்தத்தையும் போக்கக்கூடிய ஐவகைச் சிகிச்சை முறைகள்

*உணவுப்பையில் கபம் நிறைந்திருந்தால் வாந்தி எடுக்கவும் சீரணப்பையில் கபம் குவிந்து பித்தம் உடல் முழுவதும் சீற்றம் பெற்றிருந்தால் மலம் கழிக்கவும் மருந்து கொடுத்து அக் கபத்தை வெளியேற்ற வேண்டும். 189*

*வியர்ப்பிக்கும் சிகிச்சையால் இளகிய கபம், சீரணப்பையில் இருந்தாலும் அல்லது சீற்றமடைந்த பித்தம், தன் இலக்கணங் களை உடலில் தோற்றுவித்தாலும் கபத்தையும் பித்தத்தையும் வஸ்தி கொடுத்து வெளியேற்ற வேண்டும். 190*

*கபத்துடன் கூடிய வாதமானால் பசுவின் சிறுநீர் சேர்த்துச் சூடான (நிரூஹவஸ்தியை) கஷாயவஸ்தியைக் கொடுத்து அதை வெளியேற்ற வேண்டும். பித்தத்துடன் வாயுசேர்ந்திருந்தால் பாலுடன் கஷாயவஸ்தி கொடுத்து அதை வெளியேற்ற வேண்டும். இந்த இரண்டு விதமான நிலைகளிலும் இனிப்புச் சுவையுள்ள கூட்டுப் பொருள்களால் தயார் செய்த எண்ணெயினால் எண்ணெய்வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 191*

*கபத்துடன் வாதம் தலையில் சென்றிருந்தால் புகை பிடித் தல் மூக்கில் மருந்திடுதல் போன்ற தலையில் உள்ள நோயைப் போக்கக் கூடிய முறைகளைப் பயன்படுத்துக. 162*

பித்தம் அல்லது கபம் வெளியேற்றப்பட்ட பிறகு வாதம் மார்புக்குள் சென்று சூழ்ந்திருக்குமாயின் தனித்த வாதத்தைப் போக்கக்கூடிய சிகிச்சையைச் செய்ய வேண்டும். 193

வாதம், இரத்தத்தினால் சூழப்பட்டு நோய் தோன்றியிருந்தால் வாதரத்தசிகிச்சாத்தியாயத்தில் இனி கூறப் போகிற சிகிச்சை முறைகளைக் கையாள்க. 194

## 113. ஆமத்தினால் சூழப்பட்ட வாதத்திற்குச் சிகிச்சை

ஆமதோஷத்தில் வாயு சூழப்பட்டிருந்தால் நீரிழிவு வாதம் கொழுப்பு இவற்றைப் போக்கக் கூடிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும்.

மாமிசத்தால் வாயு சூழப்பட்டிருந்தால் வியர்ப்பிக்கும் சிகிச்சை எண்ணெய்க்குளியல் புலால்ரஸம் பால் நெய் எண்ணெய் போன்றவற்றை பயன்படுத்துவது நன்மையை அளிக்கும். 195

## 114. எலும்பிலும் மஜ்ஜையிலும் சூழ்ந்த வாயுவுக்குச் சிகிச்சை

எலும்பிலும் மஜ்ஜையிலும் (எலும்புக்குள் உள்ள சோறு) சிற்றம் அடைந்த வாயுவுக்கு *மகாஸ்நேஹத்தைப் பயன்படுத்த வேண்டும்.

## 115. விந்துவில் சூழ்ந்த வாயுவுக்குச் கிகிச்சை

விந்துவில் வாயு சூழந்திருந்தால் முதலில் இந்த அத்தியாத்தில் 94வது சுலோகத்தில் கூறப்பட்ட சிகிச்சையைச் செய்ய வேண்டும்.

## 116. உணவில் சூழ்ந்துள்ள வாயுவுக்குச் சிகிச்சை

உணவில் வாயு சூழ்ந்திருந்தால் வாந்தி எடுக்கக் கொடுத்து உணவை வெளியேற்ற வேண்டும். மேலும் சடராக்கினியைத் தூண்டக்கூடியதும் எளிதில் சீரணமாகக் கூடியதுமான உணவைப் பயன் படுத்த வேண்டும். 196

---

* மகாஸ்நேஹம்—நெய், எண்ணெய், வஸை, மஜ்ஜைஇன் நான்கும் சேர்ந்தது.

## 117. சிறுநீரில் சூழ்ந்த வாயுவுக்குச் சிகிச்சை

சிறுநீரில் வாயு சூழ்ந்திருந்தால் சிறுநீரைப் போக்கக்கூடிய மருந்துகளையும் உத்தர வஸ்தியுடன் வியர்ப்பிக்கும் சிகிச்சையையும் அளிக்க வேண்டும்.

## 118. மலத்தில் சூழ்ந்த வாயுவுக்குச் சிகிச்சை

மலத்தில் வாயு சூழ்ந்திருந்தால் ஆமணக்கெண்ணெயைப் பருகக் கொடுக்க வேண்டும். மேலும் எண்ணெய்ப்பசையுள்ள பொருள்களையும் பயன்படுத்த வேண்டும். உதாவர்த்த நோய்க்குச் சொல்லப்பட்ட பொதுவான சிகிச்சையையும் கையாள வேண்டும். 197

தன்னிடத்தில் உள்ள தோஷம் மிக்க வலிவுள்ளதாக இருக்குமானால் அந்த வலிவுள்ள தோஷத்தை முதலில் போக்க வேண்டும். அல்லது அந்தந்ததோஷத்திற்கு ஏற்றபடி வாந்தி எடுக்க கொடுத்தோ மலங்கழிக்கக் கொடுத்தோ வஸ்தியைப் பயன்படுத்தியோ தணிக்கும் முறையைக் கையாண்டு நீக்க வேண்டும். இங்கு பித்தம் போன்ற தோஷத்தினாலும் ரஸாதி தாதுக்களாலும், மலங்களாலும் சூழப்பட்ட வாதத்திற்கு இலக்கணம் சிகிச்சை இவை நன்றாக விளக்கப்பட்டன. 198

## 119. சூழப்பட்ட வாயுக்களின் விளக்கம்

குற்றமற்றவனே, ஐந்து வகையான வாயுக்கள் ஒன்றால் மற்றொன்று சூழப்படுதலால் ஏற்படும் இலக்கணங்களைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கேட்பாயாக. 199

## 120. வாயுக்கள் ஒன்றால் மற்றொன்று சூழப்படும் வகைகள் இருபது

பிராணவாயு, உதானன் முதலிய வாயுக்களாலும் உதானன் முதலிய வாயுக்களால் பிராண வாயுவும், சூழப்படுகின்றன. இவ்வாறு முறையே எல்லா வாயுக்களும் ஒன்று மற்றொன்றால் சூழப்படுகிறது. வளர்ச்சி பெற்ற ஐந்து வகையான வாயுக்கள் ஒன்றால் மற்றொன்று சூழப்படுவது, இருபது வகைப்படுகிறது. அவற்றை மருத்துவன் நன்றாகச் சிந்தித்து முடிவு செய்து கொள்ள வேண்டும். 200–201

**121. பிராணவாயுவால் சூழப்பட்ட வ்யான வாயுவின் இலக்கணம், சிகிச்சை**

எல்லாப்புலன்களிலும் (சூன்யதா) நிறைவற்ற உணர்ச்சியும் திறமையற்ற தன்மையும் நினைவாற்றல் குறைவும் வலிமைக் குறைவும் ஏற்படும். இவையே பிராணவாயுவால் சூழப்பட்ட வ்யான வாயுவின் இலக்கணங்களாகும். இவ்விலக்கணங்களைக் கண்டறிந்து கழுத்துக்கு மேல் தோன்றும் நோய்களுக்கு உண்டான மருத்துவ முறைகளைக் கையாள வேண்டும். 202

**122. வ்யான வாயுவால் சூழப்பட்ட பிராணவாயுவின் இலக்கணம் சிகிச்சை**

வ்யானவாயுவால் பிராணவாயு சூழப்பட்டு தடைப் பட்டிருந்தால் வியர்வை மிகுதியாக வெளிவருதல் மயிர்க்கூச்சல் தோல்சுருங்குதல் உடல் உணர்ச்சியற்றுப்போதல் ஆகியவை ஏற்படுகின்றன. இதற்கு எண்ணெய் கலந்த மருந்துகளை மலங் கழிக்கப் பயன்படுத்த வேண்டும். 203

**123. பிராணவாயுவால் சூழப்பட்ட சமான வாயுவின் இலக்கணம், சிகிச்சை**

சமானவாயு, பிராணவாயுவால் சூழப்பட்டு தடைப்பட் டிருந்தால் உடல் செயலற்றுப் போதல் திக்கித் திக்கிப் பேசுதல் ஊமையாதல் ஆகிய இவ்விலக்கணங்கள் தோன்றும். இந்நிலையில் யாபனாவஸ்தியுடன் வாந்தி எடுக்கச் செய்தல் மலங்கழிக்கச் செய்தல் கஷாயவஸ்தி எண்ணெய்வஸ்தி ஆகிய இந்நான்கு முறைகளையும் கையாள வேண்டும். 20[illegible]

**124. சமானவாயுவால் சூழப்பட்ட அபான வாயுவின் இலக்கணம் சிகிச்சை**

சமானவாயுவால், அபானவாயு சூழப்பட்டிருந்தா[illegible] கிரஹணிநோய் இருவிலாப்பக்கங்களிலும் வலி இதயநோ[illegible] உணவுப்பையில் வலி என இவை தோன்றும். இதற்கு சடராக்கினியைத் தூண்டி விடக் கூடிய நெய்யைப் பய[illegible] படுத்தினால் மிக்க நன்மை உண்டாகும். 2[illegible]

**125. பிராணவாயுவால் சூழப்பட்ட உதான வாயுவின் இலக்கண[illegible] சிகிச்சை**

உதானவாயு, பிராணவாயுவால் சூழப்பட்டு தடை பட்டிருந்தால் தலைப்பிடிப்பு *(பிரதிச்யாயம்) [illegible] பட்

---

* பிரதிச்யாயம்—தலைக்குள் வாயு சீற்றமடைந்து மூக்கி[illegible] அடியிலுள்ள கபம் பித்தம் முதலியவை சிரஸைநோக்கி[illegible] இழுக்கப்படும் நோய்.

சளி மூச்சு தடைப்படுதல் இதயநோய் வாய் உலர்ந்து போதல் இத்தகைய இலக்கணங்கள் தோன்றும். இதற்குக் கழுத்துக்கு மேல் உண்டாகும் நோய்களுக்குச் சொல்லப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன்படுத்துக. மேலும் நோயாளியை முறையான ஓய்வளித்து வலிவூட்டும் உணவு பானங்களால் தேற்றவும் வேண்டும். 206–207

## 126. உதானவாயுவால் சூழப்பட்ட பிராணவாயுவின் இலக்கணம், சிகிச்சை

பிராணவாயு, உதானவாயுவால் சூழப்பட்டு தடைப் பட்டிருந்தால் உடலில் செயல்கள் ஓஜஸ் வலிமை நிறம் இவை குறைந்து அழிந்து போகும். அல்லது மரணமும் ஏற்படும். இந்நிலையில் குளிர்ந்த தண்ணீரை நோயாளியின் உடலில் தெளிக்கவேண்டும். மேலும் நோயாளியைத் தேற்றி முழுமை யாகச் சுகமாக ஓய்வு எடுக்கச் செய்ய வேண்டும். 208

## 127. உதானவாயுவால் சூழப்பட்ட அபானவாயுவின் இலக்கணம், சிகிச்சை

உதானவாயுவால் அபானவாயு சூழப்பட்டு தடைப் பட்டிருந்தால் வாந்தி இழுப்பு இருமல் போன்ற நோய்கள் தோன்றும். இந்நிலையில் வஸ்தியைப் பயன்படுத்தி வாயுவை நேராகச் செலுத்தக்கூடிய உணவுப் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். 209

## 128. அபான வாயுவால் சூழப்பட்ட உதான வாயுவின் இலக்கணம் சிகிச்சை

அபான வாயுவால் உதான வாயு சூழப்பட்டிருந்தால் மதி மயக்கம் சடராக்கினிக் குறைவு கழிச்சல் என்பவை தோன்றும். இதற்கு வாந்தி எடுக்கச் செய்து சடராக்கினியைத் தூண்டி மலத்தைக் கட்டக் கூடிய உணவு குடிநீர் வகைகளைப் பயன்படுத்த வேண்டும். 210

## 129. வ்யான வாயுவால் சூழப்பட்ட அபான வாயுவின் இலக்கணம் சிகிச்சை

வியானவாயுவால் அபானவாயு சூழப்பட்டிருந்தால் வாந்தி வயிற்று உப்புசம் உதாவர்த்தம் (வாயு மேல் நோக்கிச் செல்லுதல்) குன்மம் கத்தரியால் கத்தரிப்பது போன்ற வலி இத்தகைய இலக்கணங்கள் தோன்றும். இதற்கு எண்ணெய்ப் பசையுள்ள பொருள்களை உண்ணக் கொடுத்து அபான வாயுவை நேராகச் செல்லச் செய்யவேண்டும். 211

## 130 அபான வாயுவினால் சூழப்பட்ட வ்யானவாயுவின் இலக்கணம், சிகிச்சை

அபானவாயுவால் வ்யான வாயு சூழப்பட்டிருந்தால் மலம் சிறுநீர் விந்து இவை பெருமளவில் வெளியேறும். இதுவே இதன் இலக்கணமாகும். இந்நிலையில் தக்க மருந்து உணவு குடிநீர் முதலியவற்றால் இவற்றைக் கட்டுப் படுத்த வேண்டும். 212

## 131. சமான வாயுவால் சூழப்பட்ட வ்யான வாயுவின் இலக்கணம், சிகிச்சை

சமானவாயுவால் வ்யான வாயு சூழப்பட்டிருந்தால் சோம்பல் உளறுதல் உடல் உறுப்புகளில் தளர்ச்சி சடராக்கினி ஓஜஸ் வலிமை இவற்றில் குறைவு ஏற்படுதல் எனும் இலக்கணங்கள் தோன்றும். இதற்கு உடற்பயிற்சியையும் எளிதில் சீரணமாகக் கூடிய உணவுவகைகளையும் கொடுக்கவேண்டும். 213

## 132. உதான வாயுவால் சூழப்பட்ட வ்யான வாயுவின் இலக்கணம், சிகிச்சை

வ்யானவாயு உதானவாயுவால் சூழப்பட்ட போது உறுப்புகள் அசைவற்றுப்போதல் சடராக்கினிக்குறைவு வியர்வின்மை உடலின் செயல்கள் நலிவடைதல் கண்கள் எப்பொழுதும் மூடியிருத்தல் இத்தகைய இலக்கணங்கள் தோன்றும். இந்நிலையில் அளவுடன் *லகுவான உணவைக் கொடுப்பது சிறந்ததாகும். 214

## 133. பதிமூன்று முதல் இருபது வரையில் ஒன்றுக்கொன்று சூழப்பட்ட வாய்வுகட்கு முறைகள்

இவ்வாறு ஐந்து பிரிவான வாய்வுகள் ஒன்று மற்றொன்றால் சூழப்பட்டிருக்கும் இலக்கணங்களை அறிந்து கொள்ள வேண்டும். சூழப்பட்டுள்ள இவ்வாய்வுகள் தத்தம் இயற்கைச் செயல்களைக் குறைக்கவோ வளர்ச்சியையடையவோ செய்யும். 215

இங்கு சிறந்த மருத்துவனின் அறிவாற்றலுக்காக இருபது வகைகளாகச் சூழப்பட்ட வாயுவுகளில் எட்டுவகைக்கு இலக்கணம் மருத்துவம் என இவை மேலெழுந்தவாரியாகக் கூறப்பட்டன. 216

மற்ற பன்னிரண்டு வகைகளாகச் சூழப்பட்டுள்ளவைகளையும் மேலும் வாயுக்களின் இருப்பிடம் அவற்றின் செயல்

* இலகுவானது—எளிதில் சீரணிக்கக் கூடியது.

வளர்ச்சி குறைவு முதலியவற்றையும் நன்கு ஆராய்ந்து எண்ணெய்க் குளியல் எண்ணெய் பருகுதல் வஸ்தி போன்ற எல்லாச் சிகிச்சை முறைகளையும் சூடாகவும் குளிர்ச்சியாகவும் மாற்றிமாற்றிச் செய்ய வேண்டும். 217–218

## 134. பலவகைச் சிகிச்சை முறைகள்

உதானவாயு கேடடைந்திருந்தால் சிகிச்சை செய்து அதை மேல் நோக்கிச் செயல்படச் செய்ய வேண்டும். அபான வாயு கேடடைந்திருந்தால் அனுலோமனமான (கீழ்நோக்கி செயல்படச் செய்யக்கூடிய) உணவையும் குடிநீரையும் மருந்து வகைகளையும் கொடுத்து அதை நேராகச் செல்லச் செய்ய வேண்டும். சமான வாயு கேடடைந்திருந்தால் தணிவடையச் செய்ய வேண்டும். வ்யானவாயு சீற்றம் பெற்றிருந்தால் அதை மேல் நோக்கியும் கீழ்நோக்கியும் இடையிலும் செயல்படக் கொண்டு வர வேண்டும்.

இந்நான்கு வகையான வாயுக்களிலிருந்தும் பிராணவாயுவை முதன்மையாகக் காப்பாற்ற வேண்டும். பிராணவாயுவை அதனிடத்தில் வைப்பதால் உடல் நிலை சரியாக அமையும். இவ்வாறு தாறுமாறாகவோ சூழப்பட்டதாகவோ உள்ள வாயுக்களைத் தத்தம் இடங்களில் இருக்கச் செய்ய வேண்டும். 219–220

## 135. பித்தத்தினால் சூழப்பட்ட பிராண வாயுவின் இலக்கணம்

பித்தம் சூழ்ந்த பிராண வாயுவில் மூர்ச்சை எரிச்சல் தலை சுற்றல் வலி வயிற்றில் அழலை குளிர்ச்சியை விரும்புதல் உண்ணப்பட்ட சீரணிக்கப்படாத உணவை வாந்தி எடுத்தல் ஆகு இத்தகைய இலக்கணங்கள் தோன்றும். 221

## 136. கபத்தினால் சூழப்பட்ட பிராணவாயுவின் இலக்கணம்

கபம் சூழ்ந்த பிராணவாயுவில் அடிக்கடி காறிக்காறித் துப்புதல் தும்மல் ஏப்பம் மூச்சு தடைப்படுதல் உணவில் சுவையறியாமை வாந்தியாகுதல் என இவை தோன்றும். 222

## 137. பித்தத்தினால் சூழப்பட்ட உதான வாயுவின் இலக்கணம்

பித்தம் சூழ்ந்த உதானவாயுவில் மூர்ச்சை எரிச்சல் தொப்புள் மார்பு இவ்விடங்களில் ஓய்ச்சல் ஓஜஸ் குறைவு அடைதல் சுறுசுறுப்பின்மை என இவை ஏற்படும். 223

### 138. கபத்தினால் சூழப்பட்ட உதான வாயுவின் இலக்கணம்

கபம் சூழ்ந்த உதானவாயுவில் உடலில் நிறமாற்றம் பேச்சும் குரலும் தடைப்படுதல் வலிமைக் குறைவு உடல் பளு உணவில் சுவையின்மை என்பவை ஏற்படும். 224

### 139. பித்தத்தினால் சூழப்பட்ட சமான வாயுவின் இலக்கணம்

சமானவாயு பித்தத்தினால் சூழப்பட்டிருந்தால் மிக்க வியர்வை நாவறட்சி எரிச்சல் மூர்ச்சை உணவில் சுவையின்மை சடராக்கினி தடைப்படுதல் என்பவை உண்டாகும். 225

### 140. கபத்தினால் சூழப்பட்ட சமான வாயுவின் இலக்கணம்

கபத்தினால் சமான வாயு சூழப்பட்டிருந்தால் வியர்வை யின்மை சடராக்னிக் குறைவு மயிர்க்கூச்சல் உடலில் அதிகமான குளிர்ச்சி இத்தகைய இலக்கணங்கள் ஏற்படும். 226

### 141. பித்தத்தினால் சூழப்பட்ட வ்யான வாயுவின் இலக்கணம்

பித்தத்தினால் வ்யான வாயு சூழப்பட்டிருந்தால் உடல் முழுவதிலும் எரிச்சல் சோர்வு உடல்நடுக்கம் செயல்தடைப் படுதல் கதகதப்பு வேதனை என்பவை தோன்றும். 227

### 142. கபத்தினால் சூழப்பட்ட வ்யான வாயுவின் இலக்கணம்

வியானவாயு கபத்தினால் சூழப்பட்டிருந்தால் உடல் முழு வதிலும் பளு எலும்புமூட்டுக்களில் வலி அதிகமாக நடை தடைப்படுதல் என்னும் இலக்கணங்கள் தோன்றும். 228

### 143. பித்தத்தினால் சூழப்பட்ட அபானவாயுவின் இலக்கணம்

அபானவாயு பித்தத்தினால் சூழப்பட்டிருந்தால் மஞ்சள் போன்ற நிறத்துடன் சிறுநீரும் மலமும் கழியும். ஆஸன வாயிலும் ஆண்குறியிலும் எரிச்சல் ஏற்படும். பெண்கள் உடலில் பித்தத்தினால் அபானவாயு சூழப்பட்டிருந்தால் மாதவிடாயில் அதிகமாக இரத்தப்பெருக்கு ஏற்படும். 229

### 144. கபத்தினால் சூழப்பட்ட அபானவாயுவின் இலக்கணம்

கபத்தினால் அபான வாயு சூழப்பட்டிருந்தால் மலம் சிறுகச் சிறுக அசீரணத்துடன் கபம் சேர்ந்து பளுவாக வெளியேறும். கபத்தினால் தோன்றிய நீரிழிவு நோயும் ஏற்படும். 230

## 145. இரண்டு தோஷங்கள் சூழ்ந்த வாயுவின் இலக்கணம்

பித்தம் கபம் இரண்டு தோஷங்களின் இலக்கணங்களும் ஒன்று சேர்ந்திருந்தால் அது இரண்டு தோஷங்கள் ஒன்று சேர்ந்து சூழப்பட்ட வாயுவின் இலக்கணம் என்று அறிவாளியான மருத்துவன் அறிந்து கொள்ளவேண்டும். 231

வாதத்தின் இடத்தைச்சேர்ந்து மற்ற கபபித்த தோஷங்கள் மேலே சொன்னவற்றைப்போல பல வகை நோய்களைத் தோற்றுவிக்கும். 232

கபம் பித்தம் இவற்றால் சூழப்பட்ட பிராண வாயுவும் உதான வாயுவும் மிகவும் கொடியன என மருத்துவன் எண்ணு கிறான். 233

## 146. பிராணவாயு உதான வாயுவுகளின் சிறப்பு

குறிப்பாகப் பிராணவாயுவை அண்டி ஜீவன் இருக்கிறது. உதானவாயுவை அடிப்படையாகக் கொண்டு வலிமை இருக் கிறது. பிராணவாயு உதானவாயு இவ்விரண்டும் பீடிக்கபட்டால் ஆயுள் வலிமை இவ்விரண்டிற்கும் கேடு ஏற்படுகிறது. 234

## 147. சூழப்பட்ட வாயுவுகளின் தீர்க்க இயலுகையும், தீர்க்க இயலாமையும்

சூழப்பட்ட எலலா வகையான வாத நோய்களும் கவனக் குறைவால் நன்கு அறியப்படாமல் ஓராண்டு முடிய சிகிச்சை செய்யப்படாமல் விடப்பட்டால் அவை தீர்க்க இயலாதவை யாகவோ மிகுந்த கஷ்டத்துடன் தீர்க்கக் கூடியவையாகவோ ஆகிவிடுகின்றன. 235

## 148. சூழப்பட்ட வாயுவுகளைக் கவனியாமையால் ஏற்படும் துன்பங்கள்

சூழப்பட்ட வாயுவுகளைக் கவனக்குறைவால் சிகிச்சை செய் யாமல் விட்டுவிட்டால் இதயநோய் (வித்ரதி) பெருங்கட்டிகள் மண்ணீரல் நோய் குன்மம் கழிச்சல் என்னும் நோய்கள் தோன்று கின்றன. 236

ஆகையால் ஐந்து வாயுவுகளும் வாதம் பித்தம் கபம் இவற்றால் சூழப்பட்டதை நன்கு அறிந்து கொள்ளவேண்டும். 237

## 149. சூழப்பட்ட வாயுவுக்குச் சிகிச்சை

சூழப்பட்ட வாய்வுகளின் இலக்கணங்களை நன்றாக அறிந்த மருத்துவன் கபத்தைத் தோற்றுவிக்காதனவும் எண்ணெய்பசை உள்ளனவும் [1]ஸ்ரோதஸ்களைத் தூய்மையாக்கக் கூடியனவுமான சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 238

உ லில் எல்லா இடங்களிலும் வாயு சூழப்பட்டிருந்தால் கபத்திற்கும் பித்தத்திற்கும் இடையூறின்றி வாயுவை (அனுலோமமாக)நேராகச் செய்யக் கூடியனவும் விரைவில் நன்மையை அளிக்கக் கூடியனவுமான மருந்து உணவுப் பொருள்களைச் சிகிச்சையில் பயன்படுத்த வேண்டும். 239

வாயுவால் உடல் சூழப்பட்டதற்குப் பெரும்பாலும் இனிப்புச் சுவையுள்ள பொருள்களால் தயாரித்த எண்ணெய் வஸ்திகளுடன் [2]யாபனாவஸ்தியைப் பயன்படுத்துவது சிறந்ததாகும். அல்லது நோயாளியின் வலிமைக்கு ஏற்றவாறு மென்மையான மலங்கழிக்கச் செய்யும் மருந்துகளைக் கொடுப்பதும் நன்மையை அளிக்கவல்லது. 240

எல்லா வகையான ரஸாயன மருந்துகளையும் சிலாஜத்து அல்லது குக்குலுவைப் பாலுடன் சேர்த்து ரஸாயன முறைப்படிச் சூழப்பட்ட வாயுவுக்குக் கொடுத்தால் மிகவும் சிறந்த பயன் உண்டாகும். 241

மற்ற தோஷங்களால் சூழப்பட்ட வாயுவினுடைய துன்பங்களுக்குப் பாலை மட்டும் உணவாகக் கொடுத்துச் ச்யவனப்பிராச லேஹியம் முதல் ரஸாயன பாதத்தில் (1100 பலம் கற்கண்டு சேர்த்துத் தயார் செய்த) அபயாமலகீயரஸாயனம் வரை கூறப்பட்டுள்ளவற்றை நாள்தோறும் நெடுங்காலம் பயன்படுத்த வேண்டும். 242

## 150. சூழப்பட்ட அபானவாயுவுக்குச் சிகிச்சை

அபானவாயு சூழப்பட்டிருந்தால் சடராக்கினியைத் தூண்டக் கூடிய மலத்தைக்கட்டக்கூடிய வாயுவை நேராகக் கொண்டு வரக் கூடிய சீரணப்பையைத் தூய்மையாக்கக்கூடிய மருந்துகளைப் பயன்படுத்தவேண்டும். 243

---

1. ஸ்ரோதஸ்—துவாரங்கள்.
2. யாபனாவஸ்தி—தீங்கு இழைக்காத வஸ்தி.

சூழப்பட்ட பிராணன் போன்ற வாயுக்களுக்கு இவ்வாறு சுருக்கமாகச் சிகிச்சை சொல்லப்பட்டது. மருத்துவன் இதை அடிப்படையாகக் கொண்டு நன்கு ஆலோசித்து அந்தச் சூழப் பட்ட பிராணன் போன்ற வாயுவுகளுக்கும் விரிவாகச் சிகிச்சையைக் கையாளவேண்டும். 244

## 151. பித்தம் கபம் இவற்றால் சூழப்பட்ட வாயுவுக்குச் சிகிச்சை

பித்தத்தினால் சூழப்பட்ட வாயுவுக்குப் பித்தத்தை நீக்கக் கூடியவையும் வாதத்திற்கு இடையூறு செய்யாதவையுமான மருந்து உணவுப் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். கபத் தினால் சூழப்பட்ட வாயுவுக்குக் கபத்தை நீக்கக் கூடியவையும் வாயுவை நேராகச் செலுத்தக் கூடியவையுமான மருந்து உணவுப் பொருள்களைச் சிகிச்சையில் கையாள வேண்டும். 245

உலகில் வாயு சூரியன் சந்திரன் ஆகியவற்றின் நடையை அறிவது கடினம். அதைப்போல உடலில் வாயு பித்தம் கபம் இவற்றின் செயல்களையும் அறிந்து கொள்வது மிகமிகக் கடின மாகும். 246

வாதம் பித்தம் கபம் எனும் தோஷங்களின் குறைவு வளர்ச்சி சமநிலை சூழப்பட்ட நிலைமை இவற்றை நன்கு அறிந்து சிகிச்சையைக் கையாள்கிற மருத்துவன் ஒருபொழுதும் சிகிச்சை யில் தடுமாற்றம் அடையமாட்டான். 247

**முடிவுரை :**

அந்தந்த இடத்திற்கு ஏற்றவாறு செயல்பட்டு உடலை நிலைநிறுத்தக் கூடிய ஐந்து வகையான வாயுக்கள் உடலில் தங்குமிடம் செயல்கள் சீற்றத்திற்குக் காரணம் சீற்றமடைந்த தோஷங்களால் தோன்றும் நோய்கள் மற்ற இடங்களில் சூழப் பட்டதும் சூழப்படாதுமான பிராணவாயு உலகில் உயிரினங் களின் பிராணனை நிலைநிறுத்தத் தகுதியான நிலை முழுமை யான சிகிச்சை முறை இவைகள் விவரிக்கப்பட்டுள்ளன. அந்நோய்களுக்கு இடம் *ஸாத்ம்யம் பருவம் வலிமை போன்றவைகளை அறிந்து சாத்திரத்தில் கூறியுள்ள முறையைப் பின்பற்றிச் சிகிச்சை செய்ய வேண்டும். 248—250

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
திருத்தப்பட்டு திருடபலரால் நிறைவு செய்யப்பட்ட
சரகஸம்ஹிதையில் சிகிச்சாஸ்தானத்தில் வாதவ்யாதி
சிகிச்சை என்னும் இருபத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.

---

* ஸாத்ம்யம்—உடலுக்கு ஒத்துக்கொள்ளுதல்.

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

# வாத சோணித சிகிச்சை

[1]வாதசோணித சிகித்ஸிதம் என்னும் அத்தியாயத்தை ஆத்திரேய மாமுனிவர் கூறியவாறு விளக்குவோம். 1—2

அக்கினியில் ஓமம் செய்த பிறகு முனிவர்களின் கூட்டத்தின் நடுவில் வீற்றிருப்பவரும் அக்கினிக்குச் சமமான ஒளி உடையவரும் நிலையான மனத்தை உடையவரும் ஆசிரியருமான புனர்வஸு ஆத்திரேயரிடம் நெருப்பும் காற்றும் சேருவதற்கு நிகராக உள்ள வாயு இரத்தம் இவற்றின் சேர்க்கையினால் தோன்றுகிற வாதரத்த நோயின் காரணம் இலக்கணம் மருந்து இவற்றைப் பற்றி அக்கினிவேசர் வினவினார். அதற்கு ஆசிரியரான புனர்வஸு பதில் உரைத்தார். 3—4

### 1. வாதரக்த நோய்க்குக் காரணம்

உப்பு புளிப்பு கார்ப்புச் சுவைகள் கொண்டவற்றையும் [2]க்ஷாரங்களையும் எண்ணெய்ப்பசையும் உஷ்ணவீர்யமும் கொண்டவற்றையும் பயன்படுத்தல் அஜீரணமாயிருக்கும் போது உண்ணுதல் ஊறிப்போன பொருள்கள் உலர்ந்த பொருள்கள் நீரில் வாழ்கின்ற மீன்போன்றவற்றின் மாமிசம் நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் பிராணிகளின் மாமிசம் பிண்ணாக்கு ஆகியவற்றை உண்ணுதல் முள்ளங்கி கொள்ளு உளுந்து மொச்சை இவற்றின் கீரைகளையும் எள்ளுப்பொடி கரும்பு தயிர் காடி ஸௌவீரம் சுக்தம் என்னும் காடி மோர் ஸுரை ஆஸவம் என்பனவற்றையும் உண்ணுதல் முரணான உணவு அளவுக்கு மீறி உண்ணுதல் உண்டவுடன் மறுபடி உண்ணுதல் சினம் பகலில்

---

1. வாதசோணிதசிகித்ஸிதம்—கேடடைந்த வாத இரத்தத்தால் ஏற்படும் நோய்க்குக் காரணம் இலக்கணம் சிகிச்சை இவற்றைப் பற்றிக் கூறுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுவதாயிற்று.

2. க்ஷாரம்—மருந்துப் பொருட்களை எரித்துத் தயாா செய்யப்பட்ட உப்பு வகை.

உறங்குதல் இரவில் கண் விழித்தல் ஆகிய செய்ல்களால் மென்மையான உடலுள்ளவர்களுக்கும் நல்ல உணவு உண்டு களிப்பவர்களுக்கும் உடலுழைப்பு இல்லாதவர்களுக்கும் பெரும் பாலும் வாதமும் பித்தமும் ஒரே சமயத்தில் சீற்றமடைந்து வாதரத்தம் என்னும் நோயைத் தோற்றுவிக்கின்றன. 5—7

## 2. வாதசோணித நோய் தோன்றும் விதம்

அடிபடுதல் வாந்தி எடுக்கச் செய்தும் பேதியாகச் செய்தும் உடலைத் தூய்மைப்படுத்தாது இருத்தல் எனும் இவற்றால் இரத்தம் கேடடைகிறது. துவர்ப்பு கார்ப்பு கைப்புச் சுவைகளைப் பயன்படுத்தல் குறைவாக உணவு கொள்ளுதல் வறட்சியான உணவு உண்பது உணவு உண்ணாமலேயே இருப்பது குதிரை ஒட்டகம் இவற்றில் ஏறிச் செல்வது நீரில் நீந்துவது தண்ணீரில் விளையாடு வது குதிப்பது வெயில் காலத்தில் கரடுமுரடான வழியில் செல்வது அதிகமான புணர்ச்சி சிறுநீர் மலம் போன்றவற்றின் வேகத்தை அடக்குவது இவற்றால் வாயு அதிகரிக்கிறது. பெருமளவில் வளர்ந்த இந்தவாயு இரத்தத்துடன் கலந்து தன் வழியை அடைத்து விடுகிறது.

இவ்வாறு இரத்தம் முழுவதும் கேடடைந்து விடுகிறது. இவ் வாறு கேடடைந்ததாகிய வாதரத்தம், வாதரத்த நோய் [1]குடம் [2]வாதபலாஸம் [3]ஆட்யவாதம் (ஊனடை தூண் போன்று அசை வற்றிருப்பது) என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றது. 8—11

## 3. வாதரத்த நோய்க்கு உரிய இடங்கள்

கால்கள் கைகள் விரல்கள் பூட்டுகள் இவை யாவும் வாத ரத்த நோய் தோன்றுவதற்கு உரிய இடங்களாகும். முதன்முதலில் கைகளிலும் கால்களிலும் முக்கியமாகத் தோன்றிப் பிறகு உடல் முழுவதும் பரவுகிறது. 12

1. குடம்—குடம் என்றால் எலும்பு பூட்டு. அவ்விடங் களில் தோன்றும் வாதம் குடவாதம் எனப்படும்.
2. வாதபலாஸம்—இந்த நோயில் வாதம் ரத்தத்தால் தடை பட்டு மிக்க வலிமை கொள்வதால் வாதபலாஸம் என்ற பெயர் ஆயிற்று.
3. ஆட்யவாதம்—பொதுவாக உடல்வலிமை மிக்கவர் களுக்குத் தோன்றுவதால் ஆட்யவாதம் எனப்படும்.

### 4. வாதரத்த நோயின் சிறப்பான இடங்கள்

வாயு, மிக்க நுண்ணியதாகையால் எல்லா மூட்டுகளிலும் பரவும் தன்மை கொண்டதாகும். இரத்தம் திரவமாக இருப்பதால் உடலிலுள்ள துவாரங்களில் ஊடுருவிச் செல்லவல்லது. இந்த இரண்டு காரணங்களால் சீற்றமடைந்த வாதமும் இரத்தமும் உடலிலுள்ள இரத்தக்குழாய்கள் முழுவதிலும் செல்கின்றன. இவ்வாறு செல்வதால் மூட்டுகள் மடங்கிப் போய் அங்கே வாத ரத்தங்களின் ஓட்டம் தடைபட்டுக் கலங்கி நின்றுவிடுகிறது. பித்தம் போன்ற தோஷங்களுடன் சேர்ந்து சந்துகளில் தடைபட்டிருக்கின்ற வாத ரத்தங்கள் பலவிதமான வேதனைகளைத் தோற்றுவிக்கின்றன. ஆகையால் இந்நோய் பெரும்பாலும் மூட்டுகளில் துன்பத்தைக் கொடுக்கிறது. இவ்வாறு மூட்டுகளில் தடைபட்ட வாதரத்தங்கள் கடுமையான தோஷங்களுடன் சேர்ந்திருப்பதனால் தோஷங்களுக்குத் தக்கவாறு துன்பங்களை உண்டுபண்ணுகின்றன. 13–15

### 5. வாதரத்த நோயின் முற்குறிகள்

மிக்க வியர்த்தல் அல்லது வியர்க்காமலேயே இருத்தல் உடலில் கருநிறம் தோன்றுதல் தொடுவுணர்ச்சி அற்றுப் போதல் அடிபடுவதனால் அதிக வேதனை தோன்றுதல் மூட்டுகள் தளர்ந்து போதல் செயலில் ஊக்கமின்மை உடல் சோர்ந்து போதல் சிறு சிறு கட்டிகள் தோன்றுதல் முழங்கால் தொடை இடுப்பின் பின்தட்டு இடுப்பு தோள்பட்டை கைகால்கள் உடல் உறுப்புகளின் மூட்டுகள் இவற்றில் ஊசி குத்துவது போன்ற துன்பம் 16-18

### 6. இரண்டு வகையான வாதரத்த நோய்கள்

உத்தானம் கம்பீரம் என வாதரத்த நோய் இருவகைப்படும். தோல் மாமிசம் இவற்றை இருப்பிடமாகக் கொண்டு தோன்றுவது உத்தானம் எனப்படும். இரத்தம் மாமிசம் போன்ற உள்ளடங்கிய தாதுக்களை இருப்பிடாமாகக் கொண்டது கம்பீரம் எனப்படும். 19

### 7. உத்தான வாதரத்தத்தின் இலக்கணம்

அரிப்பு எரிச்சல் குத்தல்வலி நீடித்திருத்தல் ஊசி குத்துவது போன்ற குத்தல்வலி துடிப்பு உறுப்புகள் முடங்கிப் போவது தோல் கருநிறம் கலந்த இரத்த நிறமாதல் அல்லது செப்பு நிறமாதல் என இவை உத்தான வாத ரத்த நோயின் இலக்கணங்களாகும். 20

### 8. கம்பீர வாத ரத்த நோயின் இலக்கணம்

வீக்கம் அசைவற்றுப்போதல் பழுத்துப்போதல் வீக்கத்தின் உட்பகுதியில் மிகக் கடுமையான வலி தோன்றுதல் தோல் கருமை அல்லது செப்பு நிறமாதல் மூட்டுகளில் எரிச்சல் குத்தல் வலி துடிப்பு வேக்காடு எனும் இவை கம்பீர வாத ரத்த நோயின் இலக்கணங்களாகும். 21

### 9. இரண்டு வகையும் கலந்த வாத ரத்த நோயின் இலக்கணம்

வாயு, குத்தல் வலி எரிச்சல் விரைவில் செல்லும் தன்மை ஆகியவற்றுடன் கூடியிருக்கும். மூட்டுகள் எலும்பு மஜ்ஜை (கொழுப்பு) ஆகிய இவற்றில் அடிக்கடி வெட்டுவது போன்ற வலியை உண்டு பண்ணும் அல்லது மூட்டுகளுக்குள் முடங்கிச் செல்லும். உடல் முழுவதும் மிக வேகமாகச் சென்று நோயாளியை நொண்டியாகவோ முடமாகவோ ஆக்கிவிடும்.

எல்லா வகையான உத்தான கம்பீர வாதரத்த நோய்களில் தோன்றுகின்ற இலக்கணங்கள் யாவும் ஒரே நோயாளியிடத்தில் தோன்றினால் அது உத்தானமும் கம்பீரமும் கலந்த வாத ரத்த நோய் என அறிந்து கொள்ள வேண்டும். 22–23

### 10. எண்வகை வாதரத்த நோய்கள்

வாதம் இரத்தம் பித்தம் கபம் இவை தனித்தனியே அதிக அளவில் உள்ள வாதரத்த நோய் இரண்டு தோஷங்கள் மிகவும் அதிகரித்துத் தோன்றும் வாதரத்த நோய் மூன்று தோஷங்களும் சீற்றமடைந்து ஏற்படுகின்ற வாதரத்த நோய் ஆகிய இவற்றின் இலக்கணங்களையும் காரணங்களையும் கூறுகிறேன் கேள். 24

### 11. வாத சீற்றத்தால் தோன்றிய வாதரத்த நோயின் இலக்கணம்

வாதரத்த நோயில் வாதம் அதிகமாக இருப்பதால் குறிப்பாக இரத்தக் குழாய்கள் விரிந்துபோதல் சூலத்தால் குத்துவது போன்ற வலி துடிப்பு ஊசி குத்துவது போன்ற குத்தல்வலி ஆகியவை ஏற்படும். வீக்கம், கரு நிறம் கொண்டு வறண்டும் காணப்படும். சில சமயம் வளர்ந்தும் சில சமயம் தணிந்தும் இருக்கும். சில சமயம் நிறம் மாநிறமாகவும் காணப்படும். இரத்தக் குழாய்கள் விரல்கள் மூட்டுகள் மடங்கிக் கொள்ளுதல் உறுப்புகளில் பிடிப்பு மிகவும் வலி உறுப்புகள் முடங்கிப் போதல் உராய்தல் நோயாளிக்குக் குளுமைத்தன்மை கொண்ட பொருட்களில் வெறுப்பு தோன்றுதல் என்னும் இத்தகைய இலக்கணங்

கள் கொண்டது வாத சீற்றத்தால் தோன்றிய வாதரத்த நோய் என்று உணர்க. 25–26

## 12. இரத்தமிகுதியால் தோன்றிய வாத ரத்த நோயின் இலக்கணம்

இரத்த மிகுதியால் தோன்றிய வாதரத்தநோயில் மிக்க வலியுடன் கூடிய தாமிர நிற வீக்கம் காணப்படும் ஊசி குத்துவது போன்ற குத்தல் வலி நமைச்சல் ஆகியவை காணப்படும். எண்ணெய்ப் பசையும் வறட்சித்தன்மையும் கொண்ட மருந்துகளைப் பயன்படுத்துவதால் நோய் தணிவடைவதில்லை. (இவற்றால் நோய் வலிமை கொள்ளும்). அரித்தபொழுது அவ்விடத்தில் சொறிந்தால் நீர் கசியும். இவை இரத்த மிகுதியால் தோன்றிய வாதரத்த நோயின் இலக்கணங்களாகும். 27

## 13. பித்தம் அதிகமாவதால் தோன்றும் வாதரத்த நோயின் இலக்கணம்

உடலில் அல்லது நோய் கண்ட இடத்தில் எரிச்சல் வேதனை மூர்ச்சை அதிகம் வியர்த்தல் அதிக நாவறட்சி வெறி தலை சுற்றல் சிவப்பு நிறம் கொண்ட புண் காணப்படுதல் கொதிப்பு சீறுவது போன்ற வலி உறுப்புகள் உலர்ந்து போதல் என்பனவை பித்த மிகுதியால் தோன்றிய வாதரத்த நோயின் இலக்கணங்களாகும். 28

## 14. கப மிகுதியால் தோன்றிய வாதரத்த நோயின் இலக்கணம்

உடலில் ஈரத்துணி போர்த்தியது போன்ற உணர்வு பளுத்தன்மை எண்ணெய்ப்பசை உணர்வற்றுப் போதல் குறைந்த குத்தல் வலி என்பனவை கப மிகுதியால் தோன்றிய வாதரத்த நோயின் இலக்கணங்களாகும்.

இரண்டு தோஷங்கள் சீற்றமடைந்த காரணங்களும் இலக்கணங்களும் தோன்றினால் இரு தோஷ வாதரத்த நோய் என்றும் மூன்று தோஷங்கள் சீற்றமடையக்கூடிய காரணங்களும் இலக்கணங்களும் ஒருங்கே ஏற்பட்டிருந்தால் மூன்று தோஷ வாத ரத்த நோய் என்றும் அறிந்து கொள்க. 29

## 15. வாத ரத்த நோயில் தீர்க்கக்கூடியது காலங்கடத்தக்கூடியது தீர்க்க இயலாதது என்பனவற்றின் நிலை

புதிதாகத் தோன்றும் வாதரத்த நோய் ஒரு தோஷத்தைச் சார்ந்து தோன்றி துவக்க நிலையில் எளிதாகத் தீர்க்கக்கூடிய

தாகும். இரண்டு தோஷங்களினால் தோன்றிய வாத ரத்த நோய் காலங்கடத்தக்கூடியது. மூன்று தோஷங்களினால் தோன்றிய வாதரத்த நோய் சிகிச்சைக்கு உட்படாததாகும். மற்றும் ஒரு தோஷத்தைச் சார்ந்து தோன்றியதாயினும் இனி கூறப்போகும் உபத்திரவ இலக்கணங்கள் காணப்பட்டால் அதுவும் சிகிச்சைக்கு உட்படாதது என அறிக. 30

உறக்கமின்மை உணவில் சுவையின்மை இழுப்பு மாமிசம் அழுகிப் போவது தலைப்பிடிப்பு மூர்ச்சை வெறி வேதனை மிக்க நாவறட்சி காய்ச்சல் மதியிழத்தல் உடல் நடுக்கம் விக்கல் முடக்கு வாதம் உறுப்புகள் ஊனமுற்றுப்போதல் அக்கி உடல்வெக்காடு ஊசி குத்துவது போன்ற குத்தல்வலி தலைச்சுற்றல் உழைப்பின்றியே உடலில் சோர்வு தோன்றுவது விரல்கள் வளைந்து முடங்கிப் போதல் கொப்புளம் தோன்றுதல் எரிச்சல் உயிர் நிலைகளில் பிடிப்பு புழுப்புரை ஆகிய துன்பங்களுடன் கூடிய வாதரத்த நோய் தீர்க்க இயலாதது.

இந்தத் துன்பங்களுள் குறிப்பாக மதியிழத்தல் ஒன்று மட்டும் இருந்தாலும் அந்த வாதரத்த நோய் தீர்க்க இயலாதது. 31-32

## 16. வேறு இலக்கணங்களுள்ள தீர்க்கக்கூடிய தீர்க்க இயலாத காலங்கடத்தக்கூடிய வாத ரத்த நோயின் இலக்கணம்

நோய் தோன்றிய இடத்தில் விரணம் உடைந்து சீழ் பெருகிக் கொண்டேயிருத்தல் நிறமாற்றம் அசைவற்றிருத்தல் புற்று புழுப்புரை தோன்றியிருத்தல் உறுப்புகள் சுருங்கிப்போதல் புலன்களில் கொதிப்பு இத்தகைய தன்மைகள் கொண்ட வாத ரத்த நோய்க்குச் சிகிச்சை செய்யலாகாது. (அது தீர்க்க இயலாதது ஆகும்.)

முழுமையான துன்பங்களனைத்தும் இல்லாமல் சிலமட்டும் காணப்பட்டால் அந்த வாதரத்த நோய் காலங்கடத்தக்கூடியது. துன்பமில்லாத வாதரத்த நோய் தீர்க்கக்கூடியது. 33-34

## 17. தீர்க்க இயலாத வாதரத்த நோயின் காரணம்

வாதரத்தநோயில் வாதம், சீற்றமடைந்து கால்கைகள் முதலியவற்றின் இடுக்குகளில் தங்கி உடலில் பரவும் ரத்தத்தின் வழியைத் தடுக்கும். அப்பொழுது மேலும்சிற்றமடைந்த ரத்தம்

வாயு பரவும் வழிகளைத் தடுக்கும். இவ்விதம் அப்பொழுது பலவகைத் துன்பங்கள் அதிகமாகத் தோன்றி நோயாளியின் உயிரைப் போக்குகின்றன. 35

## 18. வாதரத்த நோய்க்குச்

அந்நிலை வாதரத்தநோயில் 1. கொம்பு 2. அட்டைப் பூச்சி 3. ஊசி 4. சுரைக்குடுக்கை 5. கீறிஎடுத்தல் 6. நரம்பைக் கீறுவது ஆகிய சிகிச்சை முறைகளுள்ஏதாவது ஒன்றைப் பயன் படுத்தி தோஷங்களினுடையவும் நோயாளியினுடையவும் வலிமையை ஆராய்ந்து அதற்கு ஏற்றவாறு சிகிச்சை புரிந்து இரத்தத்தைவெளியேற்ற வேண்டும். 36

வாதரத்த நோயில் வேதனை எரிச்சல் ஈட்டியால் குத்துவது போன்ற குத்தல்வலி ஊசியால் குத்துவது போன்ற வலி ஆகியவை தோன்றிய உடற்பகுதியில் அட்டைப்பூச்சியைக் கொண்டு இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். உணர்வின்மை அரிப்பு நமைச்சல் ஆகிய தன்மைகளையுடைய உடற்பகுதியில் கொம்பு அல்லது சுரைக்குடுக்கையைக் கொண்டு இரத்தத்தைவெளியேற்ற வேண்டும்.

வாதரத்தம் ஓரிடத்தில் நிலையாக நிற்காமல் அங்குமிங்கும் பரவுமாகில் நரம்பையோ அல்லது நோய் பரவியுள்ள இடத்தில் கீறியோ கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

## 19. இரத்தத்தை வெளியேற்றத் தடை

நோயாளியின் உடல் சோர்ந்திருக்கும் பொழுதும் வாதம் மிகுந்து இரத்தம் வறண்டிருக்கும்பொழுதும் இரத்தத்தை வெளியேற்றக் கூடாது. 37-38

## 20· இரத்தத்தை மிகுதியாக வெளியேறச் செய்வதால் ஏற்படும் தீமைகள்

இரத்தத்தை மிகுதியாக வெளியேற்றினால் உடலின் உட்பகுதிகளில் வீக்கம் தோன்றும். உறுப்புகள் மரத்துப்போகும். நடுக்கம் தோன்றும், நரம்புகளைச் சார்ந்த நோய்கள் தோன்றும், உடல் உறுப்புகள் முடங்கி உலர்ந்து போகும். நோயாளி இறக்கவும் நேரிடலாம், எனவே எண்ணெய்ப்பசையுள்ள பகுதியிலிருந்து அளவாக இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 39

## 21. அதிக அளவில் இரத்தம் எடுப்பதன் தீங்கு

அளவுக்கு மீறி அதிகமாக இரத்தத்தை வெளியேற்றினால் நொண்டித்தன்மை முதலிய வாதநோய்களைக் கொடுக்கும். மரணமும் தோன்றலாம். ஆகையால் எண்ணெய்ச்சிகிச்சை செய்த பிறகு அளவுடன் இரத்தத்தை வெளியேறச்செய்ய வேண்டும். 40

## 22. வாதரத்த நோய்க்கு (பொதுவாக)ச் சிகிச்சை

வாதரத்த நோயில் பொதுவாக முதன் முதலில் எண்ணெய்ச் சிகிச்சை செய்த பிறகு எண்ணெய் சேர்ந்த பொருள்களாலோ வறட்சித்தன்மையும் மென்மை குணமும் பொருந்திய பொருள் களாலோ மலங்கழிக்கச் செய்ய வேண்டும். அடிக்கடி எண்ணெய் வஸ்தி கஷாய வஸ்தி ஆகியவற்றைப் பயன்படுத்துவது மிகவும் சிறந்தது. பெரும்பாலும் எரிச்சலை உண்டாக்காத பொருள் களின் கஷாயத்தை மேலே தாரையாக ஊற்றுவது அவற்றின் விழுதை மேற்பூச்சு பூசுவது அவற்றின் விழுது கஷாயம் ஆகிய வற்றால் தயாரித்த பொருள்களால் எண்ணெய்க்குளியல் செய் விப்பது அதேபொருள்களால் தயாரிக்கப்பட்ட சோறு எண்ணெய் இவற்றை மேல்பூச்சாகப் பயன்படுத்துவது ஆகியவை மிகவும் சிறந்தவை. 41

## 23. உத்தான கம்பீரவாதரத்த நோயில் சிகிச்சை

உத்தானகம்பீரவாதரத்தநோயின் சிகிச்சை முறை களைக் கூறுகிறேன். கேள். வெளிப்படையான உத்தானவாத ரத்தநோயில் மேற்பூச்சு பூசுதல் எண்ணெய்க்குளியல் ஊற்றுதல் ஒற்றடம் கொடுத்தல் எனும் இம்முறைகளால் சிகிச்சை செய்ய வேண்டும்.

(கம்பீர) உள்ளுக்குள் ஊடுருவிய வாதரத்த நோயில் மலங் கழிக்கக் கொடுப்பது கஷாயவஸ்தி எண்ணெய் பருகுதல் என்ற முறைகளால் சிகிச்சை செய்ய வேண்டும். 42—43

## 24. வாதத்தை முக்கியமாகக் கொண்ட வாத ரத்த நோயில் சிகிச்சை

மிக்கவாதத்தினால் தோன்றிய வாதரத்த நோயில் நெய் பருகுதல் எண்ணெயை உடலில் தேய்த்துப் பிடித்து விடுதல் அல்லது எண்ணெய் பருகுதல் வஸ்தி வஸை அல்லது மஜ்ஜை இவற்றைப் பருகுதல் எண்ணெய்க்குளியல் எண்ணெய்வஸ்தி

சிறிது சூடான ஒற்றடம் ஆகியமுறைகளைக்கொண்டு சிகிச்சை செய்யவேண்டும். 44

## 25. இரத்தபித்தத்தை முக்கியமாகக் கொண்ட வாதரத்த நோயில் சிகிச்சை

இரத்தபித்தத்தை முக்கியமாகக் கொண்ட வாதரத்த நோயில் மலங்கழிக்கச்செய்தல் நெய்யைப் பருகச்செய்தல் பாலைப்பருகச்செய்தல் கஷாயத்தை மேலே ஊற்றுதல் எண்ணெய் வஸ்தி குளிர்ச்சியையும் எரிச்சலையும் தணிக்கக்கூடிய பொருள்களால் மேற்பூச்சு பூசுதல் இம்முறைகளால் சிகிச்சை செய்ய வேண்டும். 45

## 26. கபத்தை முக்கியமாகக கொண்ட வாதரத்த நோயில் சிகிச்சை

கபத்தை முக்கியமாகக் கொண்ட வாதரத்த நோயில் மென்மையாக வாந்தியெடுக்கச் செய்ய வேண்டும். எண்ணெய் ஊற்றுதல் பட்டினிகிடக்கச் செய்தல் என்பவைகளை அதிகமாகச் செய்விக்கக்கூடாது. சூடான மேற்பூச்சு பூசுவது சிறந்தது. 46

## 27. வாதரத்த நோயில் குளிர்ச்சியான மேற்பூச்சு பூசுவதன் தீங்கு

கபத்தையும் வாதத்தையும் முதன்மையாகக் கொண்ட வாதரத்த நோயில் குளிர்ந்த பொருள்களால் மேற்பூச்சு பூசுவதனால் தோஷங்கள் அசைவற்றுப் போகின்றன. அதனால் எரிச்சல் வீக்கம் வேதனை நமைச்சல் இவை அதிகமாகின்றன. 47

## 28. சூடான மேற்பூச்சு பூசுவதன் தீங்கு

இரத்தமும் பித்தமும் முதன்மையாகக் கொண்ட வாதரத்த நோயில் உஷ்ணவீரியமுள்ள பொருள்களால் மேற்பூச்சு பூசுவதனால் தோலில் வெடிப்பும் அழுகுதலும் ஏற்படுகின்றன. ஆகையினால் வாதரத்த நோயில் தோஷங்களின் வலிமையை நன்கு அறிந்து மருத்துவன் சிகிச்சை செய்ய வேண்டும். 48

## 29. வாதரத்த நோய்க்குத் தகாதவை

பகல் உறக்கம் வெயில் அல்லது நெருப்பின் அருகில் உட்காருதல் உடற்பயிற்சி புணர்ச்சி கார்ப்புச்சுவையும் உஷ்ண வீர்யமும் குருகுணமுமுள்ள பொருள்கள் கபத்தைத் தோற்றுவிக்கக்கூடிய உணவு உப்பு புளிப்புச்சுவை என்னும் இவற்றை வாதரத்த நோயில் தவிர்க்க வேண்டும். 49

## 30. வாதரத்த நோயில் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள்

பழமையான யவஅரிசி கோதுமை அறுபதாங்குறுவை அரிசி நீவாரஅரிசி சம்பாஅரிசி என்பனவற்றை வாதரத்த நோயில் உணவாகக் கொடுப்பது நல்லது. நோயாளி மாமிச உணவை உண்பவனாகில் [1]விஷ்கிர கணத்தைச் சார்ந்த பறவைகள் [2]பிரதுத கணத்தைச் சார்ந்த பறவைகள் ஆகியவற்றின் மாமிச ரஸத்தை உணவாகக் கொடுக்க வேண்டும். 50

மேலும் வாதரத்த நோயில் துவரை கடலை பயறு பெரும் பயிறு சிறுபயறு ஆகியவற்றின் கஞ்சியில் அதிக அளவில் நெய் சேர்த்துக் கொடுப்பது சிறந்தது. 51

## 31. வாதரத்த நோயில் பயன்தர வல்ல கீரை வகைகள்

[3]ஸுவிஷண்ணகம் பிரம்பின்துளிர் மணித்தக்காளிக்கீரை தண்ணீர்விட்டான் கிழங்குக்கீரை சக்கரவர்த்திக்கீரை பசலைக் கீரை ஸுவர்ச்சலைக்கீரை என்னும் இவற்றை நெய்யிலும் மாமிச ரசத்திலும் பக்குவம் செய்து கீரை சாப்பிடும் நோயாளிக்குக் கொடுக்க வேண்டும். அவற்றையே துணை உணவாகக் கொடுக்க வேண்டும். பசு எருமை வெள்ளாடு இவற்றின் பாலையும் பயன் படுத்த வேண்டும். 52-53

இவ்விதமாக வாதரத்த நோயின் சிகிச்சை முறைகள் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. மறுபடி இதுவே மேலும் விளக்கமாக விவரிக்கப்படும். 54

## 32. ச்ராவண்யாத்யம்

ச்ராவணீ (தைவேளை) க்ஷீரகாகோலி ஜீவகம் ரிஷபகம் அதிமதுரம் என்னும் இவற்றைச் சம அளவில் எடுத்து விழுதாகச் செய்து நெய்க்குச் சம அளவு பால் சேர்த்து முறைப்படி நெய் தயாரித்துப் பயன்படுத்தினால் வாதரத்த நோய் நீங்கும். 55

1. விஷ்கிர கணம்—லாவம் விச்சுளி குயில் செங்குருவி சக்கர வாகப்புள் தித்தரி இராஜாளி கோழி கொக்கு முதலிய நிலத்தைக் காலால் கீறி உணவு தேடும் பறவைகள்.
2. பிரதுதகணம்—கொத்தித்தின்னும் பறவைகளின் இனம்.
3. ஸுவிஷண்ணகம்—ஆரைக்கீரை.

## 33. [1]பலா கிருதம்

சித்தாமுட்டி, பேராமுட்டி மேதா பூனைக்காலிவிதை தண்ணீர்விட்டான் கிழங்கு காகோலி க்ஷீரகாகோலி சித்தரத்தை ரித்தி என்னும் இவற்றைச் சம அளவில் கொண்டு விழுதாகச் செய்து அதற்கு நான்குமடங்கு நெய்யும் நெய்க்கு நான்கு மடங்கு பாலும் சேர்த்து முறைப்படி நெய் தயார் செய்க. இது பலாகிதரும் எனப்படும். இந்த நெய்யைப் பயன்படு தினால் வாதரத்தநோய் நீங்கும். மேலும் இது இதயநோய் சோகை அக்கி காமாலை காய்ச்சல் என்பனவற்றையும் போக்கும். 56—57

## 34. [2]பருஷக கிருதம்

துராய்ப்பூண்டு கீழாநெல்லி காகோலி க்ஷீரகாகோலி தண்ணீர்விட்டான் கிழங்கு நீர்க்கோரைக்கிழங்கு என்னும் இவற்றைச் சம அளவில் கொண்டு முறைப்படி கஷாயமாகச் செய்து அத்துடன் முன்கூறிய அப்பொருள்களைச் சம அளவில் எடுத்துச் செய்த விழுதையும் சேர்த்து நெய்யுடன் முறைப்படி நெய் தயார் செய்க. நெய் பக்குவமாகும் போது சிற்றீச்சைச் சாறு திராட்சைச்சாறு குமிழம் பட்டைச்சாறு கருப்பஞ்சாறு முதுக்கன்கிழங்குச்சாறு என்பவை நெய்க்குச் சமபாகமும் நெய்க்கு நான்கு மடங்கு பாலும் சேர்த்து முறைப்படி நெய் தயாரிக்க வேண்டும். இது பிராயோகிக் கிருதம் என்றும் பருஷக கிருதம் என்றும் சொல்லப்படுகிறது. இது வாதரத்தம் மார்புக்குள் அடி பட்டு காயம் ஏற்படுதல் தாதுக்குறைவு அக்கி பித்தத்தை முதன்மையாகக் கொண்ட காய்ச்சல் என்பனவற்றைப் போக்கும். 58—60

## 35. ஜீவனீய கிருதம்

பெரும்பஞ்சமூலம் சிறுபஞ்சமூலம் வெண்மூக்கரட்டை ஆமணக்குவேர் சிவப்புமூக்கரட்டை காட்டுப்பயறு மகாமேதா காட்டுஉளுந்து தண்ணீர்விட்டான் கிழங்கு சங்கபுஷ்பி காட்டுச் சதகுப்பி சித்தரத்தை பேராமுட்டி சித்தாமுட்டி இவற்றுள் ஒவ்வொன்றும் இரண்டு பலம் எடுத்து இடித்து 256 பலம் தண்ணீருடன் கஷாயமாகக் காய்ச்சுக. நான்கில் பங்காகக் காய்ச்சிய அந்தக் கஷாயத்திற்குச் சமமாகப் பசும்பாலும் நெல்லிக்காய்ச்சாறு கருப்பஞ்சாறு ஆட்டுமாமிசரஸம் என்னு

1. பலா—சித்தாமுட்டி.
2. பருஷகம்—சிற்றீச்சை.

மிவை ஒவ்வொன்றும் நெய்க்குச் சம அளவும் கொண்டு ஒன்றாகச் சேர்த்துக் கொள்க. அதில் 64 பலம் நெய் சேர்த்து எல்லா வற்றையும் ஒன்றாகக் கலக்கி இலேசான தீயில் நெய் தயார் செய்ய வேண்டும். அந்த நெய் பக்குவம் ஆகும் போது மேதா மகாமேதா குமிழம்பழம் தாமரை மூங்கிலுப்பு அரிசித்திப்பிலி திராட்சை தாமரைவிதை மூக்கரட்டை சுக்கு க்ஷீரகாகோலி பத்மகாஷ்டம் கண்டங்கத்தரி முள்ளுக்கத்தரி முதுக்கன் கிழங்கு சிறுங்காடகக்கிழங்கு [1]பவ்யம் [2]உருமானம் [3]நிகோசகம் புளிப்ப் நாவல்வேர் பேரீச்சை அக்ரூட்பருப்பு வாதாம்பருப்பு பிஸ்தாபு பருப்பு [4]அபிஷுகம் என்னும் இவற்றை விழுதாகச் செய்து அதில் சேர்க்க வேண்டும். இவ்வாறு நெய்யாகத் தயாரித்த பிறகு வடிகட்டித் தனியாக எடுத்து வைத்துக்கொள்க. அது குளிர்ந்த பிறகு அதில் தேன் சேர்த்துக்கடைந்து தூய்மையான பாத்திரத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதற்கு மங்களச் சடங்குகள் செய்த பிறகு அந்த நெய்யைப் பயன்படுத்துக. இக்கிருதம் சோகை காய்ச்சல் விக்கல் குரல் மாற்றம் [5]பகந்தரம் விலாவலி தாதுக்குறைவு இருமல் மண்ணீரல் வீக்கம் வாதரத்த நோய் அடிபட்ட காயம் உடலுருக்கி கால்கைவலி சிறுநீர்ப் பையில் கல் சிறுநீரில் மணல்போன்றது வெளிவருதல் உடல் முழு வதும் தோன்றும் வாதநோய் ஓர் உறுப்பில் தோன்றும் வாத நோய் சிறுநீர் அடைப்பு என்னும் நோய்களைப் போக்கும். மேலும் இது நிறத்தை வளர்க்கும். முதுமையையும் நரையை யும் நீக்கும். உயிரை ஊட்டும். ஆண்மையை வளர்க்கும். இதைப்பயன் படுத்துவதனால் மலடியான மாதுக்கும் பிள்ளைப் பேறு ஏற்படும். 61–70

### 36. திராக்ஷாதிக்ஷீரம்

திராட்சை அதிமதுரம் எனும் இவற்றால் முறைப்படி தயார் செய்த கஷாயத்தைச் சர்க்கரை கலந்த நெய்யிலோ சீந்தில் கொடிச் சாற்றில் தயார் செய்த பாலிலோ கலந்து குடிக்கச் செய்ய வேண்டும். 71

### 37. ஜீவகாதி மகாஸ்நேஹம்

ஜீவகம் ரிஷபகம் மேதா பெரிய தண்ணீர்விட்டாங்கிழங்கு (ரிஷ்யப்ரோகதா) தண்ணீர்விட்டான்கிழங்கு அதிமதுரம்

---

1. பவ்யம்—இங்குணமரத்தின் பழம்.
2. உருமாணம்—ஒரு வகைப்பழம்.
3. நிகோசகம்—புளிப்பு நாவல் வேர்.
4. அபிஷுகம்—காடி.
5. பகந்தரம்—பவுத்தரம்.

கிணிகிணிப்பாலை மதுபர்ணீ காகோலி க்ஷீரகாகோலி காட்டுப் பயறு காட்டு உளுந்து *தசமூலப் பொருள்கள் மூக்கரட்டை சித்தாமுட்டி சீந்தில்கொடி முதுக்கன்கிழங்கு அமுக்கராக் கிழங்கு சிறுபீளை என்னும் இவற்றால் முறைப்படி தயார் செய்த கஷாயத்தில் அவைகளையே விழுதாகச் செய்து சேர்த்து நெய்யோ எண்ணெயோ சேர்த்து நெய்யாகவோ எண்ணெயாக கவோ தயார் செய்து கொள்ள வேண்டும். பிறகு அதில் காடுகளில் வாழும் கொத்தித்தின்னும் பறவைகள் நிலத்தைக் காலால் கீறி உணவு தேடிப் பொறுக்கித் தின்னும் பறவைகள் ஆகியவற்றின் [1]வஸை [2]மஜ்ஜை இவற்றைக் கிடைக்கும் அளவில் சேர்க்க வேண்டும். இந்த நெய் அல்லது எண்ணெய்க்கு நான்கு மடங்கு பசும்பால் சேர்த்து முறைப்படி நெய் அல்லது எண்ணெய் தயார் செய்து கொள்க. ஜீவகாதி மஹாஸ்நேஹத்தை பயன்படுத் தினால் உடல் முழுவதும் பரவியுள்ள வாதரத்த நோயும் மற்ற கடுமையானவாதநோய்களும் நீங்கும். 72—75

## 38. [3]ஸ்திராதி கிருதம்

மூவிலை நெருஞ்சில் முள்ளுக்கத்தரி நன்னாரி தண்ணீர் விட்டான்கிழங்கு குமிழம்பட்டை பூனைக்காலிவிதை சிவப்பு மூக்கரட்டை வெள்ளை மூக்கரட்டை சித்தாமுட்டி பேராமுட்டி என்பனவற்றால் முறைப்படி தயார் செய்த கஷாயத்தில் நான்கு மடங்கு பால் நான்கு மடங்கு எண்ணெய் அல்லது நான்கு மடங்கு நெய் சேர்த்துத் தனித்தனியாகப் பக்குவமாகும் நிலையில் அதில் மேதா தண்ணீர்விட்டான் கிழங்கு அதிமதுரம் கீரைப்பாலை ஜீவகம் ரிஷபகம் எனும் இவற்றை விழுதாகச் செய்து சேர்த்து முறைப்படி எண்ணெய் அல்லது நெய் தயார் செய்து கொள்க. தயார் செய்த இந்த எண்ணெய் அல்லது நெய்யில் ஒரு தோலா நெய் மூன்று தோலா பால் ஒன்றரைத்தோலா சர்க்கரை இவற்றையும் சேர்த்து மத்தினால் கடைந்து மூன்று தோஷங் களினால் தோன்றிய வாதரத்த நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும். 76—78

---

* தசமூலப்பொருட்கள் — சிறுமல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்தரி, சிறுவழுதுணை, நெருஞ்சில், வில்வம், தழுதாழை, பெருவாகை, பெருகுமிழன், பாதிரி.

1 வஸை—நிணநீர்.

2. மஜ்ஜை—எலும்புக்குள்ளிருக்கும் சோறு.

3. ஸ்திரா—மூவிலை.

அல்லது எண்ணெய் பால் சர்க்கரை இம்மூன்றையும் ஒன்றாகக்கடைந்து நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும். அல்லது நெய் எண்ணெய் சர்க்கரை தேன் இவற்றில் பால்சேர்த்து நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும். 79

*அம்சுமதி (மூவிலை) கொண்டு முறைப்படி தயாரித்த பதினாறு பலம் கஷாயத்தில் இரண்டு பலம் பால் சர்க்கரை சேர்த்துக் கடைந்து பருகக் கொடுக்கலாம். அல்லது அரிசித் திப்பிலி சுக்கு என்பனவற்றால் முறைப்படி தயாரித்த கஷாயம் வாதரத்த நோய்க்குச் சிறந்தது. 80

சித்தாமுட்டி தண்ணீர்விட்டான்கிழங்கு சித்தரத்தை தசமூலப் பொருள்கள் உவகை என்பனவற்றின் விழுது சேர்த்துத் தயார் செய்த பாலைப் பருகச் செய்தால் வாத சம்பந்தமான வேதனைகள் நீங்கும். சிவதை ஆமணக்குவேர் மூவிலை இவற்றின் விழுதில் தயார் செய்த பால் வாத நோயைப் போக்கும். 81

நோய்களை நேராகச் செய்வதற்கு (அனுலோமனம்) பசுவின் சிறுநீரில் அப்பொழுதே கறந்த சூடான பால் சேர்த்துப்பருகக் கொடுக்க வேண்டும். பித்தத்தாலோ ரத்தத்தாலோ சூழப்பட்ட வாதத்தைக்கொண்ட வாதரத்த நோயில் சிவதை சூரணத்தை கறந்த சூடு தணியாத பாலில் சேர்த்துப் பருகச் செய்க. 82

தோஷம் மிகுதியாக உள்ளவனுக்கு மலம் கழிப்பதற்காகப் பாலுடன் ஆமணக்கெண்ணெயை நாள்தோறும் பருகக் கொடுத்து எண்ணெய் சீரணமான பிறகு பால் சாதத்தை உண்ணக்கொடுக்கவும். 83

வாதரத்த நோயால் துன்புறுகிறவனுக்குக் கடுக்காய்க் கஷாயத்தில் நெய்யைத் தாளித்து பருகக் கொடுக்கவும். அல்லது சிவதை சூரணத்தைப் பாலுடனோ திராட்சைச் சாறுடனோ பருகக் கொடுக்கவும். 84

வாதரத்த நோயாளிக்குக் குமிழம் வெண்சிவதை திராட்சை கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் சிற்றீச்சை என இவற்றில் தயாரித்த கஷாயத்தில் இந்துப்பையும் தேனையும் சேர்த்து மலம் கழிக்கச் செய்வதற்குப் பருகக் கொடுக்கலாம். 85

---

* அம்சுமதி—மூவிலை

திரிபலா கஷாயத்தில் தேன் சேர்த்துப் பருகச் செய்யலாம். அல்லது கபம் முதன்மையாகக் கொண்ட வாத ரத்த நோயில் நெல்லிக்காய் மஞ்சள் கோரைக்கிழங்கு எனும் இவற்றால் தயார் செய்த கஷாயத்தைப் பருகச் செய்யலாம். 86

வாதரத்த நோயில் வாதம், பித்தம் முதலியவற்றால் சூழப் பட்டிருக்கும் பொழுது முன்பு கூறிய பேதியாகச் செய்யும் மருந்துகளை அல்லது கல்பஸ்தானத்தில் கூறப்பட்ட மென்மை யான மலம் கழிக்கக் கொடுக்கத் தக்க மருந்துகளை நெய்முதலிய எண்ணெய் பொருட்களில் கலந்து பல முறை மலம் கழிக்கக் கொடுக்க வேண்டும். 87

வாதரத்த நோயால் துன்புறுகிற நோயாளியினுடைய தோஷங்களை வெளியேற்ற நெய் சேர்த்துத் தயாரித்த பால் வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். வாதரத்த நோயை நீக்கு வதற்கு வஸ்திக்கு ஈடான வேறு மருந்தும் கிடையாது. 88

சிறுநீர்ப்பை தொடையிடுக்கு விலாப்புறங்கள் தொடை எலும்பு வயிறு ஆகியவைகளில் வேதனை உதாவர்த்த (மேல் சுழல்வாயு) நோயால் துன்புறுதல் இவற்றிற்கு எண்ணெய் வஸ்தி யுடன் கஷாய வஸ்தியும் சேர்த்துப் பயன்படுத்துவது சிறந்தது. 89

அறிவாளியான மருத்துவன், வாதரத்த நோயில் வயிற்றில் எரிச்சலும் குத்தல் வலியும் ஏற்படுமாயின் அவற்றைத் தணிக்க இனி சொல்லப்போகும் எண்ணெய் வகைகளை வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். மேலும் எரிச்சலையும் குத்தல் வலியையும் தணிவடையச் செய்ய மூக்கில் மருந்திடுதல் எண்ணெய்க் குளியல் எண்ணெயை உடல் மேல் ஊற்றுதல் என்ற முறைகளிலும் இனி கூறப்போகும் தைலங் களைப் பயன்படுத்த வேண்டும். 90

### 39. மதுபர்ண்யாதி தைலம்

100 பலம் அதிமதுரத்தை 256 பலம் தண்ணீரில் இட்டு நான்கில் ஒரு பங்காகும்படி காய்ச்சி அதில் எண்ணெய் 64 பலம் பால் 64 பலம் சேர்த்துக் காய்ச்சிப் பக்குவமாகும் நிலையில் சதகுப்பை தண்ணீர் விட்டான் கிழங்கு பெருங் குறும்பை எருக்கம்பூ அகில் சந்தனம் மூவிலை சிறுபுள்ளடி ஜடா

மாம்சி மேதா மகாமேதா கிணிகிணிப்பாலை காகோலி க்ஷீரகா கோலி கீழாநெல்லி ரித்தி பத்மகாஷ்டம் ஜீவகம் ரிஷபகம் கீரைப் பாலை இலவங்கப்பட்டை இலவங்கப்பத்திரி [1]நகம் விளாமிச்ச வேர் பிரபேளண்டரீகம் மஞ்ஜிஷ்டி நன்னாரி சிறுகாட்டு வெள்ளரி தனியா இவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் வீதம் கொண்டு செய்த விழுதைச் சேர்த்து அதில் எண்ணெய் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்து கொள்க. இதைப் பருகுதல் எண்ணெய்க்குளியல் வஸ்தி நஸ்யம் எனும் இந்நான்கு வகைகளிலும் பயன்படுத்தலாம். தொல்லைகளுடன்கூடி உடல் உறுப்புகளில் வேதனையுடன் உடல் முழுவதும் பரவியுள்ள வாத ரத்தநோய் வாதநோய் இரத்தபித்தம் எரிச்சல் வேதனை காய்ச்சல் என்பவைகள் இதனால் நீங்குகின்றன. மேலும் இதைப் பயன்படுத்தினால் வலிமையும் பொலிவும் பெறலாம். 91–95

## 40. சுகுமார தைலம்

அதிமதுரம் 100 பலம் திராட்சை பேரீச்சை சிற்றீச்சை இலுப்பை பேராமுட்டி முஞ்சப்புல் மஞ்ஜாதகம் இவற்றுள் ஒவ்வொன்றும் 16 பலம் குமிழம் 64 பலம் இவை எல்லாவற்றையும் நான்கு [2] துரோணம் தண்ணீரில் எட்டில் ஒரு பங்கு மிகுதி யாகும்படி காய்ச்சி அதில் எண்ணெய் சேர்த்துப் பக்குவமாகும் சமயத்தில் நெல்லிக்காய்ச்சாறு குமிழம் முதுக்கன் கிழங்கு கருப் பஞ்சாறு இவை ஒவ்வொன்றும் எண்ணெய்க்குச் சம அளவும் பசும்பால் நான்கு துரோணமும் சேர்த்துக் கடம்பமரம் நெல்லிக் காய் அக்ரூட் தாமரை விதை நீர்க்கோரைக்கிழங்கு சிருங்காடகம் சுக்கு இந்துப்பு அரிசித்திப்பிலி சர்க்கரை[3] ஜீவனீயக் கூட்டுப் பொருள்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் கொண்டு செய்த விழுதைச் சேர்த்து அதில் எண்ணெய் சேர்த்து முறைப்பத எண்ணெய் தயார் செய்ய வேண்டும். குளிர்ந்த பிறகு அந்த எண்ணெயில் 16 பலம் தேன் சேர்த்து வைத்துக் கொள்க. இது சுகுமாரதைலம் எனப்படும். இதை மூக்கில் மருந்திடுதல் எண்ணெய்க்குளியல் பருகுதல் வஸ்தி இந்த நான்கு வகைகளிலும் பயன்படுத்தலாம். இதைப் பயன்படுத்துவதனால் எல்லாவகை யான வாதநோய்கள் தாடைப்பிடிப்பு மென்னி அசைவற்றுப்

---

1. நகம்—நாகணம் (ஒருவகை வாசனைப் பொருள்)
2. துரோணம்—256 பலம்.
3. ஜீவனீய கூட்டுப் பொருள்கள்—ஜீவகம், ரிஷபகம் மேதா மகாமேதா காகோலி க்ஷீரகாகோலி காட்டுப்பயறு காட்டு உளுந்து கீரைப்பாலை அதிமதுரம்.

போதல் எல்லா உறுப்புகளிலும் அல்லது உடலில் ஏதேனும் ஓருறுப்பிலும் தோன்றிய வாத நோய் அடிபட்டு பலஹீனமாதல் மார்புக்குள் அடிபட்ட நோய் காய்ச்சல் என்னும் நோய்கள் நீங்கும். இந்த சுகுமார தைலம் வாதரத்தநோயை நீக்கி நல்ல குரல் நிறம் ஆரோக்யம் வலிமை செழிப்பு ஆகியவற்றையும் அளிக்கும். 96–102

## 41 [1]அமிருதாதி தைலம்

சீந்தில் கொடி 100 பலம் அதிமதுரம் சிறுபஞ்சமூலப் பொருள்கள் மூக்கரட்டை சித்தரத்தை ஆமணக்கு வேர் ஜீவனீய கூட்டுப் பொருள்கள் என்பவை ஒவ்வொன்றும் நூறு பலம் சித்தா முட்டி 500 பலம் இலந்தை வில்வம் யவஅரிசி உளுந்து கொள்ளு இவை தனித்தனியாக 64 பலம் உலர்ந்த குமிழ மரத்தின் மலர் 256 பலம் எடுத்து இந்த எல்லாப் பொருள்களையும் தூள் செய்து 100 துரோண அளவு தண்ணீரில் இட்டு நான்கு துரோணம் மிஞ்சும்படி காய்ச்சி வடிகட்டி அதில் 256 பலம் எண்ணெய் எண்ணெய்க்கு ஐந்து மடங்கு பால் சேர்த்து இலேசான தீயில் பக்குவம் செய்க. பக்குவமாகும் நிலையில் சந்தனம் விளாமிச்சவேர் சிறுநாவல்பூ லவங்கப்பத்திரி சிற்றேலம் அகில் கோஷ்டம் கிரந்திதகரம் அதிமதுரம் இவை ஒவ்வொன்றும் மும்மூன்று பலம் மஞ்சிஷ்டி எட்டு பலம் கொண்டு செய்த விழுதை அந்த எண்ணெயில் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்து கொள்ள வேண்டும். நன்றாகத் தயாரித்த இந்த உயர்ந்த எண்ணெயை வாத ரத்தநோய் [2]உரக்ஷதத்தால் தோன்றும் வலிமைக் குறைவு அடிபடுவதால் ஏற்படும் துன்பம் விந்துக்குறைவு எனும் நோய்களில் பயன் படுத்த வேண்டும். மேலும் இது எல்லா நோய்களையும் நீக்கு கிறது. நடுக்கம் உதறல் எலும்புமுறிவு உடல் முழுவதும் பரவியுள்ள வாதம் ஓர் உறுப்பில் பரவியுள்ள வாதம் பெண்குறி நோய் காக்கைவலிப்பு பித்து சுண்டிசசுண்டி நடத்தல் நொண்டு தல் ஆகிய நோய்களையும் தீர்க்கவல்லது. அமிருதாதி தைலம் என்று பெயர்பெற்ற இந்தச் சிறந்த எண்ணெயை மாதவிடாய் நாட்களில் பருகினால் பெண்களுக்கு மகப்பேறு உண்டாகும். இதைப் பருகுதல் மூக்கில் மருந்திடுதல் வஸ்தி எண்ணெய்க் குளியல் என நான்கு வகைகளிலும் பயன்படுத்தலாம். 103–109

1. அம்ருதா—சீந்தில் கொடி.

2. உரக்ஷதம்—மார்பில் அடிபடுதல்

## 42. மகாபத்மகதைலம்

தாமரை நொச்சி அதிமதுரம் பசலைக்கீரை ([1]பேனிலா) பதிமுகம் நீலத்தாமரை எனும் இவற்றுள் ஒவ்வொன்றும் ஐந்து பலமும் தர்பை சித்தாமுட்டி சந்தனம் புரசு எனும் இவற்றுள் ஒவ்வொன்றும் ஐந்து பலம் ஆக எல்லாவற்றையும் தூள் செய்து அத்தூளை முறைப்படி கஷாயம் காய்ச்சி அதில் 16 பலம் எண்ணெய் அதற்குச்சமமாக ஸெளவீரம் என்னும் காடி சேர்த்துப் பாச்சோத்தி கறுப்பு அகில்வெட்டிவேர் ஜீவகம் ரிஷபகம் சிறுநாவல்பூ மருதாணி லதாகஸ்தூரி இலவங்கப்பத்திரி தாமரைக்ஸேரகம் பதிமுகம் பிரபௌண்டரீக்கட்டை குமிழம் ஜடாமாம்சி மேதா ஞாழல் குங்குமப்பூ என்பனவற்றுள் ஒவ்வொன்றும் கால் பலமும் மஞ்சிஷ்டி ஒரு பலமும் கொண்டு எல்லாவற்றையும் விழுதாக அரைத்து கஷாயத்தில்சேர்த்து முறைப்படி தைலம் தயார் செய்து கொள்ள வேண்டும். மகாபத்ம தைலம் எனப்படும் இது வாத நோயையும் காய்ச்சலையும் போக்கும். 110–113

## 43. [2]குட்டாக பத்மகதைலம்

பத்மகாஷ்டம் விளாமிச்சவேர் அதிமதுரம் மஞ்சள் எனும் இவற்றின் கஷாயத்தில் க்ஷீரகாகோலிகாகோலி சந்தனம் என்பவற்றை விழுதாக அரைத்துச் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்ய வேண்டும். இந்த குட்டாக (சிறு) பத்மகதைலம், வாதரத்தம் எரிச்சல் எனும் நோய்களைத் தீர்க்கும். 114

## 44. சதபாகமதுகதைலம்

நூறு பலம் அதிமதுர விழுதில் ஆயிரம் பலம் பால் சேர்த்து 250 பலமாகக் காய்ச்சி, அதில் நான்கு துரோணம் எண்ணெயையும் ஒரு பலம் அதிமதுர விழுதையும் சேர்த்து, முறைப்படி தைலம் தயார் செய்ய வேண்டும். அல்லது அதிமதுரம் குமிழம் என்பனவற்றின் கஷாயத்தில், நான்கு மடங்கு எண்ணெயையும் அதிமதுர விழுதையும் சேர்த்து முறைப்படி தைலம் தயாரிக்க வேண்டும். இது வாதரத்த நோயைத் தீர்க்கும். 115–116

## 45. சதபாக மதுபர்ணீ தைலம்

ஒரு பலம் அதிமதுரவிழுதில் 16 பலம் எண்ணெய் அதற்கு நான்கு மடங்கு பால் சேர்த்து முறைப்படி தைலம்

---

1. பேனிலா—பசலைக்கீரை.
2. குட்டாகம்—குறைந்த அளவு (முன்பு மகாபத்மகதைலம் கூறப்பட்டது) இது அல்ப பத்மக தைலம்.

தயார் செய்க. அதில் மறுபடி ஒரு பலம் அதிமதுரமும் நான்கு மடங்கு பாலும் சேர்த்துக் காய்ச்சுக. இவ்வாறு நூறு தடவை. கலந்து கலந்து காய்ச்ச வேண்டும். இவ்வாறு நூறு பலம் அதிமதுர விழுதில் தயாரித்த இந்தத் தைலம் வாதரத்தநோய் இழுப்பு இருமல் இதய நோய் சோகை அக்கி காமாலை எரிச்சல் என்பனவற்றைப் போக்கும். மூன்று தோஷங்களினால் தோன்றிய நோய்களுக்கும் இந்தத் தைலம் நன்மையளிக்கும். 117–118

## 46. ஸஹஸ்ரபாகம் அல்லது சதபாகம் பலா தைலம்

சிற்றாமுட்டிவேர் கஷாயத்திற்குச் சமஅளவு எண்ணெயும், எண்ணெயின் அளவிற்கு நான்கில் ஒரு பங்கு சிற்றாமுட்டி விழுதும் எண்ணெயின் அளவிற்குச் சமமான பசும் பாலும் சேர்த்து முறைப்படி தைலம் தயாரிக்க வேண்டும். இவ்வாறு 100 தடவையோ 1000 தடவையோ சித்தாமுட்டி கஷாயம் முதலியவற்றைச் சேர்த்து மீண்டும் மீண்டும் காய்ச்சுக. இந்தத் தைலத்தைப் பயன் படுத்தினால் வாதரத்த நோய் நீங்கும். இது சிறந்த ரசாயனம் ஆகும். இத்தைலம் புலன்களுக்குத் தெளிவைத் தந்து நோய் வராமல் தடுத்து உயிர் ஊட்டத்தையும் செழிப்பையும் குரல் இனிமையையும் தரும். விந்து தோஷத்தையும் மாதவிடாய் தோஷத்தையும் போக்கவல்லது. 119–120

## 47. *குடூச்யாதி தைலம்

சீந்தில்கொடிச்சாற்றில் பசும்பால் சேர்த்தாவது, திராட்சைக்கஷாயத்தைச் சேர்த்தாவது அதிமதுரமும் குமிழ்மும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயம் சேர்த்தாவது முறைப்படி தயார் செய்த குடூச்யாதி தைலம் வாதரத்த நோயை நீக்கும். (இதில் சீந்தில் கொடி சாற்றுடன் சாற்றின் அளவில் நான்கில் ஒரு பங்குஎண்ணெய் சேர்த்துப் பக்குவம் செய்க.) 121

காடி 64 பலம் எண்ணெய் 16 பலம் கொண்டு, அதில் நான்கில் ஒரு பங்கு குங்குலியத்தை அரைத்துச் சேர்த்துத் தயார் செய்த தைலத்தில் பெருமளவில் தண்ணீர் கலந்து மத்தினால் கடைந்து, அதைத் தனியாக எடுத்து வைத்துக்கொள்ளவேண்டும். இத்தைலத்தைப் பயன்படுத்தினால் காய்ச்சல் எரிச்சல் வேதனை என்பவை நீங்கும். 122

குடூசி—சீந்தில் கொடி.

## 48. பிண்டதைலம்

தேன்மெழுகு மஞ்சிஷ்டி குங்கிலியம் நன்னாரி என்பவற்றின் விழுதை நான்கு மடங்கு எண்ணெயில் கலந்து எண்ணெய்க்கு நான்கு மடங்கு நீரும் சேர்த்து முறைப்படி தைலம் தயார் செய்க. இந்தப் பிண்டதைலத்தை மேற்பூச்சாகப் பூசுவதனால் வாதரத்த நோய் வேதனைகள் நீங்கும். 123

## 49. தசமூலக்ஷீரம்

தசமூலப்பொருள்களால் தயார் செய்த பால் விரைவில் வாதரத்தநோயின் வேதனைகளைப் போக்கும். மற்றும் பொறுக்குமளவுக்குச் சூடான நெய்யை நோயுள்ள இடத்தில் தாரையாக ஊற்றுவதாலும் வாதரத்த நோயின் வேதனைகள் நீங்கும். 124

அசைவற்ற நிலை (ஸ்தம்பம்) நடுக்கம் குத்தல்வலி இவற்றுடன் கூடிய வாதரத்த நோயில், இனிப்புச் சுவையுள்ள பொருள்களால் தயார் செய்த சூடான நெய் எண்ணெய் வஸை மஜ்ஜை என இவற்றை உடலின் மேல் தாரையாக ஊற்ற வேண்டும். எரிச்சலுடன் கூடிய வாதரத்த நோயில் இனிப்புச் சுவையுள்ள பொருள்களால் தயார் செய்து குளிர்ந்த பிறகு மேற்கூறிய நான்கு வகை எண்ணெய் முறைகளை உடலின் மேல் தாரையாக ஊற்ற வேண்டும். 125

மேலும் 1. எண்ணெயில் பசு செம்மறியாடு வெள்ளாடு இவற்றின் பால்சேர்த்தோ 2. ஜீவனீய கூட்டுப் பொருள்களின் கஷாயத்தில்எண்ணெய்சேர்த்தோ 3. *சிறுபஞ்ச மூல கஷாயத்தில் எண்ணெய் சேர்த்தோ முறைப்படி தயாரித்த தைலத்தை வாதரத்த நோயில் எரிச்சல் குத்தல் வலி இவற்றைத் தணிவடையச் செய்ய மருத்துவன் பயன்படுத்த வேண்டும். 126

வாதரத்த நோயில் எரிச்சலைத்தணியச்செய்வதில் திராட்சைரஸம் கருப்பஞ்சாறு தயிர்த்தெளிவு புளிப்புக்காடி கழுநீர் (அரிசிகளைந்த நீர்) தேன் பானகம் இவற்றை ஊற்றுவது சிறந்தமுறை ஆகும். 127

---

* சிறுபஞ்சமூலம்—கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி, நெருஞ்சில், ஓரிலை, மூவிலை.

வாதரத்த நோயில் எரிச்சலை நீக்கக் குளிர்ந்த நீரில் நனைத்த அல்லிப்பூ கருநெய்தல்பூ செந்தாமரைப்பூ முத்து மாலை இவைகளைத் தொடுதல், குளிர்ந்த் சந்தனநீரைத் தெளித்தல் முதலியன நன்மை அளிக்கும். 128

குளிர்ந்தகாற்று வீசுகிற நதிக்கரையில் போடப்பட்ட கட்டிலின் மேல் சந்திரனின் கிரணங்களால் (பனிநீரால்) குளிர்ந்த நீரில் நனைத்த பட்டுத்துணியை விரித்து, அதன்மேல் தாமரைப் பூவையும் தாமரை இதழ்களையும் பரப்பி வாதரத்த நோயில் எரிச்சல் கண்டவனைப் படுக்கச் செய்ய வேண்டும். மேலும் சந்தனப் பூச்சினால் குளிர்ந்த கொங்கைகளுடன் கூடிய நங்கைகள் பேசித்தொட்டுக் கொண்டிருத்தல் தழுவுதல் முதலியவற்றால் நோயாளியின் எரிச்சல் வேதனை நீங்கும். 129—130

சிவப்பு நிறம் வேதனை எரிச்சல் ஆகியவற்றுடன் கூடிய வாதரத்த நோயில், இரத்தத்தை வெளியேறச் செய்து பிறகு அதிமதுரம் அரசமரப்பட்டை ஜடாமாம்சி க்ஷீரகாகோலி இத்தி மரப்பட்டை பசுமையான பாசி இவற்றைச் சம அளவு எடுத்து விழுதாக அரைத்து மேற்பூச்சு பூச வேண்டும். அல்லது நீரில் உண்டாகிற பொருள்களின் இலைகளை அரைத்தோ அதிமதுரத்தின் சூரணம் பால் நெய் யவஅரிசிமாவு ஆகியவற்றைத் சேர்த்தோ மேற்பூச்சாகப் பயன்படுத்துக. ஜீவனீயப் பொருள்களில் தயார் செய்த நெய்யை மேற்பூச்சு பூச வேதனை எரிச்சல் ஆகியவை தணிவடையும். 131—132

## 50. திலாதிலேபம்

எள் முரளம் அதிமதுரம் தாமரைத்தண்டு நொச்சிவேர் என்பனவற்றைச் சம அளவு எடுத்து ஆட்டுப்பாலில் அரைத்து மேற்பூச்சு பூசினால் எரிச்சலும் சிவப்பு நிறமும் நீங்கும். 133

## 51. பிரபௌண்டரீகாதி தைலம்

பிரபௌண்டரீகக்கட்டை மஞ்ஜிஷ்டி மரமஞ்சள் அதிமதுரம் சந்தனம் கல்கண்டு *ஏரகசத்து மாவு பயத்தம் பருப்பு விளாமிச்சவேர் பத்மகாஷ்டம் என்பனவற்றை விழுதாகச் செய்து மேற்பூச்சு பூசுவதனால் வாதரத்த நோயில் தோன்றிய வேதனை எரிச்சல் அக்கி சிவப்பு நிறம் வீக்கம் ஆகியவை நீங்குகின்றன.

* ஏரகசத்துமாவு—ஏரக எனப்படும் ஒரு வகை மூங்கில் அரிசியால் தயாரிக்கப்பட்ட சத்துமாவு.

பித்தத்தையும் ரத்தத்தையும் முதன்மையாகக் கொண்ட வாதரத்த நோயில் திலாதி லேபத்தைப் பயன்படுத்த வேண்டும். *134*

## 52. வாதத்தை முதன்மையாகக் கொண்ட வாதரத்த நோயின் சிகிச்சை

வாதத்தை முதன்மையாகக் கொண்ட வாதரத்தநோயில் வாதத்தைப் போக்குகிற பொருள்களால் தயார் செய்தவையும், எண்ணெய்ப்பசையுள்ளவையும், பாலால் தயார் செய்த பயத்தம் பருப்புப் பாயசமும் பயன்படுத்தத் தக்கவை. எள்ளையும் கடுகையும் அரைத்து உருண்டையாகச்செய்து அதனால் ஒற்றடம் கொடுத்தால் வாதரத்த நோயினால் தோன்றுகிற வேதனை போகும். *135—136*

நன்முறையில் பக்குவம் செய்த நீர்வாழ் பிராணிகளின் (மீன் போன்றவை) உணவை வேட்டையாடித் தின்னும் உயிரினங்கள், நீர்ப்பாங்கான நிலத்தில் வாழும் பிராணிகள் என்பவற்றின் (எருமை பன்றி போன்றவை) மாமிசத்தினால் தயாரித்த *வேஸவாரத்தில் ஜீவனீய கூட்டுப் பொருள்களின் விழுதையும் எண்ணெயையும் (நெய் எண்ணெய் வஸை மஜ்ஜை) சேர்த்து, வாத ரத்தம் பரவியுள்ள இடத்தில் ஒற்றடம் கொடுத்துக் கட்டுவதனால் அசைவற்றதன்மை குத்தல் வலி வேதனை பரவுதல், வீக்கம் புலன்களின்பிடிப்பு என்பவை நீங்குகின்றன. அல்லது ஜீவனீய கூட்டுப் பொருள்களின் விழுதில் பாலையும் வஸையையும் சேர்த்து ஒற்றடம் கொடுத்துக் கட்டினாலும் மேற்கூறிய நோய்கள் நீங்கும். *137—138*

## 53. ஸஹசராதியோகம்

ஸஹசரமரத்தின் வேர் கீரைப்பாலை (ஜீவந்தி) இவற்றை ஆட்டுப்பாலில் அரைத்து நெய் சேர்த்து மேற்பூச்சு பூச வேண்டும். அவ்வாறே எள்ளை வறுத்து ஆட்டுப்பாலில் அரைத்து மேற்பூச்சு பூசலாம். இந்த இரண்டையும் வாதரத்த நோயில் எரிச்சலைத் தணிவடையச் செய்யப் பயன்படுத்த வேண்டும். *139*

வாதரத்த நோயில் வாத மிகுதியால் ஏற்பட்ட குத்தல் வலியைத் தணிவடையச் செய்ய ஆட்டுப்பாலில் ஆளி

---

* வேஸவாரம்—புலாலை எலும்பு நீக்கி மைய அரைத்து ஆவிப்பக்குவம் செய்து அரிசித்திப்பிலி மிளகு முதலியவற்றைச் சேர்த்துத் தயார் செய்யப்பட்ட இறைச்சி.

விதை ஆமணக்கு விதை அல்லது சதகுப்பையையோ அரைத்து மேற்பூச்சு பூச வேண்டும். 140

## 54. வாதரத்த நோயில் [1]மதூச்சிஷ்ட பிரலேபம்

ஆமணக்குவேர் ஆமணக்கின் இளந்தளிரின் நுனிப்பகுதி கொண்டு முறைப்படித் தயாரித்த கஷாயத்தில் 32 பலம் நெய் 32 பலம் எண்ணெய் நீர்ப்பாங்கான நிலத்தில் வாழும் பிராணிகள், பறவைகளின் வஸை மஜ்ஜை என்பவை ஒவ்வொன்றும் 32 பலம் வீதம் சேர்த்து பக்குவமாகும் நேரத்தில் ஜீவனீய கூட்டுப் பொருள்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் மஞ்சள் நீலத்தாமரை கோஷ்டம் ஏலஅரிசி சதகுப்பை அரளிஇலைமருத மரப்பூ எனும்இவை ஒவ்வொன்றும்ஒவ்வொருபலம் எனக்கொண்டு எல்லாவற்றையும் விழுதாக அரைத்து அக்கலவையில் போட வேண்டும். எண்ணெய்க்குச்சம அளவு ஆட்டுப்பாலும் பசும்பாலும் சேர்க்க வேண்டும். இவ்வாறு எல்லாப் பொருள்களையும் ஒன்றாகச் சேர்த்து முறைப்படி எண்ணெய் தயார் செய்து கொள்ளவேண்டும். பிறகு வடிகட்டி ஆறிய பிறகு எட்டு பலம் தேன் மெழுகு சேர்க்க வேண்டும். இம்மெழுகு எண்ணெயுடன் சேர்ந்து கெட்டியாகிவிடும். இவ்வாறு தயார் செய்த இந்த மேற்பூச்சு, உடல் உறுப்புகளில் தோன்றிய குத்தல் வலி மூட்டுகளில் முடங்கியுள்ள வாதம் பிளந்த உறுப்புகளில் சீழ் கசியும் வாதரத்தநோய், நழுவிய மூட்டுகள்உடைந்த எலும்புகள் இழுத்து நடக்கும்நோய் கூன்முதுகு ஆகியவற்றில் பூசச்சிறந்ததாகும். 141–144

## 55. கபவாதரத்த நோயில் சிகிச்சை

கபத்தை முதன்மையாகக் கொண்ட வாதரத்தநோயில் வீக்கம் பளு அரிப்பு போன்ற துன்பங்கள் தோன்றினால், சிறுநீர் க்ஷாரம் ஸுரா என்னும் கள் இவற்றால் தயாரித்த நெய்யைத் தேய்த்துக் குளிக்கப் பயன்படுத்துவது நல்லது. 145

## 56. பத்மகாதி கிருதம்

பதிமுகம் இலவங்கப்பட்டை அதிமதுரம் நன்னாரி இந் நான்கு பொருள்களையும் விழுதாகச்செய்து நெய் தயாரிக்கவும். நெய் பக்குவம் ஆகும் பொழுது நெய்க்கு நான்கு மடங்கு [2]மது சுக்தம் சேர்த்து முறைப்படி நெய் தயார் செய்க. இந்த

---

1. மதுச்சிஷ்டம்—தேன் மெழுகு.
2. மதுசுக்தம்—தேனில் தயாரித்த காடி.

நெய்யைக் கபத்தை முதன்மையாக கொண்டவாதரத்த நோயில் நோய் கண்ட இடத்தில் ஊற்றச் செய்வதாலும் குளிக்கப் பயன் படுத்துவதாலும் நன்மை ஏற்படும். 146

கபத்தை முக்கியமாகக் கொண்ட வாதரத்தநோயில் க்ஷாரம் எண்ணெய் பசுவின் சிறுநீர் தண்ணீர் மிளகு இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து பக்குவம் செய்து மேல் ஊற்றுவது சிறந்தமுறை ஆகும். 147

கடுகு வேப்பிலை எருக்கஇலை ஜடாமாம்சி எள் இவற்றை ஆட்டுப்பாலில் அரைத்து மேற்பூச்சு பூசினால் கபம் முதன்மையாக உள்ள வாதரத்தநோய் நீங்கும். விளாமரத்தின் பட்டையைப் பாலில் அரைத்து யவஅரிசி மாவு நெய் சேர்த்து மேற்பூச்சு பூசலாம். 148

வாதகபத்தை முதன்மையாகக் கொண்ட வாத ரத்த நோய்க்கு ஒட்டடை வசம்பு கோஷ்டம் சதகுப்பை மஞ்சள் மரமஞ்சள் என இவற்றைச் சம அளவு எடுத்து அரைத்து மேற்பூச்சு பூசக் குத்தல் வலி நீங்கும். 149

தகர விதை இலவங்கப்பட்டை சதகுப்பை ஏலம் கோஷ்டம் கோரைக்கிழங்கு அரேணுகம் தேவதாரு புலிநகப்பூண்டு என இவை எல்லாவற்றையும் சம அளவு எடுத்துப் புளிப்புக் காடியில் அரைத்து மேற்பூச்சு பூசினால் வாத கபத்தினால் தோன்றிய வாதரத்த நோயில் துன்பங்கள் நீங்கும். 150

வாதகபத்தை முக்கியமாககொண்ட வாத ரத்தநோய் பரவி யுள்ள இடத்தில் முருங்கை விதையைக் காடியில் அரைத்து மேற்பூச்சு பூசி சிறிது நேரம் கழித்து காடியை நோயுள்ள இடத் தின் மேல் தாரையாக ஊற்ற வேண்டும். 151

## 57. திரிபலாதிகல்கம்

1திரிபலா 2திரிகடுகம் லவங்கப்பத்திரி ஏலம் மூங்கிலுப்பு கொடிவேலி வசம்பு வாயுவிடங்கம் கண்டந்திப்பிலி 3ரோமசம்

---

1. திரிபலா—கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய்.
2. திரிகடுகம்—சுக்கு மிளகு திப்பிலி.
3. ரோமசம்—அன்னபேதி

(அன்னபேதி) ஆடாதொடைப்பட்டை ரித்தி கீழாநெல்லிசெவியம் என இவற்றைச் சம அளவு எடுத்து விழுதாக ,அரைத்து விடியற் காலையில் இரும்புப் பாத்திரத்தில் பூசி வைக்க வேண்டும். நடுப்பகலில் இரும்புப் பாத்திரத்திலுள்ள அந்த விழுதை உட் கொள்ளச் செய்ய வேண்டும். இதை உட்கொள்ளும்போது தயிர் சுக்தம் க்ஷாரம் எதிரிடையான உணவு இவற்றை விட்டு விட வேண்டும். இதை முழுமையான தோஷத்துடன் கூடிய வாத ரத்த நோயில் குத்தல் வலியுள்ள நோயாளிக்குப் பயன்படுத்துவது மிகவும் சிறந்தது. 152–154

மருத்துவத்தில் சுயமாக ஊகித்து அறியக் கூடிய அறிவுத் திறமைகொண்ட மருத்துவன் வாதரத்த நோயில் தோஷங்களின் வலிமை வலிமைக்குறைவு நோய் கண்டுள்ள இடம் இவற்றை நன்கு அறிந்து அந்தந்த நிலைக்கேற்பத் தானாகவே சிகிச்சை முறைகளை உணர்ந்து கையாள வேண்டும். 155

கொழுப்பு அல்லது கபம், மேலோங்கி வாதம் செல்லும் வழி அடைபடுவதால் சீற்றமடைந்த நிலையில் முதன் முதலில் எண்ணெய்ச் சிகிச்சை *பிரும்மண சிகிச்சை செய்வது சிறந்ததல்ல. 156

கபமும் கொழுப்பும் மேலோங்கியுள்ள வாதரத்த நோயில் உடற்பயிற்சி சோதன சிகிச்சை (தூய்மைபடுத்தும் சிகிச்சை) அரிஷ்டம் பசுவின் சிறுநீர் பருகுவது மலம் கழிக்கச் செய்வது மோர் பருகுவது கடுக்காயைப் பயன்படுத்துவது ஆகிய முறைகளைப் பயன்படுத்திக் கபத்தையும் கொழுப்பையும் குறையச் செய்ய வேண்டும். 157

அரசமரப்பட்டையில் முறைப்படி தயாரித்த கஷாயத்தில் தேன் சேர்த்துப் பருகினால் மூன்று தோஷங்களினால் தோன்றிய கடுமையான வாதரத்தநோய் நீங்கும். 158

பழமையான யவதானியம் கோதுமை ஸீது அரிஷ்டம் ஸுரா ஆஸவம் தூய்மை செய்த சிலாசத்து குக்குலு தேன் இவை வாத ரத்த நோயைப் போக்கும். 159

உடலில் மாமிசம் முதலியவற்றில் ஆழமான பகுதிகளைச் சார்ந்துள்ள கம்பீர வாதரத்தநோயில் வாதத்தினால் ரத்தம்

*பிரம்மணசிகிச்சை—உடலைப் பருக்கச்செய்யும் சிகிச்சை.

சூழப்பட்டிருந்தால் முதலில் வாதத்தைப் போக்கக்கூடிய சிகிச்சையைக் கையாள வேண்டும். இம்முறையால் வாதம் தணிந்த பிறகு வாதரத்த நோய்க்குக்கூறப்பட்டுள்ள சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 160

ரத்தமும் பித்தமும் அளவுக்கு மீறிப் பெருக்கெடுத்துத் தோன்றிய வாதரத்த நோய் சூழ்ந்துள்ள இடம் விரைவில் பழுத்து வெடித்து அதிலிருந்து இரத்தமும் சீழும் ஒழுகுகின்றன. இதற்கு விரணத்திற்குச் செய்யக் கூடிய பிளத்தல், தூய்மைப் படுத்துதல், ஆற்றுதல் முதலான சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். இந்த இரண்டு விதமான நிலையில் துன்பங்கள் ஏற்பட்டால் குறிப்பிட்ட துன்பங்களுக்குக் குறிப்பிட்ட இடத்தில் கூறியுள்ள சிகிச்சை முறைகளைப் பயன்படுத்தி நோயைத் தணி வடையச் செய்யவேண்டும். 161–162

**முடிவுரை :**

இந்த வாதரத்த சிகிச்சாத்தியாயத்தில் வாதரத்த நோய்க்குக் காரணம் இடம் மூலம், மூட்டுகளில் வாதரத்தம் சீற்றமடையக் காரணம், வாதரத்தநோயின் முற்குறிகள் கம்பீரம் உத்தானம் என்ற இரண்டு வித வாத ரத்த நோயின் இலக்கணம், வாதம் போன்ற தோஷத்தினால் தோன்றிய வாதரத்த நோயின் தனித் தனியான இலக்கணம், பெருமளவில் தோன்றிய தோஷங்களான துன்பங்களுடைய குறிப்பு, தீர்க்கக் கூடியது காலங்கடத்தக் கூடியது தீர்க்க இயலாதது என இம்மூன்று வகையான நோய் கள் பற்றிய விளக்கங்கள், தீர்க்கக்கூடிய வாதரத்த நோய்க்கு எல்லா வகையான சிகிச்சைகளையும் சுருக்கமாகவும் விரிவாகவும் அறிவித்தல் நிலைமைக்கு ஏற்றவாறு வாதரத்தநோய்க்குச் சிகிச்சை எனும் இவற்றை அக்கினிவேசருக்கு ஆத்திரேய மா முனிவர் கூறியிருக்கிறார். 163–165

அக்கினிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் சிகிச்சாஸ்தானத்தில் வாதரத்த சிகிச்சை என்னும் இருபத்தொன்பதாவது அத்தியாயம் முற்றும்.

## முப்பதாம் அத்தியாயம்

# யோனிவியாபத் சிகிச்சை

பகவான் ஆத்ரேய முனிவர் அருளியபடி யோனிவியாபத் எனப்படும் பெண்குறிநோய்களை விளக்குவோம். 1—2

### 1. அக்னிவேசரின் வினா

கங்கை முதலிய புனித ஆறுகளுடனும் பிரம்ம சுவர்ச்சலை முதலிய திவ்ய மூலிகைகளுடனும் பல நிறங்களைக் கொண்ட கைரிகம் முதலிய தாதுப்பொருள்களுடனும் கூடிய இமயமலைச் சாரலில் தேவர்களாலும் சித்த புருடர்களாலும் முனிவர்களாலும் அனுபவிக்கப்பட்டுப் புனிதமடைந்த பகுதிகளில் உலாவுகின்றவரும், தவவலிமையால் பொருள்களின் தன்மைகளை நன்கு உணர்ந்தவரும், புலன்களை வென்றவருமான ஆத்ரேயமாமுனிவரை அன்னாரின் சீடராகிய அக்னிவேசர் கீழ்வருமாறு வினவினார்.

''பகவானே! உலகில் மக்களுக்குப் பிள்ளைப்பேற்றிற்கு முக்கிய காரணமானவர்கள் நங்கையர்கள். பெண்குறியிலும் கருஉறுப்புகளிலும் நோய் தோன்றுவதனால் மகப்பேறு உண்டாவது தடைபடுகிறது. அந்நிலையில் பிறக்கும் மக்களுக்கும் நோய்களும் துன்பங்களும் உண்டாகின்றன. அவ்வாறு மக்கட்பேற்றிற்குத் தீங்கு விளைவிக்கும் பெண்குறி கரு உறுப்பு நோய்கள் தோன்றக் காரணம் தோற்றம் அவற்றின் இலக்கணம் சிகிச்சைமுறை முதலியவற்றைக் கேட்க ஆவல் கொண்டுள்ளேன். உலக மக்களின் நன்மையைக் கருதி அவற்றை விளக்குவீராக. 3—6

### 2. ஆத்ரேயரின் ம

)வ்வாறு வினவிய சீடரை நோக்கி குருவாகிய ஆத்ரேயர் கூறலானார்

---

* யோனிவியாபத்—பெண்குறியில் கருவுறுப்புகளில் தோன்றும் நோய். அத்தகைய நோய்கள் தோன்றக்காரணம் இலக்கணம் சிகிச்சை முறைகள் என்பனவற்றை விளக்குவதால்இந்த அத்தியாயம் இப்பெயர் பெற்றது.

நோய்களின் வகைகளைக் குறிக்கும் [1]அஷ்டோதரீயாத்யாயத்தில் கருவுறுப்பு நோய்கள் இருபது வகைகளெனக் கூறப்பட்டது. அவை தகாத உணவு தகாத செயல்கள் தவறான உடலுறவு முதலியவற்றாலும், இருது தோஷத்தினாலும் மக்கட்பேற்றுக்குக் காரணமாகிய விந்து சோணிதங்களிலுள்ள கேடுகளாலும், முற்பிறவியில் செய்த தீவினைகளின் பயனாயும் தோன்றுகின்றன. அவற்றைத் தனித்தனியாக விளக்குகிறேன், கேள். 7—8

### 3. வாதத்தினால் தோன்றும் கருவுறுப்புகளின் நோய் இலக்கணம்(1)

இயற்கையாக வாதம் மிகுந்துள்ள உடலமைப்பு கொண்டவள் வாதத்தைச் சீற்றமடைவிக்கும் உணவுப் பண்டங்களையுண்டாலும், வாதத்தை வளர்க்கக்கூடிய உலாவுதல் முதலிய களியாட்டங்களில் ஈடுபட்டாலும் வாதம் மிக்கசீற்றமடைந்து கருவுறுப்பைச் சேர்ந்து அங்கு ஊசியால் குத்துவது போன்ற வலியையுண்டாக்கி மரத்துப்போகச் செய்யும். எறும்பு ஊர்வதுபோன்ற அரிப்பு உண்டாகும். பெண்குறி கருவுறுப்புகள் கடினமாகி தொடு உணர்ச்சியற்று வலியுடன் கூடியிருக்கும். மற்றும் வாதம் சீற்றமுறுவதால் தோன்றும் நோய்களும் உண்டாகும். இத்தகைய நோய் கொண்டவளுக்கு, ஒலியுடனும் வலியுடனும் நுரையுடனும் கூடிய வறண்ட இரத்தம் மாதவிடாயற்ற நாட்களிலும், கருப்பையிலிருந்து பலமுறை சிறிது சிறிதாக வெளியேறும். 9—10

### 4. பித்தத்தினால் தோன்றும் கருப்பை நோயின் இலக்கணம் (2)

கார்ப்பு புளிப்பு உவர்ப்புச் சுவையுள்ளவைகளையும் [2]க்ஷாரமானவைகளையும் மிகுதியாக உண்பதால், பித்தம் சீற்றமுற்று பெண்குறி கருவுறுப்புகளில் நோயைத் தோற்றுவிக்கும். இதனால் துன்பமடைந்தவளுக்கு அழற்சி பெண்குறியில் புண் காய்ச்சல் மிக்க சூடு எனுமிவை தோன்றும். கருப்பையிலிருந்து இரத்தம் நீலம் அல்லது மஞ்சள் அல்லது கருநிறங்கொண்டு மிக்க சூடு கொண்டு பிண நாற்றத்துடன், மாதவிடாய் அற்ற நாட்களிலும் பலமுறை வெளியேறும். இது பித்தத்தினால் தோன்றிய நோயென்று உணர்க. 11—12

---

1. அஷ்டோதரீய அத்யாயம்—சரகஸம்ஹிதையின் சூத்திரஸ்தானத்தில் 19-வது அத்யாயத்தில் 34வது சுலோகத்தைக் காண்க.

2. க்ஷாரம்—எரிச்சலை உண்டுபண்ணும் உப்புவகைகள்.

### 5. கபத்தினால் தோன்றிய கருவுறுப்பு பெண்குறி நோயின் இலக்கணம் (3)

*அதிகப் பசையுள்ள உணவுப் பண்டங்களைப் பயன்படுத்துவதால் கபம் மிக்க சீற்றமடைந்து பெண் உறுப்பில் தங்கிய போது பெண்குறியில் கொழகொழப்பு குளுமை அரிப்பு சிறிது வலியுடன் வெண்மை நிறம் கொண்ட இருது இரத்தம், மாதவிடாயற்ற நாட்களிலும் பலமுறை வெளியேறிக் கொண்டிருக்கும். இது பெண் உறுப்புகளில் கபத்தினால் தோன்றிய நோய் என அறிக. 13*

### 6. ஸந்நிபாதத்தினால் தோன்றும் கருவுறுப்பு நோய் இலக்கணம் (4)

*வாதம் முதலிய தோஷங்களை வளர்க்கக்கூடிய உணவுப் பண்டங்களை உண்ணும் நங்கைக்கு மூன்று தோஷங்களும் ஒரே காலத்தில் சீற்றமடைவதால், அந்த தோஷங்கள் கருப்பையிலும் பெண்குறியிலும் சேர்ந்து அந்தந்த தோஷங்களுக்குக் கூறப்பட்ட தனித்தனி இலக்கணங்கள் அனைத்தும் கொண்ட பெண் உறுப்பு நோயைத் தோற்றுவிக்கும். இது ஸந்நிபாதத்தினால் தோன்றிய பெண்குறிநோய் என்று அறிக. இதில் வெண்ணிறமும் கொழகொழப்பும் கொண்ட இருது இரத்தம் பெண்குறியில் எரிச்சலையும் குத்தல்வலியையும் உண்டாக்கி மிகுதியாகப் பெருகிக் கொண்டிருக்கும். 14—15*

### 7. [1]இரத்த யோனி என்னும் பெண்குறி நோய் இலக்கணம் (5)

*இரத்தத்தையும் பித்தத்தையும் வளர்க்கும் உணவு முதலியவற்றால் இரத்தமும் பித்தமும் மிக்க சீற்றமுறும். அப்பொழுது பித்தத்தினால் இரத்தம் கெட்டு. நங்கை கருவுற்றிருந்தபோதும் பெண் குறியிலிருந்து பலமுறை அவ்வப்பொழுது இரத்தம் அதிகமாகி மிகுதியாகப் பெருகிக் கொண்டிருக்கும். இது இரத்த தோஷத்தினால் தோன்றிய பெரும்பாடு என்று அறிக. 16*

### 8. [2]அரஜஸ்கா இலக்கணம் (6)

*பெண் குறியிலும் கருப்பையிலும் பித்தம் சேர்ந்து அங்குள்ள இரத்தத்தைக் கெடுக்கும். இருது இரத்தம் உரிய நாட்களில் வெளியேறாமல் உடல் இளைத்து நிறம் மாறுபடும். இது அரஜஸ்கம் எனும் பெண்உறுப்பு நோயாகும். 17*

---

*1. யோனி—பெண்குறி மற்றும் கருப்பை.*

*2. அரஜஸ்கா—இருது இரத்த மற்றது*

### 9. [1]அசரணா இலக்கணம் (7)

பெண்குறியை நல்ல நீரால் கழுவாமலிருப்பதால் அங்கு கிருமிகள் தோன்றி மிகக் கொடிய அரிப்பை உண்டாக்கும். அதனால் அந்த நங்கை கலவிக்காக ஆடவரை மிகவும் விரும்பு வாள். இது அசரணா எனும் பெண்குறிநோய் ஆகும். 18

### 10. [2]அதிசரணா இலக்கணம் (8)

நங்கை அளவுக்கு மீறிய கலவியின்பத்தில் ஈடுபடுவதால் வாதம் சீற்றமுற்றுப் பெண்குறியில் வீக்கத்தையும் தொடு உணர்ச்சி யின்மையையும், கொடிய வலியையும் தோற்றுவிக்கும். இது அதி சரணா என்னும் நோயாகும். 19

### 11. பிராக்சரணா இலக்கணம் (9)

மிக்க இளம் வயது கொண்டவள் அளவுக்கு மீறி கலவியில் ஈடுபடுதலால், வாதம் சீற்றமடைந்து முதுகிலும் இடுப்பிலும் தொடைகளிலும் தொடை இடுக்குகளிலும், கொடிய வலியை யுண்டாக்கிப் பெண் குறியையும் கெடுக்கும். இது கலவிக்குத் தகாத பருவத்திலேயே அதில் ஈடுபடுவதால் பிராக்சரணா (தகுந்த பருவத்திற்கு முன்பே ஈடுபடுதல்) என்னும் பெயர் பெற்றது. 20

### 12. உபப்லுதா இலக்கணம் (10)

கருவுற்றவள் கபத்தை வளர்க்கும் உணவுப் பண்டங்களை யும் உலாவுதல் முதலியவற்றையும் விடாமல் பழக்கப்படுத்திக் கொள்வதாலும், வாந்தி மூச்சு என்பனவற்றைத் தடுப்பதாலும் வாதம் மிக்க சீற்றமுற்றுக் கபத்தைப்பெண்குறியில் சேர்த்துப் பெண் குறியைக் கெடுக்கும். அவ்வாதம் வெளிறிய மஞ்சள் நிறம் அல்லது வெண்ணிறம் கொண்ட கபத்தையோ நீரையோ பெருகச் செய்யும். அப்பொழுது பெண்குறியில் குத்தல்வலியும் கபவாத நோய்களும் தோன்றும். அத்தகைய கபவாதநோய்களால் பெண்குறி கெடுக்கப்படுவதால் இது உபப்லுதம் என்னும் பெயர் கொண்டதாம். 21—22

### 13. பரிப்லுதா இலக்கணம் (11)

இயற்கையாகப் பித்த உடல் கொண்ட நங்கை, ஆடவருடன் கலவியில் ஈடுபட்டிருக்கும்போது தும்மல் ஏப்பம் முதலியவற்றைத்

---

1. அசரணா —கலவி செய்யாமை.
2. அதிசரணா—மிகுதியாகக் கலவியில் ஈடுபடுதல்.

தடுத்தலால் மிக்க வளர்ச்சியுற்ற பித்தத்துடன் கூடிய வாதம் சீற்றமடைந்து பெண் உறுப்பைக் கெடுக்கும். அதனால் பெண் உறுப்புகள் வீங்கிக் கைபட்டாலும்வலி பொறுக்க முடியாததாகும். நீலம் அல்லது மஞ்சள் நிறமுள்ள இரத்தத்தைப் பெருகச் செய்யும். அப்பொழுது பின்தட்டுகளிலும் தொடை இடுக்குகளிலும் முதுகிலும் வலி தோன்றும். காய்ச்சல் உண்டாகும். இது வாதபித்தத்தினால் ஏற்படும் பரிப்லுதம் எனப்படும் நோயாகும். 23–24

## 14. உதாவர்த்தினீ இலக்கணம் (12)

இரத்தம் வெளியேறும்போது அதைத் தடுத்தலால் வாதம் சீற்றமடைந்து பெண் குறியிலும் கருப்பையிலுமுள்ள வாதத்தை மேல் நோக்கிப் பரவும்படி செய்யும். அதனால் கருப்பையில் கொடிய வலி தோன்றி மேல் நோக்கிப் பரவிய இரத்தத்தை மிக்க கஷ்டத்துடன் வெளியேறும்படி செய்யும். இவ்வாறு இரத்தம் கஷ்டத்துடன் வெளியேறினால் நொடிப்பொழுதில் நங்கை சுகம் பெறுவாள். இந்த நோயில் இருது இரத்தம் இயற்கையாக வெளியேறாமல் மேல் நோக்கிப் பரவுவதால் இந்நோய் உதாவர்த்தினீ எனப் பெயர் பெற்றது. 25–26

## 15. கர்ணிகா இலக்கணம் (13)

கருவுற்றவள் பிள்ளை பெறும்பொழுதோ அல்லது வேறு காலத்தில் கருவை வெளியேற்றவோ வலிமையுடன் முக்குவதால், வாதம் கருவால் தடுக்கப்பட்டுச் சீற்றமடைந்து கபத்துடனும் இரத்தத்துடனும் சேர்ந்து, பெண்குறியில் தாமரைமலரின் நடுவிலுள்ள கர்ணிகையைப் போன்றதைத் தோற்றுவிக்கும். அது இரத்தத்தின் வழியைத் தடுக்கும். அத்தகைய நோய் கர்ணிகா எனப்பெயர் கொள்ளும். 27

## 16. *புத்ரக்னீ இலக்கணம் (14)

வாதத்தைச் சீற்றமடையச் செய்யும் உணவு முதலியவற்றால் வாதம் மிகவும் சீற்றமடைந்து, நங்கையின் உடலில் மக்கட் பேற்றைத் தோற்றுவிக்கக்கூடிய சோணிதத்தைக் கெடுத்து அந்த நங்கைக்குக் கரு நிலைத்தபோது, தன்னிடமுள்ள மிகுதியான வறட்சித் தன்மையால் குழந்தையைக் கொன்றுவிடும். இவ்வாறு

---

* புத்ரக்னீ—மகனைக் கொல்வது (மகன் என்பது இந்த இடத்தில் ஆண் பெண் இரு பாலரையும் குறிப்பிடுகிறது).

பலமுறை பிறக்கும் குழந்தைகளை எல்லாம் கொன்றுவிடும். அதனால் இது புத்ரக்னீ என்ற பெயர் கொள்ளும். (மக்கட் பேற்றைத் தோற்றுவிக்கக்கூடிய சோணிதம் வாதத்தால் கெடுவது இந்த நோய்க்கு முக்கிய காரணமாகும்.) 28

## 17. [1] அந்தர்முகீ இலக்கணம் (15)

அளவுக்கு மீறி உணவு கொண்ட நங்கை ஏற்றத் தாழ்வான இடத்தில் தாறுமாறாகப்படுத்து ஆடவனுடன் கலவி புரிவதால், உண்ட உணவு வாதத்தினால் கெடுக்கப்பட்டுப் பெண்குறியைச் சார்ந்துள்ள துவாரங்களை அடைந்து, அங்குள்ள எலும்புகளையும் மாமிசப் பகுதியையும் வாதத்தைச் சார்ந்த துன்பங்களடையும்படி செய்து, பெண்குறியின் முகத்தைக் கோணலாக்கி உள் நோக்கிப் புகச்செய்யும். அப்பொழுது கொடியவலியும் கலவிக்குத் தகாத நிலையும் தோன்றும். இது அந்தர்முகி எனும் நோயாகும். 29–30

## 18. [2] சூசீமுகீ இலக்கணம் (16)

கருவுறத்தக்கவளின் இருது இரத்தம் வாதத்தின் வறண்ட தன்மையால் கெடுமாயின், அது அத்தகைய சோணிதத்தால் தோன்றிய கருவிலுள்ள குழந்தையின் பெண்குறியைத் தன் வறண்ட தன்மையால் உலர்ந்து போகும்படி செய்து அந்த உறுப்பை மிகவும் நுண்ணிய துவாரம் உள்ளதாகச் செய்து விடும். இது தாயின் தோஷத்தால் கருவிலுள்ள பெண் குழந்தைக்குத் தோன்றும் நோயாகும். 31

## 19. [3] சுஷ்கயோனி இலக்கணம் (17)

கலவியில் ஈடுபட்டிருக்கும்போது நங்கை மலம் சிறுநீர் என்பனவற்றின் வேகங்களைத் தடுத்தலால் வாதம் சீற்றமடைந்து மலத்தையும் சிறுநீரையும் தடுத்துப் பெண்குறியின் வாயில் ஈரப் பசை உலர்ந்து போகும்படி செய்யும். இது சுஷ்கயோனி எனும் நோயாகும். 32

## 20. [4] வாமினீ யோனி இலக்கணம் (18)

மாதவிடாய் நாட்களில் குளித்த நங்கையின் கருவில் ஆடவனுடைய விந்து சேர்ந்தபின், அது வாதத்தினால் சீற்றமடைந்

---

1. அந்தர் முகீ—உள்நோக்கிய குறுகிய முகமுள்ளது.
2. சூசீமுகீ—ஊசி முனையைப்போன்ற முனை கொண்டது.
3. சுஷ்க—உலர்ந்த, சுருங்கிய
4. வாமினி—உள்ளே சேர்ந்த விந்துவை வெளியேற்றுவது.

தால் ஆறு அல்லது ஏழு நாட்களுக்குள் வலியுடன் கூடியோ வலியில்லாமலோ அந்த விந்துவை வெளியேற்றிவிடும். இது 'வாமினி' எனப்படும். 33

## 21. ஷண்டி (அலி) இலக்கணம் (19)

நங்கையின் உடலில் கரு தோன்றக் காரணமான சோணிதத்தில் கருப்பையைத் தோற்றுவிக்கும் பகுதி வாதத்தினால் கெட்டிருந்தால், அந்தச் சோணிதத்தால் பிறந்த பெண் குழந்தைக்குக் கருப்பை நன்கு உருபெற்று வளராமல் கெட்டிருக்கும். அதனால் அந்தப் பெண் குழந்தை வளர்ந்த பின் ஆடவர்களிடம் விருப்பமின்றியும் சிறிதும் கலவி ஆசையின்றியும், மார்பகம் நன்கு தோன்றி வளர்ச்சியடையாமலும் காணப்படுவாள். இந்த நோய் 'ஷண்டி' எனப்படும். (இது தாயின் குற்றமுற்ற சோணிதத்தினால் குழந்தைக்குத் தோன்றும் கேடாகும்) இது தீர்க்க முடியாத நோய். 34

## 22. மகாயோனி இலக்கணம் (20)

கலவியில் ஈடுபடும்போது நங்கை உடலுக்குக் கஷ்டத்தையுண்டாக்கும் நிலையிலும் சமமில்லாத படுக்கையிலிருந்து கொண்டு தாறுமாறாகச் சுகத்தில் ஈடுபட்டால், வாதம் சீற்றமுற்றுக் கருப்பையினுடையவும் பெண்குறியினுடையவும் வாயைப் பெரிதாகச் செய்து விடும். அதனால் அவ்வாய் மறுபடியும் முன்போல் மூடிக்கொள்ளாமல் இருந்துவிடும். மற்றும் மிக்க வலி தோன்றும். அதிலிருந்து வறண்டு நுரையுடன் கூடிய இரத்தம் வெளியேறிக் கொண்டிருக்கும். பெண்குறியில் மாமிசப்பகுதி வெளிவந்திருக்கும். மூட்டுகளிலும் தொடை இடுக்குகளிலும் கொடிய வலி தோன்றும். இது மகாயோனி எனப் பெயர் பெறும். 35–36

## 23. பெண்குறி நோய்களால் தோன்றும் மற்ற நோய்கள்

ிவ்வாறு இருபது வகையான பெண்குறி நோய்களின் லைககணங்கள் தனித்தனியாகக் கூறப்பட்டன. இந்நோய்களால் துன்பமுற்ற பெண்குறி மக்கட்பேற்றுக்குக் காரணமான ஆடவனின் விந்துவை ஏற்றுத் தங்கச் செய்ய இயலாததாகும். அதனால் நோயால் துன்பமடைபவள் கருவைத்தாங்க இயலாதவளாவாள். மேலும் குன்மம் மூலநோய் பெண்குறி நோய்க்குச் சமமான இரத்தப்பெரும்பாடு முதலிய நோய்களைக் கொண்டு வாத பித்த கபங்களாலான பல துன்பங்களையடைந்து கஷ்டப்படுவாள். 37–38

## 24. இருபது நோய்களில் வாதம் முதலியவற்றின் வேறுபாடு

முன்கூறிய பெண்குறி நோய்கள் இருபதில் வாதத்தால் தோன்றியது, பித்தத்தால் தோன்றியது, கபத்தால் தோன்றியது, ஸந்நிபாதத்தால் தோன்றியது என முதலில் கூறப்பட்டவை நான்கும் வாதம் முதலியவற்றாலும் ஸந்நிபாதம் என மூன்றும் சேர்ந்து சீற்றமடைவதாலும் தோன்றுவனவாகும். ஏனைய பதினாறில் இரத்தயோனி அரஜஸ்கா என்பவை இரண்டும் பித்தத்தினால் மட்டும் தோன்றுபவை. பரிப்லுதா வாமினி என்னும் இரண்டும் வாதமும் பித்தமும் சேர்ந்து சீற்றமடைந்து விடுவதால் தோன்றுபவை. கர்ணினி—உபப்லுதா என்னுமிரண்டும் வாதகபங்களின் சேர்க்கையால் தோன்றுபவை. மற்ற அசரண அதிசரண பிராக்சரண உதாவர்த்தினி புத்ரக்னி அந்தர்முகி சூசீமுகி சுஷ்கயோனி ஷண்டயோனி மகாயோனி என்பன பத்தும் பெரும்பாலும் வாதம் மட்டும் சீற்றமடைவதால் தோன்றுபவை. அந்தந்த தோஷங்களால் தோன்றிய நோய், அந்தந்த தோஷத்திற்கு உரிய இலக்கணங்களால் பெண்குறியையும், உடலையும் துன்பப்படுத்தும். *39—40*

## 25. பெண்குறி நோய்க்குப் பொதுவாகச் சிகிச்சை

வாதத்தினால் தோன்றிய பெண்குறி நோயில் வாதத்தைப் போக்கும் மருந்துகளால் எண்ணெய் முறை உடல் வியர்க்கச் செய்தல் வஸ்தி முறை என்பனவற்றைப் பயன்படுத்தவேண்டும். பித்தத்தினால் தோன்றிய பெண்குறி நோயில் இரத்தத்தையும் பித்தத்தையும் தணிப்பவற்றையும் குளிர்ச்சியான பொருள்களால் குளுமைத்தன்மை கொண்ட சிகிச்சை முறைகளையும் கையாள வேண்டும். கபத்தினால் தோன்றிய பெண்குறி நோய்களில் வறட்சியும் உஷ்ணவீரியமும் உள்ள பொருள்களால் அத்தன்மையான சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். *ஸந்நிபாதத்தினால் தோன்றிய நோயில் வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட முறைகளைக் கலந்தும், இரண்டு தோஷங்

குறிப்பு—பெண் உறுப்புகளில் நோய் வாதத்தின் தொடர்பின்றி தோன்றுவதில்லை. எனவே பெண் குறி நோய்கள் அனைத்திலும் முதலில் வாதத்தின் நிலையை ஆராய்ந்து அதைத் தணியச் செய்து பிறகு மற்ற தோஷங்களுக்குத் தக்க சிகிச்சையை வாதத்திற்குப் பகையாகாமல் கையாள வேண்டும்,

கள் கலந்து தோற்றுவித்த நோயில் அவ்விரண்டுதோஷங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளைக் கலந்தும் பயன்படுத்தவேண்டும். 41—42

## 26. தாறுமாறான பெண்குறியைச் சரிப்படுத்துதல்

பெண்குறி நோயில் குறி கருப்பை இயற்கையாக இல்லாமல் தாறுமாறாக இருந்தால் எண்ணெய் முறையால் முதலில் குறிப் பகுதியை எண்ணெய்ப் பசை கொண்டதாகச் செய்து முறைப் படி வியர்க்கச்செய்து பிறகு இயற்கையாக இருக்கும்படிச் செய்ய வேண்டும். குறி கோணலாக இருந்தால் கையால் சரி செய்ய வேண்டும். குறி மூடிக் கொண்டிருந்தால் கைகளால் பிரித்து விட வேண்டும். கருப்பை இயற்கை நிலையிலிருந்து நழுவி யிருந்தால் மறுபடி இயற்கையாக இருக்கும்படி உட்புகச் செய்ய வேண்டும். வாய் திறந்து கொண்டிருந்தால் கையால் அதை மூடிக்கொள்ளும்படி செய்ய வேண்டும். பெண்குறி உறுப்புகள் இயற்கை நிலை தவறி தாறுமாறாக இருந்தால் அது எலும்பு போலாகிப் பெண்ணை மிகவும் துன்புறுத்தும். (எனவே இயற்கை நிலையையடையும்படிச் செய்ய வேண்டும் என்பதாம்.) 43—44

## 27. பெண்குறி நோயில் * பஞ்சகர்மாவைப் பயன்படுத்தல்

பெண்குறி நோய்கள் அனைத்திலும் மிகவும் மென்மையாக வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய ஐவகைச் செயல்களையும் பயன்படுத்தி எண்ணெய் முறை உடல் வியர்க் கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தி வெளிப்பகுதியும் உட் பகுதியும் தூய்மைபெறச் செய்த பிறகு இனி கூறப்போகும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். (பெண்குறி நோய் கள் அனைத்திலும் பொதுவாக வாதம் சீற்றமடைவதால் சிகிச்சை முறைகள் மென்மையாக இருக்க வேண்டும். கடுமை யாக இருக்கக் கூடாது.) 45—46

## 28. வாதிக யோனி சிகிச்சை

கருவுறுப்புகளில் வாதத்தினால் தோன்றிய நோய் உள்ள வளுக்கு வாதநோய்களைப் போக்கும் சிகிச்சை முறைகள் நன்மை தரும். எள்ளும் அரிசியும் வாதத்தைப் போக்கும் மருந்துப் பொருள்களும் சேர்த்துக் காய்ச்சியதான நீரில் வாழும் விலங்கு

---

* பஞ்சகர்மா—வாந்தி எடுக்கச் செய்தல் பேதிக்குக் கொடுத்தல் கஷாய வஸ்தி எண்ணெய் வஸ்தி மூக்கில் மருந்திடுதல்.

களுடையதோ சதுப்பு நிலத்தில் வாழும் விலங்கினுடையதோ ஆன புலால் அல்லது பசும்பால் இவைகளைக்கொண்டு நாடீஸ்வேதம் கும்பீஸ் வேதம் என்னும் முறைகளால் உடலை வியர்க்கச்செய்ய வேண்டும். மற்றும் இந்துப்புடன் கூடிய எண்ணெயை உடலில் பூசி அக்மகனம்—பிரஸ்தரம்—ஸங்கரம் என்னும் உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு வியர்க்கச் செய்தபின் இளஞ்சூடுள்ள நீரால் குளிக்கச் செய்து வாதத்தைப் போக்கும் பொருள்களாலான புலால் சாற்றுடன் கூடிய உணவை உண்ணச் செய்ய வேண்டும். 47—48

## 29. வாதயோனி நோய்க்குப் [1]பலாதிதைலம்

சித்தாமுட்டி கஷாயம் இரண்டு துரோணம் (512 பலம்) நெய் எள்எண்ணெய் இரண்டும் சேர்த்து (64 பலம்) இவற்றைச் சேர்த்து அத்துடன் மூவிலை பால் முதுக்கன் கிழங்கு கீரைப்பாலை காகோலி ரிஷபகம் ஜீவகம் சிவகரந்தை திப்பிலி காட்டுப்பயறு உவகை காட்டுஉளுந்து சர்க்கரை க்ஷீரகாகோலி கசப்புக்கோவை இவற்றைச் சேர்த்து அரைத்த விழுதையும் எண்ணெயின் அளவிற்கு நாலில் ஒரு பங்காகச் சேர்த்து எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு பசும்பால் கலந்து முறைப்படி தைலம் காய்ச்சுக. இதை நோயாளியின் உடல் வலிமைக்கு ஏற்ற அளவு உட்கொள்ளச் செய்தால் வாத பித்தங் களால் தோன்றிய நோய்கள் நீங்கும். கருவைத் தோற்றுவிக்கும். 49—50

## 30. பெண்குறி நோய்களுக்கு காச்மர்யாதி கிருதம்

குமிழம் திரிபலை திராட்சை காஞ்சொரி சிற்றீச்சை சாரடை மஞ்சள் மரமஞ்சள் கசப்புக்கோவை முள்மருதாணி தண்ணீர்விட்டான்கிழங்கு சீந்தில்கொடி இவை ஒவ்வொன்றும் ஒரு கர்ஷம் (கால் பலம்) எடை வீதம் கொண்டு 16 பலம் அளவுள்ள பசு நெய் கலந்து முறையாக [2]நெய்ப் பக்குவம் செய்க. இதைப் பருகச் செய்தால் பெண் குறியைச் சார்ந்த வாத நோய்கள் அனைத்தும் நீங்கும். மற்றும் இம் மருந்து கருவுறச் செய்யும். 51—53

1. பலாதி—சிற்றாமுட்டி முதலிய.
2. இதில் நீரின் அளவு கூறப்படாவிட்டாலும் முறைப்படி நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு நீர் சேர்த்துக் காய்ச்ச வேண்டுமென அறிக.

### 31. பெண்குறி நோய்க்குத் திப்பிலி முதலியவற்றின் பயன்

திப்பிலி கருஞ்சீரகம் வெள்ளைச்சீரகம் ஆடாதொடை இந்துப்பு வசம்பு யவக்ஷாரம் ஓமம் சர்க்கரை கொடிவேலி இவற்றைச் சம அளவில் கொண்டு நெய்யில் வறுத்து மென்மை யான சூரணம் செய்து கள்தெளிவில் கலந்து சீரணவலிமைக் கேற்பப் பயன்படுத்தினால் பெண்குறியில் குத்தல் வலி விலாவலி இதயநோய் குன்மம் மூலநோய் என்பன நீங்கும். 54—55

### 32. பெண்குறி நோய்க்கு ஆடாதொடை முதலியவற்றின் விழுது

ஆடாதொடை குறிஞ்சி மரத்தின்வேர் மல்லிகைச் செடி வேர் இவற்றைச் சமஅளவில் கலந்து தூளாக்கியாவது திப்பிலி கருஞ்சீரகம் இவற்றைச் சம அளவில் கலந்து தூளாக்கியாவது கள்ளின் தெளிவில் கலந்து இந்துப்பும் சேர்த்துப் பருகச் செய்க. மற்றும் சித்தரத்தை நெருஞ்சில் ஆடாதொடை இம் மூன்றையும் சம அளவில் சேர்த்துப் பாலுடன் காய்ச்சிப் பருகச் செய்க. ;னால் பெண்குறியில் குத்தல்வலி நீங்கும். 56—57

### 33. யோனி நோய்களில் [1]பரிஷேகம்

சீந்தில்கொடி திரிபலை நேர்வாளவேர் இவற்றைச் சம அளவில் கொண்டு கஷாயம் காய்ச்சி இளஞ்சூடுள்ள அந்த நீரால் பெண்குறியை நனைத்துக் கொண்டு வந்தால் பெண்குறியில் தோன்றிய குத்தல்வலி நீங்கும்.

)ந்துப்பு கிரந்திதகரம் கோஷ்டம் முள்ளுக்கத்தரி தேவ தாருக் கட்டை இவற்றைச் சம அளவில் சேர்த்து விழுதாக அரைத்து அவ்விழுதிற்கு நான்கு மடங்கு எள்எண்ணெயும் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு நீரும் சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சி அவ்வெண்ணெயில் பஞ்சை நனைத்துப் பெண்குறியில்வைத்துக் கொள்ளச் செய்தால் அங்குத் தோன்றிய குத்தல் வலி நீங்கும். 58

### 34. பெண் குறியில் வலிக்கு [2]குடூச்யாதி தைலம்

சீந்தில்கொடி முல்லைமலர் சித்தரத்தை சித்தாமுட்டி அதிமதுரம் கொடிவேலி கண்டங்கத்தரி தேவதாருக்கட்டை காட்டுமல்லி இவை ஒவ்வொன்றும் கால் பலம் வீதம்

1. பரிஷேகம்—மருந்து கலந்த நீரால் நனைத்தல்.
2. குடூசி—சீந்தில்கொடி.

கலந்து விழுதாக அரைத்து 16 பலம் அளவுள்ள எண்ணெயும் எண்ணெயின் அளவிற்குச் சமமாக பசுவின் சிறுநீரும் இரண்டு மடங்கு பசும்பாலும் கலந்து முறையாகத் தைலம் காய்ச்சி அவ்வெண்ணெயில் பஞ்சை தோய்த்தெடுத்து வாதத்தினால் தோன்றிய பெண்குறியில் வைத்துக் கொண்டிருக்கச் செய்க. அல்லது இந்த எண்ணெயைக்கொண்டு முறையாக உத்தரவஸ்தியைச் செய்விக்க. 59—60

## 35. வாதிக யோனிக்கு ஸேக முறை

வாதத்தின் சீற்றத்தால் தோன்றிய பெண்குறி நோய்களைக் கொண்ட வளுக்குப் பெண்குறியை உஷ்ணமும் எண்ணெய்ப்பசையும் உள்ள கஷாயம் எண்ணெய் முதலியவற்றால் நனைத்தல் எண்ணெய்க் குளியல் பஞ்சை நனைத்துக் குறியினுள் வைத்துக் கொள்ளுதல் போன்ற முறைகளைப் பயன்படுத்துக. 61

## 36. வாத யோனி நோய்க்கு விழுது

வாதத்தினால் தோன்றிய பெண்குறி நோயில் இளஞ்சூடுள்ள எண்ணெய் மருந்தைப் பெண்குறிமேல் பூசி கண்டங்கத்தரி விழுதைக் குறிக்குள் வைத்துக் கொண்டிருக்கச் செய்க. பித்தத்தினால் தோன்றிய பெண்குறி நோயில் *அரசு முதலிய ஐந்து மரங்களின் பட்டைகளின் விழுதை குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்க. கபத்தினால் தோன்றிய பெண்குறி நோயில் விமானஸ்தானம் எட்டாவதான ரோகபிஷக்ஜிதீயம் என்னும் அத்தியாயத்தில் கூறப்பட்ட சியாமாதிருவிருத் முதலிய கூட்டுப் பொருள்களின் விழுதைக் குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்க. 62

## 37. பித்தத்தினால் தோன்றிய பெண்குறி நோய்களுக்குச் சிகிச்சை

பித்தத்தினால் தோன்றிய பெண்குறி நோய்களில் குளுமைத் தன்மையுள்ளவையும் பித்தத்தைப் போக்குவனவுமாகிய மருந்துகளைக் கொண்டு தயார் செய்த கஷாயத்தை உறுப்புகளை நனைத்துக் கொண்டிருத்தல் எண்ணெய்க்குளியல் மருந்தில் நனைத்த பஞ்சை அங்கு வைத்துக் கொண்டிருத்தல் என்பனவற்றைப் பயன்படுத்தவும். 63

*அரசு—அத்தி அரசு ஆல் புரசு

## 38. பெண்குறி நோய்களுக்குப் பிருஹத்சதாவரீ கிருதம்

தண்ணீர்விட்டான்கிழங்கு நானூறு பலம் கொண்டு நன்றாக இடித்துச் சாறு பிழிந்து அச்சாற்றிற்குச் சம அளவு பசும்பாலும் 64 பலம் அளவு பசு நெய்யும் கலக்கவும். அதில் ஜீவனீய கூட்டுப் பொருள் தண்ணீர்விட்டான் கிழங்கு திராட்சைப் பழம் சிற்றீச்சம்பழம் முரளம்பழம் இரண்டு பங்கு அதிமதுரம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கால் பலம் அளவு கொண்டு அரைத்துக் கலந்து முறைப்படி நெய்ப் பக்குவம் செய்க. அது குளிர்ந்த பின் எட்டு பலம் தேன் எட்டு பலம் திப்பிலித்தூள் பத்து பலம் சர்க்கரை கலந்து இந்த நெய் மருந்தை வேளைக்கு கால் பலம் அளவு உட்கொள்ளச் செய்க. இதனால் பெண்குறி நோய்களும் மாதவிடாய் தோஷமும் ஆண் விந்து தோஷமும் நீங்கும். ஆடவனுக்கு இம்மருந்து விந்துவின் வலிமையை வளர்க்கும். ஆண் குழந்தை பிறக்கச் செய்யும். இம்மருந்து மார்பில் அடி படுதலால் தோன்றும் நோய் க்ஷயம் இரத்தபித்தம் இருமல் இழுப்பு ஹலீமகம் காமாலை வாதஇரத்தம் அக்கி மார்பில் வலி தலைவலி பைத்தியம் எதிலும் விருப்பமின்மை கால்கைவலி எனும் வாதபித்தத்தினால் தோன்றும் நோய்களைப் போக்கும். 64—68

## 39. பெண்குறி நோய்க்கு ஜீவனீயக்ஷீரபானம்

ஜீவனீயகணத்தைச் சார்ந்த கூட்டுப் பொருள்களை விழுதாக அரைத்துப் பாலில் கலந்து பக்குவம் செய்து அதிலிருந்து எடுத்த நெய்யையும் சதாவரீ கிருதத்தையும் பயன்படுத்தினால் கரு உருவாகும். பித்தத்தினால் தோன்றும் பெண்குறி நோய்கள் நீங்கும். 69

## 40. கபத்தினால் தோன்றிய பெண்குறி நோய்க்குச் சிகிச்சை

கபத்தினால் தோன்றிய பெண்குறி நோய்களில் தூய்மைப் படுத்தும் வர்த்திகளைப் பயன்படுத்துதல் மிகவும் நன்மை பயக்கும். ஆடைக் கந்தலை பன்றியின் கொழுப்பில் பலமுறை ஊற வைத்து வர்த்தியாகச் செய்து குறிக்குள் வைத்துக் கொள்ளச் செய்க. யவதானியமாவை எருக்கம்பாலில் ஊறவைத்து அதில் இந்துப்பைக் கலந்து வர்த்தியாகச் செய்து குறியில் வைத்துக் கொண்டு இளஞ்சூடுள்ள நீரினால் நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். மற்றும் திப்பிலி மிளகு உளுந்து சதகுப்பை கோஷ்டம் இந்துப்பு இவற்றைச் சம அளவில் கொண்டு நீருடன் அரைத்து சுட்டுவிரல் பருமனுள்ளதும் அவ்வளவே நீளமுள்ளது

மான வர்த்தியைச் செய்து பெண்குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்தால் அது தோஷங்கள் அனைத்தையும் நீக்கும். 70–72

### 41. பெண்குறி நோய்க்கு [1]உதும்பராதி தைலம்

அத்திக்காய், ஐந்து மரப்பட்டைகள் கருவேலம்பட்டை முல்லை மொட்டு வேப்பந்துளிர் இவற்றைச் சமஅளவில் கொண்டு 256 பலம் அளவுள்ளதாகச் செய்து 256 பலம் அளவுள்ள நீரில் ஓரிரவு முழுவதும் ஊறவைத்து அத்துடன் 16 பலம் எள்எண்ணெய் கலந்து மற்றும் கொம்பரக்கு கருங்காலிக் கட்டை புரசுப்பட்டை புரசுப்பிசின் இலவம்பிசின் இவற்றைச் சம அளவு கொண்டு அரைத்துச் செய்த விழுதை எண்ணெயின் அளவில் நாலில் ஒரு பங்கு கலந்து முறையாக எண்ணெய் காய்ச்சுக. அதில் பஞ்சை நனைத்துக் குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்க. பிறகு அத்தி முதலிய ஐந்து மரப்பட்டைகள் சேர்த்துத் தயார் செய்த சீதகஷாயத்தில் சர்க்கரையைக் கலந்து அதனால் குறியை நன்றாகக் கழுவச் செய்க. இதனால் பிசுபிசுப்புடன் நெடுநாட்களாக இருந்துவந்த கொடிய நோய் நீங்கும். இவ்வாறு ஏழு நாட்கள் சிகிச்சை செய்தால் கருவுறுப்புகள் நோய் நீங்கித் தூய்மைபெறுவதுடன் மக்கட்பேறும் உண்டாகும். 73–76

### 42. உதும்பராதி தைலம் (மற்றொரு முறை)

எள்ளை அத்திமரப்பாலில் [2]ஆறுமுறை ஊறவைத்து அந்த எள்ளிலிருந்து எடுக்கப்பட்ட எண்ணெயை அத்திப்பட்டையின் கஷாயத்தில் சேர்த்து முறையாக எண்ணெய் காய்ச்சி அதில் நனைக்கப்பட்ட வர்த்தியை முன்கூறியதுபோல் குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்தாலும் பெண்குறி நோய்கள் நீங்கும். 77

### 43. பெண்குறி நோய்களுக்கு [3]தாதக்யாதிதைலம்

ஆட்டின் சிறுநீர் 32 பலங்கள் பசும்பால் இரண்டு பிரஸ்தம் எள்எண்ணெய் ஒரு பிரஸ்தம் இவற்றை ஒன்றாக கலந்து அதில் காட்டாத்திமலர் நெல்லி இலை சுரோதோஞ்சனம்

1. உதும்பராதி—அத்திக்காய் முதலிய.
2. இரவு முழுவதும் ஊறவைத்துப் பகல் முழுவதும் நிழலில் உலர்த்த வேண்டும். இவ்வாறு ஆறு நாட்கள் செய்ய வேண்டும்.
3. தாதகீ—காட்டாத்

அதிமதுரம் நீலஆம்பல் நாவல்கொட்டையினுள் இருக்கும் பருப்பு மாங்கொட்டையினுள் இருக்கும் பருப்பு அன்னபேதி பாச்சோத்திப்பட்டை தேக்கு மரப்பட்டை திந்துகம் துவர்மண் மாதுளம்பழத்தோல் அத்திக்காய்இவை ஒவ்வொன்றும் ஒரு கால் பலம்அளவு வீதம் கொண்டு விழுதாக அரைத்துச் சேர்த்து முறையாக எண்ணெய் காய்ச்சுக. இந்த எண்ணெயை பஞ்சை நனைத்துக் குறியினுள் வைப்பதற்கும் வஸ்தி முறைக்கும் பயன் படுத்தலாம். மற்றும் இந்த எண்ணெயை இடுப்புப்பகுதி முதுகு முதுகுத்தண்டின் அடிமுனை என்னுமிடங்களில் தேய்ப்பதற்கும் எண்ணெய் வஸ்தி முறைக்கும் பயன்படுத்தலாம். இதனால் பிசுபிசுப்பும் நீரைப்போன்ற திரவமும் ஒழுகிக் கொண்டிருப்பதும் விப்லுதம் உபப்லுதம் என்னும் பெண்குறி நோய்களும் பெண் குறியில் சதை வெளிவந்திருப்பதும் பெண்குறி மேடாகவும் வீங்கியும் இருப்பதுமான குறிநோய்களும் கொப்புளங்களுடன் குத்தல் வலியுள்ள நோயும் நீங்கும். 78—81

## 44. பெண்குறியைக் கழுவும் முறை

கரீரம் வேங்கைப்பட்டை வேப்பம்பட்டை எருக்கம்பட்டை மூங்கில் இலை கருத்தமாமரப்பட்டை நாவல்பட்டை மஞ்சிட்டி ஆடாதொடைவேர் இவற்றைச் சம அளவில் கலந்து கஷாயம் காய்ச்சி அதில் தேனையும் சீது எனும் கள்ளையும் புளிக்காடியை யும் சேர்த்து அதனால் பெண்குறியைக் கழுவச்செய்தால் அதி லிருந்து நீர் பெருகுதல் நீங்கும். அல்லது திரிபலை கஷாயத்தில் புளித்த மோரைக் கலந்து குறியைக் கழுவப் பயன்படுத்துக. திப்பிலி உலோகபற்பம் (இரும்பு அறாவிய தூள்) கடுக்காய் இவற்றைத் தூளாக்கித் தேனில் கலந்து உட்கொள்ளச் செய்தல் மிகவும் நலம் தரும். 82—84

## 45. பெண்குறி நோய்களில் வஸ்தியின் பயன்

கபத்தினால் தோன்றிய பெண்குறி நோய்களில் கார்ப்புச் சுவைய்ய முக்கியமாகக்கொண்டு பசுவின் சிறுநீருடன் வஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். பித்தத்தினால் தோன்றிய நோயில் இனிப்புச் சுவையுள்ள பொருள்களுடன் கூடிய பாலை யும் வாதத்தினால் தோன்றிய நோயில் புளிப்புச் சுவையுள்ள பொருள்களுடன் கூடிய எண்ணெயையும் பயன்படுத்தி வஸ்தி முறைகளைப் கையாள வேண்டும். ஸந்நிபாதத்தினால் தோன்றிய நோயில் தனித்தனியாகத் தோஷங்களுக்குக் கூறப் பட்ட முறைகளைக் கலந்து பயன்படுத்தவும். 85

## 46. இரத்தப்பெருக்குள்ள பெண்குறி நோய்க்குச் சிகிச்சை

இரத்தப்பெருக்குள்ள பெண்குறி நோயில் இரத்தத்தின் நிறம், நீலம் மஞ்சள் வெண்மை நிறங்களில் எதைக் கொண்டிடிருக்குமோ அதைக் கவனித்து அந்தந்த தோஷத்திற்கு ஏற்ப வஸ்தி முதலிய முறைகளைக் கொண்டு சிகிச்சை செய்து பிறகு இரத்தம் வெளியேறாமல் தடுக்கும் முறைகளை அந்தந்த தோஷத்திற்கு ஏற்பப் பயன்படுத்த வேண்டும். 86

## 47. வாதிகரக்த [1]ப்ரதரசிகிச்சை

எள்ளின் தூள் தயிர் நெய் சர்க்கரைப்பாகு பன்றியின் கொழுப்பு இவற்றைத் தேனுடன் கலந்து பருகச் செய்தால் வாதம் சீற்றமுறுவதால் தோன்றிய பெரும்பாடு நீங்கும். மற்றும் பன்றியின் இறைச்சிச் சாற்றில் கொள்ளின் மாவைக் கலந்து பருகச் செய்தாலும் வாதத்தினால் பெண்குறியில் தோன்றிய இரத்தப்பெருக்கு நீங்கும். 87

## 48. பித்தத்தினால் தோன்றிய இரத்தப்பெருக்குச் சிகிச்சை

சர்க்கரை தேன் அதிமதுரம் சுக்கு இவற்றைத் தயிரில் கலந்தோ பால்முதுக்கன் கிழங்கு கருநெய்தல் தாமரை முதலியவற்றின் கிழங்கு அவற்றின் தண்டுகள் மரமஞ்சள் அல்லது கருஞ்சந்தன கோரைக்கிழங்கு என இவற்றை அரைத்துப் பாலில் கலந்து அதில் சர்க்கரையும் தேனும் கலந்தோ பருகச் செய்தால் பித்தத்தால் பெண்குறியில் தோன்றிய ரத்தப்பெருக்கு நீங்கும். 88–89

## 49. பெண்குறி நோய்களுக்குப் புஷ்யானுக சூரணம்

வட்டத்திருப்பி நாவல்பருப்பு மாங்கொட்டையினுள்ளிருக்கும் பருப்பு சிறுபீளை ரஸாஞ்சனம் [2]வட்டத்திருப்பி இலவம் பிசின் மஞ்சிஷ்டி குடசப்பாலை குங்குமப்பூ அதிவிடயம் வில்வப் பட்டை கோரைக்கிழங்கு பாச்சோத்திப்பட்டை காவிக்கல் பெரு வாகைப் பட்டை மிளகு சுக்கு திராட்சைப்பழம் சிவப்புச் சந்தனம் தேக்கு மரப்பட்டை குடசப்பாலை விதை காஞ்சொரி காட்டாத்

---

1. பிரதரம்—பெரும்பாடு. (கருப்பையிலிருந்து அதிகமாக மாதவிடாய் அல்லாத போதும் ரத்தம் வெளிப்படுத்தல்)
2. ஒரு மருந்தை இருமுறை கூறினால் அதன் வகையைச் சேர்ந்த மூலிகையைக் கொள்க. அல்லது அதையே இருமுறை கொள்க.

திப்பூ அதிமதுரம் கடப்பமரப்பட்டை என்பனவற்றை மாசிமாதம் பூசநட்சத்திரம் உள்ள நாளில் சம அளவாகக் கொண்டு மெத் தெனத் தூளாக்கி ஆடையால் சலித்து எடுத்து கழுநீரும் சிறிது தேனும் கலந்து பருகச் செய்க.

## 50. இரத்தப்பெருக்கை நீக்க மேலும் சில முறைகள்

சிறுகீரையின் வேரை அரைத்துக் கழுநீரில் கலந்து அதில் தேன் சேர்த்துப் பெண்குறி நோய்களிலும் இரத்தப்பெருக்கிலும் குடிக்கச் செய்ய வேண்டும். மற்றும் ரஸாஞ்சனத்தையும் கொம்பரக்கையும் ஆட்டுப்பால் விட்டு அரைத்துப் பருகினாலும் நலம் தரும். புரச இலையையோ விளாமரத்தின் இலையையோ விழுதாகச் செய்து நெய்யில் வதக்கி உட்கொள்ளச் செய்தால் பித்தவாதங்களால் தோன்றிய பெரும்பாடு நோய்கள் நீங்கும். பித்தத்தினால் மட்டும் தோன்றிய இரத்தப்பெருக்கில் இரத்த பித்தத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சைகள் அனைத்தும் நன்மை பயக்கும். அதிமதுரம் திரிபலை பாச்சோத்தி கோரைக்கிழங்கு துவர் மண் இவற்றைச் சம அளவில் தூளாக்கிக் கள்ளில் கலந்து சிறிது தேன்விட்டுப் பருகச் செய்க. வேப்பம்பட்டை சீந்தில் கொடி இவ்விரண்டையும் தூளாக்கிக் கள்ளில் கலந்து பருகச் செய்வதால் கபத்தால் தோன்றிய இரத்தப்பெரும்பாடு நீங்கும். 96—98

## 51. பித்தத்தினால் தோன்றும் இரத்தப்பெருக்குக்கு பேதியாகச் செய்தல் முதலியன

பித்தத்தினால் தோன்றிய இரத்தப்பெருக்கில் சிவதை முதலிய பேதியாகச் செய்யும் மருந்துகளைப் பயன்படுத்துதலும் *குட்ட சிகித்ஸிதத்தில் கூறப்பட்ட மகாதிக்த கிருதத்தைப் பயன்

த்ஸாஸ்தானம் ஏழாம் அத்யாயத்தில் 144—150 சுலோக உரையைக் காண்க.

படுத்தலும் இதமானவையாகும். மற்றும் [1]கருச்சிதைவுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகள் அனைத்தையும் பயன்படுத்தலாம். 99

## 52. இரத்தப்பெருக்கு முதலியவற்றிற்கு உத்தரவஸ்தி முறை

குமிழம் குடசப்பாலை இவற்றின் கஷாயத்தைச் சேர்த்துப் பக்குவப்படுத்திய நெய்யால் [2]உத்தரவஸ்தியைப் பயன்படுத்தினால் இரத்தப்பெருக்கு அரஜஸ்கா புத்ரக்னி என்னும் பெண்குறி நோய்கள் தணியும். 100

## 53. அரஜஸ்கா என்னும் குறிநோய்க்கு இரத்த பானம்

அரஜஸ்கா என்னும் பெண்குறி நோயில் மான் ஆடு செம்மறியாடு பன்றி எனும் விலங்குகளின் இரத்தத்தைத் தயிருடனாவது மாதுளம் பழச்சாறு முதலியவற்றுடனாவது நெய்யுடனாவது கலந்து பருகச் செய்ய வேண்டும். மற்றும் ஜீவனீய கணப்பொருள்கள் சேர்த்துக் காய்ச்சிய பாலைப்பருகச் செய்தலும் நலம் தரும். 101

## 54. கர்ணினி முதலிய பெண்குறி நோய்களுக்கு உத்தரவஸ்தி

கர்ணிகை அசரணா சுஷ்கயோனி பிராக்சரணா எனும் பெண்குறி நோய்களுக்குக் கபவாதத்தால் தோன்றிய குறிநோய்களுக்குக் கூறப்பட்ட ஜீவனீய கணக் கூட்டுப் பொருள் சேர்த்து காய்ச்சிய எண்ணெயை முறைப்படி உத்தர வஸ்தியில் பயன்படுத்துக. 102

## 55. அசரணாயோனி சிகிச்சை

பட்டுத்துணியைப் பசுவின் பித்தநீரிலோ மீனின் பித்த நீரிலோ இருபத்தொருமுறை [3]பாவனை செய்து குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்வதாலும் சுராபீஜத்தைத் தேனில் கலந்துப் பெண்குறியினுள் வைத்துக் கொள்ளச்செய்வதாலும் அசரணா என்னும் குறிநோய் நீங்கும். இம்முறைகள் துவார

---

1. சாரீரஸ்தானம் எட்டாம் அத்யாயமான ஜாதிஸூத்ரீயத்தில் கருச்சிதைவுக்கான சிகிச்சை முறைகளைக் காண்க.
2. உத்தரவஸ்தி – முறையாக மருந்தை பெண்குறியினுள் செலுத்துதல்.
3. பாவனை–இரவு முழுவதும் மருந்து நீரில் ஊறவைத்துப் பகலில் நிழலில் உலர்த்துதல் பாவனை முறையாகும்.

வழியைத் தூய்மைப்படுத்தி அரிப்பு குழகுழப்பு வீக்கம் என்பன வற்றைப் போக்கும். 103

## 56. பிராக்சரணா அதிசரணா நோய்களுக்குச் சிகிச்சை

பிராக்சரணா அதிசரணா எனும் குறி நோய்களில் வாதத்தைப் போக்குவதும் நூறு முறை பக்குவம்செய்யப்பட்டது மான எண்ணெயால் ஆஸ்தாபன அநுவாஸன வஸ்திகளைச் செய்து வாதத்தைப் போக்கும் எண்ணெய்ப்பசை கொண்ட பொருள்களாலும் உணவாலும் உபநாகம் என்னும் வியர்க்கச் செய்யும் முறையாலும் வியர்க்கச் செய்ய வேண்டும். பிறகு சதகுப்பை யவதானியம் கோதுமை சுராபீஜம் (கள்வகைகளின் அடி வண்டல்) கோஷ்டம் ஞாழல் சிற்றாமுட்டி எலிச்செவியிலை தேக்கு இவற்றை அரைத்து ஆவியில் பக்குவம் செய்து குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்ய வேண்டும். 104–106

## 57. வாமினி உபப்லுதா என்னும் நோய்களுக்குச் சிகிச்சை

வாமினி உபப்லுதா என்னும் குறி நோய்களில் முறைப்படி எண்ணெய் முறை உடல் வியர்க்கச் செய்தல் என்பனவற்றைப் பயன்படுத்திப்பிறகு எண்ணெயில் தோய்த் தெடுக்கப்பட்ட பஞ்சைக் குறியினுள் வைத்துக் கொண்டிருக்கச் செய்து உடலைச் செழிக்கச் செய்யும் *பரிஷேகம் முதலிய முறைகளைக் கையாள வேண்டும். 107

## 58. விப்லுதாகர்ணினி என்னும் நோய்களுக்குச் சிகிச்சை

ஈஞ்சில் மஞ்சிட்டி நாவல்பட்டை கருங்காலிப்பட்டை ஐந்து மரப்பட்டைகள் (அத்தி அரசு ஆலம் புரசு இத்தி) இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயங்கொண்டு தயார் செய்த எண்ணெயில் பஞ்சை நனைத்துக் குறியினுள் வைத்தால் விப்லுதா என்னும் நோய் நீங்கும். 108

கர்ணினி எனும் நோய்க்குக் கோஷ்டம் முதலியவற்றாலான வர்த்தி, கோஷ்டம் திப்பிலி எருக்கந்துளிர் இந்துப்பு இவற்றைச் செம்மறியாட்டின் சிறுநீருடன் அரைத்து கட்டியாகச் செய்து அதைக் குறியினுள் வைக்க வேண்டும். மற்றும் கபத்தைப் போக்கும் சிகிச்சை முறைகளைக் கையாளவேண்டும். 109

---

* பரிஷேகம்—மருந்து கலந்த திரவத்தால் நனைத்துக் கொண்டிருத்தல்.

## 59. உதாவர்த்தம் முதலிய நோய்களுக்குச் சிகிச்சை

உதாவர்த்தினி என்னும் குறிநோய்க்கும் வாதத்தினால் தோன்றிய நோய்க்கும் எண்ணெய் முறைக்குச் சிவதை சேர்த்துப் பக்குவம் செய்த நெய் எண்ணெய் கொழுப்பு ஆகிய பொருள் களைப் பயன்படுத்தலாம். கிராமத்தில் வாழும் விலங்குகளின் அல்லது நீரிலோ நீர்ப்பாங்கான நிலத்திலோ வாழும் விலங்கு களின் புலால் சாறுகளைக் கொண்டு உடலை வியர்க்கச் செய்ய வேண்டும். தசமூலங்கள் சேர்த்துக் காய்ச்சிய பாலைக் கொண்டு வஸ்தி செய்விக்க வேண்டும். சிவதையைக் கொண்டு பக்குவம் செய்த எண்ணெயால் அநுவாஸன உத்தர வஸ்திகளைச் செய் விக்க வேண்டும்.

மேலும் மகாயோனி தன்னிடம் விட்டகன்று கீழிறங்கிய கருப்பை எனும் நோய்களிலும் முன்கூறிய சிவதையைச்சேர்த்துக் காய்ச்சிய எண்ணெயைக் கொண்டே அநுவாஸன–உத்தர வஸ்திகளைப் பயன்படுத்த வேண்டும். 110–111

## 60. மகாயோனி சிகிச்சை

மகாயோனி எனும் நோயில் கரடியினுடையதும் காட்டுப் பன்றியினுடையதுமான கொழுப்பையும் நெய்யையும் இனிப்புச் சுவை கொண்ட பொருள்களையும் கலந்து முறைப்படி எண்ணெய் காய்ச்சி அந்த எண்ணெயைக் குறியில் நிரப்பிப் பட்டுத் துணியால் கட்டுப்போட வேண்டும். 112

## 61. நழுவிய சதை கொண்ட குறிக்குச் சிகிச்சை

மகாயோனி என்னும் நோயில் குறியிலிருந்து மாமிசம் வெளியே நழுவியிருக்குமாயின் நெய்யால் நனைத்து முறைப்படி பாலைக்கொண்டு உடல் வியர்க்கச் செய்து வெளிவந்துள்ள பகுதியைத் தக்கபடி உள்ளே இயற்கை நிலையிலிருக்குமாறு செலுத்தி *வேசவாரம் என்னும் மாமிசத்தைக் குறியினுள் வைத்துப் பட்டுத் துணியால் சிறுநீர் வெளிவரும் நேரம் வரை கட்டி வைக்கச் செய்ய வேண்டும். 113

## 62. குறிநோய்களில் வாதத்திற்குச் சிகிச்சை

குறி நோய்கள் அனைத்திலும் வாதத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சைகளைப் பொதுவாகச் செய்யலாம். அவற்றை மகா

---

* வேசவாரம்—எலும்பு சிறிதும் இல்லாமல் தனியாக்கப் பட்ட புலால்.

யோனி என்னும் நோயில் சிறப்பாகப் பயன்படுத்த வேண்டும். வாதத்தின் தொடர்பு இன்றி பெண்களுக்குக் குறி நோய்கள் உண்டாகா. எனவே பொதுவாகப் பெண்குறி நோய்களில் முதலில் வாதத்தைத் தணியச் செய்து பிறகு பித்தம் கபம் முதலிய தோஷங்களுக்கு உரிய சிகிச்சைகளைக் கையாள வேண்டும். *114–115*

## 63. இரத்தப் பெரும்பாட்டுக்கு விழுது முதலியன

வெண்மை நிறங்கொண்ட பெரும்பாட்டிற்கு முள் முருங்கை வேரை அரைத்து விழுதாகச் செய்து உட்கொள்ளச் செய்ய வேண்டும். நெல்லிக்காயினுள் இருக்கும் பருப்பை எள் நீர் இவற்றுடன் அரைத்து விழுதாகச் செய்து அதில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. நெல்லிக்காய்த் தூளையோ சாற்றையோ தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. ஆலம்பட்டைக் கஷாயத்தில் பாச்சோத்திப் பட்டைத் தூளைக் கலந்து பருகச் செய்க. ரத்தப் பெருக்கு மிகுதியாக இருந்தால் பட்டுத் துணியை ஆலம் பட்டைக் கஷாயத்தில் பலமுறை நனைத்துப் *பாவனை செய்து குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்க. *116–118*

## 64. இரத்தப் பெருக்கு நிற்கச் சிகிச்சை

மற்றும் முன்கூறிய பெரும்பாட்டில் குறிமேல் எண்ணெயைத் தடவி பிறகு இத்தி மரத்தூளைத் தேனில் கலந்து உருண்டையாக்கிக் குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்க. அல்லது பாச்சோத்திப்பட்டை ஞாழல் பட்டை அதிமதுரம் அத்தி ஆலம் முதலிய துவர்ப்புச் சுவையுள்ள மரத்துப்பட்டைகள் அனைத்தையும் தேன்விட்டு அரைத்து வர்த்தியாகச் செய்து குறியினுள் வைத்துக் கொள்ளச் செய்யவும். மற்றும் குறியில் எண்ணெயைப் பூசி தேவதாரு பிசின் குக்குலு யவதானியம் கசப்புச் சுவை கொண்ட சபரி என்னும் மீன் இவற்றை இடித்துத் தூளாக்கி நெய்யிலும் எண்ணெயிலும் நனைத்து அதைக் கொண்டு புகை பிடிக்கச்செய்க. *119–120*

பாவனை செய்தல்—இரவு முழுவதும் மருந்து நீரில் ஊறவைத்துப் பகலில் நிழலில் உலர்த்துதல்.

## 65. குறியில் பிசுபிசுப்பு நீங்க [1]காஸீஸாதி சூரணம்

அன்னபேதி திரிபலை துவரைமண் மஞ்சிட்டி மாங்கொட்டை யினுள் இருக்கும் பருப்பு காட்டாத்திப்பூ, இவற்றைச் சம அளவில் கொண்டுத் தூளாக்கித் தேன் கலந்து பயன்படுத்தினால் குறியில் பிசுபிசுப்பு கொழகொழப்பு நீங்கும். 121

## 66. பெரும்பாடு நோய்க்குப் [2]பலாசாதி சூரணம்

புரசம்பட்டை குங்கிலியம் நாவல்பட்டை மஞ்சிஷ்டி இலவம் பிசின் காட்டாத்திப்பூ இவற்றைச் சம அளவில் கலந்து விழு தாகச் செய்து பயன்படுத்தினால் பிசுபிசுப்புடன் பெருகும் இரத்தப் பெருக்கு நிற்கும். 122

## 67. கர்கச யோனிக்குச் சிகிச்சை

பெண்குறிநோய்களில் குறி மரத்துப்போய் கடினமான போது எலும்பில்லாத மாமிசத்தையோ பாயசத்தையோ [3]கிருஸரம் என்பதையோ குறியில் தங்கச் செய்தால் குறி மென்மையடையும். 123

## 68. குறியில் நாற்றத்தைப் போக்கும் மருந்து

குறி கெட்ட நாற்றம் கொண்டிருந்தால் நீரடிமுத்து விதைக் கஷாயத்தையோ விழுதையோ பலவகை நறுமணப்பொருள் களின் தூளையோ குறியில் வைத்துக் கொண்டிருக்கச் செய்தால் நாற்றம் நீங்கும். 124

## 69. கருவைத் தாங்கும்

முன்கூறிய சிகிச்சை முறைகளால் நோய்கள் நீங்கி தூய்மை யடைந்து இருது இரத்தம் சோணிதம் என்பன தூய்மை பெற்று இயற்கைத் தன்மையடைந்து முற்பிறவியில் செய்த நல்வினைப் பயன் உயிரைத் தாங்குவதற்குத் துணை புரியுமாயின் அத்தகைய நங்கை கருவைத் தாங்குவாள். (குறி விந்து சோணிதம் முதலியன தூய்மை பெற்றிருந்தாலும் மக்கட்பேறு உண்டாவதற்கு முற் பிறவி நல்வினையும் துணையாகவேண்டும் என்று வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது) 125

---

1. காஸீஸம்—அன்னபேதி.
2. பலாச—புரசு.
3. கிருஸரம்—கிச்சடி.

## 70. விந்துவின் தோஷத்திற்குச் சிகிச்சை

வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய உடலைத்தூய்மை படுத்தும் ஐவகைச் செயல்களால் தூய்மை பெற்ற நோயாளியின் உடலிலுள்ள விந்துவை நன்கு ஆராய்ந்து அது வெண்மை கருமை முதலிய நிறங்களிலெதைக் கொண்டிருக்குமோ கவனித்து வாதம் முதலிய தோஷங்களால் கேடுற்றதை அறிந்து அந்தந்த தோஷத்திற்கேற்ற சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 126

)வ்வாறு கருவுறுப்பு பெண் குறியைச் சார்ந்த இருபது நோய்களின் இலக்கணங்களையும் சிகிச்சை முறைகளையும் தத்துவமுணர்ந்த ஆத்ரேய முனிவர் நன்கு விளக்கினார். 127

## 71. விந்துவின் தோஷங்களைப் பற்றிய அக்னிவேசரின் வினாக்கள்

கருவைக் கெடுக்கக் கூடிய பெண்குறி நோய்களின் இலக்கணங்களையும் சிகிச்சை முறைகளையும் நன்றாகக் கேட்டு அக்னிவேசர் குருவை வணங்கி மீண்டும் இவ்வாறு கூறினார்.

மருத்துவத்தில் தலைசிறந்தவரே, ரோகாத்யாயத்தில் ஆண்களுக்கு விந்துவில் தோன்றும் நோய்கள் எட்டு என்று தாங்கள் கூறினீர்கள். அவை தோன்றக் காரணங்களையும் கெட்டதும் தூயதுமான விந்துவின் இலக்கணங்களையும் நான்கு வகை அலித்தன்மைகளையும் அவற்றிற்குரிய சிகிச்சைகளையும் பெண்களுக்குக் கருவைக் கெடுப்பதால் தோன்றும் பெரும்பாடு என்னும் நோயின் காரணம் இலக்கணம் சிகிச்சை என்பனவற்றையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் கேட்க ஆவல் கொண்டுள்ளேன் என்றார். 128—132

## 72. கருவுக்குக் காரணம் விந்து எனல்

கலவியில் ஈடுபட்டிருக்கும்போது களிப்பின் மிகுதியால் வெளியேறும் விந்து கருவுக்கும் ஆண்மைக்கும் காரணமாகும். ஆகையால் ஆணின் விந்து கரு தோன்றக் காரணம் என்பதால் அதன் குணத்தையும் குணக்கேட்டையும் விளக்குகிறேன்—கேள். 133

உலகில் பருவமற்றகாலத்தில் நடப்பட்ட விதையும் நீர் பூச்சிகள் முதலியவற்றால் கெடுக்கப்பட்ட விதையும் முளைக்கத் தக்க வலிவின்மையால் கெடும். அவ்வாறே இனி கூறப்போகும் காரணங்களால் கேடுற்ற விந்துவும் கருவைத் தோற்றுவிக்கும் வலிமையற்றதாகும். 134

## 73. விந்துவின் கேட்டிற்குக் காரணங்கள்

தன் வலிமைக்கு மிஞ்சி புணர்ச்சியில் ஈடுபடுதல் மிகுதியான உடலுழைப்பு தன் உடலுக்கு ஏற்காத உணவு முதலியவற்றைப் பயன்படுத்துதல், பருவமற்ற காலத்திலோ பெண்விலங்கு முதலிய வற்றின் குறியிலோ புணருதல் கலவிக்கேற்ற பருவத்தில் அதில் ஈடுபடாமலிருத்தல் (விந்துவை வெளியேறாமல் தடுத்தல்) வறண்டவையும் கசப்பு துவர்ப்பு உவர்ப்பு புளிப்புச் சுவையுள் ளவையும் மிக்க உஷ்ண குணமுள்ளவையுமான பொருட்களை மிகுதியாக உண்ணல், சிருங்காரம் முதலியவற்றின் சுவையறியாத அறிவிலிகளான பெண்களுடன் கலவியில் ஈடுபடுதல் கிழத்தன்மை கவலை துக்கம் தன்னிடம் அன்பில்லாத பெண்களுடன் சேருதல் அச்சம் கோபம் செய்வினை ஏவல் (அல்லது அபிசாரம்) முதலியன அறுவைசிகிச்சை க்ஷாரமுறை நெருப்பால்சுடும்சிகிச்சை முதலியவற்றைத் தவறான வழியில் செய்வித்துக் கொள்ளுதல் காய்ச்சல் முதலியவற்றால் உடல் இளைத்தல் விந்துவின் வேகத்தைத் தடுத்தல் விந்து வெளியேறும் உடற்பகுதிகளில் காயம்படுதல் ரசம் முதலிய தாதுக்கள் கெடுவதற்கானவற்றைப் புரிதல் என்னும் காரணங்ளால் வாதம் முதலிய தோஷங்கள் தனித்தனியாகவோ ஒன்றாகச் சேர்ந்தோ சீற்றமடைந்து விந்துவைத் தாங்கும் நரம்புகளைச் சேர்ந்து உடனே விந்துவை கெடுத்துவிடும். அவற்றின் இலக்கணங்களைத் தனித்தனியாக கெடுத்துவிடும். அவற்றின் இலக்கணங்களைத் தனித்தனியாக விளக்குகிறேன். கேள். 135—138

## 74. விந்துவின் எண்வகை தோஷங்கள்

நுரை கொண்டிருத்தல் நீற்றுப்போதல் எண்ணெய்ப் பசை யின்றி வறண்டிருத்தல் இயற்கை நிறம் மாறி நீலம் மஞ்சள் முதலியவற்றில் ஒன்றைக் கொண்டிருத்தல் கெட்ட நாற்றம் வீசுதல் (சீழுடன் கூடியிருத்தல்) மிக்க கொழகொழப்புடன் கூடி யிருத்தல் இரஸம் இரத்தம் முதலிய தாதுக்களுடன் கலந்திருத் தல் வாதத்தினால் தடுக்கப்பட்டு மிகவும் கஷ்டத்துடன் வெளி வருதல் என்பன எட்டும் விந்துவைச் சார்ந்த எண் வகைக் குற்றங்களாகும். 139

## 75. வாதத்தினால் கெட்டவிந்துவின் இலக்கணம்

வாதத்தினால் கெட்ட விந்து, நுரையுடன் கூடி நீற்றுப் போய் வறண்டிருக்கும். மிகக் கஷ்டத்துடன் சிறிதளவாக வெளியேறும். இத்தகைய விந்து கருவைத் தோற்றுவிக்காது. 140

## 76. பித்தத்தினால் கெட்ட விந்துவின் இலக்கணம்

*பித்தத்தினால் கெட்ட விந்து நீலம் அல்லது மஞ்சள் நிறம் கொண்டு மிக்க சூடுள்ளதாகி கெட்ட நாற்றத்துடன் ஆண்குறியை எரித்துவிடுவது போன்ற எரிச்சலுடன் வெளியேறும். 141*

## 77. கபத்தினால் கெட்ட விந்துவின் இலக்கணம்

*கபத்தினால் வழி தடுக்கப்பட்ட போது விந்து மிக்க கொழ கொழப்பு கொண்டிருக்கும். 142*

## 78. காயம்படுதலால் கெட்ட விந்துவின் இலக்கணம்

*மிதமிஞ்சிய கலவியாலும் குறிப்பகுதியில் காயம் படுவதாலும் வேறு தாக்குதலுக்கு இலக்காவதாலும் விந்து இரத்தத்துடன் கூடி வெளியேறும். 143*

## 79. அவஸாதி எனும் கெட்ட விந்துவின் இலக்கணம்

*விந்து வெளியேற இருக்கும்போது தடுத்தால் விந்து அதன் வழியிலேயே வாதத்தால் தடுக்கப்பட்டுக் கட்டிப்போய் வெகு நேரம் கழித்து வெளியேறும். இது அவஸாதி எனும் எட்டாவது தோஷமாகும். இவ்வாறு விந்துவின் எட்டு வகைக் குற்றங்கள் அவற்றின் இலக்கணங்களுடன் விளக்கப்பட்டன. 144*

## 80. தூய விந்துவின் இலக்கணம்

*குற்றமின்றித் தூயதாக இருக்கும் விந்து எண்ணெய்ப் பசையும் சிறிது கொழகொழப்பும் கொண்டு கெட்டிப்பட்டிருக்கும். இனிப்புச் சுவை கொண்டு எரிச்சலைத் தோற்றுவிக்காமல் படிகம் போல் வெண்மை நிறம் கொண்டிருக்கும். 145*

## 81. விந்துவின் கெடுதலுக்குப் பொது சிகிச்சை

*முன்கூறியபடி விந்து கெட்டிருக்கும்போது சுகமாகப் பயன் படுத்தத் தக்கவையும் இதமானவையும் ஆன வாஜீகரண முறைகளைக் கொண்டும் இரத்த பித்தத்தைப் போக்கும் முறைகளைக் கொண்டும் பெண்குறி நோய்களுக்குக் கூறப்பட்ட முறைகளைக் கொண்டும் சிகிச்சை புரிய வேண்டும். மற்றும் ஜீவனீய கிருதம் சியவனப்ராச ரஸாயனம் சிலாசத்து முறைகள் என்பனவும் விந்துவின் கெடுதல்களை நீக்கக் கூடியவையாகும். 146–148*

## 82. தோஷங்களால் கேடுற்ற விந்துவிற்குச் சிகிச்சை

*விந்து வாதத்தினால் கெட்டிருந்தால் நிரூஹ வஸ்தியையும் அநுவாஸன வஸ்தியையும் முறையாகப் பயன்படுத்த வேண்டும். விந்து பித்தத்தினால் கெட்டிருந்தால் ரஸாயன அத்யாயத்தில் முதல் பாதத்தில் கூறப்பட்ட அபயாமலகீயரஸாயன முறைகளைப் பயன்படுத்த வேண்டும். அல்லது பிராம்ம ஆமலக ரஸாயனங்களைப் பயன்படுத்துவது மிகவும் சிறந்தது. கபத்தினால் தோன்றிய விந்துவின் தோஷத்தில் திப்பிலி ரஸாயனமும் அமிர்த ரஸாயனமும் லோஹ ரஸாயனமும் திரிபலா ரஸாயனமும் பல்லாதக ரஸாயனமும் பயன்படுத்தத்தக்கவை. (இந்த ரஸாயன முறைகள் சிகித்ஸாஸ்தானம் முதல் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன). 149–50*

## 83. தாதுக்களுடன் கலந்த விந்துவிற்குச் சிகிச்சை

*விந்து, இரஸம் இரத்தம் முதலிய தாதுக்களின் குணங்களுடன் கூடியிருக்குமாயின் நன்றாகக் கவனித்து கலந்துள்ள தாதுக்களுக்கும் வாதம் முதலிய தோஷங்களுக்கும் தக்கவாறு சிகிச்சை செய்ய வேண்டும். 151*

## 84. விந்துவின் குற்றங்களைத் தீர்ப்பவை

*நெய் பால் புலால்சாறு சம்பாஅரிசி யவதானியம் கோதுமை அறுபதுநாள் குறுவை அரிசி முதலியவை மிகவும் சிறந்தவை. வஸ்தி முறையைப் பயன்படுத்துவதும் மிகவும் நன்மை தருவதாகும். 152*

*வ்வாறு விந்துவின் எண்வகையான குற்றங்களும் அவற்றைப் போக்கும் சிகிச்சைகளும் தனித்தனியாய் கூறப்பட்டன. அந்த விந்துவின் குற்றங்களால் தோன்றிய ஆண்மைக் குறைவும் அந்தந்த சிகிச்சைகளால் தூய்மை பெறுவதால் நீங்கும். ஙி அலித்தன்மை விளக்கப்படுகிறது. 153*

## 85. அலித்தன்மையின் பொதுக்காரணம்

*விதைகள் தாக்கப்படுதல் ஆண்குறி சிதைவுறுதல் கிழத்தன்மை விந்து குறைதல் என்பனவற்றால் அலித்தன்மை தோன்றும். (இந்த நான்கினாலும் நான்குவகை **அலித்தன்மைகள்** தோன்றும் என்பதாம். 154*

## 86. அலித்தன்மையின் இலக்கணம்

அலித்தன்மையால் துன்பமடைபவன் புணர்ச்சியில் விருப்பமிருந்து தனக்கு வயப்பட்ட நங்கை அருகில் இருந்தும் குறி எழுச்சியின்மையால் கலவியில் ஈடுபட இயலாதவனாகி இருப்பான். ஒருவேளை புணர்ந்தாலும் மேல்மூச்சு வாங்குதலும் உடல் மிக்க வியர்த்தலும் தோன்றும். விரும்பியபடி புணரும் சாமர்த்தியம் இருக்காது. அவன் விருப்பங்கள் நிறைவேறாமற் போகும். ஆண்குறி வலிமை குன்றி விந்து தோன்றாமல் அசைவற்றிருக்கும். இது அலித்தன்மைக்குப் பொதுவான இலக்கணமாகும். இனி சிறப்பான இலக்கணங்கள் கூறப்படுகின்றன.

*155–157*

## 87. விந்துவில் உயிரணுக்கள் தாக்குண்டதால் தோன்றும் அலித்தன்மை

குளுமை வறட்சித்தன்மை கொண்ட உணவுப்பொருள்களை மிகுதியாக உண்பது தேவையான அளவை விட மிகக் குறைவாக உண்பது கெட்ட உணவு ஒன்றுக்கொன்று எதிர் மாறான தன்மையுள்ள உணவைக் கலந்து உண்பது, அசீரணத்தைத் தோற்றுவிக்கும் உணவு, உண்டஉணவு செரிப்பதற்கு முன்பே மறுபடியும் உண்பது மிக்க வருத்தம் அச்சம் மனத்தில் குழப்பம் கலவியில் அளவிற்கு மிஞ்சி ஈடுபடுதல், ஏவல் செய்வினைகளால் தொந்தரவு ரஸம் முதலிய உடலிலுள்ள தாதுக்கள் குறைந்து போதல் தன்னிடம் விருப்பமில்லாதவருடன் கலவி செய்தல் வாதம் முதலிய தோஷங்கள் இயற்கைநிலைதவறுதல் அடியோடு உணவு கொள்ளாமலிருத்தல் உடலுக்குச் சோர்வையுண்டாக்கும் வேலைகளை மிகுதியாகச் செய்தல், தான் புணர்ச்சியில் ஈடுபட்ட நங்கைகள் ரஸிகத் தன்மையின்றி அறிவிலிகளாக இருத்தல் வாந்தி எடுக்கச் செய்தல் முதலிய உடலைத் தூய்மைப் படுத்தும் செயல்களை முறைகேடாகப் பயன்படுத்தல் (அல்லது இம்முறைகளைப் பயன்படுத்தியபின் பத்திய முறைகளைச் சரிவரப் பின்பற்றாமலிருத்தல்) எனும் இத்தகைய காரணங்களால் விந்துவிலுள்ள உயிர் அணுக்கள் சிதைந்து விந்து கெடும். அதனால் நோயாளியின் உடல் வெளுக்கும். உடல் வலிமை குறையும். விந்து வலிவின்றி கலவியில் விருப்பம் குறையும். அதனால் புணரும் வலிமை குறையும். இதயநோய் சோபை தமக சுவாசம் காமாலை உடல் சோர்வு என்பன தோன்றும். வாந்தி அதிஸாரம் வயிற்றுவலி இருமல் காய்ச்சல் என்பன தோன்றும். இத்தகைய இலக்கணங்கள் காணப்பட்டால் உயிரணுக்களின் சிதைவால் தோன்றிய அலித்தன்மை இது என்று உணர்க.

*158–161*

## 88. குறி எழுச்சி இன்மையால் தோன்றும் அலித்தன்மை

புளிப்பு உவர்ப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண்ட பொருள் களை உண்பது, ஒன்றுக்கு மற்றொன்று எதிர்மாறான தன்மை யுடைய பொருள்களைக் கலந்து உண்பது தனக்கு ஒத்துக் கொள் ளாதவற்றை உண்பது மிகுதியாக நீர்பருகுவது வேளையற்ற வேளையில் உண்பது மாவினாலும் வெல்லத்தினாலும் செய்யப் பட்ட பண்டங்களையும் குருத்தன்மையுள்ளவற்றையும் மிகுதி யாக உண்பது தயிர் பால் நீர்ப்பாங்கான இடங்களிலுள்ள விலங்குகளின் புலால் இவற்றை மிகுதியாக உண்பது வேறு நோய்களால் உடல் இளைத்தல் பூப்பு அடையாத கன்னிகை களைப் புணருதல் பெண்குறியற்ற மற்ற கருவிகளைப் பெண் குறிபோல் பயன்படுத்துதல் நெடுநாட்களாக நோய் கொண்ட வளைப் புணருதல் (உடலில் நீண்ட உரோமங்களுள்ளவளைக் கூடுதல்) நெடுநாட்கள் புணர்ச்சியைத் தவிர்த்திருந்தவளைப் புணருதல் கெட்ட நாற்றமுள்ள வாதம் முதலியவற்றால் கெட்ட குறியுள்ள நங்கையைக் கூடுதல் அல்லது கெட்ட நீர் பெருகிக் கொண்டிருக்கும் குறியுள்ள நங்கையை அறியாமையால் கூடுதல் நான்கு காலுள்ள பசு முதலியவற்றைப் புணருதல் ஆண்குறி தாக்கப்படுதல் ஆண்குறியை நன்றாகக் கழுவாமலிருத்தல் ஏதேனும் கூர்மையான கருவி பல் நகம் என்பனவற்றால் குறியில் காயம்படுதல் கட்டையால் குறியில் அடிபடுதல் கைகளால் கசக்கப்படுதல் குறியை நெடியதாகச் செய்து கொள்ள *சூகம் என்னும் மருந்தை மிகுதியாக அதன்மேல் பூசிக்கொள்ளுதல் விந்துவை தக்க பருவத்தில் வெளி விடாமல் தடுத்தல் என்னும் காரணங்களால் ஆண்குறி வலிமையிழந்து எழுச்சி பெறாமலிருக் கும். 162—167

## 89. குறி எழுச்சி இன்மை எனும் அலித்தன்மையின் இலக்கணம்

குறியில் வீக்கம் குத்தல்வலி சிவப்பு நிறம் தோன்றுவது (இது வாதத்தினால் தோன்றும் அலித்தன்மை) குறிமேல் புண் ணாகிக் கொப்புளங்கள் தோன்றி மிக்க துன்பம் விளைதல் (பித்தத்தினால் தோன்றிய அலித்தன்மை) குறிமேல் சதைப்பகுதி

* நீரில் வாழும் தவளையைப் போன்ற நஞ்சுள்ள உயி ரினம் சூகம். அதைச் சேர்த்துத் தயார் செய்யப்பட்ட மருந்தைச் சிலர் ஆண்குறி நன்கு வளர்ச்சி பெறு வதற்காகப் பூசிக்கொள்வதுண்டு. அதை மிகுதியாகப் பயன்படுத்துவதால் தீங்கு விளையும் என்பதாம்.

வளர்ந்து விரைவாக இரணங்கள் தோன்றுதல் கரு நிறமோ சிவப்பு நிறமோ கொண்டு கஞ்சியைப் போன்ற நீர் குறியிலிருந்து பெருகிக் கொண்டிருத்தல் குறியின் மேல் தோல் கடினமாகி வளர்ந்து குறியைச் சுற்றி வளையம் போல் தடித்துக் காணப் படுதல் (கபத்தால் தோன்றியது) காய்ச்சல் நாவறட்சி தலை சுற்றல் நினைவிழத்தல் வாந்தி நீலநிறமோ கறுப்பு நிறமோ கொண்டு சிவப்பு நிறமோகொண்டு கலங்கிய இரத்தம் குறியி. லிருந்து வெளியாதல் (இது இரத்தத்தினால் தோன்றிய அலித் தன்மை) குறியில் நெருப்பால் சுட்டது போன்ற எரிச்சல் வலி தோன்றுதல் அந்த வலி சிறுநீர்ப்பையிலோ விதைகளிலோ சீவனி என்னும் நரம்பிலோ தொடை இடுக்குகளிலோ தோன்றுதல் ஒரு சமயம் கொழகொழப்பும் மற்றொரு சமயம் வெண்ணிற முள்ள நீர் பெருகுதல் தடித்த நீர் பெருகுதல் வீக்கம் குறியில் வெகுநாட்கள் கழித்துப் புண் தோன்றி குறி சிதைதல் அந்த விரணங்களில் புழுக்கள் தோன்றி அழுகி நாற்றமெடுத்தல் குறி யின்முன் மொட்டான பகுதியும் விதைகளும் சிதைந்து விழுதல் (இது ஸந்நிபாதத்தினால் தோன்றிய அலித்தன்மை) இவை குறி சிதைந்து போவதால் தோன்றும் அலித்தன்மையின் இலக்கண மாகும். சிலர் குறி எழுச்சி இன்மை எனும் அலித்தன்மைக்குக் காரணமானது வாதம் முதலியவற்றின் இலக்கணங்களால் ஐந்து வகையாகும் என்பர். *168–175*

## 90. முதுமையால் தோன்றும் அலித்தன்மையின் இலக்கணம்

மனிதனின் நிறை ஆயுள் நூறாண்டுகளாகும். இது மிக்க சாதாரணம் நடுத்தரம் உயர்ந்த நிலை என மூவகையாகப் பிரிக்கப்படும். மிகவும் வயது முதிர்ந்தவர்களின் உடலில் விந்து வெகுவாகக் குறைந்திருக்கும். மற்றும் உடலிலுள்ள இரசம் முதலிய தாதுக்கள் குறைவதாலும் விந்து வளர்ச்சிக்கு உரிய முறைகளைப் பயன்படுத்தாததாலும் வலிமை வீரியம் விந்து என்பன வயதின் தன்மையைப் பற்றிக் குறைவதாலும் ஆயுள் குறைவதாலும் உணவை நீக்குதலாலும் மிக்க உடல் உழைப் பினாலும் சோர்வினாலும் விந்து நாள்தோறும் குறைந்து கிழத் தன்மையால் அலித்தன்மை தோன்றும். அந்நிலையில் உடலி லுள்ள தாதுக்கள் வலிமை குன்றியிருக்கும். உடல் நிறம் மாறும். புணரும் வலிமை குன்றும். மிக்க நொந்ததன்மை காணப்படும். வேறு நோய்களாலும் விரைவில் தாக்கப்படுதல் உண்டாகும். இது கிழத்தன்மையால் தோன்றும் அலித்தன்மையின் இலக்கண மாகும். *176–180*

## 91. விந்து குறைவால் தோன்றும் அலித்தன்மைக்குக் காரணமும் இலக்கணமும்

மிக்க சிந்தனை, மிக்க வருத்தம் கோபம் அச்சம் பொறாமை பரபரப்பு என்பனவற்றால் மனம் குழப்பமடைந்து, பைத்தியம் பிடித்தது போலிருக்கும். உடல் வேறு நோய்களால் இளைத்திருக்கும்போது மிகவும் வறண்ட உணவு நீர் வகைகளையோ மருந்துகளையோ பயன்படுத்துதல் இயற்கையாகப் பிறவியிலிருந்தே வலிவற்ற உடல் கொண்டிருத்தல் உணவை அடியோடு விலக்குதல் தன் உடலியற்கைக்கு ஒவ்வாதவற்றை உண்பது என்னும் இத்தகைய காரணங்களால், மனிதனின் இதயத்திலிருக்கும் இரத்தம் முதலிய தாதுக்களுக்குக் காரணமான இரஸதாது விரைவாகக் குறையும். அதனால் மற்ற இரத்தம் மாமிசம் கொழுப்பு எலும்பு எலும்புக்குள்ளிருக்கும் சோறு விந்து என்பன நாள்தோறும் குறையும். மிதமிஞ்சி கலவியில் ஈடுபடுதலால் விந்து விரைவாகக் குறையும். அந்நிலையில் விந்து வரை உள்ள தாதுக்கள் அனைத்தும் மிகக் குறைந்து போவதால் அவன் கொடிய நோய்க்கு இலக்காவான். கடைசியில் மரணமும் அடைவான். ஆகையால் உடல் நலத்தை விரும்புபவன் மிக்க கவனத்துடன் விந்துவைக் கெடாமல் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். *181–186*

வ்வாறு நான்குவகை அலித்தன்மைக காரணங்களும் லக்கணங்களும் விளக்கப்பட்டன. மருத்துவ நூலாசிரியர்கள் சிலர், குறியை அறுத்தலாலும் விதைகளை எடுத்து விடுதலாலும் தோன்றும் குறிஎழுசசியின்மை, நீக்க இயலாததெனக் கூறுகின்றனர். (ஸந்நிபாதத்தால் குறியும் விதைகளும் சிதைவுறும். அத்தகைய நோய் சிகிச்சைக்கு உட்படாததென அறிக). *187–188*

## 92. உயிர் அணுவின் சிதைவால் தோன்றும் அலித்தன்மை இலக்கணம்

தாய் தந்தையரின் சோணிதம் மற்றும் விந்துவின் குற்றத்தால் அல்லது கருவிலிருக்கும் குழந்தை முற்பிறவியில்செய்த தீவினையின் பயனால் வாதம் முதலிய தோஷங்கள் கருவிலுள்ள குழந்தையின் விந்துவைத் தாங்கும் துவாரங்களில் சேர்ந்து அது உலர்ந்து போகும்படிச் செய்யும். அதனால் அந்த குழந்தைக்கு விந்து தோன்றாமல் கெடும். அந்தக் குழந்தை ஆண்களுக்கு உரிய உறுப்புகளைக் கொண்டிருந்தும், பெண்களைப் புணர்வதற்குத் தேவையான விந்து இன்மையால் அலியாகும். (இது பிறவியிலேயே தோன்றிய அலித்தன்மையாகும்) *189–190*

இவற்றில் ஸந்நிபாதத்தால் தோன்றிய அலித்தன்மை சிகிச்சைக்கு உட்படாததாகும். மற்ற நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இனி கூறப்படும். 191

## 93. விந்துவின் குற்றத்தால் தோன்றிய அலித்தன்மைக்குப் பொது சிகிச்சை

விந்துவின் குற்றங்களைப் போக்கவும் தாதுக்களின் குறைவைப் போக்கவும் மார்பில் அடிபடுவதால் தோன்றும் நோய்களைப் போக்கவும் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பொதுவாக அலித்தன்மையைப் போக்கப் பயன்படுத்தலாம். மற்றும் அந்நோய்களைத் தணிக்கக் கூறப்பட்டவைகளையும் பால் முறை நெய் முறைவிந்து வளர்ச்சிக்குரிய முறை வஸ்தி முறை ரஸாயன முறை என்பனவற்றை நோயாளியின் உடல் வாதம் முதலிய தோஷங்கள், சடராக்னி இவற்றின் வலிமைகளுக்கு ஏற்றவாறும் பருவ நிலைகளுக்குத் தக்கவாறும் பயன்படுத்தத்தகும். மற்றும் மிக்க புணர்ச்சியால் தோன்றிய அலித்தன்மையிலும் முன்கூறிய சிகிச்சை முறைகளை உடல் வலிமை பருவம் முதலியவற்றிற்கு ஏற்றவாறு பயன்படுத்த வேண்டும். ஏவல் வினைகளால் தோன்றிய அலித்தன்மையைப் போக்க, அந்தந்த தெய்வத்தை வழிபடுதல் முதலிய முறைகளைக் கையாளவேண்டும். இவ்வாறு அலித்தன்மையைப் போக்கப் பொதுவாகச் சிகிச்சை முறைகள் கூறப்பட்டன. 192–195

## 94. உயிரணுக்களின் ;வால் தோன்றும் அலித்தன்மைக்குச் சிகிச்சை

)னி அலித்தன்மையைப் போக்கும் சிறப்பான சிகிச்சை முறைகள் கூறப்படுகின்றன. உயிரணுச் சிதைவாகிய [1]பீஜஉபகாதத்தினால் தோன்றிய அலித்தன்மைக்கு முதலில் எண்ணெய் முறை உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தி நன்றாக அவனுடைய உடல் வியர்த்தபின் எண்ணெயுடன் கூடிய பேதியாகச் செய்யும் முறைகளைப் பயன்படுத்துக. நன்றாகக் குடல் தூய்மை பெற்றபின் உணவு கொடுக்க வேண்டும். அல்லது எண்ணெய் முறையையும் உடல் வியர்க்கச் செய்யும் முறையையும் பயன்படுத்திய பிறகு [2]ஆஸ்தாபன வஸ்தியைப் பயன்படுத்திப் பிறகு [3]அநுவாஸன வஸ்தியையும் பயன்படுத்தி ஸித்திஸ்தானத்

1. பீஜ உபகாதம்—விந்து கேடு அடைவது.
2. ஆஸ்தாபனவஸ்தி }
3. அநுவாஸனவஸ்தி } ம்முறைகளின் விளக்கத்தைச் ஸித்தி ஸ்தானத்தில் காண்க.

தில் கூறப்பட்டுள்ள ஆமணக்கு வேர் முதலியவற்றாலும் கோரைக் கிழங்கு முதலியவற்றாலும் செய்யத்தக்க ஆஸ்தாபன வஸ்தி முறையை மறுபடியும் பயன்படுத்துக. பிறகு வாஜீகரண அத்யாயத்தில் கூறப்பட்ட மருந்துகளை உடல் வலிவு முதலியவற்றிற்குத் தக்கபடி பயன்படுத்த வேண்டும். *196–198*

## 95. குறியெழுச்சியின்மையாகிய அலித்தன்மைக்குச் சிகிச்சை

குறி எழுச்சியின்மையால் தோன்றிய அலித்தன்மைக்கு அதன் இலக்கணங்களை நன்கு கவனித்து இனி கூறப் போகும் சிகிச்சையைப் பயன்படுத்துக. முறையாக மேல் பூச்சு மருந்து நீரால் நனைத்தல் என்பனவற்றைச் செய்து, இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். எண்ணெயைப் பருகச் செய்யதலையும் எண்ணெயுடன் கூடிய பேதியாகச் செய்யும் மருந்துகளையும் பல முறை பயன்படுத்த வேண்டும். பிறகு அநுவாஸன வஸ்தியையோ ஆஸ்தாபன வஸ்தியையோ தோஷத்தின் வலிமைக்கும் நோயாளியின் உடலின் வலிமைக்கேற்றவாறும் பல முறை செய்க. பிறகு நிலைமையைக் கவனித்து விரணத்தைப் போக்கும் சிகிச்சைகளைக் கையாளவேண்டும். *199–201*

## 96. முதுமையால் தோன்றிய அலித்தன்மைக்குச் சிகிச்சை

முதுமையால் தோன்றியதும் விந்துக் குறைவால் தோன்றியதும் ஆன அலித் தன்மைகளில் முதலில் எண்ணெய் முறை உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தி, பிறகு தூய்மைபடுத்தும் எண்ணெய் மருந்துகளைப் பயன்படுத்துக. மற்றும் பால் நெய் முறைகள் விந்து வளர்ச்சிக்கேற்ற முறைகள் யாபனா வஸ்திகள் ரஸாயன முறைகள் முதலியவற்றைத் தக்கபடி பயன்படுத்த வேண்டும். இவ்வாறு நான்கு வகையான அலித் தன்மைகளுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்கினேன். *202–203*

## 97. பெரும்பாடு நோய் தோன்றக் காரணம்

முன் கூறப்பட்ட பெண்குறியில் தோன்றும் நோய்களால் உண்டாகக் கூடிய பெரும்பாடு எனும் நோய்க்குக் காரணம் கூறப்படுகிறது. உவர்ப்பு புளிப்புச்சுவை குருத்தன்மை கார்ப்புச் சுவை எரிச்சலைத் தோற்றுவிப்பவை எண்ணெய்ப் பசையுடன் கூடியவை கிராமங்களிலும் நீரிலும் உலாவும் விலங்குகளுடையவை கொழுப்பை வளர்க்கக் கூடியவை இவைகளாலான புலால் வகைகளையும் பொங்கல் பாயசம் தயிர் புளித்தகஞ்சி பால்ஏடுகள் முதலிய பொருள்களையும் மிதமிஞ்சிப் பயன்

படுத்தும் நங்கையின் உடலில் வாதம் வளர்ந்து சீற்றமடைந்து இரத்தத்தையும் மிகுதியாகச் செய்து கருப்பையில் இருது ரத்தத்தைத் தாங்கும் நரம்புகளில் சேர்ந்து மற்ற இரத்தத்தின் மிகுதியால் இருது இரத்தத்தையும் மிகுதியாகச் செய்யும். )ந்த நோய் ரத்தபிரதரம் (இரத்தப்பெரும்பாடு) எனப் படும்.

இரத்தத்தால் இருது ரத்தம் மிகுதியாவதால் இது (அஸ்ருக் பிரதம்) இரத்தப்பெரும்பாடு எனும் நோயாகும். 204—208

## 98. இரத்தப் பிரதரத்தின் சிறப்பான இலக்கணங்கள்

முன்பு பொதுவாகப் பெரும்பாடு என்னும் பிரதர நோய்க்குப் பொதுவான காரணங்களும் இலக்கணங்களும் கூறப் பட்டன. அந்த நோய் வாதம் முதலியவற்றாலும் ஸந்நிபாதத் தினாலும் நான்கு வகையாகும். அவற்றின் தனித்தனி இலக்கணங்களும் காரணங்களும் சிகிச்சை முறைகளும் இனிகூறப் படும். 209—210

## 99. வாதத்தினால் தோன்றிய பிரதர இலக்கணம்

வாதத்தை வளர்க்கக்கூடிய வறண்ட உணவைக் கொள்ளு தல் உலாவுதல் முதலிய செய்கைகளைப் புரிதலால் வாதம் சீற்றமடைந்து இரத்தத்துடன் கலந்து கருப்பையிலுள்ள இருது ரத்தத்தைத் தாங்கும் குழாய்களில் சேர்ந்து முன்கூறியபடி பெரும் பாடு என்னும் பிரதர நோயைத் தோற்றுவிக்கும். அப்பொழுது இரத்தம் நுரையுடன் நீர்த்து வறண்டதாகி கருநிறமோ சிவப்பு நிறமோ அல்லது புரச மலரைப் போன்ற நிறமோ கொண்டு வலியுண்டாக்கியோ உண்டாக்காமலோ வெளியேறும். இடுப் பிலும் தொடை இடுக்குகளிலும் இதயத்திலும் விலாக்களிலும் முதுகிலும் பின்தட்டுகளிலும் வாதம் கொடிய வலியைத் தோற்றுவிக்கும். இந்த இலக்கணங்களைக் கொண்டது வாதத் தினால் தோன்றிய பிரதரம் என உணர்க. 211—213

## 100. பித்தத்தினால் தோன்றும் பிரதரத்திற்குக் காரணமும் இலக்கணமும்

புளிப்புச்சுவையும் உஷ்ணத் தன்மையும் கொண்டவையும் உவர்ப்புச் சுவையுள்ளவையுமான பொருள்களையும் க்ஷார வகைகளையும் மிகுதியாக உண்பதால் பித்தம் சீற்றமடைந்து முன்பு கூறியபடி பிரதரநோயைத் தோற்றுவிக்கும். அப் பொழுது நீலமோ மஞ்சளோ ஆன நிறம் கொண்டு அல்லது

கருநிறம்கொண்டு சூடான இரத்தம் வலியுண்டாக்கி மிகுதியாக அடிக்கடி வெளியேறும். அந்த இரத்தம் ஆடையில்பட்டால் சிவப்பு நிறம் போகாது. எரிச்சல் நாவறட்சி மூர்ச்சை காய்ச்சல் தலைச்சுற்றல் என்பன தோன்றும். இந்த இலக்கணங்கள் காணப் பட்டால் பித்தத்தினால் தோன்றிய பிரதரம் என உணர்க. 214–215

## 101. கபத்தினால் தோன்றிய பிரதரத்திற்குக் காரணமும்

கபத்தை வளர்க்கக்கூடிய குருத்தன்மையுடைய பண்டங் களை மிகுதியாக உண்பதால் கபம் சீற்றமுற்று முன்கூறியபடி பெரும்பாடு நோயைத் தோற்றுவிக்கும். அப்பொழுது கொழ கொழப்பு மிகுந்து வெண்மை நிறத்துடன் பளுவும் எண்ணெய்ப் பசையும் குளுமையும் கபமும் கூடியதாகி கெட்டியான இருது இரத்தம் சிறிது வலியையுண்டாக்கி வெளியேறும். அதனால் வாந்தி சுவையின்மை ஒக்காளம் இருமல் இழுப்பு என்பன தோன்றும். இத்தகைய இலக்கணங்கள் காணப்பட்டால், கபத் தால் தோன்றிய இரத்தப் பிரதரம் என உணர்க. 216–218

## 102. ஸந்நிபாத பிரதரம் தோன்றக் காரணமும் இலக்கணமும்

தாய்ப்பால் கெடுவதற்குக் கூறப்போகும் காரணங்கள் ஸந்நிபாதத்திற்கும் காரணமாகும். வாதம் முதலியவற்றிற்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட காரணங்கள் கலந்து அவ்வப்பொழுது வாதம் முதலியவற்றிற்குக் கூறப்பட்ட இலக்கணங்களில் எவை யேனும் மிகுந்து காணப்படும். இது ஸந்நிபாத பிரதரத்திற்குப் பொது இலக்கணம். 219–220

## 103. ஸந்நிபாத பிரதர நோயின் சிறப்பான இலக்கணம்

மிகவும் சோர்ந்து உடலில் இருது இரத்தம் குறைந்துள்ள பெண்ணின் உடலில் வாதம் முதலியன மூன்றும் சீற்றமுறும். தவறான; உணவாலும் கூடாத செயல்களாலும், மேலும் அவை சீற்றம் பெறும். அதில் வாதம் மிகுந்து கபத்தின் வழிகளைத் தடுத்தால் அதனால் கெட்ட நாற்றமும் பிசுபிசுப்பும் கொண்ட கபத்தை, இருது இரத்தம் வெளியேறும் வழியில் சேர்த்து வெளியேறச் செய்யும். ஒருக்கால் சீற்றமடைந்த வாதம், கொழுப்பையும் நிண நீரையும் தாங்கும் நரம்புகளில் சேர்ந்தால் பித்தத்தின் சூட்டினால் தாபமடைந்த நிணநீரையும் கொழுப்பை யும் கருவழியில் சேர்த்து நெய் எலும்புக்குள் இருக்கும்சோறு என்பனவற்றைப் போன்ற திரவத்தை இருது இரத்தம் வெளி

யேறும் வழியே வெளியேறச் செய்யும். அப்பொழுது அப் பெருக்கம் மிகுதியாகும். இந்த நோய் கொண்டவள் நாவறட்சி அழற்சி காய்ச்சல் என்பன தோன்றி உடலில் இரத்தம் இன்றி மிகவும் வலிமையிழந்த நிலையில் இருப்பாள். இந்நிலையடைந்த பிரதரநோய் சிகிச்சைக்கு உட்படாமறபோகும். எனவே அந்த நோயாளியைக் கைவிட வேண்டியது தான். 221—224

## 104. தூய ன் இலக்கணம்

பிசுபிசுப்புடன் எரிச்சலோ வலியோ தோன்றாமல் ஐந்து ரவுகள் தொடர்ந்து இருது இரத்தம் வெளியேறி மிகுதியாகவோ குறைவாகவோ அல்லாமல் தக்க அளவில் மாதம் ஒரு முறை வெளியேறுமாயின் அது தூயதான இருது இரத்தமென்று உணர்க. மற்றும் கார் காலத்தில் காணப்படும் இந்திரகோபம் எனும் பட்டு போன்ற நிறம் கொண்ட வண்டுகளின் நிறம் போலவோ குன்றிமணி செந்தாமரை கொம்பரக்கு இவற்றின் நிறம் போலவோ தோன்றும் இருது இரத்தம் தூயதாகும். (இந்நிற மாறுபாடுகள் இயற்கையையொட்டித் தோன்றுவன வாகும்). 225—226

## 105. பிரதர நோய்க்குச் சிகிச்சை

வாதம் முதலியவற்றால் தோன்றும் பெண்குறி நோய்கள் நான்கிற்குத் தனித்தனியாக முன்பு கூறப்பட்ட சிகிச்சை முறை களை முறையே கையாளவேண்டும். மற்றும் இரத்தஅதி ஸாரம் இரத்தபித்தம் இரத்தமூலம் எனும் நோய்களுக்குக் கூறப் பட்ட சிகிச்சைமுறைகள் அனைத்தையும் பிரதர நோய்க்கும் பயன்படுத்தலாம். 227—228

## 106. தாய்ப்பால் கெடுதல் முதலியவற்றின் இலக்கணம்

குழந்தைக்குப்பால் கொடுக்கும் நல்ல செவிலித்தாயின் இலக்கணம் அந்நங்கையின் மார்பகம் பால் இவற்றின்இலக்கணம் தாய்ப்பாலை வளர்க்கும் மருந்துகள் தாய்ப்பாலைத் தூய்மை படுத்தும் முறை வாதம் முதலியவற்றால் கேடுற்ற தாய்ப்பாலின் இலக்கணம் தாய்ப்பால் குறைந்ததற்குச் சிகிச்சை முதலியன விளக்கமாக சாரீர ஸ்தானத்தில் கூறப்பட்டுள்ளன. மற்றும் கேடுற்ற தாய்ப்பாலில் எட்டுவகை தோஷங்களும் வாதம் முதலிய தோஷ வகைகளிலேயே அடங்கும். மருத்துவ நூலில் தேர்ச்சி பெற்ற மருத்துவர் அவற்றை நன்கு கவனிக்க வேண்டும். நூல் பயிலும் சீடர்கள் சிறந்தவர் நடுநிலையிலுள்ளவர் கடை நிலை

யிலுள்ளவர் என மூவகைப்படுவர். கடைநிலை மாணாக்கர்கள் தெளிவு பெறுவதற்காக மறுமுறை அவற்றை இங்குக் கூறுகிறேன். 229–231

## 107, தாய்ப்பால் கெடுவதற்குக் காரணம்

உணவு செரிக்காமலிருக்கும் போது மறுபடியும் உண்பது, உடலுக்குப் பழக்கமில்லாதவற்றை உண்பது, வேளை தவறி உண்பது ஒன்றுக்கொன்று எதிரிடையான பொருள்களையுண்பது அளவுக்கு மீறியுண்பது, உவர்ப்பு புளிப்பு கார்ப்பு கசப்புச்சுவை யுள்ளவற்றையும் அழுகிப் போனவற்றையும் உண்பது மனத் திற்கும் உடலுக்கும் அழற்சி தோன்றுவது இரவில் தூக்கமின்மை அளவுக்கு மீறிய சிந்தனை சிறுநீர் மலம் இவற்றின்வேகங்களைத் தடுப்பது அல்லது அவை வெளியேறாத போது முக்கி வெளியேறச் செய்வது, பாயசம் வெல்லம் கலந்து செய்யப்பட்ட உணவுப் பண்டங்கள் பொங்கல் தயிர் மந்தகம் எனப்படும் மோர் கிராமங் களிலும் நீர்ப்பாங்கான இடங்களிலும் வாழும் விலங்குகளின் புலால் எனும் இவற்றை மிகுதியாகப் பயன்படுத்தல், உண்டதும் பகலில் உறங்குதல் கள்ளை மிகுதியாகப் பருகுதல் உடலுக்குச் சிறிதேனும் பயிற்சி தராமல் செயலற்றிருத்தல், அடிபடுதல் சினம் கொள்ளுதல் நோய்களால் இளைத்தல் என்னும் காரணங்களால் வாதபித்தகபங்கள் சீற்றமுற்று நங்கையின் தாய்ப்பாலைத் தாங்கும் நரம்புகளில் சேர்ந்து பாலைக் கெடுத்து, எண்வகைக் குற்றங்களைத் தோற்றுவிக்கும். அந்த நிறம் கெடுதல் முதலிய குற்றங்கள் வாதம் முதலிய தோஷங்களைச் சார்ந்து தோன்று பவை. தனித்தனியாக அவை இனி கூறப்படும். 232–236

## 108, தாய்ப்பாலில் தோன்றக்கூடிய எண்வகையான குற்றங்கள்

தாய்ப்பால் சுவை மாறுபாடு நுரைத்தல் கட்டியதால் எண்ணெய்ப்பசையின்றி வறண்டிருத்தல் என்பன மூன்றும் வாதம் தால் கெடுக்கப்பட்ட தாய்ப்பாலின் இலக்கணங்களாகும். நிறம் மாறுபடுதல் கெட்ட நாற்றம் கொண்டிருத்தல் என்னும் இவை இரண்டும் பித்தத்தினால் தோன்றும் கெடுதல்களாகும். எண் ணெய்ப்பசை மிகுதியாக இருத்தல் கொழகொழப்பு பளுவாக இருத்தல் என்பன கபத்தால் தோன்றும் தோஷங்களாகும். 237

## 109. வாதத்தினால் கெட்ட; தாய்ப்பாலால் தோன்றும் தீமைகள்

வாதத்தைச் சீற்றமடையச் செய்யும் வறண்ட தன்மை யுள்ள பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்தினால் வாதம் சீற்றமுற்றுப் பாலுக்கு இருக்கைகளான மார்பகத்தைச் சார்ந்த தாய்ப்பாலின் இயற்கைத் தன்மையைக் கெடுக்கும். அதனால் பாலின் சுவை மாறும். அவ்வாறு வாதத்தால் கேடுற்ற

பாலைப் பருகும் குழந்தை நாள் தோறும் இளைக்கும். பால் சுவையின்மையால் அதைக் குழந்தை விரும்பாது. அதனால் குழந்தை மிகவும் சிரமத்துடன் வளரும். 238–239

மேலும் முன்கூறியபடி வறண்ட உணவு முதலியவற்றால் சீற்றமடைந்த வாதம் மார்பகங்களில் சேர்ந்து அங்குள்ள பாலைக் கலக்கும். அதனால் தாய்ப்பாலில் நுரை மிகும். அந்தப் பால் மிகவும் கஷ்டத்துடன் வெளிவரும். அந்த நுரையுடன் கூடிய பாலைப் பருகிய குழந்தைக்குக் குரல் வலிமை குறைவுபடும். சிறுநீர் மலம் அபானம் என்பன தடைபடும். மற்றும் குழந்தைக்கு வாதத்தினால் ஏற்படும் தலை நோய் அல்லது வாதபீனஸ நோய் தோன்றும். 240–241

## 110. வாதத்தினால் வறண்ட தாய்ப்பாலினால் தோன்றும் தீமைகள்

வாதம் சீற்றமடைந்து மார்பகங்களில் சேர்ந்து தாய்ப் பாலிலுள்ள எண்ணெய்ப் பகுதியை உலர்த்தி விடும். அவ்வாறு வறட்சித்தன்மையுடைய பாலைப் பருகிய குழந்தைக்கு எண் ணெய்ப் பசையின்றி வறட்சித் தன்மையால் உடல் வலிமை நாள்தோறும் குறைந்து விடும். (இவ்வாறு வாதத்தினால் கேடுற்ற பாலைப் பருகுதலால் குழந்தைக்குத் தோன்றும் தீமை கள் கூறப்பட்டன.) 242

## 111. பித்தத்தால் நிறம் மாறிய பாலினால் தோன்றும் தீமைகள்

சூடு முதலிய பித்தகுணங்களை வளர்க்கக் கூடிய காரணங் களால் உடலில் பித்தம் சீற்றமடைந்து மார்பகங்களைச் சார்ந்து சூட்டை மிகுதியாக்கித் தாய்ப்பாலை நீலம் மஞ்சள் கருமை முதலிய நிறங்களில் ஒன்றையுடையதாகச் செய்யும். இயற்கை நிறம் மாறுபட்ட பாலைப் பருகிய குழந்தையின் உடல் நிறம் மாறும். அதன் உடலில் வியர்வை மிகுதியாகத் தோன்றும். நாவறட்சி மிகும். பேதப்பட்டு சிறிது சிறிதாக வெளியேறும். அக்குழந்தையின் உடல் எப்பொழுதும் சூடாகவே இருக்கும். மற்றும் அக்குழந்தை தாய்ப்பாலை விரும்பாது. 243–244

## 112. கெட்ட நாற்றமுள்ள தாய்ப்பாலால் தோன்றும் தீமைகள்

உஷ்ணத் தன்மை முதலிய பித்த குணங்களை வளர்க்கும் காரணங்களால் சீற்றமடைந்த பித்தம் மார்பகங்களில் சேர்ந்து பாலில் கெட்ட நாற்றத்தைத் தோற்றுவிக்கும். அந்தப் பாலைப் பருகினால் குழந்தைக்கு வீக்கம் காமாலை முதலிய நோய்கள்

தோன்றும். (நிறமாற்றம் கெட்ட நாற்றம் என்பவை தாய்ப் பாலில் பித்தத்தினால் தோன்றும் கேடுகளாகும்.) 245

## 113. கபத்தினால் மிக்க எண்ணெய்ப்பசை கொண்ட தாய்ப் பாலினால் தோன்றும் தீமைகள்

கபத்தை வளர்க்கக்கூடிய குருத்தன்மை எண்ணெய்ப்பசை கொழகொழப்பு என்பனவற்றைத் தோற்றுவிக்கும் உணவுப் பண்டங்களை மிகுதியாகப் பயன்படுத்துவதால், கபம் சீற்றமுற்று மார்பகங்களில் சேர்ந்து, இயற்கையாகவே எண்ணெய்ப்பசை கொண்டுள்ள தாய்ப்பாலில் அதை மிகுதியாகச் செய்யும். அளவுக்கு மீறி எண்ணெய்ப் பசை கொண்ட அந்த தாய்ப்பாலைப் பருகினால், குழந்தைக்கு வாந்தியாகும். அக்குழந்தையின் வயிற்றில் சேர்ந்துள்ள பால் கெடும். வாயிலிருந்து எச்சில் மிகுதியாக ஒழுகும். அக்குழந்தையின் உடலிலுள்ள துவாரங்களில் எப்பொழுதும் எண்ணெய் பூசியதுபோல் ஈரம் இருக்கும். குழந்தை சோர்ந்து எப்பொழுதும் தூங்கிக் கொண்டிருக்கும். இருமல் இழுப்புகளால் துன்பப்பட்டுக்கொண்டு வாயில் எப்பொழுதும் எச்சில் ஒழுக மயக்கத்துடன் குழந்தை காணப்படும். 246–247

## 114. கொழகொழப்பு மிகுந்துள்ள தாய்ப்பாலினால் தோன்றும் தீமைகள்

முன்கூறியபடி சீற்றமடைந்த கபம் மார்பகத்தைச் சேர்ந்து பாலில் கொழகொழப்புத் தன்மையை மிகுதியாகச் செய்யும். அத்தகைய பாலைப் பருகினால், குழந்தைக்கு வாயிலிருந்து எச்சில் மிகுதியாக ஒழுகிக் கொண்டிருக்கும். முகமும் கண்களும் வீங்கும். சுறுசுறுப்புத்தன்மை குறைந்து குழந்தை ஒன்றுமறியாதவனைப் போல் இருக்கும். 248

## 115. குருத்தன்மையுள்ள பாலினால் தோன்றும் தீமைகள்

கபம் சீற்றமடைந்து மார்பகங்களைச் சேர்ந்து தாய்ப்பாலில் குருத்தன்மையை (பளுத்தன்மை) மிகுதியாகத் தோற்றுவிக்கும். அப்பாலைப் பருகினால் குழந்தைக்கு இதயநோயும் மற்றைய கப நோய்களும் தோன்றும். வாதம் முதலியவற்றால் கேடுற்ற பாலைப் பருகும் குழந்தைக்கு அந்த வாதம் முதலியவற்றால் தோன்றக் கூடிய நோய்கள் தோற்றுமென்று உணர்க.

249–250

## 116. தாய்ப்பாலைத் தூயதாக்க முறை

தாய்ப்பால் வாதம் முதலிய தோஷங்களால் கெட்டிருக்கு மானால் முதலில் தாய்க்கு எண்ணெய் முறைகளைப் பயன் படுத்தியும், எண்ணெய் மருந்துகளை உடலின் மேல் பூசியும் எண்ணெய்ப் பசையுண்டாக்கி முறையாக உடலை வியர்க்கச் செய்து பிறகு வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 251

## 117. தாய்ப்பாலைத் தூய்மைப்படுத்த வாந்தி எடுக்கச் செய்தல்

வசம்பு ஞாழல் அதிமதுரம் மருக்காரக்காய் வெட்பாலை கடுகு இவற்றின் விழுதையோ வேப்பம்பட்டை பேய்ப்புடல் இவற்றின் கஷாயத்தையோ உப்பு சேர்த்து உட்கொள்ளச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 252

## 118. தாய்ப்பாலைத் தூய்மைப்படுத்த பேதியாகச் செய்தல்

முன்கூறிய மருந்துகளால் நன்றாக வாந்தியான பின்பு பேயா (ஒருவகைக்கஞ்சி) முதலியவற்றால் உடல் வலிமையை வளர்த்து, பிறகு மறுபடியும் எண்ணெய் முறையைப் பயன்படுத்தி பிறகு தோஷத்தினுடைய வலிமை பருவ நிலை முதலியவற்றை ஆராய்ந்து, இனி கூறப்போகும் மருந்தைத் தக்கபடி பயன்படுத்தி பேதியாகச் செய்ய வேண்டும்.

சிவதையின் தூளை அல்லது கடுக்காயின் தூளை திரிபலை கஷாயத்தில் கலந்து, தேனைச் சேர்த்து பேதியாவதற்காகக் கொடுக்க வேண்டும். அல்லது கடுக்காய்த் தூளை மட்டும் பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்ய வேண்டும். 253–255

## 119. தூய்மை பெற்றபின் உணவு முறை

தாய்ப்பால் கெட்டுள்ளபோது முன்கூறிய முறைப்படி தாயின் உடலைத் தூய்மைப்படுத்தி உடல் வலிமையை வளர்த்து உடலில் தங்கியுள்ள தோஷங்களைப் போக்கப் பேயா முதலிய கஞ்சி வகைகளை முறையாகத் தந்து, பிறகு இனி கூறப்படும் உணவு வகைகளைப் பயன்படுத்தச் செய்ய வேண்டும். 256

## 120. பாலைத் தூய்மைப் படுத்தும் உணவு வகைகள்

சம்பா அறுபதுநாள் குறுவை சாமை தினை யவதானியம் மூங்கில்அரிசி முதலியவற்றை தாய்ப்பால் தூய்மையடைவதற் காகத் தாயின் உணவில் பயன்டுத்த வேண்டும். மூங்கில் குருத்து பிரம்பின்துளிர் கலாயம் என்னும் கடலை என்பனவற்றை

எண்ணெய்ப் பொருள் சேர்த்துப் பக்குவம் செய்து பயன்படுத்தவும். பயறு சிறுகடலை கொள்ளு இவற்றுடன் வேப்பந்துளிர் பேய்ப்புடல் வெண்கத்தரிக்காய் நெல்லிக்காய் இவற்றைச் சேர்த்துக் கஞ்சியாக்கி அதில் திரிகடுகத்தூளையும் இந்துப்பையும் கலந்து பயன்படுத்தச் சேய்தால் தாய்ப்பால் தூய்மை பெறும். 257–259

## 121. தாய்ப்பாலை தூய்மைப்படுத்தும் புலால், குடிநீர்

முயல் சிட்டுக்குருவி மான் இவற்றின் புலாலை முறைப்படி பக்குவம் செய்து தாய்க்குக்கொடுக்கவேண்டும். சார்ங்கேஷ்டா ஏழிலம்பாலைப்பட்டை அமுக்கராக்கிழங்கு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய நீரையோ கடுகரோகிணி சேர்த்துக் காய்ச்சிய நீரையோ பருகத்தரவேண்டும். அதனால் தாய்ப்பால் தூய்மை பெறும். 260

## 122. தாய்ப்பாலைத் தூய்மைப்படுத்தும் கஷாயங்கள்

சீந்தில் கொடி ஏழிலைப்பட்டை இவ்விரண்டையும் ச்சர்த்துச் செய்த கஷாயமோ சுக்குக் கஷாயமோ நிலவேம்புக் கஷாயமோ பருகச் செய்தால் தாய்ப்பாலிலுள்ள குற்றங்கள் நீங்கும். இவ்வாறு பொதுவாகத் தாய்ப்பால் தூய்மைப்படுத்தத்தக்கமுறைகள் கூறப்பட்டன. இனி அந்தந்த தோஷத்திற்கு ஏற்றவாறு தாய்ப்பாலைத் தூய்மைப் படுத்தும் முறைகள் கூறப்படும். 261–262

## 123. தாய்ப்பாலில் ரஸத்தன்மை கெட்டதற்குச் சிகிச்சை

தாய்ப்பாலின் இயற்கையான ரஸத்தன்மை (வாதத்தினால்) கெட்டிருக்கும் பொழுது திராட்சை அதிமதுரம் நன்னாரி க்ஷீரகாகோலி இவற்றை மெழுகு போல் அரைத்துக் குளிர்ந்த நீரில் கலந்து பருகச் செய்க. மற்றும் பஞ்சகோலங்கள் கொள்ளு இவற்றை நன்றாக அரைத்து மார்பகங்கள் மேல் பூசி நன்றாக உலர்ந்தபின் நீரினால் கழுவி அப்பொழுது மார்பகத்தில் இருக்கும் பாலை முழுவதும் பிழிந்து எடுத்து விட்டால் பாலில் தோன்றிய ரஸக்கேடு நீங்கும். 263–264

## 124. நுரை மிகுந்த பாலுக்குச் சிகிச்சை

தாய்ப்பாலில் நுரை மிகுந்துகட்டியிருக்கும்பொழுது வட்டத்திருப்பி சுக்கு சார்ங்கேஷ்டா பெருங்குரும்பை இவற்றைச் சம அளவில் சேர்த்து நன்றாக அரைத்து இளஞ்சூடுள்ள நீரில் கலந்து

பருகச் செய்க. மற்றும் சுரோதோஞ்சனம் சுக்கு அல்லது கிரந்திதகரம் தேவதாரு வில்வவேர் ஞாழல் இவற்றை மெத் தென்று அரைத்து மார்பகங்களின் மேல் பூசி நன்றாக உலர்ந்த பின் நீரால் கழுவி அப்பொழுது அங்கு தங்கியுள்ள பாலை முழுவதும் பிழிந்து எடுத்துவிட்டால் தாய்ப்பாலில் நுரை தட்டும் தோஷம் நீங்கும். 265—266

### 125. மற்றொரு முறை

நிலவேம்பு சுக்கு சீந்தில்கொடி இவற்றின் கஷாயத்தைப் பருகச் செய்க. யவதானியம் கோதுமை கடுகு இவற்றை மை போல் அரைத்து மார்பகங்களில் முன்போல் பூசச் செய்தால் தாய்ப்பாலில் நுரை மிகும் குற்றம் நீங்கும். 267—268

### 126. தாய்ப்பாலில் வறட்சித் தன்மையைப் போக்கும் முறை

ஷட்விரேசனசதாச்ரிதீயம் எனும் (ஸூத்ரஸ்தானம் 4-வது) அத்யாயத்தில் கூறப்பட்டுள்ள தாய்ப்பாலைத் தூய்மையாக்கும் கூட்டுப் பொருள்களைக் கிடைத்தவரை சேர்த்துக் காய்ச்சிய பாலையோ நெய்யையோ பருகச் செய்க. மற்றும் ஜீவனீய கணத்தைச் சார்ந்த கூட்டுப் பொருள்களையோ பஞ்சமூலங் களையோ மெத்தென்று அரைத்துக் கொதிக்க வைத்து இளஞ் சூடாக இருக்கும்போது மார்பகங்களில் பற்றுப் போட்டால் வறண்ட தன்மை நீங்கிப் பால் தூய்மை பெறும். 269—270

### 127. நிறம் மாறிய தாய்ப்பாலில் குற்றம் நீக்கும் முறை

அதிமதுரம் திராட்சை க்ஷீரகாகோலி நொச்சி இவற்றைச் சம அளவில் கொண்டு அரைத்துக் குளிர்ந்த நீரில் கலந்து பருகச் செய்தால் தாய்ப்பாலின் நீலம் முதலிய நிறங்கள் நீங்கி இயற்கை நிறம் தோன்றும். 271

### 128. மற்றொரு முறை

திராட்சை அதிமதுரம் இவற்றை அரைத்து மார்பகங்களின் மேல் பூசி நன்றாக உலர்ந்தபின் நீரால் கழுவச் செய்து அப் பொழுது தங்கியுள்ள பாலை முழுவதும் பிழிந்து எடுத்து விடச் செய்க. பல முறை செய்தால் பால் இயற்கை நிறம் கொள்ளும். 272

### 129. தாய்ப்பாலில் கெட்ட நாற்றம் நீக்கும் முறை

கர்கடகசிருங்கி ஓதியன் திரிபலை மஞ்சள் வசம்பு இவற்றைக் குளிர்ந்த நீர் விட்டு அரைத்துப் பருகச் செய்தால் தாய்ப்பாலில் தோன்றும் நாற்றம் நீங்கும். 273

## 130. மற்றொரு முறை

*கடுக்காய் திரிகடுகம் இவற்றைத் தூளாக்கித் தேனில் கலந்து உண்ணச் செய்து பத்தியமான உணவை உட்கொள்ளச் செய்தால் பாலில் தோன்றிய நாற்றம் நீங்கும். 274*

## 131. தாய்ப்பாலில் நாற்றத்தைப் போக்கப் பூச்சு மருந்து

*நன்னாரிவேர் வெட்டிவேர் மஞ்சிஷ்டி நரிவிலிப்பட்டை சிவப்புச்சந்தனம் இவற்றையோ இலவங்கப்பத்திரி குருவேர் சந்தனம் வெட்டிவேர் இவற்றையோ மெத்தென்று அரைத்து மார்பகங்களின் மேல் பற்றாகப் பூசி உலர்ந்தபின் நீரால் கழுவி அப்பொழுது மார்பகங்களில் தங்கியுள்ள பாலை வெளியேறச் செய்து விட்டால் நாற்றம் நீங்கிப் பால் தூய்மையடையும். 275*

*(பாலில் பித்தத்தால் தோன்றிய கெடுதலைப் போக்கும் முறைகள் கூறப்பட்டன)*

## 132. எண்ணெய்ப்பசை மிகுந்துள்ள தாய்ப்பாலுக்குச் சிகிச்சை

*தாய்ப்பாலில் எண்ணெய்ப்பசை மிகுந்துள்ளபோது தேவதாருக்கட்டை கோரைக் கிழங்கு வட்டத்திருப்பி இவற்றை மைபோல் நீரில் அரைத்து அதில் இந்துப்பு கலந்து பருகச் செய்தால் எண்ணெய்ப்பசை மிகுந்துள்ள குற்றம் நீங்கித் தாய்ப்பால் தூய்மை பெறும். 276*

## 133. தாய்ப்பாலில் கொழகொழப்பை நீக்கும் முறை

*தாய்ப்பாலில் கொழகொழப்பு மிகுதியாக இருந்தால் சார்ங்கேஷ்டா கடுக்காய் வசம்பு கோரைக்கிழங்கு சுக்கு வட்டத் திருப்பி இவற்றை மைய அரைத்து நீரில் கலந்து பருகச் செய்க. மற்றும் மூல நோய் சிகிச்சைக்குக் கூறப்பட்ட தக்ராரிஷ்டத்தை யாவது பருகச் செய்க. இதனால் கொழகொழப்பு நீங்கி தாய்ப் பால் தூய்மை பெறும். 277*

## 134. மற்றொரு முறை

*முதுக்கன்கிழங்கு வில்வவேர் அதிமதுரம் இவற்றை மைய அரைத்து மார்பகங்கள் மேல் பூசி உலர்ந்தபின் நீரால் கழுவி அப்பொழுது தங்கியுள்ள பாலை வெளியேற்றினால் தாய்ப்பாலில் மிகுந்துள்ள எண்ணெய்ப்பசையும் கொழகொழப்பும் நீங்கும். 278*

## 135. குருத்தன்மையைப் போக்கும் கஷாயம்

புங்கன்பட்டை சீந்தில்கொடி வேப்பம்பட்டை பேய்ப்புடல் திரிபலை இவற்றைச் சம அளவில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சிப் பருகச் செய்தால் தாய்ப்பாலில் உள்ள குருத்தன்மை நீங்கும். 279

## 136. மற்றொரு முறை

கண்டந்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு இவற்றை அரைத்து விழுதாகச் செய்துப் பருகச் செய்தால் பளுத்தன்மை நீங்கிப் பால் தூய்மை பெறும். சிற்றாமுட்டி சுக்கு சார்ங்கேஷ்டா பெருங்குரும்பை இவற்றை அரைத்து மார்பகங்கள் மேல் பூசினாலும் மூவிலை பால்முதுக்கன்கிழங்கு இவ்விரண்டையும் அரைத்துப் பூசினாலும் பளுத்தன்மை நீங்கும். (இவ்வாறு கபத்தினால் தோன்றிய தோஷங்கள் நீங்கும் முறைகள் கூறப் பட்டன) இவ்வாறு எண் வகையான தாய்ப்பால் குற்றங்கள் தோன்றக் காரணங்களும் தனித்தனி இலக்கணங்களும் சிகிச்சை முறைகளும் கூறப்பட்டன. மற்றும் அந்த குற்றமுள்ள பாலைப் பருகினால் குழந்தைகளுக்கு உண்டாகும் தீமைகளும் விளக்கப் பட்டன. 280–281

## 137. குழந்தைகளுக்குத் தோன்றும் நோய்க்குச் சிகிச்சை

வாதம் முதலிய தோஷங்களும் இரத்தம் மாமிசம் மலம் சிறுநீர் வியர்வை காய்ச்சல் முதலியவையும் வயது முதிர்ந்தவர் களுக்குப் போலவே சிறு குழந்தைகளுக்கும் இருக்கும். ஆனால் தோஷம் *தூஷ்யம் என்பன குறைந்த அளவில் இருக்கும். (எனவே அத்தன்மைக்கு ஏற்ப மருந்துகளையும் மிகச் சிறிய அளவில் மிக்க கவனத்துடன் பயன்படுத்த வேண்டும்) குழந்தை கள் மென்மையான உடல்கொண்டு பிறரைச் சார்ந்துவாழ்பவர் களாக இருப்பார்கள். பேச்சு உடலுறுப்புகளை இயக்குதல் முதலிய வற்றில் வலிமை குறைந்து திறமை குறைந்தவர்களாக இருப்பார் கள். எனவே வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் போன்ற உடலைத் தூய்மைப்படுத்தும் முறைகளை அவர் களுக்குப் பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும். அவர்களுக் குள்ள தோஷம் தணியச் செய்யும் மருந்துகளை மட்டும் தூஷ்யம் நோயின் தன்மை வலிமை என்பனவற்றை ஆராய்ந்து தகுந்த அளவில் பயன்படுத்த வேண்டும். 282–284

[1] தூஷ்யம்—இரசம் ரத்தம் முதலான தாதுக்கள், மலங் கள்.

## 138. குழந்தைகளுக்குப் பயன்படுத்தத் தக்க மருந்துகள்

குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் இனிமையும் துவர்ப்புச் சுவையுமுள்ள பாலுடன் கூடிய மென்மையான மருந்துகளை மிக்க கவனத்துடன் மருத்துவர், தோஷம் தூஷ்யம் முதலியவற்றின் தன்மைகளை உணர்ந்து தக்கபடி பயன்படுத்த வேண்டும். 285

## 139. சிறுவர்களுக்குக் கூடாத மருந்து, உணவு, நீர்முதலியவைகள்

மிக்க எண்ணெய்ப்பசை கொண்டவை வறட்சித்தன்மையும் குணத்தினாலும் வீரியத்தினாலும் உஷ்ணத் தன்மை கொண்டவை புளிப்புச் சுவையுள்ளவை பக்குவமடையும்போது கார்ப்புச் சுவை கொண்டவை குருத்தன்மை கொண்டவையுமான மருந்து உணவு குடிநீர் வகைகளைச் சிறுவர்களுக்குப் பயன்படுத்தக் கூடாது. 286

)வ்வாறு சிறுவர்களுக்குத் தோன்றக்கூடிய காய்ச்சல் முதலிய நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் கூறப்பட்டன. மருத்துவ நூலை நன்றாகக் கற்றுணர்ந்த மருத்துவர் தக்கபடி ஆராய்ந்து அந்தந்த நோய்களுக்குத் தக்க சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 287

## 140. சிகிச்சாஸ்தானத்தின் பெருமை

)வ்வாறு காய்ச்சல் முதலிய நோய்களுக்குத் தக்க சிகிச்சை முறைகள் இந்த ஸ்தானத்தில் கூறப்பட்டுள்ளன. இம்முறைகள் மிகவும் இரகசியமானவை, சிறந்தவை. 288

## 141. இந்த நூலில் திருடபலரால் நிறைவு செய்யப்பட்ட பகுதி

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகரால் பரிசோதிக்கப்பட்ட இந்த ஆயுர்வேத சாஸ்திரத்தில் சிகித்ஸாஸ்தானத்தில் பதினேழு அத்யாயங்களும் கல்ப ஸ்தானம் ஸித்திஸ்தானங்கள் முழுவதும் கிடைக்கவில்லை. இவ்வாறு குறைபட்ட பகுதிகளை (சிகிச்சை ஸ்தானம் 17 அத்தியாயங்கள் கல்பஸ்தானம் 12 அத்தியாயங்கள் ஸித்திஸ்தானம் 12 அத்தியாயங்கள் ஆக மொத்தம் நாற்பத்தொன்று அத்தியாயங்களை) பஞ்சநதபுரத்தில் வசித்த கபிலபலி என்பவரின் குமாரரான திருடபலர் என்பவர் சிறப்பான பொருள்களை விளக்கி நிறைவுபடுத்தினார். 289–290

## 142. இந்த ஸ்தானத்தில் கூறப்படாத நோய்களுக்குச் சிகிச்சை

நோய்கள் எண்ணற்றவை. இந்த சிகித்ஸாஸ்தானத்தில் கூறப்படாத நோய்களுக்கும் அவற்றின் தோஷம் தாதுக்களின் நிலை முதலியவற்றைக் கவனித்து அந்தந்த தோஷங்களுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையே தக்கபடி பயன்படுத்துக.

(இங்கு கூறப்படாத நோய்களுக்கும் அவற்றின் இலக்கணங் களை ஆராய்ந்து தோஷங்களையும் இரத்தம் முதலிய தாதுக் களில் கெடுதலுற்றவைகளையும் அறிந்து காரணங்களைக் கண்டறிந்து தக்கபடி சிகிச்சை செய்ய வேண்டும் என்பதாம்). 291

## 143. விளக்கப்பட்ட, விளக்கப்படாத நோய்களுக்குத் தோஷம் முதலியவற்றின் மாறான சிகிச்சை

வாதம் முதலிய தோஷங்களுக்கும் இரத்தம் முதலிய தாதுக் களுக்கும் அந்தந்த நோய்களுக்குக் காரணங்களான வறட்சி முதலியவைகளுக்கும் எதிரான தன்மையுள்ள மருந்துகளை நாடு பருவம் முதலியவற்றிற்குத் தக்கபடி காய்ச்சல் முதலியவற்றிற்கும் இந்த நூலில் கூறப்படாத நோய்களுக்கும் சிகிச்சையாகக் கையாள்வதால் நோய் தணியும் என்பதாம்.

(இங்கு இவ்விளக்கம் காண்க. எல்லா நோய்களுக்கும் வாதம் முதலிய மூன்று தோஷங்கள் சீற்றமடைதலே காரண மாகும். அவற்றின் சீற்றத்திற்குத் தவறான உணவு கொள் வதும் தவறான செயல்களைப் புரிவதும் காரணம் ஆகும். அவற்றிற்கு மாறானதன்மை கொண்டவை தோஷங்களைத் தணிக்கவல்லவையாகும். எவ்வாறெனில் வறண்ட பொருள் களால் சீற்றமடைந்த வாதத்திற்கு எண்ணெய்ப்பசை மாறான தன்மை கொண்டதாகும். மற்றும்வா தம்குளுமையால் மட்டும் சீற்றமடைந்ததாயின் அப்பொழுது எண்ணெயைப் பயன்படுத் தாமல் உஷ்ண குணமுள்ள மருந்தைப் பயன்படுத்தவேண்டும். அதாவது சீற்றமுற்ற தோஷத்தையும் அதன் சீற்றத்திற்குக் காரணமானதையும் ஆராய்ந்தே மருந்தைப் பயன்படுத்த வேண்டும் என்பதாம். அதைப்போலவே இந்த நூலில் கூறப் படாத நோய்கள் காணப்படுமாயின் சீற்றமடைந்த தோஷத்தை உணர்ந்து அதன் சீற்றத்திற்குக் காரணத்தையும் உணர்ந்து தக்கபடி சிகிச்சை செய்ய வேண்டுமென்பது பொருளாம்.) 292

### 144. நன்கு பொருந்திய மருந்து முறையைப் பயன்படுத்தல்

1. நோயாளியின் உடல் 2. நாடு நாள் நோயாளி மருந்து நோய் நோயின் தன்மை-பருவம் முதலியவையாகிய காலம் 3. மருந்தின் அளவு 4. நாட்டிற்கும் உடலுக்கும் ஒத்துக் கொள்ளும் தன்மை 5. ஒத்துக் கொள்ளாமை என்னும் இவ் வைந்தைப் பற்றியும் நூலில் கூறப்பட்டுள்ள முறையையறிந்து தக்கபடி பயன்படுத்தப்படும் மருந்து 'ஸம்யக்யோகம்' உள்ள தாம். அம்மருந்து நோயைத் தணிக்கும். அவ்வாறு பொருந் தாத மருந்தைப் பயன்படுத்தினால் நோயாளி பத்யமாக இருந்தும் நோய் தணியாது என்பதாம். 293

### 145. உடலை ஒட்டிப் பொருத்தமுள்ள மருந்து

நோயாளியின் வாய் வழியே பயன்படுத்தப்படும் வாந்தி எடுக்கச் செய்யும் மருந்துகள் (உணவுப்பையில்) உள்ள நோய்களை விரைவாகப் போக்கும். (ஏனெனில் வாய்க்கும் உணவுப்பைக்கும் நேரடி தொடர்பு உள்ளது) எனவே வாயில் பயன்படுத்தப்பட்ட திரவ மருந்து வாய் வழியே உணவுப்பையைச் சேர்ந்து அங்குள்ள தோஷங்களைப் போக்கும். மூக்கில் மருந் திடுதல், தலை நோய்களை விரைவாகப் போக்கும். ஆஸன வாயின் வழியாகப் பயன்படுத்தப்படும் வஸ்தி முதலியன சீரணப்பையில் உள்ள நோய்களைப் போக்கும். உடல் மேல் தோலில் தோன்றும் அக்கி கட்டி முதலியன நோயுள்ள பகுதியில் மருந்து பூசுதலாலும் மருந்து நீரைக் கொண்டு நனைத்தலாலும் ஒத்தடம் கொடுத்தலாலும் விரைவில் தணியும். 294—295

### 146. காலத்தைச் சார்ந்த பொருத்தமான சிகிச்சை முறை

நோயாளியின் உடல் வலிமைக்கேற்பவும் நோயின் வலிமைக்குத் தக்கபடியும் செரிமானமாகும் தன்மைக்கேற்பவும் மருந்தின் வலிமையை உணர்ந்தும் இளவேனில் முதுவேனில் முதலாகிய பருவங்களுக்கேற்பவும் மருந்தைப் பயன்படுத்துதல் என்பன காலமுணர்ந்து பொருத்தமாகச் சிகிச்சை முறைகளைக் கையாளுதலாகும்.

### 147. பொழுதைச் சார்ந்த பொருந்தக்கூடிய சிகிச்சை முறை

முற்பகலில் வாந்தி எடுக்கச் செய்யும் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறே ஏனையவற்றிற்கும் பொழுதையறிந்து தக்க மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். 296

## 148. நோயாளியின் தன்மைக்கேற்ப மருந்தளிக்கும் முறை

நல்ல உடல் வலிமையுள்ள நோயாளி காலையிலேயே மருந்தை உட்கொண்டு உணவு கொள்ளாமல் இருக்க வேண்டும். வலிமையற்ற நோயாளி காலையில் மருந்தையுண்டு பிறகு பத்திய மான எளிதில் செரிமானமாகக்கூடிய உணவை உட்கொள்ள வேண்டும். இவ்வாறு நோயாளியின் உடல் வலிமையையுணர்ந்து சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 297

## 149. மருந்துக்கேற்ற பொழுதின் விளக்கம்

1. உணவுக்குமுன் காலையில் வெற்று வயிற்றில் மருந்தை யுட்கொள்ளுதல் 2. உணவு கொள்ளப்போகும் முன் மருந்தை யுண்பது 3. உணவின் இடையில் மருந்தையுண்பது 4. பகல் உணவு உண்டபின் மருந்தை உண்பது 5. இரவு உணவிற்குபின் மருந்தை உண்பது 6. உண்ணும்போது அடிக்கடி மருந்தையுட் கொள்ளுதல் 7. உணவிற்கு முன்பும் பின்பும் மருந்தை உட் கொள்ளுதல் 8. உணவில் மருந்தைக் கலந்து உட்கொள்ளுதல் 9. ஒவ்வொருவாய் உணவிலும் மருந்தைக் கலந்து உண்பது 10. ஒரு வாய் உணவு உண்டு பிறகு மருந்தையுட்கொண்டு மறுபடி உணவு உண்பது என மருந்து உட்கொள்வதற்கேற்ற காலங்கள் பத்தாகும். 298

## 150. மருந்திற்கேற்ற பொழுதுக்கு எடுத்துக்காட்டு

அபானம் சீற்றமடைந்தபோது உண்பதற்கு முன்பும் சமானம் என்னும் வாதம் சீற்றமுற்றபோது உண்பதற்கிடை யிலும் வியானம் என்னும் வாதம் சீற்றமடைந்தபோது உண்ண இருப்பதற்கு முந்தியும் உதானம் என்னும் வாதம் சீற்றமடைந்த போது உண்டபிறகும் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். பிராணன் என்ற வாதம் சீற்றமடைந்தபோது ஒவ்வொருவாய் உணவிலும் அல்லது ஒரு வாய் உணவு ஒருமுறை மருந்து மறு படியும் உணவு என்றமுறையிலும் மருந்தை உட்கொள்ள வேண்டும். இழுப்பு இருமல் நாவறட்சி என்னும் நோய்களில் உணவிற்கிடையிடையே பல முறை மருந்தைப் பயன்படுத்த வேண்டும். விக்கல் நோயில் உண்பதற்கு முன்னும் பின்னும் மருந்தை எளிதில் செரிமானமாகக் கூடிய உணவு யவாகூ எனும் கஞ்சி முதலியவற்றுடன் பயன்படுத்த வேண்டும். சுவையின்மை யில் பலசுவைகளைக் கொண்ட உணவில் மருந்தைக் கலந்து பயன்படுத்த வேண்டும். இவ்வாறு பொழுதையறிந்து தகுந்தபடி பயன்படுத்தப்பட்ட மருந்து நன்றாகச் செயல்படும் என்பதாம். 299–301

## 151. நோயின் நிலைக்கேற்ப மருந்தைப் பயன்படுத்துதல்

காய்ச்சலில் கஞ்சிவகைகள் (யவாகூ) கஷாயம் பால் நெய் பேதியாகச்செய்யும் மருந்து என்பனவற்றை முறையே காய்ச்சல் தோன்றிய நாள் முதல் ஒவ்வொரு முறையையும் ஆறு நாட்கள் வீதம் காய்ச்சலின் நிலைமையை நன்கு கவனித்துப் பயன்படுத்த வேண்டும். 302

## 152. செரிமான வலிமைக்கேற்ப மருந்தைப் பயன்படுத்துதல்

நன்றாகப் பசி தோன்றுதல் மலமும் சிறுநீரும் குறித்த வேளையில் தடங்கலின்றி வெளியேறுதல் உடல் பளுவின்றியிருத்தல் உணவின் தொடர்பின்றி ஏப்பம் தானாக வெளிவருதல் இவை உணவு செரிமானம் ஆன பொழுது காணப்படும் இலக்கணங்களாகும். இவற்றைக் கவனித்து உணவு செரிமானமாகும் நிலையை உணர்ந்து அந்தக் காலத்தில் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். அசீரணத்தில் மருந்தைப் பயன்டுத்தினால் தீமை விளையும். 303

## 153. பருவ நிலைக்கேற்றபடி பொருத்தமான சிகிச்சை செய்தல்

இலையுதிர் பருவம் முதலிய பருவங்களில் தோஷங்கள் சீற்றமுறுதல் தணிதல் அந்தந்த தோஷங்கள் சீற்றமுறுதல் குறைதல் முதலான நிலைகளின் மாறுபாடுகளை உணர்ந்து அந்நிலைகளில் விடத்தக்கவையும் கைக்கொள்ளத் தக்கவையுமான முறைகள் ஸூத்ரஸ்தானத்தில் (தஸ்யாசிதீய அத்தியாயத்தில்)விளக்கப் பட்டுள்ளன. அந்தந்த பருவங்களில் தோஷங்களின் நிலைகளுக்கு ஏற்பப் பயன்படுத்தத் தக்க பொதுவான சிகிச்சை முறைகளும் சில சிகிச்சை முறைகளைத் தவிர்க்க வேண்டிய காரணங்களும் வலிமை வலிமையின்மைகளுக்கு ஏற்ற சிகிச்சைகளும் விளக்கப்பட்டுள்ளன. அவற்றைச் சார்ந்தபடி அந்தந்த நோய்களின் நிலைகளையும் நோயாளியின் வலிமை வலிமைக் குறைவுகளையும் பலமுறை ஆராய்ந்து பருவநிலைகளை நன்கு கவனித்துத் தக்கபடி சிகிச்சை செய்யும் மருத்துவன் ஒருபொழுதும் தவறு செய்யான். 304–306

## 154. பொருந்தாத சிகிச்சை

இவ்வாறு கூறப்பட்ட காலம் நோயாளியின் வலிமை மருந்து நோய் செரிமானமாகும் நிலை பருவம் எனும் இந்த ஆறு நிலைகளுக்கு ஏற்ப சிகிச்சை செய்யும் முறைகள் விளக்கப்ப பட்டன. இவ்வாறையும் கவனியாமல் மாறாகக் கொடுக்கப் பட்ட மருந்து பொருந்தாததாகும். பத்தியமாக இருந்தாலும்

(காலமல்லாத காலத்தில் பெய்த மழை பயிரைக் கெடுப்பது போல) அது வேறு துன்பங்களைத் தோற்றுவிப்பதுடன் நோயாளியின் உயிரையே போக்கும். 307

## 155. காலத்தைப் பற்றிய மற்றொரு கருத்து

முதுவேனிற்பருவம் இரவு பகல் வயது உணவு செரிமானமாகும் காலம் இவற்றின் நிலைகளைச் சார்ந்து வாதம் முதலியவற்றால் நோய்கள் தோன்றும். இவ்வாறு காலத்தைச் சார்ந்து தோன்றும் நேரங்களின் நிலையும் காலத்துக்கேற்ற சிகிச்சை முறையில் கவனிக்கத் தக்கதாகும். 308

## 156. பருவத்தைச் சார்ந்து தோன்றும் நோய்கள்

கபத்தினால் தோன்றும் நோய்கள் இளவேனிற்பருவத்திலும் கூதிர் பருவத்தில் பித்த நோய்களும் கார்ப்பருவத்தில் வாத நோய்களும் பொதுவாகத் தோன்றும். மற்றும் பகலில் கடைசி நான்கு மணி நேரமும் இரவில் கடைசி நான்கு மணி நேரமும் கார்ப்பருவ முடிவிலும் வாத நோய்கள் பொதுவாகத் தோன்றும் காலங்களாகும். காலையில் முதலில் நான்கு மணி நேரத்திலும் இரவில் முதல் நான்கு மணி நேரத்திலும் கபத்தினால் தோன்றும் நோய்கள் காணப்படும். பகலில் நடுவிலுள்ள நான்கு மணி நேரத்திலும் இரவில் நடுவில் உள்ள நான்கு மணி நேரத்திலும் பித்த நோய்கள் தோன்றும். (காலை முதல் மாலை வரை நான்கு மணி நேரம் முறையே கபம் பித்தம் வாதம் என்பன சீற்றமுறும் பொழுதுகளாகும். எனவே அந்த நேரங்களில் பொதுவாக அந்தந்த தோஷங்கள் சீற்றமுறுவதால் நோய்கள் தோன்றும் என்பதாம்) 309–310

## 157. வயதைச் சார்ந்து நோய் தோன்றுதல்

வயது முதிர்ந்துள்ள போதும் உணவு செரிமானமடைந்த பிறகும் வாதம் வலிமை கொண்டிருக்கும். நடுவயதிலும் உணவு செரிமானமடையும் போதும் பித்தம் வலிமை கொண்டிருக்கும். சிறுவயதிலும் உணவு உண்டதும் கபம் வலிமை கொண்டிருக்கும். எனவே அந்தந்த தோஷங்கள் வலிமை பெற்றுள்ளதற்கேற்ப நோய்கள் தோன்றும். 311–312

## 158. மருந்தின் அளவு

மருந்து குறைந்த அளவிலிருந்தால் சிறிதளவேயுள்ள நீர் பெரும் தீயை அணைக்காதது போல் வலிமையுள்ள நோயைத் தீர்க்காது. மருந்து அளவில் மிகுந்திருந்தால் மிகுந்துள்ள நீர்

பயிரைப் பாழாக்குவது போல உடலைக் கெடுத்துவிடும். எனவே வாதம் முதலிய தோஷங்கள் நோய்கள் நோயாளியின் வலிமை இவற்றை நன்றாக உணர்ந்து அந்தந்த நிலைக் கேற்றபடி மருந்தை மிகுந்தோ குறைந்தோ இல்லாமல் தக்க அளவாகப் பயன்படுத்த வேண்டும். *313—314*

## 159. உடலுக்கு ஏற்ற சிகிச்சை

நோயாளிக்கும் அவன் வாழும் நாட்டிற்கும் பழக்கமான உணவுப் பொருள் அபத்தியமாக இருந்தாலும் அதை திடீரென்று விலக்கினால் நன்மை ஏற்படாது. எனவே அதையும் கவனித்தே சிகிச்சை செய்ய வேண்டும். *315*

## 160. நாட்டுக்கேற்ற உணவு

பாஹ்லீகம் பஹ்லவம் சீனா சூலிகா யவனம் சகம் எனும் இந்த நாடுகளில் வாழ்பவர்களுக்குப் புலால் கோதுமை திராட்சை யால் செய்த மது அறுவை முறை சூடு போடும் சிகிச்சை என்பன உடலுக்கேற்றவையாகும். கீழ்திசை நாடுகளில் வாழ்பவர்களுக்கு மீன் உடலுக்குப் பழக்கமான உணவாகும். சிந்து நாட்டில் வாழ்பவர்களுக்குப் பால் பழக்கமான உணவாகும். அச்மகம் அவந்தி நாடுகளில் வாழ்பவர்களுக்கு எண்ணெய் புளிப்புச்சுவை பழக்கமானவை. மலை நாடுகளில் வாழ்பவர்களுக்குக் கிழங்கு களும் வேர்களும் பழங்களும் பழக்கமானவை. மேற்கு வடக்குப் பகுதி நாடுகளிலுள்ளவர்களுக்கு மந்தம் என்னும் கஞ்சி வகை பழக்கமானது. நடுப்பகுதி நாட்டில் உள்ளவர்களுக்கு யவதானி யம் கோதுமை பசும்பால் பழக்கமானவை. இவ்வாறு அவரவர் களுக்குப் பழக்கமானவற்றை அறிந்து பழக்கமான உணவுடன் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். பழக்கமான தன்மை கொண்ட பொருள்களுடன் கூடிய மருந்து அளவில் சிறிது இருந் தாலும் தீங்கு விளைவிக்காமல் விரைவில் நோயைத் தணிக்கும். *316—319*

## 161. பொருத்தமான சிகிச்சையின் தேவை

முன்கூறிய நாடு நேரம் முதலியவற்றை அறியாமல் மருந்தை மட்டும் தருவதால் மருத்துவன் வெற்றி கொள்ள இயலாது. சிகிச்சைக்கு நோயாளியின் வயது உடல் வலிமை நோயின் நிலை இயற்கை உடலுக்கேற்றவை என்பன முக்கியமானவை. அவை பல வகைகளாக இருப்பதால் நன்றாகக் கவனித்துத் தக்கபடி பயன்படுத்த வேண்டும் என்பதாம். *320*

## 162. தோஷங்களின் நிலைக்கேற்ப சிகிச்சை

உடலுக்குள் குடல் இணைப்பகுதி என்பனவற்றைச் சார்ந்து உடலுக்குள் வெளியில் தெரியாமல் தோஷங்கள் பரவும். அப்பொது மாறாகக் காணப்பட்டாலும் நோயைத் தணிக்கத் தக்க மருந்தைப் பயன்படுத்த வேண்டும். 321

உடல் வியர்க்கச் செய்தல் மருந்துப் பொருள் கலந்த நீரால் உடலை நனைத்தல் ஒத்தடம் கொடுத்தல் என்னும் உஷ்ணத்தை முக்கியமாகக் கொண்ட சிகிச்சைகளானாலும் அவை உடலில் மறைவாக இருந்து துன்பம் தந்த பித்தத்தை வெளியேற்றி தணியச் செய்யும். இவ்வாறு உஷ்ணத்தன்மை கொண்ட சிகிச்சைகள் உஷ்ணத், தன்மை கொண்ட பித்தத்தைத் தணியச் செய்யும். மற்றும் உஷ்ணம், உடலின் மேல்தோலைச் சார்ந்திருக்கும். அத்தகைய தோலின் மேல் குளிர்ந்த நீரைத் தெளித்தல் முதலியவற்றைச் செய்தால் தோலைச் சார்ந்த உஷ்ணம் குளிர்ச்சியால் தடுக்கப்பட்டு உடலுக்குள் புகும். அப் பொழுது குடலில் தங்கியுள்ள கபத்தை அந்த சூடு தணிக்கும். இவ்வாறு குளுமையைச் குளுமைச் சிகிச்சை தணியச் செய்யும். இது குளிர்ந்த தன்மை கொண்ட கபத்திற்கு மாறான சிகிச்சை. மற்றும் குளிர்ச்சித் தன்மையுள்ள சந்தனத்தை மென்மையாக அரைத்து அடர்த்தியாக உடல் மேல் பூசினால் தோலிலுள்ள சூடு தடுக்கப்பட்டு உடலுக்குள் சென்று அழற்சியை தோற்று விக்கும். உஷ்ணத்தன்மை கொண்ட அகிலை அரைத்து மெல்லியதாகப் பூசினால் அது குளுமையைச் செய்யும்.

மற்றும் தேனீக்கள் வாந்தியைத் தோற்றுவிப்பனவாயினும் அவற்றின் மலமாகிய மெழுகு, வாந்தியைத் தணிக்கும். தேனீக் கள் உண்ணும் பொருட்கள் அவற்றின் சடராக்னியால் பக்குவம் செய்யப்பட்டு மலத்தன்மையடைந்து உணவின் இயற்கைக்கு மாறான செயலைப் புரியும். அவ்வாறே ஆவியில் பக்குவம் செய்த சில பொருட்களுக்கு அவற்றின் இயற்கைத் தன்மைக்கு மாறாகச் செயல்படும் தன்மை தோன்றும். (எவ்வாறெனில் பொரி எளிதாகச் செரிமானமடையக் கூடியதாயினும் அதை ஆவியில் வேக வைத்தால் குருத்தன்மை பெறும். நெய்தல் தண்டு குளுமையுடைய தாயினும் அதை நெருப்பிலிட்டுக் காய்ச்சி க்ஷாரமாகச் செய்தால் குளுமைத் தன்மைக்கு மாறான தன்மை கொண்டதாகும்.) இவ்வாறே பக்குவம் செய்வதால் சில இயற்கைக்கு மாறான தன்மை கொள்ளும் என்பதாம். 322–325

## 163. சிசிச்சைக்காக தோஷம் மருந்து முதலியவற்றின் ஆராய்ச்சி

ஸித்திஸ்தானத்தில் சிகிச்சையைப் பற்றி ஆராய வேண்டி யவை தோஷங்கள் மருந்து முதலியன பத்து எனக் கூறப்பட் டுள்ளது. அந்த பத்தையும் முறையாக ஆராய்ந்து பார்க்காமல் சிகிச்சை புரிந்தால் அது பத்தியமான மருந்தானாலும் நோயைப் போக்காமலிருப்பது மட்டுமின்றி வேறு துன்பங்களையும் தோற்று விக்கும். நோயாளியைக் கொல்லவும் செய்யும். எனவே தோஷம் மருந்து முதலிய பத்தையும் நன்கு ஆராய்ந்தறிந்து தக்க மருந்தைப் பயன்படுத்த வேண்டும். ஆனால் மருந்து கொடுப்பது என்பதால் மட்டும் சிகிச்சை செய்யக் கூடாது. (வாதம் முதலிய மூன்று தோஷங்கள் மருந்தின் தன்மை காடு முதலிய நிலப்பகுதியின் தன்மை இளவேனில் முதுவேனில் முதலிய பருவங்களின் தன்மை நோயாளியின் உடலுக்குப் பழக்க மானவை நோயாளியின் சடராக்னியின் வலிமை இயற்கை அவர வர்களுடைய பழக்க வழக்கங்கள் நோயாளியின் வயது அவ ருடைய உடல் வலிமை எனும் பத்தையும் நன்குஆராய்ந்தபின் தக முறையில் சிகிச்சை புரிய வேண்டுமென ஸித்திஸ்தானம் மூன்றாம் அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது). 326

## 164. நோய் முழுவதும் நீங்கும் வரை சிகிச்சை

சிகிச்சைசெய்ததால் நோய் முழுவதும் நீங்கியதுபோல் காணப்பட்டாலும் உடலிலுள்ள மாமிசம் முதலியவை நோயால் மிகவும் இளைத்திருக்கும் பொழுது ஏதேனும் சிறிய காரணம் ஏற்பட்டாலும் மறுபடியும் நோய் பரவும். எனவே நோய் தணிந்த பின்பும் நோய் முழுதும் நீங்கி நம்பிக்கை தோன்றும் வரை சிகிச்சையைப் புரிய வேண்டும். 327—328

கடினத்தன்மை என்பது தோஷங்கள் ரசம் முதலியவை களின் தொடர்பினால் ஏற்படும் நிலையான தன்மை. கடினத் தன்மையாலோ அல்லது அது இன்மையாலோ வாதம் முதலிய வற்றில் ஏதேனும் ஒரு தோஷம் உடலுக்குள்ளேயே சீற்றமடைந்து வலிமை கொண்டிருந்தால் அத்தகைய தோஷங்களைப் பத்திய மான உணவு மருந்து என்பனவற்றால் மென்மையுள்ளதாக சிறிதளவேயுள்ளதாகச் செய்ய வேண்டும். அவ்வாறு மென்மை யடைந்த தோஷம் நோயைச் சிறிதளவு தோற்றுவிக்கும். பத்திய மான மருந்துகள் முதலியவற்றைப் பயன்படுத்தினாலும்நோய் நீடித்திருக்குமாயின் அது கடினமானதென்று உணர்ந்து மருந்தின் அளவை அதிகப்படுத்திப் பயன்படுத்த வேண்டும். அல்லது மருந்தைப் பல காலம் பயன்படுத்த வேண்டும். நாட்பட்டாலும்

விடாமல் சிகிச்சையைத் தொடர்ந்து செய்ய வேண்டுமென்பதாம்.
329—330

## 165. நோயாளிக்குப் பிடிக்காத மருந்தை பிடிக்கச் செய்யும் முறை

இதமான மருந்தை வெகுநாட்கள் பயன்படுத்துவதாலோ மருந்தில் சுவையின்மையாலோ நோயாளிக்கு அதில் வெறுப்பு தோன்றுமாயின் அத்தகைய மருந்தை சுரஸம் முதலிய எளிய தான முறையில் மாற்று உணவைச் சாஸ்திர முறையறிந்து படைத்து நோயாளிக்கு பிடித்த முறையில் சமையல் செய்து கொடுத்தால் நோயாளிக்கு மனதில் தெளிவும் வருத்தமின்மையும் பிரியமும் உண்டாகும் என்பதாம். 331

## 166. மன  சைந்த மருந்தால் பயன்

மருந்தை நோயாளியின் மனத்திற்கிசைந்தவாறு கொடுப்பதனால் நோயாளியின் மனத்திற்குச் சந்தோஷமும் வாயில் சுவையும் உடல்செழிப்பும் வலிமையும் தோன்றும். அத்தகைய மருந்துகளை வாந்தி எடுக்கச் செய்தல் முதலியவற்றிற்கு இடம் தராமல் எளிதாகப் பயன்படுத்த வேண்டும். 332

சில நேரங்களில் நோயாளிக்கு ஆசை தோன்றுதலாலோ வாதம் முதலிய நோய்கள் தணிந்ததாலோ நோயின் தன்மையாலோ மாறான குணங்களாலோ அபத்தியமான பொருள்களில் நினைவு உண்டாகும். அப்பொழுது கட்டாயப்படுத்தியாவது நோயாளி தவறான பழக்கங்களுக்குச் செல்ல முடியாமல் பணிவிடை செய்ய வேண்டும். ஒருவேளை நோயாளிக்கு பத்தியமில்லாத பொருள்மேல் விருப்பம் தோன்றினால் அத்தகைய பொருட்களால் மருந்தை பக்குவம் செய்து பயன்படுத்த வேண்டும்.
333

## முடிவுரை

ருபதுவகை பெண்குறி நோய்களும் அவற்றிற்குக் காரணம் லக்கணம் சிகிச்சை என்பனவும் நான்கு வகை அலித்தன்மையும் அவற்றிற்குச் சிகிச்சையும் நான்கு வகை ரத்தப் பெரும்பாடு அவற்றிற்குக் காரணம் இலக்கணம் சிகிச்சைகள் எட்டுவகைத் தாய்ப்பால் குற்றங்கள் அவற்றின் காரணம் இலக்கணம் சிகிச்சை விந்து இருது இரத்தம் இவற்றின் தூயத்தன்மையின் இலக்கணம் சொல்லப்பட்ட சொல்லப்படாத நோய்களுக்கு சிகிச்சை முறைகளும் நாடு காலம் முதலியவற்றிற்கேற்ற சிகிச்சை நாடு குணம் முதலியவற்றின் தத்துவ விளக்கம் ஆறு காலங்கள் அந்தந்த தேசத்திற்குரியவர்களின் விவரங்களை ஆராய்ந்தறிவது அந்தந்த

தேசத்தில் வாழ்பவர்களின் உடலுக்கு ஏற்ற பொருள்கள் தேசம் காலம் முதலியவற்றைக் கணியாது செயல் புரிந்தால் வரும் தீமைகள் முதலியன இங்கு விளக்கப்பட்டுள்ளன. இவற்றை ஆராயாத மருத்துவன் தவறாக சிகிச்சை செய்வான் என்பதும் இந்த அத்யாயத்தில் அக்னிவேசரால் கூறப்பட்டது. இந்த நூலில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் அனைத்தையும் அறியாது சிகிச்சை புரிய விரும்புகிறவன் பிறவிக்குருடன் சித்திரம் வரைய இயலாதவனாதல்போல் சரியான சிகிச்சையையும் புரிய இயலாதவனாவான்.

*அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்*
*பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானத்தில்*
*யோனி வியாபத்சிகிச்சை எனும்*
*முப்பதாவது அத்தியாயம் முற்றும்.*

**சிகித்ஸாஸ்தானம் இரண்டாம் பகுதி நிறைவுற்றது.**

**சரகஸம்ஹிதை மூன்றாம் பாகம் முடிவுற்று,**
**சரகஸம்ஹிதை தமிழாக்கம் முற்றுப்பெறுகிறது.**

# அருஞ்சொற்கள்